# கம்பராமாயணம்

நான்காவது

## கிஷ்கிந்தாகாண்டம்

திருவல்லிக்கேணி

வை. மு. சடகோபராமாநுஜாசாரியரும்,

சே. கிருஷ்ணமாசாரியரும்,

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியரும்

இயற்றிய

விரிவுரையுடன்

சென்னை:

நோபில் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை ரூபா. ௪ – ௮ – ௦.

ப்ரஜோத்பத்தி௵] [1931.

# படலங்கள்.





ஆக, செய்யுள்—க0ரு0

ஸ்ரீ

# கம்பர் வரலாறு.

கம்பர், சோழநாட்டிலே திருவழுந்தூரில் நான்காம் வருணத்திற் பிறந்தவர்.

இவர், இளமையில் தந்தை இறந்ததனால் போஷகரில்லாமல் தாயுடன் திருவெண்ணெய்நல்லூரிற் சடையப்பவள்ளலிடம்போய்ச்சேர்ந்து, அவரால் ஆதரிக்கப்பெற்று, அவர் வீட்டுப்பிள்ளைகட்குப் பாடசாலைக்குப் புத்தகமெடுத்துக்கொண்டு போகின்றவராய் அவர்களுடன் படித்துவந்தனர்.

இவர்க்குச் சரசுவதிகடாக்ஷமும், கம்பரென்னும் பெயரும் உண்டானதைப்பற்றி ஒரு கதை உண்டு:—இவர் அங்ஙனம் பள்ளியிற் படித்துவருநாளில், உபாத்தியாயர், தமக்கு வைரபுரமென்னுங் கிராமத்திலுள்ள கம்பங்கொல்லை தினைக்கொல்லைகளைக் காப்பதற்காகத் தம்மிடத்திற்படிக்கும் பிள்ளைகளைத் தினம் ஒவ்வொருவராக அனுப்பும் முறைப்படி ஒருநாள் இப்பிள்ளையை அனுப்ப, இவரும் அன்றைக்காலைதொடங்கிக் கொல்லையிற் காத்துவந்து, நல்ல வெயிலில் நித்திரைவந்ததனால், அக்கொல்லையினருகிலிருந்த காளிகோயிலிற் போய்ப் படுத்துத் தூங்கினர். தூங்குகையிற் கொல்லையில் ஒரு குதிரை வந்து மேய்வதாகக் கனாக்கண்டு எழுந்துபார்க்க, கனவிற்கண்டபடியே பயிரை அவ்வூரான்வேளாகிய காளிங்கராயனது குதிரை மேயக் கண்டு, அதனைத் துரத்தியும் அது போகாமையால் அஞ்சி நடுங்கிக் காளிகோயிலுக்கெதிரே போய் நின்று புலம்பினர். அதுகண்டு காளி கருணைகூர்ந்து பிரசன்னையாகி, 'பிள்ளாய்! அழாதே: உன் நாவை நீட்டு' என்றாள். இவர் அங்ஙனமே நீட்ட, தேவி அதில் ஒரு மந்திரத்தை யெழுதி அனுக்கிரகித்தனள். பின்பு, இவர் மீண்டும் கொல்லையிற் போய்ப்பார்க்க, குதிரை அங்கேயே மேய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது, காளிகாதேவியின் அநுக்கிரகத்தாற் சரசுவதிகடாக்ஷம்பெற்ற இவரது வாக்கினின்று, அது கண்டகோபத்தால், தற்செயலாக, "வாய்த்த வயிரபுர மாகாளியம்மே கேள், காய்த்ததினைப் புனத்துக் காலைவைத்துச்—சாய்த்துக், கதிரை மாளத் தின்ற காளிங்க ராயன், குதிரை மாளக் கொண்டுபோ" என்று ஒரு கவி உண்டாயிற்று. அங்ஙனமே இவர் பாடியவுடன் அக்குதிரை கீழ்விழுந்து இறந்தது. அதனைக் கேட்டறிந்த உபாத்தியாயர் ஓடிவந்துபார்த்து, அதிகாரியின் கோபத்திற்கு ஆளாவோமேயென்று கலக்கமுற, இவர், முன்பாடிய வெண்பாவின் நான்காம் அடியை "குதிரை மீளக் கொண்டுவா" என்று மாற்றிப்பாட, மாண்டகுதிரை மீண்டெழுந்தது. காளிங்கராயன் இதனைக் கேள்வியுற்று, அக்காலத்தில் அரசுசெலுத்திவந்த குலோத்துங்கனென்னுஞ் சோழனுக்கு அறிவிக்க, அவன் அச்சிறுவனைத் தான் பார்க்கவேண்டுமென்று வருவித்

* இவ[illegible]ரலாற்றைப் பலர் பலவாறு கூறுவராயினும், பிற்காலத்துப் பிரசித்தமா[illegible]ங்குகிறபடி மிக்க சுருக்கமாக இங்குக் குறிக்கப்படுகின்றது.

தனன. அங்ஙனமே இவர் கோலுங் கையுமாய்ப் போயிருக்க, அவன், † 'இக் கம்பனு அங்ஙனஞ்செய்தவன்?' என்றனன். இதனுலும், கம்பங்கொல்லை யைக் காத்ததனுலும், இவர்க்குக் கம்பர் என்று பெயராயிற்று: இதற்கு வேறு சில காரணமுங் கூறுவர்.

இவர் பின்பு சோழராஜனது ஸம்ஸ்தான வித்வான்களுக்குத் தலைவராகி இராஜசபைக்கு நாடோறுஞ் சென்று சமயோசிதமாகப் பலகவிகள்பாடிப் பிரசங்கிக்கத் தலைப்பட்டு 'கவிச்சக்கரவர்த்தி' என்று பேர்பெற்றுப் புலமை செலுத்திவந்தனர்.

இவர்க்கு அம்பிகாபதியென்று ஒரு மகன் பிறந்து, அவனும் சிறந்த வித் வானுகி இவரோடு ராஜசபைக்கு நாடோறும் போய்ப் பெருமைபெற்றுவந் தனன்.

கம்பர் இராமாயணம்பாடியது, சடையப்பவள்ளலின் பெருமுயற்சியால்; எங்ஙனமெனின்,— அவர் மகாகவியாகிய கம்பரது புலமை விளங்குமாறு இவரை ஒரு பிரபந்தம்பாடச் செய்யவேண்டுமென்று சோழராசனுக்கு அறி விக்க, அவன் தனியே ஒருவரைப் பாடச்செய்தலினும் இருவரை ஒருசேரப் பாடும்படி செய்தாற் புலமைத்திறம் நன்றாக விளங்குமென நினைத்து, கம்பர் ஒட்டக்கூத்தர் இருவரையும் நோக்கி 'ஸ்ரீராமசரித்திரத்தைத் தமிழ்ப்பாவி னுற் பாடித்தரவேண்டும்' என வேண்டினன். கம்பர் பலநாள் பாடாமலிருந்து, ஒட்டக்கூத்தர் சுந்தரகாண்டம்வரை பாடி முடித்து யுத்தகாண்டம் பாடுகிற போது மறுபடி அரசனுல் தூண்டப்பட்டு, இராமாயணம் பாடினர். பாடுகை யிற் பிரதிதினம் இராப்பொழுதில் வடமொழிப்புலவர்களை வைத்துக்கொண்டு வால்மீகம் அத்யாத்மம் போதாயநம் முதலிய ராமாயணங்களையும் பலபுராணங் களையும் ஆராய்ச்சிசெய்து, பகற்பொழுதில் நாளொன்றுக்கு எழுநூறுபாட லாக யுத்தகாண்டம்வரை ஆறுகாண்டமும் பதினுயிரத்துச் சொச்சம் பாடல் களாற் பதினைந்து நாளிற் பாடி முடித்தனர். அங்ஙனமிருக்கையில் ஒருநாள், கம்பர், ஒட்டக்கூத்தர் வீட்டுவாயிலின் வழியே போகும்போது, அவர் தமது இராமாயணம் கம்பராமாயணத்திற்குமுன் தலையெடாதென அறிந்து அத னைக் கிழித்தெறிந்து கொண்டிருக்கக்கண்டு, அவரிடஞ்சென்று, அதற்குள் யுத்தகாண்டம்வரை கிழிபட்டுப்போகவே, மிச்சமான உத்தரகாண்டத்தைக் கிழியாது வைத்திருக்க வேண்டிக்கொண்டார்; அதுவே, கம்பராமாயணத் திற்கு ஏழாவது காண்டமாக வழங்கலாயிற்று.

கம்பர் இராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் அரங்கேற்றக்கருதி அங்குச் சென்று ஸ்ரீவைஷ்ணவசமயாசாரியரான ஸ்ரீமந் நாதமுனிகளின் அநுமதிப் படி ஒருமண்டப கைங்கரியஞ் செய்து முடித்துச் சபதினத்திலே அரங்கேற் றத் தொடங்குகையில், நம்பெருமானாகிய ஸ்ரீரங்கநாதன் அர்ச்சகமுகமாக ஆவிர்ப்பவித்து 'நம் சடகோபனைப் பாடினையோ? பாடினுல்தான், நாம் உனது ராமாயணத்தைத் திருவுள்ளம் பற்றுவோம். இல்லாவிடின் அது

† கம்பன் - கம்புடையவன்; கம்பு = கொம்பு: உலகவழக்கு.

நமக்கு அங்கீகாரமாகாது' என்று அருளிச்செய்ய, அங்ஙனமே கம்பர் நூறு கட்டளைக் கலித்துறையிற் சடகோபரந்தாதியைப் பாடினர். பின்பு, இராமாயணம், நாதமுனிகளுடைய திருவோலக்கத்திலே மோட்டழகிய சிங்கர் சிரக்கம்பஞ் செய்யுமாறு அரங்கேற்றப்பட்டது. அக்காலம் முதலியவற்றிற்கு,

"எண்ணிய *சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய்நல்லூர் தன்னிலே கம்பநாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றினனே" எனக் காண்க.

இவ்விராமாயணத்தின் காண்டம் முதலியவற்றின் தொகையை அடியில், வருஞ் செய்யுளால் அறியலாம்:—

"கரைசெறி காண்ட மேழு கதைக ளாயிரத்தெண்ணூறு
பரவுறு சமரம் பத்துப் படல நூற்றிருபத்தெட்டே
யுரைசெயும் விருத்தம் பன்னீ ராயிரத் தொருபத்தாறு
வரமிகு கம்பன் சொன்ன வண்ணமுந் தொண்ணூற்றாறே."

இவர் செய்த நூல்கள்-இராமாயணம், சடகோபரந்தாதி, ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கைவழக்கம், சரசுவதியந்தாதி முதலியன.

இவர்காலத்து வித்வான்கள் - புகழேந்திப்புலவர், ஒட்டக்கூத்தர், ஒளவை, பேராசிரியர், நேமிநாதர் முதலியோர்.

இவரது சமயம் - வைஷ்ணவம்.

இவர் சரித்திரவிவரத்தைத் தொண்டைமண்டலசதகம், தமிழ்நாவலர் சரிதை, பாண்டிமண்டலசதகம், சோழமண்டலசதகம், விநோதரசமஞ்சரி; பலவர்புராணம் முதலிய நூல்களிற் காணலாம்.

"வெண்பாவிற்புகழேந்தி பரணிக்கோர்சயங்கொண்டான் விருத்தமென்னு
மொண்பாவிலுயர்கம்பன் கோவையுலாவந்தாதிக்கொட்டக்கூத்தன்
கண்பாயகலம்பகத்திற்கிரட்டையர்கள் வசைபாடக்காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காசலா லொருவர் பகரொணாதே"

ன்பதனால், விருத்தம் பாடுதலில் மிகச்சிறந்தவ ரிவ ரென விளங்கும்.

'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிசொல்லும்', 'கல்வியிற் பெரியன் ம்பன்' என்ற பழமொழிகள், இவரது கல்வித்திறத்தை மெச்சி வழங்கியன.

* சகாத்தம் - சாலிவாகன சகாப்தம்; இப்பொழுது நடப்பது, ௧௮௩௦. வே, கம்பர்காலம் இப்பொழுதைக்கு ஆயிரம் வருஷங்கட்குமுன்பு என்க.

ஸ்ரீ

கடவுள் துணை.

# கம்பராமாயணம்.

கம்பரது ராமாயணம் என விரியும்; ஆறாம்வேற்றுமைத்தொகை, செய்யுட்கிழமைப்பொருளது: "கபிலரகவல்" என்பதிற் போல; கம்பர்செய்த ராமாயணம் என்பது கருத்து. கம்பராற் செய்யப்பட்ட ராமாயணம் என மூன்றனுருபும் பொருளும் உடன் தொக்கதொகையாகக் கொள்ளினும் இழுக்காது. "சில விகாரமா முயர்திணை" என்றதனால், நிலைமொழியீற்றுமெய் கெட்டது. 'ராமாயணம்' என்பது, முதலில் வான்மீகிமுனிவர் செய்த நூலுக்குப் பெயராகி, அதன் வழிநூ லாதலால் "முதனூல் கருத்தன் அளவு மிகுதி, பொருள் செய்வித்தோன் தன்மை முதல் நிமித்தினும், இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே" என்னுஞ் சூத்திரவிதிப்படி இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. ராமாயணம் என்பது - ராம அயந என்ற இரண்டுமொழி சேர்ந்து தீர்க்கசந்திபெற்றது; இது ஒன்றன்பெய ராதலால், வடநூல் விதிப்படி 'ராமாயணம்' என நிலைமொழியின் ரகாரத்தை நோக்கி வருமொழியின் நகாரம் ணகாரமாயிற்று. 'தன்னது நற்குண நற்செய்கைகளினாலும் திருமேனியழகினாலும் எல்லாரையும் மகிழ்விப்பவன்' என்பது, 'ராம' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; எல்லா நற்குணங்களும பொருந்தியவனென்பது கருத்து; 'அயநம்' - அடைய அல்லது அறியக் கருவியாயுள்ளது. ஆகவே, இராமனை அடைய அல்லது அறியக் கருவியாயுள்ள நூல் என்பதாம். இராமனுடைய குணநிலைபவங்களைத் தெரிவிக்கும் நூல் என்பது, திரண்டபொருள். 'அயநம்' - ஸ்தாநம்: அதாவது - விஷயம் எனப் பொருள்கொண்டு, இராமனை விஷயமாகவுடைய நூலெனக் கூறுதலும் ஒன்று. 'ஸீதாயாஶ்சரிதம்மஹத்" என்று சிறையிருந்தவ ளேற்றஞ் சொல்லும் பிரபந்தமாகையாலே, ராமாயணமென்பதற்கு - ராமா அயநம் என்று பிரித்து, சீதையை அறிவிக்கும் பிரபந்தம் என்றும் பொருள் கூறுவர்: (ராமா - சீதை.)

இப்பொருட்டொடர் நிலைச்செய்யுளைக் கம்பர் செய்கின்ற காலத்திற்கு நூல் தொல்காப்பிய மாதலாலும், பிறர் கூறிய நூல்கள் நிரம்பிய இலக்கணத்தன அன்மையாலும், அந்நூலிற் கூறிய இலக்கணமே இதற்கு இலக்கணமென்று உணர்க. அந்நூலிற் செய்யுளியலில், ஆசிரியர், பா நான்கென்றும் அவற்றை அறம்பொருளின்பத்தாற் கூறுக வென்றுங் கூறி, பின்பு, அம்மை முதலிய எட்டும் தொடர்நிலைச்செய்யுட்கு இலக்கணமென்று கூறுகின்ற இடத்து. "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்தமொழியா னடிநிமிர்ந்தொழுகினுந், தோலென மொழிப தொன்மொழிப் புலவர்" என்னுஞ் சூத்திரத்தால், 'அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமிய பொருள் பயப்பப் பழையதோர் கதைமேற் கூறின், அது தோல்' என்று கூறியதனால், இப்பெருங்காப்பியம் அங்ஙனம் கூறிய தோலாமென்று உணர்க.

இப் பெருங்காப்பியத்தில், பிரதானமான, ஸ்ரீராமசரித்திரத்தினாலும், அதனைத்தொடர்ந்த வாலிசுக்கிரீவாதியரது சரித்திரங்களாலும் - ஆசாரமும்,

சத்தியமும், தருமமும், கருணையும், வீரமும், கற்புநிலையும், உடன்பிறந்தோரொற்றுமையும், பழியச்சமும், அதருமத்தின் விளைவும், இழிசினரியற்கையும் முதலான ஸாமாந்ய தருமங்களும்; ஸ்ரீராமபிரான் சகல கல்யாணகுணகண பரிபூர்ணமான பரதத்வ மென்பதும், அவனைச் சரணமடைவதே எல்லாப் பயன்களையும் பெறும் உபாயமென்பதும், அடியார்கள் ஆசரிக்கவேண்டிய கைங்கரியம் முதலியவற்றின் முறைகளும் முதலான விசேஷதர்மங்களும் செம்பொருளாகவும் கருத்துப் பொருளாகவும் காட்டப்பட்டிருக்கின்றன.

[இவற்றுள், ஸ்ரீ ராமபிரான் பரதத்வமென்பது, "நீதியாய் முனிந்திடேல் நீயிங்கியாவர்க்கும், ஆதியா னறிந்தனெ னலங்கல்நேமியாய், வேதியாவிறவதேயன்றி வெண்மதிப், பாதியான் பிடித்த வில் பற்றப்போதுமோ," "பொன்னுடை வனைகழற் பொலங்கொள் தாளினாய், மின்னுடை நேமியானுதல் மெய்ம்மையால், என்னுள அலகினுக்கிடுக்கண் யான்தந்த, உன்னுடை வில்லுமுன்னுரத்துக்கீடன்றால்," "எண்ணிய பொருளெலா மினிது முற்றுக, மண்ணிய மணிநிற வண்ண வண்டுழாய்க், கண்ணிய யாவர்க்குங்களைகணாகிய, புண்ணிய விடை" என ஸ்ரீபரசுராமனாலும், இராவணவதத்திற்கு அப்பால் பெருமான் பிராட்டியைத் தீக்குளிக்கத் திருவுளம் பற்றியகாலத்து 'மன்னர் தொல்குலத்தவ ரினத்துணை யொருமனித, னென்னவுன்னலை யுன்னை நீ யிராமகேளிதனைச், சொன்ன நான்மறைத் துணிவினிற் றுணிந்த மெய்த் துணிவு, நின்னலாதில்லை நின்னின்வேறுளதில்லை நெடியோய்" என்றுதொடங்கி "ஓங்காரப் பொருள் தேருவோர்தா முன்னை யுணர்வோர், ஓங்காரப் பொரு ளென்றுணர்ந் திருவினை யுகுப்போர், ஓங்காரப்பொருளாமன்றென் றாழிசென்றாலும், ஓங்காரப் பொருளே பொரு ளென்கலா வுரவோர்" எனப் பிரமதேவனாலும், "உன்னை நீயொன்று முணர்கிலை போலுமா லுரவோய், முன்னை யாதியா மூர்த்திநீமூவகை யுலகி, னன்னை சீதையா மாது நின்மார்பின் வந்தமைந்தாள" என்று உருத்திரமூர்த்தியாலும் வெளியிடப்பட்டது. இனி, சித்திரகூடகிரியிலிருக்கையிலே சீதாபிராட்டியாரின் திருமார்பைத் தீண்டிய காகாசுரனை முனிந்து பெருமான் அயல் கல்லெழுபுல்லால் வேக வெம்படைவிட, அஞ்சி நடுங்கி அயன்பதி முதலிய அண்மிஎங்கு மிடம் பெறாதே, எறிகடல்வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவையாய், "ஐய நின்சரணஞ்சரண்" என்று அவன் அஞ்சி வையம் வந்துவணங்கிட, பெருமாள், திருவுள்ளமுவந்து, பிராட்டிதிறத்திலே பெரிய அபராதத்தைப் பண்ணின அந்தக்காகாசுரனைக் கடாக்ஷித்து "முந்து நின்குறையும் பொறைதந்தனம்" என்றலாலும்; கடற்கரையில் ஸ்ரீ விபீஷணாழ்வான் "கொற்றவசரண" எனக்கூவிச் சரணாகதி பண்ண, "வெற்றியே பெறுக தோற்க வீக வீயாதுவாழ்க, பற்றுதலன்றியுண்டோ புகலெமைப் பகர்கின்றானை" என்று அவற்கு அபயப்பிரதானஞ் செய்தலாலும்; வேதோபப்ரும்ஹணமான ஸ்ரீராமாயணம் சரணாகதிவேத மென்பதும், ஸ்ரீராமபிரானே சரணாகதரக்ஷகனென்பதும் பெறப்படுமாறு அறிக.]

பெருங்காப்பிய விலக்கணத்தை, "பெருங்காப்பியநிலை பேசுங்காலை, வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன், றேற்புடைத்தாகி முன்வர

வியன்று, நாற்பொருள் பயக்கும் நடைநெறித் தாகித், தன்னிகரில்லாத் தலைவனை யுடைத்தாய், மலை கடல் நாடு வளநகர் பருவம், இருசுடர்த்தோற்ற மென்றினையன புனைந்து, நன்மணம்புணர்தல் பொன்முடிகவித்தல், பூம்பொழில் நுகர்தல் புனல்விளையாடல், தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல், புலவியிற் புலத்தல் கலவியிற்களித்த லென், றின்னன புனைந்த நன்னடைத்தாகி, மந்திரந் தூது செலவிகல்வென்றி, சந்தியில்தொடர்ந்து சருக்க மிலம்பகம், பரிச்சேதமென்னும் பான்மையின் விளங்கி, நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக், கற்றோர் புனையும் பெற்றிய தென்ப" என்னுந் தண்டியலங்காரசூத்திரத்தால் அறிக. இவ்விலக்கணங்கள் பலவும் இவ்விராமாயணத்தில் வருவதை ஆங்காங்குக் காணலாம்.

இதிகாசம் புராணம் என்ற பகுப்பு இரண்டனுள், இராமாயணம் இதிகாசத்தின்பாற்படும்; மகாபாரதமும் அப்படியே. உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழையசரித்திரமொன்றைப் பிரதானமாக எடுத்துப் பல கிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக்கூறும் நூல் இதிகாசமென்றும், உலகத்தின் தோற்றம், ஒடுக்கம், முனிவர்கள் அரசர்கள் மரபு, அவர்கள் சரித்திரங்கள், மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக்கூறும் நூல் - புராணமென்றும் வேறுபாடு உணரத்தக்கது. [இதிகாசம்- பழைய ஒரு வரலாற்றை விரித்துக்கூறும் நூல் - புராணம்-மேற்குறித்த ஐந்து இலக்கணங்களும் அமையப் பழைய பல வரலாறுகளை யுணர்த்தும் நூல்] புராணம் - பிராம்மம் முதலாகப் பதினெட்டு வகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள், வேதத்தின் கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றி விளக்குதல்பற்றி, வேதத்துக்கு உபப்ரும்ஹணங்களென்று சொல்லப்படும்; உபப்ரும்ஹணமென்றால், வளர்ப்பதென்று பொருளாம். இவற்றுள் புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாணமென்றும், அதுபற்றியே "இதிகாசபுராணம்" என இதனை முன்னர்வைத்துக் கூறுவதென்றும் கொள்வர்.

இராமாயணத்தை முதலில் வடமொழியிற் செய்தவர், வால்மீகிமகாமுனிவர். இவர், ஸ்ரீராமபிரான் பூலோகத்தில் எழுந்தருளியிருக்கையிலேயே இராமாயணம் முழுவதையுஞ் செய்தருளி, அவர் அசுவமேதயாகஞ் செய்யத் தொடங்கிய சந்தர்ப்பத்தில் அவர்சந்நிதியில் அரங்கேற்றினர். (ஆனால், பாலகாண்டம்முதல் யுத்தகாண்டம்ஈறாக ஆறுகாண்டங்களும், உத்தரகாண்டத்தில் அசுவமேத மளவுந்தான இராமபிரான் சபையிற்கேட்டனர்.) உத்தரகாண்டத்தில் எதிர்காலவரலாற்றை முனிவர் ஞானக்கண்ணினால் முந்தியறிந்து கூறியதான மற்றைப்பகுதியை அப்பெருமான் பிரமதேவன் சொற்படி ஏகாந்தத்திற் கேட்டனர். இந்நூல் நாரதமுனிவரது உபதேசத்தாலும், பிரமனது அநுக்கிரகத்தாலுஞ் செய்யப்பட்டதாகையால், சிறந்தபிரமாணமாக வைதிகமதத்தவ ரெல்லாராலும் ஒப்புக் கொள்ளப்படுகின்றது. இது, ஸம்ஸ்க்ருதபாஷையில் ஆதிகாவியம். பின்பு பிற முனிவரும் கவிஞரும் இதனைப் பலவகைக் காவியங்களாகவும், நாடகங்களாகவும் வடமொழியில் இயற்றினர். இவ்வாறே வேறுபாஷைகளிலும் அந்தந்த வித்துவான்கள் செய்யலாயினர். தமிழிற் சங்கத்து இராமாயணமென்று ஒன்று இருந்ததாகச் சொல்

வதேயன்றி, வழங்கிவருவது கம்பராமாயணந்தான். இராமாயணத்தின் முதலாறுகாண்டங்கள் கம்பராலும், ஏழாவது காண்டம் ஒட்டக்கூத்தராலும் வடமொழி வால்மீகிராமாயணத்தைப் பெரும்பாலுந் தழுவித் தமிழிற் பாடப்பட்டவை. சற்றேறக்குறையக் கம்பர்பாடல் - க௦, ௫00; ஒட்டக்கூத்தர் - பாடல் - க, ௫00; ஆக - கஉ,000. வடமொழி வால்மீகிராமாயணம், உச,000 சுலோகங்களையுடையது.

முதனூலாகிய வடமொழி வால்மீகிராமாயணத்தோடு அதன் வழிநூலாகிய இத்தமிழிராமாயணம் சிற்சிலவிடத்துச் சிறிதுசிறிது வேறுபடுதலும் உண்டு. அது "முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி, அழியா மரபினது வழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கணவிதி பற்றி இவ்வாசிரியராற் பிறநூல் மேற்கோள்கொண்டும் தமது கற்பனாசக்தி கொண்டும் அமைக்கப்பட்டதெனக் கொள்ளவேண்டும். 'இப்படி மாறுபடுகின்ற இடத்து ஸ்ரீராமாயணத்தில் இல்லையேயாகிலும், இதிகாசாந்தர புராணாந்திகளிலே யாதல், கல்பாந்தரத்திலே யாதல் உண்டென்று கொள்ளவேணும்' என ஆன்றோர் அருளிச்செய்து அமைத்திருத்தல் உணரத்தக்கது. இதிகாசாந்தரமாகிய மகாபாரதத்திலும், பாத்மம் வைஷ்ணவம் கூர்மம் முதலிய புராணங்களிலும், அத்யாத்மராமாயணம் முதலிய நூல்களிலும் இராமசரித்திரம் சிற்சிலவிடத்து வேறுபடக் கூறப்பட்டிருத்தல் காணலாம்.

இராமாயணம், அந்தந்தப்பாகத்துச் சரித்திரத்தின் முக்கியமான விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் - பாலகாண்டம், அயோத்தியாகாண்டம், ஆரணியகாண்டம், கிஷ்கிந்தாகாண்டம், சுந்தரகாண்டம், யுத்தகாண்டம், உத்தரகாண்டம் எனப் பெயர்பெற்ற ஏழு காண்டங்கள் அடங்கியது. அவற்றுள்,

## நான்காவது

# கிட்கிந்தாகாண்டம்.

கிஷ்கிந்தாகாண்டமென்ற வடமொழித்தொடர்மொழி, ஆறும்வேற்றுமைத் தொகை; கிஷ்கிந்தையினது சம்பந்தமான காண்டம் என விரியும்; கிஷ்கிந்தையைப் பற்றிய காண்டமென விரித்து, இரண்டனுருபும் பொருளுந் தொக்கதொகை யெனினுமாம். கிஷ்கிந்தம் என்பது, ஒருமலை; அம்மலையைச்சார்ந்த காடும் அப்பெயர்பெற்றது: அதன் பிரதானபட்டணத்துக்கும் கிஷ்கிந்தையென்று பெயர். இது, வாநரராஜர்களான வாலிசுக்கிரீவர்கட்கு இராஜதானி; குகைபோல மலையிடையே யுள்ளது. காண்டம் - கூட்டம்; இப்பொதுப்பெயர் - இங்கு, சரித்திரத்தின் ஒருபாகத்தை யுணர்த்துஞ் செய்யுட்களின் கூட்டமென்று சிறப்பாகக் கொள்ளப்பட்டு, ஒரு பெரும் பிரிவுக்குப் பெயராக வழங்கியது. ஆகவே, கிஷ்கிந்தையில் நடந்த வரலாற்றைக் கூறும் பாகமென்றதாயிற்று.

இக்காண்டம் - பம்பைப்படலம் முதல் மகேந்திரப்படலம் ஈறாக கஎ - படலங்கள் அடங்கிய க௦இ௦ - செய்யுளுள்ளது.

## கதைத் தொடர்ச்சி.

[இராமாயணக்கதை மிகப்பிரசித்தமான தாதலால், இக்காண்டத்துக்கு முன்கதைத் தொடர்ச்சி மிக்கசுருக்கமாக எழுதப்படுகின்றது.]

முன் ஒருகாலத்தில் தேவர்களெல்லாரும் இராவணன் முதலிய இராக்கதர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச் சரணமடைந்து, அஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்தருளுமாறு வேண்டினார்கள். அத்திருமால் அவ்வேண்டுகோளுக்கு இரங்கி லோகசம்ரக்ஷணத்தின் பொருட்டுத் தனது அம்சத்தைக்கொண்டு நான்கு ரூபமாகத் தசரதமகாராஜனிடத்தில் அவதரித்துத் தீயோரையழித்து நல்லோரைப் பாதுகாப்பதாக அருளிச்செய்தான். இது நிற்க: இப்பாரதகண்டத்துக் கோசலதேசத்திலே சரயூநதிக்கரையில் அயோத்தியாநகரத்திலே திரேதாயுகத்திற் சூரியகுலத்தில் உதித்து நிலவுலகமுழுவதும் தனிச் செங்கோல் செலுத்திய தசரதசக்கரவர்த்தி தனக்கு அநேக ஆயிரம் ஆண்டுகள் கழிந்தும் பலமனைவியர்களிருந்தும் புத்திரபாக்கியமில்லாமையினாலே மிகவும் மனம்வருந்திக் குலகுருவாகிய வசிஷ்ட மகாமுனிவனிடம் தனது குறையைக் கூறி அம்முனிவனது கட்டளைப்படி ருசியசிருங்கமுனிவனை அழைத்துவந்து அந்தக் கலைக்கோட்டுமாமுனிவனைக் கொண்டு அசுவமேதயாகமும் புத்திரகாமேஷ்டியும் செய்தான். அந்த யாகத்தின் பயனாகச் சக்கரவர்த்தியின் பிரதான தருமபத்தினியர் மூவருள் கௌசல்யாதேவியினிடம் ஸ்ரீராமனும், கைகேயியினிடம் பரதனும், ஸுமித்திரையினிடம் இரட்டையராய் லக்ஷ்மண சத்துருக்கனரும் திருவவதாரஞ் செய்தார்கள். (இவர்களில் இராமபிரான், ஸ்ரீமந்நாராயணனது ஏழாவது திருவவதாரம். இளையபெருமாள், அத்திருமாலுக்குப் பலவகைக் கைங்கரியங்களைச் செய்கிற ஆதிசேஷனது அவதாரம். பரதாழ்வானும், சத்துருக்கனாழ்வானும் - சுதர்சன பாஞ்சஜந்ய மென்னும் திருமாலின் சக்கர சங்கங்களின் அவதாரம். ஆனாலும், லக்ஷ்மணன் முதலியோரிடமும் விஷ்ணுவின் அம்சம் இருந்தது. அதுபற்றியே, 'திருமால் நான்குருபமாக அவதரித்தனன்' என்பது.)

இராமபிரான், இளமையிலே விசுவாமித்திர மகா முனிவனுடைய வேள்வியைப் பாதுகாத்தற்பொருட்டு அம்முனிவனது விருப்பத்தின்படி அவன் பின்னே இலக்குமணனுடன் செல்லுகையில், வழியிலெதிர்ப்பட்ட தாடகையென்னுங் கொடிய அரக்கியையும், அந்த யாகத்தில் தீங்குவிளைக்கும்படி வந்த தாடகாகுமாரனான சுபாகு முதலிய பல அரக்கர்களையும் கொன்று, தாடகையின் மற்றொருகுமாரனான மாரீசனை வாயவ்யாஸ்திரத்தாற் கடலிலே தள்ளிவிட்டு, யாகத்தை நிறைவேற்றியபின், அம்முனிவனுடன் விதேகதேசத்து மிதிலாநகரத்துக்கு எழுந்தருளி, அங்கு ஜநகமகாராஜன் வளர்த்த மகளான சீதைக்குக் கந்யாசுல்கமாக வைக்கப்பட்ட சிவதனுசை எடுத்துவளைத்து முறித்து, இலக்குமியினது அவதாரமான அந்தஜாநகியைத் திருக்கலியாணஞ்செய்துகொண்டான். அப்பொழுது அங்குச் சநகன் தான்பெற்ற மகளான ஊர்மிளையை லக்ஷ்மணனுக்கும், தன் தம்பிபுத்திரிகளான மாண்டவி சுருதகீர்த்தி என்பவர்களைப் பரதசத்ருக்நர்களுக்கும் கொடுக்க, அவர்கட்கும் விவாகம் நிகழ்

## கதைத்தொடர்ச்சி

நது. பின்பு மிதிலையினின்று மீண்டுவருகையில், வலியவந்து எதிரிட்ட பரசுராமனை ஸ்ரீராமன் வென்று செருக்கடைபடக்கி அனுப்பிவிட்டு, அயோத்தி சேர்ந்தனன்.

பின்பு இராமபிரான் தனது சிறியதாயான கைகேயிக்குத் தனதுதந்தை கொடுத்திருந்த இரண்டுவரங்களையும் நிறைவேற்றுதலினிமித்தம் அக்கைகேயியின்சொல்லால் அவள்மகனான பரதனுக்குஉரியதாம்படி இராச்சியத்தைத் தான் கைவிட்டுப் பதினான்குவருடம் வனவாசஞ்செய்ய உடன்பட்டு, மனைவியாகிய சீதையோடும், தன்னைவிட்டுப்பிரியாத தம்பியான இலக்குமணனோடும் புறப்பட்டுக்குகனோடு தோழமைகொண்டு அவனுதவியாற்கங்கைகடந்துசித்திரகூடத்தில் வசிக்கையில், தந்தையிறந்தசெய்தியைவந்துசொல்லிஅயோத்திக்கு எழுந்தருளி அரசாளவேண்டுமென்று வேண்டிய பரதனுக்குஇன்சொற்கூறிப் பாதுகை கொடுத்து அனுப்பியபின், தண்டகாரணியஞ்சென்று அத்திரிமுனிவராச்சிரமஞ்சேர்ந்து, அவர்பத்தினி அநசூயை ஜாநகிக்கு அணியும் ஆடையும் அளிக்கப்பெற்று, அப்பாற்செல்லுகையிற் சீதையைத்தூக்கிக்கொண்ட விராதனைவதைத்து, சரபங்கமுனிவர்க்குப் பரமபதமளித்து, வாலகில்லியர் முதலியோர்க்கு அபயங் கொடுத்து, சுதீக்ஷ்ணமுனிவர் வழிகாட்ட அகத்தியமுனிவரை யடைந்து, வில்முதலியன அவர்தரப் பெற்றுக்கொண்டு, சடாயுவைத் தரிசித்துக் கோதாவரிநதி தீரத்திற் பஞ்சவடியாச்சிரமத்திலே வசிக்கும்போது, அரக்கர்தலைவனாய் இலங்கையில்வாழ்கின்ற இராவணனுடைய தங்கையான சூர்ப்பணகைவந்து இராமபிரானது திவ்விய சௌந்தரியத்தைக் கண்டு மிக்க ஆசைகொண்டு தன்னை மணஞ்செய்துகொள்ளும்படி பலவாறு வேண்ட, அதற்கு அப்பெருமான் உடன்படாமல் உபேக்ஷித்தமைபற்றி, அவ்வரக்கி 'அருகிலிருக்கிற இந்தப்பெண்ணை அகற்றிவிட்டால், இராமன் என்னை மனைவியாக் கொள்வன்' என்றுஎண்ணிச் சீதையைத் தனித்திருக்கிறசமயம்பார்த்துத் தூக்கிச்செல்லத் தொடங்க, அதுகண்ட இலக்குமணன் அவளுடைய மூக்குமுதலிய சில உறுப்புக்களை அறுத்ததுமன்றி, இங்ஙனம் மானபங்கப்பட்ட அவளுக்காகப் பரிந்துவந்த கரன் தூஷணன் முதலிய கொடிய இராக்கதர் பலரையும் இராமன் கொன்றொழித்தான். பின்பு இராவணன் சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டுச் சீதையினிடம் பெருங்காதல் கொண்டு சந்யாசிவேஷம் பூண்டுவந்து,மாயையாற்பொன்மானுருவங்கொண்ட மாரீசனது சூழ்ச்சியினால் இராமலக்ஷ்மணரை அப்புறப்படுத்தி, சீதையைத் தனித்திருக்கிறசமயத்தில் வஞ்சனையாக எடுத்துப் போகுமளவில், முன்வந்து எதிர்த்த ஜடாயுவை வலியழித்துச்சென்று, இலங்கையில் அசோகவனத்தில் அரக்கியர்சூழச் சீதையைச் சிறைவைத்திட்டான்.

பிறகு சீதையைத்தேடிக்கொண்டு இலக்குமணனுடனே சென்ற ஸ்ரீராமன், சீதையின் நிலைமையைச் சிறிதுகூறியிறந்த சடாயுவுக்குச் சரமகிரியை செய்து, கபந்தனைக்கொன்று, சபரிக்கு முத்தியளித்துச் செல்லும் வழியில், பம்பைப்பொய்கையைக் கண்டனன் என்பதாம்.

[கடவுள்வணக்கம்: ராமஸ்தோத்ரம்]

மூன்றுரு வெனக்குண மும்மை பாமுதற்
றோன்றுரு வெவையுமம் முதலைச் சொல்லுதற்
கேன்றுரு வமைந்தவு மிடையி னின்றவுஞ்
சான்றுரு வுணர்வினுக் குவந்த தாயினன்.

இது, காப்புச்செய்யுள். இதனால், கவி தாம் பாடத்தொடங்கிய காண்டம் இடையூறில்லாமல் இனிதுமுடிதற்பொருட்டு, உயர்ந்தோர் வழக்கத்தின்படியே செய்யப்படுங் கடவுள்வணக்கத்தை, மானஸமாகவன்றி வாசிக மாகவுங் கூறுகின்றார். நூன்முகத்திற் கடவுள்வணக்கங்கூறியது அமையாதோ? காண்டந்தோறும் கூறவேண்டுமோ? எனின்,—ஆசிரியர் பதஞ்சலியார் 'மங்களத்தை முதலிலும் இடையிலும் கடையிலு முடைய நூல்கள் மிக்கசிறப்புடன்தோன்றும்' என மாபாடியத்திற் கூறினாராதலின், இடையிலும் மங்களமாகக் கடவுள்வாழ்த்துக் கூறுதல் நல மாதலாலும், கல்விக்குப்பயன் கடவுளை வணங்குதலே யாதலாலும், நூல் ஒன்றேயாயினும் காண்டங்கள் பொருளால்வேறுபடுதலாலும், இவ்வாறு கூறினாரென்க: (அங்ஙனேல், ஒருநூற்கு எடுத்துக்கோடற்கண்ணே வணக்கஞ் சொல்லுதலன்றி அதிகாரந்தோறுஞ் சொல்லியது என்னையோவெனின்;—நூல்ஒன்றேயெனினும் அதிகாரங்கள் பொருளான் வேறுபடுதலானும், "ஆதியுமத்தமு நடுவு மங்கலம், ஓதிய முறைமையினுரைப்பாடியின், ஏதமி லிருவிலக்கிழுத்தி யின்புற, நீதியம்பனுவல்கள் நிலவு மென்பவே" என்ப வாதலானும், 'கற்றதனாற் பயன் குற்றமற்ற முற்றுமுணர்ந்த ஒற்றைநற்றவன் பொற்றாளிணை மலர் போற்றல்' என்பதனாலும், சொன்னாரெனக் கொள்க' என்னும் நன்னூற்பழையவுரை இங்கு நோக்கத்தக்கது.

கடவுள்வணக்கம் இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்க மென்றும், எற்புடைக்கடவுள்வணக்க மென்றும். வழிபடுகடவுள் வணக்கமாவது - தாம் தாம் குலதெய்வமாகக்கொண்டு ஆராதிக்கிற கடவுளைவணங்குதல்; இதற்கு உதாரணம் - வைஷ்ணவர் விஷ்ணுவையும், சைவர் சிவனையும், ஜைநர் ஜிநனையும், பௌத்தர் புத்தனையும் வணங்குதல் போல்வன. எற்புடைக்கடவுள் வணக்கமாவது - தாம் தாம் செய்யத்தொடங்கிய காரியத்துக்குத் தகுதியையுடைய கடவுளைவணங்குதல்: இதற்கு உதாரணம் - பாகவதங்கூறுபவர் கிருஷ்ணனையும், கந்தபுராணஞ்சொல்பவர் சுப்பிரமணிய மூர்த்தியையும் வணங்குதல் போல்வன- ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட இவ்வாழ்த்து, தமக்கு வழிபடுகடவுளும் தாம் செய்யத்தொடங்கிய இதிகாசத்துக்கு எற்புடைக்கடவுளு மாகிய திருமாலின் திருவவதாரமான இராமபிரானைப் பற்றிய தென அறிக.

அலைகடலைவே ணொரனந்தன்மீமிசை மலையென விழிதுயில்வளரு மாமுகிலாய்ப் பரமபுருஷனாகிய மன்றலர்துளவினனே, கசரததுரகமாக்கடல் கொள்காவலன் தசரதனது மதலையாய், இம்மாண்கதைக்கோரிறையாய் ஸ்ரீராமனாகித்திருவவதரித்ததனனே, கவிச்சக்ரவர்த்தியாகிய கம்பர், ஈடு மெடுப்பு மில்லாத இவ்வுத்தமநாயகன் விஷயமாகச் செய்யப்புக்க இப்பெருங் காப்பியத்திற்கு அவனையேவாழ்த்தல் வேண்டுதலின், காண்டந்தோறும் அவர்

விஷயமாகவே கடவுள் வாழ்த்துக் கூறத்துணிந்து, பாலகாண்டத்தில் ஸகலோபாய புருஷார்த்தங்களைச் சொல்லுகிற முறையாலே மூன்றுகவிகளாற் கூறி, அயோத்தியாகாண்டத்தில் இக்காப்பியத்தலைவராகிய ஸ்ரீராம பிரான் ஸர்வேஸ்வரனென்று கூறி, ஆரணியகாண்டத்தில் அப்பெருமான் வேத முதலிய நூல்களாலும் பிரமன்முதலிய பெரியோர்களாலும் உணர்தற்கரிய பரவஸ்து வென்று கூறி இக்காண்டத்தில் இக்கவியால், வஸ்துநிர்த்தேசரூப மங்கள முகத்தாலே, அப்பெருமான் சகல பிரபஞ்சத்தையுந் தனக்குச் சரீர மாகக்கொண்டவ னென்கிறார்.

(இதன்பொருள்.) உணர்விலுக்கு - (காண்பவர் கேட்பவர்களின்) நல் லறிவுக்கு, உவந்தது ஆயினன் - உவப்பைத்தரும் பொருளா யிருக்கின்ற ஸ்ரீராமபிரான்,—மூன்று உரு என - மூன்றுநிறங்களென்று சொல்லும்படி, குணம் மும்மை ஆம் - மூன்று குணங்களையுமுடைய, முதல் - மூலப்பிரகிருதியும், தோன்று உரு எவையும் - (அந்தமூலப்பிரகிருதியினின்று) உண்டாகிய எல்லாத்தத்துவங்களும், அ முதலை சொல்லுதற்கு என்று உரு அமைந்தவும் - அந்த மூலப்பிரகிருதியை (ப் பெயரும் உருவமுங்கொடுத்துச்) சொல் லும்படி பொருந்தி வடிவமைந்த பிரபஞ்சங்களும், இடையில் நின்றவும் - அப்பிரபஞ்சத்தினிடையே புகுந்துநின்ற ஜீவன்களும், சான்ற உரு - (தனக்குச்) சிறந்த சரீரமாக்கொண்ட பரப்பிரஹ்மமாம்; (என்றவாறு.)

சேதநாசேதநங்களின் வடிவமான எல்லாப் பிரபஞ்சமும் பரமாத்மாவுக் குத் திருமேனி யென்னுமிடத்தை, ஸ்ரீவிஷ்ணுபுராணம் ஸ்ரீபாகவதம் முத லியவற்றிலே மிகத்தெளிவாய்ப் பரக்கக்காண்க. 'ராமன்' என்னுஞ்சொல் லுக்கு - 'தன்பக்கல் யாவரும் மனங்களிக்கப்பெற்றவன்' என்பது பொருளாத லால், அக்கருத்துப்பற்றி, இங்கு 'உணர்விலுக்கு உவந்ததாயினன்' என்றார். 'மூன்றுரு' என்னுமிடத்தில், 'உரு' - நிறம்; "உருவே அட்டையும் வடி வும் நிறமும்" என்பது காண்க. நிறம்மூன்றாவன - வெண்மை, செம்மை, கருமை என்பன, குணம்மூன்றாவன - ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என் பன: மூலப்பிரகிருதிக்கு இந்த நிறங்களும் குணங்களும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றன. 'மும்மை' என்பது மூன்றின் தன்மை யென்ற பொருளை புணர்த்தாமல் மூன்றென்ற பொருளையே குறித்ததனால், இதில் 'மை' - பகுதிப்பொருள்விகுதி யெனக். 'முதல்' என்னும் பண்புப் பெயர்- ஆகுபெயராய், முதன்மையான மூலப்பிரகிருதியை யுணர்த்திற்று. 'முதல்' என்பதன் ஈற்றில் எண்ணும்மை செய்யுள்விகாரத்தால் தொக்கது. மூலப் பிரகிருதியினின்று உண்டாகிய தத்துவங்கள்:—மாக் (௧), அகங்காரம் (௧), மனம் (௧), ஞானேந்திரியம் (௫), கர்மேந்திரியம் (௫), தந்மாத்திரை (௫), பூதம் (௫) என இவை. சான்றஎன்ற பெயரெச்சத்தின் இறுதி, தொகுதல். அமைந்த, நின்ற - பெயர்.

'என்றுருவமைந்தவரிடையினின்றவர், சான்றுருவுணர்விலுக்குணர் ராயினன்' என்றும், 'இம்முதல்' என்றும், 'இடையினின்றவன்' என்றும், ன்றவரு மணர்விலுக்கு' என்றும், 'ஊன்றுருவுணர்விலுக்கு' என்றும், ன்றுருவலகிலுக்குலகர்தாயினன்' என்றும், 'உணர்விலுக்குணர்வதாயி ' என்றும் பாட பேதங்கள் காணப்படுகின்றன.

அறை - கடவுள்வாழ்த்து; தொல்காப்பியத்தில் "வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே" என்றதன் கண், 'வகை' என்றதனாற் கொண்ட அறு முறைவாழ்த்தன்றித் தனக்கும் பிறர்க்கும் பயன்படும்படி "யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்றதனால், முன்னிலையன்றியுங் கடவுளை வாழ்த்துதலின், இக்கவி கடவுள்வாழ்த்தெனப் பெயர்பெற்றது; [அறுமுறை வாழ்த்தினுள் வாழ்த்தப்படும் பொருள்களாவன:—முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும் மழையும் நாடுமாம்.]

## முதலாவது
## பம்பைப்படலம்.

பம்பை என்பது-ஒரு பெரிய பொய்கை; பொய்கை - குளம், (பொய்கை-மானிடராக்காத நீர்நிலை.)அது, கிஷ்கிந்தாநகரத்துக்கு அருகிலுள்ளது. படலம் என்னும் வட சொல்லுக்கும் கூட்டமென்று பொருள்; ஆயினும், அது - சங்கேதத்தால், ஒரு பெரியவகுப்பினுட்பட்ட சிறியபாகத்தைக் குறிக்கும். ஆகவே, ஸ்ரீ ராமலக்ஷ்மணர் பம்பைப்பொய்கையைக் கண்டது, இராமபிரான் பிராட்டியைப் பிரிந்தபிரிவால் அப்பொய்கையிலுள்ள சக்கரவாகம் முதலிய பறவைகளையுந்தாமரை முதலிய கொடிகளையுங்கண்டு இரங்கியது, அதில் நீராடிச்சந்தியாவந்தனஞ் செய்தது முதலிய செய்தியைச் சொல்லுஞ் சிறு பிரிவு என்றதாயிற்று.

[இதுமுதல் இருபத்தோருகவிகள் பம்பைப்பொய்கையின் வருணனை.]

க. தேன்படி மலரது செங்கண் வெங்கைம்மா
தான்படி கின்றது தெளிவு சான்றது
மீன்படி மேகமும் படிந்து வீங்குநீர்
வான்படிந் துலகிடைக் கிடந்த மாண்பது.

(இ - ள்.) (அப்பொய்கை),—தேன் படி மலரது - மதுப்பொருந்திய (தாமரைமுதலிய நீர்ப்) பூக்களையுடையது; செம் கண் வெம் கை மா - சிவந்த கண்களையும் வெப்பம்பொருந்திய துதிக்கையையு முடைய மதயானைகள், படிகின்றது - (தன்னிடம் வந்து) குளிக்கப்பெற்றது: தெளிவுசான்றது-தெளிவு மிகுந்துள்ளது; (ஆதலால்),—வீங்கு நீர் - மிக்க நீரையுடைய கடலானது, மீன படி மேகமும் படிந்து - மின்னல் பொருந்திய மேகங்களும் (தன்னிடத்து வந்து) படியப்பெற்று, வான் படிந்து-ஆகாயமும் படியப்பெற்று,உலகு இடை - நிலவுலகத்தின் நடுவிலே, கிடந்த-பொருந்தியிருந்த, மாண்பது தன்மையை யுடையது; (எ - று.)—தான் - அசை.

கீழ் ஆரணியகாண்டத்தின் ஈற்றுக்கவியில் "பம்பையாம் பொய்கை கண்டார்" என்று கூறியுள்ளதனால், இதுமுதற் பதினைந்து கவிகளுக்கு 'அப் 'பொய்கை' எனத் தோன்றா எழுவாய் வருவித்து முடிக்க.

மலர்கள் நிறைந்து யானைகள் வந்து படியப்பெற்றுத் தெளிவுபொருந்திய அப்பம்பைப் பொய்கையானது, மின்னல்கள் கிளர்ந்து மேகங்கள் தவழ்கின்ற

ஆகாயம் தங்கப்பெற்றதொரு கடலை யொத்திருந்தது என்பதாம்; தற்குறிப் பேற்றவணி.

மின்னல்கள் - மலர்களுக்கும், மேகங்கள் - யானைகளுக்கும், ஆகாயம் படிதல் - தெளிவுமிக்கிருத்தற்கும், கடல் - பொய்கைக்கும் உவமையெனக் காண்க. யானைகள் கூட்டங்கூட்டமாக வந்து இறங்கி முழுகிக் கலக்கும்போது அவற்றின் இடையிடையே தோன்றிமறைகின்ற மலர்களை, மேகத்தினிடையே தோன்றி மறைகின்ற மின்னல்களாகக் குறித்தார். யானைக்கு மேகவுவமை, கருநிறத்திற்கும், மதமழைபொழிதற்கும். ஆகாயம் சுத்தமாய் நிர்மலமான நிலைமையையுடையதாதலால், தெளிவுக்கு உவமைகூறப்படும். யானை மதம்பிடித்திருக்கும்போது அதன் கண்கள் சிவந்தும், துதிக்கை வெப்பமாயும் இருக்குமாதலால், 'செங்கண் வெங்கைம்மா' என்றார். கைம்மா - துதிக்கையையுடைய விலங்கு: எனவே, யானையாயிற்று. கைம்மா - சாதியொருமையாதலால், 'தானபடிகின்றது' எனப்பட்டது. தாமரை முதலிய நீர்ப்பூக்களின் மலர்ச்சி கூறப்பட்டதனால், ராமலக்ஷ்மணர் பம்பா புஷ்கரிணியை யடைந்த காலம் வசந்தகாலமென்று முதனூலிற் கூறியதைக் குறிப்பித்தவாறாயிற்று. நறிஞ்சிநிலக் கருப்பொரு ளாதல்பற்றி, கைம்மாவைக் கூறினர். 'யானைகள் படிந்து கலக்கினலும் தெளிவுசான்றது' என்றதனால், நீரின்மிகுதி கூறியவாறு.

'வெங்கைமா' என்ற பாடங்கொண்டு, புலியாகியவிலங்கெனப் பொருள் கூறி, 'மீன்படி' என்பதை மேகம் வீங்குநீர் வான் என்ற மூன்றனோடும் இயைத்து - அப்பொய்கை மின்னல் பொருந்திய மேகங்கள் பூமியிற் படிந்து கிடந்த மாண்பது, மீனகள்பொருந்திய கடல் (இவ்விடத்திற்) கிடந்த மாண்பது, நக்ஷத்திரங்கள் பொருந்தியவானம் உலகிடைப்படிந்து கிடந்த மாண்பது என்று தனித்தனி முடிபுகொண்டு, அப்பொய்கைக்கே மேகம் கடல் வானம் என்ற மூன்றையும் உவமைகூறியதாக உரைகூறுவாரு முளர்.

படி மலர் - வினைத்தொகை. மலரது, மாண்பது - ஒன்றன்பாற்குறிப்பு வினைமுற்றுக்கள். சான்றது - மிகுதிப்பண்புணர்த்துகிற 'சால்' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த இறந்தகாலவினைமுற்று. மீன - மின் என்பதன் நீட்டல் விகாரம்; அன்றி, மின்னுவது மீன் எனக் காரணப்பெயராகவுமாம். மேகமும், உம் - எதிரது தழுவிய எச்சம். இனி, படி என்பதை "வரிப்புனை பந்து" என்றதில் 'வரி' என்பதுபோல, 'படிந்து' என்பது விகுதி முதலியன தொக்கதாகக்கொண்டு, நக்ஷத்திரம் படிந்து எனவுமாம். வீங்குநீர் - வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை.

'வேலைநீர்' என்பது - பாடாந்தரம்.

இதுமுதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள்; கீழ்ப்போந்த காப்புக்கவியும் இவ்வாறே. (க)

௨. சார்ந்தறுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்தபித்திகை

சேர்ந்துழிச்சேர்ந்துழிநிறத்தைச்சேர்தலா
லோர்ந்துணர்வில்லவருள்ளமொப்பது.

(இ - ள்.) ஈர்ந்த நண் பளிங்கு என - அறுத்து வேலைசெய்யப்பட்ட நேர்மையான [மிகமெல்லிய] ஸ்படிகக்கல்போல, தெளிந்த - மிகத் தெளிவாக வுள்ள, ஈர் புனல் - (அப்பொய்கையின்) குளிர்ந்த நீரானது, பேர்ந்து ஒளிர் நவமணி படர்ந்த பித்திகை - இடையிட்டு விளங்குகின்ற ஒன்பதுவகை யிரத் தினங்களும் நிரம்பப் பதித்துள்ள படித்துறைச்சுவர்களில், சேர்ந்துழி சேர்ந் துழி - அலை மோதி யடையும்பொழுதெல்லாம், நிறத்தை - (அந்தந்த ரத்னங் களின்) வருணத்தை, சேர்தலால்-அடைதலாலே,—(அப்பொய்கை,) ஓர்ந்து- (பலநூல்களை) ஆராய்ந்தும், உணர்வு இல்லவர்-(அவற்றின் மெய்ப்பொருளை) அறிதலில்லாதவரது, உள்ளம் - மனத்தை. ஒப்பது-ஒத்திருப்பது; (எ - று.)

மெய்யறிவில்லார்மனம் தன்னில் ஒரு தேர்ச்சியின்றி ஆங்காங்குக் காணும் பொருள்களையெல்லாம் மெய்ப்பொருளென்று பற்றுவதுபோல, பொய்கையின்நீர் தனக்கென ஒருநிறமு மில்லாமல் ஒவ்வொருவகை யிரத்தி னங்களையும் அடுக்கும்பொழுது அவ்வவற்றின் நிறத்தைக்கொண்டு தோன்று வது எனத்தொழில்பற்றிவந்த உவமையணி. அப்பொய்கையின்நீர் மிகத் தெளிவுள்ளதென்பதனை விளக்குதற்கு, ஈர்ந்தநுண்பளிங்கை உவமைகூறி னார், தெளிவுமிகுதியால் தன்னை யடுத்த பொருளின் உருவத்தைத் தான் கொண்டு காட்டுதலில், ஈர்ந்தநுண்பளிங்கும் புனலும் ஒக்கும்; "அடுத்தது காட்டும் பளிங்கு" என்றார் திருவள்ளுவரும்.

நவமணிகளாவன - கோமேதகம், நீலம், பவளம், புஷ்யராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன. உணர்வு இன்னதென்ப தனை "எப்பொரு ளெத்தன்மைத்தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" என்னுந் திருக்குறளாலும் அறிக. ஈர்ம்புனல்-பண்புத்தொகை. கப்பிரத்தியயம் பெற்றுவந்த 'பித்திகா' என்னும் வடமொழி, ஆவீறு ஐயா யிற்று. சேர்ந்துழி - சேர்ந்த உழி: பெயரெச்சவீறு தொகுத்தல்; அடுக்கு - தொறுப்பொருளது. 'பலநூல்களை' என்பது, இசையெச்சம். 'ஓர்ந்தும்' என்னும் உயர்வுசிறப்பும்மை, விகாரத்தால் தொக்கது. (உ)

௩. குவான்மணித்தடந்தொறும்பவளக்கோலிவர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டலிற்
றவாநெடுவானகந்தயங்குமீனொடு
முவாமதியுலப்பிலவுதித்ததொப்பது.

(இ - ள்.) குவால் மணி - கூட்டமாகிய முத்துக்களையுடைய, தடம் தொறும்-அப்பொய்கையினிடமெல்லாம், பவளம் கோல் இவர் கவான்-பவழத் துண்டைப்போன்ற [சிவந்த] கால்களையுடைய, அரச அன்னமும்-ராஜஹம் ஸம் அநேகமும், பெடையும்-(அவற்றின்) பேடைகள் அநேகங்களும், காண்ட லின் - (சேர்ந்து) காணப்படுதலால்,—(அப்பொய்கை),—உலப்புஇல - அள வில்லாத [அநேகமாகிய], உவா மதி - பௌர்ணமியில் தோன்றுகின்ற பூர்ண சந்திரர்கள், தயங்கும் மீனொடும் - விளங்குகின்ற (நம்மிணைவியர்களாகிய)

நக்ஷத்திரங்களுடனே, உதித்தது - (தன்னிடத்தே ஒருசேர) விளங்கப் பெற்றதாகிய, தவாகெடு வான் அகம் - அழியாத பெரிய ஆகாயத்தினிடத்ததை, ஒப்பது - ஒத்திருப்பது; (எ - று.)

முத்துக்கள்நிறைந்த பொய்கையினிடங்களில் அங்கங்கே பெடைகளாற் சூழப்பட்டுத் தோன்றும் அரசவன்னம், பலதாரகைகள் நிறைந்துள்ள ஆகாயத்தினிடங்களில் அங்கங்கே மனைவியரான அசுவினிமுதலிய நக்ஷத்திரங்களாற் சூழப்பட்டுத் தோன்றும் பூர்ணசந்திரனை யொக்கும் என்றவாறு; தற்குறிப்பேற்றவணி. இல்பொருளுவமையணி யென்பாரு முளர். அன்னத்துக்கு - வெண்மதியும், அதன் பேடைகளுக்கு - அசுவினி முதலிய நக்ஷத்திரங்களும், முத்துக்களுக்கு - மற்றைத்தாரகைகளும், பொய்கைக்கு - வானமும் உவமை. இனி, முத்துக்களினிடையே அன்னம் தோன்றுவது, நக்ஷத்திரங்களினிடையே சந்திரன் விளங்குவது போலும் எனக் கருத்துக்கொண்டு உரைப்பினும் அமையும். முத்துக்கள் - இப்பி, சங்கு, சலஞ்சலம் முதலியவற்றில் உண்டாகின்றவை.

அரசன்னம் - அன்னப்பறவைகளிற் சிறந்தது; உடம்புமுழுவதும் வெளுத்து மூக்குங்காலுஞ்சிவந்திருப்பது அதனிலக்கணமாதலின், 'பவளக்கோலிவர்கவானரசன்னம்' என்றார். காற்று, நெருப்பு, நீர், நிலம் என்னும் மற்றை நான்கு பூதங்களுக்குங் காரணமாகி முன்னே தோன்றி அவையெல்லாம் அழியுமளவும் தான் அழியாதிருத்தலால், 'தவா' என்னும் அடைமொழி, வானுக்குக் கொடுக்கப்பட்டது. அசுவினி முதலிய இருபத்தேழுநக்ஷத்திரங்களும் சந்திரனுக்கு மனைவியரென்பது நூற்கொள்கை. தொறு - பொருளின் பன்மை குறிப்பதோ ரிடைச்சொல். 'மணற்றடம்' என்றும் பாடம். பவளம் - ப்ரவாளம் என்ற வடமொழியின் சிதைவு. இவர் - உவமவுருபு. கவான் - கவீ என்னும் வடமொழியின் சிதைவு; அது, வேதத்தில் வழங்குவது: தொடை யென்னும் பொருளையுடைய இச்சொல், இங்கே இலக்கணையாய்க் காலை யுணர்த்திற்று. அன்னம் - ஹம்ஸமென்னும் வடமொழியின் சிதைவு. தொல்காப்பியத்து மரபியலில் "புள்ளு மூரிய அப்பெயர்க் கென்ப" என்றதன்பின், "பேடையும் பெடையும் நாடி னொன்றும்" என்றதனால் பெடை யெனப்பட்டது. காண்டல் - இங்குச் சொப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய்வினை. இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருள். தவா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சத்தில், தபு என்பதன் திரிபாகிய தவு - முதனிலை. 'காலிவர்' என்னும் பாடம், மோனைத் தொடைக்குச் சிறவாது.

இச்செய்யுளில் மருதநிலத்திற்குப் பயின்ற அன்னத்தைக் குறிஞ்சிநிலத்தில் மயங்கக் கூறியது, "எந்நில மருங்கிற் பூவும் புள்ளு, மந்நிலம் பொழுதொடுவாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்தவாகும்" எனத் தொல்காப்பிய அகத்திணையியலுட் கூறிய கருப்பொருட் புறனடைச் சூத்திரத்தால் அமைந்தது; மேல் - புள்ளும் பூவும் முதலியன மயங்கக்கூறுவனவற்றிற்கும் இது ஒக்கும். (ரு.)

உதநீருலகமுழுமயிர்களியாவையும்
வேதபாரகரையும்விதிப்பவேட்டலாட்

*சீதம்வீங்குவரியைச்செருக்குமாறொரு*
*காதிகாதலன்றருகடலினன்னது.*

(இ - ள்.) (அப்பொய்கை),—ஒரு - ஒப்பில்லாத, காதி காதலன் - காதியென்னும் ராஜரிஷியினது குமாரராகிய விசுவாமித்திரர், ஓதம்நீர் உலகமும் - குளிர்ந்த கடல்நீராற் சூழப்பட்ட உலகத்தையும், உயிர்கள் யாவையும் - (அவ்வுலகத்திலடங்குகின்ற) உயிர்களெல்லாவற்றையும், வேதபாரகரையும் - வேதங்களாகிய கடலின் கரையைக் கண்ட பிராமணர்களையும், விதிப்ப - (வேறே) படைத்தற்பொருட்டு, வேட்ட - விரும்பிய, நாள் - காலத்தில்,—சீதம் வீங்கு உவரியை - குளிர்ச்சிமிக்க உப்புக்கடலை, செருக்கும் ஆறு - மாறுகொள்ளும்படி, தரு - (பிரதியாகப்) படைத்த, கடலின் - நல்லநீர்க்கடலை, அன்னது - ஒத்திருப்பது; (எ - று.)

இப்பொய்கை, இனிய நீருடையதாதலால், பூமியைச் சூழ்ந்த லவணசமுத்திரத்துக்கு மாறாகப் பூமியினிடையே படைத்ததொரு நன்னீர்க் கடலைப் போன்றதென்றார்; (இவ்வருணனை, வடமொழியுள்ளுங் காதம்பரியில் அச்சோதமென்ற சரசின் வருணனையிற் கூறப்பட்டிருக்கின்றது:) தற்குறிப்பேற்றவணி.

வேதபாரகர்-வேதம்முழுவதையும் தாம் ஐயந்திரிபற உணர்ந்து பிறர்க்கு ஓதுவிக்கவும் வல்லவர் என்றபடி. வேதம் - நன்மை தீமைகளை அறிவிப்பது என வடமொழிக்காரணக்குறி. பாரகர் - கரையை அடைந்தவர்; பாரம் - அக்கரை: அடைதல் - அறிதல். பாரமென்பதற்கு ஏற்ப, வேதங்களாகிய கடலெனப்பட்டது. இனி, பாரம்-முடிவு எனக்கொண்டு, வேதத்தின்முடிவாகிய வேதாந்த சாஸ்திரத்தை யறிந்தவரென்றுமாம். சிறப்புப்பற்றி, அந்தணரைத் தனியே எடுத்தோதினார். பிரமசிருஷ்டிக்குமாறாக எல்லாவுலகங்களையும்இந்திராதிதேவர்களையும் மற்றுமுள்ளபொருள்களையும் படைக்கத்தொடங்கிய சிறப்புப்பற்றி, 'ஒருகாதிகாதலன்' என்றார். இனி, ஒருகடல் என்றுங் கூட்டலாம். காதி - விசுவாமித்திரமுனிவனது தந்தை; பிரமனது புதல்வனான குசனென்னும் அரசனது புத்திரர் நால்வருட் குசநாபனது மகன். காதலன் - அன்புடையவன்; அன்புக்கு விஷயமானவன். உயிர்களியாவை - தன்னொழி மெய்ம்முன் யகரம்வர இகரம் தோன்றிற்று. உலகம் - லோகமென்ற வடமொழியின் விகாரம்; தனியே தமிழ்மொழி யென்பர் நச்சினார்க்கினியர், உவரி - உவர்ப்புச் சுவையுடையது.

விசுவாமித்திரர் பிரதிசிருஷ்டி செய்யத்தொடங்கியது, அயோத்தியாசனாகிய திரிசங்குமகாராசனுக்கு மனிதசரீரத்துடனே சுவர்க்கங்கொடுக்கமுயன்றபொழுதில்; அவ்வரலாறு வருமாறு:-சூரியகுலத்துத்தோன்றிய (அரிச்சந்திரனது தந்தையாகிய) திரிசங்குமகாராசன் தனது குலகுருவாகிய வசிட்டரை நோக்கி 'இவ்வுடம்புடனே யான் சுவர்க்கலோகமடையும்படி அருள்செய்ய வேண்டும்' என்று வேண்டியதற்கு, அவர் 'அது இயலாது: இறந்தபின்னர் அடையலாம்' என்றுசொல்லி மறுக்கவே, அரசன் 'ஆனால், வேறு குருவை நாடியடைகின்றேன்' என்ன, முனிவர் 'குருத்துரோகியாகி நீ சண்டாளனு

வாய், என்று சபிக்க, உடனே அவன் சண்டாளனுகி நகர்நீங்கி வெளியில் அலைகையில், தென்திசையில் தவஞ்செய்துகொண்டிருந்த விசுவாமித்திரனை யடைந்து நிகழ்ந்ததைச் சொல்ல, முன்னமே வசிஷ்டரிடத்திலும் பகைமை கொண்டவராகிய அவர் அவனுக்கு அவ்வரமளிக்க உடன்பட்டு வேள்வி யொன்று செய்து அதற்குவராததுபற்றித் தேவர்கள்மீது கோபங்கொண்டு திரிசங்குவைத் தமது தவவலிமையால் ஒருவிமானத்திலேற்றி மேலுலகத் திற்குச் செலுத்த, அங்கே தேவர்கள் புலைபன்வரலாகாதென்று தள்ளிவிட, கூக்குரலிட்டுக்கொண்டு தலைகீழாக விழுகின்ற அத்திரிசங்குவை விசுவாமித் திரர் தமதுதவவலிமையால் அங்ஙனமே ஆகாயத்தில் நிலைநிறுத்தி, தேவர் கள்மீது சினந்து பிரதியுலகம்படைக்கத்தொடங்கிச் சிலவற்றைச்சிருஷ்டித்து, பின்பு தேவர் வேண்டுகோளினால் அச்செயலொழிந்தன ரென்பது. (௪)

௫. எற்பொருநாகர்தமிருக்கைமீதெனக்
கிற்பதோர்காட்சிபெற்றெனினுங்கீழுறக்
கற்பகமனையவக்கவிஞர்நாட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது,

(இ - ள்) (அப்பொய்கை),—'எல் பொரு நாகர்தம் இருக்கை - (தம்மி டத்திலுள்ள மாணிக்கங்களின் ஒளியால்) சூரியனோடு மாறுபடுகின்ற நாகர்கள் வசிக்கின்ற பாதாளலோகம், ஈது-இது தான்', எனகிற்பது-என்று அண்மையா கச் சுட்டிக்காட்டிச்சொல்லத்தக்கதாகிய,ஓர் காட்சியது எனினும்-ஒரு தோற்ற த்தை யுடையதா யிருந்தாலும் [பாதாளம் வரையிலும் ஆழ்ந்துள்ளதாயி னும்],—கற்பகம் அனைய-கல்பகவிருக்ஷம்போன்ற, அ கவிஞர்-அந்த [சிறந்த] மகாகவிகள், நாட்டிய - (தாம் செய்து உலகத்தில்) நிலைநிறுத்திய, சொல் பொருள் ஆம் என - சொற்களின் பொருள்போல, கீழ் உற - கீழுலகம் வரையிலும், தோன்றல் சான்றது - விளங்குதலமைந்தது, [மிகவுந் தெளி வுடைய தென்றபடி]; (எ - று.)

நல்ல கவிகள் செய்த நூல் பார்க்கப்பார்க்க ஆழ்ந்தகருத்தை யுடைய தாயிருந்தாலும் பொருளைச் சந்தேகத்துக்கிடமாகாது விளங்கவைத்தல் போல, இப் பொய்கை ஆழ்ந்துந் தெளிந்து முள்ள தென்றவாறு; உவமையணி. கீழ் ஆரணியகாண்டத்துக் கோதாவரிநதியின் வருணனையில் "சான்றோர்கவி யெனக்கிடந்த கோதாவரி" என்று நதிக்குச் சான்றோர்கவியை உவமை கூறி யிருத்தல் காண்க.

கற்பகமனைய கவிஞ ரென்றது-அது நினைத்தவற்றை யெல்லாங் கொடுப் பதுபோல, இவரும் நினைத்தவற்றை யெல்லாம் அறிந்து கவிபாடிக் கொடுக்க வல்லவ ரென்றபடி. அகரச்சுட்டு, பிரசித்தியைக் காட்டுகின்றது. நாகரவார்- படமும் வாலு முடையராய் மநுஷ்யரூபமுந் தெய்வப்பிறப்பு மானதொரு சர்ப்பஜாதியினர். தம் - சாரியை. ஈது - சுட்டு நீண்டது; நீட்டல் விகாரம். கிற் பது - ஆற்றலுணர்த்துகின்ற 'கில்' என்னும் இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயர். கற்பகம் - தேவதரு; வடசொற்றிரிபு; வேண்டுவார் வேண்டுவன வற்றை வேண்டிய வாறே பெறும்படி கல்பிப்பது [உண்டாக்குவது] என்று

பொருள். ஆம் - அசை. 'எற்படர்' என்றும் 'கவினுர்காட்டிய' என்றும் 'தோன்றுகின்றது' என்றும் பாடமுண்டு. (௫)

களனவிலன்னமேமுதலகண்ணகன்
றளமலர்ப்புள்ளொலிதழங்கவின்னதோர்
கிளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாதலால்
வளநகர்க்கூலமேபோலுமாண்பது.

(இ - ள்.) கண் அகல் - இடமகன்ற, தளம் மலர் - இதழ்களையுடைய (தாமரை) மலர்களிலிருக்கின்ற, களன் நவில் - அவ்யக்தமதுரமாக [எழுத்து இன்னதென்றுணரமுடியாமல் இனிமையாகக்] கூவுகின்ற, அன்னம் முதல் - அன்னங்கள் முதலிய, புள் - பறவைகளின், ஒலி - சத்தம், தழங்க - மிகுதியாக ஒலிப்பதனால்,—இன்னது ஓர் கிளவி என்று - இத்தன்மையதான ஒருவகைத் தொனி யென்று, அறிவு அரு - அறிதல்கூடாத, கிளர்ச்சித்து - எழுச்சியையுடையது: ஆதலால்—, (அப்பொய்கை),—வளம் நகர் கூலம் போலும் - பலவளப்பங்களும்நிறைந்த பெருநகரத்தினது கடைவீதியை யொக்கின்ற, மாண்பது - மாட்சிமையையுடையது; (எ - று)

பெரியநகரத்துக் கடைத்தெருக்களிற் பலதேசத்துமனிதரும் கூடிப் பலவகைப்பாஷைகளைப் பேசும்போது உண்டாகின்ற பேரொலியானது இன்னதென்று அறியமுடியாதவாறு இருத்தல்போல, அப்பொய்கையிற் பலவகைப் பறவைகளும் சேர்ந்து பலவகையாகக்கூவுகின்ற ஒலியும் ஓசையென்று அறிவதன்றி இன்னவோசையென உணரமுடியாதபடியிருந்த தென்பதாம்; உவமையணி.

களனவிலன்னம் - கலஹம்ஸம்; காரன்னம். இதுவும், கீழ்க்கூறிய அரசவன்னமும் அன்னத்தின் ஜாதிபேதங்கள். ஏகாரம் இரண்டும் - இசைநிறை. "பூவிற்குத் தாமரையே," "பூவினுக்கருங்கலம் பொங்குதாமரை" என்றபடி மலரென்பது - இங்குச் சிறப்பாய்த் தாமரையைக் குறித்தது. 'புள்ளொடு தயங்க' என்பது - பிரதிபேதம். (௬)

௭. அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்கிலாமையாந்
திருமுகநோக்கலமிறந்துதீர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது.

(இ - ள்.) எங்கணும் - எல்லாவிடத்திலும், அரி மலர் பங்கயத்து - செந்தாமரை மலர்களிலுள்ள, அன்னம் - அன்னப்பறவைகள், 'யாம் - நாம், புரி குழல் புக்க இடம் - அழகாகக் கட்டிமுடித்த கூந்தலையுடைய சீதாபிராட்டியார் சென்ற இடத்தை, புகல்கிலாமை - தெரிந்துசொல்லமாட்டாமையால், திருமுகம் நோக்கலம் - (ஸ்ரீராமபிரானது) அழகிய முகத்தைப் பாராமல், இறந்து தீர்தும் - இறந்தொழிவோம்', என்று - என்று எண்ணி, எரி புகுவன என - நெருப்பிற் குதிப்பனபோல, தோன்றும் - காணப்படுகின்ற, ஈட்டது - தன்மையையுடையது, (அப்பொய்கை); (எ - று.)

அப்பொய்கையிற் செந்தாமரைமலர்மேலுள்ள அன்னங்கள் இலக்குமியாகிய பிராட்டிக்கும் அன்னங்களாகிய தமக்கும் உறைவிடம் தாமரையென்ற ஒன்றாகவேயிருந்தும், அவள் செய்தியை அறிந்து உரையாமையாகிய குற்றம் பற்றி, இப்போது ஸ்ரீராமபிரானது திருமுகத்தைப் பாராமல் இறந்து விடுவோமென்று நினைத்து நெருப்பிற் குதிப்பனபோலக் காணப்பட்டனவென்பதாம்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி.

நெருப்பை உவமை கூறியதனால், அரிமலரெனப்பட்டது; அரி - செம்மை. தாமரைக்கு நெருப்பு உவமை கூறப்படுவதை, "புண்டரிகத் தீயெரிவபோல்விரிய" என்ற களவெண்பாவினாலும் அறிக. இனி, அரிமலரென்பதற்கு - வண்டுகள் மொய்த்தலையுடையமலரெனப் பொருள்கொண்டால், மலரில்மொய்க்கின்ற வண்டுகள் நெருப்பினின்று எழுகின்ற புகைக்கு உபமேயமாம். பங்கயத்துமலரென மாறுக. பங்கயம் - பங்கஜம்; சேற்றில் முளைப்பது. புரிகுழல் - அன்மொழித்தொகை. புக்கிடம் - பெயரெச்சவீறு தொகுத்தல். புகலிலாமை - எதிர்மறைத்தொழிற் பெயர். 'புகலிலாமையால்' என்றும் பாடம். திரு - கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்; அழகு. நோக்கலம் - எதிர்மறை முற்றெச்சம். தீர்தும் - தன்மைப் பன்மைமுற்று. 'புகலிலாத யாம்' என்பதும் பாடம். (எ)

அ. காசடைவிளக்கியகாட்சித்தாயினு
மாசடைபேதைமையிடைமயக்கலா
லாசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றொறும்பரந்தபண்பது,

(இ - ள்.) (அப்பொய்கை),—மாசு அடை பேதைமை - குற்றம்பொருந்திய அவிச்சையானது, இடை - நடுவில்நின்று, மயக்கலால் - மயங்கச்செய்தலாலே, ஆசு அடை - அற்பத்தன்மையை (இடையிலே) அடைந்த, நல் உணர்வு - நல்ல மெய்யறிவை, அனையது ஆம் என - போன்றது என்னும்படி,—காசு அடை - முத்துக்கள் (தன்னுள்) பொருந்தியிருத்தலை, விளக்கிய - வெளியே நின்று காண்போர்க்கு விளங்கச்செய்த, காட்சித்து ஆயினும் - (மிகத்தெளிந்த) தோற்றத்தையுடையதா யிருந்தாலும், பசு அடை - பசிய இலைகள், வயின் தொறும் - இடையிடங்கள்தோறும், பரந்த - பரவப்பெற்ற, பண்பது - தன்மையையுடையது; (எ - று.)

நல்லறிவு தான் மாசற்றதாயிருந்தாலும் ராஜஸ தாமஸ குணங்கள் இடையிடையே தோன்றி மயக்குதலால் மாசடைந்து தன் நிலைமை தோன்றாதிருப்பதுபோல, பொய்கை கீழுள்ள பொருள்களையெல்லாம் நன்குவிளங்கச் செய்கின்ற மிகத்தெளிந்த நீருடையதாயினும் பச்சிலைகள் இடையிடையே பரவி மறைத்தலால் தன் நிலைமை தோன்றாதிருப்ப தென்பது கருத்து; உவமையணி. "வையகத் தருவினர் மலரா வறிவினைப், புலங்களை மறைத்த புணர்ப்பது போலக், குளிர்கொண்டுறையுந் தெளிநீர் வாவியை, வள்ளை செங்கமலங் கள்ளவிழாம்பற், பாசடைநிறைக்கும்" என்றார் பிறரும்.

மெய்யறிவாவது - பிறப்புவீடுகளையும் அவற்றின் காரணங்களையும் விபரீத ஐயங்களாலன்றி உண்மையால் அறிதல்; இதனை வடநூலார் தத்வஜ்ஞாநமென்பர். அவிச்சையாவது - மறுபிறப்பும் இருவினைப்பயனும் கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையனவுஞ் சொல்லும் மயக்க நூல்வழக்குக்களை மெய்ந்நூல்வழக்கெனத் துணிதல்; குற்றியை மகனென்றும், இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்றாகத் துணிதலும் அது. "மருளானும் மாணாப்பிறப்பு" என்றவாறு அவிச்சை பிறப்புக்கு முதற்காரணமாதலால், மாசடைபேதைமை யெனப்பட்டது. ஆசடைதல் - துறக்கப்பட்ட புலன்களின் மேலே பழையபயிற்சிவசத்தால் ஒரோவழி நினைவு சென்று கெடுதல். காசு - நவமணிகளுக்குப் பொதுப்பெயர்; இங்குச் சிறப்பாய், முத்தை யுணர்த்திற்று. அடை - முதனிலைத்தொழிற்பெயர். இனி, காசடை - முத்துச்சிப்பிக ளென்றும், பாசடை - பாசிக்கொத்துக்க ளென்றும் எதுப்பெயராகப் பொருள்கொள்ளலுமாம். பாசடை - பண்புத்தொகை; பசுமை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டது. பச்சிலை-தாமரை முதலிய நீர்க்கொடிகளி னுடையவை. 'விளங்கிய' என்றும் பாடமுண்டு. (௮)

க. களிப்படாமனத்தவன் காணிற்கற்பெனுங்
கிளிப்படாமொழியவள் விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்கடுளிப்பச்சோருமென்
றொளிப்படாதவ்விடையொளிக்குமீனது.

(இ - ள்.) (அப்பொய்கை),—'களி படா மனத்தவன் - (சீதாபிராட்டியைப் பிரிந்ததனால்) களிப்பில்லாத மனத்தையுடையவனான ஸ்ரீராமன், காணின் - (நம்மைக்) கண்டால், கற்பு எனும் கிளி படா மொழியவள் - கற்புநிலைமையே இவ்வாறு ஓருருக்கொண்டுவந்ததெனத்தக்கவளும் கிளியினிடத்தும் உண்டாகாத (மிக இனிய) சொற்களையுடையவளுமான பிராட்டியினது, விழியின் - கண்களுக்கு, கேள - உறவானவை [இணையானவை], என - என்று எண்ணி, துளி படா நயனங்கள் - (முன் ஒருகாலத்தும்) நீர்த்துளி உண்டாகப் பெறாத தனது திருக்கண்கள், துளிப்ப - நீர்த்துளி சிந்தும்படி, சோரும் வாடுவான்', என்று - என்று எண்ணி, ஒளிப்படாது - விளங்காமல் [வெளிப்படாமல்], அ இடை - அவ்விடத்தில், ஒளிக்கும் - மறைந்து ஒடுங்கின்ற, மீனது - மீன்களையுடையது; (எ - று.)

இயல்பாக நீரினுள்ளே மீன்கள் மறைதற்கு, 'நம்மைக் கண்டமாத்திரத்திலே சீதாபிராட்டியாரான தன்காதலியினது திருக்கண்களினழகு நினைவுக்கு வர இராமபிரான வருந்துவனாதலால் அதற்கு நாம் காரணமாதல் தக்கதன்று என்று எண்ணி அம்மீன்கள் மறைந்ததாகக் காரணத்தைக் கற்பித்தலால் இஃது ஏதுத்தற்குறிப்பேற்றவணியாம். களிப்பு அடா எனப்பிரித்து மகிழ்ச்சி பொருந்தாத எனவுமாம். கற்பெனுங் கிளிப்படாமொழியவள் - "விற்பெருந் தடந்தோள்வீர வீங்குநீரிலங்கைவெற்பில், நற்பெருந் தவத்தாய நங்கையைக் கண்டேனல்லேன், இற்பிறப்பென்பதொன்றும் இரு

பொறையெனப்படுவதொன்றும், கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்" என்பது, சுந்தரகாண்டத்துத் திருவடிதொழுதபடலம். காணின் சேரும் என இயையும்.

எனும் என்ற பெயரெச்சம், ஒருசொல் தன்மைப்பட்ட கிளிப்பட மொழியவளென்னும் பெயரைக் கொண்டது. கற்பு - பதிவிரதாதருமம்; அஃதாவது - கணவனிலுஞ் சிறந்ததெய்வ மில்லையெனவும், அவனை இன்னவாறே வழிபடுக வெனவுந் தாய் தந்தையரும், அந்தணரிடத்துஞ் சான்றோரிடத்தும் ஆசாரியரிடத்துங் கடவுளைச்சுட்டியும் ஒழுகும்ஒழுக்கம் இவ்வாறெனக் கணவனும் கற்பித்த வழியில் நிற்றலாம். மூன்றாமடியிலும், நான்காமடியிலும் தொடைமுரண் காண்க. சேரும் - செய்யுமென்முற்று, ஆண்பாலிற் சென்றது. ஆயிடை - சுட்டு நீண்ட விடத்து யகரந் தோன்றிற்று.

கo. கழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதரளமுமணியும்வாரிநே
ரிழைபடர்ந்தனையநீரருவியெய்தலாற்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது.

(இ - ள்.) கழை படு முத்தமும் - மூங்கிலிலிருந்து உண்டாகின்ற முத்துக்களையும், கலுழி மதம் மழை கார படு தரளமும் - கலங்கலாகிய மதநீர்ப்பெருக்கைச் சொரிகின்ற மேகம்போன்ற யானைகளின் தந்தத்திலிருந்து உண்டாகின்ற முத்துக்களையும், மணியும் - மற்றைய இரத்தினங்களையும், வாரி - வாரிக்கொண்டு,—நேர் இழை படர்ந்து அனைய - தக்க ஆபரணங்கள் மேலே பரவினாற் போன்ற, நீர அருவி - மலையருவிநீரானது, எய்தலால் - (தன்னிடம் வந்து) சேரப்பெறுதலாலே,—(அப்பொய்கை),—குழை படு முகத்தியர் கோலம் - காதணிகள் பொருந்திய முகத்தையுடைய பெண்களின அலங்காரத்தை, ஒப்பது - ஒத்திருப்பது; (எ - று.)

மூங்கில் தந்தம் இவற்றினின்று தோன்றும் முத்துக்களையும் மற்றும் பலவகையிரத்தினங்களையும் வாரிக்கொண்டு பெருகிவந்த அருவிநீர தன்னிடத்துச் சேர்வதனால், அப்பொய்கையானது மகளிர் பற்பல இரத்தினாபரணங்களையணிந்திருந்த தன்மையைப் போன்ற தென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. வாரி அனைய என இயையும். நிலம் குறிஞ்சியாதலால், அந்நிலக் கருப்பொருளாற் பிறக்கும் முத்து முதலியன கூறினார். மூங்கில் முதலியவற்றில் முத்துப்பிறக்குமென்பதை, "தந்தி வராகமருப் பிப்பி பூகந் தழை கதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தரஞ் சாலி கழை கன்ன லாவின்பல் கட் செவிகா, ரிந்து வுடும்பு கரா முத்தமீனு மிருபதமே" என்பதனு லறிக.

கருமை யென்ற பண்புப்பெயரின் விகாரமான 'கார்' என்பது - அந் நிறமுடைய மேகத்துக்குப் பண்பாகுபெயராய், பின் அதுபோன்ற கருநிறமுடைய யானைக்கு உவமையாகுபெயராயிற்று: இருமடியாகுபெயர். 'கலுழி மதமழைபடு' என்ற அடைமொழி, இதன் பொருளை விளக்கிற்று. படர்ந்தனைய - படர்ந்தனைய என்பதன் தொகுத்த லென்றாவது, படர்ந்தாலனைய

என எச்சத்திரிபாகவாவது கொள்ளத்தக்கது. எய்தலால், எய்து - முதனிலை; (பிரயோகித்தலென்னும் பொருளில், எய் - முதனிலை.) (௧0)

௧௧. பொங்குவெங்கடகரிபொதுவினாடலிற்
கங்குலினெதிர்பொருகலவிப்பூசலி
னங்கநொந்தலசியவிலையினாய்வளை
மங்கையர்வடிவெனவருந்துமெய்யது.

(இ - ள்.) (அப்பொய்கை),—பொங்கு - மிகுதியான, வெம் - வெப்ப முள்ள, கடம் - மதத்தையுடைய, கரி - யானைகள், பொதுவின் - பொதுவாக, ஆடலின் - நீரில் இறங்கிக் கலக்குதலாலே,—கங்குலின்-இராத்திரிகாலத்தில், எதிர் பொரு - (ஆடவர்கள்) சந்தித்துச் செய்கின்ற, கலவி பூசலின் - புணர்ச்சிப் போரினால், அங்கம் நொந்து - உடம்புவருந்தி, அலசிய - சோர்ந்த, ஆய் வளை விலையின் மங்கையர்-ஆராய்ந்தெடுத்தணிந்த வளையல்களையுடைய விலை மாதர்களது, வடிவு என - உருவம்போல, வருந்தும் - கலங்கிக் காணப்படு கின்ற, மெய்யது - தன்னுருவத்தையுடையது; (எ - று.)

மதயானைகள் அநேகம் தனித்தனியே வந்து விழுந்து துளைந்து ஆடுவதனாற் கலங்கிய அப்பொய்கை, பல விடபுருஷர்களும் வந்து கூடிக்கலந்து பல வகைச் சிருங்காரசேஷ்டைகளைச் செய்யப்பெற்று வேசையாது சோர்ந்து மெலிந்த வடிவம்போன்று காணப்பட்டதென்பதாம்: உவமையணி. பொருள் கொடுப்பவர்க்கெல்லாம் பொதுவாகிய விலைமகளிரை உவமைகூறுவதற்கு ஏற்ப, 'பொதுவினாடலின்' எனப்பட்டது.

கரீ - கரமுடையது: கரம் - கை; இங்குத் துதிக்கை. கடகரி - வடமொழிப்புணர்ச்சியாதலின், இயல்பு. கலவி - தொழிற்பெயர்; வி - விகுதி. விலையின் மங்கையர் - தமது இன்பத்தை விலைகொடுப்பவர்க்கெல்லாம் விற்கின்ற மகளிர். மங்கையர் - மங்கைப்பருவ முடையவர்: அப்பருவத்துக்கு வயதெல்லை - பன்னிரண்டு முதற் பதின்மூன்றளவும்: இங்கு, இச்சொல் பருவப் பெயராகாமற் பொதுவாய் மகளிரை யுணர்த்து மென்க. 'பொதுளி யாடலின்' என்றும் பாடம். எதிர்ந்து என்னும் வினையெச்சம், பகுதிமாத்திரமாய் நின்றது. 'விலைமகட்கழகு மேனிமினுக்குதல்' என்பது தோன்ற, 'ஆய்வளை' என்ற அடைமொழி கொடுத்தார். (௧௧)

௧௨. விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலா
லுண்டவர்பெருங்களியுறவிதேறியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது.

(இ - ள்.) விண் தொடர் நெடு வரை தேனும் - ஆகாயத்தை யளாவிய [மிகவுயர்ந்த] பெரிய மலைகளினின்று பெருகுகின்ற தேனொழுக்கும், வேழத்தின் வண்டு உளர் நறு மதம் மழையும் - யானைகளினது வண்டுகள் கிண்டப் பெற்ற வாசனைவீசுகின்ற மதநீர்ப்பெருக்கும், மண்டலால் - (மிக்குவந்து) நிறைந்திருத்தலாலே, உண்டவர் - (அந்நீரைக்)குடித்தவர்கள், பெரும் களி

உற்றலின் - மிக்க களிப்பை யடைவதனால்,—(அப்பொய்கை),—ஒதியர் - கூந்தலழகுள்ள மகளிரது, தொண்டை அம் கனி இதழ் - அழகிய கொவ்வைப் பழம்போன்ற [சிவந்த] அதரம் போல, தோன்றல் சான்றது - தோன்றுதலமைந்தது; (எ - று.)

மங்கையரது அதரம் பானஞ் செய்தவர்க்கு இனிப்பைத்தருவதுபோல, இப்பொய்கையின் நீரும் இனிப்பைக் கொடுப்பதென்பதாம்; உவமையணி. வானத்துக்கும் மலைக்குஞ் சம்பந்தமில்லாமலிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்ததனால், 'விண்டொடர் நெடுவரை' என்ற தொடர் - தொடர்புயர்வுநவிற்சியணி; இதனை, வடநூலார் ஸம்பந்தாதிசயோக்தி யென்பர்: இதனால், மலையினது மிக்க உயர்வு தொனிக்கின்றது. தேனொழுக்கு - மூங்கில்முதலியவற்றிற் கட்டப்பட்ட கூடுகளினின்று பெருகுவது. 'விண்டொடு' என்றும் பாடமுண்டு.

வரை யென்னுங் கணுவின் பெயர். மூங்கிலுக்குச் சினையாகுபெயராய், அதனையுடைய மலைக்குத் தானியாகுபெய ராதலால், இருமடியாகுபெயர். உண்டலென்பது - உண்பன தின்பன பருகுவன நக்குவனவெனப் பிரித்துக் கூறுமிடத்துச் சிறப்புவினையும், வாயினால் நுகரப்படும் பொருளெல்லாம் உணவெனப் படுமாதலின் பொதுவினையு மாதலால், உண்டவெனப்பட்டது. 'தொண்டையங்கனியிதழ்த் தோன்றல்சான்றது' என்றது, "அடுக்கிய தோற்றம் விடுத்தல் பண்பே" என்னுஞ் சூத்திரத்திற் கூறி விலக்கிய அடுத்து வாலுவமை யன்று; உவமவுருபு தோன்றக் கூறுமையாலும், முன்னது உருவுவமையும் பின்னது பயனுவமையுமா யிருத்தலாலும். (௧௪)

௧௫. ஆரியமுதலியபதினெண்பாடையிற்
பூரியரொருவழிபுகுந்ததாமென
வோர்விலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவன்றுகின்றது.

(இ - ள்.) ஆரியம் முதலிய - ஸம்ஸ்கிருதம் முதலாகிய, பதினெண் பாடையில் - பதினெட்டுப் பாஷைகளில், பூரியர் - (இலக்கண இலக்கியத் தேர்ச்சியின்றி) அற்பஞானமுடையவர்கள், ஒருவழி - ஓரிடத்தில், புகுந்தது ஆம் என - கூடி ஆரவாரிப்பதுபோல, ஓர்வு இல - (இன்ன இன்ன பறவையின் தொனி இது இது வென்று தனித்தனி) ஆராய்ந்து அறியப்படமாட்டாதவைகளும், ஒன்றோடு ஒப்பு இல - ஒன்றோடொன்று ஒத்திராதவைகளுமாயுள்ள, கிளவிகள் - ஒலிகளை, சோர்வு இல - ஓய்தலில்லாதவைகளாய், விளம்பு - ஒலிக்கின்ற, புள் - (பலவகைப்) பறவைகள், துவன்றுகின்றது - நெருங்கியிருக்கப்பெற்றது, (அப்பொய்கை); (எ - று.)

இச்செய்யுளைக் கீழ் ௬ - ஆஞ் செய்யுளோடு ஒப்புநோக்கி, அதற்கும் இதற்குமுள்ள ஒற்றுமைவேற்றுமைகள் உணர்ந்து புணர்த்தக்கன. 'ஆரியம் முதலிய பதினெட்டுப்பாஷை' என்றது - ஆரியத்தையும், தமிழொழிந்த தேசபாஷைகள் பதினேழையும். தமிழ்நிலமொழிந்த பதினேழு நிலத்தையும் "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக் குடகம், கொங்கணங் கன்ன

டக் கொல்லர் தெலுங்கங் கலிங்கம் வங்கம், கங்கமகதங் கடாரங் கவுடங் கடுங் குசலந், தங்கும் புகழ்த்தமிழ்சூழ் பதினேழ்புவிதா மிவையே' என்பதனால் அறிக எனவே, பாஷைகள் பத்தொன்பதாமென்ப. தமிழ்ப்பாஷையினது ஒப்புயர்வற்ற சிறப்பைக் கருதி, அதனை இங்குக் கூறாராயினர்; இது, கவியினது பரஷாபிமானத்தைக் காட்டும்: அது பிறவற்றோடு கலவாத தனிப் பாஷை யென்பது, கவிஹ்ருதயம்போலும். இனி, 'ஆரியம் முதலிய பதினென்பாடை' என்பதற்கு - வடமொழியை(த் தமக்கு) முதலாகவுடைய பதினெட்டுத் தேசபாஷைக ளென்று பொருள்கொண்டால், ஸம்ஸ்கிருதம் ஸகல பாஷைகளுக்குத் தாய்ப்பாஷை யென்பது போதரும். பாடை - பாஷா என்னும் வடசொல்லின் திரிபு. (கங)

கச தானுயிருறத்தனிதழுவும்பேடையை
யூனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகுமழலையைச்செவியினேற்பது.

(இ - ள்.) தான் உயிர் உற - தன்னைப் பிராணனுக்கு ஒப்பாக (எண்ணி), தனி - வேறு உவமைபெறாமல், தழுவும் - ஆலிங்கனஞ் செய்கின்ற, பேடையை - பெண்ணன்னத்தை, ஊன் உயிர் பிரிந்து என - உடம்பு உயிர் நீங்கப் பெற்றாற்போல, பிரிந்த - விட்டு நீங்கின, ஓதிமம் - ஆணன்னமானது,—வான் அரமகளிர்தம் - தேவலோகத்தினின்று நீராடவருகின்ற தெய்வப் பெண்களினது, வயங்கு நூபுரம் - விளங்குகின்ற காற்சிலம்பணிகளின், தேன் உகு மழலையை - தேன்போன்ற [இனிய] மெல்லோசையை, (தன் பேடையின் குரலென்று எண்ணி), செவியின் ஏற்பது - காதுகொடுத்துக் கேட்டற்கு இடமானது. (அப்பொய்கை); (எ - று)

தமது உயிரோடொத்த பெண்ணன்னத்தைப் பிரிந்த ஆணன்னங்கள், அப்பொய்கையில் நீராடவருந் தேவமாதரது காற்சிலம்பினொலியைத் தமது பேடையின் குரலென மயங்கிக் கேட்குமென்க; மயக்கவணி: இது, வடமொழியில் ப்ராந்திமதலங்கார மெனப்படும். இங்ஙனங்கூறியது, இராமபிரான் தனது பிராணநாயகியாகிய சீதாபிராட்டியாரைப் பிரிந்து அவளது குரல் முதலியவற்றிற்கு உவமையாகிற போலிப்பொருள்களைக் கண்டு மயங்குகின்றமையைத் தொனிப்பிக்கும். 'தான் உயிருற,' 'ஊன் உயிர்பிரிந்தென' என ஒன்றுக்கொன்று உயிர்போல்வனவான அவற்றின் அன்பையும், 'தனி தழுவும்' என அவற்றின் இன்பநலத்தையும் கூறினார். அன்னப்பறவை அன்பிற்சிறந்த தாதலை, "ஆதரம் பெருகுகின்ற அன்பின லன்னமொத்தும்" என்றதனாலும் அறிக. தனி பிரிந்தவென்று கூட்டியும் உரைக்கலாம். அன்னத்தினொலிக்கும் மகளிர்சிலம்பொலிக்கும் உவமை கூறுதலை, "அரங்கி னாடுவார் சிலம்பி னன்ன கின், றிரங்கு வார்புனற் சாயு," "மின்னார் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்" என்பவற்றிலுங் காண்க.

ஊன் என்னும் தசையின் பெயர் - உடம்புக்கு ஆகுபெயர். அரமகளிர் - அமரமகளிர், அன்றி அரம்பையமகளிர், அல்லது அப்ஸரமகளிர் என்பதன் விகாரம். உற, உகு என்ற இரண்டும் - இங்கே உவமவுருபாய் நின்றன. (கச)

௧௫. ஈறிட லரியமால் வரைநின் றீர்த்திழி
யாறிடு விரையகி லார மாதியா
வூறிட வொண்ணக ருரைத்த வொண்டளச்
சேறிடு பாணியிற் றிகழு நோது.

(இ - ள்.) (அப்பொய்கை),—ஈறு இடல் அரிய - முடிவிடுதற்கு அரியதான, மால் வரைநின்று - பெரிய மலையிலிருந்து, ஈர்த்து - இழுத்துக் கொண்டு, இழி - பெருகி வருகின்ற, ஆறு - அருவிகளாலே, இடு - கொணர்ந்து தள்ளப்பட்ட, விரை - வாசனையையுடைய, அகில் - அகிற்கட்டையும், ஆரம் - சந்தனக்கட்டையும், ஆதி ஆ - முதலியனவாக, (வாசனை மரங்கள்), ஊறிட - (தன்னிடத்து நீரில்) ஊறித் தேய்ந்து வருவதனால்,—ஒண் நகர் - ஒளிபொருந்திய [செல்வம் மிக்க] பட்டணங்களி லுள்ளவர்கள், உரைத்த - தேய்த்து அரைத்த, ஒண் தளம் சேறு - ஒள்ளிய [வாசனை மிக்க] மிகுதியான சந்தனக் குழம்பை, இடு - நிறைத்து வைக்கப்பெற்ற, பாணியின் - பாத்திரம் போல, திகழும் - விளங்குகின்ற, நோது - தன்மையையுடையது; (எ - று)

அகிற்கட்டை முதலியவற்றை மலைகளிலிருந்து இழுத்துக் கொண்டு வரும்போது அவைகள் தேய்ந்து குழம்பிய மலைநீரருவிகள் தன்னில் விழப் பெற்ற அப்பம்பைப் பொய்கை - கலவைச்சந்தனம் வைத்ததொரு பெரும் பாணியை யொத்திருந்த தென்பதாம்: தன்மைத்தற்குறிப்பேற்றவணி; பொய்கைக்குப் பாணியும், அதிலுள்ள அகில் முதலியவற்றின் தேய்வையாற்குழம்பிய நீர்க்குக் கலவைச்சாந்தும் உவமையெனக் காண்க. பாணி - பாத்திரம்.

'சேறிடுபாணியின்' எனப் பாடங்கொண்டால், கலவைச் சந்தனத்தைக் கரைத்த நீர்போல என்று பொருள். அகிலும் சந்தனமும் குறிஞ்சிநிலக் கருப்பொருளாதலாற் கூறினர். மால் - உரிச்சொல். ஆ - ஆக வென்பதன் விகாரம். நகர் - அங்குள்ளார்க்கு இடவாகுபெயர். மூன்றாமடி-முற்றுமோனை. நாகரிகத்துக்கு உரிய சிறந்த சந்தன மென்றற்கு, 'ஒண்ணகருரைத்த' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. (௧௫)

வேறு.

௧௬. நவ்வி நோக்கிய ரிதழ்நிகர் குமுதத்தி னறுந்தேன்
வவ்வு மாந்தரிற் களிமயக் குறுவன மகர
மெவ்வ நீங்கிய பிறப்பினோ டிறப்பிலை யென்னக்
கவ்வு மீனொடு முழுகுவ வெழுவன காண்டம்.

(இ - ள்.) (அப்பொய்கையில்),—மகரம் - முதலைகள்,—நவ்வி நோக்கியர் இதழ் நிகர் குமுதத்தின் - மானின் பார்வைபோன்ற பார்வையையுடைய மகளிரது அதரத்துக்கு ஒப்பான செவ்வாம்பல்மலர்களிலுள்ள, நறுந் தேன் - மணமுள்ள மதுவை(க் குடித்து),—வவ்வும் மாந்தரின் - (ஆம்பல் மலர்போன்ற மகளிரது அதரத்தின் அமுதத்தைப்) பானஞ் செய்கின்ற ஆடவர்போல, களி மயக்கு உறுவன - களிப்பினால் மயக்கம் மிகுவன; காண்டம் - நீர்க்காக்கைகள்,—எவ்வம் நீங்கிய - குறைவில்லாத [தவறாத], பிறப்பினொடு இறப்பு

இவை என்ன, - ஜநநமும் மரணமும் இத்தன்மையன [மாறி மாறி வருகின்றன] என்று காட்ட,—கவ்வும் மீனொடு - வாயிற் கௌவிய மீன்களுடனே, முழுகுவ எழுவன - அடிக்கடி முழுகியும் எழுந்தும் இருப்பன; (எ - று.)

அப்பொய்கையில் முதலைகள் ஆம்பல்மலர்களின் தேனைக் குடித்து மயங்கியும், நீர்க்காக்கைகள் மீன்களைக் கவ்வியபடியே முழுகியும் எழுந்தும் கிடப்பனவென்பதாம். இதழ்கிளர் குமுதம்-உலகத்துப் பெண்பால்கள் வாயின் கறுகரற்றத்திற்கு உபமானமாகச் சிறப்பித்துக் கூறப்படுகின்ற ஆம்பலை உபமேயமாக்கி வாயை உபமானமாகக் கூறியதனால், எதிர்நிலையணி இதனை, வடநூலார் ப்ரதீவாலங்கார மென்பர்: முன்னிரண்டடிகள் - உவமையணி. 'பிறப்பினொடு இறப்பு' என்றதற்கு ஏற்ப, 'எழுவன முழுகுவ' என்றது - எதிர்நிரனிறைப்பொருள்கோள், 'எவ்வநீங்கிய விறப்பொடு பிறப்பிவையென்ன' என்ற பாடத்துக்கு - முறைநிரனிறைப்பொருள்கோளாம். 'முழுகினவெழுவன' என்பதும் பாடம். நீர்க்காகங்கள் தம்செய்கையினாற் பிறப்பு இறப்பின் நிலைமையாகிய தத்துவப்பொருளைத் தெரிவித்ததாகக் கூறியது, நற்பொருட்காட்சியணி; இதனை, வடநூலார் நிதர்ஸநாலங்கார மென்பர். உபமேயத்தில் 'கவ்வுமீனொடு' என்றதனால், உபமானமாகிய உயிர்கள் எப்போதும் தாம் அனுபவிக்கும் வினையைப் பற்றியே நிற்குமெனக் கொள்க.

மாந்தர் - எப்பொழுதும் ஒருமையில்லாது பன்மைக்கே வரும் பெயர்; இதனை, நித்யபகுவசந மென்பர் வடநூலார்: மக்கள் மாக்கள் என்பனவும் இவ்வாறே. மகரம், காண்டம் என்பன - பால்பகா அஃறிணைப் பெயராதலால், இங்குப் பன்மைவினை கொண்டன. ஒடு - எண்ணுப்பொருளது. காண்டம் - காரண்டவம் என்னும் வடமொழியின் விகாரம். மருதத்துக்குப் பயின்ற ஆம்பலும், காண்டமும், நெய்தற்குப்பயின்ற மகரமும் குறிஞ்சிநிலத்து மயங்கக் கூறியது - பொருளிலக்கணத்தில் திணைவழுவமைதி. பிறப்பினொடிறப்பு, முழுகுவ எழுவன - தொடைமுரண்.

இதுமுதல் எழுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஈற்றுச்சீரும் மாச்சீர்களும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (கசு)

௧௭. கவளயானையனாற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளையீகலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவசெங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம்.

(இ - ள்.) (அப்பொய்கையில்),—'கவளம் யானை அனாற்கு-(தான் விரும்பிய) கவளம் பெற்று வளர்ந்த யானை போன்ற ஸ்ரீராமபிரானுக்கு, அந்த கடிநறுங் கமலத்தவளை ஈகலம்-வாசனை வீசுகின்ற நல்ல செந்தாமரைமலரிலுள்ள அந்த இலக்குமியை [சீதாபிராட்டியாரை]க் கொண்டு வந்து கொடுக்குந்திறமை யில்லோம்; (ஆயினும்), ஆவது - (நம்மால்) இயன்ற உதவியை, செய்தும் - செய்வோம்,' என்று அருளி - என்று மனமிரங்கி, அன்னங்கள்

அன்னப்பறவைகள், இவர - அவளும்படியாக, திரு நடை காட்டுவ - (அச்சானகியின்) சிறந்த நடையின் அழகைக் காட்டுவன; குவளை நீலோற்பல மலர்கள், செம் கண் காட்டுவ - சிவந்த கண்களின் அழகைக் காட்டுவன; குமுதம் - செவ்வாம்பல்மலர்கள், அவர் இதழ் காட்டுவ - சிவந்த அதரத்தின் அழகைக் காட்டுவன; (எ - று.)

ஸ்ரீராமனுக்கு அந்தச் சீதையைக் கொணர்ந்து கொடுத்தற்குத்தான் நம்மால் முடியாதாயினும் ஆனதையாவது செய்வோமென்று அன்னம் முதலியவை சீதாபிராட்டியின் நடையழகு முதலியவற்றைக் காட்டின வென்பதாம்; ஏதுத்தற்குறிப்பேற்றவணி. நடைகாட்டுவ முதலியன, நடைபோன்று நடையைக் காட்டுவனவென்பது முதலியவாகப் பொருள்பட்டு உபமான உபமேயங்களுக்கு ஐக்கியத்தைச் சொல்லிய தாகுவது, காட்சியணியாம். கவளயானையென்பதற்கு இவ்வாறு பொருளுரைத்தல், "கவளக்களிறு" என்னுமிடத்தில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைத்த உரையால் அறிக. கவளம் - வாயளவு கொண்ட உணவுத்திரளை; இது, கபளமென்னும் வடமொழியின் திரிபு. பெருமான் ஸ்ரீராமனாகத் திருவவதாரஞ் செய்தபோது பிராட்டி சீதையாகத் திருவவதரித்ததனால், 'கமலத்தவள்' எனப்பட்டனள். மருதத்துக்குப்பயின்ற குவளையும் குமுதமும், குறிஞ்சியில் மயக்கக்கூறப்பட்டன. யானையுவமை - கம்பீரமான தோற்றத்துக்கும், நடைக்கும், வலிமைக்கும், மறைத்தற்குரிய காலத்தே மறைத்து வெளிப்படுத்தற்குரியகாலத்தே வெளிப்படுத்துஞ் சிறந்திற்கும். ஈதலம் - தன்மைப்பன்மை யெதிர்மறைமுற்று. 'இவர' என்ற செயவெனெச்சம் நடைஎன்னுந் தொழிற்பெயரின் 'நட' என்ற முதனிலையைக் கொள்ளும். (௧எ)

௧அ. பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வைகலும்புனல்குடைபவர்வானரமகளிர்
செய்கையன்னங்களைந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிவ.

(இ - ள்.) பெய் கலன்களின் - (தாம்) அணிந்துள்ள ஆபரணங்களினது, இலங்கு ஒளி - விளங்குகின்ற காந்தியானது, மருங்கொடு பிறழ - எல்லாப்பக்கத்தும் ஒளிசெய்யாநிற்க, வைகலும் - நாள்தோறும், புனல் குடைபவர் - (அப்பொய்கையின்) நீரில் இறங்கித் துளைந்து விளையாடுபவர்களாகிய, வான் அரமகளிர் - சுவர்க்கலோகத்துத் தெய்வப்பெண்களினது, செய்கை அன்னங்கள் - (விளையாடுதற்காகச்) செய்யப்பட்ட அன்னப்பறவைகளை [அன்னப்பதுமைகளை], ஏந்திய - (கைகளில்) ஏந்திக் கரையில்நிற்கின்ற, சேடியர் என்ன - (அம் மகளிரது) தோழிமார்போல,—பொய்கை அன்னங்கள் - அப்பொய்கையில் வாழ்கின்ற அன்னப்பறவைகளை, ஏந்திய - தம்மேற்கொண்ட, பூ கொம்பர் - (கரையிலுள்ள) புஷ்பக்கொம்புகள், பொலிவ - விளங்குவன; (எ - று.)

தெய்வப்பெண்கள் நீரிலிழிந்து குடையும்போது அதினின்று அஞ்சியெழுந்து அருகிலுள்ள பூங்கொம்புகளிற் போயிருந்த அன்னங்கள், அவர்கள்

தோழியர் கையிலுள்ள அன்னங்களை யொத்திருந்தன வென்பதாம் ; உவமையணி. பொய்கையன்னத்துக்கு - செய்கையன்னமும், கரையிலுள்ள பூங்கொம்புக்கு - கரையிலுள்ள சேடியரும் உவமை. இனி, செய் என்று பிரித்து, செம்மையென்னும் பண்புப்பெயரின் திரிபாக்கொண்டு, சிவந்த கைகளில் அனனங்களை யேந்திய சேடிய ரென்றலுமாம். புனல்குடைதல் - ஜலக்கிரீடைசெய்தல். வான் அரமகளிர் - பெருமைபொருந்திய அரமகளிருமாம்.

பொய்கை - மானிடராக்காத நீர்நிலை. மருங்கொடு - ஒடுவுருபு உடனிகழ்ச்சிப் பொருளாகாது இடப்பொருளாய் நிற்றலால், உருபுமயக்கம். இனி, இடையுடனே மின்னவென்று பொருள் கொள்ளலுமாம். வைகலும், உம்மை - தொறுப்பொருளது. சேடி - வடசொல். கொம்பர் - குற்றியலுகரத்திற்கு 'அர்' போலி. (கஅ)

கக. ஏலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துளவாமெனப்பொங்கி
யாலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிக்
கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம்.

(இ - ள்.) ஏலும் நீர் - (அப்பொய்கையிற்) பொருந்திய நீரில், நிழல் - (மரங்களிலுள்ள கொக்குகளின) சாயைகள் [பிரதிபிம்பங்கள்], இடை இடை - அடுக்கடுக்கே, எறித்தலின் - விளங்குதலாலே, படிகம்போலும் வார்புனல் புகுந்து உள ஆம் என - ஸ்படிகம்போல மிகத்தெளிந்த மிக்க அந்நீரினுள் (அக்கொக்குகள் தம்மைத் தின்னுதற்பொருட்டுப்) பிரவேசித்துள்ளனவென்று எண்ணி,- பொங்கி ஆலும் மீன கணம் - சந்தோஷித்துத் துள்ளிவிளையாடுகின்ற மீன் கூட்டங்கள், அஞ்சின - பயந்தன: அஞ்சி அலம்வர - (அங்ஙனம்) பயந்து சுழன்று பதுங்கும்படி, குரண்டம் - கொக்குகள், கூலம் மா மரத்து - கரையிலுள்ள பெரியமரங்களில், இருஞ்சிறை புலர்த்துவ-(தமது) பெரிய சிறகுகளை உலர்த்திக்கொண்டிருப்பன ; (எ - று.)

கொக்குகள் அப்பொய்கையின் கரைமீதுள்ள மரங்களிலிருந்து தமது சிறகை யுலர்த்துகையில் அவற்றின்சாயை மிகத்தெளிந்த நீரிலே கண்ணாடியில் தோன்றுவதுபோலத்தோன்ற, அப்பிரதிபிம்பத்தைக்கண்டு மீன்கள் தம்மைத் தின்னுதற்பொருட்டு அவை நீரிற்புகுந்தனவென மயங்கினவென்பதாம் ; மயக்கவணி. இடையிடை - அடுக்கு, தொறுப்பொருளது. வஞ்சிக் கூலம் எனப் பிரித்து, கொடிகள் படர்ந்த கரை யென்று பொருள்கொள்வாருமுளர். 'நீணிழல்,' 'அஞ்சினவலமர' என்பன - பாடபேதம். (கக)

உ0. அங்கொர்பாகத்தினஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபாயக்
கங்குலும்பகலும்மெனப்பொலிவெய்துகரைப
மங்கைமார்தடமுலையெனப்பொலிவனவாளம்.

(இ - ள்.) அங்கு - அப்பொய்கைக்கரையில், ஓர் பாகத்தின் - ஒருபக்கத்திலே [பதிக்கப்பட்டுள்ள], அஞ்சனம் மணி நிழல் - மைபோன்ற நீலரத்னங்களின் ஒளி, அடைய - அடங்கும்படி [தோன்றாது மறையும்படி], பங்கு பெற்று ஒளிர் - வேறொருபக்கத்திற் பொருந்தி விளங்குகின்ற, பதுமராகத்து - பதுமராகக்கற்களின், ஒளி - காந்தி, பாய - சென்று வியாபித்தலால், கங்குலும் - இராத்திரிகாலத்தும், பகல் என - பகலென்று சொல்லும்படி, பொலிவு எய்து - விளக்கமடைகின்ற, கரைய - கரைகளிலேயுள்ளனவாகிய, வாளம் - சக்கரவாகமிதுனங்கள்,—(எப்பொழுதும் பகலாகவேயிருப்பதனால் ஒன்றையொன்று பிரியாதிருப்பதனால்), மங்கைமார் தட முலை என - மங்கைப்பருவமுள்ள மகளிரது பருத்த தனங்கள்போல, பொலிவன - இணைபிரியாது விளங்குவன ; (எ - று.)

அந்தப் பொய்கையினொருபக்கத்தில் நீலமணிகளினொளியும் அடங்கும்படி பதுமராகக்கற்கள் செந்நிறவொளியை மிகுதியாகவீசி இரவையும் தெரியவொட்டாமற் செய்வதனால், அங்குள்ள சக்கரவாகப்பறவைகள் இரவிலுமுட்படத் தம்பேடையைப்பிரியாது கூடிமகிழ்வனவாயின வென்பதாம்.

சக்கரவாகங்கள் இரவிற்பிரிந்து பகலிற்கூடுமியல்பின வாதலால், இவ்வாறு கூறப்பட்டது. ஒன்றோடொன்று ஒத்த ஆணும்பெண்ணுமாகிய சக்கரவாகங்கள் மகளிரது இரட்டையாகிய தனங்களுக்கு உவமையா மென்க. இது, எதிர்நிலையணி; பதுமராகத்தின் ஒளியால் சக்கரவாகப்பறவைகள் இரவைப் பகலென்று எண்ணியதாகக்கூறிய மயக்கவணி அதற்கு அங்கமாக வந்தது. இக்கவிக்குப் பிறவாறு உரைகூறுதல் பொருந்தாமை உய்த்துணர்க. பங்குபெறுதல் - பக்கத்தைத் தமக்கு இடமாகப்பெறுதல்; இனி, பிளந்து வேலைசெய்யப்பட்டு விளங்குகின்ற பதுமராக மென்றுமாம். பதுமராகம் செந்தாமரைமலர் போலச் சிவந்துள்ள ரதினம். கங்குலும, உம்மை - சிறப்பு. பகலும், உம்மை - இசைநிறை. இனி, முறையே இழிவுசிறப்பு உயர்வுசிறப்புகளாகவுமாம். பகலும்மென, மகரம் - விரித்தல்விகாரம், 'பகலேயென,' 'மங்கைமார்துணைமுலையென' என்று பாடங்கொள்ளல், நேர். 'அடைய' என்னுஞ் செயவெனெச்சம் - காரியப்பொருளதாய் எதிர்கால முணர்த்தி 'பாய' எனனும் வினைகொண்டுமுடிய அதுகாரணப் பொருளதாய் இறந்தகால முணர்த்தி 'எய்து' என்னும் வினைகொண்டது. கரைய வாளம் ன இயையும். கரைய - குறிப்புப்பெயரெச்சம். வாளம் - சக்ரவாகம் ன்ற வடசொல்லின் முதற்குறை; ஒருபெயரின் ஒருபகுப்பைக் கொண்டு ப்பெயரைக்குறித்தது: நாமைகதேசேநாமக்ரஹணம். பாகம், அஞ்ஜனமணி, பத்மராகம் - வடசொற்கள். (உ0)

உக. வலிகடத்தியவாளெனவாளைகள்பாய
நிலைகடத்தியதிரைதொறுமுகள்வனநீர்நாய்
ஒலிகடக்கழைக்கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும்.

(இ - ள்.) (அப்பொய்கையில்),—வாளைகள் - வாளைமீன்கள், வலி கடத்திய வாள் என - வலிமையோடு வீசிய வாளாயுதங்கள்போல, பாய - பாய்ந்து

செல்லாநிற்க,—வலை நடத்திய நிரைதொறும் - நிலையாக [மேன்மேலுஞ்] செல்வனவாகிய அலைகளிலெல்லாம், உகள்வன - உருண்டு செல்வனவாகிய, நீர்நாய்—, கலி நடை கழை கண்ணுளர் என நடம் கவின - (காலிற்கட்டிய சதங்கைகளின்) ஒலியையுடைய நடையோடு கூடிய கழைக்கூத்தாடிகள் போல (அவ்வாளைமீன்களின்மேல்) நடனத்தை அழகியதாகச் செய்யாநிற்க, தேரைகள் - தவளைகள், (அதனைக் கண்டு), பொலிவு உடைத்து என புகழ்வன - '(இந்நடனம்) நன்றாயிருக்கின்றது' என்று புகழ்ந்து கூறுவனவற்றை, போலும் - ஒத்துக் கத்துகின்றன; (எ - று)

வாளைமீன்கள் வான்போற் பாயும்போது அவற்றின்மேல் நீர்நாய்கள் உருள்வனவற்றைப் பார்த்தால் - மூங்கில் நாட்டி அதன்மேலேறி ஆடுகின்ற கூத்தர்கள் கத்தியைக் குறுக்கே பிடிக்க அதன்மேற் கரணம்போடுகின்றது போலவும், அயலில் தவளைகள் இரைவது - அக்கூத்து அழகியதென்று புகழ்வனபோலவும் இருந்தனவென்பது கருத்து; **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** கழை - மூங்கில். கண்ணுள் - கூத்து. (உக)

[இராமபிரான் அப்பொய்கையிலுள்ள அன்னம் முதலியவற்றைக் கண்டு புலம்பத் தொடங்குதல்.]

உஉ. அன்ன தாகிய வகன்புனற் பொய்கையை யணுகிக்
கன்னி யன்னமுங் கமலமு முதலிய கண்டான்
றன்னி னீங்கிய தளிரியற் குருகினன் றளர்வா
னுன்னு நல்லுணர் வொடுங்கிடப் புலம்பிட லுற்றான்.

(இ - ள்.) (ஸ்ரீராமபிரான்),—அன்னது ஆகிய - அப்படிப்பட்டதான, அகல் புனல் பொய்கையை - பரந்த நீரையுடைய தடாகத்தை, அணுகி-சேர்ந்து,—(அதிலுள்ள), கன்னி அன்னமும் - இளமையான அன்னப்பறவைகளும், கமலமும் - தாமரைமலர்களும், முதலிய - முதலியனவற்றை, கண்டான் - பார்த்து,—தன்னின் நீங்கிய - தன்னிடத்தினின்று பிரிந்துபோன, தளிர் இயற்கு - இளந்தளிர்போன்ற மென்மைத்தன்மையையுடைய சீதையின் பொருட்டு, உருகினன் - நெஞ்சுருகி, தளர்வான் - வருந்துபவனாய்,— உன்னும் நல் உணர்வு ஒடுங்கிட-ஆராய்ந்தறிதற்குஉரிய நல்லஅறிவு அடங்காநிற்க, புலம்பிடல் உற்றான் - புலம்பத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேல் ஒன்பதுகவிகளாற் கூறுகின்றார்.

அன்னமும் தாமரைமலரும் முதலியவை - சீதாபிராட்டியாரின் நடை முகம் முதலியவற்றைப்போன்று தோன்றி வருத்தத்தை விளைத்தலால், இராமபிரான் அவற்றைக்கண்டு இரங்கிப் பிரிவாற்றாமையால் வாய்விட்டு அழத் தொடங்கினனென்பதாம். இராமபிரான் தான் திருமாலின் திருவவதாரமாயிருந்தும் இவ்வாறு புலம்புவது, தான்கொண்ட மானுடவேடத்திற்கு ஏற்ப நடிக்குந் தன்மையினாலென்க.

அகல்+புனல்=அகன்புனல்; மொழியீற்றுலகரம் வல்லினம் வர அல் வழியில் னகரமாத்திரிந்தது; ["குறில்செறியாலள" என்ற சூத்திரத்து 'பிற'

என்ற மிகையால்.] கன்னி - அழகுமாம்: இது - இளமை அழகு என்னும் பொருள்களை யுணர்த்தும்போது, உரிச்சொல்: (இளம்பெண்ணை யுணர்த்தும் போது கந்யா என்னும் வடமொழியின் சிதைவாகிய பெயர்ச்சொல்.) தளிரியல் - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. கண்டான், உருகினன், தளர்வான் - முற்றெச்சங்கள். முதலிய - பலவின்பாற் பெயர். ()

## வேறு.

[இதுமுதல் ஒன்பது கவிகள் - இராமபிரான் புலம்பல்.]

௨௩. வரியார் மணிக்கால் வாளமே மடவன் னங்கா ளெனைநீங்கத்
தரியா ணடந்தா ளில்லளேற் றளர்ந்த போதுந் தகைவேயோ
வெரியா நின்ற வாருயிருக் கிரங்கி னீதே யிசையன்றோ
பிரியா திருந்தேற் கொருமாற்றம் பேசிற் பூசல் பெரிதாமோ.

(இ - ள்.) வரி ஆர் - ரேகைகள் பொருந்திய, மணி கால் - அழகிய கால்களையுடைய, வாளமே - சக்கரவாகங்களே! மடம் அன்னங்காள் - இளமையான அன்னங்களே!—எனை நீங்க தரியாள் - என்னை விட்டுப்பிரியப் பொறாதவளாகிய சீதை, நடந்தாள் - பிரிந்து போனாள்; இல்லள் - (அவள் என்னிடத்து) இல்லாதவளாயினாள்; ஏல் - என்றால், தளர்ந்த போதும் - (அதனால் நான்) வாடிநின்ற இச்சமயத்திலும், தகைவேயோ - (நீங்கள் முன்னே வருதற்குத்) தடை உண்டோ? எரியாநின்ற அரு உயிருக்கு - (பிரிவாற்றாமையால் வருந்தித்) தபிக்கின்ற (எனது) அரிய உயிருக்கு, இரங்கினால் - (நீங்கள்) இரக்கஞ் செய்தால், ஈது - இது, இசை அன்றோ - (உங்களுக்குக்) கீர்த்திக்குக் காரணமன்றோ? பிரியாது இருந்தேற்கு - (இதுவரையில் ஒருபொழுதுஞ் சீதையைப்) பிரியாதிருந்த எனக்கு, (ஆறுதல் உண்டாம்படி), ஒருமாற்றம் பேசின் - ஒரு வார்த்தை சொன்னால், பூசல் பெரிது ஆமோ-(அதனால் உங்களுக்குப்) பெரிய பொல்லாங்கு உண்டாகுமோ? (எ-று.)

சீதை போயிருக்கின்ற இடத்தைச் சொல்லி உதவி செய்யுங்கள் என்பது கருத்து. 'இல்லளேல் தளர்ந்தபோதுந் தகைவேயோ' என்றது - அவள் உளளாயின் நீங்கள் அவளது தனத்துக்கும் நடைக்குந் தோற்று முன்நிற்கமாட்டீர்; அவளில்லாது யான் வருந்துகின்ற இப்பொழுது வருதற்குத் தடையென்ன? என்றபடி. "நாளங்கொள் நளினப்பள்ளி நயனங்களனையநேமி, வாளங்க ளுறைவ கண்டு மங்கைதன் கொங்கைநோக்கும்" என்றும், "ஓதிமமொதுங்கக்கண்ட வுத்தம னுழையளாகுஞ், சீதைதன் நடையைநோக்கிச் சிறியதோர்முறுவல் பூத்தான்" என்றும் கீழ் ஆரணியகாண்டத்துச் சூர்ப்பணகைப்படலத்திலே சக்கரவாகமும் அன்னப்பறவையும் முறையே சீதையின் தனத்துக்கும் நடைக்கும் தோற்று ஒளித்து ஒடுவதை இராமபிரான் குறிப்பித்ததாக வந்துள்ளது காண்க.

இனி, இல்லள் - இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவி [சீதை] எனக் கொள்ளலுமாம். 'தகவேயோ' என்ற பாடத்துக்கு - நான் இவ்வாறு வருந்த

வும் நீங்கள் இன்னனம் இரங்காமலிருப்பது தகுதிதானோ? எனப் பொருள் கொள்க. எவ்வை - தொகுத்தல். தரியான் - பெயர். உம்மை - இழிவு சிறப்பு. இசைக்குக் காரணமானதை இசையென்றது, உபசார வழக்கு. அன்று, ஓ - தேற்றப் பொருளன. ஈற்றோகாரம் - எதிர்மறையோடுகூடிய வினாப்பொருளது. நெய்தற்கு உரிப்பொருளாகிய இரங்கல் குறிஞ்சியில் வருதல், "திணைமயக் குறுதலுங் கடிநிலை யிலவே" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால் அமையும். 'பிரியாதிருந்தீரொருமாற்றம்' என்றும் பாடமுண்டு. பிரியாதிருந்தீர் - ஆணும்பெண்ணுமாகிய இரட்டையாய் இணைபிரியாதிருந்தீ ரென்றபடி.

இதுமுதல் ஒன்பது கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரும் ஆறாஞ்சீரும் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௩)

௨௪. வண்ணநறுந்தாமரைமலரும்வாசக்குவளைநாண்மலரும்
புண்ணின்னெரியுமொருநெஞ்சம்பொதியுமருந்திற்றரும்பொய்காய்
கண்ணுமுகமுங்காட்டுவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
வொண்ணுமென்னினஃதுதவாதுலோவிருமுயர்ந்தாரோ.

(இ - ள்.) வண்ணம் நறும் தாமரை மலரும் - அழகிய தாமரைமலர்களையும், வாசம் நாள் குவளை மலரும் - வாசனையுள்ள அன்றுமலர்ந்த நீலோற்பல மலர்களையும், புண்ணின் எரியும் ஒரு நெஞ்சம் பொதியும் மருந்தின் - (சீதையைப்பிரிந்ததனாற்) புண்போல எரிகின்ற தனிமையான [வேறுதுணையுங் கதியுமில்லாத] (எனது) மனத்திற்கு மேலே தடவுகின்ற மருந்துபோல, தரும் - காட்டுகின்ற, பொய்காய் - தடாகமே!—கண்ணும் முகமும் காட்டுவாய் - (சீதையின்) கண்களையும் முகத்தையும் (பலதரம்) காட்டுகின்ற நீ, வடிவும் - அவளுருவம் முழுவதையும், ஒரு கால் காட்டாயோ - (எனக்கு) ஒருதரமாயினுங் காட்டமாட்டாயா? ஒண்ணும் என்னின் - (தம்மாற்கூடுமானால்) அஃது உதவாது - அப்பொருளை உதவிசெய்யாமல், உலோவிநரும் - லோபஞ்செய்தவர்களும், உயர்ந்தாரோ - (உலகத்தில்) மேலானவராவார்களோ? [ஆகாரன்றோ? என்றபடி]; (எ - று)

பொய்கையில் மலர்ந்து தோன்றுகின்ற தாமரைமலரும் குவளைமலரும் பிராட்டியினது முகமும் கண்களும் போன்று இருத்தலால், சீதையைப்பிரிந்து வருந்துகின்ற தனது மனம் அவைகண்டு சிறிது வருத்தமாறுதல்பற்றி, இவ்வாறு கூறினன். "இசையாவொருபொருளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத்தியற்கை" ஆதலால், ஒண்ணுமென்னினஃதுதவாது உலோவிநருமுயர்ந்தாரோ' எனப்பட்டது. இனி, 'உண்ணும்' எனப்பாடங்கொண்டு, ஒருவன் உண்பானானால் அவனுக்குச் சிறிது கொடுத்து ஆசைகாட்டி முற்றக்கொடாமல் லோபஞ்செய்தவர்கள் என்று உரைப்பினும் அமையும். 'உய்ந்தாரோ' என்னும் பாடத்துக்கு - கடைத்தேறினார்களோ? என்று பொருள். மன்னும் தருமென இயையும்.

பொய்காய் - ஈறுதிரிந்தவிளி. முன்னே உபமானமாகிய தாமரையும் குவளையும் கூறியதற்கு ஏற்ப, பின்னே உபமேயமாகிய முகத்தையுங் கண்களையும் முறையே கூறுமையின், எதிர்நிரனிறைப்பொருள்கோள். ஒன்னும் - ஒன்றும் என்பதன் மரூஉ. உலோவினர் - லோபமென்னும் வடமொழியின் திரிபாகிய உலோவம் என்னும் பெயரினடியாப்பிறந்த இறந்தகாலவினையாலணையும்பெயர்; "உண்ணிறங்காட்டி நீரொன் றுயிர்தா வுலோவி னீரே", "உள்ள முவந்துள செய்வெனென்றும் லோபேன்," "எருதுகளோடு பொருதி யேது முலோபாய்காணம்பீ" என்பன காண்க. உம்மை - இழிவு சிறப்பு. ஓ - எதிர்மறை. (உ௮)

உ௯. விரிந்தகுவளைசேதாம்பல்விரைமென்கமலங்கொடிவள்ளை
தாங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனையாளவயவங்களவைநிற்கண்டேன்வல்லரக்க
னருந்தியகல்வான்சிந்தினவோவாவியுரைத்தியாமன்றே.

(இ - ள்.) விரிந்த குவளை - மலர்ந்த கருங்குவளை மலர்களும், சேதாம்பல் - செவ்வாம்பல்மலர்களும், விரை மெல் கமலம் - வாசனையுடைய மெல்லிய தாமரைமலர்களும், கொடி வள்ளை - வள்ளைக்கொடியின் இலைகளும், தாங்கம் - அலைகளும், கெண்டை - கெண்டைமீன்களும், வரால் - !வரால்மீன்களும், ஆமை - ஆமைகளும், என்று இ தகையதமை - என்று இத்தன்மையனவாகிய பொருள்களை, நோக்கி - (ஸ்ரீராமன்) பார்த்து,—(அப்பொய்கையை நோக்கி),—'ஆவி - பொய்கையே! மருந்தின் அனையாள் அவயவங்கள் - தேவாமிருதம்போன்ற சீதையினது (கண் வாய் முகம் காது வயிற்றுமடிப்பு கணைக்கால் புறங்கால் முதலிய) உறுப்புக்களை, நின் கண்டேன் - உன்னிடத்துப் பார்த்தேன்; அவை - அவ்வுறுப்புக்கள்,—வல் அரக்கன் - வலிய இராக்கதன் [இராவணன்], அகல்வான் - பரந்த ஆகாயத்தில், அருந்தி - தின்னும் போது, சிந்தினவோ - (கீழே) சிந்தினவைகளோ? உரைத்தி - (நீ) சொல்வாயாக,' (என்று கூறினான்;) (எ - று.)—ஆம், அன்று, ஏ - அசைகள்.

குவளை மலரும் கெண்டையும் பிராட்டியின் கண்களையும், ஆம்பல் மலர் - வாயையும், தாமரைமலர் - முகம் கை கால்களையும், தாமரையரும்பு - தனங்களையும், வள்ளையிலை - காதுகளையும், அலை - வயிற்று மடிப்பையும், வரால் - கணைக்கால்களையும், ஆமை - புறங்கால்களையும் போலுதலால் இது கூறினன். குவளை முதலியவற்றைச் சீதையின் அவயவங்களாக இராமபிரான் கருதினனென வந்தது, மயக்கவணி. குவளை முதலியவற்றை, அரக்கன் தின்னும்போது சிந்திய சீதையின் அவயவங்களாகக் கருதினன். கொடி, வள்ளை எனத் தனியே பிரித்து, கொடி - இடைக்கு உவமையாகவுங் கொள்ளலாம். கிடைத்தற்கு அரியளாய்க் கண்ணுக்கு இனியளாய்த் தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தடுக்குந் தன்மைபற்றி, 'மருந்தினனையாள்' என்றான். அரக்கனுக்கு வன்மை - புஜபல வரபலங்களும், கல்நெஞ்சுடைமையும்.

சேதாம்பல் - பண்புத்தொகை: செம்மையின் ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்ற மெய் திரிந்தது; இவைபோன்ற பண்புத்திரிபுகளை 'பண்பு மாத்

நிரையாய்க் குறைந்த சொல்லாதலின், மருட்கையின் பாற்படுத்தாய் நின்றது' என்பர் நச்சினார்க்கினியர். அரக்கன் - ரக்ஷஸ் என்ற வடமொழியின் சிதைவு. அருந்தி - அருந்த வென்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு. இனி, அருந்தி யகல்வான் - தின்றுகொண்டு போகும்போது என்றும் உரைக்கலாம்; அவ்வுரையில், அகல்வான் என்பதை அகலவென்னும் எச்சத்தின் திரியாகக் கொள்க. ஆவி - வாபீ என்னும் வடமொழியின் சிதைவு. வாவியெனப் பிரித்தல் மோனைத் தொடைக்குச் சிறவாதென அறிக. 'நோக்கி' என்ற வினையெச்சத்துக்கு ஏற்ற முடிக்குஞ்சொல் வருவித்து உரைக்கப்பட்டது. (உ௫)

உ௬. ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றநீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றாயாயிரங்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ.

(இ - ள்.) ஓடாநின்ற - (இப்போது எனது எதிரிலே) ஓடிவிளையாடு கின்ற, களி மயிலே - சந்தோஷத்தையுடைய மயிலே! சாயற்கு ஒதுங்கி உள அழிந்து கூடாதாரின் திரிகின்ற நீயும் - (சீதையின்) சாயலுக்குத் தோற்று மறைந்து மனமழிந்து (அச்சீதைக்குப்) பகைவர்போலச்சஞ்சரித்து வந்த நீயும், ஆகம் குளிர்ந்தாயோ - (இப்பொழுது சீதையில்லாமை பற்றிச் சந்தோஷத்தால்) மனங் குளிர்ந்தனையோ? தேடாநின்ற என் உயிரை - (அவளைத்) தேடுகின்ற எனது உயிரனது (யாவருமிரங்கத்தக்க) நிலைமையை, தெரிய கண்டாய்-பிரதியக்ஷமாகப் பார்த்தாய்; (பார்த்தும் சிறிதுமிரங்காமல்), சிந்தை உவந்து ஆடா நின்றாய் - மனமகிழ்ந்து நடனஞ்செய்கின்றாய்; (சீதை போனவிடத்தைச் சொல்லலாகாதோ)? (நான் பார்த்தேனில்லையென்று சொல்வையாயின்),—ஆயிரம் கண் உடையாய்க்கு - ஆயிரங்கண்களையுடைய உனக்கு, ஒளிக்கும் ஆறு - (தெரியாதபடி அவள்) மறைந்து செல்லும் வழி, உண்டோ - உளதோ? [இல்லையே]; (எ - று.)

சாயலால் உன்னை அவமதித்துவென்ற சீதை என்னைவிட்டுப் பிரிந்து போய்விட்டதனால் நீ அகமகிழ்ந்து, அவளுள்ளவிடத்தை அறிந்திருந்தும் எனக்கு உரையாது களிநடம்புரிகின்றாயென இராமபிரான் மயிலை வெறுத்துக் கூறினனென்க. இயற்கையில் மயில் அகமகிழ்ந்து களிநடம்புரிதற்கு, சீதை பிரிந்து போனதைக்கண்டு இவ்வாறு புரிகின்றதென மயங்கியதாகக் காரணங் கற்பித்துக் கூறியது, மயக்கவணியை அங்கமாகக்கொண்டெழுந்த ஏதுத்தற்குறிப்பேற்றவணி. ஒளிக்குமாறு உண்டாகாது என்பதை, 'ஆயிரங் கண் உடையாய்' என்ற விசேஷயம் சாதித்து நிற்பது, கருத்துடையடை கொளியணியாம். அடர்த்தியாற் கார்காலம்போலிருண்ட சோலைகள் தேனை மிகுதியாகப் பொழிய அதனைக்கண்டு மழையென மருண்டு மயில்கள் இளவேனிற்காலத்திலும் களிநடம்புரிந்தனவென்க. 'தேடாநின்ற என்னுயிரைத் தெரியக்கண்டாய்' என்பதற்கு - என்னால் தேடப்படுகின்ற என் உயிருக்கு ஒப்பான சீதையை அவன் போம்போது நீ நன்றாகப் பார்த்திருப்பாயென்றும் பொருள் கொள்ளலாம்.

களி மயில் - இரண்டனுருபும் பயனும் உடன்தொக்கதொகை; களிக்கின்ற மயில் என வினைத்தொகையாகவுங் கொள்ளலாம். கூடாதார் - சேராதவர் எனப் பகைவர்க்குக் காரணக்குறி. ஆகம் என்னும் உடம்பின் பெயர் - மனத்திற்கு ஆகுபெயர்; இனி, அகம் என்பதன் நீட்டல்விகாரமாகவுங் கொள்ளலாம். என் உயிர் - உடையதும் உடைமையும் வேறாகாத ஒற்றுமைக் கிழமையில் வந்த ஆறும்வேற்றுமைத்தொகை. உயிர் என்பது - முன்னைய பொருளிற் பொருளாகு பெயரும், பின்னையபொருளில் உவமையாகுபெயருமாம். 'ஆயிரங் கண்' என்றது, பீலிக்கண்களை. இங்கே 'ஆயிரம்' என்றது - பலவென்னும் பொருள்பட நின்றது. இவ்விடத்தில், "நாணினதொகுபீலி கோலின நடமாடல், பூணிய நினசாயல் பொலிவது பலகண்ணிற், காணிய வெனலாகுங் களிமயில் பலகாணாய்" என்றதன் பொருளை நோக்குக. உடையாய் - முன்னிலை யொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர்: 'ஆயிரங்கணுடையார்க் கொளிக்குமாறுண்டோ' என்றும் பாடம். (உக)

உஉ. அடையீரெனினுமொருமாற்றமறிந்துரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோபிழையாதாற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரோநடுவிலாதார்தனியவரோ
டுடையீர்பகைதானுமைநோக்கியுவக்கின்றேனைமுனிவீரோ.

(இ - ள்.) அன்னத்தின் பெடையீர் - அன்னப்பேடைகளே!—அடையீர் எனினும் - (நீங்கள் என்னிடத்து) வாமாட்டீர்களானாலும், அறிந்தது ஒரு மாற்றம் உரையீர் - (சீதையைப்பற்றி நீங்கள்) அறிந்ததொரு வார்த்தையையாயினுஞ் சொல்லுங்கள்; ஒன்றும் பேசீரோ - (என்னோடு) ஒரு வார்த்தையும் பேசமாட்டீர்களோ? பிழையாதாற்கு - (உங்கள் விஷயத்தில்) தவறு ஒன்றுஞ் செய்யாதவனுக்கு [எனக்கு], பிழைத்தீரோ - தவறுசெய்வீர்களோ? நடு இலாதாரே - இடையில்லாத சீதாபிராட்டியாரே, நீர் நடை அழிய செய்தார் - நீங்கள் நடையழகில் (தமக்குத்) தோற்றுப்போம்படி செய்தார்; அவரோடு தான் தனி பகை உடையீர் - அச்சீதையாரோடுதான் மிக்க பகைமையை யுடையாராயிருக்கின்றீர்; (அங்ஙனமன்றி), உமை நோக்கி உவக்கின்றேனை - உங்களைப்பார்த்து (உங்கள் நடை அவள் நடையை ஒக்கும் என்று எண்ணிச்) சந்தோஷிக்கின்ற என்னையும், முனிவீரோ - வெறுப்பீர்களோ?

உங்கள் நடையை யழியச்செய்து வெற்றிகொண்ட சீதையினிடத்துப் பகைமைகொள்வது நியாயமே; உங்களுக்கு ஒருபிழையுஞ் செய்யாமல் உங்கள் நடையைநோக்கி மகிழ்கின்ற என்னிடத்தும் பகைமைகொண்டு அருகில் வாராதும் இவ்வாறு ஒன்றும் பேசாதும் போவது தகுதியோ? என்பதாம்; குறிப்பேற்றவணி. இனி, இக்கவியில், அடையீர் எனினும் என்றதில் அடைக்கலமிடப்படுவராயினும் என்றும், நடைநீரழியச்செய்தாரே நடுவிலாதார் என்றதில் - நடுவுநிலைமையில்லாதவர்தாம் நீங்கள் நல்நடத்தை கெடச்செய்தவர் என்றும் வேறு ஒரு பொருள் தொனித்தல் காண்க. உரையீர் என்பதற்கு - சொல்லுகின்றீரில்லை யென்றும், பிழையாதாற்கு (சீதையைப் பிரிந்து) உயிர்வாழமாட்டாதவனுக்கு என்றும் பொருள்கொள்ளலாம்.

அடையீர் - முன்னிலைப்பன்மை யெதிர்மறை வினையாலணையும்பெயர். உரையீர் - ஏவற்பன்மைமுற்று. பேசீர் - முன்னிலைப்பன்மை எதிர்மறை முற்று. அடையீர், பேசீர் என்பவற்றில், எதிர்மறை ஆகார விடைநிலை புணர்ந்து கெட்டது. பிழைத்தீர், முனிவீர் - முன்னிலைப் பன்மை முற்று. உடையீர் - முன்னிலைப்பன்மைக் குறிப்புமுற்று. பெடையீர் - பெடையார் என்பதன் விளி; ஈற்றயல் திரிந்தது - விளியுருபு: பெடையார் - இங்கு, ஆர் என்னும் பலர்பால் விகுதி, உயர்வுப்பொருளது; இது - உயர்வினால் அஃறிணை உயர்திணையாகச் சொல்லப்பட்ட திணைவழுவமைதி. பிழையாதாற்கு- தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. ஓகாரங்கள் - இரக்கப் பொருளன. (௨௭)

௨௮. பொன்பால்பொருவும்விரையல்லிபுல்லிப்பொலிந்தபொலந்தாது
தன்பாற்றழுவுங்குழல்வண்டுதமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரையே
யென்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய
வுன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ.

(இ - ள்.) பொன்பால் பொருவும் விரை அல்லி புல்லி - பொன்னின் இயல்பை யொத்திருக்கின்ற வாசனையையுடைய அகவிதழ்களைச் சார்ந்து, பொலிந்த - (அவற்றினகத்தே பொருந்தி) விளங்குகின்ற, பொலம் தாது தன்பால் - பொன்னிறமான மகரந்தப்பொடியினிடத்தே, தழுவும் - (ஆணும் பெண்ணுமாகத்) தழுவியிருக்கின்ற, குழல் வண்டு - இசைபாடுகின்ற வண்டுகள், தமிழ் பாட்டு இசைக்கும் - (கேட்டற்கு) இனிமையான இசைப்பாட்டுக்களைப் பாடப்பெற்ற, தாமரையே - தாமரைமலரே!—(சீதையார்), என்பால் இல்லை - (கணவனாகிய) என்னிடத்தில் இல்லை, அப்பாலோ இருப்பார் அல்லர் - வேறிடத்திலோ இருக்கத்தக்கவரல்லர்; விருப்பு உடைய உன்பால் இல்லை என்றக்கால் - விருப்பத்தையுடைய (பிறந்த இடமாகிய) உன்னிடத்திலும் இல்லை யென்று நீயுஞ் சொன்னால்,—ஒளிப்பாரோடும் - (வைத்துக் கொண்டு இல்லை யென்று) மறைத்துப் பேசுபவர்களோடும், உறவு - சிநேகங் கொள்ளுதல் உண்டோ - தகுதியுள்ளதாமோ? [ஆகாதே]; (எ - று.)

இலக்குமியின் அம்சமான சீதாபிராட்டியார் என்னிடத்தில் இல்லை யென்பது பிரத்தியக்ஷமாகத் தெரிந்தவிஷயம், வேறிடத்தில் இருக்கமாட்டாரென்பதும் பிரசித்தமானதே; ஆகையால், உன்னிடத்தே இருத்தல்வேண்டும்; ஆகவே நீ உன்னிடத்திற் காட்டாது ஒளிக்கின்றாய் என்று தாமரையை இராமபிரான் வெறுத்து உரைத்தனனென்க.

அல்லி - அகவிதழ்; (புல்லி - புறவிதழ்.) அல்லி புல்லித் தாது தழுவுந் தாமரையென்று கூட்டியும் உரைக்கலாம். பொன் + தாது = பொலந்தாது; இப்புணர்ச்சி, "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகாரமகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பியச் சூத்திரவிதிப்படி அமைந்தது: இனி, பிற்காலத்தார் 'பொலம்' என்று தனியே ஒருசொற் கொள்வர். குழல் - இசைப்பாட்டு; இனி, ஊதுகுழல்போலப் பாடுகின்ற வண்டு என்றும்,

கூந்தல்போற் கருநிறம் பொருந்திய வண்டு என்றுமாம். 'தமிழ்' என்ற சொல் இப்பொருளதாதலை, "தமிழ் தழிய சாயலவர்" என்னுமிடத்துங் காண்க. புல்லி - இறந்தகாலவினையெச்சம்.

கேளாத தாமரையைக் கேட்பதுபோலக்கூறியது, மரபுவழுவமைதி; "சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். இவ்விலக்கணம், வினையிடங்கட்கும் ஒக்கும். (உஅ)

உகூ. ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளொடுங்குந்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்வீழிச்செவ்விக்கொழுங்கனிவாய்
தருவாயவ்வாயினமிழ்துந்தண்ணென்மொழியுந்தாராயோ.

(இ - ள்.) ஒரு வாசகத்தை வாய் திறந்திட்டு உதவாய்-ஒருவார்த்தையையும் வாயைத்திறந்து சொல்லாமல், பொய்கையுள் ஒடுங்கும் - தடாகத்திலே குவிந்திருக்கின்ற, திரு வாய் அனைய சேதாம்பற்கு - சீதையினது வாயைப்போன்ற சிவந்த ஆம்பல்மலர்க்கு, அயலே - அருகிலே, கிடந்த - பொருந்தியுள்ள, செம் கிடையே - சிவந்த சடையே!—(நீ),—வெருவா - அஞ்சாமல், எதிர் நின்று - (என்) முன்னே பொருந்தி,—அமுது உயிர்க்கும் - அமிருதத்தை வாய்விடுகின்ற [அமிழ்தம்போ லினிய பேச்சுக்களைப் பேசுகிற], செவ்வி கொழு வீழி கனி வாய் - அழகையுடைய செழுமையான வீழிப்பழம்போன்ற சீதையின் வாயை, தருவாய் - காட்டுவாய்; (அத்தகைய நீ), அ வாய் இன் அமிழ்தும் - அந்த வாயிலுள்ள இனிய அமிருதம்போன்ற இரசத்தையும், தண்ணென் மொழியும் - குளிர்ந்த பேச்சுக்களையும், தாராயோ - காட்டமாட்டாயோ? (எ - று.)

நீ வாயைப்போன்றிருக்கின்றனையே; அதிலுள்ள இனியரசத்தையும் மதுரமான பேச்சையுந் தரலாகாதா? என, இராமபிரான் செங்கிடையை நோக்கி இரங்கினனென்க. இங்குச் செஞ்சடை வாயைய வடிவத்தால் ஒத்து நின்று இனிய ரசத்தையும் மதுரமான பேச்சையும் பெறாது நிற்பதாகிய குறையைக் கொண்டுள்ளதாகக் கூறியது, வேற்றுமையணி: இதனை, வடநூலார் வ்யதிரேகாலங்காரமென்பர்.

உதவாய் - முற்றெச்சம். உதவாது கிடந்த செங்கிடை யெனவும், வெருவா எதிர்நின்று தருவாய் எனவும் இயைக்க. அமுதுயிர்க்கும் வாயெனக் கூட்டுக. இப்பொழுது எனனிடத்துச் சீதையிலலாமையால் நீ அவளது வாயழகுக்குத் தோற்று அஞ்சி ஓடாது எதிர்நிற்கின்றாய்போலு மென்பார், 'வெருவா வெதிர் நின்று தருவாய்' என்றார். 'வாய்முகிழ்நகையும்' என்னும் பாடத்துக்கு - வாயில் அரும்புகின்ற புன்சிரிப்பையும் என்று பொருள். பகற்பொழுதாதலால், ஒடுங்குமாம்ப லெனப்பட்டது. வீழி - ஓர்செடி. ஒடுங்கும், அனைய என்னும் பெயரெச்சங்களிரண்டும் - ஆம்பற்கு அடைமொழிகள். வெருவா-ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். அமுது, அமிழ்து என்பன-வடமொழித்திரிபுகள். ஒரு வாசகத்தை என்னுமிடத்து, இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'வாய்திறந்திங்குதவாய்' என்பதும் பாடம். (உகூ)

௩௦. அலக்கணுற்றேற்குற்றுதவற்கடைவொன்றுண்டேகொடி
வள்ளாய், மலர்க்கொம்பனையமடச்சீதைகாதேமற்றொன்றல்லையாற்,
பொலக்குண்டலமுங்கொடுங்குழையும்புனைதாழ்முத்தின் பொற்றோ
டும், விலக்கிவந்தாய்விளம்பாதே யின்னும்பூசல்விரும்புதியோ.

(இ-ள்.) கொடி வள்ளாய் - வள்ளைக்கொடியின் இலையே!—(நீ),— மலர் கொம்பு அனைய - பூங்கொம்பைப்போன்ற, மடம் சீதை - மடமைக் குணமுள்ள சீதையினது, காதே - காதுதானே யல்லாமல், மற்று ஒன்று அல்லை - வேறொன்றுமல்லாய்; ஆல் - ஆதலால், அலக்கண் உற்றேற்கு - துன்பமடைந்த எனக்கு, உற்று உதவற்கு - மனமிசைந்து உதவி செய்தற்கு, அடைவு ஒன்று உண்டே - ஒருமுறையும் உள்ளதே; (இங்ஙன மிருக்கவும்), பொலம் குண்டலமும்-பொனனாற்செய்த குண்டலத்தையும், கொடுங் குழையும் - வளைந்த குழையையும், புனை தாழ் முத்தின் பொன் தோடும் - அணிதற்குரிய தொங்குகின்ற முத்தினாற் செய்த அழகிய தோட்டினையும், விலக்கி வந்தாய் - (அணியாமல்) நீக்கிவந்த நீ, விளம்பாதே - (அவள் சென்ற இடத்தைச்) சொல்லாமலே, இன்னும் - இன்னமும், பூசல் - பகைமையையே, விரும்புதியோ - விரும்புகின்றாயோ? (எ - று.)

நீ வடிவத்தாற் சீதையின் காதை யொத்திருப்பதனால் குண்டலம் முதலியவற்றையும் அணிந்துவந்து எல்லாப்படியாலும் அவளது காதுபோன்று தோன்றினையானால் கான உன்னைக்கண்டு ஆறியிருப்பேனே: நீ அவ்வாறு செய்கின்றிலையேயென வள்ளைக்கொடியை நோக்கி இராமபிரான் இரங்கியவாறு. 'வள்ளாய்காதே' என்றது - காட்சியணி: நீ சீதையின்காதே யென்ற வாக்கியம், 'உற்று உதவற்கு அடைவொன்றுண்டே' என்பதைச் சமர்த்தித்து நிற்பதனால், தொடர்நிலைச்செய்யுட்குறியணியாம்; இது, வடமொழியில் காவ்யலிங்க மெனப்படும். பின்னிரண்டடிகளில், வேற்றுமையணி தொனிக்கும்.

அலங்குகண் என்பது, அலக்கண் என மருவிற்று; 'அலக்கண் என்பது- மலர்ந்த நோக்கமின்றி மையல்நோக்கம்படவரும் இரக்கம்: இடுக்கண் என்பதும் அது. அலம் கண் என்று பிரித்து, சஞ்சலமான கண்களெனக் கொண்டு, துன்பத்துக்குக் காரணக்குறி யென்றலும் அமையும். 'அடைவுண்டன்றே' எனறும் பாடம். கொம்பு - மேனிக்கும், மலர் - அதிலுள்ள கண் கை கால் முகம் முதலிய அவயவங்களுக்கும் உவமை.

மடமாவது - எல்லாம் அறிந்தும் ஒன்றும் அறியாததுபோலிருக்கும் தன்மை; இது-நாணம், அச்சம், பயிர்ப்பு முதலிய பெண்குணங்கள் பிறவற்றிற்கும் உபலக்ஷணம். (உபலக்ஷணமாவது - ஒருமொழி ஒழிந்த தன் இனங்களையுந் தெரிவிப்பது.) குண்டலம், குழை, தோடு இவை - காதணிகளின் பேதங்கள். ஜநகமகாராஜன் ஒருகால் யாகஞ்செய்யச் சாலையமைப்பதற்காகப் பூமியை உழுதபொழுது பூமியினின்று கலப்பையுழுபடைச்சாலில் அகப்பட்டதனால், சீதையெனப் பெயர்: சீதை - உழுபடைச்சால்; இதனால், அயோனிஜையெனக் கூறப்படுகின்றது.

உற்றேற்கு - தன்மையொருமை வினையாலணையும் பெயர், நான்கனுருபு ஏற்றது. உண்டே, ஏகாரம் - தேற்றம். அல்லை - அன்மைபென்ற பண்பி னடியாப் பிறந்த முன்னிலையொருமைக் குறிப்புவினைமுற்று. ஆல் - அசை. புனை தாழ் முத்து - வினைத்தொகை. 'விலக்கி வந்தாய் காட்டாயேல்' என் றும், 'இன்னம்' என்றும் பாடமுண்டு. (௩௦)

௩௧. பஞ்சு பூத்த விரற்பதுமம் பவளம் பூத்த வடியாளென்
னெஞ்சு பூத்த தாமரையி னிலயம் பூத்தா ணிறம்பூத்த
மஞ்சு பூத்த மலர்பூத்த குழலாள் கண்போன் மணிக்குவளாய்
நஞ்சு பூத்த தாலென்ன நகுவா யென்னை நலிவாயோ.

(இ - ள்.) பஞ்சு பூத்த விரல் - செம்பஞ்சுக்குழம்பு ஊட்டிய விரல்களி னால், பதுமம் பவளம் பூத்த - செந்தாமரைமலரிற் பவழம் பொருந்தின தொத்த, அடியாள் - பாதங்களையுடையவளும், என் நெஞ்சு பூத்த தாமரை யின் நிலயம் பூத்தாள் - எனது மனமென்னும் மலர்ந்த தாமரை மலராகிய வீட்டில் (எப்பொழுதும்) வசிப்பவளும், நிறம் பூத்த மஞ்சு பூத்த மலர் பூத்த குழலாள் - கருநிறமுள்ள மேகத்தைப்போன்றதும் மலர்களைச் சூடியதுமான கூந்தலையுடையவளுமாகிய சீதையினது, கண் - கண்களை, போல் - ஒத்திருக் கின்ற, மணி குவளாய் - அழகிய நீலோத்பலமே!—(நீ),—நஞ்சு பூத்தது என்ன - விஷம் படர்ந்ததுபோல, நகுவாய் - நகைத்து [மலர்ந்து], என்னை—, நலிவாயோ - வருத்துவையோ? (எ - று.)—ஆல் - அசை.

தான் எப்பொழுதும் ஜாநகியை நினைத்திருப்பதனாலும், இலக்குமிக்கு இருப்பிடம் தாமரை யாதலாலும், 'என்நெஞ்சு பூத்த தாமரையின் நிலயம் பூத் தாள்' என்றார். இப்போது எனது மனத்திலேயே தங்கியிருக்கிற சீதையின் கண்ணை யொத்திருக்கின்ற நீ, அவள் என்னிடத்து இருப்பதுபோலவே அன் போடிருக்க வேண்டியிருக்க, அவ்வாறிருத்தலைவிட்டு நகைத்து நலிதல் தக்க தன்று என்பதாம். நகுதல் என்பது - இங்கு, (பரிகாசமாகச்) சிரித்தல், மலர் தல் என்ற இருபொருளையும் தக்கது: வடமொழியிலும் 'ஹாஸ:' என்பது - இவ்விருபொருளையுமுடையதாதல் காண்க: ஆகவே, 'நகுவாய் என்னை நலி வாயோ' என்பது - சிலேடை மூலமாக வந்த ஒற்றுமையுயர்வுநவிற்சியணி. 'பூத்த' என்ற ஒருசொல் வெவ்வேறு பொருளிற் பலமுறை வந்தது - சொற் பின் வருநிலையணி. பாதங்கள் செந்தாமரைமலரையும், அப்பாதங்களிலுள்ள விரல்கள் திரண்ட பவழத்துண்டையும் போலுமென்க. "பஞ்சியூட்டியபாட் டிசைக்கிண்கிணிப்பதுமஞ், செஞ்செவிச் செழும்பவழத்தின் கொழுஞ்சுடர் சிதறி" என்றது, இங்கு நோக்கத்தக்கது. நெஞ்சுபூத்த தாமரை - ஹ்ருதய கமலம். மணிக் குவளை - நீலமணிபோன்ற குவளை யென்றுமாம், நஞ்சு - வருத்துதலாலும், கருநிறத்தாலும், குவளைக்கு உவமை.

பவளம் - ப்ரவாளமென்னும் வடமொழியின் சிதைவு. 'வினைப்பகுதிகள் வேண்டிய பொருளை விளக்கும்' என்னும் வடமொழி நியாயத்தால், இக்கவி யில் 'பூத்த' என்னுஞ் சொல்லுக்கு - சந்தர்ப்பத்திற்கு ஏற்பப் பலபொரு

னுரைக்கப்பட்டன. பதுமம்=பத்மம். 'கஞ்சபூத்ததாமன்ன கைகயாலென்னை கலிவாயோ'' என்பதும் பாடம். (௩௧)

வேறு.

[மீண்டும் இராமன் அப்பொய்கையை நோக்கி யிரங்குதல்.]

௩௨. என்ற யாவுயிர்க் கின்றவ னேடவிழ்
கொன்றை யாவிப் புறத்திவை கூறியான்
பொன்ற யாதும் புகல்கிலை போலுமால்
வன்ற யாவிலி யென்ன வருந்தினான்.

(இ - ள்.) அயா - (மனைவியைப் பிரிந்ததனா லுண்டான) மனவருத்தத்தால், உயிர்க்கின்றவன்-பெருமூச்சுவிடுகின்றவனாகிய ஸ்ரீராமபிரான்,—ஏடு அவிழ் கொன்றை - பூவிதழ்கள் விரிகின்ற கொன்றை மரங்களையுடைய, ஆவிபுறத்து - அப்பொய்கையின் கரையிலே இருந்து, என்று இவை கூறி - என்ற இத்தன்மையனவாகிய வர்த்தைகளைச் சொல்லி,—(பின்னும் பொய்கையை நோக்கி), 'வல் - வன்மைக்குணமுடைய, தயா இலி-இரக்கமில்லாத பொய்கையே! யான் - நான், பொன்ற - (இவ்வாறு) அழியவும், யாதும் புகல்கிலை போலும் - யாதொரு வார்த்தையையும் பேசாமலிருப்பாய் போலும்', என்ன - என்று சொல்லி, வருந்தினான் - வருத்தமடைந்தான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

பொய்கைக் கரையிலும் பொய்கையிலு முள்ள பொருள்களை நோக்கிப் புலம்பிய இராமபிரான் இங்குப் பொய்கையைநோக்கிப் புலம்பின னென்க. முல்லைநிலக் கருப்பொருளாகிய கொன்றையைக் குறிஞ்சியிற் கூறியது, வழுவமைதி. போலும் - ஒப்பில்போலி: உவமைப்பொருள்தராத போலென்னுஞ் சொல். வல் என்பது - தயாவிலி என்பதன் ஏகதேசமாகிய தயையை விசேடியாது, அம்முழுச்சொல்லையும் விசேடித்து நின்றது; தயா என்னும் வடமொழி-ஆவீறு ஐயீறாகத் திரியாது நின்றது. 'தயாவிலி' என்றது, அண்மை விளியாதலின், இயல்பாய் நின்றது.

இதுமுதல் ஐந்து கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௩௨)

[களிறு பிடிக்கு நீருட்டுவதைக்கண்டு இராமபிரான் வருந்துதல்.]

௩௩. வாரளித்தழைமாப்பிடிவாயிடைக்
காரளிக்கலுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினான்.

(இ - ள்.) பேர் அளிக்கு - மிக்க கருணைக்கு, பிறந்த இல் ஆயினான் - உத்பத்திஸ்தாநமாகவுள்ள ஸ்ரீராமன்,—(அங்கே), கார் அளி - கறுத்த வண்டுகள் மொய்க்கப்பெற்ற, கலுழி - மதநீர்ப்பெருக்கையுடைய, கருங் கைம்மலை-கரிய

ஆண்யானைகள், வார் அளி தழை மா பிடி வாயிடை நீர் அளிப்பது - நீண்ட இனிப்பான தழைகளைத் தின்கின்ற பெரிய பெண்யானைகளின் வாயில் தண்ணீரை(த் தமது துதிக்கையால்) மொண்டு கொடுத்து ஊட்டுதலை, நோக்கினன் - பார்த்து, நின்றனன்,(தனக்கு இவ்வாறு விளையாடுதற்கு இல்லையே! என்கிற எண்ணத்தால்) திகைத்து நின்றான்; (எ - று.)

பிடி - பெண்யானை; "பிடியென் பெண்பெயர் யானை மேற்றே" என்பது தொல்காப்பியம். துதிக்கையையுடைய மலையெனவே, யானையாயிற்று. பிடியென வந்ததனால், கைம்மலை - களிறாயிற்று. இரண்டாவது அடிக்கு - காளமேகம்போல மதமழையைப் பெருக்குகின்ற யானை யென்றும் பொருள் கொள்ளலாம். 'சென்றாங்கோ ரலவன்றன் சீர்ப்பெடையின், வாய்வண்டனையதோர் நாவற்கனி நனி நல்கக் கண்டு, பேய்கண்டனையதொன்றாகி நின்றானப்பெருந்தகையே" என்றார் திருக்கோவையாரிலும். அளியாவது - அன்புகாரணத்தால் தோன்றும் அருள். நோக்கினன் - முற்றெச்சம். (கங)

[இலக்குமணன் இராமபிரானை மாலைக்கடன் செய்யத் தூண்டுதல்.]

கச. ஆண்டவ்வள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்ததா
லீண்டிரும்புனறோய்ந்துன்னிசையென
நீண்டவன்கழறாழ்நெடியோயென்றான்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது,—அன்பு எனும் அரு அணி பூண்ட - அன்பென்கின்ற பெறுதற்கரிய ஆபரணத்தை அணிந்த, தம்பி - இளையபெருமான்,—அ வள்ளலை - அந்த ஸ்ரீராமனை நோக்கி, 'பொழுது கழிந்தது - பொழுது போய்விட்டது [சூரியாஸ்தமயகாலமாயிற்று]; ஆல் - ஆகையால், நெடியோய் - (திருக்கலியாண குணங்களாற்) பெரியவனே! (நீ), ஈண்டு இரும் புனல் தோய்ந்து - இப்பொய்கையின் பெருமை பொருந்திய தீர்த்தத்திலே நீராடி,— உன் இசை என நீண்டவன் - உன்னுடைய கீர்த்தி (எல்லா வுலகத்தும் ஓங்கி வளர்வது) போல வளர்ந்தருளின திரிவிக்கிரமனாகிய ஸ்ரீமந்நாராயணனது, கழல் - திருவடிகளை, தாழ் - வணங்குவாயாக,' என்றான் - என்று விண்ணப்பஞ் செய்தான்; (எ - று.)

வள்ளல் - வரையாது கொடுக்குந் தன்மையையுடையவன். அன்பு - ஸ்ரீ ராமபக்தி. அன்பென்னும் அணி யென்ற விதப்பு - உலகத்து ஆபரணங்களெல்லாம் அலங்கரிப்பது உடம்பு மாத்திரத்தையே, இவ்வணி உயிரை அலங்கரிப்பது என்னும் வேற்றுமை தோன்ற நின்றது. 'நீண்டவன் கழல்தாழ்' என்றது - சூரிய மண்டலத்தின் நடுவிலே எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமந்நாராயணனைக் குறித்துச் சாயஞ்சந்தியாவந்தனம் செய்வாயாக வென்றபடி. தமையனே யென்றற்கு 'நெடியோய்' என்றாருமாம். ஆரணி - பண்புத்தொகை; வினைத்தொகையாய், நிறைந்த அணியுமாம். அணியென்பது - அணியப்படுதலாகிய காரணம்பற்றி வழங்கும் பெயராய், இடுவன தொடுவன கட்டுவன கவிப்பனவாகிய ஆபரணங்கள் பலவற்றிற்கும் பொதுவாய் நிற்கையால், காரணப்பொதுப்பெயர். 'ஆண்ட வள்ளலை' யென்ற பாடமும் அமை

யும்; 'ஆண்டவன்' என்பது, அனைத்துயிரையும் ஆட்கொண்டவனான எம்பெருமானை யுணர்த்தும். பொழுதுகழிந்தது முட்படத் தெரியாதபடி இராமபிரான் விரகவேதனையற்றிருத்தல்பற்றி, இளைய பெருமாள் இங்ஙனம் விண்ணப்பஞ் செய்தனர், அன்றியும், பிரபுக்களுக்குத் தெரிந்த விஷயங்களையும் ஞாபித்தல், அடியவர்கடமை. (கூச)

[இராமபிரான் நீராடுதல்.]

கூரு. அரசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுன்செய்தவமுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடலைமேயினன்.

(இ - ள்.) அரசும் - ஸ்ரீராமனும்,—அ வழி நின்று அரிது எய்தி - அவ்விடத்திலிருந்து அருமையாக [வருத்தத்தோடு] சென்று,—அ திரை செய் தீர்த்தம் முன் செய் தவம் உண்மையால் - அலைகளை வீசுகின்ற அந்தத்தீர்த்தம் முன்னே செய்துள்ள தவப்பயன் இருத்தலினாலே [தவஞ்செய்திருந்தபடியால்],—வரை செய் மா மதம் வாரணம் நாண் உற - மலைபோன்ற பெரிய மதம்பிடித்த யானையும் ,வெள்கும்படி, விரை செய் பூ புனல் - வாசனை வீசுகின்ற அழகிய தீர்த்தத்தில், ஆடலை மேயினன் - நீராடலைப் பொருந்தினன் [மூழ்கினன்]; (எ - று.)

திருமாலினது திருவடிப்பரிச மொன்றினாலேயே கங்காநதியானது எல்லா வுலகத்தாரும் கைகூப்பிவணங்கும்படியான மேன்மையை யடைந்திருத்தலால், அப்பெருமானது திருமேனி முழுவதும் படியப்பெற்ற இப்பொய்கையின் சிறப்பு மிகப்பெரிய தென்பார், 'அத்திரைசெய் தீர்த்தம் முன் செய்தவ முண்மையால் ஆடலைமேயினன்' என்று பாராட்டிக் கூறினர்.

அரசு - அரசனுக்குப் பண்பாகுபெயர். அவ்வழிநின்று, நின்று - ஐந்தனுருபு. அரிது - வினையுரியாய் நின்றது. தவம் - தபஸ்: வடசொல். வரைசெய், செய்-உவமவுருபு ; "வேல்கிரைசெய் கண்ணியொடு மெல்லென விருந்தான்" என்னுஞ் சிந்தாமணியிற்போல. 'அரிதேகி' என்று பிரதிபேதம். ()

[இராமபிரான் நீராடியதனால் அப்பொய்கை வெதும்புதல்.]

கூசு. நீத்த நீரி னெடியவன் மூழ்கலுந்
தீத்த காமத் தெறுகதிர்த் தீயினாற்
காய்த்தி ரும்பைக் கருமகக் கம்மியன்
றோய்த்த தண்புன லொத்ததத் தோயமே.

(இ - ள்.) நெடியவன் - ஸ்ரீராமபிரான், நீத்தம் நீரில் - வெள்ளத்தையுடைய அத்தீர்த்தத்தில், மூழ்கலும் - ஸ்நானஞ் செய்தவளவில்,—தீத்த - (அவனது திருமேனியை) வெதும்பச்செய்த, காமம் - காமமாகிய, தெறு - அழிக்கின்ற. கதிர் தீயினால் - சுவாலையையுடைய அக்கினியினால், அ தோயம் -

அப்பொய்கையின் தீர்த்தமானது,—கருமகன் கம்மியன் - இரும்பு வேலை செய்பவனாகிய கருமான், காய்த்த இரும்பை - நன்றாகக் காய்ச்சின இரும்பை, தோய்த்த - நனைத்த, தண் புனல் - குளிர்ந்த நீரை, ஒத்தது—; (எ - று.)

விரகவேதனையால் தபிக்கின்ற ஸ்ரீராமன் நீராடின மாத்திரத்தில் அவனது திருமேனியின் வெப்பத்தால் அத்தண்ணீர் கொல்லனுலையிற் காய்ச்சின இரும்பைத் தோய்த்த நீர்போலக் கொதித்த தென்பதாம்: உவமையணி. காமமும் நெருப்புந் தாம் சேர்ந்தவிடத்தைச் சுட்டெரிக்குந் தொழிலுடையனவாதலால், 'தீத்தகாமத்தெறுகதிர்த்தீ' என்றார்; உருவகவணி. உலகத்து நெருப்பை அவிக்குந்தன்மையுடைய நீரினால் அவியாமல் இக்காமத்தீ அந்நீரையும் வெதுப்பிற்றெனக் காமத்தின் கொடுமையை வேற்றுமையணி தோன்ற விளக்கியபடி; "நீருட் குளிப்பினுங் காமஞ் சுடுமே" என்றார் நாலடியாரிலும்.

தீத்தம் - தீந்தப்படுவதென வெள்ளத்துக்குக் காரணப்பெயர்; அம் - செயப்படுபொருள் விகுதி. காய்த்திரும்பு - விகாரம். இரும்பைக்காய்த்து என மாற்றி யுரைப்பினுமாம். கருமகக் கம்மியன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை; கருமகனாகிய கம்மியன் என விரியும்: கருமானாகிய கம்மாளனென்று பொருள்; உயர்திணையிடத்து விகாரமாயிற்று: இவை - முறையே கர்மகன், கர்மீ என்னும் வடசொற்களின் விகாரம். (௩௬)

வேறு.

[இராமபிரான் அந்த ஒருசோலையில் தங்குதலும், சூரியன் அஸ்தமித்தலும்.]

௩௭. ஆடினா னன்னமா யருமறைகள் பாடினா
னீடுநீர் முன்னைநூ னெறிமுறையி னேமிதாள்
சூடினான் முனிவர்தந் தொகுதிசேர் சோலைவாய்
மாடுதான் வைகினா னெரிகதிரும் வைகினான்.

(இ - ள்.) அரு மறைகள் - அறிவதற்கருமையான வேதங்களை, அன்னம் ஆய் - ஹம்ஸபக்ஷிரூபங்கொண்டு, பாடினான் - (பிரமனுக்கு) உபதேசித்தருளிய திருமாலின் திருவவதாரமாகிய ஸ்ரீராமன், ஆடினான் - (அப்பொய்கையில்) நீராடி, முன்னை நூல் நெறி முறையின் - அநாதியான வேதங்களிற் கூறிய விதியின் கிரமப்படி, நீடு நீர் - சிறந்த அர்க்கிய தீர்த்தத்தை, நேமி தாள் - சக்கராயுதத்தையுடைய திருமாலினது திருவடிகளில், சூடினான் - சமர்ப்பித்து [சந்தியாவந்தனஞ் செய்து],—முனிவர்தம் தொகுதி சேர் சோலைவாய் - முனிவர்களது கூட்டம் பொருந்திய தொரு சோலையில், மாடு - ஒருபக்கத்தில், வைகினான் - தங்கியிருந்தான்; எரி கதிரும் - சுடுகின்ற கிரணங்களையுடையனான சூரியனும், வைகினான் - அஸ்தமித்தான்; (எ-று.)— தான் - அசை.

முன்னொருகாலத்திற் பிரமதேவனிடத்தினின்று வேதங்களை அபகரித்துக்கொண்டு கடலில் மூழ்கி மறைந்துபோன மதுகைடபர்களைத் திருமால் கடலினுட்புக்குத் தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களைக் கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளின வரலாற்றை உட்கொண்டு,

'அன்னமா யருமறைகள் பாடினன்' என்றார்; "அன்னமாயன்றங்கருமறை பயந்தான்" என்றார் பெரியாரும். நீடு நீர் என்பதை நாலுக்கு விசேஷண மாக்கி, மிக்க நீர்மை [தன்மை] யமைந்த வேதவிதிப்படி திருமாலைத் திருவடி தொழுது எனறும் பொருள கொள்ளலாம். இராமபிரான் பொய்கையில் அர்க்கியம் முதலியவற்றை முடித்ததை 'நேமிதாள் சூடினன்' என்றார். அருகிலுள்ள சோலைவாய் வைகினது-காயத்ரீ ஜபஞ் செய்வதற்காக. 'அனன மாய் அருமறைகள் பாடினன் நேமிதாள் சூடினன' என்ற இதில, திருமால் தன திருவடிகளைத் தானே சூடினனென்று மேல்நோக்கில் முரணும் ஆய்ந்து நோக்குமிடத்துத் திருமால் தான் கொண்ட மானுடவேடத்திற்குத் தக்கபடி இவ்வாறு செய்தானெனறு பரிகாரமும் தோன்றுதலால், இது முரண்விளைந் தழிவணியாம்; இது, வடமொழியில் விரோதாபாஸாலங்கார மெனப்படும்; "தன் திருநாமத்தைத் தானுஞ் சாத்தியே" என்றது, இங்குக் காணத்தக்கது. 'அருமறைகள் பாடினன சோலைவாய் மாடு தான் வைகினன் எரிகதிரும் வைகினன்' என்ற சொற்போக்கில், சூரியன அத்தகிரியில் தங்கியதும் இராம பிரான் சோலையில் தங்கியதும் தம்மிலொக்குமென உவமையணி தொனித் தல் காண்க. இப்பூமியிலுதித்து ஜனங்களுக்கு நேரும் மனவிருளை யகற்று வதனால், இராமபிரான் சூரியனையொப்பனெனக; 'ராமதிவாகரன' என்ப.

மறையென்பது - சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதவும் ஓது விக்கவுமாகாதென்று மறுக்கப்படுவதாலும், அறிதற்கரிய மறைபொருளுடை மையாலும், வேதத்துக்குக் காரணக்குறி. நேமி - சக்கரம்: வடசொல், இலக் கணையாய் அதனையுடையவனை யுணர்த்திற்று. முனிவர் - கடவுளை மனனஞ் செய்பவர்; எல்லாப்பற்றுக்களையும் முனிந்தவர் [விட்டவர்] எனத் தமிழ்வழி யாற் காரணங்கூறலாகாது: வடசொல் திரிபாதலின். 'சூடினன்' என்ற சொல்லாற்றலால், தாளை மலராகக்கொள்க. சோலைவாய்—வாய் - ஏழனுருபு. எரிகதிர் - வினைத்தொகையனமொழி 'முனிவரைத்தொழுது பூஞ்சோலை வாய்' என்று சிலபிரதிகளிற் பாடங் காணப்படுகின்றது.

இதுவும், அடுத்தகவியும் - நான்குசீரும் பெரும்பாலும் விளச்சீர்களாகிய கலிவிருத்தங்கள். (௩௭)

[சந்திர னுதித்தல்.]

௩௮. அந்தியாள் வந்துதா னணுகவங் கணுகுறாச்
சந்தவார் கொங்கையா டனிமைதனி நாயகன்
சிந்தியா நொந்துதேய் பொழுதுதெறு சீதநீ
ரிந்துவா னுந்துவா னெரிகதி ரினனென.

(இ - ள்.) அந்தியாள் வந்து அணுக - மாலைப்பொழுது வந்துபொருந்த வும், அங்கு அணுகுறா - அவ்விடத்தில் வந்துசேராத, சந்தம் வார் கொங்கை யாள் - அழகிய கச்சணிந்த தனங்களையுடைய சீதாபிராட்டியினது, தனிமை - பிரிந்து தனியேயிருக்குந் தன்மையை [விரகத்தை], தனி நாயகன் - ஒப்பற்ற தலைவனாகிய ஸ்ரீராமபிரான், சிந்தியா - நினைத்து, நொந்து - மனம்வருந்தி,

தேய்பொழுது - வாடும்போது,—தெறு சீதம் நீர் - தங்கிய குளிர்ந்த நீரை யுடைய கடலினின்று, இந்து - சந்திரன், எரி கதிரினன் என - சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியன் போல, வான் - ஆகாயத்தில், உந்துவான் - உதித்து உயர்ந்துவிளங்குபவனானான்; (எ - று.)—தான் - அசை.

அந்தி - ஸந்த்யா என்னும் வடமொழியின் சிதைவு: அது, வடமொழி யில் ஸ்த்ரீலிங்கம் [பெண்பால்] ஆதலால், 'அந்தியாள்' எனப் பெண்பாலாகக் கூறப்பட்டது. இதில். மாலையாகிய பெண் வரவும் சீதையாகிய பெண் வந்தாளிலளென்பது தோன்றுதல் காண்க. 'சந்தமார்' என்னும் பாடத்துக்கு- சந்தனமணிந்த கொங்கையென்க. விரகவேதனையுற்றார்க்குச் சந்திரகிரணம் முதலிய குளிர்ந்த பொருள்களும அக்கினிச்சுவாலைபோல வெப்பந்தருவனவா மாதலால், சீதகிரணனாகிய சந்திரனும் உஷ்ணகிரணனாகிய சூரியனைபோல வெப்பமுண்டாகத் தோன்றினானென்றார். "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலரு மிந் நோய்" என்றபடியே மாலைக்காலத்தில் ஆசை நோய் மிகுதல்பற்றி, இவவாறு கூறினார். தெறுசீதநீர் என்பதற்கு - பிரிந் தாரைக் காமோத்தீபகப் பொருளாக நின்று வருத்துதற்குஉரிய கடலென்றும், (பிரளயகாலத்திற பொங்கி உலகத்தை) அழிக்குங் கடலென்றும் பொருள் கூறலாம் அந்தியாள் வந்து,-சிந்தியாநொந்து, இந்துவானுந்துவான் பிராஸம். அநுகவங்கணுதுறு - தொடைமுரண். 'எரிகதிர்' என்றும் பாடம் 'எரிகதிரு மாயினன்' என்ற பாடமும அமையும். (௩௮)

வேறு.

[இதுவும், அடுத்த கவியும் - இராப்பொழுதின் வருணனை.]

௩௯. பூவொடுங் கினவிரவு புள்ளொடுங் கினபொழில்கண்
மாவொடுங் கினமரனு மிலையொடுங் கினகிளிக
ளாவொடுங் கினமயில்க ணடமொடுங் கினகுயில்கள்
கூவொடுங் கினபிளிறு குரலொடுங் கினகளிறு.

(இ - ள்.) (அப்பொழுது), விரவு - கலந்த [பலவேறுவகைப்பட்ட], பூ - (பகலிற் பூத்திருக்குந் தாமரை முதலிய) மலர்கள், ஒடுங்கின - குவிந்தன; புள் - பறவைகள், பொழில்கண் - சோலைகளில், ஒடுங்கின - (தம்தமது கூடு களில்) அடங்கின; மா - மிருகங்கள், ஒடுங்கின - (தம்தஞ்செய்கை) ஒழிந் தன; மரனும் - மரங்களும், இலை ஒடுங்கின - இலைகள் குவியப்பெற்றன; கிளிகள்—, நா ஒடுங்கின - பேசுதல் அடங்கின; மயில்கள்—, நடம் ஒடுங் கின - ஆட்டம் ஒழிந்தன; குயில்கள்—, கூ ஒடுங்கின - கூவுதல் அடங்கின; களிறு - யானைகள், பிளிறு குரல் ஒடுங்கின - கர்ச்சிக்கின்ற குரல் அடங்கின;

'ஒடுங்கின' என்ற சொல் ஒரேபொருளிற் பன்முறைவந்தது, சொற் பொருட்பின்வருநிலையணி. 'விரவு' என்னுங் காலங்கரந்த பெயரெச்சத் தைப் பிறபெயர்களோடுங் கூட்டுக. இனி, இரவு எனப் பிரித்து - அவ்விராத் திரியில் இவை இவை ஒடுங்கின என்றும் உரைக்கலாம். 'பொழிற்கண்'

எனத் திரியாதது, சந்தவின்பம் நோக்கி. பொழில்கள் எனப்பிரித்து, சோலைகள் பறவைகள் அடங்கப்பெற்றன வென்றுமாம். 'மானும்' என்ற இழிவுசிறப்பும்மை, அதனுடைய ஓரறிவுடைமையைக் கருதிற்று. 'மானும்' இலையொடுங்கின' முதலிய வாக்கியங்களில், அஃறிணையெழுவாயைத் தொடர்ந்த அஃறிணைச்சினைப்பெயரும் தொழிற்பெயரும் அவ்வெழுவாயின் முடிபினையேகொண்டன. கூ - முதனிலைத் தொழிற்பெயர். பிளிறு குரல்-வினைத்தொகை. களிறு - இங்கு, யானைப்பொது.

இதுமுதற் பதினன்கு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் விளச்சீர்களும், மற்றையிரண்டும் விளங்காய்ச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (ங௲)

ச஠. மண்டுயின்றனநிலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றனகழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றிலநெடியகடறுயின்றனகளிறு.

(இ - ள்.) மண் - பூமியிலுள்ள பிராணிகளெல்லாம், துயின்றன - தூங்கின; நிலைய மலை - சலியாமல் நிலைபெறுதலையுடைய மலைகளிலுள்ள பிராணிகளெல்லாம், துயின்றன—; மறு இல் - மாசில்லாத [தெளிந்த], பண் - நீர்நிலைகள், துயின்றன—; விரவு பணி - (நாகலோகத்திற்) பொருந்திய பாம்புகள், துயின்றன—; பகரும் விண் - சொல்லப்படுகின்ற ஆகாயத்திற் சஞ்சரிக்கும் பிராணிகளெல்லாம், துயின்றன—; கழுதும் - பேய்களும், விழி துயின்றன - கண்ணுறங்கின; (இப்படி எல்லாம் உறங்கின காலத்திலும்), நெடிய கடல் துயின்றன களிறு - பெரிய திருப்பாற்கடலிற் பள்ளிகொள்வனவாகிய ஆண் யானைகள், பழுது இல் கண் துயின்றில - குற்றமற்ற திருக்கண்கள் உறங்கவில்லை [ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் மாத்திரம் நித்திரை கொண்டாரில்லை;]

சொற்பொருட் பின்வருநிலையணி. 'நடுராத்திரியில் ஒருமுகூர்த்த காலம் நீர்தூங்கும்' என்பவாதலால், 'மறுவில்பண் துயின்றன' என்றார். பண்-பண்ணை யென்பதன் விகாரம். பண் - இலக்கணையால், அதிலுள்ள பிராணிகளையும் உணர்த்தும். பண் - இராகமுமாம்; பண் துயிலுதலாவது - பண் அடங்கிநிற்றல். பணீ - படத்தையுடையது; வடசொல்; பணம் - படம். நாளிரவில் முகூர்த்தகாலம் பேய்களுந் தூங்குமென்பது வழக்கு; "பேயுந்துயின்றதாற் பேர்யாமம்" "தோன்றுங் கழுதுந் துயின்றதே" என்றார் புகழேந்தியாரும். கழுதும் என்ற உம்மை, அதனது இராத்திரியிலேயே சஞ்சரிக்குந் தன்மையைக் குறித்தது. ஸ்ரீராமபிரான் பிராட்டியைப் பிரிந்த வருத்தத்தாலும், இளையபெருமாள் தமையனார்க்குச் சகலவித கைங்கரியமுஞ் செய்யும் ஊக்கமிகுதியாலும், திருக்கண் வளர்ந்தில ரென்க. இருவரும் ஸ்ரீமகாவிஷ்ணுவினது அம்சமே யாதலால், 'நெடியகடல் துயின்றன களிறு' என்றார். திருமாலினது ஐவகைநிலையுள், பாற்கடலிற் பள்ளிகொள்வது, வ்யூஹநிலையெனப்படும். 'களிறு துயின்றன - யானைகளும் தூங்கின; கடல்மாத்திரம் கண்டுயின்றில [ஓசையடங்காது நின்று இராமபிரானுக்கு வருத்தத்தை விளைத்தது]' என்று கூறுவதில், சிறப்பின்மை யுணர்க. நிலைய - 'நிலை' என்ற தொழிற்

பெயரினடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். களிறு-யானையின் ஆண்மைப் பெயர்; "வேழக்குரித்தே விதந்துகளிறென்றல்" என்பது, தொல்காப்பியம்: மதக்களிப்புடைய தென்பது, பொருள்: இச்சொல் பால்பகாவஃறிணைப் பெயராதலால், உவமையாகுபெயராய் இராமலக்ஷ்மண ரிருவரையுமுணர்த் திற்று. ஈற்றடியில், தோடைமுரண் காண்க. மண், மலை, விண் - இடவாகு பெயர்கள். (௪0)

[பிறகு இராவுநீங்குமாறு சூரியனுதிக்கத் தாமரை மலர்தல்]

௪௧. பொங்கிமுற்றியவுணர்வுபுணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமலமுகமெடுத்தனகடலில்
வெங்கதிர்க்கடவுளெழவிமலன்வெந்துயரினெழ.

(இ - ள்.) விமலன் - குற்றமற்றவனாகிய ஸ்ரீராமன், வெம் துயரின் - கொடிய துன்பத்தினின்றும், எழ - நீங்கும்படி, வெம் கதிர் கடவுள் - உஷ்ண கிரணங்களையுடைய சூரியன், கடலில்—, எழ - உதித்தமாத்திரத்தில்,— பொங்கி முற்றிய உணர்வு - விளங்கி நிறைந்த மெய்யறிவு [தத்துவஞானம்], புணர்தலும் - (ஒருவனைச்) சேர்ந்த மாத்திரத்தில், புகையினொடு பங்கம் உற்று அனைய வினை - புகையுஞ் சேறுஞ் சேர்ந்தாற்போன்ற தீவினைகள், பரிவு உறும் படி - நீங்குந்தன்மை போல, முடிவு இல் கங்குல் - முடிதலில்லாத இராத்திரி, இற்றது - கழிந்தது; கமலம் - தாமரைமலர்கள், முகம் எடுத்தன- முகம்விளங்கி மலர்ந்தன; (எ - று.)

நல்லுணர்வு தோன்றியவுடனே வினைகள் கழிதல்போல, சூரியன் தோன்றியவுடனே இருள் கழிந்த தென்பதாம்; உவமையணி. பாவத்தைக் கருநிறமுடையதாக வருணிப்பது கவிகளது மரபாதலால், புகையுஞ்சேறுங் கலந்தாற் போன்ற வினையென்றார். விரகமுள்ளவர்க்குக் கங்குல் ஆயிரமூழி களாய் நீட்டித்துத் தோன்றுமாதலால், 'முடிவில்கங்குல்' எனப்பட்டது. இராக்காலத்தில் மிக்கிருந்த விரகவேதனை பகற்காலத்திற் குறைவுபடுதலால், 'விமலன் வெந்துயரினெழ' எனப்பட்டது. இனி, சீதையிருக்கு மிடத்தைத் தேடிக் கண்டு சென்று இராவணனைச் சங்கரித்துப் பிராட்டியைச் சேர்தற் குக் காரணமாக, அநுமான் சுக்கிரீவன் இவர்களது சிநேகம் அன்றைத்தினத் தில் நேரிடப்போவதுபற்றி, ஸ்ரீராமன் கொடிய துன்பக்கடலினின்று கரை யேறும்படி சூரியன் தான் கடலினின்று உதிக்க என்றுமாம். (௪௧)

[இராமலக்ஷ்மணர் சீதையைத் தேடிக்கொண்டு அப்பாற் செல்லுதல்.]

௪௨. காலையேகடிதுவரவேகினர்கடல்கவினு
சோலையேய்மலைதழுவுகானநெறிதொலைய
வாலையேய்துழனியகளுடாரார்கவியமிழ்து
போலவேயுலரசெய்புன்மாலைகாடுதல்புரினர்.

(இ - ள்.) ஆலை ஏய் அழனி அகல் நாடர்-கரும்புயந்திரங்களிற் பொருந்திய ஒலியையுடைய பரந்த கோசலநாட்டையுடையவர்களான இராமலக்ஷ்மணர்கள்,—ஆர்கலி அமிழ்து போலவே உரைசெய் புனம் மானை நாடுதல் புரிஞர் - மிக்க ஓசையையுடைய திருப்பாற்கடலில் தோன்றியதான தேவாமிருதம்போல (மிகவும் இனிமையாகப்) பேசுகின்றவளான கொல்லைகளில் வாழும் மான்பேடை போன்ற பார்வையுடைய ஜாநகிப்பிராட்டியைத் தேடுதல் செய்பவர்களாய்,—காலையே வர - உதயகாலம் வர,—(அப்பொழுதே), கடல் கவினுசோலை ஏய் - சமுத்திரம்போன்ற அழகிய சோலைகள் சூழ்ந்த, மலை - மலைகளும், தழுவு கானம் - அம்மலைகளைச் சேர்ந்த காடுகளும் ஆகிய இவற்றின், நீள் நெறி - பெரிய வழி, தொலைய - கழியும்படி, கடிது ஏகினர் - விரைவாகச் சென்றார்கள்; (எ - று.)

கரும்பாலைகளின் ஒலிமிகுதி கூறியவாற்றால், நாட்டின் நீர்நிலவளங்களை வெளியிட்டபடி. 'ஆலையேய்அழனியகனுடர்' என்ற தொடரில், ஆலையிலிட்ட கரும்புபோல இவர்கள் இராவணனால் இப்போது மிக்க துன்பத்தையனுபவித்தாலும், அக்கரும்பு சர்க்கரையாகி உண்பதற்கு இதமாவதுபோல இவர்கள் தாமும் பிராட்டியைப்பெற்றுத் துஷ்டர்களை யழித்தலாற் பெரியோர் பலர்க்கும் மகிழ்ச்சிவிளைப்ப ரென்னும் உள்ளுறையுவமம் தோன்றுமெனக் கூறுவாருமுளர். அமிழ்து - சீதைக்கே உவமையாகவுமாம். சோலைக்குக் கடல் - குளிர்ச்சி இருட்சி அகற்சிகளால் உவமை. கவினு, உ - சாரியை. கவின் - உவமவுருபாகவுமாம். கானம் - காநநம் என்னும் வடமொழியின் சிதைவு. ஆர் கலி - வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை' 'காலையே கடிதுநெடிதேகினர்' என்றும் பாடமுண்டு.

ஸ்ரீயப்பதியான ஸர்வேஸ்வரன், நித்தியஸூரிகளைப்பார்த்து 'இவர்களைப் போலவே நித்தியகைங்கர்ய நிரதராய் வாழ்கைக்குப் பிராப்தியுண்டாயிருக்கச்செய்தேயும் லீலாவிபூதியிலுள்ள ஜீவவர்க்கம் அதனையிழந்துவருந்துகின்றதே!' என்று திருவுள்ளம் நொந்து வருந்துகிறானென, இப்படலத்துக்கு உள்ளுறைபொருள் கூறுவர்.

முதனூலாகிய வான்மீகத்திலே கிஷ்கிந்தா காண்டத்தின் ப்ரதமஸர்க்கத்திலும் இப்படலத்திற்கூறிய விஷயமே கூறியுள்ளது. (சஉ)

பம்பைப்படலம் முற்றிற்று.

## இரண்டாவது
## மராமரப் படலம்.

வாலியைக் கொல்லும் வல்லமை தனக்கு உள்ளதென்று தெரிவித்துச் சுக்கிரீவனது சங்கையைத் தீர்த்தற்பொருட்டு அவன் விருப்பத்தின்படி இராமபிரான் ஏழு மராமரங்களை ஓர் அம்பெய்து துளைத்த செய்தியைச் சொல்லும் பாகம். மராமரம் - ஸாலவிருக்ஷம்; ஒருவகை ஆச்சாமரம்.

(கசூ - செய்யுள் கொண்ட) இப்படலத்தில், முதல் கூஅ - செய்யுள்கள் அநுமப்படலமென்றும், அடுத்த அச - செய்யுள்கள் நட்புப்படல மென்றும், அப்பால் உரு - செய்யுள்கள் மராமரப் படலமென்றும் சிலபிரதிகளிற் காணப் படுகின்றன. அப்பொழுது, 'அநுமப்படலம்' - அநுமானது படலம்; ஆறும் வேற்றுமைத் தொகை: அநுமான் ஸ்ரீராமலக்ஷ்மணர்களைக் கண்டு பேசிய கதையைச் சொல்லும் படலமென்பது, திரண்டபொருள். அநுமான் - (குழந்தைப்பருவத்தில் இளஞ்சூரியனைக் கனிந்த பழமென்று பிடிக்கப் பாய்ந்த பொழுது அதனை அறிந்து சினந்த இந்திரனது வச்சிராயுதத்தினால் அடிக்கப் பட்டுச் சிதைந்த) கன்னமுடையவன்; அநு - ஹநு: கவுள், கன்னம்: மாந் - வடமொழிப்பெயர்விகுதி. நட்புப்படலம் - இராமபிரானும் சுக்கிரீவனும் சிநேகஞ் செய்து கொண்டதைப்பற்றிக் கூறும் பாகம்.

[இதுவும், அடுத்தகவியும் - இராமலக்ஷ்மணர் வருவதைக்கண்டு சுக்கிரீவன் அஞ்சிக் குகைக்குள் ஓடியதைக் கூறும்.]

க. எய்தினார்சவரிநெடிதேயமால்வரையெளிதி
னொய்தினேறினர தனிநோன்மைசால்கவியரசு
செய்வதோர்கிலனிவர்கடெவ்வராமெனவெருவி
யுய்துநாமெனவிரைவினோடினன்மலைமுழையின்.

(இ - ள்.) எய்தினார் - அவ்வாறு சென்ற ராமலக்ஷ்மணர்கள்,—சவரி நெடிது ஏய - சபரியானவள் பலகாலம் வாசஞ்செய்திருந்த, மால் வரை - பெரிய ருசியமூகபர்வதத்தின் மேல், எளிதின் - சுலபமாகவும், நொய்தின் - விரைவாகவும், ஏறினர் - ஏறிச்சென்றார்கள்; (அப்பொழுது), அதனில் - அம்மலையில் இருந்த, நோன்மை சால் கவி அரசு - பெருந்தன்மை மிக்க குரங்குகட்கு அரசனாகிய சுக்கிரீவ மகாராஜன்,—இவர்கள் தெவ்வர் ஆம் என - 'இவ்விருவரும் (எனக்குப்) பகைவர்கள்' என்று எண்ணி, வெருவி - பயந்து, செய்வது ஓர்கிலன் - செய்ய வேண்டுவது இன்னதென்று அறியாதவனாய், நாம் உய்தும் என - 'நாம் (இப்பொழுது) தப்பிப்பிழைப்போம்' என்று கருதி,—மலை முழையின் - அம்மலையின் குகையொன்றினுள், விரைவின் ஓடினன் - வேகமாய் ஓடினான்; (எ - று.)

இராமலக்ஷ்மணர்கள் ருசியமூகபர்வதத்தின்மேல் விரைந்தேறிவருவதனைக்கண்ட சுக்கிரீவமகாராஜன், வீராசந்தோன்றுகின்ற இவரது தோற்றத்தைக்கண்டு, தனக்குப் பகைவனாகிய வாலியின் பக்ஷத்தைச் சேர்ந்தவர்களிவர்களென நினைத்து அஞ்சி யோடிப் புக்கொளித்தனனென்பதாம்.

சவரி - சபரீ; சபரமென்னும் வேடர் சாதியிற் பிறந்தவள்; இவர், க்ஷத்திரியசாதி ஸ்திரீயினிடம் வைசியசாதி புருஷனுக்குப் பிறந்த பிரதிலோம சாதியர்: தேன்விற்றல் முதலியன, இவரது தொழில். இங்குக்குறித்த சபரியென்பவள், மதங்கமுனிவரது ஆச்சிரமத்தி லிருந்துகொண்டு மதங்கமுனிவரது சீடர்களை உபசரித்துவந்த துறவறம் பூண்ட ஒரு தவப்பெண்: இவள், இராமபிரான் வரப்போவதைத் தனது ஞானக்கண்ணா லுணர்ந்து அப்பிரானுக்கு நிவேதிப்பதற்காக அவ்வாச்சிரமத்திலிருந்த பழங்களைச் சுவைத்தறிந்து தனது தவவலிமையாற் கெடாதபடி சேர்த்துவைத்து இராமலக்ஷ்மணர் எழுந்தருளியவுடன் அவர்கட்கு நிவேதித்து இராமபிரானருளால் தனது பிறப்பையொழித்து முத்தியடைந்தவள். சவரி நெடிது ஏய என்பதற்கு - சபரியினால் விவரமாக வழிகளை யெல்லாம் எடுத்துச்சொல்லி ஏவப்பட்ட என்றுமாம்: "துனைபரித்தேரோன் மைந்தன் இருந்த வத்துளக்கில்குன்றம், நினைவரிதாயற்கொத்த நெறியெலாம் நினைந்து சொன்னாள்" என்றார் ஆரணிய காண்டத்தில். முந்தினபொருளில், 'ஏய'—ஏய்-பகுதி, அ - விகுதி, ய்-இறந்தகால இடைநிலை; பகுதியீற்றுத் தனிக்குறிலைச்சாராத யகரம் யகரம்வரக்கெட்டது - சந்தி. பிந்தினபொருளில், 'ஏய' - ஏவிய என்பதன் மரூஉ.

கவி - கபி என்னும் வடமொழியின் திரிபு. எய்தினார் - பெயர். ஆம் - அசை. உய்தும் நாம் - தனித்தன்மைப்பன்மை. ஒவ்வொருவரும் தம்மை நினைக்கும்போது பன்மையாக நினைத்தல் பெரும்பான்மை யியல்பாதலை நினைத்துக் காண்க. அரசு என்னும் பண்புப் பெயர் - சொல்லால் அஃறிணையாயினும், ஆகுபெயராய்ப் பொருளால் உயர்திணையாதலால், 'ஓடினான்' என்னும் உயர்திணை வினைகொண்டு முடிந்தது. 'நோன்மைகூர்,' 'செய்தியோர் கிலணைனயர் தெவ்வராமென' என்பவை, பாடபேதங்கள். (க)

உ. காலின்மாமதலையிவர்காண்மினோகறவுடைய
வாலியேவலின்வாவினார்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர்நீதியாநினைமினென
மூலமோர்கிலன்மறுகியோடினான்முழையதனின்.

(இ - ள்.) 'காலின் மா மதலை - வாயுவினது பெருமைபொருந்திய குமாரனே! [அநுமானே!] வரி சிலையர் - கட்டமைந்த வில்லையுடையவரும், நீலம் மால் வரை அனையர் - நீலநிறமமைந்த பெரிய மலையைப் போன்றவருமாகிய, இவர் - இவ்விருவரும், கறு உடைய வாலி ஏவலின் - (நம்மிடத்து) வைரமுள்ள வாலியினது கட்டளையினால், வாவினார்கள் தாம் - (நம்மை வருத்துதற்கு) வருகின்றவர்களேயாவர்; காண்மினோ - பார்ப்பாயாக; நீதி ஆ நினைமின் - உண்மையாக ஆலோசிப்பாயாக,' என - என்று சொல்லிக்கொண்டு, மூலம் ஓர்கிலன் - (இவர்கள் வருகின்ற) காரணத்தை ஆலோசியாதவனாய், மறுகி - மனங்கலங்கி, முழையதனின் - குகையினுள்ளே, ஓடினான் - ஓடியொளித்தான், (சுக்கிரீவன்); (எ - று.)

இச்செய்யுள் - 'ஓடினான் மலைமுழையின்' என்று கீழ்ப்பொதுவாகக் கூறியதை அவன் ஓடும்பொழுது இன்னவாறு கூறிக்கொண்டு ஓடினான் என உணர்த்துவதற்காக வந்த அநுவாதம். இவரைக் காணும்போது வாலி

யின் ஏவலினால் எம்மைவருத்துதற்கு வருபவராக எனக்குத் தோன்றுகின்றது; ஆதலால், இவர் யான் நினைத்தபடி வாலியின் பக்கத்தைச் சேர்ந்தவரா? என்பதையும், அவர் அவ்வாறு வாலியைச் சேர்ந்தவராயின் இப்போது நாம் யாது செய்யத்தக்கது? என்பதையும்பற்றி ஆராய்ந்து சொல்வாயாக' என்று அநுமானைக்குறித்துக் கூறிக்கொண்டே சுக்கிரீவன் சென்றனனென்பதாம்.

அநுமான் கேஸரி யென்னும் வாநரராஜனது மனைவியான அஞ்சனா தேவியினிடத்தில் வாயுவினநுக்கிரகத்தால் தோன்றியவனாதலின், 'காலின மாமதலை' எனப்பட்டான். வாலி என்பதற்கு - வாலில் வலியுள்ளவனென்றும், வாலினின்று பிறந்தவனென்றும் பொருள். 'இங்கு வருபவர்யாவரும் பெண்வடிவமடைக' என்று சொல்லப்பட்டிருந்ததொரு தலத்திற் சென்றதனாற் பெண்வடிவமடைந்த ருக்ஷரஜஸ் என்னும் வாநரராஜனது வாலினழகைக் கண்டு காமுற்ற இந்திரனது அநுக்கிரகத்தால் தோன்றியவன் வாலியென்றும், கழுத்தினழகைக் கண்டு காதல்கொண்ட சூரியனது அநுக்கிரகத்தினால் தோன்றியவன் சுக்கிரீவனென்றும் அறிக.

நீலமால்வரையனைய னென்றது - ஸ்ரீராமனது தலைமையை நோக்கி; அன்றி, பெருமானது திருமேனியின் நீலவொளி இளையபெருமான்மீது பட்டு வருதலால் அவரது திருமேனியும் பொன்னொளியடங்கி நீலவொளியுடையதாகக் காணப்பட்டதனால் இவ்வாறு கூறினானெனினும் அமையும்.

மதலை - அண்மைவிளி; ஆதலின், இயல்பு. மதலை காண்மின் - ஒருமையிற் பன்மை மயங்கி வந்த வழுவமைதி. ஓ - அச்சப்பொருள் குறித்தது. தாம் - தேற்றப்பொருள்பட நின்றது. கீழ்க்கவியிலுள்ள 'கவியரசு' என்பதே இக் கவியில் 'ஓடினன்' என்னும் வினைக்கும் எழுவாயென அறிக. 'நீதியாய் நினைதியென, மூலமோராகிலர் மறுகியோடினார் மலை முழையில்' என்பது பாடபேதம். (௨)

[ராமலக்ஷ்மணர்களும் அங்குச் செல்லுமாறு கருதுதல்.]

௩. தாரனீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையைநிகர்
பாரமாமலையினொருபாகமோடுதல்புரிய
வாரமார்பருமதனினுகுமாறுறல்கருதி.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்: குளகமாவது - பலபாடல் ஒருவினை கொண்டு முடிவது; "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும." குளகமல்லாதது, முத்தகமெனப்படும்: "முத்தகச்செய்யுள் தனிநின்றுமுடியும்,"

(இ - ள்.) தாரன் - தாரனையும், நீலனை - நீலனையும், மருவு தாமம் மாருதியை - பொருந்திய ஒளியையுடைய அநுமானையும், முதல் - முதலாகவுள்ள, வீரரோடு - வாநரவீரர்களுடனே, இரவி சுதன் - சூரியனது புத்திரனாகிய சுக்கிரீவன், மேரு மால் வரையை நிகர் பாரம் மா மலையின் ஒரு பாகம் ஓடுதல் புரிய - மகாமேரு பருவதத்தை யொத்த மிகவும் பெரிய அம்மலையினது ஒரு பக்கத்தில் ஓடிப்போய் ஒளிக்க,—ஆரம் மார்பரும் - இரத்தினமாலை

யணிந்த மார்பையுடையவர்களாகிய ராமலக்ஷ்மணர்களும், அதனின் - அம்மலை யில், ஆகும் ஆறு உறல் - (சீதையைத்தேடிக் கண்டுபிடிப்பதற்கு) ஏற்ற நல்ல உபாயம் நேருந்தன்மையை, கருதி - எண்ணி, (எ - று.)—'கருதி' என்பது, அடுத்த கவியில் 'புரிஞர்' எனபதனோடு முடியும்.

சுக்கிரீவன் ராமலக்ஷ்மணர்களை வாலியைச் சேர்ந்தவரென மயங்கித் தனது பரிவாரத்துடன் மலையின் ஒரு பக்கத்திற் பதுங்கியிருக்க, அச்சுக்கிரீ வனைக் காணவேணுமென்றே செல்லுகின்ற இராமலக்ஷ்மணர்கள அங்குஞ் சென்றனரென்க.

தாமம் - ஞானவொளி. இனி, இந்திரன் வச்சிராயுதத்தினால் அனுமானை யடித்தபொழுது சினங்கொண்ட வாயுவை உகப்பிக்குமாறு பல தேவர்களும் பல வரங்களைக் கொடுத்த சமயத்தில் இந்திரன் பொற்றாமரை மலர்மாலையை இவனுக்கு அளித்தனனாதலின், பொற்றாமரை மலர்மாலையை யணிந்த எனறு மாம். மாருதி என்பதற்கு - வாயுவின் குமாரனென்று பொருள்; தத்திதாந்த நாமம். மாருதன - வாயு. அநுமான் வாயுபுத்திர னெனபதையும், சுக்கிரீவன் சூரிய புத்திரனென்பதையும் பாலகாண்டத்தில் "வாயுமற் றெனதுகூறு மாருதி யெனலும்," "இரவிமற் றெனது கூறங் கவறகிலோயவனென் றோத" என்றவற்றாலும் அறிக. ஆரமார்பர் - சந்தனமணிந்த மார்பரென்றுமாம். 'ஆரமார்பா' எனறது, முன்னைய நிலையைக் கருதி. கீழ்க் கபந்தன் இராம பிரானாற் கொல்லப்பட்டுக் கந்தர்வருபமடைந்து செல்லும்பொழுது "தாயினு முயிர்க்கு நல்குஞ் சவரியைத தலைப்பட் டனறு, ளேயதோர் நெறியினெய்தி யிரலையின குனறமேறி," "கதிரவன சிறுவனுப கனகவாணிறத்தினானை, யெதிரெதிர் தழுவி நட்பி னினிதமர்க் தவனி னீண்ட, வெதிரபொருக் தோளினானை நாடுதல் விழுமிது" என்று சொன்னதனால், 'அதனி னாகு மாறுறல் கருதி' என்றார். இனி, அம்மலையிலுள்ள வழியிலே செல்வதைக் கருதி எனறுமாம். 'தாரனோதகைய னளனீலன மாருதி' என்பதும் பாடம்.

[இராமலக்ஷ்மணர் வாலியைச் சேர்ந்தவரல்லரென்று
சிலர் சுக்கிரீவனுக்கு அறிவிக்க, அனுமான் கூறத்தொடங்குத '

௪. மானைநாடுதல்புரிஞர்வாலியேவலின்வருத
லானவாறலர்மறுகியாவிசோர்நிலையரென
வேனைவானரர்சிலருமேகிமாமுழையினமுழு
ஞானநாதரையறிவிஞடிமாருதிமொழியும்.

(இ - ள்.) மானை நாடுதல் புரிஞர் - பிராட்டியைத்தேடுதல் செய்பவர்க ளானார்கள்; (அங்ஙனமாக), ஏனை வானரா சிலரும் - மற்றைச் சில வானரர் களும, மாமுழையில் - பெரிய அக்குகையினுள்ளே, ஏகி - சென்று, '(இவர் கள்), வாலி ஏவலின - வாலியின் கட்டளையால், வருதல் ஆன ஆறு அலர் - வருதல் பொருந்தியவர்களல்லா; (ஏனென்றால்), மறுகி - மனங்கலங்கி, ஆவி சோர் - உயிர் தளாகின்ற, நிலையர் - நிலைமையையுடையவர்,' என - என்று (சுக்கிரீவன் முதலானார்க்குச்) சொல்ல, (அவ்வளவில்),—மாருதி - அநுமான், முழு ஞானம் நாதரை - நிறைந்த தத்துவஞானத்துக்குத் தலைவர்களாகிய ராம

லக்ஷ்மணர்களை, அறிவின் நாடி - (தனது) ஞானத்தால் ஆலோசித்து, மொழியும் - சொல்வான், (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

ராம லக்ஷ்மணர் சீதையைத் தேடிக்கொண்டே அங்குவருவதைக் கண்ட சில வாநரவீரர்கள் அவரது வடிவுசெயல்களைக் கண்டு வாலியைச் சேர்ந்தவரல்லரென ஊகித்துத் தெரிவிக்க, அநுமான் அப்போது கூறுவானாயினன்.

இனி, இச்செய்யுளுக்கு, (ராமலக்ஷ்மணர்) மானைநாடுதல் புரிஞர்:(துணிவு கொண்டு வெளியிலிருந்த)எனைவானரர் சிலரும் (அப்போது அஞ்சி) மாமுழையின், ஏகி - ஏக, மாருதி முழுஞானநாதரை அறிவின் நாடி, 'வாலியேவலின் வருதல் ஆனவாறு அலர்; (ஏனெனில்) மறுகி ஆவிசோர்கிலையர்' என்று கூறி, (பின்னும்) கூறுவானுபினு னெனப் பொருள் கூறலுமாம், இவ்வுரை-எல்லாரும் கலங்கி நின்ற சமயத்தில் அநுமான தனது அறிவினுற் சுக்கிரீவனைத் தேற்றினுனெனக கூறும முதனூலுக்கு ஒக்கும். முழுஞானநாதர் - தத்துவ ஞானத்தால் அறியப்படுபவர் என்று கருத்து. முழுஞானம - பூர்ண ஞானம்.

மான் - மான் பேடைபோன்ற பார்வையையுடைய சீதைக்கு உவம வாகுபெயர். புரிஞா - பலபாறகுறிப்புமுற்று. வாநர வென்ற வடசொல்-ஏறக்குறைய மனிதர் போன்றவரெனக காரணப்பொருள்படும. (௪)

[அநுமான், அஞ்சிய வாநரர்களைத் தேற்றுதல்.]

ரு. அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞசழியமைதி
வெவவிடத்தினைமறுகுதேவர்தானவர்வெருவ
றவவிடத்தனியருளுதாழ்சடைக்கடவுளென
விவ்விடத்தினிதிருமினஞ்சலென்றிடையுதவி.

இதுவும, அடுத்த கவியும் - குளகம.

(இ - ள்.) அ இடத்து - அச்சமயததில், அவர் - அவவாநரர்கள், மறுகி - (மனந்தெளியாமற) கலங்கி, அஞ்சி - பயந்து, நெஞ்சு அழி அமைதி - மன வுறுதி [தைரியம] கெட்டு நினற சமயத்தில்,—(அநுமான்), வெம் விடத்தினை - (திருப்பாறகடல் கடைந்த காலதது அதனினினறு எழுந்த) கொடிய ஹாலாஹலவிஷத்தைப் பார்த்து, மறுகு - மனந்திகைத்த, தேவர் - தேவர்களும், தானவர் - அசுரர்களும், வெருவல - அஞ்சுதல், தவவிட - நீங்கும்படி, தனி அருளு - (தான்) தனியே (அவவிஷத்தை உண்டு) கிருபை செய்த, தாழ் சடை கடவுள் என - தாழ்ந்து தொங்குகின்ற சடையையுடைய உருத்திரமூர்த்திபோல,—(வாநரர்களை நோக்கி), 'இ இடத்து இனிது இருமின் - இவவிடத்திலே நீங்கள் சுகமாயிருங்கள: அஞ்சல் - பயப்படவேண்டா,' என்று - என்று சொல்லி, இடை உதவி - அப்பொழுது தேறுதல் கூறி, (எ - று.)—'குறுகி' என்று அடுத்த கவியோடு தொடரும.

சுக்கிரீவன் முதலியோா தேவாம்சமாதலாலும், அநுமான் ருத்திராம்சமாதலாலும், சுககிரீவன முதலியோரை அநுமான் தேற்றியதற்கு - தேவர்களைப் பரமசிவன தேற்றியதை உவமைகூறினுர். அநுமான ருத்திராம்சமென்

பதை, பாலகாண்டத்தில் "புராரி மற்றியானே வாத, சேயெனப் புகன்றான்" என்றதனு லறிக. 'தானவர்தவவிட' என்றது, உவமையை நிறைத்தற்காக வன்று: அக்கனிதயின இயற்கை பற்றியாம். கடலிற்புக்கொளித்த தேவர் களின் செல்வத்தை மீளவும் பெறுதற்பொருட்டுத் திருப்பாற்கடலைத் தேவா சுரர்கள் கடைந்த சமயத்தில் அதனினின்று யாவரும் அஞ்சி நடுங்கி யிரியும் படி யெழுந்ததொரு ஹாலாஹலமென்ற கொடுவிஷத்தைப் பரமசிவன் உட் கொண்டு கண்டத்திலடக்கிக் காத்தனனென அறிக.

முதலடி - முற்றுமோனை. தேவர்-எப்போதும் மகிழ்ந்து நிற்பவரெனப் பொருள்படுங் காரணக்குறி. தாநவர் - (காசியபமுனிவரது மனைவியருள்) தநு வென்பவளது சந்ததியாரெனப்பொருள்படும் வடமொழித்தத்திதாந்தநாமம். அஞ்சல் -'அல்' ஈற்று எதிர்மறை வியங்கோள். "அச்சக்கிளவிக் கைந்து மிரண்டும், எச்சமிலவே பொருள்வயினான" என்பவாதலால், 'விடத்தினை மறுகு' என்றார்; 'பழியை யஞ்சி' என்றாற்போல. 'விடத்தினின்' என்ற பாடத்திற்கு - விடத்தினாலென்று பொருள். 'அஞ்சி நெஞ்சழியமதி,' 'வெருவுதவவிடததளியருளு' என்று சில பிரதிகள். (ரு)

[அநுமான் மாணவவடிவத்தோடு ராமலக்ஷ்மணரை யணுகி அவரைப் பற்றி ஆலோசிக்கத் தொடங்குதல்.]

௬. அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொருமாணவப்படிவமொடு
வெஞ்சினதொழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையநின்றுகற்பினினினையும்.

(இ - ள்.) அஞ்சனைக்கு ஒரு சிறுவன் - அஞ்சநாதேவிக்கு ஒப்பற்ற குமாரனாகிய அநுமான்,—ஒரு மாணவம் படிவமொடு - ஒரு பிரமசாரி ரூபத் தோடு, அஞ்சனம் கிரி அனைய மஞ்சனை குறுகி - நீலமலைபோன்ற (சக்கர வர்த்தித்) திருமகனைச் சமீபித்து, அயல் மறைய நின்று - அருகில் மறைவாக இருந்து.—(இவர்களைக் குறித்து), 'வெம் சினம் தொழிலர் - (இவர்கள்) கொடிய கோபத்தோடு கூடிய தொழிலையுடையவர்களும், தவம் மெய்யர் - தவத்துக்கு உரிய வேடம்பூண்டவர்களும, கை சிலையர் - கையில் வில்லேந்தி யவர்களுமா யிருக்கின்றார்கள,' என - என்று, நெஞ்சு அயிர்த்து - மனத்திற் சந்தேகித்து, கற்பினில் - (தனது) கல்வித்திறத்தினால், நினையும் - (அவர்க ளைப்பற்றி) ஆலோசிப்பானாயினன்; (எ - று.)—அதனை, மேல் நான்கு கவிக ளாற் கூறுகின்றார்.

அநுமான் சுக்கிரீவனுக்கு ஒற்றனாய்த் தனது இயற்கை வடிவத்தை யொழித்து மாணவக்கோலத்துடன் நின்று அவ்விராமலக்ஷ்மணரது தன மையை ஆராய்வானாயின னென்பதாம். பிக்ஷுகவடிவத்துடன் சென்றதாக முதனூலிற் கூறியுள்ளது. ஒற்றனாய்ப்போகின்றனனாதலின், வேற்று வடிவத்துடன் சென்றன னெனக. முகக்குறிப்பினால், சினத்தொழில ரென்று கருதினன். சடைமுடியும் மரவுரியுமாகிய தவவேஷமும், வில்

லும் அம்பும் முதலிய ஆயுதங்களைத் தரித்தலாகிய ராஜவேஷமும் ஒன்றாக் கொன்று ஒவ்வாததனால், நெஞ்சு அயிர்த்தானென்க.

'அஞ்சனக்கிரியனையமஞ்சனைக்குறுகி' என்றது, லக்ஷ்மணனைக்குறுகிய தற்கும் உபலக்ஷணம். மஞ்சன்-மைந்தன் என்பதன் போலி. மாணவகன்-மாணவகனென்னும் வடசொல்லின் விகாரம் கற்பு தொழிற்பெயர்; பு -விகுதி.'மஞ்சனைக்குறுகவொரு' என்றும், 'நின்றுகற்பனைநினையும்' என்றும் பாடமுள.

[இதுமுதல் நான்கு கவிகள் - அநுமானது ஆலோசனை.]

ஏ. தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்கரரிவரை
யாவரொப்பவருலகின்யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமைதேர்வதெக்கிழமைகொடு.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'இவர்கள்,—தேவருக்கு எல்லாத் தேவர்கட்கும், ஒரு தலைவர் ஆம் - ஒப்பற்ற தலைவர்களாகிய, முதல் - முதன்மையான, தேவர் - பிரம விஷ்ணு ருத்திரமூர்த்திகள்,' எனின் - என்று ஆலோசித்தாலோ, மூவர் - (அம்மூர்த்திகள்) மூன்றுபேராவர்: இவர் இருவர் - இவர்களோவென்றால் இரண்டுபேராயிருக்கின்றார்கள்; (அன்றியும்), மூரி வில் கரர்-வலிமைபொருந்திய வில்லைத்தாங்கிய கையையுடையவராயிருக்கின்றார்கள்: இவரை - இவர்களை, ஒப்பவர் - ஒக்குந்தன்மை யுள்ளவர்கள், உலகின் - எவ்வுலகத்தில்தான், யாவர் - யார் இருக்கின்றனர்? இவர்க்கு அரிய பொருள் - இவர்கட்குச் செய்வதற்கு அருமையான காரியந்தான், யாது - யாது உளது? இவர் நிலைமை - இவர்களின் தன்மையை, கேவலத்து - எளிதாக, தேர்வது - ஆராயத்தொடங்குவது, எ கிழமைகொடு - எந்த விதத்தால்? (எ - று.)

இவரை ஒப்பார் எவரு மில்லை; இவருக்கரிய தொன்றுமில்லை யென்றபடி. இச்செய்யுளில் முதல் மூர்த்திகட்கும் ராமலக்ஷ்மணர்கட்கும் வேற்றுமை கூறியது, வேற்றுமையணி. இவர் மூரிவிற்கரரென்றது - அத்திரிமூர்த்திகள் பிநாகசூலங்களையும், ஐம்படைகளையும், சொல்லையுந் தாங்கியவராதலால்; "சூலமுந் திகிரியுஞ் சொல்லுந் தாங்கிய" என்றது காண்க. யாவர், யாது என்பவற்றில், யாவினு இன்மை குறித்தது. மற்று - வினைமாற்று. (எ)

அ. சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமாலி
ைனொந்தயர்த்தவரனையர்நோவுறச்சிறியரல
ரந்தரத்தமரரலர்மானிடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொருடேடுதற்கொருநிலையர்.

(இ - ள்.) (இவர்கள்), சிந்தையில் - மனத்தில், சிறிது துயர் சேர்வுற - சிறிது துன்பம் வந்தடைய, தெருமாலின் - அத்துன்பத்தினால், நொந்து - மனம் வருந்தி, அயர்த்தவர் - சோர்ந்தவர்களை, அனையர் - ஒத்திருக்கின்றார்கள்; நோவு உற - (அவ்வாறு) எளிதில் வருத்தமடைதற்கு, சிறியர் அலர் - எளியவர்க ளல்லா ; அந்தரத்து அமரர் அலர் - மேலுலகத்திலுள்ள தேவர்

கனோவென்றால் அல்லர்; மானிடர் படிவர் - மனிதர்களின் உருவமுள்ளார்; மயர் சிந்தனைக்கு உரிய பொருள் - மயங்கத்தக்க மனத்துக்கு இசைந்ததொரு வஸ்துவை, தேடுதற்கு - தேடுதற்பொருட்டு, ஒரு நிலையர் - ஒருகருத்தையே உடையவர்களாயிருக்கின்றனர்; (எ - று.)

அமரரலர் மானிடப்படிவ ரென்று அறிந்தது - கண்ணிமைத்தல், கால் நிலந்தோய்தல், வியர்நீரரும்புதல் முதலிய குறிகளால். தெருமரல், தெருமா - பகுதி. மயர் சிந்தனை - வினைத்தொகை. அமரர் என்பதற்கு - மரணமில்லாதவரென்றும், மாநுஷர் என்பதற்கு - (காசியபமுனிவரது மனைவியரில்) மனுவின் வழித் தோன்றிய மக்களென்றும் பொருள். மானிடர்=மாநுஷர்: வடசொற் சிதைவு. முதலடி - முற்றுமோனை. 'மானிடப்படிவமவர், சிந்தனைக்கரியபொருணேடுதற்குறுநிலையர்' என்ற பாடமும் பொருந்தும். (அ)

கூ. தருமமுந்தகவுமிவர்தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதோர்பொருள்கருதியன்றதுகருதி
னருமருந்தனையதிடையழிவுவந்துளததனை
யிருமருங்கினுநெடிதுதுருவுகின்றனரிவர்கள்.

(இ - ள்.) இவர் - இவர்கள்,—தருமமும் தகவும் - தருமத்தையும் மற்றை நல்லொழுக்கத்தையுமே, தனம் எனும் தகையர் - (தமக்குச்) செல்வமென்று எண்ணுகின்ற தன்மையுடையவர்கள்; இவர் கருமமும் - இவர்கள் இங்குவந்த காரியமும், பிறிது ஓர்பொருள் கருதி அன்று வேறொரு காரியத்தைப்பற்றியன்று; அது கருதின் - அக்காரியம் என்னவென்று ஆலோசித்துப் பார்க்குமிடத்து,—இவர்கள்—, அரு மருந்து அனையது - கிடைத்தற்கரிய தேவாமிருதத்துக்கு ஒப்பானதும், இடை அழிவு வந்து உளது அதனை - நடுவில் நீங்கிப் போய்விட்டதுமாகிய தொரு பொருளை, இரு மருங்கினும் - இரண்டுபக்கங்களிலும், நெடிது-மிகுதியாக, துருவுகின்றனர் - தேடுகின்றார்கள்; (எ - று.)

அநுமான் சூரியனிடத்துச் சகலசாஸ்திரங்களையும் ஓதியுணர்ந்து நவவியாகரணபண்டிதனாய் அறிவினால் மிகச்சிறந்தவனாயிருத்தலின், அவ்விராமலக்ஷ்மணரது முகக்குறியைக்கண்டே அவர்கள் தன்மையனைத்தையும் உள்ளபடி ஊகித்தறிந்தன னென்க.

'இவர்தனம்' என்பதை ஆறும்வேற்றுமைத்தொகையாக்கொண்டு, தங்களுக்குரியபொருளாகத் தருமத்தையும் நல்லொழுக்கத்தையுங் கொண்டவரெனக் கூறுவாரு முளர். நரை திரை மூப்புச் சாக்காடு என்னும் இவற்றை நீங்குதற்கு அமிருதம் மருந்துபோலிருத்தலின், அது 'மருந்து' எனப்படும். முதலடி - முற்றுமோனை. இரு மருங்கு - வலமும், இடமும்; அன்றி. முன்னும் பின்னும். 'தருமமுந்தகவுமிவை' என்ற பாடமும் பொருந்தும். தகவு - தகுதி; அறிவும், அருளும், நீதியுமாம். (கூ)

கo. கதமெனும் பொருண்மையிலர் கருணையின் கடலனைய
ரிதமெனும் பொருளலதொ ரியல்புணர்க் திலரிவர்கள்
சதமனஞ் சுறுநிலையர் தருமனஞ் சுறுசரிதர்
மதனனஞ் சுறுவடிவர் மறலியஞ் சுறுவிறலர்.

(இ - ள்.) இவர்கள்—, சுதம் எனும் பொருண்மை இலர் - கோபமென்னும் பொருளின் தன்மையு மில்லாதவர்கள்; கருணையின் கடல் அனையர் - அருளுக்குக் கடலை யொத்தவர்கள்; இதம் எனும் பொருள் அலது - நன்மையென்னும் பொருளை யல்லாமல், ஓர் இயல்பு - வேறொருபொருளை [தீமையை], உணர்ந்திலர் - பேரு மறியாதவர்கள்; சதமன் - இந்திரனும், அஞ்சுறு - அஞ்சத்தக்க, நிலையர் - கம்பீரமான தோற்றமுள்ளவர்கள்; தருமன் - தருமதேவனும், அஞ்சுறு - அஞ்சத்தக்க, சரிதர் - நல்லொழுக்க முள்ளவர்கள்; மதனன் - மன்மதனும், அஞ்சுறு - அஞ்சத்தக்க, வடிவர் - திருமேனியழகுள்ள வர்கள்; மறலி - யமனும், அஞ்சுறு - அஞ்சத்தக்க, விறலர் - வல்லமை யுள்ள வர்கள்; (எ - று)

காம்பீரியத்தில் இந்திரனிலும், நல்லொழுக்கத்தில் தருமனிலும், வடிவழகில் மன்மதனிலும், வல்லமையில் யமனிலும் இவ்விருவரும் மேம்பட்டவ ரென்றபடி. ("தருமன் தண்ணளியால் தனதீகையால், வருணன் கூற்றுயிர் மாற்றலின் வாமனே, அருமையா லழகிற் கணையைக்கடைத், திருமகன் திருமாநிலமன்னனே" எனச் சிந்தாமணியார் கூறியது, இங்கு ஒப்புநோக்கத் தக்கது.) 'கருணையின் கடலனையர்' என்றது - நீர்க்கெல்லாஞ்சேர்விடமாகுங் கடல்போல, கருணைக்கெல்லாம் இருப்பிடமானவ ரென்றபடி.

வைசேடிகர், பொருள் பண்பு தொழில் சாதி விசேடம் இயைபு என்பவற்றை அறுவகைப்பொரு ளென்றாற்போல, இங்குக் குணம் பொருளெனப் பட்டது; "சினத்தைப் பொருளென்று கொண்டவன்" என்றார் திருவள்ளுவ னாரும். பொருண்மை, மை - தன்மைப்பொருள் விகுதி. 'பொதுமை' என்னும் பாடத்துக்கு - யாவரிடத்தும் பெரும்பான்மையாக வுள்ள குண மென்க. இதம் - ஹிதம். சதமன் - ஶதமகனென்னும் வடமொழியின் விகாரம்; நூறு (அசுவமேத) யாகங்கள் செய்தவ னென்று பொருள். தர்மன் - அறக்கடவுள். மதநன் என்பதற்கு - (ஆண்பெண்களுக்குக்) களிப்பை யுண்டாக்குபவ னென்று பொருள். மறலி - காலக்கடவுள்; மறல் - கொடுமை: அதனை யுடையவன், மறலி. (௧௦)

வேறு.

[அநுமான் இராமலக்ஷ்மணரைக் கண்டு அன்புகொண்டு நிற்றல்.]

௧௧. என்பன பலவு மெண்ணி யிருவரை யெய்த நோக்கி
யன்பின னுருகு கின்ற வுள்ளத்த னார்வத் தோரை
முன்பிரிந் தனையர் தம்மை முன்னினா னென்ன நின்றான்
றன்பெருங் குணத்தாற் றன்னிற் றானல தொப்பி லாதான்.

(இ - ள்.) தன் பெருங் குணத்தால் - தனது சிறந்த குணங்களால், தன்னின் தான் அலது - தனக்குத் தானே ஒப்பாவதல்லாமல், ஒப்பு இலாதான் - வேறு உவமையில்லாதவனான அநுமான்,—என்பன பலவும் எண்ணி - என்று இவ்வாறு பலவிஷயங்களையும் நினைத்துக்கொண்டு, இருவரை எய்த நோக்கி - அவ்விரண்டுவீரரையும் நன்றாகப்பார்த்து,—அன்பினன் - அன்புடையவனும், உருகுகின்ற உள்ளத்தன் - (அந்த அன்புமிகுதியால்) கரைகின்ற மனமுள்ள வனுமாகி,—ஆர்வத்தோரை - அன்பர்களை, முன் பிரிந்து - முன் ஒருகாலத்தில்

விட்டு நீங்கி, அனையர்தம்மை - அவர்களை, முன்னிழந் தன்ன - திரும்பவும் எதிர்ப்பட்டுக் கண்டவன்போல, நின்றான் - (பேரன்புகொண்டு) நின்றான்;()

எய்த நோக்கி - அவர்களுருவம் தன்மனத்திற்பதியும்படி பார்த்து என்ற வாறு; எம்பெருமானைத் தரிசித்தமாத்திரத்தில் எல்லாநன்மைகளும் உண்டாகு மாதல்பற்றி 'எய்தநோக்கி' என்றருமாம். அநுமான் தான் அடிமைத்தொழில் செய்யவேண்டிய திருமாலைக் காணும்போது காரணமின்றி அன்புமிகுமென வாயுதேவன் அநுக்கிரகித்துள்ளபடியே இப்போது இவ்வநுமானுக்குப் பக்தி மேலிட்டதனால், இவனை 'அன்பினன்' என்றார். மிகஅழகிய பொருள்களை முதலிற் காணும்போது, முன்னமேகண்டு பரிசயஞ்செய்யப்பட்டதுபோலத் தோன்றுதல் இயற்கையாதலால், 'ஆர்வத்தோரை முன்பிரிந்தனையர்தம்மை முன்னிழந்தன்ன நின்றான்' என்று சொன்னலாம்; "பண்டிவரைக்கண் டறிவது எவ்வூரில் யாமென்றே பயில்கின்றாளால்" என்ற பெரியார்பாசுரத் தையும், அதன் வியாக்கியானத்தையுங் காண்க. "தானே தனக்குவமன்," "தனக்குவமையில்லாதான்" என்றாற்போல, 'தன்பெருங்குணத்தால் தன்னின் தானலதொப்பிலாதான்' என்றார். 'அன்பினொடுருகுகின்ற', 'முன்னினசொன்ன,' 'தன்னைத்தானலதொப்பிலாதான்' என்ற பாடங்களும் காணப் படுகின்றன.

இதுமுதல் இருபத்தெட்டுக்கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான் காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (கக)

[இதுமுதல் நான்கு கவிகள் - அநுமான் பின்னும் பலவாறு எண்ணுதல்.]

கஉ. தன்கன்றுகண்டவன்னதன்மையதறுகட்பேழ்வாய்
மின்கன்றுமெயிற்றுக்கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேய்கனித்திரங்குகின்ற
வென்கன்றுகின்றதெண்ணிற்பற்பலவிவரையம்மா.

(இ - ள்.) தறுகண் பேழ் வாய் - அஞ்சாமையையும் பெரிய வாயையு முடைய காட்டுயானைகள், தன் கன்று கண்ட அன்ன தன்மைய - (இவர்கள் பக்கல் தம்தமது) கன்றுகளைக் கண்டாற்போன்ற அன்பினையுடையனவாயி ருக்கின்றன; மின் கன்றும் எயிறு - மின்னலும் மெலிதற்குக் காரணமான பற்களையுடைய, கோள் மா - (யானை முதலிய பெருவிலங்குகளி னுயிரையுங்) கொள்ளுந்தன்மையையுடைய சிங்கங்களும், வேங்கை - புலிகளும், என்ற இனைய ஏ உம் - என்ற இவைபோன்ற துஷ்டமிருகங்களும், (தங்கள் கொடுமை குன்றிச் சாந்தமாய்), பின் சென்று -(இவர்கள்) பின்னே தொடர்ந்து சென்று, காதல் கூர - ஆசைமிக,—பேய் - பேய்களும், கனித்து - (இவர்களை) கன்னுமதித்து, இரங்குகின்ற - மனம் இளகுகின்றன; (என்றால்), இவரை - இவர்களைக்குறித்து, பற்பல - பலபலவகையாக, எண்ணில் - மனத்தில் என் கன்றுகின்றது - என்ன நினைத்து வருந்துவது? (எ - று.)

இயற்கையில் மிகக்கொடிய மிருகங்களும் பேய்களும் கண்டமாத்திரத்தில் தமது கொடுமை நீங்கி இரங்குந்தன்மையையுடைய இந்த இளங்குமாரர்களைக்

கண்டு பகைவர்களாகவும் பகைவனது படையாட்களாகவும் நினைத்து அஞ்சுவதற்குக் காரணமில்லையே என்பதாம்.

'மின்கன்றும் எயிறு' என்றது - மின்னலின் ஒளியினும் எயிற்றினொளி மிக்கு விளங்குதலால்; கன்றுதல் - உவமவுருபாகவுமாம். கோண்மா - 'ஹரி' என்னும் வடசொல்லின் பொருள்கொண்டது. எண்ணின் எனப்பிரித்து, ஆலோசிக்குமிடத்து என்றுமாம்.

தன்கன்று கடவன்ன தன்மைய—ஒருமைப்பன்மை மயக்கம். 'கன்று' என்பதற்கும், மேல்வருகின்ற 'கோண்மா,' 'வேங்கை' என்பவற்றிற்கும் ஏற்ப, 'பேழ்வாய்' என்றதற்கு - காட்டுயானையெனப் பொருள் கொள்ளப்பட்டது. பேழ்வாய் - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. இனையவேயும், ஏகாரமும், உம்மையும் - இழிவு சிறப்பு; அவ்விலங்குகளின் கொடுமையைக் கருதிற்று. தன்மைய, இரங்குகின்ற முற்று. அம்மா - ஈற்றசை; வியப்புமாம். 'பேகணித்திரங்குகின்ற, வென்கன்றுகின்ற தெண்ணிப்பற்பலவிசையவம்மா' என்றும், 'பேய்தணித்திரங்குகின்ற, தென்' என்றும் பிரதிபேத முண்டு.

இக்கவிமுதல் மூன்றுகவிகளால், திரியக்குகளும் ஸ்தாவரங்களும் அவர்கள் விஷயத்தில் நடந்துகொண்டமையைக் குறித்து அநுமான் தனக்குள்ளே நினைத்துச் சொன்னமை கூறப்படுகின்றது. இவவாறு அவையெல்லாம் இரங்கித் தம் தமக்கு இயன்ற பணிவிடைகளைச் செய்வதற்குக் காரணம்; உணர்வினுக்குணர்வாகும் முதற்பெருந்தேவனை ஸ்ரீராமபிரான் பக்கல் இயல்பாயெழுந்த பேரன்யாம். (௬௨)

௬௩. மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிமீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
யெயில்வகுத்தெய்துகின்றவிண்முகிற்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர்.

(இ - ள்.) மயில் முதல் பறவை எல்லாம் - மயில் முதலான பறவைகளெல்லாம், மணி நிறத்து இவர்கள் மேனி வெயில் உறற்கு இரங்கி - அழகிய திருநிறத்தையுடைய இவர்களது திருமேனியில் வெயில் படுவதற்காக மனமிரங்கி, மீது ஆ இருஞ் சிறை பந்தர் வீசி - (இவர்கட்கு) மேலாகப் பெரிய சிறகுகளாகிய பந்தலைப் பரப்பி, எயில் வகுத்து - மதில்போலச் சுற்றிலும் வளைத்துக்கொண்டு, எய்துகின்ற - கூடவருகின்றன; விண் முகில் கணங்கள் - ஆகாயத்திலுள்ள மேகங்களின் கூட்டங்கள், எங்கும் - எல்லாவிடத்தும், பயில்வு உற - நெருக்கமாக, திவலை சிந்தி - நீர்த்துளிகளைச் சிந்திக்கொண்டு, பாங்கர் - (இவர்கள்) பக்கத்தில், பயப் பய - மெல்ல மெல்ல, தழுவும் - தொடர்ந்து வருகின்றன. (எ-று)

வழிநடத்தலால் இவர்கட்குத் தாபம் முதலிய வருத்தந் தோன்றாதிருக்குமாறு ஒவ்வொன்றும் தம்மாலியன்றவற்றைச் செய்தன வென்பதாம். முதல் வாக்கியம் - "மேலாப்பாகத் வெயில் காப்பான் வினதை சிறுவன் சிறகென்னும், மேலாய்பின்கீழ் வருவான்" என்ற பெரியார் பாசுரத்தை அடியொற்றியதென்க; ஆரணியகாண்டத்துச் சடாயுகாண்படலத்தில் "ஆவர் நின்

சிறை, விரியுநீழலிற்செல்ல விண்சென்றனன்" என்றது, இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. பெரியோர்கள் செல்லுமிடங்களில் மழைபெய்த லியல்பாதல் குறித்துப் பிந்தின வாக்கியங்கூறின ரென்னலாம்.

பிறவை - பறப்பது; ஐ - வினைமுதற்பொருள்விகுதி. பந்தர், பாங்கர் பந்தல், பாங்கு: ஈற்றுப்போலிகள் பயப்பய . பையப்பைய என்னுங் குறிப்பு வினையெச்ச அடுக்கின் முதற்போலி. 'மணிநிறத்திவர்தம்மேனி,' 'விரிசிறை,' 'இயல்வகுத்திரங்குகின்ற வின்முகிற்கணங்களெங்கும்' என்ற பாடங்களும் ஏற்கும். (௧௩)

௧௪. காயெரிகனலுங்கற்கள்கள்ளுடைமலர்களேபோற்
றூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமரனொடுபுல்லுமெல்லாஞ்
சாய்வுறுந்தாழ்வபோலிங்கிவர்களோதருமமாவார்.

(இ - ள்.) காய் எரி கனலும் கற்கள் - வெயிலிற்காய்கிற நெருப்புப்போலச் சுடுகின்ற பருகைகைக்கற்கள், தூய செம் கமலம் பாதம் தோய் தொறும் - பரிசுத்தமான செந்தாமரைமலர்போன்ற (இவர்களது) திருவடிகள் படும் பொழுதெல்லாம், கள் உடை மலர்களேபோல் - தேனையுடைய மலர்கள் போலவே, குழைந்து தோன்றும் - நெகிழ்ந்து மென்மையாகத்தோன்றுகின்றன; போயின திசைகள் தோறும் - (இவர்கள்) சென்ற இடங்களிலெல்லாம், மரனொடு புல்லும் எல்லாம்-மரங்களும் புற்களுமாகிய இவையெல்லாம், தாழ்வ போல் - (இவர்களை) வணங்குவனபோல, சாய்வுறும் - சாய்ந்து நிற்கின்றன; இங்கு - இக்காரணங்களால், தருமம் ஆவார் - தரும தேவதைகளாவார், இவர்களோ - இவர்கள்தாமோ? (எ - று.)

இவரது திருவடிகள் பட்டமாத்திரத்திற் சுடுகிறகற்களும் மலர்போலக் குளிர்ந்து மென்மையாகின்றன; இவர் திருமேனிகளைக் கண்டபோதே மரம் முதலிய ஓரறிவுடைய அஃறிணைப்பொருள்களும் வணங்குகின்றனவென்று இவரது கடவுட்டன்மையைக்குறித்து அநுமான வியந்தன னென்க.

காய் கற்களென இயையும். 'கள்ளுடை மலர்கள்' என்றது, அன்று மலர்ந்த புதிய மலர்களென்பது தோன்ற நின்றது; மிகவும் மெல்லியன அவையே யாதலால். மரமும் புல்லும் சாய்வதைத் தாழ்வதாகக்கூறியது, தற்குறிப்பேற்றவணி யென்க. மலர்களே, ஏகாரம் - உயர்வுசிறப்போடு தேற்றப்பொருள்பட நின்றது. கமலபாதம் - உவமத்தொகை, வடநூன்முடிபு. இவர்களோ, ஓகாரம் - ஐயப்பொருள் குறித்தது; வியப்புப்பொருள் படுத்தியும் உரைக்கலாம். 'மலரேபோல,' 'சாய்வுறுந்தொழுவ போன்றிங்கு' என்ற பாடங்கள் அமையும். (௧௪)

௧௫. துன்பினைத்துடைத்துமாயத்தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றிமீளாநெறியுய்க்குந்தேவரோதா
மென்பெனக்குருகுகின்றதிவர்கின்றதளவில்காத
லன்பினுக்கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன்.

(இ - ள்.) துன்பினை துடைத்து - பிறவித்துன்பங்களைப் போக்கி, மாயம் தொல் வினைதன்னை நீக்கி - (அத்துன்பங்கட்குக் காரணமான) அவிச்சையினா லுண்டாகின்ற அநாதியான கருமத்தை ஒழித்து, தென் புலத்து அன்றி மீளாநெறி உய்க்கும் - தெற்குத்திக்கிலுள்ள யமலோகத்திலே யல்லாமல் (சென்றவர்கள்) மீண்டு வருதலில்லாத மோக்ஷலோக மார்க்கத்திலே (தம்மை யடைந்தவர்களைச்) செலுத்துகின்ற, தேவரோ தாம் - தேவாதி தேவரான ஸ்ரீமஹாவிஷ்ணுதாமோ இவர்கள்? எனக்கு—, என்பு உருகுகின்றது - (இவர்கள் திறத்தில்) எலும்புங் கரைகின்றது; அளவு இல் காதல் இவாகின்றது - அளவில்லாத பக்தி மேன்மேல் மிகுகின்றது; அன்பினுக்கு - (இவர்கள் விஷயத்தி லுண்டாகின்ற) அன்புக்கு, அவதி இல்லை - எல்லை யில்லை; அடைவு என்கொல் - (இப்படி ஆவதற்குக்) காரணம் யாதோ? அறிதல் தேற்றேன் - அறியமாட்டாதவனா யிருக்கின்றேன் யான்; (எ - று.)

பூர்வத்தில் வாயுபகவான் அநுமானை நோக்கி 'நீ திருமாலுக்கு அடிமை செய்' என்றபொழுது, அம்மாருதி 'யான் திருமாலை எங்ஙனம் அறிவது?' என வினவ, வாயுதேவன் 'எவரைக் கண்டமாத்திரத்தில் காரணமில்லாமல் உனக்கு அளவில்லாத பேரன்பு உண்டாகின்றதோ, அவரையே திருமாலென்று அறி' என்று சொல்லியிருந்ததனால், இவ்வாறு கூறினார்; அதனை, இப்படலத்தின் ௧௧௯, ௧௨௦-ஆங் கவிகளால் நன்கு உணர்க. தனைப் பற்றி வருந் தலைநோய் முதலியனவாகிய ஆத்யாத்மிகமும், புலி முதலிய பிறவுயிர்களால் நிகழும் ஆதிபௌதிகமும், தெய்வத்தால் நேரும் இடி முதலியனவாகிய ஆதிதைவிகமும் என்ற மூன்றும், 'துன்பு' என்றதில் அடங்கும். வினை - சாதியொருமை; சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என்னும் மூவகைக் கருமங்களையுங் குறித்தலால். சஞ்சிதமாவது - ஆன்மாவினாற் சம்பாதிக்கப்பட்டுக் குவிந்து கிடக்கின்ற வினை: பிராரப்தமாவது - ஈட்டப்பட்டவற்றில் இப்போது அனுபவிக்குமாறு உடன்பட்ட வினை: ஆகாமியமாவது - அவ்வாறு அனுபவிக்கு மிடத்துப் புதிதாக ஈட்டப்படும் வினை. அவித்யை-அறியாமை. 'அடைவெனகொல்' என்பதற்கு - அவர்கட்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் யாதோ? என்றும், அவர்கள் இவ்விடத்து வந்தடைதற்குக் காரணம் என்னவோ? என்றும் பொருள் கூறலாம். 'என்புநெக்குருகுகின்றது' என்றும் பாடம். கொல் - ஐயம். (௧௫)

[அநுமான் இராமலக்ஷ்மணரைச் சந்திக்க, இராமன் அவனை விசாரித்தல்.]

௧௬. இவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடுஞ்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனு
மெவ்வழிநீங்கியோய்நீயாரெனவியம்பலுற்றான்.

(இ - ள்.) இ வழி எண்ணி - இவ்விதமாக ஆலோசித்து, செம் வழி உள்ளத்தானும் - நலவழியிற் செல்லுகின்ற மனத்தை யுடையவனான அநுமானும்,—ஆண்டு அ இருவரும் எய்தலோடும் - அவ்விடத்தில் அவ்விரண்டு பேரும் வந்தவளவிலே,—தெரிவுற - (அவர்கள் தன்னைக்) காணும்படி, எதிர்

சென்று எய்தி - (அவர்கட்கு) எதிரிற் போய்ச்சேர்ந்து, 'நுங்கள் வரவு உங்கள்வருகை, கவ்வை இன்று ஆக - துன்பமில்லாத [நல்ல] வரவாகக்கடவது,' என - என்று க்ஷேமம் விசாரிக்க,—கருணையோனும் - கிருபாமூர்த்தியாகிய ஸ்ரீராமனும், 'நீ—, எ வழி நீங்கியோய் - எவவிடத்திலிருந்து வந்தவன்? யார் - யாவன்?' என - என்று கேட்க, இயம்பல் உற்றான் - (அநுமான்) சொல்லத் தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேல் இரண்டுகவிகளாற் கூறுகின்றார்.

அநுமான் தான் இருக்குமிடத்திற்கு நேராக இராமலக்குமணர் வரும்போது அவர்களெதிரிற் சென்று தான் அவர்களை க்ஷேமம் வினவ, ஸ்ரீராமன் அநுமானை வினவினனென்றவாறு. வந்தவர்களைத் தமக்கு உதவும்படி திருமால் தானே வந்ததாகக் கருதினனாதலின், இதுவரையில் மறைந்துநின்ற அநுமான் இப்பொழுது அவர்களெதிரில் வெளிப்படையாக வந்தனனென்க. 'ஆண்டு' என்றது, அநுமான் நின்ற விடத்தை. 'கவ்வையின்றாக நுங்கள் வரவு' என்றது - 'ஸ்வாகதம்' என்னும் வடமொழியின் பொருளை உட்கொண்டது; வந்தவர்களை இவவாறு உசாவுதல், மரபு. எண்ணி எதிர்சென்று என இயையும். நீங்கியோய் - முன்னிலையொருமை யிறந்தகால வினையாலணையும்பெயர். ஈற்றடி, 'வெவ்வகை நீங்கியோய்நீயாரென விளம்பலுற்றான்' என்றும், முதலடியில் 'இவவகையெண்ணி' என்றும் பாடம் காணப்படுகின்றது. (கசு

[அநுமான் கூறிய விடை.]

கஎ. மஞ்செனத்திரண்டகோலமேனியமகளிர்க்கெல்லா
நஞ்செனத்தகைபவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணயான்காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றின்வந்தேனுமமுமனுமனென்றான்.

(இ - ள்.) 'மஞ்சு என திரண்ட - நீர்கொண்ட காளமேகம்போல அமைந்த, கோலம் மேனிய - அழகிய திருமேனி நிறத்தை யுடையவனே!—மகளிர்க்கு எல்லாம் - (காண்கின்ற) பெண்கள் யாவர்க்கும், நஞ்சு என தகைய ஆகி - விஷமென்று சொல்லுதற்கேற்ற தன்மையை யுடையனவாய், நளிர் இரும் பனிக்கு தேம்பா கஞ்சம் ஒத்து - குளிர்ச்சி மிகுந்த பனிக்கு வாடாத செந்தாமரை மலரைப் போன்று, அலர்ந்த - மலர்ந்து விளங்குகின்ற, செய்ய கண்ண - சிவந்த திருக்கண்களை யுடையவனே! யான் - அடியேன், காற்றின் வேந்தற்கு - வாயுபகவானுக்கு, அஞ்சனை வயிற்றின் - அஞ்சனாதேவியின் உதரத்திலே, வந்தேன - பிறந்தவன்; நாமமும் - (எனது) பெயரும், அனுமன் - அநுமான் (என்பர்),' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

நீலமேகம் - பெருமாளினது திருமேனிக்கு நிறத்தினாலும்,குளிர்ச்சியினாலும், கண்டவர் கண்களைக் கவருங் கட்டழகினாலும், உவமை. திருக்கண்கள் தம்மைக் காமுற்றுக் காண்கின்ற மங்கையர்க்கெல்லாம் தாமும் எதிர்நோக்கி இன்பமளியாமல் ஆசைநோயை யுண்டாக்கி மரணாந்தமான வருத்தத்தை மூட்டுதலால், 'மகளிர்க்கெல்லாம் நஞ்செனத் தகையவாகி' என்றார்; "எழுவராவியுண்ணும் இணைக்கூற்றங்கொலோ அறியேன், ஆழியங்கண்ணபிரான்

திருக்கண்கள் கொலோ அறியேன்" என்றார் பெரியாரும். எக்காலத்தும் எப்பொழுதுங் குவியாத தாமரைமலர்களிருந்தால் அவையே ஒருபடியாக இக்கண்களுக்கு உவமையாகக்கூடுமேயன்றி, பகலிலே மலர்ந்து இரவிலே குவிந்து வெயிற் காலத்துமாத்திரமே விகசித்து மற்றைப் பனி மழைக்காலங்களில் வாடிப்போகுமியல்புள்ள சாதாரணமான தாமரைமலர்கள் அவற்றிற்கு உவமையாகச் சொல்லுதற்கு ஏற்றவையல்லவென்பது தோன்ற, 'களிரும் பனிக்குத் தேம்பாக் கஞ்சமொத் தலர்ந்த' எனப்பட்டது; இல்பொருளுவமை; இதனை, வேற்றுமையணி யென்று கூறுவதும் உண்டு. கஞ்சம் - நீரிற்பிறப்பது; கம் - நீர். 'மேனியீர்,' 'கண்ணினீர்,' 'அனுமனென்பேன்' என்ற பாடங்களும் உண்டு. (கஎ)

[இதுவும் அது.]

கஅ. இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப்பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையனேவவினவியவந்தேனென்றா
னெம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான்.

(இ - ள்.) 'இ மலை - இந்த ருசியமூக பருவதத்தில், இருந்து வாழும் - வாழ்ந்துகொண்டிருக்கின்ற, எரி கதிர் செல்வன் பரிதி செம்மலுக்கு - விளங்குகின்ற ஆயிரங் கிரணங்களைத் தனக்குச் செல்வமாக வுடையவனான சூரியபகவானது குமாரனாகிய சுக்கிரீவனுக்கு, ஏவல் செய்வேன் - தொண்டு பூண்டொழுகுபவனாகிய யான்,—தேவ - சுவாமி! அனையன் - அந்தச் சுக்கிரீவன், நும் வரவு நோக்கி விம்மல் உற்று - உங்கள் வருகையைப் பார்த்துக் கலக்கமடைந்து, ஏவ - (விசாரித்துவரும்படி) ஏவியதனால், வினவிய - விசாரித்தற்பொருட்டு, வந்தேன் - இங்கு வந்தேன்,' என்றான்—; (யாவனெனில்), எ மலை குலமும் - எல்லாக்குலபருவதங்களும், தாழ தாழ்வடையும்படி, இசை சுமந்து - கீர்த்தியைத்தாங்கி, எழுந்த - வளர்ந்திருக்கின்ற, தோளான் - தோள்களையுடையவனான அநுமான்; (எ - று.)

மலைக் குலம் - மலைகளின் கூட்ட மென்றுமாம். 'அவை தாழ' என்றது - தோள்கள் அவற்றினும் உயர்ந்தும் வலியனவாயுமிருத்தலால். மகிழ்ச்சியடைந்து என்னும் பொருளும் தோன்ற, 'விம்மலுற்று' என்றார். சூரியபகவானென்று வழங்குதற்கு ஏற்ப 'பரிதிச்செல்வன்' என்றாருமாம்.

இலக்குமணனையுங்கூட்டி 'நும்' எனப்பன்மையாக் கூறினர்; தேவநும் - ஒருமைப்பன்மைமயக்க மென்பாருமுளர். செம்மல் - ஆண்பாற் சிறப்புப் பெயர். வினவிய - செய்யிய என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்.

[இராமபிரான் அநுமானை நற்குணமுடையவனென்று தெளிந்து, இலக்குமணனிடத்துக் கூறத்தொடங்குதல்.]

ககூ. மாற்றமஃதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசின்மைந்தன்
றேற்றமுற்றிவனினூங்குச்செவ்வியோரின்மைதேறி
யாற்றலுநிறைவுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான்.

(இ - ள்.) மாற்றம் அஃது - அந்த வார்த்தையை, உரைத்தலோடும் - (திருவடி) சொன்னவளவில்,—வரி சிலை குரிசில் மைந்தன் - கட்டமைந்த கோதண்டத்தையுடைய தசரத சக்கரவர்த்தியின் திருமகன்,—தேற்றம் உற்று - சற்றே ஆராய்ச்சிசெய்யத் தொடங்கி,—இவனின் ஊங்கு செவ்வியோர் - (இங்குவந்துள்ள) இவனைக்காட்டிலும் மேலாக நற்குணமுள்ளவர்கள், இன்மை - (எவ்வுலகத்திலும் வேறெவரும்) இல்லாமையை, தேறி - தெளிந்து,—'ஆற்றலும் - பராக்கிரமும், நிறைவும் - சற்குணபூர்த்தியும், கல்வி அமைதியும் - சாஸ்திரங்களின் பொருத்தமும், அறிவும் - ஞானமும், என்னும் - என்கிற, வேற்றுமை - வேறுபாடு, இவனோடு - இவனுடனே, இல்லை ஆம் - இல்லையாகும்,' என - என்று எண்ணி,—விளம்பல் உற்றான் - (தம்பியோடு) சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேல் மூன்று கவிகளாற் கூறுகின்றார்.

இவனினும் நற்குணமுடையார் இல்லையென்றும், பராக்கிரமம் முதலிய மேன்மைகளெல்லாம் இவனிடத்தே ஒற்றுமைப்பட்டு நிரம்பிக்கிடக்கின்றனவேயன்றி இவனையல்லாமல் இவ்வுலகத்திற் பராக்கிரமம் முதலியன வேறு இல்லையென்றும் இராமபிரான் குறிப்பால் நிச்சயித்தனனென்க; "கலையினதகலமுங் காட்சிக் கின்பமுஞ், சிலையினதகலமும் வீணைச் செல்வமு, மலையினி னகலியமார்ப னல்லதிவ், வுலகினி லிலையென வொருவ ஞயினான்" என்ற சிந்தாமணிச் செய்யுள் நோக்கத்தக்கது. குரிசில் - ஆண்பாற்சிறப்புப் பெயர். (௧௯)

[இதுமுதல் மூன்று கவிகள் - இராமபிரான் அநுமானைக்குறித்து இலக்குமணனிடத்துக் கூறுவன.]

௨௦. இல்லாதவுலகத்தெங்குமீங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங்காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றேயார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவலானோ.

இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்,) வில் ஆர் தோள் - விற் பொருந்திய தோளையுடைய, இளைய - இளமையுடையவனே [தம்பி]; வீர - வீரனே!—ஈங்கு இவன் - இவ்விடத்தில் [இப்பொழுது] வந்திருக்கின்ற இவன், இசைகள் கூர - கீர்த்தி மிகும்படி, கல்லாத - படியாத, கலையும் - சாஸ்திரங்களும், வேதம் கடலும் - வேதங்களாகிய சமுத்திரமும், உலகத்து எங்கும் - எல்லா வுலகங்களிலும், இல்லாதவே - இல்லாதனவேயாம், என்னும் காட்சி - என்று சொல்லுதற்கேற்ற அறிவு (இவனுக்கு இருத்தல்), சொல்லாலே - இவன் பேசும் வார்த்தையினாலே, தோன்றிற்று அன்றே - வெளிப்பட்டதன்றோ? இ இன் சொல் செல்வன் - இனிய சொற்களையே செல்வமாக வுடையவனான இவன், விரிஞ்சனோ - பிரமதேவனோ? (அன்றி), விடை வலானோ - விருஷபத்தை வாகனமாகக்கொண்டு ஏறி நடத்தவல்ல உருத்திரமூர்த்தியோ? யார்கொல் - யாரோ? ()

இவன் கல்லாத கலையும் வேதமும் உலகத்து இல்லாதவே என்றதனால், சகலவேதாகமங்களையுங் கரைகண்டவன் இவன் என்றபடி. இனி, முதலிரண்

டடிகளுக்கு - தான் இல்லாத உலகத்திலும் எவ்விடத்தும் இவ்வாறே புகழ் மிகும்படி (பிறரால்) கற்கமுடியாத நூல்களும் வேதசாகரமுமாகிய இவற்றினுருவமேயாவன் இவன் என்று சொல்லத்தக்க தோற்றம் எனப் பொருள் கொள்ளுதலுமொன்று. இவன் சகலசாஸ்திரங்களையும், அநந்தமான வேதங்களையுங் கற்றுத் தேர்ந்து புகழ்பெற்ற மகாஞானியென்னுந் தன்மை வார்த்தையால் வெளிப்பட்டதென்றார், கற்றவர்க்குங் கல்லாதவர்க்குமுள்ள வேறுபாடு யாக்கைநயத்தாலன்றி வாக்குநயத்தாலேயே விளங்குமாதலால். வேதத்தைக் கடலென்றது - அளவுபடாமையும், பல்வகைப்பொருளையுமுடைமையும் முதலிய காரணங்களினால். அன்றே - தேற்றம். திரிமூர்த்திகளுள் இராமபிரான் தான் ஸ்ரீமகாவிஷ்ணுவினது திருவவதாரமாதலின், தானன்று என்று விளங்கியதனால், மற்ற இருமூர்த்திகளுள் யாரோவென்று ஐயமுற்றனனென்னலாம் ஞானத்தாற் பிரமனேவென்றும், பராக்கிரமத்தால் உருத்திரனேவென்றுஞ் சங்கித்தான் இவ்வாறாக இராமபிரான் இலக்குமணனிடத்து அநுமனைப் புகழ்ந்து கூறுவது, இவனை அவமதியாது இவனிடத்து மிக்க கௌரவத்தோடும் கருத்தோடும் எப்போதும் பேசவேண்டுமென்று குறிப்பித்தற்குப்போலும். 'கடலுமே' என்ற ஏகாரம், பிரித்தெடுத்து, 'இல்லாத' என்றதனோடு கூட்டப்பட்டது. சொல்லின் செல்வன், இன் - சாரியையுமாம். (உ௦)

உக. மாணியாம்படிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
வாணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற
சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன்.

(இ - ள்.) மைந்த - இளையவனே!—இவன் வடிவம் - இவனது ஸ்வரூபம், மாணி ஆம் படிவம் அன்று - சாதாரணமான பிரமசாரிரூபமன்று; மற்று - பின்னை, 'இ உலகுக்கு எல்லாம் - இந்த லோகங்களுக்கெல்லாம், ஆணி - ஓர் அச்சாணி' என்னல் ஆம் - என்று சொல்லக்கூடிய, ஆற்றற்கு - பராக்கிரமத்திற்கு, ஏற்ற - தக்க, சேண் உயர் பெருமைதன்னை - மிகவும் அதிகமான மகிமையை, (இவனிடத்து உள்ளதாக), சிக்கு அற - சந்தேகமில்லாமல், தெளிந்தேன் - நிச்சயித்தேன்; மெய்ம்மை - அதன் உண்மையை, பின்னர் - பின்பு, காணுதி - (நீயும்) காண்பாய், என்று—, கண்ணன் - ஸ்ரீராமபிரான், தம்பிக்கு - லக்ஷ்மணனுக்கு, கழறி - சொல்லி, (எ - று.)—'கழறி' என்ற வினையெச்சம், மேல் உ௩ - ஆங் கவியில் 'என்றான்' என்பதனோடு முடியும்.

பெரியதேர்க்குச் சக்கரங்கோத்தமரத்தில் அச்சக்கரங்கழலாமற் கடையிற் செருகுகின்ற ஆணி வடிவாற் சிறியதாயிருந்தே பெரியபாரங்களையெல்லாங் கொண்டு செலுத்துகின்ற வலிமையுடையதா யிருத்தல்போல, இவனுருவம் வடிவாற் சிறியதாயிருந்தே பெரிய காரியங்களையெல்லாஞ் செய்து முடிக்கும் வலிமையுடையது; ஆதலால், இவனுருவத்தின் சிறுமையை நோக்கி இகழ்ச்சி செய்யலாகாது; இத்தன்மைத்தான மகிமை, காலம் வரும்போது வெளிப்படும்; அப்பொழுது காணலாம் என்றான். "உருவுகண்டெள்ளாமை வேண்டுமுருள் பெருந்தேர்க், கச்சாணியன்னாருடைத்து" என்றார் திருக்குறளிலும். ஆகவே,

தி இவனது உருவத்தைக் கண்டு அவமதிக்கலாகாதென்றதாயிற்று. இவன் வடிவு அமைந்த ஆணி என்று பிரித்தும் உரைக்கலாம்.

சேண் உயர்-ஒரு பொருட்பன்மொழி. கரியோனென்னும் பொருளதாகிய க்ருஷ்ணன் என்னும் வடமொழி, பிராகிருதமாய்க் கண்ணனெனச் சிதைந்துவந்தது; இது, விஷ்ணுவின் திருநாமங்களுள் ஒன்று: இது, இங்கே அவதாரப்பெயரன்றி வந்த காரணப்பெயர். அன்றி, கவி கிருஷ்ணாவதாரத்திற்குப் பிந்தியவராதலால், 'இருவரும் ஒருவரே' என்ற கொள்கையால் இராமனையே கண்ணனெனக் கூறினா ரென்றலு மொன்று. (௨௧)

௨௨. மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றுச்சுருதியின்றொகுதியாவு
முற்றறிதருமிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியர்மூவர்க்கேயும்பேராற்றலரிதுமன்னோ.

(இ - ள்.) மற்றும் - பின்னும், இ உலகத்து உள்ள - இந்தப் பூலோகத்திலுள்ள, முனிவர்-இருடிகளுள்ளும், வானவர்கள்-(மேலுலகத்திலுள்ள) தேவர்களுள்ளும், இ சொல் திறம் உடையார்-இத்தன்மைத்தான சொல்லின்திறமையுடையவர், ஆர் - யார் இருக்கின்றனர்? [எவருமில்லையன்றோ?] மற்று - மேலும், சுருதியின் தொகுதி யாவும் - வேதங்களின் கூட்டமெல்லாவற்றையும், முற்று அறிதரும் - முழுவதும் [ஐயந்திரிபற] அறிந்த, இ மாணி-இந்தப் பிரமசாரியினது, மொழிக்கு எதிர் - சொல்லுக்கு எதிரில், முதல்வர் ஆய பெற்றியர்-(யாவர்க்கும்) முதல்வரான தன்மையையுடையவர்களாகிய, மூவர்க்கேயும் - திரிமூர்த்திகட்கேயாயினும், பேர் ஆற்றல்—மிக்க வல்லமை, அரிது-அருமையுடையதாகும்; (எ - று.)

இவனது சொல்திறமைக்கு முன்னே மும்மூர்த்திகளின் சொல்திறமையும் இல்லாததாக எண்ணப்படு மென்பதாம். மன், ஓ - ஈற்றசைகள். ஶ்ருதி என்பதற்கு - எழுதாக்கிளவியாய் ஆசார்யசிஷ்ய பரம்பரைக் கிரமப்படி உபதேசமூலமாகக் கேட்கப்பட்டுவருவதென்று அவயவப்பொருள். மூவர் - தொகைக்குறிப்பு. ஏயும், உம்மும் - உயர்வுசிறப்பு.

இச்செய்யுள், சில ஏட்டுப் பிரதிகளில் இல்லை. (௨௨)

[சுக்கிரீவனைக் காட்டவேண்டுமென்று இராமபிரான் அநுமானை நோக்கிக் கூறுதல்.]

௨௩. எவ்வழியிருந்தான்சொன்னகவிக்குலத்தரசன்யாங்க
ளவ்வழியவனைக்காணுமருத்தியாலணுகவந்தே
மிவ்வழிநின்னையுற்றவெமக்குநீயின்சொலன்ன
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான்.

(இ - ள்.) (என்றுத் தம்பிக்குச் சொல்லிப் பின்பு ஸ்ரீராமன் அநுமானை நோக்கி), 'சொன்ன - (உன்னால்) சொல்லப்பட்டது, கவி குலத்து அரசன் - குரங்குகளின் கூட்டத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவன், எ வழி இருந்தான் -

எவ்விடத்தில் இருக்கின்றானோ, அ வழி அவவிடத்தில் (சென்று), அவனை காணும்-அவனைப் பார்க்கவேண்டுமெனகிற, அருத்தியால்-விருப்பத்தால், யாங்கள் - நாங்கள், அணுக வந்தேம் - சமீபமாக வந்தோம்; இ வழி-இவ்விடத்தில், நின்னை உற்ற - உன்னை எதிர்ப்பட்ட, எமக்கு - எங்களுக்கு,—இன் சொல் அன்ன-(உனது) இனிய வார்த்தையைப்போன்ற, செம் வழி உள்ளத்தோனை-சன்மார்க்கத்திற் செல்கின்ற நன்மனத்தையுடைய அவனை, நீ—, தெரிய காட்டுதி-தெரியுமாறு காண்பிப்பாயாக,' என்றான் - என்று சொன்னான்; (எ-று)

சுக்கிரீவனைக் காணவேணுமென்றே யாம் வந்துள்ளோமாதலால், அவனைக் காட்டவேண்டுமென்று அநுமானை இராமபிரான வேண்டினனென்க. மனமும் சொல்லும் ஒத்த தூயவனெனபான், 'இன்சொலன்ன செவ்வழியுள்ளத்தோன்' என்றான். (உ௩)

[அநுமான் கூறிய முகமன்.]

உச. மாதிரப்பொருப்போடோங்கிவரம்பிலாவுலகின்மற்றுப்
பூதரப்புயத்தவீரர்நும்மொக்கும்புனிதர்யாரே
யாதரித்தவனைக்காண்டற்கணுகினிரென்னினன்னான்
றீதவித்தமையச்செய்தசெய்தவச்செல்வநன்றே.

இதுமுதல் நான்கு கவிகள் - அநுமான வார்த்தை.

(இ-ள்) பூதரம் புயத்து வீரர் - பூமியைத் தாங்குகின்ற மலைபோன்ற [உலகத்தைத்தாங்குகின்ற] தோளகளையுடைய வீரர்களே!—மாதிரம் பொருப்போடு ஓங்கி - எட்டுத்திக்கிலும சுற்றிலும் இருக்கின்ற சக்கரவாள பருவதத்தோடு உயர்ந்து, வரம்பு இலா-எல்லையில்லாமற பரந்துகிடக்கின்ற, உலகில் - இந்தப் பூலோகத்திலே, நும் ஒக்கும் - உங்களைப்போன்ற, புனிதர் - பரிசுத்த குணமுடையவர், மற்று யாரே - வேறு யாவர் உளர்? (இப்படி ஒப்பவரில்லாத நீங்கள்) அவனை ஆதரித்து காண்டற்கு அணுகினிர் எனனின் - அச்சுக்கிரீவனிடத்து அன்புபாராட்டி அவனைப் பார்ப்பதற்கென்று சமீபித்துவந்தீர்களென்றால்,—அனனை - அவன, தீது அவித்து - கொடிய ஐம்பொறியை அடக்கி, அமைய - பொருத்தமாக, செய்த—, செய் தவம் செலவம் செவவிய [நல்ல] தவமாகிய செல்வம், நன்றே - மிகுதியும் நன்மையுடையதே; (எ-று.)

என்றது, முற்பிறப்புக்களில் மிக்க தவஞ் செய்திருந்தாலன்றி இப்படிப்பட்ட மகானகளது சேர்க்கை நேரா தென்றவாறு. 'மாதிரப்பொருப்பு' என்றது, பூமியைச் சூழ்ந்துள்ள கடலுக்கு அப்பால் மதில்போலச் சூழ்ந்திருக்கின்ற சக்கரவாளகிரியை. மலை தோள்களுக்கு, வலிமையினாலும் உயர்ச்சியினாலும் மாத்திரமேயன்றி நிலவுலகத்தை நிலைபெறச்செய்தலாலும் உவமையாகுமென்பது தோன்ற, 'பூதரம்' என்னும் பெயராற் கூறினார். வீரர் - அண்மைவிளி. தீது - சாதியொருமை. தீது அவித்து - பாவத்தை யொழித்து என்றுமாம். செய்' தவம் என்பதில், செய் - செம்மையென்னும் பண்புப்பெயரின் விகாரம். செய்தற்குரிய தவமென வினைத்தொகையுமாம. ஈற்றேகாரம்-தேற்றம். 'மற்றிப்பூதரப் புயத்து வீரர்' என்றும், 'அரிதிற்செய்த' என்றும், 'செல்வனன்றே' என்றும் பாடமுண்டு. (உச)

[இதுவும் அது]

உரு. இரவிதன்புதல்வன்றன்னையிந்திரன்புதல்வனென்னும்
பரிவிலன்சிறப்போந்துபருவரற்கொருவனாகி
யருவியங்குன்றினென்னோடிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர்வரையினும்வளர்ந்ததோளீர்.

(இ - ள்.) வரையினும் வளர்ந்த தோளீர் - மலைகளினும் மிகுதியாகப் பருத்து வளர்ந்திருக்கின்ற தோள்களையுடையவர்களே!—இரவிதன் புதல்வன் - சூரியகுமாரனான அச்சுக்கிரீவனை, தன்னை—, இந்திரன் புதல்வன் என்னும் பரிவு இலன் சிற-இந்திரனது குமாரனாகிய வாலியென்கிற சிறிதும் இரக்கமில்லாத தமையன் கோபித்துத் துரத்திவிட்டதனால், பருவரற்கு ஒருவன் ஆகி-துன்பத்தை யனுபவித்தற்குத்தான் ஒருவனே யாய், அருவி அம குன்றின் போந்து நீரருவிகளையுடைய அழகிய இம்மலையிற் புகுந்து, என்னோடு இருந்தனன் - என்னுடனே ஒளித்திருக்கின்றான்; அவன்பால் - அவனிடத்தில், செல்வம் - நல்ல பாக்கியம், வருவது ஓர் அமைவின - வந்து சேர்வதொரு தன்மையினால், வந்தீர் - (நீங்கள் இங்கு) வந்தீர்கள் (எ - று.)

நீங்கள் இப்போது வந்ததனால், இனிச் சுக்கிரீவன் இழந்த செல்வத்தைப் பெறுவனென்பதாம். அவனிடத்துப் பாக்கியம் வந்து சேர்வதொரு தன்மை போல நீவிர் வந்தீரென்றுமாம். இங்கு வாலியைத் தமையனென்னாது 'இந்திரன் புதல்வன' என அன்னியன்போலக் கூறியது, சகோதரர்களாகிய வாலி சுக்கிரீவரிருவரும் மனம் வேறுபட்டதனால். 'பரிவிலன்' என்பதற்கு-அன்பு இல்லாதவனெனப் பொருள்கூறி, சுக்கிரீவன் அன்பத்திற்கே இலக்காயிருத்தல்போல வாலி இன்பத்திற்கே இலக்காயிருக்கின்றானென்ன நயந்தோன்றக் கருத்துக் கூறுவர் ஒருசாரார்; ஊரிலு மிருக்கவொட்டாமற் செய்தன னென்பார், 'போந்து' என்றார்.

'பருவரற்கு ஒருவனாகி' என்றதற்கு - துன்பம் முழுவதையும் தான் ஒருவனே அனுபவிக்கின்றானென்றும், அத்துன்பத்தைப் போக்குதற்கு வேறே யாரும் துணையில்லையென்றுங் கருத்து. 'ஒருவனாகி' என்றது, அவன் மனைவியையும் வாலி அபகரித்துக்கொண்டமை தோன்ற நின்றது. அருவியங்குன்றின் - அருவியையுடைய மலைபோல என உரைத்து, கண்ணீர் பெருக்குகின்ற சுக்கிரீவனுக்கு உவமையாக்குவாரு முளர். வாலியும் அவன் மகனான அங்கதனும் தேவேந்திரனது அம்சமென்பதை, பாலகாண்டத்தில் "தருவுடைக் கடவுள் வேந்தன சாற்றுவா னெனது கூறு, மருவலர்க் கசனியன்ன வாலியு மகனுமென்ன" என்றதனால் அறிக. 'இரவிதன் சிறுவன்' என்றும், 'எம்மோடிருந்தனன' என்றும் பாடமுண்டு. (உரு)

[சரண்மடைந்தவரைக்காத்தல் எல்லாத்தருமங்களினுஞ் சிறந்ததென்றல்.]

உசு. ஓடுங்கலி னுலகம்யாவுமுவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறந்துணிவரன்றே
கொடுங்குலப்பகைஞனாகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினாக்கபயநல்குமதனினுநல்லதுண்டோ.

(இ - ள்.) ஒடுங்கல் இல்-சுருங்குதலில்லாத [மிகப்பரந்த], உலகம் யாவும்-உலகத்திலுள்ள உயிர்களெல்லாம், உவந்தன - விரும்பியவற்றை, உதவி - தானஞ்செய்து,—தொடங்கின தொடங்கியவைகளாகிய, வேள்வி-யாகங்களையும், மற்றும்-தவம் முதலியவற்றையும், முற்ற - நிறைவேற்றும்படி,—தொல் அறம் - பழமையான தருமங்களை, துணிவர் அன்றே - (பெரியோர்) நிச்சயிப்பார்களன்றோ? (அத்தருமங்களுள்), கொடுங் குலம் பகைஞன் ஆகி-குலத்துக்குக் கொடிய பகைவனாய், கொல்லிய வந்த-கொல்லுதற்குவந்த, கூற்றை-யமன் போன்ற பகைவனைக்குறித்து, நடுங்கினர்க்கு - அஞ்சித் தம்மைச் சரணமடைந்தவர்களுக்கு, அபயம் நலகும் அதனினும்-'பயப்படாதே' என்று அருள் செய்வதைப் பார்க்கிலும், நல்லது - மேம்பட்டதொரு தருமம், உண்டோ - உளதோ? (எ - று.)—ஒ - எதிர்மறை.

பலவகைப்பட்ட தானங்கள், யாகங்கள், தவங்கள் முதலிய சகல தருமங்களினும் சரணாகதர்க்கு அபயப்ரதானஞ் செய்தலே மகாதரும மெனபதாம்: ஆகவே, நாங்கள நுமமைச் சரணமடைந்துள்ளோ மாதலால் எம்மைக் காக்க வேண்டுவது நுமது கடனெனபது, குறிப்பெச்சம். 'ஒடுங்கல் இல் உலகம் யாவும் உவந்தன உதவி' என்பதற்கு - விரும்பிக் கேட்கப்படுகின்றனவாகிய சுருஙகுதலில்லாத பூமி முதலியவறறைக் கொடுத்து என றுமாம்.

அறம் - (இன்னது செய்யத்தக்கது என நூல்களால்) வரையறுக்கப்பட்டது எனக் காரணக்குறி; இதன் எதிர்மொழி-மறம்: (செய்யததகாததென்று சாஸ்திரங்களில்) மறுக்கப்பட்டது. வேள்வி-தொழிற்பெயர்; ஓமஞ்செய்தல். கொல்லிய - வினையெச்சம். கூற்று-உவமையாகு பெயர். "அச்சக் கிளவிக்கு ஐந்து மிரண்டும" என்றதனால், 'கூறறை நடுஙகினர்கு' என்றார். 'உலகம் யாவுமுயர்ந்தவர்க்குதவி,' 'உலகம்யாவுமுவந்தனருதவி,' 'துணிவரன்றேல்' என்பன பாடாந்தரம். (உக)

[உம்மைச் சரணமடைவதே எமக்கு எல்லா நன்மைகளையும் உண்டாக்குமென்றல்.]

உஎ. எம்மையேகாத்திரென்றலெளிதரோவிமைப்பிலாதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைந்தவாற்றன்
மும்மையேழுலகங்காக்குமுதல்வர்நீர்முருகற்செவ்வி
யும்மையேபுகல்புக்கேமுக்கிதின்வருமுறுதியுண்டோ.

(இ - ள்) எம்மையே - (எளிய) எங்களை மாத்திரமே, காத்திர்-(நீங்கள்) காப்பீர்கள், என்றல் - என்பது, எளிது அரோ - எளிமையானதன்றோ? (ஏனென்றால்),—நீர் - நீங்கள்,—இமைப்பு இலாதோர்தம்மையே முதலிட்டு-கண்கள் இமைத்தலில்லாத தேவர்களையே முதற்கொண்டு, ஆன்ற - மிகுதியான, சர அசரம்-அசையும் பொருள்களும் அசையாப்பொருள்களும், சமைந்த - நிரம்பிய, ஆற்றல் - வலிமையையுடைய, மும்மை ஏழ் உலகும்-மூன்று வகைப்பட்ட ஏழுலகங்களையும், காக்கும் - காக்கவல்ல, முதல்வர் - தலைவர்; முருகன் செவவி - முருகக்கடவுளைப் போன்ற அழகையும் பராக்கிரமத்தையுமுடைய, உம்மையே - உங்களையே, புகல் புக்கேமுக்கு-சரணமாக அடைந்த

எங்களுக்கு, இதின் - இதைப்பார்க்கிலும், வரும் - மேலாகவருகின்ற, உறுதி - நன்மையைத்தருவது, உண்டோ - வேறுஉளதோ? [இல்லை]; (எ - று.)

அநுமான், தனது பேரறிவினால் இராமலக்ஷ்மணரது ஸ்வரூபத்தையறிந்து, 'நீர் எல்லாவுலகங்களையுங் காக்கும் முழுமுதற்கடவுளின் அம்சமாதலின், நீரே எமக்குப் புகல்; உம்மைச்சரணமடைவதே எமக்கு எல்லாநன்மைகளையும் விளைக்கும்; ஆகவே, யாம் நும்மைச்சரணமடைவோம்' என்று கூறினனென்க.

எழுலகு-மேலேழுலகும் கீழேழுலகும் என இருவகைப்பட்டவை. உலகம் பதினான்காயிருக்க 'மும்மையேழுலகு' என்றது, மேல் கீழ் நடு என்கிற நோக்கத்தால்; அன்றி, கிருதகம் அகிருதகம் கிருதகாகிருதகம் என்று மூன்று வகைப்பட்ட உலகமுமாம்: கிருதகம் - (பிரமனது தினப்பிரளயத்தில் அழிவதனால் மீண்டும் புதிதாகச்)செய்யப்பட்டது; பூமி, பாதாளம் முதலியன. அகிருதகம் - (அவ்வாறு அழியாமலிருத்தலால் மீண்டும்) செய்யப்படாதது; தபோலோக சத்தியலோகங்கள். கிருதகாகிருதகம் (பாதியழிந்தும் பாதி யழியாமலுமிருத்தலால்)செய்யப்பட்டதும் செய்யப்படாததுமாயிருப்பது; சுவர்க்கம் முதலியன. முருகன-முருகையுடையவன்; முருகு-இளமை, தெய்வத்தன்மை, அழகு. எம்மையே, ஏகாரம்-இழிவு சிறப்போடு, பிரிநிலை. தம்மையே-உயர்வு சிறப்பு. உம்மையே - உயர்வுசிறப்போடு, பிரிநிலை. அரோ-இங்குத் தேற்றம். சராசரம்=சர+அசரம்: வடமொழிப்புணர்ச்சி, தீர்க்கசந்தி; இயங்குதிணைப் பொருளும், நிலைதிணைப்பொருளும்: ஜங்கம ஸ்தாவரங்கள். புகல் - புகுதல், சரணமாக அடைதல்: தொழிற்பெயர். புகவேமுகக்கு'- இறந்தகாலத்தன்மைப் பன்மை வினையாலணையும்பெயர்; நான்கனுருபேற்றது: உ-சாரியை. 'காதிரென்றறெளிதரோ' என்பதும், 'முருகச்செவ்வி' என்பதும் பாடம். (உ௭)

[அநுமான் 'நும்மை யாரெனத் தெரிவிப்பது?' என வினவ,
இலக்குமணன் கூறத்தொடங்குதல்.]

உ௮. யாரெனவிளம்புகேனெங்குலத்தலைவற்கும்மை
வீரநீபணிதிரெனறுனமெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மரபுளிவாய்மையாதுஞ்
சோர்விலனிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான்.

(இ - ள்.) 'வீர-வீரனே!—எம் குலம் தலைவர்கு - எங்கள் கூட்டத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவனுக்கு, உம்மை யார் என நான் விளம்புகேன்-உங்களை யாவரென்று யான் சொல்லுவேன்? நீர் பணித்திர் - நீங்கள் சொல்லுங்கள்,' என்றான் - என்றுகேட்டான, மெய்ம்மையின் வேலி போல்வான்-சத்தியமாகிய பயிர் அழியாமைக்குப் போகட்ட வேலிபோல்பவனான அநுமான்; (உடனே), வார் கழல் இளைய வீரன்-நீண்ட வீரக்கழலையுடைய லக்ஷ்மணன், —மரபு உளி - (சொல்லவேண்டிய) முறைமையை ஆலோசித்து, வாய்மை யாதும் சோர்வு இலன் உண்மை சிறிதுந் தவறாதவனாய், நிலைமை எல்லாம் - தங்கள் நிலைமைகளையெல்லாம், தெரிவுற - நன்றாய் விளங்க, சொல்லல் உற்றான் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, மேல் நான்கு கவிகளாற் கூறுகின்றார்.

மெய்ம்மையின் வேலி போல்வான் - மெய்ம்மை தன்னைவிட்டுக் கடவா திருக்கப்பெற்றவன்; எப்போதும் உண்மையையேபேசுபவ னென்றபடி. கழல் - வீரர்கள் தமது வீரத்தன்மைக்கு அறிகுறியாகக் காலிலணிந்துகொள் ளும் ஆபரணம். விளம்புகேன், ககரவொற்றிடை-நிலை-எதிர்காலங் காட்டிற்று. வீர நீர் பணித்திர் ஒருமைப்பன்மைமயக்கம்; வீரத்தன்மையுடைய நீரென்று மாம். 'வீரர்' என்ற பாடங்கொள்ளுதல் சேர். உளி-உ"ளி என்பதன் தொகுத் தல்: இறந்தகாலவினையெச்சம்; இனி, மரபுளி முறையினல் என்றுங்கொள்ள லாம்; முறைப்படியென்றவாறு. 'உளி' என்பது - மூன்றும்வேற்றுமைப் பொருள் படுவதோர் இடைச்சொல்; ஏழனுருபு மூன்றனுருபின் பொருளில் வந்ததெனினுமாம்.

முதலடியில் 'யாரெனவியம்புகேனென்குலத்திறைவற்கும்மை' என் றும், பின்னிரண்டடியில் 'வார்கழலிளையமைந்த மற்றுநம்மரபியாவுஞ், சோர் விலாதுரையென் றையன் சொல்லலுஞ் சொல்லலுற்றான்' என்றும் பாட மோதுவாருமுளர். (உஅ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - இலக்குமணன் கூறிய விடை.]

உகூ. சூரியன்மரபிற்றோன்றிச்சுடர்நெடுநேமியாண்ட
வாரியனமரர்க்காகவசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்னகண்ணனக்கவிகைமன்னன்,

இதுவும், அடுத்த கவியும் - ஒரு தொடர்.

(இ - ள்.) அ கவிகை மன்னன்-அவ் வெண்கொற்றக் குடையையுடைய அரசன்,—சூரியன் மரபில் தோன்றி - சூரிய வம்சத்திற் பிறந்து, சுடர் நெடு நேமி ஆண்ட - விளங்குகின்ற பெரிய ஆஜ்ஞாசக்கரத்தை (உலக முழுவதுஞ் செலுத்தி) அரசாட்சிசெய்த, ஆரியன் - மேம்பட்டவன; அமரர்க்கு ஆக - தேவர்களின்பொருட்டு, அசுரரை - (சம்பரன் முதலிய) அசுரர்களை, ஆவி உண்ட-உயிர்குடித்த [கொன்ற], வீரியன-பராக்கிரமமுடையவன; வேள்வி செய்து - யாகங்களைச்செய்து, விண் உலகோடும் ஆண்ட - தேவலோகத்தை யும் அரசாண்ட, காரியன்-செயலுடையவன்; கருணை அன்ன-அருளே வடிவ மெடுத்தாற் போன்ற, கண்ணன் - கண்ணோட்ட முடையவன்; (எ - று.)

விண்ணுலகோடும் ஆண்ட காரியனென்றது - இந்திரன் முதலிய தேவர் கட்குப் பகைவர்களாகிய சம்பரன் முதலிய அசுரர்களைத் தேவர் வேண்டுகோ ளினாற் போர்செய்து நாசப்படுத்தி அவராற் கைக்கொள்ளப்பட்ட தேவலோக ஸாம்ராஜ்யத்தை இந்திரனுக்குக்கொடுத்து அருள்செய்ததனால்; இதனை "இன் றளிர்க்கற்பகநறுந்தே னிடைதுளிக்கு நிழலிருக்கை யிழந்துபோந்து, நின்ற ளிக்குந் தனிக்குடைக்கீ ழிதினொதுங்கிக் குறையிரந்து நிற்ப நோக்கிக், குன்ற ளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக் குலத்தோடுந் தொலைத்து நீகொண், டன்றளித்த வரசன்றே புரந்தரனின் றாள்கின்ற தரசு" என விசுவாமித்திரர் கூறியவாற்றாலும் அறிக: அன்றியும், தசரதசக்கரவர்த்தி இந்திரனோடொப்ப

அவ்வனது அர்த்தாசனத்தில் வீற்றிருந்தனனெனப் பிறவிடத்துக் கூறியவாற்றாலுமாம். 'செய்யுளாதலின், முதலில் அக்கவிகைமன்னன்' எனச் சுட்டினார். ஆஜ்ஞையைச் சக்கரமென்றும் குடையென்றுஞ் சொல்வது வழக்கம். ஆரியன் என்பதற்கு - பூஜிக்கத்தக்கவனென்றும் அஸுரர் என்பதற்கு - பகைவருயிரைக் கவர்பவரென்றும் தேவர்க்கு மாறானவரென்றும் பொருள். கவிகை - கவிந்திருப்பது; காரணப்பெயர்.

'மரபிற்றோன்றல்,' 'மரபிற்றோன்றும்,' 'அமரர்க்காகி,' 'காரியல்கருணையன்ன' என்பன - பாடாந்தரம். 'சுடர்நெடுநேமியாண்ட' என்றவிடத்து, 'தொல்லுலகாண்டமேலோன்' என்ற பாடமோதுவாருமுளர். (௮௯)

௯௦. புயறருமதத்திண்கோட்டுப்புகர்மலைக்கிறையையூர்ந்து
மயறருமவுணர்யாருமடிதரவரிவிற்கொண்ட
வியறரும்புலமைச்செங்கோன்மனுமுதல்யாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன்.

(இ - ள்) புயல் தரு மதம்-மேகம்போன்ற மதநீர்ப்பெருக்கையும், திண் கோடு - வலிய தந்தங்களையும், புகர் - (முகத்திற்) செம்புள்ளிகளையுமுடைய, மலைக்கு-மலைகள்போன்ற யானைகளுக்கு, இறையை - தலைவனாகிய பட்டத்து அரசயானையை, ஊர்ந்து-ஏறிநடத்தி, மயல் தரும் அவுணர் யாரும் மடிதர வரி வில் கொண்ட - மதமயக்கங் கொண்ட அசுரர்களெல்லாம் அழிந்துபோம்படி கட்டமைந்த வில்லையேந்திப் போர்செய்த, இயல் தரும் புலமை செங்கோல் - இயல்பாகப் பொருந்திய நல்லறிவையும் நீதிதவறாத அரசாட்சியையுமுடைய, மனு முதல்-வைவச்சுவதமனு முதலான, யாரும் எல்லா அரசர்களும், ஒவ்வா-ஒப்பாகமாட்டாத, தயரதன்-தசரதனென்னும் பேருள்ளவன்; கனகம் மாடம்-பொன்மயமான மாளிகைகளையும், தட மதில் பெரிய மதிலையுமுடைய, அயோத்தி - அயோத்தியாநகரத்துக்கு, வேந்தன் - அரசன் ; (எ - று.)

'புயல்தரு' என்பதை மலையோடு இயைத்து, மேகவுவமையைக் கருமை நிறத்துக்காகவுங் கொள்ளலாம். புயல்தரு, தரு உவமவுருபு. 'புகர்மலை' எனவே, யானையென விளங்கிற்று; புகர்மலைக்கிறை - தேவேந்திரனது ஐராவதமாகவுமாம். முதலென்றதனாற் குறிக்கப்பட்டவர் மாந்தாதா, ககுத்ஸ்தன், ஸகரன், பகீரதன் முதலியவர். தயரதன்-தசரதன்; இது தச ரத எனப்பிரிந்து, பத்துத் திக்குக்களிலுஞ் செல்லவல்ல தேருடையவனென்று பொருள்படும்; எங்குந் தடையின்றிச் செல்லவல்லவனென்றதாயிற்று. இது,இந்திரனைச்சிறையிட்ட சம்பராசுரனை வதைத்தற்பொருட்டு அவன்சென்ற இடமெல்லாஞ் சென்றமையால் விளங்கியது. இச்சொல்லுக்கு, தச - பக்ஷி, ரதம் - வாகனம் என்று பொருள்கொள்ளின், கருடவாகனனான திருமாலுக்குப் பெயராகும்; தெய்வப் பெயரை மனிதர்க்கு இடுவது பரிசுத்திகர மென்கிற காரணத்தால், இவ்வரசனுக்கு இப்பெயர் இட்டு வழங்கிய தென்பர் ஒருசாரார். கொண்ட மனு, புலமைச் செங்கோல் மனு எனத் தனித்தனி இயையும். கனகத்தை மதிலோடுங் கூட்டுக. அயோத்தி-அயோத்யா என்னும் வடசொல்லின் விகாரம்: சண்டையிடுதற்குக் கூடாததென்பது பொருள்; அகழி மதில் ஆயுதம் சேனை முதலிய

வற்றால் மிக்க காவலுடையதென்பது கருத்து: இதனால், அந்நகரத்தை ஆண்ட சக்கரவர்த்திகளது ஒப்புயர்வில்லாத வீரத்தன்மை தொனிக்கும். (ரு0)

ரு௧. அன்னவன்சிறுவனுமிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தானுமமுமிராமனென்பா
னிந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியன்யானே.

(இ - ள்) அன்னவன் சிறுவன் ஆம் - அச்சக்கரவர்த்தியினது திருமகனாகிய, இ ஆண்தகை - ஆண்மைக்குணமுள்ள இவன், அன்னை ஏவ - தனது (சிறிய) தாயாகிய கைகேயி கட்டளையிட்டதனால், தன்னுடைய உரிமை செல்வம் - (மூத்தகுமாரனாதலால்) தனக்கே உரியதாகிய அரசாட்சிச் செல்வத்தை, தம்பிக்கு-தனது தம்பி(யும் அவள்பிள்ளையும்) ஆகிய பரதனுக்கு, தகவின் நல்கி - தக்க அன்போடு கொடுத்து, நல் நெடுங் கானம் சேர்ந்தான் - நல்ல பெரிய வனத்தை அடைந்தான்; நாமமும் இராமன் என்பான் - திருநாமமும் இராமனென்று சிறப்பித்துச் சொல்லப்படுபவன்; இ நெடுஞ் சிலை வலானுக்கு - நீண்ட வில்லில்வல்ல இம் மகாவீரனுக்கு, ஏவல் செய் - குற்றேவல்தொழில் செய்கின்ற, அடியன் - தொண்டனாவேன், யான்—; (எ - று.)

இம் மூன்றுபாடல்களாலும் - மகாபல பராக்கிரமசாலியான தசரதசக்கரவர்த்தியினது மூத்தகுமாரனாய்த் திருவவதரித்து இராமனெனப் பெயர்பூண்ட இவன் மாத்ருவாக்யபரிபாலநத்தின் பொருட்டுத் தனது இராச்சியத்தைத் தம்பிக்குக் கொடுத்துவிட்டு இங்குவந்துள்ளான் எனத் தலைமையனையும், அவனது அடியவன் யானெனத் தன்னையும் இளையபெருமாள் உணர்த்தினனாயிற்று. புருஷோத்தமனென்பான், 'ஆண்டகை' என்றான். சீதாகல்யாணத்தின் பிறகு தசரதசக்கரவர்த்தி இராமபிரானுக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய யத்தனிக்கையில், மந்தரைசூழ்ச்சியால் மனங்கலக்கப்பட்ட கைகேயி, தன்கொழுநரான தசரதரை நோக்கி, முன்பு அவர் தனக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்களுக்குப் பயனாகத் தன்மகனை பரதனுக்குப் பட்டங்கட்டவும் கௌசல்யைமகனை இராமனைப் பதினான்குவருடம் வனஞ்செலுத்தவும் வேண்டுமென்றுசொல்லி வற்புறுத்த, அதுகேட்டு வருந்தின தசரதர் சத்தியவாதியாதலால் முன்பு அவட்கு வரங்கொடுத்திருந்த சொல்லைத் தவறமாட்டாமலும், இராமன்பக்கல் தமக்கு உள்ள மிக்க அன்பினால் அவ்வரத்தை நிறைவேற்றுமாறு அவனை வனத்துக்குச் செல்லச் சொல்லவும் மாட்டாமலும் கலங்கி வாய்திறவாதிருக்கிற சமயத்தில், கைகேயி இராமனை வரவழைத்து 'பிள்ளாய்! உங்கள்தந்தை பரதனுக்கு நாடு கொடுத்துப் பதினான்குவருடம் உன்னைக் காடேறப்போகச் சொல்லுகின்றார்' என்று சொல்ல, அச்சொல்லைத் தலைமேற்கொண்டு, அந்த மாற்றாந்தாயின் வார்த்தையையும் அவட்குத் தனது தந்தைகொடுத்திருந்த வரங்களையும் தவறாது நிறைவேற்றி மாத்ருபித்ருவாக்கிய பரிபாலனஞ் செய்தலினிமித்தம் இராமபிரான வனவாசஞ் சென்றனனாதலால், 'அன்னை யேவ' எனப்பட்டது. "பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றே" என்று சொல்லிச் சிறிதும் வெறுப்பில்லாமற் களிப்போடு கொடுத்தமை

தோன்ற 'தகவினல்ல' என்றும், பெருமான் எழுந்தருளிய இடமே எல்லா நாடுகளினும் மேம்பட்டதென்று தான் நினைத்தமை தோன்றக் கானத்துக்கு 'நல்நெடு' என்ற அடைமொழி கொடுத்துங் கூறினான். இனி, கானத்துக்கு நன்மை - அருந்தவஞ்செய்த பெரு முனிவர்களிருத்த லாகவுமாம். ''சிலைவலானுக்குத் தம்பி' என்னாமல் 'அடியன்' என்றது, "பின்னும் பகர்வாள் மகனே யிவன்பின்செல் தம்பி, யென்னும்படியன் றடியாரினிலேவல்செய்தி" என்று தனது தாய் கட்டளையிட்டபடியே தமையனார்க்குச் சகலவித கைங்கரியங்களையுஞ் செய்தலையே தனக்குப் பரமபுருஷார்த்தமாகத் தலைக்கொண்டவனாதலாலென்க. ஆண்டகை - ஆண்மையாகிய தகுதியையுடையவனெனப் பண்புத் தொகையன்மொழி: ஆண்களிலே தகுதியுடையவனென்னவுமாம். நான்காமடிக்கு 'தன்னொடும் பிறந்திங்கேவல் தலைக்கொளு மடியன்யானும்' என்று பாடமோதுவாரு முளர். (௩௧)

இலக்குமணன் வார்த்தைகேட்ட அநுமான் இராமபிரானை வணங்குதல்.

௩௨. என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலிறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லா
மொன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்த்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான்.

(இ - ள்.) என்று - இவ்வாறாக, அவன் தோற்றம் ஆதி - இராமபிரானது திருவவதாரம் முதல், இராவணன் இழைத்த மாயம் புல்தொழில் இறுதி ஆக - இராவணன் செய்த வஞ்சனையாகிய அற்பச்செய்கை [சீதையை அபகரித்துக் கொண்டு போனது] வரையிலும், புகுந்து உள பொருள்கள் எல்லாம் - நடந்துள்ள விருத்தாந்தங்களையெல்லாம், ஒன்றும் ஒழிவு உறாமல் ஆண்டு உணர்த்தினன் - சிறிதுந் தவறாமல் அப்பொழுது (இளையபெருமாள் அனுமானுக்குச்) சொன்னான்; உணர்த்த - (அவ்வாறு) சொல்ல, கேட்டு—, நின்ற - எதிரில் நின்ற, அ காலின் மைந்தன் - அவ் வாயுகுமாரன், நெடிது உவந்து - மிகவும் மகிழ்ச்சியடைந்து, அடியில் - (இராமபிரான்) திருவடிகளில், தாழ்ந்தான - (ஸாஷ்டாங்கமாக) விழுந்து தண்டனிட்டான்; (எ - று.)

இலக்குமணன் கூறியதைக் கேட்கவே, இராமபிரானது சிறந்த குணம் விளங்கியதனால், அப்பிரானை மஹானென்றுகொண்டு அநுமான அவனது திருவடியில் வணங்கினனென்க. அடியில் - ராமலக்ஷ்மணரது திருவடிகளிலென்றுமாம். இராமலக்ஷ்மணர்களைச் சார்ந்ததும், பி[illegible]வடிவங் கொண்டு நின்ற அநுமான் வணங்கினனென முதனூலிற் கூறியுள்ளது. இராவணன் ராவணன்; (பிறரை வருத்துதலாலே உலகமுழுவதையும்) கூச்சலிடும்படி செய்பவன்: அன்றி, (தான் கைலாசாதிகளை எடுத்து நெருக்குண்டு) கூப்பிடுபவன்; இதனால், தனக்கும் பிறர்க்கும் நன்மையறியாத துஷ்டஸ்வபாவமுடையவனென்றபடி: இனி, இச்சொல்லுக்கு - விச்சிரவமுனிவரது குமாரனெனப் பொருள் கூறுதலு முண்டு 'நெடியவனடியில்' எனறும் பாடம். தோற்றம்-'தோன்று'

என்ற பகுதியி னடியாப் பிறந்த தொழிற்பெயர். நெடிது - நெடுமையென்ற பண்பினடியாப்பிறந்த குறிப்புமுற்றெச்சவினையுரி. (௩௨)

இராமனுக்கும் அநுமானுக்கும் சம்பாஷணை.

௩௩. தாழ்தலுந்தகாதசெய்ததென்னை நீதருமமன்றாற்
கேள்விநூன்மறைவலாளாவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்க
ணாழியாயடியேன்றானுமரிக்குலத்தொருவனென்றான்.

(இ - ள்.) தாழ்தலும் - (அநுமான்) வணங்கினவளவில்—(இராமன் அவனை நோக்கி)—'கேள்வி நூல் மறை வலாளா - நூற்கேள்விகளையுடைய வேதங்களை வல்ல பிராமணப் பிரமசாரியே! நீ—, தகாத - தகுதியல்லாத காரியத்தை, செய்தது—[என்னை வணங்கினது], என்னை - என்ன காரணத்தால்? தருமம் அன்று ஆல - (பிராமணன் க்ஷத்திரியனை நமஸ்கரிப்பது) தருமமல்லவே,' என்றனன் - என்று அருளிச்செய்தான்; என்ன - என்று அருளிச்செய்ய, கேட்ட - (அதனைச்) செவியுற்ற, பாழி அம் தட தோள் வீர மாருதி - வலிமையுள்ள அழகிய பெரிய தோள்களையுடைய வீரனாகிய அநுமான், 'பதுமம் செம் கண் ஆழியாய்-செந்தாமரை மலர்போலுந் திருக்கண்களையும் ஆஜ்ஞா சக்கரத்தையுமுடையவனே! அடியேன்தானும்-அடியேனும், அரி குலத்து ஒருவன் - குரங்குச்சாதியில் தோன்றிய ஒருத்தன்,' என்றான் - என்று சொன்னான்: (எ - று.)

'பிராமணப் பிரமசாரியாகிய நீ க்ஷத்திரியனாகிய என்னை வணங்குதல் தகாதே' என்று இராமபிரான் சொல்ல, அநுமான் அஃறிணைப்பொருளிற் சேர்ந்த யான உயர்திணையாகிய நும்மை வணங்குதல் குற்றமன்று என மறுமொழி கூறினனென்பதாம்.

கேள்வியாவது கேட்டற்குரிய நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக்கேட்டல், கற்றவிடத்தே அதனாலாகிய அறிவைத் திடப்படுத்துதலாலும், கல்லாதவிடத்தும் அவ்வறிவை யுண்டாக்குதலாலும், 'கேள்விநூன்மறை வலாளா' எனக் கேள்வியை முற்கூறினான்; ''கற்றிலனாயினுங் கேட்க'' என்றார் திருக்குறளிலும். மறை-சிலர்க்கு மறைக்கப்படுவது; அன்றி, மறைந்தபொருளுடையது. மறைவலாளனென்றது-பிராமணனையே குறிக்கும்; வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிற்கும் உரியவர் அவரேயாதலால். ஆழியாய் என்பதற்கு - சுதரிசனமென்னுஞ் சக்கரத்தை யுடையவனேயென்றும், பாற்கடலிற் பள்ளிகொள்பவனேயென்றும், பிரளயகாலத்திற் பெருங்கடலில் ஆலிலையிற் பள்ளிகொள்பவனே யென்றும் பொருளுரைத்து, அநுமான் தத்வஞ்ஞானமுள்ளவனாதலால் இராமபிரானை விஷ்ணுவின் அவதாரமென்று அறிந்தனனென்றலுமொன்று. தாழ்தலும்-உம்மீற்று இறந்தகாலவினையெச்சம்: விரைவு குறித்தது. தகாத - தகாதனென்பதன் விகாரம். 'கேள்வி' - இனவெதுகை. இனி, 'வாழியமறைவலாளர்', எனப் பாடங்கொள்வாரு முண்டு. (௩௩)

அநுமான் பெரிய வாநரவுருக் கொள்ளுதல்.

௩௪. மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாமபொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குமுவமைபோதாத
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான்.

(இ - ள்.) பின் - உடனே,—தருமத்தின் தனிமை தீர்ப்பான்-தருமத்தினது (கதியில்லாமல்) தனித்திருக்குந் தன்மையைப் போக்குபவனாகிய அவ்வநுமான்,—மின் உரு கொண்ட வில்லோர் வியப்பு உற - மின்னல்போன்ற விளக்கத்தைக்கொண்ட விற்களையுடையவர்களான ராமலக்ஷ்மணர்கள் அதிசயமடையும்படியாகவும், வேதம் நல் நூல் பெருமை ஆம் உரு கொண்டது என்னும் பொருளும் தாழ - வேதங்களாலும் நல்ல சாஸ்திரங்களாலும் பெரிய ரூபத்தைக் கொண்டதென்று சொல்லப்படுகிற பெரும்பொருள்களும் (தனது உருவத்துக்குமுன்னே) தாழ்ந்துபோம்படியாகவும்,—பொன் உரு கொண்ட மேரு - பொன்மயமான வடிவத்தைக் கொண்ட மகாமேரு பருவதம், புயத்திற்கும் - (தனது) தோள்களுக்கும், உவமை போதா - ஒப்பாக மாட்டாதபடி, தன் உரு - தனனுடைய (பெரிய நிஜ) ரூபத்தை, கொண்டு நின்றான் - எடுத்துக்கொண்டு நின்றான்; (எ - று.)

அப்போது தான் முற்கூறியபடி வானரவடிவத்தைக் கொண்டவனே யென்பதைக் காட்டுமாறும், தன்னிடத்தில் அவர்கட்கு மதிப்பு உண்டாகுமாறும், அநுமான் பெரிய வானரவுருக்கொண்டு நின்றான் என்பதாம். எல்லாப் பொருள்களினும் பெரிய ரூபத்தைக் கொண்டான் என்பது, 'வேதநன்னூல் உருக்கொண்டதென்னும் பெருமையாம் பொருளுந் தாழ' என்பதன் கருத்து: இராவணன் முதலிய ராக்ஷசர்களால் நாசஞ்செய்யப்பட்டு அழிந்துபோம் நிலையிலிருந்ததான தருமத்தை அநுமான் இராமனுக்குத் துணையாக இருந்து அவர்களைச் சங்காரஞ்செய்து நிலைநிறுத்துவதனால், 'தருமத்தின் தனிமை தீர்ப்பான்' என்றார்; இனி, தருமத்தினது ஒப்பில்லாத தன்மையைத் தான் போக்குபவன்: அதாவது - வேறு உவமைபெறாத தருமத்துக்குத் தான் உவமையாகச் சொல்லப்படுஞ் சிறப்புடையவ னென்றுமாம். (௩௪)

அநுமான் கொண்ட உருவத்தின் சிறப்பு.

௩௫. கண்டிலனுலகமூன்றுங்காலினாற்கடந்துகொண்ட
புண்டரிகக்கணாழிப்புரவலன்பொலங்கொள்சோதி
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தொன்றோ
பண்டைநூல்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா.

(இ - ள்.) 'உலகம் மூன்றும் - (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும்) மூன்று லோகங்களையும், காலினால்-(தனது) திருவடிகளால், கடந்துகொண்ட - (திரிவிக்கிரமாவதாரத்தில்) அளந்து தனதாக்கிக்கொண்ட, புண்டரிகம் கண் ஆழி புரவலன் - செந்தாமரைமலர் போலுங் கண்களையும் சக்கராயுதத்தையு

முடைய காத்தல்தொழிலில் வல்லவனாகிய (விஷ்ணுவினது அம்சமான) ஸ்ரீராமபிரான், பொலம் கொள் சோதி குண்டலம் வதனம் - பொன்னினாலாகிய பிரகாசத்தையுடைய குண்டலங்களை யணிந்த (அநுமானுடைய) முகத்தை, கண்டிலன்-காணமாட்டாமற் போயினன', என்றால்—, நூண்டை நூல் கதிரோன் சொல்ல படித்தனன்-பழமையான சாஸ்திரங்களை [வியாகரணம் முதலியவற்றை]ச் சூரியபகவான் கற்பிக்க (அவன்பக்கற்) படித்தவனான அநுமானது, படிவம் - விசுவரூபம், கூறல் ஆம் தகைமைத்து ஒன்றோ - (நம்மால்) எடுத்துச் சொல்லக்கூடியதொரு தன்மை யுடையதோ? [அன்று எனறபடி]; (ஏ று.)—அம்மா - வியப்பிடைச்சொல்.

திரிவிக்கிரமாவதாரஞ்செய்த சுவாமியே அநுமானுடைய திருமுகத்தைக் காணமாட்டாதவரெனறால், அவனது விசுவரூபத்தின் மகிமையை எவவாறு எடுததுச்சொல்லுவது? எனக் கவிக்கூற்று. 'காலினாற்கடந்துகொண்ட' என்ற அடைமொழி - மூவுலகங்களையும ஈரடியா லளந்துகொண்ட கடவுளும் என்ற கருததைத் தருதலால், கருத்துடையடைமொழியணி. இருவரும் திருமாலின் திருவவதாரமே யாதலால், இராமபிரானை 'காலினற கடந்துகொண்ட புணடரிகக்கண்புரவலன்' என்றார். புரவலன-காததல்தொழிலில் வல்லவன்; காக்குங கடவுள், 'பொலன்கொள்சோதி' என்றும், 'புலனகொள்சோதி' என்றும், 'சோதிக்குணடலவதனம' என்றும், 'தகைமைத்தன்றால்' என்றும் பாடம்.

காலினாற்கடந்துகொண்ட கதை:—மகாபலிசக்கரவர்த்தி தன்வலிமையாற் சுவர்க்கமுட்பட மூவுலகங்களையும் தனனுடையனவாககி ஆட்சிபுரிய, அரசிழநத தேவர்களின வேணடுகோளினால் திருமால் காசியபமுனிவர்க்கு அதிதியினிடததில் வாமனனாகிய புதல்வனாய்த் தோன்றி, மாவலி யாகஞ்செய்கையில் அவன பககல்சென்று 'மூவடிமண் தா' என்று வேண்டி, சுக்கிராசாரியன தடுக்கவும் கேளாமல் அங்ஙனமே அவன தரப் பெற்று, திரிவிக்கிரமனாய்வளர்ந்து, ஓரடியால் மண்ணையும மற்றோரடியால் விண்ணையும் அளந்து, மூனறாமடியை அவன தலைமேல்வைதது அவனைப் பாதலததிலழுத்தினனெனபதாம். (௩௫)

இராமன் அநுமானைக்குறித்து இலக்குமணனிடத்து வியந்துகூறுதல்.

௩௬. தாட்படாக்கமலமன்னதடங்கணான்றமபிக்கம்மா
கீட்படாநின்றநீக்கிக்கிளர்படாதாகியென்று
நாட்படாமறைகளாலுநவைபடாஞானத்தாலுங்
கோட்படாப்பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான்.

(இ - ள்.) தாள் படா கமலம் அன்ன தட கணான் - காளத்தைவிட்டு நீங்காத செந்தாமரைமலர்போன்ற பெரியகண்களை யுடையவனான இராமன்,- தம்பிக்கு - லக்ஷ்மணனுக்கு, 'ஐய-தம்பி! அம்மா - ஆச்சரியம்! கீட்படா நின்ற நீக்கி-கீழ்மைப்பட்டு நின்ற (ராஜச தாமச) குணங்களைப் போக்கி [சத்தவாத்விக குணமயமானதாய்], கிளர் படாது ஆகி - ஒளி அழியாததாய்,—என்றும் நாள் படா மறைகளாலும் நவை படா ஞானததாலும்-எப்பொழுதும் நாட்செல்லாத வேதங்களாலும் குற்றம் [ஐயந்திரிபுகள்] இல்லாத தத்துவஞானத்தா

னும், கோள் படா - அறியப்படாத, பதமே - மோக்ஷலோகமே, குரங்கு உரு கொண்டது - வாநரவடிவத்தை எடுத்து வந்ததாம்,' என்றான் - என்று (அநுமான்கொண்ட வடிவத்தைப்பற்றி வியந்து) சொன்னான்; (எ - று.)

ஒளிமிகுதியாலும், பெருந்தோற்றத்தாலும், சத்துவகுணமே தலையெடுத்திருத்தலாலும், பரமபதமே குரங்குவடிவங்கொண்டதாமென்று உத்ப்ரேக்ஷித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. "சிறுகாலையிலா நிலையோதிரியா, குறுகா நெடுகா குணம்வேறுபடா, உறுகால்கிளர்பூதமெலாமுகினும், மறுகாநெறி" என்று கீழ் ஆரணியகாண்டத்தில் மோக்ஷலோகத்தின தன்மையைக் கூறியது, இங்குக் கருதத்தக்கது 'நாளத்தைவிட்டு நீங்காத கமலம்' என்றது வாடாமைக்கும், விக்கமெனமைக்கும, கண்ணுக்கினிய தோற்றத்துக்கும ; இனி, நாளத்தினின்று தோன்றாத கமலமென்று உரைத்து, இல்பொருளுவமையாகவுமாம் 'கீட்படாநின்ற நீக்கி' எனபதற்கு - தான எல்லாவுலகங்களிலும மேறபட்டதாயெனறும் பொருள்கொளளலாம். 'என்றும் நாட்படா மறைகள்' எனறதற்கு - தோற்ற வழிவுக ளில்லாமல் அநாதியாய் நித்தியமான வேதங்களெனறு கருதது. அந்தமிலினபத்தழிவில்வீடு சிந்தையும மொழியுஞ் செல்லா நிலைமைத்தாதலால், 'மறைகளாலும் ஞானததாலுங் கோட்படாப் பதம்' எனப்பட்டது. 'கீட்படாநின்ற நீத்தந கீழ்ப்படாதாகி' எனவும், 'கோட்படாப்பதமுமைய' எனவும பாடபேதம. நின்ற - பெயர்.

அம்மா - வியப்பிடைச்சொல். கீழ் எனபதன் ஈற்று ழகரம், வருமொழி முதலில் வல்லினம் வந்துபுணர்ந்தபோது டகரமாத் திரிந்தது; "ஐம்மூனற தாமுடல் வணமை பின வந்திடி லாறுடைந்தாம" எனனும வீரசோழிய விதியைக காண்க. இனி, ஈற்றுழகரத்துககு எதுகைநோககி ளகரம போலியாய், அது டகரமாத திரிந்த தெனினும அமையும். இராமபிரான தமபியை 'ஐய' எனறது - அனபுபறறிய மரபுவழுவமைதி. ஐய - அழகிய என்றுமாம். தம்பிக்கு எனறான என இயையும. குரங்கு+உரு=குரங்குரு: வேறறுமையில் மெனறொடர் வனறொடராயிற்று. (௬௬)

இராமன் அநுமானைப்பெற்றமைக்கு உவந்து சுக்கிரீவனைப்பற்றிப் புனைந்துரைத்தல்.

௬எ. நல்லன நிமித்தமபெற்றேநம்பியைபபெற்றேநம்பா
லில்லையேதுன்பமான தினபமுமெய்திற்றினனும்
வில்லினுயிவனைப்போலாங்கவிக்குலக்குரிசில்வீரன்
சொல்லினுலேவல்செய்வானவனிலைசொல்லப்பாற்றோ.

(இ-ள்.) (பின்னும் இராமபிரான சொல்வானாயினன:—) நமபியை பெற்றேம் இம்மேம்பட்டவனை [அநுமானை]க் கிடைக்கப்பெற்றோம் ; (ஆதலால்), நல்லன நிமித்தம் - மிகவும நல்லனவாகிய உபாயத்தை, பெற்றேம - அடைந்தோம் ; (இனி), நம்பால் - நம்மிடத்து, துனபமானது - துன்பமென்பது, இல்லையே - இல்லாததேயாம; இனபமும் - சுகமும, எய்திற்று-வந்ததேயாம்;

இன்னும் - மேலும், - வில்லினய் - வில்லையுடையவனே! இவனைபோல் ஆம் வீரன் - இவனைப்போன்ற மகாவீரன், கவி குலம குரிசில் சொல்லிறுவ - குரங்குக்கூட்டத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவனது கட்டளையால், ஏவல் செய்வான் - குற்றேவல்தொழிலைச் செய்வான்: (என்றால்), அவன் நிலை - அச்சுக்கிரீவனது நிலைமை, சொல்லல் பாற்றோ - சொல்லத்தக்க தன்மையை யுடையதோ? [அன்றெனறபடி]; (எ - று)

காணப்பட்ட அநுமானைககொண்டு, காணப்படாத மகாராஜனது திறமையை அநுமானப்பிரமாணத்தால் உத்தேசித்தனன் இராமபிரான். 'நம்பியைப் பெற்றேம்' என்பது ஏதுவாய் நின்று 'நல்லனநிமித்தம்பெறறேம்' என்பது முதலியவற்றைச் சமர்த்திப்பது - தொடர்நிலைச் செய்யுட்குறியணி. நல்லன நிமித்தம்பெற்றேம் - நாம் புறப்பட்டபொழுது நல்லசகுனத்தைப்பெற்றிருக்க வேண்டுமென்றுமாம். 'பெற்றேம்' முதலியனவாகப் பன்மையாற்கூறியது - இலக்குமணனையும் உளப்படுத்தியதனு லென்க இல்லையே, ஏகாரம் - தேற்றம். 'எய்திற்று' என இறந்தகாலமாகக் கூறியதும், அத்தேற்றம்பற்றியே. போல் - ஒப்பில்போலி 'கவிகுலக்குரிசில்' என்று பிரதிபேதம். (௩௭)

அநுமான் சுக்கிரீவனை யழைத்துவருமாறு இராமனிடத்து விடைபெற்றுச் செல்லுதல்.

௩௮. என்றக முவந்து கோல முகமலர்ந் தினிதி னின்ற
குன்றுறழ் தோளி னானை நோக்கிபக் குரக்குச் சீயஞ்
சென்றவன் றன்னை யின்னே கொணர்கின்றேன் சிறிது போது
வென்றியி ரிருத்தி ரென்று விடைபெற்று விரைவிற் போனான்.

(இ - ள்.) என்று - என்று சொல்லி, அகம் உவந்து - மனம்மகிழ்ந்து, (அதற்கு ஏறப), கோலம் முகம் மலந்து - அழகிய முகமலாச்சி பெற்று, இனிதின நின்ற-இனிதாக இருந்த, குனறு உறழ் தோளினை நோககி மலைகள் போன்ற திருத்தோளகளையுடையவரான ராமலக்ஷ்மணர்களைப் பாாதது,— அ குரங்கு சீயம் - வானரசிரேஷ்டனான அவவநுமான்,—'(யான), சென்று - போய், அவன் தனனை - அச்சுக்கிரீவனை, இன்னே இப்பொழுதே, கொணர்கினறேன் - அழைதது்க்கொண்டு வருகிறேன; சிறிது போது - சறறுப் பொழுது, வென்றியிர் - வெற்றியையுடையீர்காள்! இருத்திர்-(இங்கே) இருங்கள்', என்று - என்றுசொல்லி, விடை பெற்று - (அவர்களது) அநுமதியைப் பெற்றுக்கொண்டு, விரைவின போனான - சீக்கிரமாகச் சென்றான; (எ - று.)

இராமலக்குமணரைச் சுக்கிரீவனுள்ளவிடத்துக்குத் தோள்களில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு சென்றனன் அநுமா னென முதனூலிற் கூறியுள்ளது. குரக்குச்சீயம் - வாநரஸிம்ஹம். இங்கே, ஸிம்ஹம் என்றது - சிறப்புப்பொருள் குறித்துநின்றது. சீயம்-வடசொற்றிரிபு. வென்றியிர்-வென்றிய ரென்பதன் ஈற்றயல் திரிந்தவிளி. 'நோககியகுரக்குச்சீயம்' என்றுசிலபிரதிகள்.

கடவுளினிடத்துத் தான் எப்போதும் அநுகூலனாயிருக்கவேண்டிய சேதனன் அவவாறு இல்லாமற் பராமுகனாயிருக்க, ஆசாரியன் அச்சேதனனைக்

கடவுளினிடத்துச் சேர்க்குமாறு உபாயஞ்செய்வதை, இப்பகுதிக்கு உள்ளுறை பொருளாகக் கூறுவர். (௩அ)

வேறு.

அநுமான் சுக்கிரீவனைச் சேர்தல்.

௩௯. போனமந் தரமணிப் புயநெடும் புகழினு
னானதன் பொருசினத் தரசன்மா டணுகினன்
யானுமுன் குலமுமிவ் வுலகுமுய்ந் தனமெனு
மானவன் குணமெலா நினையுமா மதியினன்.

(இ - ள்.) போன-(அவ்வாறு) சென்ற, மந்தரம் மணி புயம் நெடும் புகழினன்-மந்தரமலைபோன்ற அழகிய தோள்களையும் நீண்ட கீர்த்தியையுமுடையவனான அநுமான்,—மானவன் குணம் எலாம் நினையும்-மநுசக்கரவர்த்தியின் வம்சத்தில் திருவவதரித்தவனான ஸ்ரீராமனது திருக்கலியாணகுணங்களனைத்தையுமே நினைத்து நினைத்துப் பார்க்கின்ற, மா மதியினன் - பேரறிவையுடையவனாய்,—'யானும்—, உன் குலமும் உனதுவம்சமும் [குரங்குக்கூட்டமும்], இ உலகும் - இந்த லோகமும், உய்ந்தனம் - பிழைத்தோம்,' எனு - என்று சொல்லிக்கொண்டே,—தன் ஆன - தனக்கு (எசமானனாகப்) பொருந்திய, பொரு சினத்து அரசன்மாடு-போர்செய்தற்குஉரிய கோபத்தையுடைய அச்சுக்கிரீவமகாராஜனிடத்து, அணுகினன் - சமீபித்தான்; (எ - று.)

அநுமான் தான்சென்றகாரியஞ் செவ்வனேமுற்றியதெனக் குறிப்பிக்குமாறு 'யானும் உன்குலமும் இவ்வுலகும் உய்ந்தனம்' எனக் கூறிக்கொண்டே சுக்கிரீவனைக் குறுகின னென்க. மந்தரம் பாற்கடலைக் கலக்கியவாறுபோலத் தோள்கள் சேனைக்கடலைக் கலக்கு மென்பார், மந்தரத்தை உவமை கூறினார். 'பொருசினத்தரசன்' எனறது - ராமலக்ஷ்மணர்களிடத்தே பகைவர்களென்று சங்கைகொண்டிருந்ததைக் குறிப்பித்தற்கு: அரசர்க்குச் சினம் இலக்கணமாதலின் இவ்வாறு கூறினனென்றலு மொன்று; "நச்சுநாகத்தினாழும் சீற்றத்தன்" எனச் சிந்தாமணியிற் கூறியதூங் காண்க.

அரசன்மாடு, மாடு - ஏழனுருபு. தான முதலிற்சென்று அவர்களைச் சேர்த்த பேற்றினால், 'யானும்' எனத் தன்னைத் தனியே முதலிற் கூறினன். மேல் வாலியைச் சங்காரஞ்செய்து சுக்கிரீவனுக்கு அரசளிக்குந் தன்மையைக் கருதியும், இவ்வாறே துஷ்டநிக்கிரகஞ்செய்து சிஷ்டபரிபாலனஞ் செய்யும் இயற்கையைக் கருதியும், 'உன்குலமு மிவ்வுலகு முய்ந்தனம்' என்றான். 'என்குலம்' என்ற பாடத்துக்கு யானொருவன் இவர்களையடைந்து வணங்கின மாத்திரத்தால், எனது தாதை மூதாதை முதலிய பூர்வவம்சபரம்பரையெல்லாம் நற்கதிபெற்றதெனப் பொருள் கொள்க. அறிவு படைத்ததன் பயன் கடவுளின்குணங்களைச் சிந்தித்திருத்தலே யாதலாலும், வேதங்களாலும் முற்றவும் அறியமுடியாத எம்பெருமானது குணங்களைச் சிந்தித்திருத்தல்பற்றியும், அநுமானுடைய அறிவை 'மாமதி' என்றார். உய்ந்தனம்-முன்னிலை படர்க்கைகளை உளப்படுத்திய தன்மைப்பன்மைமுற்று; இறந்தகாலம்,தெளிவுபற்றியது.

ஏனு - செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். மாகவன் - தந்திதாந்தநாமம்: மறு - சூரியனது புதல்வன்; அதனால் இவன் வைவஸ்வதமநுவென்றும் சொல்லப்படுவன்.

இதுமுதற் பதினாறு கவிகள் பெரும்பாலும் எல்லாச்சீர்களும் விளச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௩௯)

இராமபிரான் வந்துள்ளதை அநுமான் சுக்கிரீவனுக்குத் தெரிவித்தல்.

௪0. மேலவன்றிருமகற்குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலாவலியினுயிர்தெறக்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனு
வாலமுண்டவனினின்றருநடம்புரிகுவான்.

(இ - ள்.) 'விரை செய் தார் - வாசனை வீசுகின்ற மலர்மாலையையுடைய, வாலி என்ற - வாலி யென்று சிறப்பித்துப் பெயர்சொல்லப்படுகின்ற, அளவு இலா வலியினன் - அளவில்லாத பலத்தையுடைய வாநரவீரனது, உயிர்-பிராணனை, தெற-அழித்தற்கு [உடம்பினின்று போக்கிக்கொல்லுதற்கு], காலன் - யமன், வந்தனன் - வந்தான்; (இனி நாம்), இடர் கடல் - துக்கசாகரத்தை, கடந்தனம் - தாண்டிக் கரையேறினோம்,' எனு-என்று, மேலவன் திருமகற்கு - ஆகாயத்திற் செல்லுகின்றவனான சூரியனது சிறந்த குமாரனாகிய சுக்கிரீவனுக்கு, உரைசெய்தான் - சொல்லினவனாய்,—(அநுமான்),—ஆலம் உண்டவனின் - ஹாலாஹல விஷத்தையுண்டவனான உருத்திரமூர்த்திபோல, நின்று அரு நடம் புரிகுவான் - அரிய நடனத்தைச்செய்து நிற்பானாயினன் [ஆனந்தக்கூத்தாடினன்]; (எ - று.)

அநுமான் 'நீ முன் சங்கித்தவாறு வாலியைச்சேர்ந்த நமது பகைஞனல்லன், அவ்வாலியையே வெல்லுமாறு மிக்கபலம்பெற்ற மகாவீரனவன் இவன்' எனக்கூறி அவனது மனக்கவலையை மாற்றி மகிழச்செய்து, தானும் ஆனந்தக் கூத்தாடின னென்பதாம். அடிக்கடி சுக்கிரீவன் முதலானோரோடு போர்செய்தற்குத் தும்பைப்பூமாலைசூடி வருதலால் அவனை 'விரைசெய்தார்வாலி' என்றும் தன்னோடு எதிர்ந்தார்வலியிலே பாதி தன்வலியோடு கூடுமாறு அவன் வரம்பெற்றிருப்பதனால் 'அளவிலாவலியினன' என்றுங் கூறினன். வாலி பிறந்தபொழுது அவனுக்கு இந்திரன் தன்கழுத்திலிருந்த பொன்மாலையைக் கொடுத்து 'எந்தவீரன் உன்னை எதிர்த்தாலும் எதிர்த்தவனுடைய பலத்திற் பாதி உனக்கு வரும்; அதனால் நீ எவர்க்கும் வெல்லக்கூடாதவனாய் விளங்கக் கடவாய்' என்று வரமளித்துச் சென்றனனென்று அறிக. "வாலியென்றுளான் வரம்பிலாற்றலான்" என மேல்வருவதுங் காண்க. உரைசெய்தான் விரைசெய்தார் - பிராஸம். 'என்றளவிலா' என்றவிடத்துப் பெயரெச்ச விற்று அகரம், தொகுத்தல். (௪0)

இதுமுதல் மூன்றுகவிகளால், அநுமான் ராமலக்ஷ்மணரது தன்மையை எடுத்துக் கூறுகின்றான்.

சக. மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளா
ரெண்ணுளாரியலுளாரிசையுளார்திசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்கழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமிழ்தமேபோலுளார்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்

(இ - ள்.) (அவ்வீரர்கள்).—மண் உளார்- இந்நிலவுலகத்திலுள்ளவர்களும், விண் உளார் - சுவர்க்கலோகத்திலுள்ளவர்களும், மாறு உளார் - (இவற்றிற்கு) மாறாகிய பாதாளலோகத்தி லுள்ளவர்களும், வேறுஉளார் - மற்றைலோகங்களி லுள்ளவர்களும், திசை உளார் - எட்டுத்திக்கிலு முள்ளவர்களும் ஆகிய இவர்களது, எண் உளார் - மனத்திலே உள்ளவர்களும், இயல் உளார் - செயலிலே உள்ளவர்களும், இசை உளார் - சொல்லிலே உள்ளவர்களும், கண் உளார் - கண்ணுக உள்ளவர்களும். ஆயினார் - ஆனவர்கள்; பகை உளார்-பகைவர்களை யுடையவர்களும், கழி நெடும் புண் உளார்-(அப்பகைவர்களாற் செய்யப்பட்ட) மிகவும் அதிகமான விரணங்களையுடையவர்களுமாய்த் தம்மை யடைந்தவர்களது, அரு உயிர்க்கு - அருமையான பிராணனுக்கு, அமிழ்தமேபோல் உளார்- (பகைவரையழித்து மரணத்தைப்போக்கி இன்பத்தைத்தருதலால்) தேவாமிருதத்தையே ஒத்திருப்பவர்கள்; (எ - று.)

எம்பெருமான் அந்தர்யாமியாய் எங்குமுள னாதலால், அக்கடவுளினவதாரமான இவர்களை 'மண்ணுளார் விண்ணுளார் மாறுளார் வேறுளார் திசையுளாரது எண்ணுளாரியலுளா ரிசையுளார் கண்ணுளார்' என்றார். மண்ணுளார் முதலோரது கண்ணுளார் - "கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு" என்றார் ஆழ்வாரும். பகையைப்போக்கி இனிமையைத்தரும் இவர்கட்கு, மரணத்தைப்போக்கி உடலுக்கு வலிமையைத்தரும் அமிழ்தை உவமை கூறினார்: "அச்சமுற்றடைந்தார்க் கமிர்தன்னவன்" என்றார் சிந்தாமணியாரும் முதலடியில் பிராஸமும், தொடைமுரணுங் காண்க. கழி-மிகுதிப்பொருள் குறிப்பதோர் உரிச்சொல் 'அவ்வீரர்கள்' எனத் தோன்றாவெழுவாய் வருவிக்கப்பட்டது; மேலிரண்டு செய்யுட்கும் இங்ஙனமே காண்க. (சக)

சஉ. சூழிமால்யானையார்தொழுகழற்றயரதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படரவா
ழாழியான்மைந்தர்பேரறிவினாரழகினா
ரூழியாலெளிதினிற்கரசுதந்துதவுவார்.

(இ - ள்) உலகு எலாம் - எல்லாவுலகங்களும், பாழியால் ஒரு வழிபடர- (தனது) வலிமையால் ஒருகுடைக்கீழ் அமைந்துவாழும்படி, வாழ் - சிறப்புப்பெற்று வாழ்கின்ற, ஆழியான் - ஆஜ்ஞாசக்கரமுடையவனும், சூழி மால் யானையார் தொழு கழல் - முகபடாத்தையணிந்த மதயானைச்சேனையையுடையவர்க

ளான அரசர்களெல்லாரும் வணங்குகின்ற பாதங்களையுடையவனுமாகிய, தயரதன் - தசரதசக்கரவர்த்தியினது, மைந்தர் - திருக்குமாரர்கள்,—பேர் அறிவினர்- மகாபுத்திமான்கள்; அழகினர் - கட்டழகுடையவர்கள்; நிற்கு - உனக்கு, ஊழியால் - முறைமையாக, எளிதில் - சுலபத்தில், அரசு - அரசாட்சியை, தந்து உதவுவார் - அளித்து உதவிசெய்வார்கள்; (எ - று.)

யானை - மற்றைத் தேர் குதிரை காலாட்சேனைகளுக்கும் உபலக்ஷணம். யானையை எடுத்துக்கூறியது, அது சதுரங்கசேனையுள்ளும் சிறந்ததாதலால்; அதனை, "படைதனக்கியானை வனப்பாகும்" "யானையுடையபடை காண்டல் மிகவினிதே" என்னுஞ் சங்கச்செய்யுள்களாலும் உணர்க. இனி, யானைபோன்றவரென்றுமாம். தோள்வலிமையாற் சம்பராசுரன் முதலியோரை வென்று தேவலோகத்தையும் உட்பட அரசாண்டதனால், 'உலகெலாமொருவழிப்பட' என்றார்; இத்தொடர்க்கு-உலகத்தவரெல்லாரும் ஒற்றுமைகொண்டு வாழ என உரைப்பாருமுளர். ஊழ்-ஊழியென ஈறுதிரிந்தது; "அரசனோடுடன் மாய்ந்த நல்லூழிச்செல்வம்போல்" என்ற நெய்தற்கலியிற்போல. 'ஊழியால்' என்றது- தமது நண்பனுக்கு நேர்ந்த துன்பத்தைத் தமக்குநேர்ந்ததாகப்பாவித்து அதனை உடனே போக்குதல் தமக்குக்கடமை யெனக்கொள்ளும் மகாகுணமுடையவரென்பது தோன்றுதற்கு. 'ஊழியார்' என்ற பாடத்துக்கு நற்குணமுடையவரென்று பொருள். மூவுலகங்களையுங் காக்கவல்ல மகாவீரரான அவர்க்கு வாலியைக்கொன்று உனக்கு அரசளிப்பது அரியபெரிய காரியமன்று, நினைத்தமாத்திரத்தில் நிறைவேற்றக்கூடியதென்பது தோன்ற 'எளிதில் நிற்கு அரசுதந்துதவுவார்' என்றார். 'சூழிமால்யானையான' என்றும், 'இனி உனக்கரசு' என்றும், 'ஊழிவாழினியுனக்கரசுதந்து' என்றும் பாடமோதுவாருமுளர். (௬௨)

௬௩. நீதியார்கருணையினனெறியினர்நெறிவயிற்
பேதியாநிலைமையாரெவரினும்பெருமையார்
போதியாதளவிலாவுணர்வினர்புகழினர்
காதிசேய்தருகடற்கடவுள்வெம்படையினர்.

(இ - ள்.) நீதியார் - மனுநீதியுடையவர்கள்; இன் கருணை நெறியினர்- இனிய கிருபையின் தன்மையை யுடையவர்கள்; நெறிவயின்-சன்மார்க்கத்தினின்றும், பேதியா-மாறுபடாத, நிலைமையார் - உறுதிநிலைமையையுடையவர்கள்; எவரினும் பெருமையார் - எல்லாரைக்காட்டிலும் அதிக மகிமையையுடையவர்கள்; போதியாது-(எவராலும்) கற்பிக்கப்படாமல் [இயல்பாகவே அமைந்த], அளவு இலா உணர்வினர்-வரையறைப்படாத அறிவையுடையவர்கள்; புகழினர் - கீர்த்தியையுடையவர்கள்; காதி சேய் தரு - காதியென்னும் ராஜரிஷியினது குமாரராகிய விசுவாமித்திர மகாமுனிவரால் அநுக்கிரகிக்கப்பட்ட, கடல் - கடல்போலப் பரந்த, கடவுள் வெம் படையினர் - தெய்வத்தன்மையையுடைய கொடிய அஸ்திர சஸ்திரங்களை யுடையவர்கள்; (எ - று.)

முன்னிரண்டடிகள்-'நம்மிடத்திற்பழகியும் ஒருகால்வாலிவலியனென்று அவனைச் சேர்வரோ?' என்னுஞ் சங்கையை யொழிக்கவந்தன. பின்னிரண்

டிகள்; சுக்கிரீவசத்துருவாகிய வாலியைச் சங்கரிக்கும்வல்லமையினர் அவர்க ளென்பதைக் காட்டும். இயற்கைப்பேரறிவுடைமை இறைவனது எண்குணங் களுளொன்றாதலால், இவரைக் கடவுளரென்று தெரிவிக்குமாறு, 'போதி யாதன விலாவுணர்வினர்' என்றான். "மறையினொ டொழிவறுகலையும், தவன் மதிபுனையரனிகர்முனிதரவே" என்றபடி வசிட்டமுனிவரிடதது ஓதியிருக் கவும் இவர்களை இவ்வாறுகூறியது, (கிருஷ்ணன் ஸாந்தீபினியினிடத்திற் பயினறதுபோல) அது ஒருவியாஜமே யாதலாலென்க.

'கருணையின்னெறியினர், னகரமெய்-விரித்தல். செம்மையென்னும் பண் புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு முன்னின்ற மகரமெய் யகரமாகத்திரிந்து'சேய்' என நின்றது; இப்பணபுப்பெயர் ஆகுபெயராய், செம்மை நிறத்தினையுடைய முருகக்கடவுளை முதலில் உணாத்தி,பினபு குமாரனென்னும்வடமொழிபோல உவமவாகுபெயராய்ப் பலபராக்கிரமங்களில் அக்கடவுளைப் போனற மைந் தனை உணர்த்திற்று: செய்யவன் எனபது சேய் என விகாரப்பட்டதென் பா ஒருசாரார். நெறிவயின, வயின - ஏழனுருபு; ஐந்தனுருபின நீக்கப்பொரு ளில வந்தது. 'காதிசேய்தரு நெடுங்கடவுள் வெம்படையினா', 'காதியார்சேய் தருங்கடவுள்வெமபடையினர்' எனபன, ஈற்றடியின பாடபேதம்.

ஈற்றடியிறகுறித்த வரலாறு:—ராமலக்ஷ்மணர்கள் இளமைப்பருவமுடை யராயிருக்கும்பொழுது விசுவாமித்திரர் தாமசெய்யப்போகினற யாகதனதக் கெடுக்கினற தாடகை சுபாகு முதலிய ராக்ஷஸர்களை யழித்து வேளவியைக்காத் தறபொருட்டுத் தசரதசககரவர்த்தியின் அநுமதிபெற்று,இவாகளை அழைத்துக் கொண்டுபோய்த் தாடகையைச் சங்காரம்செய்வித்தபொழுது, பற்பல அஸ் திரசஸதிரங்களை அம்முனிவர் இவர்கட்குககொடுத்தருளினரென அறிக.(சங)

இதுமுதல் ஏழுகவிகளால், இராமபிரானது சிறப்பை அநுமான் எடுத்து விவரிக்கின்றன்.

சச. வேலிகற்சினவுதாடகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வனைக்கொன்றுதன்
காலியற்பொடியினெடியகற்படிவமா
மாலிகைக்கரியபேருருவளித்தருளினான்.

(இ - ள்.) (அவர்களுள் மூத்தவன்),—வேல் - சூலாயுதத்தைக் கையிலே ஏந்திய, இகல்-மாறுபாட்டையுடைய, சினவு-கோபித்துவருகின்ற, தாடகை- தாடகையானவள், விளிந்து உருள - இறந்து விழும்படி, வில் கோலி-(தனது) வில்லை வளைத்து, அ கொடுமையாள் புதல்வனை கொன்று-கொடுந்தன்மையை யுடையவளான அவளது புத்திரனாகிய சுபாகுவைக்கொன்று, தன்கால் இயல் பொடியினால் - தனது திருவடிகளிற் பொருந்திய தூளியினால், நெடிய கல் படிவம் ஆம் ஆலிகைக்கு - பெரிய கல்லினவடிவமாய்க்கிடந்த அகலிகைக்கு, அரிய பேர உரு - பெறுதறகரிய சிறந்த நிஜரூபத்தை, அளித்தருளினான் - கொடுத்து அருள்செய்தான ; (எ - று.)

"நல்லுறுப்பமையு நம்பியரின் முன்பவன" என மேற்கவியில் வருவதையே இக்கவிக்கும் எழுவா யெனலாம்.

தாடகை - மலைகளிற் சஞ்சரிப்பவள்; இவள் - சுகேது வென்னும் யக்ஷனது மகள்: சுந்த னென்பவனது மனைவி: ஆயிரம்யானைவலிமை கொண்டவள்: கணவன் அகஸ்தியரது கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரானதை யறிந்த இவள் தனபுத்திரராகிய சுபாகுமாரீசர்களுடனே அம்முனிவரை எதிர்த்துச் சென்றபொழுது, அவர் இட்ட சாபத்தால் மூவரும ராக்ஷஸராயினர். இராமன தாடகையைக் கொன்றது - விசுவாமித்திரருடனே அவராச்சிரமத்துக்குச் செல்லும வழியிடையில் சுபாகுவைக் கொன்றது அம்முனிவரது யாகத்தைக் காக்குந் தருணத்தில்.

ஆலிகை - அஹல்யா என்னும் வடசொல்லின விகாரம்; அச்சொல்லுக்கு - அழகில்லாமை யில்லாதவள என்று பொருள; [ஹல்யம் - அழகின்மை:] மிக்க அழகுடையவ ளென்று கருத்து: இவள் கௌதமமுனிவரது மனைவி; சதாநந்தமுனிவரது தாய். கற்படிவமாம் அகலிகைக்கு அரியபேறருளித்த வரலாறு:- கௌதமமுனிவரது பத்தினியாகிய அகலிகையினமீது பலநாளாயக் காதல்கொண்டிருந்த தேவேந்திரன் ஒருநாள நள்ளிரவிலே பொழுதுபுலருங் காலத்துக் கோழிகூவுவதுபோலக் கௌதமராச்சிரமத்துக்கு அருகேவந்துகூவ, அதுகேட்ட முனிவர் 'சந்தியாகாலஞ் சமீபித்தது' எனக் கருதிக் காலைக்கடன் கழித்தற்பொருட்டு நீர்நிலைநோக்கிச்செல்ல, அப்பொழுது இந்திரன அம்முனிவருருக்கொண்டு அவளோடு கலக்க, பினபு அதனை ஞானதிருஷ்டியி னுணர்ந்த அம்முனிவர் இவளைக் கருங்கல்வடிவமாம்படி சபித்து உடனே அஞ்சிநடுங்கிப் பலவாறு வேண்டிக்கொண்டதற்கு இரங்கி 'இராமபிரானது திருவடிப்பொடிபடுங்காலத்து இக்கல்வடிவம நீங்கிச் சுயவுருவம அடைவாய்' என்று அனுக்கிரகிக்க, அவ்வாறே கல்லுருவாய்க்கிடந்த அவள இராமபிரான் விசுவாமித்திரனோடு மிதிலைக்குச்செல்லும்போது அவனுடைய திருவடித்துகள் பட்டமாத்திரத்திற சாபமநீங்கி இயற்கையுருவமடைந்தன ளென்பதாம்.

முன்னிரண்டடிகளால் - இராமபிரானது மிக்க வலிமையும், பின்னிரண்டடிகளால் - அவனது கடவுட்டன்மையும் விளங்கும். (௪௪)

௪௫. நல்லுறுப்பமையுநம்பியரின் முன்பவனயந
தெல்லுறுப்பரியபேரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக்கமைதியம்பகமெனும்

(இ - ள்.) நல் உறுப்பு அமையும் நம்பியரில் முன்பவன் - நல்ல அவயவலக்ஷணங்களெல்லாம அமைந்த இவ்வாண்மக்களுள் முன்பிறந்தவனான இராமன்,—மிதிலை புக்கு - மிதிலாபுரியை, யடைந்து—, அனைய நாள் - அந்தக்காலத்தில் [சீதையைத் திருக்கலியாணஞ்செய்து கொள்ளும்பொழுது],—எல் உறுப்பு அரிய - இருளின அடையாளமும் இல்லையாதற்குக் காரணமான, பேர் எழுசுடர் - மிக்குவிளங்குகின்ற கிரணங்களையுடைய கடவுள்தன் - சூரியபகவானது, பல் - பற்களை, இறுத்தவன் - உதிர்த்தவனாகிய பரமசிவனது, வலிக்கு -

வலிமைக்கு, அமை - ஏற்ற, தியம்பகம் எனும் வில் - திரியம்பகமென்னும் வில்லை, நயந்து - விரும்பி, இறுத்தருளினான்-ஒடித்தருளினான் (எ - று.)

நல்லுறுப்பு-சாமுத்திரிகசாஸ்திரத்திற் சொல்லப்படுகின்ற சக்கரவர்த்தி குமாரர்களுக்கு ஏற்ற உத்தமலக்ஷணங்கள். 'சுடர்க்கடவுள் தன் பல்லிறுத்தவன்' என்றது - தன்னையவமதித்த தக்ஷமுனிவரது யாகத்தில் வீரபத்திரரூபியாய்ச்சென்று பூஷாவென்னுஞ் சூரியனது பற்களை யுதிர்த்த பரமசிவனென்க. தியம்பகம்-த்ரையம்பகம் என்னும் வடசொல்லின் சிதைவு; திரியம்பகன் என்பதற்கு - மூன்றுகண்களையுடையவனென்று பொருளாதலால், திரியம்பகமென்பது சிவசம்பந்தமானதென்று பொருள்படும். இச்சிவதனுசு, பரமசிவனால் ஜநகமஹாராஜாவுக்குக் கொடுக்கப்பட்டு, அவனால் 'இவ்வில்லையெடுத்து வளைத்தவர்க்குச் சீதாபிராட்டியைக் கலியாணஞ்செய்து கொடுப்பேன்' என்று கந்யாசுல்கமாக வைக்கப்பட்டது. விசுவாமித்திரன் தனது வேள்வி தடையின்றி முற்றுமாறு தசரதசக்கரவர்த்தியினிடத்திலிருந்து வேண்டிப்பெற்ற இராமபிரானைக்கொண்டு தான்தொடங்கிய வேள்வியை முடித்தபின்பு அவனை மிதிலாபுரிக்கு அழைத்துச்சென்று சிவதநுசை வளைக்குமாறுசொல்ல, அவ்வாறே இராமபிரான் செய்து சீதையை மணந்துகொண்டனனென்க. மிதிலையென்பதற்கு - மிதியென்பவனால் ஏற்படுத்தப்பட்ட நகரமென்பது பொருள்; மிதி என்பது, ஜநககுலத்தலைவனான ஓரரசனுக்குப் பெயர்; கடைந்ததனாலுண்டானமைபற்றியது. நம்பி - நமக்கு இன்னானென்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச் சொல்; ஆடவரிற் சிறந்தவன். 'நம்பியரின் முன்னவன்முன்னம்' என்றும் பாடமுண்டு; 'நல்லுறுப்பமையுநங்கையரின் மேலவள்பொருட், டெல்லுறுப்புடைய பேரெழு பரிக்கடவுடன்' என்ற பாடமோதுவாருமுளர்.

இச்செய்யுளால் - முதலாவார் மூவரினும் மிக்கவன் இராமபிரானெனக் குறிப்பித்தவாறாயிற்று. (சஅ)

சகூ. உளைவயப்புரவியானுதவவுற்றொருசொலா
லளவில்கற்புடையசிற்றவைபணிந்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலா
மிளையவற்குதவியித்தலையெழுந்தருளினான்.

(இ - ள்.) உளை வயம் புரவியான-பிடரிமயிர்களைக்கொண்ட வெற்றியையுடைய குதிரைகளையுடையனான தசரதன், உதவ - கொடுத்ததனால், உற்ற-கிடைத்த, ஒரு சொலால் - ஒருவார்த்தையை [வரத்தை]க் கொண்டு, அளவு இல் கற்பு உடைய சிறு அவை பணிந்தருளலால் - அளவில்லாத கற்புநிலைமையையுடைய சிறியதாயான கைகேயி கட்டளையிட்டருளியதனால், வளை உடை புணரி சூழ் மகிதலம் திரு எலாம் இளையவற்கு உதவி-சங்குகளையுடைய கடலாற் சூழப்பட்ட பூமியை யாளுகின்ற அரசச்செல்வமுழுவதையும் தம்பியாகிய பரதாழ்வானுக்கே கொடுத்து, இ தலை எழுந்தருளினான் - இவ்விடத்துக்கு வனவாசமாய் வந்தருளினன்; (எ - று.)

'உதவ' என்றது - தசரதர் சம்பரனோடு போர்செய்யும் பொழுது கைகேயிசாரத்தியஞ்செய்து உதவிபுரிய, அதற்குக் கைம்மாறாகக் கொடுத்த இரண்டுவரங்களை உட்கொண்டு. 'ஒருசொலாற் பணித்தருளலாலே' என்றது - அவ்விருவரங்களுள் ஒருவரத்தால் இராமனுக்குக் காடளிக்கவும் மற்றொரு வரத்தாற் பரதனுக்கு நாடளிக்கவுங் கேட்டுக்கொண்டனளாதலால்; "நாயகனுனை யான் வரயால் நானிது பகர்வன்" எனக் கூறிக்கொண்டு வந்தவளாதலால், 'சிற்றவை பணித்தருளலால்' என்றார்; "சிற்றவைபணியால் முடிதுறந்தானை" என்றார் பெரியாரும். சிற்றவை - சிற்றவ்வை - அவ்வை - ஔவைபெண்பதன் போலி. வளை - வலம்புரி இடம்புரியாக வளைந்திருப்பது. புணரி - நதிகளாகிய மனைவிகள் வந்துசேரப்பெறுவது எனக் காரணக்குறி. உற்றொரு - தொகுத்தல். இனி, உளைவயப்புரவியான் உதவ - தசரதர் (முதலில் இராச்சியத்தைக்) கொடுக்க, உற்று - (அதனை) அங்கீகரித்து, (உடனே), சிற்றவை ஒருசொலாற் பணித்தருளலால் இளையவற்கு உதவி எழுந்தருளினன் என்று பொருளுரைக்கவும் அமையும்.

இக்கவிக்கும்-'நம்பியரின் மூன்பவன்' என்பதே எழுவாய்; ஆகவே, சச - ஆங் கவிமுதல் மூன்றுகவிகள் ஒருதொடரா மெனக் காண்க.

ஆசையின்மையும், மாத்ருபித்ருவாக்யபரிபாலநமாகிய நல்லொழுக்கமு முடையவன் அவ னெனக் கூறியவாறாயிற்று. (சசு)

சஎ. தெவ்விராவகைநெடுஞ்சிகைவிராமழுவினு
னவ்விராமனையுமாவலிதொலைத்தருளினு
னிவ்விராகவன்வெகுண்டெழுமிராவனையனும்
வெவ்விராதனையிராவகைதுடைத்தருளினன்.

(இ - ள்.) இ இராகவன் - இந்த ஸ்ரீராமன், தெவ் இரா வகை - (உலகத்திற்) பகைவர்கள் இராமற் போம்படி, நெடுஞ் சிகை விரா மழுவினன் - மிக்க சுவாலை பொருந்திய மழுவாயுதத்தை யுடையவனாகிய, அ இராமனையும்-அந்தப் பரசுராமனையும் மா வலி தொலைத்து-மிக்கவலிமையைப்போக்கி, அருளினன்-அருள்செய்தான; (அன்றியும்), வெகுண்டு எழும்-கோபித்து எதிர்த்து வந்த, இரா அனையன் ஆம் - இருளைப்போன்றவனாகிய, வெம் விராதனை - கொடிய விராதனென்னும் அரக்கனை, இரா வகை - (இவ்வுலகத்தில்) வாழ்திராதபடி, துடைத்தருளினன் - அழித்தருளினன் ; (எ - று.)

தன்தந்தையாகிய ஜமதக்னிமுனிவரது ஓமதேனுவைக் கவர்ந்த கார்த்தவீரியார்ச்சுனனைப் பரசுராமன் கொல்லவே, அக்கார்த்தவீரியார்ச்சுனனது மைந்தர் தன்தந்தையைப் பழிக்குப்பழிவாங்கினராக, பரசுராமன் அக்கார்த்தவீரியன் மக்களைக் கொன்று அதுமுதல் க்ஷத்திரியர்கள்மீது கறுக்கொண்டு இருபத்தொரு முறை பூலோகத்தைப் பிரதக்ஷிணஞ்செய்துவந்து ஆங்காங்குள்ள சகலக்ஷத்திரியர்களையும் ஸம்ஹாரஞ்செய்ததனால் 'தெவ்விராவகை' என்றும், மழுப்படையையே தனக்கு நிரூபகமாகக்கொண்டு பரசுராமனெனப் பெயர்பெற்றதனால் 'மழுவினு னவ்விராமனை' என்றும், சீதாகலியாணம்

முடிந்தபின்பு தசரதச்சக்கரவர்த்தி மக்களோடும் மருகிகளோடும் அயோத்திக்கு மீண்டு செல்லுகையில் அப்பரசுராமன் எதிரில்வந்து 'முன் ஹரிஹரயுத்தத்திலே இற்றுப்போனவில்லை முறித்த திறமை அறிந்தேன்; இந்த ஸ்ரீமகாவிஷ்ணுவினதுவில்லை வளை, பார்ப்போம்' என்று ஒருதனுசை இராமபிரானது கையிற்கொடுக்க, ஸ்ரீராமன் உடனே அதனைவளைத்துக் கணைதொடுத்து 'இந்த அம்புக்கு இலக்கு என்?' என்றுகேட்க, அதற்கு இலக்காகத் தன்தபோபலம் முழுவதையுங் கொடுத்துப் பார்க்கவராமன் மீண்டு சென்றதனால் 'இராமனையும் மாவலிதொலைத்து' என்றும், பரசுராமன க்ஷத்திரியவம்சத்தைக் கருவறுத்தவனாயிருந்தாலும் வேதவித்தும் தவவிரதம்பூண்டவனு மாதல்பற்றி ஸ்ரீராமன் அவனுயிரைக் கொல்லாமல் தவத்தைக் கவர்ந்தமாத்திரத்தோடு விடுத்ததனால் 'அருளினான்' என்றுங் கூறினான்.

க்ஷத்திரியர்கள் செருக்குக்கொண்டு பூமிபாரமாயிருந்ததனால் அப்பொறையையொழித்தற்காகத் திருமாலின் ஆறாமவதாரமெனக் கூறப்படுகின்ற பரசுராமனிடத்து ஆவேசித்திருந்த திருமாலினது சக்தியை, தொழில்முற்றியதனால் திருமாலின் ஏழாவதான அம்சாவதாரமாகிய தசரதராமன தன்னிடத்துக் கவர்ந்துகொண்டனனென்று அறிக.

இராவகை என்பது, மழுவினால் என்பதில் தொக்குநின்ற உடையவனென்னுங் குறிப்புவினையோடு முடியும். விரா மழு என்பதை வினைத்தொகையாகவாயினும், விராம் மழு எனப்பிரித்து ஈற்றுயிர்மெய்சென்றுநின்ற செய்யுமென்வாய்பாட்டுத் தெரிநிலைப் பெயரெச்சத் தொடராகவாயினுங் கொள்க. இராமனையும், உம்மை - உயர்வுசிறப்பு: தேகபலம் முதலியவற்றைக் குறியாமல் தபோபலத்தையே குறித்தற்கு, 'மாவலி' எனப்பட்டது. ராகவன என்பதற்கு ரகுமகாராஜனது வம்சத்தில் அவதரித்தவனென்று பொருள். அவ்வரசன், தசரதனுக்கு மூதாதை; எல்லாத்தேசத்தையும் வென்று 'விஸ்வஜித்' என்னும வேள்வியைச் செய்து சகலசம்பத்தையுந் தானஞ்செய்துவிட்டு வறுங்கையனாயிருக்கையில், கௌத்ஸன் என்னும் பிராமணன தனது ஆசாரியராகிய வரதந்து மகாமுனிவர்க்குக் குருதக்ஷிணை கொடுப்பதற்காக வந்து யாசிக்க, குபேரனிடத்திலிருந்து வேண்டும் பொருளை அழைப்பித்து அந்தக்கௌத்ஸனுக்குக் கொடுத்தான: இந்த ரகுமகாராஜன் இவ்வாறு மிக்க வீரமுங் கொடையு முள்ளவனாதலால், இராமபிரானை அவன் வம்சத்துப்பெயராற் குறித்தார்; இது - தத்திதாந்த நாமம்.

விராதனென்னும் வடசொல்லுக்கு - மிகுதியாய் அபராதஞ்செய்பவனென்றுபொருள்; இவன்முனனே தும்புருவென்னும் பெயருள்ளகந்தருவனாயிருந்து பின்புகுபேரனது சாபத்தால் ராக்ஷஸனாகிவனத்தில் திரிந்துவந்தவன். இவனைக் கீழ் ஆரணியகாண்டத்தில் "தங்கு திண் கரிய காளிமை தழைந்து தவழ," "கங்கு பூசிவருகின்ற கலிகாலமெனவே" வந்தானென்றதற்கு ஏற்ப, இங்கு 'இரா அனையனும வெவ்விராதனை' என்றார். ராமலக்ஷ்மணர்சீதையுடனே தண்டகாரணியத்திற் செல்லுகையில், இவ்வரக்கன்வந்து ஜாநகியைத் தூக்கிக் கொண்டுசெல்லக் கண்டு ராமலக்ஷ்மணர்கள் எதிர்க்க, அவன் அவளைவிட்டு

இவர்களிருவரைத் தூக்கிக்கொண்டு செல்ல, ராகவவீரர்கள் அவனைத் தோள்களை வெட்டிக் கொன்றுவிட்டு, அவன் தனது பிறப்பையுணர்த்தி வேண்டிக் கொண்டபடி அவனைப் பள்ளம்வெட்டிப் புதைத்துச் சென்றதனால், 'இராவகைதுடைத்து' என்றும்; அவன் இவர்களைத் தோள்களில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போனபொழுதும் ஸ்ரீராமன் காலால் உதைத்துப் பள்ளத்திலே தள்ளியபொழுதும் இவர்கள் திருவடிகள் பட்டபாக்கியத்தால் அவன் தீவினையெல்லாந் தீர்ந்து பூர்வஜந்மத்து நிஜரூபத்தைப் பெற்றுத் தன்னுலகஞ் சென்று இன்பமடைந்ததனால், 'துடைத்தருளினன்' என்றுங் கூறினர். இரா - ராத்திரி; இருளுக்கு ஆகுபெயர். 'இராவனையனும்விராதனை யிராவகை துடைத்தருளினன்' என்பதனை, "இராவண னிராவண னிராவண மறுத்தோர்" என்னும் அழகர்கலம்பகத்தோடு ஒப்பிடுக. இனி, விராதன் ஐயிராவகை எனப் பிரித்து, ஐயிரா என்பதனை அயிரா என்பதன் போலியாக் கொண்டு, விராதன் (ராக்ஷஸஜந்மத்தில் இருந்து) துன்பப்படாதபடி என்றலுமாம். இத்தொடர் - ப்ராஸ மென்னுஞ் சொல்லணியாம்.

இனி, இக்கவிமுதல் இராமபிரானது அஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ் செய்யுங் குணத்தைக் கூறுமுகத்தால், அநுமான், நமது பகைவனாகிய வாலியையொழித்து நமதுகருத்தை முற்றுவிப்பான் இவனென்பதைத் தெரிவிக்கின்றான். (சஎ)

சஅ. கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடுஞ்
சிரமுகச்சிலைகுனித்துதவுவான்றிசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவான்பரமரா
மரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினன்.

(இ - ள்.) (இன்னும் இந்த இராமன்), கரன் முதல் கருணை அற்றவர் கடல் படையொடும் - கரன்முதலாகிய தயையில்லாத ராக்ஷஸர்களுடைய சமுத்திரம் போன்ற சேனைகளும், சிரம் - (அரக்கன்முதலியோரது) தலைகளும், உக-துணிபட்டு விழும்படி, சிலை குனித்து - வில்லை வளைத்து(ப் போர் செய்து), உதவுவான் - (தேவர்கட்கு) உதவிசெய்தவன்; (அன்றியும்), திசை உளார் பரமுகம் பகை - எல்லாத்திக்குக்களிலும் உள்ளவர்களுடைய அலக்ஷயஞ்செய்கின்ற பகைவர்களை, துமித்து அருளுவான் - அழித்தருளுபவன்; பரமர் ஆம் அரன் முதல் தலைவருக்கு - (மற்றை யாவரினும்) மேம்பட்டவர்களாகிய உருத்திரன் முதலிய தலைவர்களான தேவர்களுக்கும், அதிசயம்-மேம்பட்டிருக்கின்ற, திறலினன் - வல்லமையுடையவன்; (எ - று.)

கரன் என்பதற்கு - கடுமையுள்ளவனென்று பொருள். இவன், பூர்விக ராக்ஷஸசிரேஷ்டனான சுமாலியின் மகளும், ராவணன்தாயான கேகசியின் தங்கையும், ராவணனது தந்தையான விசிரவமுனிவரையே கொழுநனாக அடைந்தவளுமான கும்பீநசியின் குமாரன்; இராவணனுக்குத் தம்பிமுறையில் நிற்பவன்; தண்டகாரணியத்திலே ஜநஸ்தானத்தில் தன் தங்கையாகிய சூர்ப்பணகைக்குப் பாதுகாவலாக இராவணனு லேற்படுத்தப்பட்ட பதினாலாயிரம்

ராக்ஷஸசேனைகளுக்குத் தலைவர் மூவரிற் பிரதானமானவன். 'கரன் முதற் கருணையற்றவர்' என்றது - தூஷணன், திரிசிரஸ் என்ற இருவரையுங் குறிக்கும். சேனைக்குப் பரப்பினாலும், ஆரவாரத்தினாலும், அணியணியாக வருதலாலும், கடல் உவமை திசையுளார்-திக்பாலகரென்றுமாம், பராமுகம்-பராங்முகமென்னும் வடமொழியின் விகாரம்; அசட்டை. அரன் - ஹரன்; ஸகலலோகங்களையும் ஸம்ஹரிப்பவன். தலைவருக்கு - நான்காம்உருபு. உறழ்பொருவாகிய எல்லைப்பொருளில் வந்தது. இரண்டாமடியில் 'சிரமுகச்சிலை குனித்தடையன்மற்றமரர்தம்' என்று பாடமோதுவாருமுளர்.

இச்செய்யுளுக்கும் அடுத்த செய்யுளுக்கும் - கீழ்க்கவியிலுள்ள 'இவ் விராகவன்' என்பதே எழுவாய்.

**கரன்முதற் கருணையற்றவர் கடற்படையும் சிரமும் உதுவித்த கதை :—** இராமலக்ஷ்மணர்களின் அழகைக் கண்டு வியந்து காதல்கொண்டு மிக அழகிய மங்கைப்பருவம் பூண்டு வந்து தன்னைக் கலியாணஞ் செய்துகொள்ளும்படி பிரார்த்தித்த இராவணன் தங்கையாகிய சூர்ப்பணகையினது மூக்கையும் காதையும் இளையபெருமாள் அறுத்துவிட்டதைக் கேட்டுப் பெருங்கோபங் கொண்டு, கரன் தூஷணன் திரிசிரசு என்னும் இராக்கதத்தலைவர்களும் பதினாலாயிரம் ரதாதிபதிகளும் சேனைகளோடு வந்து எதிர்க்க, ஸ்ரீராமபிரான் இளையபெருமாளைப் பிராட்டிக்குக்காவலராக வைத்துவிட்டுத் தனியாய்நின்று வில்லைவளைத்துப் பலகணைகள் தொடுத்து அளவிடற்கரிய அரக்கர்சேனைகளையும் சேனாபதிகளையும் தலைவர்கள் மூவரையுங் கொன்றுவிட்டனனென்பதாம்.

௨௬. ஆயமாநாகர்தாழாழியானையலாற்
காயமானாயினான்யாவனேகாவலா
நீயமானேர்தியானிருதமாரீசனார்
மாயமானாயினான்மாயமானாயினான்.

(இ - ள்.) காவலா - மகாராசனே!—(இந்த ஸ்ரீராமன்), காயமான் ஆயினான் - (மநுஷ்ய) சரீரமுடையவனாய் வந்த, ஆயம் மால் நாகர் தாழ் ஆழியானை அலால் - கூட்டமாகிய பெருமைபொருந்திய தேவர்களெல்லாரும் வணங்கப்பெற்ற திருப்பாற்கடலில் திருக்கண்வளர்ந்தருளுகின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவே யல்லாமல், யாவனே - வேறு யாராவன்? நீ—, அ மான் - அப்பெரியவனை, நேர்தி - வந்து சிநேகிப்பாயாக; (அவன்), ஆர் மாயம் மான் ஆயினான் - நிறைந்த வஞ்சனையையுடைய மானினது வடிவம் பூண்டு வந்தவனை, நிருதன் மாரீசன் - மாரீசனென்னும் ராக்ஷஸனுக்கு, மா - பெரிய, யமான் ஆயினான் - யமனானவன்; (எ - று.)—ஆல் - அசை.

இனி, ஆய எனப் பிரித்து, பொருந்திய வென்றுமாம். ஆயமான் எனக் கொண்டு - அந்த ஸ்ரீராமனென்றும் பொருள்கொள்ளலாம்: இப்பொருளில், ஆ அமான் எனப் பிரிக்க: ஆ - அகரச்சுட்டு நீண்டது; நீண்டவிடத்து யகரந் தோன்றியது: அமான்-அம்மான் என்பதன் தொகுத்தல், 'ஆவனே' என்றபடித்தொகை - ஸ்ரீராமன் ஸ்ரீமகாவிஷ்ணுஸ்வரூபியே; அல்லாவிட்டால், காயம் மான் ஆயினான் ஆவனே - தனது வடிவத்தில் பார்வதிதேவியைப் பொருந்தப்

பெற்ற பரமசிவனே யாவன் என்று பொருள்; மான் - மான்பார்வையை யுடைய உமாதேவிக்கு உவமவாகுபெயர். மானனென்பதை மாநுஷனென்னும் வடமொழியின் திரிபாகக்கொண்டு, சாதாரணமான மநுஷ்யசரீரம் உடையவனுவனோ? ஆகான என்றுங் கொள்ளலாம். 'ஓர்தி' என்னும் பாடத்துக்கு - காவலா என்பதனை, காவல ஆ(க) எனக்கொண்டு - நீ அவனை உனக்குக் காக்குந் துணையாக அறிவாயென்று உரைக்க. 'ஓர்தியால் நேரில்' என்னும் பாடத்துக்கு - அவனைச் சென்று சேர்ந்தால யான சொல்லுங் குணங்களையெல்லாம் நீயே தெரிந்துகொள்வாயென்க. அப்பாடத்திற்கே - நேர் இல் எனப் பிரித்து, ஒப்பில்லாத மாரீச னென்றுமாம். 'நேரும்' என்னும் பாடத்துக்கு - எதிர்ப்பட்ட மாரீசனென்க. ஈற்றிலுள்ள 'மாயமானுயினன்' என்பதை-மாய மான் ஆயினன் எனப்பிரித்து, அவ்வடிக்கு - 'மாயைமானானவன், மாய - அழியும்படி (அவனைக்கொன்று), மான - (அப்பொழுது ராவணனால் அபகரிக்கப்பட்ட) மானபோன்ற சீதையை, ஆயினன் - தேடுவானானன் என்றும் உரை கூறலாம்; அவ்வுரைக்கு, ஆயினன் என்பதை - ஆய் என்னும் பகுதியடியாய்ப் பிறந்த இறந்தகால வினைமுற்றாகக் கொள்க; காசிக்கலம்பகத்தில் "மகரமாயினன்" என்பதற்கு-மகரத்தை [மீனை] மாயத்தவ னென்ப பொருள்கொண்டு, மாயினன் என்பதை - மாய் என்பதன் இறந்தகாலமுற்றாகக் கொள்வதுபோல. ஈற்றடி - யமகம்.

ஆயம் - மகளிர்கூட்டம்; இங்குக் கூட்டமென்னும் மாத்திரமாய் நின்றது. மால் - பெருமையுணர்த்தும் உரிச்சொல். நாகர் என்னும் வடசொல்லுக்கு - துக்கமில்லாதவரென்று பொருள்; ந + அகம்: ந-எதிர்மறைப்பொருளுணர்த்துவது, கம் - சுகம்: அஃது அல்லாதது, அகம் துக்கம். ஆழி - ஆழ்ந்திருப்பது; இ - வினைமுதற்பொருள்விகுதி. (பிரளயகாலத்தில்) உலகங்களை அழிப்பதென்றும், வட்டவடிவமானதென்றும் பொருள்கொள்ளலாம் ஆழியான்- சக்கரதரனுமாம். ஏ - தேற்றம். அல்லால் - எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம். காயமான், மான் - வடமொழியில் உடைமைப்பொருளுணர்த்தும் பெயர் விகுதி; வடமொழியிற் சில சொற்களுக்கு 'மாந்' என்பதும், சில சொற்களுக்கு மாந் என்பது 'வாந்' என்று திரிந்தும் பெயர்விகுதியாக வரும்: அகரவீற்றுச் சொல்லுக்குப் பலவாந் குணவாந் என்பவற்றிற்போல 'காயவான்' என வாந் என்பதே வரற்பாலதாயினும், அது எதுகையின்பம் நோக்கி இங்கே மாந் எனவே நின்றதெனக் கொள்க: யாவன் - யாவனு, எவனுமாகானென்ன எதிர்மறை குறித்தது. ஏ - அசை. காவலன் - கா வலன்: காத்தலில் வல்லவன்: அன்றி, காவல் அன்: காத்தல்தொழிலுடையவன். அமான் - அம்மான் என்பதன் தொகுத்தல்; மான் - மஹாந் என்னும் வடமொழியின் விகாரம். மான் நேர்தி - ஐயுருபு உயர்திணையிடத்துத் தொக்கது. ஆல் - அசை. நிருதன் - நைருதன் என்பதன் விகாரம்: நிருருதி என்னுந் திக்பாலகனது வம்சத்தில் தோன்றியவனென்று பொருள் ; நிருதமாரீசன் - உயர்திணைப்பெயர் ஈறு கெட்டது. ஆர் மாயம் - வினைத்தொகை; பண்புத்தொகையாய், அருமையாய், அருமையாகிய மாயமென்றுமாம். மாயம் - மாயாரூபத்தபலம். யமான் - யம னென்னும் வடசொல்லின் நீட்டல் விகாரம்.

ஈற்றடியிற்குறித்த வரலாறு:—தாடகையின் குமாரனான மாரீசன் முன்னமே விசுவாமித்திரமுனிவரது வேள்வியை யழிக்குமாறு சென்று இராமபிரானால் வாயவ்யாஸ்திரஞ் செலுத்திக் கடலில் வீழ்த்தப்பட்டதனால் அப்பிரானது வலிமையையறிந்திருந்தும், சூர்ப்பணகை வார்த்தையாற் சீதைமேற் காதல்கொண்ட இராவணன் துணையாக வேண்டிடவே, பொன்மயமான மான் வேடம் பூண்டு ஸ்ரீராமலக்ஷ்மணர் ஜாநகியுடனே வசித்திருக்கும் ஆச்சிரமத்துச்சென்று விளையாட, அதனைச் சீதை கண்டு பிடித்துத்தரவேண்டுமென்று இராமனைப் பிரார்த்திக்க, அவ்விராமபிரானும் பின்தொடர்ந்து வெகுதூரஞ் சென்றும் அகப்படாமையால் இது மாயையென்று அறிந்து ஓரம்பெய்து வதைத்தனனென்பதாம். (௪௯)

௫௰. உக்கவந்தமுமுடற்பொறைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக்குரைசெயும்புரையவோ
திக்கவந்தரநெடுந்திரள்கரஞ்சினவுதோ
ளக்கவந்தனுநினைந்தமரர்தாழ்சவரிபோல்.

(இ - ள்.) திக்கு - எல்லாத்திக்குக்களிலுமுள்ள உயிர்களெல்லாம், அவம்தர - அழிவடையும்படி, நெடு - நீண்ட, திரள் - திரண்ட, கரம் - கைகளையும், சினவு தோள் - கோபித்துப் பாய்கின்ற தோள்களையுமுடைய, அ கவந்தனும் - அந்தக் கபந்தனென்னும் ராக்ஷஸனும், உக்க - (இவர்கள் கையால்) இறந்துபோன, அந்தமும் - முடிவும்,—(மேலும் அவன்), அமரர் நினைந்துதாழ் - தேவர்களெல்லாம் மதித்து வணங்குகின்ற, சவரிபோல் - சபரியென்பவளைப்போல, உடல் பொறை துறந்து - (பூமிக்குப்) பாரமான தன்சரீரத்தை விட்டு, உயர் பதம் புக்க - சிறந்த [பரம] பதவியடைந்த, அந்தமும் - அழகும்,—நமக்கு - எம்போல்வார்க்கு, உரைசெயும் புரையவோ - சொல்லத்தக்க தன்மையையுடையனவோ? [அல்ல என்றபடி]; (எ - று.)

தன்னிடத்துப் பக்திகொண்ட சவரியோடு, தன்னை விழுங்கவேணுமென்று முயன்ற கபந்தனோடு வாசியற இருவர்க்கும் உயர்பதமளித்த மஹா சீலனென்ன, இராமபிரானது தன்மையைக் கூறியவாறு.

தநுவென்னும் யக்ஷனது மகன், ஸ்தூலசிரஸ் என்னும் முனிவனது சாபத்தால் அரக்கனாய், பிரமனருளால் தீர்க்காயுசுபெற்று, தேவேந்திரனோடு எதிர்த்து அவனது வச்சிராயுதத்தாற்புடைபட்டு, தனது தலை வயிற்றில் அழுந்தியதனால் கபந்தனென்று பெயர்பெற்றான். கபந்தமென்பதற்கு-தலையில்லாத உடம்பென்று பொருள். இவன் தண்டகாரணியத்தில் ஓர் பக்கத்தில் இருந்து தனது நீண்ட கைகளிரண்டையும் எட்டியமட்டிற் பரப்பித் துழாவி அகப்பட்ட ஜீவராசிகளையெல்லாம் வாரி வாய்ப்பெய்து விழுங்கிக்கொண்டிருக்க, அங்குச் சென்று அவன் தோள்களினிடையே அகப்பட்டுக்கொண்ட ராமலக்ஷ்மணர்கள் அவன் தோள்களை வாள்களால்வெட்டிவிட, அவர்களது திருக்கைகள் தீண்டினமாத்திரத்தில் அவன் முன்னையசாபமும் முற்பிறப்பின் தீவினையுந் தீர்ந்து ராக்ஷஸ சரீரத்தைவிட்டுத் தேவசரீரம்பெற்றுப் பெருமானைப் பலவாறு

பிரார்த்தித்து நற்கதி பெற்றானென்பதும் ; ஞானமுந் தவமும் மிக்கவளாகிய சபரியென்பவள் இராமனுக்காக இனியபழங்களைச் சுவை பார்த்துப்பார்த்து வைத்திருந்து சமர்ப்பிக்க, இராமபிரானும் அவற்றை அமுதினுமினிதாகக் கொண்டு அமுதுசெய்து பின்பு அவளுக்கு மோக்ஷங்கொடுத்தருளினானென்பதும்—ஆரணியகாண்டத்துக் கதைகள்.

முதலெழுத்து ஒழிந்த இரண்டுமுதலிய சில எழுத்துக்கள் ஒன்றிநின்று பொருள் வேறுபட்டுவந்தது, திரிபு என்னுஞ் சொல்லணியாம்.

"நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலாவலிநெஞ்சுடைப், பூமிபாரங்கள்" என்றபடி, பகவந்நாம ஸ்மரணமில்லாதவரது சரீரம் விசுவம்பரையான பூமியாற் பொறுக்கவொண்ணாத பாரமாகுதலால், 'உடற்பொறை' எனப்பட்டது ; இதனை "ஈட்டம்வறி யிசைவேண்டாவாடவர், தோற்றம் நிலக்குப் பொறை," "கண்ணோட்டத்துள்ள துலகியல் லஃதிலார், உண்மை நிலக்குப் பொறை" என்றாற்போலக் கொள்க. அன்றியும், "பிறப்பறுக்கலுற்றார்க் குடம்புமமிகை" என்றபடி முத்திபெறுபவர்க்கு அதற்குக் கருவியாயிருந்த உடம்பும் அநாவசியமாகத் தோன்றுமாதலாலும், 'உடற்பொறை' என்றல் தகும். 'உடற்பகை துறந்து' என்றும் பாடமுண்டு. அந்தம் என்பது முடிவை யுணர்த்தும்போது, வடமொழி; அழகைக் குறிக்கும்போது, தென்மொழி. உயர் பதம் - உயர்ந்த உயாகிற உயரும் பதம் என முக்காலமும்பற்றிவந்த வினைத்தொகை. (௩0)

[அநுமான் இராமலக்ஷ்மணரது மகிமையைக் கொண்டாடுதல்]

௩௧. முனைவருமபிறருமேன்முடிவரும்பகலெலா
மினையர்வந்துறுவரென்றியறவம்புரிகுவார்
வினையெனுஞ்சிறைதுறந்துயர்பதம்விரவினா
ரெனையரென்றுரைசெய்கேனிரவிதன்சிறுவனே.

(இ - ள்.) இரவிதன சிறுவனே சூரியனது குமாரனே !—முனைவரும் - முனிவர்களும், பிறரும்-மற்றையவர்களும், மேல் முடிவு அரும் பகல் எலாம் - முற்காலந்தொடங்கி எல்லையில்லாத பலநாளாக, இனையர்வந்து உறுவர் என்று - இவ்விராமலக்ஷ்மணர்கள் (தம்பக்கல்) வந்து சேரவேணுமென்று, இயல் தவம் புரிகுவார் - (தம்தமது) சக்திக்குத் தகுதியான தவத்தைச்செய்து, (பின்பு இவர்களது தரிசனத்தைப்பெற்று), வினை எனும் சிறை துறந்து - ஊழ்வினைப் பந்தமாகிய காவலை நீங்கி, உயர் பதம் - சிறந்த மோக்ஷபதவியை, விரவினார் - சேர்ந்தார்கள் ; (அப்படிப்பட்ட ஸ்ரீராமலக்ஷ்மணர்களை), எனையர் என்று-எப்படிப்பட்டவரென்று, உரைசெய்கேன் - சொல்லிமுடிப்பேன்? (எ - று.)— இப்படிப்பட்டவரென்று உரைக்க என்னால் இயலாதென்றபடி.

இருடியர் முதலியோர் இவரது வருகையைக்குறித்துத் தவஞ்செய்கின்றதனால், இவர் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யத் திருவவதரித்த முதற்கடவுளே போலுமென்று கூறினனென்க. மோக்ஷத்தையடைவதற்கு நல்வினை தீவினையென்ற இரண்டும் தடையாய்நிற்றலால், 'வினையெனுஞ்

சின்ற' எனப்பொருட்படக்கூறினர்; "இருளசே ரிருவினையுஞ் சேரா" என்றார் திருவள்ளுவனாரும்.

முனிவர்- முனிவர் என்பதன திரிபு: அவர் - சரபங்கர் முதலியோர்; முன்னையவரை முனிவரென்றது ஓர் சொல்விழுக்காடு என்றலு முண்டு. பிறர் - சபரி முதலியோர். இயல் தவம்-இலக்கணமமைந்த தவமுமாம். சிறை-காவல் வீடு. செய்கேன, ககரவிடைநிலை - எதிர்காலமுணர்த்திற்று. புரிகுவார்- கு - சாரியை. எனையரென்று உரைசெய்கேன் - (அவர்களால் நற்கதியடைந்த முனிவர்களை) எத்தனைபேரென்று சொல்வேனென்றுமாம். 'முடிவறும்' என்று பிரதிபேதம் (௫௧)

[அநுமான் இவர்கள் உன்னோடுநேசிக்க விரும்புகின்றன ரென்றல்]

௫௨. மாயையான் மதியிலாநிருதர்கோன்மனைவியைத்
தீயகானெறியினுய்த்தனனவட்டேடுவார்
நீயையாதவமிழைததுடைமையானெடுமனந
தூயயாவுடைமையானுறவினைததுணிகுவார்.

(இ - ள்.) ஐயா - தலைவனே! மதி இலா நிருதா கோன் - புத்தியில்லாத ராக்ஷஸராஜனுகிய ராவணன, மனைவியை - (இந்த ஸ்ரீ ராமனது) தருபததினியாகிய சீதையை, மாயையால் - வஞ்சனையினாலே, தீய கான் நெறியின் உய்த்தனன - கொடிய காட்டுவழியிலே எடுத்துககொண்டுபோனன; அவள் தேடுவார - அவளைத தேடுபவர்களாய் வந்த ராமலக்ஷமணர்கள், நீ தவம இழைத்து உடைமையால் - நீ நல்வினை செய்திருததலாலும், நெடு மனம தூயை ஆ உடைமையால் - (நீ) பெரிய [சிறந்த] மனததிற் பரிசுததியுடையவனாயிருததலாலும், உறவினை - (உனனோடு) சிநேகிததலை, துணிகுவார் - நிச்சயிப்பவராஞர்கள்; (எ - று.)

இதனால், ராமலக்ஷமணர்கள அங்குவருவதறகு அநுமான காரணங்கூறினனென்க.நல்வினையும் மனத்தூய்மையும் உடையவரிடத்தன்றி இப்படிப்பட்ட மகானகள் சென்று சேர்ந்து நட்புககொள்ள நினையாராதலால், இங்ஙனங்கூறியது. இராமனது வலிமையை யோசாமையாலும், பிறன்மனைவியைக் கள்ளத்தாற் கவர்ந்துசென றதனாலும், இராவணனை 'மதியிலாநிருதர்கோன்' என்றான். கானுக்குத் தீமையாவது - கொடியராக்ஷஸர் முதலியோா முனிவராதியோரை வருத்துதற்கு இடமாயிருததல. தீயகான-நெருப்பையுடைய காடு என்றுமாம்.

அவள் + தேடுவார் = அவட்டேடுவார்; உயாதிணையிரண்டாம்வேற்றுமைத்தொகையாதலின, இயல்பாகவேண்டியவிடத்து விகாரப்பட்டது; "இயல்பின் விகாரம்" தூயை-பண்படியாப்பிறந்த முன்னிலையொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். துணிகுவாா, கு சாரியை. 'மதியிலாணிருதர்கோன்,' 'தீயதென்னகரினுய்த்தனனவட்டேடுவான்,' 'தவமவிளைததுடைமையால்,' 'தூய்மையாவுடைமையால்'எனபனபாடபேதம் 'தீயதாநெறியினுய்த்தனன்'என்று பாடமோதி, களவினுற கொண்டுபோனனென்று உரைப்பாருமுளர். (௫௨)

[இராமலக்ஷ்மணரோடு சிநேகஞ்செய்யவரும்படி அநுமான் சுக்கிரீவனை யழைத்தல்.]

௫௩. தந்திருந்தன ரருட்டகைநெடும்பகைஞ
னிந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புந்தியின்பெருமையாய்போதரென்றுரைசெய்தான்
மந்திரங்கெழுநூன்மரபுணர்ந்துதவுவான்.

(இ - ள்.) 'புந்தியின் பெருமையாய் - புத்தியினால் மகிமையையுடையவனே!—(அவர்கள்), அருள் - கருணையை, தந்து இருந்தனர் - (நம்மிடத்தில்) வைத்திருக்கிறார்கள்; (ஆதலால்), தகை நெடும் பகைஞன் ஆம் இந்திரன் சிறுவனுக்கு - வலிமை மிக்க பகைவனாகிய இந்திரகுமாரனான வாலிக்கு, இறுதி - மரணம், இன்று - இப்பொழுதே, இசைதரும் - நேரிடும்; (ஆகையால்), போதர் - (அவர்களோடு நட்புக்கொள்ளுதற்குப்) புறப்பட்டு வருவாயாக,' என்று—, கெழுமு நூல் மரபு உணர்ந்து - விளங்குகின்ற (அரசர்க்குரிய) நீதிசாஸ்திரம் முதலியவற்றினது முறைமையை அறிந்து, மந்திரம் உதவுவான் - (சுக்கிரீவனுக்குக் காலத்துக்கும் இடத்துக்கும் ஏற்ற) ஆலோசனை சொல்பவனாகிய அநுமான், உரைசெய்தான் - சொன்னான்; (எ - று.)

புந்தி - புத்தி யென்பதன் மெலித்தல். போதர் என்பது வா என்னும் பொருளதாதலை "போதர்கண்டா யிங்கேபோதர்கண்டாய்", "போதரே யென்று சொல்லி" என்ற பெரியார்பாசுரங்களிலுங் காண்க. போதரு என்று பிரிப்பாருமுளர். மந்த்ரம் - வடசொல். 'போதியென் றுரைசெய்தான்' என்றும் பாடமுண்டு. (௫௩)

[சுக்கிரீவன் இராமபிரானை யணுகுதல்.]

௫௪. அன்னவா முரையெலா மறிவினா லுணர்குவா
னுன்னையே யுடையவெற் கரியதெப் பொருளரோ
பொன்னையே பொருவுவாய் போதெனப் போதுவான்
றன்னையே யனையவன் சரணம்வந் தணுகினான்.

(இ - ள்.) அன்ன ஆம் உரை எலாம் - அத்தன்மையனவாகிய (அநுமான் சொன்ன) வார்த்தைகளையெல்லாம், அறிவினால் - (தனது) சூக்ஷ்மபுத்தியால், உணர்குவான் - அறிபவனாகி, (சுக்கிரீவன் அநுமானைநோக்கி), 'பொன்னையே பொருவுவாய் - பொன்போன்றவனே! உன்னையே உடைய - (மகாபுத்திமானான) உன்னையே துணையாகவுடைய, எற்கு - எனக்கு, எப்பொருள் - எந்தக் காரியம், அரியது - அருமையானது? [எல்லாம் எளியதே]; போது - வருவாயாக,' என - என்றுசொல்லி, போதுவான் - புறப்பட்டவனாய்,—தன்னையே அனையவன் - (தனக்கு வேறு எவரும் ஒப்பில்லாமையால்) தன்னைத்தானே ஒப்பவனாகிய ஸ்ரீராமனது, சரணம் - திருவடிகளை, வந்து அணுகினான் - வந்து சேர்ந்தான்; (எ - று.)

அநுமான் கூறியதற்கு இசைந்து அவனையும் உடனழைத்துக்கொண்டு இராமபிரானுள்ள இடத்தைச் சுக்கிரீவ னணுகின னென்பதாம். பெரியோரை யடைந்தா னென்னும் பொருளில் அவர்திருவடியையணுகினு னென்றல், மரபு. பொன் - அநுமானுடைய தேககாந்திக்கும், யாவரும் மதிக்குஞ் சிறப்புக்கும், கிடைத்தற்கு அருமைக்கும் உவமை. இனி, 'பொன்னையே பொருவுவாய்' என்பதற்கு - (தேவேந்திரனுக்குக் குருவும் மந்திரியுமாகிய) பிருகஸ்பதிபகவானையே யொத்திருப்பவனே எனப் பொருள் கொள்ளுதலும் தகும். 'தன்னையே யனையவன்' என்றது, இயைபின்மையணி. "'தன்னொப்பாரில்லப்பன'" என்றார் பெரியாரும்; "தனக்குவமையில்லாதான்" என்றது, திருக்குறள். எற்கு-எனக்கு: அகரச்சாரியை தொக்கது. உணர்குவான, கு - சாரியை. அரோ - ஈற்றசை. தன்னையே அனையவன் என ஒப்பில்லாமை கூறியதனால், உயர்வில்லாமை அருத்தாபத்தியாற் பெறப்படும். சரணம - எழுந்தருளியிருக்கின்ற இடமாகவுமாம். மூன்றாமடி - முற்றுமோனை. 'போதுவாயென்றனன்' என்பதும் பாடம். (௫௪)

## வேறு.

[சுக்கிரீவன் இராமபிரானைக் காணுதல்.]

௫௫. கண்டன னென்ப மன்னோ கதிரவன் சிறுவன் காமர்க்
குண்டலந் துறந்த கோல வதனமுங் குளிர்க்குங் கண்ணும்
புண்டரி கங்கள் பூத்துப் புயறழீஇப் பொலிந்த திங்கண்
மண்டல முதயஞ் செய்த மரகதக் கிரிய னானை.

(இ - ள்.) கதிரவன் சிறுவன் - சூரியகுமாரனான சுக்கிரீவன்,—புண்டரீகங்கள் பூத்து - தாமரைமலர்கள் மலரப்பெற்று, புயல் தழீஇ - காளமேகந் தழுவப்பெற்று, பொலிந்த - விளங்குகின்ற, திங்கள் மண்டலம் - சந்திரமண்டலம், உதயம் செய்த - உதிக்கப்பெற்ற, மரகதம் கிரி - மரகதமலையை, அனானை-போன்றவனான ஸ்ரீராமபிரானது, காமர் குண்டலம் துறந்தகோலம் வதனமும் - அழகிய குண்டலங்களை யிழந்த காணுதற்கு இனிய திருமுகத்தையும், குளிர்க்கும் கண்ணும் - குளிர்ச்சியான திருக்கண்களையும், கண்டனன - பார்த்தான்; (எ - று,)—என்ப, மன், ஓ - அசைகள்.

கதிரவன் - ஒளியையுடையவன். புண்டரிகங்கள் - திருக்கை திருவடி முதலிய அவயவங்களுக்கும், புயல்-கரிய திருக்குழலுக்கும், திங்கள்மண்டலம்-திருமுகமண்டலத்துக்கும், மரகதக்கிரி-நீலமேனிக்கும் உவமை. பின்னிரண்டடி-இல்பொருளுவமை. தழுவியெனனும் இறந்தகால வினையெச்சம், தழீஇ என விகாரப்பட்டு அளபெடுத்தது: சொல்லிசையளபெடை. குண்டலந்துறந்தவதன 'மென்றது, பித்ருவாக்கியபரிபாலனஞ் செய்தற்பொருட்டு வனவாசம் புறப்பட்டபொழுது சகலசம்பத்துகளோடு அரசர்கோலத்துக்குஉரிய திருவாபரணம் முதலியவற்றையுந் துறந்து மரவுரியுடுத்துத் தவவேடம் பூண்டதனால் கிரியனானை வதனமும் கண்ணும் கண்டனன் - இரண்டு செயப்படுபொருள் வந்த வினை; இது வடமொழியில் த்விகர்ம கர்த்தரி ப்ரயோகமெனப்படும்: முதலை ஆறாம்வேற்றுமையாகத் திரித்தல், தமிழ்மரபு. இனி,

இச்செய்யுளுக்கு - கண்ணையும் வதனத்தையும் தன்னிடத்திலுடைமையாற் புண்டரீகங்கள் பூத்துப்பொலிந்த திங்கள்மண்டலம், உதயஞ்செய்த மரகதக் கிரியனுனைக் கதிரவன் சிறுவன் கண்டனனெனக் கூட்டியுரைப்பினுமாம்: குண்டலம், வதநம், புண்டரிகம், மண்டலம், உதயம்; மரகதம், கிரி, - வட சொற்கள். அனுன் - அன்னுன்: தொகுத்தல். குளிர்க்கும், கு - சாரியை; பிறவினைப்பெயரெச்ச மென்றலுமாம்.

இதுமுதற் பதினைந்துகவிகள் - இப்படலத்தின் பதினோராங்கவிபோன்ற அறுசீராச்சிரியவிருத்தங்கள். (ருரு)

[சுக்கிரீவன் இராமலக்ஷ்மணரைச் சிறப்பாகக் கருதுதல்.]

ருசு. நோக்கினுனெடிதுநின்றுனொடிவருங்கமலத்தண்ண
லாக்கியவுலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாங்குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்தவென்பான்.

(இ - ள்.) நோக்கினுன் - (அவ்வாறு சுக்கிரீவன்) பார்த்துக்கொண்டு, நெடிது நின்றுன் - வெகுநேரம் அதிசயித்துநின்றவனுய், 'நொடிவு அருங்கமலத்து அண்ணல் - சொல்லுதற்கரிய (சிறப்பையுடைய) தாமரைமலரில் தோன்றிய பிரமதேவன், ஆக்கிய - படைத்த, உலகம் எல்லாம் - உலகத்திலுள்ள சகல ஜீவராசிகளும், அன்றுதொட்டு - அந்தப் படைப்புக்காலந் தொடங்கி, இன்று காறும் - இன்றைவரையிலும், புரிந்த - செய்தவையான, பாக்கியம் எல்லாம் - நல்வினைகளெல்லாம், குவிந்து - திரண்டு, இருபடிவம் ஆகி - இரண்டு திருவுருவமாய், மேக்கு உயர் தட தோள் பெற்று - மேலாக உயர்ந்த பெரிய தோள்களையுடையவையாய், வீரர் ஆய் விளைந்த - இவ்வீரர்களாய்த் தோன்றின', என்பான் - என்று எண்ணுபவனுனுன்; (எ - று.)

"உலகமென்பது-உயர்ந்தோர்மாட்டே" என்பவாதலால், இங்கு 'உலகம்' என்பது-உயர்ந்தோரை யுணர்த்திற்று; இவவிருவரும் இங்கே திருவவதரித்தது இவ்வுலகத்துப்பிறந்துள்ள பெரியோர்களின் புண்ணியப்பயனே யென்பான், 'உலகமெல்லாம்புரிந்த பாக்கியம் இருபடிவமாகி வீரராய்விளைந்த' என்றுன். சாதுஜனங்களை நலியுங் கொடியோர்களையெல்லாம் நிரசித்தலால், இவர்கள் அச்சாதுசனங்களின் புண்ணியப்பயனுவரென்க. நொடிவு-தொழிற்பெயர். நொடிவு அரு - அழிவில்லாத என்றுமாம். கமலம், பாக்யம் - வட சொற்கள். மேக்கு; மேலென்னும் பொருளதாதலை, "வெங்கடுங்கால் பொர மேக்குநோக்கிய" எனப் பாலகாண்டத்திலுங் காண்க. புரிந்த - பலவின்பாற் பெயர். விளைந்த - முற்று. 'புரிந்ததெல்லாம்,' 'பெற்ற,' 'விளைந்ததென்பான்' என்பன - பிரதிபேதம். (ருசு)

[திருமாலே இவ்வாறு திருவவதரித்துள்ளானெனச் சுக்கிரீவன் நிச்சயித்தல்.]

ருஎ. தேறினனமரர்க்கெல்லாந்தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானுடராகிமன்னே
வாறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானுடம்வென்றதென்றே.

(இ - ள்.) 'அமரர்க்கு எல்லாம் - எல்லாத்தேவர்கட்கும், தேவர் ஆம்-கடவுளாகிய, தேவர் அன்றே - முதற்கடவுளே [ஸ்ரீமகாவிஷ்ணுதாமே], மாறி - (தமது சொரூபம்) மாறி, இ பிறப்பில்-இந்த அவதாரத்தில், மானுடர் ஆகி - மனிதசரீரமுடையவராய், வந்தார்-திருவவதரித்தார்; (ஆதலால்),—ஆறுகொள் சடிலத்தானும் - கங்காநதியைக் கொண்ட சடையையுடையவனான உருத்திரனும், அயனும் - பிரமனும், என்ற இவர்கள் ஆதி - என்ற இவர்கள் முதலிய, வேறு உள குழுவை எல்லாம் - வெவ்வேறாகவுள்ள தெய்வப்பிறப்பு முதலியவற்றையெல்லாம், மானுடம் - இம்மனிதப்பிறப்பு, வென்றது - ஜயித்து மேம்பட்டது,' என்றே தேறினன் - என்று நிச்சயித்தான்; (எ - று.)

இராமலக்ஷ்மணர் நல்லிலக்கணங்களுள் ஒன்றானுங் குறைவின்றியிருந்தமையால், சுக்கிரீவன், இவர்களைப் புருஷோத்தமனது அவதாரமென்றே கருதினான். பின்னிரண்டடிகளை முன்னிரண்டடிகள் சமர்த்தித்து நிற்பது - தொடர்நிலைச் செய்யுட்குறியணி. தேவர்கட்குள் முதல்வனான திருமாலே மானிடமாகத் திருவவதரித்துவிட்டதனால், இம்மானிடப்பிறப்புத் தெய்வப் பிறப்பினுஞ் சிறந்ததெனக் கூறினானென்பதாம். 'அமரர்க்கெல்லாந் தேவராந்தேவர்'—"முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர் வண்ணன்" என்றார் பெரியாரும். முன்பு மீனம், கூர்மம், வராகம், நாரசிங்கம் முதலிய திருவவதாரங்கள் செய்திருத்தலால், 'இப்பிறப்பில் மானுடராகி வந்தார்" என்றான். கபிலமுனிவரது கோபத்தீக்கு இலக்காகிச் சாம்பராய் நற்கதியிழந்த தன்மூதாதையரான சகரபுத்திரர்களை உய்விக்கவேண்டித் தவஞ்செய்த பகீரதசக்கரவர்த்தியின் வேண்டுகோளினாற் கங்காநதியைச் சடைமுடியி லேற்றமையால், சிவபிரான், 'ஆறுகொள்சடிலத்தான்' எனப்பட்டான். மாநுஷர், ஜடிலம், அஜன் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. குழு - கூட்டம். அன்றே - தேற்றம், தேவர் வந்தார் - உயர்வுப்பன்மை; வடநூலார் - 'பூஜாயாம் பஹுவசநம்' என்பர். மன்னோ - ஈற்றசை. என்றிவர் - தொகுத்தல். இவர்கள், கள் - விகுதிமேல் விகுதி. ஆகி - வடசொல். (௫௭)

[சுக்கிரீவன் ஸ்ரீராமனை யணுக, அப்பிரான் இவனை உபசரித்தல்.]

௫௮ எனநினைந் தினையவெண்ணி யிவர்கின்ற காதலோதக்
கனைகடற் கரைநின் றேறாக் கண்ணிணை களிப்ப நோக்கி
யனகனைக் குறுகினானவ் வண்ணலு மருத்தி கூரப்
புனைமலர்த் தடக்கை நீட்டிப் போந்தினி திருத்தி யென்றான்.

(இ - ள்.) (சுக்கிரீவன்),—என நினைந்து - என்று நினைத்து, இனைய எண்ணி - இத்தன்மையவற்றை ஆலோசித்து,—இவர்கின்ற - மேன்மேற் பெருகுகின்ற, காதல் - ஆசையாகிய, ஓதம் கனை கடல்நின்று - வெள்ளத்தையுடைய ஒலிக்கின்ற கடலினின்றும், கரைஏறா - கரையேறாமல் [ஆசைக்கு எல்லையில்லாதவனாய்], கண் இணை களிப்ப நோக்கி - (தனது) இரண்டு கண்களும் பெருமகிழ்ச்சியடையும்படி தரிசித்து,—அனகனை - குற்றமற்றவனான ஸ்ரீராமனை, குறுகினான் - வந்து சமீபித்தான்; அ அண்ணலும் - அப்பெரி

யோனும்,—(அவனை நோக்கி), அருத்தி கூர-அன்பு மிக; புனை மலர் தடக்கை நீட்டி - அழகிய செந்தாமரைமலர்போன்ற பெரிய (தனது) திருக்கையை நீட்டி 'போந்து - இங்குவந்து, இனிது - இனிமையாக, இருத்தி-இருப்பாய்,' என்றான் - என்று உபசரித்தான்; (எ - று.)

மிக்க அன்போடு சுக்கிரீவன் இராமபிரானையணுக, இராமபிரான் தானும் மிக்க கருணையுடன் அவனை வரவேற்று உபசரித்தனனென்பதாம். எறு-ஈறு கெட்ட எதிர்மறைவினையெச்சம். ந+அகன்=அநகன்: குற்றமில்லாதவன்; வடசொல். கைநீட்டுதல் - உபசாரக்குறிப்பு. 'கனைகடற் கரைநின்றேற' என்றும், 'கனைகடற்றிரையுளாழ்ந்து' என்றும் பாடமோதுவாருமுளர். (௫௮)

[இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் உண்டான சிநேகத்தின் வருணனை.]

௫௯. தவாவலியரக்கரென்னுந்தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தா
ரவாமுதலறுத்தசிந்தையநகனுமரியின்வேந்து
முவாவுறவந்துகூடுமுடுபதியிரவியொத்தார்.

(இ - ள்.) அவாமுதல் அறுத்த சிந்தை அநகனும்-ஆசையை (இயற்கையாகவே)வேரோடுபோக்கிய மனத்தையுடைய நிர்த்தோஷனான ஸ்ரீராமனும், அரியின வேந்தும்-வாநரராஜனான சுக்கிரீவனும்,—(ஒருவரோடொருவர் கூடியவர்களாய்)—தவா வலி அரக்கர் என்னும் தகா இருள் பகையை தள்ளி அழியாதபலத்தையுடைய ராக்ஷசரென்கிற தகுதியற்றபகைவர்களாகிய இருட்டையொழித்து, குவால் அறம் நிறுத்தற்கு - கூட்டமாகத்திரண்ட தருமத்தை நிலைநிறுத்துதற்கு, ஏற்ற-தக்கதாய்வந்த, காலத்தின் - காலத்தினது, கூட்டம் - சேர்க்கையை, ஒத்தார் - ஒத்திருந்தார்கள், (இன்னும் அவர்கள்) உவா உற - அமாவாசியை வர, வந்து கூடும் - (ஒருவரோடு ஒருவர்) வந்து சேர்கின்ற, உடுபதி இரவி - சந்திரசூரியர்களையும், ஒத்தார்—;(எ - று)

"மெய்த்திருப்பதம் மேவென்றபோதினும், இத் திருத்துறந்தேகென்ற போதினும், சித்திரத்தினலர்ந்த செந்தாமரை, யொத்திருக்குமுகத்தனை" என்றபடி ஒழிதற்கரிய மண்ணாசை பொன்னாசைகளை வெறுத்ததனால், இராமபிரானை 'அவாமுதலறுத்தசிந்தை யநகன்' என்றார். இராமசுக்கிரீவர்களது சிநேகம் - இராவணாதி ராக்ஷஸ ஸம்ஹாரத்துக்கு மூலகாரணமாய் முடிதலால் 'தவாவலி......காலத்தின் கூட்டமொத்தார்' என்றும், இச்சிநேகம் இராமசந்திரனுக்கும் சூரியபுத்திரனுக்கும் உண்டானதாதலால், 'உவாவுற வந்துகூடு முடுபதி யிரவியொத்தார்' என்றும் கூறினர். உவமையணி. முதலடியில் உருவகவணி அங்கமாய் நின்றது. அறங்கள் மிகப்பலவகைப்படுதலால், 'குவாலறம்' என்றார். அவா முதல் அறுத்த - காமம்முதலிய குற்றங்களைப் போக்கின என்றுமாம்.

சூரியகிரணங்களின் சம்பந்தத்தால் நிறைவுற்று அமிருதமயமாயிருக்கின்ற சந்திரனைக் கிருஷ்ணபக்ஷத்திலே அக்கினிமுதலான தேவர்கள் தினம் ஒவ

லொரு கலையாகப் பானஞ்செய்கின்றார்கள். இப்படி சதுர்த்தசிவரையில் தேவர்கள் பானஞ்செய்தது போக மிச்சப்பட்ட இரண்டுகலைகளுள் ஒன்றை அமாவாசையில் பிதிருக்கள் பானஞ்செய்கின்றார்கள்; இங்ஙனம் ஒருகலை மாத்திரமாய் மிச்சப்பட்ட சந்திரனைச் சூரியன் மீண்டும் பதினைந்து திதிகளில் தினம் ஒருகலையாகத் தன் கிரணத்தால் வளர்த்து நிறைக்கின்றான். தேவர்களாற் பானஞ்செய்யப்பெற்று இரண்டு கலைகள் மிச்சப்பட்டு நின்றவனை சந்திரன் சூரியகிரணங்களில் மறைந்துவசிக்கின்ற நாளே, அமாவாசை. உடுபதி - நக்ஷத்திரங்களுக்குத்தலைவன். இதுவும், 'ரவி' என்பதும் வடசொற்கள்.

[இதுவும் அது.]

கூ௦. கூட்டமொத திருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னா
ளீட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்ததொத்தார்
மீட்டுமவாளரக்கரென்னுந்தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார்.

(இ - ள்.) கூட்டம் ஒத்து இருந்த-நட்பாய்க் கூடியிருந்த, வீரர்-வீரர்கள் [ராமசுக்கிரீவர்களாகிய இவர்கள் தாம்],—குறித்தது ஓர் பொருட்கு-நினைத்ததொரு காரியம் நிறைவேறுதற்கு, முன் நாள் ஈட்டிய தவமும்-முற்பிறப்பிற்செய்த நல்வினையும், பின்னர்-பின்பு [இப்பிறப்பிற்] செய்கின்ற, முயற்சியும்-பிரயத்தனமும், இயைந்தது-(ஒன்றோடொன்று) சேர்ந்து அமைந்ததை, ஒத்தார்—; மீட்டும்-மேலும்,—வாள் அரக்கர் என்னும் தீவினை - வாளையோலக் கொடிய ராக்ஷஸர்களாகிய பாவத்தை, வேரின் வாங்க - வேரோடு அழிக்க, கேட்டு உணர்-(நல்லாசிரியர்பக்கல்) உபதேசம்பெற்று அறிந்த, கல்வியோடு - கல்வியறிவும், ஞானமும் - தத்துவஞானமும், கிடைத்தது-கூடியதையும், ஒத்தார்—; (எ - று.)

கல்வியும் ஞானமும் கூடிய வழியே தீவினையொழிதல்போலவும், ஊழ்வினையும் முயற்சியுங்கூடியவழியே ஒருகாரியம் முற்றுதல்போலவும், இவ்விருவரும் நண்பினராய்க் கூடியதனாலேயே ராக்ஷஸஸம்ஹாரம் நிறைவேறுமெனபதாம். உவமையணி. 'கூட்டமுற்றிருந்த,' 'முன்னரீட்டிய' என்று சிலபிரதிகள்.

[சுக்கிரீவன் ராமனை நோக்கிக்கூறிய முகமன்.]

கூக. ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீவினைதீயநோற்றாரென்னின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலமிக்கோயை
மேயினன்விதியேநல்கின்மேவலாகாதென்னென்றான்.

(இ - ள.) ஆயது ஓர் அவதியின்கண்-(இவ்வாறு) கூடியிருந்த அச்சமயத்தில்,—அருக்கன் சேய் - சூரியகுமாரன் [சுக்கிரீவன்],—அரசை நோக்கி - ஸ்ரீராமனைப்பார்த்து, 'செல்வ-எல்லாச்செல்வமுமுடையவனே! உலகுக்கு எல்லாம் நாயகம் என்னல் ஆம் சகலலோகங்களுக்குந் தலைமையானபொருளென்று சொல்லுதற்கேற்ற, நலம் மிக்கோயை - நல்ல திருக்கலியாண குணங்கள் மிக்குள்ளவனாகிய, நின்னை-உன்னை, மேயினன்-(யான்வந்து) சேரப்பெற்றேன்;

(ஆதலால்), என்னின் - என்னைக்காட்டிலும், தீவினை தீய்நோற்றார்-கொடிய கருமம் ஒழியும்படி தவஞ்செய்தவர், யார் - யாவருளர்? விதியே நல்கின் - ஊழ்வினையே கொண்டுவந்து கூட்டி முடித்தால், மேவல் ஆகாது என்-சித்தியாதது யாது!' என்றான—; (எ - று.)

இப்பிறப்பில் நல்வினைசெய்யாதிருந்தாலும் ஊழ்வினை யிருந்தால் எது தான் சித்தியா தென்றபடி. அருக்கன - அர்க்கன். இடை யிரண்டடிகளிற் கூறிய சிறப்புப்பொருளை 'விதியேநல்கின மேவலாகாதென்' என்ற பொதுப் பொருள் சமாத்திததுநிற்பது - வேற்றுப்பொருள்வைப்பணி; இதனை, வடமொழியில் அர்த்தாந்தரந்யாஸாலங்கார மெனபர். ஆயது - பொருந்தியது. அவதி - எல்லை. மிக்கோய் - வினையாலணையும் பெயரிடத்து யகரவீற்றயல் ஆ ஓ வாயிறறு. யேயினன் - அனவிகுதி, தனமைககு வந்தது; புதியன புகுதல். அவதி, அர்க்கன, விதி - வடசொற்கள். 'ஆயதோரமைதியினகண்; என றம், 'நாயகனுலகுக்கு' என றும பாடங் காணப்படுகின்றது. (கக)

[இராமன் தாங்கள் அங்குவந்த வரலாற்றைக் கூறுதல்.]

கஉ. மையறுதவததின்வந்தசவரியிம்மலையினீவந்
தெய்தினையிருந்ததன்மையியம்பினள்யாங்களுற்ற
கையறுதுயரநின்னாற்கடப்பதுகருதிவந்தே
மையநிறதீருமென்னவரிக்குலததரசன்சொல்வான்.

(இ - ள.) (அதுகேட்டு ஸ்ரீராமன சுக்கிரீவனை நோக்கி),—'ஐய-சிறந்தவனே!— மை அறு தவததின வந்த சவரி-குற்றமில்லாத தவமுடையவளாய் வந்த சபரியானவள், இ மலையில் - இந்த ருசியமூகபருவததத்தில், நீ வந்து எய்தினை இருந்த தன்மை - நீ வந்து பொருந்தியிருந்த வரலாற்றை, இயம்பினள் - சொனனாள்; யாஙகள் உற்ற கை அறு துயரம் - நாஙகள் அடைந்த சிறுமையில்லாத [மிகப்பெரிய] துனபம், நினனால் கடப்பது-உன்னால் நீங்குவதை, கருதி - எண்ணி, வந்தோம் - இங்கு வந்தோம்; நின் தீரும் - (அததுனபம்) உன்னால் தீரக்கடவதாம்,' என்ன - என றுசொல்ல,—அரி குலத்து அரசன் - குரங்குக்கூட்டத்துக்குத் தலைவனாகிய சுக்கிரீவன, சொல்வான் - சொல்பவனானான்; (எ - று.)

கவந்தன்சொற்படி நின்னைச் சினேகிக்குமாறு யான் நாடிவரும்போது சபரியானவள் நீ உள்ள இடத்தைத் தெரிவிக்க, எனது துயரதனதப்போக்கிக்கொள்ளுமாறு இப்போது உன்னிடத்து வந்தே னென்று இராமபிரான் கூறின னென்பதாம். தவத்திற்குக் குற்றம் - காமம் வெகுளி மயக்கம். எய்தினை - முன்னிலைத் தெரிநிலைமுற்றெச்சம். கையறுதல் - துணையில்லாமையும், செயலில்லாமையுமாகவுமாம். வந்தேம் - படர்க்கையை உளப்படுத்திய தன்மைப்பன்மை; லக்ஷ்மணனையும் உட்படுத்தியதனால். துயரம் சீதையைப் பிரிந்தது. 'தவத்தினான' என று பிரதிபேத முண்டு. (கஉ)

[சுக்கிரீவன் இராமபிரானைச் சரணம்புகுதல்.]

௩௩. முரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
யிருணிலைப்புறத்தின்காறுமுலகெங்குந்தொடரவிக்குன்
றரணுடைத்தாகியுய்ந்தேனருயிர்துறக்கலாற்றேன்
சரணுனைப்புகுந்தேனென்னைத்தாங்குதறருமமென்றான்.

(இ - ள்.) 'முன்னவன் - (எனக்கு) முன்பிறந்தவ[தமைய]னாகிய வாலி, பின் வந்தேனை - பின்பிறந்தவனான என்னை, முரண் உடை தட கை ஒச்சி - வலிமையையுடைய பெரிய (தனது) கையை (அடித்தற்காக) உயரத்தூக்கிக் கொண்டே, இருள் நிலை புறத்தின் காறும் - இருட்டுக்கு இருப்பிடமாகிய இவ்வுலகத்துக்கு அப்புறம் வரையிலும், உலகு எங்கும் - சகலலோகங்களிலும், தொடர - பின்தொடர்ந்து துரத்த, இ குன்று உடைத்து அரண் ஆகி உய்ந்தேன் - இம்மலையையே உரியபாதுகாவலாகக்கொண்டு பிழைத்தவனும், ஆர் உயிர் துறக்கல் ஆற்றேன் - அரிய பிராணனை விடமாட்டாமல் வைத்துக் கொண்டிருப்பவனுமாகிய நான், உனை சரண் புகுந்தேன் - (இப்பொழுது) உன்னையே அடைக்கலமாக அடைந்தேன்; என்னை தாங்குதல் - என்னைக் காப்பாற்றுதல், தருமம் - தருமமாகும்,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

மதங்கமுனிவர்சாபத்தால் ருசியமூகபருவதத்தில் வாலி வந்தால் தலை வெடித்து இறப்பானாதலால், 'இக்குன்று அரணுடைத்தாகி யுய்ந்தேன்' என்றான்; அது, மேல் விவரமாகக் கூறப்படும். சரண் - ஶரணம். 'இருணிலைப் புறம்' என்றது, சக்கரவாள பருவதத்துக்கு அப்பால் அந்தகாரமொன்று சூழ்ந்திருப்பதனால், 'முரண்வலி' என்ற பாடத்துக்கு-ஒருபொருட்பன்மொழியாம். அரண் உடைத்து ஆகி - உடைத்து அரண் ஆகி என மாறுக. உடைத்து - உரியது என்றவாறு. இங்ஙனங்கொள்ளாது, 'அரணுடைத்தாகியுய்ந்தேன்' என்பதற்கு-அரணுடையதாகி யுய்ந்தேனென்று உரைக்குமிடத்துத் திணைவழுவாத லுணர்க. இனி, ஆகி-ஆக என எச்சத்திரிபாக்கியும் உரைக்கலாம். ()

[இராமபிரான் சுக்கிரீவனுக்கு அபயமளித்தல்]

௩௪. என்றவக்குரக்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
யுன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோகமேல்வந்துறுவனதீர்ப்பலன்ன
நின்றனவெனக்குநிற்குநேரெனமொழியுநேரா.

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) என்ற - என்று சொன்ன, அ குரங்கு வேந்தை - குரங்குகளுக்கு அரசனாகிய அச்சுக்கிரீவனை, இராமனும்-, இரங்கி நோக்கி - மனமிரங்கிக் கடாக்ஷித்து, 'உன்தனக்கு உரிய - உனக்கு உரிமையான, இன்ப துன்பங்கள் - சுகதுக்கங்களுள், முன்நாள் சென்றன உள்ள போக - இதற்குமுன் கழிந்துள்ளன தவிர, மேல் வந்து உறுவன - இனி வந்து நேருந்துன்பங்களை யெல்லாம், தீர்ப்பல் - நீக்குவேன்: அன்ன நின்றன - இனிவருவனவாகிய அச்சுகதுக்கங்கள்,

எனக்கும் நிற்கும் நேர் - எனக்கும் உனக்கும் சமானமாகும்', என - என்று, மொழியும் நேரா-வாக்குதத்தமுஞ் செய்து. (எ-று.)—இச்செய்யுளில் 'நேரா,' என்னும் வினையெச்சம், மேற்கவியில் 'என்றான்' என்பதனோடு முடியும்.

உனக்கு வரும் இன்பத்தையும் துன்பத்தையும் எனக்கு வந்ததாகவே பாவித்துத் துன்பம் வராமற் காப்பேனென்று அபயமளித்தனனென்க. 'தீர்த்தலின்றி' என்னும் பாடத்துக்கு - மேல்வருவனவுந் தீராமல் நின்றவையுமாகிய இன்பதுன்பங்களென்க. குரக்குவேந்து - வேற்றுமையில் மென்றொடர்மொழி தன்இன வன்றொடராயிற்று. நேர்வன என்பது-விகுதி முதலியவை கெட்டு, நேர்என நின்றது; "கொள்வாருங் கள்வரு நேர்" என்னுமிடத்துப்போல. மொழியும் நேரா, உம்மை மேல்வருங் கவியை நோக்குதலால், எதிரதுதழுவிய எச்சம். நேர்தல்-ஈதல். நேரா-உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். தீர்ப்பல், அல் - தன்மையொருமைவினைமுற்றுவிகுதி. (௯௪)

[இதுவும் அது.]

௯௫. மற்றினியுரைப்பதென்னேவானிடைமண்ணினுன்னைச்
செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீயென்னின்னுயிர்த்துணைவனென்றான்.

(இ-ள்.) 'இனி உரைப்பது மற்று என்னே - இனிமேல் (யான் பலவாகச்) சொல்லவேண்டுவது வேறு யாது உளது? வானிடை-சுவர்க்கலோகத்திலும், மண்ணில் இப்பூலோகத்திலும், உன்னை செற்றவர் - உன்னை வருத்தியவர், என்னை செற்றார்-என்னை வருத்தியவராவர்; தீயரே எனினும்-துஷ்டர்களேயானாலும், உன்னோடு உற்றவர் - உன்னுடன் சேர்ந்தவர்கள், எனக்கும் உற்றார் - எனக்கும் நண்பராவர், உன் கிளை-உனது பந்துஜனமெல்லாம், எனது-எனது பந்துஜனமாம்; என் காதல் சுற்றம் - எனது அன்புள்ள பந்துவர்க்கமெல்லாம், உன் சுற்றம்-உனது பந்துவர்க்கமாம்; நீ—, என் இன் உயிர் துணைவன் - எனது இனிய பிராணசிநேகிதனாவாய்', என்றான்—; (எ-று.)

கிளை-மரத்தைக் கிளைபோலத் தழுவிநிற்கும் உறவினத்திற்கு உவமவாகுபெயர். எனது - அகரச்சாரியையும் துவ்விகுதியும் பெற்றுவந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று. சுற்றம் - சுற்றிநிற்பது; அம் - வினைமுதற்பொருள் விகுதி. துணைவன் - சகோதரனுவா யென்றுமாம். 'கிளை,' 'சுற்றம்' என்பன - சாதியொருமை. உயிர்த் துணைவன்-உவமத் தொகை. தீயரே. ஏ-தேற்றம். எனினும், உம்-இழிவுசிறப்பு. 'மண்ணினின்னை' என்றும் பாடம். (௯௫)

[அதுகேட்டு வானரரும் வானவரும் மகிழ்தல்.]

௯௬. ஆர்த்ததுகுரக்குச்சேனையஞ்சனைசிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தனவனகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்குமறையினுமெய்யென்றன்றே.

(இ - ள்.) 'அனகன் - நிர்மலனாகிய ஸ்ரீராமபிரான், சொன்ன - அருளிச் செய்த, வார்த்தை - திருவாக்கானது எ குலத்து உளோர்க்கும் - எந்த [எல்லாக்] குலத்தில் தோன்றியவர்களுக்கும், மறையினும் - வேதவாக்கைக் காட்டிலும், மெய் உண்மையானதாம்,' என்று உன்னா - என்று எண்ணி, — குரங்கு சேனை - வானரக்கூட்டம், ஆர்த்தது - ஆரவாரித்தது; அஞ்சனை சிறுவன் - அஞ்சநா தேவிகுமாரனான அநுமானது, மேனி - சரீரத்தை, பொடித்த ரோமம் புளகங்கள் - அரும்பிய மயிர்ச்சிலிர்ப்புக்கள், போர்த்தன - மறைத்தன; விண்ணோர் தேவர்கள், பூவின் மாரி தூர்த்தனர் - புஷ்பவர்ஷத்தால் (பூமியை) நிறைத்தார்கள்; மேகம் - மேகங்கள், சொரிந்தன - நீர்த்துளி பொழிந்தன; (எ - று.)

'வேதவாக்கைப்பார்க்கிலும் விசேஷமான ஸ்ரீராமனது சத்தியவாக்குப் பிறந்தபடியால் இனி நமக்கு என்ன குறையிருக்கின்றது? வாலிவதம் தவறாமல் விரைவிலே நடந்தேறிவிடும்' என்று வானரரும், 'ராமசுக்கிரீவரது சேர்க்கை ராவணாதி ராக்ஷஸ ஸம்ஹாரத்துக்கு மூலமாம்' என்று எண்ணி வானவரும் ஒரு சேரக் களிப்படைந்தன ரென்க. தான் இராமபிரானிடத்துத் தூதுபோய் வந்தது பலித்துவிட்டதனால், அநுமான் மேனிபொடித்தன னென்க. நற்காலத்துக்குச்சூசகமாக மேகங்கள் மழைபொழிந்தன. 'மேகஞ்சொரிந்தன கனகமண்ணல்' என்கிற பாடத்துக்கு . அண்ணல் (ஸ்ரீராமனது) வார்த்தையை மெய்யென்று எண்ணி, மேகங்கள் பொன்மழை மொழிந்தன வென்க. அஞ்சநா, ரோமம், புளகம், மேகம், வார்த்தா, குலம் - வடசொற்கள். (௬௬)

[சுக்கிரீவனது இருப்பிடத்துக்கு எழுந்தருளவேண்டுமென்று அநுமான் விண்ணப்பிக்க, இராமன் உடன்படுதல்.]

௬௭. ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைசிங்கம்வாழி
தூண்டிரடடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
யீண்டுநுங்கோயிலெய்தியினிதினிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, எழுந்து - எழுந்திருந்து, அடியில் - (ஸ்ரீராமனது) திருவடிகளில், தாழ்ந்த - விழுந்து தண்டனசமர்ப்பித்த, அஞ்சனை சிங்கம் - அஞ்சநாதேவியினது வயிற்றில் தோன்றிய சிங்கம்போன்ற மகா வீரனாகிய அநுமான், 'தூண் திரள் - தூண்போலத் திரண்டிருக்கின்ற, தட தோள் - பெரிய தோள்களையுடைய, மைந்த - சக்கரவர்த்தித் திருமகனே! தோழனும் நீயும் - உனது தோழனாகிய சுக்கிரீவனும் நீயும், வாழி வாழி - பலகாலம் வாழ்வீர்களாக; ஈண்டு - இப்பொழுது, (நீங்கள்), நும கோயில் எய்தி - உமது மாளிகையை அடைந்து, இனிதின - சுகமாக, இருக்கை - எழுந்தருளியிருத்தலை, காணவேண்டும் - பார்க்கவேண்டும்; நும் அருள் என் - (இதற்கு) உமது அபிப்பிராயம் என்ன?' என்றான - என்று வினவினான்; வீரனும் - ஸ்ரீராமனும், 'விழுமிது - (அது) மேன்மையானது,' என்றான் - என்று சொல்லி உடன்பட்டான; (எ - று.)

அநுமான் ராமசுக்கிரீவர்கள் நட்புக்கொண்டமைக்கு உவந்து வாழ்த்துக்கூறி, அச்சுக்கிரீவனது இருப்பிடத்துக்கு எழுந்தருளவேண்டுமென விண்ணப்

பிக்க, இராமபிரானும் உடன்பட்டனனென்பதாம். விழுமிது,- அங்கீகார வார்த்தை. 'தோழனும் நீயும் வாழி' என்றது - உம்மிருவர்க்கும் இப்போது நேர்ந்த சிநேகம் நித்தியமாய்ச் செல்லவேணுமென்ற குறிப்பு. சிங்கம்போன்றவனை 'சிங்கம்' என்றது-உபசாரவழக்கு. வாழிய என்னும் வியங்கோள் முற்றின் ஈற்று உயிர்மெய்கெட்டது. முதலிலுள்ள 'வாழி' என்பதை, முன்னிலையசைச்சொலென்றலுமாம். சுக்கிரீவன் மாளிகையை 'நுங்கோயில்' என உளப்படுத்தியது, அபேதத்தால். கோயில் - கோ இல்: அரசனது இருப்பிடம்; சிறந்த இடமெனினுமாம். 'தாழ்ந்தவ்வஞ்சனைசிறுவன்' எனவும், 'இனிதினியிருக்கைகாண வேண்டுதுமருளுகென்றான்' எனவும் பாடமுண்டு. மேலோரிடம் கீழோர் ஒன்றுசொல்லும்போது 'ஜய', 'விஜயீபவ' என்றாற்போல முதலில் வாழ்த்துக்கூறிப் பின்பு செய்தி சொல்லுதல், இயல்பு. (௬எ)

[யாவரும் பூஞ்சோலையை அடைதல்]

௬அ. ஏகினனிரவிசேயுமிருவருமரிகளேறு
மூகவெஞ்சேனைசூழவறந்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநரந்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார்.

(இ - ள்.) இரவி சேயும் - சூரிய குமாரனை சுக்கிரீவனும், ஏகினன் - புறப்பட்டான்; இருவரும் - இராமலக்ஷ்மணர்களும்,—அரிகள் ஏறும்-குரங்குகளுக்குச் சிங்கம்போன்றவனை அநுமானும், வெம் ஊகம் சேனை -, கொடிய வானரசேனை, சூழ - சூழ்ந்துவரவும்,—அறம் - தருமதேவதை, தொடர்ந்து - பின்தொடர்ந்து வந்து, உவந்து-சந்தோஷித்து, வாழ்த்த - வாழ்த்தாநிற்கவும் (புறப்பட்டு),—நாகமும் - புன்னை மரங்களும், நரந்தம் காவும் - நரந்தமென்னும் மரங்களும், நளினம் வாவிகளும் - தாமரைத்தடாகங்களும், நண்ணி - பொருந்தி, போக பூமியையும் ஏசும் - நல்வினைப்பயன்களை யனுபவிக்குமிடமாகிய சுவர்க்கம் முதலிய லோகங்களையும் இகழும்படியான, புது மலர் சோலை - புதிய [அன்றுமலர்ந்த] மலர்களையுடைய பூஞ்சோலையை, புக்கார் - அடைந்தார்கள்; (எ - று.)

அழிந்துபோவதாயிருந்த தன்னைக் கைகொடுத்துக் காப்பாற்றுவதனால், தருமதேவதை வாழ்த்துவதாயிற்று. ஊகம் - குரங்கின் சாதிபேதங்களுள் ஒன்று; "குரங்கு முசுவு மூகமு மூன்றும், நிரம்ப நாடினப் பெயர்க்குரிய" என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்கொண்டு உணர்க. நரந்தம் - விருக்ஷவிசேஷங்களுள் ஒன்று; நாரத்தை மரமென்பர். கா என்னுஞ் சோலையின்பெயர், இலக்கணையால் மரத்திற்கு ஆயிற்று; தானியாகுபெயர். போகபூமியையும் ஏசுதல் - அளவிறந்த இன்பத்தைத் தரும் இடமாயிருத்தல். ரவி, ஹரி, ஸேநா, நாகம், நளிநவாபீ, போகபூமி - வடசொற்கள். 'போகபூமியையும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. 'ஏகினரிரவிசேயும்' என்றும், 'சேனைசூழ்வந்தடியினை யுவந்து வாழ்த்த' என்றும் பாடங் காணப்படுகின்றது. (௬அ)

[அச்சோலையின் சிறப்பு.]

கசு. ஆரமு மகிலுந் துன்றி யவிர்பளிக் கறைய ளாவி
நாரநின் றனபோற் றோன்றி நவமலர்த் தடங்க ணாடும்
பாரமு மருங்குந் தெய்வத் தருவுநீர்ப் பண்ணை யாடுஞ்
சூரர மகளி ரூச றுவன்றிய சும்மைத் தன்றே.

(இ - ள்.) (அச்சோலை),—ஆரமும் அகிலும் துன்றி - சந்தனமரங்களும் அகில்மரங்களும் நெருங்கப்பெற்று, அவிர் பளிங்கு அறை அளாவி - விளங்குகின்ற ஸ்படிகக்கற்களாலாகிய சிறுவீடுகள் பொருந்தப்பெற்று, நாரம் நின்றன போல் தோன்றி - (அப்பளிக்கறைகளின் விளக்கத்தால்) தெளிவான நீர் எழுந்து நின்றனபோலக் காணப்பெற்று,—நவம்மலர் தடங்கள் நாடும்பாரமும்- புதுமையான [அப்பொழுதுமலர்ந்த] மலர்களையுடைய தடாகங்களினது (கண்டோர்) விரும்பும்படியான இரண்டு கரைகளிலும், மருங்கும் - பக்கங்களிலும் உள்ள, தெய்வம் தருவு - தெய்வத்தன்மையையுடைய விருக்ஷங்களில், நீர் பண்ணை ஆடும் சூர் அரமகளிர் - நீர்விளையாடுகின்ற தெய்வத்தன்மையையுடைய தேவதாஸ்திரீகளது, ஊசல்-ஊஞ்சல், துவன்றிய - தொங்கியசையப் பெற்ற, சும்மைத்து - ஆரவாரத்தையுடையது ; (எ - று.)

தெய்வப்பெண்கள் தம் உலகத்தைவிட்டு இங்கு வந்து தாமரைத்தடாகங்களில் ஜலக்கிரீடைசெய்து அருகிலுள்ள மரங்களில் ஊஞ்சல் விளையாடப் பெற்ற சிறப்பையுடையது அச்சோலை யென்றபடி. தரு-தருவு என உகரச் சாரியைபெற்றுவந்தது; தெரு-தெருவு, மரு-மருவு எனுற்போல. பண்ணை-மகளிர்விளையாட்டு. சும்மைத்து - ஒன்றன்பாற்குறிப்புமுற்று. அன்று, ஏ-ஈற்றசை. ஹாரம், நாரம், நவம், பாரம், தைவம், தரு - வடசொற்கள். துன்றி, அளாவி, தோன்றி, துவன்றிய சும்மைத்து என முடிபு காண்க. (கசு)

வே று.

[அங்கு உள்ள இரத்தினங்களின் சிறப்பு.]

எo. அயர்வில் கேள்விசா லறிஞர் வேலைமுன்
பயில்வில் கல்வியார் பொலிவில் பான்மைபோற்
குயிலு மாமணிக் குழுவு சோதியால்
வெயிலும் வெள்ளிவெண் மதியு மேம்படா.

(இ - ள்.) அயர்வு இல் கேள்வி சால் அறிஞர் வேலைமுன் - தளர்ச்சியில்லாத நூற்கேள்விகள் அமையப்பெற்ற புத்திமான்களுடைய கூட்டத்துக்கு எதிரில், பயில்வு இல் கல்வியார் பொலிவு இல் பான்மை போல்-கல்விப்பயிற்சியில்லாதவர்கள் மேன்மையடையாத தன்மைபோல,—குயிலும் மா மணி குழுவு சோதியால்-(அச்சோலையிற்) பதிக்கப்பட்டுள்ள சிறந்த [பெரிய] இரத்தினங்களினது கூட்டமாகத்திரண்ட ஒளியினால், வெயிலும் - சூரியகாந்தியும், வெள்ளி வெள் மதியும் - வெள்ளிபோன்றவெண்மையான சந்திரனது காந்தியும், மேம்படா - (அங்கு) மேன்மைப்பட்டு விளங்கா; (எ - று.)

அயர்வு - ஐயந்திரிபு. கேள்வியானது கல்வியை அபிவிருத்திசெய்தலால், 'கேள்விசாலறிஞர்' என்றார். வேலையெனனுங் கடலின்பெயர் இலக்கணையால், அதுபோலப் பரந்த கூட்டத்தை யுணர்த்திற்று; உவமையாகுபெயர். "எழுத்தறியார் கல்விப்பெருக்கமனைத்தும், எழுத்தறிவார்க் காணின் இலையாம்—எழுததறிவா, ராயுங் கடவுளவிசடைமுனகண்டளவில், வீயுஞ் சுரநீர்மிகை" எனப் பிற்காலத்தார்கூறியிருப்பதுங் காண்க. வெள்ளி-வெண்மையையுடையதெனக் காரணப்பெயர். மாமணிச்சோதியால் வெயிலும் மதியும் மேம்படா என, ஒன்றினில் மற்றொன்று மறைந்ததாகக் கூறியது - மறைவணி. அங்குள்ள இரத்தினங்களின் ஒளி சூரியசந்திரர்களது ஒளியினும் மிக்கு விளங்குவதென்றபடி. இனி, ஆங்குஉள்ள மணியின சோதியால் வெயிலும், வெள்ளியின் சோதியால் மதியும் மேம்படா என்று உரைப்பினுமாம். 'குழூமு' என்று சில பிரதிகள். 'வெள்ளிவெண்ணிலவுமேம்படா' எனறு பாடமோதுவாரு முளர்.

இதுமுதல் நாற்பதுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாச்சீரகளும், மற்றை இரண்டும் கூவிளச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். ()

[அவர்கள் மலர்ப்பாயலி லிருந்துகொண்டு அன்போடு அளவளாவுதல்.]

எக. ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைநதருங்கவியின்வேநதனுங
தூயபூவணைபொலிநதுதோன்றினு
ராயவன்பினோடளவளாவுவார்.

(இ - ள்.) ஏய-தகுதியாக, அன்னது ஆம் இனிய சோலைவாய் மேய-அப்படிப்பட்டதாகிய அழகிய சோலையிற் சேர்ந்த, மைந்தரும-ராமலக்ஷ்மணர்களும், கவியின் வேந்தனும - வானரராஜனும [சுககிரீவனும], தூய பூ அணை பொலிந்து தோனறினர் - பரிசுத்தமான புஷ்பசயனத்தில் வீற்றிருந்து விளங்கினவாகளாய், ஆய அனபினோடு அளவளாவுவார் - பொருந்திய அனபுடனே மனங்கலந்து உசாவுவாராயினா; (எ - று.)

ஏய-ஏய் என்பதன் அடியாப் பிறந்த செயவெனெச்சம். சோலைவாய், வாய்-ஏழனுருபு. மேய - மேவிய. கபி - குரங்கு: வடசொல். அளவளாவுதல் - தன்னளவையும் பிறனளவையும் ஒருவரையொருவா விசாரித்தல். (எக)

[இராமபிரான் நீராடி விருந்துண்ணல்.]

எஉ. கனியுங்கந்தமுங்காயுந்தூயநன்
கினியயாவையுங்கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிநதுபின்
னினிதிருநதுநல்விருந்துமாயினன்.

(இ - ள்.) கனியும - பழஙகளையும், கந்தமும் - கிழங்குகளையும், காயும் - காய்களையும், தூய நன்கு இனிய யாவையும்-பரிசுததமாயும் மிகவும் இனிமையாயுமுள்ள மறறைச் சாகம [இலை] மூலம் [வேர்] முதலியவற்றையும்,

கொணர - (அநுமான் முதலிய வாநரர்கள்) கொண்டுவந்து அமைக்க,—யாரினும் புனிதன் - யாவரினும் பரிசுத்தனாகிய ஸ்ரீராமன், மஞ்சனம் தொழில் புரிந்து - நீராட்டஞ்செய்துகொண்டு, பின்-பின்பு, இனிது இருந்து - இனிமையாக இருந்து, நல் விருந்தும் ஆயினன - நல்ல விருந்தாளியும் ஆனான [அவற்றை யுண்டருளினா னென்றபடி]; (எ - று.)

கந்தம் - வடசொல். மஞ்சனம்-மஜ்ஜந மெனனும் வடமொழியின் விகாரம்; ஸ்நாநஞ்செய்தலென்று பொருள். விருந்து - புதுமை; இங்கு ஆகுபெயராய், புதியனாய்வந்தவனமேல் நின்றது. விருந்ினனுக்கு நன்மை - பெறுதற்கு அரியவனாய் ஞானஒழுக்கங்களால் உயர்ந்துநிற்றல. விருந்தும், உம்மை- இறந்தது தழுவியது. (எஉ)

[இராமன் சுக்கிரீவனை அம்பினால் ஒன்றுவினவுதல்]

எஙூ. விருந்துமாகியம்மெய்ம்மையன்பினோ
டிருந்துநோக்கிநின்றிறைவன்சிந்தியாப்
பொருந்துநன்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான்.

(இ - ள்.) இறைவன - ஸ்ரீராமன,—விருந்தும் ஆகி-(இவவாறு) விருந்தினனும ஆகி [உண்டு], பின்-பின்பு, அ மெய்மமை அன்பினோடு - அப்படிப்பட்ட உண்மையான அனபுடனே, இருந்து நோக்கி நின்று - அருகிலிருந்து பார்த்து, சிந்தியா - ஆலோசித்து,—(சுக்கிரீவனை நோக்கி), 'பொருந்தும் நல் மனைக்கு - பொருந்திய நல்ல இல்லறவாழ்க்கைக்கு, உரிய - இன்றியமையாத, பூவையை - மனைவியை, நீயும்—, பிரிந்து உளாய்கொலோ - (என்னைப் போலவே) பிரிந்துள்ளாயோ?' என்றான - என்று வினவினான; (எ - று.)

அதிதியாகிய தமமைச் சுக்கிரீவன் மனைவியில்லாமல் உபசரிப்பதைக் கண்டு இவ்வாறு இராமபிரான வினவின னென்க. மனை-வீடு; பூவை-கிளி: இவைமுறையே மனைவாழ்க்கைக்கும், பூவைபோனறவளுக்கும இடவாகுபெயரும், உவமவாகுபெயருமாம். கொல் - ஐயம், ஓ - வினா. நீயும், உம் - இறந்தது தழுவிய எச்சம். (எங)

[அதற்கு அநுமான் விடைகூறத் தொடங்குதல்.]

எச. என்றவேலையினெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினா

லொன்றியானுனக்குரைப்பதுண்டெனா.

இதுமுதல் மூப்பது கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) என்ற வேலையின்-என்று (ஸ்ரீராமன்) வினவியபொழுதில்,—மாருதி - அநுமான்,—எழுந்து - எழுந்திருந்து, குன்றுபோல நின்று - மலைபோல அருகில் வந்துநின்று, இரு கை கூப்பினன் - இரண்டுகைகளையும் கூப்

பித்தொழுதவனும்,—(ஸ்ரீராமனைநோக்கி), 'நின்ற நீதியாய்-நிலையாய் நின்ற நீதியையுடையவனே! யான் - அடியேன், உனக்கு—,உரைப்பது-சொல்ல வேண்டுவது, ஒன்று உண்டு-ஒருவரலாறு இருக்கின்றது; (அதனை), நெடிது கேட்டி - செவவையாகக் கேட்டருளவாயாக,' என்று - என்றுசொல்லி, (எ - று.)—'என்று' என்னும் வினையெச்சம், மேல் கOஅ-ஆங் கவியில் 'இயம்ப' என்னும் வினையோடு முடியும். ஆல் - ஈற்றசை.

கேட்டுக்கொண்டிருக்கின்றவனை 'கேட்டி' என்றது, அதற்குப்பரிகாரஞ் செய்தருளவேண்டுமெனக் குறிப்பித்தற்குப் போலும். ஒன்று+யான்= ஒன்றியான்; குற்றியலிகரம். (எஅ)

[இதுமுதல் இருபத்தொன்பது கவிகள் - அநுமான் கூறிய விடை.]

எகு. நாலுவேதமாநவையிலார்கலி
வேலியன்னதொன்மலையின்மேலுளான்
சூலிதன்னருட்டுறையின்முற்றினன்
வாலியென்றுளான்வரம்பிலாற்றலான்.

(இ - ள.) நாலு வேதம் ஆம நவை இல் ஆர்கலி - நானகுவேதங்களாகிய குற்றமில்லாத கடலுககு, வேலி அனன - வேலியைப்போலப் பாதுகாவலா யுளளவனும், தொல் மலையின மேல் உளான் - பழமையான கைலாசபருவதத் தில் வீற்றிருபபவனுமாகிய, சூலிதன -சூலாயுதத்தையுடையவனான உருத்திர மூர்ததியினது, அருள துறையின -கருணையின வழியே, முறறினன - முதிர்ந் தவனாகிய, வாலி என்று - வாலியென்று பெயாசொல்லப்பட்டுப் பிரசித்தி பெறறு, வரம்பு இல் ஆற்றலான - எல்லையில்லாத வலிமையுடையானொரு வாநரவீரன, உளான - இருக்கின்றான் அன்றோ? (எ - று.)

சுக்கிரீவன் மனைவியையிழந்த வரலாற்றை விவரமாகக் கூறததொடங்கிய அநுமான், இச்செய்யுளால், வரபலம்மிக்கவனாய் வாலியென்று ஒருவனிருத் தலைத் தெரிவித்தான. ("ஶங்கராத ஜ்ஞாந மந்விச்சேத்" என்றபடி) சிவ பிரான ஞானங்கட்கு இருப்பிடமாயிருததலால், அப்பெருமானை, கடல்போற் பரந்த நானகுவேதங்கட்கும் வேலி யென்றார். அன்ன உளான என இயை யும். சூலிதன அருட்டுறையின முறறினன என்பதற்கு - பரமசிவனது திரு வருளைப் பரிபூர்ணமாகப் பெற்றவனென்பது கருத்து. ஶூலீ என்ற வட மொழிப்பெயா - சூலாயுதத்தையுடையவனென்று பொருள்படும். 'வேலி யனனதோர்' என்றும் பாடமுண்டு. 'நவையில்சாவியின், வேலியன்னவன் வெள்ளிவெண்கிரிச், சூலியின்னருட் டுறையுமுற்றினன்' என்றுபாடமோது வாருமுளர். ஆர்கலி-நிறைந்த ஓசையையுடையது; வினைத்தொகையன்மொழி.

எகூ. கழறுதேவரோடவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத்துருவுதேயமுன்
னழலுங்கோளராவகடுதேய்விடச்
சுழலும்வேலையைக்கடையுநதோளினன்.

(இ - ள்.) (அவன்),—கழறு - சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற, தேவரொடு - தேவர்களும், அவுணர் - அசுரர்களுமாகிய அவர்களது, கண்ணின - எதிரில், நின்று—, உழலும் மந்தரத்து - (மத்தாகிச்) சுழல்கின்ற மந்தரமலையினது, உருவு - வடிவம், தேய - தேயும்படியாகவும்,—அழலும் - சீறுமியல்பமைந்த, கோள் அரா - வலிமையையுடைய (கடைகயிறாகிய வாசுகியென்னும்) பாம்பினது, அகடு - நடுவுடம்பு, தேய்விட-தேய்ந்துபோம்படியாகவும்,—சுழலும் - அலைகின்ற, வேலையை - திருப்பாற்கடலை, முன் - முற்காலத்தில், கடையும் - கடைந்த, தோளினன் - புஜபலமுடையவன்; (எ - று.)

இதுவும், அடுத்த கவியும் - வாலியினது வலிமையை யுணர்த்தும்.

வாலி கடலைக்கடைந்த வரலாறு:—தேவர்களும் அசுரர்களும் ஒருங்கு கூடிச் சாவாமருந்தாகிய அமிருதத்தைப் பெறுமாறு மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகிநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிச் சந்திரனை அடைதாறாக நிறுத்திப் பாற்கடலைக் கடைய முயலுகையில், இருதிறத்தாரும் அதனைக் கடையும் வலிமையிலராய் என்செய்வதென்று கலங்கிநிற்குமளவிலே, வானரராஜனும் தேவேந்திரனது குமாரனுமாகிய வாலிதான் நாள்தோறும் பலகடல்களிலுஞ் சென்று வைதிகநித்தியகருமங்களை முடித்துவரும் வழக்கப்படி பாற்கடல் சென்றுசேர, தேவர்கள் அவனை வேண்டிக்கொண்டதனால் அவன் அசுராசுரர்களை விலக்கிவிட்டுத் தானொருவனாகவே இருகைகளாலும் வாசுகியின் தலையையும் வாலையும் பிடித்து வலமும் இடமுமாக வலிய இழுத்துக் கடைந்தனன் என்பதாம். இவ்வரலாறு வால்மீகத்தில் இல்லையாயினும், நல்லிசைப் புலவராகிய கம்பர் கூறியிருத்தலால், புராணாந்தரங்களிலேயாதல் கல்பாந்தரத்திலேயாதல் உண்டென்று கொள்ளவேண்டும்; "மற்றவன முனனோ னங்காளிராவணன்வலிதன வாலி, னிற்றுக்கட்டி யெட்டுத்திசையினு மெழுந்து பாய்ந்த, வெற்றியன் தேவர் வேண்ட வேலையை விலங்கன் மதநிற், சுற்றிய நாகந்தேய வமுதெழக் கடைந்த தோளான" என்று சுந்தரகாண்டத்திலும், "கடலைச் சுராசுரர்க்கமிழ்தெழக் கடைந்த, வீரியன" என்று ஒட்டக்கூத்தர் உத்தரகாண்டத்திலுங் கூறுவன காண்க. (இச்சரித்திரத்தைக் காஞ்சிப்புராணத்து மணிகண்டேசுரப்படலத்திற் பரக்கக்காணலாம்.) முன்கடையுந் தோளினன - இயல்பினால்வந்த காலவழுவமைதி; கடையும் என்ற செய்யுமெனெச்சம் காலமுணர்த்தாது தன்மையுணர்த்திற் றெனினும் அமையும். தேய்வு இடுதல் - தேய்வுகொள்ளுதல். (எஅ)

எஎ. நிலனுநீருமாய்நெருப்புங்காற்றுமென்
றுலைவில்பூதநான்குடையவாற்றலா
னலையின்வேலைசூழ்கிடந்தவாழிமா
மலையினின்றுமிம்மலையின்வாவுவான்.

(இ - ள்.) நிலனும் - பூமியும், நீரும்-ஜலமும், நெருப்பும் - அக்கினியும், காற்றும் - வாயுவும், என்று ஆய் - என்றுபொருந்தி, உலைவு இல் - அழிவில்லாத, பூதம் நான்கு - நான்குபூதங்களும், உடைய - (தாம்தாம் தனித்தனி) உடைத்தான, ஆற்றலான் - வல்லமைமுழுவதையும் தான் ஒருசேர உடைய

வன்; அலையின் வேலை - அலைகளையுடைய எழுசமுத்திரங்களுக்கும் அப்பால், சூழ்கிடந்த - சுற்றிலும் பொருந்திய, ஆழி மா மலையினின்றும் - பெரிய சக்கரவாளபருவதத்தினின்றும், இ மலையின் - இங்குள்ள பருவதத்தில், தாவுவான் - தாவுந்தன்மையுடையவன்; (எ - று.)

நிலத்துக்கு நீரும், நீர்க்கு நெருப்பும், நெருப்புக்குக் காற்றும் காரணமாதலால், அம்முறைப்படி வைத்தார். பஞ்சபூதங்களுள் ஆகாயத்தை ஒழித்தது, அதற்கு மற்றவைபோன்ற ஆற்றலும் உருவமும் இல்லாமையால். 'சூழ்'என்ற முதனிலை, இங்கு வினையெச்சப்பொருள் தந்தது; "வரிப்புனைபந்து" என்னுமிடத்திற் போல. 'நீருமாநெருப்பும்' என்றும், 'அலையும் வேலை' என்றும் பாடமுண்டு. 'நிலனுநீரொடு நெருப்புங்கால்வெளி, யுலைவில் பூதமைந்துடைய வாற்றலான்' என்று பாடமோதுவாரு முளர். (எஎ)

எஅ. கிட்டுவார்பொரக்கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம்பாகமெய்துவா
னெட்டுமாதிரத்திறுதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள்பணியுமாற்றலான்.

(இ - ள்.) கிட்டுவார் பொர கிடைக்கின் - நெருங்குபவர்களாய்ப் போர் செய்தற்கு (யாவராயினும் எதிரில்) வந்தால், அன்னவர் பட்ட நல் வரம் - அவர்கள் முன்பு அடைந்துள்ள நல்லவரங்களில், பாகம் - பாதிபாகத்தை, எய்துவான் - அடைபவன்; நாளும் - நாள்தோறும், எட்டு மாதிரத்து இறுதி - எட்டுத்திக்குக்களி னெல்லையிலும், உற்று - போய், அட்டமூர்த்தி தாள் - எட்டுத் திருமேனியையுடையனான சிவபெருமானது திருவடிகளை, பணியும் - வணங்குகின்ற, ஆற்றலான் - செய்கையுடையவன்; (எ - று.)

இச்செய்யுள் - வாலிக்குஉள்ள தைவிகவரத்தையும் தெய்வபக்தியையும் தெரிவிக்கும். நல்வரமென வரபலத்தைக் கூறியது, தேகபலத்துக்கும் உபலக்ஷணமெனக் கொள்ளவுமாம். நாளும், உம்மை - தொறுப்பொருளது. அஷ்ட மூர்த்தி-வடமொழித்தொடர்: பண்புத்தொகையனமொழி. சிவபிரானது அஷ்ட மூர்த்திகள்-பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன்,யஜமானன்.அஷ்டமூர்த்திதாள் பணிவதற்காக எட்டுத்திக்கிற் சென்றனனென நயங்காண்க. 'பட்டநல்வலம்' என்பதும் பாடம்; வலம் - பலம். பாகம் - வடசொல் (எஅ)

எகூ. கால்செலாதவன்முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன்மார்பின்வென்றியான்
வால்செலாதவாயலதிராவணன்
கோல்செலாதவன்குடைசெலாதரோ.

(இ - ள்.) அவன் முன்னர் - அவ்வாலியினது வேகத்திற்கு முந்தி, கால் செலாது - வாயுவும் போகமாட்டாது; அவன் மார்பின் - அவ்வாலியினது மார்பிலே, கந்தவேள் வேல் - சுப்பிரமணியக்கடவுளது வேலும், செலாது - நுழையாது; வென்றியான் வால் செலாத வாய் அலது - வெற்றியையுடை

யனுண அவ்வாலியின்து வால் செல்லாத இடத்திலே அல்லாமல் [வால் சென்ற இடத்தில்], இராவணன் - ராவணனது கோல்-அதிகாரம், செலாது-செல்லாது; அவன் குடை - அவ்விராவணனது வெற்றியும், செலாது செல்லாது; (ஏ - று)—அரோ - ஈற்றசை; தேற்றமுமாம்.

இந்திரன் முதலிய எல்லாத்தேவர்களையும் வென்ற இராவணனது கோலும் குடையும் வாலியின்வால்சென்றவிடத்துஞ் செல்லாதென வாலியின் வீரமிகுதி கூறியபடி. வால்சென்றவிடத்தே செல்லாதெனவே, அவனுள்ள விடத்துச்செல்லாமை தானே பெறப்படும். இவ்வாறு கூறியது, முன்னொரு காலத்தில் தன்னைப்பற்றுதற்குப் பின்புறத்தேவந்த இராவணனை, வாலி, தன் வாலினாற் கட்டி வலியடக்கிக் கர்வபங்கஞ்செய்ததைப்பற்றி யென்க. இனி, பின்னிரண்டடிக்கு - வாலியினது வாலின்வலிமை அழிந்தாலன்றி இராவணனது கோலுங் குடையும் அழியா வென்றுமாம்; வாலியும் இராவணனும் பின்னர் நட்புக்கொண்டன ராதலால்: இப்பொருளில், இராவணனைக்கொல்லுதற்கு வாலியைக்கொல்வது இன்றியமையா தென்பது கருத்து.

கந்தன் - ஸ்கந்தனென்ற வடசொல்லின் விகாரம். வேள் என்பதற்கு - விரும்பப்படுகின்றவ னென்பது பொருள்; அழகிய னென்பது கருத்து: இச்சொல் மன்மதனுக்கும் பெய ராதலால், அவனை விலக்குதற்கு, 'கந்தவேள்'என்றார். செலாத வாய் அலது - இரண்டு எதிர்மறை உடன்பாட்டை வற்புறுத்திற்று. கோல் - அரசாட்சிக்கும், குடை - வெற்றிக்கும் இலக்கணை. (எக)

அ0. மேருவேமுதற்கிரிகள்வேரொடும்
பேருமேயவன்பெருமேனெடுங்
காரும்வானமுங்கதிருநாகமுந்
தூருமேயவன்பெரியதோள்களால்.

(இ - ள்.) அவன் - அவ்வாலி, பேரும் எல் - (தன் இடம்விட்டு) எழுவானால், (அவ்வதிர்ச்சியினால்), மேருவே முதல் கிரிகள் - மகாமேரு முதலிய பெரியபர்வதங்களெல்லாம், வேரொடும் பேருமே - வேரோடும் இடம்விட்டுப் பெயர்ந்துபோமே; அவன் பெரிய தோள்களால் - அவனுடைய பெரிய புஜங்களால், நெடுங் காரும் - பெரிய மேகமும், வானமும் - ஆகாயமும், கதிரும் - சூரியசந்திரர்களும், நாகமும் - பர்வதங்களும், தூருமே - மறைந்து போய்விடுமே; (எ . று.)

அவன் இயல்பாக அடிவைத்துச்செல்லும்போதே, அவ்வதிர்ச்சியைத் தாங்கமுடியாமல், இவ்வுலகத்தைத் தாங்கவல்ல பெருமலைகளும் நிலைகுலைந்துவிடும்; அன்றியும், உத்தமவிலக்கணத்திற்கு ஏற்ப அவனது தோள்கள் மிக வுயர்ந்து நிற்றலால், மேகம்முதலியவைகளெல்லாம் அதனால் தூர்ந்துவிடுமென்பதாம்: தொடர்புயர்வுநவிற்சியணி. இதனால் - வாலியினது தேக பலமும், உயர்ந்த தோற்றமும் விளங்கும். நாகம் - சலியாதது என மலைக்குக் காரணக்குறி: நாகம் - வானுலகு எனினுமாம். பேரும் - பெயருமென்பதன் மரூஉ. மேருவே, ஏ - உயர்வுசிறப்பு. (அ0)

அக. பாரிடந்தவெம்பன்றிபண்டைநா
ணீர்கடைந்தபேராமைநேருளான்
மார்பிடந்தமாவெனினுமற்றவன்
றார்கிடந்ததோடகையவல்லவோ.

(இ - ள்.) பண்டை நாள் - முற்காலத்தில், பார் இடந்த - பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்த, வெம் பன்றி - கொடிய மகாவராகமும்,—நீர் கடைந்த பேர் ஆமை - பாற்கடலைக் கடைவதற்குச்சாதனமான மகாகூர்மமும்,—நேர் உளான் மார்பு இடந்த - (தனக்குப்) பகையாக உள்ளவனாகிய ஹிரண்யனது மார்பைக் கீண்ட, மா - (நர) சிங்கமும், எனினும் - ஆகிய இவையேயானாலும்,—அவன் தார் கிடந்த தோள் - அவ்வாலியினது வெற்றிமாலை பொருந்திய புயங்களை, தகைய வல்லவோ - எதிர்க்க வல்லனவோ? [அல்ல என்றபடி]; (எ - று.)

இச்செய்யுளும் வாலியினது வீரத்தை விளக்கும். திருமாலினது அம்சாவதாரமாகிய ஸ்ரீராமனும் வாலிக்கு எதிர்நின்று போர்புரியாது மறைந்துநின்றே அம்பெய்து அவ்வாலியைக் கொல்லப்போவதனால் இவவாறு கூறினரென்னலாம். 'பாரிடந்தபன்றி' என்றது - பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துக் கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளின்படி வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தியெடுத்துக் கொண்டுவந்து விரித்தருளின வரலாற்றை உட்கொண்டு, தேவர்களும் அசுரர்களும் மந்தரபருவதத்தை மத்தாகவும் வாசுகியைக் கடைகயிறாகவுங் கொண்டு பாற்கடலைக் கடைந்தபொழுது சுழலாநின்ற மந்தர பர்வதத்திற்குக் கீழ்ப்புறத்தில் ஸ்ரீமந் நாராயணன் மகாகூர்மரூபத்தைத் தரித்து அம்மலை கடலில் அழுந்திவிடாதபடி ஆதாரமாக இருந்ததனால், 'நீர்கடைந்த பேராமை' என்றார். 'நீர்கிடந்த' என்றும் பாடம். நீர் - கடலுக்கு ஆகுபெயர்; இங்குச் சந்தரூப்பநோக்கிப் பாற்கடலெனப் பொருள் கொள்ளப்பட்டது; "தாழி தரையாகத் தண்டயிர் நீராகத் தடவரையேமத்தாக," "நீர்பூத்த திருமகளு நிலமகளு மடிவருட" என்ற இடங்களிற் போல. விருப்பும் வெறுப்பும் இல்லாத முழுமுதற்கடவுளாகிய திருமாலுக்குப் பகைவனும் நண்பனும் இல்லாமலிருக்கவும் இரணியனை 'நேருளான்' எனக் கூறியது - அப்பெருமான் தனது அடியவர்க்குப் பகைவரையே தனக்குப்பகைவராகவும் அவர்க்குநண்பரையே தனக்குநண்பராகவுங் கொள்ளு மியல்பினனாதலாலென்க. 'மா' என்ற விலங்கின் பொதுப்பெயர், இங்குச் சிறப்பாய்ச் சிங்கத்தை யுணர்த்தும்; எல்லா அவயவங்களினுஞ் சிறந்த [உத்தமாங்கமாகிய] தலை சிங்கமாயிருந்தது பற்றி, 'மா' எனப்பட்டதென்க. மற்று - அசை. பண்டை, ஐ - சாரியை; "ஐயீற்றுடைக் குற்றுகரம்." பண்டு-பழமை குறிக்கும் இடைச்சொல். ஓ - எதிர்மறை. (அக)

அஉ. படர்ந்தநீணெடுந்தலைபரப்பிமீ
தடர்ந்துபாரம்வந்துறவநந்தனுங்
கிடந்துதாங்குமிக்கிரியைமேயினு
னடந்துதாங்குமிப்புவனமாளெலாம்.

(இ - ள்.) அநந்தனும்-ஆதிசேஷனும்,—படர்ந்த நீள் நெடுந் தலை-(ஆயிரமென்னுங்கணக்காக) மிகுந்த மிகவும்நீண்ட பணாமுடிகளை, பரப்பி - பரப்பிக்கொண்டு,—மீது - மேலே, பாரம் - பாரமானது, அடர்ந்து வந்து உற - மிகுதியாகப் பொருந்தியிருக்கும்படி, கிடந்து - கீழ் இருந்து, இ புவனம் - இப்பூலோகத்தை, நாள் எலாம் - எந்நாளும், தாங்கும் - பரிப்பான்; இ கிரியை மேயினன் - இம்மலையைப் பொருந்திவாழ்கின்றவனான வாலியானவன், நடந்து - (தான் மேலே) நடந்துகொண்டு, தாங்கும் - (இப்பூமியை எப்பொழுதும்) பரிப்பான்.(எ-று)

இதனால், வாலியினது உலகங்காக்குந்திறம் கூறப்பட்டது. ஆதிசேஷன், இப்பூமியின்பொறையைத் தாங்கமுடியாமல் வருந்தித்தாங்குகின்றான்; வாலியோ அங்ஙனமன்றிச் சிறிதும் வருத்தமில்லாமல் உல்லாஸமாக நடந்துகொண்டு தாங்குகின்றனனென்பதாம். இவ்வாறு உபமானமாகிய ஆதிசேஷனினும் உபமேயமாகிய வாலிக்கு ஏற்றங் கூறியது - வேற்றுமையணி. கிடந்துதாங்குதல் - சுமத்தல்; நடந்துதாங்குதல் - காத்தல். இப்புவனம், நாளெலாம் என்பவற்றை 'தாங்கும்' என்ற சொல்லிரண்டனோடுங் கூட்டுக. அநந்தனென்பதற்கு - அழிவில்லாதவனென்று பொருள்; (ந+அந்தம்) அந்தம்-முடிவு. உம்மை - உயர்வுசிறப்பு.

இனி, இச்செய்யுளுக்கு வேறுவகையாகவும் உரைகூறுதலுண்டு. அது வருமாறு:—கிடந்துதாங்கும் இ கிரியை - பூமியின்மீது இருந்துகொண்டு (இப்பூமியைத்) தாங்குகின்ற இந்தமலையை, மேயினன் - பொருந்தியவனான வாலி, நடந்து - நடப்பதனால், மீது - தன்மேலே, பாரம் அடர்ந்து வந்துஉற - பாரம் மிகுதியாக வருதல்பற்றி, படர்ந்த நீள் நெடுந் தலை பரப்பி—,அநந்தனும் (நடந்து) தாங்கும்: தான் ஓரிடத்திலேயே யிருந்துகொண்டு பூமியைத் தாங்குமியல்பினனான ஆதிசேஷனும் வாலி நடக்கையில் அவனது உடற்பொறையைச்சுமக்கமுடியாமல் தானும் இடம்பெயர்ந்து அவனுடனே சென்றுகொண்டே தாங்கி வருவனென்பதாம்; இதனால், வாலியினது மஹாஸத்வங் கூறப்பட்டதாம். மலைகள் தாம் வெளியில் எவ்வளவு உயர்ந்திருக்கின்றனவோ, அவ்வளவு உள்ளேயும் புக்குநின்று பூமியைச் சலிக்கவொட்டாது தாங்குகின்றன வென்ற கொள்கைபற்றி, 'கிடந்துதாங்கு மிக்கிரி' என்றார். 'அடர்ந்தபாரம்' என்று பிரதிபேதமுண்டு. 'அடர்ந்துபாரிடந்தனையனந்தனுங், கிடந்துதாங்கு மிக்கிரியின் மேவினன்' எனறு பாடமோதுவாருமுளர். (அ௮)

அ௯. கடலுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதுந்
தொடரமற்றவன்சுளியினேற்றலா
லடலின்வெற்றியாயயலினுபவோ.

(இ - ள்.) அடலின் வெற்றியாய் - வலிமையையும் சயத்தையும் உடையவனே!—தொடர - இடைவிடாமல், கடல் உளைப்பதும்- சமுத்திரம் சப்திப்பதும், கால் சலிப்பதும் - காற்றுச் சஞ்சரிப்பதும், மிடல் அருக்கர் தேர் மீது செல்வதும் - வலிமையையுடைய சூரியர்கள் [துவாதசாதித்தியர்கள்]

தேரின்மேற் சஞ்சரிப்பதும்,—அவன் - அவ்வாலியினது, சுளியின் - கோபத்திற்கு, எற்று அலால் - இலக்காகியே யல்லாமல், அயலின் - வேறொருவனைகயால், ஆபவோ - ஆவனவோ? [ஆகா என்றபடி]; (எ - று.)

இது, வாலியினது மிக்ககோபத்தை வருணித்தது. கடல் முதலியன எல்லாம் அவனது கோபத்துக்கு அஞ்சியே நடக்கின்றன வென்பதாம். உளைப்பது - மேன்மேற் பொங்கியெழாமல் ஒருநிலையில் அடங்கியிருப்பதும், சலிப்பது - எல்லாவுயிரும் பொறுக்கும்படி அடங்கிநடப்பது மாகவுமாம். இயல்பிற் கடல் உளைப்பது முதலியவற்றிற்கு, வாலியின் கோபத்தினால் நிகழ்வனவாகக் காரணங்கற்பித்துக்கூறியது ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இதனால், காற்றுமுதலியன தனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நிற்கும்படி செய்யும் பரம்பொருள் போன்ற வரம்பிலாற்ற லுடையவன் வாலியென்பது தோனறும். "நெடுங்கடல் நிற்பதும் ஞாயிறு காய்வதும் நிற்றலும் கால், ஒடுங்கிநடப்பதும் தண்கார் பொழிவதும் ஊழிதனிற், சுடுங்கனல் பற்றிச்சுடாதேயிருப்பதும் தும்பைபுனை, தடுங்கனலாழி யரங்கேசர்தந் திருவாணையினே" என்னும்படி பரம்பொருளுக்கு அஞ்சிக் கடல் முதலியன நடக்கின்றன வென்பதைத் தவறென்று சாதிப்பார், 'அயலினுபவோ' என்றார்: ஆகவே, இங்கு அபநுதியணி தொனிக்கு மென்னலாம். மாதந்தோறும் வெவ்வேறாகச் சூரியர் பன்னிருவராதலால், 'அருக்கர்' எனப் பன்மையாற் கூறினர். தேர்மீதுசெல்லுதல் - உதித்தும் அஸ்தமித்தும் அந்தந்தக்காலத்திறகுத் தக்கபடி நடத்தல்.

சுளி - முதனிலைத்தொழிறபெயர். எற்று, எல் - பகுதி. மற்று - அசை. ஆப என்ற பலவின்பால் முற்றில், ப் - எதிர்காலவிடைநிலை. 'ஆவவோ' என்றும் பாடமுண்டு. 'தொடர' எனபதை 'உளைப்பது,' 'சலிப்பது,' 'செல்வது' என்ற மூன்றினோடுங் கூட்டுக. 'கடலொலிப்பது,' 'தொடரின மற்றவன் சுளியுமென்றலால்,' 'அயலினுவதோ' எனபன, பாடாந்தரம். (அ௩)

அ௪. வெள்ளமேழுபத்துள்ளமேருவைத்
தள்ளலானதோளரிகடானையா
லுள்ளமின்றியவ்வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன்வாழவாழுமால்.

(இ - ள்.) வள்ளலே - வரையாமல் அருளுந் தன்மையை யுடையவனே!—அவன் வாழ - அவ்வாலி வாழாநிற்க, தானையான உள்ளம் இன்றி அ உயிரை அஞ்சலால் - (வாநர) சேனைக்கெல்லாந்தலைவனாகிய வாலியினது கருதது [அநுமதி] இல்லாமல் அக்குரங்குகளின் உயிரைக் கொண்டுபோதற்கு (யமனும்) அஞ்சுதலால்,—வெள்ளம் எழு பதது உள்ள - எழுபதுவெள்ளமென்னுந் தொகையுடையனவாகிய, மேருவை தள்ளல் ஆன தோள் அரிகள் - மகாமேருவையும் புரட்டிவிடவல்ல தோள்களையுடைய வாநரசேனைகள், வாழும் - (அழிவில்லாமல்) வாழாநிற்கும்; (எ - று.)—அரிகள் வாழு மென்க.

வாலியினிடத்து அச்சங்கொண்டு யமனும் பின்வாங்குதலினால், அவனது குரங்குச்சேனைகள் 'தம்முயிர்போய்விடுமோ?' என்ற அச்சமின்றி இனிது

உயிர் வாழ்கின்றன வென்பதாம். இதனால், வாலியினது கடவுளரும் அஞ்சுந் தன்மை கூறப்பட்டது. இனி, வாலி வாழும்போது அவனது குரங்குச்சேனைகளை உயிர்கொண்டுபோதற்கு யமனும் அஞ்சிப் பின்வாங்குதல்பற்றி அக்குரங்குச்சேனைகளில்இறப்பனவின்றிப்பின்னும் பிறக்கும் வானரங்களெல்லாம் சேர்ந்து கொண்டுவருதலினாலே அவ்வாலிக்கு எழுபதுவெள்ளம் வானரசேனையுளதாயிற்றென்று கருத்துக்கூறலுமாம். வெள்ளம் - ஒரு பெருந்தொகை: மிகப்பல அக்ஷௌஹிணி கொண்டது; யானையொன்றும், தேரொன்றும், குதிரைமூன்றும், காலாளைந்துங் கொண்டது - பத்தி யெனப்படும்: அப்பத்தி மூன்றுபங்குகொண்டது - சேனாமுகம்; சேனாமுகம் மூன்று - குல்மம்; குல்மம் மூன்று - கணம்; கணம் மூன்று - வாகினி; வாகினி மூன்று-பிரதனை பிரதனை மூன்று-சமூ; சமூ மூன்று - அநீகினி: அநீகினி பத்து-அக்ஷௌஹிணி; அக்ஷௌஹிணி எட்டுப் பங்கு கொண்டது - ஏகம்; ஏகம் எட்டு - கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு - விந்தம்; விந்தம எட்டு - குமுதம்; குமுதம் எட்டு - பதுமம்; பதுமம் எட்டு - நாடு; நாடு எட்டு - சமுத்திரம்; அந்தச்சமுத்திரம் எட்டுப்பங்கு கொண்டது - வெள்ளம் எனக் காண்க. மேருவைத் தள்ளலான தோள் - மகாமேருவையுந்தனக்கு ஒப்பன்றென்று விலக்கும்படியான தோளென்றுமாம். ஆல் - ஈற்றசை.

அரு. மழையிடிப்புறுவயவெஞ்சீயமா
முழையிடிப்புறுமுரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறச்சார்வுறுதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால்.

(இ - ள்.) விளிவை அஞ்சலால் - (வாலி சினந்தால் தம்தமக்கு) அழிவு நேரிடுமே! என்று பயப்படுதலால்,—அவன் - அவ்வாலி, விழைவு இடத்தின் மேல் - விரும்பி வாசஞ்செய்கின்ற இடத்திற்கு நோக,—மழை - மேகங்கள், இடிப்பு உறா - இடிக்க மாட்டாவாம்; வயம் - வெற்றியையுடைய, வெம் - கொடிய, சீயம் மா - சிங்கமாகிய விலங்குகள், முழை - குகையில், இடிப்புறா - கர்ச்சிக்கமாட்டாவாம; முரண் - வலிமையையுடைய, வெம் - கொடிய, காலும் - காற்றும், மெல் தழை துடிப்பு உற சார்வு உறாது - (அங்குள்ள) மெல்லிய இலைகள் உதிரும்படியாகச் சேராது; (எ - று.)

அவ்வாலியிருக்குமிடத்தில் தமது வல்லமையைக் காட்டினால் தமக்கு அபாயம் நேரிடுமென்று அவன்வலிமையைநோக்கி அஞ்சி மேகமும் சிங்கமும் காற்றும் அடங்கி நடக்கு மென்றபடி. இது, வாலிக்குக் கடவுளரும் அஞ்சுந் தன்மையோடு விலங்கும் அஞ்சுந்தன்மையுங் கூறியது. சீயம்- ஸிம்ஹமென்ற வடசொல்லின் சிதைவு. சீயம் மா - சீயமாகிய மா என இருபெயரொட்டுப் பண்புத்தொகை. (அரு)

அசு. மெய்க்கொள்வாலினன்மிடலிராவணன்
றொக்கதோளுறததொடர்படுத்தநாள்
புக்கிலாதவெம்பொழியாத்தநீ
ருக்கிலாதவேறுலகம்யாவதோ.

(இ - ள்.) மெய் கொள் வாலினால்-(தனது) உடம்பிற் பொருந்திய வாலி னாலே, மிடல் இராவணன்-வலிமையையுடைய இராவணனது, தோக்கதோள் - (இருபதாகத்) திரண்ட தோள்களை, உற - ஒருசேர அழுந்தும்படி, தொடர் படுத்த - கட்டி எடுத்துச்சென்ற, நாள்-அந்நாளில்,—பொழி - (அவ்விராவண னது உடம்பினின்று) சொரிந்த, வெம்-கொடிய, அரத்தம் நீர்- ரத்தவெள்ளம், உக்கிலாத - சிந்தாததும், புக்கிலாத-(அப்பொழுது வாலி) செல்லாததுமாகிய, வேறு உலகம் - வேறே லோகம், யாவதோ - யாது உள்ளதோ? (எ - று.)

வாலி இராவணனை வாலினாற்கட்டி அலக்ஷ்யமாகத் தூக்கிக்கொண்டு சகல லோகங்களிலுந் தாவித்தாவிச் சென்றபோது, அவன்சென்ற இடங்களிலெல் லாம் ராவணனது ரத்தப்பெருக்குச் சொரிந்துகொண்டே யிருந்ததென்ப தாம். வாலினால் தொடர்படுத்த என இயையும். வாலினை - வாலியென்று மாம். அரத்தம் - ரக்தமென்ற வடசொல்லின் சிதைவு. யாவது-யாதுஎன்ப தன் விரித்தல். 'புக்குலாயவெம் பொழியரத்தநீ, ருக்கிலாததெவ் வுலகமூழி யாய்' என்று பாடமோதுவாருமுளர். (௮௬)

௮௭. இந்திரன்றனிப்புதல்வனின்னளிச்
சந்திரன்றழைத்தனையதன்மையா
னந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவனின்மொய்ம்பினோய்.

(இ - ள்.) மொய்ம்பினோய்-வலிமையுடையவனே!—இந்திரன்-தேவேந் திரனது, தனி - ஒப்பில்லாத, புதல்வன-புத்திரனாகிய அவன,—இன் அளி - இனிமையான குளிர்ச்சியையுடைய, சந்திரன் - பூரணசந்திரன், தழைத்து அனைய - விளங்கினாற் போன்ற, தன்மையான - தன்மையை [வெண்ணி றத்தை] யுடையவன; அந்தகன் தனக்கு - யமனுக்கும், அரிய - கடப்பதற்கு அருமையான, ஆணையான - ஆஜ்ஞையுடையவன; இவனின - இச்சுக்கிரீ வனைக்காட்டிலும், முந்தி - முன்னே [தமையனாய்], வந்தனன - (ஒரே தாய் வயிற்றிற்) பிறந்தவன; (எ - று.)

இதனால், வாலியின், மேனிநிறத்தையும், எல்லோரையுங் கீழ்ப்படிந்து நடக்கச்செய்யுந் தன்மையையுங் கூறினர். அந்தகன் - (பிராணிகளுக்கு) அழி வைச் செய்பவன். அந்தகன தனக்கும் என்ற உயர்வுசிறப்பும்மை, விகாரத் தால் தொக்கது. தழைத்தனைய எனபதை - தழைத்தாலனைய என எச்சத் திரிபாகவாவது, தழைத்ததனைய என்பதன் விகாரமாகவாவது கொள்க. ஆணை - ஆஜ்ஞா என்ற வடசொல்லின் சிதைவு. (௮௭)

௮௮. அன்னவன்னெமக்கரசனாகவே
பின்னவன்னிளம்பதமியற்றுநாண்
முன்னவன்குலப்பகைஞன்முட்டினான்
மின்னெயிற்றுவாளவுணன்மேன்மையான்.

(இ - ள்.) அன்னவன் - அவ்வாலி, எமக்கு அரசன் ஆக - எங்களுக்கு [வானரங்கட்கெல்லாம்] ராஜாவாக இருக்க, இன்னவன்-இச்சுக்கிரீவன், இளம்

பதம் - இளவரசாட்சியை, இயற்றும் - நடத்திவருகின்ற, நாள் - காலத்தில்,— மேன்மையான் - பெருமையையுடையவனாகிய, மின் எயிறு - மின்னல்போல வெளிப்பட்டு விளங்குகின்ற கோரப்பற்களையுடைய, வாள் - வாள்போற் கொடிய, அவுணன் - ஓர் அசுரன [மாயாவியென்பவன], குலம் பகைஞன் - (எங்கள்) கூட்டத்துக்குச் சத்துருவாய், அவன் முன் - அவ்வாலியெதிரே வந்து, முட்டினன் - எதிர்த்துப் போர்செய்தான்; (எ - று.)

சுக்கிரீவன் வாலி இவவிருதிறத்தாரிற் சேர்ந்த வானரர்கட்கெல்லாம் தம்மிற் பகையுண்டானதற்கு மாயாவியென்னும் இவவசுரன வாலியினுடன் போர்செய்யவந்ததே முதன்முதற்காரணமாய் நின்றதுபற்றி, அவனை 'எம் குலப் பகைஞன்' எனக் கூறினனென்க. இனி, குலப் பகைஞன் - சிறந்த பகைவனென்றவாறுமாம்; 'குலகிரி' என்றாற்போல. பதம்-வடசொல். 'அன்னவன்னெமகது' 'இன்னவன்னிளம்' என்றவற்றில், னகரவொற்று-விரித்தல் விகாரம். இளம்பதம் - யுவராஜபட்டம். வாள் - மற்றை ஆயுதங்கட்கும் உபலக்ஷணமாய், படைகளையுடைய பகைவனென்றுமாம். இனி, வாளெயிறு என இயைத்து - வாள்போன்ற தந்தமென்றலுமாம். (அஅ)

அகூ. முட்டிநின்றவன்முரணுரத்தினை
ஒட்டவஞ்சிநெஞ்சுலையவோடினன்
வட்டமண்டலத்தரிதுவாழ்வெனு
வெட்டரும்பெரும்பிலனுளெய்தினன்.

(இ - ள்.) (அவ்வசுரன்), முட்டி நின்று - (அவவாறு) எதிர்த்துப் போர் செய்து நின்று, (வாலியின்வலிமை தனவலிமையினும் மிககிருததலை நோக்கி), அவன் முரண் உரத்தின் நேர் - அவ்வாலியினது வலிய பலத்துக்கு எதிரில், ஒட்ட - பொருந்துதற்கு, அஞ்சி - பயந்து, நெஞ்சு உலைய ஓடினன் - மனம் வருந்த ஓடிப்போய்,—'வட்டம் மண்டலத்து - வட்டவடிவாகிய இப்பூமண்டலத்துள், (இருந்தால்),— வாழ்வு - உயிரோடு வாழ்ந்திருப்பது, அரிது - (எனக்கு) அருமையானதாம்', எனு - என்று எண்ணி,—எட்டு அரு - பாய்ந்து செல்லுதற்கு அருமையான, பெரும் பிலனுள் - பெரிய பாதாளலோகத்து வழியில், எய்தினன - சென்றான்; (எ - று.)

அவ வாலியோடு போர்செய்ய முடியாமற் பினவாங்கிய மாயாவி இவ்வுலகத்தில் இருந்தால் வாலி தவறாமற் கொல்வான் என்று சங்கித்துப் பாதாளலோகத்தில் ஒளிப்பதற்குப் பிலத்துவாரததிற் புகுந்தனனெனபதாம். முட்டி நினறவன் என்று எடுத்து மாயாவியெனக் கொண்டால், 'முரணுரத்தின்' என்பதற்குமுன் 'வாலியினது' என வருவிக்க. ஓடினன் - முற்றெச்சம். பிலன் - பிலமென்பதன ஈற்றுப்போலி. (அகூ)

கூ௦. எய்துகாலையப்பிலனுளெய்தியா
னெய்தினங்கவற்கொணர்வெனென்மையாய்
செய்திகாவனீசிறிதுபோழ்தெனு
வெய்தினெய்தினன்வெகுளிமேயினன்.

(இ - ள்.) எய்த காலை - (இவ்வாறு மாயாவி) புகுந்த பொழுதில்;— வெகுளி மேயினன்-கோபம் பொருந்தியவனான வாலியானவன், (சுக்கிரீவனை நோக்கி), 'நோன்மையாய் - வலிமையையுடையவனே! யான்—, அ பிலனுள் எய்தி - அந்தப்பிலத்துவாரத்துட் புகுந்து, அங்கு - அங்கே (புகுந்துள்ள), அவன் - அவ்வசுரனை, நொய்தின் - விரைவிலே, கொணர்வென் - பிடித்துக் கொண்டுவருவேன்: சிறிது போழ்து-(அங்ஙனங் கொண்டுவருகின்ற) சிறிது நேரமட்டில், நீ—, காவல் செய்தி - (வேறொருவகையால் அவன் வெளிப்பட்டுப் போய்விடாதபடி இப்பிலத்துவாரத்தின் வாசலிலேயே) காவல் காத்துக் கொண்டிரு,' என - என்று சொல்லிவிட்டு, வெய்தின் - உக்கிரமாக, எய்தினன் - (பிலத்தினுட்) போனான்; (எ - று.)

மாயாவி பிலத்தினுட்புக்கதைக்கண்டு வாலியானவன் மிக்கசினங்கொண்டு தன் தம்பியாகிய சுக்கிரீவனை அப்பிலவாயிலிற் காவல்வைத்து மாயாவியைத் தொடர்ந்துசென்றனனென்பதாம். நோன்மையாய் - திருவடி பெருமானை முன்னிலைப்படுத்திய விளியுமாம். அவற்கொணர்வென் - இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலால், "இயல்பின் விகாரம்," நொய்தின் - எளிதில் என்றும், வெய்தின் - விரைவாக என்றுங் கொள்ளலாம். செய்தி என்ற ஏவலொருமை முற்றில், த் - எழுத்துப்பேறு. 'காலையிற்பிலனுளெய்தி', 'நொய்தினிங்கவற் கொணர்வென்' என்பன - பாடபேதம்.

ஈற்றடியிற் பிராஸமும், முன்செய்யுளோடு இச்செய்யுள் அந்தாதித் தொடையாகத் தொடர்ந்ததும் கருதத்தக்கன. (௬௦)

௬௧. ஏகிவாலியும்மிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்வின்வைகிடச்
சோகமெய்தினன்றுணைதுளங்கினான்.

(இ - ள்.) வாலியும்—, ஏகி - சென்று, இருது ஏழொடு ஏழ்-பதினான்கு ருது [இருபத்தெட்டுமாச]காலம்வரையிலும், வெம்பிலம்-கொடிய அப்பிலத்தினுள்ளே, வேகம்-வேகத்தோடு, தடவி - தேடிப்பார்த்து, (அவனைக் கண்டு), வெம்மையான் வென்றி மோகம்மேல்-கொடுந்தன்மையையுடைய அவ்வசுரனை வெல்லுதலாகிய விருப்பந்தரும் பொருளின்மேல், முயல்வின் - முயற்சியிலே, வைகிட - பொருந்தியிருக்க,— துணை - தம்பியான சுக்கிரீவன், சோகம் எய்தினன் - துன்பமடைந்தவனாய், துளங்கினான் - கலங்கினான்; (எ - று.)

பிலத்துட்சென்ற வாலியானவன் அசுரனைத் தேடுதலும், தேடிக்கண்டு பிடித்தலும், பிடித்துப் போர்செய்தலுமாகிய தொழில்களிற் பொருந்தி இருபத்தெட்டுமாசம்வரையிலும் வெளிவராததனால், அவனுக்கு என்ன அபாயம் நேர்ந்ததோ என்று காவல்காத்துநின்ற சுக்கிரீவன் கலங்கினனென்பதாம். இருது - இரண்டு மாச காலங்கொண்டது. இருது, பருவம் என்பன - ஒருபொருட்சொற்கள். சித்திரையும் வைகாசியும்-வசந்தருதுவென்றும், ஆனியும் ஆடியும் - க்ரீஷ்மருதுவென்றும், ஆவணியும் புரட்டாசியும் - வர்ஷருதுவென்

றும், ஐப்பசியும் கார்த்திகையும் - சரத்ருதுவென்றும், மார்கழியும் தையும் - ஹேமந்தருதுவென்றும், மாசியும் பங்குனியும்-சிசிரருதுவென்றும் கூறப்படும். ஏழொடேழ் - ஏழோடுகூடிய ஏழு. ஏழ் - ழுகரமெய்யீற்றுப் பெயரென்பது, தொல்காப்பியனார்கொள்கை;நன்னூலார் முதலாயினோர்,ஏழு என்னும் முற்றிய லுகரவீற்றுப்பெயர் விகாரப்பட்டு அவ்வாறு நிற்குமென்பர். வென்றியாகிய மோகம்மேல் என மாறுக. இருபத்தெட்டுமாதங் கழியவும் அதனைக்குறித்துச் சிறிதும் ஆலோசனையின்றி அவவசுரனை வெல்வதிலேயே கருத்தாயிருந்த தனால், வெற்றியை 'மோகம்' என்றார். வாலி, ருது, வேகம், பிலம், மோஹம், மோகம்-வடசொற்கள். வெம்மையான் - வாலியாகவுமாம். வென்றிமோகமேல் வெம்மையான எனக் கூட்டி. வெற்றியாகிய மோகத்தில் விருப்புடையவனான வாலியென்றும் உரைக்கலாம். வாலியும் மிருது—மகரவொற்று - விரித்தல்- 'மோகமோடமர்முயல்வின் வைகிட' என்று பாடமோதுவாருமுளர். 'வெம்மை சால்,' 'சோகமெய்தி நின்றனைதுளங்கினன்' என்பன - பாடாந்தரம். (கக)

கஉ. அழுதழுங்குறும்மிவனையன்பினிற்
றொழுதிரந்துநின்றொழிலிதாதலா
லெழுதுவென்றியாயரசுசெய்கெனப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சினன்.

(இ - ள்.) அழுது - புலம்பி, அழுங்குறும் - வருந்துகின்ற, இவனை-இச் சுக்கிரீவனை, (நாங்களெல்லாம்), அன்பினில் - அன்போடு, தொழுது-வணங்கி, இரந்து - பிரார்த்தித்து, எழுது வென்றியாய் - (நூல்களிற் சிறப்பித்து) எழுதத்தக்க வெற்றியையுடையவனே! நின் தொழில் இது ஆதலால் - உனது செய்கை இது [அரசாட்சி] ஆகையால், அரசு செய்க - அரசாட்சி செய்வாயாக,' என - என்று சொல்ல,—பரியும் நெஞ்சினன் - துக்கிக்கின்ற மனமுடையனான அச் சுக்கிரீவன், இது பழுது எனறனன்.இது குற்றமாமென்று சொன்னான் ; (எ - று.)—பரிதல்-பரிதபித்தல்.

நெடுநாள் கழிந்தும் வாலி மீண்டுவாராததனால் 'அவ்வாலிக்கு ஏதேனும் தீங்கு நேரிட்டதோ ?' என்ற அதிசங்கையினால் இச்சுககிரீவன் மனங்கலங்கி நிற்க, நாங்கள் இவனைத்தேற்றி 'யுவராஜாவாகிய நீயே வாலிக்குப்பிறகு அரசு புரியவேண்டும்' என்று வற்புறுத்திக்கூறவும் இச்சுக்கிரீவன் அதனைத் தடுத்துக் கூறலாயினனென்பதாம். இங்கே, இரத்தல் - வேண்டுதல் . 'நின் தொழில் இதாதலால்' என்றது - அரசனாகிய வாலிக்குப்பின்பு அரசாள வேண்டுவது இளவரசனாகிய உனது கடமையாகையால் என்றபடி. எழுது தல் - ஆங்காங்குத் தனது வென்றியைச் சிலாசாஸனமாகக் கற்களில் எழுதி காட்டிவைத்தலுமாம். அழுங்குறும்மிவனை—மகரவொற்று - விரித்தல். 'அரசு புரி கொள்கென' என்றும் பாடமுண்டு. (கஉ)

கஙு. என்றுதானுமவ்வழியிரும்பிலஞ்
சென்றுமுன்னவற்றேடுவேனவற்
பொன்றுவேனெனப்புகுதன்மேயினன்.

(இ - ள்.) என்று - என்றுசொல்லி,—தானும் - சுக்கிரீவனும்,—'இரும் பிலம் சென்று-பெரிய பிலத்தினுட் புகுந்து, அ வழி-அவ்விடத்தில், முன் — வன் - தமையனை, தேடுவேன் - தேடிப்பார்ப்பேன்; (அவன் *இறந்துபோயி ருந்தால்), அவன் கொன்று உளான் தனை - அவனைக்கொன்றுள்ள பகைவனை (போர்செய்து கொல்லுவேன்); கொல ஒணாது எனின் - கொல்ல முடியா தாயின், பொன்றுவேன் - (போரில்) இறப்பேன்,' என - என்று சொல்லி, புகுதல் மேயினன் - (அப்பிலத்தில்) நுழையப் போயினன்; (எ - று.)

'வாலி சென்ற பிலத்தினுட் புக்குப் பார்த்து அவ்வாலியை அசுரன் கொன்றிருப்பின் அவனைக்கொல்வேன்; அன்றி, யான் இறப்பேன்' என்று சுக்கிரீவன தனது துணிவை யெடுத்துக் கூறினனென்பதாம். ஒணாது=ஒன் றாது: மரூஉ, 'கொல்வனன்றெனில்' என்று பாடமோதுவாரு முளர். 'அன்று தானுமவ்வழி யரும்பிலஞ், சென்றுமுன்னவற்றேடிநாளவற், கொன்றுளார் தமை' என்று சில பிரதிகளுள. (௬௩)

௬௪. தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோ
யெடுத்தவேலையோரிளையவிளைவினைக்
தடுததகாவலும்மரிகளாணையாற்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம்.

(இ - ள்.) வல்லவர் - சொல்வன்மையையுடைய மந்திரிமார் முதலி யோர், தடுத்து - (இவன்செல்வதைத்) தடைசெய்து, துணிவு செய்து - சமா தானவார்த்தைகள் சொல்லி, நோய் - (இவனுடைய) துக்கத்தை, எடுத்த வேலை - போக்கின [தேற்றின] பொழுது,—அடுத்த காவலும் - பொருந்திய அரசாட்சியையும், கொடுத்தது உண்டு -( அவவாநரசிரேஷ்டர்கள் இவனுத் குக்) கொடுத்தது உண்டு; (அவவரசாட்சியை), இவன் - இச்சுக்கிரீவன், அரிகள் ஆணையால் - அக்குரங்குகளின் ஏவலை மறுப்பதற்கு அஞ்சி அதனா லேயே, ஓர் இயைவினால் இயைந்து - ஒருவாறு உடன்பட்டு, கொண்டனன் கொல் ஆம் - ஏற்றுக்கொண்டான் போலும.

நாங்கள் வற்புறுத்திக்கூறவுங்கேளாது இவன்செல்வதைக் கண்ட மந்திரி மார் இவனைத் தடுத்துப் பலவாறு சமாதானங்கூறி இராச்சியத்தை யாளுமாறு பட்டங்கட்டித்தரவே, இச்சுக்கிரீவன் அம்மந்திரிமாரது கட்டளையைக் கடக்க மாட்டாமல் அரசாளுதலை உடன்பட்டானேயன்றி முழுச்சம்மதத்துடன் ஆட் சியை ஏற்றுக்கொள்ளவில்லை யென்பதாம். இதனால், சுக்கிரீவன்மீது சிறிதுங் குற்றமில்லை யென்பதைத் தெளிவாகக் கூறியவாறும். கொல் ஆம - அசை. காவலும் மரிகள்—மகரவொற்று - விரித்தல். ஹரி - வடசொல். இரண்டா மடிக்கு - 'எடுத்திவன்றனக்கிறைமையோடியைந்து' என்று பாடமோதுவாரு முளர். 'தடுத்துவல்லவர்,' 'நோய், கெடுத்துமேலையோர் கிளத்து நீதியால்', என்றும், 'கொண்டிலன்கொலாம்' என்றும் பாடங் காணப்படுகின்றது. (௬௪)

௬௫. அன்னநாளின்மாயாவியப்பிலத்
தின்னவாயினூடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலாமுடனடுக்கினேம்.

(இ - ள்.) அன்ன நாளில் - அந்தக்காலத்தில்,—'மாயாவி - (வாலியைக் கொன்ற) மாயாவியானவன், அ பிலத்து - அப்பிலத்திலிருந்து, இன்ன வாயினூடு - இந்தவழியால், எய்தும் - வருவான், என்ன - என்று எண்ணி,—யாம் - நாங்களெல்லாம், பொன்னின் மால் வரை பொருப்பு ஒழித்து-பொன்மயமான மகாமேருகிரியாகிய ஒருமலை ஒழியவிட்டு, வேறு உன்னு குன்று எலாம் - மனத்தால் நினைக்கப்படும் மற்றைமலைகளையெல்லாம், உடன் - ஒருசேர, அடுக்கினேம் - (கொண்டுவந்து ஒன்றன்மேலொன்றாக) அடுக்கி வைத்து (ப் பிலத்துவாரத்தை) அடைத்துவிட்டோம்; (எ - று.)

மாயாவி - மாயையுடையவன்; இவனும், துந்துபியும் - இராவணன்மனைவியான மந்தோதரியின் உடன்பிறந்தவர்; இவர்கள் தந்தை - அசுரசிற்பியான மயன்; தாய் - ஹேமா என்ற அப்ஸரஸ்த்ரீ: வெகுநாள்கழிந்துவிடவே, அம்மாயாவி பிலத்தினுள் வாலியைக் கொன்றுவிட்டானென்று வாநரர்கள் மாறாகக் கருதி, அதனால், சுக்கிரீவனுதியோரையுங் கொல்லுதற்கு அம்மாயாவி மீண்டு வருதல்கூடு மென்றெண்ணி அங்ஙனம் வரவொட்டாமல் வழியடைத்தனரென்க. பின்னிரண்டடி - உயர்வுநவிற்சியணி. 'வாயினூடேறுமென்ன' என்பதும் பாடம். (௬௫)

௬௬. சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்தியா
மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவா
யாவியுண்டனனவனையன்னவன்.

(இ - ள்.) யாம் - நாங்கள், அ வழி - அந்தவழியை, சேமம் செய்து - (அடைத்தலாகிய) காவலைச்செய்து, செம் கதிர் கோ மகன்தனை கொண்டு வந்து - சிவந்த கிரணங்களையுடைய சூரியபகவானது குமாரனாகிய சுக்கிரீவனை அழைத்துக்கொண்டுவந்து, மேவு குன்றின்மேல் வைகும் - (இருப்பிடமாகப்) பொருந்திய இம்மலையில் வாழ்ந்துகொண்டிருக்கின்ற, வேலைவாய் - காலத்தில்,—(அங்கே), அன்னவன் - அவ்வாலி, அவனை - மாயாவியை, ஆவி உண்டனன் - உயிர் குடித்தான் [கொன்றானென்றபடி]; (எ - று.)

வழியடைத்தபின்பு நாங்கள் சுக்கிரீவனை அழைத்துக்கொண்டு இம்மலையில் வாழ்ந்துகொண்டிருக்கையில் வாலி மாயாவியைக்கொன்றிட்டனனென்பதாம். சேமம் - க்ஷேமமென்னும் வடமொழியின் விகாரம். 'சேமமவ்வழிச்செய்து' என்பது - கீழ்க்கவியின் அநுவாதம். வந்தியாம் - குற்றியலிகரம். ()

௬௭. ஒளித்தவன்னுயிர்க்கள்ளையுண்டுளங்
களித்தவாலியுங்கடிதினெய்தினான்
விளித்துநின்றுவேறுரைபெறானிருந்
தளித்தவாறுநன்றிளவலாரெனு.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) ஒளித்தவன் - (பிலத்தில்) மறைந்தவனான மாயாவியினது, உயிர் - பிராணனாகிய, கள்ளை - மதுவை, உண்டு - குடித்து [மாயாவியைக்

கொன்று], உளம் களித்த - மனம் மதிக்க [செருக்கடைய]ப் பெற்ற, வாலியும்—, கடிதின் - விரைவாக, எய்தினன் - (பிலத்தின்வாயிலில்) வந்து, (வழி அடைபட்டிருப்பதைப் பார்த்து), விளித்து நின்று - (தம்பியைக்) கூப்பிட்டு நின்று, வேறு உரைபெறான் - பிரதியுத்தரத்தைப் பெறாதவனாய், 'இளவலார் - (நமது) தம்பியார், இருந்து - (வாயிலில்) இருந்து, அளித்த ஆறு - காவல்செய்த விதம், நன்று - நன்றாயிருந்தது!' என - என்று எண்ணி, (எ - று.)—'என' என்பது, வருங் கவியில் 'எற்றலும்' என்பதனோடு முடியும்.

சிறிதும் ஆராய்ச்சியின்றி உடனே வெகுண்டதனால், 'களித்த' என்றும் 'கள்ளையுண்டு' என்றுங் கூறினார். பகைவனைக் கொன்றதனாலுண்டான வெற்றிச்செருக்கை, உயிர்க்கள்ளுண்டு உளங்களித்ததாக்குறித்தார்: தற்குறிப்பேற்றவணி; இவ்வணிக்கு, 'உயிர்க்கள்ளையுண்டு' என்ற உருவகவணி அங்கமாய்வினறது. வேறுரை - எதிர்மொழி. 'அளித்தவாறு நன்று' என்றதும், 'இளவலார்' எனப் பலர்பாற்கு உரிய 'ஆர்' விகுதி கொடுத்துக் கூறியதும் - இகழ்ச்சிக் குறிப்பு. இளவல - பண்படியாய்ப்பிறந்த பெயர்; அல் - பெயர்விகுதி. பலர்பாலாற்கூறுதல் உயர்த்தற்கண்ணதன்றோ வெனின்,—"தாம் வந்தார் தொண்டனார்" என்றாற்போல உயர்சொல்தானே குறிப்புநிலையால் இழிபுவிளக்கிற்றென்க. 'பெறான்விரைந்தளித்த' என்றும் பாடமுண்டு. (கஎ)

கஅ. வால்விசைத்துவான்வளிநிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதினெற்றலு
நீல்நிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம்.

(இ - ள்.) அவன் - அவ்வாலி, வால் விசைத்து - வாலை வலிமையோடு தூக்கி, கால் விசைத்து - காலைப் பலமாக எடுத்து, வான வளி நிமிர்ந்து என - பெருங்காற்று எழுந்தாற்போல, கடிதின - வேகமாக, எற்றலும - உதைத்துத் தள்ளினமாத்திரத்தில்,—பெரிய வெற்பு எலாம் - (நாங்கள் அடைத்துவைத்த) பெருமலைகளெல்லாம், நீல் நிறத்து விண் நெடு முகட்டவும் - நீலநிறத்தையுடைய ஆகாயத்தினது உயர்ந்த உச்சியை யடைந்தனவும், வேலை புக்கவும் - கடலில் விழுந்தனவும் (ஆயின); (எ - று.)—'ஆயின' என வினை வருவிக்க.

அவவாறு சுக்கிரீவனமீது மிக்கசினங்கொண்ட வாலி தனது தாளினால் ஒருதையுதைத்தலும், பிலத்தைமூடியிருந்த மலைகளெல்லாம் வானிலும் கடலிலுமாகச் சென்றுசேர்ந்திட்டன வெனபதாம். நீலமெனபது, கடைக்குறையாக 'நீல்' என நின்றது. முகட்ட - பலவின்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். புக்க - தெரிநிலை வினையாலணையும்பெயர். 'வழிநிமிர்ந்தெனக், கால் பெயர்த்தவன கடிதுதைத்தலுங், நீல்நிறத்தவானெடுமுகட்டவும்' என்று சில பிரதிகளுள்ளன. மூன்றாமடியில் 'நீல்நிறம்' என்றஇடத்து இடைநிலைமெய்ம்மயக்கம்இலதாகவுஞ் சந்திபெறாதது, எதுகைத்தொடையின் பொருட்டெனக. 'வால் விசைத்து மாவழிதிறந்திட' என்று பாடமோதுவாருமுளர். (கஅ)

கூகூ. ஏறினானவன்னெவருமஞ்சுறச்
சீறினனெடுஞ்சிகரமெய்தினான்
வேறிலாதவன்புதல்வன்மெய்ம்மையா
மாறினானும்வந்தடிவணங்கினான்.

(இ - ள்.) அவன் - வாலி, ஏறினான் - (பிலத்தினின்று) ஏறியவனாய், எவரும் அஞ்சுற - யாவரும் பயப்படும்படி, சீறினன் - கோபித்து (இரைந்து கொண்டு), நெடுஞ் சிகரம் - பெரிய இம்மலையுச்சியை, எய்தினான் - அடைந்தான்; மெய்ம்மை ஆம் ஆறினான் - சத்தியமான வழியிற் செல்பவனாகிய, வேறு இல் - (மனத்தில்) வேறுபாடில்லாத, ஆதவன் புதல்வனும் - சூரிய புத்திரனான சுக்கிரீவனும், வந்து—, அடி வணங்கினான் - (தமையனது) பாதத்தில் விழுந்து வணங்கினான்; (எ - று)

வாலியானவன் விசையோடு அம்மலைகளைத்தள்ளிப் பின்பு மிக்கசீற்றத்துடன இம்மலையையடைய, சுக்கிரீவன மனத்திற் களங்கமில்லாதவனாதலால் அவ்வாலியினடிகளை வணங்கின னென்பதாம். மனத்திற் களங்கமின்றிப் பெரியவாநரர்களின கட்டளைப்படியே நடந்தவனாதலால், 'வேறு இல்' என்றும், 'மெய்ம்மையாம் ஆறினான்' என்றுங் கூறினார்; அதுபற்றியே, அவன் அஞ்சியொடுங்கியொளியாமல் எதிர்வந்து வணங்கியது மென்க. ஆதவன் - ஆதபனை: நன்குதத் தபிப்பவன; தபிதல்-வெயில்காய்தல். அவன்னெவரும்-னகரமெய் - விரித்தல்விகாரம். 'வேறிலாதவன் புகவு மெய்ம்மையால்' என்று பிரதிபேதம். (கூகூ)

௪00. வணங்கியண்ணநின்வரவிலாமையா
லுணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
கிணங்கரின்மையாலிறைவநும்முடைக்
கணங்கள்காவலுன்கடன்மையென்றனர்.

(இ - ள்.) வணங்கி - (சுக்கிரீவன்) தண்டனிட்டு, (வாலியைநோக்கி), அண்ண - மூத்தவனே! இறைவ - தலைவனே! நின வரவு இலாமையால் - (வெகுநாள்வரையில்) உன வருகை இல்லாமையால், உணங்கி - ('உனக்கு என்ன நேர்ந்ததோ?' என்று) வருந்தி, உன வழி படர - உன்னிடம் வந்து சேரும்படி, உன்னுவேற்கு - எண்ணிப்புறப்பட்ட எனக்கு,- நும் உடை கணங்கள் - உம்முடைய கூட்டத்தார் [மந்திரிகள் முதலிய வாநரர்கள்], இணங்கர் - இன்மையால் - சம்மதமில்லாமையால், 'காவல் - (எங்களைக) காத்தல் [அரசாளுதல்], உன கடன்மை - உனது கடமையாம்,' என்றனர் - என்றார்கள்; (எ - று.)

சுக்கிரீவன் நேர்மையான வழியில் நடப்பவனாதலால், வாலிகேட்பதற்கு முன்னமே தன்மீது சிறிதுங்குற்றமில்லையெனத் தெளிவிக்குமாறு நிகழ்ந்த செய்தியைஉள்ளபடி வாலியினிடத்துக்கூறலாயினனென்க. உன்னுவேற்கு - நான்கனுருபு,கொள்ளுதற்பொருளது. 'இணங்கு' என்னும்முதனிலைத்தொழிற் பெயராகிய மென்றொடர்க்குற்றியலுகரத்திக்கு, 'இணங்கர்' என அர் போலி யாய்வந்தது. 'இணங்கல்' எனப் பாடங்கொள்ளுதல், நேர். இறைவ நும்முடை.

ஒருமைப்பன்மைமயக்கம்; மரியாதைபற்றி வந்ததனால், வழுவமைதி. இறைவ-வாநரர்கள் சுக்கிரீவனைக்குறித்த விளியுமாம். இச்செய்யுளில் 'ஐய' என்றதுமுதல் அடுத்தசெய்யுளில் 'பொறாய்' என்னுமளவும், முன்னே வாலியினிடத்துச் சுக்கிரீவன்கூறியதை அநுமான் அநுவதிக்கின்றான். கணம் - வடசொல். 'அண்ணனின்' என்ற பாடத்துக்கு, அண்ணன் என்று பிரிந்து அண்மை விளியாம்; அண்ணல் என்று பிரித்தலுமொன்று. 'கடமை' என்பதும் பாடம். (௪00)

௪0௧. ஆணையஞ்சியிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநல்குவாய்
பூணுலாவுதோளிணைபொறாயெனக்
கோணினனெடுங்கொடுமைகூறினன்.

(இ-ள்.) (என்று நிகழ்ந்தவரலாற்றைக் கூறிப் பின்னும் சுக்கிரீவன் வாலியைநோக்கி), 'பூண் உலாவு தோள் இணை - ஆபரணங்கள் அசைந்து விளங்கப்பெற்ற இரண்டு தோள்களையுடையவனே!—ஆணை அஞ்சி - (அவ்வாநரர்களின்) கட்டளையை (மறுப்பதற்குப்) பயந்து, இ அரசை எய்தி-இந்த அரசாட்சியை யடைந்து, வாழ்-(உன்னிடம் வராமல் இங்கேயே) வாழ்ந்துகொண்டிருந்த, நாண் இலாத-வெட்கமில்லாத, என்-எனது, நவையை - குற்றத்தை, பொறாய் நல்குவாய் - பொறுத்தருள்வாயாக', என - என்று வேண்டவும்,— கோணினன்-(வாலி) மனம் மாறுபட்டவனாய், நெடுங் கொடுமை கூறினன்-பெரிய கொடிய வார்த்தைகளைச் சொன்னான; (எ - று.)

தனக்கு இஷ்டமில்லாமலிருக்கவும் வாநரர்களின் வேண்டுகோளினால் தான் செய்த காரியம் அரசாட்சியில் விருப்பத்தாற் செய்ததென வாலி எண்ணுதற்கு இடமாய் நிற்றலால், 'நாணிலாத என நவையை' என்று அபுத்திபூர்வமாக நேர்ந்த தன்குற்றத்தை வெளிப்படையாகக்கூறி, 'பொறாய்' என்று சரணமடைந்தன னென்க. (சுக்கிரீவன் இவ்வாறு சரணாகதனாகவும் வாலி க்ஷமியாமற் போனதனாலேயே, தர்மஸம்ஸ்தாபநம் பண்ணப்பிறந்த ஸ்ரீராமன் ஶரணாகதரக்ஷணரூபமான தர்மத்துக்கு விரோதியான வாலியை நிரஸித்தனனென அறிக.) பூணுலாவுதோளிணை - அன்மொழித்தொகை; அண்மை விளி. 'தோளினை' என்றும் பாடம். கோணுதல்- சுக்கிரீவன் தன்கட்டளையைத் தவறி அரசச்செல்வத்திலுண்டான ஆசையால் இப்படிசெய்தானென்றே எண்ணியதனால். நல்குவாய் - அரசாளுவாய் என்றுமாம். கொடுமைகூறுதல்-நிஷ்டுரவார்த்தைகள் சொல்லுதல். (௪0௧)

௪0௨. அடல்கடந்ததோளவனையஞ்சிவெங்
குடல்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங்கதலங்களா
லுடல்கடைந்தனனிவனுலைந்தனன்.

(இ - ள்.) (கொடியசொற்களைக் கூறியபின்னும் வாலியானவன்),—அடல் கடந்த - வலிமைமிக்க, தோள் - புயங்களையுடைய, அவனை - அவ்வாலியை, அஞ்சி - பயந்து, வெம் குடல் கலங்கி - கொடிய குடலுங் கலங்கிப்போய், எம்

குலம் ஒடுங்க - எங்கள் [வானரங்களின்] கூட்டமெல்லாம் பதுங்கியொளியும் படி,—முன் கடல் கடைந்த-முற்காலத்தில் திருப்பாற்கடலை மதனஞ்செய்த, வெம் கரதலங்களால் - கொடிய (தனது) கைகளால், உடல் - (சுக்கிரீவனது) உடலை,கடைந்தனன்-குத்திக் குமைத்துக் கலக்கினான்; (அதனால்), இவன்—, உலைந்தனன் - மிகவருந்தினான்; (எ - று.)

கொடியசொற்களைக்கூறியதோடு நில்லாமல் வாலி நாங்கள் பலரும் அஞ்சிக் கலங்கும்படி எம்முன்னிலையிலேயே சுக்கிரீவனைக் குத்திக்குமைத்தனனென்பதாம். இனி, அடல் கடந்த தோள் - (பகைவர்களின்) வலிமையை அடக்கி,வெற்றிகொண்ட தோளென்றுமாம். ஒடுங்கக் கடைந்தனன் என இயையும். "அச்சக்கிளவிக்கு ஐந்து மிரண்டும்" என்ற தொல்காப்பியத்தால், 'அவ்வனையஞ்சி' என்றார். (௪௦௨)

௪௦௩. இவனுலைந்துலைந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தெயிலடைந்தனன்
கவனமொன்றிலான்கால்கடாயென
வவனிவேலையேழரியின்வாவினான்.

(இ - ள்.) இவன் - சுக்கிரீவன், உலைந்து உலைந்து - மிகவருந்தி, எழு கடல் புறத்து அவனியும் - ஏழு சமுத்திரங்களுக்கும் அப்புறத்திலுள்ள பூமியையும், கடந்து - தாண்டி, எயில் - (அண்டச்) சுவரை, அடைந்தனன் - சேர்ந்தான்; கவனம் ஒன்று இலான் - கவலைசிறிதுமில்லாதவனான வாலியும், கால் கடாய் என - காற்றுச் சென்றாற்போல [வாயுவேகமாய்], அவனி வேலை ஏழ் - பூமியைச்சூழ்ந்த ஏழு சமுத்திரங்களையும், அரியின - சிங்கத்தைப் போல, வாவினான - (அலக்ஷ்யமாகத்) தாண்டிப் பாய்ந்தான்; (எ - று.)

வாலியினிடத்தினின்று தப்பி யோடிவிடவேண்டு மென்னுங் கருத்தினாற் சுக்கிரீவன் ஏழுகடல்களைக்கடந்து அண்டபித்திகையை யடைய, வாலியும் பின தொடர்ந்தே சிங்கம் மலைப்பிரதேசங்களைத் தாண்டுவது போல ஸப்த சமுத்திரங்களையும் மிக எளிதிறகடந்து சென்றனனென்பதாம். இனி, அரியின் என்பதற்கு விஷ்ணுவைப்போல வென்றும், சூரியனபோல வென்றும், தவளை போல வென்றும், குதிரைபோல வென்றும் பலவகையாகப் பொருள் கொள்ளுதலும் ஒன்று. கவனம் ஒன்று இலான் - (இவனைத் தொடர்ந்து பற்றுதலன்றி) வேறுகருத்தில்லாதவனென்றுமாம். நானகாமடியின முதலில், அவன் இவவேலையேழ் என்று பிரித்தும் உரைக்கலாம்; அவவுரைக்கு, 'அவனிவவேலையேழ்' என்றதன வகரமெய் தொக்கதெனக. உலைந்து உலைந்து - அடுக்கு, மிகுதிபற்றியது.கடாய்-கடாவினால் என்னும் எச்சத்தின் திரிபு.அவனி எனற வடசொல் - (அரசராற்) காக்கப்படுவது என்று காரணப்பொருள்படும்.

[அநுமான் கூறிவருகின்ற வரலாற்றைக் கேட்டு ஸ்ரீ ராமன் வியத்தல்.]

௪௦௪. என்றுகான்மகனியம்பவீசனுந
நன்றுநன்றெனாநனிதொடர்நதுபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மறு
என்றுவாவுதற்கறிந்தனன்கொலாம்,

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) என்று—, நால்மகன் - வாயுபுத்திரனை அநுமான், இயம்ப - சொல்ல,—ஈசனும் - தலைவனாகிய ஸ்ரீராமனும், 'நன்று நன்று - நன்றாயிருந்தது நன்றாயிருந்தது! நனி - மிகுதியாய் [வேகமாய்], பின் தொடர்ந்து சென்ற - பின்னே விடாமல் தொடர்ந்துபோன, வாலி - வாலியால்,—முன் சென்ற செம்மல் - முன்னேபோன சுக்கிரீவன், அன்று - அந்நாளில், வாவுதற்கு - தாவிச்செல்ல, அறிந்தனன்கொல்ஆம் - அறிந்தான்போலும்', எனா - என்று, (எ - று.) —'எனா' என்பது, மேற்கவியில் 'வியந்து' என்பதனோடு முடியும்.

வாலி பின்னே தொடரத்தொடர முன்னேசெல்லுகின்ற சுக்கிரீவன் பின்னும் விரைந்து செல்வதனால், 'பின்சென்றவாலியினால் முன்சென்ற செம்மல்வாவுதற்கு அறிந்தனன்கொல்' என்றான்: நயந்தோற்றப்பேற்றம். இனி, பின்தொடர்ந்துசென்ற வாலி முன்சென்ற சுக்கிரீவனால் வாவுதற்கறிந்தனன்கொ லென்றுமாம். நன்று நன்று - அடுக்கு, வியப்புப்பற்றியது. செம்மல் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர். வாவுதற்கு - குவ்வீற்று எதிர்கால வினையெச்சம்; ஆ, அல் இரண்டும் - சாரியைகள். தான் - அசை. ஈசனுந்நன்று—நகரவொற்று - விரித்தல்.

இக்கவியும், அடுத்தகவியும் - சில அச்சுப்பிரதிகளிற் காணப்படுகின்றனவாயினும் பயில வழங்கா; இவற்றை 'வெள்ளிப்பாட்டு' என்பர்: வெள்ளியம்பல வாணத்தம்பிரா னென்பவர் பாடிச் சொருகியவை. (கoச)

[ஸ்ரீராமன் பின்னுங் கூறுமாறு வினவுதல்.]

கoரு. இனையவாவியந்திளவறன்னொடும்
வனையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையான்புகறன்மேயினான்.

(இ - ள்.) வனையும் வார் கழல் - அணிந்த பெரிய வீரக்கழலையுடைய, கருணை வள்ளல் - கிருபாமூர்த்தியான ஸ்ரீராமபிரான், இளவல்தனனொடும் - இளைய பெருமானுடனே, இனைய ஆ வியந்து - இவ்வாறு அதிசயித்து, (அநுமானை நோக்கி), 'இனைய வீரர் - வீரர்களாகிய இந்த வாலி சுக்கிரீவர்கள், பின்பு—, செய்தமை - செய்த வரலாற்றை, இயம்பு - சொல்வாய்,' என - என்று வினவ,—புனையும் வாகையான் - பொருந்திய வெற்றியையுடையவனான சிறிய திருவடி, புகறல் மேயினான் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.) —அதனை, அடுத்த நான்கு கவிகளிற் காண்க.

வாகை யென்ற ஒருவகைமரத்தின் பெயர் - அதன்மலர்க்கு முதலாகு பெயர்; போரில்வென்றவர் இதனைச்சூடுதல், மரபு: ஆகவே, புனையும் வாகையான் - போர்செய்து வெற்றிகொள்ளுதலையே தனக்கு அலங்காரமாகக் கொண்டவன் என்றபடி. ஆ - ஆறு என்பதன் விகாரம். புகறல் என்ற தொழிற்பெயரில், புகல் - பகுதி, தல் - விகுதி. மற்றவை - சந்தி. (கoரு)

[இதுமுதல் நான்கு கவிகள் - அநுமான் தான் சொல்லிவந்த வரலாற்றைக் கூறிமுடித்தல்]

௧0௬. நக்ரக்கடற்புறத்துநண்ணுநாட்
செக்கர்மெய்த்தனிச்சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினன்.

(இ - ள்.) நக்கரம் - முதலைகளையுடைய, கடல் - ஏழுகடல்களுக்கும், புறத்து - அப்பாலில், நண்ணும் நாள் - (சுக்கிரீவன்) இருந்தபொழுதில்,— செக்கர் - சிவந்த, மெய் - நிறத்தையுடைய, தனி - ஒப்பில்லாத, சோதி - ஒளி வடிவமான சூரியனது பிரகாசமும், சேர்கலா - சேராத, சக்கரம் பொருப்பின் தலைக்கும் - சக்கரவாளபருவதத்தி னிடத்துக்கும், அப் பக்கம் - அப்பாலில், அவன் - வாலி, உற்று - சேர்ந்து, கடிது - விரைவிலே, பற்றினன் - (அங்கு ஓடிப்போயிருந்த சுக்கிரீவனைப்) பிடித்துக்கொண்டான்; (எ - று.)

கீழ்க்கூறியவாறு சக்கரவாளகிரிக்கும் அப்பால் அண்ட பித்திகையை யடைந்த சுக்கிரீவன் அதற்குமேற்போக இடமில்லையாதலால் திகைத்துநிற் கையில், அவனைத்தொடர்ந்துசென்ற வாலியும் அவனை விரைந்து பிடித்துக் கொண்டன னென்பதாம். பூமியைச்சுற்றிலுமுள்ள ஏழுகடலுக்கு மப்பால் கோட்டை மதில்போலச் சுற்றிலுமிருக்கின்ற சக்கரவாளபருவதத்துக்கு உட் பக்கம் மாத்திரம் சூரியகிரணங்களாற் பிரகாசிக்க வெளிப்பக்கம் அவற்றால் விளங்காதாதலால், 'செக்கர்மெய்த் தனிச்சோதி சேர்க்கலாச் சக்கரப்பொருப் பிற்றலைக்கு மப்பக்கம்' என்றார்; இதனை, அம்மலையினது 'லோகாலோகம்' என்னும் வடமொழிப்பெயராலும் உணர்க. நக்ரம் - நக்கரம், சக்ரம் - சக்கரம் என இணைந்து இயல்காலை ரகரத்துக்குமுன் சிறுபான்மை அகரம்பெற்றுவந் தன. நக்ரமென்பது - யானை முதலியவற்றைப் பிடித்துக் கொல்வதான பெருமுதலைக்குப் பெயர்; இது - இங்கு மற்றை நீர்வாழுயிர்கட்கும் உபலக்ஷ ணம். செக்கர் - பண்புப்பெயர்; அர் - விகுதி, கு - சாரியை. சக்கராகாரமாய் [வட்டவடிவமாய்] உலகத்தை வளைந்திருத்தல் பற்றி, 'சக்கரப்பொருப்பு' எனப்பட்டது. இங்கு 'சக்கரம்' என்பதை 'சக்ரவாளம்' என்றதன் நாமை கதேசநாமக்ரஹண மென்னலாம். சேர்கலா என்ற ஈறுகெட்ட எதிர் மறைப்பெயரெச்சத்தில், கு, அல் - சாரியைகள். (௧0௬)

௧0௭. பற்றியஞ்சலன்பழியின்வெஞ்சின
முற்றிநின்றதன்முரண்வலிக்கையா
லெற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
தற்றமொன்றுபெற்றிவணகன்றனன்.

(இ - ள்.) (வாலியானவன்),— பற்றி - (சுக்கிரீவனைப்) பிடித்துக்கொண்டு, பழியின் அஞ்சலன் - (தம்பியை வருத்துகின்றானென்று வரும்) பழிக்குப் பயப்படாதவனாய்,— வெம் சினம் முற்றி நின்ற - கொடிய கோபம் மிக்குநின்ற, தன் - தனது, முரண் வலி கையால் - மிக்க வலிமையையுடைய கையினால்,

எற்றுவான் - மோதுதற்கு, எடுத்து எழுதலும் - உயர எடுத்து எழும்பிய அளவில்,—இவன் - சுக்கிரீவன், அற்றம் ஒன்று பெற்று - அவன் சோர்ந் திருக்கின்றதொரு சமயம் பார்த்து, பிழைத்து அகன்றனன் . தப்பி உய்ந்து ஓடி விட்டான்; (எ - று.)

வாலியானவன் தன்னைப் பிறர் பழிப்பரேயென்ற எண்ணஞ் சிறிது மில்லாமல் அச்சுக்கிரீவனைத் தரையில் மோதுமாறு உயர எடுத்தவளவில், சுக்கிரீவன் அவ்வாலி சிறிது ஏமாந்த சமயம்பார்த்துத் தப்பியோடிவந்துவிட் டனனென்பதாம். அஞ்சலன் - எதிர்மறை முற்றெச்சம். பழியின் - பழிக்கு எனப் பொருள் தருதலால், வேற்றுமைமயக்கம். பழியினின்று அஞ்சானுகி என்று ஐந்தனுருபாகவே கொள்ளுதலுமாம்; வடமொழிநடை. 'முற்றிநின்று' என்பதும் பாடம். எற்றுவான் - வானீற்று எதிர்காலவினையெச்சம். (கoஎ)

கoஅ. எந்தைமற்றவன்னெயிறதுக்குமே
லந்தகற்குமோரரணுமில்லையா
லிந்தவெற்பின்வந்திவனிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால்.

(இ - ள்.) எந்தை - எமது சுவாமியே! அவன் - அவ்வாலி, எயிறு அதுக் கும் ஏல் - பல்லைக்கடித்துக் கோபிப்பனுனல், அந்தகற்கும் - யமனுக்கும், ஓர் அரணும் - (சார்ந்து பிழைக்கலாம்படியாள) ஒரு பாதுகாவலிடமும், இல்லை - இல்லாததாகும்; (ஆனாலும்), முந்தை - முன்னே, உற்றது-(வாலி) அடைந்த தாகிய, ஓர் சாபம் - ஒருசாபமானது, உண்மையால் - உள்ளதனால், இவன் - சுக்கிரீவன், இந்த வெற்பின் - இந்தமலையிலே, வந்து இருந்தனன் - வந்து சேர்ந்து (இதுவரையிற்) பிழைத்திருந்தான்; (எ - று.)—மற்று - அசை.

வாலியின் கோபத்துக்கு இலக்கானவர் யாவரேயாயினும் தப்பியுய்தற்கு உரிய இடமில்லையானாலும், 'இம்மலையில் வந்தால் வாலி இறப்பான்' என்று மதங்கமுனிவர் சாபமிட்டிருப்பதனால்,சுக்கிரீவன் இம்மலையைத் தனக்குஉரிய அரணாகக்கொண்டு இங்கே பதுங்கி உயிர்வாழ்ந்திருக்கின்றன னென்பதாம். சாபம்-சபிப்பு: வெகுண்டுகூறும் மொழி. எயிறதுக்குதல் - காரியம் காரணத் தின்மேல் நின்றது; உபசாரவழக்கு. அரண் - ஶரணமென்ற வடசொல்லின் சிதைவென்பர். முந்தை - ஐயீற்றுடைக்குற்றியலுகரம். மற்று-அசை; வினை மாற்றுமாம். 'மற்றவன்னெயிறு'—னகரவொற்று - விரித்தல். (கoஅ)

கoகூ. உரிமை யென்றிவற் குரிய தாரமா
மருமை ருந்தையும் மவன்வி ரும்பினு
னிருமை யுந்துறந் திவனி ருந்தனன்
கருமை மிங்கிதே கடவு ளென்றனன்.

(இ - ள்.) கடவுள்-சுவாமியே! இவற்கு-சுக்கிரீவனுக்கு, உரிமை என்று உரிய - சொந்தமாயுள்ள பொருளென்று [இல்லறவாழ்க்கைக்கு] உரியவளான, தாரம் ஆம் - மனைவியாகிய, அருமருந்தையும்-கிடைத்தற்கரிய தேவாமிருதத்

தையும் [ருமை யென்பவளையும்], அவன் - வாலி, விரும்பினான் - விரும்பிக் கவர்ந்துகொண்டான்; இவன் - சுக்கிரீவன், இருமையும் துறந்து - இரண்டையும் [செல்வத்தையும் மனைவியையும்] ஒருசேர இழந்து, இருந்தனன் - இருந்தான்; இங்கு இதே கருமம் - இங்குச்சொல்லப்பட்ட இதுவே நடந்த செய்தியாம், என்றனன் - என்று சொல்லி (அநுமான் தான் கூறிவந்த வரலாற்றை) முடித்தனன்; (எ - று.)

இராச்சியம் முதலிய செல்வத்தையெல்லாம் முன்னமே கவர்ந்துகொண்டமைபற்றி, 'உரிமையென் றிவற்குரியதாரமாமருந்தையும் மவன் விரும்பினான்' என்றார்: அன்றியும், மற்றைச் செல்வமெல்லாம் மூத்தவனாகிய வாலிக்கே உரியனவாதலால் அவற்றையெல்லாம் ஆட்கொண்டதனோடு இவனுக்கே யுரிய தாரத்தையும் கவர்ந்தன னென்றுமாம்.

தாரம், கருமம் - வடசொற்றிரிபு. மருந்தையும், உம்மை - உயர்வு சிறப்போடு இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. விரும்பினான்-காரியம், காரணமாக உபசரிக்கப்பட்டது. இருமையும், உம்மை-முற்றும்மை. "இருமைவகை தெரிந் தீண்டறம் பூண்டார்" என்னு மிடத்துப்போல. இருமையென்றது - இங்கு எண்ணின்மேல் நின்றது. இதில், மைவிகுதி - தன்மையுணர்த்தாமல், தன்மையுடைய பொருளையே உணர்த்துதலால், 'பகுதிப்பொருள் விகுதி' என்னும் ஸ்வார்த்தபாவதத்திதப்ரத்யய மென்பர். இனி, 'உருமை' எனப் பாடமோதி, ருமையென்கிற மனைவியெனப் பொருள்கொள்ளுதல் நேர். மருந்தையும்மவன், மகரவொற்று - விரித்தல். (௫௯)

வேறு.

[அவ்வரலாறுகேட்ட ஸ்ரீராமன் வாலியின்மீது சினங்கொள்ளுதல்.]

௬௦. பொய்யி லாதவன் வரன்முறை யிம்மொழி புகல
ஐய னாயிரம் பெயருடை யமலர்க்கு மமலன்
வைய நுங்கிய வாயிதழ் துடித்தது மலர்க்கட்
செய்ய தாமரை யாம்பலம் போதெனச் சிவந்த.

(இ - ள்) பொய் இலாதவன் - அசத்தியமென்பது சிறிதுமில்லாதவனான அநுமான், வரல் முறை - (சுக்கிரீவன் தன்மனைவியைப்பிரியநேர்ந்த) வரலாற்றை, இ மொழி - இவ்வார்த்தைகளால், புகல - சொல்ல,—ஆயிரம் பெயர் உடை - ஆயிரந் திருநாமங்களை யுடைய, அமலர்க்கும் அமலன் - குற்றமில்லாதவரான திரிமூர்த்திகளுள்ளுங் குற்றமற்றவனாகிய [மேம்பட்ட] பரிசுத்தமூர்த்தியாகிய, ஐயன் - தலைவனான ஸ்ரீராமனது, வையம் நுங்கிய வாய் இதழ் - உலகங்களை (முன்பு பிரளயகாலத்தில்) விழுங்கிய வாயினது அதரம் [உதடு], துடித்தது - (கோபத்தால்) துடிதுடித்தது; கண் - திருக்கண்களாகிய, செய்ய தாமரை மலர்-செந்தாமரைமலர்கள், ஆம்பல் அம் போது என் - செவ்வாம்பல் மலர்போல, சிவந்த - மிகச்சிவந்தன; (எ - று.)

சுக்கிரீவன் தன்மனைவியான ருமையைப் பிரியுமாறு முன்நிகழ்ந்த வரலாற்றை அநுமான் சொல்லக்கேட்ட ஸ்ரீராமன் சரணாகதபரித்ராணமாகிற

[தன்னைச் சரணமென்று அடைந்தவரைப் பாதுகாத்தலாகிற] தருமத்திற்கு விரோதமாக நடந்த வாலியின்மீது அக்கணமே சினங்கொண்டனனென்பதாம். இயல்பாகக் கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டஅப் பெரியனவாகிய கண்கள், வாலியினது கொடுமையைக் கேட்டு எழுந்த கோபத்தால் மிகவுஞ் சிவந்தனவென்பார், 'மலர்க்கட்செய்யதாமரை ஆம்பலம் போதெனச் சிவந்த' என்றார். ஆயிரம் பெயர்-ஸஹஸ்ரநாமம். உடை அமலன் என இயையும். வையம் - பொருள்களை வைத்தற்கு இடமானது. வையம் தங்கியது, மகாப் பிரளயகாலத்தில் சகல லோகங்களையும் சிறிதுமழிவில்லாதபடி தன் திருவயிற்றில் வைத்துக்காத்தது. ஐயன் - ஆர்யன் என்ற வடசொல்லின் சிதைவு. ஆம்பலம்போது—அம்-சாரியை. அம்-அழகிய, ஆம்பற்போது என்றலுமாம். இனி, முதலடிக்கு - பொய்ம்மையில்லாதவனான சுக்கிரீவனது வரலாற்று முறைமையை (அநுமான்) சொல்ல என்றுமாம்.

இதுமுதல் முப்பத்தொரு கவிகள் பம்பைப் படலத்தின் பதினொராங்கவி போன்ற கலிநிலைத்துறைகள். (கக௦)

[இதுவும், அடுத்தசெய்யுளும் - கவிக்கூற்று; இராமபிரான் கோபங் கொண்டதற்குக் காரணங் காட்டுதல்.]

ககக. திறத்துமாமறையயனொடைம்முகன்பிறரதேடிப்
புறத்தகத்துணரரியதன்பொலனடிக்கமல
முறசிவப்பவித்தரைமிசையுறலறமாக்கன்
மறத்தைவீட்டுதலன்றியேபிறிதுமற்றுண்டோ.

(இ - ள்,) திறந்து (இருக்குமுதலிய) கூடுபாடுகளையுடைய, மா மறை - சிறந்த வேதங்களை யோதுகின்ற, அயனொடு-பிரமதேவனும், ஐம்முகன்-ஐந்து முகங்களையுடையவனான ருத்திரமூர்த்தியும், பிறர் - மற்ற இந்திரன் முதலியோரும், புறத்து - வெளிக்கரணங்களாகிய மொழிமெய்களாலும், அகத்து - அகக்கரண [அந்தக்கரண]மாகிய மனத்தினாலும், தேடி - தேடியும், உணர் அரிய - அறிதற்கு அருமையான, தன் - தனது, பொலன் அடி கமலம் - அழகிய திருவடித்தாமரைகள், உற சிவப்ப - (தரையில் நடப்பதனால்) மிகவுஞ் சிவக்கும்படி, இ தரைமிசை-இப்பூமியில், உறல் - (திருமால்) திருவவதரித்தற்குக் காரணம்,—அறம் ஆக்கல்-தருமத்தைக் காத்து வளர்த்தலும், மறத்தை வீட்டுதல் - அதருமத்தை அழித்தலும், அன்றியே - அல்லாமலே, பிறிது உண்டோ-வேறொன்று உளதோ? (எ - று.)—மற்று - அசை.

வாலி எவ்வாற்றாலுந் தனக்கு நேரே பகைவனல்லனாயினும், அவனது தீச்செய்கையைக் கேட்டமாத்திரத்திலே ஸ்ரீராமபிரான மிகவுஞ் சீற்றங் கொண்டதற்குக்காரணமான அவனது துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலக குணத்தைக் கவி விளக்கினார். மேலிறகவியிலும், இவவாறே காண்க. ("அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றபடி) இயற்கையிற் கருமத்தாறபிறத்த லில்லாத திருமால் தீயவரையழித்துப் பாவத்தைப் போக்குதற்கும், நல்லவரையருளித் தருமத்தை ஆக்குதற்குமே திருவவதரிப்பவனாதலால், வாலியின் கொடுந்

தொழிலைக் கேட்டமாத்திரத்தில் இவ்வாறு கோபித்தனனென்பதாம். இக் கவி - கீழ்க்கவியோடு ஒருதொடராய்நின்று, கீழ்க்கவியிற்கூறிய 'இராமபிரான் கோபித்தான்' என்பதைச்சமர்த்திக்கும்: ஆகவே, இவ்விரண்டு கவியுஞ் சேர்ந்து தொடர்நிலைச் செய்யுட்குறியணியின்பாற்படுமென்க.

ருக், யஜுஸ், ஸாமம். அதர்வணம் என வேதம் நான்குவகை யாதலால், 'திறத்து மாமறை' என்றார். இனி, தைத்திரியம், பௌடியம், தலவகாரம், சாமம் என வேதம் நான்காமெனக் கூறுவாருமுளர். அயன் = அஜன்; இவ்வட சொல் - திருமாலினிடத்தினின்று தோன்றியவனென்று பொருள்பெறும். ஸதாசிவமூர்த்தி ஸத்யோஜாதம், அகோரம், வாமதேவம், தத்புருஷம், ஈசானம் என்ற ஐந்து முகங்களை யுடைமையால், 'ஐம்முகன' என்றார். அடிக் கமலம் - கமலம்போன்ற அடி என முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை. தரை-தரா என்ற வடசொல்லின் விகாரம்: இது-(பலபொருள்களையும் தன்மீது) தாங்கு வது எனப் பொருள்படும். வீட்டுதல், வீட்டு - பகுதி. 'திறம்' என்ற சொல் லுக்கு - தகுதி, தத்துவம், திறமை, மேன்மை என்ற பொருள்களும் உண்டு. "பத்துடையடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய, வித்தகன" என்றபடி எம் பெருமான் தன்பக்கல் அன்புநிலையிற் குறைபட்டார்க்கு அகப்படாததன்மையை யுடைமையனாதலால் 'அயனொடைம்முகன் பிறர் தேடிப்புறத்தகத்துணரரிய தன் பொலனடி' எனப்பட்டது; "பூதேவருங் கனகப்பூங்காநிழல்வைகு, மாதேவருந் தேடிக் காணு மலரடியோன" என்றார் வில்லிபுத்தூராரும். (கககக)

கக௨. ஈரநீங்கியசிற்றவைசொற்றனளென்ன
வாரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமை
பாரமீந்தவன்பரிவிலனொருவன்றனிளையோன்
றாரம்வவ்வினனென்றசொற்றரிக்குமாறுளதோ.

(இ - ள்-) ஈரம் நீங்கிய - அன்பில்லாத, சிற்றவை-சிறியதாய் [கைகேயி], சொற்றனள் - சொன்னாள், என்ன - என்று, ஆரம் வீங்கு தோள் தம்பிக்கு - இரத்தினமாலைகளையணிந்த பருத்த தோள்களையுடைய தன தம்பிக்கு [பரதாழ்வானுக்கு], தன் அரசு உரிமை பாரம் - (மூத்தகுமாரனாகிய) தனக்கே உரியதான இராச்சியபாரத்தை, ஈந்தவன் - கொடுத்து வந்தவனான ஸ்ரீராமன், 'பரிவு இலன் ஒருவன் - இரக்கமில்லாதவனொருத்தன், தன் இளையோன தாரம் - தனது தம்பியின் மனைவியை, வவ்வினன - அபகரித்துக்கொண்டான்;' என்ற—, சொல் - வார்த்தையை, (கேட்டு), தரிக்கும் ஆறு - பொறுத்துச் சும்மா இருத்தல், உளதோ - உண்டாகுமோ? (எ - று.)

ஸ்ரீராமன் தனக்கு உரியஅரசாட்சியைத் தம்பிக்குக்கொடுத்த தயாமூர்த்தி யாதலால், வாலி தன்தம்பிக்கு உரியமனைவியை அபகரித்துக்கொண்டவரலாற்றைச் செவியுற்றமாத்திரத்திலே கடுஞ்சினங் கொண்டானென்றபடி. இச் செய்யுளும்கீழ் ககo-ஆம் செய்யுளோடு ஒரு தொடராய் நின்று, தொடர்நிலைச் செய்யுட்குறியணியாம். தயரதன் 'உனது மகன் நாட்டையாளுக; இராமபிரான் காட்டிற்குச் செல்லவேண்டா' என்று வெகுவாகவேண்டவும், சிறிதும் இரக்க

யின்றிப் பதினான்குவருடங் காட்டிற்குச்செல்லவேண்டுமென்று வற்புறுத்திக்கூறிய கன்னெஞ்சின ளாதலால், கைகேயியை, 'ஈரமிலாச் சிற்றவை' என்றார். ஆரம் - முக்தாஹார மென்றும், சந்தனக்குழம்பு என்றும் பொருள் கொள்ளலுமாம். வவ்வினன = வௌவினன்: போலி. சொற்றனள், ற் : இறந்தகால இடைநிலை (கக௨)

[இராமபிரான் 'வாலியைக் கொல்வேன்' என்றல்.]

கக௩. உலகமேழினோடேழும்வந்தவனுயிர்க்குதவி
விலகுமென்னினுமவில்லிடைவாளியின்வீட்டித்
தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான்.

(இ - ள்.) 'உலகம் எழினொடு எழும் - பதினான்கு லோகங்களிலுமுள்ள எல்லாப் பிராணிகளும், அவன் உயிர்க்கு - அவ்வாலியின் பிராணனைக் காப்பதற்கு, உதவி - சகாயமாக, வந்து—, விலகும் என்னினும் - தடுக்குமாயினும், (யான்), வில்லிடை வாளியின் - வில்லினின்றும் விடப்படுகின்ற அம்பினால், வீட்டி - (அவையும் உள்பட அவனை) அழித்து, தலைமையோடு - அரசாட்சியுடனே, நின் தாரமும் - உனது மனைவியையும், உனக்கு—, இன்று - இப்பொழுதே, தருவேன் - கொடுப்பேன்; புலமையோய் - அறிவுடையவனே! அவன் உறைவு இடம் - அவன் வசிக்கின்ற இடத்தை, காட்டு - காண்பிப்பாயாக,' என்று—, புகன்றான் - (ஸ்ரீராமன் சுக்கிரீவனை நோக்கிக்) கூறியருளினான்; (எ - று.)

அவ்வாறு சினங்கொண்ட ஸ்ரீராமன் 'அவ்வாலியுள்ளவிடத்தை இப்பொழுதே காட்டுவாயாக; யார்வந்து தடுப்பினும் சிறிதும் பின்வாங்காது இப்பொழுதே அவ்வாலியைச் சங்கரிப்பேன்' என்று கூறினனென்பதாம். அரச நீதிக்கு ஏற்பத் துணையையும் காலத்தையும் நோக்கி இத்தனைகாலம் ஒடுங்கியிருந்தமைபற்றி, சுக்கிரீவனை இராமபிரான் 'புலமையோய்' எனவிளித்தான். விலக்கும் என்பது, எதுகைநோக்கி 'விலகும்' என விகாரப்பட்டு நின்றது. ()

[அதுகேட்டுச் சுக்கிரீவன் மிகமகிழ்ந்து 'நாங்கள் சிறிது ஆலோசிக்கவேண்டும்' என்றல் ]

கக௪. எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையிரைப்ப
வழுந்துதுன்பத்துக்கக்கரை கண்டனனையான்
விழுந்ததேயினிவாலிதன்வலியெனவிரும்பா
மொழிந்தவீரற்கியாமெண்ணுவதுண்டெனமொழிந்தான்.

(இ - ள்.) (இவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்திற் சுக்கிரீவன்), பேர் உவகை கடல் - பெரிய மகிழ்ச்சியாகிய சமுத்திரம், பெருந் திரை - பெரிய அலைகளோடு, எழுந்து இரைப்ப-பொங்கியெழ [அளவில்லாத மகிழ்ச்சியைப் பெற்று],—அழுந்து துன்பத்துக்கு - (தான்) அழுந்திக்கிடந்த துக்கமாகியகடலுக்கு, அக்கரை - முடிவெல்லையை, கண்டனன் அனையான் - அண்டந்தவன் போன்றவனாய்,—'இனி—, வாலிதன் வலி - வாலியினவலிமை, விழுந்ததே -

கஉஅ. செறுக்கும்வன் றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன் றன்காலமுங்காலா
லறுக்கும்புங்கவனாண்டபேராடகத்தனிவில்
லிறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ.

(இ - ள்.) செறுக்கும் - (யாவரையும்) வருத்துகின்ற, வல் திறல் - மிக்க வலிமையையுடைய, திரி புரம் - மூன்று பட்டணங்களும், தீ எழ-நெருப்புப் பற்றி யெரியும்படி, சினவி - கோபித்து, கறுக்கும் வெம் சினம் காலன் தன் - கோபிக்கின்ற கொடிய கோபத்தையுடைய யமனது, காலமும் நல்ல காலத்தை யும் [வெற்றியையும்], காலால் அறுக்கும்-காலினால் உதைத்து அழித்துவிட்ட, புங்கவன் புருஷர்களுட் சிறந்த பரமசிவன், ஆண்ட - (கையிற்கொண்டு போர் செய்து) ஆண்டுவந்த, பேர் - பெரிய, ஆடகம் - பொன்மயமான, தனி - ஒப் பற்ற, வில்-தனுசை, இறுக்கும் தன்மை - முறிக்கின்ற காரியம், அ மாயவற்கு அன்றியும் - அத்புதசக்தியை யுடையவனான அத்திருமாலுக்கே யல்லாமல், எளிதோ - (மற்றையோர்க்கு) எளியதாகுமோ? (எ - று.)

ஸ்ரீராமபிரான் ஸ்ரீமந்நாராயணனே யென்பதைச் சீதாகலியாணகாலத் திற் சிவதனுசை முறித்ததனாலும் அறியலாமே யென்று அநுமான் மற்று மோர் அநுமானங் கூறினனென்க. சிவபெருமானைப்பற்றி இங்கு இவ்வாறு சிறப்பித்துக் கூறியது - பிறரது வலிமையைப் பாராட்டி அவரை வென்ற தாகக் கூறுவதும் கதாநாயகனுக்கு மிக்கமேன்மையை விளக்கு மென்ற அலங் காரநூலார் கொள்கைபற்றி யென்க. புங்கவன் - எருதை வாகனமாக வுடை யவனெனினுமாம். "கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள்" என்றதனால், 'கறுக்கும்' என்பதற்கு-கோபிக்கின்ற எனப்பட்டது; கருநிறமுடைய என்று உரைத்து, காலனோடு கூட்டலுமாம். காலம் - காலபாசமாகவுமாம். ஆடகம்- ஹாடகம்: வடசொல்.

ஸ்ரீராமபிரான் பரதத்வ மென்பது, இங்கு வெளியிடப்பட்டது; பால காண்டத்துப் பரசுராமப்படலத்தில் "நீதியாய் முனிந்திடேல் நீயிங்கியாவர்க் கும், ஆதியான நிந்தனை னலங்கல்நேமியாய், வேதியா விறுவதேயனறி வெண்மதிப், பாதியான்பிடித்தவில் பற்றப்போதுமோ," "பொன்னுடை வனைகழற் பொலங்கொள்தாளினாய், மின்னுடை நேமியானாதல் மெய்ம்மை யால்" என்றதும், திருவரங்கத்தமாலையில் "மாதண்டமேவுங் காத்தாராங்கர் வடமிதிலைக், கோதண்டவேகம் பிறப்பித்தபோது குவட்டுவெள்ளி,வேதண்ட மேவு மழுவாளி நாணினன் வென்றிகண்டு" என்றதும் உணர்க.

"காலன்தன் காலமுங் காலால்" என்றவிடத்து மடக்கு என்னுஞ் சொல் லணி காண்க. திரிபுரம் - த்ரிபுரம் என்ற வடமொழித்தொடரின் விகாரம்; மூன்றாகிய நகர மெனப் பண்புத்தொகை. வானத்திற் பறந்து திரிகின்ற நகர மெனக் கொண்டால்,'திரி புரம்' என்ற தொடர்-வினைத்தொகையும்,திரி- தமிழ்ச்சொல்லுமாம். 'காலால் அறுக்கும்' என்றது, மிகவும் அலக்ஷ்யமாக எளி திற்செய்தமையைக் காட்டிற்று. 'போராடகத்தனிவில் என்றும் படமுண்டு.

**திரிபுரம் தீயெழச் சினவிய கதை:**—*தாரகாசுரனது புதல்வர்களாகிய வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து பிரமனிடம் பெருவரம்பெற்று மயனென்பவனால் சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும் மூன்று இடங்களிலும் முறையே பொன் வெள்ளி இரும்பினால் அரண்வகுத்து இயற்றப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்று பட்டணங்களைப்பெற்று அவற்றில் வசித்துச் சிவபூசைசெய்துகொண்டு அச்சிவபக்திமகிமையால் எவர்க்கும் அழிக்கவொண்ணாதவராய் அத்தகைய மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம்நினைத்த இடங்களிற் பறந்து சென்று பல இடங்களின்மேலும் இருந்து அவ்வவ்விடங்களைப் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மாயையினால் ஜிநாவதாரமும் புத்தாவதாரமுஞ் செய்து பற்பலதீயவழிகளைக் கற்பித்து உபதேசித்து மயக்கி அவ்வசுரர்களைச் சிவத்துவேஷிகளாகச் செய்துவிட்டதன்பின்பு, தேவர்கள் பிரார்த்தனைப்படி சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திரசூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்குவேதங்களையும் நான்கு குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை வில்நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகு அமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தனாய்ச்சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து அவ்வசுரர்கள் பலரையும் பட்டணங்களோடு எரித்தருளினன் என்பதாம்.*

**காலன்தன் காலத்தைக் காலாலறுத்த கதை:**—*மிருகண்டு முனிவன் மருத்துவதியென்பாளை மணந்துகொண்டு சிலகாலங் கழித்தபின்பு பிள்ளையில்லாக்குறையாற் காசியையடைந்து சிவபிரானைக்குறித்துத் தவஞ்செய்ய, அம்முனிவனுக்குப் பரமசிவன் பிரத்தியக்ஷமாகி வடிவினாலும் குணங்களினாலுஞ் சிறந்தவனாய்ப் பதினாறுபிராயமேயுடைய ஒரு புதல்வனை அநுக்கிரகிக்க, அங்ஙனமே பிறந்த குமாரன் பிரமதேவனால் மார்க்கண்டேயனென நாமகரணஞ் செய்விக்கப்பெற்றுச் சகல சாஸ்திரங்களையும் இளமையிலேயே உணர்ந்து, பின்புதனது அற்பாயுளைக்குறித்துவருந்துகின்ற தாய்தந்தையரது துயரத்தைப் போக்குமாறு, மணிகர்ணிகா கட்டத்திற் சிவபிரானை நோக்கி அரும்பெருந்தவம் புரிந்து அப்பரமசிவனால் அபயமளித்துத் தனது முடியிலே திருவடிகள் வைக்கப்பெற்று இனிதுவாழ்ந்திருக்கையில், பதினாறுபிராயம் கழிந்து அந்திமகாலம் வரவே, யமன் சமீபித்துக் காலபாசத்தால் மார்க்கண்டேயனைக் கட்டியிழுக்குமளவில், சிவபிரான் வெளிப்பட்டு அவ்யமன் உயிர்நீங்குமாறு அவனைக் காலாலுதைத்துத்தள்ளி, தான் அபயபிரதானஞ்செய்திருந்த ருஷிகுமாரனுக்கு என்றும்பதினாறாக நீடூழிவாழுமாறு அருள்புரிந்தனனென்பதாம். இவ்வரலாற்றினால், மிக்கமுயற்சிகொண்டு ஊழ்வினையையும் வெல்லலாமென்பது போதரும்.*

௧௧௯. என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
ஃதையா
வுன்னையீன்றவெற்குறுபதமுளதெனவுரைத்தா
னின்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய்.

(இ - ள்.) இறையோய்-தலைவனே ! என்னை ஈன்றவன் - என்னைப்பெற்றவனான வாயுபகவான், (முன்பு என்னைநோக்கி), '(நீ), இ உலகு யாவையும் ஈன்றான் தன்னை இந்த லோகங்களையெல்லாம் படைத்தவனான பிரமதேவனை, ஈன்றவற்கு-(தனது நாபீகமலத்தினின்று) தோன்றுவித்தவனான ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு, அடிமை செய்-அடிமைத்தொழில் செய்வாய், அஃது-அக்கைங்கரியமே, தவம் சிறந்த தவமாகும்; ஐயா-குழந்தாய்! (நீ அவ்வாறு செய்தால்), உன்னை ஈன்ற எற்கு-(உனக்குமாத்திரமேயல்லாமல்) உன்னைப் பெற்ற எனக்கும், உறுபதம்-சிறந்த பதவி, உளது - கிடைப்பதாம்', என - என்று, உரைத்தான் - சொல்லியிருந்தான்; இன்ன தோன்றலே-இந்த ஸ்ரீராமனே, அவன் (அதற்கு ஏற்ப வந்த) அம்மகாவிஷ்ணுவாவன்; இதற்கு—, ஏது உண்டு-வேறொருகாரணமும் உளது; (எ - று.)—அவவேதுவை, மேற்கவியிற் காண்க.

எனது தந்தையாகிய வாயுபகவான் முன்புஎன்னைநோக்கி 'உனக்கும் எனக்கும் நல்லபதவி கிடைக்குமாறு திருமாலுக்கு அடிமைசெய்' எனக் கூறியிருக்கின்றனன்; அத்திருமாலே யான்செய்யும் அடிமைத்தொழிலை ஏற்றுக்கொள்ளுமாறு இப்போது பிரதியக்ஷமாக இங்கு வந்துள்ளான்; இதற்கு, யான் கீழ்க்கூறிய காரணமன்றி வேறோர்காரணமுமுள்ளது: அதனைக்கூறுவேன்: கேட்பாயாக என அநுமான் மீண்டுங் கூறலாயினனென்பதாம். தந்தை மைந்தனை 'ஐயா' என்றது, அன்புபற்றிவந்த மரபுவழுவமைதி. தோன்றல் - விளங்குபவன்; அல் - கருத்தாப்பொருள்விகுதி. ஹேது - வடசொல். முதலடி - முற்றுமோனை 'தவமுனக்கஃதே' என்பதும் பாடம். 'உன்னையீன்றவற்கு' என்ற பாடத்துக்கு, தன்மைப்படர்க்கையென்க. (கககூ)

கஉ0. துன்புதோன்றியபொழுதுடன்றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவென்னென்றியம்ப
வன்புசான்றெனவுரைத்தனனையவென்யாக்கை
யென்புதோன்றலவுருகினதெனிற்பிறிதெவனோ.

(இ - ள்.) முன்பு - முன்னே [அக்காலத்தில்], தோன்றலை அறிதற்கு - (நீ சொன்ன) அப்புருஷோத்தமனை அறிவதற்கு, முடிவு என் - நிச்சயமான உபாயம் என்ன?' என்று இயம்ப - என்று (யான் தந்தையைக்) கேட்க,—(அவ்வாயுபகவான்),—'(அம்மகாபுருஷன்), எவர்க்கும் - யாவர்க்கும், துன்பு தோன்றியபொழுது - துன்பமுண்டான காலத்தில், உடன் தோன்றுவன் - உடனே (அத்துன்பத்தைத் தீர்ப்பதற்கு எதிரில்வந்து) தோன்றுவன்; (மேலும்), அன்பு சான்று - '(அப்பகவானைக் கண்டமாத்திரத்தில் உனக்கு) உள்ளன்பு உண்டாவதே ஸாக்ஷியாகும்', என-என்று, உரைத்தனன் - சொன்னான்; (அதற்குஏற்ப இப்பெருமானைக் கண்டமாத்திரத்திலே), ஐய - தலைவனே! என்யாக்கை - எனது உடம்பு, என்பு தோன்றல உருகினது - எலும்பும் உருக்காணப்படாதனவாக உருகிவிட்டது: எனின் - என்றால், பிறிது எவனோ - வேறுவகையாகச் சங்கிப்பது எவ்வாறோ ? (எ - று.)

'நீ திருமாலுக்கு அடிமைசெய்'என்றுஎனக்கு,வாயுபகவான் கூறியபோது, யான்'இவன்தான் திருமாலென்றுகண்டறிவதெப்படி?' என்றுவினவ, அதற்கு

அவவாயுதேவன் 'ஆபத்தை யடைந்தவர்களுக்கெல்லாம் முன்வந்து நின்று உதவுபவனாகிய அத்திருமால் உனனெதிரில் வந்தானானால் உனக்கு அவனிடத்தில் யாதொரு காரணமுமின்றிப் பேரன்பு உண்டாம்; இதுவே, நீ அப்பெருமானைக் கண்டறிவதற்கு உரிய நெறியாம்' என அவனுடையானக் கூறினன; அஃது இப்போது ஒத்திருப்பதனாலும் இவன அத்திருமாலே யெனத் துணியலாமென்று வேறோரநுமானமும் அநுமான் காட்டினனென்பதாம். முடிவு - தொழிலாகுபெயரால், முடிவான உபாயத்தைக் காட்டிற்று. உடன தோன்றுவன் - உடன் தோன்றுபவனாகிய, எவர்க்கும் முனபு தோனறலே - யாவரினும் முன்னே தோன்றிய [அநாதியான] அககடவுளை என்றும் உரைக்கலாம். யாக்கை-(எழுவகைத் தாதுக்களால்) யாக்கப்படுவது; யாத்தல்-கட்டுதல். 'இனிப்பிறிதெவனோ' எனறு பிரதிபேத முண்டு. "அனபு தோன்றியவுடலிடைததோனறினேனறித, லின்புதோனறுமக்கடவுளை யெவவகையெனயான' என்று பாடமோதுவாருமுளர். (௧௨௦)

௧௨௧. பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய
அறிதியென்னினுண்டுபாயமுமஃதருமரங்க
ணெறியினின்றனவேழிஞென்றுருவவிந்நெடியோன்
பொறிகொள்வெஞ்சரமபோவதுகாணெனப்புகன்றான்.

(இ - ள்.) பெரியோய்-சிறந்தவனே! பிறிதும் - மற்றும், அனனவன - அந்த ஸ்ரீராமனது, பெரு வலி ஆறறலை-மிக்க பலததின தனமையை, அறிதி என்னின-அறிய விரும்புவாயானாலும, உபாயமும உண்டு - (அவவாறு அறிதற்கு)ஒருபாயமும் உளது; அஃது-அவவுபாயம (எதுவெனறால்),—'நெறியில் நின்றன - (போகும்) வழியிலிருப்பவையாகிய, அரு மரங்கள் ஏழின் - எய்வதறகு அருமையான மராமரங்கள ஏழிலும, ஒன்று உருவ-ஒருசேரத் துளைக்கும்படி, இ நெடியோன-பெரியவனான இந்த ஸ்ரீராமனது,பொறிகொள் வெம் சரம - அனறபொறியைக் கொண்ட கொடிய அமபொனறு, போவது காண்-செல்வதேயாகும்,' என-எனறு, புகனறான சொலலினான,(அநுமான);(எ-று.)

இங்கிருந்து நமது இருப்பிடத்திறகுச்செல்லும் வழியிலுள்ள ஸால விருக்ஷங்களேழையும ஓரம்புகொண்டு துளைககச் சொல்லி அந்த அமபு அமமரங்களில் ஊடுருவிச்செல்வதைப் பார்ததால், வாலியைக் கொல்வதறகு ஏறற வலிமை இவனுக்கு உளதெனறு நீயே தெளியலாம் என்று, சுககிரீவன்தெளியுமாறு சிறந்த உபாயததைக கூறிமுடிததனன அனுமனெனபதாம். (௧௨௧)

[அநுமான்கூறியதற்குஇணங்கிச் சுக்கிரீவன் இராமபிரானிடஞ்சென்று ஒன்றுகூறத்தொடங்குதல்.]

௧௨௨. நன்றுநன்றெனாநெடுங்குன்றமுநாணுந
தன்றுணைத்தனிமாருதிதோளிணைதழுவிச்
சென்றுசெம்மலைக்குறுகியாண்செப்புவதுளதா
லொன்றுனக்கெனவிராமனுமுரைதியஃதென்றான்

(இ - ள்.) (அதுகேட்டு சுக்கிரீவன),—நனறு நன்று எனா-'நல்லது நல்லது' எனறு மகிழ்ந்து,—தன துணை-தனக்கு உதவியான, தனி - ஒப்பற்ற,

மாருதி-அநுமானுடைய, நல் நெடுங் குன்றமும் நாணும் - நல்ல பெரிய மலைகளும் வெள்கும்படியான [மிகவும் பெரிய வலிய], தோள் இணை - இரண்டு தோள்களையும், தழுவி - அணைத்துக்கொண்டு, சென்று - போய், செம் மலை குறுகி-ஸ்ரீராமனைச்சேர்ந்து,—'உனக்கு—, யான—, செப்புவது-சொல்வது, ஒன்று-ஒருகாரியம், உளது-உண்டு', என-என்று சொல்ல,—இராமனும்—, அஃது உரைத்தி என்றான்- 'அதனைச் சொல்' என்றான; (எ - று.)

இராமனது வல்லமையைத் தெளிவதற்குஉரிய உபாயமாக முடிவில் அநுமான கூறியது தன்மனத்திற்குச் சம்மதமாயிருந்ததனால், சுக்கிரீவன் அநுமானைத் தழுவிக் கொண்டாடி, பின்பு இராமபிரானிருந்த இடத்தைக் குறுகி 'ஒன்று சொல்லவேண்டியிருக்கின்றது' என்ன, அவ்விராமனும் 'கூறுவாய்' என்றனனென்பதாம். நன்று நன்று, அடுக்கு - உவகைபற்றியது; இது, அவ்வநுமன் கூறியதற்குத் தான் இணங்கியமையைத் தெரிவிக்கும். (கஉஉ)

[சுக்கிரீவன் ஸ்ரீ ராமனையழைத்துச் சென்று மராமரங்களேழினையும் எய்யச்சொல்லுதல்.]

கஉங. ஏகவேண்டுமிந்நெறியெனவினிதுகொண்டேகி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்க
ளாகவைந்தினோடிரண்டினொன்றுருவநின்னம்பு
போகவேயெனதன்மனத்திடர்போமெனப்புகன்றான்.

(இ - ள்.) (சுக்கிரீவன்),—'இ நெறி-இவ்வழியாக, ஏக வேண்டும்-போக வேண்டும்,' என - என்றுசொல்லி, இனிது - இனிமையாக, கொண்டு ஏகி-(ராமலக்ஷ்மணர்களை) அழைத்துக்கொண்டுபோய்,—'மாகம் நீண்டன - பெரிய ஆகாயத்தை அளாவி உயர்ந்தவையும், குறுகிட நிமிர்ந்தன - (அவ்வாகாயமும்) சிறியதாம்படி பரந்து வளர்ந்தவையுமாகிய, மரங்கள் - மராமரங்கள், ஆக ஐந்தினோடு இரண்டின - ஏழிலும், ஒன்று உருவ ஒருங்கு துளைக்கும்படி, நின் அம்பு போகவே - உனது அம்பொன்று சென்றமாத்திரத்திலே, எனதன் மனத்து இடர் போம - எனது மனத்திலுள்ள துன்பம நீங்கும், என-என்று, புகன்றான - சொன்னான ; (எ - று.)

இம்மராமரங்களேழையும் ஓர் அம்பையெய்து துளைத்தால், வாலியை நீ கொல்வாயென்று உறுதியாக நம்புவேனாதலால், வாலியைப்பற்றியுள்ள எனது மனத்துன்பம் போம்; ஆகவே, எனக்கு உனதுவலிமை தெளிவாக விளங்குமாறு இவற்றை ஓர் அம்பெய்து துளைக்கவேண்டு மெனக் கூறினன் சுக்கிரீவனென்பதாம். நீண்டன நிமிர்ந்தன - பெயர்: ஆக - எல்லாஞ்சேர்ந்து என்றபடி. மாகம் - மஹாகம் ; வடசொல். (கஉங)

[அங்ஙனமே தான் செய்வதாக ஸ்ரீராமன் சொல்லுதல்.]

கஉச. மறுவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியைமுன்னி
யெறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
யறிவினாலளப்பரியவற்றருகுசென்றணைந்தான்.

(இ - ள்.) மறு இலான் - (மனத்திற்) களங்கமில்லாதவனான சுக்கிரீவன், அது கூறலும் - அவ்வார்த்தையைச் சொன்னவளவில்,—வானவர்க்கு இறைவன் - தேவர்க்கெல்லாந்தலைவனான ஸ்ரீராமன், அவன் முன்னிய முயற்சியை முன்னி-சுக்கிரீவன் எண்ணிய காரியத்தை அறிந்துகொண்டு,முறுவல்செய்து-புனசிரிப்புச்செய்து, எறுழ் வலி தட தோள்களால்-மிக்க வலிமையையுடைய பெரியகைகளால்,சிலையை நாண் ஏற்றி-வில்லையெடுத்து நாணேற்றிட்டு,—அறிவின் அளப்பு அரியவற்று-அறிவினால் அளவிட்டு அறிவதற்கு அருமையான அம்மரங்களின, அருகு-சமீபத்தில், சென்று அணைந்தான்-போய்ச்சேர்ந்தான்.

சுக்கிரீவன வார்த்தையைக் கேட்டவுடனே, ஸ்ரீராமன், அவன் மனத்திற் சிறிதுங் குற்றமற்றவனாயிருத்தலைக்கண்ட மகிழ்ச்சியினாலும், சுக்கிரீவன கூறியது தனது பெரு வலிமைக்கு முன மிகவுஞ் சிறுதொழிலாக விருத்தலாலும புனசிரிப்புக்கொண்டு, அவவாறே செய்வதற்காக வில்லை நாணேறிட்டு அமமரங்களுளள விடத்தைக் கிட்டினனென்பதாம். தனது உட்கருத்தை ஒளியாமல் வெளியிட்டமைபற்றி, 'மறுவிலான' எனறார். எறுழ்-உரிச்சொல; "எறுழ்வலியாகும்" எனபது. தொல்காப்பியம. எறுழ் வலி-ஒரு பொருட்பனமொழி. அரியவற்று, அற்று - சாரியை. 'தோளினிற் சிலையை நாணேற்றி' என்பதும் பாடம. (௧௨௪)

[இதுமுதல் ஒன்பதுகவிகள் - மராமரங்களின் வருணனை.]

௧௨௫. ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூ
ழாழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிக
ளேழுமாண்டுசென்றொருவழிநின்றெனவியைந்த.

இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (அம்மராமரங்கள எழும்),—ஊழி பேரினும-யுகங்கள்மாறினாலும், பேர்வு இல-இடமவிட்டுப் பெயாதலில்லாதவை; உலகங்கள - எல்லா லோகங்களும, உலைந்து தாழும் காலததும் - அழிந்துபோகுங காலததிலும், தாழ்வு இல - விழுதலில்லாதவை; தயங்குபேர் இருள் சூழ் - திகைத்தற்குக் காரணமான மிகக இருளினால் சூழப்பட்ட, ஆழி மா நிலம - கடல் சூழ்ந்த பெரிய பூமியை, தாஙகிய - (நிலைபெயராமல்) தாங்குகின்ற, அரும் பெருங் கிரிகள் எழும் - அரிய பெரிய எழு குலபருவதங்களும், ஆண்டு சென்று - அவவிடத்தில் வந்து, ஒரு வழி நின்று என - ஒருசேர நினறாற்போல, இயைந்த - பொருந்தியவை; (எ - று.)

முன்னிரண்டடிகள் - அம்மரங்கள் அழியாது நிலைத்து நிற்றலை விளக்க வந்த உயர்வுநவிற்சியணியும், பினனிரணடடிகள் - அம்மரங்களின் பெருந்தோற்றத்தை விளக்கவந்த தற்குறிப்பேற்றவணியுமாம், அடுத்த செய்யுளிலுள்ள 'எழும்' என்பதையே இச்செய்யுளிலுங் கூட்டி, இச்செய்யுளிலுள்ள பயனிலைகட்கும் எழுவாயாக்குக. 'பேரிருள்' என்றது - சக்ரவாளபர்வதத்துக்கு அப்பாலுள்ள காடாந்தகாரத்தை. கிரிகள் எழு-கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், எமகூடம், கந்தமாதநம் என்பன. மலைகள் பூமிக்கு மேலுங்

கீழும் பொருந்தி அதனைத் தரித்தலால், 'மாநிலந்தாங்கியகிரி' எனப்பட்டது ; அதனை 'பூதரம்' என்னும் வடமொழிப் பெயராலும் உணர்க. ஊழி-பிரமனது ஆயுள் ; கல்பமெனப்படும். பேரினும், காலத்தும், உம்மை - உயர்வு சிறப்பு. ஏழும், உம்மை - முற்று. ஆழி - சக்கரவாளகிரியுமாம். (கஉ௫)

கஉ௬. கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானுந்
தலைகண்டோடுதற்கருந்தவந்தொடங்குறுஞ்சாரன்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கு
மிலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும்.

(இ - ள்.) ஏழும் - (அம்மராமரங்கள்) ஏழும்,—'கலை கொண்டு ஓங்கிய மதியமும் - பதினாறு கலைகளையுங் கொண்டு வளர்ந்த சந்திரனும், கதிரவன் தானும் -(ஆயிரங்)கிரணங்களை யுடையவனான சூரியனும், தலைகண்டு ஓடுதற்கு - (தனது) உச்சியைக்கண்டு தாண்டிச்செல்லுதற்கு, அருந்தவம் தொடங்குறும்- செய்தற்கரியதவத்தைத் தொடங்கிச்செய்தற்குக் காரணமான [மிகஉயர்ந்த], சாரல் மலை-சாரல்களை யுடையதொரு பருவதத்தை, கண்டோம்-பார்த்தோம்,' என்பது அல்லது என்று சொல்வதேயல்லாமல், மலர்மிசை அயற்கும் - தாமரைமலரில் தோன்றிய பிரமனுக்கும், இலை கண்டோம் என - (அதன் நுனியிலுள்ள) இலையைப் பார்த்தோமென்று, தெரிப்பு அரு-சொல்லுதற்கு அருமையான, தரத்தன - தன்மையையுடையன ; (எ - று.)

'ஆகாயத்தில் மிக்க உயரத்திற் செல்லுகின்ற சந்திர சூரியர்களும் தாம் இவற்றின் சிகரத்தால் வழிவிலக்கப்பட்டவராகி இனி இம்மலையின் உச்சியைக் கண்டுபிடித்துக் கடந்துசெல்ல வேண்டுமென்று கருதிப் பெருந்தவஞ் செய்ய முயலுமாறு அச் சந்திரசூரியர்கள் சஞ்சரிக்குமிடத்தினும் உயர்ந்து சென்றதொரு விந்தியம்போன்ற மலையைக் கண்டோம்' என்று சொல்லுவதன்றி வேறுவகையாகச் சொல்லமுடியாதபடி, மேலுலகங்களெல்லாவற்றினும் உயர்ந்த சத்தியலோகத்தில் வாழ்கின்ற அப்பிரமனாலும் நுனி காணப்படாமல் ஓங்கி உயர்ந்தவை அம்மராமரங்கள் என்பதாம். இனி, இலை இல்லையென்பதன் விகாரமாய், பிரமனுக்கும் அம்மரம் முழுவதையுங் கண்டோமில்லையென்று சொல்லலாம்படி யாவர்க்குந் தெரிவித்தற்கு அரிய தன்மையனவென்றுமாம். இச்செய்யுள் - அம் மலையின் உயர்ச்சியை விளக்கவந்த உயர்வுநவிற்சியணி. கலை - சந்திரனது பங்கு. சாரல்-மலைப்பக்கம். 'கலை கொண்டோங்கிய' என்பதைக்கதிரவனுக்கும் அடைமொழியாக்கலாம். (கஉ௬)

கஉ௭. ஒக்கநாளெலாமுழல்வனவுலைவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேழுகண்டிலமா
திக்கும்வானமுஞ்செறிந்தவத்தருநிழற்சீதம்
புக்குநீங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி.

(இ - ள்.) நாள் எலாம் - தினந்தோறும் [நாள் முழுவதும்], ஒக்க உழல்வன - ஒரேவிதமாக (ஓயாமல்) ஓடிச்செல்பவையாகிய, இரவி தேர் புரவி-சூரியனது தேரிற் பூட்டப்பட்ட ஏழுகுதிரைகள், உலைவு இல ஆக-சிறிதும் வருத்த

மில்லாதவையா யிருத்தற்கு, மிக்கது ஓர் பொருள் உள்ளது என - மேம்பட்டதொரு காரணம் உண்டென்று, வேறு கண்டிலம் - வேறே கண்டோமில்லை; திக்கும் வானமும் செறிந்த - எல்லாத் திக்குக்களிலும் ஆகாயத்திலும் நெருங்கிப் பரந்த, அதரு - அம்மரங்களின், சீதம் நிழல் - குளிர்ந்த நிழலை, புக்கு - அடைந்து, நீங்கலின் - செல்வதனால், தளர்வு இல-(அக்குதிரைகள்) தளர்ச்சியில்லாதனவாம் ; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சூரியனது தேர்க்குதிரைகள் ஓயாமல் ஓடுவனவாயிருந்தும் இளைப்படையாமைக்குக் காரணம், அம்மரத்தின் கீழ் நிழலின்வழிச் செல்வதேயென்று உத்பிரேக்ஷித்ததனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி. இதனால், அம்மரங்கள் சூரிய மண்டலத்தினும் உயர்ந்தன வென்பதும், மிகவும் பரந்துள்ளன வென்பதும் தொனிக்கும். சூரியனது தேர்க்குக் குதிரைகள் ஏழாதலால், 'தளர்வில' எனப் பன்மையாற் கூறினர். புரவி - பால்பகாவஃறிணைப்பெயர். (கஉஎ)

கஉஅ. நீடுநாள்களுங் கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலரெனப்பொலிகின்றவளத்த
வோடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்கமுற்றுமெனுங்குறிய.

(இ - ள்.) (அவ்வேழுமரங்களும்),—நீடு - நெடுங்காலமுள்ள, நாள்களும் - நக்ஷத்திரங்களும், கோள்களும் - நவக்கிரகங்களும், என்ன - என்று, மேல் நிமிர்ந்து - ஆகாயத்திற் பொருந்தி, மாடு தோற்றுவ-பக்கங்களில் விளங்குகின்ற இவை, மலர் என - (இம்மரங்களின்) புஷ்பங்களென்னும்படி, பொலிகின்ற - விளங்குகின்ற, வளத்த - வளர்ச்சியையுடையவை; ஓடும் - ஆகாயத்திற் செல்லுகின்ற, மா சுடர் - சிறந்த ஒளியையுடைய, வெள்மதிக்கு - வெண்மையான சந்திரனுக்கு, உள் கறுப்பு - நடுவிலுள்ள மறு, உயர்ந்த கோடு தேய்த்தலின் - (இம்மரத்தின்) உயர்ந்த கிளைகள்பட்டு (அவனுடம்பைத்) தேய்த்தலால், களங்கம் உற்று ஆம் - விரணப்பட்டதனாலேயாம், எனும் குறிய - என்று உத்ப்ரேக்ஷிக்கத்தக்கவை ; (எ - று.)

இம்மரங்களின் கிளைகளைச் சார்ந்து விளங்குகின்ற கிரகங்களும் நக்ஷத்திரங்களும் எல்லாம் இம்மரங்களின் மலர்கள்போல இருக்கின்றன என்பது, முன்னிரண்டடியிற் கூறிய பொருள் ; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இம்மரங்களின் கிளைகள் அடிக்கடி சந்திரன்மீது படுவதனால அவனிடத்து உண்டான தழும்புகளே களங்கமென்று சொல்லப்படுகின்றன என்பது, பின்னிரண்டடியிற் கூறிய விஷயம் ; ஏதுத்தற்குறிப்பேற்றவணி.

எழுவாய் வருவிக்க. கோள் - க்ரஹமென்ற வடசொல்லின் பொருள் கொண்டது ; அவை - சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், பிருகஸ்பதி, சுக்ரன், சனி, ராகு, கேது என ஒன்பதாம். மாடு-ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணர்த்தின்ற இடைச்சொல். தோற்றுவ - பெயர். பொலிகின்ற-பெயரெச்சம். வளத்த, குறிய - முற்று. 'உற்று' என்ற செய்தெனெச்சம் - காரணப் பொருளது. (கஉஅ)

கஉகூ. தீதறும்பெருஞ்சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தருவனவிசும்பினுமுயர்ந்த
வாதியண்டமுன்பளித்தவனுலகினனகவனூ
ரோதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ.

(இ - ள்.) (பின்னும் அம்மரங்கள்),—தீது அறும் - அழிவில்லாத, பெரு - பெரிய, சாகைகள் - கிளைகள் (பிரிவுகள்), தழைக்கின்ற - செழித்திருக்கின்ற, செயலால் - தன்மையினால், வேதம் என்னவும் தருவன - வேதங்களென்றுஞ் சொல்லத்தக்கவை; விசும்பினும் உயர்ந்த - தேவலோகத்தினும் உயர்ந்தவை; ஆதி அண்டம் முன்பு அளித்தவன் - பழமையான அண்டகோளங்களை முன்னே படைத்தவனான பிரமனது, உலகின் - லோகத்தில், அவன் ஊர் - அப்பிரமன் (வாகனமாக) ஏறி நடத்தும்படியான, ஓதிமம் - அன்னப்பறவை, தனி பெடையொடும் - ஒப்பற்ற பேடையுடனே, புடை இருந்து - (தமது) சார்பிலிருந்து, உறைவ - வாசஞ்செய்யப்பெற்றவை; (எ - று.)

'துணைப்பெடை' என்றும் பாடம், 'அங்கு' - அசை.

இச்செய்யுட்கும் எழுவாய் வருவிக்கவேண்டியதே. சாகா என்னும் வடசொல்லுக்கு - மரக்கிளையென்றும், வேதத்தின் பிரிவென்றும் பொருள்கள் உள்ளனவாதலால், 'சாகைகள் தழைக்கின்ற செயலால் வேதமென்னத் தருவன' எனச் செம்மொழிச்சிலேடை யுவமையணி. சிலேடை-ஒருசொல்லைப் பல பொருள்படச் சொல்வது; செம்மொழிச் சிலேடையென்றும், பிரிமொழிச் சிலேடையென்றும் இருவகைப்படும். செம்மொழிச் சிலேடையாவது- சொல் வெவ்வேறு வகையாகப் பிரியாதது; பிரிமொழிச் சிலேடையாவது - "கண்ணுஞ்சொல்லும் கரும்பிணை" என்றவிடத்து, கண், கரு பிணை - கரிய மான் போன்றது: சொல், கரும்பு இணை-கரும்பையொத்தது என்றாற்போலச் சொல் வெவ்வேறு வகையாகப்பிரிந்து வெவ்வேறு பொருளைத் தருவது. ()

கஙO. நாற்றமல்குபோதடைகனிகாய்முதலனை
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டுங்
காற்றலம்பினுங்கலிநெடுவானிடைக்கலந்த
வாற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப.

(இ - ள்.) காற்று அலம்பினும் - காற்று அசைத்தாலும், நாற்றம் மல்கு போது - நறுமணம் மிக்க மலர்களும், அடை - இலைகளும், கனி - பழங்களும், காய் - காய்களும், முதல் - முதலிய, நானா வீற்று யாவையும்-பலவகைப்பட்ட அனைத்தும், மண்தலத்து - பூலோகத்தில், யாண்டும் - எவவிடத்திலும், வீழ்கில - விழாதனவாய்,—கலி - ஆரவாரத்தையுடைய, நெடு வானிடை கலந்த - பெரிய தேவலோகத்திற் பொருந்திய, ஆற்றின்- ஆகாசகங்காநதியில், வீழ்ந்து- விழுந்து, போய் - (அதன்வழியாகச்) சென்று, அலைகடல் பாய்தரும் - அலைகின்ற கடலில்சேர்கின்ற, இயல்ப - தன்மையையுடையவை; (எ - று.)

இதனால், அவை ஆகாசகங்கையிலும் உயர்ந்துள்ளனவென்றபடி: தொடர்புயர்வுநவிற்சியணி. யாவையும் காற்று அலம்பினும் வீழ்கில வீழ்ந்துபோய்ப்

பாய்தரும் இயல்ப என இயையும். இனி, முன்னிரண்டடிக்கு - எக்நாளும் இலை முதலியன உதிராதவை யென்றும், பின்னிரண்டடிக்கு - காற்றடித்தால் ஆகாசகங்கையிலும் கடலிலும் படும்படி அசைபவை யென்றும் பொருள் கொள்ளலாம். நாற்றம் - தொழிற்பெயர்; இச்சொல் இங்குத் தீநாற்றத்தைக் காட்டாது நறுமணமென்ற பொருளைத் தந்தது. தலம், நாசி - வடசொற்கள். பாய்தரும், தா - துணைவினை. (கஙo)

கஙக. அடியநான்மறையந்தணனண்டத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பரிய.

(இ - ள்.) (பின்னும் அம்மரங்கள்),—அடிய- அநாதியான, நால் மறை - நான்குவேதங்களையும் உணர்ந்த, அந்தணன் - பிரமதேவன் படைத்த, அண்டத்துக்கு - அண்டகோளத்தினது, அப்பால் முடியின்மேல் - மேல் முகட்டின்மேலும், சென்ற - போயுள்ள, முடியன - நுனியையுடையன; ஆதலின் - ஆகையினால், முடியா - அளவிடப்படாத, நெடிய - நீண்ட [திரிவிக்கிரமாவதாரஞ்செய்த], மால் - திருமால், எனும் - என்று சொல்லத்தக்க, நிலையன - நிலைமையுடையவை; நீரிடை கிடந்த - ஜலத்தின்மேற் பொருந்திய, படியின்மேல் - பூமியில், நின்ற - நிலைபெற்ற, மால் மேரு வரையினும் - மகாமேரு பருவதத்தினும், பரிய - பருத்தவை; (எ - று.)

மராமரங்களேழும் பிரமாண்டத்தையுங்கடந்து நிற்றலால் திரிவிக்கிரமமூர்த்தியையொத்தும், மேருமலையினும் மிகப்பருத்தும் நிற்கின்றன வென்பதாம். நெடியமால் அண்டத்துக்கப்பால் முடியின்மேற் சென்ற முடியனு தலை "படிவட்டத்தாமரை பண்டுலக நீரேற், றடிவட்டத்தாலளப்ப நீண்ட - முடிவட்டம், ஆகாயமூடறுத் தண்டம்போய் நீண்டதே, மாகாயமாய் நின்ற மாற்கு" என்ற பெரியார்பாசுரத்தாலும் உணர்க, முடியா - அழிவில்லாத எனினுமாம் நெடியமால் - மகாவிஷ்ணு. அந்தண னண்டம் - சத்தியலோகமென்றுமாம். ஆதியிற் கடவுள் நீரைப்படைத்து அதன்மேல் பூமியைத் தோற்றுவித்தன ராதலால், 'நீரிடைக் கிடந்த படி' எனப்பட்டது. பூமிக்கு மத்தியிற் பொன்மயமா யோங்கிநின்ற மேருமலை தன்னிடத்துச் சூரியன் மறைவதனால் அஸ்தமனமும், வெளிதோன்றுவதனால் உதயமும் நவகண்டங்கட்கும் உண்டாகுமாறு செய்கின்றதென்று புராணங் கூறும்.

அடிய - குறிப்புப்பெயரெச்சமென்றேனும், பலவின்பாற்குறிப்புவினையாலணையும்பெயரென்றேனுங் கொள்க; அடி - பழமை. எழுவாய் வருவிக்க. அடுத்த இரண்டு செய்யுள்களிலும் இவவாறே. (கஙக)

கஙஉ. வள்ளலிந்திரன்மைந்தற்குந்தம்பிக்கும்வயிர்த்த
வுள்ளமேயெனவொன்றினொன்றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக்கிடந்தபார்சுமக்கின்றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துகீழ்போகியவேர.

(இ - ள்.) வள்ளல் - வரையாமற்கொடுப்பவனுகிய, இந்திரன் - தேவேந்திரனது, மைந்தற்கும் - குமாரனுன வாலிக்கும், தம்பிக்கும் - (அவனது) தம்பியான சுக்கிரீவனுக்கும், வயிர்த்த - (ஒருவர்மேலொருவர்) பகைமை கொண்ட, உள்ளமே என - மனம்போல, ஒன்றின் ஒன்று - ஒன்றுபோலொன்று, உள் வயிர்ப்பு உடைய - உள்ளே வயிரத்தன்மையையுடையவை; தெள்ளும் நீரிடை கிடந்த - தெளிவான கடலினிடையே பொருந்திய, பார் - பூமியை, சுமக்கின்ற - தாங்குகின்ற, சேடன் - ஆதிசேஷனது, வெள்ளி வெள் படம் - வெள்ளிபோல வெண்மையான படத்தை, குடைந்து - கிழித்துக்கொண்டு, கீழ் போகிய - கீழே ஊன்றிச்சென்ற, வேர - வேரினையுடையவை; (எ - று.)

வாலிசுக்கிரீவர்கள் உள்ளே வயிரம் வளரப்பெற்றமைபோல, அம்மரங்கள் உள்வயிரம் வளரப்பெற்றன வென்றபடி: செம்மொழிச்சிலேடை பற்றி வந்த உவமையணி. வாலிசுக்கிரீவர்கட்கு வயிர்ப்பு - நெஞ்சிற்கொண்டுள்ள பகைமை; மரத்திற்கு வயிர்ப்பு - உறுதிப்பாட்டினுல் மரத்தினுட்புறத்திற்றேன்றும் நிறவேறுபாடு: இவ்விரண்டும் வேறுயிருக்கவும் உவமைவருதற்காக ஒன்றாக்கொண்டது; வேற்றுமையுயர்வுநவிற்சி. அம்மரத்தின்வேர்கள் நாகலோகத்திற்குக்கீழுஞ் சென்றுள்ளன வென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து. சேஷன் - (பிரளயகாலத்திலும் அழியாது) எஞ்சிநிற்பவனெனக் காரணப்பெயர்.                (கரு உ)

கரு௩. சென்றுதிக்கினையளந்தனபணைகளிற்றேவ
ரென்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியுங்
குன்றினுக்குயர்ந்தகன்றனவொன்றினுங்குறுகா
வொன்றினுக்கொன்றினிடைநெடிதியோசனையுடைய.

(இ - ள்.) (அம்மரங்கள்),—'சென்று - போய், திக்கினை - எல்லாத்திசைகளையும், அளந்தன - அளவிட்டவையாகிய, பணைகளின் - (இம்மரங்களின்) கிளைகளால் (தடைபட்டு), என்று - சூரியன், நிற்கும் - (இனிக் கதியொழிந்து) நின்றுவிடுவான்,' என்று—, தேவர் - தேவர்கள், இசைப்பன - சொல்லத்தக்கவை; இரு சுடர் திரியும் குன்றினுக்கு-சூரிய சந்திரர்கள் சஞ்சரிக்கின்ற உதயகிரி அஸ்தகிரிகளைக்காட்டிலும், உயர்ந்து அகன்றன - ஓங்கிப் பரந்திருப்பவை; ஒன்றினும் குறுகா - ஒருவகையிலுங் குறைவில்லாதவை; ஒன்றினுக்கு ஒன்றின் இடை - ஒன்றுக்கொன்று இடையிலே, நெடிது யோசனை உடைய - பலயோசனைதூரம் இடைவெளியுள்ளவை; (எ - று.)

இங்கு வேறுவகையால் அம்மரங்களின் உயர்வையும், பரப்பையும் விளக்கியதோடு, அவவேழுமரங்களும் ஒன்றற்கு ஒன்று ஒருயோஜனைதூரம் இடம் விட்டுள்ளன வென்று, அம்மரங்கள் நெருக்கமாகவன்றி விசாலமாக முளைத்திருப்பதைத் தெரிவித்தார். கீழ் 'மேருமால் வரையினும் பரிய' என வந்ததனல், 'இருசுடர்திரியுங்குன்று' என்பதற்கு - மேருவென்று பொருள்கொள்ளப்படவில்லை. ஒன்றினுங் குறுகா - ஒன்றில் ஒன்று சேராதபடி யென்றுமாம். யோசனை - யோஜநா: வடசொல்: ஒரெல்லையளவு: நான்கு குரோசங்

கொண்டது: "அங்குலமஃறுநான்கெய்தி னதுகரம் கரமோர்நான்கு, தங்குதல் தனுவென்றாகுந் தனுவிரண்டதுவோர்தண்ட, மிங்குறுதண்டமான விராயிரங்குரோசத்தெல்லை, பங்கமில் குரோசநானகோ ரியோசனைப்பாலதாமே" என்பது காண்க. இது, காத மெனப்படும்; நாற்காதத்தை யோஜனையென்பது, ஜைநநூல்வழக்கு - இசைப்பன - செயப்படுபொருள் செய்தது போல வந்தது. எனறு - ஒளியையுடையதெனப் பொருள்படுங் காரணக்குறி; எல் - ஒளி: பகுதி; று - பெயர்விகுதி நெடிதியோசனை - குற்றியலிகரம். உடையபலவின்பாற் குறிப்புமுற்று. (கருரு)

[இராமபிரான் அம்மரங்களைக் கண்டவுடனே அம்பு எய்யுமாறு நாணொலி யெழுப்புதல்.]

கருச. ஆயமாமரமனைத்தையுநோக்கிநின்றமலன்
றூயவார்கணைதூரப்பதோராதரந்தோன்றச்
சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கேய்விலாததோர்பயமவரச்சிலையினாணெறிந்தான்.

(இ - ள்) அமலன - ஸ்ரீராமன்,—ஆய மா மரம் அனைத்தையும் - அத்தன்மையனவான பெரிய மராமரங்கள் ஏழையும, நோக்கி நினறு - பார்த்து நினறு,—தூய வார் கணை - பரிசுத்தமான நீணட அம்பை, தூரப்பது - பிரயோகிப்பதறகேற்ற, ஓர் ஆதரம் - ஒரு விருபபம், தோனற - உண்டாக,—(உடனே), சேய வானமும - தூரத்திலுள்ள தேவலோகத்தி லிருககினற பிராணிகளும், திசைகளும - எல்லாததிககிலுமுள்ள பிராணிகளும், செவிடு உற - செவிடுபடவும்,—தேவாக்கு - தேவர்களுக்கு, எய்வு இலாதது ஓர் பயம் வர - (இதுவரையிலும் எந்நாளும்) உண்டாகாததொரு பயம் உண்டாகவும், சிலையின் நாண் எறிந்தான - வில்லில் ஏறறிய நாணியை(க்கைவிரலால்) எறிந்து (டங்காரத்தொனி) செய்தான; (எ - று)

சுக்கிரீவனுக்கு நம்புதலுண்டாக்குதற்பொருட்டு ஏழுமரங்களையும் ஒருசேர எய்யுமாறு விரும்பி, வானமும திசைகளும் செவிடுபடவும, தேவர்களும் நடுநடுங்கவும், இராமபிரான் நாணொலியெழுப்பின னென்பதாம. தூய, சேய - தூய்மை, சேய்மை என்னும் பண்பினடியாகப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம். கணைக்குத் தூய்மை - துஷ்டர்களை அழித்தலும்; குறித்த இலக்குத தப்பாமையும். வானம, திசை எனபன - அஙகுள்ளார்க்கு இடவாகுபெயர். செவிடுபடுதல் - அளவிறந்த ஒலியைக் கேட்டலால். பயம் வருதல் - என்ன அபாயம் வருமோ வெனறு. (கருச)

[நாணொலியின் வருணனை.]

கருரு. ஒக்கநின்றதெவ்வுலகமுமங்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கின திசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருவில்,

(இ - ள்.) ஓசை - அவ்வொலி,—எ உலகமும் - எல்லாலோகங்களிலும், ஒக்க - ஒருசமமாக, அங்கு அங்கே நின்றது - அவ்வவ்விடங்களிற் (போய்ப்) பரவிநின்றது: (என்றால்),—பக்கம் நின்றவர்க்கு - அருகில் இருந்தவர்களுக்கு, உற்றது - நேர்ந்ததை, பகர்வது - சொல்வது, எப்படியோ - எவ்வாறோ? (அந்நாணொலியினால்), திக் கயங்களும் - (எட்டுத்) திக்குயானைகளும், மயங்கின - மயக்கமடைந்தன; திசைகளும் - எல்லாத்திக்குகளும், திகைத்த - கலக்கமடைந்தன; அ பொரு வில் - போர்க்கு ஏற்ற அந்த வில், அயன்பதி சலிப்பு உற - பிரமலோகமும் அதிர்ச்சியடையும்படி, புக்கு ஒலித்தது - போய்ச் சத்தித்தது; (எ - று.)

அவ்வுலகங்களிற் சென்ற இராமபிரானது வில்லின் நாணொலி அவ்வவ்விடத்திலுள்ளதானதோன்றினதுபோலப் பேரோசை பெற்றிருந்ததென்றால், உண்மையில் அதனருகேயிருந்தவர்க்கு இவ்வாறு இருந்ததென்பது கூறாமலே விளங்கும் ; அவ்வாறுதோன்றிய பேரொலியினால் திக்கஜங்கள் திகைப்படையத் திக்கிலுள்ளவர்கள் மயங்கப் பிரமலோகமும் சலித்ததென்பதாம். இச்செய்யுள் - நாணொலியின் மிகுதியைத் தெரிவிக்கவந்த தொடர்புயர்வு நவிற்சியணி. இதற்கு - இரண்டாமடியிற்கூறிய விஷயத்தைக் கைமுதிகநியாயத்தாற் சாதிக்கின்ற முதலடியிலுள்ள தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி அங்கமாய்வந்தது. திக்கஜங்கள் - ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்ரதீகம் என்பன. கயம் - கஜம். உலகமும், உம்மை - முற்று; ஓகாரம் - எதிர்மறை. கயங்களும், உம் - எண்ணுப்பொருளோடு உயர்வுசிறப்புப்பொருளது. திசைகளும், உம்மை - எண். (கஙு)

கஙச. அரிந்தமன்சிலைநாணொடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கற்பத்தினிறுதியென்றயிர்த்தார்
பரிந்ததம்பியேபாங்குநின்றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவர்ப்புணரும்.

(இ - ள்.) அரிந்தமன் - பகைவர்களை அழிக்கின்றவனான ஸ்ரீராமனது, சிலை நாண் - கோதண்டத்தினது நாணி, நெடிது ஆர்த்தலும் - மிகுதியாய் ஆரவாரித்தமாத்திரத்தில்,—அமரர் - தேவர்களெல்லாரும், இரிந்து நீங்கினர் - அஞ்சி ஓடினவர்களாய், கற்பத்தின் இறுதி என்று - கல்பகாலத்தின் முடிவு [பிரளயகாலம்] என்று, அயிர்த்தார் - சந்தேகித்தார்கள்; பரிந்த தம்பியே - (தமையனார்பக்கல்) அன்புபூண்ட இளையபெருமாளொருவன் மாத்திரமே, பாங்கு நின்றான் - அருகில் இருந்தான்; மற்றை பல்லோர் புரிந்த தன்மையை - மற்றை (சுக்கிரீவன் அநுமான் முதலிய) பலரும் அடைந்த விதத்தை, உரைசெயின - சொல்லத்தொடங்கினால், அவர் - அப்பலர்க்கும், பழி - இகழ்ச்சியாக, புணரும் - முடியும்; (எ - று.)

கற்பாந்தகாலம் வந்துவிட்டதென்று தேவர்கள் அஞ்சியோடுமாறும், சுக்கிரீவன் முதலியோர் இன்னபடி யஞ்சினர்களென்று சொல்லுதற்கும் முடியாதபடி அவ்வளவு மிக அதிகமான அச்சத்தை யடையுமாறும் இராம

பிரான தநுஷ்டங்காரஞ் செய்கையில், இலக்குமணனொருவனே அஞ்சாது அருகிலிருந்தனனென்பதாம். அரிந்தமன என்ற வடசொல்லுக்கு - பாவத்தைப் போக்குபவனென்று பொருள்கொண்டு, இயற்கையாகப் பாவமில்லாமையோடு தனக்குச் சரீரமாகவுள்ள சராசரங்களின் பாவமுந் தட்டாதவனென்றும், தன்னையடைந்தவர்களது பாவத்தைப் போக்குபவனென்றும் மற்றும் பலவாறாகவும் கருத்துக் கூறப்படும். நெடிது நாண் என்று எடுத்து - நீண்ட நாண் என்றுமாம். கற்பம் - கல்பம்; லகரம் றகரமாகத் திரிந்தது. ஏ - பிரிநிலை. அவர்ப்புணரும்—"இயல்பின விகாரம்." (கரு௬)

[இராமபிரான் அம்பை யெய்தல்]

கரு௭. எய்தல்காண்டுங்கொலின்னமென்றரிதின்வந்தெய்திப்
பொய்யினமாருதிமுதலினோர்புகழ்வுறும்பொழுதின்
மெய்கொள்வாரசிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாளுடைவில்லியுமவிட்டான்.

(இ - ள) பொய் இல் மாருதி முதலினோர் - பொய்ம்மையில்லாத அநுமான முதலானவர்கள், 'இன்னம - இன்னமும், எய்தல் - அம்பெய்தலை, காண்டும - பார்ப்போம,' என்று - என்று சொல்லிக்கொண்டு, அரிதின் - அருமையாக, வந்து எய்தி - வந்துசேர்ந்து, புகழ்வுறும்பொழுதில் - புகழ்ந்து கொண்டிருக்கின்ற சமயத்தில்,—ஆள் உடை வில்லியும - (எல்லா வுயிர்களையும்) அடிமையாகவுடைய வில்வல்ல வல்லவனான ஸ்ரீ ராமனும்,— மெய் கொள - வலிமையைக் கொண்ட, வார - நீண்ட, சிலை - வில்லிற் பூட்டிய, நாணினை - நாணியை, முறை - முறைப்படியே, உற நன்றாக. வாங்கி - இழுத்து, வெய்ய வாளியை - கொடிய அம்பை, விட்டான - தொடுத்தான; (எ - று.)

இராமபிரான செய்த நாணொலியைக் கேட்டு அஞ்சியோடியவர்களில் மாருதி முதலிய தைரியசாலிகளில சிலர் அரிதில தேறி, அம்பெய்வதைப் பார்த்தற்காக இராமபிரானை யணுகி அப்பிரானது வலிமையைக் குறித்துக் கொண்டாடிக் கூறிக்கொண் டிருக்கையில, இராமபிரான நாணை யிழுத்து அம்பு தொடுத்தன னென்பதாம். கீழ் அஞ்சியோடியமைபற்றி, 'அரிதின் வந்தெய்தி' எனப்பட்டது இராமன வாலியைக் கொல்ல வல்லவனென்று துணிந்த அநுமானினது அநுமானம இப்பொழுது மெய்யானதனால், இங்கு 'பொய்யில் மாருதி' என்றார். 'காண்டும' என்பதில், 'டும்' விகுதி எதிர் காலங் காட்டிற்று; 'தும' விகுதி முதலதிரிந்த தென்றலு மொன்று. கொல் - அசை. முதலினோர், இன் - சாரியை. (கரு௭)

[இராமபிரான் பிரயோகித்த அம்பு மராமரங்களோடு கீழேழுலகங் களையுந் தொளைத்துச் செல்லுதல்.]

கரு௮. ஏழுமாமரமுருவிக்கீழுலகமென்றிசைக்கு
மேழுமூடுபுககுருவிப்பின்னுடனடுததியன்ற
வேழிலாமையால் மீண்டதவ்விராகவன்பகழி
யேழுகண்டபினுருவும்மாலொழிவதன்றின்னும்.

(இ - ள்.) அ இராகவன் பகழி - அந்த ராமபாணம்,—ஏழு மா மரம் - பெரிய அவ்வேழு மரங்களையும், உருவி - துளைத்துச்சென்று,—கீழ் உலகம் என்று இசைக்கும் ஏழும் - கீழுலகமென்று சொல்லப்படுகின்ற ஏழையும், ஊடு புக்கு உருவி - நடுவே துளைத்துச்சென்று,—பின் - பின்பு,—உடன் அடுத்து இயன்ற - அப்பாற்பொருந்தியிருக்கின்ற, ஏழு - ஏழென்னுந்தொகையுடைய பொருள், இலாமையால்-வேறு இல்லாமையால், மீண்டது-திரும்பி வந்துவிட்டது; (அந்த அம்பு), இன்னும் - இன்னமும், ஏழு கண்டபின் - ஏழென்னுந் தொகையையுடைய பொருளைக் காணுமாயின், ஒழிவது அன்று - துளையாமல் விடுவதன்று; உருவும் - துளைத்தேவிடும்; (எ - று.)

இராமபிரான் பிரயோகித்த அம்புகள் ஏழு மராமரங்களையுந் துளைத்து ஏழுலகங்களையும் ஊடுருவிச்சென்றதனால், அவ்வம்புகள் ஏழென்னும் எண்ணமைந்துள்ள பொருள்களையெல்லாந் துளைத்துச்செல்லு மென்பது தெற்றென விளங்குகின்றது; அவ்வாறு மிக்க வலிமைபெற்றிருந்தும் அவ்வம்புகள் மராமரம் கீழுலகம் என்ற இரண்டைத்தவிர மற்றொன்றையும் துளையாதிருந்தது ஏழென்ற எண்ணமைந்தபொருள் கீழுலகங்கட்கப்பால் வேறொன்றுங் கிடைத்திடாமையேயா மென்பதாம். இராமபிரான் தொடுத்துவிட்ட அம்பு மராமரத்தையும் கீழுலகமேழினையுந் துளைத்ததோடு மீண்டுநின்ற தற்கு 'பின்னுடனடுத்தியன்ற ஏழிலாமையால்' என்க காரணங் கற்பித்துக் கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. கீழுலகமேழ் - அதலம், விதலம், சுதலம், காதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்பன. மூன்றுமடியிலும், நான்காமடியிலும், ஏழு - ஆகுபெயர். கண்டபின் - பின்னீற்று எதிர்கால வினையெச்சம். ஆல் - அசை. "மாதவருமபர் பெருமாளரங்கர் வலியுணரா, தாதவனமைந்தனயிர்த்தவந்நாளிலக்காயநெடும், பாதவமேழுமுடனே நெடுங் கணைபட்டுருவப், பூதலமேழு மெழுபாதலங்களும் புண்பட்டவே" என்ற திருவரங்கத்துமாலை, இங்கு நோக்கத்தக்கது. (௧௩௮)

[இராமபிரான் அம்புஎய்ததைக்கண்டு பலபொருள்களும் அஞ்சுதல்]

௧௩௯. ஏழுவேலையுமுலகமே லுயர்ந்தனவேழு
மேழுகுன்றமுமிருடிகளெழுவரும்புரவி
யேழுமங்கையரெழுவருநடுங்கினவென்ப
வேழுபெற்றதோவிக்கணைக்கிலக்கமென்றெண்ணி.

(இ - ள்.) ஏழு வேலையும்-ஸப்தஸமுத்திரங்களும், உயர்ந்தன மேல் ஏழ் உலகமும் - உயர்ந்துள்ள மேலேழுலகங்களும், ஏழு குன்றமும் ஸப்தகுல பருவதங்களும், இருடிகள் எழுவரும் - ஸப்த ருஷிகளும், புரவி ஏழும் - சூரியனதேர்க் குதிரைகள் ஏழும், மங்கையர் எழுவரும் - ஸப்தமாதர்களும், 'இக்கணைக்கு - இந்த அம்புக்கு, ஏழு - ஏழென்னுந் தொகையுடையதெல்லாம், இலக்கம் பெற்றதோ - குறியாகப்பெற்றதோ?' என்று எண்ணி—, நடுங்கின - (அச்சத்தால்) நடுக்கமடைந்தன; (எ - று.)

வேலை முதலியனவைகள் நடுங்கின என, அப்பிரகிருதங்கள் ஒரேபண்பையடைந்தனவாகக் கூறியது - ஒப்புமைக்கூட்டவணி: இது, வடமொழியில

தல்யயோகிதாலங்கார மெனப்படும். (அப்பிரகிருதமாவது - கதைப்போக்குக்குச் சம்பந்தப்படாத பொருள்.) 'ஏழு' என்ற ஒரே பொருளையுடைய சொல் மீண்டு வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. ஏழென்னும் எண்ணினையுடைய பலபொருள்களை ஒருங்கே யமைத்தது, கவிசமத்காரம்.

ஏழு வேலை - உவர்நீர், கருப்பஞ்சாறு, மது, நெய், தயிர், பால், நன்னீர் இவற்றின்மயமானவை. மேலேழுலகம் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், ஜநலோகம், மஹர்லோகம், தபோலோகம், சத்தியலோகம் என இவை. ஏழு குன்றம் - கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பன: இவை, ஸப்தகுலாசல மெனப்படும். இருடிகள் எழுவர் - அத்திரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காசியபர், ஆங்கிரஸர்; இவர்க்குப் பிறவாறு முறைப்பர். காயத்ரீ, உஷ்ணிக், அநுஷ்டுப், ப்ருஹதீ, பங்க்தி, த்ரிஷ்டுப், ஜகதீ என்ற ஏழுசந்தசுகளும் சூரியனது தேரின்குதிரைகளென நூல்கள் கூறும். மங்கையர் எழுவர் - பிராஹமி, மாஹேச்வரி, கௌமாரி, நாராயணி, வாராகி, இந்திராணி, சாமுண்டி. வேலையும், உலகமும, குன்றமும், இருடிகளும், புரவியும், மங்கையரும் என அஃறிணையும் உயர்திணையுங் கலந்து எண்ணி, மிகுதியினால் 'நடுங்கின' என்னும் அஃறிணை முடிபைப் பெற்றன; உயர்திணைப்பொருள் இரண்டாக, அஃறிணைப்பொருள் நான்காதல் - இங்கே, மிகுதி. என்ப - அசை; இது - புறனடையாற் கொள்க: 'என்னே' என்றும் பாடம். இலக்கம் - லக்ஷ்யம். (கஙக)

[சுக்கிரீவன் ஒன்று கூறத் தொடங்குதல்.]

கச0. அன்ன தாயினு மறத்தினுக் காருயிர்த் துணைவ
னென்னுந் தன்மையை நோக்கின ரியாவரு மெவையும்
பொன்னின் வார்கழற் புதுநிறத் தாமரை பூண்டு
சென்னி மேற்கொளூஉ வருக்கன்சே யிவையிவை செப்பும்.

(இ - ள்.) அன்னது ஆயினும் - அவ்வாறு அச்சமுண்டானாலும், யாவரும் - எல்லாரும், 'அறத்தினுக்கு - தருமத்துக்கு, அரு உயிர் - அரிய உயிரைக் காக்கும்படியான, துணைவன் - துணையாயிருப்பவன் (ஸ்ரீராமன்)', என்னும் தன்மையை - என்கிற இயல்பை, நோக்கினர் - நோக்கி அச்சமொழிந்தனர்; எவையும் - எல்லா வுயிர்களும், (நோக்கின) அவ்வாறே அறத்துக்குத் துணைவனுந்தன்மையை நோக்கி அச்சமொழிந்தன; அருக்கன் சேய் - சூரியன்மகன் [சுக்கிரீவன்],—பொன்னின் வார் கழல் - பொன்னினாலாகிய நீண்ட வீரக்கழலையுடைய, புது - புதிய [அன்றுமலர்ந்த], நிறம் - செந்நிறத்தையுடைய, தாமரை - தாமரை மலர்போன்ற (ஸ்ரீராமனது) திருவடிகளை, பூண்டு - பொருந்தி, சென்னிமேல் கொளூஉ - தலைமேற்கொண்டு [ஸாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டு], இவை இவை செப்பும்-இந்த இந்த வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ-று)—அவை, மேல் இரண்டு கவிகளாற் கூறப்படும்.

இராமபிரானது நாணொலியையும் வில்லின் வேகத்தையும் பார்த்து உயர்திணைப்பொருள்களோடு அஃறிணைப்பொருள்களும் அஞ்சியனவாயினும்

இராமபிரான் தருமத்தை நாட்டுதற்கே திருவவதரித்திருப்பதை யறிந்தன வாதலால் அச்சம் நீங்கியனவாக, அப்போது சுக்கிரீவன் ஸ்ரீராமனை வணங்கி ஒன்று கூறலாயின னென்பதாம். கொளுஉ - செய்யூ என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். அன்பு மிகுதியாற் பற்பலவகையாகக் கூறியது தோன்ற, 'இவையிவைசெப்பும்' என்றார். 'எவையும்' என்பதற்குப் பயனில வருவிக்கப் பட்டது: இனி, யாவரும் எவையும் நோக்கினர் என இயைத்து, உயர்திணையும் அஃறிணையும் சேர்ந்து, சிறப்பினால் உயர்திணைமுடிபைப் பெற்றுவந்த திணைவழுவமைதி யெனக் கொள்ளுதலுமாம். தாமரை - உவம வாகுபெயர்; 'கழல்' என்ற அடைமொழி, இதன் பொருளை விளக்கிற்று. ()

வேறு.

[சுக்கிரீவன் ஸ்ரீ ராமனைத் துதித்தல்.]

௧௪௧. வையநீ வானுநீ மற்றுநீ மலரின்மே
லையனீ யாழிநீ யாழிவா ழமலனீ
செய்யதீ வினைதெறுந் தேவுநீ நாயினே
னுய்யவந் துதவினா யுலகமுந் துதவினாய்.

இதுவும், அடுத்த கவியும் - ஒரு தொடர்.

(இ-ள்) வையம் - பூமியும், நீ - நீயே; வானும் - ஆகாயமும், நீ—; மற்றும் - மற்றை (அப்பு தேயு வாயு என்னும்) பூதங்களும், நீ—; மலரின் மேல் - தாமரைமலரில் தோன்றிய, ஐயன் - பிரமதேவனும், நீ—; ஆழி - கடலும், நீ—; ஆழி வாழ் அமலன் - திருப்பாற்கடலில் வாழ்கின்ற ஸ்ரீமந் நாராயணனும், நீ—; தீவினை தெறும்-பாவங்களை நாசஞ்செய்கின்ற, செய்ய-நன்மைக்குணத்தையுடைய, தேவும் - தருமதேவதையும், நீ—; முந்து - முற்காலத்தில், உலகம் - லோகங்களையெல்லாம், உதவினாய் - உண்டாக்கின நீ, (இப்பொழுது), நாயினேன் உய்ய - நாய்போலக் கடைப்பட்ட அடியேன் பிழைக்கும்படி, வந்து - எழுந்தருளி, உதவினாய் - அருள்செய்தாய்; (எ-று.)

இராமபிரான் மராமரத்தை அம்பெய்து துளைக்கையில், நெஞ்சினாலும் நினைத்தற்கு அரிய அப்பிரானது மகா பராக்கிரமத்தைக் கண்கூடாகக்கண்டதனால், 'இவன் அநுமான் கூறியபடி முழுமுதற்கடவுளாகிய திருமாலின் திருவவதாரமே' எனறுதெளிந்து, சுக்கிரீவன இங்ஙனங்கூறலாயினனென்க. பஞ்சபூதங்களுள் முதலதையும் ஈற்றதையுங் கூறி மற்றவற்றை 'மற்றும்' என்பதனாற் பெறவைத்தார். 'ஆழி நீ' என்பதற்கு - அழித்தற்கடவுளாகிய சிவபிரானும் நீயே என உரைத்தலும் தகும்: திருமால் ஒருவனே படைத்தல் காத்தல் அழித்தல் என்னும் முத்தொழிலையும் நடத்தற்குத் திரிமூர்த்தியாய் நிற்கின்றா னென்பது நூற்கொள்கை. 'ஆழிவா ழாழிமா மாலுநீ' என்ற பாடத்துக்கு - கடலிற் கண்வளர்ந்தருளுகிற சக்கரதரனான மகாவிஷ்ணுவும் நீயே என்று பொருள். செய்ய தேவு என இயையும். தேவும் - தெய்வத்துக்கு ஒரு பெயர்; இதனைத் தேவசப்தபவ மென்பா.

இதுமுதற் பதினெட்டுக் கவிகள் - பம்பைப்படலத்தின் முப்பத்தேழாங் கவிபோன்ற கலிவிருத்தங்கள் (௧௪௧)

[சுக்கிரீவனது முகமன்.]

கசஉ. என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலா
லுன்னையித்தலைவிடுத்துதவினார்விதியினா
ரன்னையொப்புடையவுன்னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசவென்றுரைசெய்தான்வசையிலான்.

(இ - ள்.) மன்னவர்க்கு அரச - அரசர்களுக்கரசனே! விதியினார் - முற்பிறப்பிற் செய்த (எனது) நல்வினையார், உன்னை —, இத்தலை - இவ்விடத்தில், விடுத்து உதவினார் - தாமே கொண்டுவந்துவிட் டருளினார்; யான் —, அன்னை ஒப்பு உடைய - தாய்க்குச் சமானமான, உன் - உனது அடியருக்கு, அடியன் - அடியார்களுக்கு அடியவனானேன்; (இனி) எற்கு - எனக்கு, எ பொருளும் - எந்தக்காரியமும், எளிது அலால் - (செய்துமுடித்தற்கு) எளியதாகுமே யல்லாமல், எனக்கு—, அரியது - (செய்வதற்கு) அரியது, என் - யாது உளது? என்று —, வசை இலான் - குற்றமற்றவனான சுக்கிரீவன், உரைசெய்தான் - சொல்லித் துதித்தான்; (எ - று.)

எனது ஊழ்வினை பெறுதற்கு அரிய பரம்பொருளாகிய உன்னையே என்னிடத்திற் சேர்த்துவிட்டதனால், இனி எனக்குப் பெறுதற்கு அரியது யாது உளது? இனி யான் உனது மகிமையை யுணர்ந்ததனால் உனது அடியார்க்கு அடியனாய் நடந்துகொள்வேனென்று சுக்கிரீவன் கூறினனென்க. "பாக்கியத்தாற், செங்கட்கரியானைச் சேர்ந்தோம்யாம் தீதிலமே, எங்கட்கரியதொன்றில்" என்றாற்போல 'என்னெனக்கரியது எப்பொருளு மெற்கெளிதலால்' என்றான். ஊழ்வினையால் தனக்கு நேர்ந்த நன்மையைக் கருதி, உவப்பினால் 'விதியினார்' என்று உயர்வுபற்றிய பலர்பால் விகுதிகொடுத்துக் கூறினன்; திணைவழுவமைதி. அடியருக்கடியன் - தாஸாநுதாஸன். வசை - இழுக்குபடம்.

[மற்றை வானரவீரர்களின் மகிழ்ச்சி.]

கசங. ஆடினார்பாடினாரங்குமிங்குங்கலந்
தோடினாருவகையின்னறவையுண்டுணர்கிலார்
நேடினாம்வாலிகாலனையெனாநெடிதுநாள்
வாடினார்தோளெலாம்வளரமற்றவரெலாம்.

(இ - ள்.) நெடிது நாள் வாடினார் - (வாலியின் உபத்திரவத்தால்) பல நாளாக வாடிக்கிடந்த, மற்றவர் எலாம் - மற்றை வானரர்களெல்லாரும், 'வாலி காலனை - வாலிக்கு யமனை, நேடினாம் - (இன்றைக்குத்) தேடியடையப்பெற்றோம்', எனா - என்று எண்ணி, உவகையின் நறவை - களிப்பாகிய மதுவை, உண்டு - பானஞ்செய்து, உணர்கிலார் - அறியாதவர்களாய் [தம்மையும் மறந்து],—தோள் எலாம் வளர - (வாடியிருந்த) தோள்கள் முழுதும் வளரும்படி [ஆனந்தத்தால் உடம்பு பூரித்து], ஆடினார் - நர்த்தனஞ் செய்தார்கள்; பாடினார் - கீதம் பாடினார்கள்; அங்கும் இங்கும் கலந்து ஓடினார் - கண்ட இடமெல்லாங் கூடிக்கூடி ஓடினார்கள்; (எ - று.)

வாலியின் உபத்திரவத்தினால் மெலிந்து கிடந்த சுக்கிரீவனைச் சேர்ந்த மற்றைவானரவீரர்கள் இராமபிரான் வல்லமையைக் கண்கூடாகக் கண்டதனால் 'இவன் வாலியையழிக்கும் ஆற்றலமைந்தவனே' என்று நிச்சயித்து மிக்க மகிழ்ச்சிகொண்டு தோள்கள்பூரிக்க மெய்ம்மறந்து ஆடுதலும் பாடுதலும் ஓடுதலும் செய்யலானார்களென்பதாம். ஆடுதல் முதலியன - உவகையின் மெய்ப்பாடுகள். ("ஓடுவார் விழுவா ருகந்தாலிப்பார், நாடுவார் நம்பிரானெங் குற்றானென்பார், பாடுவார்களும் பல்பறைகொட்டநின், றாடுவார்களுமாயிற் றாய்ப்பாடியே" என்றது இங்கு ஒருசார் ஒப்புநோக்கத்தக்கது.) மகிழ்ச்சியின் மிகுதியை விளக்குமாறு ஆடுதல் முதலிய பலதொழில்களை வானரவீரர் ஒருங்கேசெய்வதாகக் கூறியது - கூட்டவணி; இது - வடமொழியில் ஸமுச்சயாலங்கார மெனப்படும்.

உவகையை நறவாகக்கூறியது, மெய்ம்மறக்கும்படி செய்தலால். உவகையின்னறவு - உருவகவணி; னகரமெய் - விரித்தல். நறவு - 'நறா' என்ற குறியதன்கீழ் ஆகாரம் குறுகி உகரமேற்றது. வாலிகாலன் - வடமொழித் தொடர்.

[இராமபிரான் துந்துபியென்பவனது உடற்குவையைக் காணுதல்.]

௧௪௪. அண்டமும்மகிலமும்மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும்பசைவறந்திடினும்வான்
மண்டலந்தொடுவதம்மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனானுடலரோ.

(இ - ள்.) நெடும் பசை வறந்திடினும் - மிக்க ரக்தப்பசை வற்றிப்போயிருந்தாலும்,—அண்டமும் - அண்டகோளங்களும், அகிலமும் - (அதனிடத்துள்ள) சகல லோகங்களும், அடைய - ஒருசேர, அன்று - அந்நாளில் [பிரளயகாலத்தில்], பண்டு - முன்னே, அனலிடை - காலாக்நியிற் பட்டு, வெந்தன - வெந்தாற்போன்றதும், வான் மண்டலம் தொடுவது - ஆகாயமண்டலத்தை அளாவுவதும் (ஆகிய), கடல் அனான் துந்துபி உடல் - சமுத்திரம் போன்றவனான துந்துபியென்னும் அசுரனது உடம்பெலும்புக்குவையை, அ மலையின்மேல் - ருசியமூககிரியின்மேலே, மலை என - வேறொரு கிரியைப்போல, கண்டனன் - பார்த்தான், (ஸ்ரீராமபிரான்); (எ - று.)

'அண்டமும்...வெந்தன', 'அம்மலையின்மேல்மலையென' என்பவை - தன்மைத்தற்குறிப்பேற்றவணிகள். துந்துபியின் உலர்ந்த உடம்பெலும்புக்குவை, அண்டகோளங்களும் உலகங்கள்யாவும் பிரளயகாலத்தில் வெந்ததையொத்தும், மலையின்மேல் மலையிருப்பதைப்போன்றும் அந்தருசியமூகமலையின்மேல் விளங்குவதை, இராமபிரான் கண்டனனென்பதாம். உலர்ந்தபோதே இவ்வாறுதோன்றுவது பச்சையாயிருக்கும்போது எவ்வாறு தோன்றுமோவென்பார், 'பசைவறந்திடினும்' என்றார். இச்சொல் மத்திமதீபமாய் முன்னும் பின்னும் இயையும். பசை ஒட்டும்படியான ஈரம். துந்துபி இன்னானென்பது, மேல்விளங்கும். துந்துபிக்குக் கடலுவமை - ஆரவாரத்துக்கும், பெருமைக்கும், கருமைக்கும். அன - அன்ன: தொகுத்தல். அரோ-ஈற்றசை. 'அண்டமும்மகிலமும்மடைய'—மகரவொற்றுக்கள் - விரித்தல். (௧௪௪)

[இராமபிரான் 'இது என்ன?' என வினவுதல்.]

கசரு. தென்புலக்கிழவனூர்மயிடமோ திசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரமீ
னென்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவென
வன்புலப்பரியநீயுரைசெயாயெனவவன்.

இதுமுதற் பதினான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (ஸ்ரீராமன் அதனைக்கண்டு), 'இது—, தென் புலம் கிழவன் - தெற்குத்திக்குத் தலைவ [பாலக]னான யமன், ஊர் - வாகனமாக ஏறி நடத்துகின்ற, மயிடமோ - எருமைக்கடாவோ? திசையின் வாழ் - திக்குக்கள் தோறும் வாழ்கின்ற, வன்பு உலம் கரி - வலிமையையுடைய கற்றிரள் போன்ற யானை, மடிந்ததுகொலோ - இறந்துகிடந்ததுதானோ? மகரம் மீன் - மகரமென்னும் பெரிய மீன், என்பு உலப்பு உற - எலும்பு (தனியே) ஒழியும்படி, உலர்ந்ததுகொலோ - உலர்ந்துகிடந்ததுவோ?' என - என்று சங்கித்து, (சுக்கிரீவனைநோக்கி), 'அன்புஉலப்புஅரிய நீ - அன்புக்கு அளவிடுதலில்லாத நீ, உரைசெயாய் - சொல்வாய்', என - என்றுசொல்ல,— அவன் - சுக்கிரீவன்,—(எ - று.)

கிழவன் - உரியவன்; கிழமை - பகுதி: பெண்பால் - கிழத்தி; வயது முதிர்ந்தவனென்னும் பொருளில், கிழவி: பகுதி - கிழம். மயிடம் - மஹிஷம் என்னும் வடமொழியின் திரிபு. திசையின் வாழ் கரி - திக்கஜம். மகரம் - சுறாமீன்; இது, கடலில் வாழ்வது: யானையை விழுங்கவல்லது: மரக்கலத்தைக் கவிழ்ப்பது. 'அவன்' என்னுஞ் சுட்டுப்பெயர், மேற்படலத்திற் பதின்மூன்றாங்கவியில் 'உரைசெய்தான்' என்பதனோடு முடியும். இக்கவியில், துந்துபியின் உலர்ந்த எலும்புக்குவையின் பருமையை நோக்கிப் பலவகையாக விதர்ப்பித்துக் கூறியதனால், ஐயவணி. 'மகரமீ' என்றும் பாடமுண்டு. ஊர் மயிடம் - வினைத்தொகை. அன்புஉலப்பரிய நீ - அளவற்ற அன்பையுடைய நீயென்றபடி. (கசரு)

மராமரப்படலம் முற்றிற்று.



## மூன்றாவது

# துந்துபிப்படலம்.

வாலியினாற் கொல்லப்பட்டவனும், எருமைக்கடாவின் உருவம் பூண்டவனும், மாயாவியினது உடன்பிறந்தவனும் மயன் என்னும் அசுரராஜனது மகனுமாகிய துந்துபியென்பவனது உலர்ந்த எலும்புத்திரளைச் சுக்கிரீவனது விருப்பத்தின்படியே ஸ்ரீராமனது கட்டளையால் லக்ஷ்மணன் தன்கால் விரலால் தூக்கியெறிந்து பலயோசனை தூரங்களுக்கப்பால் போய்விழச்செய்த கதையைக் கூறும் படலம். இவ்வசுரனது முழக்கம் துந்துபி யென்னும் வாத்தியத்தினது பேரொலியை ஒத்தலால், இவனுக்கு இப்பெயர். துந்துபி - பேரிகை.

[இதுமுதற் பதின்மூன்று கவிகளால், சுக்கிரீவன் அத்துந்துபியெலும்பின் வரலாற்றை இராமபிரானிடங் கூறுகின்றான்.]

க. துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்மீ
திந்துவைத்தொடநிமிர்ந்தெழுமருப்பிணையினான்
மந்தரக்கிரியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருநிறத்தரியினைத்தேடுவான்.

(இ - ள்.) துந்துபி பெயர் உடை - துந்துபியென்கிற பெயரையுடைய, சுடு சினத்து - பகைவர்களை யழிக்கின்ற கோபத்தையுடைய, அவுணன் - அசுரன்,—மீது இந்துவை - ஆகாயத்திலே விளங்குகின்ற சந்திரனை, தொட - அளாவும்படி, நிமிர்ந்து எழும்-ஓங்கி வளர்ந்திருக்கின்ற, மருப்பு இணையினான் - இரண்டு கொம்புகளை யுடையவனாய்,—மந்தரம் கிரி என - மந்தரமலைபோல(ச் சென்று), பெரிய வல் மகரம் நீர் சிந்திட - பெரிய வலிய மீன்களையுடைய திருப்பாற்கடலின் நீர் சிந்தும்படி, கரு நிறத்து அரியினை - கருமை நிறத்தை யுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவை, தேடுவான் - தேடுபவனானான்; (எ - று.)

எருமைக்கடாவின் வடிவத்தைக் கொண்ட துந்துபியென்னும் அசுரன் இயற்கை வலிமையினாலும் வரபலத்தாலும் மிக்க செருக்குக்கொண்டு திருமாலோடு போர்புரியக்கருதி மந்தரமலைபோல (அத்திருமால் பள்ளிகொண்டுள்ள) பாற்கடலைக் கலக்கிக்கொண்டு சென்றான் என்பதாம். 'சந்திரமண்டலத்தை யளாவிய இணைமருப்புடையனாகி' என்றதனால், எருமைக்கடாவின் வடிவமெடுத்துச் சென்றா னென்பது பெறப்பட்டது. மந்தரக்கிரி - பாற்கடலிடையே விழுந்து கலக்குதற்கு உவமை, இனி, மந்தரமலைபோல உருவத்தாற் பெரியவ னென்றுமாம். அரி - ஹரி: (அசுரர் ராக்ஷசர் முதலிய பகைவர்களை) அழிப்பவன்; அன்றி, (அடியடைந்த அடியார்களது) அருவினைகளை ஒழித்தருள்பவன். இந்து - வடசொல். (க)

உ. அங்குவந்தரியெதிர்ந்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனக்கறைமிடற்றிறைவனே
யுங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, அரி - மகாவிஷ்ணு, வந்து எதிர்ந்து - எதிரில் வந்து, அமைதி என் - ('நீ இங்குவரக்) காரணம் என்ன?'' என்றலும் - என்று வினவியவளவில், (துந்துபி), 'பொங்கு வெம் செருவினில் - சீற்றங் கொண்டுசெய்கிற கொடிய யுத்தத்தில், பொருதி-(என்னுடன்) போர்செய்ய வருவாயாக', என்று—, உரை செய - சொல்ல,—(அப்பொழுது திருமால்), 'கங்கையின் கணவன் - கங்காநதிக்குத் தலைவனும், அ கறை மிடறு இறைவனே - (நஞ்சுண்டதனால்) கறுத்த கண்டத்தை யுடையவனுமான அப்பரம சிவனே, உங்கள் வெம் கதம் வலிக்கு - 'உன்போன்றவர்களது கொடிய உக்கிரமான பலத்துக்கு, ஒருவன் - (ஏற்றபடி போர் செய்யத்தக்க) ஒருவனாவான்', என்று—, உரைசெய்தான - சொன்னான்; (எ - று.)

திருமால் போர்செய்து கொல்லாமல் இவ்வாறு கூறியது, இவனுக்கு வாலியினால் வதை நேரவேண்டிய ஊழ்வினை உள்ளதனாலெனக. உருத்திர மூர்த்தியை எடுத்துக் கூறியது, ஸம்ஹாரக் கடவுளாதலால். பெண்பாலாகிய கங்கை சிவபிரானை நீங்காது சேர்ந்திருக்குந் தன்மையும், சிவபிரான் குமாரனையுண்டாக்குதற்கு வெளிப்படுத்திய அனற்பொறிகளைக் கங்காநதி ஏற்றுக் கொண்டிருந்தமையும், பெண்பாலாகிய கங்கையைச் சிவபிரான் அன்போடு முடிமேல் வைத்துக்கொண்டிருத்தலும் பற்றி, சிவபிரான் 'கங்கையின் கணவன்' எனப்பட்டான. ஏகாரம் - பிரிநிலை. இனி, இவ்விரண்டு கவிகளுக்கும் - அப்பெரியவன் மகரமீனகளையுடைய நீர் நிறைந்தபடி கருநிறத்தையுடைய ஸமுத்திரராஜனைத் தேடுவானானான் என்றும், கங்கைக்குக் கணவனான அச்சமுத்திரபுருஷன் எதிர்ப்பட்டு உரைசெய்தான் என்றும் பொருள் கொள்ளுதலும் தகும். இவ்வுரையில், 'அரி' என்று கடலுக்குப் பெயர் உண்மையும், 'கங்கையின கணவன்' எனகிற பெயர் நதிபதியாகிய கடலிறைவனுக்கு நன்குபொருந்துதலும் உணர்க. 'கஙகை தங்கணிசடை' என்றும் பாடமுண்டு. (௨)

௩. கடிதுசென்றவனுமக்கடவுடன்கயிலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்
னொடிதிநின்குறையெனென்றலுநுவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கென.

(இ - ள்.) அவனும் - அவ்வசுரனும், கடிது சென்று - விரைவாகப் போய், அ கடவுள்தன் - அந்த உருத்திரபகவானது, கயிலையை - கைலாசகிரியை, கொடிய கொம்பினில் - கொடுந்தன்மையையுடைய (தன்) கொம்புகளால், மடுத்து - முட்டிக்கொண்டு, எழுதலும் - பாய்ந்தவளவில்,—முன் குறுகி - (அச்சிவபெருமான்) எதிரில் வந்து, 'நின குறை என் - உனக்குவேண்டுவதென்ன? நொடிதி - சொல்,' என்றலும் - என்றுவினவியவுடன், (துந்துபி), 'எனக்கு—, முடிவு இல் வெம் செரு - முடிவில்லாத கொடிய யுத்தத்தை, அருள்செய்வான் - கொடுக்கும்பொருட்டு, முயல்க - பிரயத்தனப்படுவாயாக,' என - என்று, நுவன்றனன - சொன்னான்; (எ - று.)—அரோ - அசை.

னோடு யுத்தஞ்செய்ய வரவேண்டும்; அதுதான் என் காரியம்' என்று, துந்துபி தான்வந்த காரணத்தைத் தெரிவித்தனனென்பதாம். கயிலை - கைலாஸமென்ற வடசொல்லின் சிதைவு. முயல்கென - வியங்கோளின் அகரவீறு - தொகுத்தல். நுவன்றனன், நுவல் - பகுதி. (௩)

ச. மூலமேவீரமேமுடிஞயோடுபோ
ரேலுமேதேவர்பாலேகெனவேவினன்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாரல்போர்
வாலிபாலேகெனவானுளோர்வானுளான்.

(இ - ள்) (அப்பொழுது பரமசிவன்), 'மூலமே வீரமே மூடிஞயோடு - தலைமையும் வலிமையும் மிகுந்துள்ள உன்னுடனே, போர் ஏலுமே - (எனக்கு) யுத்தஞ்செய்ய இயலுமோ? [இயலாது]; தேவர்பால் ஏகு - (நீ) தேவர்களிடம் போ,' என - என்று, ஏவினன் - சொல்லியனுப்பினன்; (அவன் அங்ஙனமேசென்று தேவர்களைப்போர்க்குஅழைக்க), வான உளோர் வான் உளான் - அந்தச்சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்களுக்குத் தேவனான இந்திரன், (அவ்வசுரனை நோக்கி), 'சால நாள் போர் செய்வாய் ஆதி ஏல் - வெகுகாலம் யுத்தஞ்செய்ய விரும்புவாயானால், சாரல் - இங்குச்சேராதே: போர் வாலிபால் ஏகு - போர்க்குஉரிய வாலியினிடம் போ,' என - என்று.(எ று.)— இவ்வினையெச்சம், வருங்கவியில் 'விட' என்பதனோடு முடியும்.

துந்துபியென்ற அசுரன் சிவபிரானுள்ள கைலாசத்தைத் தன் கொம்பினால் முட்டிப்பாய்ந்தபொழுது அங்குநின்று வெளிப்பட்ட சிவபிரான் அவ்வசுரனை நோக்கி 'என்னொருவனால் மிக்க வலிமைபொருந்திய நின்னோடு செருச்செய்ய முடியாது: ஆதலால், நீ தேவலோகத்துச் சென்றால் அங்கு மிகப்பல தேவர்களுள்ளாராதலால், உனது எண்ணம் ஈடேறும்' என்று போக்குக்காட்ட, அங்கு அவன் செல்லவே, தேவேந்திரன் அவன்போர்புரியுமாறு வந்ததைக்கண்டு 'நின்னோடு போர்புரிய எமக்கு இயலாது; வாலியென்று பேர்படைத்த எனது மகனொருவன் எம்மினும் மிக்கவலிமைபெற்றவனாயுள்ளான்: அவனிடத்துப் போ' என்று விடையளித்தனனென்பதாம். மூலமே வீரமே, ஏகாரங்கள் - எண்ணுப்பொருளன. மூடிஞய் - வினையாலணையும்பெயர். இரண்டாமடியில், ஏ - எதிர்மறை. சாரல் - எதிர்மறை யேவல். 'வான உளான்' என்னுமிடத்திலுள்ள 'வான' என்ற சொல் - ''வான்தோய் குடிப்பிறந்தார்'' என்னுமிடத்திற் போல உயர்ச்சிப் பொருளதாம். வானுளோர் வானுளான - தேவலோகத்திலுள்ள தேவர்களுள் உயர்ந்துள்ளவனான இந்திரனென்ற பொருள் தந்தது. 'சாரல்போய்' என்ற பாடத்துக்கு - வாலி வாழும் மலைப்பக்கத்திற் சென்றெனக. (௪)

ரு. அன்னவன்விடவுவந்தவனும்வந்தரிகடம்
மன்னவன்வருகபோர்செய்கெனமலையினைச்
சின்னபின்னம்படுத்தெய்தலுஞ்சினவியெண்
முன்னவன்முன்னர்வந்தனையவன்முனைதலும்,

(இ - ள்.) அன்னவன் - அத்தேவேந்திரன், விட - அனுப்ப,—அவனும், துந்துபியும், உவந்து வந்து - மகிழ்ந்து (ருசியமூகத்துக்கு) வந்து, 'அரிகள் தம் மன்னவன் - குரங்குகளுக்கு அரசனே (வாலியே)! வருக போர் செய்க - வந்து யுத்தஞ்செய்வாயாக', என்று - என்று சொல்லிக்கொண்டு, மலையின் சின்னபின்னம் படுத்து எய்தலும் - அம்மலையைப் பலவாறு நாசப்படுத்திச் சேர்ந்தவளவில்,—என் முன்னவன் - எனது தமையன் (வாலி), சினவி - கோபித்து, முன்னர் வந்து - எதிரில் வந்து, அனையவன் - அவ்வசுரனோடு, முனைதலும் - போர்செய்தவளவில்,—(எ - று.)—'திரிவுறும் பொழுதின் உணர்ந்திலர்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

தேவேந்திரன் சொற்படியே வாலியினிடத்துச்சென்று துந்துபி போர்க் கழைக்க, அவனும் போர்க்கு வர இருவரும் பொருதன ரென்பதாம். அன்ன வன் - அகரச்சுட்டிடைச் சொல்லடியாப் பிறந்த பெயர். 'மன்னவன் - அண் மைவிளி. எய்தலும், எய்து - முதனிலை அன்னவன் விட அத்துந்துபியை அனுப்ப என்றல், நேர். வருக-முற்றெச்சம். சின்னபின்னம் - வடசொல். செய் கென்று - தொகுத்தல். (௫)

௬. இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரான்
மருவருந்தகையர்தானவர்கள்வானவர்கடாம்.

(இ - ள்.) இருவரும் - இரண்டுபேரும் [வாலியும் துந்துபியும்], திரி வுறும் பொழுதின் - (இடசாரி வலசாரியாகச்) சுழலும்போதில், (அவவேகத் தால்), இன்னவர்கள் என்று - இவர்கள் இன்னாரென்று, ஒருவரும் - எவ ரும், சிறிது உணர்ந்திலர்கள் - சற்றும் அறிந்தாரில்லை; எ உலகினும் - எந்த லோகத்திற் சென்றாலும், வெருவரும் தகைவு இலார் - அஞ்சுந் தன்மையில் லாத இவர்கள், விழுவர் - கீழே விழுவர்கள்; நின்று எழுவர் - (மீண்டும்) எழுந்து நிற்பர்கள்; (இவர்களை நோக்கி), தானவர்கள் - அசுரர்களும், வான வர்கள் - தேவர்களும், தாம்—, மருவு அருந் தகையர் - கிட்டவருவதற்கும் அரிய தன்மையையுடையவரானார்கள் [அஞ்சியோடினார்க ளென்றபடி].

'இவன்தான் வாலி, இவன்தான் துந்துபி' என்று ஒருவருங் காணமுடி யாதவாறு மிக்கவிரைவாகச் சாரிசுழல்வதும் விழுவதும் எழுவதுமாய் இவ் விருவரும் போர் செய்கையில், தேவாசுரர்களும் அவ்வுக்கிரத்தைக் கண்டு அஞ்சியோடினார்க ளென்பதாம். ஆல் - ஈற்றசை.

இதுமுதல் மூன்றுகவிகள், வாலி துந்துபியர் செய்த போரின் தன்மை யைக் கூறும். (௬)

எ. தீயெழுந்ததுவிசும்புறநெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயமன்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளுஞ்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால்.

(இ - ள்.) (இவர்கள்), அடி தலம் எடுத்திடுதலால் - கால்களைத் தூக்கி வைத்தலால், தீ - நெருப்பு, விசும்பு உற - ஆகாயத்தை அளாவ, எழுந்தது - கிளம்பிற்று; முழக்கு - அவ்வாரவாரம், நெடுந்திசை எலாம் - பெரிய திக்குகளெல்லாவற்றிலும், போய் எழுந்தது - சென்று பரவிற்று; புகை-அந்நெருப்பின் புகை, உடன எழுந்தது - உடனே பரவிற்று; தோயம் நல் புணரியும் - நீர்மயமான நல்ல கடலும், சுடர் தட கிரிகளும் - விளங்குகின்ற பெரிய மலைகளும், சாய் - (தம்தமது) நிலைமை, அழிந்தன - கெட்டன; (எ - று.)

தீ - அடிகள் படுகிற அதிர்ச்சியால் நிலத்திினின்று உண்டானது. கடலுங் கொதித்தது, மலைகளும் அசைந்தன என்றபடி. 'எழுந்தது புயல்' என்ற பாடத்துக்கு - பெருங்காற்று உண்டாயிற்று என்க. 'எழுந்தது' என்ற சொல் ஒரு பொருளிற் பலமுறை வந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. (எ)

அ. புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூ
ழயலும்வீழ்தூளியாலறிவருந்தகையவா
மயனின்மாமகனும்வாலியுமறத்துடலினு
ரியலுமாமதியமீராறும்வந்தெய்தவே.

(இ - ள்.) புயலும் - மேகங்களும், வானகமும் - ஆகாயமும், அ புணரியும் - பெருங்கடலும், புணரி சூழ் அயலும் - அக்கடல் சூழ்ந்துள்ள மற்றைய இடங்களும், வீழ் தூளியால் பரவி விழுகின்ற தூளிளால், அறிவு அருந்தகைய ஆ (க) - அறிவதற்கு அருமையான தன்மையை யுடையனவாம்படி,—மயனின் மா மகனும் - மயனென்னும் அசுரத்தச்சனது சிறந்த மகனாகிய துந்துபியும், வாலியும்—, இயலும் மா மதியம் ஈர் ஆறும வந்து எய்த - செல்லுகிற பெரிய மாதங்கள் பன்னிரண்டும் வந்து சேர [ஒருவருடகாலம்], மறத்து - வலிமையோடு, உடலினர் - போர்செய்தார்கள்; (எ - று.)

வாலியும் துந்துபியும் எங்குந் தூளிபரவ அதியுக்கிரமாகப் பொருகையில் ஒருவருடகாலங் கழிந்ததென்பதாம். அமாவாசைக்கு அமாவாசை ஒரு மாதமென்று சந்திர சம்பந்தத்தாற் கொள்ளுஞ் சாந்திரமானபக்ஷம்பற்றி, 'மதி' என்று மாதத்துக்குப் பெயர். (அ)

கூ. அற்றதாகியசெருப்புரிவுறும்மளவினிற்
கொற்றவாலியுமவன்குவவுதோள்வலியொடும்
பற்றியாசையினெடும்பணைமருப்பிணைபறித்
தெற்றினனவனும்வானிடியினின்றாறினன்.

(இ - ள்.) அற்றது ஆகிய - அப்படிப்பட்டதான, செரு - யுத்தத்தை, புரிவுறும் அளவினில்-செய்கின்றபொழுதில்,—கொற்றம் வாலியும் - வெற்றியையுடைய வாலியும், குவவு தோள் வலியொடும் - திரண்ட (தனது) தோள்களின் வலிமையுடனே, அவன் - அவ்வசுரனது, ஆசையின் நெடும் பணை மருப்பு இணை - திக்குக்களை அளாவி நீண்ட புருத்த இரண்டு கொம்புகளையும், பற்றி-பிடித்து, பறித்து - பிடுங்கி, எற்றினன் - (அவற்றைக்கொண்டே

அவனை) அடித்தான்; அவனும் - அவ்வசுரனும், வான இடியென,- மேகத்தி லெழுகின்ற இடிபோல, நின்று உரறினன் - கர்ச்சித்து நின்றான்; (எ - று.)

இருவரும் வெற்றிதோல்வியின்றி ஒருவருடகாலம் பொருதபின்பு,வாலி வலிமைமேம்பட்டவனாகி அவ்வசுரனது கொம்பைப் பிடுங்கி, அவற்றைக் கொண்டே அவனையடிக்க, அவன் பொறுக்கமுடியாமற் கதறினனென்பதாம். கொம்பை வேரோடு பறித்த நோவோடு அடித்ததுஞ் சேரவே, அசுரன் கதற லாயினனென்க. புரிவுறும்மராவினில் - விரித்தல். ஆசா - வடசொல். (கூ)

கO. தலையின்மேலடிபடக்கடிதுசாய்நெடிதுதா
ளுலையவாய்முழைதிறந்துதிரவாறொழுகமா
மலையின்மேலுருமிடித்தென்னவான்மண்ணொடுங்
குலையமாதிசைகளுஞ்செவிடுறக்குத்தினான்.

(இ - ள்.) தலையின்மேல் அடி பட-தலைமேலே அடிபடும்படியும், கடிது சாய் நெடிது தாள் உலைய - விரைவில் விழுந்து நீண்ட கால்கள் ஒடியவும், வாய் முழை திறந்து உதிரம் ஆறு ஒழுக - மலைக்குகை போன்ற வாய் திறந்து ரக்தநதி பெருகவும், வான் மண்ணொடும் குலைய - மேலுலகமும் பூமியும் நடுங் கவும், மா திசைகளும் செவிடு உற - பெரிய திக்குக்களெல்லாம் செவிடு படவும், மாமலையின்மேல் - பெரிய மலைமேல், உரும் இடித்து என்ன - இடியிடித் தாற்போல, குத்தினான் - (வாலி அசுரனைக்) குத்தினான்; (எ - று.)

அப்போது உண்டான அதிர்ச்சியினால் வானும்மண்ணுங் குலைந்து திசைக ளெல்லாம் செவிடாகுமாறு வாலியானவன் அவ்வசுரன் காலொடிந்து சாய வும், வாயைத் திறந்துகொண்டு இரத்தத்தைக் கக்கவும், மலையினுச்சியிலிடி விழுந்தாற்போல அவ்வசுரனது தலைமேல் வலியக்குத்தின னென்பதாம். சாய் - சாய்ந்து என்னும் வினையெச்சத்தின் விகாரம். தாள் - சாதியொருமை யாதலால், நெடிது எனனும் ஒருமையடைமொழியால் அடுக்கப்பட்டது. உதிரம் - ருதிரமென்னும் வடமொழியின் விகாரம். (கO)

கக. கவரியிங்கிதுவெனக்கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறுந்
துவரணிந்தனவெனப்பொசிதுதைந்தனதுணைப்
பவர்நெடும்பணைமதப்பகையின்வன்கரிகளே.

(இ - ள்.) இது கவரி என - '(இவ்வாலி கையிற்கொண்டிருக்கின்ற) இது சாமரமாம்' என்று (கண்டோர்) சொல்லும்படி, கரதலம்கொடு - கையி னால், 'வாலி துந்துபியை எடுத்து), திரித்து இவர்தலும் - சுழற்றிக்கொண்டு (தான்) சுழன்றவளவில்,—குருதி - (அத்துந்துபியின்) இரத்தம், பட்டு இசை தொறும்-(சுழற்றுகிற வேகத்தால்) துளித்துப் படும்போதெல்லாம்,—திசை தொறும் - எல்லாத்திக்குக்களிலும் உள்ளனவாகிய, துணை பவர் நெடும் பணை

மதம் பகையின் - ஒன்று ஒத்த நெருங்கிய நீண்ட தந்தங்களையும் மதத்தையும் பகைத்தன்மையையுமுடைய, வல் - வலிய, கரிகள் - (இக்கு) யானைகளெல்லாம், அவர் அணிந்தன என - சிவப்புப் பூசப்பட்டவைபோல, பொலி துதைந்தன - அவ்விரத்தநீர் பொருந்தப்பெற்றன ; (எ - று.)

கீழ்க்கூறியவாறு வாலி அத் துந்துபியின் தலைமேற் குத்தியபின்பு அவனைத் தன்கையாலெடுத்துக்கொண்டு சுழலவே, அவவேகத்தால் அவ்வசுரனது வாயினின்று பெருகுகின்ற இரத்தநீர் தெறித்துத் திக்கஜங்களின்மீது சிந்தி, அவைகள் செந்நிறப்பூச்சுப் பூசப்பட்டவைபோல விளங்கின வென்பதாம். **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** 'இங்கு' - அசை. கவரி - சமரீ என்னும் வடமொழியின் திரிபு ; இவ்வொருவகைப் பெண்மானின் பெயர் - அதன் வால்மயிராற் செய்யப்பட்ட ராஜசிங்நத்துக்கு ஆகுபெயர். இனி, கவரி இங்கு இது என என்பதற்கு - இது ஒரு வலிய எருமையென் றெண்ணி யெனப் பொருள் கொள்ளுதலு மொன்று. கவரி - சாமரமும். எருமையும் ; இங்கு எருமைக்கடாவென்க. சொற்சமத்காரமமைய, இங்கே 'கவரி' என்ற சொல்லைப் பிரயோகித்தார். எருமைக்கடா சாமரம்போலத் திரிக்கப்பட்டமை பற்றி கவரி கவரியாகு மென்க. (கக)

கஉ. புயல்கடந்திரவிதன்புகல்கடந்தயலுளோ
ரியலுமண்டிலமிகந்தெனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத்தவன்வலித்தெறியவன்
றுயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ.

(இ-ள்.) (பின்பு), அவன் - அவ்வாலி,—புயல் கடந்து - மேகமண்டலத்தைத் தாண்டி, இரவிதன் புகல் கடந்து - சூரியனிருக்கு மிடத்தையுந் தாண்டி, அயல் உளோர் இயலும் மண்டிலம் இகந்து - மற்றுமுள்ள தேவர்கள் பொருந்திவாழ்கின்ற மண்டலங்களையெல்லாம் கடந்து, எனையவும் தவிர - மற்றையெல்லா மேலிடங்களையும் கடக்கும்படி, வயிரம் வல் கரதலத்து மேல் வலித்து எறிய - உறுதியான வலிய கையினால் (அவவெருமைக் கடாவை எடுத்து) மேலே வலிமையோடுவீச,—அன்று - அப்பொழுது,—உயிரும் விண் படர - அதன் உயிர் மேலுலகத்துக்குச் செல்ல,—இ உடலும் - இந்த உடம்பும், இ பரிசு - இவ்விதமாக, (கீழேவிழுந்திட்டது); (எ - று.)

கீழ்க்கூறியவாறு வாலி தான் துந்துபியினது உடலை மிக்க உயரத்தில் எறிய, அதனால் அவ்வசுரன் உயிரொழிந்தனன் ; அவனது உடம்பும் இவவாறு இங்கே விழுந்திட்டது என்பதாம். பயனிலைவருவிக்கப்பட்டது 'இரவி தன் புவி' என்றும் பாடம். மண்டிலம் - வடசொற்றிரிபு. அரோ - ஈற்றசை. சூரியன் சந்திரன் நக்ஷத்திரங்கள் புதன் சுக்கிரன் அங்காரகன் பிருகஸ்பதி சனி ஸப்தரிஷிகள் துருவன் என இவர்களின் மண்டலங்கள் வானத்தில் முறையே ஒன்றன்மேலொன்றாக அமைந்துள்ளன வென்பதறிக. (கஉ)

கஉ. முட்டிவான் முகடுசென் றளவியிம் முடையுடற்
கட்டிமால் வரையைவந் துறுதலுங் கருணையா
னிட்டசா பமுமெனக் குதவுமிவ் வியல்பினிற்
பட்டவா முழுவதும் பரிவினு லுரைசெய்தான்.

(இ - ள்.) இ முடை உடல் கட்டி - முடைநாற்றமுடைய இவ்வுடற் பிண்டம், வான் முகடு - ஆகாயமுகட்டை, முட்டி - தாக்கி, சென்று அளவி - போய் அளாவி, மால் வரையை - பெரிய இவ் விருசியமூகமலையை, வந்து உறுதலும் - வந்துசேர்ந்தவளவில் [இம்மலையில் வந்து விழுந்தவளவில்],— கருணையான் - அருளையுடையவரான மதங்கமுனிவர், இட்ட - (அதற்காக) கொடுத்த, சாபமும் - சபிப்பும், எனக்கு உதவும் - எனக்கு இப்பொழுது உதவியாயிருக்கின்றது; இ இயல்பினின் - (என்று) இவ்விதமாக, பட்ட ஆறு முழுவதும் - உண்டான வரலாறு முழுவதையும், பரிவினுல் உரைசெய்தான் - அனபோடு சொன்னுன், (சுக்கிரீவன்); (எ - று)

வாலி வீசியெறிந்த துந்துபியினது உயிர்நீங்கிய உடல் ருசியமூகமலையில் மதங்கமுனிவர் இருந்து தவஞ்செய்கின்ற ஆச்சிரமத்தில் வந்து விழுந்து அதனை அசுத்தப்படுத்தியதனுல், அம்முனிவர் கடுங்கோபங்கொண்டு ஞானக் கண்ணுல் வாலி யெறிந்த தென்று அறிந்து 'அவன் இங்கு வருவானுயின் தலைவெடித்து இறக்கக்கடவன்' என்றும், 'அவனைச்சேர்ந்த மித்திரர்கள் இங்கே வந்தால் கல்வடிவமாகக்கடவர்' என்றுஞ் சபித்தார்; அச்சாபவுதவி யால் நான் இங்கே வாலிக்கு அஞ்சி ஓடிவந்து மறைந்திருந்தேன் என்று சுக்கிரீவன் அவவெலும்பின் வரலாற்றைக் கூறி, தான் அங்குவாழுங் காரணத் தையுந் தெரிவித்தன னென்பதாம். 'உறுதலும்' என்ற வரையிலும் கீழ்ச் செய்யுளின் அநுவாதம். முடை - ஒருவகைத் துர்க்கந்தம். (கஉ)

வேறு.

[இராமன் 'இந்துந்துபியினுடலை எடுத்தெறி' என்று இலக்குமணனுக்குக் கட்டளையிட, அவனும் அவ்வாறு செய்தல்.]

கச. கேட்டன னமலனுங் கிளந்த வாறெலாம்
வாட்டொழி லிளவலை யிதனை மைந்தநீ
யோட்டென வவன்கழல் விரலி னுந்தினுன்
மீட்டது விரிஞ்சனு டுற்று மீண்டதே.

(இ - ள்.) அமலனும் - ஸ்ரீராமனும், கிளந்த ஆறு எலாம் - (சுக்கிரீவன்) சொன்ன வரலாறு முழுவதையும், கேட்டனன - கேட்டு,—வாள் தொழில் இளவலை - வாளெடுத்துப் போர்செய்யுந் தொழிலையுடைய தம்பியை [லக்ஷ்மணனை] நோக்கி, 'மைந்த - வீரனே! இதனை - இவ்வுடம்பை, நீ—, ஓட்டு - அப்பால் தள்ளு', என - என்று கட்டளையிட,— அவன் - லக்ஷ்மணன், கழல்

விரலின் - (தன்) கால்விரலினால், உந்தினான் - தள்ளி யெறிந்தான்; அது - அவ்வெலும்புக்குவியல், மீட்டு - மறுபடியும், விரிஞ்சன நாடு உற்று - பிரம லோகத்தையடைந்து, மீண்டது - திரும்பி வந்து விழுந்தது; (எ - று.)

இராமபிரான் மராமரத்தை யெய்து தன்னுடைய வல்லமையை விளக்கியதனால், தம்பியினுடைய வல்லமையைச் சுக்கிரீவன முதலானோர்க்கு விளக்கக் கருதி, அத்துந்துபியினுடம்பெலும்பை யெடுத்தெறியுமாறு இலக்குமணனுக்குக் கட்டளையிட்டன னென்பதாம். முன்பு வாலி தூக்கியெறிந்த பொழுது ஒருமுறை பிரமலோகம்வரையிற சென்றுவந்ததனால் இங்கு 'மீட்டு' என்றார். வாலி தன்னுடைய பலம் விளங்குமாறு முன்பு துந்துபியினுடலைத் தூக்கி உயரவெறிந்தானாதலால், 'இலக்குமணனை வாலிபோன்ற பலமுடையவனே' என்று வானரர்கட்கு விளங்குமாறு அதனையே செய்யும்படி இலக்குமணனுக்குக் கட்டளையிட்டன னெனக.

இதுவும், மேற்கவியும் - கடவுள்வாழ்த்துப்போன்ற கலிவிருத்தங்கள். ()

[அதுகண்டு வானரர்மகிழ, சுக்கிரீவன் ஒன்றுகூறத் தொடங்குதல்.]

கரு. ஆயிடை யரிக்குல மசனி யஞ்சுற
வாய்திறந் தார்த்தது வள்ள லோங்கிய
தூயநற் சோலையி லிருந்த சூழல்வாய்
நாயக வுணர்த்துவ துண்டு நானென்ற.

இது முதல் நான்கு கவிகள் ஒரு தொடர்.

(இ - ள்) ஆயிடை - அப்பொழுது, அரி குலம் - குரங்குக் கூட்டமெல்லாம், அசனி அஞ்சுற - இடியும அச்சமடையும்படி, வாய்திறந்து ஆர்த்தது - வாய்விட்டு ஆரவாரித்தது; வள்ளல - ஸ்ரீராமபிரான, ஓங்கிய - உயர்ந்த, தூய - பரிசுத்தமான, நல் - அழகிய, சோலையில் பூஞ்சோலையிலே, இருந்த - வந்துதங்கியிருந்த, சூழல்வாய் - சமயததில, (சுக்கிரீவன ஸ்ரீராமனைநோக்கி), 'நாயக - தலைவனே! நான உணர்த்துவது - யான சொல்லவேணடுவது, உண்டு - (ஒன்று) உளது', என்ற - என்று, (எ - று.)—'என்ற' என்னும் வினையெச்சம்—மேற கலனகாண்படலத்தின மூன்றாங்கவியில் 'என்ற' என வரும் வினையெச்சத்தோடு முடிய, அது - அக்கவியில் 'காட்டினன்' என்னும் வினைமுற்றைக் கொண்டு முடியும்.

இவ்வாறு வானரர்களெல்லாம் தமது பலபராக்கிரமத்தைக் கண்டு களிக்குமாறு இராமபிரான தான் மராமரத்தையெய்தலும் தனது தம்பியைக் கொண்டு துந்துபியினுடலை உயரவெடுதது வீசுதலுஞ் செய்தபின்பு, தாம் முன்னிருந்த இடத்தே எல்லாரும் வந்துசேர, அப்போது சுக்கிரீவன ஒன்று கூறத தொடங்கின னெனபதாம். அதன விவரத்தை, அடுத்த படலத்திற் காண்க. லக்ஷ்மணனது திறமையையும் இப்பொழுது கண்டதனால், வானர

ஸைஸ்யம் மிகக்களித்தது. முதலடி - முற்றுமோனை. அஸ்தி - வடசொல். அ+ :ஆயிடை; சுட்டு நீண்ட இடத்து யகரம் தோன்றியது. (கரு)

துந்துபிப்படலம் முற்றிற்று.

இவ்வரலாறுகள் முதனூலிற் கூறியுள்ள விவரம்.—இராம லக்ஷ்மணர்க்கும் சுக்கிரீவனுக்கும் அநுமான் மூலமாக நட்புஉண்டானபின்பு, சுக்கிரீவன் தன் வருத்தத்திற்குக் காரணங்களைக் கூறக் கேட்ட இராமபிரான், 'நான் உனது பகைவனை எனது அம்புகளால் அழித்துவிடுகிறேன்; அஞ்சாதே' என்று அபயப்பிரதானஞ்செய்யவும் சுக்கிரீவன் மனந்தெளியாமல் வாலியினது போராற்றலைப்பற்றிப் பலபடியாகச்சொல்லி முடிவில் வாலி மராமரங்களில் ஒன்றைத்துளைத்ததையும் துந்துபியின் உடலெலும்பை ஒருயோஜனை தூரம் தூக்கியெறிந்ததையுங் குறித்துப் பாராட்டிக்கூறி, 'இவ்வாறு போராற்றலமைந்தவனை வெல்வது எப்படிமுடியுமோ?' என்றுசொல்ல, கேட்ட லக்ஷ்மணன் 'உனக்கு நம்புதலில்லையாயின் இப்போது என்னசெய்ய வேண்டுவது?' என்ன, சுக்கிரீவன் 'இராமபிரான் நீறுபூத்த நெருப்புப்போலத் தோன்றினும், வாலியின் வல்லமையை நினைக்கும்போது சங்கையுண்டாகின்றது: ஏழுமராமரத்தையுந் துளைத்து இந்தத்துந்துபியின் எலும்பையும் இருநூறு விற்கிடைதூரம் தூக்கியெறிந்தால் எனக்கு நம்புத லுண்டாகும்' என்று சொல்ல, சுக்கிரீவனுக்கு நம்புதலுண்டாகுமாறு அவனது வார்த்தைக்கு இயைந்து இராமபிரான் துந்துபியினுடம்பெலும்பைத் தனது காற்கட்டைவிரலினால் இலேசாகத் தூக்கிப் பத்துயோஜனைதூரத்திற்கு அப்பால் எறிய, அதனைக்கண்ட சுக்கிரீவன் 'முன்பு உலராதிருக்கையில் வாலி இதனைத் தூக்கி யெறிந்தான். இப்போது உலர்ந்துபோய்விட்ட இதனைத் தூக்கி யெறிதல் ஒரு சிறப்பன்று' என்றுகூற, பின்பு இராமபிரான் ஒருபாணத்தை ஏழுமராமரங்களின்மேலேவ, அது அம்மரங்களைத் துளைத்ததோடு ஏழுலகங்களையுந் துளைத்துச்சென்று மீண்டு தூணீரத்தையடையவே, அதனைக் கண்ட சுக்கிரீவன் இராமபிரானது திருவடிகளை வணங்கி அப்பிரானை வியந்து புகழ்ந்து முகமன் கூறினனென்பதாம்.

நான்காவது

## கலன்காண்படலம்.

சீதாபிராட்டியின் திருவாபரணங்களைச் சுக்கிரீவன் கொண்டுவந்து காட்ட அவற்றை இராமபிரான் பார்த்தருளிய செய்தியைக் கூறும் பாகம். கலம் - அணிகலம்; கலன் என ஈற்றுப்போலி.

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: சுக்கிரீவன் சிலகூறி, சீதையின் அணிகலமுடிப்பைக் காட்டுதல்.]

இவ்வழி யாமியைந் திருந்த தோரிடை
வெவ்வழி யிராவணன் கொணர மேலைநாட்
செவ்வழி நோக்கினின் றேவி யேகொலாங்
கவ்வையி னரற்றினள் கழிந்த சேணுளாள்.

(இ - ள்.) மேலை நாள் - முன்னொருநாளில், இ வழி - இந்த இடத்தில், யாம் - நாங்கள், இயைந்து இருந்தது ஓர் இடை - கூடியிருந்த சமயத்தில்,— வெவ் வழி இராவணன் கொணர - கொடியவழியில் ஒழுகுகின்றவனான இராவணன் எடுத்துக்கொண்டு வரும்போது, (அவனகையிலகப்பட்டுச் செல்கின்ற), நின் தேவியே கொல்ஆம் - உனது மனைவியான ஜாநகிப்பிராட்டியேதானோ? கழிந்த சேண் உளாள் - நெடுந்தூரத்திலுள்ளா ளொருத்தி, 'செவ்வழி நோக்கி - (இக்காடுமலைகளிலுள்ள) நேரானவழியைப் பார்த்து, கவ்வையின் அரற்றினள் - துன்பத்தோடு கதறினள் ; (எ - று.)

கழிந்தசேண் - மிக்கதூரம். கழிதல் - கடத்தல், மிகுதல். இனி, கழிந்த சேண் உளாள் - வானத்தில் நெடுந்தூரத்தி லிருந்தா ளென்றுங் கொள்ளலாம். மிகநெடுந்தூரத்திலுள்ளாளாகவே, அவளது திருமேனியமைதியாளாங் கண்டுகூற இயலவில்லை யென்றபடி. கவ்வை = கௌவை; துன்பம், பேரொலியுமாம். அரற்றுதல் - அழுதல், ஒலித்தல். வெவ்வழி - தீயொழுக்கவழி, துர்மார்க்கம். 'செவ்வழி நோக்கினம்' என்ற பாடத்துக்கு - செவ்வையாய்ப்பார்த்தோமென்று பொருள், 'நின்தேவியேகொலாம்' என்றது, அந்தப்பெண் சீதாதேவியாயிருக்கலாமென்று இப்பொழுது ஊகிக்கிறே னென்றபடி.

இதுமுதல் முப்பத்துமூன்று கவிகள் - இக்காண்டத்தின் கடவுள்வாழ்த்துப்போன்ற கலிவிருத்தங்கள். (௧)

௨. உழையரினுணாத்துவதுளம்தனுன்னியோ
குழைபொருகண்ணினள் குறித்ததோர்ந்தில
மழைபொருகண்ணிணைவாரியோடுதன்
பொதிந்திட்டனளயாங்களேற்றனம்.

(இ - ள்.) உழையரின் உணர்த்துவது உளது என்று உன்னியோ துதர்கள்போல (த் தானசென்ற திசையை இந்த ஆபரணங்கள் தனதுகணவனுக்

குத்) தெரிவிக்கக்கூடியது உண்டென்று எண்ணியேதானே, குழை பொரு கண்ணினாள் குறித்தது ஓர்ந்திலம் - குழையென்னுங் காதணியை மோது கின்ற [காதளவுநீண்ட] கண்களையுடையவளான அவள் கருதியதை அறி கின்றோமில்லை: தன் இழை பொதிந்து - தனது ஆபரணங்களை (க்கழற்றி) ஆடையில் முடிந்து, மழை பொரு கண் இணை வாரியோடு இட்டனள் - மழையையொத்த தனது கண்களிரண்டினின்றும் பெருகுகின்ற நீருடன் கீழேபோகட்டாள்; யாங்கள் ஏற்றனம் - (அக்கிழிமுடிப்பைத் தரையில் விழாதமுன்னமே) நாங்கள் கைகளில் ஏந்திக்கொண்டோம்; (எ - று.)

இனி, முதலடிக்கு - இந்த வாநரங்கள் நமது செய்தியை நமது கணவ னுக்குத் தூதர்போலத் தெரிவிக்கக்கூடியதுண்டென்று எண்ணியோ எனினு மாம். உழையர் - அருகிலுள்ளார், ஏவல்செய்வோர்; இங்குத் தூதர்மேலது. இன் ஒப்பு. கண்ணீர்சொரிந்துகொண்டே இழைமுடிப்பை இட்டனளென் பது, கருத்து. வாரியும் இழையுமாகிய இரண்டுபொருளுக்கு இட்டன ளென்ற வினையொன்றே பொருந்தச்சொன்னது, புணர்நிலையணி; இதனை வடநூலார் ஸஹோக்தியலங்கார மென்பர். 'ஓடு' என்ற மூன்றனுருபு, அவ் வணிபற்றி வந்தது. மேகம்போலக் குளிர்ச்சியாய்க் காண்பவர்க்கு மகிழ்ச்சி விளைக்குங் கண்க ளென்ற பொருளோடு மேகம்போல மிக்கநீரைச்சொரியுங் கண்க ளென்ற பொருளும் அமைய, 'மழைபொருகண்ணிணை' எனப்பட் டது; "தழைத்தபொன்முலைத் தடங்கடந் தருவிபோய்த் தாழப், புழைத்த போல நீர்நிரந்தரம் பொழிகின்ற பொலிவால், இழைக்கு நுண்ணிய மருங்கு லாள் இணைநெடுங்கண்கள், மழைக்கணென்பது காரணக்குறியென வகுத் தாள்" என்ற சுந்தரகாண்டச் செய்யுள் இங்கு நோக்கத்தக்கது. வாரி - வட சொல். இழை பொதிந்து - இழையை இழையிற்பொதிந்து என ஒருசொல் லையே ஆவருத்திசெய்துகொள்க; முதல் 'இழை' - ஆபரணம்: இரத்தினங்க ளிழைத்துச்செய்தது; இரண்டாவது 'இழை' - நூலின்பெயர் ஆடைக்குக் கருவியாகுபெயரென்க.

வனவாசம் புறப்படுகின்றபோது இராமபிரான் சொன்னபடி தனது ஆபரணங்களிற் பெரும்பாலனவற்றை அந்தணர்களுக்குத் தானஞ்செய்துவிட்டு வந்த சீதாதேவி பிறகு வனத்தில் அத்திரிமுனிவரது ஆச்சிரமத்தில் அவர்பத் தினியான அநசூயையால் அளிக்கப்பட்ட ஆபரணங்களை அதுமுதல் அணிந்து கொண்டிருந்தன ளென்பது, இங்கு அறியத்தக்கது. (உ)

ங. வைத்தனமிவ்வழிவள்ளனின்வயி
னுய்த்தனதந்தபோதுணர்தியாலெனக்
கைத்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டின
னெய்த்தலைப்பால்கலந்தனையநேயத்தான்.

(இ - ள்.) வள்ளல் - வரையாதருளுமியல்புடையவனே !—வைத்தனம்- (அங்ஙனம்ஏந்திய அணிகலமுடிப்பை அப்படியே பத்திரமாக) வைத்திருக்கி றோம்; இ வழி - இப்பொழுது [அல்லது இவவிடத்தில்], நின்வயின் -

உன்பக்கல் [உனது முன்னிலையில்], உய்த்தன தந்தபோது - (அந்த ஆபரணங்களைக்) கொணர்ந்து காட்டும்போது, உணர்தி - (நீ அவற்றைச் சீதையினுடையனவா? அல்லனவா? என்று) அறிவாய், என - என்றுசொல்லி,— நெய்த்தலை பால் கலந்து அனைய நேயத்தான் - நெய்யோடு பால் சேர்ந்தாற் போன்ற [மிகஇனிய] நன்புநிலையையுடையவனான சுக்கிரீவன், கைத்தலத்து அன்னவை கொணர்ந்து காட்டினன் - கையில் அந்த ஆபரணங்களை எடுத்துக்கொண்டுவந்து (இராமபிரானுக்குக்) காட்டினான்; (எ-று) ஆல் - ஈற்றசை.

உய்த்தன - கொணரப்பட்டவையாக; பலவின்பால் முற்றெச்சம். நெய்த்தலை - நெய்யினிடத்து; தலை - ஏழனுருபு. (௩)

[அந்த ஆபரணங்களைநோக்கி இராமபிரான் அடைந்த நிலைமைகளை இதுமுதல் ஐந்துகவிகளிற் கூறுகின்றார்.]

௪. தெரிவுறநோக்கினன்றெரிவைமெய்யணி
யெரிகனலெய்திபமெழுகின்யாக்கைபோ
யுருகினனென்கிலமுயிருக்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம்.

(இ - ள்.) தெரிவை மெய் அணி - (சுக்கிரீவனாற் காட்டப்பட்ட) சீதாதேவியின் திருமேனியாபரணங்களை, தெரிவு உற நோக்கினன் - (இராமபிரான்) நன்றாகப்பார்த்தருளினான்; (அங்ஙனம் பார்த்தவளவில்), எரி கனல் எய்திய மெழுகின் யாக்கை போய் உருகினன் என்கிலம் - எரிகின்ற நெருப்பிற் சேர்ந்த மெழுகுபோல உடம்பு நெகிழ்ந்து உருகினானென்று சொல்லவல்லோமு மல்லோம்; உயிருக்கு ஊற்றம் ஆய் பருகினன் என்கிலம் - தனது உயிர்க்கு வலிமையாக (அந்த அணிகலங்களாகிய அமிருதத்தைக்) குடித்தானென்று சொல்லவல்லோமுமல்லோம்; பகர்வது என்கொல் ஆம் - (அப்பொழுது இராமனடைந்த நிலையைப்பற்றி மற்றும்யாம்) சொல்லக்கூடியது யாதுஉளது? (எ - று.)

இராமபிரான் அந்த அணிகலங்களை நன்றாகப் பார்த்தமாத்திரத்தில் தனது தேவியாருடைய திருவாபரணங்களென்று தெரிந்துகொண்டதனால் தீயிலிட்ட மெழுகுபோல உடல்கரைந்து உருகியதுமன்றி அவற்றைத் தனது ஜீவநாதாரமாகவுங் கொண்டானென்று கருத்து உணர்க. இருவகையினுள் ஒன்றைத்துணிந்து கூறமாட்டாமை தோன்ற, இரண்டிடத்தும் 'என்கிலம்' என்றார். இங்கு, எதிர்மறை, விகற்பம்பற்றியது. அவற்றை நோக்கியது தனது உயிரின் தளர்ச்சி யொழியுமாறு அமிருதத்தைப் பருகினாற்போன்றதென்றது, 'உயிருக்கு ஊற்றமாய்ப்பருகினன்' என்றதனால் விளங்கியது. ஊற்றம் - வலிமை, பற்றுக்கோடு, ஊன்றுகோல், அசைவின்றி நிற்றல் ஆதாரம். ஆய் = ஆக, எச்சத்திரிபு. போய் - உறுதிகெட்டு; எனவே, நெகிழ்ந்து என்க. போய்உருகினன் - உருகிப்போயினான என விகுதி பிரித்துக்கூட்டலுமாம். 'மெழுகின்யாக்கைபோல்' என்ற பாடத்துக்கு - மெழுகினாற் செய்யப்பட்டதொரு வடிவம் [பாவை] போலவென்று பொருளாம். தெரிவை -

தெரிவைப்பருவமுடைய பெண். இருபத்தாறுவது வயதுமுதல் முப்பத்தோராவதுவயது வரையிலும் மகளிர்க்குத் தெரிவைப்பருவமாம். இராவணன் சீதையை யெடுத்துக்கொண்டு செல்கின்றபோது அப்பிராட்டிக்கு முப்பத்தொருபிராயம் நிரம்பி முப்பத்திரண்டாவது பிராயம் தொடங்கிய தென்பது, இங்கு உணரத்தக்கது. (ச)

ரு. நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
வல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே.

(இ - ள்.) நங்கை கொங்கையை புல்கிய பூணும் - அப்பிராட்டியினது தனங்களின்மீது அணியப்பட்டு அவற்றைச்சார்ந்திருந்த ஆபரணங்கள், அ கொங்கை போன்றன - (இராமபிரானுக்கு) அவ்வணிகலன்களையணிந்திருந்த தனங்களாகவே தோன்றின; அல்குலின் அணிகளும் அல்குல் ஆயின—; பல் கலன் பிறவும் அ படிவம் ஆன - மற்றையவயவங்களில் அணியப்பட்ட பல ஆபரணங்களும் அந்தந்த அவயவங்களாகவே தோன்றின; இனி நல்குவது என் - மற்றும் (அந்த ஆபரணங்கள் அப்பெருமானுக்குச்) செய்யக்கூடியது யாது? (எ - று.)

ஆரம் மேகலை முதலிய ஆபரணங்களைப் பார்த்தபோது அவற்றையணிந்த ஜாநகிப்பிராட்டியின் திருமேனி யவயவங்களை நேரிற் கண்டாற்போல இராமபிரான் சிறிது ஆறுதலடைந்தன னென்பது தாற்பரியம். நல்குதல் - உதவுதல். நங்கை - மகளிரிற்சிறந்தவள் ("நாரீணும் உத்தமா"): பெண்பாற் சிறப்புப்பெயர். முதலிரண்டு வாக்கியங்களில் உம்மைகள் - ஒன்றை ஒன்று நோக்கி முறையே எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சமாம். மூன்றாம் வாக்கியத்தில் உம்மை - இறந்தது தழுவிய எச்சத்தோடு முற்றுப்பொருளுமுடையது. படிவம் - இங்கு உடலுறுப்பு. (ரு)

சு. விட்டபேருணர்வினைவிளித்தவென்கெனோ
வட்டனவுயிரையவ்வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக்குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோயாதுசொல்லுகேன்.

(இ - ள்.) அ அணிகள் - அந்தஆபரணங்கள், விட்ட பேர் உணர்வினை விளித்த என்கெனோ - நீங்கிப்போயிருந்த (இராமபிரானது) சிறந்த அறிவை அழைத்தனவென்று சொல்வேனோ? உயிரை அட்டன என்கெனோ - (அவனது) உயிரைக் கொன்றன வென்று சொல்வேனோ? கொட்டின சாந்து என குளிர்ந்த என்கெனோ - மேலே நிரம்பச் சொரிந்த சந்தனம்போல (அப்பெருமானுக்குக்) குளிர்ச்சிசெய்தன வென்று சொல்வேனோ? சுட்டன என்கெனோ - (அப்பிரானுக்குத்) தாபமளித்தன வென்று சொல்வேனோ? யாது சொல்லுகேன் - என்னவென்று சொல்லுவேன்! (எ - று.)

பிரிந்திருக்கின்ற சமயத்தில் அப்பிரிந்த பொருளை நினைப்பூட்டுகின்ற பொருள்கள்யாவும் ஒருபால் மகிழ்ச்சியையும் ஒருபால் மிக்கவருத்தத்தையும் விளைத்தல் இயல்பாதலால், இங்ஙனம் மாறிமாறிக்கூறினர். முதலடி மூன்று மடிகளை, பிராட்டியின் அணிகலங்கள் அவளை இராவணன் எடுத்துக்கொண்டு போன திசையைத் தெரிவித்தலால், இராமபிரானுக்கு ஆறுதலை விளைத்தல் கருதிக் கூறியனவாகவுங் கொள்ளலாம். இராமபிரானுக்கு இயல்பாகவுள்ள பேரறிவு பிராட்டியைப்பிரிந்ததனாலாகிய வருத்தத்தால் நீங்கியிருந்தது அவளது அணிகலங்களைக் கண்டதனால் மீண்டு வரலாயிற்றென்பது - முதல் வாக்கியத்தின் கருத்தும், அவ்வணிகலங்கள் அவளது மிகஅழகிய அவயவங்களை நினைப்பூட்டிப் பிரிவுத்துயரை மிகுவித்து அப்பெருமானுக்கு மரண வேதனையைச் செய்வனவு மாயின வென்பது - இரண்டாம் வாக்கியத்தின் கருத்தும், அவை அவனது விரகதாபத்தை ஒருபால் தணிவித்தனவென்பது - மூன்றும் வாக்கியத்தின் கருத்தும், அத்தாபத்தை மிகுவிப்பனவு மாயின வென்பது - நான்காம் வாக்கியத்தின் கருத்துமாம். இன்னபடியென்று ஒன்றைத் துணிந்துகூறமாட்டாமையின், இங்ஙனம் விகற்பித்து, 'யாதுசொல்லுகேன்' எனலாயிற்று. அட்டன, அடு - பகுதி. அடுதல் - அழித்தல்; இங்கு, மிகவும் வருத்துதல்: சுடுதல் - வெதுப்புதல். விளித்த, அட்டன, குளிர்ந்த, சுட்டன-பலவின்பால் முற்றுக்கள். இச்செய்யுளிலுள்ள தன்மையொருமை முற்று ஐந்திலும், ககரவொற்று - எதிர்கால விடைநிலை. ஓகாரங்கள் - விகற்பப்பொருளன. (சு)

எ. மோந்திடநறுமலரானமொய்ம்பினி
லேந்திடவுத்தரியத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலாற்
பூந்துகிலாயவப்பூவைபூண்களே.

(இ - ள்.) அ பூவை பூண்கள் - (கொஞ்சி இன்சொற்கள் பேசுதலில்) நாகணவாய்ப்பறவைபோன்றவளான அப்பிராட்டியினது ஆபரணங்கள்,— மோந்திட நறு மலர் ஆன - (இராமபிரான்) மோந்துபார்த்தற்கு நறுமணம் வீசும் மலர்களாயின: மொய்ம்பினில் ஏந்திட உத்தரியத்தை ஏய்ந்தன - (அப் பெருமான்) தோளில் தரிக்க உத்தரீயம் போலாயின ; ஒளி தழுவ சாந்தமும் ஆய்-(அப்பெருமான்மீது) ஒளிபரவுதலால் (அவனுக்குப்பூசுஞ்) சந்தனமும் போன்று, போர்த்தலால் பூ துகில் ஆய - (அவ்வொளியினால் அவனுடம்பை) மூடுதலால் (அவனுக்கு) அழகிய மேற்போர்வையும் போன்றன ; (எ - று.)

இலக்குமியின் அவதாரமான உத்தமஜாதி ஸ்திரீயாகிய சீதாதேவியினது இயற்கை நறுமணமுடைய திருமேனியின் சம்பந்தத்தால் பரிமளம் பெற்ற அந்த ஆபரணங்கள் இராமபிரான ஆதரத்தோடு அடிக்கடி மோந்து பார்க்குந்தோறும் மலர்கள்போல நறுமணம்வீசி இனிமைசெய்தனவென்பார் 'மோந்திட நறுமலரான' என்றும், மற்றும் அவற்றை இராமபிரான் ஆதரத்தால் மேலாடையைப்போலத் தோளில் வைத்துக்கொண்டு கொண்டாடினனென்பார் 'ஏந்திட வுத்தரியத்தையேய்ந்தன' என்றும், அவன் அவற்றைத்

கைகளிற்கொண்டு மோந்து பாராட்டுமிடத்து அவற்றின் ஒளி அவனுடைய மார்பிலும் தோள்களிலும் பாவுதலாற் சந்தனம் பூசினாற்போ லிருந்த தென்பார் 'ஒளிதழுவச் சாந்தமுமாய்' என்றும், அவற்றை அவன் தோள்களில் வைத்துக்கொண்டபோது அவற்றின் ஒளி அவனுடம்பு முழுவதும் பாவுதலால் ஒரு போர்வை போர்த்தாற் போலாயிற்றென்பார், '(ஒளி) போர்த்தலாற் பூந்துகிலாய' என்றுங் கூறினார். 'ஒளி' என்றதை, 'தழுவ', 'போர்த்தலால்' என்ற இரண்டனோடுந் தனித்தனி கூட்டுக. ஆன, ஆய - முற்றுக்கள். உத்தரீயம் - வடசொல். பூந்துகில் - மலர்போல மெல்லிய துகி லென்றும், மலர் போலச் சித்திரவேலை செய்யப்பட்ட துகி லென்றுங் கொள்ளலாம். துகில - ஆடை; இங்கே, மேற்போர்வை. பூவை - உவமையாகுபெயர். (எ)

அ. ஈர்த்தனசெங்கணீர்வெள்ளம்யாவையும்
போர்த்தனமயிர்ப்புறம்புளகம்பொங்குதோள
வேர்த்தனவென்கெனோவெதும்பினானென்கோ
தீர்த்தனையவ்வழியாதுசெப்புகேன்.

(இ - ள்.) செம் கண் நீர் வெள்ளம் - (இராமபிரானது) சிவந்த இரண்டு கண்களினின்றும் (அப்பொழுது பெருகிய) நீர்வெள்ளங்கள், யாவையும் ஈர்த்தன - (அங்குள்ள) எல்லாப்பொருள்களையும் இழுத்துக்கொண்டு சென்றன; மயிர் புளகம் - மயிர்ச்சிலிர்ப்புக்கள், புறம் போர்த்தன - (அப்பெருமானது) திருமேனி முழுவதையும் மூடின; பொங்கு தோள் வேர்த்தன என்கெனோ - பூரிக்கின்ற (அவனது) திருத்தோள்கள் வேர்வை யடைந்தன வென்று சொல்வேனோ? வெதும்பினான் என்கோ - (வேர்த்தல் கொள்ளாது) தாபமடைந்தா னென்று சொல்வேனோ? அவ்வழி தீர்த்தனை யாது செப்புகேன் - அப்பொழுது பரிசுத்தமூர்த்தியான இராமபிரான் அடைந்த நிலையைக் குறித்து என்ன சொல்வேன்! (எ - று)

வேர்த்தல் - தாபத்தின் முதிர்ந்த நிலை. வெதும்புதல் - அதன் முதிராத நிலை எனக்கொண்டு வேறுபடுத்தி, 'தோள்வேர்த்தன வென்கெனோ வெதும்பினானென்கோ' வென்று விகற்பித்துக் கூறலாயிற்றெனக. 'தீர்த்தன்' என்றது, இலக்கணையாய் அவனடைந்த நிலையின்மேல் நின்றது. செங்கண் - உத்தமவிலக்கணமாகிய செவ்வரி பரந்து செந்தாமரை மலர்போன்றகண்; சோகத்தாற் கலங்கியும் கண்சிவந்தன. புளகம், தீர்த்தன் - வடசொற்கள். 'வேர்த்தனவென்கெனோ' என்ற பாடத்திற்கு, தோள்வேர்த்தனன் என பதுஞ் - சினையின் தன்மையை முதலின்மேலேற்றிக்கூறிய முடிபாம். மயிர்ப் புளகம் புறம்போர்த்தலும் தோள் பொங்குதலும் மகிழ்ச்சியினாலும், வேர்த்தலும் வெதும்புதலும் சோகத்தாலும், கண்ணீர்வெள்ளம் பெருகுதல் இரண்டினாலும் உண்டாகக்கூடிய மெய்ப்பாடுகளாதலால், அவையனைத்தையும் அப்பொழுது ஒருங்குபெற்ற இராமபிரானது நிலைமை மகிழ்ச்சி அல்லது சோகம் என இரண்டிலொன்று துணிந்து சொல்லக்கூடாதபடி யிருந்ததென்பார் 'யாது செப்புகேன்' என்றாரென்றுணர்க. இனி, கண்ணீர் வெள்ளம் பெருகுதல் மயிர்ப்புளகம் போர்த்தல் தோள் பொங்குதல் தோள் வேர்த்தல்

என்னு மிவற்றை யடைந்தவன் பின்பு தாபமே தலையெடுத்து நின்றானென் றற்கு, இங்ஙனம் விகற்பித்துக் கூறினரென்றல் நேர். இவ்வுரை அடுத்த கவியில் 'வெம்மை மீக்கொள' என்பதற்கு ஏற்றலுங் காண்க. முதலடி - உயர்வுநவிற்சியணி. (அ)

[பெருமாள் மூர்ச்சித்துச்சாய அருகிலிருந்த சுக்கிரீவன் தாங்கிக்கொள்ளுதல்.]

கூ. விடம்பரந்தனையதோர்வெம்மைமீக்கொள
நெடும்பொழுதுணர்விளேடுயிர்ப்புநீங்கிய
தடம்பெருங்கண்ணனைத்தாங்கினான்றன
துடம்பினிற்செறிமயிர்சுறுக்கென்றேறவே.

(இ - ள்.) விடம் பரந்து அனையது ஓர் வெம்மை மீக்கொள (உடம்பில்) விஷம் பரவினாற்போன்றதொரு தாபம் அதிகப்பட, நெடும் பொழுது உணர் விளேடு உயிர்ப்பு நீங்கிய - வெகுநேரம் அறிவும் சுவாசமும் நீங்கிக் கீழேவிழு பவனான, தட பெருங் கண்ணனை - மிகப் பெரியகண்களை யுடையவனான இராமபிரானை, (சுக்கிரீவன்), தனது உடம்பினில் செறி மயிர் சுறுக்கென்று ஏற தாங்கினான் - தன்னுடைய மார்பிற் பொருந்திய மயிர்கள் சுறுக்கென்று (அந்த மெல்லிய திருமேனியிற்) படுமாறு (கீழேவிழாதபடி) தாங்கிக் கொண்டான்; (எ - று.)

வாநரவீரனான சுக்கிரீவனது உடம்பிலுள்ள மயிர்களின் வன்மையும் இராமபிரானது மலர்போல் மிருதுவான திருமேனியின் மென்மையும் பற்றி, 'தனதுடம்பினிற் செறிமயிர்சுறுக்கெனறேற' என்றார். முதலடியில் உவமை யணியும், மற்றையடிகளில் தன்மைநவிற்சியணியுங் காண்க இவையிரண டுஞ் சேர்தலால், சேர்வையணி. உணர்வு - பிரஜ்ஞை. உயிர்ப்பு - மூச்சு. தட பெரு - ஒருபொருட்பன்மொழி. "கரியவாகிப் படைபரந்து மிளிர்ந்து செவவரியோடி நீண்ட அப்பெரியவாய கண்கள்" ஆதலால், 'தடம்பெருங் கண்' எனப்பட்டன. சுறுக்கெனல் - கூர்மைக்குறிப்பு. (கூ)

[சுக்கிரீவனது அநுதாபவார்த்தை.]

க0. தாங்கினனிருத்தியத்துயரந்தாங்கலா
தேங்கியநெஞ்சினனிரங்கிவிம்முவான்
வீங்கியதோளினாய்வினையினேனுயிர்
வாங்கினெனிவ்வணிவருவித்தேனென.

(இ - ள்.) தாங்கினன் இருத்தி - (அவவாறு சுக்கிரீவன் இராமபிரானைத் தனது மார்பில்) தாங்கிக்கொண்டு உட்காரவைத்து, அ துயரம் தாங்காது ஏங்கிய நெஞ்சினன் - (அப்பெருமானுக்கு நேர்ந்த) அத்துன்பத்தைக் கண்டு தான் பொறுத்திருக்கமாட்டாமல் மெலிந்த மனத்தையுடையவனாய், இரங்கி விம்முவான் - அநுதாபங்கொணடு சோபிப்பவனாகி, (அப்பெருமானை நோக்கி), 'வீங்கியதோளினாய்-பருத்த தோள்களை யுடையவனே! வினையினேன்-தீவினை

புடையேனை யான், இ அணி வருவித்தேன உயிர் வாங்கினென் - இந்த ஆபரணங்களைக் கொண்டுவந்து உனது உயிரை ஒழியச் செய்தேன,' என - என்று சொல்லிப் புலம்பி, (எ - று.)—(கஎ) 'என்றான்' என இதுமுதல் எட்டுச்செய்யுள்கள் குளகமெனக. அன்றி, என விம்முவான் என இச்செய்யுளிலேயே முடித்து, என்றுசொல்லிப் புலம்புபவனானென்றலுமாம்.

தான் பிராட்டியினணிகலங்களைக் கொணர்ந்து காட்டியமை இராமபிரானுக்கு இவ்வளவு வேதனையை யுண்டாக்கியதென்பதை உட்கொண்டு அதற்குக் காரணமான தன்னைத் தீவினையுடையேனென்று கழிவிரக்கத்தோடு வெறுப்பவனானன. வினையினேன - பாவியேன். (கo)

[இதுமுதல் ஏழுகவிகள் - ஒருதொடர்: சுக்கிரீவன் இராமபிரானைத் தேற்றுமாறு கூறிய வார்த்தைகள்.]

கக. அயனுடையண்டகதினப்புறத்தையு
மயர்வறநாடிபென்வலியுங்காட்டியுன்
னுயர்புகழ்த்தேவியையுதவற்பாலனாற்
றுயருழந்தயர்தியோசுருதிநூல்வலாய்.

(இ - ள்.) சுருதி நூல் வலாய - வேதசாஸ்திரங்களில் வல்லவனே!— அயனுடை அண்டத்தின அப்புறததையும்-இந்தப் பிரமாண்டத்திறகு அப்பாலுள்ள இடத்தையும், மயர்வு அற நாடி—சந்தேகமில்லாதபடி தேடிப்பார்த்து, என் வலியும் காட்டி - எனது வலிமையையும் (இராவணன முதலியோர்களைவர்க்கும்) தெரியச்செய்து, உன உயர் புகழ் தேவியை உதவல் பாலன் - உனது சிறந்த கீர்த்தியையுடைய மனைவியை (உனக்குக) கொணர்ந்து கொடுக்கக்கடவேன; (ஆகவே), துயர உழந்து அயர்தியோ - நீ துன்பமனுபவித்து மூர்ச்சிக்கக கடவையோ? (எ - று.)—ஆல் - அசை.

இராவணன ஜாநகியை இந்த அண்டத்திற்கப்பாலொளித்துவைத்திருந்தாலும் அங்குஞ் சென்று நன்றாகததேடி அப்பிராட்டி யிருக்குமிடத்தைக் கண்டறிந்து எனது ஆற்றல் காட்டிப் பொருது இராவணனைத் தொலைத்து அத் தேவியை மீட்டுக் கொண்டுவந்து நின்னிடம் சமாப்பிக்கத் தக்கவனாய் யான் இருக்க, நீ இவவாறு சோகிப்பானேனென்று சுக்கிரீவன இராமபிரானை நோக்கிக் கூறினனென்பதாம். அண்டத்திற்கு அப்புறத்தைக் கூறவே, அதற்கு உட்பட்ட உலகங்களிற் சென்று தேடிக் கண்டுபிடித்தல் கூறவேண்டாதாயிற்று.

அயனுடை அண்டம் - பிரமனைத் தனது அகத்திலுடையதாய் அவனது ஆட்சிக்கு உட்பட்ட அண்டம. மயாவு - மயககம்; இனி, மயாவு அற - (யான்) சோர்வடையாமல் எனினுமாம். உயாவுபுகழ்த்தேவி—திருக்குறளில் வாழ்க்கைத் துணைநலத்தில் "தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்றதையும், அங்குப் பரிமேலழகர் 'தனமாட்டுப் புகழாவது - வாழும ஊர்தற்பால் தனனைப்புகழ்வது' என்றதையுங் காண்க. பாலன - பானமையென

னும் பண்பினடியாப் பிறந்த தன்மையொருமைக் குறிப்புமுற்று. உழத்தல் - வருந்துதல். சுருதி நூல் - உம்மைத்தொகை; சுருதியாகிய நூலெனப் பண்புத் தொகையுமாம். (கக)

கஉ. திருமகளனையவத்தெய்வக்கற்பினாள்
வெருவரச்செய்துளவெய்யவன்புய
மிருபதுமீரைந்துதலையுமேவினுன்
ஞெருகணைக்காற்றுமோவுலகமேழுமே.

(இ-ள்.) திருமகள் அனைய - இலக்குமியைப்போன்ற, அ தெய்வம் கற்பினாள் - தெய்வத்தன்மையுள்ள பதிவிரதா தருமத்தை யுடையவளான அந்த ஜாநகிப்பிராட்டி, வெருவர - அஞ்சும்படி, செய்து உள - (அவள்பக்கல் தீங்கு) செய்துள்ள, வெய்யவன் - கொடியவனான இராவணனுடைய, புயம் இருபதும் - இருபது கைகளும், ஈர் ஐந்து தலையும் - பத்துத் தலைகளும்,— ஏவின் - எய்து செலுத்துமிடத்து, உன் ஒரு கணைக்கு ஆற்றுமோ - உனது ஓர் அம்புக்குத்தான் இலக்குப்போதுமோ? உலகம் ஏழுமே - (இவை நிற்க) ஏழுலகங்களும் தாம், (ஏவின் உன் ஒரு கணைக்கு ஆற்றுமோ?) - எய்து செலுத்துமிடத்து உனது ஓர் அம்புக்குத்தான் இலக்குப்போதுமோ? (எ-று.) —ஆற்றுமோ - ஆற்று மென்றபடி.

'ஏவின் உன் ஒரு கணைக்கு ஆற்றுமோ' என்றது, ஆவருத்தி செய்து கொள்ளப்பட்டது. இது வேண்டாதபடி 'உலகம் போதுமோ' என்றும், 'தலையுநிற்கவுன்' என்றும் பாடங்கள் காணப்படுகின்றன. அழகும் உத்தம விலக்கண நிறைவும் பெருமாளுக்கு வாழ்க்கைப்படுதலும் பற்றி, 'திருமக ளனைய' என்றான். கற்பிற்குத் தெய்வத்தன்மை - "தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை," "கொண்டான், குறிப்பறிவாள் பெண்டாட்டி......பெய்யெனப் பெய்யு மழை" எனக் காண்க. இனி, தெய்வக்கற்பினாள் என்பதற்கு - தெய்வவடிவமாம் [நக்ஷத்ர ரூபமாய்] நிற்கும் அருந்ததி போலுங் கற்பினையுடையாளென்று உரைத்தலு மொன்று. தனது ஆற்றலைக் கீழ்க்கூறிய சுக்கிரீவன் இவ்வாறு பெருமா ளுடைய ஆற்றலை எடுத்துக்கூறினான். (கஉ)

கங. ஈண்டுநீயிருந்தருளேழொடேழெனப்
பூண்டபேருலகங்கள்வலியிற்புக்கிடைத்
தேண்டியவ்வரக்கனைத்திருகித்தேவியைக்
காணடியானிவ்வழிக்கொணருங்கைப்பணி.

(இ-ள்.) ஈண்டு நீ இருந்தருள் - இங்கேயே நீ இருந்தருள்வாய்; யான்—, ஏழொடு ஏழ் என்று பூண்ட பேர் உலகங்கள் வலியின் புக்கு - பதினான்கென்று தொகைகொண்ட பெரிய உலகங்களிலெல்லாம் வலிமையோடு சென்று, இடை தேண்டி - அவ்விடங்களில் (பிராட்டியைத்) தேடி, அ அரக்கனை திருகி - (அவ்வளவிலே அவனையடுத்துச்சென்று) அந்த ராக்ஷசனைத் தலை முறித்து தேவியை இ வழி கொணரும் - உன் மனைவியான ஜாநகியை இவ்விடத்துக்கு

கொண்டுவந்து சேர்க்கும், கை பணி - சிறிய ஏவல்தொழிலை, காண்டி - பார்ப்பாயாக ; (எ - று.)

இவ்வளவு பெரியகாரியம் தனது ஆற்றலுக்கு மிகவும் எளிதாதல் தோன்ற, 'கைப்பணி' எனப்பட்டது. கைப்பணி - கைத்தொண்டு; குற்றேவல், கைங்கர்யம் ; கை - சிறுமைமேலது. ஏழொடேழ் - மேலேழொடு கீழேழும். தேண்டி - தேடியென்பதன் விரித்தல். கொணரும் - எதிர்காலப்பெயரெச்சம். காண்டி - ஏவலொருமை. (௧௩)

௧௪. ஏவல்செய் துணைவரேம்யாங்களீங்கிவன்
றூவரும்பெருவலித்தம்பிநம்பிநின்
சேவகமிதுவெனிற்சிறுகநோக்கலென்
மூவகையுலகுநின்மொழியின்முந்துமோ.

(இ - ள்.) யாங்கள் - நாங்கள், ஏவல் செய் துணைவரேம் - (நீ) ஏவிய காரியங்களைச் செய்கின்ற தோழராக இருக்கிறோம் ; ஈங்கு இவன் - இங்கேயுள்ள இவ்விலக்குமணனே, தா அரும் பெரு வலி தம்பி - அழிவற்ற மிக்க வலிமையையுடைய (நின்) தம்பியாவன் ; நம்பி - ஆடவரிற் சிறந்தவனே ! நின் சேவகம் இது - உனது வீரமோ இத்தன்மையது : எனில் - என்றால், மூ வகை உலகும் நின் மொழியின் முந்துமோ - மூன்றுவகை யுலகங்களும் உனது கட்டளையைக் கடக்குமோ ? [கடக்கமாட்டா வென்றபடி]; (இங்ஙனமிருக்க), சிறுக நோக்கல் என் - (உன்னை நீ) குறையுடையனகப் பார்க்க வேண்டியது என்ன ? (எ - று.)

'நின் சேவகம் இது' என்று சுட்டியது, கீழ் ௧௨ - ஆங் கவியிற் குறித்ததை. துணைவர் - உதவி செய்பவராயிருப்பவர் ; இப்படர்க்கைச்சொல் 'ஏம்' என்ற தன்மைப்பன்மை விகுதியோடு கூடித் தன்மைப்பன்மைக்கு வந்தது. தா - உரிச்சொல் பெருவலி - மகாபலம். நம்பி - புருஷோத்தமன் ; ஆண்பாற்சிறப்புப்பெயர். (இதன் பெண்பால் - நங்கை ) சிறுக நோக்கல் - உன்னை நீ எளியவனகப்பாவித்தல். 'மூவகையுலகு' என்றது, மேல் கீழ் நடு என்ற நோக்கத்தால். இங்கு 'உலகு' என்றது, அவ்விடத்து உயிர்கள்மேல் நின்றது. 'துணைவரோ யாங்கள்' எனபதும் பாடம். (௧௪)

௧௫. பெருமையோராயினும்பெருமைபேசலார்
கருமமேயல்லதுபிறிதென்கண்டது
தருமமேயல்லதுதனித்துவேறுண்டோ
வருமையேதுனக்குநின்றவலங்கூர்தியோ.

(இ - ள்.) பெருமையோர் ஆயினும் பெருமை பேசலார் - (உத்தமர்கள் தாம்) பெருமையுடையவர்களாயிருந்தாலும் தங்கள் பெருமையைத் தாங்களே சொல்லமாட்டார்கள் ; (ஆகவே), கருமமே அல்லது பிறிது கண்டது என் - அவர்கள்செய்த செயல்களை (உலகம்) கண்டதல்லாமல் வேறுகண்டதுயாது ? தருமம் நீ அல்லது தனித்து வேறு உண்டோ - தருமம் நீயே யல்லாமல்

தனியே (உன்னைக்காட்டிலும்) வேறொன்று உள்ளதோ? உனக்கு அருமை ஏது - (இங்ஙனமான) உனக்கு அசாத்தியமான செயல் எது? [எதுவுமில்லையென்றபடி]; (இவ்வாறிருக்கவும்), நின்று அவலம் கூர்தியோ - (நீ ஒன்றுஞ் செய்யமாட்டாதவன்போலத் திகைத்து) நின்று சோகங்கொள்ளக்கடவையோ? (எ - று.)

பெருமை - அறிவு, ஆற்றல், செயற்கரியனசெய்தல் முதலிய சிறப்புக்கள். "பெருமை பெருமிதமின்மை" என்றபடி செருக்கின்றியிருத்தல் அவர்கட்கு இயல்பாதலால் தமது பெருமையைத் தாமே எடுத்துச்சொல்லாரென்க. அப்படிசொல்லிக்கொள்ளுதல் சிறியோரியல்பா மென்பதை "சிறுமையணியு மாந் தன்னை வியந்து" என்றதனு லுணர்க. அவர்கள் தமது பெருமையைத் தாம் கூறாமல் அரியசெயல்களைச் செய்தல் மாத்திரமுடையாரகவே, உலகம் அவர்கள்செயலைக் காண்பதுண்டேயன்றி வேறொன்றைக் காணவல்லதன்று என்பது, இரண்டாமடியின் கருத்து. இனி, இதற்கு - பெரியோர் தாம் செய்யக் கடவனவான காரியங்களையே நோக்குவார்களல்லது அவர்கள் நோக்குவது வேறு யாது? என்றலுமாம். "கருமமே கண்ணாயினார்" என்றபடி தருமமூர்த்தியாவாய் நீயென்பது, மூன்றாமடியின் பொருள். நின்று - எளியவர்போல நின்று 'பெருமையோராயினார்' என்றும் பாடமுண்டு. (௯௫)

௯௬. முளரிமேல்வைகுவான்முருகற்றந்தவத்
தளிரியல்பாகத்தான்றடக்கையாழியா
னளவியொன்றுவரேயன்றியையமில்
கிளவியாய்தனித்தனிக்கிடைப்பரோதுணை.

(இ - ள்.) ஐயம் இல் கிளவியாய் - சந்தேகமில்லாத பேச்சுக்களையுடையவனே!—முளரிமேல் வைகுவான் - (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றிவாழ்பவனான பிரமனும், முருகன் தந்த அ தளிர் இயல் பாகத்தான் - முருகக்கடவுளைப் பெற்ற தந்தையும் தளிர்போல் மெல்லிய இயல்பையுடையவளான அம்பிகையை வாமபாகத்திற் கொண்டவனுமான அந்தச் சிவபிரானும், தட கை ஆழியான் - பெரிய திருக்கையில் சக்கராயுதத்தை யுடையவனான திருமாலும், ஒன்று அளவி (துணை) ஆவரே அன்றி - ஒன்று சேர்ந்து (உனக்கு) ஒப்பாக மாட்டுவரேயல்லாமல், தனித்தனி துணை கிடைப்பரோ - (அவர்கள்) தனித்தனியே (உனக்கு) ஒப்பாகப்பொருந்துவரோ? [பொருந்தாரென்றபடி]; (எ - று.)

திரிமூர்த்திகளும் கூடினால் உனக்கு ஒப்பாகக்கூடுமேயன்றி அவர்களில் எவரும் தனியே உனக்கு ஒப்பாகமாட்டார் என்று ஸ்ரீராமபிரானது மகிமையைச் சுக்கிரீவன் கொண்டாடியவாறும். 'துணை' என்பது, 'ஆவரே' என்றதனோடுங் கூட்டப்பட்டது. 'ஐயம்' என்றது, திரிபுக்கும் உபலக்ஷணம்; இரண்டும் மெய்ம்மைக்கு மாறும். பொருள்களை ஐயந்திரிபற விளக்கமாக எடுத்துக்கூறுந் தெளிவானபேச்சுக்களை யுடையவனே யென்பது, 'ஐயமில்கிளவியாய்' என்றதன் கருத்து. முளரி - முட்களையுடைய அரியை [அரையை] யுடையது, 'முருகற்றந்த' என்றது, தளிரியல்பாகத்தானுக்கு

அடைமொழி. 'தந்த' என்பதற்கு - வளர்த்த என்று பொருள்கொண்டால், தளிரிபலுக்கே அடைமொழியாகலாம். அகரச்சுட்டு - பிரசித்திபற்றியது. தளிரியல் - உவமைத்தொகையன்மொழி அளவி - அளாவி. இளவி - இள என்ற பகுதியினடியாப் பிறந்தது. திரிமூர்த்திகளின முறைமை, இங்கே செய்யுள் நோக்கிப் பிறழவைக்கப்பட்டது. (கசு)

சஎ. என்னுடைச்சிறுகுறைமுடித்தலீண்டொரீஇப்
பின்னுடைத்தாயினுமாகபேதுறு
மின்னிடைச்சனகியைமீட்டுமீடுமால்
பொன்னுடைச்சிலையினாய்விரைந்துபோயென்றான்.

(இ - ள்.) பொன் உடை சிலையினாய் - பொலிவையுடைய வில்லையுடையவனே !—என்னுடை சிறு குறை முடித்தல்-என்னுடைய சிறிய குறையை நிறைவேற்றுதல், ஈண்டு ஒரீஇ - இப்பொழுது (நிகழ்வதை) ஒழிந்து, பின் உடைத்து ஆயினும் ஆக - பினனே நிகழ்வதானாலும ஆகட்டும்: விரைந்து போய் - விரைவிற் சென்று, பேது உறும் மின் இடை சனகியை - (இராவணன் கையிலகப்பட்டுக்) கலக்கமடைந்திருப்பவளான மின்னல் போலும் இடையையுடைய சீதையை, மீட்டு - (அவனிடத்தினின்று) மீட்டுக்கொண்டு, மீடும் - திரும்பிவருவோம், என்றான் - என்று (ஸ்ரீராமனை நோக்கிக்) கூறினான், (சுக்கிரீவன்); (எ - று.)—ஆல் - அசை.

'என்னுடைச்சிறுகுறைமுடித்தல்' என்றது-வாலிவதஞ்செய்து சுக்கிரீவன் மனைவியான ருமையை மீட்டுக்கொடுத்தல். இராவணனை வென்றவனை வாலியை வதைத்தலென்பது மிகவும் அரியபெரிய செயலேயாயினும் அதனைச்செய்து முடித்தற்கேற்ற இராமலக்ஷ்மணர்களது பேராற்றலை மராமரமெய்ததனாலும், துந்துபியுடலை யெறிந்ததனாலும் கண்கூடாகக் கண்டுள்ளானதலால், அத்திறத்தைநோக்கி 'சிறுகுறை' என்றான். குறை - காரியம்; செய்து முடிக்கவேண்டியதாய் மிச்சமாயிருப்பது. ஒரீஇ - ஒருவி; சொல்லிசையளபெடை: நீங்கி யென்பது பொருள். பேது உறுதல் - பேதமுறுதல், கலங்குதல். இடைக்கு மின்னல் உவமை - மெல்லியவடிவிலும், ஒளியிலுமாம். மீடும்-மீள்+தும். பொன்னுடைச் சிலையினாய்-பொன்னால் அலங்கரிக்கப்பட்ட வில்லையுடையவனே யெனினுமாம்; ('காஞ்சந பூஷிதசாப' மென்றும், 'காஞ்சந சித்ர கார்முக' மென்றும் வால்மீகி ராமாயணத்திற் காணப்படுகின்றது.) (கஎ)

[அவ்வளவில் இராமபிரான் ஒருவாறு மூர்ச்சைதெளிந்து சுக்கிரீவனை நோக்கிப் பேசத்தொடங்குதல்.]

கஅ. எரிகதிர்க்காதலனினையகூறலு
மருவியங்கண்டிறந்தன்பினோக்கினான்
திருவுறைமார்பனுந்தெளிவுதோன்றிட
வொருவகையுணர்வுவந்துரைப்பதாயினான்.

(இ - ள்.) எரி கதிர் காதலன் - சுடுகின்ற கிரணங்களையுடைய சூரியனது குமாரனான சுக்கிரீவன், இனைய கூறலும் - இவ்வாறான வார்த்தைக

ளைச் சொன்னவளவில்,—திரு உறை மார்பனும் - இலக்குமி வீற்றிருக்கின்ற மார்பையுடையவனான திருமாலின் அவதாரமாகிய ஸ்ரீராமபிரானும், தெளிவு தோன்றிட - மூர்ச்சைதெளிதலுண்டாக, ஒரு வகை உணர்வு வந்து - ஒருவாறு பிரஜ்ஞைவரப்பெற்றவனாய், அருவி அம் கண் திறந்து அன்பின் நோக்கினன் - நீர்ப்பெருக்கையுடைய அழகிய கண்களைத் திறந்து அன்போடு (சுக்கிரீவனைப்) பார்த்து, உரைப்பது ஆயினன் - (சிலவார்த்தைகள்) சொல்லுதலுடையவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த ஆறு செய்யுள்களிற் காண்க.

ஏரிகதிர் - வினைத்தொகையன்மொழி. அருவிக்கண் - மலையருவியைப் போல நீரைச்சொரியுங் கண். 'திருவுடைமார்பன்' என்பதும் பாடம். (கஅ)

[இதுமுதல் ஆறுகவிகள் - இராமபிரான் வார்த்தை.]

கக. விலங்கெழிற்றோளினாய்வினையினேனுமிவ்
விலங்குவிற்கரத்தினனிருக்கவேயவள்
கலன்கழித்தனளிதுகற்புமேவிய
பொலன்குழைத்தெரிவையர்புரிந்துளோர்கள்யார்.

(இ - ள்.) விலங்கு எழில் தோளினாய் - மலைகள்போன்ற அழகிய தோள்களையுடையவனே!—வினையினேனும் இ இலங்கு வில் கரத்தினன் இருக்கவே - தீவினையுடையேனான யான் விளங்குகின்ற இந்த வில்லை யேந்திய கையையுடையவனாய் உயிர்வாழ்ந்திருக்கும்பொழுதே, அவள் - அந்த ஜாநகி, கலன் கழித்தனள் - (தனது) ஆபரணங்களைக் கழற்றியெறிந்துவிட்டாள்; கற்பு மேவிய-பதிவிரதாதருமம் பொருந்திய, பொலன் குழை தெரிவையர் - பொன்னாலாகிய குழையென்னுங் காதணியையுடைய மகளிரில், இது புரிந்துளோர்கள் யார்-இங்ஙனஞ் செய்தவர்கள் யாவரேனும் உண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

கணவன் இறக்கப்பெற்ற கற்புடைமகளிர் கலன்கழித்தல் இயல்பே; கணவன் உயிர்வாழ்ந்திருக்கையில் அவன்பிரிவைப் பொறுக்கமாட்டாத துயரத்தாலும் வேறேயொருநற்பயனை யுத்தேசித்தும் இப்படி தன்னுடைய அணிகலங்களையெல்லாம் கழற்றியெறியுங் கற்புடைமகளிர் ஜாநகியைத் தவிர வேறு எவரேனும் உண்டோ? என்று பிராட்டியின் குணாதிசயத்தைப் பாராட்டிக்கூறியவாறும். கணவன் வாழ்ந்திருக்கையிலேயே அவள் கலன் கழித்தமையைப் பற்றிய இரக்கமும் இதில் தோன்றும். விலங்கு - விலங்கல் என்பதன் விகாரம்; ஊர்க்கு ஒருபுறமாக விலகிநிற்பதுபற்றிய பெயர். மனைவி இங்ஙனம் பரிதாபமான நிலைமையை யடைதற்கேற்ற பாவத்தையுடையேன் யானென்று தம்மைத் தாமே வெறுத்துக்கொண்டனர் மனுஷ்யபாவனையினால் பெருமாள். பகை வெல்லுதற்கேற்ற கருவி கையிலிருந்தும் பயனில்லாமை தோன்ற, 'இலங்குவிற்கரத்தினனிருக்கவே' என்றார். காதோலை மங்கல வாழ்க்கைக்கு இன்றியமையாத தாதலால், ஸுமங்கலிஸ்திரீகளென்ற பொருளில் 'பொலன்குழைத்தெரிவையர்' எனப்பட்டது. எதுகை நயத்தை

நோக்கி, கலங்கழித்தனள்', 'பொலங்குழைத்தெரிவையர்' என்று பாட மோதுவாருமுளர். (கக)

உ0. வாணெடுங்கண்ணியென்வரவுநோக்கயான்
றாணெடுங்கிரியொடுந்தடங்கடம்மொடும்
பூணொடும்புலம்பியிப்பொழுதுபோக்கினே
னாணெடுஞ்சிலைசுமந்துழலநாணலேன்.

(இ - ள்.) வாள் நெடுங் கண்ணி - வாள்போற் கூரிய நீண்ட கண்களையுடையவளான ஜாநகி, என் வரவு நோக்க - என்னுடைய வரவை எதிர்பார்த்து வருந்திக் கொண்டிருக்கவும், யான் —, (அவளது துன்பத்திற்குப் பரிகாரந் தேடாமல்), தாள் நெடுங் கிரியொடும் - தாழ்வரைகளையுடைய பெரிய மலைகளுடனும், தடங்கள் தம்மொடும் - தடாகங்களுடனும், பூணொடும் - ஆபரணங்களுடனும், புலம்பி - அழுது, இ பொழுது போக்கினேன் - இவ்வாறு காலத்தை வீணாய்க் கழித்துக்கொண்டிருக்கிறேனே: (மற்றும் யான்), நாண் நெடுஞ் சிலை சுமந்து உழல நாணலேன் - நாணியையுடைய நீண்ட வில்லைச் சுமந்து திரிதற்கு வெட்கமுறாதிருக்கின்றேனே; (எ - று.)

மலையின் அடியைப் பாதமென்னும் மரபுபற்றி, 'தாள்' என்றார். 'சுமந்து' என்ற வினையின் ஆற்றலால், பகைவனை வென்று அவன் கவர்ந்த தமது பொருளை மீட்காதவர்களுக்கும் ஆயுதம் அவர்கட்குப் பாரமாவதேயன்றிப் பெருமை பெறுதெனப்து தோன்றும். 'உழல' என்றது, எங்கேனும் ஒளித்திராமல் வெளிப்படையாய் எங்குந்திரிய என்றபடி. நாணலேன் - தன்மையொருமை யெதிர்மறைமுற்று. 'நாண்' என்ற ஒரு சொல்லை வேறொரு பொருளில் மீளவும் பிரயோகித்தது, சொற்பின்வருநிலையணி 'புலம்பியே பொழுது போக்கினேனை' என்பதும் பாடம் (உ0)

உக. ஆறுடன்செல்பவரஞ்சொன்மாதரை
வேறுளார்துயர்செயின்விலக்கிவெஞ்சமத
தூறுறத்தம்முயிருகுப்பர்யானெனைத்
தேறினடன்றுயர்தீர்க்ககிற்றிலேன்,

(இ - ள்) ஆறுடன் செல்பவர் - வழியிலே போகின்றவர்கள், அம் சொல் மாதரை வேறு உளார் துயர் செயின் - அழகிய சொற்களை யுடைய மகளிரை வேறு எவரேனும் துன்பப்படுத்தினால், விலக்கி - (அவர்களை அது செய்ய வொட்டாதபடி) தடுத்து, வெம் சமத்து ஊறு உற தம உயிர் உகுப்பர் - (அவர்களைத் தாம் எதிர்த்துச் செய்யும்) கொடிய போரில் (அவர்களால் தமக்கு) ஊறுபாடு உண்டாகத் தமது உயிரை யொழித்தலுஞ்செய்வர்; யான் - நானோ, எனை தேறினள் தன துயர் தீர்க்ககிற்றிலேன் - என்னையே நம்பியவளான ஜானகியின் துன்பத்தை நீக்கமாட்டாதவனாயிருக்கிறேன்; (எ - று.)

ஆறுடன செல்பவர் - வழியே செல்வோர்; அம்மகளிர்க்கு யாதொரு சம்பந்தமுமில்லாதவ ரென்றபடி. உடன் என்ற மூன்றனுருபு ஏழனுருபின்

பொருளில் வந்தது; உருபுமயக்கம். அஞ்சொல் - மாதர்க்கு இயற்கையடைமொழி. 'வலிசெயில்' என்ற பாடத்துக்கு - வலியக்கவர்ந்து சென்றுவென்று பொருள். ஊறு - தழும்பு, தீமை, கொலே. 'உகுப்பரென்பதுந் தேறினன் றுயரநான் றீர்க்ககிற்றிலேன்' என்று பாடமானபோது, வழியே செல்பவர் மாதரைப் பிறர் வருத்துதலே விலக்கிப் போர்செய்யத்தொடங்கி அதில் ஊறு பாடுண்டாகத் தமது உயிரை நீப்பரென்பதையும் (சடாயு உயிர்நீத்ததனுல்) நன்முக அறிந்த யான் என் மனைவியின் துன்பத்தை ஒழிக்காமலிருக்கின்றே னென்று பொருள் காண்க. தீர்க்ககிற்றிலேன—கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலே, ற் - இறந்த காலவிடைநிலே, இல் - எதிர்மறையிடைநிலே, கு அ- சாரியைகள். (உக)

உஉ. கருங்கடறொட்டனர்கங்கைதந்தனர்
பொரும்புலிமாவொடுபுன லூட்டினர்
பெருந்தகையென்குலத்தரசர்பின்னொரு
திருந்திழைதுயரநான்றீர்க்கநோற்றிலேன்.

(இ - ள்.) பெருந் தகை - பெருமைக்குணத்தையுடைய, என்குலத்து - எனது குலத்தில் முன்பு தோன்றிய, அரசர்—, கருங்கடல் தொட்டனர்-கருநிறமான கடலேத் தோண்டினர்; கங்கை தந்தனர் - கங்கையை (மேலுலகத்திலிருந்து இவவுலகத்துக்குக்) கொணர்ந்தனர்; பொரும் புலி மாவொடு புனலும் ஊட்டினர் - போர்செய்யுமியல்புள்ள புலியையும் மானேயும் (ஒருதுறையில்) நீருணணவுஞ் செய்தனர்; பின் - அவர்கட்குப்பின் பிறந்தவனுன, நான - யானே, ஒரு திருந்து இழை துயரம் தீர்க்க நோறறிலேன - திருத்தமான ஆபரணங்களே யுடையவளாகிய என மனைவியொருததியின துன்பத்தை நீக்குதற்குத் தவஞ்செய்யாதவனு யிருக்கின்றேன! (எ - று.)

எனது குலத்து முனனோர்கள் கடலேத் தோண்டுதலும், கங்கையைக் கொணர்தலும் புலியும் மானும் ஒரு துறையில் நீருண்ணும்படி செய்தலுமாகிய அரியபெரிய செயல்களேச் செய்து பெருங்கீர்த்தி படைத்தறகு வேண்டிய பாக்கிய முடையவராயிருந்தார்கள்; அப்படிப்பட்ட மகான்களுடைய பரம்பரையிற் பிறந்தவனுன யானே எனது மனைவியொருத்தியின துன்பத்தை நீக்குதற்கு வேண்டிய பாககியமு மில்லாதவனு யிருக்கினறே னென்று இரங்கிக் கூறினனெனபதாம்.

சூரியகுலத்துச் சகரமகாராஜன் அசுவமேதயாகஞ் செய்தபொழுது பூமிப் பிரதக்ஷிணததிற்காகச்செலுத்தின குதிரையை,பொறாமைகொண்ட தேவேந்திரன மாயையால் ஒளித்துக்கொண்டு சென்று, பாதாளலோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த கபிலமுனிவர் பினனே கட்டிவைக்க, அவவேள்விக்குதிரையை நாடிச்சென்ற சகரபுத்திரர் அறுபதினுயிரம்பேர் பூமிமுழுவதும் தேடிக்காணுது பாதாளத்திற்குப் போதறபொருட்டுப் பெருவழியாகப் பாத கண்டத்தில வடகிழக்குப் பக்கத்தில் தோண்டிச்சென்ற பெரும்பள்ளமே பின்பு கங்கை முதலியவற்றின் நீரினுல் நிறைந்து சாகரமெனனும் பெயர்

பெற்றுக் கடலோடு கூடித் தானும் கடலின் பாற்பட்ட தென்பது கட்டில் தோட்டகதை.

சூரியகுலத்துப் பகீரதசக்ரவர்த்தி கபிலமுனிவரது கண்ணின் கோபத் தீக்கு இலக்காகி உடலெரிந்து சாம்பலாய நற்கதியிழந்த தனது மூதாதைய ரான சகரபுத்திரர் அறுபதினாயிரவரை நற்கதிபெறுவித்தற்பொருட்டு நெடுங் காலந் தவஞ்செய்து கங்காநதியை மேலுலகத்திலிருந்து கீழுலகத்திற்குக் கொணர்ந்தனனென்பது, கங்கைதந்த வரலாறு.

இரண்டாமடி - வலியவை எளியவற்றை வருத்தாதபடி அரசாட்சிசெய் தனனென்றவாறும். இங்ஙனம் ஆண்டவன், சூரியகுலத்து மாந்தாதாவென னும் அரசன். இவனது அரசாட்சியில் எங்குஞ் சத்துவகுண காரியமாகிய சாந்தமே தலையெடுத்து நின்றதனால் விவேகமில்லாத மிருகங்களுக்கும் ஒன் றன்மேல் ஒன்றற்கு அன்பும் அருளும் உண்டாயினவேயன்றி ரஜோகுண தமோகுண காரியங்களாகிய கொலை பகை அச்சம் முதலிய கொடுமைக் குணங்கள் உண்டாகவில்லையென்க. அரசனது கட்டளையில் தமக்கு உள்ள விசுவாசத்தால் எவையும் தம்மால் வருத்தத்தக்கவற்றையும் வருத்தவில்லை யென்று அரசாட்சி நீதிமுறைமை விளங்கும்.

பெருந்தகை - குலத்திற்கு அடைமொழி; 'என' என்பதற்கு அடை மொழியாக்கினால் தற்புகழ்ச்சியின்பாற்படும். திருந்திழை விளித்தொகையன் மொழி. நோற்றிலேன - நல்வினையுடைய னல்லாமற்போனேன் என்றபடி. தொட்டனர், தொடு - பகுதி. ஒடு - எண்ணுப்பொருளது. (உஉ)

உங. இந்திரற்குரிய தீர்ந்தீர்க்கண்டோர் திக
லந்தகற்கரியபோரவுணற்றேய்த்தன
னெந்தைமற்றவனின்வந்துதித்தயானுளேன்
வெந்துயர்க்கொடும்பழிவில்லிற்றாங்கினேன்.

(இ - ள்.) எந்தை - எனது தந்தை [தசரத சக்கரவர்த்தி], இந்திரற்கு உரியது ஓர் இடுக்கண் தீர்த்து - தேவேந்திரனுக்கு நேர்ந்ததொரு பெருந் துன்பத்தை நீக்கி, அந்தகற்கு இகல் அரிய போர் அவுணன் தேய்த்தனன் - (பிராணிகளுக்கெல்லாம்) அழிவைச் செய்பவனான யமனுக்கும் எதிர்த்தற்கு அருமையான போர்வலிமையையுடைய சம்பராசுரனை அழித்திட்டான்; அவனின் வந்து உதித்த யான் - அவனிடத்தினின்று வந்து பிறந்த நானே, வெம் துயர் கொடும் பழி வில்லின் தாங்கினேன உளேன - வெவ்விய துன் பத்தைத் தருகின்ற கொடிய பழியை வில்லுடனே சுமந்தவனா யிருக்கின் றேன்; (எ - று.)—மற்று - வினைமாற்று.

தண்டகாரணியத்தில் வைஜயந்தமென்ற நகரத்திலே இருந்து அர சாண்டு வந்தவனும் திமித்துவசனென்னும் மறுபெயருள்ளவனும், பற்பல மாயைகளில் தேர்ந்தவனுமான சம்பரனென்ற அசுரன் பல அசுரர்களையும் அரக்கர்களையும் உடன்கொண்டு சென்று தேவர்களுடன் பெரும் போர்

செய்து அவர்களைப் பலவாறு வருத்தித் தேவாசுரனை இந்திரனையு முட்பட வென்று அவனது பொன்னுலகத்தை அபகரித்துக்கொண்டு துரத்திவிட, அங்ஙனம் அரசிழந்த தேவேந்திரன் தசரத சக்கரவர்த்தியை அடுத்துச் சரண மடைந்து தன் குறையைக்கூறித் தனக்கு உதவிசெய்யுமாறு பிரார்த்திக்க, அவனது அந்நிலையை நோக்கி இரக்கங்கொண்ட தசரதர் அவவேண்டு கோட்கு இணங்கிக் கைகேயியையும் உடனழைத்துக்கொண்டு இந்திரனுக்கு உதவியாகத் தேவாசுரயுத்தத்தில் தலையிட்டுச் சம்பரனுடன் எதிர்த்துக் கடும் போர் புரிய, அந்த உக்கிரமான யுத்தத்தை ஆற்றமாட்டாமல் அவன் மாயை யால் மறைந்து ஓட்டங்காட்டவே, அவன் சென்ற சென்ற திசைகளிலெல் லாம் தசரதர் விடாது தொடர்ந்து சென்று பொருது அவனைச் சுற்றத்துடன் கொன்று, முன்பு அவனாற் கவரப்பட்ட இந்திரனது அரசாட்சி தமக்கு உரிய தாகப் பெற்றவராய் மீண்டு உடனே அவ்வரசாட்சியை இந்திரனுக்குக் கொடுத்தருளின ரென்பது, இங்கு அறியவேண்டிய கதை.

இடுக்கண் தீர்த்து அவுணற்றேய்த்தனன் - அவுணற்றேய்த்து இடுக்கண் டீர்த்தனன் என விகுதிபிரித்துக்கூட்டுதல் இலக்கணத்திற்கு ஏற்கும். அவ னின், ஐந்தனுருபு - நீக்கம். வெந்துயர்க்கொடும்பழி - மனைவியைக் கவர்ந்த வனை நாடிக்கொன்று மனைவியை மீட்காமையால் வந்தது. அது செய்யாத எனக்கு வில் ஒருபாரமே யென்பதும் ஈற்றடியில் விளங்கும்; (உ0) ''சிலை சுமந்து'' என்றாற்போல. 'கொடும்பழி வில்லின தாங்கினேனை' என்றது, புணர்நிலையணி. 'இந்திரற்குற்றதோரிடுக்கண்' என்பதும் பாடம். (உங)

உச. விரும்பெழிலெந்தையார்மெய்ம்மைவீயுமேல
வரும்பழியென்றலான்மகுடஞ்சூடலேன்
கரும்பழிசொல்லியைப்பகைஞன்கைக்கொளப்
பெரும்பழிசூடினேன்பிழைத்ததென்னரோ.

(இ - ள்.) விரும்பு - (யாவரும்) விரும்பத்தக்க, எழில் - அழகையுடைய, எந்தையார் - எனது தந்தையாரது, மெய்ம்மை - சத்தியம், வீயும் ஏல் - தவறு மானால், பழி வரும - (அதனால் எனக்குப்) பழியுண்டாகும், என்றலால் - என்று எண்ணியதனால், மகுடம் சூடலேன் - முடிசூட்டிக் கொள்ளாமல் வன வாசம் போந்தவனான யான்,—கரும்பு அழி சொல்லியை - கருப்பஞ்சாற்றை (இனிமை மிகுதியால்) வெல்கின்ற சொற்களை யுடையவளான என்மனை வியை, பகைஞன் கைக்கொள - பகைவனான இராவணன் வஞ்சித்துக் கவர்ந்துகொள்ள அதனால், பெரும் பழி சூடினேன் - மிக்கபழிப்பை மேற் கொண்டேன்; பிழைத்தது என - (யான் பழியினின்று) நீங்கியது எங்ஙனம்! (எ - று.)—அரோ - ஈற்றசை.

தந்தையாரின் சத்தியத்தை நிலைநிற்கச் செய்யாவிட்டால் அதனால் வரக் கடவதான பழிக்கு அஞ்சி இராச்சிய பட்டாபிஷேகஞ்செய்து கொள்ளுதலை விட்டுத் தம்பிக்கு அரசுகொடுத்து வனவாசம்போந்த யான், அங்ஙனம் வந்த இடத்தில் மனைவியைப் பகைவன் கவர்ந்துகொள்ளும்படியானதனாற் பெரும்

பழிப்பை யடைந்தேன்; இப்படி யான் பழியினின்று தப்பும்வகையில்லாதவனானேனே! என்று இரங்கிக் கூறியவாறும். எந்தையார்மெய்ம்மை - தசரதர் கைகேயிக்குக் கொடுத்திருந்த இரண்டு வரங்கள். அவை தவறாமல் தசரதர் சத்தியவாதியாதற்பொருட்டே இராமன் வனவாசம்போந்தமைவெளிப்படை.

மகுடம் - வடசொல். கரும்பு - அதன்சாற்றுக்கு முதலாகுபெயர் அழிசொல் - பிறவினை வினைத்தொகை. கருப்பஞ்சாற்றை அழித்தல் தனது இனிமைமிகுதிக்கு ஒப்பாகாமையால். (உச)

[மீளவும் இராமன் மூர்ச்சிக்க, சுக்கிரீவன் தேளிவித்தல்]

உரு. என்னநொந்தின்னனபன்னியீடழிந்

துன்னருந்துயரத்துச்சோர்கின்றான்றனைப்

பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்

தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினான்.

(இ - ள்.) என்ன - என்று, இன்னன - இத்தன்மையனவான வார்த்தைகளை, நொந்து பன்னி - வருந்திக்கொண்டே சொல்லி, ஈடு அழிந்து - வலியொடுங்கி, உன் அருந் துயரத்து சோர்கின்றான்தனை - நினைக்கவும்ஒண்ணாத துக்கத்தினால் மூர்ச்சிக்கின்றவனான ஸ்ரீராமனை,—பன் அருங் கதிரவன் புதல்வன - வருணித்துச்சொல்லுதற்கருமையான கிரணங்களையுடைய வனாகிய சூரியனது புத்திரனான சுக்கிரீவன,—பையுள் பார்த்து - (அவனடைந்த) துன்பத்தைப் பார்த்து, அன்ன வெம் துயர் எனும் அளக்கர் நீக்கினான் - அந்தக்கொடியதுன்பமென்கிற கடலினின்று நீங்கிக் கரையேறச் செய்தான்; (எ - று.)

அன்ன வெந்துயர் - மூர்ச்சை. அதனினின்று நீக்குதல் - தெளிவித்தல். ஈடழிதல் - மனோபலமும் தேகபலமும் ஒழிதல் பன்னரு - நெருங்குதற் கருமையான எனினுமாம். அளக்கர் - அளக்க அரியது. ஈற்றடி - உருவகவணி. 'பன்னியேங்கியே' என்ற பாடத்திற்கு - இரண்டாமடியில் துன்னரு எனக்கொண்டு, சேரத்தகாத எனப் பொருள்கொள்ளலாம்; அது மோனைநயம் சிறக்கும். (உரு)

[இதுமுதல் எட்டுக்கவிகள் - குளகம்: இக்கவி, இராமபிரான் வார்த்தை.]

உசு. ஐயநீயாற்றலினாற்றினேனல

துய்வனேயெனக்கினிறுதிவேறுண்டோ

வையகத்திப்பழிதீரமாய்வது

செய்வனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன்.

(இ - ள்.) ஐய - அன்பனே! நீ ஆற்றலின் - நீ (என்னைத்) தேற்றியதனால், ஆற்றினேன் அலது - (எனது துன்பத்தை ஒருவாறு) தணித்துக்கொண்டேனேயல்லாமல், உய்வனே - யான்பிழைக்கக்கடவேனோ? எனக்கு இனி உறுதி வேறு உண்டோ - எனக்கு மரணத்தைக்காட்டிலும் நல்லது

வேறுஉண்டோ? [இல்லை யென்றபடி]; வையகத்து இ பழி தீர மாய்வது செய்வன் - இவ்வுலகத்துப்பரவுகின்ற இப்பழிப்பு ஒழியும்படி இறத்தலைச் செய்வேன்; (ஆனால்), நினகுறை முடித்துஅன்றி செய்கலேன் - உனது குறையை நிறைவேற்றியல்லாமல் அது செய்யமாட்டேன்; (எ - று.)

யான் மரணமடைவது என்னளவில் இனியதேயானாலும் உயிர்நண்பனுன உனக்கு வாக்குதத்தஞ்செய்தபடி உன்மனைவியைக் கவர்ந்தவனைக் கொன்று உன் மனைவியை மீட்டு உனக்குக் கொடுத்தல்லாமல் மரணமடையற்பாலேனல்லே னென்றனெனன்க ஏகாரமும், ஓகாரமும் - எதிர்மறை. 'எனக்கு இதின் உறுதி வேறுண்டோ' என்பதற்கு - எனக்கு நீ செய்த உதவியைக் காட்டிலுஞ் சிறந்தது வேறொன்று உண்டோ வென்று உரைப்பாருமுளர். (உசு)

[அச்சமயத்தில் அநுமான் சொன்ன வார்த்தைகளை இதுமுதல் ஏழுகவிகளிற் கூறுகின்றார்.]

உஎ. என்றனனிராகவனிளையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினனெடுங்
குன்றிவர்தோளினாய்கூறவேண்டுவ
தொன்றுளததனைநீயுணர்ந்துகேளெனா.

(இ - ள்.) என்றனன் இராகவன் - என்று கூறினன் இராமபிரான்: இளைய காலையில் - இந்தச்சமயத்தில்,—வல் திறல் மாருதி - மிக்கவலிமையையுடைய வாயுகுமாரனுன அநுமான், வணங்கினன் - (இராமபிரானைத்) தொழுது,—'நெடுங் குன்று இவர் தோளினாய் - பெரியமலையையொத்த தோள்களையுடையவனே! கூறவேண்டுவது ஒன்று உளது - (நான்) சொல்லவேண்டுவது ஒன்று உண்டு: அதனை நீ உணர்ந்து கேள் - அதனை நீ திருவுளம்வைத்துக் கேட்பாயாக,' எனா - என்று சொல்லி,—(எ-று.)—'என நிகழ்த்தினன்' என மேல் ௩௩-ஆஞ் செய்யுளோடு தொடர்ந்து முடியும்.

ராகவன் - வடசொல்; ரகுவெனனும் அரசனது குலத்தில் அவதரித்தவன்; தத்திதாந்தநாமம். வல் திறல் - ஒருபொருட்பன்மொழி; (பகைவர்க்குக்) கொடிய வலிமை யெனினுமாம். இவர்தல் - விரும்புதல்; பொருந்துதல்; இங்கு, இது, உவமவாசகமாய் நின்றது. உணர்ந்து கேள் - கேட்டுஉணர் என விகுதிபிரித்துக்கூட்டுதல் நலம். (உஎ)

உஅ. கொடுநதொழில்வாலியைக்கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டினலன்றிநேடரி
தடும்படையரக்கர்தமிருக்கையாணையாய்.

(இ - ள்.) ஆணையாய் - 'ஆஜ்ஞை எங்குஞ்செல்லத்தக்கவனே!—கொடுந் தொழில் வாலியை கொன்று - கொடியதொழிலையுடைய வாலியை (முதலில்)

வதைத்து, கடும் கதிரோன் மகன் கோமகன் ஆக்கி - உக்ஷ்ணமான கிரணங்களை யுடையவனாகிய சூரியனது குமாரனான சுக்கிரீவனை (வாநரங்களுக்கு) அரசனாகச்செய்து, கை வளர் நெடும் படை கூட்டிறனல் அன்றி - செழித்து வளர்ந்துள்ள பெரிய (வாநர) சேனையைச் சேர்த்தாலல்லாமல், அம்படை அரக்கர்தம் இருக்கை நேடு அரிது - கொல்லும் ஆயுதங்களையுடைய இராக்கதர்களது இருப்பிடம் தேடியுணர்தற்கு அரியது; (எ - று.)

கோமகன் - தலைவனான புருஷன். 'கைவளர்' என்றவிடத்து, கை - தமிழுபசர்க்கம்; எல்லாப்பக்கங்களிலும் மிகுதியாய்ப்பொருந்திய என்றும், கை போல உரியசமயங்களில் உதவும் தன்மை மிக்க வென்றுங் கொள்ளலாம். ஆணை - ஆஜ்ஞா என்ற வடசொல்லின் சிதைவு. அதனையுடையவனேயென்பார், 'ஆணையாய்' என்றார். எங்கட்கெல்லாம் கட்டளைகூறத்தக்க தலைவனே! என்றவாறுமாம். மூன்றாமடியில், படை - சேனை; நான்காமடியில் படை - ஆயுதம். 'ஆணையால்' என்ற பாடத்துக்கு - நமது கட்டளைப்படி தேடுதலரியது என்னலாம். 'அரக்கனதிருக்கை' என்பதும் பாடம். (உ௮)

உகூ. வானதோமண்ணதோமற்றுவெற்பதோ
வேனைமாநகர்தமிருக்கைப்பாலதோ
தேனுலாந்தெரியலாய்தெளிவதன்றுநா
மூனுடைமானிடமானதுண்மையால்.

(இ - ள்.) தேன் உலாம் தெரியலாய் - வண்டுகள் வந்து மொய்க்கும் மலர்மாலையை யணிதற்கு உரியவனே!—(இராவணன் முதலிய அரக்கர்களின் இருப்பிடம்), மண்ணதோ - தரையிலுள்ளதோ? மற்று—, வெற்பதோ-மலைகளின் மேலுள்ளதோ? வானதோ - (அன்றி) வானத்திலுள்ளதோ? ஏனை மாநகர்தம் இருக்கை பாலதோ - இவற்றினும் வேறான பெரிய நாகலோகத்திலுள்ளதோ? நாம—, ஊன் உடை மானிடம் ஆனது உண்மையால் - குறைபாடுடைய மனிதப்பிறப்பின்பாற் பட்டிருத்தலால், தெளிவது அன்று - (இன்னவிடத்ததென்று) எளிதில் அறியக்கூடியதன்று; (எ - று.)

மற்று - வினைமாற்று. ஏனை - மற்றை. நாகர்தமிருக்கை - சர்ப்பசாதியார் வசிக்குமிடம்; கீழுலகம். தேன்உலாம் - (மலர்களில்) தேன்ததும்பப்பெற்ற எனினுமாம். ஊன், மானிடம் - ஊநம், மாநுஷம் என்ற வடசொற்களின் விகாரம். மநுஷ்யசாதிக்குக் குறைபாடு, தேவர்கள்போல இருந்தவிடத்திலிருந்தபடியே புத்திவிசேஷத்தால் எல்லா வுலகங்களின் செய்தியையும் அறியமாட்டாமை; ஸாமாந்யநியாயம்பற்றி, இந்த அடைமொழி மனிதசாதிக்குக் கொடுக்கப்பட்டது. இனி, ஊனம் - ஆகாசகமநத்தால் எங்குஞ் செல்லமாட்டாமையுமாம். அநுமான் முதலியோர் முகத்திலும் வாலிலும் வாநரம் போலினும் மற்றைப்படி மனிதர்போன்ற வடிவமுடையரா தலால், 'நாம் மானிடமானதுண்மையால்' என்று அநுமான் கூறினன். (உகூ)

௩௦. எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவந்தெனவருவர்மீள்வரா
லவ்வவருறைவிடமறியற்பாலதோ.

(இ - ள்.) (அந்த ராக்ஷஸர்களோ), இமைப்பின் எ உலகங்களும் எய்துவர் - ஒரு மாத்திரைப் பொழுதிலே எல்லாவுலகங்களிலும் போய்ச்சேருவார்கள்; அ வழி மகிழ்ந்த யாவையும் வவ்வுவர் - அந்த இடங்களில் தாம் விரும்பிய பொருள்களெல்லாவற்றையும் கவர்ந்து கொள்வார்கள்; (இங்ஙனம் எல்லாவிடத்தும்), வெவ வினை வந்து என வருவர் மீள்வர் - (அவ்வவ்வுயிர்கள் செய்த) கொடிய கருமம் (தடுக்கமுடியாமலும் எதிர்பாராமலும் திடீரென்று பயனூட்ட) வந்தாற்போல வருவார்கள் (அவ்வினை பயனூட்டியவுடன் தொலைவதுபோல அங்கங்கு விரும்பிய பொருள்களைக் கவர்ந்து கொண்டவுடன்) திரும்பிச் செல்வார்கள்; ஆல் - ஆதலால், அ அவர் உறைவு இடம் அறியல் பாலதோ - அத்தன்மையையுடைய அவ்வரக்கர்கள் வசிக்குமிடம் எளிதில் அறியத்தக்கதாமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

இமைப்பு - இயல்பாகக் கண்ணிமைக்கும் பொழுது. ஆல் - ஆதலால் என்பதன் விகாரம். (௩௦)

௩௧. ஒருமுறையேபரந்துலகம்யாவையுந்
திருமகளுறைவிடந்தேரவேண்டுமால்
வரன்முறைநாடிடவரம்பின்றாலுல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால்.

(இ - ள்.) ஒரு முறையே-ஒரேசமயத்திலே, உலகம்யாவையும் பரந்து - உலகங்களெல்லாவற்றிலுஞ் சென்றுபரவி, திருமகள் உறைவு இடம் தேர வேண்டும்-சீதாபிராட்டியிருக்கின்ற இடத்தைத் தேடியறியவேண்டும்; (அங்ஙனமன்றி), வரல்முறை நாடிட - வரிசைக்கிரமமாய் [ஓரிடத்தின் பின் மற்றோரிடமாக]த் தேடுதலில், உலகு வரம்பு இன்று ஆல் அருமை உண்டு - உலகம் வரையறையில்லாதபடி பரந்து கிடத்தலால் சிரமமுண்டு; (அன்றியும் அவ்வாறு தேடுதற்கு), அளப்பு அரும் ஆண்டு வேண்டும் - அளவிடுதற்கருமையான [மிகப்பலவான] வருடங்கள் செல்லும்; (எ - று.)

அரக்கர்கள் கணப்பொழுதில் எவ்வுலகத்திலுஞ் சென்று விரும்பிய பொருளைக் கவர்ந்து மீளத்தக்கவ ராதலால், ஏககாலத்திலே வானரர்களெல்லாரும் வெவ்வேறாக உலகமுழுவதும் பரந்துசென்று பிராட்டியிருக்குமிடத்தைத் தேடியறிய வேண்டும்; அங்ஙனமன்றி, இரண்டொருவர் புறப்பட்டு ஓரிடத்தின பின் மற்றோரிடமாக முறையே தேடுவதென்றால் உலகம் அதிவிஸ்தீர்ண மாதலால் அருமையாகும்; மேலும் அதற்கு அநேக வருஷங்கள் சென்றுபோம் என்பதாம். 'உலகு வரம்பின்றால் அருமையுண்டு' என்றது, நாம் ஓரிடத்திற் தேடுகையில் அவர் மற்றோரிடத்தி லிருக்கவும், பின்

ணர் நாம் அந்த இடத்திற்போய்த் தேடுகையில் முன்பு நாம் தேடியான இடத்தில் அவர் வந்து சேர்ந்திருக்கவும் கூடுமாதலால் காரியம் சித்திபெறுமென்ற கருத்தைக் கொண்டது. 'ஆல்' மூன்றனுள் - முன்னதும், 'பின்னதும் - அசை; மற்றையது - ஆதலால் எனபதன் விகாரம். (௩௧)

௩௨. எழுபத்தாகியவெள்ளத்தெம்படை
பூழியிற்கடலெனவுலகம்போர்க்குமா
லாழியைக்குடிப்பினுமயன்செயண்டத்தைக்
கீழ்மடுததெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால்.

(இ - ள்.) எழுபத்து ஆகிய வெள்ளத்து எம் படை - எழுபது வெள்ளமென்னுந் தொகையையுடைய எமது [வாநர] சேனை, ஊழியில் கடல் என உலகம் போர்க்கும் - கற்பாந்த காலத்துப் பொங்குங் கடல்போல (உலக முழுவதும்) பரந்து மூடவல்லது; (மற்றும் அது), ஆழியை குடிப்பினும் - கடலைக் குடிக்க வேண்டுமென்றாலும், அயன் செய் அண்டத்தை கீழ் மடுத்து எடுப்பினும் - பிரமாண்டத்தைக கீழேபிடிதது எடுககவேண்டுமென்றாலும், கிடைத்த செய்யும் - (அங்ஙனம் தமககு) நேர்ந்த கட்டளைகளைத் தவறாது செய்யமாட்டும்; (எ - று.)—'ஆல்' இரண்டும் - அசை.

எம்படை - எம்மவர்கூட்டம். அயனசெய் அண்டம் - பிரமன பிராணிகளைப் படைத்தற்கு இடமான அண்டம. கிடைதத - பெயர். மடுத்தல் - கொள்ளல். இந்த எழுபது வெளளம வாநரசேனையும் நமது கட்டளைக்கு உள்ளாகி ஏககாலத்தில உலகமுழுவதுஞ்சென்று பிராட்டியைத் தேடும்படி செய்தல் வேண்டு மென்றறகு இது கூறப்பட்டது. (௩௨)

[அநுமான் சென்னதை ஸ்ரீராமன் அங்கீகரிக்க, அனைவரும் வாலியிருக்குமிடத்தை நோக்கிப் புறப்படுதல்.]

௩௩. ஆதலா லன்னதே யமைவ தாமென
நீதியாய் நினைந்தனெ னெனநி கழ்த்தினன்
சாதுவா மெனறவத் தனுவின் செல்வனும்
போதுநாம் வாலிபா லென்னப் போயினர்.

(இ - ள்.) ஆதலால்—, நீதியாய் - நீதிநெறியை யுடையவனே! அன்னதே அமைவது ஆம் என நினைந்தனென் - முனபு வாலியைக்கொன்று பிராட்டியைத் தேடுவதே தக்கதாமென்று எண்ணுகின்றேன, என நிகழ்த்தினன் - என்று (அநுமான) கூறினன்; சாது ஆம என்ற அ தனுவின் செல்வனும் - சாந்தகுண முடையவனென்று பிரசித்தனான அந்த வில்வீரனாகிய ஸ்ரீராமனும், நாம் வாலிபால் போதும் என்ன - '(ஆனால்) நாம் (இப்பொழுது) வாலியினிடத்திற்குச் செல்வோம்' எனறு சொல்ல, போயினர் - (சுக்கிரீவனும் அவன் மந்திரிகளாகிய நால்வரும் இராமலக்குமணரும் புறப்பட்டு அவ்விடத்தைக் குறித்துச்) செல்லலானார்கள்; (எ - று.)—சுக்கிரீவன் மந்திரிகள் நால்வர் - அநுமான், தாரன், நளன, நீலன என்பவர்.

கீழ் (உச) - ஆம் கவியிற் கூறியது, இக்கவியில் 'அன்னது' எனச் சுட்டப்பட்டது. ஸாது, தநுஸ் - வடசொற்கள். சாது - சற்குணமுடையோன். சாது ஆம் என்ற - (அநுமான் வார்த்தையை) நல்லதென்று உடன்பட்ட என்றுமாம்; ஸாது - அங்கீகாரத்தை யுணர்த்தும வடசொல். தனுவின் செல்வன - வில்லினல்வரும் மேன்மையை யுடையவன. போதும் - தன்மைப் பன்மைமுற்று. முதலடி - முற்றுமோனே. (கஙு)

வேறு.

[அவர்கள் மலைச்சாரல்வழியே செல்லுதல்.]

கசு. வெங்க ணாளி யேறு மீளி மாவும் வேக நாகமுஞ்
சிங்க வேறி ரண்டொ டுந்தி ரண்ட வன்ன செய்கையார்
தங்கு சால மூல மார்த மால மேலம் வாழைமாப்
பொங்கு நாக முந்து வன்று சார லூடு போயினர்.

(இ - ள்.) வெம் கண் ஆளி ஏறும் - அச்சந்தருகின்ற கண்களையுடைய ஆண்யாளி யொன்றும், மீளி மா (இரண்டு) உம் - பராக்கிரமத்தையுடைய புலிகளிரண்டும், வேகம் நாகம் (இரண்டு) உம் - நடைவிரைவையுடைய யானைகளிரண்டும், சிங்கம் ஏறு இரண்டொடும் திரண்ட அனன - இரண்டு ஆண் சிங்கங்களுடனே கூடிச் சென்றனபோன்ற, செய்கையார் - தன்மையை யுடையவர்களாய், (சுக்கிரீவனும் அவன் மந்திரிகள் நால்வரும் இராமலக்ஷ்மணர்களும்),—தங்கு சாலம் - நிலைபெற்ற ஆச்சாமரங்களும், மூலம் ஆர் தமாலம் - வேருன்றிய பச்சிலைமரங்களும் ஏலம் - ஏலமரங்களும், வாழை - வாழைமரங்களும, மா - மாமரங்களும், பொங்கு நாகமும் - செழித்து வளர்கின்ற சுரபுன்னைமரங்களும், துவன்று - நெருங்கிய, சாரலூடு - மலைச்சாரல்களின வழியாக, போயினர் - செல்லலானர்கள: (எ - று.)

சிங்கவேறு' எனபதை அடுத்துள்ள 'இரண்டு' என்ற சொல், 'மா' என்றதனேடும், 'நாகம்' என்றதனேடும் கூட்டப்பட்டது, தகுதிபற்றி. ஆளியேறு - சுக்கிரீவனுக்கும், புலியிரண்டு - அவன் மந்திரிகள நால்வருள் நளன நீலன எனபவர்க்கும், யானையிரண்டு - அநுமான் தாரன் எனபவர்க்கும், சிங்கவேறிரண்டு - இராமலக்ஷ்மணர்க்கும் உவமையெனக காண்க. ஏறு - ஆண்மைப் பெயர். ஆளி - யாளியென்பதன் மரூஉ; யாளி சிங்கம்போல்வதும் துதிக்கையுடையது மாகியதொரு மிருக விசேஷம். பல பராக்கிரமங்களின் மிகுதிபற்றி, யாளி முதலியன ஒப்பாம். மிருகராஜனுகிய சிங்கம உவமை, சக்கரவாததி திருககுமாரர்களுககு ஏற்றது; பிறவும் இங்ஙனங் காண்க; அரிய பெரிய மலைகளிலே சிரமமினறி அலக்ஷ்யமாக ஏறியும் இறங்கியும் கம்பீரமாகச் செல்லுதற்கும் இவ்விலங்குகள் ஒப்பாகத்தக்கன. திரண்ட - பெயர். நாகமும் என்ற உம்மை - செவவெண்ணின் ஈற்றதாகிய எச்சவும்மை. வேகநாகம், ஸிம்ஹம், ஸாலம், மூலம், தமாலம், ஏலம், நாகம் - வடசொறகள். நாகம் - வேறேயொருவகை மரமுமாம். மூலம் ஆர் - அடி பருத்த என்றும், தலைமைபெற்ற என்றும் உரைக்கலாம். சார்ந்துள்ளது சார

லென மலைப்பக்கத்துக்குக் காரணக்குறி. 'தமாலமேலமாலைபோற் பொங்கு நாகம்,' 'தமால மேகமாலைபோற் பொங்குநாகம்,' 'தமால மேலமாலுடன் பொங்குநாகம்' என்பன - பாடபேதங்கள்.

இக்கவிமுதலாகவே வாலிவதைப்படலமென்று சிலபிரதிகளிற் காணப் படுகின்றது.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று விளச்சீரும் மற்றையாறும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள்; இவற்றைச் சந்தவிருத்த மென்றலு முண்டு: இனி, இவற்றை முதலாறு சீர்களையும் மூன்று பெருஞ்சீர்களாகப் பிரித்துக் கலிவிருத்தமென்றல் ஒருசாரார் கொள்கை. (௩௪)

[இதுமுதல் ஏழுகவிகள் - அம்மலைவழியின் வருணனை.]

௩௫. உழையுலாநெடுங் கண்மாதருசலூசலல்லவே
தழையுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவே
மழையுலாவுமுன்றிலல்லமன்றனாறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே.

(இ - ள்.) (அந்தவழி யெல்லாம்),—உழை உலாம் நெடுங் கண் மாதர் ஊசல் - மானபார்வை போன்ற (நோக்கமுள்ள) நீண்ட கண்களையுடைய வானரமகளிர் ஆடும் ஊஞ்சல்களும்,—ஊசல் அல்லவே - அந்த ஊஞ்சல்களல் லாத இடங்களிலே, தழை உலாவு சந்து அலர்ந்த சாரல் - தழைகள் காற்றி லசைந்தாடப்பெற்ற சந்தனமரங்கள மலர்ந்த மலைச்சாரல்களும்,—சாரல் அல்லவே - அச்சாரல்களல்லாத இடங்களிலே, மழை உலாவு முன்றில் - மேகங்கள் சஞ்சரிக்கப்பெற்ற (மலைகளின) முன்னிடங்களும்,—அல்ல - அவையல்லாத இடங்களில், மன்றல் நாறு குழை உலாவு சண்பகம் சோலை - வாசனை வீசுவனவும் தளிர்விளங்குவனவுமான சண்பக மரங்களினாலாகிய சோலைகளும்,—சோலை அல்ல - அச்சோலைகளல்லாத இடங்களில், பொன் செய் குன்றமே - பொன்னை உறபததிசெய்கின்ற சிறுமலைகளுமேயா யிருந் தன; (எ - று.)

உலாம் - உலாவும் எனபதன்விகாரம்; இது உவமவாசகமாய் நின்றது. உழை - மான்; ஆகுபெயராய் அதன நோக்கினை யுணர்த்திற்று. இனி, உழை உலாம் - நோக்கத்தாற் பக்கங்களில் உலாவுகின்ற எனறலுமாம். முன்றில்= இல்முன்; இலக்கணப்போலி; வீட்டின்முன்னிடம்; இங்குமுன்னிடமென்ற மாத்திரமாயிற்று. சண்பகம் - சம்பக மென்ற வடசொல்லின் விகாரம். பொன்செய்குன்றம் - பொன்உண்டாகப்பெற்ற குன்றுகள்; பொன்மயமான குன்றுக ளென்றும், விளையாட்டின்பொருட்டுப் பொன்னு லியற்றப்பட்ட செய்குன்றுகள் - [செயற்கைமலைகள்] என்றும், அழகுசெய்கின்ற குன்றுக ளென்றும் உரைப்பினும் அமையும். ஊசல், ஊசலல்ல சாரல், சாரலல்ல முன்றில், அவையல்ல சோலை, சோலையல்ல குனறம் எனத் தொடர்ச்சிப்

படுத்திச்சொன்னது, ஒற்றைமணிமாலேயணி; இதனை வடநூலார் எகாவளி யலங்கார மென்பர். பினபினனாக வருவனவற்றிற்கு முனமுன்னாக வந்த வற்றை விசேஷ்யங்களாகவேனும விசேஷணங்களாகவேனுஞ் சொல்லுதல், இதன் இலக்கணம். இங்கு விசேஷணமாகக் கூறியது. "நெனமலை யல்லன நிறைவருதாளம், சொனமலையல்லன தொடுகடலமிர்தம், நன்மலை யல்லன நதிதருநிதியம், பொன்மலையல்லன மணிபடு புளினம்" என்ற பாலகாண்டச் செய்யுளும் இவ்வாய்பாடமைந்ததாதல் காண்க. (நடு)

நகூ. அறங்களூறுமேனியாரரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோதையாற்
கறங்குவார்கழற்கலன்கலிப்பமுநதுகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே.

(இ - ள்.) அறங்கள் நாறும் மேனியார் - தருமங்களவிளங்குந் திருமேனி யையுடையவர்களான இராமலக்ஷ்மணர்கள், அரி கணங்களோடும் - வானர வீரர்களுடைய கூட்டஙகளுடனே, அங்கு - அம்மலைச்சாரல்வழியில், இறங்கு போதும் ஏறு போதும் - இறஙகுகினறபொழுதும் ஏறுகினறபொழுதும, கறங்கு வார் கழல் கலன் - (அவர்கள் காலிலணிந்துள்ள) ஒலிக்குமியல்பை யுடைய நீண்ட வீரக்கழலாகிய ஆபரணம், ஈறு இலாத ஓதையால் கலிப்ப- எல்லையில்லாத ஓசையுடனே ஒலிததலால், முந்து கண்முகிழ்த்து உறங்கும் மேகம் - முனபு (அம்மலைகளிற்) கண்மூடியுறங்கிக் கொண்டிருந்த மேகஙகள், நனகு உணர்ந்து - நனறாகத் தூக்கந்தெளிந்து, மாகம்மீது உலாவும் - பெரிய வானத்திற் சஞ்சரிக்கும; (எ - று.)

மலைச்சாரல்களிற் படிந்து கிடக்கின்ற மேகங்கள அந்த இவர்கள் விசைபட நடந்துவருதலாற் சிதறுவனவாயின; இவாகள் இறஙகியும் ஏறியும் நடக்கின்றபொழுது இவர்கள காலணிகள ஒலிதது ஆரவாரிக்கினறன; இவ வியல்புகளைக்கொண்டு, இவவாறு உதபிரேக்ஷிததாா; தற்குறிப்பேற்றவணி. இராமலக்ஷ்மணர்களுடைய தோறறததைக் காணும் பொழுதே அவர்கள் தருமகுணமுள்ளவாகளெனபது நன்கு விளங்கும்படியிருத்தலால், 'அறங்கள் நாறுமேனியார்" என்றார். 'அரிக்கணங்கள்' எனபது, கீழ்க்கூறிய ஐந்து வான ரர்களை. கணம, மேகம் - வடசொறகள். கழற்கலன் - இருபெயரொட் டுப் பண்புத்தொகை. (நசு)

ந எ. நீடுநாகமூடுமேகமோடநீருமோடநே
ராடுநாகமோடமானயானையோடவாளிபோ
மாடுநாகநீடுசாரல்வாளையோடும்வாவியூ
டோடுநாகமோடவேங்கையோடும்யூகமோடுமே.

(இ - ள்.) (இவர்கள் விசைபட வரும்போது), மேகம் நீடு நாகமூடு ஓட - (கீழ்க்கூறியபடி) மேகங்கள் (சிதறியெழுந்து) உயர்ந்த வானத்திலே ஓடாநிற்க, நீரும் ஓட - (அஙஙனஞ் சிதறும் மேகங்களினின்று) நீரும் வழிந்

தோட,—மாடு நாகம் நீடு சாரல் - பக்கங்களிற் சுரபுன்னைமரங்கள் செழித்து வளரப்பெற்ற அம்மலைச்சாரல்களில், (இவர்கள் வரும் விசையால் அஞ்சி), சேர் ஆடு நாகம் ஓட - எழுந்து படமெடுத்தாடு மியல்புள்ள பாம்புகள் ஓடிப் போக, மானம் யானை ஓட - தணியாக்கோபமுடைய யானைகள் ஓட, ஆளி போம் - சிங்கங்களும் (அவற்றினுடனே) செல்லும்; வாவியூடு வாளையோடும் ஓடு நாகம் ஓட-சுனைகளிலே வாளைமீன்களுடனே ஓடுமியல்புள்ள நீர்ப்பாம்பு களும் அஞ்சிவிலக, வேங்கையோடும் யூகம் ஓடும் - புலிகளுடனே கருங் குரங்குகளும் (அச்சத்தால்) ஓடுவனவாயின; (எ - று)

'நாகம்' என்பது-ஆகாயம், பாம்பு, சுரபுன்னைமரம் முதலிய பல பொருள் குறிக்கும் ஒருபெயர்த்திரிசொல். முதலடியில் 'நீடுநாகம்' என்றதனால் வானமெனபதும், இரண்டாமடியில் 'ஆடுநாகம்' என்றதனால் பாம்பென் பதும், மூன்றாமடியில் 'நாகநீடு' என்றதனால் மரமென்பதும், நான்காமடியில் 'வாவியூடோடுநாகம்' என்றதனால் நீர்ப்பாம்பென்பதும் விளங்கின. இவற் றிற்கு வேறுகூறினும் பொருந்துமாயிற் கொள்க. அச்சத்தால் தடுமாறியோடு மிடத்து, தம்மிற்பகையுடையனவும் ஒருங்குசேரலாகும். மேகங்கள் நீர் சொரிந்துகொண்டு ஓடுதலையும் அச்சத்தாலானதாகக் குறித்தார். (கஎ)

கஅ. மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவவல்லமா
தெருண்டிலாமதத்தயானைசீறிநின்றுசிந்தலா
லிருண்டகாழகிற்றடத்தொடிற்றுவீழ்ந்தசந்துவந்
துருண்டபோதழிந்ததேதனொழுக்குபேரிழுக்கினே.

(இ - ள்.) தடத்து - மலைப்பக்கங்களிலே, மால் தெருண்டிலா மதத்த யானை - மயக்கந்தெளிந்திலாத மதத்தையுடைய யானைகள், சீறி நின்று - கோபங்கொண்டுநின்று, சிந்தலால் - தாக்குதலினால், இற்று வீழ்ந்த - முறிந்து விழுந்த, இருண்ட காழ் அகில் ஒடு - கருநிறங்கொண்ட வயிரம்பற்றிய அகில்மரங்களுடனே, சந்து - சந்தன மரங்களும், வந்து உருண்டபோது - உருண்டுவந்தபோது, அழிந்த (அசைவுபடுதலால்) சிதைந்த, தேன் - தேன் கூடுகளிலுள்ள தேன, ஒழுக்கு - ஒழுகுதலினாலாகிய, பேர் இழுக்கின் - மிக்க வழுக்கலினால்,—மருண்ட மா மலை தடங்கள் செல்லல் ஆவ அல்ல - (அனைவரும்) மருளும்படியான பெரியஅம்மலைகளின்வழிகள் எளிதில்நடந்து செல்லத்தக்கன வல்லவாயிருந்தன; (எ - று.)

மயக்கந்தெளியாத மதயானைகள் சீற்றங்கொண்டு மோதுதலால் முறிந்து விழுந்த அகில்மரங்களும் சந்தனமரங்களும் உருளும்போது அம்மரங்கள் படுத லால் அம்மலைகளிற்கட்டியுள்ள தேனிறால்கள் சிதைய அவற்றினின்று வழி கின்ற தேன்பெருக்கினால் அம்மலைகளின் வழிகள் வழுக்கலுடையனவாகி நடந்து செல்வார்க்குக் கால்சறுக்குதலால் எளிதிற் செல்லவொண்ணாதபடி யிருந்தன என்பதாம்

"குறவரும்மருளுங்குன்றம்" என்றபடி பலர்க்கும்அச்சம் விளைத்தலால், 'மருண்டமாமலை' எனப்பட்டது. மருண்ட - மருளுதற்குக் காரணமான

எனப் பெயரெச்சம் காரியப்பொருளது; 'நோய்தீர்ந்த மருந்து' என்றவிடத்துப் போல. ஆல் - பெயர், அல்ல - முற்று 'தடத்தொடு' என்பதிலுள்ள 'ஒடு' உருபு பிரித்து 'அகில்' என்பதனோடு கூட்டப்பட்டது ஒழுக்கு - ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'ஒழுக்கு பேரிழுக்கு' என இயல்பானது, செய்யுளோசை நயம்பற்றி; இன் - ஏது. (௩௮)

௩௯. மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துவிண்குலா
யனல்பரப்பவொப்பமீதிமைப்பவந்தவிப்பபோற்
புனல்பரப்பவொப்பிருந்தபொன்பரப்புமென்பவா
விளைவியற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே.

(இ - ள்.) மினல் மணி குலம் - மின்னுதலையுடைய (பதுமராக) இரத்தினங்களின் கூட்டம், துவன்றி - நிறைந்து, வில் அலர்ந்து - ஒளியினாற் பரவி, விண் குலாய் - ஆகாயமளவும் விளங்கி, அனல் பரப்ப ஒப்ப மீது இமைப்ப - நெருப்புப்பரவுவனபோல அம்மலைகளின்மேற் பிரகாசிக்க,—வில் தட கை இளைய வீரர் ஏகுகின்ற குன்றம் - வில்லையேந்திய பெரிய கையையுடைய இந்தவீரர் [இராமலக்ஷ்மணர்] செல்லுகின்ற அம்மலைகள், வந்து அவிப்ப போல் - விரைந்துவந்து (அந்நெருப்பை) அவிப்பனபோல, புனல் பரப்ப ஒப்பு இருந்த பொன் பரப்பும் - நீர் பரவுவனபோ லிருந்த பொன்னினொளியைப் பரவச்செய்யும், என்ப - என்று (தெரிந்தகவிகள்) வருணிப்பார்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை. 'என்ப' என்பதையும் அசை யென்னலாம்.

அம்மலைகளிற் பதுமராக ரத்தினங்கள் நெருப்புப்போல ஒளிவீச அந்நெருப்பையவிக்கும் நீர்ப்பெருக்குப்போலப் பொன்னொளி வீசுமென்பது கருத்து.

மினல் - மின்னல்: தொகுத்தல். மணி-இங்கே, செம்மணி; பதுமராகம், மாணிக்கம். குலாய், குலாவு - பகுதி: ஈறுதொக்கது. பரப்ப, அவிப்ப - பலவின்பாற் பெயர்கள். இமைப்ப - செயவெனெச்சம். (௩௯)

௪௦ மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோ
லருவிபாயுமொன்றினொன்றினானைபாயுமேனலிற்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம்.

(இ - ள்.) மாடு எலாம் - அம்மலையிடங்களி லெல்லாம்,—மருவி ஆடும் வாவிதோறும் - விரும்பி நீராடத்தக்க எல்லாச் சுனைகளிலும், வானயாறு வந்து பாயும் - ஆகாசகங்காநதி வந்துபாயும்; ஆர் தடங்கள் மீனின் ஏறு - நீர் நிரம்பிய சுனைகளிலுள்ள ஆண்மீன்கள், இருவி பாயும் - (புனங்களிலுள்ள) தினைத்தாள்களினமேற் பாயும்; அருவி ஆறு போல் பாயும் - நீரருவிகள் நதிகள்போலப் பெருகும்; ஆனை ஒன்றின் ஒன்றின் பாயும் - யானைகள் ஒன்றன்மேல் ஒன்று பாயும்; குருவி ஏனலில் பாயும் - குருவிகள் தினைக்கதிர்

களிற் பாயும்; மந்தி ஓடி கோடு பாயும் - பெண் குரங்குகள் விரைந்து மரக்கிளைகளின் மேற் பாயும்; (எ - று.)

அம்மலைகளின் பலவகைவளங்களை இதனாற் கூறுகின்றார். அம்மலைகளிலுள்ள விரும்பிநீராடத்தக்க நீர்நிலைகளில் ஆகாசகங்காநதி வந்து பாயுமென்றதனால், அம்மலைகளினது வானத்தையளாவிய மிக்கவுயர்ச்சி தோன்றும்; தொடர்புயர்வு நவிற்சியணி. அம்மலைச்சுனைகளிலுள்ள ஆண்மீன்கள் அருகிற் புனங்களிலே இருக்கின்ற தினைத்தாள்களின்மேற் பாயு மென்றதில், மீன்களின்கொழுமை கூறுமுகத்தால் அம்மலைகளின் நீர்வளத்தை விளக்கியவாறாம். அருவி - மலைநீர்ப்பெருக்கு. தனித்தனிசிறியதெனத்தக்க அம்மலையருவி ஒவ்வொன்றுமே நதிபோலப்பாயு மென்றதனால், அந்நீர்ப்பெருக்கின் மிகுதி உணர்த்தப்பட்டது. அம்மலைகளிலுள்ள யானைகள் கொழுத்து மதமேறி ஒன்றோடொன்று மோதிப் பொருமென்க. தினைவளத்தாலும் லோபத்தாற்கடிந்து காப்பவரொவரு மில்லாமையாலும், குருவிகள் தாம்விரும்பியபடி தினைக்கதிர்களிற் பாய்ந்து இரைகொள்ளும். ஆண்பாலினும் வலிமைகுறைந்ததெனத்தக்க பெண்பாலாகிய மந்தியும் ஓடி மரக்கிளைகளின்மேல் தாவுமென்றது, அம்மலைக்குரங்குகளின் கொழுமை கூறியபடி. மந்தி- குரங்கின் பெண்மைப்பெயர். கோடு - மலையுச்சியென்றலும் அமையும். இருவி - அறுப்பறுக்கப்பட்ட தினைத்தாள். 'ஒன்றினொன்றின்' என்பதில், ஈற்றிலுள்ள இன - சாரியை. (௪௦)

௪௧. தேனிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்லுநாண்
மீனிழுக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பவால்
வானிழுக்குமேலவாசமன்றனறுகுன்றமே.

(இ - ள்.) வான் இழுக்கும் - வானத்திலுள்ளாரையும் (விரும்பியுட்கொள்ளும்படி) இழுக்கின்ற, ஏலம் வாசம் மன்றல் - ஏலக்காய்களின் நறுமணம், நாறு - வீசப்பெற்ற, குன்றம் - மலைகள்,—தேன் இழுக்கு சாரல் வாரி செல்ல - (முன்கூறியபடி) தேன் பெருகுதலால் வழுக்குகின்ற சாரல்களில் நீர் வெள்ளம் பெருகுதலால்,—மீது செல்லும் நாள்மீன் இழுக்கும் - வானத்திற்செல்லுகின்ற நக்ஷத்திரங்களை இழுக்கும்; அன்றி - அல்லாமலும், வான வில் இழுக்கும் - ஆகாயத்திற் காணப்படுகின்ற இந்திரதனுசை இழுக்கும்; வெள் மதி கூன் இழுக்கும் - வெண்மையான இளம்பிறைச்சந்திரனை இழுக்கும்; மற்று உலாவு கோள் இழுக்கும் - மற்றும் வானத்திற்சஞ்சரிக்கின்ற கிரகங்களை இழுக்கும்; என்ப - என்று (கவிகள்) வருணிப்பர்; (எ - று.) —ஆல் - அசை.

அம்மலைகளின் உயர்வையும் அவற்றிற்பெருகுகின்ற நீர்ப்பெருக்கின் மிகுதியையும் நன்குவிளக்குந் தொடர்புயர்வுநவிற்சியணி. இழுக்குசாரல் - வினைத்தொகை. நாள்மீன் - தினத்தைக் குறிக்கின்ற அசுவினி முதலியன. இழுக்கும், இழு - பகுதி. கூன் - வளைந்த வடிவம். மற்று உலாவுகோள்

நவக்கிரகங்களுள் சந்திரன் நீங்கலாகச் சூரியன் அங்காரகன் முதலிய எட்டு வான் - வானவர்க்கு இடவாகுபெயர். வாச மன்றல் - ஒருபொருட் பன்மொழி. 'வானிழுக்கு மேலவாய மன்றனாறு' என்ற பாடத்திற்கு - மேல ஆய என்றுபிரித்து, மேன்மையுடையனவான (பலவகை) வாசனைகள் வீசுகின்ற என்று பொருள் காணலாம். (௪௧)

[இராமன் முதலியோர் கிஷ்கிந்தமலையைச்சார்ந்து ஆலோசித்தல்.]

௪௨. அன்னதாயகுன்றினாறுசென்றவீரரைந்தொடைந்
துன்னலாயயோசனைக்குமும்பரேறியிம்பரிற்
பொன்னினாடிழிந்ததன்னவாலிவாழ்பொருப்பிடந்
துன்னினார்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார்.

(இ - ள்.) அன்னது ஆய - அத்தன்மையதான, குன்றின ஆறு - மலை வழியிலே, சென்ற - போன, வீரர் - (இராமபிரான் முதலிய) வீரர்கள்,— ஐந்தொடு ஐந்து உன்னல் ஆய யோசனைக்கும் உம்பர் ஏறி - ஐந்தோடுகூடிய ஐந்து [பத்து] என்று எண்ணத்தக்க யோசனைதூரங்கட்கும் மேற்கடந்து, பொன்னின் நாடு இம்பரில் இழிந்தது அன்ன வாலி வாழ் பொருப்பு இடம் துன்னினார்கள் - பொன்மயமான தெய்வலோகம் இங்கு இறங்கிவந்தாற்போன்றதான வாலிவாழும் (கிஷ்கிந்த) மலையினிடத்தை யடைந்து, நின்று - அங்குநின்று, செய்வது என்னை என்று சொல்லுவார் - இனிச் செய்யவேண்டுவதென்ன வென்பதைக் குறித்து (த் தமக்குட்) பேசிக்கொள்ள லானார்கள்; (எ - று.)

அன்னதாய ஆறெனக. இரண்டாமடியில், 'உம்பரேறியிம்பரில்' என்றது - தொடைமுரணின்பாற்படும். (௪௨)

கலன்காண்படலம் முற்றிற்று.



ஐந்தாவது

## வாலிவதைப்படலம்.

வாலியினது வதையைப்பற்றிக் கூறும் பாகம். வாலிவதை - ஆறும் வேற்றுமைத்தொகை. இராமன வாலியைக் கொனற செய்தியை உணர்த்து தலால், இதில் ஆறனுருபு - செயப்படுபொருளது. வதை - கொலே; வத மென்ற வடசொல் ஈறுதிரிந்தது.

[அச்சமயத்தில் இராமபிரான் தன்கருத்தை வெளியிடுதல்.]

க. அவ்விடத்திராமனீயழைத்துவாலியானதோர்
வெவ்விடததின்வநதுபோர்விளேக்குமேல்வைவேறுநின்
றெவ்விடததுணிநதமைமநததென்கருத நிதென்றனன்
றெவ்வடக்கும்வெனறியானுநனறிதென்றுசிநதியா.

(இ - ள்.) அ இடத்து - அச்சமயததில், தெவ அடக்கும் வென்றியான, இராமன - பகைவர்களேயழித்து அடையும் வெற்றியையுடையவனுன ஸ்ரீராமபிரான், சிந்தியா - ஆலோசிதது, இது நனறு என்று - இதுதான நல்ல தென்று ஒன்றைத்துணிந்து, (அதனேச் சுக்கிரீவனே நோக்கிச் சொல்பவ னுய்,)— நீ—, வந்து - சென்று, அழைதது - (வலியப் போர்க்கு) அழைத்து, வாலியானது ஓர் வெவ விடததின போர விளேகரும் எல்லை - வாலியாகிய ஒப்பற்ற கொடிய விஷததுடனே எதிாததுயுததஞ் செய்யும்பொழுது, வேறு நின்று எவ்விட - வேறுக (ஓரிடததில யான மறைந்து) நின்று அம்பு செலுததுவதாக, துணிந்து அமைந்தது - நிச்சயித்துப் பொருந்தியதாகிய, இது—, என கருதது - என துகருதது,' எனறனன - என்று சொல்லி யருளி ஞன், (எ - று.)—உம்மை - இசைநிறை.

கிஷ்கிந்த மலேயையடைந்து இனிச் செய்வ தெனனவெனபதைக குறித்து அனேவரும பேசி யாலோசிககினற சமயத்தில், இராமபிரான சிறிது சிந்தனே செய்து ஒன்றை நிசசயிததுச் சுக்கிரீவனே நோக்கி, 'நீ சென்று வாலியை வலியப் போர்கரு அழைதது அவனும் நீயும் போர்செய்கையில் நான் தனியே மறைந்து நின்று அவனமேல் அமபுதொடுததெய்து அவனேக கொல்லக் கருதினேன' என்று கூறினனெனபதாம்.

சொற்களேப் பலவிடததுந் துணிதது எடுத்துக் கூட்டி இங்ஙனம் பொருள்கொண்டது, கொண்டுகூட்டுப்பொருள்கோள்; [நன-பொது-சஎ] இது, தொல்காப்பியததில் 'மாட்டு' எனனுஞ் செய்யுளுறுப்பாம். அவவிடத்து எனறனனெனக; அவவிடத்து அழைததுவந்து போர் விளேகருமென்று இயைத்துப் பொருள்கொள்ளவுமாம். எல்லை - பொழுது மிக்க கொடுமை யுடைமைபற்றி, 'வாலியானதோர்வெவவிடம' என்றூர். எவிட என்பது எதுகை நோக்கி எவவிட எனக் குறுக்கலும் விரிததலுமாகிய விகாரங்களே யடைந்தது; "எவவருவெஞ்சிலேததடகைக யிராமன் தன்னே" என்றபெரியு

ாருளிச்செயலிலும் இவ்வாறு காண்க. எவ்விட—ஏவிட; (அம்பினைச்) செலுத்த, அல்லது ஏ விட-அம்பினைச் செலுத்த எனக் காண்க. நல்லோர்க்கு நலிவுசெய்யுந் தீயோரை எவ்வகை உபாயத்தாலாவது, அடக்கவேண்டுமென்னுஞ் சங்கற்பமுடையவ னென்பதும், எவ்வாற்றாலும் வெற்றியையே பெறுபவ னென்பதும், நல்லோர்க்கு நலிவுசெய்பவரையே தனக்குப் பகையாகக் கொள்பவ னென்பதும் விளங்க, 'தெவ்வடக்கும் வெனறியான்' என்றார். சிந்தியா - உடன்பாட்டெச்சம். (க)

[அதுகேட்டவுடன் சுக்கிரீவன் ஆரவாரித்தல்.]

உ. வார்த்தையன்னதாகவானியங்குதேரினன்மக
னீர்த்தரங்கவேலையஞ்சநீலமேகநாணவே
வேர்த்துமண்ணுளோரிரிந்துவிண்ணுளோர்கள்விம்மமே
லார்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே.

(இ - ள்.) வார்த்தை அன்னது ஆக - (இராமபிரான் அருளிச்செய்த) வார்த்தை அத்தன்மையதாக [இராமன அவவாறு சொல்ல என்றபடி], (அது கேட்டமாத்திரததில்),—வான இயங்கு தேரினன மகன் - ஆகாயததில இடைவிடாது செல்கின்ற தேரையுடையவனாகிய சூரியனது குமாரனான சுக்ரீவன், நீர் தரங்கம் வேலை அஞ்ச - நீாமயமானதும் அலைகளை வீசுவதுமான கடல் அஞ்சும்படியாகவும, நீல மேகம் நாண - நீலநிறமுள்ள மேகங்கள் வெட்கமடையும்படியாகவும், மண் உளோா வேர்தது இரிந்து - நிலவுலகத்திலுள்ளார் (அஞ்சி) உடல்வியர்த்து ஓடும்படியாகவும், விண் உளோர்கள விம்ம - மேலுலகததி லுள்ளவர்களும் அஞ்சிக் கலங்கும்படியாகவும், மேல ஆர்த்த - (இராமன வார்த்தைக்கு இணங்கி மகிழ்ந்து) மிகுதியாக ஆரவாரஞ் செய்த, ஓசை - ஓசையானது, ஈசன உண்ட அண்டம் முற்றும் உண்டது - ஸர்வேசுவரனான எம்பெருமானால் (கல்பாந்தகாலத்தில்) உட்கொள்ளப் படுகின்ற அண்டகோளம் முழுவதையும் வியாபித்தது; (எ - று.)

அச்சுக்கிரீவனது ஆரவாரம் அண்டகோளம் முழுவதும் கேட்கும்படியாயிருந்த தென்பதாம். அவ்வாரவாரத்தின் மிகுதியை விளக்கும் அதிசயோக்தி இது. இப்பேரொலி கடல் முழக்கத்தினும இடி முழக்கத்தினும் பெரியதாயிருந்த தென்பது, இரண்டாமடியால் விளங்கும். இரிந்து=இரிய; எச்சத்திரிபு. வேர்த்தல் - அஞ்சுதலாலும், ஓடுதலாலும் ஆவது. ஓசை அண்ட முற்றும் உண்டது - உண்ணுதலை உண்பதுபோலச் சொன்ன மரபுவழுவமைதி. வார்த்தா, தரங்க வேலா, நீலமேகம், ஈசன், அண்டம் - வடசொற்கள்.

இனி, முந்தின செய்யுளோடு இச்செய்யுளைக் குளகமாக்கி, (க) அப்பொழுது இராமன (சுக்கிரீவனை நோக்கி) நீ அழைத்து வந்து வாலியானதோர் வெவ்விடத்தின் போரவிளைக்கும் எல்லை (நான) வேறு நின்று எவவிடத்துணிந்து அமைந்தது இது எனகருத்து' என்றனன்; (உ) வார்த்தை அன்னதாக, (க) எவ்வாற்றாலேனும் பகைவனை யடக்கி வெற்றி கொள்ள

வேண்டு மென்றிருக்கின்றவனென (உ) வான் இயங்கு தேரினன்மக(க)னும் நன்று இதுவென்று சிந்தியா [நல்லது இதுவென்று எண்ணி அச்சொல்லுக்கு இணங்கி] (உ) நீர்த்தாங்கவேலை யஞ்ச * * * ஆர்த்த ஓசை அண்டமுற்றும் உண்டது என்று அந்வயித்துப் பொருள் கொள்ளலுமாம். (கூ)

[சுக்கிரீவன்வலியப் போர்க்கு அழைத்துத் தோள்தட்டிக் கர்ச்சிக்கின்ற முழக்கம், தூங்குகின்ற வாலியின் செவிகளில் நுழைதல்.]

ங. இடித்து ரப்பி வந்து போரெ திர்த்தி யேல டர்ப்பனென்
றடித்த லங்கள் கொட்டி வாய்ம டித்து டுத்த லங்குதோள்
புடைத்து நின்று ளைத்த பூசல் புக்க தென்ப மிக்கிடந்
துடிப்ப வங்கு றங்கு வாலி திண்செ வித்தொ ளைக்கணே.

(இ - ள்.) (உடனே சுக்கிரீவன), அடுத்து - (கிஷ்கிந்தாபுரியைச்) சமீபித்து, வாய் மடித்து - உதடுகளை மடித்துக்கொண்டு, வந்து போர் எதிர்த்தியேல் அடர்ப்பன் என்று - 'வந்து எதிர்த்து (என்னுடன்) போர்செய்வையானால் (உன்னைக்) கொல்வேன் (யான்)' என்று இடித்து உரப்பி - இடியிடித்தாற் போல அதட்டி, அடி தலங்கள் கொட்டி - கால் கொட்டிக்கொண்டு, அலங்கு தோள் புடைத்து - விளங்குகின்ற தோள்களைத் தட்டி, நின்று - நிலைநின்று, உளைத்த - வலியப் போர்க்கு அழைத்த, பூசல் - ஆரவாரமானது, அங்கு உறங்கு வாலி திண் செவி தொளைக்கணே - அக்கிஷ்கிந்தா புரியினுள்ளே தூங்கிக்கொண்டிருக்கின்ற வாலியினுடைய வலிய காதுகளின் துளையிலே, மிக்கு இடம் துடிப்ப புக்கது - (அவனுக்கு) இடப்பக்கம் மிகுதியாய்த் துடிக்கும்படி நுழைந்தது; (எ - று)—என்ப - அசை.

இங்ஙனம் சுக்கிரீவன் அறைகூவிக் கொக்கரிக்கின்ற முழக்கம் செவிப்படுகின்ற சமயத்தில் வாலிக்கு உடனே நேரும் பெருந்தீங்கிற்கு அறிகுறியாக இடக்கண்ணும் இடத்தோளும் துடித்த செய்தியையும் இதிற் கூறினார். ஆடவர்க்கு இடந்துடித்தல், தீங்கிதம். 'அடித்தலங்கள் கொட்டி' என்பதற்கு - தொடை தட்டி யென்று உரைப்பாருமுளர். வாய்மடித்தல் - கோபக்குறி. உளைத்தல் - அழைத்தல்; ஒலித்தலுமாம் பூசல் - பேரொலி. (ங)

வேறு.

[அப்பேரொலியை வாலி கேட்டமை.]

ச. மாற்பெருங் கடகரி முழக்கம் வாளரி
யேற்பது செவித்தலத் தென்ன வோங்கிய
வார்ப்பொலி கேட்டன னமளி மேலொரு
பாற்கடல் கிடந்ததே யனைய பான்மையான்.

(இ - ள்.) அமளிமேல் - படுக்கையின்மேல், ஒரு பால் கடல் கிடந்ததே அனைய - ஒருபாற்கடல் படுத்திருந்தது போன்ற, பான்மையான் - தன்மையையுடையவனாகிய வாலி,—மால் பெருங் கட கரி முழக்கம் வாள் அரி செவி

தலத்து எற்பது என்ன - மயக்கங்கொண்ட பெரிய மதயானையின் முழக்கத்தைக் கொடிய சிங்கம் காதுகளில் ஏறுக்கொண்டாற்போல, ஓங்கிய ஆர்ப்பு ஒலி கேட்டனன் - மிகுதியான அந்த(ச் சுக்கிரீவனது) கர்ச்சனை முழக்கத்தைச் செவியுற்றான ; (எ - று.)

ஒருமலைக்குகையினுள்ளே படுத்து உறங்கிக்கொண்டிருக்கின்ற சிங்கம் மதமயக்கங்கொண்ட யானையின கர்ச்சனையைக் கேட்டுத் துயிலுணர்ந்தாற் போல, குகைபோல மலையிடையேயிருக்கின்ற கிஷ்கிந்தாபுரியினுள்ளே படுக்கையிற் படுத்து உறங்குகின்ற வாலி சுக்கிரீவன் செருக்கி அறைகூவுகின்ற முழக்கத்தைக் கேட்டுத் துயிலுணர்ந்தனன் என்பதாம் ; உவமையணி. வாலியினது மகாபலமும், சுக்கிரீவனது பலக்குறைவும், அவனால் இவன் எளிதில் அழிக்கத்தக்கவனா யிருத்தலும், இம்முழக்கங்கேட்ட மாத்திரத்தில வாலி மகிழ்ச்சியுற்றனனேயன்றிக் கலக்கமுற்றில னென்பதும் தோன்ற, இவ் வொப்புமை கூறினார். அமளி - மெத்தை. வெண்ணிறமும் கம்பீரமான தோற்றமும் பற்றி, 'பாற்கடல் கிடந்ததேயனைய பானமையான' என்றார். ஆர்ப்பு ஒலி - ஒருபொருட் பன்மொழி.

ரகரவொற்றோடு கூடிய வல்லொற்றும் றகரவொற்றும், ஓசையொப்புமைபற்றி, விரவி எதுகை யமைக்கப்பட்டன.

இது முதல் இருபத்து நான்கு கவிகள் - இக்காண்டத்தின் கடவுள் வாழ்த்துப்போன்ற கலிவிருத்தங்கள். (ச)

[வாலி சிரித்தல் ]

ரு. உருத்தனன்பொரவெதிர்ந்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினனமனத்தினெண்ணினன்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
திரித்ததவ்வுலகமோரேழொடேழையே.

(இ - ள்.) வரை தட தோளினன - மலைகள் போன்ற பெரிய தோள்களையுடையவனான வாலி,—இளவல் உருத்தனன பொர எதிர்ந்து உற்றமை - தனது தம்பியான சுக்கிரீவன் கோபித்துப் போர்செய்தற்கு எதிர்த்து வந்தமையை, மனத்தின எண்ணினன் - மனத்தில் ஆலோசித்து, சிரித்தனன - சிரித்தான் ; அ ஒலி - அந்தச்சிரிப்பினோசையானது, அ உலகம் ஓர் ஏழொடு ஏழை - அந்த உலகங்கள் பதினான்கையும, திசையின அப்புறத்து இரித்தது - திக்குக்களின எல்லைக்கு அப்பால் அஞ்சியோடும்படி செய்தது ; (எ - று.)

அச்சிரிப்பொலி எல்லாவுலகத்து உயிர்களையும் அஞ்சி நிலைகுலைந்து கெடுந்தூரம் ஓடும்படி செய்த தென்பதாம். அவ்வொலியின மிகுதியை விளக்கும் உயர்வு நவிற்சி. முன்பு போரிற் பலமுறை பலபடி தோற்றோடி அஞ்சி யொளித்தவன் மீண்டுவந்து வலியப் போர்க்கு அழைத்தல பற்றிய இகழ்ச்சியினாலும், கோபத்தாலும், வாலி வீராட்டகாசஞ்செய்தன னென்க. இளவல் - இளையோன ; அல் - பெயர்விகுதி. இரித்தது - இரிந்தது எனபதன் பிற

வினை, 'உருத்தனன்' என்பதை 'சிரித்தனன்' என்பதனேடுகூட்டி புணர்ப் பினுமாம். (ரு)

[வாலி எழுதலும், தோள்களை உதறுதலும்.]

சு. எழுந்தனன்வல்விரைந் திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையா
னழுந்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே.

(இ - ள்.) ஊழி இறுதியில் - கற்பாந்தகாலத்தில், கொழுந் திரை கடல் கிளர்ந்த அனைய - செழுமையான அலைகளையுடைய கடல் (உலகங்களழியுமாறு) பொங்கியெழுந்தாற் போன்ற, கொள்கையான் - தன்மையையுடையவனாய், வல் விரைந்து எழுந்தனன் - (சுக்கிரீவனையழித்தற்பொருட்டு வாலி உடற்பூரிப்புடனே) மிகவிரைவாய் எழுந்தான்; (அங்ஙனம் அவன் கோபாவேசத்தோடு எழுந்ததனு லாகிய அதிபாரத்தால்), அ கிரி அழுந்தியது - அக் கிஷ்கிந்தமலை கீழே சென்றுவிட்டது; தோள் புடை விசித்த காற்றின் - (மற்றும் அவன் தோள்களையுதறியபோது அவனுடைய) தோள்கள் பக்கங்களில் எழுப்பிய காற்றினல், அருகில் மால் வரை விழுந்தன-(அந்தமலையின) அருகிலுள்ள பெரியமலைகள் (நிலைபெயர்ந்து) விழுந்திட்டன; (எ - று.)

வல் - விரைவு குறிக்கும் இடைச்சொல்; இது, சாரியைகளையேற்று வல்லையெனவும், வல்லேயெனவும் நிற்கும். வல் விரைந்து - ஒருபொருட் பன்மொழி. திரைக்குக் கொழுமை - மிகுதியும், வளர்ச்சியும். அழுந்துதல் - பூமியினுள்ளாதல். தோள்புடைவிசித்த காற்று - தோள்கள் வீசுதலினலாகிய காற்று. (சு)

[அவனது கோபாக்கினி.]

எ. போய்ப்பொடித்தனமயிர்ப்புறத்தவெம்பொறி
காய்ப்பொடுற்றெழுவடகனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினு
மீப்பொடித்தனபுகையுயிர்ப்புவீங்கவே.

(இ - ள்) வெம் பொறி - வெவ்விய அனற்பொறிகள், போய் பொடித்தன மயிர் புறத்த - (கோபாவேசத்தால் அவனுடம்பிற்) சிலிர்த்தனவான மயிர்களினிடத்தவாய் எழுந்தன; காய்ப்பொடு உற்று எழு வட கனலும் கண் கெட - (ஊழிக்காலத்திலே உலகங்களையழித்தற்கு) உக்கிரத்தைக் காணமாட்டாமற் கண்பார்வைகெடும்படி, விழி - (வாலியின்) கண்கள், தீ பொடித்தன - கோபாக்கினியைப் பொறிபொறியாய்ச் சிந்தின; உயிர்ப்பு வீங்க - (அவனுடைய) மூச்சுக்காற்று (க் கோபாவேசத்தாற்) பெரிதாயெழ, புகை - (அதிலிருந்து எழுந்த) புகைகள், தேவர் நாட்டினும் மீ பொடித்தன - தேவலோகத்திற்குமேலுஞ் சென்றன; (எ - று.)

'போய்ப் புறத்த - புறத்துப் போயின வென விகுதிபிரித்துக்கூட்டுக. காய்ப்பு - கொதிப்பும், கோபமுமாம். உம்மைகள் - உயர்வுசிறப்பு. கண்கெட - ஒளிகெட என்றும், பெருமைகெட என்றுங் கொள்ளலாம் 'போய்ப்பொடித்தன மயிர் புறத்தவெம்பொறி' என்ற பாடத்திற்கு - இரண்டுவாக்கியமாக்கி யுரைக்கலாம். (எ)

[அவன் கைதட்டுதல்]

அ. கைக்கொடுகைத்தலம்புடைப்பக்காவலின்
றிக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
வுக்கனவுருமினமுலைந்தவும்பரு
நெக்கனநெரிந்தனநின்றகுன்றமே.

(இ - ள்) கைகொடு கைத்தலம் புடைப்ப - (வாலி கோபாவேசத்தோடு) ஒருகையினால் மற்றொருகையைத் தட்ட, (அதனாலாகிய பேரொலியால் அஞ்சி), காவலின் திக்கயங்களும் மதம் செருக்கு சிந்தின - (உலகத்தைத்) தாங்குதலுடைய திக்கஜங்களும் மதத்தினாலாகிய களிப்பை யொழிந்தன; உரும் இனம் உக்கன - இடிக்கூட்டங்கள் வலியழிந்தன; உம்பரும் உலைந்த - (அவ்வொலிமிகுதியாலாகிய அதிர்ச்சியால்) மேலுலகங்களும் நடுங்கின; நின்ற குன்றம் நெக்கன நெரிந்தன - (நிலவுலகத்திற் புடைபெயராது) நிலைபெற்ற மலைகளும் நெகிழ்ந்து நொருங்கின; (எ - று.)

கைக்கொடு—ககரவொற்று - எதுகை நோக்கிவந்த விரித்தல்விகாரம். கொடு - கொண்டு: தொகுத்தல்; மூன்றாம்வேற்றுமைச் சொல்லுருபு. காவல்- காவுதல்: சுமையெடுத்தல்; காவு என்ற பகுதியின் தொழிற்பெயர். இன் - சாரியை. திக்கஜம் - வடமொழித்தொடர். உக்கன, நெக்கன என்றவற்றில் - உகு, நெகு - பகுதி. உரும் இனம் உக்கன - (அவ்வதிர்ச்சியால்) இடிக்கூட்டங்கள் கீழேசிந்தின என்றலுமாம். உலைந்த - முற்று. நெக்கன, முற்றெச்சம். நின்ற குன்றம - அசலமாகிய மலைகள். கையொடுகைபுடைத்ததனாலாகிய ஆரவாரம் எவ்வுலகத்திலுஞ் சென்று நடுக்கத்தை யுண்டாக்கிற்றென்க. உலைதல் - கம்பமடைதல். 'நின்ற குன்றம்' என்றதற்கு - (நிலவுலகத்தைச் சூழ்ந்து) நின்ற சக்கரவாளபர்வதத்தொட ரென்று உரைப்பாருமுளர். (அ)

['வந்தேன், வந்தேன்' என்று சொல்லிக்கொண்டு வாலி எழுதல்.]

கூ. வந்தனென்வந்தனெனென்றவாசக
மிந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன
சந்திரன்முதலியதாரகைக்குழாஞ்
சிந்தினமணிமுடிச்சிகரந்தீண்டவே.

(இ - ள்.) வந்தனென் வந்தனென் என்ற வாசகம் - '(இதோ) வந்துவிட்டேன் வந்துவிட்டேன்' என்று (அப்பொழுது வாலி வீரவாதமாகக்) கூறிய சொற்கள், இந்திரி முதல் திசை எட்டும் கேட்டன - கிழக்குமுதலிய எட்டுத்திக்குக்களிலும் (எல்லாப்பிராணிகளுக்கும்) கேட்டன; மணி முடி

சிகரம் தீண்ட - (அவன் உடல்பூரித்து எழுந்தபோது அவனது) இரத்தின கிரீடமணிந்த (சிரசாகிய) மலைச்சிகரம் பட்டதனால், சந்திரன் முதலிய தாரகை குழாம் சிந்தின - சந்திரனைத் தலைவனாகக்கொண்ட நக்ஷத்திரங்களின் கூட்டங்கள் கீழேயுதிர்ந்தன; (எ - று.)

முதலிரண்டடி - அவனது உத்தரத்தலையும், மற்றையிரண்டடி - அவன் ஓங்கியெழுந்த உயர்ச்சியையும் வருணிக்கின. உயர்வுநவிற்சியணி. இந்திரி - இந்திரனது சம்பந்தமான திக்கு: இந்திரனைத் தலைவனாகக்கொண்டதாகிய கிழக்கு; கிழக்குத்திக்குப்பாலகன், இந்திரன். 'ஐந்த்ரீ' என்ற வடசொல் இந்திரி யென விகாரப்பட்டதென்னலாம். வாசகம் திரா, சந்த்ரன், தாரகா, மணி, சிகரம் - வடசொற்கள். சந்திரனுக்கு நக்ஷத்திரங்கள் மனைவிய ரென்னும்படி சந்திரன் தாராதிபதி யாதலால் சந்திரனை முதல்வனாகக் கொண்ட தாரகைகளின் குழா மென்றார். இனி, 'முதலிய' என்பதற்கு - முதலான என்று உரைத்தல் ஏலாது; சந்திரன் தாரகைகளி லொன்றல்லனாதலால். இந்த 'முதல்' என்றது - "அகரமுதல வெழுத்தெல்லாம்" என்புழிப்போலாது "ஆதிபகவன் முதற்றே யுலகு" என்புழிப்போலும். உயர்வும் பருமையும் வலிமையும் பற்றி, 'முடிச்சிகரம்' எனப்பட்டது. இதனால், வாலி பர்வதாகாரமான தேகமுடையவ னென்பது போதரும். கேட்டன - செவிப்புலனாயின. (க)

[அவன் எழுந்துவரும் விசையால் வீசிய காற்றும், அவனது
மயிர்த்துளைகளினின்று எழுந்த அனற்பொறிகளும்.]

க0. வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பின
மாசையையுற்றனவண்டப்பித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன்குலைந்ததும்பரே.

(இ - ள்.) வீசின காற்றின் - (அவன் விசைபட வரும்போது) வேகமாயெழுந்த காற்றினால், வெற்பு இனம் - மலைகளின் கூட்டங்கள், வேர் பறிந்து நிலைபெயர்ந்தவையாய், ஆசையை உற்றன - திக்குகளின் கடையெல்லையிற் போய்விழுந்தன; வெள் மயிர் பொடித்த வெம்பொறி - (அவனது உடம்பின்) வெண்ணிறமான மயிர்கள் வெளிச்சிதறிய வெவ்விய கோபாக்கினியின் பொறிகள், அண்டம் பித்திகை பூசின - அண்டகோளத்தின் சுற்றுச் சுவரை மறைத்தன; (அத்தீப்பொறிகளைக்கண்டு), அந்தகன் கூசினன் - யமனும் கண்கூசினான்; உம்பர் குலைந்தது - (இமையாக்கண்ணராகிய) மற்றைத் தேவர்களும் நிலைகுலைந்தார்கள்; (எ - று.)

ஆசா, அண்டம், பித்திகா, அந்தகன் - வடசொற்கள். அந்தம் - (பிராணிகளுக்கு) அழிவு: அதனைச்செய்பவன், அந்தகன். 'உம்பர்' என்றது - ஆகுபெயராய், மேலுலகத்தவரைக் குறிக்கும்; ஆகவே, 'குலைந்தது உம்பர்' என்றது - சொல்நிலைநோக்கிய முடிபு. ஆசையை யுறுதல் - திக்கை யடைதல்,

மயிர்பொடித்த வெம்பொறி - ரோமத்துவாரங்களிலிருந்து எழுந்த தீப் பொறிகள். (௰)

[வாலி கோபத்தாற் பற்களைக் கடித்தலும், தோள்களைத் தட்டுதலும்.]

கக. கடித்தவாயெயிறுகுகனல்கள்கார்விசும்
பிடித்தவாயுகுமுருமினத்திற்சிந்தின
தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின்வயங்குகாசரோ.

(இ - ள்.) கடித்த வாய் எயிறு உகு கனல்கள் - (வாலி கோபத்தாற்) கடித்தபொழுது (அவன்) பற்களினின்று வெளிப்பட்ட கோபாக்கினிகள், கார் விசும்பு இடித்த வாய் உகும் உரும் இனத்தின் சிந்தின - கார்காலத்து மேகங்கள் இடித்தபொழுது விழும் இடிகளின் கூட்டம் போல (க் கடுமை யாய் எங்குஞ்) சிதறின; (அவன் தோள் தட்டியபொழுது), வடித்த தோள் வலயத்தின் வயங்கு காசு - சிறந்த (அவனது) தோள்வளைகளில் விளங்கு கின்ற இரத்தினங்கள், தடித்து வீழ்வன என தகர்ந்து சிந்தின - மின்னல் கள் கீழ் விழுந்தாற்போல நொருங்கிச்சிதறின; (எ - று)—அரோ-ஈற்றசை.

வாய் எயிறு - வாயிலுள்ள பற்கள் என்றும், இடித்த வாய் - இடித்த இடங்களில் என்றும் உரைத்தலுமாம். கார் - கருமை யென்ற பண்பின் அடி விகாரப்பட்டது; இங்கே, கருநிறமுடைய மேகங்கள் மழைபொழியும் பருவத்திற்கு இருமடியாகுபெயர். தடித், வலயம் வடசொற்கள். வடித்தல்- தேர்ந்தெடுத்தல். (கக)

[வாலியின் உக்கிரம்]

கஉ. ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரு
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றான்கடை
யாலமுமொத்தனனெவருமஞ்சவே.

(இ - ள்.) (அப்பொழுது வாலி),—எவரும் அஞ்ச - (காண்பவர்) யாவ ரும் அஞ்சும்படி,—ஞாலமும் - பூலோகமும், நால்திசை புனலும் - நான்கு திக்குக்களிலுமுள்ள கடல்களும், நாகரும் - தேவர்களும் [அல்லது பாதாள லோகவாசிகளும்], மூலமும் - (இவற்றிற்கெல்லாம்) ஆதிகாரணமான மகத் தத்வம் முதலிய தத்வங்களும், முற்றிட - அழியும்படி, முடிவில் - (மகாகற் பத்தின்) அந்தத்தில், தீக்கும் - (அனைத்தையும்) எரிக்கின்ற, அ காலமும் - அந்தக் காலாக்கினியையும், ஒத்தனன் - போன்றான்; தான் கடை கடலில் - (முன்பு) தன்னாற் கடையப்பட்ட பாற்கடலினின்று தோன்றிய, ஆலமும் - விஷத்தையும், ஒத்தனன் - போன்றான்; (எ - று.)

சர்வசங்காரகாலத்தில் அனைத்தையும் எரிக்கின்ற கற்பாந்தகாலாக்கினி போலவும், முன்பு தான் கடைந்தபோது பாற்கடலினின்று எழுந்த ஹாலா

ஹாலவிஷம்போலவும் வாலி அதிபயங்கரனாய்க் கோபாவேசங்கொண்டு கொதிப்புடன் போர்க்கு வரலாயினனென்பதாம். காலம் - காலாக்கினிக்கு ஆகுபெயர். அகரச்சுட்டு, பிரசித்திபற்றியது. ஆலம் - ஹாலமென்ற வடசொல்லின் விகாரம். 'காலமும்,' 'ஆலமும்' என்ற உம்மைகள் - ஒன்றை ஒன்று நோக்கி எதிரதும் இறந்ததும் தழுவிய எச்சம். எவரும் - முற்று. மற்றை யும்மைகள் - எண். 'தீர்க்கும்' எனபதும் பாடம். (௧௪)

[அப்பொழுது அவன் மனைவியான தாரை விலக்குதல்.]

௧௫. ஆயிடைத்தாரையென்றமிழ்திற் றோன்றிய
வேயிடைத் தோளினாளிடை விலக்கினாள்
வாயிடைப்புகைவரவாலிகண்வருந்
தீயிடைதன்னெடுங்கூந்தறீகின்றாள்.

(இ - ள்.) ஆயிடை - அப்பொழுது,—தாரை என்று - தாரையென்று பெயர் கூறப்பட்டு, அமிழ்தின் தோன்றிய - தேவாமிருதம்போலத் காணப்படுகின்ற, வேய் இடை தோளினாள் - மூங்கிலின் தன்மையைத் தன்னிடத்தே கொண்ட தோள்களையுடையவள்,—வாயிடை புகை வர - (வாலியின்) வாயினின்று புகைகிளம்ப, வாலி கண் வரும் - அவனது கண்களிலிருந்து வெளியெழுகின்ற, தீயிடை - நெருப்பில், தன் நெடு கூந்தல் தீகின்றாள் தனது நீண்ட கூந்தல் எரிகின்றவளாய், இடை விலக்கினாள் - (போர்க்குப் புறப்பட்டுச் செல்லலான வாலியை) இடையில் விலக்கினாள்; (எ - று.)

அ + இடை = ஆயிடை: செய்யுளிற் சுட்டுநீண்டவிடத்து யகரமெய் தோன்றிற்று. தாரை - ஆவீறு ஐயான வடசொல். ஐம்பொறிகட்கும் இனியளாதல் பற்றி, அமிருதம் போலத் தோன்றியவ ளென்றார். திரண்டு உருண்டு நீண்டு வளைந்து எழும் இளமூங்கில் - மகளிர்தோளுக்கு உவமையாம். 'வேயிடைத் தோளினாள் விரைவிற்பற்றினாள்' என்றும் பாடம். (௧௫)

[வாலி அத்தடையை மீறுதல்.]

௧௬. விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரங்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டென
வுலக்கவின்னுயிர்குடித்தொல்லைமீள்குவன்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள்.

(இ - ள்.) 'மலை குலம் மயில் - மலையில்விளையாடுகின்ற சிறந்த சாதி மயில் போன்றவளே! விலக்கலை விடு விடு - (என்னைத்) தடுத்தலை விட்டிடு விட்டிடு: அ கடல் கடைந்து அமுது கண்டு என - அந்தப்பாற்கடலைக்கடைந்து அமிருதம் உண்டாகப்பெற்றாற் போல, விளித்துளான் உரம் கலக்கி - (என்னை வலியப் போர்க்கு) அழைத்துள்ளவனான சுக்கிரீவனது வலிமையைச் சிதையச்செய்து, உலக்க இன் உயிர் குடித்து - (அவன்) இறக்க (அவனது) இனிமையான உயிரைக் குடித்து, ஒல்லை மீள்குவன் - விரைவில் திரும்பிவருவேன்,' என - என்று (வாலி) சொல்ல,—மடந்தை கூறுவாள். (அவன்)

மனைவியான தாரை (மீண்டும்) சொல்வாள்: (எ - று.)—அதனை அடுத்த கவியிற் காண்க.

மகளிர்க்கு மயில் - சாயலில் உவமம். மயில் குறிஞ்சிநிலத்துப்பறவை யாதலால், மலை மயிலுக்கு அடைமொழியாக்கப்பட்டது. மலையும் மலைசார்ந்த இடமுமாகிய குறிஞ்சி நிலத்தில் விளையாடுதல் வானரவரசியாகிய தாரைக்கும் ஏற்கும். மயில் - இங்கு அண்மைவிளி. மருளுதல் தோன்ற 'மலைக்குல மயில்' என விளித்தாளுமாம். 'விலக்கலை' என்பதை எதிர்மறைபொருமை யேவலாகக் கொண்டு, விலக்காதே யென்று உரைத்து, விடுவிடு - என்னை விட்டிடு விட்டிடு என்றலுமாம். விடுவிடு - அடுக்கு, அணிவுபற்றியது உரம் கலக்கி - மார்பை நிலைகலங்கச் செய்து எனினுமாம். உயிர் குடித்து - உண்ணப்படாதது உண்ணப்படுவது போலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. ஒல்லை-விரைவு குறிக்கும் இடைச்சொல். மீள்குவன்—கு - சாரியை, அன - தன்மை பொருமை வினைமுற்றுவிகுதி. ''அன்னைதயையு மடியாள பணியு மலர்ப், பொன்னினழகும் புவிப்பொறையும்—வன்னமுளா, வேசிதுயிலும் விறன மந்திரி மதியும், பேசி லிவையுடையாள் பெண்'' எனறபடி உத்தம மனைவியாகும் மாதுக்கு இருகக வேண்டிய குணங்களையாவுங் குறை வின்றி நிறைந்த பெண்ணிவ ளென்பது தோன்ற, 'மடந்தை' என்றார். மநதிரி போலச் சமயோசித மறிந்து நலலஆலோசனை சொல்லுந் திறம், இங்குக் கருதத்தக்கது. (கச)

[சுக்கிரீவன் வலியவந்து போர்க்கு அழைப்பதன் காரணத்தைத் தாரை சொல்லுதல்.]

கரு. கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
இற்றையனல்லனுஎீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள்.

(இ - ள்.) 'கொற்றவ - வெற்றியையுடைய தலைவனே! —இற்றையன் அல்லன - (சுக்கிரீவன்) இத்தனைநாள் இருந்தவன் போன்றவனல்லன்; நின் பெருங்குவவு தோள் வலிக்கு ஈடுஉண்டு ஏகுவான் - உனது பெரியதிரண்ட தோள்களின வலிமைக்கு (இத்தனைநாளாய்க்) குழைவுகொண்டு செல்பவனான அவன், பெற்றிலன் - இன்றைக்குப் புதிதாக ஓர் உடல்வலிமையைப் பெற்றானில்லை; பிறந்திலன் - (அப்பிறப்பொழிந்து) வேறொருபிறப்பெடுத்துத் தோனறினானுமில்லை: பெயர்த்தும் போர்செயற்கு உற்றது - (அங்ஙனமிருக்கவும் அவன்) மீளவும் (உன்னுடன்) போர்செய்தற்கு வந்தது, நெடுந் துணை உடைமையால்—பெரிய ஒரு துணைவனைப் பெற்றதனு லாகும்;' என்றாள் - என்று (தாரை வாலியை நோக்கிக்) கூறினாள்; (எ - று)—ஆல் - அசை.

குவவு - உரிச்சொல். இற்றையன - இன்றைத்தினத்தில் வந்துள்ளவனான அவன், இத்தனைநாள்போல நின்பெருங்குவவுத்தோள்வலிக்கு ஈடுண்டு

எருவா னல்லன் என்று உரைப்பினுமாம. 'இற்றனை முன்னோரா ளீடேண் டேகுவான்' எனறு பாடமோதுவாரு முளர். 'பெற்றிலன பெருந்திறல்' என்று சிலபிரதிகள. (கஙெ)

[இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்: தாரைக்கு வாலி தன்வலிமைமிகுதியைக் கூறல் ]

கசு. மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றவைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால்.

(இ - ள்.) மூன்று என-(மேல் கீழ் நடு என) மூனறாக (வகுக்கப்பட்டு), முற்றிய நிறைந்துள்ள, முடிவு இல் பேர் உலகு - அழிவில்லாத பெரிய உலகங்களெல்லாவற்றிலுமுள்ள பிராணிகள யாவும, என்று உடன உற்றன - கருத்து இணங்கி ஒருங்குசேர்ந்தவையாய், எனக்கு நேர் என தோன்றினும் - எனக்குப் பகையாக வந்தெதிர்த்தாலும், அவை தோற்று தொலையும் - அவை யெலலாம் தோல்வியடைந்து அழியும, என்றலின - என்கிற பொருளைச் சாதித்தற்கு, சானறு உள - (அநேக) சாக்ஷிகள் உள்ளன ; அன்னவை - அவற்றை, தையல் கேட்டி-பெண்ணே! (யானசொல்லக) கேட்பாய்; (எ று.)

என்று - எதிர்த்து எனினுமாம் ; இச்சொல்லில், எல் பகுதி. தையல் - அழகுடையவள. அன்னவை கேட்டி ஆல- அவற்றை (முன்பு யான்சொல்லக்) கேட்டுள்ளாயன்றோ எனனவுமாம. முந்தியபொருளில, கேட்டி - ஏவலொருமைமுற்று ; ட் - எழுத்துப்பேறு. இப்பொருளில, கேட்டி - முன்னிலை யொருமையிறந்தகாலமுற்று ; ட் - இறந்தகாலவிடைநிலை. ஆல் தேற்றம் ; அவற்றை நீ அறியாய் எனறபடி. (கசு)

கஎ. மந்தரநெடுவரைமத்துவாசுகி
யந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரனறுணைதிர்தருகின்வாங்குந
ரிந்திரன்முதலியவமரரேனையோர்.

கஅ. பெயர்வுறவலிக்கவுமிடுக்கில்பெற்றியா
ரயர்வுறலுற்றதைநோக்கியானது
தயிரெனக்கடைநதவர்க்கமுதந்தந்தது
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ.

இவையிரண்டுகவிகளும் - குளகம் ; ஒருதொடு உரைககப்படுகின்றன.

(இ - ள்.) (கஎ) மந்தரம் நெடு வரை - பெரிய மந்தரமலை, மத்து - மத்தாகவும், வாசுகி - வாசுகியெனனும் மகாநாகம், அந்தம் இல் கடை கயிறு - எல்லையில்லாத [மிகநீண்ட] கடையுங கயிறாகவும, ஆழியான் - சக்கராயுதத்தையுடையவனான திருமால், அடை கல-(அமமந்தரகிரி) கடலில்அழுந்தி

விடாதபடி கூர்மரூபமாய்க் கீழேநின்று தாங்கும் பீடமாகவும், சந்திரன்—, தூண் - அடைதூணாகவும், எதிர் தருக்கின வாங்குநர் - (ஒருவர்க்கொருவர்) எதிராகதினறு களிப்புடன கடைகயிற்றையிழுப்பவர், இந்திரன முதலிய அமரர் ஏனையோர் - இந்திரன முதலான தேவர்களும அவர்கட்கு மாறான அசுரர்களுமாக அமைந்து, (கஅ) பெயர்வுஉற வலிக்கவும் மிடுக்கு இல் பெற்றியார் - (மத்தாகிய அந்த மந்தரகிரி) நிலைபெயருமாறு இழுத்தற்கும் வலிமையில்லாத தன்மையை யுடையவர்களாய், அயர்வுறல் உற்றதை - (அத்தேவாசுரர்கள்) தளர்ச்சிமிக்கதை, யான் - நான, நோக்கி - பார்த்து, அது தயிர் என கடைந்து - அப்பாற்கடலைத் தயிர்கடைவதுபோலக்கடைந்து, அவர்கு அமுதம் தந்ததும - அவர்கட்கு அமிருதத்தை உண்டாக்கிக் கொடுத்த திறமும், மயில் இயல் குயில் மொழி - மயில்போன்ற சாயலையும் குயில் கூவுவது போன்ற இனசொற்களையு முடையவளே! மறக்கல ஆவதோ - மறக்கக் கூடியதோ? (எ - று.)

தேவர்கள அசுரர்களைத் துணைகொண்டு பாற்கடல் கடையத் தொடங்கியபொழுது மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்கள் வேண்டுகோளினால திருமால பெரியதோர ஆமைவடிவ மெடுத்து அம்மலையினகீழேசென்று அதனைத் தன முதுகினமீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்தி விடாமற கடைதறகு உபயோகமாமபடி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தன னென்பது, பிரசித்தம. அடைகல - கம்மபபட்டடை; அதாவது - கம்மாளர்கள பொன முதலியவற்றை வைத்து வெட்டுதற்கு ஆதாரமாகக கொள்ளுங கருவி; இங்கு, அது, ஆதாரமான பீடமென்ற மாத்திரமாய் நின்றது. மத்து - மந்த மென்ற வடசொல்லின விகாரம. வாஸுகி - அஷ்டமகாநாகங்களி லொன்று. அந்தம இல - அழிவில்லாத வெனினுமாம. வாங்குநர், ந் - பெயரிடைநிலை. ஏனையோர - மற்றொரு வகுப்பினர்; இங்கு, அசுரராயிற்று.

வலமும் இடமுமாக இழுத்துக் கடைதற்கேயன்றி அந்த மத்து நிலை பெயருமாறு இழுத்தற்கும எனப் பொருள்படுதலால, உம - இழிவுசிறப்பு. அயர்வு உறல் - தளர்ச்சியடைதல. உற்றது - மிக்கது. மயிலியற குயின் மொழி - உவமைத்தொகை உம்மைத்தொகைகளின புறத்துப பிறந்த அன மொழித்தொகை. 'தந்ததும்' என்ற உம்மை - உயர்வு சிறப்பு. 'மறக்கலாவதோ' என்ற பாடத்திற்கு - யான் கடைந்து அமுதந்தந்த பெருமையும் (யாராலேனும்) மறக்கத்தக்கதாமோ? என்று பொருள். (கஎ, கஅ)

கக. ஆற்றினெமரருமவுணர்யாவருந
தோற்றனரெனையவர்சொல்லற்பாலதோ
கூற்றுமென்பெயர்சொலக்குலையுமாலினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர்.

௨0. பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
யூதியவரங்களுமுரமுமுள்ளதிற
பாதியுமெனைத்தரப்பகைப்பதெங்ஙன
நீதியமொழிகெனநின்றுகூறினன்.

இவையிரண்டுகவிகளும் - குளகம்; ஒருங்கு உரைக்கப்படுகின்றன.

(இ - ள்.) (கக) ஆற்றினென் - வலிமையோடு போர் செய்தவனான என்னது முன்னிலையில், அமரரும் அவுணர் யாவரும் எனையவர் தோற்றனர் - தேவர்களிலும் அசுரர்களனைவரிலும் எத்தனையோபேர் தோல்வியடைந்தார்கள்; சொலற்பாலதோ - (அங்ஙனம் தோற்றவர்களது தொகை) சொல்லத்தக்கதோ? [அன்றென்றபடி]; கூற்றும் - (பிராணிகளை உடல் வேறும் உயிர் வேறுமாகக்) கூறுபடுத்துபவனான யமனும், என் பெயர் சொல குலையும் என் பெயரை (எவரேனும்) சொன்ன வளவிலே நடுங்குவான்; இனி - இவ்வாறான பின்பு, மாற்றவற்கு ஆகி வந்து எதிரும் மாண்பினோர் - (எனது) பகைவனான சுக்கிரீவனுக்குத் துணையாகி வந்து (என்னெதிரில்) மாறுபடுந் தன்மையுடையோர், (உ0) பேதையர் - அறிவில்லாதவரேயாவர்; எதிர்குவர் எனினும் - (அங்ஙனம் அவர்கள் என்னை) எதிர்ப்பரேயானாலும், பெற்றுடை - (அவர்கள்) பெற்றுள்ள, ஊதியம் வரங்களும் - லாபகரமான [சிறந்த] வரங்களிலும், உரமும் - பலத்திலும், உள்ளதில் பாதியும் என்னது - அவர்களிடமுள்ளதிற் பாதியோ (அவர்களை விட்டு நீங்கி) என்னுடையதாய்விடும்; ஆல் - ஆதலால், பகைப்பது எங்ஙனம் - (அவர்கள் என்னைப்) பகைத்துப் பயன் பெறுவது எப்படி? (ஆகவே) நீ துயா ஒழிக-(யான போர்க்குச்செல்வதைப் பற்றி) நீ துன்பமடையா திருப்பாயாக, என நின்று கூறினன் - என்று (வாலி) சிறிது பொழுது நின்று (தாரைக்குச்) சமாதானஞ் சொன்னான்; (எ - று.)—ஆல் - அசை.

இனி, முதலடிக்கு - (இவவாறு) தேவர்களனைவரையும் அசுரர்களனைவரையும துயர்தீர்த்தே னென்று உரைப்பினுமாம் 'ஆற்றலிலமரர்' என்றும், 'ஆற்றலினமரர்' என்றும் பாடமுண்டு. சொலற்பாலதோ என்பதற்கு - (மற்றையோரைப் பற்றிச்) சொல்ல வேண்டியது முண்டோ? என்றலுமொன்று. 'எனையர்சொலற்பாலரோ' எனறும் பாட மோதுவர். 'குலையுமாரினி' என்று பாடமாம்போது மாற்றவற்காகி வந்தெதிரு மாண்பினோர் இனி ஆர் எனறு முடித்து, சுக்கிரீவனுக்குத் துணையாய்வநது எனனோடு எதிருந் திறமுடையோா வேறு யார்? எனறும பொருள் கொள்ளலாம்.

எதிர்குவர், கு சாரியை. ஒழிகென - விகாரம். என்னுடைய தேகபல வரபலங்களோடு அவர்களுடைய தேகபல வரபலங்களிற் பாதியும் என்னிடம் வந்துசேருமெனக. துயர் - கிலேசம். (கக-உ0)

[சுக்கிரீவனுக்கு இராமன் துணையாய்வந்ததைத் தாரை வாலிக்குக்கூறல்.]

உக. அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்நட்பமைந்திராமனென்பவ
னுன்னுயிர்கோடலுக்குடன்வநதானெனத்
துன்னியவன்பினர்சொல்லினரென்றாள்.

(இ - ள்.) அன்னது கேட்டு - அவ்வாறு (வாலி சொன்னதைக்) கேட்டு, அவள் - அந்தத் தாரையானவள், (வாலியைநோக்கி), 'அரச - தலைவனே! இராமன் என்பவன்—, ஆயவற்கு இன உயிர் நட்பு அமைந்து - அந்தச் சுக்கிரீவனுக்கு இனிய பிராணசிநேகிதனாய்ப் பொருந்தி, உன் உயிர் கோடலுக்கு உடன் வந்தான் - உனது உயிரைக் கவர்தற்காக அவனுடன் வந்திருக்கின்றான். என - என்று, துன்னிய அன்பினர் சொல்லினர் - (நம்மிடத்துப்) பொருந்திய அன்பை யுடையவர்கள் சொன்னார்கள்,' என்றாள் - என்று சொன்னாள்; (எ - று.)

கேட்டவள் என ஒரு சொல்லாகவும் எடுக்கலாம். அரசன் - பிராணநாயகன். ஆயவன் - ஆகிய அவன், உன் உயிர்கோடல் - உன்னைக் கொல்லுதல். துன்னிய அன்பினர் சொல்லினர் - நமக்கு அநுகூலரான சிலர் வந்து சொல்லக் கேள்வியுற்றேன் என்றபடி. என்றதனால், அதனைச் செவ்வையாக விசாரித்துப் பார்த்துக்கொண்டுதான் போகவேண்டு மென்றாளாம். (உக)

[இதுமுதல் ஆறு கவிகள் - வாலி அதற்கு மாறுகூறல்.]

உஉ. உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கலா
தழைத்தயருலகினுக்கறத்தினாறெலா
மிழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன் பெண்மையாலென்றான்.

(இ - ள்.) 'பாவி - தீவினையுடையவளே ?—உழைத்த - (தாம்) செய்து சேர்த்த, வல் இரு வினைக்கு - கொடிய இருவகையான கருமங்களுக்கு, ஊறு காண்கலாது - அழிவு காணாமல், அழைத்து - (வருத்தமிகுதியால்) கூவிக்கொண்டு, அயர் - வருந்துகின்ற, உலகினுக்கு - உலகத்திலுள்ள உயிர்களுக்கு, அறத்தின் ஆறு எலாம் - தர்மமார்க்கங்களையெல்லாம், இழைத்தவற்கு - செய்து காட்டுபவனான அந்தப் பெருமானுக்கு, இயல்பு அல - தகுதியல்லாத வார்த்தைகளை, இயம்பி - சொல்லி, என் செய்தாய் - என்ன அபசாரப்பட்டாய்! உன பெண்மையால் பிழைத்தனை - உனது பெண்தன்மைக்கு ஏற்ற பேதைமையால் (இங்ஙனம்) தவறுசெய்து விட்டாய்,' என்றான் - என்று (தாரையைநோக்கி வாலி) கூறினான்; (எ - று.)

அவ்வாறு தாரைசொல்லக் கேட்டவுடன், வாலி, 'பிறப்பு அநாதியாய் வருதலாற் பலபிறப்புக்களில் தாம்செய்து சேர்த்த கொடிய கருமங்களை யொழிக்கும் உபாயத்தைக் காணாமல் வருந்திக் கதறுகின்ற உலகத்தவர்கள் உய்யுமாறு அவதரித்துத் தர்மமார்க்கங்களையெல்லாம் தான் அநுஷ்டித்துக் காட்டும் புருஷோத்தமனான அந்த இராமபிரான் விஷயத்தில், 'அவன் சுக்கிரீவனுக்குத் துணையாய் இடையே புகுந்து உன்னைக்கொல்ல வந்திருக்கின்றான் என்று சிறிதுந் தகுதியில்லாத வார்த்தையைச் சொல்லிப் பேரபராதம் பண்ணினையே! பாவி! ''நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும், பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே'' என்றபடி பெண்மைக்கு இயல்பான பேதைமையால் நீ இது செய்தனைபோலும்' என்று வெறுத்து உரைத்

தனனென்க. உழைத்த - பெயரெச்சம், காரணப்பொருளது. 'நோய் தீர்த்த மருந்து' என்ற விடத்திற் போல; வருந்துவதற்குக் காரணமான வெனினு மாம். நல்வினையும் பிறப்பிற்கு ஏதுவாதலால், 'வல்இருவினை' என்றார். "இருள்சேர் இருவினையும்" என்றார் திருவள்ளுவனாரும். அழைத்தல் - தமது வினைகள் தீரு முபாயங் கூறுபவனை நாடியழைத்தலுமாம். அல பெயர். (உ௨)

[இது முதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்]

உ௩. இருமையுநோக்குறுமியல்பினுற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
வருமையினின்றுயிரளிக்குமாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ.

(இ - ள்.) இருமையும் நோக்குறும் இயல்பினுற்கு - இம்மை மறுமை யென்னும் இரண்டின் பயன்களையுங் கருதுகின்ற இயல்பையுடையவனான அந்தப்பெருமானுக்கு, இது பெருமையோ - நீ சொன்னபடி செய்வது பெருமையாகுமோ? இங்கு இதின் பெறுவது என்கொலோ - இவ்வாறு செய்வதனால் (அவன்) அடையும் இலாபந்தான் யாதோ? அருமையின் நின்று - அருமையான பொருளாய் நின்று, உயிர் அளிக்கும் - எல்லாவுயிர்களையும் பாதுகாக்கின்ற, ஆறு உடை - தன்மையை யுடைய, தருமமே - தருமந்தானே, தன்னை தான் தவிர்க்குமோ - தன்னைத் தான் ஒழிக்குமோ? (எ - று.)—அரோ - ஈற்றசை.

இருமையும் நோக்குறும் இயல்பினன் - இம்மைப்பயனாகிய புகழும் மறுமைப்பயனாகிய புண்ணியமும் அறத்தினாற் சித்தித்தலைக் கருதி அவ்வறத்தைப் பரிபாலனஞ்செய்யு மியல்புடையவன்; "மண்ணிடை யாவ ரிராகவ னன்றி மாதவ மறத்தொடும் வளர்த்தார்" என்றார் பாலகாண்டத்தில் தரும மூர்த்தியான அவன் தருமவிரோதமான காரியத்தைச் செய்யமாட்டானென் பான், 'தருமமே தவிர்க்குமோ தன்னைத் தான்' என்றான். ஒருவரோடொரு வர் பொருகையில் அவர்களி லொருவனுக்கு உதவியாய் இடையேபுகுந்து மற்றொருவனைக் கொல்லுதலாகிய அதருமத்தைச் செய்து பழிபாவங்களைப் பெறா னவ னென்றவாறு. தர்மம் - வடசொல். (உ௩)

உ௪. ஏற்றபேருலகெலாமெய்தியீன்றவண்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ.

(இ - ள்.) ஏற்ற பேர் உலகு எலாம் - (தன்தந்தை) மேற்கொண்டு அரசாட்சிசெய்த பெரிய உலகமுழுவதையும், எய்தி - (மூத்தமகனாகிய தனக்கு) உரிமையாகப்பெற்று, (உடனே), ஈன்றவள் மாற்றவள் ஏவ - தன்னைப்பெற்ற தாயினது சக்களத்தியான கைகேயி சொன்னதனால், அவள்தன் மைந்த னுக்கு - அவளுடைய மகனான பரதனுக்கு, ஆற்று அரும் உவகையால் அளித்த-

கொள்ளுதற்கு அரிய மகிழ்ச்சியுடனே கொடுத்தருளிய, ஐயனை - சிறந்தவனை இராமபிரானை, போற்றலை - அறியாமல், இன்னன புகறர்பாலையோ - (அவனைக் குறித்து) இத்தன்மையனவான பழிமொழிகளைக் கூறத் தகுவையோ? (எ - று.)

முதலிற் பட்டாபிஷேகத்திற் கென்று குறிப்பிட்ட நாளிற்கு முந்தின நாளில் தசரதசக்கரவர்த்தி மந்திரிகளோடு ஆலோசித்து ஸ்ரீராமனை வரவழைத்து 'இராச்சிய பாரத்தை நீ ஏற்றுக்கொள்ளவேண்டும்' என்று சொல்லித் தனது ஆளுகைக்கு உட்பட்ட உலக முழுவதையும் வாக்தானமாகக் கொடுக்க, அவன் அதனை ஏற்றுக் கொள்ளுதற்கு உடன்பட்டமை, 'ஏற்ற பேருலகெலாமெய்தி' எனப்பட்டது. ஈன்றவள் - கௌஸல்யை. ஈன்றவள் மாற்றவள் - மாற்றாந்தாய். மற்று - வினைமாற்று, அசையுமாம். ஆற்றரும் உவகை - அளவற்ற மகிழ்ச்சி; அதனை, அயோத்தியா காண்டத்தில் "இப்பொழுதெம்மனோரா லியம்புதற் கெளிதே யாருஞ் செப்பருங் குணத்திராமன் றிருமுகச்செவ்விநோக்கில், ஒப்பதே முன்புபின் பவ்வாசகமுரைக்கக்கேட்ட, அப்பொழு தலர்ந்த செந்தாமரையினை வென்றதம்மா," "தெருளுடைமனத்து மன்ன னேவலிற்றிறம்பவஞ்சி, இருளுடையுலகந் தாங்குமின்னலுக்கியைந்து நின்றான், உருளுடைச்சகடம்பூண்ட வுடையவ னுய்த்தகாரே, மருளுடையொருவனீக்க வப்பிணியவிழ்ந்த தொத்தான்" எனக் கூறினர். அளித்தல் - பரதன் பெற்றுக்கொண்டு ஆளுமாறு அரசாட்சியைத் தான் கைவிட்டு வனவாசஞ் சென்றமை. போற்றலை - முன்னிலை யொருமை யெதிர்மறை முற்றெச்சம். புகறல் - புகல்தல். தனக்கு உரியதான நிலவுலகத்தரசாட்சி முழுவதையும் மாற்றாந்தாய் சொல்ல 'அவள் பிள்ளைக்கு மிக்கமகிழ்ச்சியுடன் கொடுத்து வந்த மகா குணசாலியான இராமபிரானைத் துதிப்பதை விட்டு அந்தப் பெருமான்மேல் இப்படி அபவாத வார்த்தை சொல்லலாமோ? என்றான். பாலை - பான்மையென்ற பண்பினடியாப் பிறந்த முன்னிலையொருமைக் குறிப்பு முற்று. (உச)

உரு. நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனோ.

(இ - ள்.) நின்ற பேர் உலகு எலாம் - நிலைபெற்ற பெரிய உலகங்களெல்லாம், நெருக்கி நேரினும் - ஒன்றுசேர்ந்து எதிர்த்தாலும், (அந்தஇராமபிரானுக்கு), வென்றி - வெற்றி தருவதற்கு, வெம் சிலை அலால் - (அவனது) வெவ்விய கோதண்டமே யல்லாமல், பிறிது வேண்டுமோ - வேறொருவுதவி வேண்டுவதுண்டோ? [வேண்டா என்றபடி]; தன் துணை தன்னில் வேறு ஒருவரும் இலான் - தனக்குச் சமானம் தன்னைக்காட்டிலும் வேறொருவருமில்லையாகப் பெற்றவனான அப்பெருமான், புல் தொழில் குரங்கொடு புணரும் நட்பனோ - அற்பமான செய்கையையுடைய ஒரு குரங்காகிய சுக்கிரீவனோடு சிநேகஞ் செய்வனோ? (எ - று.)

நெருக்கி - ஒன்றையொன்று நெருக்கி; தம்மில் ஒன்றுசேர்ந்து என்றபடி. தன் துணை ஒருவரும் தன்னில் வேறிலான் - "தானே யுவமை தனக்கு" என்னும்படி தனக்குத் தானே நிகர் சொன்னலாமே யன்றி வேறு உவமை கூறப்பெறாதவன்; "தனக்குவமையில்லாதான" என்றார் திருவள்ளுவர்: "தன்னொப்பாரில்லப்பன்" என்றார் ஆழ்வார். பிறிது வேண்டுமோ - வேறு துணையை (அவன) வேண்டுவனோ? என்றும் பதப்பொருள் கூறலாம். புணருமு நட்பனே - நட்புப் புணர்வனே, பொருந்தும் நட்பினை யுடையவனே? (உ௫)

உ௬ தம்பியரல்லது தனக்குவேறுயி
ரிம்பரினிலதெனவெண்ணிமேயந்தவ
னெம்பியும்யானுமுற்றெதிர்ந்தபோரிடை
யம்பிடைதொடுக்குமோவருளினாழியான்.

(இ - ள்.) தம்பியர் அல்லது தனககு வேறு உயிர் இலது என எண்ணி - தன் தமபியாகளே யல்லாமல தனககு வேறோருயிர் இல்லையெனறு எண்ணி, இம்பரின ஏய்ந்தவன - இவவுலகத்தில் (அவர்களோடு) இணங்கி நடப்பவனும், அருளின ஆழியான் - அருள் நிறைந்த தொரு கடல்போன்றவனுமான அவவிராமபிரான, எம்பியும் யானும் உறறு எதிாநத போரிடை - எனதம்பியான சுக்கிரீவனும் யானும் எதிாதது நினறு செய்யும் போரில், இடை அம்பு தொடுககுமோ - நடுவில் (தான எனமேல) அமபுதொடுப்பனோ? [அப்படி அவன் தொடுக்க மாட்டா னெனறபடி]; (எ - று)

இம்பரின் இலது எனறு இயைதது உரைத்தல் சிறவாமை யுணர்க. உற்று எதிாதல் தவந்தவயுததஞ் செயய உடனபட்டு எதிர்ததல். போரிடை, இடை - ஏழனுருபு.

கீழ் உ௨ - ஆஞ் செய்யுளிற் சுருஙகச்சொன்னதை அடுதத நான்கு செய்யுள்களும் விவரிததன வாதலால, அது - தொகுத்துச் சுட்டலும, இவை - வகுததுக் காட்டலுமாம். (உ௬)

[வாலி மறுத்துச்சொல்லத் தாரை தடுக்க அஞ்சுதல்]

உஎ. இருத்திநீ யிறையிவ ணிமைப்பில் காலையி
லுருத்தவ னுயிர்குடித் துடன்வந் தாரையுங்
கருத்தழித் தெய்துவென் கலங்க லென்றனன்
விரைக்குழல் பின்னுரை விளம்ப வஞ்சினாள்.

(இ - ள்.) நீ இறை இவண் இருத்தி - நீ சிறிது பொழுது இங்கே இருப்பாய்; இமைப்பு இல் காலையில் - கண்ணிமைப்பொழுது மில்லாத காலத்தில் [ஒருமாத்திரைப் பொழுதிற் குள்ளாகவே], உருத்தவன் உயிர் குடித்து - கோபித்து வந்தவனான சுக்கிரீவனது உயிரைப் பருகி, உடன் வந்தாரையும் கருத்து அழித்து - அவனுடன் வந்தவர்களை மனமழியச் செய்து, எய்துவென் - மீண்டு வருவேன்; கலங்கல் - (நீ) மனக்கலக்கமுறாதே, என்

றன்ன் - என்று (தாரையை நோக்கி வாலி) கூறினன்; பின் - அதன் பின்பு, விரை குழல் - நறுமணமுள்ள கூந்தலை யுடையவளான தாரை, உரை விளம்ப அஞ்சினுள் - (அக்கணவன்கருத்திற்கு மாறுன) வார்த்தை சொல்லு தற்கு அஞ்சி நின்றுவிட்டாள்; (எ - று.)

இருத்தி - ஏவலொருமை. இறை - காலநுட்பம். உருத்து அவனுயிர் குடித்து என்று பிரித்தும் உரைக்கலாம். 'உடன்வந்தாரை' என்றது, அவ னது துணைவரான அநுமான் முதலியோரை. கலங்கல - எதிர்மறையொரு மையேவல்; எதிர்மறைவியங்கோளுமாம். விரைகுழல் - இரண்டாம் வேற் றுமை' யுருபும் பயனும் உடன்தொக்க தொகைப் புறத்துப் பிறந்த அன் மொழித்தொகை. பின உரை என்று எடுத்து. மாறுனசொல் லெனவுந் தரும். (உ௭)

## வேறு.

[வாலி அம்மலையின் ஒருபுறத்தில் வருதல்.]

உ௮. ஒல்லைச் செருவேட் டுயர்வல்புய மோங்க லும்ப
ரெல்லைக் குமப்பா லிவர்கின்ற விரண்டி னோடு
மல்லற் கிரியின் றலைவந்தனன் வாலி கீழ்பாற்
றொல்லைக் கிரியின் றலைதோற்றிய ஞாயி றென்ன.

(இ - ள்.) வாலி - (இவ்வாறுகூறித் தாரையை நிறுத்திய) வாலியான வன்,—ஒல்லை - விரைவில், செரு வேட்டு - போரை விரும்பி, உயா - (அப் போரவிருப்பததாற் பூரித்து) உயர்ந்து, உம்பா எல்லைகரும் அப்பால் இவர் கின்ற - தேவலோகத்தின எல்லைக்கு அப்பாலும் மேலெழுகின்ற, வல் புயம்- வலிய தோளகளாகிய, ஓங்கல் இரண்டினோடும் - இரணடு மலைகளுடனே, —மல்லல் கிரியினதலை - வளங்களை யுடைய அம்மலையினிடத்து,— கீழ்பால் தொல்லை கிரியின தலை தோறறிய ஞாயிறு என்ன - கிழக்குத்திக்கிலுள்ள பழமையான உதயகிரியின் சிகரத்தில் உதித்துவிளங்கிய சூரியன் போல, வந்தனன் - வந்தான; (எ - று.)

போாநேர்வதெனற மகிழ்ச்சியால் தோள்கள் பூரித்தல், சுத்தவீரரியல்பு; "செருவென்ற மாறறங் கேட்டுச் சிந்தையி னுவகை பொங்க, மருவொனறு மலங்கனமார்பும் வாகுபூதாமும் பூரித்து" எனக காண்க. இயல்பாகவே மலைகள்போலுள்ள தோள்கள யுததோற்சாகததால மிகவும் பூரிக்க வந்தா னெனயார், சமதகாரந் தோன்ற 'தோள்களாகிய இரண்டுமலைகளுடனே ஒருமலையின் தலையில் வந்தான' என்றூா. ஒல்லை - இடைச்சொல். வேட்டு, வேள் - பகுதி. ஓங்கல் - உயர்ந்தது என மலைக்குக் காரணக்குறி; அல் - கருத் தாப்பொருள்விகுதி. மல்லல் - உரிச்சொல். ஞாயிறு - போலி. 'ஒல்லை' என் றது - 'உயர்' என்பதனோடும், 'வேட்டு' என்பதனோடும், 'வந்தனன' என் பதனோடும்; 'செருவேட்டு' என்றது - 'உயர்' என்பதனோடும், 'வந்தனன் றென்பதனோடும் சேரத்தகும்.

இதுமுதற் பதினேழு கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ் சீரொன்று புளிமாங்கனிச்சீரும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய நெடிலடிநான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (உஅ)

[இதுவும் அது]

உகூ. நின்றனெதிர்யாவருநெஞ்சுநடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற்றகைமால்வரைசாலும்வாலி
குன்றூடுவந்துற்றனன்கோளவுணன்குறித்த
வன்றூணிடைத்தோன்றியமாநரசிங்கமென்ன.

(இ - ள்) தன் தோள் வலியால் - தனது தோள்களின் வலிமையால், தகை மால் வரை சாலும் - அழகிய பெரிய மலையையொத்த, வாலி - வாலியானவன்,—கோள் அவுணன் குறித்த வல் தூணிடை தோன்றிய மா நர சிங்கம் என்ன - கொடுமையையுடைய இரணியாசுரன் குறிப்பிட்ட வலிய தூணினிடத்து வெளிப்பட்ட பெரிய நரசிங்கமூர்த்தி போல,—எதிர் யாவரும் நெஞ்சு நடுங்கி அஞ்ச - (தன்னைக்) காண்கின்ற எல்லாரும் அஞ்சி மனம்நடுங் கும்படி, குன்று ஊடு வந்து உற்றனன் நின்றான் - அம்மலையின் ஒருபுறத்தில் வந்துசேர்ந்து நின்றான்; (எ - று.)

எதிர் நின்றான் என்று எடுத்து, சுக்கிரீவனெதிரில் நின்றானெனினு மாம். நடுங்கி அஞ்ச - அஞ்சி நடுங்க: விகுதிபிரித்துக்கூட்டல். தோளவலி- புஜபலம். 'சாலும்' என்றது, உவமவாசகமாய் நின்றது. வரை சாலும் - மலை யின் தன்மை யமைந்த வென்னலாம். கோள் - வலிமையுமாம். நரஸிம்ஹம்- மனிதவடிவங்கலந்த சிங்கவடிவம். (உகூ)

[வாலி ஆரவாரஞ்செய்ய, அப்பேரொலி எல்லாவுலகங் களிலும் பரவுதல்.]

௩௦. ஆர்க்கின்றபின்னேன்றனைநோக்கினன்றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத்துருமேறுவெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லாவுலகும்பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னானிலந்தாவியகாலினென்ன.

(இ - ள்.) ஆர்க்கின்ற பின்னோனை நோக்கினன் - கர்ச்சிக்கின்ற தன்தம்பியான சுக்கிரீவனைப் பார்த்து, தானும் ஆர்த்தான் - (வாலி) தானும் கர்ச்சித்தான்; (அதனால்), வேர்க்கின்ற வானத்து உரும் ஏறு வெறித்து வீழ - (அஞ்சி) வியர்க்கின்ற மேகங்களினின்று பேரிடிகள் உக்கிரமாய் விழுந்திடும் படி, பொதிர்வு உற்ற - மிகுதிகொண்ட, பூசல் - பேரொலியானது,—கார் குன்றம் அன்னான் நிலம் தாவிய காலின் என்ன - கருநிறமுடையதொரு மலையைப் போன்றவனான திருமால் உலகங்களைத்தாவியளந்த திருவடிகள் போல, எல்லாம் உலகும் போர்க்கின்றது - எல்லாவுலகங்களிலுஞ் சென்று பரவிற்று; (எ - று.)

பின்னோன் - பின்பிறந்தவன். 'வேர்க்கின்ற வானம்' என்றது, மழை துளித்தல்பற்றி. காலின, இன் - சாரியை. 'காலிதென்ன' என்ற பாடம் எளிதிற் பொருள்படும். உவமையணி; கீழிரண்டுசெய்யுள்களும் இவ்வாறே. உருமேறு விழுதல், ஒலிமிகுதியாலான அதிர்ச்சியால். (௩௦)

[இராமன் வாலியைநோக்கி அதிசயித்தல்.]

௩௧. அவ்வேலையிராமனுமன்புடைத்தம்பிக்கைய
செவ்வேசெலநோக்குதிதானவர்தேவர்நிற்க
வெவ்வேலையெம்மேகமெக்காலொடெக்காலவெந்தீ
வெவ்வேறுலகத்திவன்மேனியைமானுமென்றான.

(இ - ள்.) அ வேலை - அப்பொழுது,—இராமனும் - ஸ்ரீராமபிரானும்,—அன்பு உடை தம்பிக்கு - (தன்பக்கல்) அன்பையுடைய தம்பியான இலக்குமணனைநோக்கி, 'ஐய - அப்பா! செவ்வே செல நோக்குதி - நன்றாக(க் கண் பார்வை) செல்லுமாறு காண்பாயாக: தானவர் தேவர் நிற்க - அசுரர்களும் தேவர்களும் இருக்கட்டும்; உலகத்து வெவ்வேறு-உலகத்தில் தனித்தனியே யுள்ள, எ வேலை - எந்தக்கடலும், எ மேகம் - எந்த மேகமும், எ காலொடு - எந்தக்காற்றும், எ காலம் வெம் தீ - வெவ்விய எந்தக்காலாக்கினியும், இவன் மேனியை மானும் - இந்த வாலியின் உடம்பை ஒக்கும்?' என்றான் - என்று வியந்து கூறினன்; (எ - று.)

கடல் முதலியவற்றில் எதுவும் இவனுடம்பை யொவ்வா தென்றபடி. தானவர்களும் தேவர்களும் இவனுக்கு ஒப்பாகமாட்டா ரென்பான், 'தானவர் தேவர் நிற்க' என்று பராமுகமாகக் கூறினன். தானவர் - தநுவின்மக்கள்; வடமொழித் தத்திதாந்தநாமம். தம்பிக்கு என்றான் என இயையும். செல - செல்ல: தொகுத்தல். வேறு+வேறு=வெவ்வேறு: மரூஉ. 'எம்மேகம்' என்ற விடத்து 'எம்மேரு' எனப் பாடமோதுவாரு முளர். தமையனார் தம்பியைப் 'ஐய' என்றது, அன்புபற்றி வந்த மரபுவழுவமைதி. உலகத்து வெவ்வேறு மானும் என இயைத்து உரைத்தலுமாம். (௩௧)

[அதற்கு இலக்குமணன் 'சுக்கிரீவன் செய்தியாலாகிய கலக்கத்தால் ஒன்றையும் உணர்ந்திலேன்' என்றல்.]

௩௨. வள்ளற்கிளையான்பகர்வானிவன்றம்முன்வாழ்நாள்
கொள்ளக்கொடுங்கூற்றுவனைக்கொணர்ந்தான்குரங்கின்
வெள்ளற்கரும்போரதுசெய்கலனென்னுமின்னல்
லுள்ளத்தினான்றவுணர்வுற்றிலனென்றுமென்றான்.

(இ - ள்.) வள்ளற்கு - வரையாதருளும்இயல்பினனான இராமபிரானை நோக்கி, இளையான - இளையபெருமாள் [இலக்குமணன்], பகர்வான - விடை கூறுபவனாய், 'இவன் - இச்சுக்கிரீவன், தம்முன் வாழ்நாள் கொள்ள-(தனது) தமையனது ஆயுளை யொழித்தற்கு, கொடுங் கூற்றுவனை கொணர்ந்தான் - கொடிய யமனை அழைத்துக்கொண்டு வந்தான்; குரங்கின் வெள்ளற்கு அரும்

போர் அது செய்கலன் - (சாதாரணமாய்க்) குரங்குகள் செய்தற்குரிய இகழ்ச்சிக்கு இடமில்லாத போரைச் செய்வானல்லன், என்னும் ஃ என்பதனாலாகிய, இன்னல் - துன்பம், உள்ளத்தின் உடன்ற - மனத்திற் பதிதலால், ஒன்றும் உணர்வுற்றிலன் - ஒன்றையும் அறிந்தேனில்லை,' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

சுக்கிரீவன்செய்கின்ற முயற்சி தருமயுத்தமுறைமைக்கு மாறென்பதை உள்ளத்திற்கொண்டு மனங்கலங்கியதுபற்றி, இலக்குமணன் இவ்வாறுகூறினான். 'கூற்றுவன்' என்றது, இராமபிரானை; ''வாலிகாலன்'' என்றார் பிறரும். உலகத்து உயிர்களைச் சங்கரிக்கின்ற யமன் இவ்வாலியைச் சங்கரிக்கத்திறமில்லாதவனென்பது தோன்ற, 'கொடுங் கூற்றுவன்' எனலாயிற்று. தம்முன் - தமது முன்பிறந்தவனெனத் தமையனுக்குக் காரணக்குறி. முன் - காலவாகுபெயர். வாணாள் - வாழ்நாள் என்பதன் மரூஉ. 'குரங்கென் றெள்ளற்குறும்போர்செய வெண்ணினன்' என்ற பாடத்திற்கு - குரங்கின்தொழிலென்று இகழ்தற்குஏற்ற போரைச் செய்ய எண்ணினானென்றும், 'குரங்கினைள்ளற்கரும் போர் செய வெண்ணினன்' என்ற பாடத்திற்கு - உள்ளே தமையனைக் கொல்வதற்குக் கூற்றுவனை உடனழைத்து வைத்துக்கொண்டு வெளியே குரங்குகள் ஸாமாந்யமாகச் செய்யும் இகழ்ச்சிக்கிடமில்லாத போரைச் செய்யக் கருதினனேயென்றும் தமகினத்தவரோடு பெரும்போர் செய்யக்கருதினனேயென்றும் பொருளாம். 'எள்ளற்குறும் போர்செயவெய்தினமென்னுமின்னால்' என்னும் பாடங் காணப்படுகின்றது. (கூஉ)

[மற்றும் இலக்குமணன் சுக்கிரீவனது அக்கிரமத்தை எடுத்துக்கூறல்.]

கூக. ஆற்றாதுபின்னும்பகர்வானறத்தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார்களைத்தேறுதல்செவ்விதன்றான்
மாற்றானெனத்தம்முனைக்கொல்லியவந்துநின்றான்
வேற்றார்கடிறத்திவன்றஞ்சமென்வீரவென்றான்.

(இ - ள்.) ஆற்றாது பின்னும் பகர்வான் - மனம்பொறாமல் (இலக்குமணன்) மீளவும் (தமையனைநோக்கிக்) கூறுபவனாய், 'வீர மகாவீரனே! அறத்து ஆறு அழுங்க - தருமமார்க்கம் கெட, தேற்றாது செய்வார்களை - நம்பத்தகாத காரியத்தைச் செய்பவர்களை, தேறுதல் - நம்புதல், செவ்விது அன்று - நன்மையையுடையதன்று; மாற்றான் என - பகைவன்போல, தம்முனை கொல்லிய வந்து நின்றான் - தனது தமையனைக் கொல்லவந்து நின்றவனாகிய, இவன் - இச்சுக்கிரீவன், வேற்றார்கள் திறத்து தஞ்சம் என் - அயலார் விஷயத்தில் துணையாவது எப்படி?' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)—ஆல் - அசை.

நம்பிக்கைக்கு மாறான காரியத்தைப் பிறர்பக்கல் செய்பவன் ''கைக்குமாம், தேவரே தின்னினும் வேம்பு'' என்றபடி நம்விஷயத்திலும் அங்ஙனஞ் செய்யக்கூடுமாதலாலும், ''அன்பீனு மார்வமுடைமை யதுவீனும், நண்பென்னுநாடாச்சிறப்பு'', ''அருளென்னும் அன்பீன்குழவி'' என்றபடி உறவின

ரிடத்துத் தொடர்புபற்றிச் செய்யும் அன்புதானே அத்தன்மையாற் பிறர் வருந்தக்காணுமிடத்தும் தொடர்புபற்றாதே நிகழ்வதாதலால் சிறந்த உறவினனை தமையனையே கொல்லத்துணிந்தவன் யாதொரு தொடர்புமில்லாத பிறர்க்குத் துணையாவ னென்பது துணியப்படாமையாலும், இச்சுக்கிரீவனை நாம் நம்பலாகா தென்பது, இலக்குமணன் கூறிய கருத்து. தம்முனை மாற்ருன் என என்று மொழிமாற்றி, தமையனைப்பகைவனென்றெண்ணி யென்றலுமாம். ஆற்ருது - எச்சம். தேற்ருது - பெயர். செவ்விது - முற்று. கொல்லிய - எதிர்காலவினையெச்சம் தேற்ருது - ஆலோசியாமல் எனினுமாம். ()

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்; அதற்கு இராமபிரான் கூறுஞ் சமாதானம்.]

கூச. அத்தாவிதுகேளெனவாரியன்கூறுவானிப்
பித்தாயவிலங்கினொழுக்கினைப்பேசலாமோ
வெத்தாயர்வயிற்றினும்பின்பிறந்தார்களெல்லா
மொத்தாற்பரதன்பெரிதுத்தமனாதலுண்டோ.

(இ - ள்.) 'அத்தா - அப்பா! இது கேள் - (யான்சொல்லும்) இதனைக் கேட்பாய்,' என - என்று, ஆரியன் கூறுவான் - சிறந்த தலைவனான இராமபிரான் (மேல்வருமாறு) சொல்வான்:—இ பித்து ஆய விலங்கின் ஒழுக்கினை பேசல் ஆமோ - பைத்தியங்கொண்டதுபோன்ற [விவேகமில்லாத] இவ்வகை மிருகங்களின் ஒழுக்கத்தைக்குறித்து (இங்ஙனம் ஆராய்ச்சிசெய்து) பேசுதல் கூடுமோ? எ தாயர் வயிற்றினும் பின்பிறந்தார்கள் எல்லாம் ஒத்தால் - எந்தத் தாய்மார் வயிற்றிலும் பின்னேபிறந்தவர்களெல்லாரும் (தம் தம் தமையனோடு) இணங்கியே நடந்தால், பரதன் பெரிது உத்தமன் ஆதல் உண்டோ - (நமது) பரதன் மிகவுஞ் சிறந்தவனாவது உண்டோ? (எ - று)

ஜ்ஞாநஹீநமான மிருகஜாதிகளின் ஒழுக்கமுறைமை இப்படி ஆராய்ந்து பேசத்தக்கதன்று என்றும், விவேகசூனியமான விலங்கினத்திலேயன்றிப் பகுத்துணர்வுடையரான மனிதரிலும் எல்லாரும் பரதன்போலத் தமையனார்க்குக் கீழ்ப்படிந்து நடப்பதுண்டோ? என்றும், விலங்கின் இயற்கைப் பேதைமையையும், முன்பிறந்தோனுக்கு அடங்கி நடத்தலின் அருமையையும் சுக்கிரீவனது செய்கைக்குச் சமாதானமாகப் பெருமாள் இளையபெருமாளுக்கு எடுத்துக்காட்டினர் "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல், என்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தாரென்பர்போலும்" என்றபடி பெருமாள் தமது அன்பர்கள் பக்கல் வரம்பு கடந்த திருவருள்பாலித்து அவர்கள்குற்றத்தைக் குணமாகக்கொள்ளும் மகா குணமுடையவ ராதலால், இவ்வாறு சுக்கிரீவனைத் தழுவிப்பேசலாயினர். தனக்கென்று தன் தாயார் வாங்கிக்கொடுத்த இராச்சியத்தைக் கைக்கொள்ளாது விட்டு அதனைத் தமையனார்க்கு வலியச்சென்று சிரப்பந்தித்துக்கொடுக்கும் உத்தமகுணம் பரதாழ்வாரொருவர்க்கேயன்றிப் பிறரெவர்க்கும் வாய்க்கா தென்பது, பின்னிரண்டடியால் விளங்கிற்று. "தாயுரைகொண்டு தாதை

யுதவிய தாணிதன்னைத், தீவினை யென்னுநீத்தச் சிந்தனைமுகத்திற்றேக்கிப், போயினை யென்றபோழ்து புகழினேய் தன்மைகண்டால், ஆயிரமிராமர் நின்கேளாவரோ தெரியினம்மா", "என்புகழ்கின்ற தேழையெயினனே னிரவியென்பான், றன்புகழ்க்கற்றை மற்றையொளிகளைத் தவிர்க்குமாபோல், மன்புகழ்பெருமை நுங்கண் மரபினோர் புகழ்களெல்லாம், உன் புகழாக்கிக் கொண்டா யுயர்குணத்துரவுத்தோளாய்" என்று அதனைக் குகப்பெருமாள் பாராட்டிக் கூறியதுங் காண்க.

இங்கு 'அத்தா' என்றதற்கு, ௧௧ - ஆஞ் செய்யுளில் 'ஐய' என்றதற்கு உரைத்தது உரைக்க. ஆர்யனென்ற வடசொல் - அடையத்தக்கவனென்றும், (தீவினைகளினின்று) சேய்மையாய் விலகிச் செல்பவனென்றும் காரணப் பொருள்பெறும். விலங்கு - திர்யக்: குறுக்காக வடிவமையப்பெற்றது. ஒழுக்கு - ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். பரதன் என்ற திருநாமத்திற்கு - எல்லாப்பாரங்களையும் நிர்வகிக்க வல்லவ னென்று பொருள்; பின்பு இராமபிரான் - வனவாசஞ் செல்லவும் தசரத சக்கரவர்த்தி மேலுலகஞ் செல்லவும் காவலனில்லாததாகின்ற இராச்சியபாரத்தை வகிக்குந் தன்மைபற்றிப் பரதனென்று திரிகாலஞானியான வசிட்டமாமுனிவர் முன்னமே இவனுக்குப் பெயரிட்டனர். உத்தமன் - வடசொல். (௧௪)

௧௫. விற்றாங்குவெற்பன்னவிலங்கெழிற்றோளமெய்ம்மை
யுற்றார்சிலரல்லவரேபலரென்பதுண்மை
பெற்றாருழைப்பெற்றபயன்பெறும்பெற்றியல்லா
லற்றார்நவையென்றலுக்காருநரார்கொலென்றான்.

(இ - ள்.) வில் தாங்கு - ஒளியைக்கொண்ட, வெற்பு அன்ன - மலை போன்ற, இலங்கு எழில் - விளங்குகின்ற அழகையுடைய, தோள - தோள்களையுடையவனே ! (உலகத்தில்), மெய்ம்மை உற்றார் சிலர் - (வேதசாஸ்திரங்களிற் கூறியபடி) தவறாத நல்லொழுக்கம் பொருந்தியர் சிலரே: அல்லவரே பலர் - அந்நல்லொழுக்கமுடையவரல்லாதவரே பலர்; என்பது—, உண்மை - உண்மையாகும் ; பெற்றாருழை - (நாம்) சந்திக்கப்பெற்றவரிடத்தில், பெற்ற பயன் பெறும் பெற்றி அல்லால் - நேர்ந்த நற்குணத்தைக் கிரகித்துக்கொள்ளுந்தன்மையல்லாமல், நவை அற்றார் என்றலுக்கு ஆருநர் ஆர்கொல் - குற்றமற்றவரென்று சொல்லுதற்கு உரியவர் யாவருளர் ? என்றான் - என்று (இராமன் இலக்குமணனை நோக்கிக்) கூறினான் ; (எ - று.)

வேதசாஸ்திரங்களிற் கூறிய விதிமுறைப்படி தவறாத நல்லொழுக்கமுடையவர் சிலரும் அவ்வகையொழுக்கமில்லாதவர் பலருமாயிருப்பதுதான் உலகத்து இயல்பு ; "நெல்லுக்குமியுண்டு நீர்க்குநுரையுண்டு, புல்லிதழ் பூவிற்கு முண்டு" என்றபடி குற்றமில்லாதவர் உலகத்தில் அரிய ராதலால், அவரவரிடமுள்ள குணங்களை மாத்திரம் நாம் கிரகித்துக்கொள்ள வேண்டுமென்று பெருமாள் இளையபெருமாளுக்குச் சமாதானங் கூறியருளின ரென்பதாம். வில் தாங்கு - வில்லைத் தரித்த என்றும், எழில் - எழுச்சி யென்றும் உரைக்கலாம். ஆருநர், ந் - பெயரிடைநிலை, கொல் - அசை. (௧௫)

[அப்பொழுது வாலி சுக்கிரீவர் போர்க்கு நெருங்குதல்.]

கூகூ. வீரத்திறலோரிவையின்னவிளம்பும்வேலை
தேரிற்றிரிவான்மகனிந்திரன்செம்மலென்றிப்
பாரிற்றிரியும்பனிமால்வரையன்னபண்பார்
மூரித்திசையானையிரண்டெனமுட்டினாரே.

(இ - ள்.) வீரம் திறலோர் - பராக்கிரமத்தையும் பலத்தையு முடையவர்களான இராமலக்குமணர்கள், இன்ன இவை விளம்பும் வேலை - இத்தன்மையனவான இவ்வார்த்தைகளை(த் தம்மிற்) பேசிக்கொண்டிருக்குஞ் சமயத்தில்,—தேரில் திரிவான் மகன் - தேரிலேறி (உலகமெங்குஞ்) சுற்றி வருபவனான சூரியனது குமாரனாகிய சுக்கிரீவனும், இந்திரன் செம்மல்-இந்திரனது புதல்வனான வாலியும், என்ற—, இ பாரில் திரியும் பனி மால்வரை அன்ன பண்பார் - இந்த வுலகத்திற் சஞ்சரிக்கும் குளிர்ச்சியுள்ள பெரிய மலைகள் போன்ற தன்மையுடையவர்கள், மூரி திசை யானை இரண்டு என முட்டினார் - வலிமையையுடைய இரண்டு திக்கஜங்கள் (ஒன்றோடொன்று போர் செய்தற்கு நெருங்கினாற்) போல (ப் போர்க்குத் தம்மில்) நெருங்கினார்கள்; (எ - று.)

வலிய பெரிய வடிவிற்கும், கோபாவேசத்திற்கும் உவமை. மூன்றாமடி - இல்பொருளுவமையணி. அசலமாய் ஸ்திரமாயிருக்கும் மலைகளல்லாமற் புடைபெயர்ந்து இவ்வுலகமெங்குந்திரியும் மலைகளுளவானால் அவைபோன்றவர்களென்க. பண்பு ஆர் என்று பிரித்து, திரியும் மலைகள்போன்ற தன்மை பொருந்திய திக்கஜங்களென்று உரைப்பர் ஒருசாரார். 'என்ற' என்ற பெயரெச்சத்தின் ஈற்று அகரம் தொகுத்தல் விகாரப்பட்டது. (ஙக)

[அவ்விருவரும் சாரி திரிதல்.]

ஈஎ. குன்றோடுகுன்றொத்தனர்கோளரிக்கொற்றவல்லே
றொன்றோடுசென்றொன்றெதிருற்றனவேயுமொத்தார்
நின்றார்திரிந்தார்நெடுஞ்சாரிநிலந்திரிந்த
வன்றோட்குயவன்றிணிமட்கலத்தாழியென்ன.

(இ - ள்.) குன்றோடு குன்று ஒத்தனர் - மலையோடு மலை (நெருங்கினாற்) போன்றவர்களும், கோள் கொற்றம் வல் அரி ஏறு ஒன்றோடு ஒன்று எதிர் சென்று உற்றனவேயும் ஒத்தார் - கொல்லுமியல்பையும் வெற்றியையும் வலிமையையுமுடைய ஆண் சிங்கங்கள் ஒன்றோடொன்று எதிர்த்துச் சென்று நெருங்கியவற்றையும் போன்றவர்களுமாய், நின்றார் - (தம்மில்) நெருங்கி நின்றவர்களான அந்த வாலி சுக்கிரீவர்கள், நெடுஞ் சாரி திரிந்தார் - தொடர்ச்சியாகப் பலமுறை வலசாரி இடசாரி திரிந்தார்கள்; (அங்ஙனம் அவர்கள் திரிகின்ற கதிவிசையால்), நிலம் - நிலவுலகத்தினிடங்கள், வல் தோள் குயவன் திணி மண்கலத்து ஆழி என்ன - வலிய கைகளையுடைய குயவன் வனைகின்ற மண்பாத்திரங்கட்குத் துணைக்கருவியான சக்கரம்போல, திரிந்த - சுழலலாயின! (எ - று.)

கோள் - உயிர்கொள்ளுதல். வலிமுறமென்ற பெயரின் காரணப்பொருள் தோன்ற, 'கோள்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. சிங்கம் உவமை - பலபராக்கிரமங்களுக்கும், உக்கிரத்தனமைக்கும். திரிந்த - முற்று. கன்றாகத் தொழில் செய்தற்கு ஏற்ற கைவலிமையையுடையவனென்பார், 'வன்றோட் குயவன்' என்றார். உவமையணி. 'எதிர்செனறு உற்றன' எனபதை, 'குன் றோடுகுன்று' என்றதனோடுஞ் சேர்க்க. 'நினறோர்,' 'குயவன்றிரி' என்பன பாடபேதம். (ங௬)

[அவர்கள் உராய்தலால் தீ எழுதல்.]

ஙஎ. தோளோடுதோடேய்த்தலிற்றொன்னிலந்தாங்கலாற்றுத்
தாளோடுதாடேய்த்தலிற்றந்ததழற்பிறங்கல்
வாளோடுமின்னோடுவபோனெடுவானினோடுங்
கோளோடுகோளுற்றனவொத்தடர்ந்தார்கொதித்தார்.

(இ - ள்.) கோளோடு கோள் உற்றன ஒத்து அடர்ந்தார - (இரண்டு) கிரகங்கள் தம்மில்நெருங்கியன போனறு நெருங்கியவர்களான அவ்வாலி சுக்கிரீவர்கள், கொதித்தார் - கோபாவேசங் கொண்டவர்களாய், தோளோடு தோள் தேய்த்தலின - ஒருவர்தோளோடு மற்றொருவர்தோளை உராய்தலினாலும், தொல் நிலம் தாஙகல் ஆற்றா தாளோடு தாள தேய்த்தலின் - பழமையான நிலவுலகந் தாங்கமாட்டாத [மிக்கவலிமைகொண்ட] ஒருவர்காலோடு மற்றொருவர்காலை தேய்த்தலினாலும், தந்த - உண்டான, தழல் பிறங்கல் - தீப்பிழம்புகள், வாளோடு மின ஒடுவ போல் - ஒளியோடு மின்னல்கள் ஓடுவனபோல, நெடு வானின் ஓடும் - பரந்த வானத்தில் விரைந்து செல்லும்; (எ - று.)

தோளோடு தோள் தேய்த்தல் - ஒருவர்தோளினால் மற்றொருவர்தோளை ஒற்றுதல் தாளோடு தாள் தேய்த்தல் - ஒருவர்காலால் மற்றொருவர்காலை எற்றுதல். பிறங்கல் - உயர்ந்து விளங்குவது எனப் பொருளபடும்; அல் கருத்தாப்பொருள்விகுதி. வான - உரிச்சொல். ஓடுவ - பெயர். பெரிதாய்விளங்கும் வடிவத்துடன் நெருஙகுதல்பற்றி, 'கோளோடு கோளுற்றன வொத்து' என உவமைகூறினன். கோளோடு கோள் - சூரியசந்திர ரென்னலாம். அடர்ந்தார் - பெயர். கொதித்தார - முற்றெச்சம. 'வானினோடே' என்றும் பாடமுண்டு. (ஙஎ)

[அவர்கள் சுந்தோபசுந்தர் போலுதல்.]

ஙஅ. தந்தோள்வலிமிக்கவர்தம்மொருதாய்வயிற்றின்
வந்தோர்மடமங்கைபொருட்டுமலைக்கலுற்றார்
சிந்தோடரியொண்கட்டிலோத்தமைகாதல்செற்ற
சுந்தோபசுந்தப்பெயர்த்தொல்லையினோருமொத்தார்.

(இ - ள்.) தம் தோள் வலி மிக்கவர் - தமது புஜபலத்தால் மிக்கவர் களும், ஒரு தாய் வயிற்றின் வந்தோர் - ஒருதாயின் வயிற்றிலிருந்து பிறந்த

வர்களும், மட மங்கைபொருட்டு மலைக்கல் உற்றார் - மடமைக்குணமுள்ள ஒருபெண்ணின் நிமித்தமாய் (த் தம்மிற்) போர்செய்யத் தொடங்கியவர்களுமான அவ்வாலி சுக்கிரீவர்,—சிந்து ஓடு - சிதறிப் பரந்த, அரி - (உத்தமவிலக்கணமாகிய) சிவந்த இரேகைகளையுடைய, ஒள் கண் - பிரகாசமான கண்களையுடைய, திலோத்தமை - திலோத்தமையென்பவளிடத்துக் கொண்ட, காதல் - ஆசையினால், செற்ற - பகைத்து ஒருவரோடொருவர் போர்செய்த, சுந்த உபசுந்தர் பெயர் தொல்லையினோரும் - சுந்தன் உபசுந்தன் என்னும் பெயரையுடைய பழமையான அசுரர்களையும், ஒத்தார் - போன்றார்கள்; (எ - று.)—தம் - சாரியை. 'தாம்' என்பது சிறந்த பாடம்.

**சுந்தோபசுந்தர் வரலாறு** :—திருமாலால் நரசிங்காவதாரத்திற் கொல்லப்பட்டவனான இரணியகசிபுவென்னும் அசுரராஜனது குலத்தில் நிகும்பனென்பவனது புத்திரர்களாய்த் தோன்றிய சுந்தன் உபசுந்தன என்ற இருவரும் தம்மில் மிக்கமனவொற்றுமையுடையராய் நடத்தல் இருத்தல் படுத்தல் உண்ணல் உறங்கல் முதலிய எல்லாச்செயல்களிலும் எப்பொழுதும் ஒருவரை யொருவர் விட்டுப்பிரியாராய்த் தமது சுகதுக்கங்களைச் சமமாகப் பாவித்து வந்தனர். அவர்கள் இளமையில் மூவுலகத்தையும் வெல்லக்கருதி விந்தியகிரியையடைந்து மிக்க விரதானுட்டானத்துடனே திரிமூர்த்திகளைக் குறித்து நெடுங்காலம் அரிய பெரிய தவத்தைச் செய்கையில் அத்தவத்தின் கடுமையைக்கண்டு அஞ்சிய தேவர்கள் மாயையாற் பலமகளிரையேவி அவர்களுடைய தவத்திற்குப் பலவாறு பங்கஞ்செய்ய முயன்றும் முடியவில்லை. பின்னர்ப் பிரத்தியக்ஷமான திரிமூர்த்திகள் அச்சுந்தோபசுந்தர் வேண்டியபடியெல்லாம் அவர்கட்கு வரங்களைக் கொடுத்துவருகையில், அவ்வசுரர்கள் 'நாங்கள் எவராலுங் கொல்லப்படாதவ ராகவேண்டும்' என்று வரம் வேண்டினர். அதற்கு ஆதிதேவர்கள் 'உங்களிருவர்க்கும் பிறவுயிர்களெல்லாவற்றாலும் மரணமில்லை' என்று வரமளித்தார்கள். பின்பு அவ்விருவரும் மிகச் செருக்கி மூவுலகையும் வெல்லத்தொடங்கி இந்திராதி தேவர்கட்கும் பற்பல முனிவர்கட்கும் மனிதர்கட்கும் மற்றும் பலர்க்கும் மிக்க துன்பத்தை விளைத்து அநேகம்பிராணிகளை அழித்து வந்தனர். பிறகு தேவர்களும் முனிவர்களும் பிரமனைச் சரணமடைந்து செய்திகூற, அக்கடவுள் விசுவகர்மாவைக்கொண்டு மூவுலகத்துமுள்ள அழகிய பிராணிகளினுடைய உடம்பிற் சிறந்த சௌந்தரியத்தில் எள்ளளவு எள்ளளவாக எடுத்துச்சேர்த்து அது கொண்டு எவ்வுலகத்தும் ஒப்புயர்வில்லாத கட்டழகுடைய ஒருபெண்ணை யுண்டாக்கி அக்காரணத்தால் அவளுக்குத் திலோத்தமையென்று பெயரிட்டு அவளைச் சுந்தோபசுந்தரிருக்கின்ற இடத்திற்கு அனுப்பினான். விந்தியமலையின் தாழ்வரையில் அவ்விருவரும் உல்லாசமாக வீற்றிருக்கையில் அங்கு மலர்கொய்துவந்த அம்மங்கையைக் கண்டு அவளழகை வியந்து ஒருங்கு காமுற்று அருகிற்சென்று அவளுடையவலக்கையைச்சுந்தனும், இடக்கையை உபசுந்தனுமாகப் பிடித்துக்கொண்டார்கள். இயல்பில் மிக்க கொழுப்பையுடைய அவ்விருவரும் பின்பு வரத்தினாலும் செல்வத்தினாலுமாகிய களிப்பேறி அப்பொழுது மதுபானஞ் செய்ததனாலான மதமுங் கொண்டவராய்த்

காமக்களிப்புற்றுத் தம்மில் மாறுபட்டுத் தம்பியை நோக்கி அண்ணன் 'தமையனாகிய என்னாற் காதலிக்கப்பட்ட இவள் உனக்குத் தாய்முறையன்றோ? இவளை நீ விரும்புதல் ஏற்குமோ?' என்றும், அதற்கு ஈடாகத் தமையனை நோக்கித் தம்பி 'தம்பியாகிய என்னாற் காதலிக்கப்பட்ட இவள் உனக்கு மருமகள் முறையன்றோ? இவளை நீ விரும்பலாமோ?' என்றும் கூறிக் கோபங்கொண்டு தம் கையிலுள்ள கதாயுதத்தால் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு போர் செய்து இருவரும் ஒருங்கே ஒருவரால் ஒருவர் அழிந்தனர் என்பதாம்.

("முராரியை முராரிநாபிமுளரிவாழ்முனியை முக்கட், புராரியை நோக்கி முன்னாட் புரி பெருந்தவத்தின் மிக்கார, சுராரிகடம்மிற் சுந்தோபசுந்தரென்றிருவர் தங்கள், திராரியேவலினான் வந்த திலோத்தமைதன்னைக் கண்டார்," "காண்டலுமவண்மேல்வைத்தகாதலாலுழந்து நெஞ்சி, லீண்டிய துயரத்தோடு மிருவரு நயந்தபோழ் தப், பூண்டகுபொலிவினுடனபொருட் டமர் தமமிர்பூண்டு, மாண்டனரென்னும் வார்த்தை மாநில மறியுமன்றே" என்பன காண்க.)

ஒருதாய்வயிற்றின் வந்தோர் - ஸஹோதரர் 'மடமங்கை' என்றது, சுக்கிரீவன் மனைவியும் இம்பொழுது வாலிவசத்திலிருப்பவளுமான ருமையை. மடமை - மகடூஉக்குணங்களி லொன்று; அது - நாணம் முதலிய பிறவற்றிற்கும் உபலக்ஷணம். பொருட்டு - நான்காம்வேற்றுமைச் சொல்லுருபு. முதலிரண்டடிகளிற்கூறிய மூன்று விசேஷணங்களும் - சுந்தோபசுந்தர்க்கும் ஏற்கும்; ஆகவே, அவை - பொதுத்தன்மையாம் உவமை, பின்னிடாமற் போர் செய்தற்கும் அமையும். திலோத்தமா - வடசொல்; திலம் - எள், உத்தமா - மேலானவள். செற்ற, செறு - பகுதி: செறுத்தல் - பகைத்தல், பொருதல். ஸுந்த+உபஸுந்த=ஸுந்தோபஸுந்தர்: வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி. சுந்தோபசுந்தர் - உயர்திணையும்மைத்தொகை, பன்மைவிகுதிபெற்றது. சுந்தோபசுந்தப்பெயர் - "சிலவிகாரமா முயர்திணை." 'உண் கண்' என்ற பாடத்திற்கு - மையுண்ட கண்களெனக  (௪௯)

[மற்றும் அவர்கட்குச் சிலஒப்புமைவதத்தல்.]

௫0. கடலொன்றினொடொன்றுமலைக்கவுங்காவன்மேருத்
திடலொன்றினொடொன்றமர்செய்யவுஞ்சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகியுடற்றவுங்கண்டிலாதே
மிடலிங்கவர்வெந்தொழிற்கொப்புரைவேறுகாணேம்.

(இ - ள்.) கடல்ஒன்றினொடுஒன்று மலைக்கவும் - கடல்கள் ஒன்றோடொன்று போர்செய்யவும், காவல்மேரு திடல் ஒன்றினொடு ஒன்று அமர் செய்யவும் - (நிலவுலகத்தைப்) பாதுகாப்பதான மேருமலை (யிரண்டு) ஒன்றோடொன்று போர்செய்யவும், சீற்றம் என்பது இரண்டு ஆகி உடல் கொண்டு உடற்றவும் - கோபமென்கிற குணந்தானே இரண்டு புருஷவடிவங்கொண்டதாகி (ஒன்றோடொன்று) போர்செய்யவும், கண்டிலாதேம் - பார்க்காதவராம்,

இங்கு மிடல் அவர் வெம் தொழிற்கு வேறு ஒப்பு உரை காணோம் - இவ்வுலகத்தில் வலிமையையுடைய அவ்வாலி சுக்கிரீவர் செய்யுங் கொடியபோர்த் தொழிற்கு வேறு உபமானங் கூற அறியோம்; (எ - று.)

கடல் ஒன்றினோடொன்று மலைத்தலும், மேருத்திடல் ஒன்றினோடொன்று அமர்செய்தலும், சிற்றமென்பது உடல்கொண்டுஇரண்டாகியுடற்றலும், உளவாயின் வாலிசுக்கிரீவர் இங்ஙனங் கடும்போர்செய்தற்கு ஒப்புமையாகுமென்பது கருத்து; இல்பொருளுவமையணி. பூமிக்கு மேலும் கீழும் நின்று அதனை நிலைநிறுத்துதலாலும், நதிகளின் உற்பத்திக்கு இடமாகி நின்று அது கொண்டு நிலவுலகத்து உயிர்களைப் பாதுகாத்தலாலும், மலைகள் 'பூதரம்' என்றும், 'கோத்ரம்' என்றும் பெயர்பெறும்; அவ்வியல்புகளைப் பெரியமலையாகிய மேருவுக்குச் சிறப்புவகையா லேற்றி, 'காவல்மேரு' எனப்பட்டது: "தெரித்தீண்டுரைத்த தீவெலைக்கு நடுவாஞ் சம்புத்தீவதனைத், தரித்து நடுவண் மேருவெனுஞ் சயில மதனிற் றனிதுலங்கும்'' என்ற கூர்மபுராணமுங் காண்க; 'மேரு, பூமிக்கு நாராசம் போலத் தென்துருவம் முதல் வடதுருவம் வரையும் உள்ளே வளர்ந்து வட துருவத்தில் மேலோங்கியிருக்கும் பொன்மயமாகிய மலை' என்ற நூற்கொள்கையும் நோக்கத்தக்கது. திடல் - மேடு; இங்கே உயர்ந்தமலை. கண்டிலாதேம் - எதிர்மறைத் தன்மைப்பன்மையிறந்தகால வினையாலணையும் பெயர். அண்டங்கள் தாம் பலவாதலாலும் ஒவ்வொரு அண்டத்திற்கும் ஒவ்வொரு மேருகிரி உளதாதலாலும், இரண்டு மேருமலைகள் இங்குக்கொள்ளப்பட்டன; இல்பொருளுவமை பற்றியுமாம். ()

[அவர்கள் கண்களினின்று வெளிப்படுந் தீ.]

சக. ஊகங்களினாயகர்வெங்கணுமிழ்ந்ததீயான்
மேகங்களெரிந்தனவெற்புமெரிந்ததிக்கி
னாகங்கணடுங்கினநானிலமுங்குலைந்த
மாகங்களைநண்ணியவிண்ணவர்போய்மறைந்தார்.

(இ - ள்.) ஊகங்களின் நாயகர் - வானரத்தலைவர்களான அந்த வாலி சுக்கிரீவர்களுடைய, வெம் கண் - வெவ்விய கண்கள், உமிழ்ந்த - சொரிந்த, தீயால் - நெருப்பினால், மேகங்கள் எரிந்தன—: வெற்பும் எரிந்த - மலைகளும் எரிந்தன; திக்கின நாகங்கள் நடுங்கின - திக்கஜங்கள் அஞ்சிநடுங்கின; நால் நிலமும் குலைந்த - நால்வகைப்பட்ட நிலங்களும் நிலையழிந்தன; மாகங்களை நண்ணிய விண்ணவர் போய் மறைந்தார் - வானுலகங்களைச் சார்ந்து வசிக்கின்ற தேவர்கள் (அவற்றை விட்டு நெடுந்தூரம் அப்பால்) ஓடி ஒளித்தார்கள்; (எ - று.)

உமிழ்தல் - வெளிப்படுத்தல். எரிந்த, குலைந்த - முற்று. திக்கின் நாகங்கள் - கீழே எட்டுத்திசைகளிலும் இருந்து உலகத்தைத்தாங்குகின்ற வாசுகி முதலிய அஷ்டமகாசர்ப்பங்களுமாம். நால் நிலம் - முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல். முல்லையும் குறிஞ்சியும் திரிந்ததே பாலை யாதலாற் பாலைக்குத் தனியே நிலமில்லை யென்பதுபற்றியும், பிராணிசஞ்சாரத்திற்குச் சிறவா

மையாலும், பாலை விலக்கப்பட்டது. (ஈற்றடிக்கு - நிலவுலகத்தில் நிகழும் போரைக் கண்டு வியத்தற்பொருட்டு வரும் வழக்கப்படி) பெரிய வானத்தி னிடங்களை யடைந்த தேவர்கள் அஞ்சி மறைந்துபோய்விட்டார்க ளென்றும் உரைக்கலாம். உயர்வுநவிற்சியணி. (சகூ)

[அவர்கள் பலவிடங்களிலும் ஓடியோடிப் போர்புரிதல்.]

சஉ. விண்மேலினரோநெடுவெற்பின்முகட்டினரோ
மண்மேலினரோபுறமாதிரவீதியரோ
கண்மேலினரோவெனயாவருங்காணநின்றார்
புண்மேலிரத்தம்பொடிப்பக்கடிப்பார்புடைப்பார்.

(இ - ள்.) விண்மேலினரோ - வானத்தின்மேலுள்ளாரோ, நெடு வெற்பின் முகட்டினரோ - பெரியமலைகளின் சிகரங்களி லுள்ளாரோ, மண்மேலினரோ - நிலவுலகத்தி லுள்ளாரோ, புறம் மாதிரம் வீதியரோ - (அவ்வுலகத்தின்) சுற்றிலுள்ள திசைகளின் கடையெல்லையொழுங்கி லுள்ளாரோ, (அன்றி), கண்மேலினரோ - நமது கண்களிலுள்ளாரோ, என - என்று, யாவரும் காண - எல்லாரும் (விகற்பித்து) நோக்கும்படி, நின்றார் - (எங்கும் ஓடித்திரிந்து சென்று) நின்றவர்களாய் (அவ்விருவரும்), புண்மேல் இரத்தம் பொடிப்ப கடிப்பார் புடைப்பார் - புண்களுண்டாகி அவற்றினின்று இரத்தம் சிந்தும்படி (ஒருவரையொருவர்) கடிப்பவர்களும் குத்துபவர்களு மானார்கள்; (எ - று.)

இவ்வாறு போர் செய்யும் வாலிசுக்கிரீவர்கள், திடீரென்று ஆகாயத்தி லெழுவார்கள், மலைச்சிகரத்திற் குதிப்பார்கள், தரையில் வருவார்கள். திக்குகளிலோடித்திரிவார்கள், எல்லாவுயிர்களின் கண்களிலும் இருக்கின்றவர்கள் போல அங்கங்கே நிற்பார்கள், இரத்தங் கொப்பளிக்கும்படி ஒருவரையொருவர் கடிப்பார்கள், குத்துவார்கள் என்பதாம். வெகு விசையோடு சென்று பலவிடங்களில் நின்று போர்செய்தார்க ளென்பது, முதல்மூன்றடிகளால் விளங்கிற்று. அவர்கள் அப்படி அதிவிரைவாகச் சுழன்று திரியும்போது எங்குங் காணலாம்படி யிருத்தலால், 'கண்மேலினரோ' என்றார். இரத்தம் - ரத்தம் புடைப்பார் - அடிப்பவருமாம். (சஉ)

[அவர்கள் கர்ச்சனையும், குத்துதலாலாகும் ஓசையும்]

சங. ஏழொத்துடனாந்திசையெட்டொடிரண்டுமுட்ட
மாழிக்கிளரார்கலிக்கைம்மடங்கார்ப்பினோசை
பாழித்தடந்தோளினுமார்பினுங்கைகள்பாய
வூழிக்கிளர்காரிடியொத்ததுகுத்துமோதை.

(இ - ள்.) ஆர்ப்பின் ஓசை - (அவ்விருவரும்) கர்ச்சித்து ஆரவாரிக்கின்ற ஓசையானது,— ஏழ் ஒத்து உடன் ஆம் - (தம்மிலுள்ள) எழுவகைகளும் தம்முள் ஒத்து - ஒருங்குசேர்ந்தனவும், திசை எட்டொடு இரண்டும் முட்டும் -

பத்துத் திக்குகளிலும் பரவிநிறைவனவுமான, ஆழி-கடல்களில், கிளர் - உண்டாகின்ற, ஆர் கலிக்கு - நிறைந்த ஓசையினும், ஐம் மடங்கு - ஐந்து மடங்கு அதிகப்பட்டதாம்; பாழி தடதோளினும் - வலிமையுள்ள பெரியதோள்களிலும், மார்பினும் - மார்பிலும், கைகள் பாய - கைகள் விரைந்து சென்று சேரும்படி, குத்தும் - (ஒருவரை ஒருவர்) குத்துதலினாலாகிய, ஓதை - ஓசையானது,—ஊழி கிளர் கார் இடி ஒத்தது - கற்பாந்தகாலத்தில் (பெருமழை பொழிந்து உலகங்களை யழித்தற்கு) எழுகின்ற மேகங்களின் இடிமுழக்கத்தைப் போன்றது; (எ - று)

எழுகடல்களும் பொங்கித் தம்மில் ஒருங்குசேர்ந்து பத்துத்திசைகளிலும் பரவும்போது உண்டாகின்ற ஓசையினும் பலமடங்கு மிகுதியாயிருந்தது அவர்கள் கர்ச்சனைமுழக்க மென்பது, முன்னிரண்டடிகளின் பொருள். 'ஏழொத்துலகம்' எனவும் பாடம். இரண்டு - மேல், கீழ். ஆர் கலி - வினைத்தொகை. கலிக்கு, நான்கனுருபு - எல்லைப்பொருளில் வந்தது. குத்தும் ஓதை- பெயரெச்சம், காரணப்பொருளது. (சங)

[அவர்கள் கடித்தலாற் பொடிக்கும் இரத்தம்.]

சச. வெவ்வா யெயிற்றான் மிடல்வீரர்க டிப்ப மீச்சென்
றவ்வா யெழுசோ ரியதாசைக டோறும் வீச
வெவ்வா யுமெழுந் தகொழுஞ்சுடர் மீன்கள் யாவுஞ்
செவ்வா யைநிகர்த் தனசெக்கரை யொத்த மேகம்.

(இ - ள்.) மிடல் வீரர் - வலிமையையுடைய அவ்வீரரிருவரும், மீ சென்று - ஒருவர்மேலொருவர் பாய்ந்து, வெவ வாய் எயிற்றால் கடிப்ப - கொடிய தன்மையையுடைய பற்களாற் கடித்தலினால், அவ வாய் எழு- அந்தக் கடித்த வாயிலிருந்து வெளிப்படுகின்ற, சோரி அது - இரத்தமானது, ஆசைகள்தோறும்வீச - எல்லாத் திக்குகளிலும்தெறிக்க, (அவவிரத்தம் பட்டதனால்),—எவவாயும் எழுந்த கொழுஞ்சுடர் மீன்கள் யாவும் - (வானத்தில்) எவவிடத்திலும் விளங்குகின்ற மிக்க ஒளியையுடைய நக்ஷத்திரங்களெல்லாம், செவவாயை நிகர்த்தன - அங்காரகனைப் போன்றன; மேகம் - மேகங்கள், செக்கரை ஒத்த - செவவானத்தைப் போன்றன; (எ - று.)

அவர்கள் ஒருவரை யொருவர் கடித்த வாயிலிருந்து தெறித்த இரத்தம் பட்டதனால் யாவும் செந்நிறமாயின வென்க. செவவாய் - நவக்கிரகங்களிலொருவன். அவனதுநிறம், செம்மை. சொரிவதுசோரியெனக் காரணக்குறி.

வே று.

[வாலியின் தோள்களும், சுக்கிரீவனது மார்பும் தகர்தல்.]

சரு. வெந்த வல்லிரும் பிடைநெடுங் கூடங்கள் வீழ்ப்பச்
சிந்தி யெங்கணுஞ் சிதறுவ போற்பொறி தெறிப்ப
விந்தி ரன்மகன் புயங்களு மிரவிசே யுரனுஞ்
சந்த வன்னெடுந் தடக்கைக டாக்கலிற் றகர்வ.

(இ - ள்.) வெந்த வல் இரும்பிடை - (உலைக்களத்திற்) பழுக்கக்காய்ந்த வலிய இரும்பின்மேல், நெடுங் கூடங்கள் வீழ்ப்ப - (கருமான்) பெரிய சம்மட்டிகளை யிட்டு அடிக்க, (அதனால் அவ்விரும்பு), பொறி தெறிப்ப - அனற் பொறிகள் தெறிக்கும்படி, எங்கணும் சிந்தி சிதறுவ போல் - எல்லாப்பக்கங்களிலும் சிந்திச் சிதறுவது போல,—இந்திரன் மகன் புயங்களும் - இந்திரகுமாரனான வாலியின் தோள்களும், இரவி சேய் உரனும் - சூரியகுமாரனான சுக்கிரீவனது மார்பும், சந்தம் வல் நெடுந் தட கைகள் தாக்கலின் தகர்வ - அழகிய வலிய நீண்ட பெரிய கைகள் அறைவதனால் உடைந்துபோவனவாயின; (எ - று.)

வாலியின் தோள்களுக்கும் சுக்கிரீவனது மார்புக்கும் இரும்பும், சுக்கிரீவன் வாலி என்னும் இவரது கைகளுக்கு இரும்பையடிக்குஞ் சம்மட்டியென்னுங் கொல்லன்கருவியும் உவமை. 'பொறிதெறிப்ப' என்றதை உபமேயத்திற்குங் கொள்ளலாம். சிதறுவ - சிதறுவது என்பதன் விகாரம்.

இது முதல் இருபத்தாறு கவிகள் - பம்பைப்படலத்தின் பதினொராங்கவி போன்ற கலிநிலைத்துறைகள். (சரு)

[இருவரும் பொரும் வகைகள்.]

சசு. உரத்தினான்மடுத்துந்துவர்பாதமிட்டுதைப்பர்
கரத்தினால்விசைத்தெற்றுவர்கடிப்பர்நின்றிடிப்பர்
மரத்தினாலடித்துரப்புவர்பொருப்பினம்வாங்கிச்
சிரத்தின்மேலெறிந்துறுக்குவர்தெழிப்பர்தீவிழிப்பர்.

(இ - ள்.) (இருவரும் ஒருவரை யொருவர்), உரத்தினால் மடுத்து உந்துவர் - மார்பினால் நெட்டித்தள்ளுவார்கள்; பாதம் இட்டு உதைப்பர் - கால்களை நீட்டி உதைப்பார்கள்; கரத்தினால் விசைத்து எற்றுவர் - கைகளால் வேகங்கொண்டு தாக்குவார்கள்; கடிப்பர் - கடிப்பார்கள்; நின்று இடிப்பர் - நேர்நின்று மோதுவார்கள்; மரத்தினால் அடித்து உரப்புவர் - மரங்களைக்கொண்டு அடித்து அதட்டுவார்கள்; பொருப்பு இனம் வாங்கி - மலைவர்க்கங்களைப் பெயர்த்தெடுத்து, சிரத்தின்மேல் எறிந்து - தலைமேல் வீசி, உறுக்குவர்-அச்சமுறுத்துவார்கள்; தெழிப்பர் - ஆரவாரிப்பார்கள்; தீ விழிப்பர் - நெருப்புப் புறப்பட(க் கோபத்தால்) விழித்துப் பார்ப்பார்கள்; (எ - று.)

உறுக்குவர், உறுக்கு - பகுதி. தீவிழிப்பர்-மத்யமபதலோபஸமாஸம். ()

[இதுவும் அது.]

சஎ. எடுப்பர்பற்றியுற்றொருவரையொருவர்விட்டெறிவர்
கொடுப்பர்வந்துராங்குத்துவர்கைத்தலங்குளிப்பக்
கடுப்பினிற்பெருங்கறங்கெனச்சாரிகைபிறங்கத்
தடுப்பர்பின்றுவரொன்றுவர்தழுவுவர்விழுவர்.

(இ - ள்.) ஒருவரை ஒருவர் - ஒருவரை மற்றொருவர், பற்றி எடுப்பர் - பிடித்துத் தூக்குவர்; உற்று விட்டு எறிவர் - நெடுந்தூரம் வீசியெறிவர்; வந்து

உரம் கொடுப்பர் - (அங்ஙனம் எறியப்பட்டு விழுந்தவர் உடனே ஓடி) வந்து (எதிரிக்குத்) தன் மார்பை (அவன் தாக்குமாறு) காட்டுவர்; கைத்தலம் குளிப்ப குத்துவர் - (அவ்வாறு காட்டிய மார்பில் தமது) கைம்முஷ்டி புதையும்படி குத்துவார்கள்; கடுப்பினில் - வேகத்தோடு, பெருங் கறங்கு என - பெரிய காற்றாடியைப்போல, சாரிகை பிறங்க - வலசாரி இடசாரி முறைகள் விளங்க, (நடந்து), தடுப்பர் - (ஒருவரை யொருவர்) தடுப்பார்கள்; பின்றுவர் - (விசையோடு வலியத் தாக்குதற்பொருட்டுச் சிறிது) பின்வாங்குவார்கள்; ஒன்றுவர் தழுவுவர் விழுவர் - பொருந்தி (ஒருவரை யொருவர்) தழுவிக் கொண்டு கீழ் விழுவார்கள்; (எ - று.)

உற்றுப் பற்றி - நெருக்கிப் பிடித்து எனினுமாம். கொடுத்தல் - இலக்காக்குதல். "ஊக்கமுடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து" என்றபடி பொருகையில் தன்பகைகெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குதல் விலங்குகட்கு இயல்பாம். இனி, பின்றுவர் - கால்களோடு கால்களைப் பின்னி யெனினுமாம். கறங்குவது கறங்கு எனக் காரணக் குறி; கறங்குதல் - சுழலல். (சஎ)

[இதுவும் அது.]

சஅ வாலினா லுரம்வரிந்தனர்நெரிந்துகவலிப்பர்
காலினானெடுங்கால்பிடித்துடற்றுவர்கழல்வர்
வேலினாலறவெறிந்தனவிறல்வலியுகிராற்
றோலினாலுடனெடுவரைமுழையெனத்தொளைப்பர்.

(இ - ள்.) உரம் வாலினால் வரிந்தனர் - (ஒருவர்) மார்பை (மற்றொருவர் தமது) வாலினாற் கட்டி, நெரிந்து உக வலிப்பர் - (எலும்புகள்) நொருங்கிப் பொடியாம்படி இழுப்பர்; காலினால் நெடுங் கால் பிடித்து உடற்றுவர் - (தமது) காலால் (மற்றொருவரது) நீண்ட காலை மாட்டியிழுத்து வருத்துவர்; கழல்வர் - (பின்பு) சிறிது நெகிழ்வர்; வேலினால் அற எறிந்து அன - வேலாயுதத்தைக்கொண்டு நன்றாக எறிந்தாற்போன்ற [மிகக்கூறிய], விறல் வலி உகிரால் - மிக்க வலிமையையுடைய நகங்களினால், தோலினால் உடல் நெடு வரை முழை என - தோலுடன் உடம்பு பெரிய மலையின் குகைபோலாகும்படி [பிளவு கொடுக்கும்படி], தொளைப்பர் - துளைப்பார்கள்; (எ - று.)

அன - அன்ன: தொகுத்தல். விறல் வலி - ஒருபொருட்பன்மொழி; வெற்றியைத்தரும் வலிமை யெனினுமாம். தோலினால், ஆலுருபு - உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. 'எறிந்தென' என்ற பாடம் ஏற்கும். (சஅ)

[இதுவும் அது.]

சகூ. மண்ணகத்தனமலைகளுமரங்களுமற்றுங்
கண்ணகத்தினிற்றோன்றியயாவையுங்கையா
லெண்ணகப்பறித்தெறிதலினெற்றலினிற்ற
விண்ணகத்தினைமறைத்தனமறிகடல்வீழ்ந்த

(இ - ள்.) மண் அகத்தன மலைகளும்-நிலத்தினுள்ளே ஊன்றியிருப்பன வானமாலைகளையும், மரங்களும் - மரங்களையும், மற்றும் கண் அகத்தினில் தோன்றிய யாவையும் - மற்றும் கண்ணெதிரிற் காணப்பட்ட எல்லாப் பொருள்களையும், எண் கக கையால் பறித்து - (அவர்கள்) வலிமைவிளங்கக் கைகளாற் பெயர்த்தெடுத்து, எறிதலின் - (அவற்றை ஒருவர்மேல் ஒருவர்) வீசியெறிந்ததனாலும், எற்றலின - (அவற்றைக் கைகளிற்கொண்டு அவற்றால்) அடித்ததனாலும், இற்ற - (அம்மலைமுதலியன) முறிந்தவையாய், விண் அகத்தினை மறைத்தன - ஆகாயத்தினிடத்தை மறைத்தவையும், மறி கடல் வீழ்ந்த - (அலைகள்) மடங்கப்பெற்ற கடலில் (போய்) விழுந்தனவு மாயின; (எ - று.)

'மண்ணகத்தன' என்பதை மரங்களுக்கும் இயைக்கலாம். கண் அகத்தினில் - கண்பார்வையினிடத்தில்; கண்முனனிலையில் என்றபடி. 'இற்ற' என்ற இறந்தகாலப்பலவின்பால் முற்றெச்சத்தில், இறு-பகுதி. மிகுதியால் வானமெங்கும் பரவி நிறைதலால், 'விண்ணகத்தினை மறைத்தன' என்றார். ()

[ஒருவர்க்கு ஒருவர் தோற்காமற் சமமாகப் போருதல்.]

ருய. வெருவிச்சாய்ந்தனர்விண்ணவர்வேறென்னைவிளம்ப
லொருவர்க்காண்டமரொருவருந்தோற்றிலருடன்று
செருவிற்றுய்த்தலிற்செங்கனல்வெண்மயிர்செல்ல
முரிபுற்கானிடையெரிபரந்தனவெனமுனைவரர்.

(இ - ள்.) ஆண்டு அமர் - அப்பொழுது (நிகழ்ந்த) போரில், ஒருவர்க்கு ஒருவரும் தோற்றிலர் - ஒருவர்க்கு ஒருவர் தோற்காதவராய், உடன்று செருவில் துய்த்தலின் - உக்கிரமாய்ப் போர்செய்தலில் ஆனந்தமடைவதனால், முரி புல் கானிடை எரி பரந்தன என - உலர்ந்த புற்கள் நிறைந்த காட்டில் நெருப்புக்கள் பரவியன போல, வெள் மயிர் செம கனல் செல்ல - வெண்ணிறமான தங்கள் உடம்பு மயிர்களிலிருந்து சிவந்த நெருப்புஎழ, முனைவர் - அவவிருவரும போர்செய்பவரானார்கள்; (அப்போரினகடுமையைக் கண்டு), விண்ணவர் வெருவி சாய்ந்தனர் - தேவர்கள் அஞ்சி நிலைகுலைபவரானார்கள்; (என்றால்), வேறு விளம்பல் என்னை - (அப்போரின் கடுமையைக் குறித்து) மற்றும் சொல்லலாவது என்ன இருக்கின்றது! (எ - று.)

உடன்று, உடல் - பகுதி. 'உடன்று' என்றது, 'செரு' என்றதன்பின் வருவித்த 'செய்தல்' என்பதனோடு சேரும். 'செங்கனல் வெண்மயிர் செல்ல' என்றவிடத்துத் தொடைமுரண் காண்க. (ருய)

[பிறகு வாலி சுக்கிரீவனைக் குத்திக் குமைத்து நிலைகுலைத்தல்.]

ருக. அன்னதன்மையராற்றலினமர்புரிபொழுதின்
வன்னெடுந்தடந்திரள்புயத்தடுதிறல்வாலி
சொன்னதம்பியைத்தும்பியையரிதொலைத்தென்னக்
கொன்னகங்களிற்கரங்களிற்குலைந்துகமலைந்தான்.

[சுக்கிரீவன் வாலியைத் தாக்குதல்.]*

௫௩. தயங்குதாரகைநிரைதொடுத்தணிந்தனபோல
வயங்குசென்னியன்வயப்புலிவானவல்லேற்றே
டுயங்குமார்பினனொல்லைவந்தடுதிறல்வாலி
பயங்கொளப்புடைத்தெற்றினன்குத்தினன்பலகால்.

(இ - ள்.) தயங்கு தாரகை நிரை தொடுத்து அணிந்தன போல-விளங்குகின்ற நக்ஷத்திரங்கள் வரிசையாக (மாலையாய்த்) தொடுத்து அணியப்பட்டன போல, வயங்கு - (மலர்மாலை) விளங்குகின்ற, சென்னியன் - முடியையுடையவனான சுக்கிரீவன்,—வய புலி - வலிய புலியும், வானம் வல் ஏற்றோடு - மேகத்தில் தோன்றுகின்ற வலிய இடியேறும், உயங்கும் - (கேட்டு) வருந்தும்படியான, ஆர்ப்பினன் - ஆரவாரத்தைச் செய்துகொண்டு, ஒல்லை வந்து - விரைவாய் வந்து அடு திறல் வாலி பயம் கொள - பகையழிக்கும் வலிமையையுடைய வாலி அச்சங்கொள்ளும்படி, புடைத்து - (அவனை) அடித்து, எற்றினன் - மோதி, பல கால் குத்தினன் - பலமுறை குத்தினன்.

தாரகா, பயம் - வடசொற்கள். வய - உரிச்சொல். 'வானம் வல் ஏற்றோடு' என்பதற்கு - வானத்தையளாவிவளர்ந்த [மிகப்பெரிய] வலிய ஆண் சிங்கமும் என்றும் உரைக்கலாம். 'அணிந்தெனவெண்பூ' என்று பாடாந்தரம்.

[சுக்கிரீவனை, வாலி உயிர்நிலைகளில் தாக்குதல்.]

௫௪. அயிர்த்தசிந்தையனந்தகன்குலைகுலைந்தஞ்சச்
செயிர்த்துநோக்கினன்சினத்தொடுசிறுநகைசெய்யா
வயிர்த்தகையினுங்காலினுங்கதிர்மகன்மயங்க
வுயிர்த்தலந்தொறும்புடைத்தனனடித்தனனுதைத்தான்.

(இ - ள்.) (அப்பொழுது வாலி), அயிர்த்த சிந்தையன் - (தோற்றோடியவன் மீளவும்வந்த தென்ன வென்று) சங்கித்த மனத்தையுடையவனாய், அந்தகன் குலைகுலைந்து அஞ்ச - யமனும் அஞ்சிநடுங்கும்படி, செயிர்த்து நோக்கினன் - கோபித்து உறுக்கிப்பார்த்து, சினத்தொடு சிறு நகை செய்யா - அக்கோபத்தாற் சிறுசிரிப்புச்சிரித்து, வயிர்த்த கையினும் காலினும் - உறுதிகொண்ட (தன்) கைகளாலும் கால்களாலும், கதிர் மகன் மயங்க - அச்சுக்கிரீவன் மயக்கமடையும்படி, உயிர்த்தலம்தொறும் - (அவனது) உயிர்நிலைகளிலெல்லாம், புடைத்தனன் அடித்தனன் - குத்தி அடித்து உதைத்தான்—.

கையில்புடைத்தனன் அடித்தனன் காலின் உதைத்தான் என முறை நிரனிறைப்பொருள்கோள். வயிர்த்தல் - வைரங்கொள்ளுதல். கதிர் மகன் - சூரிய புத்திரன். கதிர் - ஒளி; ஒளியை யுடையவனுக்குப் பண்பாகுபெயர். குலைகுலைந்து அஞ்ச - அஞ்சிக் குலைகுலைய: விகுதிபிரித்துக்கூட்டல். இனி, குலை குலைந்து - கால் நிலைகுலைந்து என்றலுமாம். 'சினத்தொடு' என்றதில், 'ஒடு' உருபு - ஆலுருபின பொருளில் வந்தது; "ஊசியொடு குயின்ற தூசும் பட்டும்" என்றவிடத்துப் போல. உயிர்த்தலம் - உடம்பில் மர்பு

ஸ்தானங்கள் இங்குக்கூறிய சிரிப்பு, வீரத்தாலெழுந்த வெகுளி நகை; இகழ்ச்சி பற்றியதுமாம். மயங்குதல் - அறிவு கலங்குதல். அயிர்த்த சிந்தையன் - சிந்தை அயிர்த்தவன். (௫௪)

[சுக்கிரீவன் சிதைந்து, இராமனிருக்கின்ற திசையை நோக்குதல்.]

௫௫. கக்கினானுயிருயிர்ப்பொடுஞ்செவிகளிற்கண்ணி
னுக்கதாங்கெரிப்படலையோடுதிரத்தினொழுக்கந்
திக்குநோக்கினன்செங்கதிரோன்மகன்செருக்கிப்
புக்குமீக்கொடுநெருக்கினனிந்திரன்புதல்வன்.

(இ - ள்.) அங்கு - அப்பொழுது, உயிர்ப்பொடும் உயிர் கக்கினான் - (சுக்கிரீவன்) பெருமூச்சுடனே உயிரைக் கக்கலானான்; செவிகளின் - (அவனுடைய) காதுகளிலிருந்தும், கண்ணின் - கண்களிலிருந்தும், எரி படலையோடு - நெருப்பின் தொகுதியோடு, உதிரத்தின் ஒழுக்கம் - இரத்தப் பெருக்கு, உக்கது - வெளிப்பட்டது; (இவ்வாறு சிதைவுற), செம் கதிரோன் மகன் - அந்தச் சூரியகுமாரன் [சுக்கிரீவன], திக்கு நோக்கினன் - (வேறுகதியில்லாமையால் இராமபிரான் எழுந்தருளியிருக்கின்ற) திசையை (த் தீனமாய்) நோக்கினான்; இந்திரன் புதல்வன - இந்திரகுமாரனான வாலியோ, செருக்கி - கர்வங்கொண்டு, புக்கு மீ கொடு நெருக்கினன - மேல்மேல் தாக்கி வருத்திக்கொண்டிருந்தான்; (எ - று)

உயிர்ப்பொடும் உயிர் கக்கினான் - பிராணன் 'போய்விடு மென்னும்படி பெருமூச்சுவிடலானான் என்க. படலம், ருதிரம் என்ற வடசொற்கள் விகாரப்பட்டன. செம் கதிரோன் - செந்நிறமான கிரணங்களை யுடையவன். நெருக்குதல் - ஸங்கடப்படுத்துதல். 'திக்கு நோக்கினன்' என்பதற்கு. (இராமனிருக்கின்ற) திசையைநோக்கி ஓடிவரலானான் என்றும், 'புக்கு மீக்கொடு நெருக்கினன்' என்பதற்கு - தொடர்ந்து அவனமேற்பாய்ந்து அவனைப் பிடித்துக்கொண்டு நெரித்தான் என்றும் உரைப்பினுமாம். (௫௫)

[வாலி சுக்கிரீவனைத் தரையில்மோதுதற்கு எடுக்குஞ்சமயத்தில் இராமபிரான் வாலியின்மேல் அம்புதொடுத்தல்.]

௫௬. எடுத்துப்பாரிடையெற்றுவாம்பற்றியென்றிளவல்
கடித்தலத்தினுங்கழுத்தினுந்தன்னிருகரங்கண்
மடுத்துமீக்கொண்டவாலிமேற்கோலொன்றுவாங்கித
தொடுத்துநாணொடுதோளுறத்திராகவன்றுரந்தான்.

(இ - ள்.) பற்றிஎடுத்து பாரிடை எற்றுவாம் என்று - '(இவனைப்)பிடித்தெடுத்துத் தரையில் மோதுவோம்' என்று எண்ணி, இளவல் - தம்பியான அச்சுக்கிரீவனது, கடி தலத்தினும் - இடையிலும், கழுத்தினும் - கழுத்திலும், தன் இரு கரங்கள் மடுத்து - தனது கைகளிரண்டையுஞ் செலுத்தி, மீ கொண்ட - (அவனை) மேலேயெடுத்த, வாலிமேல் - வாலியினமீது,—இராகவன் - இராமபிரான், கோல் ஒன்று வாங்கி - ஓர் அம்பை யெடுத்து,

தொடுத்து - (தனது வில்லில்) வைத்து, நாணொடு தோள் இறுத்து - அவ்வில் நாணியுடனே (தனது) கையையும் இழுத்து, தூர்ந்தான் - செலுத்தினன். ()

வாலிமேல் தூர்ந்தான் என இயையும். ஏற்றுவாம் - தனித்தன்மைப் பன்மை. இளவல் - இளையவன்: அல் - பெயர்விகுதி. ராகவன் - ரகுகுலத்தில் அவதரித்தவன்; வடமொழித் தத்திதாந்தநாமம் அரையில் ஒரு கையையும் கழுத்தில் ஒரு கையையுங் கொடுத்துச் சுக்கிரீவனை வாலி தூக்கி மேலே யெடுத்துப் பூமியிலேமோதிக் கொல்ல யத்தனிக்கையில், அதுகண்ட இராமபிரான் 'இனி நாம் சும்மாவிருக்கலாகாது' என்று நினைத்து ஒருபாணத்தை யெடுத்துக் கோதண்டத்திற் பூட்டி நாணியைத் தோளளவும் இழுத்து வாலியின் மார்பை இலக்குவைத்து அந்த அம்பைப் பிரயோகித்தன னென்க. தன்னையடுத்துக் குறைவேண்டின ஓர் அந்தணனது குறையைத் தீர்த்தற்பொருட்டுக் குபேரன்மேற் போர்தொடங்கிய ரகுவினது குலத்தில் அவதரித்தவரான பெருமாள் தம்மையடுத்தவனான சுக்கிரீவனது குறையை நீக்கும்பொருட்டு வாலிமேல் அம்புதொடுத்தல் இயல்பே என்பது தோன்ற, இங்கு அப்பெருமானை 'இராகவன்' என்ற திருநாமத்தாற் குறித்தன னென்னலாம். அடுத்தவரை எவ்வகையாலேனும் குறைதீர்த்துப் பாதுகாத்தலை விரதமாகக்கொண்ட குலத்தில் தோன்றியவரென இவ்விசேஷ்யம் ஒரு கருத்தையுட்கொண்ட தாகுதலால், கருத்துடையடைகொளியணி. 'தோளுறத்து' என்பது, பாடபேதம். (௬௬)

[அந்த இராமபாணம் வாலியின் வலியமார்பை எளிதில் துளைத்தல்.]

௬௭. காரும்வார்சுவைக்கதலியின்கனிகனியினைக்கழியச்
சேருஞ்சூசியிற்சென்றது நின்றதென்செப்ப
நீருநீர்தருநெருப்பும்வன்காற்றுங்கீழ்நிமிர்ந்த
பாருஞ்சார்வலிபடைத்தவனுரத்தையப்பகழி.

(இ - ள்.) அ பகழி - அந்த (இராம)பாணமானது,—நீரும்—, நீர் தரு நெருப்பும் - நீரையுண்டாக்கிய தீயும், வல் காற்றும் - (அந்நெருப்பையுண்டாக்கிய) வலியகாற்றும், கீழ் நிமிர்ந்த பாரும் - (இவற்றிற்கு ஆதாரமாய்க்) கீழே விளங்குகின்ற பூமியும், (ஆகிய பூதங்கள் நான்கும்), சார் - கொண்ட, வலி - வலிமையை, படைத்தவன் - பெற்றவனான வாலியினது, உரத்தை - மார்பை,—கரும் வார் சுவை - முதிர்ந்த மிக்க உருசியையுடைய, கதலியின் கனியினை - வாழைப்பழத்தை, கழிய சேரும் - தைத்துச் செல்லுகின்ற, சூசியின் - ஊசிபோல, சென்றது - (எளிதில் துளைத்துக்கொண்டு) சென்றது, (என்றால்), செப்ப நின்றது என் - (அந்த ராமபாணத்தின் ஆற்றலைக் குறித்து மற்றும்) கூறவேண்டியதாய் நின்றது யாது உளது? [ஒன்றுமில்லையென்றபடி]; (எ - று.)

அந்த இராமபாணமானது, நான்குபெரும்பூதங்களின் வலிமை முழுவதும் நிறைந்த திடகாத்திரமுடைய வாலியின் மார்பிலே, கனிந்த வாழைப்

பழத்தில் ஊசி இறங்குவதுபோலச் சிறிதுந்தடைப்படாமல் நுழைந்த தென்பதாம். ஐம்பெரும்பூதங்களுள் முதலதான வானத்திற்கு வடிவமில்லாமையைபற்றி, அதனை இங்குக் கூறாராயினர். 'காருண்,' 'உரத்தில்' என்பனவும் பாடம். கதலீ, ஸூசீ-வடசொற்கள். (௬௭)

[வாலி விழுதல்]

௬௮ அலங்குதோள்வலியழிந்தனன்றம்பியையருளான்
வலங்கொள்பாரிடையெற்றுவானுற்றபோர்வாலி
கலங்கிவல்விசைக்கால்கிளர்ந்தெறிவுறக்கடைக்கால்
விலங்கன்மேருவும்வேர்பறிந்தாலெனவீழ்ந்தான்.

(இ - ள்.) அலங்கு தோள் வலி அழிந்தனன் தம்பியை - விளங்குகின்ற தோள்களின் வலிமை யழிந்தவனும் தனது தம்பியுமான சுக்கிரீவனை, அருளான் - (அவன்பக்கல் சிறிதும்) கருணைகொள்ளாதவனாய், வலம் கொள் பாரிடை எற்றுவான் உற்ற - வலிமைகொண்ட தரையில் மோதிக் கொல்லுதற்குத் தொடங்கிய, போர் வாலி - போரில்வல்ல வாலியானவன்,—கலங்கி - (அந்த ராமபாணம் பட்டவுடனே) நிலைகலங்கி,—கடைகால் - கற்பாந்தகாலத்தில், வல் விசை கால் கிளர்ந்து எறிவுற - வலிய வேகத்தையுடைய காற்று எழுந்து வீசுதலால், மேரு விலங்கலும் வேர்பறிந்தால் என - மேருகிரி நிலைபெயர்ந்து விழுந்தாற்போல, வீழ்ந்தான் - விழுந்திட்டான்; (எ - று.)

"பேராண்மை யென்பதறுக ணொன்றுற்றக்கா, லூராண்மை மற்றத னெஃகு" என்றபடி, தாக்ஷிணியமின்றிப் பகைவரையழித்தல் தகுதியாயினும் அப்பகைவர்க்குப் போரில் துன்பம்நேர்ந்த இடத்து அவரை அழித்திடாமல் அன்போடுவிடுதல் மிக்க பராக்கிரமத்தையுடைய வீரரது யுத்ததருமமும், தன் தம்பியினிடத்தே மைந்தனிடத்திற்போல அன்பு செலுத்துதல் தந்தையொப்பவனான தமையனது கடமையுமாயிருக்க, அந்த நீதிசாஸ்திரக் கொள்கைக்கும் தருமசாஸ்திரக் கொள்கைக்கும் மாறாக வாலி தன் தம்பியான சுக்கிரீவனை வலியழிந்தநிலையிற் சிறிதும் இரக்கமின்றிக் கொல்லத்துணிந்தனனாதலால் "அதிகமான புண்ணிய பாபங்களுக்கு இம்மையிலேயே பயன்நுகரலாகும்" என்றபடி அத்தீவினைமிகுதியால் உடனே அழியலாயினனென்பது தோன்றக் கூறினர். இப்படிப்பட்டவனை, "இன்று போய்ப் போர்க்கு நாளைவா" என்று கொடும்பகைஞனை இராவணனை முதல்நாட்போரில் அருள்செய்து விடுக்கும் இயல்புடையவனும் தம்பியர்பக்கல் வரம்பில்லாத அன்புடையவனுமாகிய ஸ்ரீராமபிரான் கொல்லுதல் தகுதியே யென்பதும் இதில் விளங்குதல் காண்க. இவ்வகைப் பெருங்குற்றத்தைத் தன் கண்ணாற் காணுமளவும் பெருமான் அம்புசெலுத்தாமற் பொறுத்திருந்து அதுகண்ட பின்னரே அம்புதொடுத்தன னென்பதும் கருதத்தக்கது. கால் - காலமென்பதன் விகாரம். மேருவும், உம் - உயர்வு சிறப்பு. வல்விசைக் கால் - பிரசண்டமாருதம். 'அழிந்த தன் தம்பியை' என்றும் பாடம். (௬௮)

[வாலி சுக்கிரீவனையெடுத்த பிடி நெகிழ்தல்.]

௫௯. சையம்வேரொடுமுருமுறச்சாய்ந்தெனச்சாய்ந்தான்
வையமீதிடைக்கிடந்தபோரடுதிறல்வாலி
வெய்யவன்றருமதலையைமிடல்கொடுகவருங்
கைநெகிழ்ந்தனனெகிழ்ந்திலன்கடுங்கணைகவர்தல்.

(இ - ள்.) உரும் உற - இடி விழுதலால், சையம் - மலை, வேரொடும் சாய்ந்து என - அடியோடு நிலைபெயர்ந்து விழுந்தாற்போல, வையம்மீது இடை - பூமியிலே, சாய்ந்தான்கிடந்த - விழுந்துகிடந்த, போர் அடு திறல் வாலி - போரிற்பகையழிக்கும் வலிமையையுடைய வாலியானவன்,—வெய்யவன்தருமதலையை மிடல் கொடு கவரும் கை நெகிழ்ந்தனன் - சூரியன்பெற்ற குமாரனான சுக்கிரீவனை வலிமைகொண்டு தூக்கியெடுத்த கைகளின் பிடி நெகிழ்ந்து விட்டான்: (ஆனால்), கடுங் கணை கவர்தல் நெகிழ்ந்திலன் - உக்கிரமான (இராம) பாணம் (தனது உடம்பையும் உயிரையும்) பற்றிய பிடி நெகிழப்பெற்றானில்லை; (எ - று.)

சுக்கிரீவனை வலியழிந்த நிலையில் வாலி வலிய எடுத்துத் தரையில் மோதிக் கொல்லப்பதனித்தமை, அவ்வாலியைக் கொல்லுமாறு இராமபிரான் அவன்மேல் அம்பு தொடுத்தற்குக் காரணமென்பது கீழ்க்கூறியதனால் விளங்கிற்று: அங்ஙனம் காரணமாகிய வாலியின் கைப்பிடி தளர்ந்தாலும், அதன் காரியமாகிய இராமனம்பின்பிடி தளர்ந்திலதெனச் சமத்காரந் தோன்றக் கூறினார்; இதனை, "மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின், அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு" என்றாற்போலக் கொள்க. அத்திருக்குறளினுரையிற் பரிமேலழகர் 'சூழ்கின்றபொழுதே தானும் உடன்சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது பெறப்பட்டது' என்றதுங் காண்க. ஈற்றடி - தொடைமுரண். இனி, வாலி சுக்கிரீவனைப்பிடித்த கைகளை நழுவவிட்டு(த் தன்மார்பிற்பட்டு உருவிச் செல்லுகின்ற அம்பைப்) போகவொட்டாமல் உறுதியாகத் தன் கைகளாற் பிடிப்பவனானானென்று உரைத்தலுமாம். (௫௯)

[வாலி இராமபாணத்தை வலியப்பிடிக்க முயலுதல்.]

௬௦. வெற்றிவீரனதடுகணையவன்மிடலுரத்தூ
டுற்றதப்புறத்துறாதமுனுறுவலிக்கரத்தாற்
பற்றிவாலினுங்காலினும்பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடுமறலியுஞ்சிரதலங்குலேந்தான்.

(இ - ள்.) வெற்றி வீரனது அடு கணை - ஜயத்தையுடைய மகாவீரனான இராமபிரானது தவறாமற் பகையழிக்கவல்ல அம்பானது, அவன் மிடல் உரத்தூடு உற்றது - அந்த வாலியினது வலிமையையுடைய மார்பிற் சேர்ந்தது; அப்புறத்து உறாத முன் - (அதனை முழுவதுந் துளைத்துக்கொண்டு) அப்பாற் சென்று விடாததன் முன்னே, (அதனை அவ்வாலி), உறுவலி கரத்தால்-மிக்க வலியையுடைய (தன்) கைகளால், பற்றி - பிடித்து, வாலினும் காலினும்

பிணித்து - (தனது) வாலினாற்கட்டியும் கால்களால் தடுத்தும், அகப்படுத்தான் - அப்பாற்போகவொட்டாமற்செய்தான்; (அப்போராற்றலைக்கண்டு), கொற்றம் வெம் கொடு மறலியும் - (எங்கும்) வெற்றியையுடைய பயங்கரனான கொடிய யமனும், சிரதலம் குலைந்தான் - (அத்திறத்தைக் கொண்டாடித்) தலையசைத்தான் [சிரக்கம்பஞ் செய்தானென்றபடி]; (எ - று.)

உற்றது - பெயர். உற்றதாகிய கணை யென இயையும். வெம், கொடு - ஒருபொருட்பன்மொழியுமாம். மறலி சிரதலங்குலைந்தான் - அஃறிணையாகிய சினை தான் தொடர்ந்த உயர்திணையாகிய முதலின் முடிபைக் கொண்டது; [நன் - பொது - ௨௧.] (௧௦)

[வாலியின் கோபாவேசம்.]

௧௧. எழுந்துவான்முகடிடித்துகப்படுப்பலென்றிவரு
முழுந்துபேர்வுழித்திசைதிரிந்திறுப்பலென்றுறுக்கும்
விழுந்துபாரினைவேரொடும்பறிப்பலென்றோரு
மழுந்துமிச்சரமெய்தவனார்க்கொலென்றயிர்க்கும்.

(இ - ள்.) (அப்பொழுது வாலி),—எழுந்து-மேற்கிளம்பி, 'வான் முகடு இடித்து - வானத்தின் முகட்டை யிடித்து, உக படுப்பல் - சிந்தும்படி செய்து விடுவேன்,' என்று - என்றெண்ணி, இவரும் - மேலெழுவான்; 'உழுந்து பேர்வுழி - (ஓர்) உளுந்து நிலைபெயர்ந்து (ஒருமுறை) உருளுமளவிலே [அதிவிரைவில் என்றபடி], திசை திரிந்து - எல்லாத்திக்குக்களிலுஞ் சேர்ந்து, இறுப்பல் - (அத்திக்குக்களை யெல்லாம்) அழித்து விடுவேன்,' என்று - என்றெண்ணி, உறுக்கும் - குதிப்பான்; 'விழுந்து - கீழ்விழுந்து, பாரினை வேரொடும் பறிப்பல் - பூமியை அடியோடு பெயர்த்தெடுப்பேன்,' என்று ஒரும் - என்று எண்ணுவான்; அழுந்தும் இ சரம் எய்தவன் ஆர்கொல் என்று அயிர்க்கும் - ('மிகவலிய என்மார்பிற்) பாய்ந்து செல்லுகின்ற இந்த அம்பைத் தொடுத்தவன் யாரோ?' என்று சந்தேகிப்பான்; (எ - று.)

இராமபாணம்பட்டதனால் வாலி துள்ளித் துடிக்கும்போது "எண்பது கோடி நினைந்தெண்ணுவன" என்றபடி அவன் கொண்ட பல எண்ணங்களை இங்ஙனம் எடுத்துக்கூறினர். வான் முகடு - அண்டகோளத்தின் மேலிடம், மேலுள்ள அண்டகடாகம். உழுந்துபேர்வுழி - உழுந்து உருளுங் கால வெல்லை. திரிதல் - சுற்றுதல். உறுக்கும் - கோபிப்பானெனினுமாம்; உறுக்குதல் - கொதித்தலுமாம். ஓர்தல் - ஆலோசித்தல்; கருமமுடிக்கத் துணிதலுமாம். அயிர்த்தல் - ஐயப்படுதல். (௧௧)

[இதுவும் அது.]

௧௨. எற்றுங்கையினைநிலத்தொடுமெரிப்பொறிபறப்பச்
சுற்றுநோக்குறுஞ்சுடுசரத்தைத்துணைக்கரத்தாற்
பற்றிவாலினுங்காலினும்வலியுறப்பறிப்பா
னுற்றுறாமையினுலைவுறுமலையெனவுருளும்.

(இ - ள்.) (மற்றும் வாலி),—கையினை நிலத்தொடும் எற்றும் - (தன்) கைகளைத் தரையோடு மோதுவான; எரி பொறி பறப்ப - (தன் கண்களி லிருந்து) நெருப்புப்பொறிகள் பறக்கும்படி, சுற்றும் நோக்குறும் - எல்லாப் பக்கங்களிலும் விழித்துப்பார்ப்பான்; சுடு சரத்தை - உக்கிரமான அந்த அம்பை, இணை கரத்தால் பற்றி - (தனது) இரண்டுகைகளாலும் பிடித்து, வாலினும் காலினும் - (தனது) வாலின் உதவியையும் கால்களின் உதவியை யுங் கொண்டு, வலிஉற பறிப்பான் - வலியப் பெயர்த்தெடுத்தற்கு, உற்று - தொடங்கி, உறாமையின் - (அம்முயற்சி) நிறைவேறாததால், உலைவு உறும் - வருத்தமடைவான்; மலை என உருளும்-மலை (புரண்டாற்) போல (நோவு பொறாமல் நிலத்திற்) புரள்வான்; (எ - று.)

கையினை நிலத்தொடும் எற்றும் - கைகளைத் தரையில் அறைவான், கைகளால் தரையை மோதுவான். பறப்ப - கிளம்ப. பறிப்பான் - எச்சம. பறித்தல் - பிடுங்குதல். (௬௨)

[வாலியின் சங்கை.]

௬௩. தேவரோவெனவயிர்க்குமத்தேவரிச்செயலுக்
காவரோவவர்க்காற்றலுண்டோவெனுமயலோர்
யாவரோவெனநகைசெயுமொருவனேயிறைவர்
மூவரோடுமொப்பான்செயலாமெனமொழியும்.

(இ - ள்.) தேவரோ என - ('இந்த அம்பை என்மேல் எய்தவர்) தேவர் களோ?' என்று. அயிர்க்கும் - சந்தேகிப்பான்; (மற்றும்), 'அ தேவர் - அந்த தேவர்கள், இ செயலுக்கு ஆவரோ - இவ்வகையான செயல்செயவல்லார்களோ? (அன்றியும்), அவர்க்கு ஆற்றல் உண்டோ - அவர்கட்கு (என்னுடலைத் துளைக்கவல்ல அம்பைச்செலுத்துந்) திறமை யுண்டோ?' எனும் - என்றும் எண்ணுவான; 'அயலோர் யாவரோ - (இது செய்தவர்) வேறு யாரோ?' என - என்று எண்ணி, நகைசெயும் - சிரிப்பான; 'ஒருவனே இறைவர் மூவரோடும் ஒப்பான் செயல் ஆம் - தானொருவனே திரிமூர்த்திகளுக்கும் ஒப்பாகின்றவனது செய்கையாகும் (இது),' என மொழியும் - என்றும் (தனக்குட்) சொல்லிக்கொள்வான; (எ - று.)

த்வந்த்வயுத்தமாக இருவர் போர்செய்கையில் இடையே ஒருவர்மேல் தாம் அம்பு செலுத்துதலாகிய இத்தகுதியில்செயலைப் புண்ணியப்பயனை நுகர்பவரும் விசேஷஞான முடையவர்களு மான தேவர்கள உடன்பட்டுச் செய்திடாரெனபான், 'அத்தேவர் இச்செயலுக்கு ஆவரோ' என்றான். தேவ ராஜகுமாரனை என்விஷயத்தில் தேவர்கள் இப்படிச் செய்யக் கடவரல்ல ரென்ற கருத்தை யுட்கொண்டதுமாம். நகைசெய்தது, அத்தொழிலைக் குறித்த இகழ்ச்சிபற்றி. திரிமூர்த்திகளி லொருவர்க்குத் தனியே இவ்வகைத் திறம் இல்லை யெனபதுபற்றி, 'ஒருவனே இறைவர் மூவரோடு மொப்பான் செயலாம்' என்றான். திரிமூர்த்திகட்கும் ஒப்பான ஒருவனே இது செய்ய வல்லவனென்க. திரிமூர்த்திகளின் ஆற்றலையுமுடையவன் இராமபிரானென்க.

யுரை இந்நூலில் மற்றும் பல இடங்களிலுங் காணலாம். இறைவர் - தலைவர். மூவர் - பிரம விஷ்ணு ருத்திரர் ; தொகைக்குறிப்பு. (௬௩)

[இதுவும் அது.]

௬௪. நேமிதான்கொலோநீலகண்டன்னெடுஞ்சூல
மாமிதாங்கொலோவன்றெனிற்குன்றுருவயிலு
நாமவிந்திரன்வச்சிரப்படையுமென்னடுவட்
போமெனுந்துணைபோதுமோயாதெனப்புழுங்கும்.

(இ-ள்.) ஆம் இது - என்மாாபிற்பட்ட இப்படைக்கலம், நேமிதான் கொலோ - (ஸ்ரீமகாவிஷ்ணுவினது) சக்கராயுதமேயாகுமோ? நீலகண்டன் நெடுஞ் சூலம் ஆம் கொலோ - (விஷத்தை அமுதுசெய்ததனால்) கறுத்த கழுத்தை யுடையவனான சிவபிரானது நீண்ட சூலாயுதமாகுமோ? அன்று எனில் - அவையல்லவென்றால், குன்று உரு அயிலும் - மலையினுருவத்தைச் சிதைத்த, நாமம் இந்திரன வச்சிரம் படையும் - பிரசித்திபெற்ற இந்திரனது வச்சிராயுதமும், என் நடுவண் போம் எனும் துணை போதுமோ - எனது மார்பில் நுழைந்து செல்லுமெனத்தக்க வலிமை யமைந்ததோ? யாது - (மற்றும் இது) எதுவோ? என - என்று சங்கித்து, புழுங்கும் - தவிப்பான் ; (எ-று.)

முனனாளில் மலைகள் சிறகுடையனவாயிருந்து பறந்து சனங்களின் மேல் விழுந்து அழித்துக்கொண்டிருந்ததனால் இந்திரன் அவற்றின்சிறகைத் தனது வச்சிராயுதத்தால் அரிந்தனனென்ற வரலாறுபற்றி, 'குன்றுருவயிலும் இந்திரன் வச்சிரப்படை' எனப்பட்டது. அயிலுதல் - உண்ணுதல்; இங்கே, அழித்தலுக்கு இலக்கணை. புழுங்குதல் - கோபதாபங் கொண்டு கொதித்தலுமாம். நீலகண்டன்னெடு—னகரமெய் - விரித்தல் விகாரம். நடுவண் - நடுவிடம். 'நேமிதானகொலோ', 'சூலமாங்கொலோ' என்றவற்றிற்கு அவற்றின் அம்சமோ என்பதுகருத்து; இங்ஙனங் கொள்ளாவிட்டால், கீழ் (௬௧) "அழுந்துமிச்சரமெய்தவன" என்றதனோடு மாறுபடும். அங்கு அம்பென்று அறிந்தவன் இங்கு எவையோவென்று சந்தேகித்தல் இயலாமை காண்க.

இனி, 'குன்று உருவு அயிலும்' என்பதற்கு - (கிரௌஞ்சமென்னும்) மலையைத் துளைத்த (முருகக்கடவுளின்) வேலாயுதமும் என்றும் உரைக்கலாம். உருவுதல் - ஊடுருவுதல். இங்கு அறிய வேண்டிய கதை:—முருகக்கடவுள் அசுரர்களை யழித்தற்பொருட்டுப் படையெடுத்துத் தேவர்களுடனே சூரபதுமனது மகேந்திரநகரத்தைநோக்கிச் செல்லும் வழியிடையே வானுற ஓங்கிய கிரௌஞ்சகிரியைக் கண்டு தேர்வகன் திகைத்திடுதலும், நாரதமுனிவர் கூறியதனால், அம்மலையில் ஒருசார் மாயமாபுரியிலே சூரபதுமனது தம்பியான தாரகன் பல அசுரசேனையுடனே யிருத்தலை யறிந்து, முருகக்கடவுள் தனக்குத் தம்பிமுறையாகின்ற வீரவாகுவைச் சேனையோடு போர்க்கு அனுப்ப, தாரகாசுரன் சேனையுடன் வந்து போர்செய்கையில், அசுரர்கள் அழிந்திட, யானைமுகமுள்ள அத்தாரகாசுரன் கடும்போர்புரிந்து சுப்பிரமணிய பரிவாரமான பூதகணங்களையழித்து முடிவில் முன்நிற்கமாட்டாமல் அம்மலை

யின் ஒருகுகையிலே ஒளித்தனனாக, தொடர்ந்துசென்ற வீரவாகு முதலி யோர் பலர் அக்குகையினுள்ளே அம்மலையின் மாயையால் மயங்கிக்கிடக்க- தாரகன் போர்க்களம் புகுந்து பூதகணங்களை வருத்தித்தாக்க, இச்செய்தி களை நாரதமுனிவர் சொல்லக் கேட்டு முருகக்கடவுள் சேனையுடன் சென்று போர்செய்து அவ்வசுரனது துதிக்கையையும் தந்தங்களையும் துணித்து அவனது சேனைகளை அழிக்கையில், அவன் அக்கிரௌஞ்சமலையுடன்கூடிப் பலமாயைகள் புரிய, ஆறுமுகமூர்த்தி வேலாயுதத்தை யெறிந்து அம்மலை யையும் அவ்வசுரனையும் அழித்திட்டன னென்பதாம். அன்றியும், சிவ பிரான் பரசுராமனுக்கும் சுப்பிரமணியனுக்கும் ஒருங்கு படைக்கலவித்தை பயிற்றுவித்தபின்பு அவர்கள் திறத்தைப் பரீக்ஷிக்கையில் பரசுராமன அம் பெய்து கிரௌஞ்சகிரியைத் துளைக்க, குமாரமூர்த்தி தனது வேற்படையை அக்கிரியின்மீது எறிந்து அதனைப்பிளந்து தனது வேலின திறத்தைக்காட் டினனென்ற வரலாறு உண்டு. 'குன்றுருவயிலோ' என்பதும் பாடம். (௬௫)

[வாலி அந்த அம்பைக் கொண்டாடுதல்.]

௬௬. வில்லினாற்றுரப்பரிதிவ்வெஞ்சரமெனவியக்குஞ்
சொல்லினனெடுமுனிவரோதூண்டினரோவென்னும்
பல்லினாற்கடிப்புறும்பலகாலுந்தன்னுரத்தைக்
கல்லியார்ப்பொடும்பறிக்குமப்பகழியைக்கண்டான்.

(இ - ள்.) ஆர்ப்பொடும் - ஆரவாரத்துடனே, தன உரத்தை கல்லி பறிக் கும் - தனது மார்பைத் தோணடிப் பெயர்த்துச்சென்ற, அப் பகழியை - அந்த அம்பை, கண்டான் - பார்த்தவனான வாலி,—'இ வெம் சரம் - இந்தக் கொடிய அம்பு, வில்லினால் துரப்பு அரிது - ஒருவில்லினால் எய்துசெலுத்து தற்கு அருமையானது,' என - என்று, வியக்கும் - ஆச்சரியப்படுவான்; 'நெடு முனிவர் - மகாரிஷிகள், சொல்லினால் தூண்டினரோ - (தங்கள்) சொற் களின் வலிமையைக்கொண்டு (இதனை) எவினார்களோ?' எனனும் - என்று எண்ணுவான்; பலகாலும் பல்லினால் கடிப்புறும் - (கோபத்தாலும் வருத்தத் தாலும்) பலமுறை தன்பற்களாற் (பற்களை) கடித்துக்கொள்வான்; (எ-று.)

சொல் - அருள்கொண்டு கூறினாலும் வெகுண்டு கூறினாலும் அந்தந்தப் பயன்களைத் தவறாமல் விளைத்திடுகின்ற நிறைமொழிகள். இனி, சொல்லி னால் மந்திரபலத்தால் என்றுமாம். கல்லி எனற இறந்தகால வினையெச்சத் தில், கல் - பகுதி. (௬௬)

[வாலி அந்த அம்பைத் தன்மார்பினின்று பிடுங்கக் கருதுதல்.]

௬௭. சரமெனும்படிதெரிந்ததுபலபடச்சலித்தே
னுரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்றைக்
கரமிரண்டினும்வாலினுங்காலினுங்கழற்றிப்
பரமனின்னவன்பெயரறிகுவெனெனப்பறிப்பான்.

(இ - ள்.) 'சரம்' எனும் படி தெரிந்தது - (இஃது ஓர்) அம்பு என்கிற நிலைமை தெரிந்ததே; பல பட சலித்து என் - பலவாறாகச் சங்கித்து என்ன பயன்? உரம் எனும் பதம் உயிரொடும் உருவிய ஒன்றை - (எனது) மார்பென்கிற இடத்தை (எனது) உயிருடனே துளைத்துக்கொண்டு சென்ற ஒப்பற்றதான அந்த அம்பை, கரம் இரண்டினும் - (எனது) இரண்டு கைகளாலும், வாலினும் காலினும் - வாலின் உதவியைக்கொண்டும் கால்களின் உதவியைக் கொண்டும், கழற்றி - (எனது உடம்பைவிட்டுக்) கழலப்பண்ணி, இன்னவன் பரமன பெயர் அறிகுவென் - இதனைத்தொடுத்தவனான பெரியோனது பெயரைத் தெரிந்துகொள்வேன்,' என - என்று எண்ணி, பறிப்பான்-(அந்த அம்பை வாலி தன்மார்பினின்று) பிடுங்குபவனானான்; (எ - று.)

ஹிம்ஸிப்ப தென்பது 'சரம்' என்ற வடமொழிப்பெயரின் காரணப் பொருளாதலால், 'சரம் எனும்படி தெரிந்தது' என்பதற்கு - (இந்த ஆயுதம்) சரமெனப்படுந் தன்மை(என்னை மிகவருத்துகின்றவிதத்தால் எனக்கு அநுபவ ஸித்தமாய்த்) தெரிந்தது என்றலுமாம். சலித்தல் - எண்ணம்மாறுதல்; இனி, சலித்து - வருந்தி யெனினுமாம். பரமன் - சிறந்தவன; வடமொழிப் பெயர். தன்மார்பைத் துளைக்கும்படி அம்புசெலுத்தியவன் அனைவரினுஞ் சிறந்தவனாதல் வேண்டு மென்பதுபற்றி, 'பரமன' என்றான்; அன்றி, இத்தகுதியில் செயலைச் செய்தவனென்று இகழ்ச்சிக்குறிப்பால் 'பரமன்' என்றானுமாம். 'பரமனன்னவன்' என்ற பாடத்திற்கு - கடவுள் போன்றவனெனக. அம்புகளில் உடையவன் பெயரைச் செதுக்கிவைத்தல் இயல்பாதலால், அது கொணடு இதனை எய்தவ னினனென்று அறியலா மென்க. (சுசு)

[வாலி அந்த அம்பைப் பறித்தல்.]

சுஎ. ஓங்கரும்பெருந் திறலுடைமனத் தனுள்ளத்தன்
வாங்கினன்மற்றவ்வாளியையாளி போல்வாலி
யாங்குநோக்கின ரமரருமவுணரும்பிறரும்
வீங்கினர்கடோள்வீரரையார்வியவாதார்.

(இ - ள்.) ஓங்கு - உயர்ந்த, அரு-(பிறாபக்கல்) அருமையான, பெருந்திறல் - மிக்கவலிமையை, உடை - உடைய, மனத்தன - மனத்தையுடையவனும், உள்ளத்தன் - (அந்த வலிமைக்கு ஏற்ற) மனக்கிளர்ச்சியையுடையவனுமான, யாளி போல் வாலி - சிங்கம்போன்ற வாலியானவன், அவ் வாளியை வாங்கினன் - அந்த அம்பை(த் தன் மார்பினின்று) பறித்தெடுத்துவிட்டான; ஆங்கு நோக்கினா - அப்பொழுது அதனைப்பார்த்தவர்களான, அமரரும் - தேவர்களும், அவுணரும் - அசுரர்களும், பிறரும் - மற்றையோரும், தோள் வீங்கினர்கள் - (அந்த அற்புதத்தைக் கண்டதனாலாகிய மகிழ்ச்சியால்) தோள்கள் பூரித்தார்கள்; வீரரை வியவாதார் யார் - (உலகத்தில்) வீரரைக் கொண்டாடாதவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—மற்று - அசை; பின்பு எனினுமாம்.

இங்கு 'ஓங்கு அரும் பெருந்திறல்' என்றது - மநோபலத்வத; (மநோபலம் - தைரியம், நெஞ்சுறுதி.) உள்ளமென்பது ஊக்கமென்னும் பொருள

தாதலை, "உள்ளமுடைமை யுடைமை," "உள்ளத்தனைய துயர்வு," "உள்ள மிலாதவ ரெய்தார்" எனத் திருக்குறளிலும்; "உள்ளமில்லவர்," "புளிஞருள் சுருங்கி" எனச் சிந்தாமணியிலுங் காண்க. ஊக்கமாவது - மனம் மெலிதலின்றித் தொழில் செய்தலிற் கிளர்தல். உள்ளம் - ஆகுபெயர். 'மனத்தின னுரவோன்' என்று பாடமோதுவாரு முளர். பின்னிரண்டடி - வேற்றுப் பொருள்வைப்பணி. அதுகண்டு தேவர்கள் அசுரர்கள் முதலானவர்கள் வாலியைக் கொண்டாடி மகிழ்ந்தார்க ளென்ற சிறப்புப்பொருளை, உலகத்திலே சுத்தவீரர்களைக் குறித்து யார்தான் அதிசயிக்கமாட்டாரென்ற பொதுப் பொருள்கொண்டு விளக்கினர். (௬௭)

[வாலியின் மார்பினின்று பெருகிய இரத்தவெள்ளம்.]

௬௮. மோடுதெண்டிரைமுரிதருகடலெனமுழங்கி
யீடுபேருலகிறந்துளதாமெனற்கெளிதோ
காடுமாநெடுவிலங்கல்கள்கடந்ததக்கடலி
னூடுபோதலுற்றதனையொத்துயர்ந்துளதுதிரம்.

(இ - ள்.) காடு - காடுகளையும், மா நெடு விலங்கல்கள் - மிகப்பெரிய மலைகளையும், கடந்தது - தாண்டியதாய், அ கடலின் ஊடு போதல் உற்றதனை ஒத்து - கடலிற்சென்று சேரத் தொடங்கியதைப் போன்று, உயர்ந்து உளது - உயர்ந்துள்ளதாகிய, உதிரம் - இரத்தவெள்ளமானது,—மோடு தெள் திரை முரிதரு கடல் என - உயர்ச்சியான தெளிந்த அலைகள் மடங்கப்பெற்ற கடல்போல, முழங்கி - ஆரவாரஞ் செய்துகொண்டு, ஈடு பேர் உலகு இறந்துளது ஆம் - வலிய பெரிய (பல) உலகங்களைக் கடந்ததாம்' எனற்கு - என்று வருணித்துச் சொல்லுமாறு, எளிதோ - எளியதாமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

அம்பைப் பறித்தவுடனே வாலியின் மார்பினின்று பெருகி வளர்ந்தெழுந்து காடுமலைகளைக் கடந்துசெல்கின்ற இரத்தவெள்ளமானது கற்பாந்தகாலத்தில் உலகங்களில் வியாபித்து அவற்றையழிக்கும் பிரளயக்கடலினும் மிகப்பெரிதா மென்பது, இதன் தாற்பரியம். அந்தப் பிரளயக்கடலைத் தனக்கு உவமை கூறும்படி எளியதன் றென்க. மோடு - உயர்ச்சி. ஈடு - பெருமை; நெடிற்றொடர்க்குற் றுகரத்தின் டகரவொற்று இருவழியிலும் இரட்டாதுநின்றது. முரிதரு, தா - துணைவினை. 'அக்கடல்' என்றவிடத்தில், சுட்டு - பிரசித்திபற்றியது; உலகறிசுட்டு: சேய்மைபற்றியதுமாம். உயர்ந்துளது - ஓங்பெருகியது. 'போதலுற்றதனை' என்றும் படிக்கலாம். (௬௮)

[அதுகண்டு சுக்கிரீவனும் வருந்துதல்.]

௬௯. வாசத்தாரவன்மார்பெனுமலைவழங்கருவி
யோசைச்சோரியைநோக்கினனுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப்புண்டவத்தம்பியும்பசுங்க
ணேசத்தாரைகள்சொரிதரநெடுநிலஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) வாசம் தாரவன் - வாசனையையுடைய மலர்மாலையைத் தரித்தவனான அந்த வாலியினது, மார்பு எனும் - மார்பாகிய, மலை - மலையினின்று, வழங்கு - பெருகிய, சோரி ஓசை அருவியை - இரத்தவெள்ளமாகிய ஆரவாரத்தையுடைய அருவிப்பெருக்கை, நோக்கினன் - பார்த்து, உடன்பிறப்பு என்னும் பாசத்தால் பிணிப்புண்ட அ தம்பியும் - உடன்பிறந்தவனென்பது பற்றி உண்டான அன்பாகிய கயிற்றினால் கட்டப்பட்ட தம்பியான அச்சுக்கிரீவனும், பசுங் கண் - பசுமையான (தன்) கண்களினின்று, நேசம் தாரைகள் சொரிதர - அன்பிற்கு அறிகுறியான நீர்த்தாரைகள் பெருக, நெடு நிலம் சேர்ந்தான் - பெரிய தரையில் விழுந்தான்; (எ - று.)

எவ்வளவு பகைமை யிருந்தபோதிலும் "மரணாந்தாநி வைராணி" என்றபடி எதிரியிறந்தவளவிற் பகைமை நீங்குதலால், அன்புடைத் தம்பியான சுக்கிரீவன் தன் தமையனது மரணத்தைக் குறித்து வருந்தின னென்க. இங்ஙனமே இராவண னிறந்தபின்னர் விபீஷணன் வருந்துவதுங் காண்க. வாலிக்குச் சுக்கிரீவன்பக்க லுண்டானதுபோலப் பெரும்பகைமை சுக்கிரீவனுக்கு வாலியினிடம் ஆதியில் உண்டானதில்லை யென்பதும் உணரத்தக்கது. மார்பெனும் மலைவழங்கு அருவி ஓசைச்சோரி - உருவகம். உடன்பிறப்பு - ஸஹோதரபாவம். பாசத்தால் - பாசமாகிய பாசத்தால் எனச் சிலேடையுருவகம். பாசம் - அன்பும், கயிறும். அன்புடையார்க்குப் பிறிடத்துத் துன்பங்கண்ட வழிக் கண்ணீர்விழு மாதலால், அச்சோகக்கண்ணீர் 'நேசத்தாரை' எனப்பட்டது. 'வாசத்தார்' என்றது, போர்க்கு அறிகுறியான தும்பைப் பூமாலையை; அலங்காரத்திற்கு அணியும் நறுமலர்மாலையையுமாம். ()

[வாலி அந்த அம்பிற்பொறிக்கப்பட்டுள்ள பெயரைப் பார்க்கத் தொடங்குதல்]

௭௦. பறித்த வாளியைப் பருவலித் தடக்கையாற் பற்றி
யிறுப்பெ னென்றுகொண் டெழுந்தனன் மேருவை யிறுப்
முறிப்பெ னென்னினு முறிவதன் றமெனமொழியாப்[போன்
பொறித்த நாமத்தை யறிகுவா னோக்கினன் புகழோன்.

(இ - ள்) மேருவை இறுப்போன் - மகாமேருகிரியையும் முறிக்கவல்லவனும், புகழோன் - கீர்த்திபெற்றவனுமான வாலி,—பறித்த வாளியை - (தனது உடம்பினின்று) கழற்றிய அம்பை, பரு வலி தட கையால் பற்றி - பருத்த வலிமையுள்ள பெரிய (தன்) கைகளாற் பிடித்து, இறுப்பென் என்று கொண்டு - ஒடிப்பேனென்று கருதி, எழுந்தனன் - எழுந்து, 'முறிப்பென் என்னினும் முறிவது அன்று - (யான்) முறிக்க முயன்றேனானாலும் (இது) முறியமாட்டாது.' என மொழியா - என்று (தனக்குட்) சொல்லிவிட்டு, பொறித்த நாமத்தை அறிகுவான நோக்கினன் - (அதிற்) செதுக்கப்பட்டுள்ள பெயரை (இனனதென்று) அறியும்பொருட்டுப் பார்க்கலானான். (எ - று.)—ஆம் - அசை.

அறிகுவான் - எச்சம்; கு-சாரியை. 'எழுந்தனன்' என்பதற்கு - முறிக்கத் தொடங்கியென்றும் பொருள் கொள்ளலாம். 'மேருவை யிறுப்பேன்' என்றும், 'மேருவையிரண்டாய்' என்றும் பாடமுண்டு. (எ0)

வேறு.

[வாலி அந்த அம்பில் இராம நாமாங்கிதத்தைப் பார்த்தல்]

எக. மும்மைசா லுலகுக் கெல்லா மூலமந் திரத்தை முற்றுந்
தம்மையே தமர்க்கு நல்குந் தனிப்பெரும் பதத்தைத் தானே
யிம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை யிராம னென்னுஞ்
செம்மைசேர் நாமந் தன்னைக் கண்களிற் றெரியக் கண்டான்.

(இ - ள்.) மும்மை சால் - மூன்றென்னுந் தொகையமைந்த, உலகுக்கு எல்லாம் - உலகங்களெல்லாவற்றிற்கும், மூல மந்திரத்தை - முக்கியமந்திரமாக வுள்ளதும்,—தமர்க்கு - தன்னை ஜபிக்கின்றவர்களான அடியார்கட்கு, தம்மையே முற்றும் நல்கும் - தம்மையே முழுவதுங் கொடுக்கின்ற, தனி பெரும் பதத்தை - ஒப்பற்ற சிறந்த சொல்லாக வுள்ளதும்,—தானே - தான் தனியாகவே, இம்மையே - இப்பிறப்பிலேயே, எழுமை நோய்க்கும் மருந்தினை - எழுவகைப்பட்ட பிறப்புக்களாகிய நோய்களையெல்லாம் ஒழிப்பதற்கு மருந்தாகவுள்ளதுமான,—இராமன் என்னும் செம்மை சேர் நாமந்தன்னை - 'ராம:' என்கிற சிறப்புப்பொருந்திய திருநாமத்தை,—கண்களின் தெரிய கண்டான் - தனது கண்களினால் (அந்த அம்பிலே) விளங்கப் பார்த்தான், (வாலி) (எ - று.)

தாரகமந்திரமென்று சிறப்பித்துக் கூறப்படுகின்ற சிறந்த மகாமந்திரமான ராமநாமத்தின் மகிமை, இங்கு உணர்த்தப்பட்டது; "நன்மையும் செல்வமும் நாளும் நல்குமே, தின்மையும் பாவமும் சிதைந்து தேயுமே, சென்மமும் மரணமுமின்றித் தீருமே, இம்மையே ராமவென்றிரண்டெழுத்தினால்" என்றும், "இறவரம்பி னிராமவென்றோ ரும்பர், திறவ ரென்பது திச்சயம்" என்றும் இந்நூல்தொடக்கத்திற் கூறியதுங் காண்க: மேல் சஉ௲ - ஆஞ் செய்யுளும் நோக்கத்தக்கது. மூல மந்திரம் - தலைமையான மந்திரம். எல்லாவுலகத்தவராலும் அறிந்து ஜபிக்கப்படுவதென்பார், 'உலகுக்கெல்லாம் மூலமந்திரம்' என்றார். உலகம் பதினான்காயிருக்க 'மும்மைசால்உலகு' என்றது, மேல் கீழ் நடு என்ற நோக்கத்தால்; அவை ஸ்வர்க்க பூமி பாதாளமெனத் தொகுத்துரைக்கப்படும். மும்மை - மூன்றாயிருக்குந் தன்மை. ராமநாமத்தை ஜபித்தவர் அப்பெருமானாக அவதரித்த ஸ்ரீமந்நாராயணனது பரமபதத்தை யடைந்து அந்த எம்பெருமானுடைய ஸ்வரூபம் முழுவதையும் திரிகரணங்களாலும் அநுபவித்து ஆனந்தமடைதல்பற்றி, 'முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் தனிப்பெரும்பதம்' எனப்பட்டது. ஸாலோகம் ஸாமீப்யம் ஸாரூபம் ஸாயுஜ்யம் என்னும் முத்திநிலை நான்கையும் அளிக்குமென்பது பற்றி, 'தம்மையே முற்றும் நல்கும்' என்றாருமாம். 'தம்மை' என்றது, அந்த நாமத்தின் பொருளான எம்பெருமானைக் குறித்தது; பன்மை, உயர்வுபற்றியது. தமர் -

தம்மவர், தம்மைச்சார்ந்தவர்; இளைப்பெயர் 'தானே' என்ற ஏகாரம் - பிரி நிலை; வேறொன்றன் உதவியை வேண்டாமலென்றபடி. 'இம்மையே' என்ற ஏகாரம் - தேற்றம்; "சரீராவஸாநத்திலே மோக்ஷம்" என்று பேரருளாளப் பெருமாள் தாமே திருவாய்மலர்ந்தருளியபடியும், "சரணமாகுந் தனதா ளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்று நம்மாழ்வார் அருளிச்செய்தபடியும், எம்பெருமானது அடியார்கட்கு இப் பிறப்பின் முடிவிலேயே முத்தி கிடைத்தலால், 'இம்மையே எழுமை நோய்க் கும் மருந்து' எனப்பட்டது எழுமை - தேவர், மனிதர், மிருகம், பறவை, ஊர்வன், நீர்வாழ்வன, தாவரம் என்னும் எழுவகைப் பிறப்புகள். முத்தி பெற்றவர்க்கு மீண்டும் கருமவசமான பிறப்பு இல்லையென்பது உணர்க. இரா மன் - 'ராம:' என்ற வடசொல்லின் விகாரம். செம்மை-செவ்வி. இராமநாம மென்ற ஒருபொருளினிடத்து மூன்று தன்மைகளைக் கூறியது, பலபடப் புனைவணி. 'கண்டான்' என்றவிடத்து, 'கண்களின்' என வேண்டாது கூறி யது, கண்கள் படைத்தபயனைக் கண்டானென ஒரு சிறப்புப்பொருள் தோன்ற நின்றது. தெரியக் கண்டான் - நன்றாகப் பார்த்தானென்க. மூல மந்த்ரம், பதம், நாமம் - வடசொற்கள்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - மராமரப்படலத்தின் பதினோராங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (எக)

[தன்மேல் அம்பெய்தவன் இராமனேன்று உணர்ந்து வாலி இகழ்தல்.]

எஉ. இல்லறந்துறந்தநம்பியெம்மனோர்க்காகத்தங்கள்
வில்லறந்துறந்தவீரன்றோன்றலால்வேதநூலிற்
சொல்லறந்துறந்திலாதசூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னாநகைவரநாணுட்கொண்டான்.

(இ - ள்.) 'இல் அறம் துறந்த நம்பி - (தனது) கிருகத்திலிருந்து தரு மஞ்செய்தலைவிட்டு வநவாஸம்புக்க சிறந்த ஆண்மகனும், எம் அனோர்க்கு ஆக - எம்மைப்போன்றவர்களுக்காக, தங்கள் வில் அறம் துறந்த - தங்கட்குப் பரம்பரையாக உரிய விற்போர்முறைமையை விட்டிட்ட, வீரன்-வீரனுமான இராமன், தோன்றலால் - பிறந்ததனால்,—வேதம் நூலில் சொல் அறம் துறந் திலாத சூரியன் மரபும் - வேதசாஸ்திரங்களிற் சொல்லப்பட்ட தருமங்களைக் கைவிடாமல் அனுட்டித்துவந்த சூரியகுலமும், தொல்லை நல்அறம் துறந் தது-தொன்றுதொட்டு வருகின்ற நல்ல தருமத்தை விட்டதாயிற்று,' என்னா- என்று எண்ணி, நகை வர-சிரிப்புண்டாக, நாண் உள் கொண்டான்-நாணத்தை மனத்திற் கொண்டான்; (எ - று.)

இல்லறம்துறந்த நம்பி - மனையாள் முதலானோரோடு கிருகத்தில் வாழ்ந்து செய்யுங் கிருகஸ்தாச்சிரமதருமத்தை விட்டுத் தாய் தந்தை தம்பி முதலிய சுற்றத்தார்பக்கல் அன்பின்றி நீங்கி வாநப்பிரஸ்தாச்சிரம தருமத்தை மேற் கொண்டு கிருகத்தைவிட்டு மனையாளோடு தவவேடம்பூண்டு வனத்திற் சென் றவனென்றபடி. அன்றி, இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியை (இரா

வணன் கவர) இழந்துவிட்டு அதற்கு எதிரொன்றுஞ்செய்யாதவ னென்ற பொருளில் 'இல்லறந்துறந்தநம்பி' என்றதுமாம்; இலக்கணை. எம் அனோர் - எம்மோரொடொத்தவர்; இங்கு 'எம்மனோர்க்காக' என்றது, எமக்காக என்றபடி; ஒப்பில்போலியும், தனமைப்படர்க்கையுமாம்: பனமை - தன்தம்பியையுங் கூட்டிய உளப்பாட்டுத் தன்மைப்பன்மை: எனக்குப் பிரதிகூலமாகவும், என் தம்பிக்கு அநுகூலமாகவு மென்க; என்னைத் தொலைத்தற்காகவும், சுக்கிரீ வனுககு உதவியாகவும் என்றவாறு. வில்லறம்துறத்தல் - இருவர் த்வந்த்வ யுத்தஞ்செய்கையில் விற்போர்முறைமைக்கு மாறாக இடையே தான் புகுந்து மறைந்துநின்று அவர்களிலொருவர்மேல் அமபெய்தல்; "இருவரு மூனைந்த போரி லிளைத்தவற் குதவியாகப், பொருவது கடனன்று" எனறது, மகாபார தம். நம்பி - ஆடவரிற்சிறந்தவன், புருஷோத்தமன. இங்கு 'நம்பி,' 'வீரன்' என்றவை - இகழ்ச்சிக்குறிப்பாய் எளிமைகுறிக்கும். தோனறலால் துறந் தது என இயையும். ("ஏகஃ பாபாநி குருதே பலம் புங்கதே மஹாஜநஃ" என்றவாறு,) இப்படி என்பக்கல் இராமனொருவன அநீதிசெய்ததனால் அவன பிறந்த சூரியகுலம முழுவதுக்குமே சிறப்பழிந்த தெனறு னெனக. நகைப்பு வந்தது, இகழ்சசிபற்றி. "பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார் நாணுக்கு, உறை பதி யெனனு முலகு" என்றபடி பிறாககுவரும்பழியையும தமக்குவந்த தாகவேகருதி நாணுதல் உயாந்தோரியல் பாதலால, இராமனது பழிககத்தக்க செயலைககுறித்து வாலி நாணங்கொணடான. அன்றி, நாண் உட்கொண் டது. 'இங்ஙனஞ்செய்த போலிவீரனது அம்புபட்டதனால் தான உயிரிழகக நோதல்கருதி யென்றலுமாம். நாண - நாணம்; லஜ்ஜை: முதனிலைததொழிற பெயா. வேதநூல் - உம்மைத்தொகையும், பண்புததொகையுமாம. தொலலை- பழமையான. (எஉ)

[இதுவும் அது.]

எங. வெள்கிடமகுடஞ்சாய்க்குமவெடிபடசசிரிககுமீட்டு
முள்கிடுமிதுவுநதானோரோநகறமோமவென்றுனனு
முள்கிடுங்குழியிற்புக்கமூரிவெங்களிநல்பானை
தொள்கொடுங்கிடநததென்னத்துயருழந்தழிநதுசோாவான்.

(இ - ள்.) முள்கிடும் குழியில் புக்க - முழுகி அழுந்தததக்க பெருங்குழி யிலே விழுந்து அகப்பட்டுக்கொணட, மூரி வெம களி நல் யானை -வலிமையை யுடைய வெவவிய மதங்கொண்ட சிறநத ஓா ஆண்யானையானது, தொள் கொடும் கிடந்தது எனன - வருததத்துடனே (அங்குக) கிடந்தது போல, துயர் உழந்து அழிந்து சோர்வான் - துனபமனுபவித்துக்கொண்டு நிலை யழிந்து தளர்பவனன வாலி,—வெள்கிட - மனத்திலநாணமுற்றதனல், மகு டம் சாய்க்கும்—கிரீடமணிந்த தலையைச் சாயப்பான; வெடிபட சிரிக்கும் - பெருமுழக்கமுண்டாகச் சிரிப்பான்; மீட்டும உள்கிடும-(நடந்தசெய்தியைக் குறித்து) மீளவும் ஆலோசிப்பான்; இதுவும தான் ஓா ஒறகு அறமோ என்று உன்னும் - இப்படி அம்பெய்ததுதானும் ஒரு சிறந்த தருமமாகுமோ வென்று எண்ணுவான்; (எ - று.)

வெள்கிட, உள்கிடும், மூள்கிடும என்றவற்றில்—வெள்கு, உள்கு, மூள்கு - பகுதி. மகுடம் - கிரீடம்: வடசொல்; அதனையணியும் முடிக்குத் தானியாகுபெயர். இங்கு 'வெடிபடச்சிரிக்கும்' என்பதனால், கீழ்ச்செய்யுளில் 'நகைவர' என்றது - புன்சிரிப்பு உண்டாக என்றவாறும். 'வர' என்ற சொல்லும், (புதிதாகச் சிறிது) எழுதலைக் குறிப்பிக்கும். இனி, மீட்டும் வெடிபடச் சிரிக்கும் என்று இயைத்தால், கீழ்ச்செய்யுளில் 'நகைவர' என்றதும் வெடிசிரிப்பாகலாம். உள்குதல் - வருத்தத்தோடுசிந்தித்தல். மூள்கிடுங் குழி - பெரும்பள்ளம், படுகுழி. யானை பிடிப்பவர் யானைக்காட்டில் ஒரு பெரும்பள்ளத்தைப் பறித்து அதன் இப்புறத்திலே தாம் பழக்கிவைத்துக் கொணர்ந்த பெண்யானையை நிறுத்த, அப்புறத்திலுள்ள ஆண்யானை அதனோடுசேரும் விருப்பத்தால் ஓடிவருகையில் அப்படுகுழியில் வீழ்ந்துமேலேற மாட்டாமல் அகப்பட்டுக்கொள்ள, அதனை அவர்கள் பின்பு தந்திரமாக விலங்கிட்டு மேலேற்றித் தம்வசப்படுத்திக் கொள்ளுதல், இயல்பு; அவ்வாறு இராமன செய்த தந்திரத்தால் வாலி அகப்பட்டு வருந்தலாயின னென்பது, பின்னிரண்டடியிற் கூறிய உவமையால் விளங்கும். நல் யானை - உத்தம விலக்கணமமைந்த கஜம். தொள்கு - நெகிழ்வு, குழைவு; இச்சொல்லுக்கு - வலையென்ற பொருளு முண்டு: இங்கே இலக்கணையாய்க் கால்விலங் கென்னவுமாம். அது, அம்புக்கு உவமையாம். உழந்து, உழ - பகுதி. சாய்க்கும் - அசைக்கு மெனினுமாம. 'வெள்கிடும்,' 'சோரும்' என்பன - பாடபேதம். (எந)

[இராமபிரான் வாலியின் எதிரில் வருதல்.]

எச. இறைதிறம்பினனாலென்னேயிழிந்துளோரியற்கையென்னின்
முறைதிறம்பினனாலென்றுமொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மைமன்னர்க்குமுன்னஞ்சொல்லுந்
துறைதிறம்பாமற்காக்கத்தோன்றினான்வந்துதோன்ற.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'இறை - எப்பொருட்கும் இறைவனான இராமன், திறம்பினன் - நீதிதவறினான்; (என்றால்), இழிந்துளோர் இயற்கை - தாழ்ந்தவர்களது இயல்பு, என்னே - என்னாகும்! (அந்த லோகநாயகனும்), என்னில் - என்விஷயத்திலே, முறை திறம்பினன் ஆல் நீதிதவறினனன்றோ! என்று,— மொழிகின்ற - சொல்கின்ற, முகத்தான் - வாயையுடையவனான அந்த வாலியினது, முன்னர் - எதிரில்,—மறை திறம்பாத - வேதத்தின் கருத்தோடு மாறுபடாத, வாய்மை - உண்மைப்பொருள்களை யுணர்த்தும் நூல்களான தரும சாஸ்திரங்கள், மன்னர்க்கு முன்னம் சொல்லும்—அரசர்கட்கென்று பழமையாகச் சொன்ன, துறை - நல்லொழுக்க வழிகள், திறம்பாமல் - தவறாதபடி, காக்க - பாதுகாத்தற்கு, தோன்றினான் - அவதரித்தவனான இராமபிரான், வந்து தோன்ற—, (எ - று.)—"கண்ணுற்றான் வாலி நோக்கி எக வான் - இயம்பலுற்றான்" என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும். 'ஆல்' இரண்டனுள், முன்னது - அசை, பின்னது - தேற்றம்.

முகத்தான் முன்னர் வந்து தோன்ற என இயையும். இறை - தலைவன். 'என்னில்' என்பதற்கு - என்றால் என்று பொருள்கொண்டு, 'இறை திறம்பினன்' என்றதனோடு இயைத்தலு மொன்று. தருமசாஸ்திரங்கள் வேதத்தின் பொருளை நினைத்துச் செய்யப்பட்டனவாய் அதனால் ஸ்மிருதியென்று பெயர் பெறுதலால், 'மறைதிறம்பாத வாய்மை' எனப்பட்டன; அவை - மநுஸ்மிருதி, கௌதமஸ்மிருதி முதலியன. வாய்மை - மெய்ம்மை; பொருள்களை உள்ளபடியுணர்த்தும நூல்களுக்கு, இங்கே ஆகுபெயர். முன்னர் - முன்னிலையில்: இடமுன்; அர் - சாரியை. முனனம் - நெடுநாளாக; காலமுன்; அம் - சாரியை. ராஜநீதிமுறைமையைத் தவறாமற் பாதுகாத்தற் பொருட்டுத் திருவவதாரஞ்செய்த பெருமானெனக. தோன்ற - காணப்பட.

[வாலி இராமனைநோக்கி இகழ்ச்சியாசப் பேசத்தொடங்குதல்.]

௭௫. கண்ணுற்றான் வாலிநீலக்கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்திவருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரிப்பொறியொடும்பொடிப்பநோக்கி
யெண்ணுற்றாயென்செய்தாயெனநேசுவானியம்பலுற்றான். V

(இ - ள்.) நீலம் - நீலநிறமுள்ள, கார் முகில்-கார்காலத்துமேகமொன்று, கமலம் பூத்து - (தன்பக்கல்) தாமரைமலர்கள மலரப்பெற்று, வரி வில் ஏந்தி - கட்டமைந்த வில்லொன்றை யேந்திக்கொண்டு, மண் உற்று வருவதே போலும் - நிலவுலகத்தைச்சார்ந்து வருவது போலுள்ள, மாலை - திருமாலின் திருவவதாரமூர்த்தியான ஸ்ரீராமபிரானை, கண்ணுற்றான - கண்ணெதிரிற் கண்டவனான, வாலி - வாலியானவன்,—புண் உறறது அனையசோரி - புண்ணிலிருந்து வெளிப்படுவதுபோன்ற இரத்தம், பொறியொடும் பொடிப்ப - நெருப்புப்பொறிகளுடனே (தனகண்களினின்று) வெளிப்படும்படி, நோக்கி - (கோபததோடு அப்பெருமானை) நோக்கி '(என) எண்ணுற்றாய் - என்ன நினைத்தாய்? என் செய்தாய் - யாதுசெய்தாய்!' என்று - எனறு சொல்லி, ஏசுவான் - (பினனும்) பழிப்பவனாய், இயம்பல் உறறான - சொல்லத் தொடங்கினான்; (எ - று.)—அச்சொறகளை, அடுத்த பதினைந்து கவிகளிற் காண்க.

நீலமுகில் - காளமேகம். அது - இராமபிரானது திருமேனிக்கு நிறத்திலும், கண்டவர் கண்குளிரச் செய்யுந் தன்மையிலும் உவமம். அப்பெருமானது கண் கை வாய் உந்தி பதம் முகம் எனலும் அவையவஙகள் செந்தாமரை மலர் போலுதலாலும், அவவிறைவன் கோதண்டத்தைக் கையிற்கொண்டு தரையில் நடந்து வருதலாலும, 'நீலக்கார்முகில் கமலம்பூத்து வரிவில்லேந்தி மண்ணுற்று வருவதே போலும் மாலை' என்றார்; தற்குறிப்பேற்றவணி. கார்முகிலுக்கு இந்திரவில் இருத்தலால் இல்பொருளுவமையணியெனறல் ஏலாது. கண்களிலிருந்து இரத்தம் தெறிக்கவும் தீப்பொறி சிந்தவும் கடுமையாக நோக்கி யென்பது, மூன்றாமடியின பொருள். கண்ணுறறான் நோக்கி யென்று இயைத்து, கண்களையுணறவைதது உறுகிப்பாரதது என்றலு

மாம். 'என்' என்பவிதை, மத்திமதீபமாக, 'என்னுற்றாய்' 'செய்தாய்' என்ற இரண்டனோடுங் கூட்டுக; 'என நினைந்து என்செய்தாய்' என்றல் வழக்கு. ஏசுவான் - முற்றெச்சம். (௭௫)

[இதுமுதற் பதினைந்து கவிகள் - வாலி இராமனை ஏசியன.]

௭௬. வாய்மையுமரபுங்காத்து மன்னுயிர்துறந்தவள்ளற்
றூயவன்மைந்தனேநீபரதன்முன்றோன்றினாயே
தீமைதான்பிறரைக்காத்துத்தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந்தருமமுந்தழுவிநின்றாய்.

(இ - ள்.) வாய்மையும் - சத்தியத்தையும், மரபும் - தான்பிறந்த குலத்தின்பெருமையையும், காத்து - பாதுகாத்து, (அதன்பொருட்டு), மன் உயிர் துறந்த - சிறந்த (தனது) உயிரைவிட்ட, வள்ளல் - வரையாதருளும்இயல்பினனும், தூயவன் - பரிசுத்தியுடையவனுமான தசரதசக்கரவர்த்தியினது, மைந்தனே - புத்திரனே! நீ—, பரதன் முன் தோன்றினாயே - பரதனுக்குத் தமையனாகப் பிறந்தாயே! பிறரை தீமை காத்து - பிறரைத் தீயசெயல்செய்யாதபடி விலக்கி, தான் (தீமை) செய்தால் - தான் தீயசெயல்செய்தால், தீங்கு அன்று ஆமோ - (அது) குற்றமல்லாததாகுமோ? தாய்மையும் அன்றி - (உலகத்திற்குத்) தாயாயிருக்குந் தன்மையைமாத்திர மல்லாமல், நட்பும் - சிநேக குணத்தையும், தருமமும் - தாமத்தையும், தழுவி நின்றாய் - தழுவி நின்றவனே! (சொல்); (எ - று.)—'தீமைதான் பிறரைக் காத்து' என்றவிடத்தில், தான் - அசை.

முன்பு கைகேயிக்கு இரண்டு வரமளித்த வாக்கின் சத்தியம் பிறழலாகாதென்பதற்காகத் தனது அருமையான மூத்த குமாரன் வனவாசம்போகும்படி நேர்ந்து, 'தன்மகனைக் காட்டுக்குத் துரத்திவிட்டுத் தான் உயிர்வாழ்ந்தான் இக்குலத்தில் ஒருவன்' என்ற பழிப்புத் தான்பிறந்த மநுகுலத்திற்கு வாராதபடி புத்திரசோகத்தால் உயிர்நீத்த மகாநுபாவன் தசரதசக்கரவர்த்தியென்பான், 'வாய்மையும் மரபும் காத்து மன்னுயிர்துறந்த வள்ளல் தூயவன்' என்றான். மன் உயிர் - நிலைபெற்ற உயிர் எனினுமாம். வள்ளல் - பிறர்க்காகத் தனது உயிரையுந் துறப்பவன். தூயவன் - தூய்மையுடையவன், பழிக்கு அஞ்சி நடந்தவன்; திரிகரணசுத்தியுடையான். அப்படிப்பட்டவனது மகனாகப் பிறந்த நீ அப்பெருமைகளெல்லாம் மாறாக இவ்வாறு தீச்செயல் செய்யக்கடவையோ வென்றானும். பரதனது குணாதிசயங்கள், முன்பு கூறப்பட்டன. அவனது தமையனாகப் பிறந்தற்குத் தக்கவனல்லன் நீ யென்றவாறு. 'தீமைதான் பிறரைக் காத்து' என்றவிடத்தில், காத்தல் - "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்றவிடத்திற் போல நின்றது. பிறர் தீமை செய்யாதபடி காப்பவன் தான் தீமைசெய்யாமலிருந்தாலன்றோ தகுதியாமென்பான், 'தீமைதான் பிறரைக்காத்துத் தான் செய்தால் தீங்கன்றாமோ' என்றான். உலகத்து உயிர்கட்கெல்லாம் தாய்போல ஒழிவிலாக அன்புடையனா யிருக்கத்தக்க நீ ஒருவனிடத்துச் சிநேகத்தாற்

பக்ஷபாதமாகத் தருமமார்க்கந்தவறி மற்றொருவனுக்கு இப்படி பெருந்தீங்கு புரியலாமோ வென்பது, ஈற்றடியாற் போதரும். (எசு)

எஎ. குலமிதுகல்வியீதுகொற்றமீதுற்றுநின்ற
நலமிதுபுவனமூன்றுநாயகமுன்னதன்றே
வலமிதிவ்வுலகந்தாங்கும்வண்மையீதென்றாற்றிண்மை
யலமரச்செய்யலாமோவறிந்திருந்தயர்ந்துளார்போல்.

(இ - ள்.) குலம் இது - சிறந்தகுலம் உன்னுடையது; கல்வி ஈது - சிறந்தகல்வி உன்னுடையது; கொற்றம் ஈது - வெற்றி உன்னுடையது; உற்று நின்ற நலம் இது - பொருந்திநின்ற நற்குணநற்செயல்கள் உன்னுடையன; புவனம் மூன்றும் நாயகம் - மூன்று உலகங்கட்குந் தலைமை, உன்னது அன்றே - உன்னுடையதன்றோ? வலம் இது - சிறந்தபலம் உன்னுடையது; இ உலகம் தாங்கும் வண்மை ஈது - இந்த உலகத்தைப் பாதுகாக்கின்ற மேம்பாடு உன்னுடையது; என்றால்—,அறிந்து இருந்து - (எல்லாம்) அறிந்திருந்தும், அயர்ந்துளார்போல் - (அனைத்தையும்) மறந்தவர்போல, திண்மை அலமர - அவவுறுதிகளெல்லாம் நிலைகலங்கும்படி, செய்யலாமோ - (நீ இப்படி) செய்யலாமோ? (எ - று.)

சாதியொருமையாக, 'நலமிது' எனப்பட்டது வலம் - பலம்: வடசொல் திரிபு. அலமர, அலமா: பகுதி. 'நாயகமிது நின்றோனின்' எனவும் பாடமுண்டு. (எஎ)

எஅ. கோவியற்றருமமுங்கள்குலத்துதித்தோர்கட்கெல்லா
மோவியத்தெழுதவொண்ணாவுருவத்தாயுடைமையன்றோ
வாவியைச்சனகன்பெற்றவன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத்திகைத்தனைபோலுஞ்செய்கை.

(இ - ள்.) ஓவியத்து எழுத ஒண்ணா உருவத்தாய் - சித்திரத்திலெழுத முடியாத வடிவழகையுடையவனே!—கோ இயல்தருமம் - ராஜதர்மமானது, உங்கள் குலத்து உதித்தோர்கட்கு எல்லாம் - உங்கள் குலத்திற் பிறந்தவர்களெல்லார்க்கும், உடைமை அன்றோ உரியபொருளன்றோ; (அங்ஙனமிருக்க நீ இப்படி செய்தா யாதலால்),—ஆவியை - உயிர்போன்றவளும், சனகன் பெற்ற அன்னத்தை - ஜநகமகாராஜன் (யாகபூமியினின்று கிடைக்கப்) பெற்றுவளர்த்த அன்னப்பறவை போன்றவளும், அமிழ்தின் வந்த - அமிருதம்போல அருமையாகக்கிடைத்தவளுமான, தேவியை - மனைவியை [சீதையை], பிரிந்த பின்னை - பிரிந்தபின்பு, செய்கை திகைத்தனை போலும் செய்யுஞ்செயலில் தடுமாற்றமுற்றாய்போலும்; (எ - று.)

கோ இயல் தருமம் - அரசர்கட்கு இயல்பாகப் பொருந்திய தர்மம். கோவியல் தருமம் என்றுபிரித்து, பெரிய ராஜதரும மென்றலு மொன்று. 'உங்கள்' என்ற பன்மை, இலக்குமணனை உளப்படுத்தியது; அவனும் இராமனுடன் நிற்றல், மேல் கககூ - ஆங் கவியால் விளங்கும். தக்கபடி அமையாத

விடத்துக் கலைத்துக்கலைத்துச் சீர்திருத்தி எழுதக்கூடிய சித்திரத்திலும் இராமனது திருமேனியழகை உள்ளபடி எழுதவியலாதென அதன் சிறப்பு உணர்த்தப்பட்டது; "எழுதவரியபெருமான்" என்பர் பிறரும். பெற்ற - பெறுப்பேறாகப் பெற்ற. ஆவி, அன்னம் - உவமையாகுபெயர்கள். இன்றியமையாமையிலும் மிக்க அன்பிற்கு இடமாகுதலிலும் ஆவியும், நடையழகில் அன்னமும், சீதைக்கு உவமை. அமிழ்து - இனிமைக்கேயன்றிக் கிடைத்தற்கருமைக்கும் உவமையாயிற்று. மனைவியைப் பிரிந்த விசனத்தால் அறிவு கலங்கியமைபற்றி உனது குலத்தார்க்குச் சொந்தமான இராசதருமத்திற்கு மாறாக இப்படி செய்தனைபோலு மென்றான். (எஅ)

எகூ. அரக்கரோரழிவுசெய்துகழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்லமனுநெறிகூறிற்றுண்டோ
விரக்கமெங்குகுத்தாயென்பாலெப்பிழைகண்டாயப்பா
பரக்கழியிதுநீபூண்டாற்புகழைபார்பரிக்கற்பாலார்.

(இ - ள்.) அரக்கர் ஓர் அழிவு செய்து கழிவர் எல் - இராக்கதர் (உனக்கு) ஒரு தீங்கைச் செய்து சென்றால், அதற்கு - அதற்காக, வேறு ஓர் குரங்கு இனத்து அரசை - (அவ்வினத்தினும்) வேறாகிய குரங்குகளின் கூட்டத்திற்கு அரசனான ஒருவனை, கொல்ல - கொல்லுமாறு, மனு நெறி கூறிற்று உண்டோ - மனுவினாற் சொல்லப்பட்ட தருமசாஸ்திரம் சொன்னதுண்டோ? இரக்கம் எங்கு உகுத்தாய் - (உனக்கு உரிய) கருணையென்கிற குணத்தை எங்கே சிந்தியொழித்துவிட்டாய்? என்பால் எ பிழை கண்டாய் - என்னிடத்தில் என்ன குற்றத்தைப் பார்த்தாய்? அப்பா—! நீ—, பரக்கழி இது பூண்டால் - இந்தப்பெரும்பழிப்பை யேற்றுக்கொண்டால், புகழை பரிக்கற்பாலார் யார் - சீர்த்தியைத் தரிக்கத்தக்கவர் வேறுயாவருளர்? [எவருமில்லையென்றபடி]; (எ - று.)

அழிவு - கேடு. அதற்கு - அதற்கு ஈடாக வென்றவாறு. குரங்கு + இனம் = குரக்கினம்; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. இரக்கம் சிறிதும் இலையாயினையே யென்பான், 'இரக்கம் எங்கு உகுத்தாய்' என்றான். உகுத்தல் - சொரிதல். மநு - ஓர் அரசன். நெறி - நல்லொழுக்க வழி; அதனைக்கூறும் நூலுக்கு ஆகுபெயர். பரக்கழி - பெருநிந்தை; பெருந் தீங்குமாம். (எகூ)

அ0. ஒலிகடலுலகந்தன்னிலூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்துபரந்ததோகருணைவள்ளான்
மெலியவர்பாலதேயோவொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவர்மெலிவுசெய்தாற்புகழன்றிவசையுமுண்டோ.

(இ - ள்.) கருணை - அருளையுடைய, வள்ளால் - வரையாதருளுமியல்பினனே!—ஒலி கடல் உலகந்தன்னில் - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்திலே, ஊர்தரு குரங்கின்மாடே - ஓடித்திரிகின்ற குரங்குகளி

ளிடத்தில்மாத்திரம், கலியது காலம் வந்து பார்த்தோ - கலிகாலம் வந்து பாவிற்றே? ஒழுக்கமும் - நல்லொழுக்கமும், விழுப்பம்தானும் - மேன்மைக் குணமும், மெலியவர் பாலதேயோ - வலிமை முதலியவற்றிற் குறைந்தவ ரிடத்தில் மாத்திரம் இருக்கவேண்டியனவோ? வலியவர் மெலிவு செய்தால் - வல்லமையுடையோர் இழிதொழிலைச் செய்தால், புகழ் அன்றி வசையும் உண்டோ - (அதனால் அவர்கட்குக்) கீர்த்தியுண்டாவதன்றிப் பழிப்பும் உண் டாகக்கடவதோ! (எ - று.)

கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்ற நான்கினுட் கலியுகம் வேதசாஸ்திரங்கட்கு விலக்கான தீயசெயல்கள் நிகழப்பெறுவ தென்பது, வெளிப்படை. மற்றை எவ்வகையினத்திலும் நேராமல், குரங் கினமான தன் விஷயத்தில் மாத்திரம் கருணைவள்ளலான இராமபிரானால் இவ்வகையான அநீதி நேர்ந்தமைபற்றி, 'குரங்கின்மாடே கலியதுகாலம்வந்து பாந்ததோ' என்றான். இந்த மிகக்கொடிய செயல் கலியின் தொடக்கத்திற் கன்றி அதன்முதிர்ச்சிக்கே யேற்றதென்பது தோன்ற, 'பாந்ததோ' எனலா யிற்று. இராமசரித்திரம் நிகழ்ந்தது திரேதாயுகத்தினிடையே யென்பது, இங்குக்கருதத்தக்கது. தருமம் கிருதயுகத்தில் நான்கு பாதமும், திரேதா யுகத்தில் மூன்று பாதமும், துவாபரயுகத்தில் இரண்டு பாதமும், கலியுகத்தில் ஒருபாதமுமாக நிகழ்ந்து, அதன் முதிர்வில் வரவரக் குறைந்திடு மென்க. நினது கருணையும் வண்மையும் இவ்வாறே முடிந்தனவென்று ஏசுவான், 'கருணைவள்ளால்' என்று விளித்தான். கலியது - கலிபுருஷனது, 'அது' ஆறனுருபு. குரங்கின்மாடு, மாடு - ஏழனுருபு; ஏ - பிரிநிலை. ஊர்தரு தா - துணைவினை, ஊர்தல் - செல்லுதல். வள்ளால் - வள்ளல் என்றதன் ஈற்றயல் திரிந்த விளி. ஒழுக்கமும் விழுப்பந்தானும் மெலியவர்பாலதேயோ - பன்மை யொருமை மயக்கம்; (தனித்தனி) பாலதோவென்க. ஏ - பிரிநிலை; ஓ-வினா. மெலியவர் - அறிவு ஆண்மை ஆற்றல் என்றவற்றிற் குறைபாடுடையவர். அவற்றில் மிக்கவர், வலியவர். விழுப்பம் - உரிச்சொல்; நற்குணமுமாம். ஒழுக்கமும் விழுப்பமும் வேண்டியது எளியவர்க்கு மாத்திரமோ, வலிய வர்க்கு வேண்டியதில்லையோ வென்பது, முன்றுமடியின் பொருள். நான்கா மடியின் பொருள் - வலியவர் தீமைசெய்தாலும் அவர்க்குப் பழிவராது புகழே வருமோ? என்பது. 'வசையன்றிப் புகழுமுண்டோ' என்றும் பாடங் காணப் படுகின்றது. (அ௦)

அக. கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றவபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கேதம்பிக்குக்கொடுத்துப்போந்து
நாட்டொருகருமஞ்செய்தாயெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய்கருமந்தானிதன்மேலுண்டோ.

(இ - ள்.) கூட்டு ஒருவரையும் வேண்டா - (போர்வெற்றிபெறுதற்குத்) துணையாக ஒருவரையும் வேண்டாத, கொற்றவ - வெற்றியையுடையவனே! பெற்ற தாதை - பெற்றதந்தை [தசரதசக்கரவர்த்தி], பூட்டிய - (மூத்தமக

ணை உனக்கு) உரியதாகக்கொடுத்த, செல்வம் - அரசாட்சிச் செல்வத்தை, ஆங்கே - அப்பொழுதே [அல்லது அவ்விடத்திலேயே], தம்பிக்கு கொடுத்து- (உனது) தம்பிக்கு [பரதனுக்கு] உரியதாகும்படி கொடுத்துவிட்டு, போந்து - வனவாஸம்புகுந்து, நாடு ஒரு கருமம் செய்தாய் - (இவ்வாறு) நாட்டிலே ஒரு வகைப் புதுமையான காரியத்தைச் செய்தாய்; எம்பிக்கு - என் தம்பிக்கு [சுக்கிரீவனுக்கு], இ அரசை நல்கி - இந்த எனது அரசாட்சியைக் கொடுத்து, காடு ஒரு கருமம் செய்தாய்-காட்டில் அதற்குமாறான ஒருவகைப் புதிய செயலைச் செய்தாய்; இதன்மேல் கருமம் உண்டோ - இதனிலும் மேலான செயல் வேறு உண்டோ? [இல்லைபோலும் என்றபடி]; (எ - று.)—தான் - அசை.

கூட்டு - துணை. கூட்டு ஒருவரையும் வேண்டாக் கொற்றவ-அஸஹாய சூரனே யென்றவாறு; "துணைவேண்டாச் செறுவென்றி" என்ற புறநானூறு, இங்கு நோக்கத்தக்கது. பூட்டிய - வலிபக்கொடுத்தஎன்றபடி. இனி, மங்கலவழக்காக 'நாட்டொரு கருமஞ்செய்தாய்' என்றதற்கு - நாட்டிலே தந்தையை உயிர்நீங்கச்செய்தாய் என்றும், 'காட்டொரு கருமஞ்செய்தாய்' என்றதற்கு - காட்டிலே என்னைக்கொன்றாய் என்றும் கருத்து உரைத்து, 'இதன் மேல் கருமம் உண்டோ' என்பதற்கு - இதற்குமேலும் உரிய செயலுண்டோ வென்று பொருள்கொள்ளலுமாம். (௮௧)

௮௨. அறைகழலலங்கல்வீரராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றேதொன்மையினன்னூற்கெல்லா
மிறைவனீயென்னைச்செய்ததீதெனிலிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்றுமுனிதியோமுனிவிலாதாய்.

(இ - ள்.) அறை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையும், அலங்கல் - போர்ப் பூமாலையையுந் தரித்த, வீரர் ஆயவர் - வீரராயுள்ளவர், புரிவது - எத்தொழிலைச் செய்கின்றார்களோ அத்தொழில், ஆண்மை துறை எனல் ஆயிற்று அன்றே - ஆண்மைக்குஉரிய செயலாய் விட்டதன்றோ! தொன்மையின் நல் நூற்கு எல்லாம் இறைவன் நீ - பழமையான சிறந்த சாஸ்திரங்களுக்கெல்லாம் தலைவனான நீ, என்னை செய்தது - என்பக்கல் செய்தது, ஈது - இத்தன்மையான செயல், எனில் - என்றால், இலங்கை வேந்தன் முறை அல செய்தான் என்று முனிதியோ - இலங்கா நகரத்தரசனான இராவணன் நீதியல்லாத காரியங்களைச் செய்தானென்று (அவன்மேற்) கோபிக்கக் கடவையோ? முனிவு இலாதாய் - (இயல்பிற்) கோபமில்லாதவனே! (எ - று.)

'வல்லான் ஆடியதே ஆட்டம்,' 'கெருடிபழகுகிறவன் இடறிவிழுந்தால் அதுவும் ஒருவித்தை' என்றாற்போல வலிமையையுடையவீரர் எதுசெய்கின்றனரோ அதுவெல்லாம் பராக்கிரமச் செயலாய் விட்டதா வென்பது, முதல் வாக்கியத்தின்பொருள். வேதசாஸ்திரங்களிற்கூறிய அனுட்டானங்களை நடப்பித்து அவற்றிற்கெல்லாந் தலைவனாகின்றநீ என்விஷயத்தில் இப்படிசெய்து விட்டு ராக்ஷஸராஜனான ராவணன் உன் விஷயத்தில் அக்கிரமஞ்செய்தானெ

ன்று கோபிக்க இடமுண்டோ? என்றது. இரண்டாம் வாக்கியம். மூனிவின்றாய் - இயல்பிற் சாந்தகுணமுடையவனே யென்றபடி. (அஉ)

அங. இருவர்போ ரெதிருங் காலை யிருவரு நல்லுற் றோரே
பொருவர்மேற் கருணை தூண்டி யொருவர்மே லொளித்து நின்று
வரிசிலை குழைய வாங்கி வாயம்பு மருமத் தெய்த
றருமமோ பிறிதொன் றாமோ தகுதில தென்னும் பக்கம்.

(இ - ள்.) இருவர் போர எதிரும் காலை - இரண்டுபேர் (தம்மில்) எதிர்த்துப போர்செய்து கொண்டிருக்கும்பொழுது, இருவரும் நல் உற்றோரே - அவ்விரண்டுபேரையும் (ஒருசமமாகத் தமக்கு) நல்ல உறவினராகவே (பிறர் கொள்ளுவது தகுதியாயிருக்க அவவாறுபாவிப்பதை விட்டு), ஒருவர்மேல் கருணை தூண்டி (அவவிருவருள்) ஒருவர்மேல் அருளைச் செலுத்தி, ஒருவர்மேல் - மற்றொருவர்மேல், ஒளிதது நின்று - மறைந்துநின்று, வரி சிலை குழைய வாங்கி - கட்டமைந்த வில்லை நன்றாகவளையும்படி வளைத்து, வாய் அம்பு மருமத்து எய்தல் - கூர்நுனியையுடைய அம்மை மார்பிற் செலுத்துதல், தருமமோ . தருமமாகுமோ? (அல்லது) பிறிது ஒன்று ஆமோ - அதர்மமாகுமோ? (எப்படியானாலும்), தகுதிலது என்னும் பக்கம் - தகாததெனப்படுகிற பக்ஷபாதமே; (எ - று.)

ஒருவாமேல் எய்தல் என இயையும தருமமோ, அதருமமோ, எப்படியானாலும், தகாததெனப்படுகினற பக்ஷபாத மென்றுசொல்லத் தடையில்லையெனபதாம். தருமமோ பிறிதொன்றாமோ என றதில் ஐயமுண்டானாலும், தகுதிலதென்னும்பக்கமென்றற்கு ஐயமில்லை யெனக. இது - வெளிப்படையெனறவாறு, திருக்குறளில் நடுவுநிலைமையென்ற அதிகாரத்தில் நடுவுநிலைமை 'தகுதி' என றும், அதனையுடையார் 'தக்கார' என்றும், அஃதில்லாதவர் 'தகவிலா' என றுங் கூறப்பட்டதனால், அதறகு மாறான பக்ஷபாதத்திறகு 'தகுதிலதென்னும்' என்ற அடைமொழி ஏற்கும். தகுதிலது—கு - சாரியை, இல் - எதிர்மறையிடைநிலை. பக்கம் - பக்ஷம்: வடசொல்திரிபு: இலககணையாய், ஒருபுறஞ்சார்தலைக் குறித்தது. (அங)

வேறு.

அச. வீர மன்றுவி தியன்று மெய்ம்மையின்
வார மன்றுநின் மண்ணி னுக்கென் னுடல்
பார மன்றுப கையன்று பண்பொழிந்
தீர மன்றிது வென்செய்த வாறுநீ.

(இ - ள்.) (நீ செய்த இச்செயல்), வீரம் அன்று - பராக்கிரமகாரியமன்று; விதி அன்று - (வேதசாஸ்திரங்களில்) விதித்த செய லன்று; மெய்ம்மையின வாரம் அன்று - உண்மையின்பாற சேர்வது மன்று; நின மண்ணினுக்கு என் உடல் பாரம் அன்று - உனக்குஉரியதாகின்ற இந்தப்பூலோகத்திற்கு என் பெருத்தலுடையவுடம்பு பொறுக்கவொண்ணாத பாரமாகாது; பகை அன்று -

(உனக்கு நான்) பகையுமன்று; (இங்ஙனமெல்லாமிருக்கவும்), நீ—, பண்பு ஒழிந்து - பெருமைக்குணத்தை விட்டு, ஈரம் அன்று இது செய்த ஆறு - அன்புக்குஉரியதல்லாத இச்செயலைச் செய்தது, என் - யாதுகாரணம்பற்றி?

வாரம் - பக்கம், பங்கு, வகுப்பு. பூமிபாரநிவிருத்தியின் பொருட்டுக் கொடியவரைக்கொல்லுதல் ஆன்றோர்செயலாம்; ஆனால், யான் கொடியவனல்லனாதலின் என்னை நீகொன்றது அந்நற்செயலின் பாற்படாதென்பான, 'நின்மண்ணினுக்கு என்உடல் பாரமன்று' என்றான். மற்றவை, வெளிப்படை. 'நினமண்' என்றது, சக்கரவர்த்தியின மூத்தகுமாரனாதலால், திருக்குறளில் 'பண்புடைமை' என்றவிடத்து 'பண்பாவது - பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாதேநின்றே எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்" என்றார் பிறரும்' எனப் பரிமேலழகருரைத்தது, இங்குக் கொள்ளத்தக்கது. ஈற்றடியில், அன்று - பெயர்; மற்றையடிகளில், முற்று. ஆறு - தன்மை.

இதுமுதல் முப்பத்திரண்டு கவிகள் - பம்பைப்படலத்தின் முப்பத்திரண்டாங்கவி போன்ற கலிவிருத்தங்கள். (அஎ)

அரு. இருமைநோக்கிநின் றியாவர்க்குமொக்கின்ற
வருமையாற்றலன்றோவறங்காக்கின்ற
பெருமையென்பதிதென்பிழைபேணல்விட்
டொருமைநோக்கியொருவற்குதவலோ.

(இ - ள்.) இருமை நோக்கி நின்று - இம்மைமறுமைப்பயன்களை (உபேக்ஷியாமற் பெறக) கருதி நின்று, யாவர்க்கும் ஒக்கின்ற அருமை ஆற்றல் அன்றோ - (ஒருவர்பக்கல் பக்ஷபாதமுடையராகாது) எல்லார்க்குஞ் சமமாகின்ற அருமையானசெயலைச் செய்தலன்றோ, அறம் காக்கின்ற பெருமை என்பது - தருமத்தைப் பாதுகாக்கின்ற பெருந்தன்மையென்று சொல்லப்படுவது? பிழை பேணல் விட்டு - (பழிபாவங்களாகிய) குற்றங்கள் (தன்பக்கல்வாராதபடி) குறிக்கொண்டுகாத்தலை விட்டு, ஒருமை நோக்கி - ஒருபுறத்திற் சார்ந்து [பக்ஷபாதங்கொண்டு], ஒருவற்கு உதவல் - ஒருவனுக்கு உதவி செய்தலாகிய, இதுவோ - இச்செயலோ, என் - என்னாகும்? [அறங்காக்கின்ற பெருமை யாகாதென்றபடி]; (எ - று.)

இருமை - இம்மை, மறுமை யென்னும் இரண்டு; இங்கு, ஆகுபெயராய், இம்மைப்பயனாகிய புகழையும் மறுமைப்பயனாகிய புண்ணியத்தையுங் குறிக்கும். இனி, இம்மைமறுமைகளில்வரும் நன்மைதீமைகளைப்பற்றி ஆலோசித்து நின்று என்னவுமாம். யாவர்க்கும் ஒக்கின்ற அருமை - பகை நொதுமல் நண்பு என்னும் மூன்று பகுதியார்க்கும் ஒப்பாகச்செய்யும் அரியசெயல்; அவ்வகை நடுவுநிலைமையின் சிறப்பை, "தகுதியெனவொன்றும் நன்றே பகுதியாற், பாற்பட் டொழுகப் பெறின்" எனக் காண்க. இ - தெரிநிலை,

௮௬. செயலைச்செற்றபகைதெறுவான்றெரிந்
தயலைப்பற்றிதுணையமைந்தாயெனின்
புயலைப்பற்றுமப்பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவதென்னமுயற்சியோ.

(இ - ள்.) செயலை செற்ற - (உனது) பாதுகாவலை யழித்த [உன்னைத் தனிப்படுத்திச் சீதையைக்கவர்ந்து சென்ற], பகை - பகைவனான இராவணனை, தெறுவான் - அழித்தற்பொருட்டு, தெரிந்து - ஆலோசித்து, அயலை - வேறொருவனை [சுக்கிரீவனை], துணை பற்றி அமைந்தாய் - துணைவனாகக் கொண்டு பொருந்தினாய், எனின் - என்றால்,—புயலை பற்றும் - காளமேகம் போன்றதான யானையைப் பிடித்து உயிர்கவரவல்லதும், பொங்கு-கோபித்து எழுமியல்பினதுமான, அ அரி - அப்படிப்பட்ட சிங்கத்தை, போக்கி - துணையாகக்கொள்வதை விட்டு, ஓர் முயலை பற்றுவது - ஒருமுயலைத் துணையாகக்கொள்வது என்ன முயற்சியோ—? (எ - று.)

உனது பாதுகாவலைப் போக்கி உனமனைவியைக்கவர்ந்து உன்னை மானபங்கப்படுத்திய பகைவனான இராவணனைக் கொல்லுதற்பொருட்டு ஆலோசித்துச் சுக்கிரீவனைத் தேர்ந்தெடுத்துத் துணைவனாகக்கொண்டு அவனோடு கூடினையென்று கருதுவோமென்றால், அந்த இராவணனை மிகஎளிதில்வெல்லவல்ல ஆற்றலையுடைய என்னைத் துணைகொள்வதைவிட்டுப் பலபராக்கிரமங்களிற் குறைபாடுடைய சுக்கிரீவனைத் துணைக்கொள்வது யானையையழித்தற்பொருட்டு அதனை எளிதிலழிக்கவல்ல சிங்கத்தைத் துணைக்கொள்வதை விட்டு அதன்காலினால் நசுங்கிப்போகத்தக்க எளியஜந்துவான முயலைத் துணைக்கொள்வதுபோல அறிவுடைமுயற்சியாகா தென்றான். செற்ற, செறு-பகுதி. தெறுவான - எச்சம். புயல் - உவமையாகுபெயர்; கரியபெரிய வடிவிலும், மதமழைசொரிதலிலும், பெருமுழக்கத்திலும் உவமை. (௮௬)

௮௭. காரியன்றகளங்கநிறந்தொன்மை
யூரியன்றமதிக்குளதாமெனச்
சூரியன்மரபுக்குமோர்தொன்மறு
வாரியன்பிறந்தாக்கினையாமரோ.

(இ - ள்.) ஊர் இயன்ற மதிக்கு - நாடெங்கும் சஞ்சரிக்கின்ற சந்திரனுக்கு, கார் நிறம் இயன்ற களங்கம் - கருநிறம் பொருந்திய களங்கம், தொன்மை உளது ஆம் - தொன்றுதொட்டு உள்ளது, என - என்று எண்ணி, சூரியன் மரபுக்கும் ஓர் தொல் மறு - சூரியவம்ச முழுவதுக்கும் ஒரு நிலையான களங்கத்தை, ஆரியன் பிறந்து ஆக்கினை ஆம் - தலைவனான நீ பிறந்து உண்டாக்கினைபோலும்; (எ - று.)— அரோ - ஈற்றசை. 'உளதாம்' என்றதில், ஆம் - அசை.

சூரியவம்சம் சந்திரவம்சம் என்று உலகத்திற் பிரசித்தமான இராஜகுலங்க ளிரண்டனுள், ஒன்றற்கு ஆதிபுருஷனான சந்திரனுக்குத் தோன்று

தொட்டு மறுஇருப்பதைதககருதி மற்றொரு சுடரான சூரியனது குலத்திற் பிறந்தவனாகிய நீ அக்குலமுழுவதுக்குமே நிலையான மறுவை உண்டாக்கினை போலு மென்றான்; தற்குறிப்பேற்றவகையால் இழித்துரைத்தபடி. சந்திரனுக்கு இயல்பிற் களங்கமிருப்பது போல, களங்க மில்லாதிருந்த சூரியகுலத்திற்கும் நீ பிறந்து நிலையான களங்க முண்டாகும்படி செய்தா யென்க. 'ஊர் இயன்ற மதி' என்பதற்கு - ஊர்தல் [சஞ்சரித்தல்] பொருந்திய மதி யென்றலுமாம்; "வானூர் மதியம்" என்ப: இப்பொருளில், ஊர் - முதனிலைத் தொழிற்பெயர். தொல் மறு - முன்னோரனைவரையுந் தொடரும் மறு; இனி என்றும் நிலைத்துத் தொன்மையாகும் மறு. மறு - இங்கே, பழிப்பு. பழியைக் கரியதென்றல், கவிசமயம். ஆரியன் - முன்னிலைப்படர்க்கை; அண்மைவிளியுமாம். இங்கு 'ஆரியன்' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு. (அஎ)

அஅ. மற்றொருத்தன்வலிந்தறைகூவவந்
துற்றவென்னையொளித்துயிருண்டநீ
யிற்றையிற்பிறர்க்கும்மிகலேறென
நிற்றிபோலுங்கிடந்தநிலத்தரோ.

(இ - ள்.) மற்று ஒருத்தன் வலிந்து அறைகூவ - வேறொருவன் [சுக்கிரீவன்] (என்னை) வலியப் போர்க்கு அழைத்ததனால், வந்து உற்ற - (இங்கு அவனுடன் பொருதற்கு) வந்து சேர்ந்த, என்னை—, ஒளித்து உயிர் உண்ட - மறைந்து நின்று (அம்பெய்து) உயிரைக்கவர்ந்த, நீ—, (நாணமின்றி), இற்றையின - இப்பொழுது, கிடந்த நிலத்து - (யான்) விழுந்து கிடக்கின்ற இவ்விடத்தில், பிறர்க்கும் இகல் ஏறு என நிற்றி போலும் - மற்றையோர்க்கெல்லாம் வலிய ஆண்சிங்கம் போல(ப் பெருமிதந் தோன்ற) நிற்கின்றாய் போலும்! (எ - று.)—அரோ - ஈற்றசை.

பிறர்க்கும்மிகல்—மகரவொற்று - விரித்தல். (அஅ)

அகூ. நூலியற்கையுநுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ்சீலமும்போற்றலை
வாலியைப்படுத்தாயலைமன்னற
வேலியைப்படுத்தாய்விறல்வீரனே.

(இ - ள்.) விறல் வீரனே - வலிமையையுடைய வீரனே! நூல் இயற்கையும் - சாஸ்திரங்களின் முறைமையையும், நும் குலத்து உந்தையர்போல் இயற்கையும் - உங்கள் குலத்தில் உனது தாதை மூதாதை போன்றவர்களது இயல்பையும், சீலமும் - நல்லொழுக்கத்தையும், போற்றலை - (நீ) பாதுகாவாமல், வாலியை படுத்தாய் அலை - வாலியை யழித்தாயல்லை; மன் அறம் வேலியை படுத்தாய் - ராஜதருமத்தின வேலியை யழித்திட்டாய்; (எ - று.)

'நும்' என்ற பன்மை - இலக்குமணனை உட்படுத்தியது. போற்றலை - முன்னிலை யொருமை யெதிர்மறை முற்றெச்சம்; இது, வாலியைப்படுத்த

லென்பதனேடு இயையும். 'வாலியை' என்றது தன்மைப்படர்க்கை; என்னை யென்றபடி. அக்கிரமமாக என்னைக் கொன்றதனுல் ராஜதருமத்தின் பாதுகாவலை யழித்திட்டாயென்க. வேலி - காவல். மன் அறம் - நிலைபெற்ற தருமமெனினுமாம். 'மன்னறவேலியைப் படுத்தாய்' என ஒரு தருமத்தைத ஆரோபித்தற்பொருட்டு, 'வாலியைப்படுத்தாயலை' என உண்மையை யொழித்தது, ஒழிப்பணியெனப்படும் அபவ்றநுதியலங்காரம். இங்கு 'விறல்வீரனே' என்றது, இகழ்ச்சிக்குறிப்பு அலை - அல்லை, தொகுத்தல். (அக)

கூ0. தாரமற்றொருவன்கொளத்கன்கையிற்
பாரவெஞ்சிலைவீரம்பழிப்பதே
நேருமன்றுமறைந்துநிராயுதன்
மார்பினெய்யவோவில்லிகல்வல்லதே.

(இ - ள்.) தாரம் - (உன்) மனைவியை, ஒருவன் கொள-ஒருவன் கவர்ந்து கொள்ள, (அவனுக்கு எதிர்செய்யாததோடு இப்படி வேருெருவனை அம்பெய்து கொல்லுதலால்), தன் கையில் பாரம் வெம் சிலை - உன்கையிலேந்திய பெரிய கொடிய வில், வீரம் பழிப்பதே - வீரச்செயலிற் பழிப்படைவதா! வில் இகல் வல்லது-(நீ) வில்லைக்கொண்டு போர்செய்தலில் வல்லவனானது, நிராயுதன் மார்பின் - கையில் ஆயுதமில்லாதவனது மார்பிலே, நேரும் அன்று மறைந்து எய்யவோ - வெளிப்படையாக எதிரில் வந்து மல்லாமல் ஒளித்து நின்று அம்பெய்தற்குத்தானே! (எ - று.)—மற்று - அசை,

தாரம் - தாரா: என்ற வடசொல்லின் விகாரம். பாரம், நிராயுதன்-வடசொற்கள். நினைவில் கைக்குப்பாரமாகவே யமைந்ததென்ற இழிப்புத் தோன்ற, 'பாரவெஞ்சிலை' என்றுனுமாம். பழிப்பதே, ஏ-வினு. 'சிலைவீரம்' என்பதை 'பழிப்பதே' என்பதற்கு எழுவாயாக்கியுரைப்பினுமாம். பழிப்பது-பழிக்கப்படுவது எனச் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. ()

[இந்த வாலியின்வார்த்தைகளுக்கு இராமன் பதில் சொல்லத்தொடங்குதல்.]

கூக. என்றுதானுமெயிறுபொடிபடத்
தின்றுகான்றுவிழிவழித்தீயுக
வன்றவாலியனையனகூறினு
னின்றவீரனிளையநிகழ்த்தினன்.

(இ - ள்.) என்று—, எயிறு பொடிபட தின்று - பற்கள் பொடியாம்படி (நெறுநெறுவென்று) கடித்துக்கொண்டும், விழிவழி தீ உக கான்று - கண்களின் வழியாய் பொறிகள் சிந்தும்படி (கோபாக்கினியை) உமிழ்ந்துகொண்டும், அன்று அ வாலி அனையன கூறினுன் - அப்பொழுது அந்தவாலி அத்தன்மையனவான வார்த்தைகளைச் சொன்னுன்; நின்ற வீரன் தானும் இளைய நிகழ்த்தினுன் - எதிரில் நின்ற மகாவீரனுன இராமனும் இத்தன்மையனவான வார்த்தைகளைச் சொல்லலானுன்; (எ - று)—அவற்றை, அடுத்த பதினெரு கவிகளிற் காண்க.

கான்று, காவல் - பகுதி. 'அனறவவாலி' என்பது தொக்கது. 'அன்று' என்பதை வினைத்தொகையாகக் கொண்டு, கோபித்த என்றலுமாம்; அன்றுதல் - சீறுதல். (கக)

[இதுமுதற் பதினொருகவிகள் - இராமபிரான் தான் வாலியைக் கொன்றதற்கு நியாயங்கூறுதல்.]

கஉ. பிலம்புக்காய்நெடுநாள்பெயராயெனப்
புலம்புற்றுன்வழிப்போதலுற்றான்றனைக்
குலம்புக்கான்றமுதியர்குறிக்கொணீ
யலம்பொற்றாரவனேயரசென்றலும்.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்) பிலம் புக்காய் - (முன்னாளில் மாயாவியைத் தொடர்ந்து) பாதாள வழியினுள்ளே சென்றவனான நீ, நெடு நாள் பெயராய் - வெகுகாலமளவும் மீண்டுவாராமலே யிருந்துவிட்டாய், என - என்றகாரணத்தால், புலம்பு உற்று - சோகமடைந்து, உன் வழி போதல் உற்றான் தனை - நீசென்ற அப்பிலத்துவாரவழியிலே செல்லத்தொடங்கியவனான சுக்கிரீவனை நோக்கி, குலம் புக்கு ஆன்ற முதியர் - உங்கள் குலத்தில் தோன்றி அறிவினால் அமைந்த பெரியோர், 'குறிக்கொள் - (நாங்கள் சொல்வதை) ஊன்றிக்கேட்பாய்: பொன் தாரவனே - பொன்னினாலாகிய ஆரத்தை யணிந்தவனே! நீ அரசு அலம் - நீ (எங்கட்கு) அரசனாதல் அமையும்,' என்றலும் - என்று சொன்னவளவில்,—(எ - று.) —(சுக்கிரீவன் அதற்கு இணங்காமல்) 'என' என்று அடுத்த கவியோடு தொடரும்.

சுக்கிரீவனிடத்துக் குற்றமில்லாமையையும், வாலியினிடத்துக் குற்றமிருத்தலையும் காட்டுதற்கு, முன்பு நிகழ்ந்த செய்தியை எடுத்துக் கூறுகின்றார், பூர்வத்தில் நீ மாயாவியைத் துரத்திக்கொண்டு பாதாளலோக வழியாகிய பெரிய பிலத்தினுள்ளே சென்று வெகுநாளளவும் வாராம லிருந்துவிட்டாய்; உன்னால் அந்தப் பிலத்துவாரத்தின் வாயிலிற் காவலாக நிறுத்தப்பட்ட உன் தம்பியான சுக்கிரீவன் பின்பு மிகவுந் துன்பமடைந்து அப்பிலத்தினுள்ளே தானுஞ் செல்லுதற்குப் புறப்பட்டான்; அவனை உங்கள் குலத்திலுள்ள பெரியவர்கள் மறித்து, 'நீயும் போய்விட்டால் எங்கட்குக் கதி யார்? இனி நீயாவது இருந்து அரசாட்சிசெய்' என்று வெகுவாய்ச்சொல்லி நிறுத்தினார்களென்க. மராமரப்படலத்தின் சுo, சுக, சுஉ, சoo - ஆங் கவிகள் நோக்கத்தக்கன. நெடுநாள் - இருபத்தெட்டுமாசம். ஆன்ற, ஆன் - பகுதி. அலம் - சஞ்சலம் என்று கொண்டு, அலம் பொன தாரவனே - அசைகின்ற பொன்னாரத்தையுடையவனே! நீ—, அரசு குறிக்கொள் - இராச்சியத்தை ஆளக்கருதுவாய் என்று பதவுரை கூறவுந் தகும். 'முதியர்' என்பது, மந்திரிகளை; அவர்கள், 'முதுவர்,' 'முனைவோர்', 'மூத்தோர' எனப்பெயர் பெறுவர். (கஉ)

௩௩. வானமாளவென்றம்முனைவைத்தவ
னூனுமாளக்கிளையினிறத்தடிந்
தியானுமாள்வெனிருந்தரசாள்கிலே
னூனமானவுரைபகர்ந்தீரென.

(இ - ள்.) (அதனை மறுத்துச் சுக்கிரீவன்),—'என் தம்முனை வானம் ஆள வைத்தவன் - எனது தமையனான வாலியை வீரசுவர்க்கமடையுமாறு கொன்றிட்டவனான மாயாவி, தானும் மாள - தானும் இறக்கும்படியாகவும், கிளையின் இற - (அவன்) சுற்றத்தவர்களும் அழியும்படியாகவும், தடிந்து - கொன்று, யானும் மாள்வென் - நானும் இறப்பேன்; இருந்து அரசு ஆள்கிலென் - (என் தமையனிறந்த பின்பு நான்மாத்திரம்) பிழைத்திருந்து உயிர் வாழமாட்டேன்; ஊனம் ஆன உரை பகர்ந்தீர் - (எனக்குத்) தகாததான வார்த்தையை நீங்கள் சொன்னீர்கள்,' என - என்று (அந்தப் பெரியோர்களை நோக்கிச்) சொல்ல.—(எ - று.)—'வீரரும் முதியரும் முன்பரும்பற்றியென' என்று அடுத்த கவியோடு தொடரும்.

மராமரப்படலத்தின் ௩௨, ௩௩ - ஆங் கவிகள் நோக்கத்தக்கன. அப் பிலத்திலுள்ளே மாயாவி வாலியைக் கொன்றுவிட்டானென்று மாறாகக் கருதியதனால், 'என் தம்முனை வானமாள வைத்தவன்' என்றான். போரிற் புறங்கொடாது இறந்தவர் வீரசுவர்க்கமடைவரென்னும் நூல்துணிபுபற்றி, 'வானம்ஆள' எனப்பட்டது; போரிற்கொன்றவ னென்ற பொருளில் 'வான மாளவைத்தவன்' என்றது. பிறதினவிற்சியணி. ஊனம் - இழிவு. குறைபாடு, கேடு. (௩௩)

௩௪. பற்றியான்றபடைத்தலைவீரரு
முற்றுணர்ந்தமுதியருமுன்பரு
மெற்றுநம்மரசெய்துவையாமெனக்
கொற்றநன்முடிகொண்டதக்கோதிலான்.

(இ - ள்.) (மீளவும்), ஆன்ற படைத் தலை வீரரும் - சிறந்த சேனாதிபதிகளும், முற்று உணர்ந்த முதியரும் - (அறிய வேண்டுவன) யாவும் அறிந்த மந்திரிகளும், முன்பரும் - (மற்றுமுள்ள) பெரியோர்களும், பற்றி - (சுக்கிரீவனை அப்பிலத்தினுட் செல்லவிடாது) பிடித்துக்கொண்டு, 'எற்றும்-நிகழ்ந்த செயல்) எத்தன்மையதா யிருப்பினும், நம் அரசு எய்துவை - உங்கட்கு உரிய அரசாட்சியை நீ அடையக்கடவாய்,' என - என்று சொல்லி நிர்ப்பந்திக்க,—(அதனால்தான்), அ கோது இலான் - குற்றமற்றவனான அச்சுக்கிரீவன், கொற்றம் நல் முடி கொண்டது - வெற்றிக்கு அறிகுறியான கிரீடத்தைச் சூட்டிக்கொண்டது (நிகழ்ந்தது); (எ - று.)—ஆம் - அசை.

மராமரப்படலத்தின் ௩௪, ௪௦௦ - ஆங் கவிகள் நோக்கத்தக்கன. பற்றி என என்று இயையும். படைத் தலை வீரர் - சேனைக்குத் தலைமை பூண்ட வீரர். முதியர்-அறிவொழுக்கங்களிற் பெரியவர்; முதுமை யென்ற பண்பி

னடியாப் பிறந்த பெயர், முன்பு - பெருமை; அதனையுடையோர் முன்பர். எற்றும் - வாலிமாயாவிகளின் செய்தி எவ்வாறாயினும் என்றபடி. முடிகொண்டது - அரசாட்சியை ஏற்றுக்கொண்டது. கொண்டது - தொழிற்பெயர், வினைமுற்றின் தன்மையடைந்தது; இதனை வடநூலார் பாவேப்ரயோக மென்பர். (௬௪)

௬௫. வந்தவுன்னைவணங்கிமகிழ்ந்தன
னெந்தையென்கணினத்தவராற்றலிற்
றந்தவுன்னரசென்றுதருக்கிலான்
முந்தையுற்றதுசொற்றமுனிந்துநீ.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) வந்த உன்னை மகிழ்ந்தனன் - மாயாவியைக்கொன்று (பிறகு) மீண்டு வந்த உன்னைப் பார்த்து மகிழ்ச்சியடைந்து, வணங்கி - (உன்னை) நமஸ்கரித்து, 'எந்தை - எமது தலைவனே! இனத்தவர் - நமது இனத்தாரான வாநரர்கள், என்கண் - என்னிடத்தில், ஆற்றலின் தந்த - வலியக்கொடுத்த, உன் அரசு-உனது அரசாட்சி (இது),' என்று-என்று தொடங்கி, தருக்கு இலான் - அகங்கார மில்லாதவனான சுக்கிரீவன், முந்தை உற்றது சொற்ற - முன்பு நிகழ்ந்த செய்தியைச் சொன்ன வார்த்தைகளை, நீ முனிந்து - நீ வெறுத்து,—(எ - று.)—'இரங்கலை' என அடுத்த கவியோடு தொடரும்.

மராமரப்படலத்தின் ௯௭, ௯௯, ௧௦௦ - ஆங் கவிகளை நோக்குக எந்தை - அண்மைவிளி. தமையனைத் தந்தையைப்போலப் பாவிக்க வேண்டுதலால், 'எந்தை என விளித்தான். ஆற்றலின் தந்த - முயற்சியாற் கொடுத்த என்றும், ஏற்றுக்கொள்ளுமாறு கொடுத்த என்றும் கொள்ளலாம். தருக்கு - யானென்னுஞ் செருக்கு. உற்றது - பெயர். சொற்ற - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும்பெயர்; சொல் - பகுதி, அ விகுதி, ற் - இறந்தகால விடைநிலை; இனி, 'சொற்ற' என்பதைச் செயவெனெச்சமாக் கொண்டு, சொல்லவென்று உரைத்தலுமாம்; து - சாரியை. அப்பொழுது, முனிந்து - கோபித்து என்னலாம். (௬௫)

௬௬. கொல்லலுற்றனையும்பியைக்கோதவற்
றில்லையென்பதுணர்ந்துமிரங்கலை
யல்லல்செய்யேலுனக்கபயம்பிழை
புல்லலென்னவும்புல்லலைபொங்கினாய்.

(இ - ள்.) அவற்கு கோது இல்லை என்பது உணர்ந்தும் - அச்சுக்கிரீவனிடத்திற் குற்றமில்லையென்பதை (அவன் சொற்களினால்) அறியலாயிருந்தும், இரங்கலை - (அவனிடத்து நீ) இரக்கங்கொள்ளாதவனாய்,—'அல்லல் செய்யேல் - (என்னை நீ) துன்பப்படுத்தாதே; உனக்கு அபயம் - உனக்கு அடைக்கலப்பொருள் (யான்); பிழை புல்லல்-(எனது) குற்றத்தைப்பொறுத்

தருள்வாய்,' என்னவும் - என்று (அச்சுக்கிரீவன்) சொல்லவும், புல்லலை - பொறுத்திடாதவனாய், பொங்கினாய் - சீறி, உம்பியை கொல்லல் உற்றனை - உன் தம்பியான அவனைக் கொல்லத்தொடங்கினாய்; (எ - று.)

மராமரப்படலத்தின் ௧0௧, ௧0௨ - ஆங் கவிகளை நோக்குக. அவற்கு - உருபுமயக்கம். அபயம் - அஞ்சாதே யென்று அபயமளித்துக் காக்கத்தக்க பொருளாகின்றேன் யான் எனறபடி. புல்லல் - 'அல்' விகுதிபெற்ற உடன் பாட்டுவியங்கோள். "மக்கட் பதடி யெனல்" என்றவிடத்து 'எனல்' என் பதுபோல. புல்லுதல் - அமைதல். (௬௬)

௬௭. ஊற்றமுற்றுடையானுனக்காரமர்
தோற்றுமென்றுதொழுதுயர்கையனீ
கூற்றமுண்ணக்கொடுப்பனென்றெண்ணினாய்
நாற்றிசைக்கும்புறத்தையுநண்ணினான்.

(இ - ள்.) ஊற்றம் உற்று உடையான்-வலிமையை மிகுதியாக உடைய வனான சுக்கிரீவன், ஆர் அமர் உனக்கு தோற்றும் என்று - 'அருமையான போரில் உனக்குத்தோற்றோமாம்' என்று சொல்லி, தொழுது உயர்கையன் - அஞ்சலிசெய்து சிரமேற்கொண்ட கைகளையுடையனானன்; (அங்ஙனம் உன்னை அவன சரணமடையவும்), நீ -,(ஆதரியாமல்), கூற்றம் உண்ண கொடுப்பன் என்று எண்ணினாய் - '(இவனுயிரை) யமன்உண்ணும்படி கொடுப் பேன் [இவனைக்கொன்றுவிடுவேன] யான்' என்று நினைத்தாய்; (பின்னர் அவன் அஞ்சி), நால் திசைக்கும் புறத்தையும் நண்ணினான் - நான்கு திக்குக் களின் கடையெல்லையையும் ஓடிச்சேர்பவனானான்; (எ - று.)

மராமரப் படலத்தின் ௧0௩ - ஆங்கவியை நோக்குக தோறறும், றும - விகுதி, இறந்தகாலங் காட்டிற்று; தனிததன்மைப் பனமை. தோறறும் என்று - தோற்போமென று எண்ணி யென்றலுமாம். தொழுது-கூப்பி. (௬௭)

௬௮. அன்னதன்மையறிந்துமருளலை
பின்னவன்னிவனென்பதும்பேணலை
வன்னிதானிடுசாபவரம்புடைப்
பொன்மலைக்கவனண்ணலிற்போகலை.

(இ - ள்.) அன்ன தன்மை அறிந்தும் அப்படி அவன் வலியிழந்து ஓடிப் போகினற தன்மையை யறிந்தும், அருளலை - (அவன்பக்கல்) நீ அருள்செய் யாதவனாய், இவன் பின்னவன் எனபதும் பேணலை - இவன (உனது) தம்பி யென்பதையும் கருதாமல் அவனைத் துரத்தித்துரததி வருத்தினாய்; (பின்பு), அவன் - அச்சுக்கிரீவன், வன்னி தான இடு சாபம் வரம்பு உடை பொன் மலைக்கு நண்ணலின் (மதங்க) முனிவரா லிடப்பட்ட சாபமாகிய தடை யெல்லையையுடைய அழகிய ரிசியமூககிரிக்குப் போய்ச் சேர்ந்ததனால், போகலை - (அங்கு நீ) செல்லாதுவிட்டாய்; (எ - று.)—அதனால் அவன் உயிர்தப்பிப் பிழைத்தா னென்க.

மராமரப்படலத்தின் ௬௦௬, ௬௦௭, ௬௦௮, துந்துபிப்படலத்தின் ௬௩ - ஆம் கவிகளைப் பார்க்க. உனக்கு அழிவைச்செய்வதான சாபத்திற்கு அஞ்சி அங்கு நீ செல்லாதுவிட்டனேயேயன்றி, சரணமடைந்தவனைப் பாதுகாத்தல் வேண்டுமென்ற விசேஷதருமத்தையாவது, வலியிழந்துபுறங்கொடுத்து ஓடு கின்றவனைத் துரத்திக்கொல்லலாகாதென்ற ராஜதருமத்தையாவது, தம்பி பக்கல் அன்புவைத்தல் வேண்டு மென்னும் உறவுரிமையையாவது சிறிதே னுங் கருதி அவனைவிட்டிலை யென்பதாம். தம்பியரைத் தன்னுயிர்போலப் பாவிப்பவனும் வலியிழந்தபகைவனை 'இன்றுபோய் நாளைவா' என்று அன போடு சொல்லி விடுத்தருள்பவனும், சரணாகதரக்ஷணத்தைப் பரமதருமமாகக் கொண்டுள்ளவனுமான இராமபிரான், மேற்கூறிய பெரியகுற்றங்களைப் பார்த் துப் பொரு மெனபது, வெளிப்படை. வன்னி - வாணீ என்ற வடசொல் லின் விகாரம்; அது - பிரமசாரியின் பெயர்: இங்கு, நித்தியப்பிரமசாரியான மதங்கமுனிவனைக் குறித்தது. சாபம் - 'இங்கு வாலி வந்தால் தலைவெடித்து இறப்பானாக' என்பது. (௯௮)

௯௯. ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவனபுணா
தாரமாவதுதாங்குந்தருக்கரோ.

(இ - ள்.) ஈரம் ஆவதும் - அன்பின் செயலாவதும், இல் பிறப்பு ஆவ தும - உயர்குலத்திற பிறந்ததன் பயனாவதும், வீரம் ஆவதும் - வீரத்தினபய னாவதும, கல்வியின் மெய் நெறி வாரம் ஆவதும் - கல்விகற்று உணர்ந்த உண்மையான நீதிமார்க்கத்திற்கு உரிய செய லாவதும், மற்று ஒருவன் புணர் தாரம் ஆவது தாங்கும் தருக்கு அரோ - மற்றொருவன சேர்ந்த மனைவி யை(க் கருதுமிலைமை தவறாதபடி) பாதுகாக்கும் பெருமையே யனறோ; (எ - று.)—அரோ - தேற்றம்; 'இடைச்சொற்களுக்கு இடத்திற்கு ஏறபப் பொருள்கொள்ளலாம்' இவ்விலக்கணம், வடநூலார்க்கும் ஒக்கும்.

ஈரம், இற்பிறப்பு, வீரம் என்பன - அவற்றின் காரிய மென்ற பொரு ளில் நின்றன; உபசாரவழக்கு. வாரம் - உரிமை. தாரமென்பது உயர்திணைப் பொருளுணர்த்தும அஃறிணைச் சொல்லாதலால், 'தாரம் ஆவது' எனப்பட் டது; 'ஆவது' என்பது, பகுதிப்பொருள் விகுதியாய் நின்றது. (௯௯)

௬௦௦. மறந்திறம்பல்வலியமெனுமனம்
புறந்திறம்பலெளியவர்ப்பொங்குத
லறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறப்பறெளிவுடையோர்க்கெலாம்.

(இ - ள்.) தெளிவு உடையோர்க்கு எலாம் - தெளிந்த அறிவையுடைய வர்கட்கெல்லாம்,—வலியம் எனு - 'வலியுடையோம் யாம்' என்று கருதி, மனம் புறம் திறம்பல் - மனம் வீரத்தில் தவறுதச்செல்வதாய், எளியவர்

பொங்குதல் - எளியார்மீது கோபித்தல், மறம் திறம்பல் - பராக்கிரமச் செயலினின்று தவறுவதும்,—அருங் கடி மங்கையர் திறம் திறம்பல் - (பிறர் புகுதற்கு) அரிய பாதுகாவலையுடைய மாதர்களது கற்பினவலிமையை யழித்தல், அறம் திறம்பல் - தருமத்தினின்று தவறுதலுமாம்; (எ - று.)

தெளிவுடையோர்க்கெல்லாம் எளியவர்ப் பொங்குதல் மறந்திறம்பலும், மங்கையர் திறந் திறம்பல் அறந்திறம்பலு மா மென்க. புறம் - வீரம்; அக்கிரமவழி யென்றுங் கொள்ளலாம். திறம திறம்பல் - கற்புநிலைக்கு மாறாக ஒழுகுதல். வலியிழந்து ஓடிய சுக்கிரீவனை விடாது துரத்தித்துரத்தி யடித்துக் கொல்ல முயன்றதனாலும், அவன் மனைவியான ருமையைக் கவர்ந்து கொண்டதனாலும், தெளிவுடையோரனைவரும் வெறுக்கத்தக்க மறந்திறம்பலும் அறந்திறம்பலு மாகிய பெருங் குற்றங்கள் வாலியினிடம் நிகழ்ந்தன வென்பது உணர்க. (௪00)

௪0௧. தருமமின்னதெனுந்தகைத்தன்மையு
மிருமையுந்தெரிந்தெண்ணலையெண்ணினு
லருமையும்பிதனாருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினையெய்தப்பெறுதியோ.

(இ - ள்.) தருமம் இன்னது எனும் - அறம் இத்தன்மைய தெனகிற, தகை தன்மையும் - தகுதியையும், இருமையும் - இம்மை மறுமைப் பயன்களையும், தெரிந்து எண்ணலை - ஆராய்ந்து கருதாமறபோனாய்; எண்ணினால் (அவற்றை) ஆலோசித்து அறிந்தால், அருமை உம்பிதன ஆர்உயிர தேவியை- அருமையான உன் தம்பியினது அரிய உயிர் போன்ற மனைவியை, பெருமை நீங்கினை எய்த பெறுதியோ - பெருந்தன்மையொழிந்து சேரக்கடவையோ? (எ - று.)

இம்மைப்பயன் - புகழ். மறுமைப்பயன் - புண்ணியம். உயிர்த்தேவி - உயிரோடொத்த மனைவி; பிராணநாயகி. "அறம் புகழ் கேண்மை பெருமை யிந்நான்கும், பிறன்தாரம் நச்சுவார்ச்சேரா - பிறனதாரம், நச்சுவார்ச்சேரும் பகை பழி பாவமென், றச்சத்தோ டிந்நாற்பொருள்" என்பது காணத்தக்கது. (௪0௧)

௪0௨. ஆதலானுமவனெனக்காருயிர்க்
காதலனெனலானுநிற்கட்டனெ
னேதிலாருமெளியரென்றுரையுந்
தீதுதீர்ப்பதென்சிந்தைக்கருத்தரோ.

(இ - ள்.) ஆதலானும் (நீ இப்படியெல்லாஞ் செய்தாய்) ஆதலாலும், அவன எனக்கு ஆர் உயிர் காதலான் எனலானும் - அச்சுக்கிரீவன் எனக்கு அருமையான உயிர்போன்ற நண்பனானதனாலும், நின் கட்டனென்-உன்னை உயிர்பறித்தேன்; (அன்றியும்), ஏதிலாரும் - யாதொருசம்பந்தமுமில்லாத அயலாரையும், எளியர் என்றுரையும் - எளியவர்களையும, தீது தீர்ப்பது -

தனபமொழிப்பது, என் சிந்தை கருத்து - எனது மனக்கருத்தாம்; (எ - று.)
—அரோ - ஈற்றசை.

உயிர்க்காதலான் - பிராணசிநேகிதன். நிற் கட்டனென் - இரண்டாம் வேற்றுமைத்தொகை. கட்டனென், கள் - பகுதி. 'என்றார்' என்றது, பகுதிப் பொருள் விகுதியாய் நின்றது. (௧௦௨)

[இவ்வாறு இராமபிரான் சொல்ல, அவற்றிற்கு வாலி எதிர்கூறத் தொடங்குதல்]

௧௦௩. பிழைத்ததன்மையிதுவெனப்பேரெழி
றழைத்தவீரனுரைசெயத்தக்கிலா
திழைத்தவாலியியல்பலவித்துணை
விழைத்திறத்தொழிலென்னவிளம்புவான்.

(இ - ள்.) பிழைத்த தன்மை இது - நீ தவறுசெய்தவிதம் இது, என - என்று, பேர் எழில் தழைத்த வீரன உரைசெய - மிக்க அழகு நிரம்பிய மகா வீரனான இராமபிரான் சொல்ல, தக்கிலாது இழைத்த வாலி - தகாத செயலைச் செய்த வாலியானவன், 'இ துணை - (தகாதனவென்று நீ சொன்ன) இவ்வளவும், இயல்பு அல-(வானரமான எங்கள் பிறப்புக்கு) உரியனவல்ல; விழை திறம் தொழில் - விரும்பியபடி தொழில்செய்தலே (எங்கள் பிறப்புக்கு உரியது),' என்ன - என்று, விளம்புவான் - சொல்பவனானான்; (எ - று.)—இது, தொகுத்துச் சுட்டல்; இதன விவரணத்தை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

'தன்மையிது,' 'தக்கிலாது' என்பன - தொகுதியொருமைகள்; தக்கிலாது - எதிர்மறை யிறந்தகால வினையாலணையும் பெயர். 'இயல்பல இத்துணை விழைத்திறத்தொழில' எனபதற்கு - தகுதியல்லாதனவாக நீ கருதிக் கூறிய இவ்வளவும் (எங்களுக்கு) விரும்பிச் செய்யததக்க தொழில்களேயாம் எனனும பதவுரை கொளளலாம. பேர எழில் - மஹாஸௌந்தர்யம். தழைத்தல் - நாளொருவண்ணமும் பொழுதொரு மேனியுமாக மேனமேல் வளரப்பெறுதல். (௧௦௩)

[இதுமுதல் மூன்று கவிகள் - வாலிகூறும் சமாதானம்.]

௧௦௪. ஐயநுங்களருங்குலக்கற்பினப்
பொய்யின்மங்கையர்க்கேய்ந்தபுணர்ச்சிபோற்
செய்திலன்னெமைத்தேமலர்மேலவ
னெய்தினெய்தியதாகவியற்றினான்.

(இ - ள்.) ஐய - தலைவனே! நுங்கள் - உங்களுடைய, அருங் குலம் - அருமையான குலத்தில் தோன்றிய, கறபு இனம் - பதிவிரதாதருமத்தையும் அதற்கு இனமான நாணம் முதலிய குணங்களையுமுடைய, பொய் இல் மங்கையர்க்கு - பொய்ம்மையில்லாத மாதர்கட்கு, ஏய்ந்த - பொருந்திய, புணர்ச்சி போல் - விவாகம்போல, எமை - எங்களுக்கு, தேன் மலர் மேலவன -

தேனை யுடைய (திருமாலின் திருநாபித்) தாமரை மலரின்மேல் தோன்றியவனான பிரமன், செய்திலன் - நியமஞ்செய்தானில்லை ; எய்தின் எய்தியது ஆக இயற்றினன் - நேர்ந்தால் நேர்ந்தபடி யாகுமாறு நியமஞ்செய்தான் ; (எ-று.)

'நுங்கள்குலம்' என்றது, மனிதப்பிறப்பை. கற்பின்-கற்பு நிலைமையையுடைய, அந்த மங்கைய ரெனலுமாம். பொய்யின்மை - மனம்வேறு சொல்வேறு தொழில்வே றாகாமை, திரிகரணசுத்தி. செய்திலன்னெனமை - விரித்தல். எமை-உருபுமயக்கம். தே மலர்-தெய்வத்தன்மையை யுடைய மலரெனினுமாம் ; தே - தெய்வத்திற்கு ஒருபெயர். யாதொரு நியமமு மில்லாமல் நேர்ந்தபடி புணருமாறு எங்கட்குப் பிரமதேவன் நியமனஞ்செய்தனனென்க.

கOரு. மணமுமில்லைமறைநெறிவந்தன
குணமுமில்லைக்குலமுதற்கொத்தன
வுணர்வுசென்றுழிச்செல்லுமொழுக்கலா
னிணமுநெய்யுமிணங்கியநேமியாய்.

(இ - ள்.) நிணமும் - பகைவருடற்கொழுப்பும், நெய்யும் - பூசியநெய்யும், இணங்கிய - பொருந்திய, நேமியாய் - சக்கராயுதத்தையுடையவனே ! உணர்வு சென்ற உழி செல்லும் ஒழுக்கு அலால் - மனம்போன வழியே நடக்கும் நடக்கை யல்லாமல், (எங்களுக்கு), மறை நெறி வந்தன மணமும் இல்லை- வேதமார்க்கப்படி வந்தவையான விவாகக்கிரமங்களும் இல்லை; குலம் முதற்கு ஒத்தன குணமும் இல்லை - வம்சபரம்பரைக்கு ஒத்தனவான குணங்களும் இல்லை ; (எ - று.)

மறைநெறி வந்தன - வேதங்களிற்கூறிய முறைமையால் வந்தவை ; வைதிகசம்பிரதாயப்படி வந்தவை. குலம் முதற்கு ஒத்தன - குலத்தின் சிறப்புக்கு ஏற்றவை யெனினுமாம் சென்றுழி - தொகுத்தல். ஒழுக்கு - ஒழுக்கம். நிணம் - பகைவருடலிற்பாயும்போது அங்கிருந்து ஒட்டிக்கொண்டது. "திருவுடைமன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனேயென்னும்" என்றபடி அரசன் விஷ்ணுவின் அம்சமென்பதுபற்றி, 'நேமியாய்' என்று இராமனை விளித்தான். 'மறைநெறிவந்தன' என்றதை 'குணம்' என்பதனோடும், 'குலமுதற்கொத்தன' என்றதை 'உணர்வுசென்றுழிச்செல்லும் ஒழுக்கு' என்பதனோடுங் கூட்டியுரைப்பாரு முளர் ; (எங்கள்) மிருகசாதிக்குத் தக்கனவாக மனம்போனபடியொழுகும் ஒழுக்கமென்க. (கOரு)

[வாலிக்கு இராமன் மீண்டும் எதிர்சொல்லத் தொடங்குதல்.]

கOசு. பெற்றிமற்றிதுபெற்றதொர்பெற்றியிற்
குற்றமுற்றிலெனீயதுகோடியால்
வெற்றியுற்றதொர்வெற்றியினையெனச்
சொற்றசொற்றகைக்குற்றதுசொல்லுவான்.

(இ - ள்.) வெற்றி உற்றது ஒர் வெற்றியினுய் - (என்னை) ஜயித்த தன்மையையுடையவனும் (இயல்பில்) ஜயசாலியுமானவனே! பெற்றி இது - (எங்கள் பிறப்புக்குஉரிய) தன்மை யிது: (ஆதலால்), பெற்றது ஒர் பெற்றியின் - நானடைந்துள்ள ஜாதித்தன்மைப்படி, குற்றம் உற்றிலென்-யாதொரு குற்றத்தையுஞ் செய்திலேன்; அது நீ கோடி - அதனை நீ (மனத்திற்) கொள்வாய், என - என்று, சொற்ற - சொன்ன, சொல் தகைக்கு - சொற்களின் பெருமையையுடையவனான வாலிக்கு, உற்றது சொல்லுவான் - தக்க சமாதானஞ் சொல்பவனாயினன், (இராமபிரான்); (எ - று.)—அதனை, அடுத்த ஒன்பதுகவிகளிற் காண்க. மற்று, ஆல் - அசைகள்.

கோடி - கொள்+இ; ட்-எழுத்துப்பேறு. அது கோடி - அதனை அறி என்றபடி. 'வெற்றியுற்றதொர் வெற்றியினுய்' என்பதற்கு - ஜயம் தான் அடைந்ததொரு ஜயத்தையுடையவனேயென்று பொருள்கொண்டு, வெற்றிகளுள்ளும் மேம்பட்ட வெற்றியையுடையவனே யென்று கருத்துரைத்தலும் அமையும்; எவராலும் வெல்லுதற்கு அரிய தன்னைக் கொன்றிட்டதையே சிறந்தவெற்றியாகக் குறித்தான். சொற்ற, ற்-இறந்தகாலவிடைநிலை. சொற்றகை-ஆறாம்வேற்றுமைத் தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை; நன்றாகப்பேசவல்லவ னென்க. உற்றது - தக்கது. இக்கவியிற் பிராஸமென்னுஞ் சொல்லணி காண்க. (கoசு)

[இதுமுதல் ஒன்பது கவிகள் - இராமபிரான் வாலியின் வார்த்தையை மறுத்துப்பேசுதல்]

கoஎ. நலங்கொடேவரிற்றோன்றிநவையறக்
கலங்கலாதறநன்னெறிகாண்டலின்
விலங்கலாமைவிளங்கியதாதலா
லலங்கலார்க்கிதடுப்பதன்றாமரோ.

(இ - ள்.) (நீங்கள்), நலம் கொள் தேவரின் தோன்றி-சிறப்புக்கொண்ட தேவர்களின் புதல்வராய்ப் பிறந்து, நவை அற-(ஐயந்திரிபுகளாகிய) குற்றங்களில்லாதபடி, கலங்கலாது நல் அறம் நெறி காண்டலின் - நிலைகலங்காமல் என்றும் ஒருபடியாகவுள்ள சிறந்த தருமமார்க்கத்தை யறிந்திருத்தலால், விலங்கு அலாமை விளங்கியது - (நீங்கள் ஸாமாந்யமான) மிருகஜாதி யன்றென்பது விளங்கிற்று; ஆதலான் - ஆகவே, அலங்கலார்க்கு இது அடுப்பது அன்று ஆம் - போர்வெற்றிகட்குரிய மாலைகளைத் தரிப்பவர்களான வீரர்கட்கு இது தகுவதன்றாம்; (எ - று.)—அரோ - தேற்றம்.

விளங்கியது - நன்றாகத் தெரிகின்றதென்றபடி. 'அலங்கலார்க்கு' என்றது - முன்னிலைப்படர்க்கையாக, போர்வீரர்களான உங்கட்கு எனறவாறாம். அஃறிணையினின்று பிரித்ததனால், உயர்திணையாக் கூறினர். முன்பு கூறியவற்றையெல்லாம் தொகுத்து, தொகுதியொருமையாக 'இது' எனப்பட்டது. அடுப்பதன்று - அடாது. (கoஎ)

௧௦௮. பொறியின்யாக்கையதோபுலனோக்கிய
வறிவின்மேலதன்றோவறத்தாறுதா
னெறியினோன்மையைநேர்நின்றுணர்ந்தநீ
பெறுதியோபிழையுற்றுறுபெற்றிதான்.

(இ - ள்.) அறத்து ஆறு தான் - தருமமார்க்கந்தான், பொறியின் யாக்கையதோ ஐம்பொறிகட்கு இடமான உடம்பைப் பற்றியதோ! புலன் நோக்கிய அறிவின்மேலது அன்றோ - விஷயங்களை ஆராய்ந்தறிகின்ற அறிவைப் பற்றியதன்றோ! நெறியின் நோன்மையை - அந்தத் தருமமார்க்கத்தின் பெருமையை, நேர் நின்று உணர்ந்த - நன்றாக அறிந்துநின்ற, நீ—, பிழை உற்று உறு பெற்றி தான் பெறுதியோ - தவறுகளை மிகுதியாகச் செய்யுந் தன்மையைப் பெறக்கடவையோ? (எ - று.)

நீ, வடிவினால் விலங்காகிய வாநரம்போலிருப்பினும், பகுத்தறிவுடைமையால் மனிதர் போலுதலால், தருமமார்க்கத்தை யறிந்திருந்தே தவறுகள் செய்தது, தகாது என்பதாம். தொல்காப்பியத்து மரபியலில் "மக்கள்தாமே ஆறறிவுயிரே, பிறவுமுளவே யக்கிளைப்பிறப்பே" என்ற சூத்திரத்தின் உரையில் 'பிறப்பென்றதனால், குரங்குமுதலாகிய விலங்கினுள் அறிவுடையன வெனப்படும் மனவுணர்வுடையன உளவாயின், அவையும் ஈண்டு ஆறறிவுயிரா யடங்கு மென்பது' என்பது, இங்குக் காணத்தக்கது. (௧௦௮)

௧௦௯. மாடுபற்றியிடங்கர்வலித்திடக்
கோடுபற்றியகொற்றவற்கூயதோர்
பாடுபெற்றவுணர்வின்பயத்தினால்
வீடுபெற்றவிலங்கும்விலங்கரோ.

(இ - ள்.) இடங்கர் - முதலை, மாடு பற்றி வலித்திட - (தன்னை) ஒரு பக்கத்திற் பிடித்துக்கொண்டு வலிய இழுத்ததனால், கோடு பற்றிய கொற்றவன் கூயது - சங்கத்தை ஒருகையிலேந்தியுள்ள வெற்றியையுடையவனான திருமாலைக் கூவியழைத்ததாகிய, ஓர் பாடு பெற்ற உணர்வின் பயத்தினால் - ஒப்பற்ற பெருமைபெற்ற அறிவின் பயனால், வீடு பெற்ற - (அத்துன்பத்தினின்று) விடுபடுதலையும் பிறகு முத்தியையும் அடைந்த, விலங்கும் - யானையும் [கஜேந்திராழ்வானும்], விலங்கு அரோ - மிருகஜாதியேயன்றோ; (எ - று.)

மிக்க விஷ்ணுபக்தியுடையனான இந்திரத்யும்நனென்னும் அரசன் வழக்கப்படி ஒருநாள் விஷ்ணுபூஜை செய்துகொண்டிருந்தபோது அகத்தியமகாமுனிவன் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவன் தன்கருத்து முழுவதையும் திருமாலைப்பூசிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அவ்விருடியின்வருகையை அறிந்திடானாய் அவனுக்குஉபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அம்முனிவன்,தன்னை அரசன் அலட்சியஞ்செய்தானென்று மாறுகக்கருதிக்கோபித்து, 'நீ, யானைபோலச் செருக்குற்றிருந்ததனால், யானையாகக்கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத் தோன்றினனாயினும்,

முன்செய்த விஷ்ணுபக்தியின் மகிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அருச்சித்துப்பூசித்து வருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அர்ச்சனைக்காகப் பூப்பறித்தற்குப்போய் இறங்கியபொழுது, அங்கே முன்பு நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலனென்னும் முனிவனது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவனது சாபத்தாற் பெரியமுதலையாய்க் கிடந்த ஹூஹூவென்னுங் கந்தர்வன் அவ்யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக்கொள்ள முடியாமற் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கு எழுந்தருளி, தனது சக்கராயுதத்தைப்பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன் வாயினின்று விடுவித்து, இறுதியில் அதற்கு முத்தியை யருளினன் என்ற வரலாறு, இங்குக் குறித்தது.

அந்தக் கஜேந்திரன்போலவே நீயும் ஸாமாந்யமான விலங்கென்று கொள்ளத்தக்கவனல்லை யென்பதாம்.

மாடு - பக்கம். வெற்றிக்கு அறிகுறியாகச் சங்கத்தை வாயில்வைத்து ஊதுதலும், சங்கத்தின் நாதத்தினாற் பகைவரை அச்சமுறுத்தி வெல்லுதலுந் தோன்ற, 'கோடுபற்றிய கொற்றவன்' என்றார். 'வீடுபெற்ற' என்றது, இரட்டுறமொழிதல். வீடு - விடு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர்; பற்றுக்களைவிட்டு அடையுமிடமுமாம். கூயது - கூ - பகுதி, ய் - இறந்தகாலவிடைநிலை. (க0கூ)

கக0. சிந்தைநல்லறத்தின்வழிச்சேர்தலாற்
பைந்தொடித்திருவின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல்வீடுபெற்றெய்திய
வெந்தையும்மெருவைக்கரசல்லனோ.

(இ - ள்.) நல் அறத்தின் வழி - நல்ல தருமமார்க்கத்தில், சிந்தை சேர்தலால் - மனம் சென்றதனால், பைந் தொடி திருவின் பரிவு ஆற்றுவான் - பசுமையான [பசும்பொன்னாலாகிய] தொடியென்னுங்கைவளையை யணிந்த திருமகள்போன்ற சீதையினது துன்பத்தைத் தீர்த்தற்பொருட்டு, வெம் தொழில் திறல்-கொடிய போர்த்தொழிலில் (தனது) திறமையை(க்காட்டி), வீடு பெற்று எய்திய - பரமபதஞ் சேர்ந்து ஆனந்தமடைந்த, எந்தையும் - எமது (பெரிய) தந்தையான ஜடாயுவும், எருவைக்கு அரசு அல்லனோ - கழுகுகளுக்கு அரசனன்றோ; (எ - று.)

சூரியசாரதியான அருணனது புத்திரனும் சம்பாதியின் தம்பியுமாகிய ஜடாயு, நெடுநாளாய்த் தசரதசக்கரவர்த்திக்கு உயிர்த்தோழனா யிருந்தனன். இவன் பின்பு தசரதகுமாரர்களான ராமலக்ஷ்மணர்களைத் தண்டகாரணியத்திற் கண்டு அவர்களைத் தனது புத்திரர்போலவே பாவித்து அன்புபாராட்டி அவர்கட்குப் பாதுகாவலாய்நிற்க, அவர்களும் தசரதனினும் பிராயம்முதிர்ந்தவனான இவனைத் தமது பெரிய தந்தையாகப் பாவித்து வந்தனர். இங்ஙன

மிருக்கையில், இராவணன், மாயமான் வடிவுபூண்ட மாரீசனது சூழ்ச்சியால் இராமலக்குமணரை அப்புறப்படுத்தி, தனித்து நின்ற சீதையை வலிய எடுத்துத் தேரின்மேல் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ச் செல்லுகையில், அவள் கூக்குரலிட்டதைக் கேட்டுக் கழுகரசான ஜடாயு ஓடிவந்து எதிர்த்துப் பெரும்போர் செய்து அவனது கொடி முதலியவற்றைச் சிதைத்து, முடிவில், அவனெறிந்த தெய்வவாளினாற் சிறகு அறுபட்டு விழ, அரக்கன் சீதையைக் கொண்டுபோய் இலங்கையில் அசோகவனத்திற் சிறைவைத்திட்டான. பின்பு வந்த இராமலக்ஷ்மணர் பர்ணசாலையிற் சீதையைக் காணமற் கலங்கி அவளைத் தேடிச் செல்லும் வழியில் ஜடாயு வீழ்ந்து கிடக்கக்கண்டு சோகிக்கையில், குற்றுயிருடன் விழுந்துகிடந்த அந்தக் கழுகரசன் நடந்த செய்தியைச் சிறிதுகூறி உயிர்நீப்ப, இராமபிரான அவனுக்குப் பரமபதமளித்துச் சரம கைங்கரியஞ் செய்து முடித்தனன் என்ற வரலாறு, ஆரணிய காண்டத்திற் கூறப்பட்டது.

"விலங்கானேனாதலினால் விலங்கினேன்" என்று ஜடாயு கூறியதுங் காண்க. ஜடாயுபோலவே நீயும ஸாமாந்யமான விலங்கென்று கொள்ளத் தக்கவனல்லை யென்பதாம். எழுவகைப் பிறப்பினுள் விலங்கும் பறவையும வேறு வேறாகக் கூறப்படினும், இவவிரண்டும் நால்வகைக் கதிகளுள் விலங்கு கதியில அடங்குதலால், இங்குக் கழுகரசு வாநரத்தோடொப்ப எடுக்கப் பட்டது.

ஆறறுவான் - எச்சம; அவாய் நிலையால், இதற்கு 'காட்டி' என்ற முடிக்குஞ் சொல் வருவிக்கப்பட்டது எந்தையும்மெருவை, மகரவொற்று - விரித்தல். 'வீடு' என்பதை ஆவருத்தி செய்துகொண்டு, வீடு பெற்று-உயிர் நீங்குதலை யடைந்து, வீடு எய்திய - பரமபதமடைந்த என்று பதவுரை கூறலுமாம். (௧௩௦)

௧௩௧. நன்றுதீதென்றியறெரிநல்லறி
வின்றிவாழ்வதன்றோவிலங்கின்னிடை
நின்றநன்னெறிநீயறியாநெறி
யொன்றுமின்மையுன்வாய்மையுணர்த்துமால்.

(இ - ள்.) நன்று தீது என்று - (இன்னது) நல்லதென்றும் (இன்னது) கெட்டதென்றும், இயல் தெரி - (அதனதன்) இயல்பை (உள்ளபடி) உணர்கின்ற, நல் அறிவு-நல்ல பகுத்தறிவு, இன்றி-இல்லாமல், வாழ்வது அன்றோ-உயிர்வாழ்ந்திருப்ப தன்றோ, விலங்கின் இடை - மிருகங்கட்கு (மனிதரோடுள்ள) வேறுபாடு; நின்ற நல் நெறி - நிலைபெற்ற சன்மார்க்கங்களுள், நீ அறியா நெறி ஒன்றும் இன்மை - நீ அறியாத வழி ஒன்றுமில்லையென்பதை, உன் வாய்மை உணர்த்தும - உன வாயினின்று (இப்பொழுது) வந்த சொற்களே தெரிவிக்கும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இடை - அந்தரம். தாரதமியம். நன்றுதீதென்று இயல்தெரி நல்லறிவு-விவேகம். விலங்கின்னிடை, னகரவொற்று - விரித்தல். (௧௩௧)

கக௨. தக்கவின்ன தகாதனவின்னவென்
றொக்கவுன்னலராயினுயர்ந்துள
மக்களும்விலங்கேமனுவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே.

(இ - ள்.) தக்க இன்ன - தகுதியானவை இவை, தகாதன இன்ன - தகுதியல்லாதவை இவை, என்று—, ஒக்க-நீதி நூல் முறைமைக்குப் பொருந்த, உன்னலர் ஆயின் - எண்ணாதவர்களானால், உயர்ந்துஉள மக்களும் விலங்கே - (எல்லாப் பிராணிகளினுஞ்) சிறந்துள்ள மனிதர்களாயினும் மிருகத்துக்கு ஒப்பானவர்களே; அ விலங்கும் - அந்த மிருகங்களேயாயினும், மனுவின் நெறி புக்க ஏல் - மநுதர்ம சாஸ்திரத்திற் கூறப்பட்டுள்ள முறைமைகளிற் பொருந்தி நடந்தனவாயின், புத்தேளிரே - தேவர்கட்கு ஒப்பானவையே. (எ - று)

உணவு உறக்கம் அச்சம் முதலிய பலதொழில்களும் ஐம்பொறியுணர்வும் மனிதர்க்கும் மிருகங்களுக்கும் சமமாயிருப்பினும், மிருகங்களினும் மனிதர் சிறப்புடையாராக மதிக்கப்படுதற்குக் காரணம், நல்லவை தீயவைகளைப் பகுத்தறியும் அறிவு மிகுதி மிருகங்களுக்கு இல்லையாக, மனிதர்க்கு அந்தப் பகுத்தறிவு இருத்தலேயாம்; ஆதலின், உயர்ந்த பிறப்பிற் பிறந்திருந்தும் அதற்கு ஏற்ற விவேகத்தை யுடையராகாத மனிதர் மிருகங்களோடு ஒப்பர்: இழிந்த பிறப்பிற் பிறந்துள்ள அந்த மிருகங்கள் தாம் தமது பிறப்பிற்கு உரிய அறிவினும் மேம்பட்ட அவவுணர்வு மிகுதியோடு கூடிய நீதிநெறியே ஒழுகுமாயின் விசேஷ ஞானமுடைய தேவர்கட்குச் சமமாகு மெனபதாம். "விலங்கொடு மக்களனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனையவர்" என்ற திருக்குறள் இங்கு நோக்கத்தக்கது.

உம்மை யிரண்டும் - முறையே உயர்வு சிறப்பும், இழிவு சிறப்புமாம். ஏகாரங்கள் - தேற்றம். 'மக்கள்' என்ற பெயர், "மக்கள தாமே ஆறறிவுயிரே" என்ற தொல்காப்பியத்தின்படி ஐம்பொறியுணர்வோடு மனவறிவையும் உடைமையாகிய அவர்களது விசேடத்தை விளக்கும். 'உயர்ந்துள' என்ற அடைமொழி, "அரிதரிது மானிடராதலரிது" என்றவாறு எல்லாப் பிறப்பினும் மனிதசன்மத்திற்கு உரிய ஏற்றத்தை எடுத்துக் காட்டியபடி.

தக்க, புக்க - இறந்தகால வினையாலணையும் பெயர்கள். இன்ன - இகரச் சுட்டடியாப் பிறந்த குறிப்பு வினையாலணையும் பெயர்; ன்-சாரியை, ன-சந்தி, அ - பலவின்பால்விகுதி. ஒக்க - மாறுபடாமல், சரியாக, செயவெனெச்சம். உன்னலர் - எதிர்மறைப் பலர்பால் முற்று. மநு - வடசொல்; இது - இங்கே, அவனாற் செய்யப்பட்ட தரும சாஸ்திரத்தைக் குறித்தலால், கருத்தாவாகுபெயர். மனுவின்னெறி, னகரமெய் - விரித்தல். ஏல் - என்னில் மரூஉ. புத்தேளிர், இர் - பலர்பால் விகுதி; கேளிர், மகளிர் என்ற விடங்களிற் போல. (கக௨)

கசங. காலனாற்றல்கடிந்தகணிச்சியான்
பாலினாற்றியபத்திபயத்தலான்
மாலினாற்றருவன்பெரும்பூதங்க
ணாலினாற்றலுமாற்றுழிநண்ணினாய்.

(இ - ள்.) காலன் ஆற்றல் கடிந்த - யமனுடைய வல்லமையை யழித்து (அவனை)வென்ற, கணிச்சியான்பாலின - மழுவென்னும் ஆயுதத்தை யுடையவனான சிவபிரானபக்கல், ஆற்றிய - (நீ) செய்த, பத்தி - பக்தி, பயத்தலான் - பயன தந்ததனால்,—மாலினால் தரு வல பெரும் பூதங்கள் நாலின் ஆற்றலும் - திருமாலாற் படைக்கப்பட்ட வலிய பெரிய பூதங்கள் நானகிற்கு உள்ள வலிமைகளையெல்லாம், ஆற்றுஉழி நண்ணினாய - (உனது) வலிமையிற் பெற்றாய்; (எ - று.)

நல்வினைசெய்தால் நற்பயன விளையுமெனபதற்கு இது கூறப்பட்டது. பூதங்கள் நான்கு—இவை - ஆங் கவியிற் கூறப்பட்டன. காலனாற்றல் கடிந்த கணிச்சியான—முன ''காலனறன காலமுங காலா, லறுக்கும் புங்கவன்'' என்றது காணக. பால் - ஏழனுருபு; இன் - சாரியை. கணிச்சி - சூலமுமாம. பக்தி. பூதம் - வடசொறகள.

'அண்டத்தையும, அண்டகாரணங்களையும் தானே உண்டாக்கும' என்றபடி அண்டத்தினகாரணமான பஞ்சமகாபூதங்களைப் பிரமனைக்கொண்டன்றி எம்பெருமான தானே படைத்தருளுதலால், 'மாலினால்தரு வனபெரும் பூதங்கள்' எனப்பட்டன; இது, ஸமஷ்டிஸருஷ்டியின் பாற்படும். ஆற்றுஉழி - ஆறறலில். ஆறறு - ஆறறல் என்பதன விகாரம, உழி - ஏழனுருபு. மாற்று உழி என்று பிரித்து, பூதங்கள் நானகின வலிமையையும் போக்கும் படியான திறத்தைப் பெற்றாயென்று உரைத்தலும் ஒன்று. (கசங)

கசச. மேவருந்தருமத்துறைமேவினா
ரேவரும்பவத்தாலிழிந்தோர்களுந
தாவருந்தவருமபலதன்மைசா
றேவரும்முளர்தீமைதிருந்தினார்.

(இ - ள்.) ஏவரும் - குற்றமுடையரா யிருந்தவர்களிலும், பவத்தால் இழிந்தோாகளும் - பிறப்பினால் தாழ்ந்தவர்களிலும், மேவு அருந் தருமம் துறை மேவினார் - சோதற்கு அரிய [மிகச்சிறந்த] தருமமார்க்கத்திற் சேர்ந்து நடந்தவர்களும்,—தா அருந் தவரும - குற்றமில்லாத தவத்தைச் செய்தவர்களான முனிவர்களிலும், பல தன்மை சால் தேவரும் - பலவகைப்பட்ட குணங்கள் சிறந்த தேவர்களிலும், தீமை திருந்தினார் - தீயசெயல் செய்தவர்களும், உளர் - (உலகத்தில்) உண்டு; (எ - று)

இன்னார் நல்லனவே செய்வர், இன்னார் தீயனவே செய்வர் என்னும் நியதி யில்லை யென்க. ஏவும் - குற்றம; அதனையுடையவர், ஏவர்: ஏவஞ்செய்தவ ரென்க; 'தவர்' என்றாற் போல. பவம் - வடசொல் பவத்தால்

இழிந்தோர்கள் - இழிபிறப்பினர். தா - உரிச்சொல்; அழிவுமாம். தேவரும் முனர், மகரமெய் - விரித்தல். திருந்துதல் - செய்து முடித்தல். பின்வரும் 'தவர்' எனபதற்கு எதிராக 'ஏவர்' எனறும், 'தேவர்' என்பதற்கு எதிராக 'பவத்தாலிழிந்தோர்கள்' எனறுங் கூறினர். 'தீமை திருந்தினர்' என்ப தற்கு - தீமை செய்து பின்பு சீர்திருந்தப்பெற்றவ ரென்று உரைப்பாரு முளர். (௧௧௪)

௧௧௫. இனைய தாதலி னெக்குலத் தியாவர்க்கும்
வினையி னல்வரு மேன்மையுங் கீழ்மையு
மனைய தன்மைய றிந்து மழித்தனை
மனையின் மாட்சியென் றான்மனு நீதியான்.

(இ - ள்.) இனையது ஆதலின் - (உண்மை) இத்தனமையதாயிருத்த லால், எ குலத்து யாவர்க்கும - எந்தக் குலத்திற் பிறந்த எவர்க்கும், மேன மையும் கீழ்மையும் - உயர்வும் இழிவும், வினையினால் வரும் - (அவரவர்செய் யுஞ்) செயல்களாலேயே வரும்; அனைய தன்மை அறிந்தும் - அத்தன்மை யை (நீ) உணர்ந்திருந்தும், மனையின் மாட்சி அழித்தனை - (அயலான்) மனை வியின கற்பை யழித்தாய், எனறான் - எனறு சொன்னான்: (யாவனெனின்), மனு நீதியான் - மநுதாமசாஸ்திரத்திற் (சொல்லப்பட்ட) நீதிநெறி தவறாது நடப்பவனான ஸ்ரீராமபிரான; (எ - று.)

வினை - கர்மம். நல்வினையால் மேன்மையும், தீவினையாற் கீழ்மையும் வருமென்க. மாட்சி - பெருமை; இங்கே, சிறப்பினால், கற்பை யுணர்த் திற்று. (௧௧௫)

வேறு.

[பிறகு வாலி வேறென்றுவினவ, அதற்கு இலக்குமணன் விடைகூறத் தொடங்குதல்.]

௧௧௬. அவ்வுரை யமையக் கேட்ட வரிகுலத் தரசு மாண்ட
செவ்வியோ யனைய தாகச் செருக்களத் துருத்தெய் யாதே
வெவ்விய புளிஞ ரென்ன விலங்கியே மறைந்து வில்லா
லெவ்விய தென்னை யென்றா னிலக்குவ னியம்ப லுற்றான்.

(இ - ள்.) அ உரை அமைய கேட்ட - அந்த (இராமபிரான்) வார்த்தையை நனறாகக் கேட்ட, அரி குலத்து அரசும் - குரங்குகளின கூட்டத்திற்கு அரச னான வாலியும், (அவவிராமனை நோக்கி), 'ஆண்ட செவவியோய் - (எல்லா வுயிர்களையும்,) ஆளுகின்ற சிறப்பையுடையவனே! அனையது ஆக - அப்படி யானால், செருக்களத்து உருத்து எய்யாதே - போர்க்களத்தில் முன நின்று (எனமேல்) அம்பு தொடுக்காமல், வெவ்விய புளிஞர் என்ன - கொடிய வேடர் கள் (மறைந்து நின்று விலங்குகளின்மேல் அம்புதொடுத்தல்) போல, விலங் கியே மறைந்து - (எதிர்ப்படாமல்) விலகி மறைந்துநின்று, வில்லால் எவ விய து - வில்லைக்கொண்டு (என்மேல் அம்பு) செலுத்தியது, என்னை - என்ன

காரணத்தால்?' என்றான் - என்று வினவினான்; இலக்குவன் இயம்பல் உற்றான் - (அதற்கு) லக்ஷ்மணன் விடைகூறத்தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

அரசு மாண்ட என்று பிரித்தால், 'மாண்ட' என்பதற்கு - மாட்சிமைப் பட்ட என்று பொருளாம்: ஆக - செயவெனெச்சம். 'அனையதாக செருக்களத்து' என்று வலிமிகாத பாடத்திற்கு, 'ஆக' என்பது-வியங்கோள்முற்று; அவ்வாறாகுக வென்ற பொருள், உருத்தல் - உருவங்காட்டுதல் புளினர் - புளிந்த என்ற வடசொல்லின் விகாரம் எவ்வியது - (அம்பை) ஏவியது. லக்ஷ்மண னென்ற வடசொல், விகாரப்பட்டது; அது - சகலலக்ஷணங்களும் பொருந்தியவ னென்றும், லக்ஷ்மியோடு [இராமனுக்கு அடிமைசெய்தலாகிய செல்வத்தோடு] கூடியவ னென்றும் காரணப்பொருள்பெறும். 'விலங்கினை மறைந்து' என்றும் பாடமுண்டு.

இதுமுதல் ஐந்து கவிகள் - மராமரப்படலத்தின் பதினோராங்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (ககக)

[இலக்குமணன் கூறிய பிரதியுத்தரம்.]

ககஉ. முன்புநின்றம்பிவந்துசரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பனென்றுசெப்பினன்செருவினீயு
மன்பினையுயிருக்காகியடைக்கல மியானுமென்றி
யென்பதுகருதியண்ணன்மறைந்துநின்றெய்ததென்றான்.

(இ - ள்.) நின் தம்பி முன்பு வந்து சரண் புக - உன்தம்பியான சுக்கிரீவன் முதலில் வந்து சரணமடைய, (அப்பொழுது ஸ்ரீராமன்), முறைஇலோயை - நீதிநெறியில்லாதவனான உன்னை, தென்புலத்து உய்ப்பன் என்று செப்பினன் - கொல்லுவதாக (அவனுக்கு) வாக்குதத்தஞ் செய்தருளினன்; (பிறகு), நீயும்—, செருவில் - போரில், உயிருக்கு அன்பினை ஆகி - (உனது) உயிரினிடத்து அன்புடையையாய், யானும் அடைக்கலம் என்றி - 'நானும் (உனக்கு) அடைக்கலம்' என்று சொல்லுவாய், என்பது கருதி - என்பதை எண்ணியே, அண்ணன் மறைந்து நின்று எய்தது - (எனது) தமையனான இந்தஸ்ரீராமன் உனதுஎதிரில்நில்லாமல் மறைந்துநின்று அம்பெய்தது, என்றான் - என்று (இலக்குமணன் வாலிக்கு எற்ற) விடைகூறினான்; (எ - று.)

பெருமான் வாலியை எதிரில்வந்து கொலைசெய்யாதது ஏனெனின்,— அவர் முதலில் தம்மைச்சரணமடைந்த சுக்கிரீவனுக்கு அப்பொழுது அபயமளித்து வாலியைக்கொன்று உதவுவதாகப் பிரதிஜ்ஞைசெய்தனர்; பிறகு வாலியினெதிரில்வந்துபோர்செய்தால், வாலியும் போரில் தமது திறத்தைக் கண்டு அஞ்சித் தன்னுயிர்பாதுகாத்துக்கொள்ளுங்கருத்தினாற் சரணமடைந்திடுவனாயின், பின்பு, தஞ்சமடைந்தவர்களைக் கொலைசெய்யக் கூடாமையால் முன்செய்தபிரதிஜ்ஞை தவறிப்போய்விடும் என்கிற உத்தேசங்கொண்டே போராற்றலை யுடையரான பெருமான் வாலிகண்ணெதிரில்தோன்றாமல் மறைந்து நின்று அவன்மேல் அம்பெய்தனரே யன்றி வேறில்லை யென்க.

அன்பனுக்கு வாக்களித்தது தவறலாகா தென்பது கருதியே இவ்வாறு செய்யலாயிற்று.

சரண் - பிராணம்; வடசொல் விகாரம். தென்புலத்துஉய்த்தல் - உயிரை உடம்பினின்றுஒழித்துத் தென்திசையிலுள்ளவனான யமனிடத்துச் செலுத்துதல். அடைக்கலம் - பாதுகாக்கத்தக்க பொருள். 'என்றி' என்ற முன்னிலையொருமைமுற்றில், இகரவிகுதி-எதிர்காலங்காட்டிற்று; ற் - எழுத்துப்பேறு. அண்ணல்'என்று எடுத்தும் உரைக்கலாம்; தலைமையனென்றும், பெருமையிற்சிறந்தவனென்றும், தலைவனென்றும் பொருள்படும். எய்தது - தொழிற்பெயர். வினைமுற்றின் தன்மையடைந்தது. இனி, எய்தது என்பது கருதி (ஆம்) என்று மாறஇயைத்துப் பொருள்கொள்ளவுமாம். (௧௧௭)

[வாலி சமாதானமடைந்து ஸ்ரீராமனை வணங்குதல்.]

௧௧௮. கவிகுலத்தரசுமன்னன்கட்டுரைமனத்திற்கொண்டா
னவியுறுமனத்தனாகியறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலென்பதெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறுகேள்விச்செல்வன்சென்னியையிறைஞ்சிச்சொன்னான்.

(இ - ள்.) முன்னே செவியுறு கேள்வி செல்வன் - முன்னமே [இளமையிலேயே] (பலபெரியோர்கள்பக்கல்) கேட்டுஉட்கொண்ட நூற்கேள்விகளாகிய செல்வத்தை யுடையவனான, கவி குலத்து அரசும் - குரங்குகளின் கூட்டத்திற்கு அரசனான வாலியும், மன்னன் கட்டுஉரை மனத்தில் கொண்டான் - இளையபெருமான் சொன்ன அந்தத் தகுதியான வார்த்தையை மனத்திற்கொண்டவனாய், 'புவியிடை - உலகத்திலே, அண்ணல் - பெருமையிற்சிறந்தவனான இராமன், அவியுறு மனத்தன் ஆகி - கோபதாபங்கொண்ட மனத்தையுடையவனாய், அறம் திறன் அழிய செய்யான் - தருமமார்க்கம் அழியும்படி தொழில்செய்யமாட்டான்,' என்பது எண்ணினன் - என்பதைக் கருதியவனாகி, பொருந்தி - அடங்கி, சென்னியை இறைஞ்சி - (இராமபிரானைக்குறித்துத்) தலைவணங்கி (நமஸ்கரித்து), சொன்னான் - சொல்பவனானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

"செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம், செல்வத்துளெல்லாந் தலை" என்ற திருக்குறளும். அதனுரையிற் பரிமேலழகர் 'செவியான்வருஞ் செல்வம்-கேள்வியான் எல்லாப்பொருளையும் அறிதல்' என்றதும், இங்கு நோக்கத்தக்கன. அறிவை யுண்டாக்கி வளர்ப்பனவான நூற்கேள்விகளை முன்னமேயுடையவனாதலால், வாலி இராமலக்ஷ்மணர்சொன்ன சமாதானங்களை உளங்கொண்டு ஆராய்ந்து அவைசரியேயென்று சம்மதித்துத் தனதுகோபதாபங்களொழிந்தன னென்க. 'முன்னேசெவியுறு கேள்விச்செல்வன்' என்ற அடைமொழி இங்ஙனம் ஒருகருத்தையுட்கொண்டதனால், கருத்துடையடைமொழியணி மன்னன் - க்ஷத்திரியகுலத்தில் அவதரித்தவன். அன்னன் என்று பிரித்து, அவனென்று பொருள்கொள்ளவுமாம். கட்டுரை - ஏற்றசொல். 'அவியுறு மனத்தனாகி' என்பதற்கு

(வாலி) சமாதானங்கொண்ட மனத்தையுடையவனு யென்றும், 'பொருந்தி' என்பதற்கு - (அந்தச் சமாதானவார்த்தைகள் தகுதியாமென்று) சம்மதித்து என்றும் பொருள்கொள்ளலாம். அவிதல் - தபித்தல், அமைதல், தணிதல். உறு - துணைவினை. பொருந்துதல் - அமைதல், இயைதல் அவனடியில் தனதுமுடிபடும்படி விழுந்து ஸாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்யமாட்டாமையால், தனதுதலைவணக்கமாத்திரத்தால் அவ்வநதனக்குறிப்பைத் தெரிவித்தன னென்க. (கக௮)

[வாலி இராமனைத் தனதுகுற்றங்களைப்
பொறுத்தருளுமாறு வேண்டுதல்.]

ககக. தாயெனவுயிர்க்குநல்கித்தருமமுந்தகவுஞ்சால்பு
நீயெனநின்றநம்பிநெறியினினோக்குநேர்மை
நாயெனநின்றவெம்பாலவையறவுணரலாமே
தீயனபொறுத்தியென்றான்சிறியனசிந்தியாதான்.

(இ - ள்.) 'தாய் என உயிர்க்கு நல்கி - தாய்போல உயிர்கள் பக்கல் அன்புசெய்து, தருமமும் தகவும் சால்பும் நீ என நின்ற - தருமமும் நடுவுநிலைமையும் நற்குணநிறைவும் நீயேயென்று சொல்லும்படி நின்ற, நம்பி - புருஷோத்தமனே! நெறியினின் நோக்கும் நேர்மை - (வேதசாஸ்திரங்களிற் கூறிய) சன்மார்க்கப்படி பார்க்கும் நேர்வழியால், நாய் என நின்ற எம்பால் அவை அற உணரலாமே - நாய்போல எளியராய் நின்ற எங்கள்பக்கல் குற்றங்களில்லாமற் பார்க்கமுடியுமோ? தீயன பொறுத்தி - (என்னுடைய) தீய செயல்களைப் பொறுத்தருள்வாய்,' என்றான் - என்று (இராமபிரானைநோக்கிச்) சொன்னான்: (யாவனெனில்),—சிறியன சிந்தியாதான் - சிறிய எண்ணங்களைக் கொள்ளாதவனான வாலி; (எ - று.)

தாயெனவுயிர்க்குநல்கி—"தாயொக்குமன்பின்" என்றது காண்க. தருமமும் தகவும் சால்பும் நீயென நின்ற - இவனல்லாது இவ்வுலகில் தருமம் முதலியன வேறு இல்லையென்னும்படி அவற்றின் சொரூபமதாய் நின்ற என்றபடி; தருமமுதலியன சிறிதுந்தவறாமல் அவற்றை முழுவதுமுடையவனென்ற கருத்து, இங்ஙனம் ஒற்றுமைநயம்படக் கூறப்பட்டது. தகவு-தகுதி; இது நடுவு நிலைமையாதலை, "தக்கார் தகவிலர்" என்ற திருக்குறளிலுங் காண்க. சால்பு - பலநற்குணங்களால் நிறைதல், குணபூர்த்தி. நம்பி - அண்மைவிளி. மூன்றுமடியினீற்றில், ஏ - வினா. பிறர்குணங்களைக் குற்றமாகக் கொள்ளுதல், தாம்பிடித்ததே சாதிப்போமென்னுந் தருக்கு, மனம்வேறு சொல்வேறுதொழில்வேறாதல் முதலிய கீழ்மக்கட்டன்மை யில்லாதவனென்பது, 'சிறியனசிந்தியாதான்' என்றதன் பொருள். அதுபற்றியே, அபராதக்ஷாமணம் வேண்டுகின்றனனென்க. நெறியினின் நோக்கும் நேர்வழியை எளியேமான எங்களிடத்தில் தவறாமற் பார்க்க முடியுமோவெனினும் அமையும். 'நம்ப,' 'உணரலாமோ' என்பன, பாடபேதம். (ககக)

[வாலி மற்றும் பிரார்த்தித்து வேறு சில கூறத்தொடங்குதல்.]

கஉ0. இரந்தனன் பின்னு மெந்தை யாவது மெண்ண றேற்றாக்
குரங்கெனக் கருதி நாயேன் கூறிய மனத்துக் கொள்ளே
லரந்தைவெம் பிறவி யென்னோய்க் கருமருந் தனைய வையா
வரந்தரு வள்ளா லொன்று கேளென மறுத்துஞ் சொல்வான்.

(இ - ள்.) பின்னும் இரந்தனன் - (வாலி) மற்றும் (இராமபிரானைப்) பிரார்த்திப்பவனாய்,—'எந்தை-எமதுதலைவனே! யாவதும் எண்ணல் தேற்றா குரங்கு என கருதி - எதையும் ஆராய்ந்தறியமாட்டாத குரங்கென்று (என்னைத்) திருவுள்ளம்பற்றி, நாயேன் கூறிய மனத்து கொள்ளேல் - நாய்போற கடைப்பட்டவனான எளியேன் (உன்னைக்குறித்து நிந்தனையாகச்) சொன்ன சொற்களை மனத்திற்கொள்ளாதே; அரந்தை - வருத்தத்தைச் செய்கின்ற, வெம் - கொடிய, என் பிறவி நோய்க்கு - எனது பிறப்பாகிய வியாதிக்கு, அரு மருந்து அனைய - அருமையான ஔஷதம் போன்ற, ஐயா - சுவாமி! வரம் தரு - (வேண்டியவர்க்கு) வேண்டியவரங்களை (யெல்லாம்) கொடுத்தருள்கின்ற, வள்ளால் - வரையாதருளுமியல்பினனே! ஒன்று கேள் - யான் சொல்வதொன்றைக் கேட்டருள்வாய்,' என - என்றுசொல்லி, மறுத்தும் சொல்வான் - மீளவும் கூறுபவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்தகவி முதல் ஏழுகவிகளிற் காண்க.

எந்தை - அண்மைவிளி. குரங்கு ஒரு நிலைகொள்ளாத சபலசித்தத்தையுடைமையால், அதற்கு 'யாவதுமெண்ணல்தேற்றா' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.பிறப்பையொழித்து எனக்கு முத்தியைத் தந்தருள்பவனே யென்பது, மூன்றாமடியின் பொருள். வள்ளால் - வள்ளல் என்பதன ஈற்றயல்திரிந்த விளி. யாவது - யாது என்பதன் விரித்தல், இதில், அ - சாரியை யென்றலுமாம். அரு மருந்து - கிடைத்தற்கரிய மருந்து, எளிதிற் பெறவொண்ணாத மருந்து, பெறாப்பேறாகக்கிடைத்த மருந்து. கூறிய - இறந்தகாலப் பலவின்பால் வினையாலணையும் பெயர். நாயேன் கூறிய மனத்துக் கொள்ளேல் - எளியேன்சொன்ன பழிமொழிகளைகருதித்து உன் திருவுள்ளத்திற் சீற்றங்கொள்ளாதே யென்றவாறு சுக்கிரீவனவிஷயமாகத் தான் செய்தகுற்றங்களுக்காகக் கீழ்க்கவியிலும், இராமபிரானைத் தானே பழித்தவற்றிற்காக இக்கவியிலும் பொறைவேண்டினனென்ன வேறுபாடு உணர்க. ஒன்று - யான்செய்வதொரு விண்ணப்பமென்க. (கஉ0)

வேறு.

[வாலி இராமபிரானைத்துதித்து ஒருவரம் வேண்டுதலை இதுமுதல் ஏழுகவிகளிற் கூறுகின்றார்.]

கஉக. ஏவுகூர் வாளியா லெய்துநா யடியனே
னாவிபோம் வேலைவா யறிவுதந் தருளினாய்
மூவர்நீ முதல்வனீ முற்றுநீ மற்றுநீ
பாவநீ தருமநீ பகையுநீ யுறவுநீ.

(இ-ள்.) ஏவு கூர் வாளியால் - தொடுத்துச்செலுத்திய கூரிய அம்பி ஞல், எய்து - (என்னை) அடித்து, நாய் அடியனேன் ஆவி போம் வேலைவாய் - நாய்போற் கடைப்பட்டவனுன அடியேன் உயிர்நீங்குஞ் சமயத்தில், அறிவு தந்தருளினுய் - தத்துவஞானத்தை (எனக்குக்) கொடுத்தருளினுய்; மூவர் நீ - (பிரமவிஷ்ணுருத்திரனென்னும்) திரிமூர்த்திகளும் நீயே; முதல்வன் நீ - அவர்கட்கெல்லாம ஆதிகாரணனுன ஸ்ரீமந்நாராயணனும் நீயே; பாவம் நீ தருமம் நீ - பாவமும்நீயே தருமமும்நீயே; பகையும் நீ உறவும நீ - பகைமையும் நீயே உறவுமுறைமையும் நீயே; மற்றும் நீ - மற்றையவும் நீயே; முற்றும் நீ - யாவும் நீயே; (எ - று.)

எய்தல் - நால்வகை யூறுபாட்டி லொன்று; அவை - எறிதல், குத்தல், வெட்டல், எய்தல் என்பன. அடியனேன - அடிமை யென்ற பண்பினடியாப்பிறந்த தன்மை யொருமைக்குறிப்பு வினையாலணையும்பெயர்; அன் - சாரியை. வேலைவாய்—வாய் - ஏழனுருபு. இராமபாணம்பட்டதனுல் உயிர் நீங்குஞ்சமயத்தில் தத்துவஞானமடைந்து, அதனுல் அப்பெருமான ஜகத்காரணனும ஸர்வவியாபியுமான ஸ்ரீமந்நாராயணனென்பதை யுணர்ந்து துதிக்கின்றுன. 'மூவர்' என்றது - படைத்தல்தொழில் செய்யும் பிரமதேவன், காத்தல்தொழில் செய்யும் மகாவிஷ்ணுவாகிய உபேந்திரமூர்த்தி, அழித்தல்தொழில் செய்யும் உருத்திரமூர்த்தி எனபவர்களை. இவர்கள் ஸ்ரீமந்நாராயணனது சொரூப மெனபதை "இருகூலமும பொருமாநீ ரரங்கத்திலெந்தை யந்தண், முருகூர் கமலமுனியாய்வருகைகு முறைமையினுற, புருகூதனுககுத திருத்தமபியாகிப்புரக்கு முமை, யொருகூறு கொண்டவனுய ழிக்கு முகாந்ததிலே" எனபது காண்க. 'முதல்வன' எனறது, எல்லாவுருவங்கட்குமூலமாய்ப் பரமபததிலெழுந்தருளியிருக்கின்ற ஆதிமூர்த்தியை. இனி, திருப்பாற்கடலி லெழுந்தருளியிருக்கின்ற திருமாலின வியூகமூர்த்திகளாகியவாசுதேவன சங்கர்ஷணன பிரத்யும்நன் அநிருத்தனஎனற நால்வருட் பிரதானமூர்த்தியான வாசுதேவன் பிரமவிஷ்ணுருத்ரரூபிகளாய்ப் படைத்தல் காததல் அழிததல் தொழில்களைச் செய்யும மற்றைமூவர்க்கும் காரணனுதலால், அவவாசுதேவனை 'முதல்வன்' எனறும், மற்றையோரை 'மூவர்' என்றுங் கூறியதாகவும் கொள்ளலாம. "ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்" எனறபடி ஸகலசேதநாசேதநங்களின உள்ளும புறம்பும எம்பெருமான் வாசியறக் கலந்துநிற்றலால், 'பாவம நீ தருமம் நீ பகையும் நீ உறவும் நீ மற்றும்நீ முற்றும்நீ' என்றுன். "விதிததோனுகி, மூவருமாகிய யந்தமூவர்க்கு முதல்வனுகி, யாவரும யாவு மாகி யிறைஞ்சுவா ரிறைஞ்சப் பற்பல், தேவருமாகி நின்ற செங்கண்மா லெங்கள்கோவே" என்பர் வில்லிபுததூராரும்.

இதுமுதல் ஐந்துகவிகள் - மராமரப்படலத்தின் ௩௯ - ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (௩௨௧)

௩௨௨. புரமெலாமெரிசெய்தோன்முதலினேர்பொருவிலா
வரமெலாமுருவியென்வசையிலாவலிமைசா
லுரமெலாமுருவியென்னுயிரெலாநுகருநின்
சரமலாற்பிறிதுவேறுளதரோதருமமே.

(இ - ள்.) புரம் எலாம் எரிசெய்தோன் முதலினோர் - திரிபுரங்களையும் எரித்திட்டவனான சிவபிரான் முதலிய தேவர்கள் (எனக்குத் தந்தருளிய), பொருவு இலா வரம் எலாம் - ஒப்பில்லாத வரங்களெல்லாவற்றையும், உருவி - இடையேபுகுந்து பழுதுபடச்செய்தும், என் - எனது, வசை இலா வலிமை சால் - குற்றமில்லாத வலிமை மிக்க, உரம் எலாம் - மார்பு முழுவதையும், உருவி - நுழைந்து துளைத்தும், என் உயிர் எலாம் நுகரும் - எனது உயிர்முழுவதையும் உட்கொண்ட, நின் சரம் அலால் - உனது அம்பேயல்லாமல், பிறிது வேறு தருமம் - தனியே வேறாயுள்ள தருமமென்பது, உளதுவே - இருக்கின்றதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)—ஈற்றேகாரம் - வினா. அரோ - அசை.

உனது அம்பு தருமவடிவமேயாவ தென்பதாம். தருமந்தவறியவர்களைத் தவறாதுதண்டித்துத் தருமத்தைப் பரிபாலிப்ப தென்க. முதலினோர் வரம் என்றும், என் உரம் என்றும் இயையும். உருவுதல் - தைத்து முழுவதுந் துளைத்துக்கொண்டு செல்லுதல், புதைந்தோடல். வரங்களை ஒருவாறு ஒதுக்கிவிட்டதே, இங்கே 'வரமெலாம் உருவி' எனப்பட்டது. வலிமைக்கு, வசை - போரில் தோற்றல். 'எல்லாம்' என்றது - முதலிரண்டடிகளில் பொருளின்பன்மைகுறித்தும், மூன்றாமடியில் ஒருபொருளின் பலவிடங்குறித்தும் நின்றது. 'உயிர் நுகரும்' என்றது - உயிரைக் கவர்ந்து கொண்ட அதாவது உயிரை உடம்பினின்று ஒழித்த என்றபடி; உண்ணாதது உண்பதுபோலவும், உண்ணப்படாதது உண்ணப்படுவதுபோலவுஞ் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. (௧௨௨)

௧௨௩. மாவலச்சூலியார்வாழ்த்துநர்க்குயர்வர
மோவலற்றுதவனின்னொருதனிப்பெயரியம்
பாவலிப்புடைமையாலாகுமப்பொருளையாந்
தேவநிற்கண்டவெற்கரிதெனோதெரினே.

(இ - ள்.) தேவ - சுவாமி!—தெரின் - ஆலோசிக்குமிடத்து,—மா வலம் சூலியார் - மிக்க வலிமையையுடைய சூலாயுதத்தையுடையவரான சிவபிரான், வாழ்த்துநர்க்கு - (தன்னைத்) துதித்தவர்கட்கு, உயர் வரம் - சிறந்த வரங்களை, ஓவல் அற்று உதவல் - ஒழிவில்லாமற் கொடுத்தல், நின ஒரு தனி பெயர் இயம்பு ஆவலிப்பு உடைமையால் ஆகும் - உனது ஒப்பற்ற திருநாமமொன்றைக் கூறும் பேரன்பையுடைமையினாலாகும்: (என்றால்), அ பொருள் நின்னை - அந்தப்பெயர்க்குரிய பொருளாகிய உன்னை, கண்ட - பிரதியக்ஷமாகத் தரிசித்த, எற்கு - எனக்கு, அரிது - பெறுதற்கு அரிய பொருள், என ஆம்ஓ - யாதாகுமோ? [யாதுமில்லையென்றபடி]; (எ - று.)

நினது திருநாமத்தை உச்சாரணஞ் செய்து வருகின்றதன் பலத்தாற் சிவபிரான் தனனைத்துதித்தவர்கட்கெல்லாம வேண்டிய வரங்களைத் தவறாமற கொடுத்து வருகினறன னென்றால், அப்படிப்பட்ட திருநாமமகிமையையுடைய உன்னையே நேரில்தரிசித்தவனான எனக்குப் பெறுதற்கு அரியபேறு

உண்டோ? என்பதாம். இங்ஙனம் ஒருபொருளைச்சொல்லி அதுகொண்டு கைமுதிகநியாய மென்னுந் தண்டாபூபிகா நியாயத்தால் மற்றொரு பொருளைச் சாதித்தல், தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி; வடநூலார் காவ்யார்த்தாபத்தியலங்கார மென்பர். (கைமுதிக நியாயமாவது: "மங்கைமுகம் திங்களையே வாட்டிற்று அறைகுவதென், பங்கயமென்போது படும் பாடு" என்றாற்போல, 'சொல்லவேண்டுவ தென்ன?' என்னும் வாய்பாடு அமையக் கூறுதல்; இதுவே, தண்டாபூபிகா நியாயமெனப் படுவதும்: ஒரு தண்டம் அபஹரிக்கப் பட்டமை கூறுதலால், அதிற் கட்டிவைத்த அப்பம் முதலிய உணவு அபஹரிக்கப்பட்டமை தானே விளங்க வைத்தலெனப் பொருள் காண்க.) "ராம என்ற திருநாமம், திருமாலின் ஸஹஸ்ரநாமங்களுக்கும் ஸமமானது" என்று சிவபிரான் உமாதேவிக்கு உபதேசித்தருளியதும், காசியில் இறக்கும் பிராணிகட்கு உயிர்நீங்குஞ் சமயத்திற் சிவபிரான் தாரகமந்திரமான ராம நாமத்தை வலச்செவியில் ஓதுதலால் அவ்வுயிர்கள் யாவும் முத்தி பெறுகின்றன வென்பதும் முதலியன உணரத்தக்கன. இக்கம்பராமாயணத்தின் முதலிற் காணப்படுகின்ற தனியன்களுள் ஒன்றில் "சம்பநாடனனுமைசெவி சாற்றும் பூங், கொம்பனுடன் கொழுந னிராமப்பேர்" என்றதும், "சீராமா வென் றொருகாலுரைத்தா லுன்றன் திருநாமமாயிரத்துக் கிணையாமென்றே, நீராருஞ்சடையான் பாகத்துமைக்கு நிகழ்த்திடு மம்மந்திரத்துக் கிணையொன்றுண்டோ, பாராருமதனையுச்சரித்தீடேற" எனப் பின்னோர் கூறியதுங் காண்க.

மஹாபலம், மாலி - வடசொற்கள். சூலியார் - 'ஆர்' என்ற பலர்பால் விகுதி, உயர்வுபற்றியது. வாழ்த்துநர், ந் - பெயரிடைநிலை. ஒவல் - ஒருவல் என்பதன் மரூஉ. ஆவலிப்பு - செருக்கு எனினுமாம்; "மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வநின் நாமங்கற்ற, ஆவலிப்புடைமைகண்டாய் அரங்கமாநகருளானே" என்றவிடத்துப்போல. 'அப்பொருளை நின்' என்றது, அப்பொருளநின்னை யென்று உருபு பிரித்துக்கூட்டப்பட்டது. இனி, 'அப்பொருளை' என்பதற்கு - அப்பொருளாகின்றாய் நீ யென்று உரைத்தலுமாம்; அவ்வுரைக்கு 'பொருளை' என்றதில், ஐகாரம் - முன்னிலைவிளக்கி நின்ற தென்க: புறநானூற்றில் "வானவரம்பனை," "கானகநாடனை" என்றவற்றிலும், சூளாமணியில் "ஆதியங்கடவுளை," "போதியங்கிழவனை" என்றவற்றிலும் போல. நிற்கண்ட - நின்னைக் கண்ட என இரண்டாம் வேற்றுமைத்தொகை. எற்கு - எனக்கு: அகரச்சாரியை தொக்கது. (கஉங)

கஉச. யாவரும்மெவையுமாயிருதுவும்பயனுமாய்ப்
பூவுநல்வெறியுமொத்தொருவருமபொதுமையா
யாவனீயாவதென்றறிவிலாருளினார்
தாவரும்பதமெனக்கருமையோதனிமையோய்.

(இ - ள்.) யாவரும் - எல்லாவுயர்திணைப் பொருள்களும், எவையும் - எல்லா அஃறிணைபொருள்களும், ஆய - ஆகியும், இருதுவும் - (வசந்தருது முதலிய அறுவகை) ருதுக்களும, பயனும் - (அந்தந்தருதுக்களிலுண்டாகின்ற)

பலன்களும், ஆய்-ஆகியும், பூவும்நல்வெறியும் ஒத்து ஒருவுஅரும் பொதுமை யாய் - பூவையும் அதனிடத்தேயுள்ள நல்ல மணத்தையும் போல (எல்லாப் பொருளிலும்) விட்டு நீங்காமற் கலந்து (அனைத்திற்கும்) பொதுவாயுள்ள வனே! தனிமையோய் - ஒப்பற்றவனே! நீ யாவன் யாவது என்று - நீ யாரென்றும் (உனது தன்மை) யாதென்றும், அறிவினர் அருளினர்-(எனக்கு) அறிவு (உண்டாகித்) தெரிவித்தது; (ஆதலால்), தா அரும் பதம் எனக்கு அருமையோ - அழிவில்லாத பரமபதம் [முத்தி] எனக்குக் கிடைப்பது அருமையாமோ? [ஆகாதென்றபடி] (எ - று.)

ஸகல சேதநாசேதநங்களின் உள்ளும் புறம்பும் எம்பெருமான் வாசியறக் கலந்து நிற்றலால், 'யாவரும் எவையுமாய்' எனப்பட்டது; "யாவையும் யவருந் தானாய்" என்றார் நம்மாழ்வாரும். 'இருதுவும் பயனுமாய்' என்றது காரணங்களும் காரியங்களும் அவனே யென்றதை விளக்கும். 'பூவும் நல் வெறியுமொத்து ஒருவுஅரும்' என்றமேனும், மலரில் மணம்போல விடாமல் எல்லாப் பொருளிலும் எங்கும் வியாபித்திருப்பவனென்று கருத்து. சிறந்த பொருளோடு இழிந்தபொருளோடு வாசியற எங்கும் ஒரு தன்மையாயிருத்தல் பற்றி, 'பொதுமையாய்' என்றனன். நீ இனனென்றும் உனது தன்மை இதுவென்றும் அறியும்படி உன் கடாட்சத்தினால் எனக்குத் திவ்விய ஞானம் உதயமானதனால், இனிப் பரமபதங்கிடைப்பது எளிதென்பதாம்; "ஜ்ஞாநாந் மோக்ஷ:" "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர், மற்றீண்டு வாரா நெறி" என்பன காண்க.

யாவரும் மெவையுமாய — மகரவொற்று - விரித்தல். 'யாவர்' என்றது - மக்கள் தேவர் நரகரையும், 'எவை' என்றது - மற்றை உயிருள்ளவற்றையும் உயிரில்லாதவற்றையுங் குறிக்கும். பொதுமையாய + யாவன = பொதுமையா யாவன: தனிக்குறிலைச்சாராத யகரம், யகரமவர்க கெட்டது. சிறப்புத் தோன்ற, உயர்திணையாக்கி 'அறிவினர் அருளினர்' என்றார்; உயர்திணைச் சொல்லுதலபற்றி வந்த திணைவழுவமைதி: "செந்தாரப் பசுங்கிளியார் சென்றாக்கு" என்றற்போல, [நன் - பொது - உ௪] ஒருவு அரு - நீங்குதலில்லாத; ஒருவு - முதனிலைத்தொழிற்பெயர். (கஉச)

கஉரு. உண்டெனுந் தருமமே யுருவமா யுடையநிற்
கண்டுகொண் டேனினிக் காணவென் கடவெனோ
பண்டொடின் றளவுமே யென்பெரும் பழவினைத்
தண்டமே யடியனேற் குறுபதந் தருவதே.

(இ - ள்.) உண்டு எனும் - உள்ளதென்று (நூல்களிற்) கூறப்படுகின்ற, தருமமே - தருமத்தையே, உருவம் ஆய் உடைய - வடிவமாகக்கொண்டுள்ள, நின் - உன்னை, கண்டுகொண்டேன் - தரிசிக்கப்பெற்றேன்: இனி என் காண கடவெனோ - இனி எந்தப்பொருளைக் காணவேண்டியவனா யிருக்கின்றேன்! [ஒன்றையுங் காணக்கடமைவனல்லே னென்றபடி]; என பெரும பழவினை - எனது பெரியதும் தொன்றுதொட்டு வருவதுமான, கருமம பண்டொடு

இன்று அளவுமே - முன்னே தொடங்கி இன்றை வரையிலுமே புன்னது [இனி இல்லை]; (என்னென்றால்), தண்டமே - (எனது தீவினைகட்கு நீ செய்தருளிய) இத்தண்டனைதானே, அடியனேற்கு உறுபதம் தருவதே - அடியேனுக்கு நல்ல பதவியை [பரமபதத்தை]த் தருவதாகும்; (எ - று)

இராமபிரான் - தருமஸ்வரூபி யென்பது, முதலடியில் விளங்கிற்று. முதல் வாக்கியம் - கண்படைத்த பயனைக் காணவேண்டிய பரம்பொருளாகிய உன்னைக் காணப்பெற்றேனாதலால், இனி யான் காணவேண்டியதொரு பொருளுமில்லை யென்றவாறும். பிறப்பு அநாதியாய் வருதலாற் பலபிறப்புக்களிற்காரணகாரியத் தொடர்ச்சியாய்ச் செய்து, சேர்க்கப்பட்ட பலகருமங்கள், 'பெரும் பழ வினை' எனப்பட்டன. அங்ஙனம் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின் பயன்களுள் இறந்த உடம்புகளால் அநுபவிக்கப் பட்டனவும் [ஸஞ்சிதமும்] பிறந்த இவவுடம்பால் முகந்து நின்றனவும் [பிராரப்தமும்] ஒழியப் பின்னும் அநுபவிக்கக்கடவனவாய்க் கிடந்தன [ஆகாமியம்] விளக்கின்முன் இருள்போல எம்பிரானருளாற் கெடுதலால், 'பண்டொடு இன்றள வுமே என்பெரும்பழவினை' என்றான். எம்பெருமானாற் கொல்லப்பட்டவர் வீடுபெறுவரென்னுந்துணிவுபற்றி, 'தண்டமே அடியனேற்கு உறுபதந்தருவதே' எனப்பட்டது; மேல் கஉச - ஆங் கவியையுங் காண்க. இனி, பின்னிரண்டடிகட்கு - தொன்றுதொட்டு இன்றைவரையிலும் யான்செய்து போந்த பழைய பெரிய கருமங்கட்குப் பிராயச்சித்தம் அடியேனுக்கு நீ முத்தி தந்தருள்வதே யென்று அநுசிவதையால் வேணடியதாக உரைப்பாருமுளர். 'தண்டமே' என்ற ஏகாரம் - பிரிநிலை. 'தருவதே' என்ற ஏகாரம் - தேற்றம் (கஉ௫)

வேறு.

கஉசு. மற்றினி யுதவி யுண்டோ வானினு முயர்ந்த மானக்

கொற்றவ நின்னை யென்னைக் கொல்லிய கொணர்ந்து தொல்லைச்

சிற்றினக் குரங்கி னோடுந் தெரிவுறச் செய்த செய்கை

வெற்றர செய்தி யெய்தி வீட்டர செனக்கு விட்டான்.

(இ - ள்.) வானினும் உயர்ந்த மானம் கொற்றவ - வானத்தைக் காட்டிலும் உயர்ந்த பெருமையையுடைய ஜயசாலியான அரசனே!—எம்பி - என் தம்பி [சுக்கிரீவன்],—என்னை கொல்லிய நின்னை கொணர்ந்து - என்னைக் கொல்லுதற்பொருட்டு உன்னை அழைத்துக்கொண்டுவந்து,— தொல்லை - பழமையாக [நெடுநாளாக], சிறு இனம் குரங்கினோடும் - சிறிய இனமாகிய குரங்குகளுடனே, தெரிவு உற செய்த - ஆலோசனையமையச் செய்த, செய்கை - செயல்களையுடைய, வெறு அரசு - சிறந்த பயனில்லாத தான (எனது) அரசாட்சியை, எய்தி - அடைந்து, வீடு அரசு - முத்தியுலகத்திற் சிறக்க வீற்றிருக்குந் தன்மையை, எனக்கு விட்டான் - எனக்குக்கொடுத்தான்; (ஆதலால்), இனி மற்று உதவி உண்டோ - இதனைக் காட்டிலும்

மேலாக (எனக்கு அவன் செய்யக்கூடிய) வேறு உபகாரம் உண்டோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

கொணர்ந்து, எய்தி, விட்டான் என இயையும் என் தம்பி என்னைக் கொல்லுதற்காக உன்னை அழைத்துவந்து சேர்த்து என்னைக்கொன்று எனது இந்த எளிய இராச்சியபாரத்தைத் தான் அடைந்து மிகச்சிறந்த மோக்ஷஸாம் ராஜ்யத்தை எனக்குக் கிடைக்கச்செய்தனனாதலால், அவன் எனக்குச் செய்தது மஹோபகாரமேயாயிற்றென்றான். இங்ஙனங் கூறியதனால், வாலிக்குச் சுக்கிரீவனிடமிருந்த பகைமை மாறியமை பெறப்பட்டது. குற்றத்தைக் குணமாகக் கூறிய இலேசவணியும், இழிந்தபொருளைப் பெற்றுக்கொண்டு உயர்ந்தபொருளைத் தருதலாகிய மாற்றுநிலையணியும் இதில் அமைந்திருத்தல் காண்க குரங்குகட்கு இயல்பாகிய விவேகக்குறைவும், சபலசித்தமும், திரிபுணர்ச்சியும் முதலிய இழிவுகள்பற்றி, 'சிற்றினக்குரங்கு' எனப்பட்டது. தன்னையுந் தன் தம்பியையும் மாறுபட்ட சமயங்களில் தீநெறிவிலக்கி நன்னெறிச் செலுத்தாமற்போனமை கருதி 'சிற்றினக்குரங்கு' என்று வெறுத்தானுமாம்; வாநரமந்திரிகள் இருவரிடத்துங் குற்றங்கள்வாராமற் காத்தற்கு உரியராகாது சுக்கிரீவனை அறிவைத்திரித்து இருவரையுங் கெடுத்தமை இங்குக் கருதத்தக்கது. மானமாவது - எப்பொழுதும் தம்நிலையினின்று தாழாமை. 'வானினும் உயர்ந்த' என்றது - மிகவுயர்ந்த என்றபடி; இது, "வானுயர் தோற்றம்", "வான்றோய்குடி" என்றாற்போல, இலக்கணவழக்கு. கொல்லிய - எதிர்காலவினையெச்சம்.

இதுமுதல் இப்படலமுடியுமளவும், மராமரப்படலத்தின் பதின்மூன்றாங் கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கஉகு)

[வாலி இராமனை ஒருவரம் வேண்டுதல்.]

கஉஎ. ஓவியவுருவநாயேனுளதொன்றுபெறுவதுன்பாற்
பூவியனறவமாந்திப்புந்திவேறுற்றபோது
தீவினையியற்றுமேனுமெம்பிமேற்சீறியென்மே
லேவியபகழியென்னுங்கூற்றினையேவலென்றான்.

(இ - ள்.) ஓவியம் உருவ - சித்திரத்திலெழுதிய வடிவம்போலழகிய வடிவத்தையுடையவனே! நாயேன் உன்பால் பெறுவது ஒன்று உளது - எளியேன் உன்பக்கல் வேண்டிப்பெறுவதொரு வரம் இருக்கின்றது: அது எதுவென்றால்,—(என் தம்பியான சுக்கிரீவன்), பூ இயல் நறவம் மாந்தி - மலர்களிலுண்டான மதுவைக் குடித்து, புந்தி வேறு உற்ற போது - அறிவு மாறுபட்டபொழுது, தீ வினை இயற்றும் ஏனும் - கெட்டகாரியஞ் செய்வனாயினும், எம்பிமேல் - அவன்மேல், சீறி - கோபங்கொண்டு, என்மேல் ஏவிய பகழி என்னும் கூற்றினை ஏவல் - என்மேல் (இப்பொழுது நீ) செலுத்திய அம்பாகிய யமனைச் செலுத்தாதிருப்பாயாக, என்றான - என்று (வாலி இராமபிரானை) வரம்வேண்டினான்; (எ - று.)

எம்பிமேல் ஏவல் என்க. இதனால், வாலிக்குத் தம்பியினிடமுள்ள அன்பு விளங்கும். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவுங் கலைத்துக் கலைத்துச் சேர்

திருந்தி மிகவும் அழகியதாக எழுதக்கூடியதாதலால், சித்திரவடிவம், இராமபிரானது அதிசௌந்தரியமுள்ள நிஜவடிவத்திற்கு ஒப்புமையாகக் குறிக்கப்பட்டது. இயற்கையுருவத்திற்குச் செயற்கையுருவத்தையும் செயற்கை யுருவத்திற்கு இயற்கை யுருவத்தையும் ஒப்புமைகுறித்தல் கம்பரியல்பாதலை இந்நூலிற் பிறவிடங்களிலும் காணலாம். சுக்கிரீவன் இயல்பினால் எப்பொழுதும் அறிவுநிலை கலங்கித் தீவினையியற்றுபவனல்ல னென்பது, இரண்டாமடியால் விளங்கும். இலக்காகக் குறிப்பிட்ட பிராணியைக் கொல்லுதலில் தவறாமை பற்றி, 'பகழியென்னுங் கூற்று' எனப்பட்டது; உருவகம். புந்தி - புத்தி: மெலித்தல். (௧௨௭)

[வாலி இராமனை மற்றுமோர் வரம் வேண்டுதல்]

௧௨௮. இன்னுமொன்றிரப்பதுண்டாலெம்பியையும்பிமார்க
டன்முனைக்கொல்வித்தானென்றிகழ்வரேற்றடுத்திதக்கோய்
முன்முனேமொழிந்தாயன்றேயிவன்குறைமுடிப்பதையா
பின்னவன்வினையின்செய்கையதனையும்பிழைக்கலாமோ.

(இ - ள்.) இன்னும் இரப்பது ஒன்று உண்டு - இன்னமும் (யான் உன்னிடம்) வேண்டுவதொரு வர மிருக்கின்றது: (அது என்ன வென்றால்),— எம்பியை - எனது தம்பியை [சுக்கிரீவனை], உம்பிமார்கள் - உன் தம்பியர், தன் முனை கொல்வித்தான் என்று இகழ்வரேல் - தனது தமையனைக் கொல்வித்தவனிவனென்று பழிப்பாரானால், (அப்பொழுது அவர்களை), தக்கோய் தடுத்தி - தகுதியான சிறந்த குணங்களை யுடையவனே! (நீ) தடுத்தருள்வாய்; ஐயா - சுவாமி! இவன் குறை முன் முடிப்பது முனே மொழிந்தாய் அன்றே - இவனுக்கு ஆகவேண்டிய காரியத்தை முதலிற் பூர்த்திசெய்து கொடுப்பதாக முன்னமே (நீ உடன்பட்டு) அருளிச்செய்தாயன்றோ ; பின் - மற்றும், அவன - அச்சுக்கிரீவன், வினையின் செய்கை அதனையும் பிழைக்கல் ஆமோ - ஊழ்வினைப்பயனையும் தப்பமுடியுமோ? [முடியாதன்றோ என்றபடி]; (எ - று.)—ஆல் - அசை.

தக்கோய் - நடுவுநிலைமை முதலிய சற்குணங்களை யுடைய உத்தமனே யென்றபடி. வினையின் செய்கையதனைப் பிழைத்தல் - முற்பிறப்பிற் செய்த கருமங்காரணமாக நேருங் காரியத்திற்கு உள்ளாகாது விலகுதல். 'மற்றும், வினைப்பயன் யார்க்கும் விலக்கவொண்ணாதாதலால் இங்ஙனம் நேர்ந்து விட்டது' என்பது, ஈற்றடியின் கருத்து. இனி, முதலில் உடன்பட்ட பின்பு அவனது காரியத்தின் நிலைமையைப் பிழையாகக் கொள்ளுதல் தகுதியாகாதென்று உரைப்பாருமுளர். தன் முன் - தனது முன்பிறந்தவன்; முன் - காலவாகுபெயர் முனே - முன்னே; தொகுத்தல். (௧௨௮)

[வாலி இராமனுக்கு அனுமனைப்பற்றித் தகவுரைகூறல்.]

௧௨௯. மற்றிலெனினுமாயவரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டுங்குரக்கியற்றொழிலுங்காட்டப்
பெற்றிலென்கடக்தசொல்லிற்பயனிலைப்பிறிதொன்றேனு
முற்றதுசெய்கென்றலுமுரியனிவ்வனுமனென்றான்.

(இ - ள்.) கொற்றவ - வெற்றியையுடையவனே! மற்று இலென் எனினும் - (எனக்கு) வேறொரு பேருதவி யெதனையுஞ் செய்யவல்லனல்லே னாயினும்,—மாயம் அரக்கனை வாலின் பற்றி நின்கண் தந்து - வஞ்சனையை யுடைய ராக்ஷஸராஜனை ராவணனை வாலினாற் சுற்றியெடுத்து உன்னிடத் திற் கொணர்ந்து ஒப்பித்து, குரங்கு இயல் தொழிலும் காட்ட - ஒரு குரங் காகிய எனக்கு இயன்ற தொழிலையாயினும் செய்து காட்ட, பெற்றிலென் - பாக்கியம் பெறாதவனாயினேன்; கடந்த சொல்லின் பயன் இலை - நடந்து போன செய்திகளைச் சொல்லுதலாற் பயனில்லை: உற்றது செய்க என்றா லும் - ஆகவேண்டியதான இச்செயலைச் செய்வாயாக வென்று சொன்னா லும், பிறிது ஒன்று எனும் - வேறொரு செயலைச் செய்கவென்றாலும், (அத னைச் செய்து முடித்தற்கு), இ அனுமன் உரியன் - இந்த ஹநுமான் உரிய வன், என்றான் - என்று (வாலி இராமனை நோக்கிக்) கூறினான்; (எ - று.)

முன்னிரண்டடிகளில், உம்மைகள் - இழிவு சிறப்பு. பின்னிரண்டடி களில், உம்மைகள் - எண்ணுப்பொருளன. கடந்த - இறந்தகாலப் பலவின் பால் வினையாலணையும் பெயர். சொல் - முதனிலைத்தொழிற்பெயர்; இன - ஐந்தனுருபு, ஏது. 'செய்க' என்பது, 'பிறிதொன்று' எனறதனோடும் இயைக் கத் தக்கது. என் - என்னின் என்பதன் மரூஉ. "கற்றார்முற் றோன்றா கழி விரக்கம்" ஆதலாலும், அது கழிந்த நீரகு அணைகோலுதல்போல வீணாகுத லாலும், 'கடந்தசொல்லிற்பயனிலை' என்றான். குரக்கியற்றொழில்-விரைந்து தாவிச்சென்று பற்றி விடாப்பிடியாகக் கொணர்தல். (கக௬)

[வாலி இராமனை நோக்கி மற்றுஞ் சிலகூறுதல்.]

கக௦ அனுமனென்பவனையாழியையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென்றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்னோரனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிக்கோடிவானினுமுயர்ந்ததோளாய்.

(இ - ள்.) ஆழி ஐய - சக்கராயுதத்தையுடைய தலைவனே! அனுமன் என்பவனை - ஹநுமானை, நின் - உனது, செய்ய - அழகிய, செம் கை - சிவந்த கையிலேந்திய, தனு என - வில்லைப் போல, நினைதி - தவறாமல் விரைந்து பகையழித்து (உதவுபவனாக) நினைப்பாய்; மற்று - மற்றும், என் தம்பி - எனது தம்பியான சுக்கிரீவனை, நின் தம்பி ஆக நினைதி - உன், தம்பி யான இலக்குமணனைப் போலவே (மிக்க அன்புடன நினக்குக் குற்றேவல் கள செய்பவனாக) நினைப்பாய்; இன்னோர் அனையவர் ஓர் துணைவர் இலை - இவர்கள் போன்றவர்களான துணையாயுதவுபவர் வேறில்லை; வானினும் உயர்ந்த தோளாய் - வானத்தைக்காட்டிலும் உயர்ந்த [மிகவுயர்ந்த] திருத் தோள்களை யுடையவனே! நீ—, ஈண்டு - இப்பொழுது, அ வனிதையை - அந்தப் பெண்ணை [சீதாபிராட்டியை], நாடி - (இவர்களைக்கொண்டு) தேடி, கோடி - பெறுவாய்; (எ - று.)

செய்ய - செவ்வியையுடைய. 'நின் தம்பி' என்றது - தகுதிபற்றி இலக்குமணனைக் குறித்து; "யாவர்க்குந்தொழுகுலமா மிராமனபின்பு பிறந் தானுமுள னென்னப் பிரியாதான்" என்று (அயோத்தியாகாண்டத்திற்) பரதன் கூறியது காண்க. வநிதா என்ற வடசொல்லுக்கு - கணவனை யடை பவளென்பது பொருள். கோடி - கொள் + இ: ட் - எழுத்துப்பேறு. இராம பிரான் திருமாலின் அவதாரமென்பதை யுணர்ந்தனனாதலால், 'ஆழியைய' என்று விளித்தான்; இனி, ஆழி - ஆஜ்ஞாசக்கரமுமாம். துணைவர் - உதவி செய்பவர். (கநுo)

[பிறகு வாலி சுக்கிரீவனையணைத்துச் சிலகூறத்தொடங்குதல்]

கநுக. என்றவற்கியம்பிப்பின்னரிருந்தனனிளவற்றன்னை
வன்றடக்கைநீட்டிவாங்கினன்றழுவிமைந்த
வொன்றுனக்குரைப்பதுண்டாலுறுதியஃதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய்வருந்தலையென்றுகூறும்.

(இ - ள்.) என்று அவற்கு இயம்பி - என்று (வாலி) அந்த இராமபிரானை நோக்கிச் சொல்லி,—பின்னர் - பின்பு, இருந்தனன் இளவல்தன்னை - அருகி லிருந்தவனாகிய தனது தம்பியான சுக்கிரீவனை, வல் தட கை நீட்டி வாங்கினன் தழுவி - வலிய பெரிய (தனது) இரண்டு கைகளையும் நீட்டிச் சேர்த்து அணைத்துக்கொண்டு,—'மைந்த - பிள்ளாய்! உனக்கு உரைப்பது உறுதி ஒன்று உண்டு - உனக்கு (நான் இப்பொழுது) சொல்வதான நன்மை யொன்று இருக்கின்றது: அஃது உணர்ந்து கோடி - அதனைக் கேட்டறிந்து மனத்திற்கொண்டு அநுட்டிப்பாய்; குன்றினும் உயர்ந்த தோளாய் - மலை களைக்காட்டிலும் உயர்ந்துள்ள தோள்களையுடையவனே! வருந்தலை - (என் மரணத்திற்காக) நீ வருந்தாதே', என்று - என்றுசொல்லி, கூறும் - (மற்றுஞ்) சொல்வான்; (எ-று.)—அதனை, அடுத்த ஆறுகவிகளிற் காண்க. ஆல் - அசை.

இருத்தல் - எங்கித்திகைத் திருத்தல். தமையன் தந்தையோடொப்பவ னாதலால், மகனோடொப்பவனான தம்பியை 'மைந்த' என்று விளித்தான். உறுதி - நிலையான நன்மையைத்தரும் மொழி, இதமொழி. (கநுக)

[இதுமுதல் ஆறுகவிகள் - சுக்கிரீவனுக்கு வாலி உறுதிகூறல்: இதோபதேசம்]

கநுஉ. மறைகளுமுனிவர்யாருமலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந்துணிபொருடுணிவிற்றாக்கி
யறைகழலிராமனாகியறநெறிநிறுத்தவந்த
திறையொருசங்கையின்றியெண்ணுதியெண்ணமிக்கோய்.

(இ - ள்.) எண்ணம் மிக்கோய் - ஆலோசனைமிக்கவனே! மறைகளும் - வேதங்களும், மற்றை துறைகளின் முடிவும் - மற்றைச் சாஸ்திரங்களின்

சித்தாந்தமும், முனிவர் யாரும் - எல்லாவிருடிகளும், மலர்மிசை அயனும் - தாமரைமலரின்மீது வாழ்கின்ற பிரமனும், சொல்லும் - சொல்லுகின்ற, துணி பொருள் - தேர்ந்தபொருளாகிய பரப்ரஹ்மந்தானே, அறம் நெறி நிறுத்த - தர்மமார்க்கத்தை நிலைநிறுத்தச் செய்யும்பொருட்டு, அறை கழல் இராமன் ஆகி - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய இராமனாக அவதரித்து, துணிவில் தாங்கி - (அம்பெய்து பகைவரைத்) துண்டிக்கும் வில்லை யேந்திக் கொண்டு, வந்தது—; (இத்தன்மையை), இறை ஒரு சங்கை இன்றி - சிறிதும் சந்தேகமில்லாமல், எண்ணுதி - மனத்திற்கொள்வாய்; (எ - று)

மறை - நூல். முடிவு - தேர்ந்தகருத்து. சொல்லும் துணி பொருள் - நிச்சயித்துச் சொல்லப்பட்ட பொருள். துணி வில் - வினைத்தொகை. சங்கை - ஶங்கா என்ற வடசொல்லின் விகாரம் இனி, 'இறை ஒரு சங்கை இன்றி' என்பதற்கு - தலைமையான ஒருசங்கத்தை [ஸ்ரீபாஞ்சஜந்யத்தை] (இடக்கையில்) உடையனல்லாமல் என்று பொருள்கொண்டு, அதனை 'துணி வில்தாங்கி' என்றதனோடு இயைப்பினுமாம்; "சங்குறை கரத்தொரு தனிச் சிலைதரித்தான்" என்றார் பாலகாண்டத்திலும். இனி, துணிவின் தாக்கி துணி பொருள் என்று எடுத்து இயைத்து, தெளிவோடு ஆலோசித்து நிச்சயித்த பொருளென்றலு மொன்று. 'இறை' என்பதற்கு-கையில் என்றும் பொருள் கூறலாம்; "இறை வளையாழ்தழீஇ" என்ற சிந்தாமணியிற்போல. எண்ணம் மிக்கோய் - மிக்க ஆலோசனையை யுடையவனே யென்க. மிகுதி-சிறப்பின் மேலதுமாம். தன்னால் அழித்தற்கு அரிய பெரிய பகைவனைத் தவறாது அழிக்கவல்ல நல்துணைவனை நாடியடைந்த அருமையைத் தான் பாராட்டி யமை தோன்ற, 'எண்ணம் மிக்கோய்' என்று விளித்தான். (௧௫௨)

௧௫௩. நிற்கின்றசெல்வம்வேண்டிநெறிநின்றபொருள்களெல்லாங்
கற்கின்றதிவன்றனாமங்கருதுவதிவனைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய்பொதுநின்றதலைமைநோக்கி
னெற்கொன்றவலியேசாலுமிதற்கொன்றுமேதுவேண்டா.

(இ - ள்.) பொன் குன்றம் அனைய தோளாய் - பொன்மயமான மலையை [மகாமேருகிரியை]ப் போல மிகவுயர்ந்து விளங்குகின்ற தோள்களையுடையவனே! நிற்கின்ற செல்வம் வேண்டி - (அழியாமல் எந்நாளும்) நிலைநிற்கின்ற முத்திச்செல்வத்தை யடைய விரும்பி, நெறி நின்ற - அதற்குரிய (யோக மார்க்கம் முதலிய) வழிகளில் நின்ற, பொருள்கள் எல்லாம் - சிறப்புடைப் பொருள்களாகிய (வீடுபெறும் விருப்பமுள்ள) உயிர்கள்யாவும், இவன் தன் நாமம் கற்கின்ற - இவ்விராமபிரானுடைய திருநாமத்தை ஜபிக்கின்றன; இவனை கருதுவ - இவனைத் தியானிக்கின்றன; கண்டாய் - (இதனை) உணர்வாய்; பொதுநின்ற தலைமை நோக்கின் - (இங்ஙனம் விசேஷமாகவன்றி) ஸாமாந்யமாக இவனிடத்துள்ள சிறப்பைப் பார்த்தாலும், (அதற்கு), என் கொன்ற வலியே சாலும் - என்னைக்கொன்றிட்ட இந்த வலிமையே சாக்ஷி போதும்; இதற்கு ஒன்றும் ஏது வேண்டா - இதனைக்காட்டிலும் மேலான காரணமொன்றும் (அதனைச்சாதித்தற்கு) வேண்டுவதில்லை; (எ - று.)

முத்தி, நித்தியமான ஐசுவரிய மாதலால், 'நிற்கின்ற செல்வம்' எனப் பட்டது. அதனைவேண்டிநின்ற பொருள்கள் - முமுக்ஷுக்களான ஆத்மாக்கள். உடம்பையும் உயிரையும் வேறுபிரிதலுக்கூறுமிடத்து அஃறிணையாகக் கூறுதல் இலக்கண மாதலால், 'பொருள்களெல்லாம் கற்கின்ற கருதுவ' எனப்பட்டன. நெறி - ஞானம், யோகம், பக்தி, பிரபத்தி என்ற உபாயங்கள். கண்டாய் - தேற்றம். நிற்கின்றசெல்வம்வேண்டி நெறிநின்றபொருள்களெல்லாம் கறகின்ற இவனதன்நாமம் - "கற்பா ரிராமபிரானையல்லால் மற்றுங்கற்பரோ, புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே, நற்பால யோத்தியில்வாழுஞ் சராசரம்முற்றவும், நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்றநாட்டுளே" என்றார் நம்மாழ்வாரும். தலைமை - முதன்மை. (கஙங)

கஙச. கைதவமியற்றியாண்டுங்கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரு மையா னுயர்நிலைவள்ள
லெய்தவர்பெறுவரென்றாலிணையடியிறைஞ்சியேவல்
செய்தவர்பெறுவதையாசெப்பலாந்தன்மைத்தாமோ.

(இ - ள்.) ஐயா - அப்பா! கைதவம் இயற்றி - வஞ்சனையைச் செய்து, யாண்டும் கழிப்பு அருங் கணக்கு இல் தீமை - எவ்விடத்தும் தீர்த்துக்கொள்ளுதற்கு அருமையான எண்ணிறந்த பாவச்செயல்களை, வைகலும் புரிந்துளாரும் - நாடோறும் செய்துள்ளவர்களா யிருந்தாலும், வள்ளல் எய்தவர் - வரையாதருளுமியல்பினனான இராமபிரானால் அம்பெய்து கொல்லப் பட்டவர், வான் உயர் நிலையை பெறுவர் - மிகவுயர்ந்த தானத்தை [பரம பதத்தை]ச் சேர்வர், என்றால் —, இணை அடி இறைஞ்சி ஏவல் செய்தவர் பெறுவது - (அவனது) உபயபாதங்களை வணங்கி (அவனுக்கு)க்குற்றேவல் செய்தவர் முத்திபெறுவது, செப்பல் ஆம் தன்மைத்து ஆமோ - சொல்ல வேண்டிய தன்மையையுடையதாகுமோ? [அன்றென்றபடி]; (எ - று.)

எம்பெருமானுக்கும் பிறர்க்கும் துரோகஞ்செய்து எண்ணில்லாத தீவினைகளையியற்றியவர்களும் அப்பெருமானால் கொல்லப்படுவாராயின் அத்தண்டனையினால் தமது தீவினைகளெல்லாந்தீர்ந்து முத்திபெறுவ ரென்றால், அவனது இரண்டு திருவடிகளையும் நமஸ்கரித்துப் பயபக்தி விசுவாசங்களுடன் அவனுக்குக் குற்றேவல்செய்தொழுகியவர் முத்திபெறுவ ரென்பது சொல்லவேண்டியதுமுண்டோ? என்பதாம்; தொடர்நிலைச்செய்யுட்பொருட் பேறணி; "பொருளொன் றுரைக்கத் தண்டாபூபிகை, வழக்கால் மற்றொரு வண்பொருள் தோன்றல், தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியே" என அதனிலக்கணங் காண்க. யாண்டும் கழிப்பு அருமை - புண்ணியதீர்த்த ஸ்நானம் ஸ்தலயாத்திரை முதலியவற்றாலும் தீர்க்கவொண்ணாதனவாதல்; மிகக்கொடியன வெனக. யாண்டும் - எப்பொழுதும் எனினுமாம். நல்லோர்க்கேயன்றித் தீயோர்க்கும் வினையனைத்தையுந் தீர்த்து வீடுதந்தருளும் பரமோதாரனாதலால், 'வள்ளல்' என்றார். (கஙச)

கரு௫. அருமையென் விதியினுரே யுதவுவானமைந்தகாலை
யிருமையுமெய் தினுய் மற்றினிச்செயற்பாலதெண்ணின்
றிருமறுமார்பனேவலசென்னியிற்சேர்த்திச்சிந்தை
யொருமையினிறுவிமும்மையுலகினுமுயர்தியன்றே.

(இ - ள்.) விதியினுரே - ஊழ்வினைதானே, உதவுவான் அமைந்த காலை - துணைசெய்தற்குப் பொருந்திய பொழுது, அருமை என - அடைதற்கு அருமையானது யாதுஉளது? [எதுவுமில்லை யென்றபடி]; (ஆகவே), இருமையும் எய்தினுய் - இம்மைமறுமையின்பங்களை யெல்லாம் நீ அடைந்தாய்; இனி செயல் பாலது எண்ணின் - இனிமேல் நீ செய்யவேண்டியது யாதென்று ஆலோசிக்குமிடத்து, திரு மறு மார்பன் ஏவல் சென்னியின் சேர்த்தி - இலக்குமியையும் ஸ்ரீவத்ஸமெனனும் மறுவையும் திருமார்பிலுடையவனுன திருமாலாகிய இவ்விராமனது கட்டளையைத் தலைமேற்கொண்டு, சிந்தை ஒருமையில் நிறுவி - மனத்தை (ச் சஞ்சலப்படாதபடி அக்குற்றேவல செய்த லாகிய) ஒருதன்மையிலே நிற்கச்செய்து, மும்மை உலகினும உயர்தி - மூன்று உலகங்களினும மேமபடுவாய்; (எ - று.)—அன்றே - ஈற்றசை. மற்று - வினைமாற்று; அசை யெனினுமாம.

உனக்கு ஆகூழ்வந்து வாய்த்ததாதலாற் பெறுதற்கரியதொதுவுமில்லையென்பது, முதலடியின் பொருள். அது எவராலுந் தடுத்தற்கரிய பெருவலியினதென்பது, வெளிப்படை. உயர்திக்கொண்டாடுவான், 'விதியினுர்' என்று உயர்திணைப்பலர்பாலாற் கூறினன்; திணைவழுவமைதி. இனி, விதியினுர் - தெய்வம் என இராமபிரானைக் குறித்ததுமாம். இன் - சாரியை. உதவுவான் - எச்சம். சென்னியிற் சேர்த்துதல - சிரஸா வஹித்தல். ஒருமையில் நிறுவி - இறையுணர்வில் நிறுத்தி யெனினுமாம். மும்மையுலகினும் உயர்தி - மூன்று உலகங்களிலுமுள்ள உயிர்களெல்லாவற்றினும் மேன்மையடையக் கடவாய்.

கரு௬. மதவியல்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ள
லுதவியையுன்னியாவியுற்றிடத்துதவுகிற்றி
பதவியைபெவர்க்குநல்குமபண்ணவன்பணித்தயாவுஞ்
சிதைவிலசெய்துநொய்திற்றீர்வருமபிறவிதீர்தி.

(இ - ள்.) மத இயல் - மடமை மிக்க, குரங்கு செய்கை - வாநரவியற்கையையும், மயர்வொடு - மயக்கத்தையும், மாற்றி - ஒழித்து, வள்ளல் உதவியை உன்னி - வரையாதருளும்வலபினனுன இராமபிரான (உனக்குச்) செய்த உதவியை (மறவாமல்) உள்ளத்திற்கொண்டு, உற்ற இடத்து ஆவி உதவுகிற்றி - (அவனுக்காக) வேண்டியசமயத்தில் (உனது) உயிரையும் கொடுக்கக் கடவாய்; (மற்றும), எவர்க்கும் பதவியை நலகும பண்ணவன பணித்த யாவும் சிதைவு இல செய்து (எல்லார்க்கும) உயர்பதவியை அளித்தருளுகின்ற முதற் கடவுளான அவ்விராமபிரான கட்டளையிட்ட செயல்களை யெல்லாம கெடாதனவாகச் செய்து, நொய்தின் தீர்வு அரும பிறவி தீர்தி - எளிதில் நீங்குதற்கு அரிய பிறப்புக்களை எளிதில் நீங்கப்பெறுவாய்; (எ - று.)

'மத' என்பது மடமையுணர்த்துவதோர் உரிச்சொல்லாதலை, "மதவே மடனும் வலியு மாகும்" என்ற தொல்காப்பியத்தா லுணர்க: இது உகரச் சாரியைபெற்று 'மதவு' எனவும் நிற்கும்; "பதவு மேய்ந்த மதவுநடை நல் லான" எனக் காண்க. குரக்குச்செய்கை - திரிகரணங்கள் வரம்புகடந்த விரைவையும் சஞ்சலத்தையும் அடைதல். மயர்வு - இயற்கைப்பேதைமை யாலும் மதுபானத்தாலும் மனம்மயங்குதல், ஒன்றைப் பிறிதொன் ருகத்துணிதல்; ஒடு - எண்ணொடு. உன்னி - கருதி. உற்றஇடத்து - ஆபத்து நேர்ந்தபோது, இடையூறுஉற்றவிடத்து உற்றிடம் - தொகுத்தல். உதவு கிற்றி என்ற ஏவலொருமைமுற்றில், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. 'நொய்தின்' என்றது, 'தீர்வரும்,' 'தீர்தி' என்னும் இரண்டனோடும் இயை யும். சிதைவில - முற்றெச்சம். பதவி - இங்கே, பரமபதம். பிறவிதீர்தல்- முத்திபெறுதல். (கசு௬)

கசு௭. அரசியற்பாரம்பூரித்தயர்ந்தனையிகழாதையன்
மரைமலர்ப்பாதநீங்காவாழுதிமன்னரென்பா
ரெரியனற்குரியாரென்றேயெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம்பொறுப்பரென்றெண்ணவேண்டா.

(இ - ள்.) அரசு இயல் பாரம் - இராச்சியபாரத்தைப் பெற்ற மகிழ்ச்சி யால், பூரித்து - மனம்மிகக்களித்து, அயர்ந்தனை இகழாது - அறிவுகெட்டு (இராமபிரானை) இகழ்ச்சி செய்யாமல், ஐயன் மரை மலர் பாதம் நீங்கா வாழுதி - அப்பெருமானுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை விட்டு நீங்காமல் வாழக்கடவாய்; மன்னர் என்பார் எரி அனற்கு உரியார் என்றே எண்ணுதி - அரசர்கள் பற்றியெரிகின்ற நெருப்பை உவமை கூறுதற்கு உரி யவர்களென்றே நினைப்பாய்; எண்ணம் யாவும் புரிதி - (அங்ஙனம் நினைத்து அஞ்சியொழுகிச் சக்கரவர்த்தித்திருமகனுகிய அப்பெருமான்) நினைத்த காரி யங்களையெல்லாம் (குறிப்பறிந்து) செய்யக்கடவாய்; சிறு அடிமை குற்றம் பொறுப்பர் என்று எண்ணவேண்டா - (அரசர்கள்) சிறிய அடிமைகளின் பிழைகளைப் பொறுப்பரென்று நினைக்கலாகாது; (எ - று.)

"அளையுறைபாம்பு மரசும் நெருப்பும், முழையுறைசீயமு மென்றிவை நான்கும், இளைய எளிய பயின்றன வென்றெண்ணி, இகழி னிழுக்கந்தரும்" என்ற ஆசாரக்கோவையும், "அகலா தணுகாது தீக்காய்வார்போல்க, இகல் வேந்தச்சேர்ந்தொழுகுவார்", "இளையரினமுறைய ரென்றிகழார் நின்ற, ஒளியோ டொழுகப்படும்," "பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங், கெழுதகைமை கேடுதரும்" என்ற திருக்குறட்பாக்களும், 'அவன்பொறுத்து செறும்பொழுதின் அப்பழமைநோக்கிக் கண்ணோடாது உயிரை வெளவுத லான், அவன் வேண்டாதன செய்தற்கு ஏதுவாய கெழுதகைமை கேடுதரு மென்றார். இவைமூன்றுபாட்டானும், பொறுப்பரென்று அரசர்வெறுப்பன செய்யற்க வென்பது கூறப்பட்டது' என்ற பரிமேலழகருரை வாக்கியங்க ளும், "கைவரும்வேந்தனமக்கென்றுகாதலித்த, செவ்விதெரியாதுரையற்க -

ஒவ்வொருகால், எண்மையனேனு மரியன் பெரிதம்மா, கண்ணிலனுள்வெயர்ப் பினான்" என்ற நீதிநெறிவிளக்கமும், 'அரசரும் நெருப்பும் பாம்பும் சரி' என்ற பஞ்சதந்திரமுங் காண்க. அயர்த்தனை - முற்றெச்சம். மறை - முதற் குறைவிகாரம். அனற்கு - அனலென்றற்கு. அடிமை - அடிமையானவர்; உயர்திணைப்பொருள்தரும் அஃறிணைச்சொல். வேண்டா - வேண்டும் என்ற வியங்கோள்முற்றின் எதிர்மறை. (௧௩௭)

[சுக்கிரீவனை வாலி இராமன்கையில் ஒப்பித்தல்.]

௧௩௮ என்னவித்தகையவாயவுறுதிகள்யாவுமேங்கும்
பின்னவற்கியம்பிநின்றபேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்தமற்றிவன்சுற்றத்தோடு
முன்னடைக்கலமென்றுந்தியுயர்கரமுச்சிவைத்தான்.

(இ - ள்.) என்ன - என்று, இ தகைய ஆய - இத்தன்மையனவான, உறுதிகள் யாவும் - இதங்களை யெல்லாம், ஏங்கும் பின்னவற்கு இயம்பி - (தன்மரணத்திற்காக) ஏக்கமடைகின்ற தன்தம்பியான சுக்கிரீவனைநோக்கிக் கூறி,—(பிறகு வாலி),—நின்ற பேர் எழிலானை நோக்கி-எதிரில்நின்ற மிக்க அழகை யுடையவனான ஸ்ரீராமபிரானைப் பார்த்து, 'மன்னவர்க்கு அரசன் மைந்த - (தசரத) சக்கரவர்த்தியின் திருக்குமாரனே! இவன் - இந்தச்சுக்கிரீவன், சுற்றத்தோடும் - (தனது) உறவினத்துடனே, உன் அடைக்கலம் - உனது அடைக்கலப்பொருளாவன்', என்று - என்றுசொல்லி, உந்தி - (அச்சுக்கிரீவனை இராமபிரான்பக்கல்) செலுத்தி, உயர் கரம் உச்சி வைத்தான் - உயரவெடுத்த (தன்) கைகளை(த்தனது) சிரமேற்கொண்டு நமஸ்காரஞ்செய்தான்; (எ - று)—மற்று - அசை.

ஏங்குதல் - இரங்குதல். நின்ற பேரெழிலான் - என்றும் மாறாமல் நிலைநின்ற மகாசௌந்தரியத்தையுடையவனெனினுமாம். மன்னவர்க்கு அரசன்- அரசர்கட்கு அரசன், ராஜராஜன். சுற்றம் - பந்துவர்க்கம்; நட்பினமும், பரிஜனமும், இதில் அடங்கும். அடைக்கலம் - பாதுகாக்கத்தக்க பொருள். உந்தி - தன்னால் தழுவப்பட்டிருந்த சுக்கிரீவனை இராமன் முன்னிலையிற் சேர்த்து என்க; 'உயர் கரம் உச்சிவைத்தான்' என்பதற்கு - (அவவிராமபிரான் இச்சுக்கிரீவனைத் தான்பாதுகாப்பதாக உடன்பட்டு அடைக்கலமாக ஏற்றுக்கொண்டருளினனென்பதற்கு அறிகுறியாகுமாறு அப்பெருமானது சிறந்த வலக்கையைப்பிடித்து (இச்சுக்கிரீவனது) தலையின்மேல் வைத்தனனென்று உரைப்பாருமுளர். பின்னவன் - பின்பிறந்தவன். (௧௩௮)

[பிறகு வாலி சுக்கிரீவனைக்கொண்டு அங்கதனை வருவித்தல்.]

௧௩௯. வைத்தபினுரிமைத்தம்பிமாமுகநோக்கிவல்லே
யுய்த்தனைகொணர்தியென்றானுங்கருமகனையென்ன
வத்தலையவனையேவியழைத்தலினணைந்தானென்ப
கைத்தலத்துவரிநீரைக்கலக்கினான்பயந்தகாளை.

(இ - ள்.) வைத்த பின் - (இவ்வாறு உயர்காரத்தை உச்சி) வைத்தபின்பு, உரிமை தம்பி மா முகம் நோக்கி - உரிய அன்பிற்கு இடமான தன் தம்பியாகிய சுக்கிரீவனது அழகிய முகத்தைப் பார்த்து, 'உன் தன் ஒங்கு அரு மகனை - உன்னுடைய சிறந்த அருமையான புதல்வனை [அங்கதனை], வல்லே உய்த்தனை கொணர்தி - விரைவில் இங்கு அழைத்துக் கொண்டு வருவாய்,' என்ன - என்று சொல்லி, அது தலை அவனை ஏவி - அவ்வங்கதனிருந்த இடத்திற்கு அச்சுக்கிரீவனை அனுப்பி, அழைத்தலின் - (அவனைக்கொண்டு அங்கதனை) அழைத்ததனால், கைத்தலத்து உவரி நீரை கலக்கினன் பயந்த காளை அணைந்தான் - தன்கைகளாற் கடலைக் கடைந்தவனான வாலி பெற்ற குமாரனாகிய அவ்வங்கதன் அங்கு வந்து சேர்ந்தான்; (எ - று)—என்ப அசை.

அங்கதன் - வாலிக்குத் தாரையினிடம் பிறந்த புதல்வன். தம்பியினிடம் தான் கொண்ட அன்புரிமையால் ஒற்றுமை நயப்படுத்தி, 'உன் தன் மகனை' என்றான்; இதுவரையில் யான் பாதுகாத்ததுபோலவே இனி நீ அவனைக் காக்கவேண்டுமென்று குறிப்பித்தற்கு இவ்வாறு கூறினனுமாம். அத்தலை - அவ்விடம்; அப்பொழுது எனினுமாம். இலக்கணையாய் 'உவரி' என்பது பாற்கடலையும், 'நீர்' என்பது - பாலையுங் குறித்தன. 'தந்தையைப் பான் மைந்தன்' என்றபடி வாலிபோலவே பலபராக்கிரமங்கள் சிறந்தவனங்கதனென்பது தோன்ற, 'கைத்தலத்து வரிநீரைக் கலக்கினன் பயந்த காளை' என்றார். காளை - இளவெருது போன்ற இளவீரன்; உவமையாகுபெயர்: நடை வலிமை காம்பீரியங்களால் உவமை. மா முகம் - கம்பீரமான முகம், பொலிவு பெறும் முகம். உய்த்தல் - செலுத்துதல். (க௩௯)

[வந்த அங்கதன் வாலியைக் காணுதல்.]

க௪௰. சுடருடைமதியமென்னத்தோன்றினன்றோன்றியாண்டு
மிடருடையுள்ளத்தோரையெண்ணினுமுணர்ந்திலாதான்
மடருடைநறுமென்சேக்கைமலையன்றியுதிரவாரிக்
கடரிடைக்கிடந்தகாதற்றாதையைக்கண்ணிற்கண்டான்.

(இ - ள்.) இடர் உடை உள்ளத்தோரை - துன்பமுள்ள மனத்தையுடையவரை, யாண்டும் - எவ்விடத்தும் [எப்பொழுதும்], எண்ணினும் உணர்ந்திலாதான் - மனத்தினால் அறிந்துமில்லாதவனான அங்கதன், சுடர் உடை மதியம் என்ன தோன்றினன் - ஒளியையுடைய பூர்ணசந்திரன் (உதித்தாற்) போல அங்கு வந்து சேர்ந்தான்; தோன்றி - (அங்ஙனம்) வந்து,—மடர் உடை நறு மென் சேக்கை மலை அன்றி - பூவிதழ்களினாலாகிய வாசனை வீசுகின்ற மென்மையான படுக்கையாகிய மலையினமீதன்றி, உதிரம் வாரி கடர் இடை - இரத்தப்பெருக்காகிய கடலினிடையே, கிடந்த - படுத்துக் கொண்டிருக்கின்ற, காதல் தாதையை - அன்புக்கு உரிய தன்தந்தையான வாலியை, கண்ணின் கண்டான் - கண்களாற் பார்த்தான்; (எ - று.)

வாலியின் அரசாட்சியின்கீழிருந்த கிஷ்கிந்தாபுரி முழுவதிலும் எப்பொழுதும் எவரும் எக்காரணத்தாலேனும் வருத்தமுற்றதில்லையாகவே, அங்கதன் பிறந்த நாள்முதல் அன்பமுற்ற மனத்தவரைக் கண்களாற் பார்த்தில

னாதலால், இடருடையுள்ளத்தோர் இன்னவாறிருப்பரென்று மனத்தினு ணர்ந்தானுமில்லை யென்க. 'எண்ணினும்' என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சத்தோடு, இழிவு சிறப்பு. சுடருடைமதி - கலைகள்நிறைந்த சந்திரன். அம் - சாரியை. இனி, 'தோன்றினன்' என்பதைப் பெயராகக்கொண்டு, (வாலியினுற் கடையப்பட்ட பாற்கடலினின்று) ஒளியுள்ள சந்திரன் (தோன்றினாற்)போல (வாலியின் மகனாய்த் தாரையினிடமிருந்து) தோன்றியவனை அங்கதனென்று உரைத்தலுமொன்று. வாலி மேனிநிறத்தினுற் சந்திரன் போல்வனென்பது, மராமரப்படலத்தின் அ௩-ஆஞ் செய்யுளிற் கூறப்பட்டது; இனி வரும் அடுத்த செய்யுளிலும் காண்க. தந்தையொடொப்பான் மைந்தனாதலால், இங்கு அங்கதனுக்குச் சந்திரனை உவமைகூறினார். மடருடை நறுமென் சேக்கை - புஷ்பசயநம், மலர்ப்பள்ளி. இனி, மடர் உடை-பூவிதழ் களையுடைய [அதாவது - காம்பரிந்தமலர்களை மேலே பரப்பிவைக்கப்பெற்ற] என்றும் பதப்பொருள் கூறலாம். அப்படுக்கையின் உயர்வுபற்றி 'மலை' என்றார். உதிரவாரி-செந்நீர். இயல்பாக மிகவுயர்ந்த மலர்ப்பள்ளியின்மீது பள்ளி கொண்டிருத்தலைவிட்டுப் புதுமையாக இரத்தவெள்ளத்தினிடையே விழுந்து கிடந்த தாதையைக் கண்டனனென்க; மலைமீது படுப்பதைவிட்டுக் கடலிடையே கிடந்தனன். மனத்தினுற் காணுதலும் உளதாதலின், அதனினின்று பிரித்தற்கு 'கண்ணிற்கண்டான்' என்றார். துன்பங்கொண்ட மனமுடையவரெவரையும் எங்கும் எப்பொழுதும் மனத்தினாலும் அறியாதவனை அங்கதகுமாரன் இரத்தக்கடலிற்கிடந்து மிகவருந்துகின்ற உள்ளத்தையும் உடலையுமுடைய தனது பிராணபதமான தந்தையைத் தன்கட்புலனுகக் கண்டானென, இரக்கந்தோன்றக் கூறினார். தாதை - தாத என்ற வடசொல்லின் விகாரம். மடல் கடல் என்பன - எதுகை நோக்கி, மடர் கடர் என லகரரகரப்போலி பெற்றன; பந்தர், சாம்பர் என்பன போல (௯௪0)

[கண்ட அங்கதன் வாலியின்மேல் விழுதல்.]

௯௪௧. கண்டனன் கலுழிநீருங் குருதியுங் காலைமாலைக்
குண்டலமலம்புகின்ற குவவுத்தோட் குரிசிறிங்கண்
மண்டலமுலகில்வந்து கிடந்ததம்மதியின்மீதா
விண்டலந்தன்னினின் றோர்மீன் விழுந்தென்னவீழ்ந்தான்.

(இ - ள்.) காலை மாலை - சூரிய சந்திரர்போல, குண்டலம் அலம்புகின்ற-குண்டலமென்னுங் காதணி அசைந்து விளங்கப்பெற்ற, குவவு தோள் - திரண்ட தோள்களையுடைய, குரிசில் - அங்கத குமாரன்,—கண்டனன் - (அங்ஙனம் தந்தையைப்) பார்த்து,—கலுழி நீரும் குருதியும் - (தன் கண்களினின்று பெருகுகின்ற) கலக்கமுள்ள கண்ணீரும் இரத்தமுமாய், திங்கள் மண்டலம் (விண்தலந்தன்னினின்று) உலகில் வந்து கிடந்தது - சந்திரமண்டலம் வானத்திலிருந்து நிலவுலகத்தில் வந்துவிழுந்து கிடந்ததாக, அ மதியின் மீது ஆ - அந்தப் பூர்ணசந்திரன்மேலே விண்தலந்தன்னினின்று ஓர் மீன் விழுந்து என்ன - வானத்திலிருந்து ஒருநக்ஷத்திரம் விழுந்தாற்போல, வீழ்ந்தான் - (தரையில் விழுந்து கிடக்கின்ற அந்த வாலியின்மேல் தான் சோகத்தால்) விழுந்திட்டான்; (எ - று.)

கலுழிநீர் - கலங்கல்நீர்; கலுஷ என்ற வடசொல்லின் விகாரம். சோக மிகுதியாற் கண்ணீரோடு குருதியும் கண்களினின்று வெளிப்பட்டது. இலக்கணையால், 'காலை' என்பது - காலையில் உதித்துவிளங்குஞ் சூரியனையும், 'மாலை' என்பது - மாலைப்பொழுதில் உதித்துவிளங்கும் பூர்ணசந்திரனையுங் குறித்தன. ஒளிமிகுதியும் வட்டவடிவும்பற்றி, சூரியசந்திர மண்டலங்கள் - குண்டலங்கட்கு உவமை. இனி, காலை மாலை என்றவற்றை உதயபர்வதம் அஸ்தமநபர்வதம் என்றுகொண்டு, அவற்றைத் தோள்கட்கு உவமையாக்கி யுரைத்தலுமாம். ஆ - ஆக என்பதன் விகாரம்; இதனை இங்கு அசையென்னலாம். மீன் - விண்மீன். முன்னிரண்டடிகளில் உவமையணியும், பின்னிரண்டடிகளில் தற்குறிப்பேற்றவணியும் சேர்ந்ததனால், சேர்வையணி. 'கால' என்று பாடமோதி, கானயாறுபோல நீர்ப்பெருக்கையும் இரத்தத்தையும (கண்கள்) தொடர்ச்சியாய்ச் சொரியவென்று உரைப்பாருமுளர்; மாலை - இடையறாத தொடர்ச்சிக்கு இலக்கணை. காதிலணிந்த குண்டலங்கள் தோளளவுந் தொங்குதலால், 'குண்டலமலம்புகின்ற குவவுத்தோள்' என்றார். குரிசில் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர். (கசக)

[இதுமுதல் நான்குகவிகள் - வாலியைக்குறித்து அங்கதன் புலம்பல்.]

கசஉ. எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்குஞ்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றம்
வந்ததேயன்றேவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார்.

(இ - ள்.) எந்தையே எந்தையே - எனதந்தையே! எனதந்தையே!! இ எழு திரை வளாகத்து - மேலெழுகின்ற அலைகளையுடைய கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்தில், யாராகும் - எவர்க்கும், சிந்தையால் செய்கையால் ஓர் தீவினை செய்திலாதாய் - மனத்தினாலும் செய்கையினாலும் ஒருதீங்கையுஞ் செய்யாதவனே! நொந்தனை - (அங்ஙனமிருந்தும் நீ இவவாறு) துன்பமடைந்தாய்!! அது தான நிற்க - அது அப்படியிருக்கட்டும்; நின முகம் நோக்கி கூற்றம் வநததே அனறே - உனது முகததைப் பாரததும் (அஞசாமல்) யமன் (உன்னிடத்திலும்) வந்துவிட்டதேயனறே; (இனி), அஞசாது அதன வலியை தீர்ப்பார் ஆர்- அச்சங்கொள்ளாமல் அதன்வலிமையை யொழிக்கவல்லவர் வேறு யாவருளர்! [எவருமிலலை யெனறபடி]; (எ - று.)

'எந்தையே எந்தையே' எனற விளியடுக்கு, புலம்பல்பற்றி வந்தது. எழுதிரை - வினைத்தொகையன்மொழியாய், கடலைக்குறிததது. இனி, 'எழுதிரை' என்பதைப் பண்புத்தொகையாகக்கொண்டு, எழுகடல்கள் சூழ்ந்த நிலவுலக மென்றலுமாம்; இப்பொருளில், திரை - கடலுக்குச் சினையாகு பெயர். வளாகம் - சூழப்பட்ட இடம். திரிகரணங்களுள் ஆதிகாரணமான மனத்தையும, பிற்பட்ட காரியமான செய்கையையுங் கூறவே, இடைப்பட்டதான சொல்லினாலும் எவர்க்குந் துன்பஞ் செய்யாதவனென்பது போதரும். சிந்தையால் தீவினைசெய்தல் - பிறர்க்குத தீங்குசெய்யுமாறு மனத்தினால் நினைத்தல். 'நொந்தநெஞ்சன்' என்றும், 'வலிமைதீர்ப்பார்' என்றும் பாடமுண்டு. (கசஉ)

கசரு. தறையடித்ததுபோற்றீராத்தகையவித்திசைகடாங்குங்
கறையடிக்கழிவுசெய்தகண்டகனெஞ்சமுன்ற
னிறையடிக்கோலவாலினிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றதந்தப்பயமறப்பறந்ததன்றே.

(இ - ள்.) தறை அடித்தது போல் - ஆணியடித்தாற்போல, தீரா தகைய - இடம் விட்டுப் பெயராததன்மையை யுடையனவாக, இ திசைகள் தாங்கும் - இந்த எட்டுத் திக்குக்களையும் (கீழிருந்து) தாங்குகின்ற, கறை அடிக்கு -(எட்டுத் திக்) கஜங்களுக்கும், அழிவுசெய்த - தோல்வியை விளைத்த, கண்டகன் - கொடியவனான இராவணனது, நெஞ்சம் - மனம், உன்தன் நிறை அடி கோலம் வாலின் நிலைமையை உன்னும்தோறும் - உனது பருத்த அடியை யுடைய அழகிய வாலின் தன்மையை நினைக்கும்பொழுதெல்லாம், பறை அடிக்கின்றது - பறையடிக்கின்றதுபோலப் படபடவென்று துடிதுடிக்கின்றது; அந்த பயம் - அந்த அச்சம், அற பறந்தது அன்றே - (இப்பொழுது நீ இறத்தலால் இனி) முழுவதும் போய்விட்டதன்றோ! (எ - று.)

திசைகள் தாங்கும் கறையடி - எட்டுத் திசைகளிலும் கீழிருந்து நிலவுலகத்தைத் தாங்கும் யானைகள். 'தறையடித்ததுபோல் தீராத்தகைய' என்றது - அவ்யானைகள் இடம் விட்டுப் பெயராமல் ஒரு நிலையில் நிற்றற்கும், நிலவுலகம் எட்டுத்திசையிலும் நிலைபெயராமைக்கும் உவமையாகத் தக்கது. கறை அடி - உரல்போன்ற கால்களை யுடையது என உவமைத்தொகையன்மொழியாய் யானையைக் குறிக்கும். திக்கஜங்களை இராவணன் வென்றது, திககுவிசயகாலத்தி லென்க. கண்டகம் - வடசொல்: முள்; அதுபோலப் பிறர்க்கு உபத்திரவஞ் செய்பவன், கண்டகன். இராவணனை வாலி வாலினாற் கட்டி வலியடக்கிக் கர்வபங்கஞ் செய்தது, மராமரப்படலத்தின் எக, அக-ஆஞ் செய்யுள்களிற் கூறப்பட்டது; உத்தரகாண்டத்து வாலி வாலாற்கட்டுண்ட படலத்திற் பரக்கக்காணலாம். ஆகவே, இராவணன் அவ்வாலியினது வாலின வலிமை நிலையை நினைக்குந்தோறும் அச்சத்தால் அவன்மனம் மிகத் துடிக்கின்றதென்க. பறையடித்தல் இப்பொருளதாதலை, "பந்தடிக்குந்தொறும் நெஞ்சம் பறையடிக்கின்றது" எனச் சடகோபரந்தாதியிலும், "இருவர்மாமனமும் பறையறைந் தயர்வுடனடங்க" என வில்லிபுத்தூரார் பாரதத்திலுங் காண்க; "நெஞ்சு பறைகொட்ட" என்றார் பிறரும். பயம் - வடசொல். 'கறையடிக்கிழிவுகண்ட', 'நினையுந்தோறும்' என்பன, பாடாந்தரம். (கசரு)

கசச. குலவரைநேமிக்குன்றமென்றவானுயர்ந்தகோட்டின்
றலைகளுநின்பொற்றோளிற்றழும்பினித்தவிர்ந்தவன்றே
மலைகொளுமரவுமற்றும மதியமும்பலவுந்தாங்கி
யலைகடல்கடையவேண்டினாரினிக்கடைவரையா.

(இ - ள்.) ஐயா - அப்பா!—குலம வரை - (அஷ்ட) குலபர்வதங்கள், நேமிக் குன்றம் - சக்கரவாளகிரி, என்ற - என்று பெயர் சொல்லப் பட்டு, வான் உயர்ந்த - ஆகாயத்தையளாவி யுயர்ந்துள்ள, கோட்டின் - மலைகளின்,

நிலைகளும் - சிகரங்களும், இனி - இனிமேல், நின் பொன் தாளின் தழும்பு தவிர்ந்த அன்றே - உனது அழகிய பாதங்களை வைத்தலா லாகுஞ் சுவட்டை நீங்கினவன்றோ! மலை - (மந்தர) கிரியையும், கொளும் அரவும் - (கடை கயிறாகக்) கொண்ட (வாசுகியென்னும்) பாம்பையும், மற்றும்—, மதியமும்- (அடை தூணாகக் கொண்ட) சந்திரனையும், பலவும் - (ஸ்ரீகூர்மமாகிய அடை கல் ஓஷதிகள் முதலிய) பல உபகரணங்களையும், தாங்கி - கொண்டு, அலை கடல் கடைய வேண்டின் - அலையெறிகின்ற பாற்கடலைக் கடைந்துதருமாறு (தேவர்கள்) பிரார்த்தித்தால், இனி ஆர் கடைவர் - (நீ இறந்தொழிதலால்) இனிமேல் வேறுயார் கடைந்து உதவமாட்டுவர்! [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)—அன்றே - தேற்றம்.

மகாபலசாலியான வாலி ஒன்றினின்று ஒன்றாகப் பலமலைகளில் தாவிக் குதிக்கும் போது அவன்கால்கள் அழுந்துதலால் அம்மலைச்சிகரங்கள் தழும் படைந்திருந்தன வென்க. 'என்று' என்றதை எண்ணுப்பொரு ளிடைச் சொல்லாக்கி, குலவரையென்றதனோடும் இயைத்தலுமாம்; [நன் - இடை- ௧௦.] கொளும் - கொள்ளும்: தொகுத்தல். (௧௭௪)

௧௭௫. பஞ்சின்மெல்லடியாள்பாகன்பாதுகமல்லயாவு
மஞ்சலித்தறியாச்செங்கையாணையாயமரர்யாரு
மெஞ்சலிருந்தாருன்னாலின்னமுதீந்தநீயோ
துஞ்சினைவள்ளியோர்கணின்னின்யார்சொல்லற்பாலார்.

(இ - ள்.) பஞ்சின மெல் அடியாள் பாகன பாதுகம் அல்ல யாவும் அஞ் சலித்து அறியா - பஞ்சுபோல் மென்மையுள்ள பாதங்களை யுடையவளான அம்பிகையைத் தனது திருமேனியின் இடப்பககத்தில் கொண்டவனாகிய சிவபிரானது திருவடிநிலைகளை (த தொழுவதே யன்றி அச்சிவபாதுகை யல்லாத (மற்றவை) எவற்றையுங் கும்பிட்டறியாத, செம் கை - சிவந்த கைகளை யுடைய, ஆணையாய் - ஆஜ்ஞாசக்கர முடையவனே! உன்னால் - நீ கடல் கடைந்து அமிருதங் கொடுக்கப் பெற்றதனால், அமரர் யாரும் எஞ்சலர் இருந்தார் - தேவர்களெல்லாரும் இறந்து குறையாதவர்களாய் நின்றார்கள்; (அங்ஙனமிருக்க), இன் அமுது ஈந்த நீயோ துஞ்சினை - இனிமையான அமிருதத்தை (அவர்கட்கு)க் கொடுத்த நீயோ இறக்கின்றாய்; (ஆகவே), நின்னின வள்ளியோர்கள் சொல்லல் பாலார் யார் - உன்னைப் போல வண் மையை யுடையவராகச் சொல்லத் தக்கவர் யாவருளர்! [எவரு மில்லை யென்றபடி.]; (எ - று.)

வாலியின் சிவபக்தி, மராமரப்படலத்தின் ௪௫, ௪௮ - ஆஞ் செய்யுள் களிலுங் கூறப்பட்டது. தனக்குக்கிடைத்த அமிருதத்தைத் தான் உண்டு அதனால் அழிவின்றி உயிர்வாழாது அதனைத் தேவர்கட்குக் கொடுத்து அவர் களை அமரராக்கிய வண்மை மிகவும் அரியசெயலாதலால், அதனைப் பாராட் டிப் புலம்பினன். (பிற்காலத்தில் அதிகமானென்னும் வள்ளல் தனக்கு அரு மையாகக் கிடைத்ததும் உண்டால் நீடூழிகாலம் உயிர்வாழத் தக்கதுமான அமிருதத்தன்மையமைந்ததொரு மிக இனிய கருநெல்லிப்பழத்தைத் தான்

உண்ணுது அதனை ஔவையார்க்குக் கொடுத்து அவளை நெடுங்காலம் உயிர் வாழ்ந்திருக்கச் செய்தமை, இங்குக் கருதத்தக்கது.)

பஞ்சின மெல் அடி - செம்பஞ்சுக்குழம்பு பூட்டிய மென்மையான பாத மெனினுமாம். பாதுகம் - பாதுகா என்ற வடசொல்லின் விகாரம்; மிதியடி. ஆணையாய் - எங்குந்தவறாத கட்டளையை யுடையவனே யென்றபடி. நீயோ, ஓ - தெரிநிலை. 'அடியான் பங்கன பதயுகமலதியாதும்', எனவும், 'பதமல ரலது' எனவும் பாடம். வள்ளியோர்-வண்மை யென்ற பண்பினடியாப்பிறந்த பெயர்; இ - சாரியை. அஞ்சலித்தல் - கைகூப்பித்தொழுதல். (கசரு)

[வாலி அங்கதனைத் தழுவித் தேறுதல் கூறல்.]

கசசு. ஆயனபலவும்பன்னியழுங்கினன்புழுங்கிநோக்கித்
தீயுறுமெழுகிற்சிந்தையலமரவருஞ்செங்கணவாலி
நீயினியயாவாயல்லையென்றுதனெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்தநல்வினைப்பயனிதென்றான்.

(இ - ள்.) ஆயன பலவும் பன்னி - இவ்வாறாகிய பலவார்த்தைகளையும் அடுத்தடுத்துச்சொல்லி, அழுங்கினன் - (அங்கதன்) அழுதான; நோக்கி - (அதனைப்) பார்த்து, புழுங்கி - தவித்து, தீ உறு மெழுகின - நெருப்பில் விட்ட மெழுகு போல, சிந்தை அலமவரும - மனம் நெகிழ்ந்து உருகுகின்ற, செம கண வாலி - (கலக்கத்தால்) சிவந்த கணகளையுடைய வாலியானவன, (அந்த அங்கதனை நோக்கி), இனி நீ அயாவாய் அலலை என்று - 'இனி நீ வருந்தக் கடவாயலலை' என்று சொல்லி, தன நெஞ்சின புல்லி - தனது மனப்பூர்வமாக [உணமையான அன்புடனே] (அவனை) அணைத்துக்கொண்டு, நாயகன இராமன செய்த நல் வினை பயன இது என்றான் - '(எல்லாப் பொருள்கட்குந்) தலைவனான இராமபிரான செய்த புண்ணியத்தின் பயன இது' என்று கூறினான்; (எ - று.)

புழுங்குதல் - தாபங்கொள்ளுதல். அலம்வருதல - கலக்கமடைதல். அலம் - சஞ்சலம். நாயகன - "பூதநாயகன புவிமகள நாயகன பொருவில், வேதநாயகன" எனக் காண்க மூவுலகங்களையும் வென்றிட்ட இராவணனை வென்றவனான தன்னை வெல்லுதல் மிக்க புண்ணியத்தின பயனாலன்றிக் கூடாதெனனுங் கருத்தால், 'இராமன செய்த நல்வினைப்பயன் இது' என்றான். 'இது' என்றது, தன்னைக் கொல்லுதலை. இனி, இராமன் செய்த நல்ல காரியத்தின பயன் இதுவென்று உரைத்தலுமாம; இவ்வுரைக்கு, 'நல்வினை' என்றது, தன்மேல் அம்பெய்ததை: அது தான முத்திபெறுதற்குக் காரண மாதல்பற்றி, அதனை 'நல்வினை' எனக் கொண்டாடுகின்றனனென்க. இதன திறம், அடுத்தகவியில் விளங்கும். தன நெஞ்சின புல்லி - தன மார்போடு அணைத்து எனினுமாம; நெஞ்சு - தானியாகுபெயர். (கசசு)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அங்கதனுக்கு வாலி அறிவுகூறியன.]

கசஎ. தோன்றலுமிறத்தலுந்துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்தினோர்க்குமூலத்தேமுடிந்தவன்றே

யான்றவமுடைமையாலிவ் விறுதிவந் திசைந்த தியார்க்குஞ்
சான்றெனநின்றவீரன்றான்வந்துவீடுதந்தான்.

(இ - ள்.) துகள் அற - (ஐபந்திரிபுகளாகிய) குற்றங்க ளில்லாமல், துணிந்து நோக்கின் - நிச்சயித்துப் பார்க்குமிடத்து,—தோன்றலும் இறத்தல் தானும் - பிறத்தலும் இறத்தலும், மூன்று உலகத்தினோர்க்கும் - மூன்று வகைப்பட்ட உலகங்களிலுள்ளவரெல்லார்க்கும், மூலத்தே முடிந்த அன்றே- தொன்றுதொட்டே யமைந்துள்ளனவன்றோ? யான் தவம் உடைமையால்- நான் முன்புசெய்த தவத்தை யுடைமையால், இ இறுதி வந்து இசைந்தது - இத்தன்மையான நன்மரணம் (எனக்கு) வந்து வாய்த்தது: யார்க்கும் சான்று என நின்ற வீரன் - எல்லார்க்கும் சாக்ஷியாய் நிற்கின்ற மகாவீரனான இராம பிரான், தான் வந்து வீடுதந்தான் - தானே என்பக்கல் எழுந்தருளி (எனக்கு) முத்தி தந்தருளினன்; (எ - று.)

'துகளறத் துணிந்து நோக்கின்' என்றதை, "கற்க கசடற" என்றாற் போலக் கொள்க. 'துணிந்து நோக்கின்' என்றதை 'நோக்கித் துணியின்' என விகுதிபிரித்துக் கூட்டலாம். முதலிரண்டடி - மூன்று உலகங்களிலு முள்ளாரனைவர்க்கும் ஜநநமரணங்கள் தொன்றுதொட்டு இயல்பாக விருத்தலால் என் மரணத்தைக் குறித்து நீ வருந்தவேண்டாவென்று யாக்கை நிலையாமையையும் உலகியலையுங் கூறி மகனைத் தேற்றுகின்றவாறும். இனி, பிறத்தலும் இறத்தலும் அவரவர்க்கு ஆதிகாலத்திலேயே [கருவாய்ப் பதிகின்ற பொழுதே] அவரவரது பூர்வஜந்ம கர்மத்திற்கு ஏற்றபடி அமைந்திட்டன வன்றோவென்று பொருள்கொள்ளலுமாம்; "அளந்தன போகமெல்லா மவரவர்க் கற்றைநாளே, யளந்தனவாழுநாளும்." "சாதலும் பிறத்தல்தானுந் தம்வினைப்பயத்தினாகும், ஆதலுமழிவுமெல்லா மவைபொருட் கியல்புகண்டாய், நோதலும் பரிவுமெல்லாம் நுண்ணுணர் வின்மையன்றே" என்ற சிந்தாமணி, இங்கு ஒப்புநோக்கத்தகும். சிறப்புப்பற்றி 'உலகத்தினோர்' என உயர்திணை மேல் வைத்துக்கூறினாராயினும், உபலக்ஷணத்தால், அஃறிணை யுயிர்களையுங் கொள்க. பிறந்த உயிர் என்றைக்கேனும் எவ்வாற்றாலேனும் இறக்கவேண்டியதாயினும், எனக்கு இப்பொழுது இராமன்கையால் மரணம் நேர்கின்றது, யான்செய்த மாதவத்தின் பயனேயாம்: ஏனெனில், உடனே வீடுபேறுவாய்க்கின்றதனாலென்பது, பின்னிரண்டடியின் பொருள். உலகத்து உயிர்கள் யாவுஞ் செய்யும் கருமங்களையெல்லாம் ஸர்வாந்தர்யாமியான எம்பெருமான் தவறாது உணர்தலால், 'யார்க்கும் சான்றென நின்ற வீரன்' என்றான். திருமாலின் ஸஹஸ்ரநாமங்களுள் 'ஸாக்ஷி' என்பது ஒரு திருநாமமாதலுணர்க: "வஞ்சித்த, எங்குமுள னொருவன் காணுங்கொலென்றஞ்சி" என்றார் பின்னோரும். (௧௭௭)

௧௭௮. பாலமைதவிர்நீயென்சொற்பற்றுதியென்னின்ஐய
மேலொருபொருளுமில்லாமெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்றுகட்புலக்குற்றதம்மா
மால்தரும்பிறவிநோய்க்குமருந்தெனவணங்குமைந்த.

(இ - ள்.) ஐய - அப்பா! மைந்த - பிள்ளாய்! பாலமை தவிர் நீ - மிக்க இளமைப்பருவத்தின் தன்மையைக் கடந்த நீ, என் சொல் பற்றுதி என்னின் - (தந்தையான) எனது வார்த்தையை விடாமற் கொள்வாயானால்,— மேல் ஒரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்-(தன்னினும்) மேன்மையாக ஒருபொருளும் இருக்கப்பெறாத தத்துவப் பொருளாகிய பரப்ரஹ்மந்தானே, கால் தரை தோய நின்று - (தன்) கால்கள் நிலத்திற்படும்படி (மனிதவடிவங் கொண்டு) நின்று, வில்லும் தாங்கி - ஒரு வில்லையுங் கையில் ஏந்திக்கொண்டு, கண் புலக்கு உற்றது - (நமது) கண்ணின் புலனுக்கு [காட்சிக்கு] விஷயமாயிற்று; அம்மா - ஆச்சரியம்! மால்தரும் பிறவி நோய்க்கு - மயக்கத்தைச்செய்கின்ற பிறப்புக்களாகிய வியாதிகளைப் பற்றற வொழித்தற்கு, மருந்து - தக்க ஔஷதமாகும் (அது), என - என்று எண்ணி, வணங்கு - (அவ்விராமமூர்த்தியை) நமஸ்கரிப்பாய்; (எ - று.)

பாலமை - பாலர்தன்மை; பாலர் - மிக இளையோர், ஏழுபிராயத்திற்கு உட்பட்ட பருவத்தினர். 'பாலமைதவிர்' எனத் தனியே எடுத்து, பால்ய குணத்தை நீ விட்டிடு வென்று உரைப்பாருமுளர். பற்றுதியென்னின் என வணங்கு என்று இயையும். மெய்ப்பொருள் - உண்மைப்பொருள், பரம்பொருள், பரதத்வம். கால்கள் நிலத்தில் தோயாமை தேவர்கட்கு இயல்பாதலை, "கால்நிலந் தோயாக் கடவுள்" என்றதனாலும் உணர்க. "அடிகள் காசினியில் தோய்தலால்", "இருநிலஞ் சேவடியுந்தோயும்" எனப் பிறரும் கால்நிலந்தோய்தலைத் தெய்வமன்மையுணர்ந்து மனிதரென்று துணிதற்குக் காரணமாகக் கொண்டமை காண்க. 'மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருள் கால்தரைதோய நின்று' என்றது, பரத்வத்தை இருந்தது தெரியாதபடி விட்டுச் சௌலப்பியத்தை மேற்கொண்டு என்றவாறும். 'வில்லுந் தாங்கி' என்றது, துஷ்ட நிக்ரஹ சிஷ்டபரிபாலநஞ் செய்து தருமத்தைப் பாதுகாத்தற்குச் சித்தனாய் நிற்றலைக் காட்டும். கட்புலக்கு உற்றது - நமது கண்ணுக்கு இலக்காயிற்று; நம்மாற் காணப்படுவதாயிற்று என்றபடி. அம்மா - வியப்பிடைச்சொல். அமரர்க்குங் காணுதற்கரிய பரம்பொருள் எளியேமான நமக்குக் கட்புலனாவதே! என்று அதிசயித்ததாம். புலக்கு - புலத்துக்கு: அத்துச்சாரியை தொக்கது; "நிலக்கு" "வையக்கு", "மாடக்கு" என்ற விடங்களிற் போல. மால்தரும் பிறவி - அவாவினாலுண்டாகும் பிறப்புக்களெனினுமாம்; "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்றார் பிறரும்.

'கால்தரை', 'மால்தரும்' என்ற விடங்களில் இடைநிலைமெய்ம்மயக்கம் இலதாகவும் சந்திபெறாது இயல்பாய் நின்றது, எதுகைத்தொடையின் பொருட்டென்க; மராமரப்படலத்தில் (கூஅ) "நீல்நிறத்து" என்றாற்போல.

கசகூ. என்னுயிர்க்கிறுதிசெய்தானென்பதையிறையுமெண்ணாது
தன்னுயிர்க்குறுதிசெய்திபிவற்கமருற்றதுண்டேற்
பொன்னுயிர்த்தொளிரும்பூணுப்போது திநிலைமைநோக்கி
மன்னுயிர்க்குறுதிசெய்வான்மலரடிசமர்துவாழ்தி.

(இ - ள்.) பொன் உயிர்த்த ஒளிரும் பூணும் - பொன்னாற் செய்யப்பட்டுவிளங்குகின்ற ஆபரணங்களையுடையவனே! என் உயிர்க்கு இறுதிசெய்தான என்பதை இறையும் எண்ணாது - எனது உயிர்க்கு அபாயத்தைச்செய்தான் (இவ்விராமன்) என்பதைச் சிறிதும்மனத்திற்கொள்ளாமல், உன் உயிர்க்கு உறுதி செய்தி - உனது உயிர்க்கு நிலையான நன்மையைச் செய்துகொள்ளக்கடவாய்: (அதாவது),—இவற்றை அமர் உற்றது உண்டேல் இவனுக்குப் (பகைவரோடு) போர்நேர்ந்ததானால், போதி - (நீயும்) துணைசெல்வாய்; மன் உயிர்க்கு நிலைமை நோக்கி உறுதி செய்வான் - நிலைபெற்ற உயிர்கட்கு (அவ்வவற்றின) பக்குவத்தைப் பார்த்து (அதற்கு ஏற்ப) நன்மைசெய்தருள்பவனான இப்பெருமானுடைய, மலர் அடி - செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை, சுமந்து - தலைமேற்கொண்டு, வாழ்தி - வாழ்வாய்; (எ - று.)

உயிர்த்தல்-உண்டாக்கப்படுதல். (சஎக)

[இதுவும் அடுத்தகவியும் - வாலி அங்கதனை இராமபிரான் வசத்தில் ஒப்பித்தல்.]

கருo. என்றனனியவாயவுறுதிகள்யாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாரத்தனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட்குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றிணிவயிரப்பைம்பூட்புரவலன்றன்னைநோக்கி.

இதுமுதல் மூன்று கவிகள் - குளகம்.

(இ - ள்.) என்றனன் - என்று, இனைய ஆய - இத்தன்மையனவான, உறுதிகள் யாவும் - இதமொழிகளை யெல்லாம், சொல்லி—, —குன்றினும் சால உயர்ந்த திண் தோள் குரங்கு இனத்து அரசன் - மலையைக்காட்டிலும் மிகவுயர்ந்த வலியதோள்களையுடைய வாநரசமூகத்திற்கு அரசனான வாலி, தனயனை - தனமகனான அங்கதனை, தன் தட துணை கை - தனது பெரிய கைகளிரண்டினாலும், ஆர தழுவி - (மீண்டும்) இறுக அணைத்துக்கொண்டு,— கொற்றம் - வெற்றியையுடைய, பைம் பொன் திணி வயிரம் பூண் புரவலன் தன்னை நோக்கி - பசும்பொன்னாற்செய்யப்பட்டு வச்சிரரத்தினங்கள் பதித்த ஆபரணங்களையணிதற்குரியவனும் காத்தற்றொழிலில்வல்லவனுமான இராமபிரானைநோக்கி,—(எ - று.)—'என்று' என அடுத்தகவியோடு தொடரும்.

தநயன் - வடசொல். புரவலன் - ஜகத்ரக்ஷகன். இங்கே, கொற்றம் - வாலிவதத்தாலானது. (கஅo)

கருக. நெய்யடைநெடுவேற்றானைநீனிறநிருதரென்னுந்
துய்யடைக்கனலியன்னதோளினன்றொழிலுந்தூயன்
பொய்யடையுள்ளத்தார்க்குப்புலப்படாப்புலவமற்றுன்
கையடையாகுமென்றவ்விராமற்குக்காட்டுங்காலை.

(இ - ள்.) 'பொய் அடை உள்ளத்தார்க்கு - பொய்ம்மை பொருந்திய மனத்தையுடையவர்கட்கு, புலப்படா - புலனாகாத [அறியப்படாத], புலவ - ஜ்ஞாநஸ்வரூபியானவனே! (இந்த என்மகன்),—நெய் அடை - நெய் பூசிய,

நெடு வேல் - நீண்ட வேலாயுதத்தை யேந்திய, தானை - சேனைகளையுடைய, நீல் நிறம் நிருதர் என்னும் - கருநிறமுள்ள அரக்கர்களாகிய, துய் அடைக்கு - பஞ்சின் மூட்டைக்கு, அனலி அன்ன - நெருப்புப் போன்ற, தோளினன் - தோள்களையுடையவன்; தொழிலும் தூயன - குற்றமற்ற செயல்களையு முடையவன்: (இங்ஙனமாகிய இவனும்), உன் கையடை ஆகும் - உனக்கு அடைக்கலமாவன்,' என்று - என்றுசொல்லி, அ இராமற்கு காட்டும் காலை - அந்த இராமபிரானுக்கு (அங்கதனை)க் காண்பிக்கும்பொழுது,—(எ - று)— 'தன்னடி தாழ்தலோடும்' என அடுத்த கவியோடு தொடரும். மற்று - அசை; வினைமாற்றுமாம்.

கையடை - அடைக்கலம்; பாலகாண்டத்திற் கையடைப்படல மென்ற விடத்துங் காண்க. கை அடை என்றுபிரிந்து - ஒருவரது கையை [ஸ்வாதீனத்தை] யடைவது என்றாவது, ஒருவரது கையில் [வசத்தில்] சேர்வது என்றாவது பொருள்பட்டுக் காரணக்குறியாகத்தக்கது; அரக்கர்களை மிகஎளிதில் அழிக்கத்தக்க தோள்வலிமையையுடையவனென்பது, 'நிருதரென்னுந் துய்யடைக்கு அனலியன்ன தோளினன்' என்றதன் கருத்து. 'கனலி' என்று எடுத்தால், 'அடை' என்றதை நான்காம் வேற்றுமைத்தொகையென வேண்டும். துய்யடை - பஞ்சுப்பொதி. நெய் அடை - (பகைவரது) நிணந் தோய்ந்த வெனினுமாம். பொய்ம்மையுடையார்க்குத் தானும் பொய்யனவன் எம்பெருமானென்க; "மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம், பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம்," "மெய்யர்க்கே மெய்யனாகும் விதியிலாவென்னைப்போலப், பொய்யர்க்கே பொய்யனாகும் புட்கொடியுடைய கோமான்" என்றார் ஆழ்வார்களும். 'புலப்படாப் புலவ' என்ற விடத்தும் முரண்தொடைகாண்க. தொழிலும் தூயன - மனமொழிகளில் மாத்திரமேயன்றிச் செயலிலும தூய்மையுடையவனெனினுமாம். காட்டுதல் - காட்டிக் கொடுத்தல், ஒப்பித்தல். (கருக)

[அங்கதனை இராமன் அங்கீகரித்தலும், வாலி பரமபத மடைதலும்]

கருஉ. தன்னடிதாழ்தலோடுந்தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டிநீயிதுபொறுத்தியென்றா
னென்னலுமுலகமேழுமேத்தினவிறந்துவாலி
யந்நிலைதுறந்துவானுக்கப்புறத்துலகனானான்.

(இ - ள்.) தன் அடி தாழ்தலோடும் - (அங்கதகுமாரன்) இராமபிரானது திருவடிகளில் விழுந்து வணங்கியவளவில்,—தாமரை தட கணானும் - செந்தாமரை மலர்போன்ற பெரிய திருக்கண்களையுடையவனான இராமபிரானும், பொன் உடைவாளை நீட்டி நீ இது பொறுத்தி என்றான் - (அங்கதனைத் தான் அடைக்கலமாக ஏற்றுக்கொண்டதற்கு அடையாளமாக) அழகிய (தனது) உடைவாளைத் தன் கையிலெடுத்துநீட்டி 'நீ இதனை ஏற்றுக்கொள்வாய்' என்று கட்டளையிட்டருளினான்; என்னலும் - என்றுசொன்னவளவில், உலகம் ஏழும் ஏத்தின - எழுவகைப்பட்ட உலகங்களிலுள்ள உயிர்களெல்லாம் (இராமபிரானைத்) துதித்தன; (பின்பு), வாலி—, இறந்து—, அ

நிலை துறந்து - அந்த உடம்பைவிட்டு, வானுக்கு அப்புறந்து உலகன் ஆனான்- மேலுலகங்கட் கெல்லாம் அப்பாலுள்ளதான முத்தியுலகத்தை யடைந்தவனானான்; (எ - று.)

தாமரைக்கண்ணன் - புண்டரீகாக்ஷன். கணை - தொடுத்தல். உடைவாள் - உடையிற் செருகிவைக்கும் வாள், உடையினமீது கட்டும் வாள். உடை - அரையிலுடுக்கும் ஆடை. உடுக்கப்படுவது உடையெனக் காரணக் குறி, ஐ - செயப்படுபொருள் விகுதி. பொறுத்தல் - கையிலேந்துதல். அந்நிலை - உயிர்நிலை. திருக்குறளில் "கள்வார்க்குத் தள்ளுமுயிர்நிலை" என்றவிடத்தில் 'உயிர்நிலை' என்றது உடம்பாதல் காண்க; 'உயிர்நிற்றற்கு இடனாகலின், உயிர்நிலை யெனப்பட்டது' என்று அங்கு உரைத்தனர், பரிமேலழகர். 'இறந்து அந்நிலைதுறந்து' என்றது, ஒருபொருட்பன்மொழி. இனி, 'அந்நிலைதுறந்து' என்பதற்கு - அந்த உலக சம்பந்தத்தைப் பற்றறவிட்டு என்றும், வழியிலுள்ள இடங்களை யெல்லாம் கடந்து என்றும் பொருள் கொள்ளலாம். தனது உயிர் நண்பனை சுக்கிரீவன் விரும்பியபடி அவனுக்குப் பழம் பகையாகிய வாலிக்குப் பரமபதமளித்தது அவன் மகனை அங்கதனை அவன் விருப்பத்தின்படி தனக்குத் துணைவனாக ஏற்றுக் கொள்ளுகையிற் பெருமான் திருவுள்ளமுவந்து கண்மலர்ந்திருந்தமை தோன்ற, 'தாமரைத் தடங்கணான்' என்றார். பகைவன் மகனிடத்துப் பகைமை பாராட்டாது அன்புவைத்தருளிய அருமைக் குணத்தைக் கொண்டாடி, எல்லாவுலகங்களுந் துதித்தன வென்க. தந்தைபோலன்றி மைந்தன எம்பெருமானுடைய கருணைக்கு இலக்காயினமை குறித்து அதிசயித்து அவ்வங்கதனைப் புகழ்ந்தன வென்றலுமாம்.　(கஙஉ)

[இராமபாணம் இராமனிடம் மீளுதல்.]

கஙக. கையவ னெகிழ்த லோடுங் கடுங்கணை கால வாலி
வெய்யமார் பகத்துட் டங்கா துருவிமேக் குயர மீப்போய்த்
துய்யநீர்க் கடலுட் டோய்ந்து தூய்மல ரமரர் சூட்ட
வையன்வெங் விடாத கொற்றத் தாவம்வந் தடைந்த தன்றே.

(இ - ள்.) அவண் - அப்பொழுது, கை நெகிழ்தலோடும் - (வாலி தன் மார்பிற் செல்லுகின்ற இராமபாணத்தை இழுத்துப்பிடித்திருந்த) கைப்பிடி தளர்ந்த வளவில், கடுங் கணை - விரைவையுடைய அந்த அம்பானது, காலன் வாலி வெய்ய மார்பு அகத்துள் தங்காது - யமன்போலக் கொடியவனான வாலியினது கொடியமார்பினுள்ளே தங்காமல், உருவி - அந்தமார்பைத் துளைத்துக் கொண்டு அப்புறங்கழன்று, மேக்கு உயர மீ போய் - மேலே உயர எழுந்துசென்று, துய்ய நீர் கடலுள் தோய்ந்து - பரிசுத்தமான சமுத்திர ஜலத்தில் நீராடி, அமரர் தூய் மலர் சூட்ட - தேவர்கள் பரிசுத்தமான (கற்பகதருக்களின்) மலர்மாலைகளைச் சூட்டப் பெற்று, ஐயன் வெங் விடாத கொற்றத்து ஆவம் வந்து அடைந்தது - ஸ்ரீராமபிரானுடைய முதுகைவிட்டு நீங்காத [அவனது தோளின் புறத்தில் கட்டப்பட்டுள்ள] வெற்றியையுடைய அம்பறாத்தூணியில் வந்து சேர்ந்தது; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யெனினுமாம்.

தெய்வத்தன்மையுடையோர் செலுத்தும் தெய்வத்தன்மையுள்ள அம்புகள் இங்ஙனம் தொழில் செய்த பின்னர் அவர் பக்கல் மீளுதல், இயல்பு. வெய்யமார் பகத்துள் தங்காது உருவி - "வயிரக்குன்றக், கல்லொக்கு நெஞ்சில் தங்காது அப்புறங்கழன்று கல்லாப், புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே" என்றார் தாடகைவதைப்படலத்திலும். பரிசுத்தமான இராமபாணம் கொடிய இடத்தில் தங்குதற்குப் பிரியப்படாமல் விரைந்து அப்பாற் சென்றிட்ட தென்றவாறும். தூயநீர் - தன்னில் நீராடியவர்க்குத் தீவினை தீர்த்துத் தூய்மையை யளிக்கும் புண்ணிய தீர்த்தம். ஐயசீலமான அம்புகள் தங்கும் புட்டிலாதலால், 'கொற்றத்து ஆவம்' எனப்பட்டது. (கருரு)

வாலிவதைப்படலம் முற்றிற்று.



## ஆறாவது

# அரசியற்படலம்.

அரசு இயல் படலம் - (சுக்கிரீவனது) அரசாட்சியின் இயல்பைக் கூறும் பாகம். இராமபிரான் வாலியை வதைத்த பின்னர் அவனது அரசாட்சியை அவன் தம்பியான சுக்கிரீவனுக்கு அளிக்க, அவன் அதனைப் பெற்று, வானர ராஜனாய்க் கிஷ்கிந்தாநகரத்தில் அரசாட்சி புரிந்த செய்தியைக் கூறுவது இப்படலம். இராமபிரானது திருத்தந்தையாரான தசரதசக்கரவர்த்தியினது அரசாட்சி முறைமையைக் கூறும் பாகத்திற்கு 'அரசியற்படலம்' என்று பாலகாண்டத்திற் பெயர்கூறிப்போந்த கம்பநாடர், எல்லாவுலகங்கட்கும் அரசனான அவ்விராமபிரானுக்குப் படைத்துணைமைசெய்து 'மஹாராஜன்' என்று பேர்பெறுஞ் சுக்கிரீவனது சிறப்புத்தோன்ற இங்கும் அத்தொடராற் படலப்பெயரமைத்தன ரென்னலாம்.

[வாலி பரலோகமடைந்த பின்னர் அவன் மனைவியான தாரை வந்து அவனுடம்பின்மேல் விழுதல்.]

க. வாலியு மேகி னான்விண் வரம்பிலா வாற்ற லோடும்
பாலியா முன்னர் நின்ற பரிதிசேய் செங்கை பற்றி
யாலிலைப் பள்ளி யானு மங்கத னோடும் போனான்
வேல்விழித் தாரை கேட்டாள் வந்தவன் மேனி வீழ்ந்தாள்.

(இ - ள்.) வாலியும் விண் ஏகினான் - வாலியும் பரமபத மடைந்தான்; ஆல் இலை பள்ளியானும் - (பிரளயகாலத்தில் ஆதிசேஷனது அம்சமான) ஓர் ஆலிலையைப் படுக்குமிடமாகக் கொண்டருள்பவனான திருமாலின் அவதாரமாகிய ஸ்ரீராமபிரானும், வரம்பு இலா ஆற்றலோடும் பாலியா - வரையறையில்லாத திறத்துடனே (அவனுக்கு அவ்வாறு பரமபதத்தை) அளித்து, முன்னர் நின்ற பரிதி சேய் செம் கை பற்றி - எதிரில் நின்ற சூரியகுமாரனான சுக்கிரீவனது சிவந்த கையைப் பிடித்துக்கொண்டு, அங்கதனோடும் போனான் - அங்கதனையும் அழைத்துக்கொண்டு சிறிது விலகிச் சென்றான்; (அச்சமயத்தில்),—கேட்டாள் - (தன் கணவனான வாலி இறந்த செய்தியைக்) கேள்வியுற்றவளான, வேல் விழி தாரை - வேலாயுதம் போன்ற கண்களையுடைய தாரையானவள், வந்து - (கிஷ்கிந்தா நகரத்து அந்தப்புரத்திலிருந்து போர்க்களத்திற்கு) வந்து, அவன் மேனி வீழ்ந்தாள் - அவ் வாலியினுடம்பின் மேல் விழுந்தாள்; (எ - று.)

வாலியும், ஆலிலைப் பள்ளியானும் என்ற எச்சவும்மைகள் - கதைத் தொடர்புக்கு உரியன. ஆற்றலோடும், அங்கதனோடும் என்ற உம்மைகள் - இசைநிறை. அங்கதனோடும் என்ற உம்மையை 'பரிதிசேய்செங்கைபற்றி

என்றதை நோக்கிவந்த இறந்தது தழுவிய எச்சமென்னலுமாம். 'விண்' என்றதை மத்திமதீபமாகக் கொண்டு 'பாலிய' என்றதனோடுங் கூட்டுக. பாலியா-பாலித்து: உடன்பாட்டிறந்தகால வினையெச்சம். வரம்பிலாவாற்றல் - அநந்த வீரியம்; இது, மற்றைக் கடவுட் குணங்கட்கும் உபலக்ஷணம். 'வரம்பிலா வாற்றலோடும்' என்றதனால், மகா பலசாலியான வாலியை எளிதிற்கொன்ற இராமபிரானது திறத்தையும், தன்னாற் கொல்லப்பட்டவர்க்கு முத்தியளிக்கும் ஈச்சுரகுணத்தையும் பாராட்டியவாறும். விண் - இங்கே, பரமாகாசம்.

'ஆலிலைப்பள்ளியான' என்றது, எம்பெருமானது பரத்வத்தை விளக்கும்; யாவும் அழியுங் கரபாந்தகாலத்திலும் தான் அழிவின்றி அவற்றைத் தனது திருவயிற்றினுட்கொண்டு பாதுகாத்தருளும் முழுமுதற்கடவுளென்க. பிரமன் முதலிய சகல தேவர்களுமுட்பட யாவும் அழிந்துபோகின்ற கல்பாந்த காலத்திலே ஸ்ரீமகாவிஷ்ணு அண்டங்களையெல்லாம் தன்வயிற்றில் வைத்துக்கொண்டு சிறு குழந்தைவடிவமாய்ப் பிரளயப்பெருங்கடலிலே ஆதிசேஷனது அம்சமான தோராலிலையின்மீது பள்ளிகொண்டு அறிதுயில் செய்தருளுகின்றன னென்பது நூற்கொள்கை. இது, எம்பெருமானது செயற்கரியன செய்யும் விசித்திரசக்தியையும், பேரருளுடைமையையுங் காட்டும்.

அங்கதன் - வாலியின் மகன். விழிக்கு வேல - கூர்மைக்கும், ஆடவர் நெஞ்சுறுதியை யழித்து அவர்க்கு வருத்தத்தை விளக்குந் திறத்திற்கும் உவமை. பாலியாமுன்னா நின்ற ஆலிலைப்பள்ளியான் என்று அந்வயித்து உரைத்தலுமாம். வாலீ என்ற பெயர்க்கு - வாலில் வலிமையுள்ளவனென்றும் வாலினின்று பிறந்தவனென்றும் பொருள். மகாமேருகிரியின் வடக்குச் சிகரத்திலுள்ளதொரு சரசில் ஒருகால மூழ்கியதனாற் பெண்வடிவமடைந்த ருக்ஷரஜஸ என்னும் வாநரராஜனது வாலினழகைக்கண்டு காமுற்ற இந்திரனது அநுக்கிரகத்தால் அக்குரங்கின் வாலினிடமாக மிக்க வால் வலிமையுடன் தோன்றியவன் வாலி யென்றும், பிறகு அவ்வாநரத்தினது கழுத்தினழகைக் கண்டு காதல்கொண்ட சூரியனது அநுக்கிரகத்தால் அக்குரங்கின் கழுத்தினிடமாகக் கழுத்தழகுடன் தோன்றியவன் சுக்கிரீவனென்றும் உணர்க.

'வாலியுமேகயார்க்கும வரைவிலாவரம்பிலின்பம்,' 'அங்கதனோடுநிற்ப,' 'அவன்மேலின் வீழ்ந்தாள்' என்பன - பாடபேதம்.

இதுமுதல் மூன்று கவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள் (க)

[தாரை வாலியின்மார்பிற் புரளுதல்.]

உ. குங்குமங்கொட்டியன்ன குவிமுலைக்குவட்டிற்கொக்கப்
பொங்குவெங்குருதிபோர்ப்பப்புரிகுழல்சிவப்பப்பொற்றோ
ளங்கவன்லங்கன்மார்பிற்புரண்டனளன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன்றுமின்னெனத்திகழுமெய்யாள்.

(இ - ள்.) குவி முலை குவட்டிற்கு ஒக்க - நுனிகுவிந்த மலைச்சிகரம் போன்ற (தனது) தனங்களின் பொலிவுக்கு ஏற்றவண்ணமாக, குங்குமம் கொட்டி அன்ன - குங்குமப்பூவின் குழம்பைச் சொரிந்தாற் போன்றனவாய், பொங்கு வெம் குருதி போர்ப்ப - (வாலியின் மார்பிலிருந்து) கிளர்ந்துவருகிற பயங்கரமான இரத்தப் பெருக்குக்கள் (தம்முலைக்குவடுகளில்) முழுவதும் பரவும்படியாகவும், புரி குழல் சிவப்ப - நுனிசுருண்ட (தனது) கூந்தல் (இரத்தம்படிதலாற்) சிவக்கும்படியாகவும், பொன் தோள் அங்கு அவன் அலங்கல் மார்பில் - அழகிய தோள்களையுடைய அவ்விடத்தே கிடக்கின்ற அவ்வாலியினது மாலையணிந்தமார்பிலே, (தாரையானவள்), அகன்ற செக்கர் வெம் கதிர் விசும்பில் தோன்றும் மின் என திகழும் மெய்யாள் - பரந்த செவ்வானமாகிய வெவ்விய சூரியகிரணம் பரந்தவானத்திலே காணப்படும் மின்னற்கொடிபோல விளங்கும் வடிவத்தையுடையவளாய், புரண்டனள் - புரண்டாள்; (எ - று.)

வாலி முதலிய வாநரர்கள் முகத்திலும் வாலிலும் குரங்குவடிவமும் மற்றை யுறுப்புக்களிற் பெரும்பாலும் மனிதர்போன்றவடிவமு முடையவ ரென்பது உணரத்தக்கது. வாலியின்மார்பில் தாரைவிழுந்து புரளும்போது, அம் மார்பில் இராமபாணம் தைத்த வாயினின்று பொங்கிவழிகின்ற இரத்தம் தாரையின் தனபாரம் முழுவதிலும் படிந்தது. இயற்கையழகு நிறைந்த அம் முலைக்குவடுகளுக்கு ஏற்ற செயற்கையழகாகக் குங்குமப்பூவின் குழம்பை முழுவதும் நிரம்பப்பூசு மியல்பு போன்றதென்க. தலைவிரிகோலமாய் அவள் விழுந்து புரளும்போது அவளது கடைகுழன்றகருங்குழல் இரத்தம் படிதலாற் சிவந்ததை 'புரிகுழல் சிவப்ப' என்றார். வாலியினது அகன்ற மார்பு இரத்தப் பெருக்கினால் அந்திப்பொழுதிற் சூரியகிரணம் படிதலாற் சிவந்த மேகங்கள் பரவிய வானம்போன்றிருப்ப, அம்மார்பில் விழுந்து புரளுகின்ற மெல்லிதாய் விளங்கும் வடிவமுடைய தாரை அச்செவ்வானத்தில் தவண்டு விளங்கும் மின்னற்கொடி போன்றனள்.

குவி முலை - திரண்டதனமுமாம். முலைக்குவடு - முன்பின்னாகத்தொக்க உவமத்தொகை; திரட்சியையுடைய தனமென்பது கருத்து. புரி குழல் - விரும்பப்படும் [அழகிய] கூந்தலென்றும், பின்னியலங்கரிக்கப்பட்ட கூந்தலென்றுங் கொள்ளலாம். அலங்கல் - அலங்காரத்திற்காகத் தரித்த மாலைகளும், போர்ப்பூமாலையும்.

'கொட்டியென்ன', 'கோட்டியென்ன', 'குவட்டிற்கோத்த', 'மின்னெனத்துவளுமெய்யாள' என்பன பாடபேதம். அங்கவன்' என்பதில், அங்கு - அசை யென்னலுமாம். உவமையணி. (உ)

[தாரை புலம்பத் தொடங்குதல்.]

௩. வேய்ங்குழல் விளிகொ லையாழ் வீணையென் றினைய நாண
வேங்கின ளிரங்கி விம்மி யுருகின ளிருகை கூப்பித்
தாங்கின டலையிற் சோர்ந்து சரிந்துதாழ் குழல்க டள்ளி
யோங்கிய குரலாற் பன்னி யினையன வுரைக்கலுற்றாள்.

(இ - ள்.) வேய் குழல் - புள்ளாங்குழலினொலியும், விளி கொள் நல் யாழ் - இன்சையமைதியைக் கொண்ட சிறந்தயாழென்னும் இசைக்கருவியின் நாதமும், வீணை - வீணையினொலியும், என்ற இனைய - என்று இத்தன்மையனவான இன்னிசைகளெல்லாம், நாண - (இவள் குரலினினிமைக்கு ஒப்பாகாமல்) வெள்கும்படி,—(தாரையானவள்)—ஏங்கினள் - ஏக்கங்கொண்டு, இரங்கி - பரிதபித்து, விம்மி - பெருமூச்செறிந்து, உருகினள் - உள்ளமும் உடலும் கரைந்து, இரு கை கூப்பி தலையில் தாங்கினள் - தனது இரண்டு கைகளையுங் குவித்துத் தனதலையின்மேல் வைத்துக் கொண்டவளாய், சோர்ந்து - தேகபலமும் மனோபலமும் தளர்ந்து, சரிந்து தாழ் குழல்கள் தள்ளி - (பாரத்தால்) சாய்ந்துதாழ்கின்ற தலைமயிர்கள் அவிழ்ந்து விழுந்து புரளப் பெற்றவளாய், ஓங்கிய குரலால் - உரத்தகுரலினால், இனையன - இத்தன்மையனவான வார்த்தைகளை, பன்னி உரைக்கல் உற்றாள்-அடுத்தடுத்துச் சொல்லத்தொடங்கினாள்; (எ - று.)—அவ்வார்த்தைகளை, அடுத்த பதின்மூன்று கவிகளிற் காண்க.

இனைய நாண உரைக்கலுற்றாளென இயையும்; அவளதுகுரலின் இயல்பான இனிமைமிகுதியை எடுத்துக்காட்டியவாறும். வேய்ங்குழல் - மூங்கிலினாலாகிய ஊதுகுழல்; வேற்றுமைப்புணர்ச்சியில் யகரத்தின்முன் வலிவர இனமெலி மிக்கது: [நன - மெய் - உக.] யாழ் - வீணையின் சாதிபேதம். குழல், யாழ், வீணை என்பன - அவற்றின் ஒலிக்கு முதலாகுபெயர். இனைய, இனையன - இகரச்சுட்டடியாப்பிறந்த பலவின்பாற்பெயர்கள்; ன், ஐ, அன் - சாரியைகள்.

'விளரிநல்யாழ்' என்றும், 'ஓங்கிய துயரால்' என்றும் பாடமுண்டு; விளரி - ஓர் இசை. (௩)

வேறு.

[இதுமுதற் பதின்மூன்று கவிகள் - தாரை புலம்பல்.]

௪. வரைசேர் தோளிடை நாளும் வைகுவேன்
கரைசே ராவிடர் வேலை காண்கலே
னுரைசே ராருயி ரேயெ னுள்ளமே
யரைசே யானிது காண வஞ்சினேன்.

(இ - ள்.) உரை சேர் - மேன்மைபெற்ற, (என்) ஆர் உயிரே - எனது அருமையான உயிர்போன்றவனே! என் உள்ளமே - எனது மனம்போன்றவனே! (என்) அரைசே - எனது தலைவனே!—வரை சேர் தோளிடை நாளும் வைகுவேன் - மலைகள்போன்ற (உனது) தோள்களினிடையே நாள்தோறும்தங்குபவளாய், (அதனால்), கரை சேரா இடர் வேலை காண்கலேன்- கரையில்லாத துன்பக்கடலை(இதுவரையில் ஒருநாளும்) காணாதிருந்தவளான, யான் - நான், இது காண அஞ்சினேன் - (உனது) இவ்வாறான நிலைமையைப் பார்க்கப் பயப்படுகின்றேன்; (எ - று.)

முதலடி - உன்னால் எப்பொழுதும் ஆலிங்கனஞ்செய்யப்பெற்றவளென்பதையும், உனதுபுயவலிமையின் பாதுகாவலுக்கு உள்ளானவளென்பதையுங் காட்டும். இரண்டாமடி - இதுவரையிற் சிறிதுந் துன்பமனுபவியாதிருந்தவளென்றபடி. உரை - உயர்ச்சி; இனி, உரை சேர் - புகழ்பெற்ற எனினுமாம். இன்றியமையாமையும் ஒற்றுமையும் பற்றி, உயிரே உள்ளமே என விளித்தாள். அரைச = அரச; இடைப்போலி. 'இது' - தன்கணவனுக்கு நேர்ந்த அபாயம். காண - கண்டதனால்; காணுதற்கு எனினுமாம். 'வேலை கண்டிலேன்' என்பது பிரதிபேதம்.

இதுமுதல் இருபத்துமூன்று கவிகள் - முதற்சீரும் மூன்றாஞ்சீருமாச்சீர்களும், மற்றையிரண்டும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௪)

ரு. துயராலேதொலையாதவென்னையும்
பயிராயோபகையாதபண்பினோய்
செயிர்தீராய்விதியானதெய்வமே
யுயிர்போனாலுடலாருமுய்வரோ.

(இ - ள்.) பகையாத பண்பினோய் - (இதுவரையில் எப்பொழுதும் என்னோடு) மாறுபடாத குணத்தையுடையவனே! துயராலே தொலையாத என்னையும் - (உனக்குநேர்ந்த) துன்பத்தைக் கண்டதனாலே உயிர்நீங்காமலிருக்கின்ற என்னை, பயிராயோ - இனி நீ அழைக்கமாட்டாயோ? செயிர் தீராய் - (என்னிடத்திற்) கோபம்நீங்காத, விதி ஆன தெய்வமே - எனது விதியினவடிவமான கடவுளே! உயிர் போனால் உடலாரும் உய்வரோ - உயிர்நீங்கிவிட்டால் அதனபின்பு உடம்புமாத்திரம் பிழைத்திருக்குமோ?

இதுவரையில் என்னோடு நீ மாறுபடாததன்மையையுடையையாயினும், நீ இறந்ததைக்கண்டும் உயிர்மாயாத என்னை இனி அன்புகொண்டு அழைப்பாயல்லைபோலும் என்பது,முதல்வாக்கியத்தின கருத்து. இவன் வாய்திறந்து ஒன்றுமபேசாதிருந்தமைபற்றிக் கூறியது இது. 'என்னையும்' என்ற உயர்வு சிறப்பும்மை, முனபு தான் அவனுடைய உழுவலன்புக்கு முழுவதும்இடமாயிருந்தமைபற்றியது. பயிர்தல் - அழைத்தலாதலை, "பயிரும் பைங்கிளி" எனச்சிந்தாமணியிலுங் காண்க. இனி, முதலிரண்டடிக்கு-முன்பு நீ என்னோடு இயல்பில்மாறுபடாததன்மை புடையையாயினும் உனக்கு நேர்ந்த துன்பங் காரணமாக யான் உயிர்நீங்காதிருத்தல்பற்றி என்னை நீ அருவருக்காமலிருப்பாயோ என்றும் உரைக்கலாம்; பயிர்த்தல் அருவருத்தல். விதி - இருவினைப் பயன் செய்த உயிரையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி. அதனைத்தும் தெய்வத்தினுருவமே யாதலால், 'விதியானதெய்வம்' எனப்பட்டது. "குலமட்குத்தெய்வம் கொழுநனே" ஆதலால், 'விதியானதெய்வமே' என்று தன் கணவனையே விளித்தாளெனக் கொள்ளலுமாம். தனக்குப் பெருந்துன்பந் தந்தமைபற்றி, 'செயிர்தீராய்' என்றாள். 'உயிர்நீங்கினால் உடல் தனித்துப் பிழைக்குமோ?' என்றது, தனக்கு உயிரானவாலி இறந்தபின்பும் தான்பிழைத்

திருப்பதுபற்றி அதிசயித்து வினவியவாறும். ஜீவித்திருத்தலும் இராமையும் விதியின் காரியமாதலால், இங்ஙனம் விதியைநோக்கி வினவலாயிற்று. 'உடலாரு முய்வரோ' என்றவிடத்துப் பலர்பால்விகுதி. இழிப்புப்பற்றி வந்தது; திணைவழுவமைதி: [நன்-பொது - உஅ] 'செயிர்தீராய்' என்பதற்கு - (என்னையுங்கொன்று எனது இக்) குற்றத்தைத் தீர்ப்பாயாகவென்று உரைப்பாருமுளர்: செயிர் - துன்பமுமாம். உடல்ஆரும் உய்வரோ என்றுபிரித்து, (உலகத்தில்) யாரேனும் உடல் பிழைத்திருக்கப் பெறுவரோ? என்று உரைப்பர் ஒருசாரார். பண்பினோய் - 'பண்பினய்' என்ற ஈறுதிரிந்த விளியின் ஈற்றயல் ஆகாரம் ஓகாரமாயிற்று; [நன் - பொது - உ] (௫)

௬. நறிதாநல்லமிழ்துண்ணநல்கலிற்
பிறியாவின்னுயிர்பெற்றபெற்றிதா
மறியாரோநமனாரதன்றெனிற்
சிறியாரோவுபகாரஞ்சிந்தியார்.

(இ - ள்.) (எனது கொழுநனே!)—நமனார் - (உனது உயிரைவாங்கிய) யமனார், நறிது ஆம் நல் அமிழ்து - நறுமணமுள்ளதான சிறந்த அமிருதத்தை, உண்ண - (தாம்) உண்ணுமாறு, நல்கலின் - (தமக்கு நீ) கொடுத்ததனால், இன் உயிர் பிறியா பெற்ற - இனிமையான தமது உயிர் (தமது உடம்பை விட்டு) நீங்காதிருக்கப்பெற்ற, பெற்றி - தன்மையை, தாம் அறியாரோ-தாம் அறிந்திலரோ? அது அன்று எனின் - அங்ஙனமன்றானால், (அந்த யமனார்), உபகாரம் சிந்தியார் சிறியாரோ - (தமக்குப் பிறர்செய்த) உதவியை ஞாபகத்திற்கொள்ளுதலில்லாத அற்பகுணமுடையவர்தாமோ? (எ - று.)

தேவர்களும் அசுரர்களும் ஒருங்குகூடிச் சாவாமருந்தாகிய அமிருதத்தைப் பெறுமாறு மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகிநாகத்தைக் கடைகயிறாகப்பூட்டிச் சந்திரனை அடைதாணாக நிறுத்திப் பாற்கடலைக் கடையமுயல்கையில், இருதிறத்தாரும் அதனைக்கடையும் வலிமையிலராய் எனசெய்வதென்று கலங்கிநிற்குமளவிலே, வாநரராஜனும் தேவேந்திரனது குமாரனுமாகிய வாலி தான் நாள்தோறும் பலகடல்களிலுஞ்சென்று வைதிகநித்திய கருமங்களை முடித்துவரும் வழக்கப்படி பாற்கடல்சென்றுசேர, தேவர்கள் அவனை வேண்டியதனால், அவன் சுராசுரர்களை விலக்கிவிட்டுத் தானொருவனாகவே இரண்டுகைகளாலும் வாசுகியின் தலையையும் வாலையும் பிடித்து வலமும்இடமுமாக வலியஇழுத்துக்கடைய, அக்கடலினின்று அமிருதமுண்டாக, அதனைத் தேவர்கள் பெற்று உண்டு மரணந்தவிர்ந்து அமரராயினரென்ற வரலாறு இங்கு உணரத்தக்கது. அத்தேவர்களில் யமனும் ஒருவனென்பது வெளிப்படை. இவ்வாறு தனக்கு என்றென்றைக்கும் உயிர்நீங்காதிருக்கும்படி அருள்செய்தவன் நீயென்பதை யமன் அறிந்திருந்தால் இப்பொழுது உனது உயிரைக் கவரக்கடவனோ? அல்லன்: ஆதலால், அவன் அவ்வியல்பை அறிந்திலன்போலுமென்பது, முந்தியவாக்கியத்தின் தாற்பரியம். அன்றி, அதனை அவன் அறிந்திருந்தும் இங்ஙனஞ்செய்திருந்தானாயின்

உபகாரஸ்மிருதியில்லாத அற்பனாதல் வேண்டுமென்பது, பிந்தியவாக்கியத்தின் கருத்து. நமனூர் என்றவிடத்துப் பலர்பால் செறல் [கோபம்] பற்றி வந்தது; [நன் - பொது - உஅ.] பிறியா - பிறியாமல்: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம்; பிறி பிரி என இரண்டுவகையும் இலக்கியங்களிற் பயில்கின்றன. நமன் - யம னென்ற வடசொல்லின் சிதைவு. உபகாரம் - வடசொல்; (இதன் எதிர்மொழி - அபகாரம்.) உபகாரஞ்சிந்தியார் - நன்றி மறந்தவர், நன்றிகெட்டவர், கிருதஜ்ஞதையில்லாதவர், க்ருதக்நர். (சு)

எ. அணங்கார்பாகனையாசைதோறுமுற்
றுணங்காவொண்மலர்கொண்டுளன்பொடு
மிணங்காக்காலமிரண்டொடொன்றினும்
வணங்காதித்துணைவைகவல்லையோ.

(இ - ள்:) ஆசைதோறும்உற்று - திக்குகள்தோறுஞ்சென்று, உள் அன்பொடும் இணங்கா - மனப்பூர்வமான பக்தியுடனகூடி, உணங்கா ஒண்மலர் கொண்டு - வாடாமல் விளங்குகின்ற மலர்களைக்கொண்டு, அணங்கு ஆர் பாகனை காலம் இரண்டொடு ஒன்றினும் வணங்காது - சிறந்த தெய்வமகளாகிய அம்பிகை பொருந்திய இடப்பக்கத்தை யுடையவனான சிவபெருமானை முக்காலத்திலும் வந்தித்து வழிபடாமல், இத்துணை வைக வல்லையோ - இவ்வளவுநேரம் ஓரிடத்தில் வெறுமனே தங்கியிருக்கவல்லையோ? (நீ); (எ - று.)

வாலி மகா சிவபக்தனாதலாலும், நாடோறும் பல திசைகளிலுஞ் சென்று மீள்பவனாதலாலும், தானசெல்லுமிடங்களில் ஆங்காங்குச் சிவபூசை செய்வனென்க; "எட்டுமாதிரத் திறுதிநாளுமுற, ்றட்டமூர்த்தி தாள் பணியுமாற்றலான்" என்றார் மராமரப்படலத்தும். இணங்கா - உடன்பாட்டெச்சம். காலம் இரண்டொடு ஒன்று - காலை, நண்பகல், மாலை என்பன. 'அணங்கோர்பாகனை' என்பதும் பாடம். ஆசா - வடசொல். (எ)

அ. அரைசேபூவணையாடைவைகுவாய்
தரைமேலாயுறுதன்மையீதெனக்
கரைவேனின்றிடுபூசல்கண்டுமொன்
றுரையாயென்வயினூனமியாவதோ.

(இ - ள்.) அரைசே - தலைவனே! பூ அணை - மலர்களாலாகிய படுக்கையில், ஆடை - மெல்லிய மேல்விரிவஸ்திரத்தின்மீது, வைகுவாய் - படுப்பவனான நீ, தரைமேல் ஆய் உறு தன்மை - (அதற்கு மாறாக) வெறுந்தரையிற் பொருந்தியிருக்கின்ற தன்மை, ஈது - இதுவாம், என - என்றகாரணத்தால், கரைவேன் நின்று இடு - (யான்) மனங்கரைபவளாய் உனது எதிரில் நின்று செய்கின்ற, பூசல் - அழுகையை, கண்டும் - பார்த்தும், ஒன்று உரையாய் - ஒன்றும் பேசாமலிருக்கின்றாய்; (அங்ஙனம் நீ உபேக்ஷைசெய்யுமாறு), என்வயின் ஊனம் யாவதோ - என்னிடத்திற்கண்ட குற்றம்யாதோ? (எ - று.)

பூவணை - மலர்ப்பள்ளி, புஷ்பசயநம். இன்று இடு என்றுபிரித்து, இப்பொழுது செய்கின்ற என்றலுமாம். ஒருபுலனுக்கு உரியவினையை மற்றொருபுலனுக்குஉரிய வினையாகக்கூறும் உபசாரவழக்கினுல் 'கேட்டு' என்றபொருளில் 'கண்டு' என்றதாகக் கொண்டால், பூசல் - பேரொலி யென்னலாம். ஊகம் - வடசொல், 'வரையார்தோள் பொடிபாடவைகுவாய்' என்று முதலடியிலும், 'கரையாதேனிடுபூசல்' என்று மூன்றாமடியிலும் பாடமோதுவாரு முளர். (௮)

௯. கையாநின்றனனானிருந்திங்ஙன்
மெய்வானோர்திருநாடுமேவினை
யையாநீயெனதாவியென்றதும்
பொய்யோபொய்யுரையாதபுண்ணியா.

(இ - ள்.) பொய் உரையாத புண்ணியா - பொய் பேசாத நல்வினையுடையவனே! நான் இருந்து இங்ஙன் கையா நின்றனன் - நான் இங்கேயிருந்து இவ்வாறு வருந்துகினறேன்; (அங்ஙனம் வருந்தவும் நீ), மெய் வானோர் திருநாடு மேவினாய் - வாய்மை தவறாத தேவர்கள் வசிக்கும் மேன்மையான நாட்டை யடைந்து இன்புறுகின்றாய்; ஐயா - தலைவனே! நீ எனது ஆவி என்றதும் பொய்யோ - 'நீ என்னுடைய உயிர்' என்று (என்னை நோக்கி நீ வாழ்நாளில் மிக்க அன்புடன்) சொல்லி வந்ததும் பொய்யாகுமோ? (எ - று.)

இங்ஙன் - இங்ஙனம் என்பதன் விகாரம். கையாநின்றனன் - கைகின்றேன்; ஆநின்று - நிகழ்காலவிடைநிலை. 'கையாநின்றனெனானிருந்து நீ, மெய்வான் மங்கையர் கொங்கை மேவினாய்' என்று முதலிரண்டடிகள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன. உயிர் நீங்கிய உடல் இன்பமடைவதென்பது உலகத்திலில்லை யாதலால், 'நீயெனதாவியென்றதும் பொய்யோ' என்றான். 'என்றதும்' என்ற உம்மை - உயர்வு சிறப்பு. 'நீ எனது ஆவி' என்று என்னை நோக்கி நீ சொல்லிக் கொண்டிருந்த வார்த்தை பொய்யாகாமலிருத்தற் பொருட்டாவது சத்தியவாதியான நீ என்னை விட்டு நீங்காதிருக்கக் கடவாயன்றோ? என்றவாறும், உன்வார்த்தை பொய்யாய் விட்டால் அது பற்றி அங்கே சத்தியவாதிகளான தேவர்கள் உன்னை எவ்வாறு மதிப்பரென்றற்கு, 'மெய் வானோர்' என்றான். (௯)

௧௦. செருவார்தோளநின்சிந்தையுளெனெனின்
மருவார்வெஞ்சரமெனையும்வெளவுமா
லொருவேனுள்ளனையாகிலுய்தியா
லிருவேமுள்ளிருவேயிருந்திலேம்.

(இ - ள்) செரு ஆர் தோள - போர்த்தொழிலை நிரம்பப்பயின்ற தோள்களை யுடையவனே! நின் சிந்தை உளென் எனில் - உனது நெஞ்சில் நான் இருந்தேனென்பது மெய்யானால், மருவார் வெம் சரம் எனையும் வெளவும்

ஆல்-பகைவரது [இராமனுடைய] கொடிய அம்பு (உன்னைப்போலவே) என்னையும் நிச்சயமாக உயிர்வாங்கி யிருக்கும்; ஒருவேன் உள் உளை ஆகில் - தனிப் பட்டவளான எனது நெஞ்சில் நீ இருந்தா யென்பது மெய்யானால், உய்தி ஆல் - (என்னைப்போலவே) நீயும் நிச்சயமாகப் பிழைத்திருப்பாய்; (இப்படி யில்லாமையால்), இருவேம் இருவேம் உள் இருந்திலேம் - நாம் இருவரும் ஒருவருள்ளத்தில் ஒருவர் இருந்தோமில்லை; (எ - று.)

மருவார் - சேராதவர், விரும்பாதவர்; எனவே, பகைவராயிற்று. ஸாம் - வடசொல். 'ஆல்' இரண்டும் - தேற்றம். உளை - உண்மையென்னும் பண்பினடியாப் பிறந்த முன்னிலையொருமைக் குறிப்புமுற்று. இருவேம்-இரண்டு என்னும் எண்ணுப் பெயரினடியாப் பிறந்த தன்மைப்பன்மைப் பெயர்; (இருவீர், இருவர் என்பன - இதன் முன்னிலை படர்க்கைகள்.) 'மருவார்' என்ற பன்மை, செறல்பற்றியது. 'சிந்தையேனெனின்' எனவும் பாடம். (௰)

கக. எந்தாய்நீயமிழ்தீயயாமெலா
முய்ந்தாமென்றுபகாரமுன்னுவார்
நந்தாநாண்மலர்சிந்திநண்பொடும்
வந்தாரோவெதிர்வானுளோரெலாம்.

(இ - ள்.) 'எந்தாய் - எமது தலைவனே! நீ அமிழ்து ஈய - நீ அமிருதத்தை(ப் பாற்கடலினின்று உண்டாக்கி)க் கொடுத்ததனால், யாம் எலாம் உய்ந்தாம் - நாங்களனைவரும் (அதனையுண்டு) என்றும் அழிவின்றி உயிர் வாழப் பெற்றோம்,' என்று - என்று சொல்லிக்கொண்டு, உபகாரம் உன்னுவார் - (முன்பு நீ தமக்குச் செய்த) உதவியை மறவாமல் மனத்திற் கொள்பவராய், வான் உளோர் எலாம் - மேலுலகத்திலுள்ளவர்களான தேவர்கள் யாவரும், நந்தா நாள் மலர் சிந்தி - வாடாத அன்று மலர்ந்த [புதிய] (கற்பகதருக்களின்) மலர்களை (உன்மேற்) சொரிந்து கொண்டு, நண்பொடும் எதிர் வந்தாரோ - அன்பு பாராட்டி உனது எதிரில் வந்து உன்னை எதிர்கொண்டு உபசரித்தார்களோ? (எ - று.)

உன்னுதல் - நினைத்தல். நந்துதல் - கெடுதல். 'நந்தா மலர்' எனவே, தேவதருக்களின் மலரென்றதாயிற்று. மலர் சிந்துதல் - புஷ்பவர்ஷம். (கக)

கஉ. ஓயாவாளியொளித்துநின்றெய்வா
னேயாவந்தவிராமனென்றுளான்
வாயாலேயினனென்னின்வாழ்வெலா
மீயாயோவமிழ்தேயுமீகுவாய்.

(இ - ள்.) அமிழ்தேயும் ஈகுவாய் - சாவாமருந்தாகிய அமிருதம்வேண்டுமென்றால் அதனையும் (பாற்கடல் கடைந்து எடுத்து யாதொரு தொடர்பு மில்லாத தேவர்கட்கெல்லாம்) கொடுத்தவனான நீ,—ஓயா வாளி - (தனக்கு இலக்கானவரது உயிரைக் கவர்ந்ததன்றி) ஒழியாத அம்பை, ஒளித்து நின்று எய்வான் - மறைந்து நின்று (உன்மேல்) எய்தற்கு, ஏயா - உடன்பட்டு

வந்த—, இராமன் என்று உளான் - இராமனென்பவன், வாயால் எயினன் என்னின் - தன் வாய்மொழியால் (இன்னது தருகவென்று உன்னை) ஏவினனாயின், வாழ்வு எலாம் ஈயாயோ - உன் செல்வ வாழ்க்கைகளை யெல்லாம் (உன் தம்பியான சுக்கிரீவனுக்கு) நீ கொடுக்கமாட்டாயோ? (எ - று.)

நினது பெருவண்மையை உணராமல் நின்னை இராமன் மறைந்து நின்று அம்பெய்து கொன்றது வீணென்பதாம். 'ஓயா வாளி' என்பதற்கு - எப்பொழுதும் விசையையுடைய அம்பென்று கருத்துரைப்பாருமுளர். எய்வான் - எதிர்காலவினையெச்சம். எயா - எய்ந்து: உடன்பாட்டிறந்தகால வினையெச்சம்; எய்தல் - இசைதல், இணங்குதல். 'என்றுளான்' என்பது, 'என்றவன்' என்றதுபோல முதல் வேற்றுமைச் சொல்லுருபின தன்மையதாய் நின்றது; இனி, 'இராமனென்றுளான்' என்றது, பராமுகந்தோன்ற நின்றதென்னலாம். 'ஓயாவாளி யொளித்து நின்றெய்வான் எயாவந்த' என்றது, அவனது அடாத செய்கையைக் காட்டியவாறும். எயினன் = ஏவினன். வாயாலேவுதல் - வாய்திறந்து கூறுதல். ஈகுவாய், கு - சாரியை. 'வாயாலேவினனன்றி வாளியால், வீயாயேயமுதீயுமீளியாய்' என்றும் பாடமுண்டு. (௧௨)

௧௩. சொற்றேன்முந்துறவன்னசொற்கொளா
யற்றானன்னதுசெய்கலானென
வுற்றாயும்பியையூழிகாணுநீ
யிற்றாயானுனையென்றுகாண்கேனே.

(இ - ள்.) முந்துற - முன்னமே [சுக்கிரீவனுடன் போர்செய்தற்கு நீ புறப்படும்பொழுதே], சொற்றேன் - (இராமனென்பவன் சுக்கிரீவனுக்குப் பிராணசிநேகிதனா யமைந்து உன்னுயிர் கொள்ளுதற்கு உடன் வந்துளானென்று) சொன்னேன்: அன்ன சொல் கொளாய் - அந்த வார்த்தையை ஏற்றுக் கொள்ளாமல், அற்றான் அன்னது செய்கலான் என - அவ்விராமபிரான் அவ்வாறான தகுதியில் செயலைச் செய்யமாட்டானென்று சொல்லி, உம்பியை உற்றாய் - உன் தம்பியை [சுக்கிரீவனை] (ப்போரின் பொருட்டுச்) சேர்ந்து, ஊழி காணும் நீ இற்றாய் - (நெடுங்காலம் இறவாதிருந்து) கற்பாந்த காலத்தைக் காணவல்ல நீ இறந்து விட்டாய்; யான் உனை என்று காண்கேனோ - நான் உன்னை இனி எப்பொழுது காண்பேனோ! (எ - று.)

சொற்றேன், ற் - இறந்தகால விடைநிலை. அற்றான் - அகரச்சுட்டடியாப் பிறந்த பெயர்; ன், து - சாரியைகள்: அவை றகரமாத்திரிந்து உகரங் கெட்டது. இனி, அற்றான் - (விருப்புவெறுப்பு) இல்லாதவன் என்றலும், ஒப்பில்லாதவன் என்றலுமாம். இற்றாய்+யான்=இற்றாயான்: தனிக்குறிலைச்சாராத யகரம், யகரம்வரக் கெட்டது. காண்கேன், க் - எதிர்காலவிடைநிலை. (௧௩)

௧௪. நீறுமேருவுநீநெருக்கினுன்
மாறோர்வாளியுன்மார்பையீர்வதோ
தேறேன்யானிதுதேவர்மாயமோ
வேறோர்வாலிகொலாம்விளிந்துளான்.

(இ - ள்.) நீ நெருக்கினுல் - நீ சென்றுதாக்கினுல், மேருவும் நீறு ஆம் - மகாமேருகிரியும் பொடியாய் விடுமே; (அங்ஙனமிருக்க), ஓர் வாளி - ஓர் அம்பு, மாறு - (உனக்கு) எதிராய், உன் மார்பை ஈர்வதோ - (மகாபலசாலியான) உனது மார்பைப் பிளக்கமாட்டுமோ? இது தேவர் மாயமோ யான் தேறேன் - இது தேவர்கள்செய்த மாயைதானே? யான் அறிகின்றேனில்லை; (அன்றி), விளிந்துளான் - (இங்கே) இறந்துள்ளவன், வேறு ஓர் வாலிகொல் ஆம் - (நீ யன்றி) வேறே ஒருவாலிதானே? (எ - று.)

'விளிந்தநீ' எனவும் பாடமுண்டு. (௧௪)

௧௫. தகைநேர்வண்புகழ்நின்றுதம்பியார்
பகைநேர்வாருளரானபண்பினு
லுகநேர்சிந்தியுலந்தழிந்தவான்
மகனேகண்டிலையோநம்வாழ்வெலாம்.

(இ - ள்.) மகனே - பிள்ளாய்! [அங்கதனே!] தம்பியார் - (உன்தந்தைக்குத்) தம்பியாரான சுக்கிரீவர், தகை நேர் - பெருமைபொருந்திய, வண் - சிறந்த, புகழ் - (வாலிக்குத்தம்பியாயிருத்தலாகிய) புகழிலே, நின்று - (முதலில்) நிலைத்திருந்து, (பின்பு), பகை நேர்வார் உளர் ஆன பண்பினுல் - (அவரோடு) பகைமைகொள்பவரான தன்மையினுல், உக - (உன் தந்தையார்) இறக்க, நம் வாழ்வு எலாம் - நமது செல்வவாழ்க்கைகளெல்லாம், நேர் சிந்தி உலந்து அழிந்த - தகுதிகெட்டு அழிந்துபோயின; கண்டிலையோ - (இதனை நீ) பார்த்தாயில்லையோ? (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சிலப்பதிகாரத்தில் "நோதகவுண்டோ நும்மகனுர்க்கினி" என்றவிடத்திலும், மணிமேகலையில் "நினக்கிவன் மகனய்த்தோன்றியதூஉம்" என்றவிடத்திலும் 'மகன்' என்பது - புருஷனென்றமாத்திரமாய்க் கணவனென்ற பொருளில், வந்திருத்தலால், இங்கும் 'மகனே' என்பதற்கு - (என்) கணவனே! என்று பொருள்கொண்டு, அதற்குஏற்ப இச்செய்யுளுக்கு உரைகூறலுமாம். 'கண்டனையோ' எனவும் பாடமுண்டு. புகழ்நின்று என்பதற்கு - புகழினின்றும்(நீங்கி)என்றும், பகை நேர்வார் என்பதற்கு - பகையாய் எதிர்ப்பவரென்றும் உரைத்தலுமாம். அழிந்த-முற்று. 'புகழ்தின்று' என்ற பாடத்திற்கு புகழை யொழித் தென்க. (௧௫)

௧௬. அருமந்தற்றமகற்றும்வில்லியா
ரொருமைந்தற்குமடாததுன்னினுர்
தருமம்பற்றியதக்கவர்க்கெலாங்
கருமங்கட்டனையென்றல்கட்டதோ.

(இ - ள்.) அருமருந்து - (கிடைத்தற்கு) அரிய மருந்து போன்று, அற்றம் அகற்றும் - (பிறரது) ஆபத்தை நீக்குகின்ற, வில்லியார் - வில்லில்வல்லவரான இராமபிரான், ஒரு மைந்தற்கும் அடாதது உன்னினார் - ஒருவீரனுக்கும் தகாதசெய்கைச்செய்ய நினைத்துச் செய்துவிட்டார்; தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம் - தருமமார்க்கம்பொருந்திய பெரியோர்களுக்கெல்லாம், கருமம் கட்டளை என்றல் - (அவரவர்செய்யுஞ்) செயலே (அவரவரது பெருமையாகிய பொன்னின்மாற்றை யறிவதற்கு ஏற்ற) உரைகல்லாகு மென்பது, கட்டதோ - (அநுட்டானத்தில் வாராத வெறுங்) கட்டுப்பாடு வார்த்தைதானோ?

'ஒருமைந்தற்குமடாதது' என்றது, இருவர் தம்மிற்பொருகையில் அவர்களுள் ஒருவர்மீது மூன்றாமவரொருவர் மறைந்துநின்று அம்பெய்தலை. இனி இரண்டாமடிக்கு - எனது ஒருபுதல்வனுக்கு மாத்திரம் தகாதவினைவைவினைத்தார் என்று உரைப்பர் ஒருசாரார்; அப்பனைக்கொன்று சிற்றப்பனுக்கு அரசளித்துவிட்டார் என்பது, அதன்கருத்து. அருமந்து - அருமருந்து என்றதன் மரூஉ. 'அருமைந்தற்றமகற்றும்' என்ற பாடத்திற்கு - அருமையான பலத்தினால் (பிறரது) துன்பத்தைப்போக்குகின்ற என்று பொருள். 'அருள்வந்தற்றமகற்றும்' என்றும் பாடமுண்டு. கட்டளை - கட்டளைக்கல்; உரைகல். "பெருமைக்கு மேனைச்சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக்கல்" என்ற நீதி உண்மையாகுமானால், பெரியோர்களெல்லாரும் நல்லதொழில்களையே செய்யவேண்டுமே; அங்ஙனம் இராமபிரான் செய்யாமையால், அந்நீதி வெறுங்கட்டுப்பாடான வார்த்தையோ? என்றாள். கட்டதோ என்றதில் 'அது' - பகுதிப்பொருள்விகுதி. 'கட்டதோ' என்பதற்கு - உண்மையாகுமோ? என்றும், நீங்கிவிட்டதோ? என்றும் உரைக்கலாம் 'கருமங்கட்டளையென்கை விட்டதோ' என்று பாடமோதுவாரு முளர். (கசு)

[இதுவும், அடுத்தகவியும் - அநுமான் தாரையை அந்தப்புரத்திற்கு அனுப்பிவிட்டு வாலிக்கு அந்திமக்கிரியை செய்வித்தமை கூறும்.]

கஎ. என்றாளின்னன்னபன்னியின்னலோ
டொன்றாவுள்ளுணர்வேது முற்றிலா
ணின்றாளந்நிலைநோக்கிநீதிசால்
வன்றாண்மால்வரையன்னமாருதி.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) என்றாள் இன்னன பன்னி - என்று இத்தன்மையனவான வார்த்தைகளை மேன்மேற்சொல்லி, இன்னலோடு ஒன்றா - துன்பத்தோடு கூடி, உள் உணர்வு ஏதும் உற்றிலாள் - அகத்திலெழும் அறிவு சிறிதும் பொருந்தாதவளாய் [மூர்ச்சித்து], நின்றாள் - செயலொழிந்தாள்; அந்நிலை நோக்கி - அந்த நிலைமையைப் பார்த்து, நீதி சால் வல் தாள் மால் வரை அன்ன மாருதி - நீதிநிரம்பியவனும் வலியதாழ்வரைகளையுடைய பெரியமலை

போன்றவனுமான அநுமான்,—(எ - று.)—'ஏவி' என் அடுத்தகவியோடு தொடரும்.

இன்னல் என்ற பெயர் - இன் அல் என்று பிரிந்து, 'இனியதல்லாத தென்று காரணப்பொருள்படும். மலையின் அடிப்பக்கத்தை 'பாதசைலம்' என்னும் மரபுபற்றி, அது இங்கே 'தாள்' எனப்பட்டது. இனி, வல் தாள் - வலிய முயற்சியையுடைய என்று உரைத்து அநுமானுக்கு அடைமொழியாக் குதலுமாம்; சுக்கிரீவனுக்கும் இராமனுக்கும் சிநேகஞ்செய்வித்தது முதலாக அநுமானது முயற்சி வலிமைத்திறம் பிரசித்தம். வலிய கால்களையுடைய அநுமா னென்றலு மொன்று. அநுமானுக்கு மலை - அழித்தற்கு அருமை, அளக்கலாகா அளவு, அசைக்கலாகாமை, கம்பீரமான தோற்றம், பெருமை முதலியவற்றில் உவமம். மாருதன் - வாயு; அவனது மகன், மாருதி: வட மொழித் தத்திதாந்தநாமம். கேஸரியென்னும் வாநரவீரனது மனைவியான அஞ்சநா தேவியினிடத்தில் வாயுவின் அநுக்கிரகத்தால் தோன்றியவன் இவன். 'இன்னலோடொன்றுறுனர்' என்றும் பாடமுண்டு. (௧௭)

௧௮. மடவாராலமடந்தைமுன்னர்வா
ழிடமேவும்படியேவிவாலிபாற்
கடன்யாவுங்கடைகண்டுகண்ணனோ
டுடனுவுற்றவெலாமுணர்த்தலும்.

(இ - ள்.) மடவாரால் - (தாரையுடன் வந்து நின்ற அவள் தோழியர்க ளான) வாநரமகளிரைக்கொண்டு, அ மடந்தை - அந்தத்தாரையை, முன்னர் வாழ் இடம் மேவும்படி ஏவி - முன்பு (அவள்) வசித்திருந்த இடத்தில் [கிஷ் கிந்தாநகரத்து அரண்மனையந்தப்புரத்தில்] போய்ச்சேரும்படி அனுப்பிவிட்டு, வாலிபால் கடன் யாவும் கடைகண்டு - வாலிவிஷயமாகச் செய்யவேண்டிய கடமைகளை [அந்திமக்கிரியைகளை] யெல்லாம் (அங்கதனைக்கொண்டு) முழு வதும் செய்வித்து, உடன் ஆ (க) - உடனே, கண்ணனோடு - ஸ்ரீராமபிரா னுடன், உற்ற எலாம் உணர்த்தலும் - நடந்தசெய்திகளையெல்லாஞ்சொன்ன வளவில்,—(எ - று.) 'அருக்கனுர்மேலைக்கிரிபுக்க பொழுதினில்' என அடுத்த கவியோடு தொடரும்.

மடவார் - மடமைக்குணமுடையவர்; மடமை - பேதைமை: அறிந்தும் அறியாதுபோலிருக்குந்தன்மை; இது, மகடூஉக்குணம் நான்கில் ஒன்று: மற் றவை - நாணம், அச்சம், பயிர்ப்பு. "பேதைமையென்பது மாதர்க்கணிகலம்" என்றபடி மடமைக்குணம் சிறத்தலால், இதுபற்றி, மகளிர்க்கு மடவாரென்று பெயராயிற்று. கடைகண்டு - நிறைவேற்றி. கண்ணன் - கரியோனென்னும் பொருளதாகிய க்ருஷ்ணனென்னும் வடமொழியின் சிதைவு; இது, இங்கே அவதாரப்பெயரன்றி வந்த காரணப்பெயர்; "கவணவண்ணனொடு கண்ண னுறை தோளன்" என்றார் ஆரணியகாண்டத்திலும். உணர்த்தல் - தெரிவித் தல். 'உடனுய்', 'உரைத்தலும்' என்பனவும் பாடம். (௧௮)

[சூரியாஸ்தமநசமயமாதல்.]

கசு. அகம்வேரற்றுகவீசருக்கனூர்
புகுமேலைக்கிரிபுக்கபோழ்தினி
னகமேயொத்தகுரக்குநாயகன்
முகமேயொத்ததுமூரிமண்டிலம்.

(இ - ள்.) அகம் வேர் அற்று உக - இருள் வேரோடு அழிந்து போம் படி, வீச - ஒளி வீசுகின்ற, அருக்கனூர் - சூரியபகவான், புகு மேலைக்கிரி புக்க போழ்தினில் - (நாள்தோறும் தான்) செல்லுமிடமான மேற்குத்திசையிலுள்ள அஸ்தமநகிரியை அடைந்தபொழுதில்,—மூரி மண்டிலம் - பெரிய அச்சூரியமண்டலமானது, நகமே ஒத்த குரங்கு நாயகன் முகமே ஒத்தது - மலைபோன்ற வாநரராஜனான வாலியின் முகத்தையே போன்றது [இரத்தந் தெறித்ததனாற் சிவந்த அவன்முகம்போல அந்திப்பொழுதிற்சூரிய செந்நிறமிகுதியை யடைந்தது]; (எ - று.)

இவ்வுவமை, ஒளிமழுங்கியதற்கும் ஏற்கும்: இனி, வாலியின் முகம் இயல்பிற் செந்நிறமுடைய தாதலாற் சாயங்காலத்துச் சூரியனுக்கு உவமை கூறப்பட்டதென்று கொள்ளுதலும் அமையும். இவ்வர்ணனை வால்மீகிராமாயணத்திலே தாரைபுலம்பலில் "நீ உயிரொழிந் திருக்கையிலும் உன்முகம் மகிழ்ச்சி பெற்றதுபோல அஸ்தகிரியையடைந்த சூரியன்போன்ற வர்ணமுடையதாய்ப் பிழைத்திருக்கும்போது இருந்தவாறுபோலவே காணப்படுகின்றது" என்று வந்துள்ளது. இவ்வாறே ஊன்றி நோக்குமிடத்து, கம்பராமாயணத்திற் கூறிய பொருள்கள் பலவற்றை வால்மீகிராமாயணத்தில் ஆங்காங்கு வெளிப்படையாகவும் மறைபொருளாகவுங் காணலாம். அனைதுபற்றியே, சுலோகம் சுலோகமாக ஒழுங்காய் மொழிபெயர்க்கப் படாததாகவும் பல இடங்களில் மாறுபாடுடையதாகவும் இருக்கையிலும் கம்பராமாயணத்தை வால்மீகிராமாயணத்தின் வழிநூலென்பர் உணர்ந்தோர்.

அகம் - பாவம்; வடசொல்; அது, இலக்கணையாய், அதுபோலக் கருநிறமான இருளை யுணர்த்திற்று. அகம் என்ற சொல்லுக்கு மரமென்றும் ஒருபொருளுள்ளதனால், முதலடிக்கு - இருளாகிய மரம் வேரோடு அற்று விழும்படி அதனைவீசியெறிகிற சூரியனெனக் கொள்ளலாம்; சிலிஷ்டரூபகம். இனி, பாவமாகியமரம் வேரோடு அற்றுவிழும்படி அதனைவீசியெறிகின்ற சூரியனென்றலும் அமையும். சூரியனை வந்தனைவழிபாடுகள் செய்வார்க்குத் தீவினைகள் யாவும் தொலையுமென நூற்கொள்கை யுண்டு. வேர் அறுதல் - நிர்மூலமாதல். நகம் என்ற வடசொல், நடவாதது [புடைபெயராதது] என்று காரணப்பொருள்படும். மூரி - பழமையும், வலிமையுமாம். மண்டிலம் - வடசொல்திரிபு. மேலைக்கிரி, ஐ - சாரியை. (கசு)

[சூரியன் அஸ்தமித்தலும், இராமன் இராப்பொழுதைக் கழித்தலும்.]

உ௦. மறைந்தான்மாலையருக்கன்வள்ளியோ
னுறைந்தான்மங்கைதிறத்தையுன்னுவான
குறைந்தானெஞ்சுகுழைந்தழுங்குவா
னிறைந்தார்கங்குலின்வேலைநீந்தினான்.

(இ-ள்.) மாலை-மாலைப்பொழுதில், அருக்கன்-சூரியன், மறைந்தான்—; வள்ளியோன் - வண்மைக் குணமுடையவனான இராமபிரான், மங்கை திறத்தை உன்னுவான - சீதையின் நிலைமையைக் கருதுபவனாய், உறைந்தான் - (அங்கு ஓரிடத்தில்) தங்கி, குறைந்தான் - மெலிந்தவனும், நெஞ்சு குழைந்து அழுங்குவான - மனம் நெகிழ்ந்து வருந்துபவனுமாகி, நிறைந்து ஆர் கங்குலின வேலை நீந்தினான - நிறைந்துபொருந்திய இராப்பொழுதாகிய கடலை அரிதிற்கடந்தான; (எ - று.)

மனைவியைப் பிரிந்து வருந்துபவர்க்கு இராப்பொழுது நீண்டதாகத் தோன்றுமாதலாலும், அதனைக்கழித்தல் அரிதாதலாலும், 'நிறைந்தார்கங்குலின் வேலை நீந்தினான' என்றார். மாலை - அந்திப்பொழுது. (உ௦)

[சூரியோதய வர்ணனை.]

உக. புதல்வன்பொன்மகுடம்பொறுத்தலான்
முதல்வன்பேருவகைக்குமுந்துவா
னுதவும்பூமகள்சேரவொண்மலர்க
கதவஞ்செய்யகரத்தினீக்கினான்.

(இ-ள்.) புதல்வன - தன்மகனான சுக்கிரீவன், பொன்மகுடம் பொறுத்தலால் - பொன்மயமான கிரீடத்தை (அன்றைத்தினத்தில்) தரிக்கப்போவது பற்றி, முதல்வன - (அவனது) தந்தையான சூரியன், பேர் உவகைக்கு முந்துவான - (அதனைக்கண்டு) மிக்க மகிழ்ச்சியை யடைதற்கு முற்பட்டவனாய்,—உதவும் பூமகள சேர - (அந்தப் பட்டாபிஷேகத்திற்கு) உதவியாகின்ற திருமகள் வந்து (அவனைச்) சேரும்படி, ஒள் மலர் கதவம் - (அவளிருக்குமிடமான) சிறந்ததாமரைமலர்களின இதழ்களாகிய கதவுகளை, செய்ய கரத்தின் நீக்கினான் - தனது சிவந்த கிரணங்களாகிய கைகளினால் திறந்து விட்டான்; (எ - று.)

இராப்பொழுது கழியுமளவில் இயல்பாகச் சூரியனுதித்தலை - அற்றைநாள் தன்மகனாகிய சுக்கிரீவன் முடிசூடும் நாளாதலால் அம்மகோத்ஸவத்தைக்கண்டு மிகவும்மகிழ்தற்பொருட்டுச் சூரியன எதிரில்வந்ததாகவும், சூரியனுதித்தவளவில் தாமரை இதழ்விரிந்துமலர்தலை - திருமகள் அவனைச்சேரும்படி அவளிருக்குமிடமான தாமரையென்னும் வீடுகளின இதழ்க்கதவுகளைத் தனது சிவந்த கிரணங்களாகிய கைகளை நீட்டித் திறந்துவிட்டதாகவும் உத்ப்ரேக்ஷித்தார்; தற்குறிப்பேற்றவணி. பூமகள சேர - இரவில் தாமரை இதழ்

குவிந்திருக்கும்போது அதனுள்ளே வசித்திருக்கின்ற திருமகள் அதிலிருந்து வெளிப்பட்டுத் தன்மகனைச்சேருமாறு எனக. இனி, செல்வமளிப்பவளான திருமகள் அவ்விடத்து மலரும் தாமரைகளில் வந்துவீற்றிருக்கும்படி யெனக் கொண்டு அதற்கேற்ப உரைத்தலுமாம். மகுடம், கரம் - தற்சமவடசொற்கள். கரமென்பது கிரணமென்றும் கையென்றும் பொருள்படுதலை "கரமென்ப கிரணஞ் செங்கை" என்ற நிகண்டினாலும் அறிக. 'கரத்தின்' என்ற ஒரு சொல்லுக்கே கரமாகியகரத்தால் [கிரணமாகிய கையினால்] என்று இருபொருள் கொண்டு உரைத்தது சிலேடையுருவகம். 'செய்ய' என்ற அடைமொழி, இருபொருளுக்கும் ஏற்கும். கதவம், அம - சாரியை. எல்லாமலர்களிலும் தாமரை சிறத்தலால், 'ஒண்மலர்' எனப்பட்டது. பூமகள் - சிறந்த மலராகிய செந்தாமரையில் வாழும் பெண். முதல்வன் - அதிதிதேவியின் புதல்வரான தேவர்களுள் முந்தியவனாய் ஆதித்யனென்று பேர்பெற்றவ னெனறுமாம்.

இதுவரையில் வாலிவதைப்படல மென்றும், இதற்குமேல் அரசியற் படல மென்றும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (உக)

[சுக்கிரீவனுக்கு முடிசூட்டும்படி இராமன் இலக்கு
மணனுக்குக் கட்டளையிடுதல்.]

உஉ. அதுகாலத்திலருட்குநாயகன்
மதிசாறமபியைவல்லையேவினன்
கதிரோன்மைந்தனையையகைகளால்
விதியான்மௌலிமிலைச்சுவாயென.

(இ-ள்.) அதுகாலத்தில் - அப்பொழுது,—அருட்கு நாயகன் - கருணைக்குத்தலைவனான இராமபிரான்,—மதிசால் தம்பியை - அறிவுமிக்க தன் தம்பியான இலக்குமணனை நோக்கி,—'ஐய - அப்பா! கதிரோன் மைந்தனை - சூரியன் மகனான சுக்கிரீவனை, கைகளால் - (உன்) கைகளால், விதியால் மௌலி மிலைச்சுவாய் - நூல்முறைமைப்படி முடிசூட்டுவாய்,' என - என்று, வல்லை ஏவினன் - விரைவாகக் கட்டளையிட்டான்; (எ - று.)

கைகேயி பெற்ற வரத்தின்படி தசரதன்வார்த்தையைப் பரிபாலனஞ் செய்தற்பொருட்டுப் பதினான்கு வருஷம் வநவாஸஞ்செய்வதாக உடன்பட்டு வந்த இராமபிரான் அவ்வநவாசகாலத்திலே தான் நகரதினுட்பிரவேசிக்கலாகாதென்று கொண்டு, தானே கிஷ்கிந்தாபுரியுட்சென்று சுக்கிரீவனுக்குப்பட்டாபிஷேகஞ் செய்யாமல், இலக்குமணனை நோக்கி'நீ போய் முடிசூட்டிவா' என்று கட்டளையிட்டருளினா னென்க. இராமபிரானது வநவாசம் மாத்திரமே கைகேயி வேண்டிய வரமென்பதும், இலக்குமணனும் சீதையும் அப்பெருமானைப்பிரியமாட்டாமல் தாமாக உடனவந்தன ரென்பதும் அறியத்தக்கன. பட்டாபிஷேகம் நகரத்திலேயே நடத்தவேண்டிய சடங்கென்பது, வெளிப்படை.

வல்லை மிலேச்சவாய் என இயைத்தலுமாம். தம்பியைத் தமையன் ஐய வென்றுவிளித்தது. அன்புபற்றிவந்த மரபுவழுவமைதி. ஐயகைகளால் என்று எடுத்து, அழகிய கைகளால் என்று உரைத்தலும் அமையும். மௌலி - சிரசு; வடசொல்: இது. இங்கு இடவாகுபெயராய், அதிலணியுங் கிரீடத்தைக் குறித்தது; 'முடி' என்ற தமிழ்மொழி போல. 'மிலேச்சிவாவென்று' என்பதும் பாடம். (உஉ)

[அதற்குவேண்டுவனகோணரும்படி இலக்குமணன் அனுமானுக்குக் கூறுதல்]

உங. அப்போதேயருணின்றவண்ணலு
மெய்ப்போர்மாருதிதன்னைவீரநீ
யிப்போதேகொணரின்னசெய்வினைக்
கொப்பாம்யாவையுமென்றுணர்த்தலும்.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) அருள்நின்ற அண்ணலும் (இராமபிரானது) கட்டளையில் நிற்கின்ற பெருமையிற் சிறந்தவனான இலக்குமணனும்,—அப்போதே - அப்பொழுதே, மெய் போர் மாருதிதன்னை - நீதிதவறாத போரைச் செய்தலில் வல்ல அநுமானை நோக்கி,—வீர - வீரனே! இன்ன செய்வினைக்கு ஒப்பு ஆம் யாவையும் நீ இப்போதே கொணர் - இந்த [பட்டாபிஷேக]காரியத்திற்கு வேண்டுவனவான எல்லாப்பொருள்களையும் இப்பொழுதே நீ கொண்டுவந்து சேர்ப்பாய்,' என்று உணர்த்தலும் - என்று கூறியவுடனே,—(எ - று).— 'யாவையும் நண்ணும் வேலையில்' என அடுத்தகவியோடு தொடரும்.

அருள் - அருள்மொழி; இலக்கணை. அருள் நின்ற - தமையனது கட்டளையைக் கடவாத என்க; இனி, (இராமனது) அருளுக்கு இலக்காய் நின்ற என்றலும், ஜீவகாருணியம் பொருந்திய என்றலுமாம். அண்ணல் - ஆண்பாற் சிறப்புப்பெயர். மெய் போர் மாருதி - உடல்வலிமை கொண்டு செய்யும் போரில் வல்ல மாருதி யென்றலும், சத்தியத்திலும் போரிலும் வல்ல மாருதி யென்றலுமாம். 'மெய்ப் பேர் மாருதி' என்ற பாடத்திற்கு - உண்மையான புகழையுடைய மாருதி யென்க. உணர்த்தல் - தெரிவித்தல். 'உரைத்தலும்' எனவும் பாடமுண்டு. கொணர் - கொணு என்பது ஈறுகுறுகி விரித்தல்விகாரம் பெற்றது. (உங)

[அங்ஙனமே அநுமான் கொணர்தல்.]

உச. மண்ணுநீர்முதன்மங்கலங்களு
மெண்ணும்பொன்முடியாதியாவையு
நண்ணும்வேலையினம்பிதம்பியுந்
திண்ணஞ்செய்வனசெய்துசெம்மலே.

(இ - ள்.) மண்ணும் நீர் முதல் மங்கலங்களும் - (சுக்கிரீவனை) நீராட்டுதற்குஉரிய புண்ணியதீர்த்தம் முதலிய மங்கலகரமான பொருள்களும், எண்

னும் பொன் முடி ஆதி யாவையும் - (யாவராலும்) நன்கு மதிக்கப்படுகின்ற பொன்மயமான கிரீடம் முதலிய மற்றும் எல்லா உபகரணங்களும், மண்ணும் வேலையில் (அநுமானாற் கொணரப்பட்டு) வந்து சேர்ந்தவளவில்,—நம்பி தம்பியும் - புருஷோத்தமனான இராமபிரானது திருத்தமபியாகிய இலக்குமணனும், செம்மலை - பெருமையிற் சிறந்தவனான சுக்கிரீவனுக்கு, திண்ணம் செய்வன செய்து - (முடிசூட்டுதற்குமுன்பு) தவறாமற் செய்யவேண்டிய செயல்களைச் செய்து, (எ-று.)— 'மௌலிசூட்டினன்' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

மண்ணும் நீர்முதல் மங்கலங்கள் - மங்கலஸ்நாநஞ் செய்வித்தற்கு வேண்டும் நீர் முதலியன. மண்ணும்நீர் - அபிஷேகதீர்த்தம்: கங்கைமுதலிய புண்ணியநதிகளின தீர்த்தமும், சமுத்திரஜலமும். மண்ணுநீர் எனறவிடத்து, நகர'வொற்று - விரித்தல்விகாரம். நம்பி - ஆடவரிற் சிறந்தவன; ஆண்பாற்சிறப்புப்பெயர்: இதறகு - பூர்ண 'னெனறு பொருளுரைப்பா. நமது தலைவனெனக் கொண்டால், 'நம்' முதனிலையாக நமக்கு இனறு னென்னும் பொருள் பட வருவதோருயர்ச்சிசசொல்லாம்; பி - பெயர்விகுதி. (யாவராலும்) நம்பப்படுபவ னென்று பொருள்கொண்டால், இ - செயப்படுபொருள் விகுதியாம். திணணம் - உறுதி. செமமல்-செவவையுடையோன்; ஆண்பாற் சிறப்புப்பெயா. செம்மலை - உருபுமயக்கம் - ஈற்றடி - முற்றுமோனை. ஆதி - வடசொல். (உ௪)

[சுக்கிரீவ பட்டாபிஷேகம்.]

உ௫. மறையோராசிவழங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர்தூவநன்னெறிக்
கிறையோர்முன்வினைசெய்யவேந்தலைத்
துறையோர்நூன்முறைமௌலிசூட்டினன்.

(இ-ள்.) மறையோர் ஆசி வழங்க-பிராமணர்கள் ஆசீர்வாதஞ் செய்யவும்,—வான உளோர் நறை தோய் நாள் மலா தூவ - தேவர்கள் தேனநிரம்பிய அன்றுமலர்ந்த [புதிய] (கற்பகதருக்களின்) மலர்களைச் சொரியவும்,—நல் நெறிக்கு இறையோா முன் வினை செய்ய - சன்மார்க்கத்திறகுத் தலைவரான முனிவர்கள் புரோகிததொழில்செய்யவும், எந்தலை - பெருமையிற்சிறந்தவனை அச்சுக்கிரீவனை, துறையோர் நூல் முறை - நல்லொழுக்கவழியில்நடப்பவரான பெரியோர்கள கூறிய சாஸ்திரங்களில் விதித்த முறைமைப்படி மௌலி சூட்டியினன - முடி தரிப்பித்தான்; (எ - று.)

மறையோர் - வேதம்வல்லவர்; வேதங்களை ஓதுதலோடு ஓதுவித்தற்கும் உரியவர். இச்சடங்கிற்கென்று பிராமணர்கள் வரவழைக்கப்பட்டன ரென்பர் ஒருசாரார்; மற்றொருசாரார், வானரர்களிலும் பிராமணஜாதிகளுண்டென்பர். ஆசிஸ்-வடசொல. நறை தோய்-நறுமணம் நிரம்பிய எனினுமாம். நன்னெறி - வேதசாஸதிரங்களிற்கூறிய நல்லொழுக்க வழி. முன்வினைசெய்

தல் - முன்னே இருந்து செய்யவேண்டுந் தொழிலைச் செய்தல். 'நன்னெறிக் கிறையோன்றன்னிளையோனவவேந்தலே' என்ற பாடம் சிறவாது; குளகச் செய்யுள்களுட் கீழ்ச்செய்யுளில் 'நம்பிதம்பி' என எழுவாய் வந்தபின்னர் இச்செய்யுளில் 'நன்னெறிக்கிறையோன்றன்னிளையோன்' என அப்பொரு ளையே யுணர்த்தும் எழுவாய் வந்து கூறியதுகூற லாகுதலால். ஏந்தல் - ஆண்பாற்சிறப்புப்பெயர்: இதற்கு - ஏந்தியவன், உயர்ந்தவன் எனக் காரணப்பொருள்கொண்டால், இதில் அல் - கருத்தாப்பொருள்விகுதி யென்ன லாம். (உ௫)

[பின்பு சுக்கிரீவன் வந்து இராமனைவணங்க, அப்பெருமான் அவனுக்குச் சிலஉறுதிமொழி கூறத் தொடங்குதல்.]

உ௬. பொன்மா மௌலி புனைந்து பொய்யிலான்
றன்மா னக்கழ றாழும் வேலையி
னன்மார் பிற்றழு வற்று நாயகன்
சொன்னான் முற்றிய சொல்லி னெல்லையான்.

(இ - ள்.) (சுக்கிரீவன்), பொன் மா மௌலி புனைந்து - பொன்மயமான சிறந்த கிரீடத்தைத் தரித்து, பொய் இலான் தன் மானம் கழல் தாழும் வேலையில் - பொய்ம்மொழியில்லாதவனான இராமபிரானது பெருமையை யுடைய திருவடிகளில் வணங்குமளவில்,—நாயகன் - (எல்லாப்பொருள் கட்கும்) தலைவனும், முற்றிய சொல்லின் எல்லையான் -நிரம்பிய பாஷையின் முடிவெல்லை எவ்வளவுண்டோ அவ்வளவையும் அறிந்தவனுமான அவ் விராமபிரான், நல் மார்பில் தழுவுற்று - அழகிய தனதுமார்பில் (அந்தச் சுக் கிரீவனை) அணைத்துக்கொண்டு, சொன்னான் - (சிலஉறுதிகளைக்) கூற லானான் ; (எ - று )— அதனை, அடுத்த பதினொருகவிகளிற் காண்க.

'வாலியைக்கொன்று அவனது அரசாட்சியையும் உனதுமனைவியையும் உனக்குக்கொடுப்பேன்' என்று முன்பு சுக்கிரீவனுக்கு வாக்குதத்தஞ்செய்த படி இராமபிரான் நிறைவேற்றிவிட்டமைபற்றி, அப்பெருமானை இங்கே 'பொய்யிலான்' என்றார். இனி, பொய்யிலான - சுக்கிரீவன, பொன் மா மௌலிபுனைந்து, தன் - தனது [இராமனது], மானக்கழல் தாழும்வேலையில் என்று பதவுரைகூறலுமாம்; இவ்வுரைக்கு, தனது காரியத்தை இராமபிரான் முடித்தவுடன் தான் அவனதுகாரியத்தை முடிப்பதென்ற கோட்பாட் டிற்கு இணங்கிய சுக்கிரீவன் அங்ஙனமே தான் முடிதரித்துக்கொண்டவுடன் இராமகாரியஞ் செய்தற்பொருட்டு இராமனிடம் வந்தமைபற்றி அவனை 'பொய்யிலான்' என்றதாகக் கொள்க. தழுவுற்று, உறு - துணைவினை. 'தழு வுற்றநாயகன்' என்ற பாடத்திற்கு, 'அந்நாயகன்' என்றது அகரயகனைத் தொகுத்தல் விகாரமடைந்த தென்க. 'முற்றிய சொல்லினெல்லையான்'— "தென்சொற் கடந்தான் வடசொற்கலைக் கெல்லைதேர்ந்தான்" என்றார் அயோத்தியாகாண்டத்திலும். இனி, முற்றியசொல் - பழமையான வேதம்:

அதின் எல்லை - வேதாந்தம்; அதற்கு விஷயமானவன் என்று உரைத்தலு மாம். (உசு)

## வேறு.

[இதுமுதற் பதினேருகவிகள் - சுக்கிரீவனுக்கு இராமபிரான் உறுதிகூறல்]

உஎ. ஈண்டுநின் றேகி நீநின் னியல்பமை யிருக்கை யெய்தி
வேண்டுவ மரபி னெண்ணி விதிமுறை யியற்றி வீர
பூண்டபே ரரசுக் கேற்ற யாவையும் புரிந்து போரின்
மாண்டவன் மைந்த னோடும் வாழ்திநற் றிருவின் வைகி.

(இ - ள்.) வீர - வீரனே! நீ—, ஈண்டுநின்று ஏகி - இவ்விடத்திலிருந்து போய், நின் இயல்பு அமை இருக்கை எய்தி - உனக்குஇயல்பாக [உரியதாக] ப் பொருந்திய இருப்பிடத்தை [கிஷ்கிந்தாபட்டணத்தை] யடைந்து வேண்டுவ - நீசெய்யவேண்டுவனவான காரியங்களை, மரபின் எண்ணி முறைப்படி ஆலோசித்து, விதிமுறை இயற்றி - (அச்செயல்களைச் சாஸ்திரங்களில்) விதித்த முறைப்படி செய்து, பூண்ட பேர் அரசுக்கு ஏற்ற யாவையும் புரிந்து-(நீ) ஏற்றுக்கொண்ட பெரிய அரசாட்சிக்குத் தக்க செயல்களெல்லாவற்றையுஞ் செய்து, போரில் மாண்டவன் மைந்தனோடும் - போரிலிறந்தவனை வாலியினது மகனாகிய அங்கதனுடனே, நல் திருவின் வைகி வாழ்தி - சிறந்த செல்வவாழ்க்கையில் நிலைபெற்று வாழ்வாயாக; (எ - று)

'போரின்மாண்டவன்மைந்தனோடும் நல்திருவின்வைகி வாழ்தி' என்றதனால், அங்கதனை இளவரசனாகக்கொண்டு வாழ்வாயாக வென்று உணர்த்தியவாறும். இருக்கை-இருக்குமிடம்; 'கை' விகுதிபெற்ற தொழிலாகுபெயர். வேண்டுவ - பலவின்பாற்பெயர்.

இதுமுதல் இப்படலம்முடியுமளவுமுள்ள இருபத்தெட்டுக்கவிகள் - இப்படலத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (உஎ)

உஅ. வாய்மைசாலறிவின்வாய்த்தமந்திரமாந்தரோடுந்
தீமைதீரொழுக்கின்வந்ததிறத்தொழின்மறவரோடுந்
தூய்மைசால்புணர்ச்சிபேணித்துகளறுதொழிலையாகிச்
சேய்மையோடணிமையின்றித்தேவரிற்றெரியநிற்றி,

(இ - ள்.) வாய்மை சால் - சத்தியத்தோடு கூடிய, அறிவின் - அறிவினால், வாய்த்த - சிறப்பமைந்த, மந்திர மாந்தரோடும் - மந்திரிகளுடனும். தீமை தீர் ஒழுக்கின் வந்த - குற்றமற்ற நல்லொழுக்கத்தோடு கூடியொழுகிய, திறம் தொழில் மறவரோடும் - வலிமைக்கேற்ற தொழில்களையுடைய வீரர்களான சேனைத்தலைவர்களுடனும். தூய்மை சால் புணர்ச்சி பேணி - பரிசுத்தியமைந்த சேர்க்கையை விரும்பிச்செய்து, துகள் அறு தொழிலை ஆகி - குற்றமற்ற செயல்களைச் செய்பவனாய், சேய்மையோடு அணிமை இன்றி தேவரின் தெரிய நிற்றி - (அந்த மந்திரிகள் சேனாதிபதிகள் முதலியோர் [illegible]

ஞுடன் பழகுமிடத்து உன்னைவிட்டுவிலகி) நெடுந்தூரத்தில் நிற்றலும் மிக நெருங்குதலு மில்லாமல் (உனைத்) தேவர்களைப்போலக் கருதும்படி நிற்பாயாக; (எ - று.)

பட்டாபிஷேக காலத்தில் அரசர்கட்கு அறிவுடையோர் நீதிபோதித்தல் முறைமை; அதன்படி, முற்றுணர்வினனான இராமபிரான் மகாராஜர்க்கு இங்ஙனம் நீதிபோதஞ் செய்கின்றன னென்க. இராமனுக்கு நாளைக்கு முடிசூட்டுவதென்று நிச்சயித்தபோது தசரதசக்கரவர்த்தி சொன்னபடி வசிஷ்டமுனிவர் நீதியுணர்த்தியதை அயோத்தியா காண்டத்திலும், ஸௌராஷ்ட்ர தேசத்துத் தேவநகரத்தில் அரசாண்ட சோமகாந்தராஜன் தன் மகனான ஏமகண்டனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்ய நிச்சயித்தபோது அவனுக்குத் தருமோபதேசஞ் செய்ததை விநாயகபுராணத்து உபாசனா காண்டத்து அரசியற்கைப் படலத்திலுங் காண்க. இங்கு 'செய்மையோ டணிமை யின்றி' என்ற விஷயம், ஸ்ரீவால்மீகி ராமாயணத்தில் வாலி அங்கதனுக்கு அறிவு கூறுமிடத்து "யாருடனும் அதிக ஸ்நேகம் செய்யத்தக்கதன்று, ஸ்நேகமில்லாமையும் செய்யத் தக்கதன்று: இரண்டும் பெரிய குற்றமாம்; ஆகையால், இடைநிலராய் ஒழுகவேண்டும்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

சேய்மையோடு அணிமை இன்றி—திருக்குறளில் மன்னரைச் சேர்ந்தொழுகலென்னும் அதிகாரத்தில் "அகலா தணுகாது தீக்காய்வார்போல்க, இகல் வேந்தர்ச் சேர்ந்தொழுகுவார்" என்றது காண்க. மிக விலகினாற் பயன் கொடாமல் மிக நெருங்கினால் தம்மை அவர் அவமதித்ததாக நினைத்துக் கோபித்தல், வேந்தரியல்பு. தேவரின தெறிய நிற்றி—மற்றும் திருக்குறளில் அவ்வதிகாரத்தில் "இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற, வொளியோ டொழுகப்படும்" என்றவிடத்திற் பரிமேலழகர் 'ஒளி - உறங்காநிற்கவும் தாம் உலகங்காக்கின்ற அவர் கடவுள் தன்மை; அதனோடு பொருந்த ஒழுகுதலாவது - அவர் கடவுளரும் தாம் மக்களுமாய் ஒழுகுதல்' என்றது காண்க. "திலகநீண் முடித் தேவரும் வேந்தரு, முலகமாந்தர்க ளொப்பவென்றோது" என்றது, ஸாமாந்ய ந்யாயம். தேவரின், இன் - ஐந்தனுருபு, ஒப்புப் பொருளது. நிற்றி - ஏவலொருமை. தகுதி யல்லாத வழியால் நட்புப் பாராட்டுதலையொழித்தற்கு, 'தூய்மைசால் புணர்ச்சிபேணி' என்றார். மந்திரமாந்தர் - ஆலோசனைக்கு உரிய ஆடவர். தொழிலை - தொழிலை யுடையாய்; முன்னிலை யொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். (உஅ)

உகூ. புகையுடைத் தென்னி னுண்டு பொங்கனலங் கென்றுன்னு
மிகையுடைத் துலக நூலோர் வினையமும் வேண்டற் பாற்றே
பகையுடைச் சிந்தை யார்க்கும் பயனுறு பண்பிற் றீரா
நகையுடை முகத்தை யாகி யின்னுரை நல்கு நாவால்.

(இ - ள்.) உலகம் - உலகத்தில் வாழ்கின்ற ஜநங்களின் சமூகம்,—புகையுடைத்து என்னின் - (ஓர் இடம் மேலே காணப்படும்) புகையையுடையதாயிருந்தால், (அதுகொண்டு), அங்கு பொங்கு அனல் உண்டு என்று உன்

னும் - அவ்விடத்திலே எழுந்தெரியு மியல்புடைய நெருப்பு உள்ளது என்று ஊகித்து உணர்கின்ற, மிகை உடைத்து - மிகுதியான அறிவை யுடையது: (ஆதலால், அந்த அநுமானப் பிரமாணம் வேண்டுவ தாதலோடு), நூலோர் வினையமும் வேண்டல் பாற்றே - நீதிநூல்வல்லவராற் கூறப்படுகின்ற வஞ்சனையும் (அரசர்க்கு) விரும்பத் தக்கதேயாம்; பகை உடை சிந்தையார்க்கும் - (உன்பக்கல்) பகைமையுள்ள மனத்தை யுடையவர்களுக்கும், பயன உறு பண்பின் தீரா - (அவரவர் தகுதிக்கேற்ற) பயனுண்டாம்படி எல்லாரியல்புகளும் அறிந்து நடத்தலினின்று நீங்காம லிருந்துகொண்டே, நகை உடை முகத்தை ஆகி - மலர்ச்சியையுடைய முகத்தை யுடையையாய், நாவால் இன் உரை நல்கு - நாவினால் இனிமையான சொற்களைச் சொல்வாயாக.

பொறிகளாற் காணுங் காட்சியையே யன்றிக் குறிகளால் உய்த்துணரும் அநுமானத்தையும் பிரமாணமாகக் கொள்ளுதல் உலகவியல் பாதலால் அக் கோட்பாட்டிற்கு இணங்கி உலகத்தோடு ஒத்து ஒழுக வேண்டு மென்பார், 'புகையுடைத் தென்னி னுண்டு பொங்கன லங் கென்றுணரு மிகையுடைத்துலகம்' என்றார்; காணப்படும் பொருளைக்கொண்டு காணப்படாத பொருளின் நிலையையும் நிச்சயித்தறிதல் வேண்டுமென்க. மிகை - மிக்கது; கண்ணாற் கண்டதற்குமேலும் ஒன்றைக் கொள்ளுதலால், 'மிகை' எனப்பட்டது. உலக வியல்பு இத்தன்மைய தாதலால், அநுமானப் பிரமாணத்தால் ஆராயுமிடத்தும் குற்றங்கட்கு இடமில்லாமற் குணம் நிரம்பியவனா யொழுகல் வேண்டுமென்று கருத்துக் கொள்ளுதலுமாம். "எல்லாஞ், சலவருட் சாலச் சலமே நலவருள், நன்மை வரம்பாய்விடல்" என்றபடி யோக்கியரிடத்துத் தாமும் யோக்கியமாய் ஒழுகுதலும் அயோக்கியரிடத்துத் தாமும் அயோக்கியமாய் ஒழுகுதலும் அரசர்க்கு உரியன வாதலால், 'நூலோர் வினையமும் வேண்டற்பாற்றே' என்றார். 'வினையமும்' என்ற உம்மை - இறந்தது தழுவிய எச்சததோடு இழிவு சிறப்பு; ஏ - தேற்றம். 'நூலோர் வினையமும் வேண்டற் பாற்றே' என்று பொதுப்படக் கூறியவர் அதற்கு உதாரணமாகச் சிறப்பாய் ஒன்றையெடுத்துக் காட்டுகின்றார் பின்னிரண்டடிகளில. அகத்திற் பகைமை யுடையராய்ப் புறத்திற் கூடியொழுகுவார்பக்கல் நீயும் அவர் போலவே நின்று புறத்தில் முகமலர்ச்சி காட்டி இன்சொற்பேசி அகத்தாற் சிநேகியாமல் அந்த அகப்பகைவரை அழித்தற்கு வேண்டிய ஜாக்கிரதையிலேயே யிருத்தல் வேண்டு மென்க. திருக்குறளிற் கூடாநட்பு என்னும் அதிகாரத்தில் "மிகச்செய்து தம்மெள்ளுவாரை நகச்செய்து, நட்பினுட் சாப் புல்லற்பாற்று," "பகை நட்பாங் காலம் வருங்கால் முகநட், டகநட்பொரீஇ விடல்" என்றவை இங்கு நோக்கத் தக்கன. பண்பு - எல்லாரியல்புகளும் அறிந்து நடத்தல்; "பண்பெனப்படுவது பாடறிந்தொழுகுதல்" என்ற கலித்தொகையைக் காண்க. மனப்பூர்வமாக வன்றி யென்பது தோன்ற, 'நாவால் இன்னுரை நல்கு' என்றார். 'பகை நண்பு நொதுமல் என்னும் வேறுபாடின்றி யாவரிடத்தும் ஒரு நிகராக இன்சொற் பேசுதலை நாவினியல்பாகக் கொள்ள வேண்டு' மென்பது தோன்ற, இது கூறினருமாம். 'பகையுடைச் சிந்தையார்க்கும்' என்ற உம்மையால், மற்றையோரிடத்து மலர்ந்த முகத்

தையும் இனிய சொல்லையு முடையனாதல் வேண்டு' மென்பது பெறப் பட்டது.

வினையம். அம் - சாரியை. விநய மென்ற வடசொல்லின் விகாரமெனக் கொண்டு, பணிவென்று பொருள்கூறவுந்தகும். இனி, நூலுணர்ந்தோராற் கூறப்படுகின்ற பிரித்தல் பொருத்தல் பொருதல் முதலிய செயல் வகைகளை 'வினையம்' என்று சாதியொருமையாற் குறித்ததாகக் கொண்டும் உரைக்கலாம். பாற்று - பான்மையென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. தீரா - தீராமல்: ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம். முகத்தை - முன்னிலை யொருமைக் குறிப்பு வினையாலணையும் பெயர். 'இன்னுரை நவிற்றி நாவால்' எனவும் பாடமுண்டு. (உகூ)

௩0. தேவருமருடற்கொத்தசெயிரறுசெல்வமஃதுன்
காவலுக்குரியதென்றலன்னதுகருதிக்காண்டி
யேவருமினியநண்பரயலவர்விரவாரென்று
மூவகையியலோராவர்முனைவர்க்குமுலகமூன்றின்.

(இ - ள்.) தேவரும் மருடற்கு ஒத்த - (பெருஞ்செல்வத்தி லிருப்பவர்களான) தேவர்களும் அதிசயித்து மயங்கத்தக்க, செயிர் அறு செல்வம் அஃது - குற்றமற்ற மிகப்பெருஞ்செல்வமானது, உன் காவலுக்கு உரியது - உனது பாதுகாப்பிற்கு உரிய பொருளாயிற்று, என்றல் —, அன்னது கருதி - அச்செல்வத்தின் சிறப்பை மனத்திற்கொண்டு, காண்டி - (அதனைப்பாதுகாத்தலில்) விழிப்புடனிருப்பாய்; உலகம் மூன்றின் - மூன்று உலகங்களிலுமுள்ள, ஏவரும் - எல்லாரும், முனைவர்க்கும் - முனிவர்கட்கும், இனிய நண்பர் விரவார் அயலவர் என்று மூவகை இயலோர் ஆவர் - இனிமையான சிநேகிதரும் பகைவரும் (இவ்விருதிறத்தினரு மல்லாமல்) நொதுமலா யுள்ளவருமென்று மூன்றுவகைப்பட்ட தன்மையுடையோராவர்; (எ - று.)

மருடல் - மருள் + தல்; இம்மருட்கை, வியப்பினாலாகியது. 'தேவரும் வெஃகற்கொத்த' என்ற பாடத்திற்கு - தேவர்களும் விரும்பத்தக்க என்று பொருள். காண்டி என்ற ஏவலொருமைமுற்றில், ட் - எழுத்துப்பேறு. ஏவர் - ஏகார வினாவடியாப்பிறந்த பெயர்; இங்கு எஞ்சாமை குறித்தது. அயலவர் - உதாசீந ரெனப்படுவர். விரவார் - சேராதவர். முனைவர் - முனிவர்; பெரியோர். பொருள்களினிடத்துப் பெரும்பாலும் விருப்பு வெறுப்புக்களை யொழித்தவர்களான இருடியர்க்கும் மூவகையியலோராவ ரெனவே, பிறர்க்கு அங்ஙனமாவ ரென்பது கூறவேண்டாதாயிற்று. உம்மை - உயர்வுசிறப்பு. உலகம் மூன்று - சுவர்க்கம், பூமி, பாதாளம். (௩0)

௩௧. செய்வனசெய்தல்யாண்டுந்தீயனசிந்தியாமல்
வைவனவந்தபோதும்வசையிலவினியகூறல்
மெய்சொலலவழங்கல்யாவுமேவினவெஃகலின்மை
யுய்வனவாக்கித்தம்மோடுயாவனவுலந்துசெய்வாய்,

(இ - ள்.) யாண்டும் - (மேற்கூறிய மூவகையோருள்) எவர்விஷயத்தி லும், தீயன சிந்தியாமல் - தீமையான காரியங்களைக் கருதாமல், செய்வன செய்தல் - (வருணாச்சிரமமுறைமைகட்கு ஏற்றபடி) செய்யவேண்டிய காரி யங்களைச் செய்தலும், வைவன வந்தபோதும் - (பிறர்) வைத வசைச்சொற்கள் (தமது கேள்விக்கு) வந்தபோதிலும், வசை இல இனிய கூறல் - (தாம்சொல் லுஞ் சொற்களை) வசைச்சொற்களில்லாமல் இனியனவாகச் சொல்லுதலும், மெய் சொலல் - மெய் பேசுதலும், யாவும் வழங்கல் - (தாம் கொடுத்தற்கு இயைவனவான) பொருள்களை யெல்லாம் (இரப்பவர்க்குக்) கொடுத்தலும், மேவின வெஃகல் இன்மை - (பிறரிடத்திற்) பொருந்திய பொருள்களைத் தாம் அபகரிக்க நினையாமையும், (ஆகிய இச்செயல்கள்) உய்வன ஆக்கி தம் மோடு உயர்வன - (தம்மையுடைய உயிர்களை) நற்கதிபெறுவனவாகச்செய்து அவ்வுயிர்களோடு தாமும் மேம்படுவனவாம்; (ஆகவே), உவந்து செய்வாய் - (இவற்றை நீ) விரும்பிச்செய்வாய்; (எ - று.)

யாண்டும் - எவ்விடத்தும். வைவனவந்தபோதும் என்பதற்கு - தாம் வசைமொழி கூறத்தக்க சந்தர்ப்பங்கள் நேர்ந்தபொழுதும் என்று உரைத்தலு மொன்று. வசை - இகழ்ச்சிச்சொல், திட்டு. திருக்குறளில் 'வெஃகாமை' என்பதற்கு பரிமேலழகர் 'பிறர்க்குரியபொருளை வெளவக்கருதாமை' என்று பொருளுரைத்தது இங்கு உணரத்தக்கது. இனி, "முன்னிய, பல்பொருள் வெஃகுஞ் சிறுமை........செல்வமுடைக்கும் படை" என்றபடி 'மேவின வெஃகலின்மை' என்பதற்கு - பொருந்திய பலபொருள்களையும் விரும்புத லில்லாமை யென்று உரைத்தலுமாம். 'மெய்யன வழங்கல்' என்ற பாடத் திற்கு - மெய்ம்மையையுடைய சொற்களைச் சொல்லுதலும், மேவினயாவும் வெஃகலின்மையும் என இரண்டாக்குக. உய்தல் - உஜ்ஜீவித்தல். 'உவந்து செய்வாய்' என்றவிடத்து, 'உயர்ந்ததோளாய்' என்று சிலபிரதிகளிற் காணப் படுகின்றது. (௬௧)

௬௨. சிறியரென்றிகழ்ந்துநோவுசெய்வனசெய்யன்மற்றிந்
நெறியிகந்தியானோர்தீமையிழைத்தலா லுணர்ச்சிநீண்டு
குறியதாமேனியாயகூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்தின்வெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன்.

(இ - ள்.) குவவு தோளாய - திரட்சியையுடைய தோள்களை யுடைய வனே!—சிறியர் என்று இகழ்ந்து - (வலிமைநிலைமைகளில்) எளியவரென் பதுபற்றி அலக்ஷ்யஞ்செய்து, நோவு செய்வன செய்யல் - (எவர்விஷயத்தி லும்) வருத்தந்தருஞ்செயல்களைச் செய்யாதே; யான் - நான், இ நெறி இகந்து - இந்தச்சன்மார்க்கத்தின் வரம்பைக் கடந்து, ஓர் தீமை இழைத்தலால் - ஒருதீங்கு செய்ததனாலே, உணர்ச்சி நீண்டு குறியது ஆம் மேனி ஆய கூனி யால் - அறிவுநீண்டு குறுகியவடிவமுடையவளான கூனியினால், நொய்தின் - எளிதில், வெறியன எய்தி - இல்லாமைகளை யடைந்து, வெந்துயர் கடலின்

வீழ்ந்தேன் - கொடிய துன்பமாகிய கடலில் விழுந்தேன்; (எ - று.)— மற்று - அசை, வினைமாற்றுமாம்.

இராமன் சிறுவனாயிருந்தகாலத்தில் ஒருநாள் கையிற் சிறுவில்லும் மண்ணுண்டையுங்கொண்டு விளையாடிவருகையில் ஒருகால் விற்கொண்டு எய்த உண்டை கைகேயியின் வேலைக்காரியான மந்தரையெனனும் கூனியின் முதுகின்புறத்தேதெறிக்க, அவள், தனது கூனுடைமையை இராமன் இங்ஙனம் பரிகசித்தனனென்று தவறாகக்கருதி, மனம்வருந்தி, அவன்மேற் சினங்கொண்டு, அரசன்மைந்தனாதலின் அப்பொழுது ஒன்றுஞ்செய்யமாட்டாமற் சென்று, தனக்கு 'வாய்க்குந்தருணம் நோக்கிக் கறுக்கொண்டிருந்து,' பின்பு தசரதன் இராமனுக்குமுடிசூட்ட நிச்சயித்ததையுணர்ந்தவளவிற் கோபதாபம் மிக்கவளாகி, அதற்கு எப்படியாவது தான் தடைசெய்ய வேண்டுமென்று நிச்சயித்து, கைகேயிக்குக் கலகஞ்செய்து அவள் மனத்தை மாற்றி அவளைக் கொண்டு இராமபட்டாபிஷேகத்தைத் தவிர்த்து அப்பெருமானை வனம்புகுவித்தனளென வரலாறு அறிக

உணர்ச்சிநீண்டு - தீர்க்காலோசனை யுடையளாய் என்றபடி. குறியதாம் மேனி - கூன்கொண்ட உடம்பு. 'உணர்ச்சிநீண்டு குறியதாமேனியாய' என்ற அடைமொழி கொடுத்ததனால், உடலின சிறுமைபற்றி இகழலாகாதென்பது தோன்றும். கூனி - கூனுடையவள்; இ - பெண்பால்விகுதி. இராசாங்கம் சுற்றம் பொன மணி நெல் வாகனம் அடிமை முதலாக ஐசுவரியங்கள் பலவாதல்பற்றி அவற்றின இன்மைகளும் பலவாதலால், 'வெறியன' எனப் பன்மையாற்கூறினார். 'வெந்துயர்க்கடல' என்றது, சீதையைப் பிரிந்ததனாலாகிய சோகத்தை. நகர்நீங்கி வனவாசம்புக்கது அதற்குக் காரணமாதலால், கூனி பரம்பரைக்காரணமாவள். செய்யல் - எதிர்மறை யொருமையேவல். 'செய்யன்முற்றும்.' 'நெறியிகழ்ந்து' என்றும் பாடமுண்டு குவவு - உரிச்சொல்.

௩௧. மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னு
மங்கவர்திறத்தினாலேயல்லலும்பழியுமாத
லெங்களிற்காண்டியன்றேயிதனின்வேறுறுதியுண்டோ.

(இ - ள்.) 'மங்கையர் பொருட்டால் - மகளிர்நிமித்தமாக, மாந்தர்க்கு மரணம் எய்தும் - ஆடவர்க்கு மரணநேரிடும்', என்றல் - என்கிறபொருளை, சங்கை இன்று உணர்தி - சந்தேகமில்லாமல் அறிந்துகொள்வாயாக: வாலி செய்கையால் சாலும்,—(இவ்விஷயம) வாலியின் செயலால் உறுதிப்படும்; இன்னும் - மற்றும், அவர் திறத்தினாலே - அந்தமகளிர் காரணமாகவே, அல்லலும் பழியும் ஆதல் - துன்பமும் பழிப்பும் நேர்தலை, எங்களில் காண்டி அன்றே - எங்கள் பக்கல் கண்டாயன்றோ? இதனின் வேறு உறுதி உண்டோ - இந்நீதியை யறிதலைககாட்டிலும் நன்மைதருவது வேறு உண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.)—அங்கு-அசை.

சிறந்த உறுதிப்பொருளாகும் இது என்று உறுத்தியவாறும்.

சுக்கிரீவன் மனைவியான ருமையை வாலி காதலித்துத் தன்வசப்படுத்தி யமைபற்றி மிக்கமனஸ்தாபங்கொண்டிருந்த சுக்கிரீவன் பிறகு இராமபிரானைக்கொண்டு வாலியைக்கொன்றமை கீழ்க் கூறப்பட்டது. இராமன் அரசொழிந்து வனவாசத்திற்குப் புறப்படும்பொழுது சீதையை நோக்கி 'நீ அயோத்தியாபுரியிலேயே இருப்பாயாக' என்று உறுத்திச்சொல்லவும் கேளாமல் அவள் கிட்டேரவார்த்தைகளைகூறி வலிவில் தானும் உடனே புறப்பட்டதுமன்றி, வனவாசம் புக்கவிடத்தும் மாயமானைக்கண்டு பொன்மானென்று பிரமித்து அதனிடத்து விருப்பங்கொண்டு அதனைப் பிடித்துத் தரும்படி இராமபிரானை வற்புறுத்தித் தூண்டியனுப்பினளாதலால் உடனே இராவணன் வந்து சீதையைக் கவர்ந்து செல்ல இராமபிரான் சோகக்கடலில் வீழ்ந்தமையும்; மாயமானாக வந்த மாரீசன் நெடுந்தூரம் ஓட்டங் காட்டியபிறகு இராமபிரானெய்த அம்புபட்டு விழுகையில் தனமெய்வடிவங்கொண்டு 'ஹா ஸீதே லக்ஷ்மணா!' என்று இராமன் குரலாற் சத்தமிட்டு விழுந்து இறக்க, அக்குரல்கேட்டவளவில் இலக்குமணன் அரக்கன் வஞ்சனையிதுவென்று உணர்ந்து வாளாவிருக்க, அவ்வுண்மையை யுணராமற் சீதை இராமனுக்கு அபாயம் நேர்ந்ததென்றே கருதிப் புரண்டழுது அது தீர்த்தற்பொருட்டுத் தன்னைவிட்டுச்செல்லாத இலக்குமணனமேற் குறைகூறவே, இலக்குமணன் இராமனது பலபராக்கிரமங்களை யெடுத்துச்சொல்லி உண்மையுணர்த்தவும், கேளாமல் ஜாநகி இலக்குமணனைப் பலவாறு பழித்து நெருப்பில் விழத்தொடங்கலும், அப்பழிக்கு அஞ்சி இளையபெருமாள் அவளைத் தனியேவிட்டு இராமனிடம் சென்றமையும். பின்னிரண்டடியில் அறியவேண்டியபொருள்கள். எங்களில் - என்னிடத்தும், என் தம்பியான இலக்குமணனிடத்தும்; என்னிடத்து அல்லலும், இலக்குமணனிடத்துப் பழியும் சீதைகாரணமாக நேர்ந்தமை காண்டியென முறையே கொள்க.

மாந்தர் - இங்கே ஒன்றொழிபொதுச்சொல்: ஆடவர்க்கும் மகளிர்க்கும் பொதுவான இச்சொல், 'மங்கையர்பொருட்டால்' என்றதனாற் குறிப்பினால், பெண்பாலையொழித்து ஆண்பாலைக் காட்டிற்று. இன்றி + உணர்தி = இன்றுணர்தி: இன்றியெனனும் வினையெச்சத்தின் ஈற்று இகரம் செய்யுளில் உகரமாயிற்று; [நன் - உயிர் உ௫.] அன்றே - தேற்றம். 'வாலிசெய்கையே சாலும்' எனவும், 'இதற்கு வேறேதியாதோ' எனவும். 'இதற்கு வேறுவமையுண்டோ' எனவும் பாடம். மரணம் - வடசொல்.

பிறன்மனைவியை விரும்புதல் பெருங்கேடு விளைத்தலால் அது கூடாதென்றும், அவ்வாறே தன் மனைவியின் சொற்கேட்டலும் பெருந்தீங்கு பயத்தலால் அதுவும் ஆகாதென்றும், மகளிர் பிறர்மேற் பழிகூற அஞ்சாராதலால் அவரிடத்து அதிஜாக்கிரதையாகப் பழகவேண்டுமென்றும் உறுதி கூறியவாறும். "தூமகேது புவிக்கெனத்தோன்றிய, வாமமேகலை மங்கையரால் வரும், காமமில்லையெனிற் கடுங்கேடெனும், நாமமில்லை நரகமுமில்லையே" என்றது அயோத்தியா காண்டத்தில் வஸிஷ்டர் இராமனுக்குக் கூறிய நீதி.

(௫௫)

௩௪. நாயகனல்லனம்மைநனிபயந்தெடுத்துநல்குந்
தாயெனவினிதுபேணத்தாங்குதிதாங்குவாரை
யாயதுதன்மையேனுமறவரம்பிகவாவண்ணந்
தீயனவந்தபோதுசுடுதியாற்றீமையோரை.

(இ - ள்.) 'நாயகன் அல்லன் - (இவன் நமக்கு) அரசனல்லன்: நம்மை பயந்து எடுத்து நனி நல்கும் தாய் - நம்மைப் பெற்று எடுத்து வளர்த்து நன்றாகப் பாதுகாக்குந் தாயாவன்', என - என்று எண்ணியும் சொல்லியும், இனிது பேண இனிமையாய் (உன்னைச் சனங்கள்) விரும்பும்படி, தாங்குவாரை தாங்குதி - பாதுகாத்தற்குரிய சனங்களைப் பாதுகாப்பாயாக; ஆயது தன்மை எனும் - அங்ஙனந் (எல்லாக்குடிகளிடத்துந்) கண்ணோட்டஞ் செய்வதை நினது இயல்பாகக் கொண்டாலும், தீயன வந்தபோது - (அவர்களில் எவரானேனும் நாட்டில்) தீங்குகள் நேர்ந்தபோது, தீமையோரை - அக்கொடியவரை, அறம் வரம்பு இகவாவண்ணம் - தருமத்தி னெல்லையைக் கடவாதபடி, சுடுதி - கண்டிப்பாயாக; (எ - று.)—ஆல் - அசை.

தமது அரசாட்சியின்கீழ் வாழுங் குடிகளிடத்து மிக்க அன்புடையராய் ஒழுகுதலும் அங்ஙனம் ஒழுகுமிடத்தும் அவர்களில் யாரேனுங் குற்றஞ்செய்தால் அவர்களைக் கண்ணோட்டமின்றிக் குற்றத்திற்கு ஏற்றபடி தண்டித்தலும் அரசர்க்கு முறைமையாமென்க. "குடிபுறங்காத் தோம்பிக் குற்றங்கடிதல், வடுவன்று வேந்தன்றொழில்," 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்; களைகட்டதனொடு நேர்" என்ற திருக்குறள்களும், அவற்றின் உரையிற் பரிமேலழகர் 'அன்பஞ்செய்தல், பொருள்கோடல், கோறல் என ஒறுப்பு மூன்று,' 'தன்கீழ்வாழ்வாரை யொறுத்தல் அறனன்மையின் வடுவாமெனபதனை ஆசங்கித்து அஃதாகாது, அரசனுக்கு அவரை அக்குற்றத்தின் நீக்கித் தூயராக்குதலும் சாதிதருமமென்றார,' 'கொடியவர் என்றது - தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற்கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில்விழைவார் என்றிவர் முதலாயினாரை, இவரை வடநூலார் ஆததாயிகளென்ப. இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழி, புற்களைக்கு அஞ்சாதின்ற பைங்கூழ் போன்று நலிவுபல எய்தி உலகு இடர்ப்படுதலின், கோறலும் அரசர்குச் சாதிதருமமெனபதாயிற்று. இவையிரண்டு பாட்டானும், செங்கோல்செலுத்தும் வெண்குடைவேந்தர்க்குத் தீயார்மாட்டு மூவகையொறுப்பும் ஒழியற்பாலவல்ல வென்பது கூறப்பட்டது' என்றவையும், இங்கு நோக்கத்தக்கன.

'நாயகன் அல்லன்' என உண்மைத் தன்மையை மறுத்து 'தாய்' என மற்றொரு தன்மையை ஏற்றியது, ஒழிப்பணியெனப்படும் அபஹ்நுதியலங்காரம்: "சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை, மறுத்துப் பிறிதுரைப்ப தவனுதி யாகும" என அதன இலக்கணங் காண்க. 'மிகுதலும் குறைதலும் தாழ்தலும் உயர்தலும், பால் மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்றாராதலால். ஆண்பாற்குப் பெண்பால் உவமையாயிற்று. இனி, நாயகன் னல்லன் என்று எடுத்து, நமது அரசன் நல்லவன் என்று உரைப்பாருமுளர்.

'இனிது பேணி' என்ற பாடத்திற்கு - தாயென்று குடிகள் நினைக்கும்படி அவர்களை இனிமையாக விரும்பிப் பாதுகாப்பா யென்று உரைக்க. 'அறம்வரம்பிகவாவண்ணம்,' 'தீயனகண்டபோது' என்பன பிரதிபேதம். எனும் - எனினும் என்றதன் மரூஉ. (௩௪)

௩௫. இறத்தலும்பிறத்தறலுமென்பனவிரண்டும்யாண்டுந்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னேபூவின்மேற்புனிதற்கேனு
மறத்தினதிறுதிவாழ்நாட்கிறுதியஃதுறுதியென்ப.

(இ - ள்.) திறத்துஉளி நோக்கின் - உண்மையான வழியாற் பார்க்குமிடத்து,—இறத்தலும் பிறத்தல்தானும் என்பன இரண்டும் - (உலகத்துப் பிராணிகள்) சாதலும் பிறத்தலும் என்று சொல்லப்படுவனவான இரண்டு தன்மைகளும், யாண்டும்-எப்பொழுதும், செய்த வினை தர தெரிந்த அன்றே- (அந்தப் பிராணிகள்) செய்த கருமங்கள் தம்பயனுய் உண்டாக்க உண்டாவன வன்றோ? பூவின்மேல் புனிதற்கு எனும் - (திருமாலின் நாபித்) தாமரை மலரில் தோன்றிய பரிசுத்த குணமுடையவனான (படைத்தற் கடவுளாகிய) பிரமதேவனுக்கே யானாலும், அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி - தருமத்தை விட்டுத் தவறுதல் ஆயுளின அழிவுக்குக் காரணமாம்: அஃது (வாழ் நாட்கு) உறுதி - தருமத்தை விட்டுத் தவறாதல் ஆயுளுக்கு உறுதியைச் செய்வதாம். என்ப - என்று (பெரியோர்) கூறுவர்; (எனறால்), இனி—, புறத்து உரைப்பது என்னே - வேறாகவுள்ளவர்களைப் பற்றிக் கூறவேண்டுவது யாது? [யாதுமில்லை யெனறபடி]; (எ - று.)

திறம் - தத்துவம். 'உளி' என்றது, மூன்றாம் வேற்றுமையின் பொருள் படுவதோ ரிடைச் சொல்; திருக்குறளில் "இயல்புளிக் கோலோச்சு மன்னவன்" என்ற விடத்திற போல. தெரிந்த - முற்று. அன்றே தேற்றம். 'அஃது' எனச் சுட்டியது, அறத்தை ஈற்றடியில், காரணங்கள் காரியங்களாக உபசரிக்கப்பட்டன. தருமத்தின வரம்பைக் கடந்து நடத்தல் ஆயுளின் அழிவுக்கும், அவ்வரமபு கடவாமல் அதில் நிற்றல் ஆயுளின் வளர்ச்சிக்கும் காரணமாமென்க. இனி, 'அஃது உறுதி' என்பதற்கு - அறத்தினது இறுதி வாழ்நாட்கு இறுதி என்னும் அது நிச்சய மென்று உரைப்பாரு முளர். 'புறத்தினியுரைப்ப தென்னே' என்று தண்டாபூபிகாநியாய மெனப்படுங் கைமுதிக நியாயத்தைக் கொண்டு சாதித்தது, தொடர்நிலைச் செய்யுட் பொருட்பேறணி யென்னுங் காவ்யார்த்தாபத்தியலங்காரம். (௩௫)

௩௬. ஆக்கமுங்கேடுந்தாஞ்செயறத்தொடுபாவமாய
போக்கிவேறுண்மைதேறார்பொருவரும்புலமைநூலோர்
தாக்கினவொன்றோடொன்றுதருக்குறுஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமன்றியோன்றும்பாவத்தைப்பற்றலாமோ.

(இ - ள்.) ஒன்றோடு ஒன்று தாக்கின தருக்கு உறும் - (பிராணிகள்) ஒன்றோடொன்று தாக்கியனவாய்க் களிப்படைதற்கிடமான, செருவில் - ·

போரில், தக்கோய் - சிறந்தவனே!—ஆக்கமும் கேடும் - செல்வமடைதற்குக் காரணமும் வறுமையடைதற்குக் காரணமும், தாம் செய் அறத்தொடு பாவம் ஆய போக்கி - அவ்வுயிர்கள் செய்த புண்ணியமும் பாவமும் ஆகிய வற்றைத் தவிர்த்து, வேறு உண்மை - வேறு இருத்தலை, பொருவு அரும் புலமை நூலோர் - ஒப்பற்ற தேர்ந்த அறிவைத் தரும நூல்களில் வல்லவர்கள், தேறார் - அறியார்; (ஆகவே), பாக்கியம் அன்றி பாவத்தை ஒன்றும் பற்றல் ஆமோ - செல்வத்திற்குக் காரணமான நல்வினையைச் செய்வதல்லாமல் அதற்கு மாறாக வறுமைக்குக்காரணமான தீவினையைச் சிறிதேனும் கைக்கொள்ளலாமோ? [கொள்ளலாகாது என்றபடி]; (எ - று.)

ஆய - இறந்தகாலப் பலவின்பாற் பெயர். முதலடியில் ஆக்கத்திற்குக் காரணம் அறமும், கேட்டிற்குக் காரணம் பாவமுமாம் என முறைநிரனிறைப் பொருள்கோள் காண்க. காரணங்கள் காரியங்களாக உபசரிக்கப்பட்டன. புலமை - பாண்டித்யம். "தாக்கின ஒன்றோடு ஒன்று தருக்கு உறும்" என்றதைத் தனிவாக்கியமாக்கி, (அறமும் பாவமும்) ஒன்றோடொன்று பகைமை கொண்டு மாறுபடும் என்றலும் அமையும்; அன்றி, தக்கோய்! (அறமும் பாவமும்) ஒன்றோடு ஒன்று தாக்கித் தருக்குற்றுச் செருச் செய்கையில் (அறிவுடையோர்) பாக்கியத்தைப் பற்றுவதல்லாமற் பாவத்தைச் சிறிதேனும் பற்றலாமோ வென்று உரைத்தலுந் தகும்; இதனை வாலி சுக்கிரீவ யுத்தத்திற் பெருமாள் கொடியவனை வாலியை ஆதரியாமல் நல்லவனை சுக்கிரீவனை ஆதரித்ததுபோலக் கொள்க 'பாக்கியமன்றி மற்றும் பாவத்தை' எனவும் பாடம். (௧௬)

௧௭. இன்னது தகைமையென்பவியல்புளிமரபினெண்ணி
மன்னரசிபற்றியென்கண்வருவழிமாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன்பெருங்கடற்சேனையோடுந்
துன்னுதிபோதியென்றான்சுந்தரனவனுஞ்சொல்வான்.

(இ - ள்.) இன்னது தகைமை என்ப - கீழ்க்கூறிய இது (அரசர்க்குத்) தக்க முறைமையாமென்று (அறிந்தோர்) கூறுவர்: (ஆதலால்), இயல்புளி - (நூல்களிற் கூறிய) இயல்பினால், மரபின எண்ணி - முறைப்படி ஆலோசித்து, மன் அரசு இயற்றி - சிறப்பாக அரசாட்சியைச் செய்து, வருவழி மாரி காலம் பின் உற - இனி வரும் முறைமையிலுள்ளதான மழைக் காலம் கழிந்த பின்பு, முறையின உனதன பெருங் கடல் சேனையோடும் - ஒழுங்காகவுள்ள உனது பெரிய கடல்போற் பரந்த சேனையுடனே, என்கண் துன்னுதி - என்னிடம் வரக்கடவாய்; போதி - இப்பொழுது செல்வாயாக, என்றான் - என்று (சுக்கிரீவனை நோக்கிக்) கூறினான், சுந்தரன - அழகியவனான இராமபிரான்; (அதுகேட்டு), அவனும் சொல்வான - அச்சுக்கிரீவனும் கூறுவான்; (எ - று.)—அதனை, அடுத்த இரண்டு கவிகளிற் காண்க.

'என்கண் வருவழி மாரிக்காலம் பின்னுற' என்பதற்கு என்னிடத்தில் நீ வரும்பொழுது மழைக்காலம் கழிந்திடுக: முறையின் - அதன் பின்பு

என்று உரைத்தலுமாம். அன்றி, 'மாரிக்காலம் பின் உற என்கண் வருவழி உன் தன் முறையின் பெருங்கடற்சேனையோடும் துன்னுதி' என்று மொழி மாற்றி, மழைக்காலங் கழிந்த பின்பு நீ என்னிடம் வரும்போது உனது ஆளுகையின் கீழ்ப்பட்ட பெரிய கடல்போன்ற சேனையுடன் வருவாயாகவென்று உரைத்தலும் தகும். முறையின் துன்னுதி - (நான் உனக்கு உதவி செய்த பின்னர் நீ எனக்கு உதவிசெய்யவேண்டிய) முறைமையின்படி வருவாய் என்றலுமாம். "பின்னுவ" என்ற பாடத்திற்கு - மழை நாட்கள் கழிவனவாதல் வேண்டுமென்க. பலஇடங்களிலும் அலைந்துதிரிந்து பிராட்டியைத் தேடுதற்கு மழைக்காலம் இனியதன்றாதலால், அதுகழிந்தபின்பு சேனையுடன் வருக வென்றான். இங்கு "மாரிக்காலம்" என்றது - ஆடிமுதலிய நான்கு மாதங்களென முதனூலுரைகளால் விளங்கும். இராமன் என்ற திருநாமம் தனது கட்டழகினாற் பிறர் மனத்தைக் களிக்கச்செய்பவனென்று பொருள்படுதலால், சுந்தரனென்றதை அதன் பரியாயநாமமென்னலாம். ஸுந்தரன் - வடசொல். "இன்னலை" என்பது பிரதிபேதம். (௩௭)

[கிஷ்கிந்தாநகரத்தினுள் வந்துவசிக்கும்படி இராமனைச்
சுக்கிரீவன் பிரார்த்தித்தல்.]

௩௮. குரங்குறையிருக்கையென்னுங் குற்றமேகுற்றமல்லா
லரங்குறுதுறக்கநாட்டுக்கரசெனலாயதன்றே
மரங்கிளரருவிக்குன்றம்வள்ளனீமனத்தினெம்மை
யிரங்கியபணியாஞ்செய்யவிருத்தியாற்சின்னாளெம்பால்

(இ - ள்.) வள்ளல் - வண்மைக்குணமுடையவனே!—மரம் கிளர் அருவி குன்றம் - மரங்கள் செழித்துவளரப்பெற்றதும் நீரருவிகளையுடையதுமான (நாங்கள்வசிக்கின்ற) கிஷ்கிந்தகிரி, குரங்கு உறை இருக்கை எனனும் குற்றமே குற்றம் அல்லால் - குரங்குகள் வசிக்கின்ற இடமாகு மென்னும் ஒரு குற்றத்தையுடையதே யல்லாமல், (மற்றைப்படி செல்வ இன்பங்களால்), அரங்கு உறு துறக்கம் நாட்டுக்கு அரசு எனல் ஆயது அன்றே - சபைகள் நிறைந்த சுவர்க்கலோகத்தினும் மேம்பட்டதென்று சொல்லத்தக்கதாகியதன்றோ? (ஆதலால்), நீ—, மனத்தின் எம்மை இரங்கிய பணி யாம் செய்ய - உன்திருவுள்ளத்தில் எங்கள்பக்கல் இரக்கங்கொண்டு கட்டளையிடுங் காரியங்களை யாம் செய்யுமாறு, சில் நாள் எம்பால் இருத்தி - சிலதினங்கள் (அந்த) எமது இடத்தில் வந்து வசிப்பாயாக; (எ - று)—ஆல் - அசை.

அரங்கு - சுதர்மை முதலியன; ரங்கம் என்ற வடசொல்லின் விகாரம்; நர்த்தனஞ் செய்யுமிட மென்ற பொருளும் இதற்கு உண்டு. அரசு - அரசனுறையுமிடம் [ராஜதானி] என்றுகொண்டு, சுவர்க்கலோகத்திற்கு இராஜதானியான அமராவதி நகரமென்று உரைப்பாருமுளர். நிலவள நீர்வளச் செழுமைகொண்டு வாசத்திற்குச்சிறந்த இடமாமென்றற்கு, 'மரங்கிளரருவிக்குன்றம்' என்றான். அன்றே - தேற்றம். (௩௮)

௩௯. அரிந்தமநின்னையண்மியருளுக்குமுரியேமாகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம்வெறுமையிற்பிறிதொன்றாமோ
கருந்தடங்கண்ணினாளைநாடலாங்காலங்காறு
மிருந்தருடருதியெம்மோடென்றடியிணையின்வீழ்ந்தான்.

(இ - ள்.) அரிந்தம - பகைவர்களை யழிப்பவனே! நின்னை அண்மி - (நாங்கள்) உன்னைச்சரணமடைந்து, அருளுக்கும் உரியேம் ஆகி - (உனது) கருணைக்கும் உரியவர்களாயிருந்து, பிரிந்து - (உன்னை) விட்டுப்பிரிந்து, வேறு எய்தும் - தனியே அனுபவிக்கின்ற, செல்வம் - செல்வமானது, *வெறுமையின் பிறிது ஒன்று ஆமோ - ஏழைமையினும் வேறானதொன்றாகுமோ? [ஆகாது]; (ஆகவே) கருந் தடங் கண்ணினாளை நாடல் ஆம் காலம் காறும் - கரிய பெரிய கண்களையுடையவளான பிராட்டியைத் தேடுதற்கு ஏற்றகாலம் வருமளவும், எம்மோடு இருந்து அருள்தருதி - (நீ கிஷ்கிந்தா நகரத்தில்) எங்களுடன் வசித்தருள்வாய், என்று - என்று சொல்லி, அடி இணையின் வீழ்ந்தான் - (இராமபிரானது) உபயபாதங்களில் விழுந்து வணங்கினான், (சுக்கிரீவன்); (எ - று)

நாங்கள் உன்னையடைந்து உனது கருணைக்கும் இலக்காகி நண்பான பின்பு உன்னைவிட்டுப்பிரிந்து தனியேயனுபவிக்குஞ் செல்வம் வறுமையின் பாற்படுமேயன்றி இன்பந்தாராதாதலால் மழைக்காலங்கழியுமளவும் நீயும் எங்களுடன் கிஷ்கிந்தாநகரத்தினுள் வந்து வசிப்பாயாக வென்று பிரார்த்தித்து இராமனது திருவடிகளில் விழுந்து வணங்கினான் சுக்கிரீவன் என்பதாம். அரிந்தமன் - வடசொல்; அரி - பகைவர். அண்மி, அண்மு - பகுதி. அருளுக்கும் உரியேம், உம்மை - இறந்தது தழுவிய எச்சத்தோடு, உயர்வு சிறப்பு. வெறுமையிற் பிறிதொன்றாமோ - பெறினும் பெறாததே போலாம் என்றபடி. 'வறுமையிற்பிறிதன்றாமால்' என்ற பாடத்திற்கு - வறுமையினும் வேறன்றாகுமாதலால் என்று பொருள். இங்கு 'அரிந்தம' என்று விளித்தது, வாலியைக்கொன்ற திறத்தில் ஈடுபட்டதனால். காறு - எல்லைகுறிப்பதோர் இடைச்சொல். (௩௯)

[இதுமுதல் ஐந்து கவிகள் - இராமபிரான் அதனை மறுத்துக்கூறல்.]

௪௦. ஏந்தலுமிதனைக்கேளாவின்னிளமுறுவனூற
வேந்தமையிருக்கையெம்போல்விரதியர்விழைதற்கொவ்வா
போந்தவணிருப்பினெம்மைப்போற்றவேபொழுதுபோமா
றேர்ந்தினிதியற்றுமுன்றனரசியற்றருமநீதி.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஏந்தலும் - பெருமையிற் சிறந்தவனான இராமபிரானும், — இதனை கேளா - இந்த வார்த்தையைக் கேட்டு — இன் இள முறுவல் ஊற - இனிமையான புன்சிரிப்பு உண்டாக, — (சுக்கிரீவனை நோக்கி) — வேந்து அமை இருக்கை - அரசர்கள் வசித்தற்கு உரிய நகரத்தினுள்ளிடங்கள், எம்

போல் விரதியர் விழைதற்கு ஒவ்வா - எம்மைப்போன்ற விரதாநுட்டான முடையோர் விரும்பிவசித்தற்குத்தகாதனவாம்; (அன்றியும்), அவண்போந்து இருப்பின் - அவ்விடத்தில் [கிஷ்கிந்தாநகரத்தினுள்] யாம் வந்து வசித்தால், எம்மை போற்றலே பொழுது போம் - எம்மை உபசரித்தலிலேயே (உனக்குப்) பொழுதுகழிந்திடும்; ஆல் - ஆதலால், தேர்ந்து இனிது இயற்றும் உன் தன் அரசு இயல் தருமம் தீர்தி - (நீ) ஆராய்ந்து இனிமையாகச்செய்யவேண்டிய அரசாட்சிக்கு உரிய தருமத்தினின்றும் தவறியவனாவாய்; (எ - று.)

இச்செய்யுளிலுள்ள 'வந்தலும்', 'இதனைக்கேளா', 'இன்னிளமுறுவல் நாற' என்ற மூன்றும், மேல் சஉ - ஆங் கவியில் வருகின்ற 'எனறான' என்னும் முற்றைக் கொள்ளும்.

"விரதியர்" என்றது, வானப்பிரஸ்தாச்சிரமத்திற்கு உரிய விரதங்களை யனுட்டிப்பவரை. வானப்பிரஸ்தாச்சிரமமாவது - இல்லந்துறந்து மனைவியோடாயினும் தனித்தாயினும் வனத்தில் தவஞ்செய்யும் நிலையாம். எம்மைப் போற்றலே பொழுதுபோம் - எம்மை உபசரிப்பதற்கே பொழுது சரியாய்ப் போம; இராசாங்ககாரியம் பார்ப்பதற்குப் பொழுதில்லையா மெனக. வாதீ என்ற வடசொல், விரதி யென விகாரப்பட்டது. 'சேர்கதனை நிற்கமூண்பவவரசியற்றருமந்தீர்தி' என்றும் பாடமுண்டு. (௪௦)

௪௧. ஏழிரண்டாண்டியான் போந்தெரிவனத்திருக்கவென்றேன்
வாழியாயரசர்வைகும்வளநகர்வைகலொல்லேன்
பாழியநதடந்தோள்வீரபார்த்திலைபோலுமன்றே
யாழிசைமொழியோடன்றியானுறையின்பமென்றோ.

(இ - ள்.) வாழியாய் - வாழ்வையுடையவனே!—ஏழ் இரண்டு ஆண்டு - பதினான்குவருஷகாலம், யான போந்து எரி வனத்து இருக்க - நானசென்று வெவ்வியகாட்டில் வசிப்பதாக, ஏனறேன் - (கைகேயியின முன்னிலையில்) உடனபட்டுக்கூறிவந்தேன்: (ஆதலால்,அப்பதினான்கு வருஷகாலத்திற்குள்), அரசர் வைகும் வளம் நகர் வைகல் ஒல்லேன - அரசர்கள வசிப்பதற்குஉரிய செல்வவளமுள்ள நகரத்தினுள் வசித்தற்கு உடனபடேன்; (மற்றும்), பாழி அம் தட தோள் வீர - வலிமையை யுடைய அழகிய பெரிய தோளகளை யுடைய வீரனே! யாழ் இசை மொழியோடு அனறி வீணாகானம்போலினிய சொற்களையுடையளான சீதையோடுகூடி யல்லாமல், யான் உறை இனபம் - நான் (நகரத்தினுளவந்து) வசித்து அடையும் இன்பம், என்னோ - யாதோ? பார்த்திலை போலும - (இதனை நீ) ஆராய்ந்து (பார்த்தாயில்லை) போலும்; (எ - று.)— அனறே - ஈற்றசை.

இங்குக்குறித்த விஷயம், வாலியை ஸம்ஸ்கரித்தானபின்பு, கிஷ்கிந்தாபுரியினுளளே எழுந்தருளிச் சுக்ரீவனுக்கு முடிசூட்டி எல்லாரையும் மகிழ்விக்கவேணடு மென்று வேண்டிய அநுமானுக்கு ஸ்ரீராமன் "பதினான்கு வருஷங்கள் கழியுமளவும் யான நகரினுள்ளாவது ஊரினுள்ளாவது புகேன்; இவ்வாறு என் தந்தையின கட்டளையாதலால், அதனை ஒருகாலும் தவறேன்.

ஆதலால், நீங்களெல்லாருஞ் சேர்ந்து சுக்கிரீவ பட்டாபிஷேகத்தைக் கிஷ்கிந்தையில் நடத்தக் கடவீர்'' என்று அருளிச்செய்ததாக ஸ்ரீவால்மீகி ராமாயணத்தில் வந்துள்ளது.

எரி வனம்-வெயிலின் கடுமையால் தீப்போற்சுடுகின்ற வனம்: தீப்பற்றியெரியும் வனம். என்றேன், ஏல் - பகுதி. 'வனத்திருக்கவென்றேன' என்ற பாடத்திற்கு - வனத்திலிருப்பேனாகவென்று சொன்னேனென்று பொருள். 'வாழியாய்' என்ற விளியேற்ற பெயரில், வாழ் - முதனிலைத் தொழிற்பெயரென்றும், இ - சாரியை யென்றும் கொள்ளுதல் அமையும். யாழிசைமொழி - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (௪௧)

௪௨. தேவிவேறரக்கன்வைத்தசேமத்துளிருப்பத்தான்ற
னாவிபோற்றுணைவரோடுமளவிடற்கரியவின்ப
மேவினனிராமனென்றாலையவிவ்வெய்யமாற்ற
மூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றே.

(இ - ள்.) 'தேவி - தன் மனைவியான சீதை, வேறு - தனியாய், அரக்கன் வைத்த சேமத்துள் இருப்ப - இராவணன் கொண்டுபோய் வைத்த காவலுள்ள விடத்திலேயிருக்க, இராமன் தான்—தன் ஆவிபோல துணைவரோடும் - தனது உயிர்போன்ற நண்பர்களுடனே, அளவு இடற்கு அரிய இன்பம் - அளவிடக்கூடாத (மிகவும் அதிகமான) - இன்பத்தை, மேவினன் - அடைந்தான்,' என்றால் - என்று (ஜனங்கள்) சொல்லும்படியானால், ஐய - அப்பா! இ வெய்ய மாற்றம் - இந்தக் கொடிய சொல், மூ வகை உலகம் முற்றும் காலத்தும் முற்ற வற்றே - (மேல் கீழ் நடு என) மூன்றுவகைப்பட்ட உலகங்களும் அழியுங்காலத்திலும் அழியவல்லதோ? [அந்தப் பெரும்பழி என்றென்றைக்கும் நீங்காதென்றபடி]; (எ - று.)

மூவகையுலகமுற்றுங்காலத்தும் - கல்பாந்த காலத்திலும், 'சிறையிடையிருப்ப' என்றும் பாடமுண்டு. ஐய என்பதை 'ஐ' என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சமெனக் கொண்டு, வியக்கத்தக்க என்றலுமாம். வற்று - வன்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு முற்று. (௪௨)

௪௩. இல்லறந்துறந்திலாதோரியற்கையையெதிர்ந்துபோரின்
வில்லறந்துறந்துவாழ்வேற்கின்னனமேன்மையில்லாச்
சில்லறம்புரிந்துநின்றதீமைகடருமாறு
நல்லறந்துறந்தநோன்பினவையறநோற்பலென்றான்.

(இ - ள்.) இல் அறம் துறந்திலாதோர் இயற்கையை எதிர்ந்து - கிருகஸ்தாச்சிரம தருமத்தைக் கைவிடாதவர்களுடைய இயல்புக்கு மாறுபட்டு, போரின் வில் அறம் துறந்து - யுத்தத்தில் வில்லைக்கொண்டு செய்யுந் தருமத்தைச் செய்யாது விட்டு, வாழ்வேற்கு - வாழ்பவனாகிய எனக்கு, இன்னன -

இவைபோன்றவை •[நகரத்தினுள் வந்து வசித்து நண்பர்களோடு இனிது வாழ்தல் முதலியன], மேன்மை இல்லா சில் அறம் - சிறப்பில்லாத அற்ப வொழுக்கங்களாம்; புரிந்து நின்ற தீமைகள் தீரும் ஆறு - (மனைவியைப் பிரிதற்குக் காரணமாக யான்) செய்துள்ள தீவினைகள் நீங்கும்படி, நல் அறம் துறந்த நோன்பின் - நல்ல தருமமாகிய இல்லறத்தைத் துறந்து அனுட்டிக்கும் வானப்பிரஸ்தாச்சிரம தருமங்களால், நவை அற நோற்பம் - குற்றமில்லாமல் தவஞ்செய்வேன், என்றான் - என்று கூறினன். (இராமன); (எ - று.)

எவ்வகைத் தீக்கருமஞ் செய்தாயினும் தனது தருமபத்தினியைக் காத்தல் வேண்டுமென்பது, கிருகஸ்தாச்சிரமதருமம்; தான் மனைவியைப் பாது காவாது விட்டமை பற்றி 'இல்லறந்துறந்திலாதோ ரியற்கையை யெதிர்ந்து' என்றான். 'போரின் வில்லறந்துறந்து வாழ்வேற்கு' என்றது, தன்மனையாளைக் கவர்ந்த மாற்றானைப் பொருது தொலைக்காமல் தான உயிர் வாழ்தல் பற்றி, தானபூண்ட மனிதவேஷத்திற்கு ஏற்றபடி ஒழுகுபவ னாதலால், தனது நிஜரூபமான தெய்வத்தன்மையைப் பாராட்டாமல 'புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு நோற்பல' என்றான. இனி, புரிந்து நின்ற தீமைகள் தீருமாறு-(இராவணன) செய்த தீங்குகள ஒழியுமபடி யெனறலுமாம. "அறனெனப்பட்டதே யில்வாழ்க்கை" எனறபடி இல்லறம் சிறத்தலால், அது, 'நல்லறம்' எனப்பட்டது: "இலலறமல்லது நல்லறமனறு" என்றார் ஒளவையாரும். இங்கு - 'அதனைத் துறந்த நோனபு' என்றான. வானப்பிரஸதாச்சிரமத்தை திருக்குறளில் "அறத்தாறறி னில்வாழ்க்கை யாறறிற புறததாற் றில்" என்றவிடத்தில் இல்லை விட்டு வனத்துச் செல்லும் நிலையை இல்லறத திற்குப்புறமாகிய நெறியென்றமை காண்க. அந்நிலையின் வகைபலவற்றுள இல்லந்துறந்து வனத்துச் சென்று மனைவியோடன்றித் தனித்துச் செயயுந் தவம், இங்குக் குறிக்கப்பட்டது. நோற்பல், அல் - தனமை யொருமை விகுதி. 'இயற்கையை யிழந்து போரின, வில்லறந்துறந்து வாழ வெளகினன விளிவில் வீர', 'நல்லறந் தொடர்ந்த நோனபின்' எனறும பாடங் காணப்படுகின்றது. (சங)

சச. அரசியற்குரியயாவுமாற்றுழியாற்றியான்ற
திரைசெயற்குரியசேனைக்கடலொடுந திஙகளுனகின்
விரசுகவென்பானின்னைவேண்டினென் வீரவென்று
னுரைசெயற்கெளிதுமாகியரிதுமாமொழுக்கினின்றான்.

(இ - ள்.) வீர - வீரனே! அரசு இயற்கு உரிய யாவும் - அரசாட்சிக்கு உரிய செயல்களை யெல்லாம், ஆற்று உழி ஆற்றி - செய்யவேண்டிய முறைப் படி செய்து, ஆன்ற திரை செயற்கு உரிய சேனை கடலொடும்-பெரிய அலைகள் வீசுதற்கிடமான கடல்போனற சேனையுடனே, திங்கள் நான்கின என்பால் விரசுக - நான்கு மாதங் கழிந்தவளவில் என்பக்கல் வந்து சேர்வாயாக; நின்னை வேண்டினென - உன்னை (இங்ஙனம்) வேண்டுகினறேன், என்றான் என்றும் கூறினான: (யாவனெனில்),—உரைசெயற்கு எளிதும் ஆகி -

சொல்லுதற் கெளியதுமாய், அரிதும் ஆம் - (அனுட்டித்தற்கு) அரியதுமான, ஒழுக்கில் - நல்லொழுக்கத்தில், நின்றான் - சலியாது நிலைநிற்பவனான இராமபிரான்; (எ - று.)

சேனையிலுள்ளாரது வரிசையொழுங்குகளைச் சேனையாகிய கடலுக்கு அலையாகக் கருதுக. திங்கள் - சந்திரன்; அமாவாசைக்கு அமாவாசை ஒரு மாசமென்று சாந்த்ரமானரீதியாய்க் கணக்கிடுதல் பற்றி, திங்களென்று மாதத்திற்குப் பெயர் வழங்கலாயிற்று: இலக்கணை என்பான என்றுபிரித்து, என்பதாக என்று உரைத்தலுமாம். நல்லொழுக்கம் சொல்லுதற்கு எளியதாயினும் அனுட்டித்தற்கு அரியதாதலால், 'உரைசெயற்கெளிதுமாகி யரிதுமாமொழுக்கு' எனப்பட்டது. "சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம், சொல்லியவண்ணஞ் செயல்" என்றபடி வனவாசஞ் செய்வேனென்பது முதலிய விரதங்களைப்பற்றிய நியமவார்த்தைகளைச் சொல்லுதல் எவர்க்கும் எளியதாயினும் அந்நியமப்படி தவறாது நடத்தல் எவர்க்கும் அரிதாதலும் உணர்க. ஒழுக்கு - ஒழுகு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். 'அரைசியல்,' 'விரைசுக' எனப் போலியாகவும் பாடங் காணப்படுகின்றது. (சச)

[சுக்கிரீவன் உடன்பட்டுச் சொல்லுதல்.]

சரு. மறித்தொருமாற்றங்கூறான்வானுயர்தோற்றத்தன்னான்
குறிப்பறிந்தொழுகன்மாதோகோதிலாதலென்னா
நெறிப்படர்கண்கள்பொங்கிநீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்னாக்கவிக்குலத்தரசன்போனான்.

(இ - ள்.) (அவ்வார்த்தைகளைக்கேட்டு), கவி குலத்து அரசன் - குரங்குகளின் கூட்டத்திற்குத் தலைவனான சுக்கிரீவன், மறித்து ஒரு மாற்றம் கூறான் - (அதனைத்) தடுத்து ஒருவார்த்தையும் சொல்ல மாட்டாதவனாய், வான உயர் தோற்றதது அன்னான் குறிப்பு அறிந்து ஒழுகல் கோது இலர் ஆதல் என்னா - (வான்போலுயர்ந்த தவவேடத்தையுடைய அவவிராமபிரானது குறிப்பை யுணர்ந்து அதன்படி நடத்தலே குற்றமில்லாதவராகுதலாம்' என்று எண்ணி, படர் கண்கள் நீர் பொங்கி நெறி வர - பரந்த தன்கண்களினின்று நீர்பொங்கித் தொடர்ச்சியாய் ஒழுக, நெடிது தாழ்ந்து - நீளமாக [ஸாஷ்டாங்கமாய்விழுந்து] நமஸ்கரித்து, பொறிப்பு அருந்துன்பம் உன்னா - எழுதமுடியாத [மிகவும் அதிகமான] துன்பத்தை மனத்திற் கொண்டு, போனான் - (கிஷ்கிந்தாநகரத்தை நோக்கிச்) சென்றான்; (எ - று) மாதோ - அசை.

திருக்குறளில் "வானுயர்தோற்றம்" என்றதும் அங்குப் பரிமேலழகர் 'வானம்போ லுயர்ந்த தவவேடம்' என்று பதப்பொருளுரைத்து 'வானுயர் தோற்றமென்பது "வான்றோய்குடி" என்றாற்போல இலக்கணை வழக்கு' என்றதுங்காண்க. 'வானுயர்கொற்றத்தன்னான்' எனறபாடத்திற்கு வானத்தை யளாவியுயர்ந்த வெற்றியையுடைய அவ னென்னலாம்; கொற்றம், வாலி வதத்தாலாகியது. குறிப்பு - குறித்த கருமம். பொறிப்பருந் துன்பம் .

இராமபிரானைப் பிரிவதனாலாகிய சோகம்; இராமபிரானது சீதாவிரக சோகத்தைக் கருதிப்பதனாலாகிய சோகமுமாம். இதுவே, கண்ணீர் பொங்கி வருதற்குக் காரணம். 'பொறப்பருந் துன்பம்' என்று பாடமோதி, பொறுக்கமுடியாத துயர மென்று உரைப்பாரு முளர். (௬௫)

[இராமன் அங்கதனுக்கு அறிவுகூறல்.]

௬௬. வாலிகாதலனுமாண்டுமலரடிவணங்கினானை
நீலமாமேகமன்னநெடியவனருளினோக்கிச்
சீலநீயுடையையாதலிவன்சிறுதாதையென்னா
மூலமேதந்தநுந்தையாமெனமுறையினிற்றி.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) வாலி காதலனும் ஆண்டு மலர் அடி வணங்கினானை - வாலியின்மகனான அங்கதனும் அப்பொழுது இராமபிரானது தாமரைமலர்போன்ற திருவடிகளை நமஸ்கரிக்க, அவ்வங்கதனை நீலம் மா மேகம் அன்ன நெடியவன் அருளின் நோக்கி - நீலநிறமுடைய சிறந்த மேகத்தைப் போன்ற பெரியவனான இராமபிரான் கருணையோடு பார்த்து, நீ சீலம் உடையை ஆதல் - நீ நல்லொழுக்கமுடையனாவது (எங்ஙனமெனின்),- இவன சிறு தாதை என்னா - இச்சுக்கிரீவனை (உனக்குச்) சிறிய தந்தையென்று கருதாமல், மூலமே தந்த நுந்தை ஆம் என - உன்பிறப்பிற்குக் காரணமான உன்னைப்பெற்ற தந்தையைப்போலவே கொண்டு, முறையில் நிற்றி - அவன்கட்டளையில் நிற்பாயாக; (எ - று.)—'நோக்கி' என்றது, அடுத்த செய்யுளில் 'கூறி' என்பதனோடு தொடரும்.

இனி, பின்னிரண்டடிக்கு—நீ சீலம் உடையை - நீ நல்லியல்பையுடையாய்; ஆதல் - ஆதலால், இவன் சிறுதாதை என்னா - இச்சுக்கிரீவனை உனக்குச்சிறியதந்தையென்று கருதாமல் மூலமே தந்த நுந்தை ஆம் என - முன்பு உன்னைப்பெற்ற தந்தையான வாலியைப் போலவே கொண்டு, முறையில் நிற்றி - முறைப்படி அவனுக்கு அடங்கி நிற்கக்கடவாய் என்று பதவுரை கூறலுமாம். மூலமேதந்த நுந்தை - ஸாக்ஷாத்பிதா. நிறமும், கைம்மாறு கருதாது கருணைமழை பொழிதலும், தாபத்தை யொழிக்குங் குளிர்ந்த தோற்றமும்பற்றி, 'நீலமாமேகமன்ன நெடியவன்' என்றார். நெடியவன்-பெருமைக்குணமுடையான் (௬௬)

[இராமன் அங்கதனுக்கும் அனுமானுக்கும் விடையளித்தல்.]

௬௭. என்னமற்றினையகூறியேகவற்றொடரவென்றான்
பொன்னடிவணங்கிமற்றப்புகழுடைக்குரிசில்போனான்
பின்னர்மாருதியைநோக்கிப்பேரெழில்வீரநீயு
மன்னவனரசுக்கேற்றதாற்றுதியறிவினென்றான்.

(இ - ள்.) என்ன மற்று இனைய கூறி - என்றும் மற்றும் இத்தன்மையனான வார்த்தைகளையுஞ் சொல்லி, அவன் தொடர ஏது என்றான் - அச்

சுக்கிரீவனோடுகூடச் செல்வாயாகவென்று கூறியருளினான்; மற்று-உடனே, அ புகழ் உடை குரிசில் - கீர்த்தியையுடைய பெருமையிற் சிறந்தவனான அவ்வங்கதன், பொன் அடி வணங்கி - (இராமபிரானது) பொன்போலச் சிறந்த திருவடிகளை நமஸ்கரித்து, போனான் - (கிஷ்கிந்தா நகரத்திற்குச்) சென்றான்; பின்னர் - பின்பு, (இராமபிரான்), மாருதியை நோக்கி - அநுமானைப் பார்த்து, 'பேர் எழில் வீர - மிக்க அழகையுடைய வீரனே! நீயும்—, (சென்று), அன்னவன் அரசுக்கு ஏற்றது - அச்சுக்கிரீவனது அரசாட்சிக்கு வேண்டிய காரியத்தை, அறிவின் ஆற்றுதி - (உனது) அறிவினாற் செய்வாயாக', என்றான் - என்று அருளிச்செய்தான்; (எ - று.)

சுந்தரனென்று ஒருபெயர் பெறுமாறு அழகிற் சிறத்தலால், அநுமானை, 'பேரெழில்வீர' என விளித்தல் தகும் இனி, பேர் எழில் வீர - மிக்க எழுச்சியையுடைய வீரனே யென்றுங் கொள்ளலாம்; எழுச்சி - உயர்ச்சி, பெருவடிவங்கொள்ளுதல்: இராமலக்ஷ்மணர் முன்னிலையில் அநுமான் பெருவடிவங்கொண்டு காட்டியமை, மராமரப் படலத்திற் கூறப்பட்டது. குரிசில் - ஆண்பாற் சிறப்புப் பெயர். (௪௭)

[அநுமான் 'இங்கிருந்து பணிசெய்வேன்' என்றல்.]

௪௮. பொய்த்தலி லுள்ளத்தன்பு பொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநாயேனேயினவெனக்குத்தக்க
கைதொழில்செய்வேனென்றுகழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின்றவீரனிவ்வுரைவிளம்பிவிட்டான்.

(இ - ள்.) அன்பு பொழிகின்ற - அன்பை மிகுதியாக விளக்குகின்ற, பொய்த்தல் இல் உள்ளத்து புணர்ச்சியானும் - பொய்படுதலில்லாத மனக்கலப்பை யுடையவனான அநுமானும், (இராமபிரானை நோக்கி), 'நாயேன் - அடியேன், இ தலை இருந்து - இவ்விடத்திலே இருந்து, ஏயின - (உன்னாற்) கட்டளை யிடப்பட்டனவும், எனக்கு தக்க - எனது நிலைமைக்கு ஏற்றனவுமான, கைதொழில் - அடிமைத் தொழில்களை, செய்வேன - (உனக்குச்) செய்வேன்,' என்று - என்றுசொல்லி, கழல் இணை வணங்கும் காலை - (அப்பெருமானது) உபயபாதங்களில் விழுந்து நமஸ்கரிக்கும்பொழுது,—மெய்த்தலை நின்ற வீரன் - சத்தியத்தில் நிலைபெற்ற வீரனான இராமபிரான், இ உரை விளம்பிவிட்டான - இந்த வார்த்தைகளைக் கூறலானான்; (எ - று)— அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

பொய்த்தலில் உள்ளத்துப் புணர்ச்சி - அகம் வேறு புறம் வேறாகாமல் மனப்பூர்வமான நண்பு. இனி, முதலடிக்கு—பொய்த்தல் இல் உள்ளத்து அன்பு - பொய்படாததும் மனப்பூர்வமானதுமான அன்பை, பொழிகின்ற - மிகுதியாக விளக்கின்ற, புணர்ச்சியானும் - நண்பையுடையவனான அநுமானும் என்று பதவுரை கூறலுமாம். இனி 'அன்புபொழிகின்ற' என்பதற்கு - அன்பினால் வெளிப்படுங் கண்ணீரைச் சொரிகின்ற என்று உரைப்பாருமுளர். அநுமான் இவ்வாறு கூறுதற்குக் காரணம் அவன் இராமபிரான்பக்கல்

கொண்ட பத்திப்பெருங் காதலென்பது தோன்ற 'பொய்த்தலினுள்ளைத் துன்புபொழிகின்ற புணர்ச்சியான்' என்றும், இராமபிரான் அதனை மறுத்துரைத்தற்குக் காரணம் அப்பெருமானது நேர்மையென்பது தோன்ற 'மெய்த்தலைநின்றவீரன்' என்றுங் கூறினர். நாயேன் - நாய்போற் கடைப்பட்டவனான யான்: நாயுவமை, எளிமையைக் காட்டும். ஏயின = ஏவின. 'எனக்குத்தக்க' என்றது, இரட்டுறமொழிதலால், எனது அடிமைத்திறத்திற்கு ஏற்ற என்ற பொருளோடு, யான் செய்தற்கு இயன்ற என்ற பொருளையுங் காட்டும். கைத்தொழில் - சிறுதொழில், குற்றேவல். விளம்பிவிட்டான் - ஒருசொல் தன்மையது; விடு - துணைவினை: துணிவையுங் காட்டும். 'விளம்பியிட்டான்' என்பதும் பாடம். (௪௮)

[இராமபிரான் அதனை மறுத்துக்கூறல்.]

௪௯. நிரம்பினானொருவன்காத்தநிறையரசிறுதிநின்ற
வரம்பிலாததனைமற்றோர்தலைமகன்வலிதிற்கொண்டா
லரும்புவநலனுந்தீங்குமாகலினையநின்போற்
பெரும்பொறையறிவினோரானிலையினைப்பெறுவதம்மா.

(இ - ள்.) நிரம்பினான் ஒருவன் காத்த - (அறிவு ஆண்மை பெருமையென்னும் மூவகையாற்றலும்) நிறைந்தவனான ஓரரசன் பாதுகாத்துநின்ற, இறுதி நின்ற வரம்பு இலாத நிறை அரசு - அதனை கடையெல்லையில்லாததும் (செல்வவளங்கள்) நிறைந்ததுமான அரசாட்சியை, மற்று ஓர் தலைமகன் - வேறோரரசன், வலிதின் கொண்டால் - வலியக் கைப்பற்றிக் கொண்டால், (அவ்வரசாட்சியில்), நலனும் தீங்கும் அரும்புவ - நன்மைகளேயன்றித் தீமைகளும் விளைவனவாம்; ஆகலின் - ஆதலால், ஐய - அப்பா! நின் போல் பெரும் பொறை அறிவினோரால் நிலையினை பெறுவது - (அவ்வாறான சுக்கிரீவனது அரசாட்சி) பெரிய பாரத்தைத் தாங்கவல்ல அறிவையுடைய உன்னைப் போன்றவர்களாலேயே நிலைபெறக் கடவதாகும்; (எ - று.)—அம்மா - ஈற்றசை.

'நிரம்பினனொருவன்' என்றது, இங்கு வாலியாம். 'மற்றோர்தலைமகன்' என்றது, இங்குச் சுக்கிரீவனும். 'கொண்டான்' என்ற பாடமும் ஏற்கும். இறுதிநின்றவரம்பு - அழிவு; அஃதில்லாத தென்க. பொறை - பொறுக்கப்படுவது; பொறுத்தல் - சுமத்தல். 'பெரும்பொறை யறிவினோரால்' என்பதற்கு - மிக்க பொறுமைக் குணத்தையும் அறிவையு முடையவர்களாலென்று பொருள் கூறலுமாம். (௪௯)

௫௰. ஆன்றவற்குரியதாயவரசினைநிறுவிப்பா
லேன்றெனக்குரியதாயகருமமுமியற்றற்கொத்த
சான்றவர்நின்னினில்லையாகலாற்றருமந்தானே
போன்றநீயானேவேண்டவுத்தலைபோதியென்றான்.

(இ - ள்.) (முதலில்), ஆன்றவர்க்கு உரியது ஆய அரசினை நிறுவி - (பல குணங்களாலும்) நிறைந்தவனான சுக்கிரீவனுக்கு உரியதாகிய அரசாட்சியை (அவன்பக்கல்) நன்றாக நிலை நிற்கும்படிசெய்து, அப்பால் - பின்பு, எனக்கு உரியது ஆய கருமமும் என்று இயற்றற்கு ஒத்த - எனக்கு ஆகவேண்டியதான காரியத்தையும் ஏற்றுக்கொண்டு செய்யத்தக்க, சான்றவர் - பெரியோர், நின்னின் இல்லை - உன்போல் (எவரும்) இல்லை; ஆகலால் - ஆதலால், தருமம் தானே போன்ற நீ - தருமமே வடிவெடுத்தாற் போன்றவனான நீ, யானே வேண்ட - நான் வேண்டுகின்றபடியே, அ தலை போதி - அவ்விடத்திற்கு [சுக்கிரீவனிடத்திற்கு]ச் செல்லக்கடவாய், என்றான் - என்று (அநுமானைநோக்கி இராமன்) கூறினான்; (எ - று.)

ஆன்றவன் என்றதில், சால் என்றதன் மரூஉவான ஆல் - பகுதி. (௫௦)

[அநுமான் கிட்கிந்தைக்குச் செல்ல, இராமலக்ஷ்மணர் வேறொரு மலைக்குச் செல்லுதல்.]

௫௧. ஆழியானனையகூறவாணையீதாகினஃதே
வாழியான்புரிவேனென்றுவணங்கிமாருதியும்போனான்
சூழிமால்யானையன்ன தம்பியுந்தானுந்தொல்லை
யூழிநாயகனும்வேறோருயர்தடங்குன்றமுற்றான்.

(இ - ள்.) ஆழியான் - சக்கராயுதத்தை யுடையவனான திருமாலின் அவதாரமாகிய ஸ்ரீராமன், அனைய கூற - அவ்வார்த்தைகளைச் சொல்ல,— (அதுகேட்டு), மாருதியும் - அநுமானும் — (அவ்விராமபிரானை நோக்கி), 'வாழி - வாழ்வாயாக: ஆணை ஈது ஆகின் - (உன) கட்டளை இதுவானால், யான் அஃதே புரிவேன் - அடியேன் அவ்வாறே செய்வேன்,' என்று - என்றுசொல்லி, வணங்கி - (இராமபிரானை) நமஸ்கரித்து, போனான் - (கிஷ்கிந்தா நகரத்தைநோக்கிச்) சென்றான்; தொல்லை ஊழி நாயகனும் - பழமையான உலகத்திற்குத் தலைவனாகிய ஸ்ரீராமனும், சூழி மால் யானை அன்ன தம்பியும் தானும் - முகபடாத்தையுடைய பெரிய யானையைப்போன்ற தன் தம்பியான இலக்குமணனும் தானுமாக, வேறு ஓர் உயர் தட குன்றம் உற்றான் - உயர்ந்த பெரிய வேறொருமலையைச் சேர்ந்தான்; (எ - று.)

ஆழியான் - (யாம்) கடலிற் பள்ளிகொள்பவனென்றும், பிரளயவெள்ளத்திற படுத்தருள்பவனென்றும், கடல்போற் கருநிறமுடையவனென்றும், ஆஜ்ஞாசக்கரத்தை யுடையவனென்றுங் கொள்ளலாம். வாழிய என்னும் யகரவீற்று வியங்கோள் முற்று ஈறுகெட்டு 'வாழி' என நின்றது. இத்தன்மையதான உத்தமகுணத்தால் உனக்கு ஒரு திருஷ்டிதோஷமுண்டாகாமல் நீ நீடூழிகாலம் வாழ்வாயாக வென்பான், இங்கு 'வாழி' என்றான். இழிந்தோர் மேலோரை வாழ்த்துவது தகுதியோ வெனின்,—வரம்புகடந்து பொங்கும் பரிவையுடைய பக்தர்கள் அவ்வாறான அன்பின் மிகுதியால் தமது நிலையையும் எதிர்த்தலைவின் நிலையையும் மறந்து இங்ஙனம் வாழ்த்துதல்

மரபாமென்க. 'வாழியாய்' என்ற பாடத்திற்கு - என்றென்றைக்கும் அழியாத வாழ்வை யுடையவனே யென்று பொருள். 'சூழியானை' எனவே, காட்டியானையன்றி நாட்டுயானை யென்றதாம். மனம்போனபடி காட்டில் திரியும் யானை போலன்றி ஒருபாகனுக்கு அடங்கி நடக்கும் யானைபோலத் தனது தமையனாது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்குந் தம்பியான இலக்குமணனெனக. யானையுவமை மிக்க வலிமைக்கும். அடங்காத சீற்றத்திற்கும், கம்பீரமான தோற்றத்திறகும் ஏற்கும். ஊழிநாயகன் தம்பியும் தானும் உற்றான - தலைமை பற்றி வந்த திணைவழுவமைதி தொல்லை யூழி நாயகன் அநாதியான காலத்திறகுத் தலைவ னென்றலுமாம். (௫௧)

[இதுவும் அடுத்தகவியும் - சுக்கிரீவன் அரசாளுதலைக்கூறும்;
இப்படலத்திற்கு உயிர்நிலைச்செய்யுள்கள் இவை.]

௫௨. ஆரியனருளிற்போயவ்வகன்மலையகத்தனாய
சூரியன்மகனுமானத்துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்னாடாயெனத்தந்தைமுந்தைச்
சீரியன்சொல்லேயென்னச்செவ்விதினரசுசெய்தான்.

(இ - ள்.) ஆரியன் அருளின போய் - சிறந்தவனான இராமபிரானது கட்டளையினாற் சென்று, அ அகல் மலை அகத்தன் ஆய - விசாலமான அக் கிஷ்கிந்தமலையி னுள்ளிடத்தைச் சேர்ந்தவனான, சூரியன மகனும் - சூரிய புத்திரனான சுககிரீவனும்,—மானம் துணைவரும் கிளையும் சுற்ற - பெருமையையுடைய (அரசாட்சிக்குத) துணையாயுள்ள மந்திரிகள முதலியோரும் உறவினரும் (தன்னைச்) சூழ்ந்து நிறக,—தாரையை வணங்கி - (வாலியின் மனைவியான) தாரையை நமஸ்கரிதது, அன்னாள் தாய் என - (தமையன் மனைவியான) அவள (தனக்குத்) தாயென்று சொல்லும்படியாகவும், முந்தை சீரியன சொல்லே தந்தை என்ன - தனக்கு முன்பிறந்தவனும [தமையனும்] சிறப்புள்ளவனுமான வாலியின வார்த்தையே தனக்குத் தந்தை யென்று சொல்லுமபடியாகவும், செவ்விதின் அரசு செய்தான் - சிறப்பாய் அரசாட்சியைச் செய்தான்; (எ - று.)

"ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம: = தமையன் தந்தையோ டொப்பான்" என்றபடி தமையனைத் தந்தையைப் போலக் கொண்டு நன்குமதித்தலும், அவர் மனைவியைத் தாயைப்போலக் கொண்டு நன்கு மதித்தலும் வேண்டுமன்றோ? அவ்வாறே சுக்கிரீவன் 'தன்தமையன மனைவியான தாரையைத் தாயைப்போலக் கொண்டு அவன் சொற்கேட்டு நடப்பவனாயின னென்பதும், தன தமையனான வாலி இறந்து விட்டதனால் அவன சொல்லை அந்த ஸ்தானத்திற கொண்டு பிதருவாக்கிய பரிபாலனஞ் செய்யலாயின னெனபதும், பின்னிரண்டடியில் விளங்கும். வாலி இறக்கும்போது சுக்கிரீவனை அருகிலழைத்து அவனுக்குச் சில நல்லறிவுகளைக் கூறின னென்பது, கீழ் வாலிவதைப் படலத்திற சொல்லப் பட்டது. அவவுறுதி மொழிகளைச் சுக்கிரீவன் தலைமேற் கொண்டு அவற்றின்படி நடந்தன னென்பது, இங்குக் கூறிய

வாரும். மூந்தை - மூந்து தோன்றியவன். இனி, 'முந்தைச் சீரியன் சொல' என்பதற்கு-பழைமையானவனும் சிறப்புள்ளவனுமான இராமபிரான் கூறிய உறுதிமொழிகளென்று உரைத்தலுமாம். மந்திரிகள் முதலியோர் அரசர்க்கு உறுதிச்சுற்றமெனப்படுபவ ராதலால், அவர்கள் உரிய சமயங்களில் வந்து சூழ்ந்து உதவுதலை 'மானதுணைவர் சுற்ற' எனக் கூறினார்; "சூழ்வார் கண் ணாக வொழுகலான் மன்னவன், சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்" என்ற திருக்குறளைக் காண்க. சுற்றத்தாரைத் தழுவுதல் செல்வம் படைத்ததன் பய னும் செல்வத்தைப் பாதுகாத்தற்கும் விருத்திசெய்தற்கும் காரணமு மாத லால், அவர்களைத் தழுவுதல் 'கிளைசுற்ற' என்றதனாற் கூறப்பட்டது. "கொடுத் தலு மின்சொலு மாற்றி னடங்கிய, சுற்றத்தாற் சுற்றப்படும்" என்றபடி இனசொற் சொல்லுதல் வேண்டுவன கொடுத்தல் முதலியவற்றை இவன் உடைய னாகுதலால், இவனைச் சுற்றத்தார் நீங்காது தழுவுவ ரென்க. ஆர் யன என்ற வடசொல், சரணமடையத் தக்கவனென்று காரணப்பொருள் பெறும். 'முந்தைச் சீரியர் சொல்' என்ற பாடத்திற்கு - பழைய பெரியோர் (நூல்களிற் கூறியுள்ள) சொற்களென்று பொருளாம். (௫௨)

௫௩. வளவரசெய்திமற்றைவானரவீரர்யாருங்
கிளைஞரினுதவவாணைகிளர்திசையளப்பக்கேளா
(அ)ளவிலவாற்றலாண்மையங்கதன்றங்கள்செல்வத்
திளவரசியற்றவேவியினிதினிருந்தானிப்பால்.

(இ - ள்.) வளம் அரசு எய்தி - செல்வமிகுதியை யுடைய அரசாட்சியை அடைந்து,—மற்றை வானர வீரர் யாரும் கிளைஞரின் உதவ - மற்றை வானர வீரர்கள் யாவரும் சுற்றத்தார் போல வேண்டுவன செய்யவும், ஆணை கிளர் திசை அளப்ப - (தனது) ஆஜ்ஞையானது நீண்ட திக்குக்களின் எல்லையை அளாவவும்—அளவு இல ஆற்றல் ஆண்மை அங்கதன் - அளவில்லாத பலத் தையும் பராக்கிரமத்தையு முடைய அங்கதன், கேளோடு - அன்புடன், தங் கள் செல்வத்து இளவரசு இயற்ற - தங்கள் அரசாட்சிச்செல்வத்திற் கெல் லாம் இளவரசனாய் ஆட்சி செய்யுமாறு, ஏவி - கட்டளை யிட்டு, இனிதினின் இருந்தான் - (அக்கிஷ்கிந்தா நகரத்திற் சுக்கிரீவன) இனிமையாய் வீற்றிருந் தான; இப்பால் - இப்புறம், (எ - று)--'வள்ளலும் அவண்நின்று ஏகி' என அடுத்த கவியோடு குளகமாத் தொடரும்.

சுக்கிரீவன் இராமன் என்னும் இருவருட் சுக்கிரீவன் செய்தியை இவ் வாறு கூறி, மேல் இராமன செய்தியைக் கூறுகின்றா ராதலின், வேறுபாடு தோன்ற, 'இப்பால்' என்றார்; அங்குச் சுக்கிரீவன செய்தி அதுவாக இங்கு இராமன செய்தி இது வென்க. வானரா என்ற வடசொல், கொஞ்சங்குறைய மனிதர் போன்ற வடிவமுடையவ ரென்று பொருள்படும். கிளர்தல் - விளங் குதலுமாம். ஆணை கிளர்திசை அளப்ப - தனது ஆஜ்ஞை எங்குந் தடையின் றிச் செல்ல வென்க; 'ஸாகர்வாஜ்ஞை' என்று சிறப்பித்துக் கூறல் வழக்கு. இனிதினின் இருத்தல் - சௌக்கியத்துடன் வாழ்தல்; அல்லது, காண்பவர்

கேட்பவர்கட்கு இனிமை யுண்டாகுமாறு இருத்தல். அங்கதன் தங்கள் செல்வத்து இளவரசு இயற்ற ஏவி இனிதினின் இருந்தான் - அங்கதன் இளவரசனாயிருந்து இராசாங்க காரியமெல்லாம் பார்த்து வரச் சுக்கிரீவன் இன்பமனுபவித்துக்கொண்டிருந்தனனென்க. 'அங்கதனறங்கொள் செல்வத்து' என்றும் பாடமுண்டு. (௩௩)

[இராமன் ரிசியமூககிரியில் வசித்தல்]

௩௪. வள்ளலு மவணின் றேகி மதங்கனை திருக்கை யாய
வெள்ளவான் குடுமிக் குன்றத் தொருசிறை மேவி மெய்ம்மை
யளனுறு காதற் றம்பி யன்பினு லமைக்கப் பட்ட
வெள்ளலில் சாலை யெய்தி யினிதினி னிருந்த காலை.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) வள்ளலும் - வரையாதருளுமியல்பினனான ஸ்ரீராமனும், அவண் நின்று ஏகி - அவ்விடத்திலிருந்து சென்று, மதங்கனது இருக்கை ஆய வெள்ளம் வான குடுமி குன்றத்து ஒரு சிறை மேவி - மதங்க முனிவனது இருப்பிடமாயுள்ளதும் நீர்ப்பெருக்குக்களையும் ஆகாயத்தையளாவிய சிகரத்தையுமுடையதுமான ரிசியமூககிரியின் ஒரு பக்கத்தை யடைந்து, (அவ்விடத்தில்), அள்ளுறு மெய்ம்மை காதல் தம்பி அன்பினால் அமைக்கப்பட்ட எள்ளல் இல் சாலை எய்தி - அள்ளியெடுக்க மளவினதாகிய [மிகவும் அதிகமாகிய] உண்மையான பக்தியை யுடைய தன்தம்பியான இலக்குமணனால் அன்புடன் செய்யப் பட்ட குற்றமில்லாத பர்ணசாலையை அடைந்து, இனிதினின் இருந்த காலை - (அங்கு) இனிமையாய் வசித்திருந்த பொழுது. (எ - று.)—'இரவி ஏகினன்' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

மதங்கனது இருக்கை - மதங்க முனிவன் வசிக்குமிடம்; இந்த ரிசியமூககிரியே வாலிக்கு அஞ்சிய சுக்கிரீவன் தங்கியிருந்த இடம். எள்ளல் இல் - பழித்தற் கிடமில்லாத என்க. மெய்ம்மைக்காதல் - நிஜபக்தி காதல், இங்கே ராமபக்தி. (௩௪)

"சுக்கிரீவனுக்குரிய தொன்முடிகவித்தே, மிக்கதிறல் வானரர்கள்மேவ வரசெய்திக், கக்குமுகின்மிக்க மழைக்காலமதகன்று, விக்கண்வருவாயென விராகவன் விடுத்தான" என்னும் ஒட்டக்கூத்தருத்தரகாண்டச் செய்யுளினால், இப்படல வரலாற்றைச் சுருங்கவுணரலாம்.

இப்படலத்தின் பயன்—சுக்கிரீவன் அரசாட்சியையும் மனைவியையும் அடைந்த செய்தியை எப்பொழுதுங் கேட்பவன் அரசாட்சியையடைவன் என்று ஸ்காந்த புராணம் கூறுகின்றது.

அரசியற்படலம் முற்றிற்று.

## ஏழாவது

# கார்காலப் படலம்

மழைக்காலத்தைப் பற்றிக் கூறும் பாகம். மழைக்கால வருணனையும், அக்காலத்திற் சீதையின் பிரிவைக்குறித்து இராமபிரான் இரங்குதலும், இலக்குமணன் தேற்றுதலும், அக்கார்காலம் கழிதலும், இப்படலத்திற் கூறப் படுகின்றன. சுக்கிரீவனுக்குத் தவணைகுறித்த நான்குமாதகாலத்தை இராம பிரான் கழித்த செய்தியை இதிற்கூறுகின்றார். கருமையென்னும் பண்புப் பெயரின் விகாரமான 'கார்' என்பது - ஆகுபெயராய், அந்நிறத்தையுடைய மேகத்தைக் குறிக்கின்றது. கார்காலம் - மேகங்களை யுடைய காலம், மேகங் களுக்கு உரிய காலம்; மேகங்கள் மழைபெய்யுங் கால மென்க. கார்கால மென வலிமிகாது இயல்பானதற்குக் காரணம், வருமொழி வடமொழியா யிருத்தலே யாதல்வேண்டும். மாதம் பன்னிரண்டனுட் சித்திரைமுதலாக இரண்டிரண்டு மாதங்கள் - முறையே இளவேனிற்பருவம், முதிர்வேனிற் பருவம், கார்ப்பருவம், கூதிர்ப்பருவம், முன்பனிப்பருவம், பின்பனிப்பரு வம் எனப்படும்; இவையே வஸந்தருது, க்ரீஷ்மருது, வர்ஷருது, சரத்ருது, ஹேமந்தருது, சிசிரருது என்பன. பருவம், ருது, பெரும்பொழுது என் பவை - ஒருபொருட் சொற்கள். இம்முறைப்படி, ஆவணி புரட்டாசி மாஸங் கள் கார்காலமாம். தேசபேதத்தாலும், காலபேதத்தாலும் சிறிது முன்பின் னாதலும் உண்டு. அன்றியும் முதிர்வேனிற்பருவத்தின் பிற்பாதியாகிய ஆடி மாதத்திலேயே மழைதொடங்கி கூதிர்ப்பருவத்தின் முற்பாதியாகிய ஐப்பசி மாதம் வரையிற் பெய்த லியல்பாதலால், மழைக்காலமாகிய அந்த நான்கு மாதங்களும், ஆங்காங்குச் சென்று சீதையைத் தேடுவித்தல் முதலாக மேற் செய்யவேண்டும் காரியமுயற்சிக்கு ஏற்றகால மல்லவென்று இராமபிரானாற் கொள்ளப்பட்டன வென்பதும் உணர்க.

இனி, இப்படலத்திற்கு 'சரற்காலப்படலம்' என்று பெயர் கூறுவாரு முளர்; அது, இப்படலத்தின் இறுதியிற் சரத்காலத்தின் வரவும் அக்கால வருணனையும் கூறுதல்பற்றியெனக் கொள்ளவேண்டும்.

உய்த்துநோக்குமிடத்து, இரண்டிரண்டு மாதங்களாகக் குறிக்கப்பட்ட ஆறுபருவங்களும், வெயிற்காலம் மழைக்காலம் பனிக்காலம் என்று பகுக் கும்போது மூன்றாய் அடங்குதலால் வர்ஷருதுவும் சரத்ருதுவுமாகிய நான்கு மாதங்களையுமே கார்காலமென்றுகொண்டு படலத்திற்குப் பெயரமைத்தன ரென்றல், தகுதி; "மழைக்காலத்திற்கு வேண்டுபவற்றிற்காக மற்றையெட்டு மாதங்களில் முயலவேண்டும்" என்னும் பொருளுள்ள வடமொழி மேற் கோள் *இங்குக் கருதத்தக்கது.

---

* "வர்ஷார்த்தம் அஷ்டௌ ப்ரயதேத மாஸாந்."

## வேறு.

[தக்ஷிணாயனம்: சூரியன் தெற்கே ஒதுங்குதல்]

௬. மாவியல் வடதிசை நின்று வானவ
னேவிய மேயென வொளிக்க வின்குலாந்
தேவியை நாடிய முந்தித் தென்றிசைக்
கேவிய தூதென விரவி யேகினான்.

(இ - ள்.) ஓவியமே என - சித்திரத்தி லெழுதிய பிரதிமையேபோல, ஒளி கவின் குலாம் - ஒளியோடு கூடிய அழகு விளங்கப்பெற்ற, தேவியை - தன்மனைவியான சீதையை, நாடிய - தேடும்பொருட்டு, முந்தி - (அநுமான் முதலிய வானரர்களை அனுப்புதற்கு) முன்னமே, வானவன் —, தேவாதி தேவனான ஸ்ரீராமபிரான், தென்திசைக்கு ஏவிய - தெற்குத்திக்கிற்கு அனுப்பிய, தூது என - தூதன் போல, இரவி - சூரியன், மா இயல் வடதிசை நின்று - பெருமை பொருந்திய வடக்குத்திக்கினின்று, ஏகினான் - (தெற்குத்திக்கிற்குச்) செல்லலானான்; (எ - று.)

தைமாசம் முதல் ஆனிமாசம் வரையில் ஆறுமாசம் உத்தராயணமும், ஆடிமாசம் முதல் மார்கழி மாசம் வரையில் ஆறுமாசம் தக்ஷிணாயநமுமாம். சூரியன் வடபுறமாக ஒதுங்கிச்சஞ்சரிக்குங் காலம் - உத்தராயணம்; அவன் தென்புறமாக ஒதுங்கிச் சஞ்சரிக்குங் காலம் - தக்ஷிணாயநம். ("சுவேதமலைக்கு வடக்கில் சிருங்கவாந் என்கிற பர்வதம் உண்டு. அது, மூன்று கொடுமுடிகளையுடைய காரணத்தால், அப்பெயரால் விளங்குகின்றது. அம்முடிகளுள் ஒன்று தென்புறத்திலும், மற்றொன்று வடபுறத்திலும் இன்னொன்று நடுவிலும் இருக்கின்றன. தென்புறச் சிருங்கத்திற் சூரியன் சஞ்சரிப்பதனால் தக்ஷிணாயநமும், வடபுறச்சிருங்கத்திற் சஞ்சரிப்பதனால் உத்தராயணமும், நடுச்சிருங்கத்தில் வரும்போது விஷுவமும் உண்டாகின்றன' என்பது புராணம்.) தக்ஷிணாயனத்தொடக்கமாகிய ஆடிமாசம் முதலாகச் சூரியன் வடக்கினின்று தென்புறமாக ஒதுங்குகின்றனன். அங்ஙனம் அவன் இயல்பால் வடக்கிலிருந்து தெற்கே செல்லுதற்கு, தெற்கு முகமாக இராவணனெடுத்துச் சென்ற சீதையைத் தேடுதற்கு இராமனால் முந்தித் தூதனுப்பப்பட்டு அத்திசை நோக்கிச் சென்றாற்போல வென்று கவி தானாக ஒரு காரணத்தைக் கற்பித்துக் கூறியதனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி; [ஹேதூத்ப்ரேக்ஷாலங்காரம்] இது சமயத்திற்கேற்பக் கூறிய உவமையாதல் காண்க. சூரியன், விளக்கத்தைச் செய்பவனாதலால் காணமற்போன பொருளைத் தேடிக்கண்டு பிடித்தற்கு ஏற்றவனாவன். சூரியனது ஸஞ்சாரம் எம்பெருமான் கட்டளைப்படியே நடப்பதாதலால், அவனை அப்பெருமானால் ஏவியனுப்பப் பட்டவனென்றல் ஏற்கும்.

வானவன் - தேவன்; இப்பொதுப் பெயர், சிறப்பாய்த் திருமாலைக் குறித்து, அப்பெருமானது அவதாரமான இராமபிரானை யுணர்த்திற்று. ‛வானவனேவிய தூதென' என்பதற்கு - இந்திரனேவிய தூதன்போல

வென்று உரைப்பினும் அமையும் சூரியபுத்திரனும வாநரராஜனுமான சுக்கிரீவன் தென்திசைக்கு இனி அனுப்புந் தூதன் வாயுபுத்திரனும் வாநரனும் வேகத்திலும் சோர்வின்மையிலும் கல்வியிலும் சிறந்தவனுமான அநுமான்; ஸாக்ஷாத் தேவராஜனான இந்திரன் அத்திசைக்கு முந்தியனுப்பிய தூதன், தேவர்களில் முதல்வனும் வேகமாகச் செல்லுதலிலும் சோர்வின்மையிலும் பேர்பெற்றவனும் அநுமானுக்குக் கல்விகற்பித்த ஆசிரியனுமான சூரியன் என்க. தேவர்கள் தாமானநிலையில் நின்றாவது வாநரம் முதலிய பிறப்புக்களில் தோன்றியாவது சீதையைத்தேடுதல் முதலிய இராமகாரியத்திற்குத் துணைசெய்யக் கடமைப்பட்டவரென்பது, கருதத்தக்கது. இனி, 'மானவன்' என்ற பாடம் - மனிதரிற் சிறந்தவனென்றும், மநுகுலத்திலவதரித்தவனென்றும் பொருள்பட்டு இராமனைக் குறிக்கும்.

வடதிசை பெருந்திசையும் மங்களத்திசையும் புண்ணியத்திசையு மாதலால், அதற்கு 'மா இயல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. மாவியல் என்று எடுத்தால், மிகப்பெரிய என்று பொருள்படும்; ஒருபொருட் பன்மொழி: வியல் - அகலமுணர்த்தும் உரிச்சொல். நின்று - ஐந்தாம்வேற்றுமைச்சொல்லுருபு, நீக்கப்பொருள். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவும் கலைத்துக்கலைத்து எழுதிச் சீர்திருத்தி யமைக்கக்கூடு மாதலால், சித்திரப்பாவை மிக அழகியதாம்; அவ்வடிவம் இயற்கையழகுமிக்க பிராட்டிக்கு உவமையாகக் கொள்ளப்பட்டது. ஏ - பிரிநிலையோடு, உயர்வுசிறப்பு. குலாம் - குலாவும் என்பதன் விகாரம். நாடிய - செய்தியவென்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். நாடிய எவிய என இயையும்.

இதுமுதல் இருபத்தைந்து கவிகள் - மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௧)

[காளமேக வருணனை]

௨. பையணைப்பலதலைப்பாந்தளேந்திய
மொய்ந்நிலத்தகளியின் முழங்குநீர்நெயின்
வெய்யவன்விளக்கமாமேருப்பொற்றிரி
மையெடுத்தொத்ததுமழைத்தவானமே.

(இ - ள்.) மழைத்த வானம் - மழையையுட்கொண்ட மேகமானது,— பை அணை - படம்பொருந்துதலையுடைய, பல் தலை - பல தலைகளையுடைய, பாந்தள் - ஸர்ப்பராஜனான ஆதிசேஷனால், ஏந்திய - சுமக்கப் படுகின்ற, மொய் நிலம் - அணுக்கள் செறிந்த பூமியாகிய, தகளியில் - அகலில், முழங்கு நீர் நெயின் - ஆரவாரிக்கின்ற கடலாகிய நெய்யிலே, மேரு பொன் திரி - மேருமலையாகிய அழகிய திரியில், வெய்யவன் விளக்கம் ஆ சூரியனை விளக்காகக்கொண்டு, மை எடுத்து ஒத்தது - மையெடுத்தாற் போன்றது; (எ - று.)

பூமியாகிய தகழியிலே கடல்நீராகிய நெய்யினிடையே மேருமலையாகிய திரியிற் சூரியனாகிய சுடர்ப்பிழம்பில் எடுத்த மை மேலே பரவினாற்போன்

றது, நீர்கொண்ட' கரிய மேகங்கள் வானத்தி லெங்கும் பரவிய தோற்ற மென்க. இவ்வுவமை, நிறமும் செறிவும் பற்றியது பலபொருள்களைத் தம்முள் இயைபுடையனவாகவைத்து ஒப்புமைகுறித்ததனால், தற்குறிப்பேற்ற வியைபுவமையணி. "வையந் தகளியா வார்கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காக" என்ற முதலாழ்வா ரருளிச்செயலை அடியொற்றியது, இவ்வருணனை. சூரியனது கிரணமாகிய வெயிலினால் கடல்நீர் சுவறி ஆவியாக எழுவதே மேகத்திற்குக் காரணமென்ற சாஸ்திரக்கொள்கை இவ்வருணனைக்கு மூலமென்பதை நுட்பமாய் நோக்குக. சூரியன் பூமியின் நடுவிலுள்ள மேருமலைக்கு மேலாக வானத்தில் அம்மலையை வலம்வருகின்றனனென்ற புராணக்கொள்கைபற்றி, மேருவைத் திரியென்றார்; அத்திரியில் மங்கலகரமாக வலஞ்சுழல்கின்ற விளக்கு, சூரியன். 'பாந்த ளேந்திய' என்று நிலத்திற்கு அடைமொழி கொடுத்ததனால், பூமியின்கீழ் இருந்து அதனைத்தாங்கும் ஆதிசேஷனை விளக்குத் தண்டாகக் கொள்க.

அணை - அணைதல்: முதனிலைத் தொழிற்பெயர். அணைத்தலை - இரண்டாம்வேற்றுமையுருபும் பயனும்தொக்கதொகை. இனி, அணை யென்பதைப் பாந்தளுக்கு அடைமொழியாக்கி, (திருமாலுக்குத்) திருப்பள்ளி மெத்தையாகவிருக்கும் ஆதிசேஷனென்றலுமாம்; அணை-படுக்கை: "புல்கும், அணையாந் திருமாற்கு அரவு" என்றார் பெரியாரும். பாந்தள் - பாம்பு. மொய் - பெருமையையுடைய வெனினுமாம். தகளி=தகழி; போலி. நெயின=நெய்யின்: தொகுத்தல். இன் - ஏழனுருபு; ஐந்தனுருபாக்கி, நெய்யைக்கொண்டு என்றலுமாம்: ஏதுப்பொருள். வெய்யவன் - உஷ்ணகிரணன். விளக்கம் - விளக்கு; (பொருள்களை) விளங்கச்செய்வது. ஆ=ஆக: தொகுத்தல். பொன்திரி - பொன்மயமான திரி யெனவுமாம். இனி, பொன் - பொன்மயமான, மா மேரு - மகாமேருகிரி, திரி என்று பதவுரை கூறுதலு மொன்று. மழைத்த - வினைச்சொல் தன்மைபபட்ட 'மழை' என்ற பகுதியின்மேற பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். வானம் - வான்; அம் - சாரியை: இது, மேகத்திற்கு இடவாகுபெயர். பல்+தலை=பஃறலை: [நன் - மெய் - உ௫.] ஆய்தக் குறுக்கம்; [நன் - எழுத்து - ௬௨] மாத்திரை, கால்; [நன் எழுத்து - ௯௯]

[அம்மேகங்களால் வானம் இருளுதலும், வெயில்தணிதலும்.]

௫. நண்ணுதலருங்கடனஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிலின்வெங்கதிர்
தண்ணியமெலிந்தனதழைத்தமேகமே.

(இ - ள்.) தழைத்த மேகம் - செழித்துப் பரவித் தாழ்ந்த மேகங்களினால்,—விண் அகம் - ஆகாயத்தின் இடமானது,—நண்ணுதல் அரு - (பிறர்) சமீபித்தற்கும் அரியதான, கடல் நஞ்சம் - (பாற்) கடலினின்று தோன்றிய விஷத்தை, நுங்கிய - விழுங்கிய, கண்நுதல் கண்டத்தின் - (நெருப்புக்) கண்ணை நெற்றியிலுடையவனான சிவபிரானுடைய கழுத்தினது, காட்சி -

தோற்றத்தை, காணல் ஆய் - (தன்னிடத்திற) பார்க்கலாகும்படி, இருண்டது - கறுத்தது; வெயிலின வெம் கதிர் - சூரியனுடைய உஷ்ணமான கிரணங்கள், தண்ணிய - குளிர்ச்சியுடையனவாய், மெலிந்தன - உக்கிரந்தணிந்தன; (எ - று.)

சிவபிரானது நஞ்சுண்டு கறுத்த கண்டம்போல வானம் இருளடையும்படியாகவும், வெவ்விய சூரியகிரணங்கள் வெப்பந் தணியும்படியாகவும், நீர்கொண்ட காளமேகங்கள் வானத்திற்பரவித் தழைத்தனவென்பதாம். முதல் வாக்கியம் - காட்சியணி. இரண்டாவது - தன்மைநவிற்சி. திருப்பாற்கடல் கடைந்தபோது அதனினின்று எழுந்ததோர் அதிபயங்கரமான பெருவிஷத்தைக் கண்டவளவில் அதன கொடுமையைப் பொறுக்கமாட்டாமல் அஞ்சியோடிய தேவர்களின் வேண்டுகோளினால் அவ்விஷத்தைச் சிவபிரான் அமுதுசெய்து கண்டத்தில் நிறுத்திவைத்திட்டனனென்ற வரலாறு, இங்கு அறியத்தக்கது. 'தழைத்தமேகம்' என்பதைத் தனிவாக்கியமாகக் கொண்டு, (இவவாறு ஆகும்படி) மேகங்கள் தழைத்தன வென்றலுமாம்; இவ்வுரையில், தழைத்த - முற்று. முந்தின உரையில், தழைதத - பெயரெச்சம்.

நஞ்சம், அம் - சாரியை. கண் நுதல்-கண்ணையுடைய நெற்றியையுடையவன்; இரண்டாம்வேற்றுமையுருபும் பயனு முடனதொக்கதொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. கண்டம் - வடசொல். ஆய்=ஆக; எச்சத்திரிபு. வெயில் - வெம்மையை யுடையது; சூரியகிரணம; 'இல்' விகுதிபெறற பெயர்; இங்கே, சூரியனுக்கு இலக்கணை. இரணடாமடி, முற்றுமோனை. மெலிந்தன தழைதத - முரண்தொடை. (௩)

[வானம்இருண்டமை.]

௪. நஞ்சினின்ளிர்நெடுங்கடலினங்கைய
ரஞ்சனநயனத்தினவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம்வடிவினசெய்கையி
னெஞ்சினினிருண்டதுநீலவானமே.

(இ - ள்.) நீலம் வானம் - நீலநிறமுள்ள ஆகாயமானது,—நஞ்சினின் - விஷம்போலவும், நளிர நெடுங் கடலின - குளிர்ந்த பெரிய கடல் போலவும், நங்கையர் அஞ்சனம் நயனத்தின - மகளிரது மையிட்ட கண்கள் போலவும் அவிழ்ந்த கூந்தலின - அவிழ்ந்த தலைமயிர போலவும், வஞ்சனை அரக்கர்தம் வடிவின - வஞ்சனைக்குணமுள்ள இராக்கதர்களுடைய உடம்பு போலவும், செய்கையின - (அவர்களுடைய) தீச்செயல்போலவும், நெஞ்சினின் - (அவர்களுடைய) மனம் போலவும், இருண்டது - (காளமேகங்கள் பரவியதனாற்) கறுத்துத் தோன்றிற்று; (எ - று.)

ஒரு பொருளுக்குப் பல உபமானங்கள் காட்டியதனால், பல பொருளுவமையணி. 'நங்கையர்' என்றதை 'கூந்தலின்' என்பதனோடும், 'அரக்கர்தம' என்றதை 'செய்கையின்', 'நெஞ்சினின' என்பவற்றோடுங் கூட்டுக. "நஞ்

கையார்' என்ற பாடத்திற்கு - சீதாபிராட்டியாருடைய வென்று பொருளாம். தீவினையைக் கருநிறமுடைய தென்றல் கவிமரபு; ஆதலால், அரக்கர் தஞ்செய்கை இருட்சிக்கு உவமையாயிற்று. அவர்களுடைய மனம் அஜ்ஞானமாகிய இருளினாலும் தீயசிந்தனைகளாலும் கறுத்திருத்தலால் அதனையும் உபமான மாக்கினார்; "அகங் குன்றி மூக்கிற் கரியார்" என்ற திருக்குறளும், "மங்கை பங்கன் சிற்றம்பல மாதரியாச், கூழினமலிமனம்போன் றிருளாநின்ற கோகிலம்" என்ற திருக்கோவையாரும் நோக்கத்தக்கன 'நீலம்' என்ற அடைமொழி, இயற்கைத் தோற்றம் பற்றியது.

பின்னிரண்டடி - சந்தர்ப்பத்திற்கு ஏற்ற உவமையாம். 'நஞ்சினின' முதலியவற்றில், இன - ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். 'நஞ்சினின்', 'நெஞ்சினின' என்றவற்றில், முதலாவது இன - சாரியை. காளமேகங்களடர்ந்த வானம் சீதையைப் பிரிந்த இராமபிரானுக்கு மிக்க வருத்தத்தை விளைத்தல் பற்றியும, அதற்கு விஷத்தை முதலுவமையாக எடுத்துக் கூறுதல் ஏற்கும். அவ்வாறு விரகிகளுக்குக் காமோத்தீபகமாய் வேதனை தருதலில் களிநெடுங் கடலும் இருண்டவானமும் சமமாம். பிராட்டியாரின கணணழகும், அவிழ்ந்த கூந்தலும், அரக்கர்தம் வடிவு செய்கை நெஞ்சுகளும் இராமனுக்கு வருத்தத்தை விளைத்தல், வெளிப்படை. (௪)

[மேகங்கள் மின்னுதல்.]

௫. நாட்களினளிர்கடனீரைநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ
வாட்கைகண்மயங்கியசெருவின்வார்மதப்
பூட்கைகணிறைந்தபுண்டிறப்பபோன்றவே.

(இ - ள்.) நாட்களில் - உரிய நாள்களிலே [அல்லது பலநாள்களாக], களிர் கடல் நீரம் - குளிர்ந்த கடலின் நீரை, நா - நாவினால், உற - மிகுதியாக, வேட்கையின பருகிய - விருப்பத்தோடு குடித்த, மேகம் - மேகங்கள், மினனுவ - மினனுகினறவை,—வாள் கைகள் மயங்கிய செருவின் - வாளாயுதத்தை யேந்திய கைகளையுடைய வீரர்கள் கைகலந்து செய்யும் போரில், வார் மதம் பூட்கைகள் - மிகுதியான மதத்தைக் கொண்ட யானைகள், நிறைந்த புண் திறப்ப - (அவ்வாட்படைகளால் வெட்டப்பட்டு) உடம்பு திறந்து மிக்க விரணத்தை வெளிக்காட்டுவனவற்றை, போனற - போனறன; (எ - று.)

நிரம்ப நீர்கொண்ட கரியமேகங்களின இடையிடையே காணப்படுகின்ற மின்னல்கள், போரில் வாள்கொண்டு துணிக்கப்பட்ட மதயானைகளின உடம்பிற் பலவிடங்களிலும் தோல்கிழியக் காணப்படும் சிவந்த புண்கள் போன்றன வென்பதாம்; உவமையணி. மின்னுவ - பெயர்; எழுவாய். திறப்ப - பெயர்; செயப்படுபொருள்: அ - விகுதி, ப்-இடைநிலை. போன்ற - வினைமுற்று. மேகம் மினனுவ - மின்னுவனவாகிய மேகங்களென்க. பூட்கைகள் திறப்ப - திறப்பனவாகிய பூட்கைகளை யெனக. நாட்களின் - நக்ஷத்திரங்கள் போல, மின்னுவ எனபாருமுளர்.

'காவுற', வேட்கையின் என்றவை - கற்பனையால் வந்தன. இங்ஙனங் கூறுதல், ஸமாதி யெனனுங் குணவலங்காரத்தின் பாற்படும்; அதன் இலக்கணத்தை "உரிய பொருளன்றி யொப்புடைப் பொருண்மேல், தருவினை புணர்ப்பது சமாதியாகும்" எனக் காண்க. வேட்கை - நீர்வேட்கையாகிய தாகத்தா லென்னலாம். வாட்கைகள் - இரண்டனுருபும் பயனுந் தொக்க தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. 'வாட்கணம்' என்ற பாடத்திற்கு - வாள்களின் கூட்ட மென்க. துவாரமுள்ள துதிக்கையை யுடைமையால், யானைக்கு 'புழைக்கை' என்று ஒரு பெயருண்டு; அது,'பூழைக்கை'யென முதல் நீண்டும் வழங்கும்: அது, பூட்கையென மருவியதென்க. நிறைந்த - (இரத்தம்) நிரம்பிய வெனினுமாம். 'நிறத்த புண்' என்ற பாடத்திற்கு - செந்நிறம் மிக்க புண்ணென்று பொருளாம். (கூ)

[இடிமுழக்கம்.]

௧0. நீனிறப்பெருங்கரிநிரைத்தநீர்த்தெனச்
சூனிறமுகிற்குலந்துவன்றிச்சூழ்திரை
மானிறநெடுங்கடல்வாரிமூரிவான்
மேனிரைத்துளதெனமுழக்கமிக்கதே.

(இ - ள்.) சூல் - கருக்கொண்ட [நீரை உட்கொண்ட], நிறம் - (கரு) நிறம்மிக்க, முகில் - மேகங்களின், குலம் - கூட்டமானது,—நீல் நிறம் பெருங் கரி நிறைத்த நீர்த்து என - நீலநிறத்தையுடைய பெரிய யானைகள் வரிசைப் பட்டு நின்ற தன்மைபோல, துவன்றி - நிரைந்து நெருங்கி,—சூழ் திரை - சுழல்கின்ற அலைகளையுடைய, மால் நிறம் - கருநிறமுள்ள, நெடுங் கடல் - பெரிய கடலின், வாரி - நீர், மூரி வான மேல் நிறைத்துளது என - (எழுந்து) பெரிய வானத்திற் பரவினாற் போல, முழக்கம் மிக்கது - ஆரவாரம் மிகுந்தது [மிக்க முழக்கத்தைச் செய்தது]; (எ - று.)

கரிய பெரிய யானைகள் தொகுதிப்பட்டு நின்றாற் போல நீர்கொண்ட காளமேகங்கள் நெருங்கிக் குமுறுகின்றது, கரிய பெரிய கடல் வானத்திலேறி ஆரவாரித்தாற்போ லிருந்ததெனபதாம். முன்னிரண்டடியில் உவமையணியும் பின்னிரண்டடியில் தற்குறிப்பேற்றவணியுங் காண்க. கரிநிறைத்த நீர்த்தெனவும் கடல்வாரி வானமேல் நிரைத்துளதெனவும் முகிற்குலம் துவன்றி முழக்கம் மிக்கது என்று அக்வயித்துப் பொருளுரைத்தால், யானை கடல் என்னு மிரண்டும் மேகத்திற்குக் கரிய பெரிய வடிவம் முழக்கம் என்னு மிரண்டிலும் உவமையாம்.

நீல் - நீலமென்ற வடசொல்லின் விகாரம். நீர்த்து—நீர்மை யென்ற பண்புப்பெயர் ஈறுபோயிற்று; து - பகுதிப் பொருள் விகுதி. 'நீர்த்தன' என்ற பாடத்திற்கு - தன்மையை யுடையனவாய் என்று பொருள். சூழ் கடல் என்றும் இயைக்கலாம்; (பூமியைச்) சூழ்ந்துள்ள கடல் (எழுந்து) வான் மேல் நிரைத்தாற்போல வென்க. 'பெருங்கிரி,' 'சூழ்ந்தன,' 'நிறைந்துள தென' என்பவையும் பாடம். (௧0)

[இதுமுதல் நான்கு கவிகள் - மின்னல்களின் வருணனை.]

எ. அரிப்பெரும்பெயரவன்முதலினோரணி
விரிப்பவுமொத்தனவெற்புமீதுதீ
யெரிப்பவுமொத்தனவேசிலாசைகள்
சிரிப்பவுமொத்தனதெரிந்தமின்னெலாம்.

(இ - ள்.) தெரிந்த மின் எலாம் - (வானத்திலே மேகங்களிற்) காணப்படுகின்ற மின்னல்களெல்லாம்,—அரி பெரும் பெயரவன் முதலினோர் - வானத்திலுள்ள ஹரியென்னும் பெரும்பெயரை யுடையவனான இந்திரன முதலிய தேவர்களுடைய, அணி - ஆபரணங்கள், விரிப்பவும் - ஒளிவீசுவன வற்றையும், ஒத்தன - போன்றன; வெற்புமீது தீ எரிப்பவும் ஒத்தன - மலைகளின் மேல் நெருப்புப் பற்றிப் பொருள்களை யெரிப்பவற்றையும் போன்றன; ஏசு இல் ஆசைகள் சிரிப்பவும் ஒத்தன - பழித்தலில்லாத திக்குக்கள் சிரிப்பவற்றையும் போன்றன; (எ - று)

வானத்திலுள்ள இந்திரன் முதலிய தேவர்களுடைய ஆபரணங்கள் இடையிட்டு ஒளிவீசினாற் போலவும், மலைகளின் மேல் இயல்பாகப் பற்றி யெரிகிற நெருப்புக்களின் சுவாலைகள் அல்லது பொறிகூட்டங்கள் போலவும், ஒன்றையொன்று இகழ்தலில்லாத திக்குக்கள் ஒன்றை நோக்கி ஒன்று நண்பினாற் சிரித்தாற் போலவும், வானத்திற் பரவித்தழைத்த மேகங்களில் மின்னல்கள் விளங்கின வென்பதாம். தற்குறிப்பேற்றவணி. சிரிக்கும்போது பற்களினொளி வெளியே தோன்றுதல், இயல்பு. 'அரிப்பெரும் பெயரவன் முதலினோர்' என்றது, அஷ்டதிக்பாலகர்களை யென்பர் ஒருசாரார்.

பெரும் பெயர் - சிறந்த பெயர். அரி - ஹரி யென்ற வடசொல்லின் விகாரம்; அது, (பகைவர்களை) அழிப்பவ னென்று பொருள்படும். 'அரிப் பெரும் பெயரவன்' என்பதற்கு - ஹரியென்னும் பிரசித்தமான திருநாமத்தை யுடையவனாகிய திருமாலென்று உரைப்பாருமுளர்; ஹரி - (கொடிய அசுரர் முதலியோரை அல்லது அடியார்களுடைய துன்பங்களை) அழிப்பவன். விரிப்ப, எரிப்ப, சிரிப்ப - பெயர்கள். உம்மைகள் மூன்றனுள், முன்னது - எதிரது தழுவிய எச்சமும், நடுவிலுள்ளது - இறந்தது தழுவிய எச்சத்தோடு எதிரது தழுவிய எச்சமும், பின்னது - இறந்தது தழுவிய எச்சமுமாம். ஏசு - முதனிலைத் தொழிற்பெயர். மின்னுவது மின் எனக் காரணக் குறி. 'அரிப்பெரும் பெயரவன் முதலினோர் அணி விரிப்ப' என்பதற்கு - இந்திரன முதலிய தேவர்கள் தங்கள் ஆபரணங்களை யெடுத்து விரித்தால் அவற்றை யென்றும், 'வெற்புமீது தீ எரிப்ப' என்பதற்கு - மலைகளின்மேல் (உலைக்களம் வைத்துத் துருத்திகொண்டு) நெருப்பெரிப்பவற்றை யென்றும் உரைப்பர் ஒருசாரார். 'வெற்பின்' என்றும் பாடம். (எ)

அ. மாதிரக்கருமகன்மாரிக்கார்மழை
யாதினுமிருண்டவிண்ணிருந்தைக்குப்பையிற்
கூதிர்வெங்காலநெடுந்துருத்திக்கோளமைத்
தூதுவெங்கனலுமிழுலையுமொத்ததே.

(இ - ள்.) மாரி கார் மழை-மழைக்காலத்துக் காளமேகமானது,—மாதிரம் கருமகன் - திக்குக்களாகிய கருமான், யாதினும் இருண்ட விண் இருந்தை குப்பையில் - எல்லாப்பொருள்களைக் காட்டிலுங் கறுத்த ஆகாயமாகிய கரிக் குவியலில், வெம் கூதிர் கால நெடுந் துருத்தி கோள் அமைத்து - வேக முள்ள வாடைக் காற்றாகிய பெரிய ஊதுதுருத்தியின் வலிமையைக்கொண்டு, ஊது - ஊதிவளர்த்த, வெம் கனல் - வெவ்விய அக்கினியின் சுவாலைகளை உமிழ் - வெளிப்படுத்துவதான, உலையும் - உலைக்களத்தையும், ஒத்தது - போன்றது; (எ - று.)

அங்ஙனம் உமிழும் அக்கினிச் சுவாலைகளே மின்னல்களென்க; பல பொருள்களைத் தம்முள் இயைபுடையனவாக வைத்து உருவகஞ் செய்தது, இயைபுருவக வணியின் பாற்படும். 'கார்மழை வெங்கனலுமி ழுலையை யொத்தது' என்றது - இவ்வுருவகத்தை அங்கமாகக் கொண்ட தற்குறிப்பேற் றம். கருமகன் - கொல்லன்: இரும்புவேலை செய்பவன்; இதனை கர்மக னென்ற வடசொல்லின் திரிபென்னலாம்; தொழிலாளியைக் குறிக்கும் பொதுப்பெயர். இங்கே சிறப்பாய், கருமானைக் குறித்த தென்க. தொகுதி யொருமையாக 'யாதினும்' என்றார்; கருநிறமுடைய பொருளனைத்தினு மென்க: இதிற் பகுதியாகிய 'யாவினு' - ஏஞ்சாமை குறிப்பது. 'துருத்திக் கோள் அமைத்து' என்பதற்கு - துருத்திக்கருவியை யமைத்து என்பாரு முளர். இனி, இச்செய்யுளுக்கு, யாதினுமிருண்டவிண் ணென்பதை எழுவா யாக்கி, மாரிக் கார்மழையாகிய கரிக்குவியலிலென்று உரை கொளளினும் பொருந்தும். (அ)

கூ. பிரிந்துறைமகளிரும்பிலத்தபாந்தளு
மெரிந்துயிர்நடுங்கிடவிரவியின்கதி
ரரிந்தனவாமெனவசனிநாவென
விரிந்தனதிசைதொறுமிசையின்மின்னெலாம்.

(இ - ள்.) மிசையின் - மேலே [வானத்திலே], திசைதொறும் - திக்குக் கள் தோறும் [எல்லாத்திக்குக்களிலும்], மின் எலாம்-மின்னல்களெல்லாம்,— பிரிந்து உறை மகளிரும் - (கணவரைப்) பிரிந்து வசிக்கின்ற மாதர்களும், பிலத்த பாந்தளும் - பூமியின் கீழிடத்திலுள்ள பாம்புகளும், எரிந்து உயிர் நடுங்கிட - தவித்து உயிர் அடிக்கும்படியாக,—இரவியின் கதிர் அரிந்தன ஆம் என - சூரியகிரணங்களை அறுத்துவைத்தன போலவும், அசனி நா என - இடிகளின் நாக்குக்கள் போலவும், விரிந்தன - விளங்கின; (எ - று.)

பொருளீட்டுதற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்துசெல்லுந் தலைவன் அங்ஙனம் தான் பிரிந்துசெல்லும்போது கார்காலத்தில் மீண்டு வருவதாகக்

காலங்குறித்துச் சொல்லிப்போதல் இயல்பாதலின், அக்காலம் வருமளவும் ஒருவாறு பிரிவுத்துயரைப் பொறுத்துக்கொண்டு ஆறியிருந்த தலைவி அக்காலம் வரக்கண்டவளவிலும் அவன் வரவு காணளாயின பிரிவாற்றாது மிக வருந்துவளாதலால், 'பிரிந்து உறைமகளிர் எரிந்து உயிர்கடுங்கிட மிசையின் மின்னெலாம் திசைதொறும் விரிந்தன' என்றார். வேந்தற்குற்றுழிப்பிரிவிலும் தலைவன் தான் கார்காலத்தில் மீண்டுவந்து சேர்வதாகத் தலைவிக்குக் காலங் குறித்துச் செல்லுதலுண்டு. அக்காலத்தின் வருகையை மேகத்தில் விளங்கும் மின்னல்கள் முந்திதெரிவித்து அம்மகளிரை மிகவருந்தச் செய்யுமென்க. அக்காலங் குறியாதுசென்ற பிரிவுகளிலும், வெப்பமுந் தட்பமும் மிகாது இடைநிகரதாய் நீரும் நிழலும் பெற்றுக் களிசிறந்து மிருகங்களும் பறவைகளும் தம்தம் துணையோடு இன்புற்று விளையாடுங் காலமாதலால் வருத்தத்தை மிகுவிக்குமென்பார், பொதுப்பட 'பிரிந்து உறை மகளிர்' என்றனரென்க. இவ்வகை வருத்தம் பிரிந்த ஆடவர்க்கும் உளதாகவும், மகளிரை எடுத்துக்கூறியது, வருத்தம் பொறுக்கமாட்டாத அபலைகளெனப் படும் அவர்களது மெல்லியல்பைப் பாராட்டியெனக. இடியோசையைக் கேட்டவளவிலே நாகங்கள் அஞ்சித்துடித்தல் இயல்பாதலை "விரிநிறநாகம் விடருளதேனும் உருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்ற நாலடியாரினாலும் அறிக. மின்னலும் இடியும் ஒன்றேயாகின்ற உண்மைநிலையைக் கருதி ஒற்றுமை நயத்தால் இடிமுழக்கத்தின் தன்மையை மின்னலொளியின் மேலேற்றி 'பிலத்தபாந்தள் எரிந்து உயிர்நடுங்கிட மின்னெலாம் விரிந்தன' என்றார்; "எப்பொருளெத்தன்மைத்தாயினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்பதறிவு" ஆதலின். மின்னல் பாய்தலினாலாகும் ஓசையே இடியெனக. இங்ஙனமிருக்கவும் மின்னலை 'அசனிநாவென' என்றது, உபசாரவழக்காற் கூறியதாம். பிலத்தினுள்ளேயிருக்கின்ற பாம்புகள் அங்கிருந்து மின்னலைக் கண்டாலும் நடுங்கும்; "பார்க்கடல்பருகி மேகம் பாம்பினம்பதைப்பமின்னி" என்பது சிந்தாமணி. 'பிரிந்துறைமகளிரும் பிலத்தபாந்தளும், எரிந்துயிர் நடுங்கிட' என்றவிடத்து ஒப்புமைக் கூட்டவணியும், மறைநிப் பகுதியில் தற்குறிப்பேற்றவணியும் சேர்ந்திருத்தலால், சேர்வையணி. சூரியகிரணம் - செந்நிறமும் ஒளியும் பற்றியும், நா - செந்நிறம் பற்றியும் மின்னலுக்கு ஒப்பாம். (௯)

௧௦. சூடினமணிமுடித்துகளின் விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களு
மாடவர்பெயர்தொறுமாசையானையி
னோடைகளொளிபிறழ்வனவுமொத்தவே.

(இ - ள்.) சூடின மணி முடி - தரித்த ரத்தினகிரீடத்தையுடைய, துகளின் - மாயையுள்ள, விஞ்சையர் - வித்தியாதரர்கள், கூடு உறை நீக்கிய - (போர்செய்தற்பொருட்டு) உறையினுள்ளேயிருத்தலை நீக்கி எடுத்து உருவிச் சுழற்றிய, குருதி வாட்களும் - (பகைவரது) இரத்தந்தோய்ந்த வாளாயுதங்களையும்,—ஆடவர் பெயர்தொறும் - திக்குக்களுக்கு உரிய புருஷர்களான திக்

பாலகர்கள் இடம்விட்டுச் செல்லுந்தோறும், ஆசை யானையின் ஓடைகள் ஒளி பிறழ்வனவும் - அத்திக்குக்களாகிய யானைகளின் நெற்றிப்பட்டங்கள் அசைந்து இடையிட்டு ஒளிவிளங்குவனவற்றையும் ஒத்தது - போன்றது: (அம் மின்னல்களின் தோற்றம்); (எ - று.)

வித்தியாதரர் - பதினெட்டுத தேவகணங்களுள் ஒருவகையார்; மாலி காஞ்சனம் முதலிய மாயைவித்தைகளில் தேர்ந்தவர்: அதுபற்றியே, இவர்கட்கு இப்பெயர் விஞ்சை - வித்தை: விதயா என்ற வடசொல்லின் சிதைவு; வித்யை-வித்தை. விச்சை, விஞ்சை என விகாரப்படும்வழி காண்க. வித்தியாதரர்களின் மாயைத்தேர்ச்சி விளங்க, அவர்கட்கு 'துகளின்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. துகள் குற்றம்; மாயைக்கு இலக்கணை. 'துகளில்' என்ற பாடத்திற்கு - (போரிற பின்னிடுதலாகிய) குற்ற மில்லாத வென்று பொருள். வித்யாதரர்கள் தாமிருக்குமிடம் பிறர்க்குத்தெரியாதபடி வானத்திலும் மேகங்களிலும் மாயையால் மறைந்துநின்று போர்செய்தற்பொருட்டு உறைகளிலிருந்து வாளாயுதங்களை உருவியெடுத்துச் சுழற்றுமிடத்து அவ்வாள்களிமொளி விளங்கினாற் போன்றது மின்னல்களின் தோற்ற மென்க.

ஆடவர் - இங்கே இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் அஷ்டதிக்பாலகர்கள்; கிழக்கு, தேன் கிழக்குமுதலாக முறையே எட்டுத்திக்குகளிலும் இவர்கள் நின்று அவற்றைப் பாதுகாப்பர். திக்குகளைப்பாதுகாக்கின்ற இந்திரன்முதலிய எண்மரையும், அத்திக்குகளாகிய யானைகளை வாகனமாகக்கொண்டு ஏறிநடத்தும் யானை வீரர்களாகக் கற்பித்தார். அவர்கள் அங்ஙனம் ஏறிச்செல்லும்போது புடைபெயர்கின்ற அத்திசைகளாகிய யானைகளின் நெற்றியிலுள்ள பொற்பட்டங்கள் அசைந்து பளபளவென்று ஒளிவீசுதலும் மினனலுக்கு உவமையாக்கப்பட்டது. தற்குறிப்பேற்றவணி. 'ஆசையானையின்' என்பதற்கு - ஐராவதம் முதலிய அஷ்ட திக்கஜங்களினுடைய வென்று உரைப்பாரு முளர்; அவை பூமியின்கீழிருந்து நிலததைத தாங்குவன.

மணிமுடி - இரத்தினங்கள் பதித்த கிரீடம். கூடு - இங்கே, படைக்கூடு. உறை - உறைதல்: முதனிலைத் தொழிற்பெயர். இனி, கூடு உறை - உறைக்கூடு என ஒருபொருட் பன்மொழியாக்குதலு மொன்று. 'கூடுற நீக்கிய' என்ற பாடத்திற்கு, கூடு உற நீக்கிய-கூடுகளினின்று மிகுதியாகஉருவியெடுதத வென்றும், 'ஆடுவ பெயர்தொறும்' என்ற பாடத்திற்கு - நடனஞ்செய்துகொண்டு புடைபெயருந்தோறு மென்றும் பொருளாம். 'ஒத்தவே' என்ற பாடத்திற்கு - (மின்னல்கள்) ஒத்தன வென்க. (௧௦)

[மின்னல்களும், மழைக்காற்றும்.]

௧௧. எண்வகைநாகங்கடிசைகளெட்டையு
நண்ணினநாவளைததனையமின்னகக்
கண்ணன்மெய்வடிவெனக்கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பெனவூதைபொங்கவே.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) எண்வகை நாகங்கள் - (கீழேயிருந்து பூமியைத்தாங்குகின்ற) அஷ்டமகாநாகங்கள், (அங்கிருந்து மேலெழுந்து), திசைகள் எட்டையும் - எட்டுத் திக்குகளையும், நண்ணின - சமீபித்தனவாய, நாவளைத்து அனைய - (தம்தம்) நாவை (அடிக்கடி) வெளியேநீட்டி அவற்றால் அத்திக்குகளைவளைத்தாற் போன்றனவாக, மின் நக மின்னல்கள் - (எல்லாத்திக்குகளிலும்) பிரகாசிக்க,—கார் விசும்பு - காளமேகங்கள், கண்ணன் மெய் வடிவு என கருகி - திருமாலினது திருமேனியின் நிறம்போலக் கறுத்து, உள் நிறை உயிர்ப்பு என - தமக்குள்ளே நிறைந்த சுவாசத்தை (வெளிவிட்டாற்) போல, ஊதை பொங்க - குளிர்ந்த காற்று அதிகப்பட, (எ - று.)—'ஊதை உலயாது' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும்.

**தற்குறிப்பேற்றவணி.** மழைபெய்தற்குக்காரணம் குளிர்ந்த காற்றென்கிற சாஸ்திர நுட்பத்தைக் கருதி, அவ்வகைக் காற்றின் அமைதியைக் கூறலாயினர். எண்வகை நாகங்கள் - வாசுகி, அநந்தன், தக்ஷகன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன். இவை - பூமியின்கீழ் நடுவில் இருந்து பூமியைத்தாங்குகின்ற ஆதிசேஷனுக்கு உதவியாய்ச் சுற்றிலும் கிழக்கு முதலிய எட்டுத்திக்கிலும் முறையே நின்று பூமியைத் தாங்குவன; காசியப மகாமுனிவரது மனைவியருட் கத்ருவென்பவளிடந் தோன்றிய தெய்வத் தன்மையுள்ள சர்ப்பங்கள்: இவற்றைக் கடவுட் பாம்பென்ப. 'நண்ணின' என்பதற்கு - (நீண்ட) விரும்பினவையாய் என்று உரைத்தலுமொன்று: கண்ணன் மெய்வடிவெனக் கருகிக் கார்விசும்பு—''வான, ஆறணிந்து சென் றூர்கலிமேய்ந்தநிற, சேறணிந்த முலைத்திருமங்கைதன், வீறணிந்தவன மேனியின் மீண்டவே'' என்றார் பாலகாண்டத்து ஆற்றுப்படலத்திலும். இனி, 'கண்ணுதன் மிடறெனக் கருகி' என்று பாடமோதுவாருமுளர்; அது, கீழ்ப்போந்த மூன்றுஞ் செய்யுளோடு கூறியதுகூறலா மாதலாற் சிறவாது.

கண்ணன் - க்ருஷ்ணனென்ற வடசொல்லின் சிதைவு; கருநிறமுடையவனென்பது பொருள்: அது - இங்கு, அவதாரப்பெயரன்றிப் பொதுப் படப் பெயராய்நின்ற காரணக்குறி. இங்கே, கண்ணன் - இராமபிரானென்று கொள்ளுதலும் ஏற்கும்; அரசியற்படலம் ௧௮ - ஆஞ்செய்யுளைக் காண்க. 'உயிர்ப்பு' என்பதனபின் 'வெளிவிட்டால்' என ஒருசொல் வருவித்து, அது 'விசும்பு' என்ற எழுவாய்க்கும் 'உயிர்ப்பு' என்ற செயப்படுபொருளுக்கும் முடிக்குஞ் சொல்லாக்கப்பட்டது. இனி, 'கருக' என்ற பாடம். முடிபுக்கு இனியதாம். கருக்கொண்டு கறுத்த மேகங்கள் அக்கருப்பத்தின் முதிர்ச்சியாற் பெருமூச்சுவிட்டாற் போலக் காற்று வீச வென்க. இனி, காளமேகங்கள் இராமபிரானது திருமேனிநிறம்போலக் கறுத்து (அப்பெருமான் சீதாபிராட்டியாரை நினைத்துநினைத்துத் துயரிநுற்) பெருமூச்சுவிடுமாறுபோலக் காற்றுவீசவென்று உரைத்தலும் அமையும். 'வானம்' என்றதுபோல, 'விசு

ம்பு' என்றதும், ஆகாயத்தின் பெயர் இடவாகுபெயராய் மேகத்தைக் குறித்தது; திருக்குறளில் வானசிறப்பெனனும் அதிகாரத்தில் "விசும்பிற் றுளி வீழின்" என்றவிடத்திற் போல. நாகம் - நகத்தில் வாழ்வது எனப் பாம்புக்குக் காரணக்குறி; வடமொழித் தத்திதாந்த நாமம்: நகம் - மரமும், மலையுமாம். 'மின்னின்,' 'மின்னுவ' 'ஊதையோடின' எனவும் பாடமுண்டு. (கக)

[எங்கும் காற்று அடித்தல்.]

கஉ. தலைமையுங்கீழ்மையுந்தவிர்தலின்றியே
மலையினுமரத்தினுமற்றுமுற்றினும்
விலைநினைந்துளவழிவிலங்கும்வேசைய
ருலைவுறுமனமெனவுலாயதூதையே.

(இ - ள்.) ஊதை - அந்த மழைக்காற்றானது,—தலைமையும் கீழ்மையும் தவிர்தல் இன்றியே - மேலான இடத்திலும் கீழான இடத்திலும் நீங்குதலில்லாமலே, மலையினும் மரத்தினும் மற்றும் முற்றினும் - மலைகளிலும் மரங்களிலும் மற்று எல்லாப்பொருள்களிலும்,—விலை நினைந்து - (பொருள் கொடுப்பவரது உருவம் குணம் முதலியவற்றைக் கருதாமல் தமது இன்பத்திற்கு) விலையாகக் கொடுக்க வேண்டிய பொருளையே கருதி, உள வழி விலங்கும் அப்பொருட்கொடை யுள்ளவரிடத்தே பாய்ந்துசெல்லுகின்ற, வேசையர் உலைவு உறு மனம் என - விலைமகளிரது சுழற்சி பொருந்திய மனம் போல, உலாயது - சென்று வீசியது; (எ - று.)

குலம் வடிவம் குணம் செயல் முதலியவற்றால் மேலோர் கீழோர் என்னும் வேறுபாடு கருதாது, விலைகொடுப்பவரெவரிடமும் செல்லுதல், விலைமாதரது மனத்தின் இயல்பு. இங்ஙனம் தமது இன்பத்தை விலை கொடுப்பவர் யாவர்க்கும் கொடுப்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரையறை கொள்ளாமை பற்றியே, அவர்கட்கு, வரைவின்மகளிரென்றும், விலைமாதரென்றும், பொருட் பெண்டிரென்றும் பெயராயிற்று; மற்றும், 'கணிகா' என்ற வடமொழிப்பெயரும், (பொருளையும் பொருளுடையாரையுமே) கருதுதல்பற்றியதே. இவ்வாறான வேசையரது மனம் மேல் கீழ் என்ற வேறுபாடு கருதாமலும் ஓரிடத்திலேனும் நிலைத்திராமலும் விலைபொருளுள்ளவரிடத்தி லெல்லாம் செல்லுதல் போல, காற்றும் மேல் கீழ் என்ற வேறுபாடின்றி நேர்ந்த இடத்திலெங்குஞ் சென்று வீசிற்றென்பதாம். உவமையணி. முதலடி, எங்கும் விலக்கில்லை யென்பதைக் காட்டிற்று.

இன்றியே, ஏ - தேற்றம். வேசை - வேஶ்யா என்ற வட சொல்லின் விகாரம். உலைவு - நிலையின்மை; ஓரிடத்திலேனும் நிலைத்திராமை. இத்தன்மை, உபமேயமான ஸதாகதியாகிய காற்றிற்கும் ஏற்றது. மனம் - மநஸ் என்ற வடசொல்லின் திரிபு. உலாயது—உலாவு என்ற பகுதி ஈறுதொகத்து; ய் - இறந்தகால விடைநிலை. விலங்குதல் - விலகிச் செல்லுதல். தமது நலத்திற்கு ஏற்ற ஒருவரிடத்தே செல்லுதலாகிய நேரவழியைவிட்டுப் பொரு

ளையே பிரதானமாகக் கொண்டு விலை கொடுப்பவரிடத் தெல்லாம் செல்லுத லின் தகுதியின்மை தோன்ற, 'விலங்கும்' எனப்பட்டது. 'தலைமையுங் கீழ்மையுந் தவிர்த லின்றியே' என்றதனால், ஆகாயம் முதலாகப் பூமிமுழு வதிலும் வீசிற்றெனக. 'உலைவுறமுனமென வுலாயதூதையே' என்றபாடம், முற்றுமோனை கொண்டதாம்; உளம் - மனம். (௧௮)

[வாடைக்காற்றின் மிகுதி.]

௧௯. அழுங்குறுமகளிர்தமன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடைவீங்கிற்றே.

(இ - ள்.) வாடை - வாடைக்காற்றானது.—தம் அன்பர் தீர்ந்தவர் - தமது கணவரைப் பிரிந்தவர்களாய், அழுங்குறு - வருந்துகின்ற, மகளிர் - மாதர்களுடைய, புழுங்குறு புணர் முலை - தாபங்கொண்ட (ஒன்றோடொன்று) நெருங்கிய தனங்கள், கொதிப்ப - மிகவும் வெப்பமடையும்படி, புக்கு உலாய் - (அவற்றின்மேற்) சென்று வீசி—(அக்கொங்கைகளை), கொழு(மை) தசை குறை என - கொழுமையுள்ள மாம்சதுண்ட மென்று கருதி, ஈர்ந்து கொண்டு - அரிந்து எடுத்துக் கொண்டு, அது விழுங்குறு - அந்த தசையை விழுங்க வந்த, பேய் என - பேய் போல, வீங்கிற்று - வளர்ச்சி பெற்றது; (எ - று.)

வாடைக்காற்று, தலைவரைப் பிரிந்த தலைவியாது கொங்கைகள் மிகத் தபிககுமாறு வீசிக்கொண்டு, அக்கொங்கைகளாகிய ஊனைத் தின்று ஊனைப் பெருகக வந்த பேய்போல மிகவும் பயங்கரமாய் அதிகப்பட்ட தென்பதாம், தற்குறிப்பேற்றவணி. இனி, மூன்றும் அடிக்கு - கொழுமையான உடற் குறையினின்று தசையை (க்கீணடெடுத்துக்கொள்ளுமாறு) போல அக்கொங் கையை அரிந்து கொண்டு என்று பதவுரை கூறவுமாம்; தலைவரைப் பிரிந்த தலைவியாது தனங்களுக்கு வாடைக்காற்று மிக்கதாபத்தை விளைத்தல், தலையற்ற உடம்பினின்று பேய் தசையை யீர்த்து விழுங்குவது போலு மென ஒரு நயந் தோன்றும். தலைவரைப் பிரிந்த மகளிர் வாடையால் தபித் தலை "பனிப்பியல்வாகவுடைய தண் வாடை யிக்கால யிவ்வூர்ப், பனிபபியல் வெல்லாந் தவிர்ந் தெரிவீசும்" என்ற திருவிருத்தத்தாலும் உணர்க. தம் அன்பர் - தமது அனபுக்கு இடமானவர்: தம்மிடத்து அன்புகொண்டவர். விழுங்குறு, அழுங்குறு, புழுங்குறு என்றவற்றில், உறு - துணைவினை. அன் பர்த் தீர்ந்தவர் - இரண்டாம் வேற்றுமைத் தொகை; ஆதலால், "இயல்பின் விகாரம்." தசை=சதை: மாம்சம்; எழுத்துநிலைமாறுதல், இலக்கணப்போலி. வாடை வடக்கிலிருந்து தெற்கு நோக்கி வீசுவது; இதிற் பகுதியான வடக்கு என்பது ஈறறு உயிர் மெய்யும் ககரவொற்றும் நீங்கி முதல் நீண்டது; ஐ - விகுதி: பகுதியீற்று அகரம் தொக்கது, 'கொழுங்குறைத்தசையி லென்பீர்

ந்து கொண்டது' என்று பாடமோதுவாரு முளர்: உலாய், ய் - இறந்த கால வினையெச்ச விகுதி. (௧௩)

[அப்பொழுதைய வானத்தின் காட்சி]

௧௪. ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழுங்கொட்பினுந்
தார்ப்பெரும்பணையின்விண்டழங்குதாவினும்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே.

(இ - ள்.) ஆர்த்து - ஆரவாரஞ் செய்து கொண்டு, எழு - மேலெழுகின்ற, துகள் - புழுதி, விசும்பு அடைத்தலானும் - ஆகாயத்தை மறைத்தலினாலும்,—மின் - மின்னல்கள், கூர்த்து எழு வாள் என - கூர்மை கொண்டு விளங்குகின்ற வாளாயுதங்கள் போல, பிறழும் - அசைந்து ஒளி வீசுகின்ற, கொட்பினும் - சுழற்சியினாலும்,—விண் - மேகங்கள், தார் பெரும் பணையின் - மலர்மாலையையணிந்த பெரிய முரசவாத்தியங்கள் போல, தழங்கு - ஒலிக்கின்ற ஒலி, தாவினும் - எங்கும் பரவுதலாலும்,—உம்பர் - ஆகாயமானது, பெரும்போர் களம் என பொலிந்தது - பெரிய யுத்தகளம் போல விளங்கிற்று; (எ - று.)

காரணங்காட்டி உவமித்ததனால், ஏதுவுவமையணி. யுத்த களத்திற் சேனைகள் செல்லும் பொழுது அவற்றின் கால்கள் படுதலால் தூளிகள் மேலெழுந்து பரவி வானத்தை மறைக்கும்; இங்கு காற்றடித்தலால் ஆரவாரித்துக் கொண்டு துகள் மேலெழுந்து வானத்தை மறைக்கின்றன. வானத்தில் மின்னல்கள் அசைந்து விளங்கிச் செல்லுதல், போர்க்களத்தில் வீரர்கள் உறைகழித்து உருவி யெடுத்துச் சுழற்றும் வாளாயுதங்கள் அசைந்து பளபளவென்று பிரகாசித்தல் போலும். இடிமுழக்கத்திற்கு வாத்திய கோஷம் உவமை. போர்க்கு அறிகுறியாகவும், யுத்தத்தில் வீரர்களுக்கு உற்சாகத்தை வளர்த்தற் பொருட்டும், வாத்தியங்களை முழக்குதல், இயல்பு. துகள் - தூளி என்ற வடசொல்லின் விகாரம் கொட்பு - சுழற்சி; இபல்பென்றுங் கொள்ளலாம். அலங்காரமாகவும் போர்க்கு அறிகுறியாகவும் வாத்தியங்களிற் பூமாலைகட்டுதல் இயல்பாதலால், 'தார்ப் பணை' எனப்பட்டது. 'வான்,' 'விசும்பு' என்றவை போல, 'விண்' என்ற ஆகாயத்தின் பெயரும், இடவாகு பெயராய் மேகத்தைக்குறித்தது; "விண்ணின்று பொய்ப்பின" எனத் திருக்குறளிலுங் காண்க. தழங்கு - வினையடியாப்பிறந்த பெயர். தாவு - தாவுதல்; முதனிலைத் தொழிற்பெயர். இனி, மூன்றும் அடிக்கு—தார் - சேனையில் அடிக்கப்படுகின்ற, பெரும் பணையின் - பெரிய பறைகள் போல, விண் தழங்கு - மேகங்கள் ஒலிக்கின்ற, தாவினும் - வலிமையினாலும் [மேகங்கள் வலிமையாக முழங்குதலாலும்] என்று உரைக்கவும்படும். உம்பர் என்ற பெயரில் உகரச்சுட்டு மேலிடத்தைக் குறிக்கின்றது; (இதன் எதிர்மொழி, இம்பர்: இவ்விடம்.)

'தழங்கலானுமோசை' என்று பாடமோதுவாருமுளர். (௧௪)

[மேகங்கள் மலைமேல் மழை பெய்தல்.]

௧௫. இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேன்
மன்மதன்மலர்க்கணைவழங்கினானெனப்
பொன்னெடுங்குன்றின்மேற்பொழிந்ததாரைகண்
மின்னொடுந்துவன்றினமேகராசியே.

(இ - ள்.) இன் நகை சனகியை பிரிந்த வந்தல் மேல் - இனிமையான புன்சிரிப்பையுடைய சீதையைப் பிரிந்த இராமபிரான்மேல், மன்மதன் மலர் கணை வழங்கினான் என - மன்மதன (தனது) புஷ்பபாணங்களை மேன்மேற் பிரயோகித்தாற் போல,—மின்னொடும் துவன்றின மேக ராசி - மின்னல்களுடனே நெருங்கிநிறைந்த மேகங்களின் கூட்டங்கள், பொன் நெடுங் குன்றின்மேல் - பொன்னையுடைய பெரிய மலையின்மேல், தாரைகள் பொழிந்த- மழைத்தாரைகளைச் சொரிந்தன; (எ - று.)

உவமையணி. அனைத்தையும் பொறுத்தலும் எதர்குஞ்சலியாமையும் பெருமையும் வண்மையும் அளக்கலாகா அளவும் முதலிய குணங்களையுடைய இராமபிரான், அக்குணங்களையுடைய மலைக்கு உவமையாகத்தக்கவன். மன்மதனது வர்ணம, மேகவர்ணம். மேல்மேல் அம்புதொடுத்தலை 'பாணவாஷம்' என்றல், மரபு. கார்காலம் காமோத்தீபகமாய்ச் சீதையைப்பிரிந்த இராமனை வருத்துதல் தோன்ற காலத்திற்கேற்ற உவமையாக இவ்வருணனை கூறினரென்க. மேகத்திற்கு மின்னல்கள் கூறியதற்கு ஏற்ப, மன்மதனுக்கு அங்கத்துடனிருக்கும்போது அணியும் அணிகலங்களின் ஒளியைக் கொள்க. இங்கே 'பொன்னெடுங்குன்று' என்றது அப்பொழுது இராமபிரான் எழுந்தருளியிருக்கின்ற இடமான ரிசியமூககிரியை பொன்விளையுஞ்சுரங்கங்களையுடைய பெரிய மலையெனக. பொதுப்பட மலைகளின்மே லென்றுங் கொள்ளலாம்.

பிராட்டியின் புன்சிரிப்பிற பெருமாளுக்கு உள்ள ஈடுபாடு தோன்ற, 'இன்னகைச் சனகி' என்றார். வந்தல் - பெருமையிற் சிறந்தவன்: ஆண்பாற் சிறப்புப்பெயர். வந்தியவன - [உயர்ந்தவன்] எனக் காரணக்குறியாம; வந்து - பகுதி, அல் - பெயர்விகுதி. மன்மத னென்ற வடமொழிப்பெயர் - (பிராணிகளுடைய) மதியை [அறிவை]க் கலக்குபவ னென்று பொருள்படும். தாமரை மலர், மாமலா, அசோகமலா, முல்லைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்தும் மன்மதனுக்கு அம்புகளாம். பொழிந்த - முற்று. தாரா - வடசொல். மேகராசி - வடமொழித்தொடர். ராஶி யெனக் கொண்டால், கூட்டம்; ராஜி யெனக் கொண்டால், வரிசை. சனகி - ஜாநகீ என்ற வடசொல்லின் திரிபு; ஜநகமகாராஜன வளர்தத மகளென்று பொருள். (௧௫)

[மழைத்தாரைகளும், இடிகளும்.]

௧௬. கல்லிடைப்படுந்துளித்திவலைகாரிடு
வில்லிடைச்சரமெனவிசையின்வீழ்ந்தன
செல்லிடைப்பிறந்தசெங்கனல்லுமிழ்சிந்தின
வல்லிடைமணிசிறந்தழலியற்றல்போல்.

(இ - ள்.) கல்லிடை - (அந்தமலையிலுள்ள) கற்களின் இடையே, படும்- சொரிகின்ற, துளி திவலை - மழைநீர்த்துளிகள்,—கார் இடு வில்லிடை சரம் என - மேகங்களில் தோன்றிய இந்திரவில்லிலிருந்து பாய்கின்ற அம்புகள் போல, விசையின் வீழ்ந்தன - வேகத்தோடு விழுந்திட்டன; செல்லிடை பிறந்த செம் கனல்கள் - மேகங்களிலிருந்து தோன்றிய செந்நிறமான இடியாகிய நெருப்புகள்,—மணி அல்லிடை சிறந்து அழல் இயற்றல் போல்-(அம் மலையிலுள்ள) இரத்தினங்கள் இராத்திரிகாலத்திலே மிகுதியாகப் பிரகாசித்து அக்கினிச்சுவாலைபோன்ற ஒளியை வீசுதல்போல, சிந்தின—; (எ-று)

முதல்வாக்கியம் - தற்குறிப்பேற்றவணியும், இரண்டாவதுவாக்கியம் - உவமையணியுமாம். 'செல்லிடைப்பிறந்த செங்கனலிற்சிந்தின, எல்லிடை மணிசிதர்ந்தழலியற்றல்போல்' என்ற பாடத்திற்கு—மணி சிதர்ந்து - (மழைத் துளிகள் விசையோடுவிழுதலால் அம்மலையிலுள்ள இரத்தினங்கள் சிதறி, செல்லிடை பிறந்த செம் கனலின் - மேகங்களினின்று விழுகின்ற சிவந்த இடிவடிவான நெருப்புக்கள்போலவும், எல்லிடை மணி) அழல் இயற்றல் போல் - பகலில் (சூரியகாந்த) ரத்தினங்கள் அக்கினிச்சுவாலையை வீசுதல் போலவும்; (எல் இடை) சிந்தின - ஒளியை இடந்தோறும் வீசின என்று பொருள்கொள்ளலாம்; இவ்வுரைக்கு சிலசொற்களை ஆவ்ருத்தி செய்து கொள்ளவேண்டும். 'இயற்றல்போன்றும்' என்ற பாடத்திற்கு - மேகங்கள் மழைபொழியும்போது இரத்தினங்களையுஞ் சிந்தினவாகக் கொண்டு செல்லிடை பிறந்த - மேகங்களினின்று தோன்றியவையும், செம் கனலின் சிந்தின-சிவந்த நெருப்புகள்போலக் கீழேசிந்தியவையுமான, எல் இடை மணி - ஒளியைத் தம்மிடத்திற்கொண்ட இரத்தினங்கள், சிதர்ந்து - சிதறி, அழல் இயற்றல் போன்ம் - அக்கினிச்சுவாலையை வீசுதல்போல விளங்கும் என்று பொருள்காணலாம்; போன்ம்=போலும்.

'துவலை' என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது; பொருள் ஒன்றே. சரம் - வடசொல். செல்வது செல் என மேகத்திற்குக் காரணக்குறி (௧௬)

[மழைத்தாரைகள் விழுதலாற் பெருங்கற்கள் புரளுதல்.]

௧௭. மள்ளர்கண்மறுபடைமானயானைமேல்
வெள்ளிவேலெறிவனபோன்றமேகங்க
டள்ளருந்துளிபடத்தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரிபுரள்வபோன்றவே.

(இ - ள்.) மேகங்கள் - (மலையிலுள்ள கரியபெரிய கற்களின்மேல் மழைத் தாரைகளைச் சொரிகின்ற) மேகங்கள்—மள்ளர்கள் - வீரர்களுடைய, மறு படை - (பகைவர்களை) எதிர்த்துப் போர்செய்யவல்ல சேனைகள், மானம் யானைமேல் - பெரிய யானைகளின்மேல் வெள்ளி வேல் எறிவன போன்ற - வெண்ணிறமான வேலாயுதங்களை யெறிவன போன்றன; தள் அரும் துளி பட - (அம்மேகங்களினுடைய) விலக்கவொண்ணாத நீர்த்தாரைகள் (விசை

யோடு) விழுதலினால், தகர்ந்து சாய் - பிளந்து விழுகின்ற, கிரி - அப்பெருங் கற்கள், புள்ளி வெம் கட கரி புரள்வ போன்ற - உத்தம விலக்கணமாகிய செம்புள்ளிகளையும் வெவ்விய மதத்தையுமுடைய யானைகள் (அவவேல்கள் படுதலால்) புரண்டு விழுவன போன்றன; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி: வருணனை வடிவுபற்றியது. மறுபடை - வினைத் தொகை; மாறுபாடுகொண்ட சேனை யெனினுமாம். வெள்ளி - இகரவிகுதி பெற்ற பண்புப்பெயர். வெள்ளி வேல்-வெள்ளியாலாகிய வேலெனினுமாம். எறிவன, புரள்வ-பெயர். போன்ற - முற்று. கிரி - பெருங்கல்லுக்கு இலக்கணை; மலையெனவே கொண்டும் அமைக்கலாம். புள்ளி பெருமையுமாம். கடம்-கன்னம்; அதிலிருந்து பெருகும் மதஜலத்திற்கு இடவாகுபெயர் இனி மன்னர்கள் - போர்வீரர்கள், மறு படை மானம் யானைமேல் - எதிர்ச்சேனைகளிலுள்ள பெரிய யானைகளின்மேல், எறிவன - எறிவனவாகிய, வெள்ளி வேல்-வெண்ணிறமான வேலாயுதங்களை, போன்ற - ஒத்த, மேகங்கள் தன் அருந் துளி - மேகங்களினுடைய விலக்கவொண்ணாத மழைத்தாரைகள், பட - விழுதலினால் என்று பதவுரை கூறுவாருமுளர்.

யானையை யெதிர்த்துப் போர்செய்வார் பெரும்பாலும் வேலினாற் பொரும் இயல்பிற்கு ஏற்ப, 'மன்னர்கண் மறுபடை மான யானைமேல், வெள்ளி வேலெறிவன' எனப்பட்டது; அதனை, திருக்குறளில் "யானை பிழைத்த வேல்," "கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்" என்றும், சீவகசிந்தாமணியில் "விழித்து மேற்சென்றவேழம் வேலினால் விலக்கிநிற்பார்," "விரும்புவார் வேழவேற்போர்" 'சென்றுனிகல்களிறுயிரமிரியச் சினவேலோன்" என்றும் வருவனகொண்டு உணர்க. (கஎ)

[இதுமுதல் ஏழுகவிகள் - மழைவருணனை ]

கஅ. வானிடுதனுநெடுங்கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன்பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணைபிரிந்ததன்மைய
ரூனுடையுடம்பெலாமுழ்கலொத்தவே.

(இ - ள்.) மழை - மேகம். மீன் நெடுங் கொடியவன்-மீனின்வடிவத்தை யெழுதிய உயர்ந்த துவசத்தையுடைய மன்மதனுக்கு—வான் இடு தனு - அம்மேகத்தில் தோன்றிய இந்திரதனுசு, நெடிய கரும்பு வில் - (அம்மன்மதன் கையிற்கொண்டு வளைக்கும்) நீண்ட கரும்பாகிய வில்லாக,—வீழ் துளி- (மேகத்தினின்று) விழுகின்ற மழைத்தாரைகள், பகழி - (மன்மதன எய்யும்) அம்புகளாக—நெடுஞ் சார் - நீண்ட மலைச்சாரல்கள், துணை பிரிந்த தன்மையர் - துணைவரைப் பிரிந்தவர்களாக,—ஊன் உடை உடம்பு எலாம் மூழ்கல் ஒத்த - (மழைத்தாரைகள் மலைச்சாரல்களைத் துளைத்தல்கள் அப்பிரிந்தாருடைய) தசையையுடைய உடம்புகளிலெல்லாம் (மன்மதபாணங்கள்) தைத்தலைப் போன்றன; (எ - று.)—தான் - அசை.

பலபொருள்களைத் தம்முள் இயைபுடையனவாக வைத்து உருவகஞ் செய்தது, இயைபுருவகவணி. இவ்வுருவகத்தை அங்கமாகக்கொண்டுவந்த தற்குறிப்பேற்றவணியாகும் இச்செய்யுள். சார் - சாரல் என்பதன் விகாரம். 'சார்' என்பதையே மலையைச்சார்ந்துள்ளதான பக்கத்திற்குக் காரணப்பெயரென்று கொள்ளலுமாம். துணை பிரிந்த தன்மையர் - மகளிரைப்பிரிந்த ஆடவரும், ஆடவரைப்பிரிந்த மகளிரும்: இருவரும் ஒருவர்க்கொருவர் இல்வாழ்க்கைக்குத் துணையாவர். பிராணநாயகனை அல்லது பிராணநாயகியைப் பிரிந்ததனால் உயிர்போய் ஊன்மாத்திரமேயாயுள்ள உடம்பென்ற விசேஷார்த்தம் தோன்ற, 'ஊனுடையுடம்பு' என்றார் ஊனுடை யுடம்பு - உயிரையுடைய உடம்பன்றென்றபடி; மேல் ௨௨-ஆஞ்செய்யுளின் முதலிரண்டடிகளைக் காண்க. உடம்பு எலாம் - உடம்பு முழுவதிலு மென்றலுமாம். 'உருக்கலொத்தவே' என்று முற்றுமோனையமையக் காணப்படுகின்ற பாடத்திற்கு - மழைத்தாரைகள் மலைச்சாரல்களைக் கரைத்துக்கொண்டு பெருகுதல், மன்மத பாணங்கள் பிரிந்தாருடைய உடம்பை யுருக்கினாற் போலு மென்று பொருள் காண்க.

இனி இச்செய்யுளுக்கு—இந்திர வில்லாகிய நீண்ட கரும்பு வில்லையுடைய மேகமாகிய மன்மதன் எய்யும் அம்புகள்போல விழுகின்ற மழைத்துளிகள், தாம் நெடுஞ் சார் துணை பிரிந்த தன்மையர் - தாம்தாம் நெடுநாளாகச் சார்ந்துள்ள [அல்லது தம்தமக்குப் பெருஞ்சார்பாகவுள்ள] துணைவரைப் பிரிந்தவர்களுடைய ஊனுடைய உடம்புகளிலெல்லாம் நன்றாகத் தைத்து உருவுவனபோலிருந்தன [அதாவது காமோத்தீபகமாய் அவர்களுடைய பிரிவுத்துயரை மிகுவித்தன] என்று உரைப்பாருமுளர். 'தாநெடுஞ் சார்துணை' என்பதும் பாடம்.

'மீநெடுங்கொடியன் வன்பகழி' என்றும் பாடமுண்டு.　　　　(௧௮)

௧௯. தீர்த்தனுங்கவிகளுஞ்செறிந்துநம்பகை
போர்த்தனரினியெனப் பேசிவானவ
ரார்த்தெனவார்த்தன மேகமாய்மலர்
தூர்த்தனவொத்தனதுளிவெள்ளமே.

(இ - ள்.) 'தீர்த்தனும் - பரிசுத்தமூர்த்தியான இராமபிரானும், கவிகளும் - குரங்குகளும், செறிந்து - சேர்ந்து [அல்லது சேர்ந்திட்டதனால்], இனி - இனிவிரைவில், நம பகை பேர்த்தனர் - நமக்குப்பகைவராயுள்ள இராவணன்முதலிய இராக்கதர்களை அழித்தவராவர்', என பேசி - என்று (தங்களுக்குட்) சொல்லிக்கொண்டு, வானவர்-தேவர்கள், ஆர்த்து என-(மகிழ்ச்சியால்) ஆரவாரித்தாற்போல, மேகம் - மேகங்கள், ஆர்த்தன - ஆரவாரித்தன; துள்ளி வெள்ளம் - (அம்மேகங்கள் சொரிகின்ற) மழைத்துளிகளின் தொகுதிகள், ஆய் மலர் தூர்த்தன ஒத்தன - (அங்ஙனம் மகிழ்ச்சிகொண்ட தேவர்கள்) தேர்ந்தெடுத்த [சிறந்த] (கற்பகத்தருக்களின) மலர்களை (அவ் விராமபிரான்மேலும் குரங்குகளின்மேலும்) மிகுதியாகச்சொரிந்து நிரப்பியவற்றைப் போன்றன; (எ - று.)

தந்துநிற்பப்பேற்றவணி. நீருக்கு 'மேகபுஷ்பம்' என்று வடமொழியிற் பெயர்வழங்குதலும், மலர்களைச் சொரிதலைப் புஷ்பவர்ஷமென்னும் வழக்கும், இங்கு உணரத்தக்கன.

நீர்த்தனும் கவிகளும் பேர்த்தனர் - உயர்திணையும் அஃறிணையும் விரவிச் சிறப்பினால் உயர்திணை முடிபையேகொண்ட திணைவழுவமைதி; 'பொன்னனும் குதிரையும் வந்தார்கள்' என்றாற்போல. இனி 'கவிகள்' என்பதைப் பொருளினால் உயர்திணை யென்றே கொண்டால், இம்முடிபு வழாநிலையேயாம். பேர்த்தனர் - தெளிவும் விரைவும்பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி; தூர்த்தன - பெயர், தூள்ளி - துளி யென்பதன் விரித்தல்.

'பேர்த்தன ரினிதென' என்றும் பாடமுண்டு. (௧௯)

௨௦. வண்ணவிற்கரதலத்தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண்டேகும்வேலையிற்
பெண்ணினுக்கருங்கலமனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்ததுகால மாரியே.

(இ - ள்.) வண்ணம் வில் கரதலத்து அரக்கன் - அழகிய வில்லை யேந்திய கையையுடைய இராவணன், வாளினன் - வாளாயுதத்தைக்கொண்டவனாய், கொண்டு - (சீதையை) எடுத்துக்கொண்டு, விண்ணிடை - ஆகாயத்திலே, கடிது ஏகும் வேலையில் - விரைவாகச் செல்லுகின்ற சமயத்தில், பெண்ணினுக்கு அருங் கலம் அனைய பெய்வளை கண் என - மகளிர்க்கு அருமையான ஆபரணம்போன்றவளும் அணிந்த வளையல்களையுடையவளுமான சீதாபிராட்டியின் கண்கள் மிகுதியாக நீர்சொரிந்தாற் போல, காலம் மாரி பொழிந்தது - (மேகம்) கார்காலத்துமழையை மிகுதியாகச் சொரிந்தது (எ - று.)

இராவணன் வஞ்சனையாகச் சீதையைத் தரையோடு பெயர்த்தெடுத்துத் தனது தேரில் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாகச் செல்லும்போது, கழுகரசனும் தசரதனுக்கு நண்பனும் அதனால் இராமபிரானுக்குப் பெரியப்பன் முறையாகின்றவனுமான ஜடாயு வந்து எதிர்த்துப் பெரும்போர்செய்து இராவணனுடைய துவசம குண்டலம் கிரீடம் கவசம் முதலியவற்றைப்பறித்துச் சிதைக்க, இராவணன் தன்கையிலுள்ள வில்லை வளைத்து மிகப்பல அம்புகளை அச்சடாயுவின்மீது மேன்மேல் தொடுக்கவும், அவன் அந்த அம்புகளைத் தனது சிறகுகளினாலும் கால்நகங்களாலும் மூக்கினாலும் சின்னபின்னப்படுத்தியதுமன்றி, இராவணனது வில்லைப் பறகளாறபறித்துக் கால்களால் ஒடித்துவிட்டு, மற்றும் அவனது சாரதி தேர்க்குதிரைகள் தேர் அம்பறாத்தூணி முதலியவற்றை அழிக்கவே, இராவணன் தனது சூலம் தண்டம் முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்து அவைபயனிலவானபின்னர் வேறொரு படைக்கலமுமின்றி, முன்பு தான் கைலாசகிரியைப் பெயர்த்தெடுத்த காலத்திற் சிவபிரான் தனக்கு வரமாகக்கொடுத்த சந்திரஹாஸமென்னும் மிகச் சிறந்த வாளாயுதத்தை யெடுத்து அதுகொண்டு சடாயுவைச் சிறகறுத்து விழுத்திவிட்டு அப்பாற்சென்றனனென்ற கதைக்குறிப்புத் தோன்ற,'வண்ண

விற்காதலத் தரக்கன் வாளினன், விண்ணிடைக்கடிதுகொண்டேகும் வேலையில்' என்றார். மற்றும், இவ்வாறு சடாயுவைச் சிறகறுத்துத் தள்ளியபின்பு இராவணன் இவனைப்போன்ற வேறுயாராவது ராமலக்ஷ்மணர்களாவது வந்திடுவாரோவென்ற அச்சத்தால் அதிவேகமாகச்சென்றனனென்பதும், சடாயு இராவணனது தேரைச் சிதைத்துவிட்டதனாற் பின்பு இராவணன் தரையோடு சீதையைத் தோளின்மேற்கொண்டு ஆகாயமார்க்கமாகச் செல்லலாயினனென்பதும், தன்னை இராவணனெடுத்த மாத்திரத்திலே அலறிக்கதறிப் புலம்பத்தொடங்கிய சீதை சடாயுவைக்கண்டவளவிற் சிறிது ஆறியிருந்தவள் சடாயுசிறகரறுவிழ இராவணன விரைந்தோடும்போது மிகக்கலங்கிப் புலம்பிக் கண்ணீர்சொரியலாயினளென்பதும், இங்கே கருதத்தக்கன. வஞ்சனையாற் சீதையையெடுத்துச் செல்லும் அரக்கனது கையில் வில் அலங்காரத்திற்காக அமைந்ததேயன்றிப் போர்வெற்றிக்காக அமைந்திலதென்பது, 'வண்ண விற் காதலத் தரக்கன்' என்றதனாற் பெறப்படும்.

பெய்வளை கண்ணெனப் பொழிந்தது காலமாரி—"தழைத்தபொன் மூலததடங்கடந்தருவிபோய்த்தாழப், புழைததபோல நீர்நிரந்தரம்பொழிகின்ற பொலிவால், இழைக்குநுண்ணியமருங்குலா ளிணைநெடுங்கண்கள், மழைக்கணென்பது காரணக்குறியென வகுத்தாள்" என்பர் சுந்தரகாண்டத்

சிறந்த பெண்ணை 'ஸ்த்ரீரத்நம்', 'பெண்மணி' என்றல் போல, 'பெண்ணருங்கலம்' என்றலும் மரபு; "பெண்ணருங்கலததோடு பிணைந்த பேரருள்" என்ற சிந்தாமணியையும், "பெண்ணருங்கலமிது பெறுவல்" என்ற சூளாமணியையுங் காண்க. பெண்களுக்குச் சிறந்த ஆபரணம்போல அழகுசெய்பவளெனக; இவளொருத்தியினது நற்குணநற்செயல்களினால் ஸ்தரீ ஜாதி முழுவதுக்குமே ஒருசிறப்பு உண்டாகின்றதென்பது, தேர்ந்த கருத்து. இங்கே 'பெண்' என்றது, சாதியைக் குறித்தது. பெய் வளை - வினைத்தொகையன்மொழி. இதற்கு - சொரிந்த வளையல்களையுடையவளென்று பொருள் கொள்ளலுமாம்; இராவணன் கொண்டு செல்லும்போது சீதை ஆபரணங்களைக்கழற்றி ஆடையில் முடிந்து வழியிலே போகட்டனளென்பது கிழே கலனகாண்படலத்திற் கூறப்பட்டது. பெய்வளை கண்ணெனப் பொழிந்தது—"மழைபொருகண்ணிணைவாரியோடு தன், இழைபொதிந்திட்டனள்" என்றது கலன்காண்படலம்.

'பெண்ணினுக்கருங்கலமனைய பெய்வளை' என்ற சொற்போக்கில் மகளிர்க்கெல்லாம் ஓர் அணிகலமாயிருப்பவளும் இயற்கையழகுமிக்கவளுமான இவள் அணிகலமணிதல் அழகினுக்கு அழகுசெய்தவாறேயாகு மென்பது தோன்றும்.

'அரக்கன்வாளினின், விண்ணிடைக்கடிது கொண்டேகுமேல்வையில்' என்றும், 'பொழிந்தன' என்றும் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (௨௦)

௨௧. சிரஞ்சுடர்மதிபுனைதேவன்விண்டொடர்
புரஞ்சுடவிடுசரம்புரையுமின்னின
மரஞ்சுடப்பொறிதிமிரயிலினாடவ
ருரஞ்சுடவுளைந்தனபிரிந்துளோர்க்கெலாம்.

(இ - ள்.) சிரம் - (தனது) முடியில், சுடர் மதி புனை - ஒளியையுடைய சந்திரனைத் தரித்த, தேவன் - கடவுளாகிய சிவபிரான், விண் தொடர் புரம் சுட - ஆகாயமார்க்கத்திற் பறந்துசெல்லுகின்ற திரிபுரங்களை எரித்தற் பொருட்டு, விடு - பிரயோகித்த, சரம் - அக்கினியை முனையாகவுடையதான அம்பை, புரையும் - ஒத்துவிளங்குகின்ற, மின் இனம் - மின்னல்கள், அரம் சுட பொறி திமிர் அயிலின் அரத்தினால் அராவப்பட்டு ஒளிவீசுகின்ற வேலாயுதங்களைப் போல, ஆடவர் உரம் சுட - (கார்காலத்திற்குத் தாம் அறிகுறியாகித்) தலைவியரைப்பிரிந்த தலைவர்களுடைய நெஞ்சைத் தகிக்க, பிரிந்து உளோர்க்கு எலாம் - அந்த ஆடவர்கட்கெல்லாம், உளைந்தன - (நெஞ்சுகளை) வருந்தின; (எ - று.)

மின்னல்கள் தாம் பாயும்போது எதிர்ப்பட்ட பொருள்களைத் தவறாம லழிக்கவல்லனவாகின்ற இயல்பை முதலிரண்டடிகளில் உவமைகொண்டு விளக்கினார்; (மின்னல்பாய்தலே இடிவிழுதலாம்.) சுடர் மதி - ஒன்று அல்லது இரண்டு கலைகள் மாத்திரத்தால் மிச்சப்பட்ட பிறைச்சந்திரன். பிறையாயிருப்பவன் சுடர்பெற்று மதியாகுமாறு அவனைத் தன்சிரத்திற்கு ஓர் அணியாகக்கொண்டருளிய கடவுளென்பது, 'சிரஞ் சுடர் மதி புனை தேவன்' என்றதில் தோன்றும்; இனம் - வர்க்கம். அரம் - வாள்விசேடம். அரஞ்சுடப் பொறி திமிர் அயில் - அரத்தினால் அராவப்படும்போது நெருப்புப்பொறிகளைவெளிப்படுத்தும் வேலென்றலு மொன்று. உரம் - மார்பு; மனத்திற்கு இடவாகுபெயர். இனி, உரம் சுட - நெஞ்சினுறுதியைப் போக்க வெனினுமாம். பிரிந்துளோர்க்கு, எலாம் - அகத்துறுப்பாகிய உள்ளமும் புறத்துறுப்பாகியவுடலும் ஆகிய அனைத்தும், உளைந்தன - தவித்தன என்றலும் அமையும். பிரிந்துளோருரஞ்சுட (அந்த) ஆடவர்க்கு எலாம் உளைந்தன என்று மொழிமாறுதல் தகுதி. சரணமடைந்தவனைத் தலைமேற்கொண்டு குறைதீர்த்து அபிவிருத்தியடையச் செய்து பாதுகாக்குமியல்புடைய கடவுளை பகைத்த அசுரர்களைப் பட்டணங்களோடு எரிப்பவனாயினனென்பது விளங்க, சிரஞ்சுடர்மதிபுனை தேவன் விண்தொடர் புரஞ்சுட விடுசரம்' என்றார். சந்திரன், உலகத்திற்கு ஒளியைக் கொடுக்கும் லோகோபகாரி யாதலால், கடவுளாற் காக்கப் பட்டான்; விண்தொடர்புரங்கள், பறந்து சென்று பல இடங்களின் மேலும் இருந்து அந்தந்த இடங்களைப் பாழாக்கி உயிர்களையழிக்கத் தலைப்பட்டதனால் அத்தேவனால் எரிக்கப்பட்டன வென்க. ஆடவர் - ஆண்மக்கள்; அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி யென்னும் ஆடூஉக் குணங்களை யுடையார்.

இச்செய்யுளின் முதலடியும், நான்காமடியும் 'பரஞ்சுடர்ப்பண்ணவன் பண்டு விண்டொடர்', 'உரஞ்சுட வுளைந்தனர் ,பிரிந்துளோரெலாம்' என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றன.

மேகங்கள் மழைபெய்யும்போது இடையிடையே தோன்றும் மின்னல் களை வருணித்த தாதலால், இச்செய்யுள் இங்கு நின்றது. மின்னின என்ற பாடத்திற்கு - மின்னல்களையுடைய மேகங்க ளென்க. சிவபிரான் திரிபுர மெரிக்கத் தொடுத்த அம்பாகிய திருமாலைப்போல விளங்குகின்ற, மின்ன லோடு கூடிய மேகங்க ளென்னலாம். (உக)

உஉ. பொருடரப்போயினர்ப்பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசையுயிர்கொண்டுய்த்தலான்
மருடருபிரிவினோய்மாசுணங்கெடக்
கருடனைபபொருவினகாலமாரியே.

(இ - ள்.) பொருள் தர போயினர் - செல்வஞ் சம்பாதித்தற் பொருட் டுத் தேசாந்தரஞ் சென்ற தலைவரைப் பிரிந்த—பொய் உடற்கு - (பிராண நாயகரைப் பிரிந்ததனால்) உயிர் நீங்கிய உடம்பு மாத்திரமாயுள்ள தலைவி யர்க்கு, உருள் தரு தேர்மிசை உயிர் கொண்டு உய்த்தலால் - (விரைந்து செல்ல வல்ல) சக்கரங்களமைந்த தேர்களின் மேல் அப்பிரிந்த தலைவர்களா கிய உயிர்களை மீட்டுக் கொண்டு வந்து சேர்த்தலால்—காலம் மாரி - கார்கா லத்து மழைகள்—மருள் தரு பிரிவின் நோய் மாசுணம் கெட - மயக்கத் தைச் செய்கின்ற (அத்தலைவியரது) பிரிவுத்துன்பங்களாகிய பெரும் பாம்பு கள் அழியும்படி (வந்த), கருடனை—,பொருவின - ஒத்தன; (எ - று.)

எதுவுவமையணி. தலைவன் தலைவியை மணஞ்செய்து கொண்டதன் பின்பு பிரியும் பிரிவு ஆறுவகைப்படும். ஓதற்பிரிவு, காவற்பிரிவு, பகைதணி வினைப்பிரிவு, வேந்தற் குற்றுழிப்பிரிவு, பொருள்வயிற்பிரிவு, பரத்தையிற் பிரிவு என. அவற்றில், பொருள்வயிற்பிரிவாவது - திரவியஞ் சம்பாதித்தல் காரணமாகத் தலைவன் தலைவியைப் பிரிந்து தேசாந்தரத்திற்குச் செல்லுதல் தந்தை மூதாதை முதலிய தன் முன்னோரால் ஈட்டப்பட்ட பொருள் கொண்டு இல்லறஞ் செய்தால், அதனால் வரும் பயன் அவர்க்கு ஆவதல்லது தனக்கு ஆகாமையால் தனது பொருள் கொண்டு இல்லறஞ் செய்தற்காகத் தான் பொருளீட்டுதற் பொருட்டுச் செல்வம் நிறைந்தவனான தலைவனும் செல்வனென்க. அவ்வாறு தலைவியைப் பிரிந்து செல்லும்போது தலைவன், தான் கார்காலத்தே மீண்டு வருவதாகக் காலங்குறித்துச் செல்வன். கற் பொடு பொருந்திக் கணவன் சொல்தவறாத தலைவி அவ்வார்த்தையை நம்பி அக்கால வரவை எதிர்நோக்கிக் கொண்டு அதுவரை பிரிவுத்துயரை ஒரு வாறு பொறுத்துக் கொண்டு இல்லத்து இருப்பள். இங்ஙன மிருக்கையில், முன்பெயல்மாரி தொடங்கியதாக அதுகண்டு அவள் கார்காலம் வந்த வள விலும் தலைவன் வரவில்லையே யென்று வருந்தத் தொடங்குவள். இவள் செய்தி இங்ஙனமாக, பிரிந்து சென்ற தலைவன், பொருளீட்டிக் கொண்டு வரவிருக்கு மளவிலே, முன்பெயல் மாரியைக் கண்டு, குறித்தகாலம் வந்து விட்டதே யென்று கருதி, தலைவி நிலை யாதாகுமோ வென்று சிந்தித்து, பாகனை விரைந்து தேர் செலுத்தச் சொல்லி, பாதாழ்வானுக்குக் கூறிய பதி னொன்கு வருடத் தவணை கடவாதபடி புஷ்பகமேறி அதிவிரைவாக மீண்டு

வரும் இராமபிரான் போல அதிவேகமாக மீண்டு வந்து தலைவியைச் சேர்த்து மகிழ்விப்பன். இப்படி, உயிர் நீங்கிய உடம்பில் உயிரைக் கொண்டு சேர்த்தாற் போலப் பிராண நாயகனை விரைவில் தேர்மீது கொண்டு சேர்ப்பது, காலமாரி யென்க. மழை அக்காலத்திற்கு ஞாபகமாகி அவனை விரைவுபடுத்தலால் இங்ஙனங் கூறப்பட்டது. ஆகவே அத்தலைவியின் பிரிவு நோயாகிய மகாநாகத்தைத் தான் செய்மையில் நின்றபடியே அறத்தொலைக்குங் கருடன் போன்றது காலமாரி யென்றார். மரணாந்தமான துன்பத்தைத் தருதலால் 'பிரிவினோய் நாசனம்' எனப்பட்டது.

ஆயினர்ப் பிரிந்த-இரண்டாம் வேற்றுமைத் தொகை. பிரிவின் நோய்-பிரிவினாலாகிய நோய்; விரகவேதனை. 'பிரிவுநோய்,' 'காரினமாரி' என்பன பாடபேதம். மாரி - பால்பகா அஃறிணைப் பெயராதலால், 'பொருவின' என்னும் பன்மை முற்றைக் கொண்டது. (௨௨)

௨௩. முழங்கினமுறைமுறைமூரிமேகநீர்
வழங்கினமிடைவனமானயானைக
டழங்கினபொழிமதத்திவலைதாழ்தரப்
புழுங்கினவெதிரெதிர்பொருவபோன்றவே.

(இ - ள்.) மூரி மேகம் - பெரிய மேகங்கள், முறை முறை முழங்கின - மாறிமாறி இடிமுழக்கஞ் செய்தனவாய், நீர் வழங்கின - மழையைப் பெய்து கொண்டு, மிடைவன - ஒன்றோடொன்று நெருங்குபவை—மானம் யானைகள் - பெரிய யானைகள், தழங்கின - கர்ச்சித்துக் கொண்டு, பொழி மதம் திவலை தாழ்தர - (தமது உறுப்புக்களினின்று) சொரிகின்ற மதநீர்த்தாரைகள் பெருக, புழுங்கின எதிர் எதிர் பொருவ - கோபங்கொண்டு ஒன்றோடொன்று எதிர்த்துப் போர்செய்வனவற்றை,போன்ற - ஒத்தன; (எ - று.)

உவமையணி. முழங்கி வழங்கி மிடைவனவான மேகங்கள், தழங்கித் தாழ்தரப் பொருவனவான யானைகளைப் போன்றன வென்க. கரிய பெரிய மேகங்கள், அவ்வவ்வகைவடிவினால் யானைகள் போலும். மேகங்கள் குமுறுதல்-யானைகள் கர்ச்சித்தலையும் இவை மழை பொழிதல் - அவை மதநீர் சொரிதலையும், இவை ஒன்றோடொன்று நெருங்குதல் - அவை ஒன்றை யொன்று எதிர்த்து நெருங்கிப் போர்செய்தலையும் ஒக்கு மென்றார். 'புழுங்கின' என்பதற்கு - (கோபதாபத்தால்) உடல் வியாதத்தனவாய் என்றும் உரைக்கலாம்.

முழங்கின, வழங்கின தழங்கின, புழுங்கின - முற்றெச்சம். மிடைவன, பொருவ - பெயர். போன்ற - முற்று. முறைமுறை - அடிக்கடி, தாழ்தர, தா - துணைவினை, எதிர் எதிர் - ஒன்றற்கு ஒன்று எதிராக. (௨௩)

௨௪. விசைகொடுமாருதமறித்துவீசலா
லசைவுறுசிறுதுளியப்புமாரியி
னிசைவுறவெய்வனவிலையவாயிருந்
திசையொடுதிசைசெருச்செய்தலொத்தவே.

(இ - ள்.) மாருதம் - காற்று, விசை கொடு - வேகங் கொண்டு, மறித்து வீசலால் - மாறி மாறி [வாடையும் தென்றலும் மேல்காற்றும் கீழ்காற்றுமாக மடங்கி] வீசுதலால், அசைவு உற சிறு துளி - (தம்மிடத்தினின்று) அசைதல் பொருந்திய சிறிய மழைநீர்த்துளிகளை, அம்பு மாரியின் - பாணவர்ஷத்தைப்போல, இசைவுஉற எய்வன - (எதிர்ப்பக்கத்தில் நெடுந்தூரமளவுஞ்)சென்றுசேரும்படி செலுத்துவனவான மேகங்கள்,—இருந்திசையொடு திசை - பெரிய திக்குகளோடு திக்குகள், இயைவ ஆய - (போர்செய்ய)இணங்கினவையாய் செரு செய்தல் - போர்செய்தலை, ஒத்த - போன்றன; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. பலபடியாக அடிக்குங் காற்றின் விசையால் மழைத்தாரைகளை மேகங்கள் எதிரெதிரே செலுத்துதலைப் பார்க்குமிடத்து, திசைகளோடு திசைகள் அம்பு தொடுத்துப் போர்செய்கின்ற வாறுபோலிருந்த தென்பதாம். அசைவு உற - தம்மைவிட்டுப்புடைபெயர்தல் பொருந்தியவென்க; மேகரூபமாகக் காணப்படுகின்ற நீராவித்திரட்சி காற்றுப்பட்டதனால் நீராகப்பரிணமித்து மழையாகப் பொழிகின்றதென்க. இனி, அசைவு உற - ஓசை மிக்க என்றலுமாம். இயைதல் - சம்மதித்தல். கீழ் ஏழாஞ்செய்யுளில் "ஏசி லாசைகள் சிரிப்ப" என்றதனோடு மாறுகொளக் கூறலாகாமைப் பொருட்டு, திசைகள் தம்மிற்போர்செய்ய இசைந்து விளையாட்டாகப் போர் செய்வன வென்றுமொன்க. இனி, 'இயைவவாய்' என்பதற்கு நெருங்குவனவாய் என்று உரைப்பாருமுளர். 'விசையவாய்' என்ற பாடத்திற்கு - வேகமுள்ளனவாய் என்று பொருள்.

அப்புமாரி-மென்றொடர் வன்றொடராயிற்று: அப்பு மாரி - அம்புகளினுலாகிய மழை யென வேற்றுமைப் புணர்ச்சியாகவாவது, அம்பாகிய மழை யென அல்வழிப் புணர்ச்சியாகவாவது விரிக்கலாம்; அம்புகள் மழைபோலச் சொரியப்படுதல். எய்வன - பெயர்.

செருச்செய்த செய்கையே' என்றும், 'செருச்செய்த வொத்தவே' என்றும், 'செருச்செய்வபோன்றவே' என்றும் பாடம் காணப்படுகின்றது. (௨௪)

அக்கார்காலத்தில் உலகத்துப்பொருள்களின் நிகழ்ச்சியை இதுமுதல் இருபத்து நான்குகவிகளில் வருணிக்கின்றார்.

[உலர்ந்த மரங்கள் தளிர்த்தல்]

௨௫. விழையுறு பொருட்டறப் பிரிந்த வேந்தர்வந்
துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்
மழையுற மாமுக மலர்ந்து தோன்றின
குழையுறப் பொலிந்தன வுலவைக் கொம்பெலாம்.

(இ - ள்) விழையுறு - (யாவராலும்) விரும்பப்படுவதான, பொருள் - செல்வத்தை, தர - சம்பாதித்துக்கொண்டு வரும்பொருட்டு, பிரிந்த - (தம்மைவிட்டுப்) பிரிந்து (அயல்நாட்டுக்குச்) சென்ற, வேந்தர் - (தமது) தலைவர் [கணவர்], வந்து உழை உற - (கார்காலம் வந்தவளவிலே) மீண்டுவந்து தம்

மிடம்சேர (அதனால்), உயிர் உற - முன்புபிரிந்த நிலையில் உயிர்நீங்கியது போலிருந்த தமது உடம்பில் உயிர்பொருந்த, உயிர்க்கும் - மூச்சுவிடுகின்ற, மாதரின் - மகளிர்போல,—உலவை கொம்பு எலாம் - (மழையில்லாமலிருந்த காலத்தில்) உலர்ந்துகிடந்த மரங்களின் கிளைகளெல்லாம், மழை உற - மழை வந்தவளவிலே, குழை உற பொலிந்தன - தளிர்கள்பொருந்த விளங்கியவை யாய், மா முகம் மலர்ந்து தோன்றின - அழகிய முகம் மலர்ந்து காணப் பட்டன; (எ - று.)

உவமையணி. காலத்திற்கு ஏற்ற வருணனையாக, அக்கால நிகழ்ச்சி களையே ஒன்றற்கு ஒன்று உவமையாக அமைத்தார். கொம்புகளுக்கு முகம்- முன்னே காணப்படும் இடம். மலர்ச்சி - செழித்தல், அழகியதாகக் காணப் படுதல். பொலிதல் - கிளர்தல். 'மாந்தரின்' என்ற பாடத்திற்கு - மனிதர் கள்போலவென்று பொருள்கொண்டு 'வேந்தர்' என்றதற்கு அரசரெனறு உரைக்க. உலவை - உலத்தலையுடையது; உல-பகுதி, ஐ - கருத்தாப்பொருள் விகுதி. உலத்தலெனினும், உலர்தலெனினும், ஒக்கும். 'மழையுற மணமுற மலர்ந்து தோன்றின, குழையுறப் பொலிவுறு முலவைக் கொம்பெலாம்' என்று பிரதிபேத முண்டு. (உ௫)

வே று.

[பாதிரி பூவாமையும், வெண்காந்தள் பூத்தலும் முதலியன.]

உசு. பாடலம் வறுமை கூரப் பகலவன் பசுமை கூரக்
கோடல்கள் பெருமை கூரக் குவலயஞ் சிறுமை கூர
வாடின மயில்கள் பேசா தடங்கின குயில்க ளன்பர்த்
தேடுறத் தளர்ந்தார் போன்றுந் திருவுறக் கிளர்ந்தார் போன்றும்.

(இ - ள்.) (அக்கார்காலத்திலே),—பாடலம் - பாதிரிமரங்கள், வறுமை கூர - (மலர்களில்லாமையால்) வெறுமையாயிருக்குந் தன்மை மிக—பகல வன் - சூரியன், பசுமை கூர - குளிர்ந்திருக்குந் தன்மைமிக—கோடல்கள் - வெண்காந்தட்செடிகள்,பெருமை கூர - (மலர்களைப்பெறுதலாற்) பெருமை மிக,—குவலயம் - குவளை மலர்கள், சிறுமை கூர - வாட்டம் மிக,—மயில் கள்—, திரு உற கிளர்ந்தார் போன்று - செல்வம் வாய்த்ததனால் மகிழ்ச்சி பெற்றவர்போல, ஆடின - களித்துக் கூத்தாடின; குயில்கள்—, அன்பர் தேடுற தளர்ந்தார் போன்று - தம்மை விட்டுப்பிரிந்த அன்புள்ள உறவின ரைத் தேடவேண்டியவராய்த் தளர்ச்சி யடைந்தவர்போல, பேசாது அடங் கின - பேசாமல் அடங்கின; (எ - று.)

உவமையணியை அங்கமாகக் கொண்டுவந்த தன்மை நவிற்சியணி. 'சித்திரையிற் பாதிரி பூத்தது' என்றபடி பாதிரிமரம் இளவேனிற்பருவத்தே பூப்ப தாதலால், கார்காலத்தில் மலரின்றிப் பாழடையும். அப்பருவத்தில், மேகஸஞ்சாரத்தாலும், மழையினாலாகிய குளிர்ச்சியினாலும், சூரியனுடைய வெப்பம் பூமியில்தோன்றாது கார்த்திகைக் கொடியென்றும், கார்த்திகைப் பூவென்றும் வழங்கும்படி வெண்காந்தள் மழைக்காலத்திற் பூத்தல், இயல்பு.

அக்காலத்திற் குவளைமலர்கள் குவிந்திடும். 'மயிலாடக் குயில்வாட மாமுகி லெழுந்தது,' "மாவிற் குயிலு மயிலு மொளிசெய்ய, மேவிப் புயல்தவழும்" என்றபடி, மழைக்காலத்தில் மயிலுக்குக் கொண்டாட்டமும், குயிலுக்குத் திண்டாட்டமு மாதலால், மயில்ஆடும் குயில்கூவாது ஒடுங்கும். அப்பொழுது அரசாட்சிச் செல்வம்பெற்று மகிழ்ந்த சுக்கிரீவனைக் களித்தாடுகின்ற மயிலுக்கும், பிராட்டியைத் தேடுங் கவலையாற் சோர்ந்திருக்கின்ற இராமபிரானைக் கூவாது ஒடுங்குகின்ற குயிலுக்கும் காலத்திற்கேற்ற உவமையாகக் கொண்டு, 'திருவுறக்கிளர்ந்தார் போன்றும், அன்பர்த் தேடுறத் தளர்ந்தார் போன்றும்' என்றார். உபமான உபமேயங்கள் முறைமாறியிருத்தல், எதிர்நிரல் நிறைப் பொருள்கோள். இராமபிரானுடன் இருந்து அவனொடொப்ப இன்ப துன் பங்களை அனுபவிக்கின்ற இலக்குமணனையும், சுக்கிரீவனுடன் இருந்து அவனொடொப்ப இன்ப துன்பங்களை அனுபவிக்கின்ற தாரன், நீலன், நளன் அநுமான் முதலிய வாநரர்களையும் உளப்படுத்தி, 'தளர்ந்தார்,' 'கிளர்ந் தார்' என்று பன்மையாற் கூறினர். தளர்ந்தாரைப் பாடலம் குவலயம் என்ப வற்றிற்கும், கிளர்ந்தாரைப் பகலவன் கோடல்கள் என்பவற்றிற்கு முட்பட உவமையாக்குதலு மொன்று; அப்பொழுது தாபமின்றித் தண்ணென்றிருத் தலைச் சூரியனுக்கு ஆக்கமாகக் கற்பித்தவாறும்.

பகலவன்-(தனது சேர்க்கையாற்) பகற்பொழுதைச் செய்பவன். பசுமை- இங்கே, குளிர்ச்சியின் மேலது; குளிர்ந்தநீரை 'பச்சைஜலம்' என்னும் வழக் கையுங் காண்க இனி, பகலவன் பசுமைகூற - சூரியன் மிகவும் ஒளிமழுங்க வென்றலுமாம். கோடல், கொடியாகவும் உண்டு. மயில் - மயூர மென்ற வட சொல்லின் சிதைவு. அன்பர்த் தேடுற - இரண்டாம் வேற்றுமைத்தொகை. ஈற்றடியில் உம்மைகள் - எதிரதும் இறந்ததும் தழுவியன.

'அன்பாற் கேடுறத்தளர்ந்தாரபோன்றும்' என்று பாடமோதுவாருமுளர். 'அன்பர் கேடுற' என்றும், 'ஆக்கந்தேடுற' என்றும் காணப்படுகின்றது.

இச்செய்யுளில், வறுமை பசுமை, பெருமை சிறுமை, ஆடின அடங் கின, தளர்ந்தார் கிளர்ந்தார் என்று அடிதோறும் மாறுபட்ட சொற்கள் வந் தது, முரண்தொடை.

இதுமுதற் பத்துக் கவிகள் - அரசியற்படலத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (உசு)

[செங்காந்தட்பூ.]

உஎ. நானிறச்சுரும்பும்வண்டுநன் மணியணியுஞ்சாரற்
றேனுகமலர்ந்துசாய்ந்தசெயிதழ்க்காந்தட்செம்பூ
வேனிலைவென்றதம்மாகாரெனவியந்துநோக்கி
மானிலக்கிழத்திகைகண்மறித்தனபோன்றமன்றே.

(இ - ள்.) நால் நிறம் சுரும்பும் - பலநிறங்களையுடைய (வண்டின் சாதி பேதமாகிய) சுரும்புகளும், வண்டும் - கருவண்டுகளும், நல் மணி அணியும் - சிறந்த இரத்தினங்கள்போல அலங்கரிக்கப்பெற்ற [அழகிதாக மொய்க்கப்

பெற்ற], சாரல் - மலைச்சாரல்களில், தேன் உக மலர்ந்து சாய்ந்த - தேன் வழிய மலர்ந்து சாய்ந்து அசைகின்ற, சேய் இதழ் காந்தள் செம் பூ - சிவந்த இதழ்களையுடைய செங்காந்தள்மலர்கள்,—மால் நிலம் கிழத்தி - பெரிய பூமி தேவி, நோக்கி - (கார்காலத்தின் அழகைப்) பார்த்து, வேனிலை வென்றது அம்மா' கார் என வியந்து - 'வசந்தகாலத்தை வென்றுவிட்டது கார்காலம்' என்று அதிசயித்து, மறித்தன - (அந்தவேனிற்காலத்தைக் குறிப்புக்காட்டித்) தடுத்தனவான, கைகள் - கைகளை, போன்ற - ஒத்தன; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை அம்மா - அதிசயத்தைக்காட்டும் இடைச்சொல்.

தற்குறிப்பேற்றவணி. அக்கார்காலத்திற் செங்காந்தள்மலர்கள் மலர்ந்து சாய்ந்து அசைவது, பூமிதேவி கார்காலத்தைப் பார்த்து இது வசந்தகாலத்தினுஞ் சிறந்ததாயிருக்கின்றதென்று கொண்டாடி அவ்வசந்தகாலத்தை 'இனி நீ வேண்டா' என்று கைகளாற் சைகைகாட்டித் தடுக்கின்றவாறுபோ லிருந்தது என்று உத்ப்ரேக்ஷித்தார். இதழ்விரிந்த செங்காந்தள்மலர், அகங் கைவிரித்தாற்போ லிருக்கும்; "காந்த ளஞ்செங்கை" என்றார் பிறரும். வேனில் - இங்கே இளவேனில். அது பருவங்களுட்சிறந்ததென்று தலைமை பெற்றதாதலால் அதனைவென்றமை 'அம்மா' என்று வியக்கும்படியாயிற்று. இனி, வேனில் - முதுவேனிலும் உட்படப் பொதுப்பட வெயிற்காலமாகிய நான்கு மாதங்களென்று கொள்ளுதலும் ஒன்று; வெயிற்காலத்திலுண்டான வெப்பம் வேர்வை முதலிய குற்றங்களை யொழித்ததனால், வேனிலைக் கார் வென்றது. 'வேனிலை வென்றது' என்றதற்கு - (நம்மை வற்றச்செய்யும்) வெயிற்காலத்தை யொழித்தது என்றும், 'நிலக்கிழத்தி கைகள் மறித்தன போன்ற' என்றதற்கு - பூமியாகிய பெண் கைகளை விரித்துக்கொண்டு ஆட அக்கைகள்போன்றன வென்றும் உரைப்பாருமுளர். சுரும்பு-பொறிவண்டு. நால் நிறம் - பலவகையான என்றலுமாம்.

'சாரற்காந்தள்' என்றதனால், காந்தள் குறிஞ்சிநிலத்ததெனை விளங்கிற்று: (மலையும், மலைசார்ந்த இடமும் - குறிஞ்சி) மால் - பெருமை: உரிசசொல். நிலக் கிழத்தி - பூமிக்கு உரியவள். கிழத்தி-உரிமையை யுணர்த்தும் 'கிழமை' என்னும் பண்பினடியாப் பிறந்த பெண்பாற்பெயர்; இ - விகுதி, த-சாரியை; (இதன் ஆண்பால், கிழவன்.) 'நவமணியணியும்' என்றும், 'மலர்ந்த சந்தச் சேயிதழ்' என்றும், 'மலர்ந் தசைந்த' என்றும் பாடாந்தரம். 'நவ மணி யணியிற் சார' என்ற பாடத்திற்கு - பலநிறங்களையுடைய சுரும்புகளும் கருவண்டுகளும் நவரத்தினகசிதமான (கைகளிலணியும் வளை மோதிரம் முதலிய) ஆபரணங்கள் போல(க் காந்தள் மலர்களிற்) சூழ்ந்துமொய்க்க என்று பொருள். (உஎ)

[வெண்காந்தள்.]

உஅ. வாளெயிற்றரவம்போலவன்றலைகான்றமானத்
தாளுடைக்கோடறம்மைத்தழீஇயனகாதறங்க
மீளலவவையுமன்னவிழைவனவுணர்வுநீந்த
கோளரவென்னப்பின்னியவற்றொடுங்குழைந்துசாய்ந்த.

(இ-ள்.) வாள் எயிறு அரவம் - வாளாயுதம்போன்ற [கூரிய] பற்களை யுடைய நாகங்கள்,—போல வல் தலை கான்ற - (தங்கள்) வலிய தலை போல மலர்களை மேற்புறத்தில் வெளிப்படுத்திய, மானம் தாள் உடை கோடல் தம்மை-பெரிய காளத்தையுடைய வெண்காந்தட்செடிகளை, (நாகங்களென்றே எண்ணி), காதல் தங்க தழீஇயன - ஆசைபொருந்தத் தழுவிக்கொண்டன வாய், மீளல - விட்டுநீங்காமலிருந்தன; அவையும் - அவ்வெண்காந்தட் செடி களும்,—அன்ன விழைவன உணர்வு வீந்த கோள் அரவு என்ன - அத் தன்மையனவாகவே விரும்புவனவாய் (அக்காதல் மிகுதியால்) உணர்ச்சி நீங்கிய கொலைசெய்யு மியல்புள்ள நாகங்கள்போல, அவற்றொடும் பின்னி குழைந்து சாய்ந்த - அந்த நாகங்களுடனே பின்னிக்கொண்டு ஒற்றுமைப்பட் டுச் சாய்ந்துகிடந்தன; (எ - று)

ஆணும் பெண்ணும் ஈருடம்பு ஒருடம்பாகுமாறு தம்மிற் பின்னிக் கொண்டு இழைந்து போகம்நுகர்தல், நாகங்களின இயல்பு. நீண்டு வளர்ந்த வெண்காந்தட்செடிகள் பாம்பின்படம் போன்ற மலர்களை யுடையனவாம் போது, பாம்புகள்போலும்; இதுபற்றியே, "காந்தளும் பாந்தளைப் பாரித் தலாந்தனவே" 'வெய்யவா ளரவுபைத்தாலித்தனனவங்காந்தளவிழ்ந்தலர்ந் தன," "பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல் கொண்டு, கைந்நாகம் அஞ்சுங் கமழ் காந்த ளஞ்சாரல்" என்றார் பிறரும். முதல்வாக்கியம்—அம் மலையிலுள்ள நாகங்கள், நீண்ட தாளின்மீது விரிந்தமலரைக்கொண்ட வெண் காந்தட் செடிகளைப் பார்த்து, தமக்குத் துணையாதற்கேற்ற வேறுப் பாலாகிய நாகங்க ளென்று பிரமித்து, ஆசையோடு அவற்றை இறுகத்தழு விக்கொண்டு விடாதிருந்தன வென்றவாறும்; மயக்கவணி. இரண்டாம் வாக்கியத்திலே, அசேதநமாகிய அச்செடிகள் - அத்தழுவுதலுக்கு உட்பட்டு அவற்றோடு பின்னிக்கொண்டு சாய்ந்துகிடந்ததை, இந்நாகங்களும் அவ்வாறே காமவசப்பட்டு மோகாதிசயத்தால் உணர்ச்சி நீங்க ஆவசமாய் அவற்றோடு பின்னி ஒற்றுமைப்பட்டுச் சாய்ந்துகிடந்தாற் போலுமென்று வருணித்தார்; தற்குறிப்பேற்றம் இவ்வாறு இரண்டு அணிகள் தம்மில் வேறுபாடு தோன் றச் சேர்ந்து வந்ததனால் சேர்வையணி. நாகங்கள் காந்தட் செடிகளைத் தழுவிய பின்பும் நாகமல்ல வென்று உணர்ந்து விடாமலிருந்ததற்குக் கார ணத்தை விளக்கியது, இரண்டாம் வாக்கியம்.

தலை கானுதல் - படமெடுத்தாற்போலப் பூப்பூத்தல். தழீஇயன = தழுவி யன: சொல் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசை யளபெடை; மாத்திரை, மூன்று. கோள் - உயிரைக் கொள்ளுதல், உயிரைக் கவர்தல், கொல்லுதல்; கொள் எனனும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். குழைதல் - நெகிழ்ந்து ஒன்றுதல்.

'அரவம்போல வானறலை தோன்ற வார்ந்த,' 'கோடறம்மிற்றழீஇயன' 'மீளலவாகி' என்றும பாடமுண்டு. இச்செய்யுள் "வாளெயிற்றரவம் போன்ற வான்றலை தோன்றவார்ந்த, தாளுடைக் கோடறம்மிற் றழுவின காதறங்கி, மீள மெல்லணையின் மன்னன் விழைவினுளுணர்வு வீந்த, தோளெனப் பின்

னியாங்கே யவற்றொடுந் துலங்கிச் சாய்ந்த" என்று சில பிரதிகளிற் காணப்படுகின்றது. (௨௮)

[தம்பலப்பூச்சி.]

௨௯. எள்ளிடவிடனுமின்றியெழுந்தனவிலங்குகோபந்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ.

(இ - ள்.) எள் இடவும் இடன் இன்றி - ஓர் எள்ளைப் போகடுதற்கேனும் வெற்றிடமில்லாதபடி, எழுந்தன இலங்கு - தரைமேற் பொருந்தியனவாய் விளங்குகின்ற, கோபம் - இந்திரகோபமெனனும் பட்டுப் பூச்சிகள்,— தள்ளுற - (சிலகாலங்) கழிய, தம்மை பிரிந்தவர் - தம்மைவிட்டு நீங்கி அயல்நாட்டுக்குச் சென்றிருந்தவர்களான, தலைவர் - (தமது) கணவர், தழீஇய - (கார்காலத்தில்) மீண்டுவந்து சேரப்பெற்ற, தூமம் கள் உடை ஓதியார் - (அகிற் புகை முதலிய வாசனைப்)புகை யூட்டப் பெற்றதும் (சூடிய மலர்களின) தேனை யுடையதுமான கூந்தலை யுடையவர்களாகிய மகளிர், தம் கலவியில் - தாம் (அக்கணவரோடு) அடுத்தடுத்துச் செய்யுஞ் சேர்க்கையில், பலகால் கான்ற - பலமுறை உமிழ்ந்த, வெள் அடை தம்பல குப்பை - வெற்றிலைத் தம்பலங்களின் தொகுதிகள், சிதர்ந்து என - சிந்திக்கிடந்தாற் போல, விரிந்த - மிகுதியாயிருந்தன; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

தம்பலம் - வெற்றிலை பாக்கு சுண்ணம்புகள் சேர்ந்த சேர்க்கையின் சாரம்; தாம்பூலந் தரிக்கும்போது அதனினின்று வாயில் ஊறுவது. இது போன்ற நிறமுடையதா யிருத்தல் பற்றி, மழைக்காலத்திலே தரைமீது நிறைந்து காணப்படும் இந்திரகோபமெனனும் பட்டுப்பூச்சிகளுக்குத் தம்பலப்பூச்சி யென்று பெயராம். சில பல நாள்கள் தலைவியரைப் பிரிந்து சென்றிருந்த தலைவர் கார்காலம் வந்த வளவிலே மீண்டுவந்து சேர்ந்தனராக "பிரிந்தவர் கூடினாற் பேசல்வேண்டுமோ" என்றபடி அத்தலைவியர் காதல் கைமிஞ்சி அவரோடு அடுத்தடுத்துச் சேரும்போது அடிக்கடி தாம்பூலம் உபயோகித்துக் கொண்டு தம்பலம் உமிழ அத்தம்பலங்கள் எங்கும் கிடந்தாற்போன்றன. அம்மழைக்காலத்திலே தரையில் அடர்த்தியாக நிரம்பிக் காணப்படுகின்ற இந்திர கோபங்களென்று வருணித்தார். தற்குறிப்பேற்றவணி. தாம்பூலம் உபயோகிக்கும் போது முதலில் ஊறுகின்ற ரசத்தை உமிழ்ந்துவிட்டுப் பின்பு ஊறும் ரசத்தை உட்கொள்ள வேண்டுமெனனும் தேகாரோக்கிய முறைபற்றித் தம்பலம் உமிழ்தல் இயல்பு.

இடன் - ஈற்றுப்போலி. நாமைகதேசே நாமக்ரஹணம் [ஒருபெயரின் ஒரு பகுப்பைக்கொண்டு அப்பெயரைக் குறித்தல்] எனனும் நியாயத்தால், இந்திர கோபத்தை 'கோபம்' என்றார். தள்ளுற - தள்ள; உறு - துணைவினை. 'தள்ளுற' என்பதற்கு - (பிரிவுத்துயரால் தமக்குத்) தளர்ச்சி யுண்டாகவென்றும் உரைக்கலாம். தழீஇய = தழுவிய. தூமம் - வடசொல். கலவி - கலத்

தல்: 'வி' விகுதி பெற்ற தொழிற்பெயர். அடை - இலை. தம்பல் - கடைக்குறை விகாரம்; இயற்கை நலத்தினால் மாத்திரமன்றிச் செயற்கை நலத்தாலும் கணவரை மேன்மேல் மகிழ்விக்கின்றன ரெனபார், 'தாமக் கள்ளுடை யோதியார்' என்றார். 'தாமக்கள்ளுடை யோதியார்' என்ற பாடத்திற்கு - (சூடிய) மலர்மாலைகளின் தேனையுடைய கூந்தலையுடையவர்களான் மகளி ரென்று பொருள்; தாமம் - மாலை. 'எள்ளிட விடனுமின்றி' என்ற விடத்து இழிவு சிறப்பும்மை பிரித்துக் கூட்டப்பட்டது.

'இடமொன்றின்றி', 'தழுவத்துய' என்பன பாடபேதம். (உக)

[வேங்கைமலர், கொன்றைமலர், மலையருவி.]

௨௨. தீங்கனிநாவலோங்குஞ்சேணுயர்குன்றிற்செம்பொன்
வாங்கினகொண்டுபாரின்மண்டுமாலயாறுமான
வேங்கையின்மலருங்கொன்றைவிரிந்தனவீயுமீர்த்துக்
தாங்கினகலுழிசென்றுதலைமயக்குறுவதம்மில்.

(இ - ள்) தீம் - இனிமையான, கனி - பழத்தையுடைய, நாவல் - நாவல் மரம், ஓங்கும் - உயர்ந்திருக்கப்பெற்ற, சேண் உயர் குன்றின் - ஆகாயத்தையளாவி உயர்ந்திருக்கின்ற மகாமேருமலையினின்று, வாங்கின செம் பொன் கொண்டு - விகுதியான சிவந்த பொன்னை யடித்துக் கொண்டு, பாரில் மண்டு - பூமியில் மிக்குப்பெருகுகின்ற, மால் யாறு - பெரிய (ஜம்பூவெனனும்) நதியை, மான - ஒப்ப,—(அந்த ரிசியமூககிரியி லிருந்து) வேங்கையின் மலரும் - வேங்கை மரத்தின மலர்களையும, கொன்றை விரிந்தன வீயும் - கொன்றை மரத்தில் மலர்ந்தனவான மலர்களையும, ஈர்த்து தாங்கின - இழுத்துத் தம் மீது கொண்டு வருவனவான, கலுழி - நீர்ப்பெருக்குக்கள், சென்று - பெருக்கி, தம்மில் தலைமயக்கு உறுவ - தமக்குள் [ஒன்றோடொன்று] கலப்பனவாயின; (எ - று.)

'இந்த ஜம்பூத்வீபத்தின் நடுவிலுள்ள மேருவெனனும பொன்மலையைச் சார்ந்து தெற்கிலிருக்கின்ற கந்தமாதனமெனனும உபபர்வதத்தில் உள்ள தொரு மிகப்பெரிய நாவல்மரத்தின் பழங்கள் மகாகஜப்பிரமாணமுள்ளவையாய் அம்மலையின மேல்விழுந்து சிதைய அவற்றின் ரஸத்தினால் ஜம்பூநதி யென்று ஓர் ஆறு பெருகுகினறது. அவவாற்றங் கரையின் மண்ணானது அந்த ரஸத்தில் நனைந்து காற்றினால் உலர, ஜாம்பூநதமென்று பெயர் கொண்டு வித்தர்கள் தரிக்கும்படியான ஸ்வர்ணமாகினறது. அந்த நாவல் மரத்தைப்பற்றித் தான, இந்தத் தீவுக்கு ஜம்பூத்விபமெனகினற பெயர் உண்டாயிற்று' எனறு புராணம் கூறும். ("பட்டமார்தரு மாகரியனவெனப் பருத்துக், கொட்டை நுண்ணிய நாவலின் கொழுங்கனிச்சாறு, பெட்ட சம்புமா நதியென வலங்கொடு பெருகி உட்டெளிந்து பொன்மேருவைச்சலா யினிதோடும்," "அதிருமப்புனலருந்தின ரருகரையசும்பு, ததையும் வெங்கதிர் காற்றுறவுலர்ந்து நற்சாம்பூ நதமெனுமபொருமாங்கதிணணி புனை நலத்தோர், இதயில் வெம்பிணி நரைதிரையற்றினிதிருப்பார்" என்றபாகவதமும்,

"கடிகமழு நாவலொன்று தென்பால் நின்றகாரணத்தாற் பாரதன்றன்கண்ட முற்றும், இடனுடைய நாவலந்தீவெனப்பேர்பெற்றது இத்தருவின் தீங்கனி நீராறாய் மேருத், தடவரையைப் புடைசூழ்ந்து வடபாற்சென்று சம்புநதிப் பெயர்பெறும் அச்சலிலந்துய்த்தோர், உடல்முழுதும் பொன்மயமா யயுத மேலு மொரு மூவாயிரமாண்டங் குறுவரன்றே" என்ற கந்தபுராணமும் காணத்தக்கன.)

அந்த நாவற்பழத்து ரஸத்தின் சம்பந்தத்தாலும் பொன்மயமான மேரு மலையினின்று பெருகுதலாலும் பொன்னைக் கொழித்துக்கொண்டு வருகின்ற ஜம்பூநதியை இந்த ருசியமூகமகாகிரியில் மழைபெய்தலாற் கார்காலத்தே மலர்ந்த பொன்னிறமமிக்க வேங்கைமலர்களையும் கொன்றைமலர்களையும் அடித்துக்கொண்டு வருகின்ற ஆற்றுப்பெருக்கிற்கு உவமை கூறினார்; உவமையணி.

சேண் உயர் - மிகவுயர்ந்த என்றுமாம்; ஒருபொருட் பன்மொழி. மேருமலை எண்பத்துநாலாயிரம் யோஜனை உயரமுள்ளதென்று புராணம் கூறுதலால், அதனை 'சேணுயர் குன்று' என்றல் தகும். அந்த நாவல் மரத்தின் உயரம் பதினோராயிரம் யோஜனையளவென்று புராணம் கூறுதலால், 'நாவலோங்கும்' எனப்பட்டது. செம் பொன் - மாற்றுயர்ந்த பொன். கலுழி - காட்டாறு: கலுழ்தலையுடைய தெனக் காரணப்பெய ரென்னலாம்; கலுழ்தல் - கலங்குதல்; இ - பெயர்விகுதி கலுஷி என்ற வடசொல்லின் திரிபெனக் கொண்டாலும் இவ்வாறே பொருள்படும். தலைமயங்குதல் - கலத்தல்; இது இப்பொருளதாதலை "சாறும் வேள்வியும் தலைமயங்குமே" எனப் பால காண்டத்திலுங் காண்க. இதில், 'தலை' என்பது - தமிழ் உபஸர்க்கம்: தலைக்கூடுதல், தலைப்பிரிவு என்றவற்றிற்போல. மயக்கு - மயங்கு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். மயக்கு உறுதல் - கலப்படைதல்.

'வீயுமீதாய்த்தாங்கின நதிகள்சென்று' என்பது பாடாந்தரம். (௫௰)

[செங்காந்தள்மலர், கொன்றைமலர், இந்திரகோபம்.]

௫௧. நன்னெடுங்காந்தட்போதினறைவிரிகடுக்கைமென்பூத்
துன்னியகோபத்தோடுந்தோன்றியதோற்றந்தும்பி
யின்னிசைமுரல்வநோக்கியிருநிலமலர்க்கையேந்திப்
பொன்னெடுங்காசையீட்டிககொடுப்பதேபோன்றதன்றே.

(இ - ள்.) நல் - அழகிய, நெடு - நீளம் உயர்ந்த, காந்தள் போதில் - செங்காந்தளமலரில், நறை விரி கடுக்கை மெல் பூ - வாசனைவீசுகின்ற மென்மையான கொன்றை மலர்கள், துன்னிய கோபத்தோடும் - பொருந்திய தம்பலப் பூச்சிகளுடன், தோன்றிய - விளங்குகின்ற, தோற்றம் - காட்சியானது—இன் இசை முரல்வ - இனிமையான இசையைப் பாடுவனவான, தும்பி நோக்கி - வண்டுகளைக் குறித்து, இரு நிலம் - பெரிய பூமிதேவி, மலர் கை ஏந்தி - விரிந்த (தன்) கைகளை உயர எடுத்து, பொன்னெடும் காசை

ஈட்டி - பொன்னோடு இரத்தினங்களையும் சேர்த்து வைத்துக்கொண்டு, கொடுப்பதே - கொடுப்பதையே, போன்றது - ஒத்தது; (எ - று.)—அனறே - ஈற்றசை.

தரையில் உயர்ந்தெழுந்த காந்தட்செடிகளின் சிவந்தமலர்களிற் கொன்றைமரத்தினின்று விழுந்த பொன்னிறமான மலர்கள் தங்க அவற்றுடன் இந்திரகோபப்பூச்சிகளும் எழுந்து அந்தச்செங்காந்தள்மலர்களிற் சேர்ந்த தோற்றமானது. வண்டுகள் இனிமையாக இசைபாடுதலைக் கேட்டு மகிழ்ந்து பூமிதேவி தன்கைகளை உயர எடுத்து அவற்றிற் பொன்னையும் மாணிக்கத்தையும் வைத்துக்கொண்டு அவ்வண்டுகளுக்குப் பரிசு கொடுக்கின்றவாறு போலிருந்த தென்பதாம்; தற்குறிப்பேற்றவணி. காந்தட்குக் கையும், கொன்றைமலர்க்குப் பொன்னும், இந்திரகோபத்திற்கு மாணிக்கமும் நிறத்தால் உவமம். காந்தட்குக் கை வடிவிலும் ஒப்பாம். 'கொடுப்பதே' என்ற தேற்றேகாரம, தற்குறிப்பேற்றத்திற்கு அங்கமாய் நின்றது.

நறை விரி - தேன் மிக்க எனினுமாம். இந்திரகோபத்திற்கு எழுதலும் இயல்பாதலை "சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ் சோலையெங்கும், இந்திரகோபங்களே யெழுந்தும் பரந்திட்டனவால்" என்ற பெரியாருளிச்செயலினாலும், 'பூமியிலே தோற்றுவன சிலவும், ஆகாசத்திலே எழும்புவன சிலவும் காலடியிட்டு மேல்செல விழுந்தாப்போலேயிருப்பன சிலவுமாயிராநின்றனவாய்த்து' என்ற அதன் வியாக்யான வாக்கியத்தாலும் அறிக. தும்பி - வண்டின் சாதிபேதம். முரல்வ - பலவின்பாற்பெயர்; முரல்வது என்பதன் விகாரமாகக்கொண்டும் உரைக்கலாம். தும்பி இசை முரலுதல் - ரீங்காரஞ் செய்தல். மலர்க்கை - மலர்தலையுடைய கை யென இரண்டனுருபும் பயனுந்தொக்கதொகை. காசு - நவரத்தினங்களுக்கும் பொதுவான பெயர்; இங்கே சிறப்பாய், செந்நிறமுடைய பதுமராகமென்னும் மாணிக்கத்தைக் குறித்தது. 'போன்றவன்றே' என்ற பாடத்திற்கு, எழுவாயாகிய தோற்றம் என்ற பால்பகா அஃறிணைப்பெயரைப் பன்மையாகக் கொள்ளவேண்டும்.

'கடுக்கைநன்பூ' என்றும், 'இருநிலமகள் கையேந்தி' எனறும், 'காசை நீட்டி' என்றும் பாடங்கள் காணப்படுகின்றன. (௩௧)

[வண்டோலி, இடிமுழக்கம், மயில்ஆடுதல், தோன்றிப்பூ, கருவிளமலர்]

௩௨. கிளைத்துணைமழலைவண்டுகின்னரநிகர்த்தமின்னுந்
துளிக்குரன்மேகம்வள்வார்த்தூரியந்துவைப்பபோன்ற
வளைக்கையர்போன்றமஞ்ஞைதோன்றிகளரங்கின்மாடே
விளக்கினமொத்தகாண்போர்விழியொத்தவிளையின்மென்பூ.

(இ - ள்.) கிளை - கைக்கிளை யென்னும் இசைக்கு, துணை - சமமான, மழலை - இனிய ரீங்காரத்தையுடைய, வண்டு - வண்டுகள், கின்னரம் நிகர்த்த-யாழைப்போன்றன; மின்னும் துளி குரல் மேகம்-மின்னுவனவும் மழை பெய்தலையும் இடிமுழக்கத்தையு முடையனவுமான மேகங்கள், வள் வார்

தூரியம் துவைப்ப போன்ற - செறிந்த தோற்கயிற்றாற் கட்டப்பட்ட மத்தளங்கள் ஒலிப்பன போன்றன; மஞ்ஞை - மயில்கள், வளை கையர் போன்ற- வளையல்களையணிந்த கைகளை யுடையவர்களான மகளிரைப் போன்றன; தோன்றிகள் - செங்காந்தள்மலர்கள், அரங்கின் மாடே - நாட்டியமாடுமிடத்திலே, (ஏற்றிவைக்கப்பட்ட),விளக்கு இனம் - விளக்குக்களின் கூட்டத்தை, ஒத்த - போன்றன: விளையின் மெல் பூ - மென்மையான கருவிளமலர்கள், காண்போர் விழி ஒத்த - பார்ப்பவர்களுடைய கண்களைப்போன்றன; (எ-று)

வண்டுகள் இனிமையாக ரீங்காரஞ்செய்தல் யாழிசைத்தல்போலிருக்க, மேகங்கள் இடியினாலும் மழைத்தாரைகளாலும் முழக்குதல் மத்தளந்தட்டுவதுபோலிருக்க செங்காந்தள் மலர்கள் நாட்டியசாலையில் விளக்குக்களேற்றிவைத்தாற்போலிருக்க மயில்கள் ஆடுதல் மகளிர் நாட்டியமாடுதல்போலிருக்கது; கருவிளமலர்கள் அந்த நாட்டியத்தை இமைமூடாமல் நன்றாகப்பார்ப்பவர்களுடைய கண்கள்போ லிருந்தன என்பதாம். இதுவுவமையணி. ("தவற்றருவி, தாழ்ந்து வீழ்ந்தவை முழவிற்றதும்பின மதுகரம் பாடச் சூழ்ந்து மாமயிலாடி நாடகந் துளக்குறுத்தனவே" "தோன்றி யஞ்சுடரேந்த" "புல்லிய கொம்புதானோர் கருவிளை பூத்ததேபோ, லொல்கியோர் கொம்புபற்றி யொருகணால் நோக்கிநின்றாள்" "பாடல்வண் டியாழ்செயும்" என்ற சிந்தாமணிப்பகுதிகள் இங்கு நோக்கத்தக்கன.) இச்செய்யுளில் வாக்கியந்தோறும் ஒவ்வோர் உவமைச்சொல்லை அமைத்தது, பலவயிற்போலி யுவமை யெனப்படும்.

கிளை-எழிசைகளில் ஒன்று; மற்றவை - குரல், துத்தம், உழை, இளி, விளரி, தாரம். கின்னரம் வீணை. வள் - நெருக்கமும் வலியும்; வளமுமாம், தூர்யம்-வடசொல். நிகர்த்த - போன்ற, ஒத்த - முற்று. துவைப்ப - பெயர். நாட்டியமாடும்மகளிர்தம்மை அலங்கரித்துக்கொண்டுவரும் இயல்பு தோன்ற, 'வளைக் கையர்' என்றார். மஞ்ஞை-பெயர்த்திரிசொல். விளகு - ஓர் செடி; காக்கணஞ்செடி யென்பர்.

'மாலைத்துளிக்குரன்மேகம்,' 'வள்வாய்த் தூரியம்' 'தோன்றிதானரங் கின்மாட்டு, விளக்கினமாகக் காண்போர்விழி கருவிளையின்மென்பூ' என் பன பாடாந்தரம். (ருஉ)

[வண்டுகளின் ஒலியும், கூதாளச்செடிகள் மலர்தலும்.]

ருரு. பேடையுஞ்சிமிறும்பாயப்பெயர்வுழிப்பிறக்குமோசை
யூடுறத்தாக்குந்தோறுமொல்லொலிபிறப்பநல்லா
ராடியற்பாணிக்கொக்குமாரியவமிழ்தப்பாடற்
கோடியதாளங்கொட்டன்மலர்ந்தகூதாளமொக்க.

(இ - ள்.) சிமிறும்-ஆண்வண்டுகளும், பேடையும்-பெண்வண்டுகளும், பாய - (ஒன்றன்மேலொன்று) மோதுமாறு, பெயர்வுழி-வேகதேதாடுவரும் பொழுது, பிறக்கும் - (அவவருகையினால்) உண்டாகின்ற, ஓசை - ஓசையும்,—ஊடுஉற தாக்கும் தோறும்-(அவ்வண்டுகள்) இடையேபொருந்த (ஒன்

றையொன்று)மோதும்பொழுதெல்லாம், ஒல் ஒலி பிறப்ப - ஒல்லென்னும் ஓசை உண்டாவனவும்,—நல்லார் ஆடு இயல் பாணிக்கு ஒக்கும் - (அம்மலையில்) தேவமாதர்கள் (வந்து களித்து) ஆடுகின்ற முறைதவறாத கூத்திற்கு ஒத்திருக்கும் [அந்நாட்டியத்திற்கு ஏற்பச் சிலவகை வாத்தியங்கள் முழங்கினாற்போலு மென்றபடி]; ஆரியம் அமிழ்தம் பாடல் - (அப்பொழுது அவர்கள் பாடுகின்ற) அமிருதம்போ லினிய வடமொழிப்பாட்டுக்களுக்கு ஏற்ப, கோடிய தாளம் கொட்டல் ஒக்க - புதுமையான தாளங்களை முழங்கத்தொடங்கினாற் போல, கூதாளம் மலர்ந்த - கூதாளச்செடிகள் மலர்ந்தன ; (எ - று.)

வண்டுகள் ஆணும்பெண்ணும் ஒன்றன்மேலொன்று மோதும்பொருட்டு விசைபடவரும்பொழுது அவ்வருகையாலுண்டாகும் ஒலியும், அவை தம்மில் மோதும்போது உண்டாகும் ஒலியும், அம்மலையில் தேவமாதர்கள் வந்து ஆடும் நாட்டியத்திற்கு ஏற்பச் சிலவகைவாத்தியங்கள் முழங்கினாற் போலும் ; கூதாளச்செடிகள் மலர்ந்தது, அப்பொழுது அம்மாதர்கள்பாடும் இனிய வடமொழிப்பாட்டுக்களுக்கு ஏற்பத் தாளங்கொட்டத் தொடங்கினாற் போலும் என்பதாம் ; **தற்குறிப்பேற்றவணி.** கூதாளச்செடிகளின் மலர், வடிவில் தாளம்போலிருக்கு மென்க. கூதாளம் - ஓர்செடி ; கூதாளி - கூதளம். தாளி, நறுந்தாளி எனவும்படும் ; கார்காலத்து மலர்வது

பேடை - பறவைகளின் பெண்மைப்பெயர். ஞிமிறு - வண்டுகளில் ஒரு சாதி; பொன்வண்டு. 'மிஞிறு' என்பது, எழுத்துநிலைமாறி 'ஞிமிறு' என நிற்கும்; இலக்கணப்போலி. முன்னே 'பேடை' என்றதனால், ஞிமிறு-ஆண்வண்டைக் குறித்தது. பெயர்+உழி=பெயர்வுழி: வகரம் - உடம்படுமெய்யல்லாத மெய்; மெய்யீற்றுடம்படுமெய் யென்பாரு முளர். பெயர்வு உழி - எனப் பிரித்தும் அமைக்கலாம். தாக்குதல் - மோதுதல், நன்றாக ஸ்பரிசித்தல். ஒல்லெனல் - சப்தாநுகரணம், ஒலிக்குறிப்பு. பிறப்ப - பெயர். நல்லார் - அழகியவர். 'நல்லாள்' என்பது இலக்குமிக்குப் பெயராதலால், 'நல்லார்' எனபது - அதன் பன்மையாய் மகளிரைக்குறிக்கும்; இங்கே, சிறப்பாய், தேவமாதரென்று கொள்ளப்பட்டது. பாணி - இங்கே, கூத்து. ஆரியம் - வடசொல்; தேவபாஷை. அமிழ்தம் - வடசொல்விகாரம். கோடி - புதுமை; அதனடியாப்பிறந்த குறிப்புப்பெயரெச்சம், 'கோடிய' என்பது. இனி, 'கோடிய' என்பதை 'கோடு' என்னும் வினைப்பகுதியின்மேற் பிறந்த இறந்தகாலப் பெயரெச்ச மெனக்கொண்டு, வளைவுள்ள என்று பொருள்கூறலுமாம். பாடற்கு ஓடிய என்றுபிரித்தும் பொருள்கொள்ளக்கூடுமாயினும், கொட்டல், கூதாளம் என மேல்வருகின்ற சொற்களோடு மோனைத்தொடை நோக்குமிடத்து அது சிறவாதாம். 'கோடியர் தாளங்கொட்டல்' என்ற பாடம் - கூட்டுவர் தாளங்கொட்டுத லென்று பொருள்படும். மலர்ந்த - முற்று.

'கூதாளமொப்ப,' 'கூதாளமொத்த,' 'கோடியதாளங் கொட்டமலர்ந்த கூதாள மன்னே' என்பன பாடாந்தரம். (௬௬)

[காட்டாறுகளும், நிரம்பப்பூத்த கொன்றைமரங்களும்.]

௩௪. வழைதுறுகானயாறுமாநிலக்கிழத்திமக்கட்
குழைதுறுமலைமாக்கொங்கைசுரந்தபாலொழுக்கையொத்த
விழைவுறுவேட்கைநாளும்வேண்டினர்க்குதவவேண்டிக்
குழைதொறுங்கனகந்தூங்குங்கற்பகநிகர்த்தகொன்றை.

(இ - ள்.) வழை துறு கானம் யாறு-சுரபுன்னைமரங்கள் நிறைந்த காடுகளில் (மலைகளினின்று) பெருகிய நதிகள்,—மா நிலம் கிழத்தி - பெரிய பூமிதேவியாகிய தாய், மக்கட்கு-தன புதல்வர்களாகிய ஜனங்கள் ஜீவிப்பதற்காக, உழை துறு மலை மா கொங்கை சுரந்த - புடைபருத்து நெருங்கிய மலைகளாகிய (தனது) பெரியதனங்களினின்று (அன்பினால்) சுரந்து பெருகவிட்ட, பால் ஒழுக்கை - பாலின் தாரைகளை, ஒத்த - போன்றன; கொன்றை - (பொன்னிறமான மலர்களை நிரம்பப்பூத்த) கொன்றைமரங்கள்,—விழைவு உறு வேட்கை - (பொருள்களை மேனமேல்) விரும்புதல் பொருந்திய ஆசையினால், நாளும் வேண்டினர்க்கு - எந்நாளிலும் வேண்டுபவர்கட்கு, உதவ வேண்டி - கொடுப்பதை உத்தேசித்து, குழைதொறும் கனகம் தூங்கும் - தளிர்கள் தோறும் பொன்னைத் தொங்கவிட்டுக்கொண்ட, கற்பகம் - கல்பக விருக்ஷத்தை, நிகர்த்த - ஒத்தன; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. "மண்மாதர் விண்வா, யழைத்துப் புலம்பி முலைமலைமேனின்று மாறுகளாய்," 'காரார் வரைக் கொஙகை," "சோலைமலையோடிரண்டாய், மேதினியாள் கொஙகை நிகர் வேங்கடம்," "பொதியமுமிமயமும் புணர்முலையாக," "அலைநீ ராடை மலைமுலை யாக," "கொங்கையே பரங்குன்றமுங் கொடுங்குன்றும்" எனப் பலரும் மலைகளைப் பூமிதேவியின் கொங்கைக ளென்றல் காண்க. யாறு நிலக்கிழத்தி மக்கட்குக் கொங்கைசுரந்த பாலொழுக்கை யொத்த—"சரயுவென்பது தாய்முலையன்னதிவ், வுரவுநீர் நிலத் தோங்கு முயிர்க்கெலாம்" என்றார் பாலகாண்டத்து ஆற்றுப்படலத்திலும். யாற்றுப்பெருக்குப் பிரஜைகள் ஜீவிப்பதற்கு இன்றியமையாததாகுதலும், அந்நீரின் இனிமையும், இங்கு விளங்கும். எனக்கு இப்பொருள் வேண்டுமென்னும் அவாவும், அதுபற்றி அப்பொருளினிடத்துச் செல்லும் ஆசையு மாகிய வேறுபாடு தோன்ற, 'விழைவுறு வேட்கை' எனப்பட்டது; பொருள்களின்மேல் தோன்றும் பற்றுள்ள மொன்றும், அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல்நிகழும் ஆசை யொன்று மாக வேறுபாடு காண்க. வேண்டினர் - அபேக்ஷித்தவர்.

ஒழுகுவது ஒழுக்கு எனக் காரணக்குறி; கருத்தாப்பொருள் விகுதி புணர்ந்துகெட்டுப் பகுதி விகாரப்பட்ட பெயர். நாளும் - நாள்தோறும்; உம்மை - தொறுப்பொருளது. கல்பகம் - (தன்னிடத்தே வந்து வேண்டுவார் வேண்டுவனவற்றைக்) கல்பிப்பது; கல்பித்தல் - உண்டாக்கிக் கொடுத்தல். தூங்குதல் - தொங்குதலாதலை, "கொழுங்கனி கோட்டிடைத் தூங்குவ" எனச் சிந்தாமணியிலுங் காண்க. ஒத்த, நிகர்த்த - முற்று. விழைவுற வேட்

வகையை வேண்டினார்க்குச் சேர்க்காமல், கற்பகத்திற்கு உரியதாக்கி, (வேண்டு பவர்களிடத்துத் தான்கொண்ட) மிக்க விருப்பத்தால் அவர்கட்குக் காலதாமத மில்லாமற் கொடுத்தற் பொருட்டு முன்னமே சித்தமாய்ப்பொன்களைத் தன் வடிவில் இடந்தோறுங் காய்த்து நிரம்ப மிகுதியாகக் கொண்ட கற்பக மெனுமாம். 'வேட்கையோடும்' என்று பாடமோதுவாரு முளர். (நடு)

[காடுகள் செழித்தலும், மான்கள் களித்தலும்.]

நரு. பூவியல் புறவ மெங்கும் பொறிவரி வண்டு போர்ப்பத்
தீவிய களிய வாகிச் செருக்கிய காமச் செவ்வி
யோவிய மரங்க டோறு முரைத்தற வுரிஞ்சி யொண்கேழ்
நாவிய செவ்வி நாறக் கலையொடும் புலந்த நவ்வி.

(இ - ள்.) பூ இயல் புறவம் - மலர்கள் பொருந்திய காடுகள்,—எங்கும் - எவ்விடத்திலும், பொறி வரி வண்டு போர்ப்ப - உடற்புள்ளிகளையும் இசைப் பாட்டுக்களையுமுடைய வண்டுகள் மொய்த்து நிறைய, தீவிய களிய ஆகி - (காண்பவர்க்கு) இனிமையான களிப்பைத் தருவனவாய், செருக்கிய - செழித்தன; (அவ்விடத்தில் ஆண்மான்கள்), காமம் செவ்வி - (தாம்கொண்ட) காமத்தின் முதிர்ச்சியால், ஓவிய மரங்கள் தோறும் உரைத்து அற உரிஞ்சி - நேர்பட்ட மரங்களி லெல்லாம் உராய்ந்து நன்றாக உடல் தேய்ந்து வந்து, ஒள் கேழ் நாவிய செவ்வி நாற - (அம்மரங்களுட் சந்தனம் அகில் தேவதாரு முதலிய வாசனை மரங்களின் சம்பந்தத்தால்) பிரகாசமான நிறமுள்ள கஸ்தூரிக்கு உரிய நல்ல வாசனையை (உடம்பில்) மிகுதியாக வீச,—கலையொடும் - அந்த ஆண்மான்களோடு, நவ்வி - பெண்மான்கள், புலந்த - (அவற்றை வேற்றினமாகிய கஸ்தூரிமானோடு சேர்ந்து வந்தனவாகக் கொண்டு) பிணங்கின;

புலத்தலாவது - ஆணும் பெண்ணும் இன்ப நிலையிற் பரஸ்பரம் சிறு மனஸ்தாபங் கொள்ளுதல்; பிரணயகலகம், ஊட லெனவும்படும். கொழுப்பினால் மரங்களில் உராய்ந்து அவற்றின் மணத்தைப் பெற்று வந்த ஆண்மான்களைக் கஸ்தூரிமான்களோடு கூடி அவற்றின் மணம் பெற்று வந்தனவாக மாறுபடக்கருதிப் பெண்மான்கள் மனஸ்தாபப்பட்டன வென்றதில் மயக்கவணி காண்க; காதல் மிகுதியாற் பெண்மான்களைக் குறித்து ஓடி வரும்போது வழியில் நேர்பட்ட மரங்களில் உராய்ந்து உடல் தேய்ந்து அம் மரங்களின் நறுமணத்தைப் பெற்று வந்தனவாகவுங் கொள்ளலாம். முதல் வாக்கியம், தன்மைநவிற்சியணி. வண்டு போர்த்தல் - மணத்தையும் மதுவையும் நாடி வண்டுகள் சூழ்தல்.

புறவம் - முல்லை நிலம்: காடும், காடு சார்ந்த இடமும். 'போர்ப்ப' என்றதனால், வனத்தை மறைக்குமாறு மிகுதியாக அடர்ந்து மொய்க்கின்றன வென்றதாம். தீவிய - இனிமையை யுணர்த்தும் 'தீம்' என்பதன் மேற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்; இ - சாரியை. செருக்கிய - முற்று. ஓவிய என்ற இறந்தகாலப் பெயரெச்சத்தில், ஓவு - பகுதி; ஓவுதல் - இங்கே,

இசைதல். இனி, ஓவியம் என்று எடுத்து, சித்திரத்திலெழுதினாற் போன்ற [மிக அழகு பெற்ற] மரங்களி லென்றலுமாம். மான - போலி. கஸ்தூரி மானென்னும் ஒருவகைமானினது நாபியிலுள்ள கொழுப்பாதலால், கஸ்தூரிக்கு 'மருககாபீ' என்று பெயர்; அது நாபி யென்றும் வழங்கும். அவ்வடசொல, நாவியென்த் தமிழில விகாரப்பட்டது. நாவிய - நாவி யென்பதன மேற் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். கலை - மானின ஆணமைப் பெயர்; "இரலையுங கலையும் புல்வாய்க் குரிய" என்றார் தொல்காப்பியனார். கலைமான என ஒரு சாதிமானுமாம. 'கலை' என வந்ததனால், நவ்வி - பெண்மையை யுணாத்திறறு. புலந்த - முற்று. 'காமச செவவி, யோவலின மரங்கடோறு முரைததவாறுரிஞ்சி' என்று பாடமோதி, எல்லாரும விரும்பும் அழகு நீஙகாத மரங்கள்தோறும் (கஸ்தூரிமான்களை) உராய்ந்த இடத்திலே (கலைமானகள்) உராய்ந்து கஸ்தூரிமான்களின மணம் வீச வென்று உரைப்பாருமுளா.

'புறவமோங்கும,' 'மான்கடோறும்,' 'நாவியினமணங்கனுற' என்பன பாடபேதம். (௩௫)

வேறு.

[துவளை குவிதலும், முல்லை அரும்புதலும்.]

௩௬. தேரி னன்னெடுந திசைசெலச் செருக்கழிந தொடுங்குங்
கூர யிற்றருங் கண்ணெனக் குவிநதன குவளை
மார னனனவர் வரவுகண் டுவககின்ற மகளிா
மூரன மென்குறு முறுவலொத தரும்பின் முல்லை.

(இ - ள்.) தேரினன் நெடுந் திசை செல - (தம்மைப்பிரிந்து தமது தலைவன்) தேரிலேறியவனாய்(ப் பொருளீட்டுதல் முதலிய காரிய நிமித்தமாய்) நெடுந்தூரஞ் செல்ல, செருக்கு அழிநது ஒடுஙகும - (அபபிரிவுத்துனபத தாற) களிப பொழிநது ஒடுஙகிய, கூர் அயில தரும் கண எனக் - கூரிய வேலாயுதத்தைப் போனற (மகளிர) கணகள போல, குவளை குவிநதன - கருங்குவளை மலாகள இதழ் குவிந்தன; மாரன அனனவா வரவு கணடு - மனமதனைப் போனற [மிக அழகிய] தமது தலைவர் (அஙஙனம் பிரிந்து சென்றிருந்து குறித்தகாலந தவறாமல்) மீண்டு வருதலைப் பார்தது, உவக்கினற - மகிழ்கினற, மகளிர் - மாதாது, மூரல் மெல குறு முறுவல் - பறகள் சிறிது வெளிதோனறுமபடி உண்டாகினற புனசிரிப்பை, ஒத்து - போனறு, முல்லை அருமபின - முல்லைக் கொடிகள [அல்லது முல்லைச் செடிகள] அருமபெடுததன ; (எ - று.)

உவமையணி. கருநிறமும் மென்மையும் வடிவும பற்றி மகளிா கண்ணுக்குக் கருஙகுவளை மலரும, வெணணிறமும வடிவும் பறறிப் பல்லுககு முலலை யருமபும் உவமையாம். 'மூரல் மெனகுறுமுறுவ லொத்து' எனறதோனும், புன சிரிப்புக் கொள்ளுங்காலததுச் சிறிது வெளியே தோன்றும் பறகளைப் போனறு எனபது கருத்தாம். அஙஙனமறற கண் மலர்ச்சியின்றி இடுங்

குதல் இயல்பு; (அது பற்றித் துன்பம் 'இடுக்கண்' எனப் பெயர் பெறுதலுங் காண்க.) நெடுந்திசை செல - வேற்றுத்திசையில் நெடுந்தூரத்தி லுள்ள தேசாந்தரத்திற்குப் போக. இனி, 'தேரினன நெடுந்திசை செல' என்ப தற்கு - ஒற்றைத் தனியாழித் தேரவனுன சூரியன் வேறொரு பெருந்திசை யாகிய வடக்கே சென்று விட [அதாவது நன்றாய் அஸ்தமித்து விட] என்று உரைத்தலும் ஒன்று; பிரிந்த மகளிர் பிரிவாற்றாமைத் துயரால் பகலினும் இரவில் மிகுதியாக வருந்துதல் இயல்பு. 'செருக்கழிந் தொடுங்கு கூரயிற் றருங்கண' எனவே, பிரிந்த மகளிர் கண்ணென்பது போதரும். தேரினன்- சிறந்த தேரையுடையோன: எனவே. சூரியனும். பிரிந்த தலைவியர் சூரி யாஸ்தமனத்தைக் குறித்து மிக வருந்துதலை "ஒளியவன் விசும்பியங்குந், தேரும் போயிற்றுத் திசைகளும் மறைந்தன செய்வதொன் றறியேனே" என்ற பெரிய திருமொழியினாலும் உணர்க. 'தேரினை மன னெடுந்திசை செல' என்ற பாடத்திற்கு, மன - தலைவன், தேரிற் செல என்றே பொரு ளாம்.

தேரில் நல் நெடுந் திசை செல என்று எடுத்து, பின்வாக்கியத்தில் வரு கின்ற 'மாரனனைவர்' என்பதையே 'செல' என்றதற்கும் வினைமுதலாக்கி யுரைத்தலும் அமையும். மற்றும் தன்னைத் தேரின்மேல் தூக்கிவைத்துக் கொண்டவனான இராவணன் நெடுந்தூரஞ்சென்றனனாகத் துணிவொழிந்து ஒடுங்கிய (பிராட்டியினது) கூரிய வேலையொக்குங் கண்களைப்போல வென்ற லும் ஏற்கும்.

'கூரயிற்றருங் கண்ணெனக் குவிந்தன குவளை' என்றது, "அடுக்கிய தோற்றம் விடுதல் பண்பே" என்று தொல்காப்பியத்து உவமவியலில் விலக் கப்பட்ட அடுத்துவரலுவமை யாகாது; பொதுத்தன்மை வேறுபடுதலால். கூர்மையும், ஆடவர்நெஞ்சுறுதியைப் போக்குதலும் பற்றி, மகளிர் கண் ணுக்கு வேல் உவமைகூறப்படும். •

தரும்-உவமவுருபு. 'அயிற் கருங்கண' என்று பாடமோதுவாரு முளர். மாரன-வடசொல; (பிராணிகளை ஆசைநோயால) மாரணவேதனைப்படுத்துப வன். 'உவப்புறு மகளிர்' என்பது பாடம்.

'குவளைமலர்போலும் கண்' என்றும், 'முல்லையரும்புபோலும் பல்' என் றும் தொன்றுதொட்டு உலகத்திற் பிரசித்தமாக வழங்குகின்ற உபமான உப மேயங்களை மாற்றி, 'கண்கள்போன்றன குவளைகள' என்றும் 'பற்களபோன் றன முல்லையரும்புகள' என்றும் சொல்லுதல் எதிர்நிலையணி யெனப்படும் ப்ரதீபாலங்கார மெனபர் ஒருசாரார். விபரீதவுவமை யென உவமையணி யிலேயே அடக்குவர் தண்டியாசிரியர்; தொல்காப்பியனார் கருத்தும் அதுவே. "உயர்ந்ததன்மேற்றே யுள்ளுங்காலை" என்றபடி உபமேயத்தினும் உபமா னம் சிறந்திருத்தல்வேண்டு மென்பது அலங்காரநூலார்துணி பாதலால், அதன்படி, உபமேயத்தை உபமானமாகக்கூறுதல் உபமேயத்தைச் சிறப்பிக்கு மென உணர்க' 'உலகத்து இவை உவமை இவை உவமிக்கப்படும் பொருள் என்று நிலைபெற்றன உளவேயல்லை: உரைக்குங் கவியது குறிப்பினன்,

உவமையும் உவமிக்கப்படும்பொருளாம்; உவமிக்கப்படுபொருளே உவமையாகவும் அமையும்' என்பது, நக்கீரர்கொள்கை.

இதுமுதற் பதினாறு கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (௧௬)

[அருவிகள் பொன்னைக்கொழித்தலும், தாமரைக்கொடிகளின் எழுச்சியும்]

௧௭. களிக்குமஞ்ஞையைக்கண்ணுளரினமெனக்கண்ணுற்
றளிக்குமன்னரிற்பொன்மழைவழங்கினவருவி
வெளிக்கண்வந்தகார்விருந்தெனவிருந்துகண்டுள்ளங்
களிக்குமங்கையர்முகமெனப்பொலிந்தனகமலம்.

(இ - ள்.) களிக்கும் மஞ்ஞையை - (கார்காலத்திற்) களித்துக்கூத்தாடுகின்ற மயில்களை, கண்ணுளர் இனம் என - கூத்தாடிகளின் வர்க்கமென்று கருதி, கண்ணுற்று - (அவை ஆடுங் கூத்தைப்) பார்த்து, அளிக்கும் - அன்போடு (அவற்றிற்குப் பொன்னை நிரம்பப்) பரிசுகொடுத்தருளுகின்ற, மன்னரின் - அரசர்கள் போல, அருவி - (மலையினின்றுபெருகுகின்ற) நீர்ப்பெருக்குக்கள், பொன்மழை வழங்கின - (மலைச்சாரல்களினின்று அடித்துக்கொண்டுவந்த) பொன்னை மிகுதியாகப் பக்கங்களிற்சொரிந்தன; வெளிக்கண் வந்த கார் - ஆகாயவெளியிலே வந்த மேகங்களை, விருந்து என - விருந்தாளிகளென்று கருதி, இருந்து கண்டு - (தாம் வீட்டினுள்) இருந்தபடியே (அவரது வருகையை) நோக்கி, உள்ளம் களிக்கும் - மனம் மகிழ்கின்ற, மங்கையர் - மாதர்கள், முகம் என - முகம்மலர்தல் போல, கமலம் - தாமரைக்கொடிகள், பொலிந்தன - நீரினுள்ளே எழுச்சிபெற்றன; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. கண்ணுள் - கூத்து; அதனை யாடுபவர், கண்ணுளர். இனி, கண்ணுளர்-மூங்கிலின்மேல் ஏறி ஆடுங் கழைக்கூத்தாடிகளுமாம்; கண் - கணு: மூங்கிலுக்குச் சினையாகுபெயர்; 'வரை' என்பது போல; அதில் ஏறுபவர், கண்ணுளர் என்க. 'பொன்வழங்கினமலையருவி' என்றும் பாடம் உண்டு. நீர்நிலைகள் கோடைக்காலத்தில் வற்றியபோது, "அக்குளத்திற், கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே, ஒட்டி யுலர்வார்" என்றபடி. அவற்றிலிருந்த தாமரைக்கொடிகளும் வாடிஉலர்ந்துகிடக்கும்; பின்பு கார்காலத்தில் நீர்நிலைகள் நிரம்புமளவில் "நீரளவேயாகுமாம்நீராம்பல்" என்றபடி அக்கொடிகள் தளிர்த்துஎழுந்து செழிப்பனவாம். வானத்தில் மழைவந்தவளவிலே நீர்நிலைகளின் அகத்தே தாமரைக்கொடிகள் எழுச்சிபெறுதற்கு விருந்தினர் வாயிலில்வந்தவளவில் அவர்வருகையை மாதர்கள் வீட்டின் அகத்திலிருந்தபடியேநோக்கிமனமகிழ்ந்து அம்மகிழ்ச்சியால்முகமலர்தலை உவமைகூறினர். இவ்வாறன்று, 'மங்கையர்முகமெனப் பொலிந்தன கமலம்' என்பதற்கு - மகளிர்முகம்போலத் தாமரைகள் மலர்ந்தன வென்று பொருள்கொள்ளுதல், கார்காலத்தின் இயல்பிற்குச் சிறவாது இத்தன்மையை நோக்கி 'உள்ளங்குளிர்ந்து மங்கையர் முகமெனத் தளிர்த்தன கோடு' 'என்று பாடங்கொண்டாரு

மூளர். இனி, மழைபெய்தவளவிலே தாமரைக்கொடிகள் செழிப்பதுமாத்திரத்தைக்கொண்டு, தாமரைமலர்ந்தனவென்னுமளவாக வருணித்தலும் ஒருசார் கவிமரபாம்; மேல் ௬௦ - ஆஞ் செய்யுளின மூன்றாமடியைப் பார்க்க. படிதாண்டாப் பத்தினிகளாதலால் கிருகத்தின் அகத்திலிருந்தபடியே கண்டனர். "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத்தது காட்டும் முகம்" என்றபடி, உள்ளங்களித்ததுபற்றி முகம் மலர்ந்ததாம். "மோப்பக்குழையு மனிச்சம் முகந்திரிந்து, நோக்கக்குழையும் விருந்து" ஆதலால், விருந்தினர் வருந்தாதபடி அவரைக்கண்டவளவில் இன்முகங்கொள்ளுதல் விருந்தினரையுபசரிப்பவர்க்கு இன்றியமையாமை யுணர்க. கணவன்கருத்திற்கு ஏற்ப விருந்தினரையுபசரித்தல், இல்வாழ்க்கைத்துணைவியராகும் மனைவியரியல்பு; பெருந்தடங்கட்பிறைநுதலார்க்கெலாம், பொருந்துசெல்வமுங்கல்வியும் பூத்தலால், வருந்திவந்தவர்க்கீதலும் வைகலும், விருந்து மன்றி விளைவன யாவையே" என்றார் பாலகாண்டத்து நாட்டுப்படலத்திலும்: சிலப்பதிகாரத்திற் கண்ணகி "தொல்லோர்சிறப்பின், விருந்தெதிர்கோடலு மிழந்தவென்னை" என்று கழிவிரக்கத்தோடுகூறியதும் இதுபற்றியே: திருக்குறளில் வாழ்க்கைத்துணைநலத்தில் மனைத்தக்கமாண்புகளில் விருந்தயர்தலை அடக்கினர் பரிமேலழகரும்.

"வெளிக்கண் வந்தனர் விருந்தென' என்ற பாடம் - வாயிலில்வந்துள்ளார் விருந்தாளிகளென்று அறிந்து என்றுபொருள்படும். வெளிக்கண், கண் - ஏழனுருபு. விருந்து - புதுமை; இப்பண்புப்பெயர், ஆகுபெயராய், புதியவராய் வந்தவரைக்குறித்தது. உள்ளம் - அகத்துறுப்பு, அந்தக்கரணம். மங்கையர் - இங்கே பருவப்பெயராகாமல், பொதுப்பட, மகளிரென்றமாத்திரமாய்நின்றது; அப்பருவத்திற்குப்பிராயவெல்லை, பன்னிரண்டுமுதற் பதினமூன்றளவும். கமலம் - தற்சமவடசொல். 'கமலம்' எனபதற்கு - நீரொன்றுஉரைத்தல், சிறவாது. (௩௭)

[தேனீ.]

௩௮. சரதநாண்மலரியாவையுங்குடைந்தனதடவிச்
சூரதநூறெரிவிடரெனத்தேன்கொண்டுதொகுப்ப
பாரதநூன்முறைநாடகம்பயனுறப்பகுப்பா
னிரதமீட்டுறுங்கவிஞரைப்பொருவினதேனீ.

(இ - ள்.) சூதம் நூல்-சிற்றின்பவிளையாட்டுநூல்களை, தெரி-ஆராய்ந்து அறிந்த, விடர் என - காமுகர்கள் (பலமகளிரிடத்துஞ் சென்று சேர்ந்து இன்பங்கொள்ளுமாறு) போல, சரதம் நாள் மலர் யாவையும் குடைந்தன தடவி - ரஸத்தோடு [தேனோடு] கூடினவான அன்றுமலர்ந்த மலர்களையெல்லாம் துளைத்து முழுவதும் ஸ்பரிசித்து, தேன் கொண்டு - (அவற்றினின்று) தேனைக்கொண்டு, தொருப்ப - சேர்ப்பனவாகிய, தேன் ஈ-தேனீக்கள்,-பாரத நூல் முறை-பரதசாஸ்திரத்திற்கூறிய முறைமைப்படி, நாடகம் - நாடகத்தை, பயன் உற பகுப்பான் - (காண்பவர்க்கு இனிமையாகிய) பயன் மிகுமாறு

பாகுபாடுகளமையச் செய்தற்பொருட்டு, இரதம் ஈட்டுறும் - ரஸங்களைச் சேர்க்கின்ற, கவிஞரை - கவிகளை, பொருவின - ஒத்தன ; (எ - று)

உவமையணி. விடரெனக் குடைந்தன தடவி யென்று இயையும். விடர்-தீயொழுக்கமுடைய காமுகர். பருவமடைந்த பல மாதரிடஞ் சென்று கூடிக்குலாவித்தழுவி இன்பங்கொள்ளுதல், அவரியல்பு. தேனுண்டுகூடி மலர்ந்த புதுமலர்களிலெல்லாங் குடைந்து தடவித்தேன்கொள்ளுந் தேனீக்கு அவர் உவமையாயினர். ("மாதவியீன்ற மணிமேகலைவல்லி, போதவிழ் செவ்வி பொருந்துதல்விரும்பிய, உதயகுமரனு மூலகாள்வண்டின், சிதையா வுள்ளஞ் செவ்வியினருந்த", "ஒருதனியோங்கிய திருமணிக்காஞ்சி......... காமர்செவ்விக் கடிமலரவிழ்ந்த, துதயகுமரனெனு மொருவண் டுணீஇய, விரைவொடுவந்தேன்" என்ற மணிமேகலையும், "பெண்டிர்நலம்வெளவித் தண்சாரற் றாதுண்ணும் வண்டின்" என்ற கலித்தொகையும் இங்குக் காணத் தக்கன.) சுரதநூல் - காமசாஸ்திரம். பாவம் ரஸம் தாளம் என்னும் மூன்றின் அமைதியையு முடைமையால், நாட்டியசாஸ்திரத்திற்குப் பரதசாஸ்திர மென்றுபெயராம்;பரதாசாரியரென்பவரால் அபிவிருத்திசெய்யப்பட்டதென் பதுபற்றி அங்ஙனம்பெயர்வந்த தென்றலும் உண்டு. 'நாடகம் - கதைதழுவி வருங் கூத்து' என்றனர் அடியார்க்குநல்லார். காவியவகைபலவற்றுள், ஸ்ராவ்யப்ரபந்தமாகிய [கேட்பதற்குரிய நூல்களாகிய] மற்றையவற்றினும், த்ருஸ்யப்ரபந்தமாகிய [காட்சிநூலாகிய] நாடகம் சிறந்ததாம். அந்த நாடகம், வடமொழியிற் பத்துவகையாகப் பகுக்கப்படும். அவற்றின் - இலக்கணங்களும், அவற்றிற்குரிய ஸந்திகளும், அவற்றின் பகுப்புக்களும், அவற்றின் இயல்புகளும் அளவிறந்தன. அவையெல்லாம், இங்கு - விரிப்பிற் பெருகும். நாடகம்-ஐந்து அல்லது ஏழு அங்கங்களை யுடையதாய்வரும். ரஸ மெனினும், சுவை யெனினும் ஒக்கும். உவகை, பெருமிதம் அழுகை வியப்பு, நகை, அச்சம், இளிவரல், வெகுளி, நடுநிலை என்னும் ஒன்பதும் நாடகரசமாம்; இவை - முறையே வடமொழியில் ஸ்ருங்காரம், வீரம், கருணை அத்புதம், ஹாஸ்யம், பயாநகம், பீபத்ஸம், ரௌத்ரம் சாந்தி எனப்படும். இந்த நவரஸங்களும் அமைய இயற்றப்படும் நாடகம் உத்தமஜாதியாம்; இரண்டொருசுவைகள் குறையக் கூறலும் உண்டு. காண்பவர்க்கு இடந்தோறும் சுவைமிகவும் தோன்றுமாறு ரஸங்களைச் சிலாக்கியமாக அமைத்தாலன்றி நாடகம் சிறவாதாதலால், அவற்றை நாடித் தொகுத்தல், நாடகமியற்றுங் கவிகட்கு இன்றியமையாக்குணமாம். பலவகை ரஸங்களை நாடிக்கொணர்ந்து ஒருங்குதொகுக்கும் நாடகப்புலவர் போல, புஷ்பரசமாகிய தேனைப் பலமலர்களினின்றுங் கொணர்ந்து கூட்டில்தொகுத்தன தேனீக்க ளென்பதாம்; (ரஸம் - சுவையும், ஸாரமும்.) இனி. 'சுரதநூல்தெரி விடர் என' என்பதற்கு - காமநூலை யுணர்ந்த விடர் (மகளிரவயவங்களிலுள்ள காமமனைத்தையும் ஒருவழியிலாக்குமாறு) போல வென்று உரைப்பாரு முளர்.

மலரியாவையும் - தன்ஒழிமெய்ம்முன் யகரம்வர இகரம் தோன்றிற்று. கவிஞர் - செய்யுள்செய்பவர். 'தேன்கொடு' என்பதும் பாடம். தேனீ - தேனைச்சேர்க்கும் ஈ, இரண்டனுருபும்பயனுந் தொக்கதொகை. (௩௪)

[மான்கள் களித்தல்.]

௫௬. நோக்கினானமைநோக்கழிகண்டநுண்மருங்குற்
றாக்கணங்கருஞ்சீதைக்குத்தாக்கருந்துன்ப
மாக்கினானமதுருவினென்றரும்பெறலுவகை
வாக்கினானுரையாமெனக்களித்தனமான்கள்.

(இ - ள்.) 'நோக்கினால் - (தனது) பார்வையழகினால், நமை - நம்மை, நோக்கு அழி கண்ட - பார்வையழகு கெடுமாறு செய்த [வெற்றிகொண்ட], நுண் மருங்குல் தாக்கு அணங்கு அருஞ் சீதைக்கு - நுண்ணிய இடையையுடைய மோகினி போன்ற அருமையான சீதைக்கு, தாக்கு அருந்துன்பம் - தாக்கும்படியான (பொறுத்தற்கு) அரிய துன்பத்தை, நமது உருவின் ஆக்கினான் - (மாரீசனென்னும் ராக்ஷஸன்) நம்முடைய [மான] வடிவத்தைக் கொண்டு செய்தான், என்று - என்பதனால் (நமக்கு உண்டாகின்ற), அரும் பெறல் உவகை - பெறுதற்கு அரிய மகிழ்ச்சியை. வாக்கினால் உரையாம் - வாயாற் சொல்லக்கடவோமல்லோம்,' என - என்று (இராமனிடத்து அச்சத்தாற் பேசாமற் களித்தாற் போல), மான்கள் களித்தன - (அந்த ரிசியமூக கிரியில்) மான்கள் குரல்காட்டாமற் களிப்புற்றன; (எ - று)

இராவணன் சூர்ப்பணகை வார்த்தையினாற் சீதையினிடங் காதல்கொண்டு அப்பெண்ணரசியைக் கவர்ந்துவரக்கருதி அதற்கு மாரீசனைத் துணையாக வேண்ட, அவன் மாயையாற் பொன் மானுருவங்கொண்டு, ஸ்ரீராம லக்ஷ்மணர் ஜாநகியுடன் வசிக்கின்ற ஆச்சிரமத்தின் அருகிற் சென்று விளையாட, அப்பொன்மானைப் பார்த்துச் சீதை அதனிடம் ஆசைகொண்டு அதனைப் பிடித்துத் தருமாறு பலமுறை வேண்ட, இராமன் அதனைத் தொடர்ந்து சென்றபோது, அது அவன்கையிலகப்படாமல் ஓட்டங்காட்டி நெடுந்தூரம் இழுக்கடிக்கவே, அதுகண்டு இராமன் மாயமானென்று துணிந்து அதன்மேல் அம்புதொடுக்க, மாரீசன் இராம பாணம்பட்டு விழுந்து இறக்கும்போது தனது குரலைவிட்டு இராமன் குரலைக்கொண்டு, அவன் தனக்கு அபாயம் நேர்ந்தவிடத்து மனைவியையும் தம்பியையும் கூப்பிடுமாறுபோல, 'ஹா ஸீதே! ஹா லக்ஷ்மணா!!' என்று அரற்றி இறக்க, அக்கூக்குரல் கேட்டவுடனே சீதை இராமனுக்கு அபாயம் நேர்ந்ததென்றே கருதிவருந்தி இலக்குமணனை இராமனிடத்திற்கு வற்புறுத்தியனுப்ப, இவ்வாறு ஒருவருமின்றிச் சீதை தனித்திருந்த சமயம் பார்த்து இராவணன் அவளை எடுத்துச்சென்று இலங்கையிற் சிறைவைத்தனனென்ற செய்தி, ஆரணிய காண்டத்தில் விரித்து உரைக்கப்பட்டது.

கண்ணழகிற் சீதைக்கு ஒப்பாகாமல் தோற்றுப்போய்த் தங்களை அவள் வென்றதற்காக அவளிடங் கறுக்கொண்டு அவ்விஷயத்தில் எதிரொன்றுஞ் செய்ய வல்லமையில்லாதிருந்த மான்கள், மாரீசன் தங்கள் வடிவத்தைக் கொண்டு அவட்குப் பெருந்தீங்கு செய்ததுபற்றி மகிழ்ச்சிகொண்டு, அம் மகிழ்ச்சியை வாய்விட்டுக்கூறினால் இராமன் அந்த மாயமானைப்போலவே

நம்மையும் அம்பெய்து கொன்றுவிடுவானென்று அஞ்சிப் பேசாமற் களித்து நின்றாற் போன்றது என்று, அக்கார்காலத்தில் அம்மலையிலே மான்கள் களிப்படைந்தும் ஆரவாரஞ்செய்யாமல் நின்றமையை வருணித்தார். தற்குறிப்பேற்றவணி. மதங்கர் முதலிய முனிவர்களுடைய தவத்திற்கு இடையூறாகுமோ வென்றெண்ணி மான்கள் ஆரவாரஞ் செய்யாமல் ஊமைகள்போல மௌனமாக விருத்தல்பற்றி அம்மலைக்கு 'ருச்யமூகம்' என்று பெயராயிற்றென்பது, இங்கே கருதத்தக்கது; ருஸ்யம் - மான், மூகம் - ஊமை. விசுவாமித்திரமுனிவனது யாகத்தில் இராமபிரானுக்குத் தோற்ற மாரீசன் நிஜரூபத்தோடு ஒன்றும் எதிர்செய்யமாட்டாமல் மான் வடிவங்கொண்டு பழிதீர்த்துக் கொண்டதுபோல சீதையின் கண்ணழகுக்குத் தோற்ற மான்கள் தாம் எதிரொன்றுஞ் செய்யமாட்டாது மாரீசனது மான்வடிவத்தாற் பழிதீர்த்துக் கொண்டனவாகக் கருதிக் களித்தன வென்க 'வாக்கினுனுரையா மெண' என்றதில், (அம்மகிழ்ச்சி சொல்லுக்கு அடங்குவதன்றாதலால்) அதனைச் சொல்லவல்லோமல்லோமென்று என்ற பொருளுந்தோன்றும்; வரம்புகடந்த மகிழ்ச்சி யுண்டானபொழுது ஒன்றுஞ் சொல்லமாட்டாமற் சும்மா இருத்தல், இயல்பு: இராவணனை இராமன் கொன்றிட்ட செய்தியை அநுமான்வந்து சொன்னவளவிற் சீதை இனையதின்ன திரம்புவதென்பதோர் நினைவிலாது நெடிதிருந்தாளென்ப; யுத்தகாண்டத்து மீட்சிப் படலத்தில் "மேக்குநீங்கிய வெள்ளவுவகையா, லேக்கமுற் றொன்றியம்புவதியாதென, நோக்கிநோக்கியரிதென நொந்துளேன், பாக்கியம் பெரும்பித்தும் பயக்குமோ" என்பதுங் காண்க. மான்கள் கார்காலத்தியல்பாற் களித்தும் அவ்விடத்தினியல்பாற் குரல் காட்டாமலும் இருந்ததற்கு, இவ்வகையான ஒருகாரணத்தைக் கவி தாமாகக் கற்பித்து உரைத்தார்; "இயல்பின்விளைதிறனன்றி யயலொன்று, தான்குறித் தேற்றுதல் தற்குறிப்பேற்றம்" ஆதலால், மாயையால் எந்த வடிவம் வேண்டினாலும் கொள்ளவல்லவனான மாரீசன் வேறு எவ்வடிவமுங் கொள்ளாமல் மான்வடிவுகொண்டது, இவ்வருணனைக்கு மூலம்.

நோக்கு - நோக்குதல், அழி - அழித்தல்: இரண்டும், முதனிலைத்தொழிற்பெயர். 'கண்ட' என்பது, செய்தவென்னும் பொருளதாய்நின்றது; 'திருநகரங்கண்ட படலம்', 'மநுநீதிகண்ட புராணம்' என்ற இடங்களிற் போல. 'நமைநோக்கழிகண்ட' என்றது, நம்மைக் கண்ணைக்கெடுத்த என்றாற்போல நின்றது. 'நுண்மருங்குல்' என்றது - அவளது மெல்லியல்போடு, துன்பம் பொறுக்கும் ஆற்றலின்மையையுங் காட்டும். தாக்கருந்துன்பம் - இராமவிரகம். தாக்கு அணங்கு - ஆடவரைத் தாக்கி வருத்தும் மோகினியென்னும் பெண் தெய்வம்; இது - மிக்க அழகிற் சீதைக்கு உவமம். பிறரைத்தாக்கும் பெண்ணை அரிய சீதைக்குத் தான் தாக்கும் அரியதுன்பத்தைச் செய்தானென ஒரு சமத்காரந்தோன்ற நின்றது, இரண்டாமடியின் சொற்போக்கு. தாக்கணங்கு அரு என்ற இரண்டும் சீதைக்கும், தாக்கு அரு என்ற இரண்டும் துன்பத்திற்கும் அடைமொழி. இனி, தாக்கு அணங்கு-எல்லாரிடத்திலுஞ்சென்று சேருந் திருமகளாகிய என்பாரும், கொல்லியம்பாவை போன்றவளான என்பாரும், 'தாங்கரு' என்பது 'தாக்கரு' என விகாரப்பட்டதென்று

கொண்டு பொறுத்தற்கரிய வென்று உரைப்பாரும், 'தாங்கரு' என்று பாட மோதுவாரு முளர்.

ஸீதா என்ற வடசொல், சீதை யென விகாரப்பட்டது; அச்சொல்லுக்கு, கலப்பையுழுபடைச்சா லென்று முதலிற் பொருள்: ஜநகமஹாராஜா யாகஞ் செய்தற்குச் சாலையமைத்தற்பொருட்டு நிலத்தை யுழுதபொழுது அப்படைச் சாலினின்று தோன்றியவ ளாதலால், பிராட்டிக்குச் சீதையென்ற பெயரா யிற்று; இடவாகுபெயராகிய காரணக்குறி. இத்திருநாமம் - இவள் மற்றை யோர்போல ஒருதாயின் வயிற்றினின்று பிறந்தவளல்ல ளெனப் பிராட்டி யினது அயோநிஜத்வமாகிய திருவவதாரச்சிறப்புத் தோன்ற நின்றது; இவள் ஜநகமஹாராஜன் வளர்த்தமக ளெனபது உணர்க. அரும்பெறல் - பெறலரும் என மொழிமாறுக.

'நோக்கழிசெய்த', 'ஆக்கினுமுருவாலெனு மரும்பெறலுவகை, வாக்கி னுலுரையாவென', 'ஆக்கின நமதுகருவின' என்ற பாடங்களும் ஏற்கும். (௩௯)

[அன்னப்பறவைகள் நதிகளிற் குடைந்துவிளையாடுதல்.]

௪0. நீடுநெஞ்சுறு நேயத்தானெடி துறப்பிரிந்து
வாடுகின்றன மருளுறுகாதலின் மயங்கிக்
கூடுநன்னதித் தடந்தொறுங் குடைந்தனபடிவுற்
றாடுகின்றனகொழுநரைப்பொருவின வன்னம்.

(இ - ள்.) நெடிது உற பிரிந்து - நெடுநாளாக விட்டுப்பிரிந்து, நெஞ்சு உறு நீடு நேயத்தால் - மனத்திற் பொருந்திய மிக்க அன்பினால், வாடுகின்றன - வாட்டமடைந்தனவாயிருந்து, மருள் உறு காதலின் மயங்கி - மோகத்தைச் செய்யும்படியான மிக்க ஆசையுடன் வந்துசேர்ந்து, கூடு நல் நதி தடம் தொறும் குடைந்தன படிவு உற்று ஆடுகின்றன - (தாம்) வந்துசேரப் பெற்ற சிறந்த நதிகளின் இடந்தோறும் துளைந்து நீராடி விளையாடுகின்றனவான, அன்னம் - அன்னப்பறவைகள்,—கொழுநரை பொருவின - கணவரைப் போன்றன; (எ - று.)

நதிகளில் நீர்வற்றியகாலத்தில் அவற்றைவிட்டுப்பிரிந்துபோய் நெடு நாளாய் அந்நதிகளினிடங்களைப்பற்றிய ஞாபகத்துடன்வாடியிருந்த அன்னப் பறவைகள் கார்காலம்வந்தவளவிலே மிக்க ஆசையுடன் மீண்டுவந்து 'காய்ந்த மாடு கம்பங்கொல்லையில் விழுந்தது' என்றாற்போல அந்நதிகளிற் பலபடி துளைந்து பலமுறை நீராடி விளையாடுகின்றன; அவற்றிற்கு, தலைவியரை நெடுநாள் பிரிந்து அன்பினால் வருந்தியிருந்த தலைவர் கார்காலம் வந்தவள விலே மிக்க காதலுடன் மீண்டுவந்து அவர்களிடம் கூடிக்குலாவிக் களித்தலை உவமை கூறினார். உவமையணி. அன்னத்திற்குக் கூறிய அடைமொழிகளின் விஷயம், கொழுநர்க்கும் ஏற்றது. 'கூடும் நல் நதித் தடம்தோறும்' என்ப தற்கு - சிறந்த நதியின்பெருக்கு வந்துசேரப்பெற்ற தடாகங்களி லெல்லாம் என்று உரைப்பாரு முளர்

கேயம் - ஸ்கேஹம், அன்னம் - ஹம்ஸம்: இவ்விருசொற்களையும் வடமொழிச்சிதைவெனலாம்.

'கேயத்தாற்பிரிந்துழி நினைந்து,' 'தடந்தொறும்படிந்தன குழைவுற்று' என்பன பாடபேதம். (சO)

[கொக்குகள் வரிசைவரிசையாய் வானத்திற் பறத்தல்]

சக. காரெனும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தனவளக்கருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தினருகுறநிரைத்துக்
கூரும்வெண்ணிறத்திறத்தனபறப்பனகுரண்டம்.

(இ - ள்.) அளக்க அரும் - அளவிடுதற்கு அருமையான, அளக்கர் கடலினின்று, நீர் முகந்த - நீரைக் கவர்ந்துசெல்கின்ற, மா மேகத்தின் - கரிய மேகத்தின், அருகு உற - சமீபத்திலே பொருந்த, நிரைத்து- வரிசைப்பட்டு, கூரும வெள் நிறம் திறத்தன பறப்பன - மிகுதியான வெண்மைநிறத்தின மேன்மையையுடையவையாய்ப் பறக்கின்றவையான, குரண்டம் - கொக்குகள்,—கார் எனும் பெயர் கரியவன் மார்பினில் - கிருஷ்ணனென்று (நிறத்தினாற்)பெயர்பெற்ற கருநிறமுடையவனான திருமாலின மார்பி லணிந்த, கதிர் முத்து ஆரம் என்னவும் - பிரகாசமுள்ள முகதாஹாரம் போலவும், பொலிந்தன-விளங்கின; (எ - று.)—உமமை - அடுததசெய்யுளில்வரும் வர்ணனையை நோக்கி எதிரதுதழுவியஎச்சமாய் நின்றது.

நிறமும் தோற்றமும் பற்றி வந்த உவமையணி. கார்-கருமை பென்னும் பண்புப்பெயரின விகாரம்; கருநிறமுடையவனைக் குறிக்கும்போது, பண்பாகுபெயர். இனி, கார் எனும் பெயா கரியவன - காளமேகமெனனுமபெயரையுடைய திருமால் என்றுங் கொள்ளலாம். "தாளதாமரைத்தடமணிவயல் திருமோகூர், நாளுமேவிநன்கமர்ந்து நின்றசுரரைத்தகர்க்குந், தோளுநான்குடைச் சுரிகுழற்கமலக்கட் கனிவாய்க், காளமேகத்தை யன்றி மற்றொன்றிலங் கதியே" என்ற ஆழ்வாரருளிச்செயலைக் காண்க; (பாண்டியநாட்டிலுள்ள திருமோகூரென்னுந் திருப்பதியில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானது திருநாமம் - காளமேகபபெருமாள்; அத்தலதது நாச்சியார் திருநாமம் - மேகவல்லி.) இனி, காளமேகமாகிய திருமாலென்றலு மொன்று; இப்பொருளில், 'எனும்பெயர்' என்றது - உருவகவுருபினதன்மையது. எனும் - என்னும்: தொகுத்தல். முத்து, ஆரம் - வடசொல்திரிபுகள். முத்தாரம் - முத்துமாலை. அளக்க அரும் என்பது, அளக்கரும் எனத் தொகுத்தல்விகாரமடைந்தது; அருமை யென்ற பண்புப்பெயர், ஈற்றுஐகாரம்மாத்திரம்கெட்டது. 'அளக்கர்' என்ற பெயர்·அளக்கஅரு என்பதன் விகாரமாய், அளத்தற்கு அரிய தென்று காரணப்பொருளபடும்; அந்தஉற்பத்தியருத்தந் தோன்ற 'அளக்கரும்அளக்கா' என விசேடித்துக்கூறினார். கடலினின்று எழும் நீராவிகள் திரண்டு காளமேகமாகத்தொகுதலை, கடலினின்று நீரை மொண்டுசென்ற மேக மென்றல், மரபு. முகத்தல் மொள்ளுதல். குரண்டம்

வடசொல். 'கூரும் வெண்ணிறத்திரையெனப் பறப்பன' என்ற பாடம், 'ஆரமென்னவும் பொலிந்தன' எனறவிடத்துஉம்மையை இறந்ததுதழுவிய எச்சமாகக்கொள்ளுதற்கு ஏற்கும்; திரைஎன - அலைகள் போல வென்க.

'காரொனுந்நிறக் கரியவன்,' 'கவின் முத்தாரம்,' 'நீர்நுகர்ந்த மாமேகத் தின்மருங்குற நிறைத்த' என்பன பாடபேதம். (சக)

[நாரைகள் வரிசைவரிசையாய் வானத்திற் பறத்தல்.]

சஉ. மருவிநீங்கல்செல்லாநெடுமாலையவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினாயகனிவனெனத்தேமறைதெரிக்கு
மொருவன்மார்பினினுத்தரியத்தையுமொத்த.

(இ - ள்.) மருவி - (பல) ஒன்றுசேர்ந்து, நீங்கல் செல்லா - (நடுவில்) நீங்கிப்போகாமல், நெடு மாலைய - நீண்ட வரிசைப் பட்டனவாய், வானில் - ஆகாயத்திலே, பருவம மேகத்தின் அருகு உற - கார்காலத்துக் காளமேகத் தின் சமீபத்திலே பொருந்த, பறப்ப - பறக்கின்றவையான, குருகு இனம் - நாரைகளின் கூட்டங்கள்,—திருவின் நாயகன் இவன் என-''இலக்குமியின் கணவன் இவன' என்று, தே மறை தெரிக்கும்-தெய்வத்தன்மையுள்ள வேத ங்கள் சிறப்பாகத் தெரிவிக்கப்பெற்ற, ஒருவன் - ஒப்பற்ற [ஏகமூர்த்தியான] திருமாலின், மார்பினின் - திருமார்பிற் சாத்திய, உத்தரியத்தையும்-மேலா டையையும், ஒத்த - போன்றன; (எ - று.)

இதுவும்,நிறமும் தோற்றமும் பற்றி வந்த உவமையணி. நாரை, வெண் ணிறமுடையது. அதன் காலின் செந்நிறம், உத்தரீயத்தின் கரைபோலு மென்க. கிருகஸ்தாச்சிரமத்தவர் மார்பில் உத்தரீயந்தரித்தல், மரபு. திரு மால் தோளில் உத்தரீயஞ்சாத்தியுள்ளதை 'மீயோங்கு செம்பொன் முடியா யிர மின்னிமைப்ப, ஓயா வருவித்திர ளுத்தரியத்தை யொப்பத், தீயோ ருளராகியதா லவாதிமைதீர்ப்பான், மாயோன் மகரக்கடலின்றெழு மாண்ப தாகி'' என்று சுந்தரகாண்டத்திலுங் கூறுவர். மருவி - ஒன்றோடொன்று நெருங்கி. திருவின் நாயகன் - ஸ்ரீயபதி. திருவின் நாயகன் இவன்-எல்லா ஐசுவரியங்களுக்குந் தலைவ னிவனே யென்றவாறும். வேதத்திற்குத் தெய்வத் தன்மை - என்றும் ஒருபடிப்பட நித்தியமாயிருத்தலும், எம்பெருமானால் வெளியிடப்படுதலும், பொருள்களின் இயல்பை உள்ளபடிகூறுதலும், அனைவ ராலும் சிறந்தபிரமாணமாக அங்கீகரிக்கப்படுதலும் முதலியன. மின்ன லோடுகூடியகாளமேகத்தின் அருகில் வரிசையாக நெருங்கிப்பறக்கும் வெண் குருகுகள், திருமகளைத் திருமார்பிற்கொண்டவனான திருமாலின் மார்பிற் சாத்திய வெண்பட்டுத்தரீயம் போன்றன வென்க.

செல்லா-செல்லாமல்: ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; 'மாலைய' என்னுங் குறிப்புவினையாலணையும்பெயரோடு சேரும். செல்லாத என ஈறு

கெட்ட எதிர்மறைப்பெயரெச்சமாகக் கொண்டால், 'மாலை' என்னும் பெயர்க்கு அடைமொழியாம். ஒருவன் - அத்விதீயன். மார்பினின் — இன் - சாரியை, இன் - ஏழனுருபு. 'மார்பினில்' என்றும் பாடமுண்டு. உத்தரீயம் - மேலே தரிக்கும் ஆடை: வடசொல்; (அரையிலுடுக்கும் ஆடை, அந்தரீய மெனப்படும்.) உம்மை, கீழ்ச்செய்யுளின் வர்ணனையை நோக்கி இறந்தது தழுவிய எச்சமாம். 'உத்தரியத்தினையொத்த' எனவும் பாடங் காணப்படுகின்றது. (௪௨)

[பசும் புல்.]

௪௩. உறவெதுப்புறுங்கொடுந்தொழில்வேனிலானொழியத
திறநினைப்பருங்காரெனுஞ்செவ்வியோன்சேர
நிறமனத்துறுகுளிர்ப்பினினெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தனபோன்றனபசும்புல்.

(இ - ள்.) பசும் புல் - (தரையில் எங்கும் முளைத்துச் செழிக்கின்ற) பசுநிறமான புற்கள்,— உற வெதுப்பு உறும் கொடுந் தொழில் வேனிலான் ஒழிய - மிகவும் தாபத்தைச் செய்கின்ற கொடுந் தொழிலையுடைய வெயிற்காலமாகிய அரசன் நீங்க, திறம் நினைப்பு அருங் கார் எனும் செவ்வியோன் சேர - மேன்மையை நினைத்தற்கும் அரியதாகப் பெற்ற [மிக்க மேன்மையுள்ள] கார்காலமாகிய நற்குண நற்செயல்களையுடையவன் (அரசனாய்) வந்து சேர, (அதுபற்றி), நெடு நிலம் மடந்தை - பெரிய பூமிதேவி, நிறம் மனத்து உறு குளிர்ப்பினின் - மாட்சி பெற்ற (தன்) மனத்திற் கொண்ட குளிர்ச்சியால் [மகிழ்ச்சியால்], புறம் பொடித்தன - உடம்பு முழுவதுஞ் சிலிர்த்தனவான, மயிர்த்தலம் - மயிர்களை, போன்றன - ஒத்தன; (எ - று.)

தனக்கும் தன்பிரஜைகளுக்கும் மிக்கதாபத்தைச் செய்து கொடியவனாயிருந்த வெயிற்காலமாகிய அரசன் நீங்க, அதற்கு மாறாகத் தனக்கும் தன் பிரஜைகளுக்குங் குளிர்ச்சியைச் செய்பவனும் மனத்திற்கும் எட்டாத வளவு மேன்மையையுடையவனுமான கார்காலமென்கிற உத்தமபுருஷன் அரசனாய் வந்து சேரப்பெற்றமை பற்றி, பூமிதேவி அகங்குளிர்ந்து உடம்பு முழுவதும் மயிர்சிலிர்த்தாற் போன்றன, அக்கார்காலத்திலே தரையிலெங்கும் முளைத்துச் செழிக்கின்ற பசும்புற்கள் என்பதாம். தற்குறிப்பேற்றவணி. மயிர் சிலிர்த்தல், மகிழ்ச்சியாலும் குளிர்ச்சியாலும் ஆவது. காலம், ருது என்பன வடமொழியில் ஆண்பாற் சொற்களாதலால், அவற்றை ஆண்மகனாகக் குறித்தார்: காலம் உலகத்தையும் உயிர்களையும் தனவசப்படுத்தி நடத்தலால், அதனை அரசனாகக் கூறுதல் தகும்; சிலப்பதிகாரத்தில் "காரரசாளன்," "பனியரசி யாண்டுளன", "இன்னிளவேனில் யாண்டுளன்" என்றவை காண்க. செவ்வியோன் - நல்லோன்.

வெதுப்பு - வெதுப்புதல், வெதும்பச் செய்தல்: பிறவினை முதனிலைத் தொழிற்பெயர். வெதுப்பு உறும் - உஷ்ணம் பொருந்திய வென்றுமாம், வெதுப்பு - வெதும்பு எனும் தன்வினை முதனிலை திரிந்த தொழிற்பெயராம். திறம் - உலகமும் அதற்கு உறுதியாகிய அறம் பொருளின்பங்களும்

கடத்தற்கு ஏதுவாதல்; திருக்குறளில் 'வான் சிறப்பு' என்னும் அதிகாரத்திற் பரக்கக் காண்க. 'திறநினைப்புறும்,' 'மனத்துறு களிப்பினில்'* என்பன பாடபேதம். (௩௩)

[மயில்கள் தோகைவிரித்து ஆடுதலும், கூவுதலும்.]

௩௪. தேனவாமலர்த்திசைமுகன்முதலினர்தெளிந்தோரா
ஞானநாயகனவையுறநோக்கினர்நல்கக்
கானம்யாவையும்பரப்பியகண்ணெனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பனபோன்றனமஞ்ஞை.

(இ - ள்.) மஞ்ஞை - மயில்கள்,—தேன் அவாம் மலர் திசைமுகன் முதலினர் - தேன் சொரிகின்ற (திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றிய நான்கு முகமுடையவனான பிரமன் முதலிய, தெளிந்தோர் - தெளிந்த அறிவுடையவர்கள், ஞானம் நாயகன் நவை உற நோக்கினர் - தத்துவஞானத்திற்குத் தலைவனான இராமபிரானது (சீதையைப் பிரிந்ததனாலாகிய) துன்பத்தை நன்றாகப் பார்த்தவர்களாய், நல்க-(சீதையை நாடி) உதவும் பொருட்டு, கானம் யாவையும் பரப்பிய - காடுகளிலெல்லாம் பரப்பிய, கண் என-கண்கள் போல, (தமது தோகைக் கண்களைப் பரப்பி), சனகன் மானை நாடி நின்று அழைப்பன போன்றன - ஜாநகிப்பிராட்டியைத் தேடி நின்று அழைப்பவற்றை யொத்தன; (எ - று.)

கார்காலத்தில் மயில்கள் களித்துத் தமது தோகைக்கண்களைப் பரப்பிக் கொண்டு கூத்தாடுதலும், கூவுதலும் இயல்பு. அப்படி அக்காடுகளெங்குங் காணப்படுகின்ற மயிற்றோகைக் கண்களை, எண் கண்ணனான பிரமன் முதலிய தலைமைத் தேவர்கள் இராமபிரான் சீதையைப் பிரிந்து வருந்துதலைப் பார்த்துத் தாம் சீதையை நாடிக் கண்டு உதவக் கருதிக் காடுகளி லெங்குங் கண்களைப் பரப்பினாற் போலு மென்றும்; அம்மயில்கள் தோகைக் கண்களைப் பரப்பிக் கொண்டு கூத்தாடிக் கூவுதலை, அவை தமது மிகப் பல கண்களைப் பரப்பிக் கொண்டு எழும்பி எழும்பிச் சீதை சென்ற விடத்தை நாடுவனவும் அவளை உரத்த குரல் கொண்டு அழைப்பனவும் போன்றன வென்றும் உதப்ரேக்ஷித்தார்; தற்குறிப்பேற்றவணி. இயல்பிலேயே எட்டுக் கண்களையுடையவ னென்று காட்டுதற்கு, 'திசைமுகன்' என்றார். ஆயிரங் கண்ணனை திருமாலாகிய இராமபிரான் தேடிக்காணமாட்டாத சீதையைத் தான் தேடிக் காணுதற்குத் தனது எட்டுக்கண்கள் போதா வென்று படைத்தற் கடவுளான பிரமன் தனது திவ்ய சக்தியால் மிகப்பல கண்களைக் கொண்டு அவற்றைக் காடுகளெங்கும் பரப்பி விழித்து நோக்கலாயின னென்க; மற்றைத் தெளிந்தோர்க்கும் இவ்வாறே கொள்க. பிரமன் முதலிய தேவர்கள் மற்றையோரினுஞ் சிறந்த அறிவையுடையரா யிருப்பதனோடு, எம்பெருமானுக்கு உதவி செய்யும் நாட்ட முடைய ரானமை பற்றி, 'தெளிந்தோர்' எனப்பட்டனர்; அன்றியும், தேயமிடை யிட்டவற்றையும் காலமிடையிட்டவற்றையும் தமது ஞானக் கண் கொண்டு காணவல்லவ ரென்பது தோன்ற

இவ்வாறு கூறினுருமாம். ஞான நாயகன் - தத்துவ ஞானத்தை அடியார்கட்கு அளிப்பவன், தத்துவ ஞானத்திற்குப் புலனுகிறைறவன், இனி, தத்துவ ஞானத்தை யுடைய (தங்கள்) தலைவ னென்றும் கொள்ளலாம். 'திசைமுகன் முதலினர் தெளிந்தோர் ஞானநாயகன் நவை உற நோக்கினர் நல்க' என்பதற்கு - பிரமன் முதலிய தேர்ந்த அறிவுடையோர் இராமபிரான் துன்பமடைய (அதனை)ப் பார்த்தவர்களாய் (அவனுக்கு) உதவி செய்தற்காக என்றும். பிரமன் முதலியோர் ஞான நாயகனுடைய துன்பத்தைத் தெளிந்தவர்களாய் [நன்ருக அறிந்தவர்களாய்] (சீதை யிருக்கின்ற இடத்தை நன்ருகப் பார்த்து இராமபிரானுக்கு) உதவி செய்ய என்றும் பதவுரை கூறலாம்

இனி, 'நோக்கின' என்ற பாடத்திற்கு, பிரமன்முதலிய தெளிந்தோர்க்கும் தத்துவஞானத்திற்கும் தலைவனை இராமபிரானுடைய துன்பத்தை (மயில்கள் தாம்) பார்த்தவையாய் (அவனுக்குச் சீதையைநாடிக்கொடுத்து) உதவுமாறு என்று பொருள் கொண்டு அதற்கேற்பக் கருத்து அமைக்க வேண்டும். தெளிந்தோராது ஞானத்திற்கு நாயக னெனலுமாம். "தேடாநின்ற வென்னுயிரைத் தெரியக்கண்டாய் சிந்தையுவந், தாடாநின்ருயாயிரங்கணுடையாய்க் கொளிக்குமாறுண்டோ" என்று (பம்பைப்படலத்தில்) இராமபிரான் மயில்களை நோக்கி இரங்கியுள்ளானுதலால், அவை இங்ஙனம் பிராட்டியை நாடிக்கண்டு உதவுமாறு முயலத்தகும். இனி, நோக்கினவாய் நல்கும் பொருட்டுக் காடுகளெல்லாம் தம் தம் கண்களைப் பரப்பின போல வென்று கற்பனையமைத்தலும் ஒன்று.

அவாவுதல் - இறங்குதல். அவாம் - அவாவும். இனி, தேன் அவாம் - வண்டுகள் விரும்பத்தக்க எனினுமாம். திசைமுகன் - நான்குதிசைகளையும் நோக்கிய (நான்கு) முகமுடையவன். கானம் - கானமென்ற வடசொல்லின் விகாரம். பரப்பிய, பரப்பு - பகுதி; இதனை 'பர' என்றதன பிறவினையென்ருல், பு - பிறவினை விகுதியும்; 'பரம்பு' என்றதன் பிறவினையென்ருல், மெலிவலியாதல் - பிறவினைக்குறியுமாம். சனகன் மான - ஜநகமகாராஜன் வளர்த்த பெண், மான் - உவமையாகுபெயர்; பார்வையழகில் உவமம்: வனவாசத்திற் களிப்பவளென்பதும் போதரும். சனகன - விதேகதேசத்து மிதிலாபுரியின் அரசன்.

'தேனின மாமலர்', 'ஞானநாயக னவையறு நோக்கென நல்க,' 'நவையற நல்கின நோக்கி,' 'நவையற நோக்கெலாநல்க,' 'கண்ணனசனகன்' எனபன பாடபேதம். (௪௪)

[செந்தாமரைமலர்களும் கோடிகளும்.]

௪௫. செஞ்செவேலவர்செறிசிலைக்குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புதுநிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கெனநுடங்கினவல்லி.

(இ - ள்.) செம் செவ் வேலவர் - (பகைவரிரத்தந்தோய்தலால்) மிகவுஞ் செந்நிறமான வேலாயுதத்தை யுடையவர்களும், செறி சிலை குரிசிலர் - கட்டமைந்த வில்லை யேந்திய வீரர்களுமான தலைவர்களுடைய, இருண்ட குஞ்சி கருநிறமான தலைமயிர்முடி, சேய் ஒளி கதுவுற - சிவந்த ஒளியைக் கொள்ளுமாறு, புது நிறம் கொடுக்கும் - (அதற்குப்) புதிய நிறத்தைக்கொடுக்கின்ற, பஞ்சி போர்த்த மெல் அடி என - செம்பஞ்சுக்குழம்பு மிகுதியாக ஊட்டப்பெற்ற மென்மையான (மாதர்களுடைய) பாதங்கள் போல, பதுமம் பொலிந்தன - செந்தாமரைமலர்கள் விளங்கின; வஞ்சி போலியர் மருங்கு என - நீர்வஞ்சிக்கொடிபோல மெல்லிய வடிவுடையரான மாதரது நுண்ணிய இடைபோல, வல்லி நுடங்கின - பூங்கொடிகள் மெல்லியனவாய் அசைந்தன.

உபமான உபமேயங்களை மாற்றிக்கூறியதனால், எதிர்நிலையுவமையணி. செந்தாமரை மலர்கட்குச் செம்பஞ்சுக்குழம்பை மிகுதியாக ஊட்டிய மகளிரடிகள் நிறத்திலும் மென்மையிலும் அழகிலும், கொடிகட்கு அவரது இடை மெல்லிதாய் நுடங்கும் வடிவிலும் உவமம். 'வஞ்சிபோலியர்' என்பதை 'அடி' என்றதனோடுங் கூட்டுக. தலைவனும் தலைவியும் கூடிக்குலாவும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்குமாறு தலைவி தலைவன்மேல் ஏதேனுமொரு காரணத்தைக் கற்பித்துக்கொண்டு கோபங்காட்டி அவ்வூடலை முதிரவிட்டனளாக, இன்சொல்முதலிய வேறு உபாயங்களினால் தணிக்கக்கூடிய நிலையைக் கடந்து காலில்விழுதலாகிய ஒருபாயத்தினாலன்றித் தணிக்கக்கூடாத நிலையையடைந்த அப்பெருப்புலவிக்காலத்தில், அதனைத் தணித்தற்பொருட்டு, யாவரையும் வசப்படுத்தும இயல்பினதான வணக்கத்தைத் தலைவன் மேற்கொண்டு ("சில்லரிக்கிண்கிணிமென தெய்வமலாச்சீறடியைத், தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்" என்றபடி) அவன் பாதங்களில் தனது முடி படுமாறு வீழ்ந்துவணங்க, அவள் அதற்கும் இணங்காது ("புலந்தவள் கொடியென நடுங்கிப் பொன்னரிச், சிலம்பொடு மேகலை மிழற்றச் சென்னிமேல், லலங்கல்வா யடிமலரணிந்து" என்றபடி) கோபந்தீர அவனைக் காலால் முடிமேல் உதைக்கும்போது, அப்பாதத்தில் மிகுதியாக ஊட்டப்பட்டிருந்த செம்பஞ்சுக்குழம்பு பட்டவிடத்தி லெல்லாம் தலைவனது தலைமயிர்முடி இயற்கைக் கருநிறம் நீங்கிச் செயற்கைச் செந்நிறங்கொண்டு விளங்குமென்பது, முதல் மூன்றடிகளில் உணரத்தக்கது; "ஊடலிற் கனன்று, மறித்து நோக்கியர் மலரடி மஞ்சளப்பஞ்சி, குறித்தகோலங்கள் பொலிந்தன வரக்கர் தங்குஞ்சி" என மேற் சுந்தரகாண்டத்தில் வருவதுங் காண்க. கார்காலத்தில் தாமரை மலர்வர்ணனை வருதற்குக் காரணம், ௩௭ - ஆஞ் செய்யுளின் உரையிற் காட்டப்பட்டது.

'செஞ்செவ்வேலவர்' என்பது, ஓசையின்பம் நோக்கித் தொகுத்தல் விகாரப்பட்டது. செறி சிலை - வலிமைமிக்க வில் லெனினுமாம் குரிசில் என்ற ஆண்பாற் சிறப்புப்பெயரின் மேல், அர் - பலர்பால்விகுதி. குஞ்சி - ஆடவர் தலைமயிர்; (குடுமி, சிகை, பங்கி என்பனவும் இது. ஐம்பால், ஓதி கூந்தல், கோதை என்பன - மகளிர் தலைமயிரைக் குறிக்கும்) கதுவுதல் -

பற்றுதல். பஞ்சிபோர்த்தல் - அரக்குரஸத்தைப் பஞ்சிலேயெடுத்துத் தடவு தல். பத்மம், வல்லீ - வடசொற்கள். நுடங்குதல் - துவளுதல். (௪௮)

[குயில்கள் குரலடங்குதல்.]

௪௯. நீயிரன்னவர்குதலைய ராதலி னேடிப்
போயதையலைத்தருதி ரென்றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தன போந்திடைதேடிக்
கூயவாய்க்குரல்குறைந்த போற்குறைந்தன குயில்கள்.

(இ - ள்.) குயில்கள்—, —நீயிர் - நீங்கள், அன்னவர் குதலையர் ஆதலின் - 'அந்த ஜாநகியாருடைய மழலைச்சொற் போன்ற இனிமையான குரலையுடையவர்களாதலால், போய தையலை நேடி தருதிர் - (என்னை விட்டுப் பிரிந்து) போன அந்த அழகிற் சிறந்தவளைத் தேடி (எனக்கு)க் கொணர்ந்து கொடுக்கக் கடவீர்கள்,' என்று இராகவன் புகல - என்று இராம பிரான் (குயில்களைநோக்கிக்) கூற, (அவை அதற்கு இணங்கி), தேயம் எங்கணும் திரிந்தன போந்து - எல்லாவிடங்களிலுஞ் சென்று திரிந்து வந்து, இடை தேடி - அந்த அந்த இடங்களில் (பிராட்டியாரைத்) தேடி, கூய ஆய் - உரக்கக்கூவிக்கூவி அழைத்தனவாய், குரல் குறைந்த போல் - குர லொடுங்கினபோல, குறைந்தன - (கார்காலத்திற்) குரலொடுங்கின [கூவாம லிருந்தன].

தற்குறிப்பேற்றவணி. நீயிர் அன்னவர்குதலைய ராதலின் - நீங்கள் குரலினினிமையால் அந்த ஜாநகியாரோடு ஒத்த தன்ப ராதலா லென்றபடி. இனி, நீங்கள் மாதர்குதலைபோன்ற குதலையையுடையீ ராதலாற் பிரிந்து சென்ற (சீதையாகிய) மாதைத் தேடித்தரவல்லீ ரென்றலுமாம். முந்தின உரையில், அன்னவர் - உயர்வுப்பன்மை; இவ்வுரையில், பொருட்பன்மை. தருதிர் - முந்தினபொருளில், ஏவற்பன்மை; இப்பொருளில், முன்னிலைப் பன்மை. நீங்கள் குரல்காட்டியழைத்தால் அவள் தன் இனமென்று கருதி உங்களிடம் வந்து சேர்வ ளென்றவாறும்; குயில்மொழியாளான சீதையை வருவித்தற்குக் குயிலைத் தீபகப்பறவையாகக் கொண்டன ரென்க. 'நீயிர் அன்னவர் 'குதலையர்' என்ற வாக்கியத்தில், முன்னிலையிற் படர்க்கை வந்த இடவழுவமைதி காண்க; 'குதலையிர்' என்பது-வழாநிலை. நீயிர் - முன்னிலைப் பன்மைப் பெயர்: இது, முதல்வேற்றுமையில் மாத்திரமே வரும். செய்யு ளாதலின், 'அன்னவர்' எனச் சுட்டுப் பெயர் முதலில் வந்தது; "செய்யுட்கு எற்புழி" என்றார் நன்னூலாரும்: [பொது ௪௩.] பிறரிடம் சொல்லும்போது அவர்க்கு நன்குமதிப்பு நிகழுமாறு தன் மனைவியைப் பன்மையாக்குறிக்கும் இயல்புபற்றி, 'அன்னவர்' என்றார். 'அன்னவள்' என்றும் பாடமுண்டு. குதலை - நிரம்பாமென்சொல். மகளிர்க்குக் குதலை எப்பருவத்திலுங் கூறப் படும். ராகவன் என்ற திருநாமத்திற்கு - ரகுமகாராஜனது வம்சத்தில் அவதரித்தவ னென்று பொருள்; வடமொழித் தத்திதாந்தநாமம். ரகுவென் பவன் - தசரதனது மூதாதை; அவன் மிக்க வீரமும் கொடையுமுடையவ

ருதலால், இராமபிரானை அவன் சம்பந்தமான பெயராற் குறித்தார். கூடிய பலவின்பாற்பெயர். 'போயத்தையலே' என்பது பாதிபேதம். (௪௬)

[பசுக்கள் புல்மேய்தல், காளான், பிடவமலர்.]

௪௭. பொழிந்தமாநிலம்புற்றரக்குமட்டியபுனிற்று
வெழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையினைப்பொருவுவபிடவம.

(இ - ள்.) பொழிந்த மழைபெய்யப்பெற்ற, மா நிலம் - சிறந்த பூமி, புல் தர - பசும்புற்களை யுண்டாக்கிக்கொடுக்க, குமட்டிய - (அவற்றை) நிரம்ப மேய்ந்துதெவிட்டிய, புனிறு ஆ - கன்றையீனறுநெடுநாளாகாத பசுக்கள், எழுந்த ஆம்பிகள் - ஆங்காங்குப்பூத்தெழுந்த காளான்களை, இடறின - கால்களால் இடறித்தள்ளின; (அவவாறுசிதறிய காளான்கள்), செறி தயிர் ஏய்த்த - இடறிச்சிதறப்பட்ட கட்டித்தயிரை யொத்தன; பிடவம் - பிடவமென்னுஞ் செடியினமலர்கள்,— மொழிந்த தேன உடை - பேசுகின்ற தேன்போலினிய சொற்களை யுடைய, முகிழ் முலை ஆய்ச்சியர் - (கோங்கின்) அரும்புபோன்ற தனங்களையுடைய இடைச்சாதிப்பெண்கள், முழவில் பிழிந்த - குடங்களிற் கறந்த, பால் - பாலினின்று, வழி - மேலேவழிகின்ற, நுரையினை-நுரையை, பொருவுவ - ஒப்பன; (எ - று.)

நிறமும் வடிவும பற்றிய உவமையணி. முல்லைநிலத்துப்பொருள்கட்கு அந்நிலத்துப்பொருள்களே உவமைகூறப்பட்டன; இடத்திற்கேற்ற உவமை. குமட்டுதல் - தேக்கெறியுமாறு வயிறுநிறையத் தின்னுதல். புனிறு - ஈன்றணிமை, சிலநாளைக்குமுன்பிரஸவித்த நிலை; இது கூறியது, ஈன்றணிமையை யுடைய பசுக்களாதலால் ஆம்பிகளைக் கடந்துகாலெடுத்துவைக்கும் ஆற்றலின்றி அவற்றிற்காலிடறின வென்று காட்டுதற்கு. செறிதல் - இறுகுதல். தேன் -உவமையாகுபெயர்; நாவிற்கு இனிய தேன் போலச் செவிக்கு இனிய சொற்க ளென்க. 'மொழிந்த' என்ற அடைமொழி, 'தேன' என்பதன் ஆகுபெயர்ப்பொருளை விளக்கிற்று; 'மொழிந்த தேன' எனவே, சொல்லென்றதாயிற்று. முகிழ் தாமரையரும்புமாம். ஆய்ச்சியர் - ஆய ரென்பதன் பெண்பால்; பசுக்களை யுடைமைபற்றி, இப்பெயர்: ஆ - பசு. முழவு - முழா என்பதன் விகாரம். அடிக்கப்படும்வாத்தியங்களின பொதுப்பெயராகிய இது, சிறப்பாய் கடவாத்திய மெனப்படுங் குடமுழாவை யுணர்த்த. இங்கு, அது - குடமென்றமாத்திரமாய் நின்றது. மடிநிறையப் பால்கொண்டு சுரக்கும பசுக்களைக் கறத்தலாவது முலையைப்பிழிதலேயாதலால், 'பிழிந்த' என்றார். பிடவம் - ஓர்செடி; காரகாலத்தே பூப்பது: குட்டிடபிடவமெனனும் கொடியென்றலு முண்டு. பிடா, பிடாவு, பிடவு எனறும் வழங்கும். 'பிடா' எனபது குறியதனகீழ்ஆக்குறுகி 'அம்' சாரியை பெற்று 'பிடவம்' எனநின்றதெனக. 'பொழிந்தவா னிலம்புற்றர' என்ற பாடத்திற்கு - பொழிந்தமழையால் நிலத்திற் புல்லுண்டாக வென்று பொருள்.

'முழாவில்,' 'பொருவின' என்பன பாதிபேதம். (௪௭)

[வேங்கை, புன்னை, முல்லை, செங்கழுநீர் மலர்தல்]

௪௮. வேங்கைநாறினகொடிச்சியர்வடிக்குழல்விரைவண்
டேங்கநாகமுநாறினநுளைச்சியரைம்பா
லீங்குநாண்முல்லைநாறினவாய்ச்சியரோதி
ஞாங்கருற்பலமுழத்தியர்பித்திகைநாற.

(இ - ள்.) வேங்கை - (குறிஞ்சிநிலத்துக் கருப்பொருளாகிய) வேங்கை மரங்கள், (மலர்ந்து), கொடிச்சியர் வடி குழல் நாறின - (அந்நிலத்து மகளிராகிய), குறத்தியருடைய சிறந்த கூந்தல் போல நறுமணம் வீசின; நாகமும் - (நெய்தல்நிலத்துக் கருப்பொருளாகிய) புன்னைமரங்களும், (மலர்ந்து), விரை வண்டு ஏங்க - விரைந்து செல்லு மியல்பினவான வண்டுகள் (மொய்த்து) ஆரவாரிக்கும்படி, நுளைச்சியர் ஐம்பால் நாறின - (அந்நிலத்துமகளிராகிய) செம்படவச்சிகளுடைய கூந்தல் போல நறுமணம் வீசின; ஞாங்கர் உற்பலம் - பக்கத்திலுள்ள (மருதநிலத்துக் கருப்பொருளாகிய) செங்கழுநீர்க்கொடிகள், (மலர்ந்து), உழத்தியர் பித்திகை நாற - (அந்நிலத்துமகளிராகிய) கடைசியருடைய கூந்தல்போல நறுமணம்வீச,—ஆங்கு நாள் முல்லை - அவற்றினருகிலேயுள்ள அன்றுமலர்ந்த (முல்லைநிலத்துக் கருப்பொருளாகிய)முல்லைக்கொடிகள், ஆய்ச்சியர் ஓதி நாறின - (அந்நிலத்து மகளிராகிய) இடைச்சிகளுடைய கூந்தல்போல நறுமணம்வீசின; (எ - று.)

எதிர்நிலையுவமையணி. அந்தந்தநிலத்துமாதரது கூந்தலின் இயற்கை நறுமணச்சிறப்பை விளக்குமுகத்தால் அக்காலமலர்களை வருணித்தார். உத்தமஜாதிஸ்திரீகளின் கூந்தல் இயற்கை நறுமணம்வீசு மென்பது, கொள்கை. வேங்கை முதலியவற்றை அவற்றின மலர்களாகவே கொள்ளலுமாம். இனி, கொடிச்சியர்வடிக்குழல் வேங்கைநாறின என்று மாற்றி, குறிஞ்சிநிலத்து மகளிரது சிறந்த கூந்தல்கள் (அக்காலத்தில்மலர்ந்த) வேங்கைமலர்களைச் சூடி அவற்றின்மணம்வீசின வென்று பொருள்கொள்ளுதலுமாம்; வேங்கை மலர்கள் கொடிச்சியர்வடிக்குழலில் (சூட்டப்பட்டு) மணம்வீசின வென்பாரும், நாறின தோன்றின வென்பாரு முளர்: இவை, மற்றைவாக்கியங்களுக்கும் ஒக்கும். வடித்தல்-தேர்ந்தெடுத்தல்; வடிக்குழல் - சிறந்ததென்றுதேர்ந்தெடுக்கத்தக்க கூந்தல்: நான்காம்வேற்றுமை யுருபும் பயனுந் தொக்க தொகை; வடி - முதனிலைத்தொழிற்பெயர். இனி, வடிக் குழல் - (சூடிய மலர்களின் தேன்) பெருகுதலையுடைய கூந்த லெனினுமாம்; இப்பொருளில், வடிதல் - பெருகுதல்; வடி - முதனிலைத்தொழிற்பெயரே; வடி-தேனுமாம். விரைவண்டு - நறுமணத்தை நாடுகிற வண்டு என்றும், தேனைவிரும்புகிற வண்டு என்றும் கொள்ளலாம்; விரை - வாசனை, தேன். முந்தின பொருளில், விரை வண்டு - வினைத்தொகை; இப்பொருளில், இரண்டனுருபும் பயனுந்தொக்க தொகை. வேங்கை வண்டுணுமலர்மரமாதலால், 'விரை வண்டு ஏங்க' என்றதை அதற்குச்சேரவொட்டாதபடி பின்னேவைத்தார்; அதனை, முல்லை உற்பலங்களுக்குங் கூட்டுக இனி, அதனை முதல்வாக்கியத்தோடுங் கூட்டி, அங்கு, விரை வண்டு ஏங்க - விரைந்து செல்லுமியல்பின

வான வண்டுகள் (வேங்கை மலர்களினருகில் வந்துமொய்த்து நறுமணத்தை யும் தேனையும் கொள்ளமாட்டாமல் தூரத்தில் நின்றபடியே) ஏக்கமடைய வென்று பொருள்கொள்ளுதலுமாம், முன்பு, ஏங்குதல் - ஒலித்தல்; இப் பொழுது இரங்குதல். நுளைச்சியர் - நுளையர் என்பதன் பெண்பால். ஐம் பால் - ஐந்து பகுப்பை யுடைய தென்றுவது, ஐந்து தன்மையை யுடைய தென்றுவது சொள்க; பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஐந்து பகுப்பாவன - மயிரை உச்சியில் முடித்தலாகிய முடியும், பக்கத்தில் முடித்தலாகிய கொண்டையும், பின்னே செருகுதலாகிய சுரு ளும், சுருட்டிமுடித்தலாகிய குழலும், பின்னிவிடுதலாகிய பனிச்சையுமாம். ஐந்து தன்மையாவன - மணம், மது, மென்மை, நெய்ப்பு, கருமை. நாகம், உத்பலம் - வடசொற்கள். உற்பலம் - இங்கே, செங்குவளை. உழத்தியர் - உழ வர் என்பதன் பெண்பால். பித்திகையெனினும், பித்தை யெனினும் ஒக்கும். 'பித்தையி னுற' என்றும் பாடமுண்டு. 'பின்னகநாற' என்ற பாடத்திற்கு, பின்னகம் - மயிர்முடியாம். பாலைக்குத் தனியே நிலமில்லை யாதலாலும், அதன் சிறப்பின்மைபற்றியும், அதனை இங்குக் கூறுராயினர். 'எயிற்றிய ரைம்பால்' என்ற பாடத்திற்கு - பாலைநிலத்துமகளிரது கூந்தலென்று பொருள்; அப்பொழுது, நாகம் - சுரபுன்னைமரம் என்று கொண்டு, அவ் விடத்திற்குச் சேய்மையதாதலால் நெய்தல்நிலம் இங்குக் கூறப்பட்டில தென்க: அப்பாடம், மோனைத்தொடைக்கு ஏற்கும்.

'வெடிக்குழல்,' 'விழைவண்டு.' 'விளர்வண்டு'. 'ஒங்குநாண்முல்லை', 'ஞாங்கருற்பலம பாதநியர்பித்திகைநாற' என்பன பிரதிபேதம். (௬அ)

[இராமபிரான் கார்காலத்தைக் கண்டு மிகவும் வருந்துதல்]

௬௯. தேரைக்கொண்டபேரல்குலாடிருமுகங்காணு
ரைக்கண்டுயிராற்றுவானல்லுணர்வழிந்தான
மாரற்கெண்ணில்பல்லாயிரமலர்க்கணைவகுத்த
காரைக்கண்டனன்வெந்துயர்க்கொருகரைகாணுன்.

(இ - ள்.) தேரை கொண்ட பேர் அல்குலாள் திரு முகம் காணுன் - சீதாபிராட்டியினுடைய அழகிய முகத்தைக் காணுதவனான இராமபிரான்,— மாரற்கு எண் இல் பல் ஆயிரம் மலர் கணை வகுத்த காரை கண்டனன் - மர ணந்தமான வருத்தத்தைச் செய்பவனான மன்மதனுக்குக் கணக்கில்லாத பல ஆயிரக்கணக்கான புஷ்பபாணங்களைச் செய்துகொடுத்த அந்தக்கார்காலத் தைப் பார்த்து, வெம் துயர்க்கு ஒருகரை காணுன - கொடிய தனது துன்ப மாகிய கடலுக்கு ஒருமுடிவெல்லையைக் காணுதவனாய், நல் உணர்வு அழிந் தான் நல்லஅறிவு அழிந்தவனானான் [ப்ரஜ்ஞைதப்பினன என்றபடி]; ஆரை கண்டு உயிர் ஆற்றுவான - (தனமனைவியைக்காணுத அவன்) வேறு யாரைக் கண்டுதான் துயர்தணிந்து உயிரை வைத்துக்கொண்டிருக்கமாட்டுவான்?(எ-று.)

திரு - கண்டாரால் விரும்பப்படுந் தன்மை. ஆர் யார்: மரூஉ. மிகவும் காமோத்தீபகமாய்க் காதலை மேன்மேல் வளர்த்து மனமதனுக்கு உதவி செய்

கின்ற வென்பது, மூன்றுமடியின் கருத்து. முல்லை முதலிய பலவகை மலர்களை யுண்டாக்கியும், அம்மலர்கட்கிடமான பலவகைச்செடி கொடி மரங்களைச் செழிக்கச்செய்தும, புஷ்பபாணனான மன்மதனுக்கு உதவி செய்ததென்றவாறுமாம். நான்காமடியில், 'காரைக் கண்டனன், கரைகாணான்' என்றவிடத்து ஒருவகைச் சொற்சமத்காரங் காண்க. கண்டனன், காணான் என மாறுபட்ட சொற்கள் வந்தது, தொடைமுரண். 'துயர்க்கு ஒருகரை காணான்' என்றது, உருவகவிசேடம். இராமன் உணர்வு அழிந்தான் - திணைவழுவமைதி; [நன் - பொது - உ௬.] (௪௯)

[அதனைப்பற்றிய கவிக்கூற்று.]

௫௦. அளவில்காரெனும்பெரும்பருவம்வந்தணைதாற்
றளர்வரென்பதுதவம்புரிவோருக்குந்தகுமாற்
கிளவிதேனினுமமிழ்தினுங்கிளைத்தவெள்வளைசீதாள்
வளவியுண்டவன்வருந்துமென்றாலதுவருத்தோ.

(இ - ள்.) அளவு இல் - (சிறப்பிறகு) ஓர் எல்லையில்லாததான [அளவிறந்த சிறப்பையுடைய], கார் எனும் அ பெரும் பருவம் - கார்காலமென்கிற அந்தச் சிறந்த காலம, வந்து அணைந்தால் - வந்து சேர்ந்தால், தளர்வர் - நெஞ்சுறுதியழிவார்கள், என்பது - எனகிற விஷயம், தவம் புரிவோருக்கும் தகும் - (முற்றததுறந்து) தவஞ்செய்பவர்களான முனிவர்கட்கும பொருந்தும: ஆல் - ஆதலால்,—கிளவி - (தனது) சொற்கள், தேனினும அமிழ்தினும் கிளைதத - தேனைக்காட்டிலும் அமிருததண்தக்காட்டிலும் செழித்த [இனிமைமிகப்பெற்ற], வெள் வளை - வெண்ணிறமான வளையல்களையணிந்தவளாகிய சீதையினது, தோள் - தோள்களை, வளவி - தழுவி, உண்டவன் - இன்பமனுபவித்துக் கொண்டிருநதவனான ஸ்ரீராமன, வருந்தும - (கார்காலம் வந்தபொழுது) வருந்தினானென, என்றால்—, அது வருத்தோ - அது ஒரு வருததமென்று விசேடமாகக் கொள்ளததக்கதோ? [அன்று என்றபடி].

அது இயல்பே என்றதாம். 'மனையாளோடு கூடிவாழும் வாழ்க்கையைப் பற்றறவிட்டுச் சென்று தவஞ்செய்கின்றவர்களான துறவிகளுக்கும் கார்காலம் மனவுறுதியைப் போக்கவல்லது' என்ற ஒருதன்மையைக்கொண்டு, 'இயற்கையழகிலும் செயற்கையழகிலும் மிக்கவளான சீதையோடு கூடிக் குலாவிப் போகம் நுகர்ந்துகொண்டிருந்தவன் அவளைப் பிரிந்த நிலையிற் கார்காலத்தைக்கண்டு தளர்ந்து மிகவருந்துதல் இயல்பே' என்ற பொருளை எளிதிற் சாதித்ததனால், தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணியின்பாற்படும்.

பெரும்பருவம் - பெரும்பொழுது என்றவாறுமாம்; பெரும்பொழுது ஆறு: (கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன; மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல், எற்பாடு எனபன - சிறுபொழுதெனப்படும்.) 'பெரும்பருவம' என்றது, (பிரிந்தார்க்குக்) கழித்தற்கு அரியது என்ற பொருளும் தோன்ற நின்றது. உம் - உயர்வுசிறப்பு. ஆல் - ஆதலால் என்பதன் விகாரம்; அசையாகவும், தேற்றப்பொருளதாகவுங் கொள்ளத்தகும். கிளவி - பேச்சு; கிள - பகுதி: கிளத்தல் - பேசுதல்.

வெள்வளை - சங்கினாலாகிய வளை; அதனையணிந்தவளைக் குறித்தலால், பண்புத்தொகையன்மொழி. வளவுதல் எனினும், வளாவுதல் எனினும் ஒக்கும்; வளைதல், கலத்தல். வருத்து - வருத்தம், வருந்துதல் ஓ-எதிர்மறை. 'அளவி புண்டவன் வருந்து மென்று லது வருந்தோ' என்று பாடமோதி, 'அளவி - அளாவி', 'அருந்தோ - அருமையோ' என்று உரைப்பாரு முளர். 'கிளைத்தவள் வளைத்தோள்' என்ற பாடத்திற்கு - செழித்தவளான பிராட்டியினது வளையல்களை யணிந்த தோள்களென்று பொருள் 'கிளைத்தவள் கிளைத் தோள்' என்ற பாடத்தில், கிளைத் தோள் - மூங்கில்போன்ற தோள். 'தளர்வது' எனவும் பாடம். (௫௦)

[இராமபிரான் இரங்கத்தொடங்கினானென்றல்.]

௫௧. காவி யுங்கருங் குவளையு நெய்தலுங் காயாம்
பூவை யும்பொரு வானவன் புலம்பினன் றளர்வா
னாவி யுஞ்சிறி துண்டுகொ லாமென வயிர்த்தான்
றாவி யன்னமன் னாடிறத் திவையிவை சொல்லும்.

(இ - ள்.) காவியும் - காவிமலரையும், கருங் குவளையும் - கருங்குவளை மலரையும், நெய்தலும் - கருநெய்தல்மலரையும், காயாம் பூவையும் - காயா மலரையும், பொருவான் - (தனது திருமேனிநிறத்தில்) ஒப்பவனான, அவன் - அந்த இராமபிரான், புலம்பினன் வளர்வான் - புலம்பித் தளர்ச்சியடைபவனாய், ஆவியும் சிறிது உண்டுகொல் ஆம் என அயிர்த்தான் - (இவனுடம்பிற்) சிறிது உயிரும் உளதோ வென்று சங்கிக்கத்தக்கவனாகி, தூவி அன்னம் அன்னாள்திறத்து - மென்மையான இறகின் அழகையுடைய அன்னப் பறவையைப் போன்றவளான பிராட்டியின் விஷயமாய் (த்தான்கொண்ட காதல் மிகுதியால்), இவை இவை சொல்லுல் - இந்த இந்த வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, அடுத்த பன்னிரண்டுகவிகளிற் காண்க.

காவி, கருங்குவளை, நெய்தல் என்ற மூன்றும் - நீலோற்பலத்தின் சாதிபேதம். காயா - ஓர்செடி. பொரு வானவன் - ஒத்த தேவாதிதேவனான ஸ்ரீராமன் என்றும். பொரு ஆனவன் அல்லது பொருவு ஆனவன் - காவி முதலியவற்றை (த் தனக்கு) உவமையாகப்பெற்றவன் என்றும் பதவுரை கொள்ளலாம். மன்மதாவத்தைகளுள், அழுங்கலும் மொழிபலபிதற்றலுமாகிய மோகமும், அயர்ப்பும் மயக்கமுமாகிய மரணமும் இங்கே கூறப்பட்டன; இவை - சந்தாபம் வசீகரணம் என்று முறையே பெயர்பெறும். முல்லைமலரும் நீலமலருமாகிய மன்மதனது நான்காவது ஐந்தாவது அம்புகள் செய்யும் அவத்தைகளெனப்படும். கொல் - வினா, ஐயம். ஆம் - அசை. அயிர்த்தான் - அயிர்க்கப்பட்டான் எனச் செய்வினை செயப்பாட்டுவினைப்பொருளது. அன்னம் நடையழகில் உவமம். இவை யிவை = பின்வருபவை.

'காரும் பூவையும்,' 'பூவையுஞ்செறிமேகமும் பாவையும் போல்வான்,' 'உண்டுகொலாமென வயர்வான்' என்பன பாடபேதம். (௫௧)

[இதுமுதற் பன்னிரண்டு கவிகள் – காளமேகம் முதலியவற்றை நோக்கி இராமபிரான் இரங்கிக் கூறுதல்.]

வேறு.

[இதுவும், அடுத்தகவியும் - காளமேகத்தைநோக்கி இரங்கல்.]

ருஉ. வாரேர் முலையா ளைமறைக் குநர்வா
ழூரே யறியே னுயிரோ டுழல்வே
னீரே யுடையா யருணின் னிலையோ
காரே யெனதா விகலக் குதியோ.

(இ - ள்.) காரே - காளமேகமே!—வார் ஏர் முலையாளை மறைக்குநர் வாழ் ஊரே அறியேன்-கச்சணிந்த அழகிய தனங்களை யுடையவளான சீதையை எடுத்துக்கொண்டுபோய் ஒளித்துவைத்திருப்பவராகிய இராக்கதர் வாழ்கின்ற ஊரையேனும் இன்னதென்று அறியமாட்டாமல், உயிரோடு உழல்வேன்-உயிரைவைத்துக்கொண்டு திரிந்துகொண்டிருக்கின்றேன்; நீரே உடையாய் - (நீ) நீரையேயுடையவனாயிருக்கின்றனையே [நீர்மையையேயுடையவனாயிருக்கின்றனையே]; அருள் நின இலையே-அருள் உன்னிடத்தில் இல்லையோ? எனது ஆவி கலக்குதியோ - உன்னுடைய உயிரை (இச்சமயத்தில் இவவாறு) கலக்கச் செய்வையோ! (எ - று.)

ஏர் - எழுச்சியுமாம். இராவணனையே இகழ்ச்சிப்பன்மையாக 'மறைக்குநர்' என்றதாகவுங் கொள்ளலாம். அவருடைய உருவம் வலிமை சேனை முதலியவற்றை அறியாமையே யன்றி அவரிருக்கின்ற ஊரையேனும் அறியேன் எனப் பொருள்படுதலால், ஏ - இழிவுசிறப்பு. தனக்குப் பெருந்தீங்குசெய்த அவர்க்குத் தன்னால் யாதொருதீங்குஞ்செய்யமாட்டாமையைப் புலப்படுத்துவான, 'வாரோமுலையாளைமறைக்குநா வாழ்' என்றான; வாழ்தல் எவ்வகையாலுங் குறைவின்றி வசித்தல், செல்வத்தோடுமகிழ்ந்திருத்தல், ஜீவித்திருத்தல். உழலுதல் உலைந்துதிரிதல். எனக்குப்பெருங்கேடுசெய்தவர்விஷயத்தில் இவ்வளவு அறியாமையோடுகூடிய யான் உயிரையிழந்திருந்தாலுங் குற்றமில்லை: அதுசெய்யாமல் உயிருடனிருக்கின்றேன் என்ற அநுதாபந் தோன்ற, 'உயிரோடுழல்வேன்' என்றான: உயிர்நீங்காதிருத்தலால் வருந்துகின்றேனென்றானுமாம். "உண்ணிலாவிய துயரம்பிடித்துந்த வாருயிர் நின் றூசலாட" என்றபடி உயிர் நிற்கவும்மாட்டாமல் நீங்கவும் மாட்டாமல் அலையப் பெறுகின்றேனென்ற பொருளில் 'உயிரோடுழல்வேன' என்றதாகவுங் கொள்ளலாம். இரட்டுறமொழித லென்னும் உத்தியால், 'நீரே யுடையாய்' என்பதற்கு இருபொருள் ஒருங்குகொள்ளப்பட்டது; சிலேடையணி யெனலாம். நீரே யுடையாய் - நீர்மயமாயிருக்கின்றாய்; ஏ-பிரிநிலை. நீர்மை யென்ற பண்புப்பெயர், ஈறுபோய் 'நீர்' என நிற்கும். நீர்மை-இங்கு, உலகத்துஉயிர்களையெல்லாம் பாதுகாத்தல்., நீரின் தன்மை - தண்மை, அருளென்பதும் தண்மையே. நீர்மை - இனியதன்மையிரையும் நீர்மையையு முடையனான நீ தண்ணளியில்லாமலிருக்கற்பால

யோவென்றான். நின் அருள் இலையோ-நினது அருள் (என்பக்கல்) இல்லையோ வென்றலு மொன்று. அருள் நின் நிலையோ என்று பிரித்து, அருளையுடைய நினது நிலைமை இதுதானோ வென்றும், நினது இந்நிலைமை அருளாமோ வென்றும் உரைத்தலுமாம். கிணற்றில் தவறிவிழுந்தவர்மேற் கல்லையெடுத்துப் போகட்டாற்போல, பிராணநாயகியைப்பிரிந்து அவளிருக்குமிடமுந் தெரியாமையால் அரையுயிராயிருப்பதை நீயும் காதலைவளர்த்து நிலைகலக்குவது தகா தென்பது, தேர்ந்தகருத்து.

'ஊரோ புணரேன்' என்ற பாடத்திற்கு, இரண்டாமடி - முற்றுமோனை கொண்டதாம். 'வாரோய்,' 'மறைக்குநன்', 'ஊரோதறியேன்,' 'அருணின் நிலையோ', 'அருளின்னிலையோ' என்பன பாடபேதம்.

இதுமுதல் எழு கவிகள் - நாற்சீரும் மாச்சீராகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். அன்றி, 'வாரோர்முலை யாளைமறைக்கு நர்வாழ்' என இவ்வாறு பிரித்து, பெரும்பாலும் முதற்சீர் மாங்கனிச்சீரும், இரண்டாவது கூவிளச்சீரும், மூன்றாவது கூவிளங்காய்ச்சீரு மாகிய சிந்தடி நான்கு கொண்ட வஞ்சிவிருத்தமாகக் கொள்ளினும் இழுக்காது.

தலைவன் தலைவியர் காதலாலிரங்குதலைக் கூறுமிடத்துப் பெரும்பாலும் இவ்வகைவிருத்தம் உபயோகிக்கப்படுகின்றது; பாலகாண்டத்துக் கடிமணப் படலத்திற் சீதை இராமன் என்னுமிருவ ரிரங்கற்கும் இவ்விருத்தமே உபயோகித்தனர்: சுந்தரகாண்டத்து உருக்காட்டுபடலத்திற் சீதை இரங்குதற்கும் இதுவே; அதிவீரராமபாண்டியரும் நைடதத்துச் சுயம்வரப்படலத்தில் நளன் தமயந்தி என்னுமிருவ ரிரங்கலையும் இவவிருத்தத்திலேயே கூறுதல் காண்க. (௫௨)

௫௩. வெப்பார்நெடுமின்னினெயிற்றைவெருண்
டெப்பாலும்விசும்பினிருண் டெழுவா
யப்பாதகவஞ்சவரக்கரையே
யொப்பாயுயிர்கொண்டலதோவலையோ.

(இ - ள்.) வெப்பு ஆர் - (காண்பவர்க்கு) அச்சந்தருந்தன்மை மிக்க, நெடு மின்னின் - நீண்ட மின்னல்களாகிய, எயிற்றை - கோரதந்தங்களையுடையாய், இருண்டு - கருநிறங்கொண்டு, வெருண்டு - கர்ச்சித்து, விசும்பின் - ஆகாயத்திலே, எ பாலும் - எந்தப்பக்கத்திலும், எழுவாய் - தோன்றுகின்றாய்: (ஆதலால்), அ பாதகம் வஞ்சம் அரக்கரையே ஒப்பாய் - கொடுந்தொழிலையும் வஞ்சனையையுமுடைய அந்த இராக்கதரையே போல்பவனான நீ, உயிர் கொண்டு அலது ஒவலையோ - (எனது) உயிரைக் கவர்ந்தல்லாமல் அப்பாற்போகமாட்டாயோ? (எ - று.)

உவமையணி. உபமானமாகிய அரக்கர்க்கு இயையும்போது, 'மின்னின் எயிற்றை' என்பதற்கு-மின்னல்கள்போன்ற கோரதந்தங்களையுடையாயென்றும் பொருள்கொள்ளலாம். இருண்டு வெருண்டு விசும்பின் எப்பாலும்

எழுதல், காளமேகத்திற்கும் அரக்கர்க்கும் ஒக்கும். அரக்கர் எனது உயிர் நிலையாகிய [பிராணநாயகியான] சீதையைக் கவர்ந்துகொண்டு அப்பாற் சென்றனர்; நீ எனதுஉயிரைக் கவர்ந்துகொண்டுதான் செல்லவையோ என்றூம். வெகுண்டு-கோபித்து: இக்காரணச்சொல் காரியப்பொருளின்மேல் நின்று, கர்ச்சித்து என்றதாயிற்று; உபசாரவழக்கு. மேகம் கர்ச்சித்தல் - குமுறுதல், இடிமுழங்குதல். தன்னை வருத்துதல்பற்றி, கோபங்கொண்டு எனறூனுமாம்.

வெப்பு - கடுமை, எயிற்றை - முன்னிலை யொருமைக் குறிப்புமுற்று; எயிறு - பகுதி: பல்; ஐ - விகுதி. 'எயிற்றின்' என்ற பாடத்திற்கு - பற்களுடனே யென்று பொருள். 'எப்பாலும்' என்றதை 'ஒப்பாய்' என்பதனோடு இயைத்து, எல்லாவகையாலும் ஒத்திருப்பாய் என்றலும் ஒன்று. ஒப்பாய் - ஒப்பவனுனமேகமே! என விளியுமாகலாம். 'அரக்கனேயே' என்பதும்பாடம்.

இங்கு, மேகம் முதலிய அஃறிணைப்பொருள்களைக் கேட்டல்முதலிய செயல்கட்குஉரியனவாகக் கூறுதல், வழுவமைதியின்பாற்படும்; தொல்காப்பியத்துப் பொருளியலில் "சொல்லாமரபினவற்றொடு கெழீஇச், செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியும்" என்றதும், செய்யுளியலில் "ஞாயிறு திங்க ளறிவே நாணே, கடலேகானல் விலங்கேமரனே, புலம்புறுபொழுதே புள்ளே நெஞ்சே, அவையல பிறவும் நுவலிய நெறியாற், சொல்லுநபோலவும் கேட்குந போலவும், சொல்லியாங் கமையு மென்மனார் புலவர்" என்றதுங் காண்க: விரகவேதனையால் அறிவுதிரிந்த நிலையில் தலைவன் தலைவியர் இவ்வாறெல்லாம்பேசுதல் ஏற்கு மென்பது கருத்து. (௫௩)

[மயிலைநோக்கி இரங்கல்.]

௫௪. அயிலேவிழியார்விளையாரமிழ்தின்
குயிலேமொழியார்க்கொணராய்கொடியாய்
துயிலேலொருவேனுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீவலியாடுதியோ.

(இ - ள்) மயிலே—!—அயில் ஏ விழியார் - வேலாயுதமும் அம்பும் போலக் கூறிய கண்களையுடையவரும், விளை ஆர் அமிழ்தின் குயிலே மொழியார் - (பாற்கடலில்) தோன்றிய அருமையான தேவாமிருதத்தையும் குயில்கூவுதலையுமே போன்ற [மிகஇனிய] சொற்களை யுடையவருமான ஜாநகியாரை, கொணராய் - தேடிக் கொண்டுவந்து (எனக்குக்) கொடுத்து உதவமாட்டாய்; கொடியாய் நீ - கொடுந்தன்மையுடையையான நீ, துயிலேன் ஒருவேன் உயிர் சோர்வு உணர்வாய் - தூக்கங்கொள்ளாதவனும் (மனைவியைப்பிரிந்து) தனித்திருப்பவனுமான எனது உயிர் தளர்ச்சியடைதலை யறிவாய்; (அறிந்திருந்தும்), எனை வலி ஆடுதியோ - என்னை (இச்சமயத்தில்) உன்வலிமைகாட்டி நலியற்பாலையோ! (எ - று.)

முதலடியில், ஏ - ஓரெழுத்தொருமொழியாகிய பெயர்ச்சொல். ஆரமிழ்து—ஆர் - அருமை யென்ற பண்புப்பெயர் ஈறுபோய் இடைஉகரமுங்

கெட்டு ஆதிநீண்டது; (சுவை) கிரம்பிய என வினைத்தொகையுமாம். அம்ருதம் - தன்னை நுகர்ந்தவா பிறிது நுகராமல் தடுக்கும் இனிமையில் உவமம். அமிழ்தின - அமிருததேதாடு என்க. மொழியார்க் கொணராய் - இரண்டாம்வேற்றுமைத்தொகை; "இயல்பின் விகாரம்." மன்மதாவத்தைகளுள் துயிலாமையும் ஒன்று; பிரிவாற்றாமைக்கு உரிய குறிகளுள் "வாரா வுரக்கமும்" என்றதுங் காண்க. சோர்ந்திருக்கின்ற சமயத்தில் உதவி செய்வதைவிட்டு மேன்மேல்வருத்தியழிக்கத் தொடங்குதல் பகைவர்க்கும் வீரச்செயலாகா தென்பான், 'உயிர்சோர்வுணர்வாய் வலியாடுதியோ' என்றான்; இராவணனையும் போரில் 'இன்றுபோய் நாளைவா' என்று அருள் செய்யும் இயல்பின னாதலாலும், தன்னைப்போலவே பிறரையும் நினைத்தல் பெரியோரியல்பாதலாலும் என்க. 'கொடியாய்' என விளித்ததும் இது பற்றியே. மயில் தனது தோகையினாற் சீதையின் கூந்தலையும், தனது சாயலினாற சீதையையும் போலிருத்தலால், அப்பொருள்களை நினைப்பூட்டி கலிவுசெய்யு மென உணர்க; ஸ்மாரகபதார்த்தமாய்க் காமோத்தீபகப்பொருள் களிலொன்று மென்க. எனை - தொகுத்தல். 'அலையாரமுதின்,' 'சோர்வுணராய்', 'அயிலேர் விழியார் குயிலேய் மொழியார்' என்று பிரதிபேதம்.(௩௪)

[பூங்கொடியைநோக்கி இரங்கல்.]

௩௫. மழைவாடையொடாடிவலிந்துயிர்மே
னுழைவாய்மலர்வாய்நொடியாய்கொடியே
யிழைவாணுதலாளிடைபோலிடையே
குழைவாயெனதாவிகுழைக்குதியோ.

(இ - ள்.) கொடியே—!—மழை வாடையொடு ஆடி - மழைக்காலத்தில் வீசுகின்ற வாடைக்காற்றிற்கு ஏற்ப அசைந்து [வாடைக்காற்றோடு பழகி], வலிந்து உயிர்மேல் நுழைவாய் - வன்மைகொண்டு (எனது) உயிரில் நுழைகின்றாய; மலர்வாய் - மலாபெற்றிருப்பாய் [மலர்ச்சிகொண்டிருப்பாய்]; இழை - (என்னோடு) கூடியிருந்த, வாள் நுதலாள் - பிரகாசமுள்ள நெற்றியை யுடையவளான சீதையினது, இடை போல்—,இடையே குழைவாய் - இடையிடையே துவண்டுகாட்டி, எனது ஆவி குழைக்குதியோ - என்னுடைய உயிரை இளகச்செய்யத்தகுவையோ? நொடியாய் - சொல்வாய்; (எ - று.)

மழைக்காலத்து வாடைக்காற்றோடு பழகியதனால் அதன்குணத்தை நீயும் உடையையாய், அது வன்மைகொண்டு எனது உயிரின்மேல் வீசி வருத்துதல்போல நீயும் எனது எதிரில் உனது மெல்லிதாய்த்துவளும்வடிவைக் காட்டி அசைந்துகொண்டு சீதையின் இடையை ஞாபகப்படுத்தி என்னுயிரை வலியத்தாக்கி வருத்துகின்றாயென்றான. 'மலர்வாய்' என்றதனால், என்வருத்தத்தைக்கண்டு சிறிதேனும் இரங்காமல் என்முன்னிலையில் மலர்ந்திருக்கின்றனையே யென்றானும்; வருத்தமுற்றவர்க்கு, பிறர்மலர்ச்சியைக் காணுமிடத்து வருத்தம்மிகுதல் இயல்பு. கொடியாய் - (எனக்குச் சமாதான

மாக யாதொன்றும்) பேசாதிருக்கின்றாய் என்றும் பொருள்படும். 'செய்யாய்' என்னும் வாய்பாட்டுச்சொல் உடன்பாடு எதிர்மறை என்ற இரண்டிலும் வரும். 'மலர் வாய் கொடியாய்' என்பதற்கு - மலராகிய வாயினாற் பேசாய் என்று உரைப்பாருமுளர். 'கொடியே' என்ற விளி, கொடுமையை யுடையாய் என்ற பொருளும் தோன்ற நின்றது; (சுந்தரகாண்டத்து உருக் காட்டுபடலத்தில்) "தழல்வீச வுலாய்வரு வாடை தழீஇ, அழல்வீ ரென தாவி யறிந்திலிரோ, நிழல்வீரையனுருட னீர் நெடுநா, ளுழல்வீர் கொடியீ ருரையாடலிரோ" என வரும் பிராட்டி யிரங்கல், இங்கு நோக்கததக்கது. 'இழை' என்று வினைத்தொகை, நுதலாளுக்கு அடைமொழி; இனி, (உலகத திற்கு) ஆபரணம்போன்ற என்றும் உரைககலாம். நுதலுக்கு அடைமொழி யாக்கி, ஆபரணங்களுக்கு ஒளியைத்தரும் நெற்றியை யுடையா ளென்றலு மாம். இடையே குழைவாய்-இடந்தோறும் [கண்டஇடமெங்கும்] குழைந்து காட்டுவா யெனினுமாம். 'இடைபோ லிடையே குழைவாய் குழைக்கு தியோ' என்றதில, ஒருவகைச் சொற்சமத்காரம் தோன்றும். ஸ்மாரக பதார்த்தங்களெல்லாம் [ஞாபகப்படுத்துவனவான பொருள்க ளனைத்தும்] பிரிந்தார்க்கு நலிவுசெய்யுமாதலால், 'நுதலாளிடைபோ லிடையேகுழைவாய் எனதாவி குழைக்குதியோ' எனப்பட்டது.

வாள் - ஒளியை யுணர்த்தும்போது உரிச்சொல்; "வாளொளியாகும்" என்பது, தொலகாப்பியதது உரிச்சொல்லியற் சூததிரம். வலிந்து - வருத்தி யெனினுமாம்.

இரண்டாம்அடி, 'உழைவாய்மலரா லொடியாய் கொடியே' என்றும் காணப்படுகின்றது. 'நுதலாரிடை,' 'குழைக்குவையோ' என்பன பிரதி பேதம். (௫௫)

[மானைநோக்கி இரங்கல்.]

௫௬. விழையேன்விழைவானவைமேன்மையினின்
றிழையேனுணர்வேனவையின்மையினாற்
பிழையேனுயிரோடுபிரிந்தனரா
லுழையேயவரெவ்வுழையாருரையாய்.

(இ - ள்.) உழையே - மானே!—நவை - குற்றத்திற்கு இடமான பொருளை, விழைவால் விழையேன - ஆசையால் விரும்பக்கடவேனல்லேன்: மேன்மையினின்று இழையேன - பெருமைக்குணத்தினின்று நெகிழக்கட வேனல்லேன: உணர்வேன - (பொருள்களை நல்லது அல்லது தீயது என்று உள்ளபடி) அறியக்கடவேன்: அவை இன்மையினால் - மேற்கூறிய தன்மைகள (என்னிடத்தில்) இல்லையானதனால், பிழையேன் - பிழைபாடு டையனாயினேன்; (ஆதலால்), உயிரோடு பிரிந்தனர் - (என்னுடைய) உயி ரோடு (ஜாநகியார் என்னைவிட்டுப்) பிரிந்துபோயினர்; அவர் எ உழையார் உரையாய் - அவர் (இப்பொழுது) எவ்விடத்தி லிருக்கின்றார்? சொல்வாய்; (எ - று)—ஆல்-அசை.

பொன்மானாகிய இது மெய்வடிவமாயிருக்குமா, அல்லது மாயையுருவமாகுமா என்று ஆய்ந்து அதன் இயல்பை உள்ளபடி உணராமல், அன்புள்ள தம்பி 'மாயை யிது' என்றுகூறவுங் கேளாமல், தையல்சொற்கேட்டு, அந்த மானைப் பிடிக்கவிரும்பி, அதனைத் தான தொடர்ந்துசென்றமையே, சீதையை இராவணன் கவர்தற்கு இடமாயிற்று என்று நடந்த செய்தியைப்பற்றிக் கழிவிரக்கத்தோடு கூறிய வார்த்தையாகும், முதல் மூன்று அடிகள். 'அவை' என்றது - விழையாமை, மேன்மையினின்று நெகிழாமை, உணர்வு என்ற வற்றைச் சுட்டும். பிராணநாயகியாரான அவர் என்னை விட்டுப் பிரிந்தது, எனது உயிர் உடம்பை விட்டுப் பிரிந்ததுபோலு மெனபான், 'உயிரோடு பிரிந்தனர்' என்றான்; இதனால் சீதையின் இன்றியமையாமையைப் புலப் படுத்தினன். ஈற்றடியில் 'உழை' என்ற சொல்லை வெவவேறு பொருளில் அமைத்தது, சொற்சமத்காரமாம்: உழை - மானும், இடமும். மான் வடிவங் கொண்டவனால் அவா பிரிந்தனராதலால் அவரிருக்கின்ற இடத்தை மானே! நீ சொல்லக் கடவாய் என வேண்டினனெனக. விழையேன, இழையேன் - தன்மை யொருமைத தெரிநிலை யெதிர்மறை முற்றுக்கள். பிழையேன் - உடன்பாட்டுக் குறிப்பு முற்று. நவை - குற்றம்; ஆகுபெயராய், அதற்கு இடமான பொருளை யுணாத்திற்று. இழைதல் - நெகிழ்தல்

இனி, இச்செய்யுளுக்கு வேறு வகையாகவும் உரைகொள்ளலாம்; அது வருமாறு:—விழைவு ஆனவை விழையேன் - விரும்பத்தக்க பொருள்களெவற்றையும் விரும்புகின்றேனில்லை; மேன்மையில் நின்று இழையேன் - (அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என ஆடவர்க்குரிய) மேனமைக்குணங்களில் நிலைத்துத் தொழில் செய்ய ஆற்றலிலேன்; உணர்வு எனவை இன்மையினால் - புத்தியும் மற்றை அந்தக்கரணங்களாகிய மனம் சித்தம் அகங்காரம் என்பனவும் ஒழிதலால், பிழையேன - இனி உயிர் வாழ மாட்டேன்; உயிரோடு பிரிந்தனர்-என் உயிரோடு (அந்த ஜானகியாா என்னை விட்டுப்) பிரிந்து சென்றார் எனக் காண்க. விழைவானவை - உணவு, படுக்கை, மலர் முதலியன. இழைத்தல் - செய்தல். எனவை - ஏனையவை. 'பிழையேன்' என்றது - தெரிநிலை யெதிர்மறை முற்று.

இனி, 'விழையேன விளைவா லருண் மெய்ம்மையினின்று' என்ற பாடத்திற்கு - அடியில் வருமாறு பொருளுரைக்கலாம்:—உழையே-மானே! விழையேன் - (மாரீசனாகிய மாயமானைப் போல உன்னைப்பிடிக்க) விரும்பேன்; விளைவால் காரியத்தால், அருள் மெய்ம்மையினின்று இழையேன் - கருணையினின்றும் சத்தியத்தினின்றும் நெகிழமாட்டேன்; உணர்வேன் - (உனது இயல்பை) அறிவேன்; நவை இன்மையினால் - (உன்னிடத்தில் யாதொரு) குற்றமும் இல்லாததனால், பிழையேன் - (தொடர்தல் ஆர்த்தல் அம்பெய்தல் கொல்லுதல், என்றாற்போல) யாதொரு தவறும் (உனக்குச்) செய்யமாட்டேன் எனக.

'மெய்ம்மையினின், றிழையே னுணர் வென்வயி னின்மையினாற், பிழையே னுயிர்கொண்டு பிரிந்தனனால்' என்றும் பாடமுண்டு. 'விழை வேன்', 'இழவேன்' எனபன பிரதிபேதம். (௫௬)

[தனது உயிரை நோக்கி இரங்கல்.]

௫௭. பயில்பாடகமெல்லடிபஞ்சனையார்
செயிரேதுமிலாரொடுதீருதியோ
வயிரா துடனேயகல்வாயலையோ
வுயிரேகெடுவாயுறவோர்கிலையோ.

(இ - ள்.) உயிரே - (எனது) உயிரே!—பயில் - அணிந்த, பாடகம் - பாடக மென்னும் ஆபரணத்தை யுடைய, மெல் அடி - மென்மையான பாதங்கள், பஞ்சு அனையார் - பஞ்சுபோல மென்மையா யிருக்கப் பெறறவரும், செயிர் ஏதும் இலாரொடு - யாதொரு குற்றமு மில்லாதவருமான ஜாநகியாரோடு, தீருதியோ - என்னை விட்டு நீங்கிப்போகக் கடவையோ? (அப்படிப் போவதானால்), அயிராது உடனே அகல்வாய் அலையோ - சங்கை கொள்ளாமல் அவர் பிரிந்த அப்பொழுதே அவருடன் சென்றிருக்கக் கடவாயன்றோ! கெடுவாய்—! உறவு ஓர்கிலையோ - (பிராண னாகிய உனக்கும் பிராண நாயகியாராகிய அவர்க்கு முன்ன) உறவுரிமையை (அப்பொழுது) அறிந்தாயில்லையோ? (எ - று.)

உயிரே! நீ அப்பொழுதே என் உடம்பை விட்டு நீங்கியிருந்தால் வருத்தமில்லாதிருக்குமே யென்றவாறும். அன்றியும், எனது உயிராகிய நீ அவளை விடாமல் தொடர்ந்து சென்று அவருடனிருந்தால் வருத்தமெனப தேது? என்றவாறுமாம். மூன்றாமடிக்கு - (நீ போவதானால்), "உண்ணிலாவிய துயரம் பிடித்துந்த வாருயிர் தின றூசலாட" எனறபடி உடம்பை விட்டுப் போவதா? போகாம லிருப்பதா? என்ற சங்கை கொண்டாய் போலப் போவதும் வருவதுமா யிருந்து வருத்தாமல் உடனே [விரைவிற] சென்றுவிடக் கடவாயன்றோ என்று கருதது. 'உறவோர்கிலையோ' எனபதற்கு - (எனக்கும் அவர்க்கு முன்ன) உறவுரிமையை அறிகின்றா யில்லையோ எனறலுமாம். இனி, பின மூனறடிகட்கு - ஒரு குற்றமுமில்லாத அவரோடு (நீ உறவு) ஒழிகின்றாயோ? அவர் போனவுடனே நீயும் சங்கை யின்றிப் போகக்கடவாயன்றோ? உயிரே! கெடுவாய்! நெடுநாள் பழகிய உறவையாவது நினையாயோ? என்றும் உரைக்கலாம். 'கெடுவாய்' என்றது, இரக்கத்தால் கிட்டோந் தோன்ற விளிப்பது; கொடியவனே! எனக.

பயிலுதல் - பழகுதல்; சிறப்பித்துச் சொல்லப்படுதலும், பொருந்தலும், ஒலித்தலுமாம். பாடகம் - ஒருவகைக் காலணி; பாதகடக மெனற வடசொல்லின் சிதைவு. அலை - அன்மையென்னும் எதிர்மறைப்பண்பினடியாப் பிறந்த முன்னிலை யொருமைக் குறிப்புமுற்று, ஓர்கிலை—கு - சாரியை. இல்- எதிர்மறை யிடைநிலை. (௫௭)

[கொன்றையைநோக்கி இரங்கல்.]

௫௮. ஒன்றைப் பகராய் குழலுக் குடையாய்
வன்றைப் புறுநீள் வயிரத் தினையோ
கொன்றைக் கொடியாய் கொணர்கிற் றிலையோ
வென்றைக் குறவா கவிருந் தனையோ.

(இ - ள்.) கொன்றை கொடியாய் கொன்றைமரமாகிய கொடியவனே!— குழலுக்கு உடையாய் - (ஜாநகியாருடைய) கூந்தலோடு நீ (பகைமை) உடையையாய், (அதனால் அவரிடத்தும் என்னிடத்தும்), வல் தைப்புஉறு நீள் வயிரத்தினையோ - வலிய ஊன்றிய நீண்ட கறுவுடையாயோ? (அதனாலே தான்), ஒன்றை பகராய் - யாதொருவிடையுங் கூறாமல், கொணர்கிற்றிலையோ - (அவரை என்னிடம்) கொண்டுவந்து கொடாமலுமிருக்கின்றாயோ? என்றைக்கு உறவுஆக இருந்தனை - (நீ) என்றைக்குத்தான் உறவாக இருந்தாய்?

கொன்றைமரம் கார்காலத்தில் மலர்ந்துவிளங்கிக் காமோத்தீபகமாய் வருத்துதலால், அதனை 'கொடியாய்' என்றுவிளித்து இரங்குபவனானான். கொன்றைக்காயை மகளிர்கூந்தலுக்கு வடிவில் உவமையாகக்கூறும் மரபுபற்றி, 'குழலுக்கு உடையாய்' என்றான். 'கொன்றை' என்ற சொல் கொன்றாயென்று ஒருபொருள்படுதலாலும், அச்சொல் அம்மரத்திற்குப் பெயராய்த் தொன்றுதொட்டுவழங்குதலாலும், அன்பு நண்பு அருள் இன்றிக் கொல்லுமியல்புடையாய் நீ யென்பான், 'என்றைக்குஉறவாகவிருந்தனையே' என்றான்; நீ என்றென்றைக்கும் கொன்றையென்று பெயர்பெற்றிருக்கின்றனையேயன்றி ஒருநாளேனும் உறவென்று பெயர்பெற்றிலை யென்றானும்: 'ஆரக்வதம்' என்ற இதன் வடமொழிப்பெயரையுங் காண்க. கொன்றை மனிதர் சூட்டிக்கொள்ளும் மலரன்றாதல்பற்றி, நீ என்றைக்கு அவர் கூந்தலோடு சம்பந்தமுடையையாயிருந்தா யென்ற பொருளில் 'என்றைக் குரவாகவிருந்தனையே' என்றதுமாம்; அவர்கூந்தலோடு உனக்கு என்றைக்கும் நண்பு இருந்ததில்லை யென்க. என்னைவிட்டுப்பிரிந்தநிலையிலும் பிரியாதநிலையிலும் எந்நாளிலும் நீ அவர்கூந்தலுக்கு ஒப்பாகத் தகுதியுடையையல்லையென்ற பொருளுந் தோன்றும்; இவ்வளவுதகுதியற்ற உனக்குப் பகைமையும்கறுவும் ஏன்? என்றபடி. திருமாலுக்கும் அப்பெருமானது திருவவதாரமூர்த்திகளுக்கும் கொன்றைமலர் உரியதன் றென்னும் உண்மை இங்குப் புலனாகு மெனபர் ஒருசாரார். ஒன்றைப் பகராய் - (இப்படிவருந்துகின்ற எனக்குச் சமாதானமாக) ஒருவார்த்தையையுஞ் சொல்லாய் என்றவாறுமாம்: ஒருவார்த்தையையேனும் சொல்வாய் எனினுமாம். அசேதநமாகிய மரம் ஒன்றையுஞ்சொல்லாமலும் பிரிந்தவரைக் கொணரமாட்டாமலும் நின்றமைக்குப் பகைமையும் வயிரமும் காரணமாகக் குறிக்கப்பட்டன.

தைப்பு உறு - தைத்தல் பொருந்திய; (எளிதில் தீராதபடி) நன்றாக அழுந்திய என்க. நீள் வயிரம் - நெடுங்காலமாகவுள்ள வைரம். சலஞ்சாதித்தல். 'குழலுக்கு உடையாய்' என்றது - (காயினால்) கூந்தலுக்கு (ஒப்புமை)

உடையாய் என்ற பொருளும், கூந்தலுக்கு (ஒத்த காய்களை) உடையாய் என்ற பொருளும், 'வல் தைப்புறு நீள் வயிரத்தினை' என்றது-வலிய உள்ளே ஆழ்ந்த நீண்ட வைரத்தையுடையாய் (வயிரம் - மரவைரம்.) என்ற பொருளும், 'கொடியாய்' என்றது - கொடிகளையுடையாய் என்ற பொருளும் (மரத்தைச்சார்ந்து கொடிகள்படர்ந்திருத்தல் இயல்பு) தோன்றுகின்றன. கொணர்கிற்றிலையோ - (அவரைக்) கொண்டுவரமாட்டாயோ என்றுமாம்.

'குழலுக்குடைவாய்', 'வயிரத்தினையே', 'கொணர்கிற்றிலையே', 'கொணர்கின்றிலையே', 'இருந்தனையோ' என்பன பிரதிபேதம். (௫௪)

வேறு.

[முல்லைமலரையும், இந்திரகோபத்தையுங்குறித்து இரங்கல்.]

௫௫. குராவரும் பனைய கூர்வா ளெயிற்றுவெங் குருளை நாகம்
விராவுவெங் கடுவிற் கொல்லு மெல்லிணர் முல்லை வெய்தி
னுராவருந் துயர மூட்டி யோய்வற மலைவ தொன்றோ
விராவண கோப நிற்க விந்திர கோப மென்றே.

(இ-ள்.) குரா அரும்பு அனைய - குராமரத்தின் அரும்பையொத்த, கூர் வாள் எயிறு - கூரிய ஒளியுள்ள பற்களையுடைய, வெம் குருளை நாகம் - கொடிய இளமையானபாம்பினிடத்து, விராவு - பொருந்திய, வெம் கடுவின் - வெவ்விய விஷம் போல, மெல் இணர் முல்லை வெய்தின் கொல்லும் - மென்மையான மலர்களையுடைய முல்லைக்கொடி கொடிதாய் (என்னை) மரண வேதனைப்படுத்தும்; உராவு அருந் துயரம் மூட்டி-பொறுத்தற்கு அரிய துன்பத்தை யுண்டாக்கிவளர்த்து, ஓய்வு அற மலைவது - ஒழிவில்லாமல் (என்னை எதிர்த்துப்) போர்செய்வது, ஒன்றோ - இதுஒன்றுமாத்திரமோ? இராவண கோபம் நிற்க இந்திரகோபம் என்றோ - இராவணகோபமொன்று இருக்கையில் இந்திரகோபமொன்று (என்னைவருத்தத் தலைப்பட்டது) என்றோ?

கார்காலத்துக் காணப்படும் பொருள்களெல்லாம் காமோத்தீபகமாய் விரகிகளை வருத்தும்; அவற்றில், முல்லைமலரும் தம்பலப்பூச்சியும் இங்குக் குறிக்கப்பட்டன. பிரிந்தாரது பற்களை முல்லையரும்பும், அதரத்தை இந்திரகோபமும் ஞாபகப்படுத்துதலாலும் வருத்துவனவாம். முல்லைமலர் மன்மதனது பஞ்சபாணங்களுள் நான்காவதாய் 'சந்தாபம்' எனப் பெயர்பெற்று "வனத்திலுறு முல்லை கிடைகாட்டும்" என்றபடி அழுங்கலும் மொழிபல பிதற்றலுமாகிய மோஹாவஸ்தையை விளைத்து மிகவருத்துதலும் உணரத்தக்கது. முதல்மூன்றடிகட்கு - நாகம் (கரிய) கொடியவிஷத்தினால் (பிராணிகளைக்) கொல்லும்; முல்லை மெல்லிய (வெண்ணிறமான) மலரினால் துயர மூட்டி ஓய்வற (என்னோடு) மலைவது; இதுமாத்திரமோ என்றும் பதவுரை கொள்ளலாம்.

ஈற்றடியால், தன்மகனைக்கொண்டு இந்திரனைவென்று சிறைவைத்தவனை இராவணனது கோபம் நிற்கையில், அவனால் அடக்கப்பட்டவனும்

அவனுக்கு அஞ்சியொளிப்பவனுமான இந்திரனது கோபம் நிலைப்பட்டது எங்ஙனமோ! என்று வியந்தவாறும். ராக்ஷஸராஜனான இராவணனது கோபம் என்னை வருத்தலசம் தேவராஜனான இந்திரனது கோபம் என்னை வருத்தக்கடவதோ வென்னும் பொருளும் தோன்றும். ராவணகோபம், இந்த்ர கோபம் - வடசொற்கள். 'ராவணகோபம்' என்பது - இராவணனுடைய மறைப்பு என்றுபொருள்பட்டு, இராவணன சீதையையெடுத்துச்சென்றுஒளித்ததை யுணர்த்தும்; கோபம் [கோபம்]- மறைத்தல். கோபம் [கோபம்] என்று கொண்டு சினமென்றுபொருளுரைத்தும் அமைக்கலாம். சொல்நிலைபற்றி 'இந்திரகோபம்' என்பது இந்திரனுடைய மறைப்பு அல்லது இந்திரனுடைய சினம் என்று கற்பிக்கப்பட்டது. கோபத்தைச் செந்நிறமுடையதாக வருணித்தல், கவிமரபு. தம்பலப்பூச்சிக்குப் பெயராம்போது, இந்த்ர கோபம் - இந்திரனாற் காக்கப்படுவ தென்று காரணப்பொருள்படும்; மழையினால் அது தோன்றிப்பரவுதலாலும், இந்திரன் மேகவாகனனாய் மழைக்குத் தலைமைபூணுதலாலும் அங்ஙனம் அதற்குப் பெயராயிற் றெனக. இவ்வாறு இந்திரனது சம்பந்தமுடையதாய்ச் செந்நிறத்தோடு தன்னைவருத்துவதாகிய அதனை இராமபிரான் இந்திரனதுகோப மெனக் கற்பித்தலும் ஏற்றதாம்.

குரவமரத்தின அரும்பு - பாம்பின பல்லுக்கு கூரிய வடிவிலும் நிறத்திலும் ஒப்பாம். குரா - மருதோன்றி அல்லது வாடாக்குறிஞ்சி; குரவகம் - வடசொல். நாகத்தின் விஷப்பற்கள் - காளி, காளாத்ரி, யமன, யமதூதி என நான்காம். குருளை - இளமைப்பெயர். தொல்காப்பியத்து மரபியலில் "நாயே பன்றி புலி முயல் நான்கும் ஆயுங்காலைக் குருளை யெனப" என்ற சூத்திரத்தின் உரையில் "ஆயுங்காலை" என்றதனால் "சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை" என்பதுங் கொள்க என்று அமைக்கப்பட்டமை காண்க. முதிர்ந்து வலிதளர்ந்த தல்லாமல் இளம்பருவத்து வலிமையோடுள்ள நாகமென்றற்கு, 'குருளை நாகம்' எனப்பட்டது. இளமைமாறாது புதிதாக மலரும் முல்லைக்கு உவமையாதல்வேண்டி 'குருளைநாகம்' எனறுரு மாம் நாகம் - இளையதாயினும் விஷத்தினகடுமைக்குக் குறைவில்லையே; அவ்வாறே, முல்லை இளையதாயினும வருத்துதலிற குறைவிலலை யெனறதுமாம். நாகம் நகத்திலுள்ளது: முல்லையும நகத்திலுளளதே; (நகம் - மலையும், மரமும்.) கடு - வடசொல்: மிக்கவருத்தத்தைச் செய்வதெனறு பொருள்படும: கடுமையையுடையது கடு வெனத் தமிழ்மொழியுமாகலாம். வெய்தின - வெம்மையையுடையதாய். உராவுத லெனினும் உராய்த லெனினும் ஒக்கும். உராவுதல் - ஸ்பரிசித்தல், தாங்குதல். இனி, 'உராவுவரும' எனபது 'உராவரும்' எனத் தொக்கு ஒரு சொல தன்மைப்பட்ட தெனக் கொண்டு, வளர்ந்து வருகின்ற எனலுமாம். 'மூட்டி' என்ற வினைக்கு ஏற்ப, துன்பமாகிய நெருப்பை யென்னலாம். மூட்டுதல் - மூளச்செய்தல். கொல்லும்' என்பதைப் பெயரெச்சமாகக் கொண்டு கொல்வதான முல்லை வெய்தாய்த் துயரமூட்டி மலைவது மாத்திரமோ என ஒருவாக்கியமாக்கவும் இடமுண்டு. துயரம் ஊட்டி என்று பிரித்தாலும் பொருள்படும்; துன்பத்தை அநுபவிப்பித்து என்க. இணர் - பூங்கொத்து, பூ; பூந்தாதுமாம. மெல் முல்லை இணர்

என மொழிமாற்றி, மென்மையான முல்லைப்பூ வென்றலும் அமையும். மென்மையான தன்மையை யுடைய இதற்கு இவவாறு வருத்தும் வன்மை எங்ஙனமமைந்ததோ வென்று அதிசயித்தல் தோன்ற, 'மெல்லிணர் முல்லை குருளை நாகம் விராவுவெங்கடுவின் வெய்திற் கொல்லும்' எனப்பட்டது. அது இங்ஙனம் விபரீதநிலை யடைந்ததற்குக் காரணம் இராவண கோபமே யென்பது தோன்ற, அதனையடுத்து இராவணகோபத்தை நிறுத்தினன்.

ராவண னென்ற வடசொல் - கூவிளை யென்று பொருள்படும். கைலாச கிரியின் கீழ்க் கையகப்பட்டுக் கொண்ட பொழுது பேராரவார மிட்டமை பற்றி, இவனுக்கு இப்பெயர் சிவபிரானால் அளிக்கப்பட்டது; இனி, ராவணன் - கூச்சலிடச் செய்தவன் என்றுங் கொள்ளலாம். தான் செய்யும் பல துன்பங்களால் உலகத்தாரை அலறிக் கதறிக் கூவச்செய்தான் இவன். இனி, விச்சிரவன் மகனென்னும் பொருளில் (வடநூல் விதிப்படி) ஆதேசம் வந்து ராவணனென்றாயிற றென்றுங் கூறுவர்.

'ஒய்வுற' என்ற பாடத்திற்கு - (யான்) ஒய்வடையுமாறு [வலிமைதளர்ந்தொழியும்படி] என்று பொருளாம். 'கூர்வாயெயிறு', 'வன்குருளை', 'முல்லையெனறும்', 'உராவுவெந்துயரம்', 'ஓய்வுறவுலைப்பது', 'இராவண கோபந்தீர்க்க,' 'இந்திரகோபமன்னே', 'இந்திரகோபமன்றே' என்பன பிரதிபேதம்.

இதுமுதல் ஆறு கவிகள் - அரசியற் படலத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (ருக)

[வாடைக்கு இரங்கல்.]

௬௦. ஓடைவா ணுதலினுளையொளிக்கலாமுபாயமுன்னி
நாடிமாரீசனுரோராடகநவ்வியானுர்
வாடையாய்க்கூற்றினுருமுருவினைமாற்றிவந்தார்
கேடுசூழ்வார்க்குவேண்டுமுருக்கொளக்கிடைத்தவன்றே.

(இ - ள்.) (முன்பு), மாரீசனுர் —, ஓடை வாள் நுதலினுளை ஒளிக்கல் ஆம் உபாயம் உன்னி நாடி - அரசன் மனைவியணியும் பொற் பட்டத்தை யணிதற்குரிய ஒளியுள்ள நெற்றியை யுடையவளான சீதையை வஞ்சனையாற் கவர்தற்கு ஏற்ற உபாயத்தை ஆலோசித்து அறிந்து, ஓர் ஆடகம் நவ்வி ஆனுர் - பொனமயமானதொரு மான்வடிவமாயினர்; (இப்பொழுது), கூற்றினும் - யமனும், வாடை ஆய் உருவினை மாற்றி வந்தார் - (என்னை வருத்துதற்கு) வாடைக்காற்றாகத் தனது ரூபத்தை மாற்றிக்கொண்டு வந்தார்; கேடு சூழ்வார்கு - (எங்கட்குத்) தீங்கு செய்யவருபவர்க்கு, வேண்டும் உரு கொள கிடைதத அன்றே - அதற்கு வேண்டியவாறெல்லாம் வடிவங்கள் கொள்ளும்படி கிடைத்தன வன்றோ! (எ - று.)

தலைவியைப் பிரிந்த தன்னைக் கார்காலத்து வாடைக்காற்று மாண வேதனைப் படுத்துவது பற்றி, அதனை யமனெனறே குறித்தனன். 'ஓடைவாள்

நுதலினன்' என்றது, நெற்றியழகில் ஈடுபாட்டினால். ஒண்டவாள் நுதலினன்-பட்டமகிஷியாதற்குரியவள். ஓடை - நுதலுக்கு அடைமொழி; நுதலாளுக்கு அடைமொழியாக்கி, நீரோடைபோல என்று தாபத்தைத் தணிக்கின்ற நெற்றி யழகுடையா ளென்றலுமாம். 'மாரீசனார்', 'கூற்றினார்' என்ற பன்மைகள், கோபம் பற்றியன; இகழ்ச்சிக் குறிப்புமாம். 'கூற்றுவது - வாழ்நாள் இடையறாது செல்லுங் காலத்தினைப் பொருள் வகையாற் கூறுபடுத்துங் கடவுள்' என்பது, தொல்காப்பியவுரை. உன்னி நாடி - ஊகித்து உணர்ந்து. நாடி - விரும்பி யெனினுமாம். ஈற்றடி - காமரூபிகளாய் வரபலத்தால் வேண்டும் வடிவங்கொள்ளும் ஆற்றல் படைத்தவர்கட்கு இவ்வாறு நலிதற்குச் சமயோசிதமான வடிவங்கள் அமைந்த திறத்தைக் குறித்து வியந்தவாறாம். சூழ்தல் - ஆலோசித்தல், செய்தல். கிடைத்த - முற்று. 'கிடந்த' என்றும், 'கிடைத்தது' என்றும் பாடமுண்டு. அன்றே - தேற்றம். (௬௦)

[மின்னுகின்ற மேகத்தை நோக்கி இரங்கல்.]

௬௧. அருவினையரக்கரென்னவந்தரமதனின்யாரும்
வெருவரமுழங்குகின்றமேகமேமின்னுகின்றாய்
தருவலென்றிரங்கினையோதாமரைமறந்ததையலு
ருவினைக்காட்டிக்காட்டியொளிக்கின்றாயொளிக்கின்றாயால்.

(இ - ள்.) அரு வினை அரக்கர் என்ன - (பொறுத்தற்கு) அரிய தீய செயலையுடைய இராக்கதர் போல, (கரிய பெரிய வடிவ முடையையாய்), அந்தரம் அதனின் - வானத்திலே, யாரும் வெருவர முழங்குகின்ற - யாவரும் அஞ்சும்படி கர்ச்சிக்கின்ற, மேகமே—! மின்னுகின்றாய் - மின்னுகின்ற நீ, தருவல் என்று இரங்கினையோ - (அரக்கர்போலன்றி 'இராமனுக்குச் சீதையைக் கொடுப்பேன் யான்)' என்று (என்பக்கல் சிறிது) இரக்கங் கொண்டாயோ? தாமரை மறந்த தையல் உருவினை காட்டி காட்டி ஒளிக்கின்றாய் ஒளிக்கின்றாய் - செந்தாமரை மலரில் வசித்தலை விட்டு (விதேக தேசத்தில்) தோன்றிய [இலக்குமியாகிய] அழகிற் சிறந்தவளான சீதையின வடிவத்தை (நீ) காண்பித்துக் காண்பித்து மறைக்கின்றாய் மறைக்கின்றாய்; (எ - று.)

ஆல் - ஈற்றசை; ஆதலால் என்பதன் விகாரமெனக் கொண்டு, காட்டிக் காட்டி ஒளிக்கின்றாயாதலால் தருவலென்று (சிறிது) இரங்கினையோ என்று இயைத்தலுமாம். மின்னலே சீதையின் வடிவமாகக் குறிக்கப்பட்டது. காட்டிக் காட்டி, ஒளிக்கின்றாய் ஒளிக்கின்றாய் - அடுக்குக்கள், பல முறை யென்பதைக் காட்டும். தாமரை மறந்த தையல்—"மையறு மலரினீங்கி யான்செய்மாதவத்தின் வந்து, செய்யவளிருந்தாளென்று......அந்தக் கடிநகர்......அழைப்பது போன்ற தம்மா" என்றார் பாலகாண்டத்து மிதிலைக் காட்சிப் படலத்திலும். திருமகளின் அவதாரமானவ ளென்பது, இதன் கருத்து. "திருமால் இராமனானபோது திருமகள் சீதையாகத் தோன்றினள்" என்பது புராணம். உவமையணியும் தற்குறிப்பேற்றவணியும் சேர்ந்து வந்த சேர்வையணி.

'அரக்கனென்ன,' 'அந்தரமதனில்,' 'யாவும்வெருவா,' 'தருவனென்று,' 'தாமரை துறந்த,' 'ஒளிக்கின்ற யொக்கின்றுயால்,' 'ஒளிக்கின்றொக்கின்றுயால்' என்பன பிரதிபேதம். 'இரங்கிலாயோ' என்ற பாடமும் ஏற்கும்; காட்டியதனோடு நில்லாமல் மீண்டும் ஒளித்து விடுகின்றதனால், தருவ லென்று இரங்குகின்றுயில்லையோ என்று கூறியதாம். 'அந்தரமதனின்' என்றதில், 'அது' - பகுதிப்பொருள் விகுதி. (௬௧)

[இதுவும், அடுத்தகவியும் - மந்மதோபாலம்பநம்: மன்மதனைப் பழித்தல்.]

௬௨. உண்ணிறைந்துயிர்க்கும்வெம்மையுயிர்சுடவுடலையுள்ளம்
புண்ணுறவாளிதூர்த்தல்பழுதினிப்போதிமாரா
வெண்ணுறுகல்வியுள்ளத்திளையவனின்னேயுன்னைக்
கண்ணுறுமாயிற்பின்னையாரவன்சீற்றங்காப்பார்.

(இ - ள்.) மாரா - (பிராணிகளை ஆசைநோயால்) மரணவேதனைப்படுத்து பவனான மன்மதனே!—உள் நிறைந்து - உள்ளிடம் முழுவதிலும் நிரம்பி, உயிர்க்கும் - (அங்கு இடங்கொள்ளாமையால்) பீறிக்கொண்டு வெளிப்படுவது மான, வெம்மை - விரகதாபமானது, உயிர் சுட - (எனது) உயிரை யெரித்து விட, இனி - பின்பு, உடலை - (உயிரற்றதான எனது) வெற்றுடம்பை, உள்ளம் புண் உற வாளி தூர்த்தல் - உள்ளிடம் புண்கொள்ளுமாறு (நீ) மேன் மேல் அம்பெய்து அழித்தல், பழுது - பயனற்ற காரியமாம்; (ஆதலால்), போதி - அப்பாற்செல்வாய்; (மற்றும்)—எண் உறு கல்வி உள்ளத்து இளையவன் - (யாவராலும்) நன்குமதிக்கப்பெற்ற கல்வியில் தேர்ந்த மனத்தை யுடைய (என்) தம்பியான இலக்குமணன், இன்னே-இப்பொழுது, உன்னை கண்ணுறும் ஆயின் - உன்னைப் பார்ப்பனுனல், பின்னே - பின்பு, அவன் சீற்றம் காப்பார் யார் - அவன் (உன்மேற்கொள்ளும்) கோபத்தைச் சாந்தப் படுத்தி (அதனால்வருந் தீங்கினின்று உன்னை)ப் பாதுகாக்கவல்லவர் யாவருளர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

'பிராணநாயகனை நான் சிறிது பிரிந்திருந்த சமயம் பார்த்துச் சீதையைக் கவரத்தொடங்கிய சூர்ப்பணகை இலக்குமணனால் அங்கபங்கஞ்செய்யப்பட்டுப் பட்டபாட்டை அறியாயோ? மன்மதா! பிராணநாயகி பிரிந்திருக்கின்ற சமயம்பார்த்து என்னை மிகவும் வருத்தத் தலைப்பட்டனையே! உன்னை இலக்குமணன் பார்த்தால் உன்கதி என்னுகும்?' என்றவாறும். தனது மெல்லிய மலரம்புகளை யெய்து பிரமன்முதல் எறும்பீறாக அனைத்துயிரையும் தன்வசப்படுத்தி வருகின்ற வில்வீரனை மன்மதனையும் அழிக்கவல்ல வில் வன்மையை யுடையவன் இலக்குமணனென்பது இங்கு விளங்கிற்று. இராமபிரான் ஸாக்ஷாத்பகவானது அம்சமேயாதலால் பொறுமையை மேற்கொண்டிருந்தருள்வன்: இலக்குமணனோ, பகவதம்சத்தோடு ஆதிசேஷனது அம்சமுங் கலந்தவனாதலால், சிற்சில சமயங்களிற் கோபத்தை மேற்கொள்வன்;

சித்து நசாதனும் கைகேயியுமாக இராமபிரானை வனவாசத்திற்கு அனுப்பிய போது பெருமான் இணங்கி உடனே புறப்பட்டு விட்டனனாக இளையபெருமான் அதுகேட்டவுடன் பெருஞ்சீற்றங்கொண்டு ஆயுதபாணியாய்ப் போர்க்குச்சன்னத்தனாகித் தந்தைதாயரைப்பழித்து வீரவாதங்கள் கூறிக்கொண்டு 'இராமனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்துவைத்து மறுவேலை பார்ப்பேன்' என்று தொடங்கியபோது இராமன் அவனுக்குத் தணிவுரைபலகூறி அரிதில் அவனைச் சாந்தப்படுத்தும்படியாயிற்று என்ற விவரம், அயோத்தியா காண்டத்து நகர்நீங்குபடலத்திற் பரக்கக்கூறப்பட்டது இலக்குமணன் இத்தகைய வலிமையுஞ் சீற்றமுமுடையனாதல்பற்றி அவன் பெயரைச் சொல்லி மன்மதனை வெருட்டுவானாயினன் இராமபிரான். அப்பொழுதைய கோபம் தாய்தந்தையர்மேல் தகாதவழியிற்கொண்ட தாதலால், பலபடிசொல்லித் தான் தணிக்கலாயிற்று; மன்மதன்மேற்கொள்ளுங் கோபமோ அத்தன்மையதன்றாதலால் தன்னாலுந்தணிக்கக்கூடியதன்று என்பது தோன்ற 'யாரவன் சீற்றங்காப்பார்' என்றனன்.

உயிர்த்தல் - வாய்விடுதல். வருத்தத்தால் உஷ்ணத்தோடு பெருமூச்சு விடுதல், உள்நிறைந்ததாபம் அங்கு அடங்காமல் ஒருபுறத்தால் வெளிப்படுவதாகக் கற்பிக்கப்பட்டதுபோலும். 'வாளிதூர்த்தல்' என்பது நிரம்ப எய்தலென ஒருசொல் தன்மைப்பட்டு 'உடலை' என்ற செயப்படு பொருளுக்கு முடிக்குஞ்சொல்லாயிற்று. தூர்த்தல்-நிறைத்தல். 'உள்ளம் புண்ணுற' என்பதை 'உயிர்சுட' என்றதனோடு இயைத்தலுமாம்; உள்ளம் - அந்தக்கரணமாகிய மனம். பழுது - வீண். இது பயனின்மை குறிப்பதோர் உரிச்சொல்லாதலை "பழுது பயமின்றே" என்னுந் தொல்காப்பியத்து உரிச்சொல்லியற் சூத்திரத்தாலுணர்க. இச்சொல்லுக்கு - குற்றமென்ற பொருளும் உண்டு; ஆகவே, நீ இனி வாளிதூர்த்தல் செத்தபாம்பையடிப்பதுபோலப் பெருமைக்குக்காரணமாகாது என்று உரைத்தலுமாம். இனி உள்நிறைந்து உயிர்க்கும் வெம்மையையுடைய உயிர் எரியும்படியாகவும் மனம் புண்ணுறும்படியாகவும் (என்) உடலை வாளிதூர்த்தல் (உனக்கு) அபாயத்திற்கு இடமாகும்: ஆதலால், இப்பொழுதே விலகிச்செல் என்று உரைப்பாருமுளர்.

'இனி' என்பது - எதிர்காலங்குறிப்பதோர் இடைச்சொல். எண்ணுறு கல்வியுள்ளத்திளையவன் - எல்லாக்கலைகளிலும் தேர்ந்தவன்; ஸகல கலாபாரங்கதன். எண் உறு கல்வி - பதினென்கென்றும் அறுபத்தினான்கென்றும் எண்ணப்படுகின்ற கலைகளென்றலுமாம். இங்கு 'எண்ணுறுகல்வியுள்ளத்து' என்ற விசேஷணத்தை இளையவனுக்குக்கொடுத்தது, அகங்கனாய்த்திரிகின்ற உன்னை அவன் காணவும் வல்லனென்றற்கு. 'இன்னே' என்பது, நிகழ்காலங்குறிப்பதோ ரிடைச்சொல்லாம். கண் உறுதல் - கண்பொருந்துதல்: ஒருசொல் தன்மைப்பட்டு, பார்த்தலென்னும் பொருளதாய், 'உன்னை' என்ற செயப்படுபொருளுக்கு முடிக்குஞ்சொல்லாம். அவனது சீற்றத்தை "யாவராலும், மூட்டாத காலக்கடைத்தீயென மூண்டெழுந்தான்", "கண்ணிற்கடைத்தீயுக நெற்றியிற் கற்றைநாற, விண்ணிற்சுடருஞ் சுடர்தோன்ற

மெய்க்கீர்த்திப்ப உண்ணிற்கு முயிர்ப்பெனு மூதைபிறக்க நின்ற, அண்ணற் பெரியோன் தனதாதியின் மூர்த்தியொத்தான்'' என அயோத்தியாகாண்டத்திற் காண்க., காத்தல் - தடுத்தலாதலை ''செல்லிடத்துக் காப்பான் சினங் காப்பான்'' எனத் திருக்குறளிலுங் காணலாம்.

'உலையுமுள்ளம்,' 'உலைவேனுள்ளம்', 'தூர்த்தால்', 'மார' என்பன பிரதி பேதம். (சு௨)

சுரு. வில்லும்வெங்கணையும்வீரர்வெஞ்சமத்தஞ்சினூர்மேற்
புல்லுநவல்லவாற்றல்போற்றலர்குறித்தல்போலா
மல்லுநன்பகலுநீங்காயனங்கவேயருளிற்றீர்ந்தாய்
செல்லுமென்றெளிவந்தேமைச்செயலுறுஞ்சீர்மைத்தாமோ.

(இ - ள்.) அனங்க - மன்மதனே!—வில்லும் வெங்கணையும் - வில்லும் கொடிய அம்பும், வெம்சமத்து அஞ்சினூர் வீரர்மேல் புல்லுந அல்ல - கொடிய போரில் அஞ்சினவர்களான வீரர்களின்மேற் சாரக்கடவனவல்ல: (மற்று), ஆற்றல் போற்றலர் குறித்தல் போல் ஆம் - (தனது) வலிமையை நன்குமதியாதவர்களையே உத்தேசித்தனவாகும் (அவை); (இங்ஙன மிருக்க), நீ—, அருளின் தீர்ந்தாய் - கருணையினின்று நீங்கியவனாய், அல்லும் நல் பகலும் நீங்காய் - இரவும் பகலும் (எம்மைவிட்டு) நீங்காதவனாகி, செல்லும் என்று எளிவந்தேமை செயல் - (உனதுவலிமை எம்மிடத்துப்) பலிக்கு மென்பது கருதி எளியவராகிய எம்மை (இவ்வாறு வருத்தஞ்) செய்தல், உறும் சீர்மைத்து ஆமோ- தக்கபுகழ்க்கு உரியதாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

சோர் வடைந்தவன், அச்சமுற்றவன், படை யிழந்தவன், ஒத்தபடையெடாதவன், போரிற் பின்வாங்கியவன் என்னும் இவர்கள்மேலும், மற்றும் இப்படிப்பட்ட தன்மையுடையவர்மேலும் ஆயுதஞ்செலுத்தலாகாது என்பது யுத்தவிதி. ஆற்றல் - திறமை; பலபராக்கிரமங்கள். போறறலர் - போற்றுதவர் என எதிர்மறைவினையாலணையும்பெயர்; போற்றுதல் - பாராட்டுதல், கொண்டாடுதல், புகழ்தல், துதித்தல், 'மங்கலமென்பதோ ரூருண்டு போலும்' ''நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல்வதூஉம். எரிப்பச்சுட்டெவ்வநோயாக்கும்'' என்றஇடங்களிற் போல 'போல்' என்றது - ஒப்பில்போலியாய்நின்றது; அதாவது - உவமைப் பொருளுணர்த்தாத போலென்னுஞ்சொல். ''ஒப்பில்போலியு மப்பொருட்டாகும்'' என்ற தொல்காப்பியத்தால், இது உரையசையாகு மென உணர்க; இதனை வாக்யாலங்காரமென்பர் வடநூலார். வெஞ்சமத்தஞ்சினூரை 'வீரர' என்றது, இகழ்ச்சிக் குறிப்பு. வீரர்வெஞ்சமத்து என்றுஎடுத்து வீரர்கள்செய்யுங் கொடியபோரில் என்றலுமாம். வீரர் வில்லும் வெங்கணையும் என்று இயைத்து, வீரரது வில்லும் அம்பும் என்பாரு முளர். 'ஆற்றல் போற்றலர் குறித்தல் போலாம்' என்பதற்கு - (அஞ்சினூர்மேற் படைக்கலஞ்செலுத்துதல்) வீரம்வேண்டாதாரதுகருத்தேயாமென்று உரைப்பாரு முளர்; வலிமையென்பது தன்னைப் போற்றுதவ

ரைக்குறித்ததேயா மென்று உரைத்தலுமாம். 'போற்றலர்க்குறித்தபோலாம் என்றும் பாடம் காணப்படுகின்றது.

'செல்லும் என்று எளிவந்தேமை' என்பதற்கு - 'நீர் (என்னைவிட்டுப்) போம்' என்றுவேண்டி எளிமைகாட்டுகிற எம்மையென்று உரைப்பர் ஒரு சாரார். அருளின் றிரந்தாய் - அருள்சிறிதுமில்லாதிருக்கின்றாய் என்றபடி. அல்லும்பகலும் = அஹோராத்ரம். விரகிகளுக்கு இரவுவளவு கொடியதன்றாதலால், பகலுக்கு 'நல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது பலபொருள்களைப் பார்த்துப் பொழுதுபோக்குதற்கும், காரியாந்தரங்களிற் செல்லுதற்கும் உரியதாதலாற் பகலில ஒருவாறு ஆறியிருத்தல்கூடும். அதிலுமேட்பட ஆறவொண்ணாதபடி நீ அருளின்றி எமமை வருத்துகின்றாயென்றவாறும். அநங்கன் - வடசொல்: அங்கமில்லாதவன் (ந + அங்க = அநங்க.) சிவபிரானது நெற்றிக்கண்ணின நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து ஒழிந்தமைபற்றி, இவனுக்கு இப்பெயர். செல்லுதல - பலித்தலெனனும் பொருளதாதலை "செலலாவிடத்துச் சினந்தீது சேல்லிடத்தும், இல்லதனிற் றீய பிற" எனத் திருக்குறளிலுங் காணக. எளிவந்தேம் - எளிமைபொருந்திய யாம்; தனித்தன்மைப்பனமை: இயல்புபறறியது. 'சீர்மைத்து' என்ற குறிப்பு வினையாலணையும்பெயரில், 'மை' என்றது - பகுதிப்பொருள்விகுதி.

'கணையும்வீர', 'கணையும்வாளும', 'புல்லுவ', 'ஆற்றல்போற்றலர்க்குறித்துப்போலாம்', 'எளிவந்தோர்மேறசெலுத்தலும்' எனபன பிரதிபேதம்.

புல்லுந—உ - சாரியை, ந் - பெயரிடைநிலை. சமம் - ஸமரம் என்ற வடசொல்லின் சிதைவு. (கரு)

[இராமனுக்கு இலக்குமணன் தேறுதல்கூறத் தொடங்குதல்.]

கசா. என்னவித தகைய பன்னி யீடழிந திரங்கு கின்ற
தன்னையொப் பானை நோக்கித தகையழிந தயர்ந்த தம்பி
நின்னையெத தகைமை யாக நினைநதனை நெடியோ யென்னுச்
சென்னியிற் சுமநத கையன் றேறறுவான் செப்ப லுற்றான்.

(இ - ள்.) என்ன இ தகைய பன்னி - என்று இத்தன்மையனவான வார்த்தைகளை மேனமேறசொல்லி, ஈடு அழிந்து இரங்குகின்ற - வலிமையழிந்து விசனப்படுகின்ற, தன்னை ஒப்பானை - (தனக்குச் சமானமானவரொருவருமில்லாமையால்) தனனைத் தானே ஒப்பவனான இராமபிரானை, நோக்கி பார்த்து, தகை அழிந்து அயர்ந்த-துணிவொழிந்து தளர்ச்சியடைந்த, தம்பி - தம்பியான இலக்குமணன், சென்னியில் சுமந்த கையன - (தன்) தலைமேல் (கூப்பி) வைததுக்கொண்ட கைகளையுடையவனாய், தேற்றுவான் - (அத்தமையனாரைத்) தேற்றும்பொருட்டு, (அப்பெருமானைநோக்கி), நெடியோய் - பெரியவனே! நின்னை எ தகைமை ஆக நினைந்தனை - உன்னை என்ன தன்மையையுடையவனாக நினைத்துவிட்டாய்?' என்ன - என்றுசொல்லி, செப்பல் உற்றான் - (மற்றும் சிலவார்த்தைகளை) சொல்லத் தொடங்கினான்; (எ - று.)—அவறறை, அடுத்த ஐந்துகவிகளிற் காண்க.

ஈடு அழிதல் - தேகபலமும் மனோபலமும் தளர்தல். இரங்குதல்-புலம்பு தல், பரிதபித்தல். தன்னை ஒப்பான் — உபமேயத்தையே உபமானமாகவுஞ் சொன்னது. இதைப் பின்மையணி; வடநூலார் அநந்வயாலங்காரமென்பர். ஒப்பொருளுக்கு ஒப்பு வேறொன்றுமில்லை யெனபது இதன கருத்து. 'தன்னொப்பாரில்லப்பன'', ''தனக்குவமையில்லாதான்'' என்றார் முனனோரும். 'தனனையொப்பானை நோக்கி' என்றது - 'தகையழிந்தயர்ந்த,' 'என்னு', செப்பலுற்றான்' என்பவற்றோடு சேரும். 'நெடியோய்' என்றது - பெருமைக்குணமுடையவனே யென்ற பொருளோடு அண்மு!' என விளித்த வாறுமாம். நின்னை எத்தகைமையயாக நினைந்தனை - உனது ஆற்றல் முதலிய வற்றைநோக்கி நீ இவ்வாறு இரங்கற்பாலையல்லை யென்றபடி. எனனு - உடன்பாட் டிறந்தகால வினையெச்சம். சென்னியிற் சுமந்த கையன் - கைக ளிரண்டையுங் கூப்பித் தலையின்மேல் வைத்துக்கொண்டு திரியங்கநமஸ் காரஞ்செய்தவனாய். தேற்றுவான் - தேற்றுதற்கு: எதிர்காலவினையெச்சம்; தேற்றுபவனாய் என முற்றெச்சமாகவுங் கொள்ளலாம்.

'பனிமிடருழந்திரங்குகின்ற', 'தகையழிந்தயருந்தம்பி' என்பன பிரதி பேதம். தகையை - முன்னிலையொருமைக்குறிப்புவினையாலணையும் பெயர்.

வேறு.

இதுமுதல் ஐந்துகவிகள் இலக்குமணன் கூறுந் தேறுதல் வார்த்தை.

௬௫. கால நீளிது காரு மாரியும் வந்த தென்றக வற்சியோ
நீல மேனிய ரக்கர் வீரநி னைந்த ழுங்கிய நேர்மையோ
வால சேனைம டந்தை வைகிட நாட வாரலி லாமையோ
சாலு நல்லுணர் கேள்வி வீரத ளர்ந்த தென்னைத வத்தினோய்.

(இ - ள்.) சாலும் - மிகுதியான [அல்லது சிறப்புமிக்க], நல் உணர் - நல்ல அறிவையும், கேள்வி - நூற்கேள்விகளையுமுடைய, வீர - வீரனே! தவத்தினோய் - தவவொழுக்கத்தை யுடையவனே! — கார்காலமும் நீளிது - மழைக் காலமும் நீட்சியுடையது: மாரியும வந்தது - மழையும் வந்துவிட்டது, என்ற - என்றதனாலாகிய, கவற்சியோ - கவலைதானோ? நீலம் மேனி அரக்கர் வீரம் நினைந்து அழுங்கிய நேர்மையோ - கறுத்த உடம்பையுடைய இராக்கதரது பராக்கிரமததை நினைதது மனமொடுங்குகின்ற தன்மையோ? மடந்தை வைகு இடம் நாட - பிராட்டியிருக்கின்ற இடத்தைத் தேடியுணர்தற்கு, வாலி சேனை வாரல் இலாமையோ - வாலியினால் தொகுத்துவைக்கப்பட்டதான வாநரசேனை வாராமைதானோ! தளர்ந்தது என்னை - நீ (தளர்ச்சியடைந்ததற்குக் காரணம இவற்றில்) யாது? (எ - று.)

சீதையினிடத்துக் காதலிலேயே ஊன்றியிருக்கின்ற இராமபிரானது மனததை மாற்றும்பொருட்டு இவ்வாறு விகற்பிதது வினவலானான், இவற்றில் எது உண்மையான காரணமென்பதை ஆராய்தலிற் கருததுச்செல்லவே துயரம் சிறிது தணியுமெனபது, இலக்குமணன கருதது. சோகரஸத்தை

வீரரஸத்தில் மாற்றவேண்டுமென்னுங் கருத்தினால், 'வீர' என விளித்தனன். இரண்டாமடியில் அரக்கரதுவீரத்தை யெடுத்துக்கூறியதும் இது பற்றியே. எல்லாம் அறிந்தவனும் மகாவீரனும் ஐம்பொறியடக்கும் ஆற்றலுடையவனு மான நீ இவ்வாறு தளர்ச்சியடையக் காரணமில்லை யென்பான், 'சாலு நல் லுணர் கேள்வி வீர தளர்ந்ததென்னை தவத்தினோய்' என்றான்.

கார்காலமும் நீளிது, மாரியும் வந்தது என்ற உம்மைகள் - ஒன்றை ஒன்று நோக்கி முறையே எதிரதுதழுவிய எச்சமும், இறந்ததுதழுவிய எச் சமுமாம். காலதாமதமாகும்படி இடையே மாரிக்காலம் வந்துவிட்டதே, மேற் செய்யவேண்டும் முயற்சிக்கு மழை தடையாகின்றதே யென்பதுபற்றிய கவலையோ என்பது, முதலடியின் பொருள். காரும் காலம் நீளிது - கார்ப் பருவமும் நீண்டகால முடையது என்றும் பதப்பொருளாகலாம். காலம் நீளிது - (சீதையைப்பிரிந்து) நெடுங்காலமாயிற்று: (அதனோடு) காரும் மாரி யும் வந்தது - மேகமும் மழையும் (இடையீடாய்) வந்து சேர்ந்தன என்றலு மொன்று; காரும் மாரியும் வந்தது - பன்மை யொருமை மயக்கம்: காரும் வந்தது, மாரியும் வந்தது எனத் தனித்தனி இயைக்க 'மடந்தை' என்பது - இங்கே பருவப்பெயராகாமற் பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது; அப்பரு வத்திற்கு வயதெல்லை, பதினொன்குமுதற் பத்தொன்ப தளவுமாம். வாரல் இலாமை - வருதலில்லாமை. வாரல் - தொழிற்பெயர். 'உணர்' என்றது - இயற்கையறிவையும், கல்விஞானத்தையும், தத்துவஞானத்தையுங் குறித்தது. கேள்வியாவது - கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட் டல்; இது, கல்வியினாலாகிய அறிவை வலியுறுத்தும். "ஞான மனுட்டான மிவை நன்றாகவே யுடையனான குரு"வினிடம் உபதேச மொழிகளைக் கேட்டலையும் உணர்த்தும்; அது, சிரவண மெனப்படும். முதற்பொருளை யுணர்தற்கு உபாயமான கேள்வி விமரிசம் பாவனை என்பவற்றுள் முதலதாத லால், 'நல்உணர் கேள்வி' எனபதற்கு நல்லதத்துவஞானத்திற்குக் காரண மான கேள்வி யென்றும் பதவுரை கொள்ளலாம். மரவுரியுடுத்தலும் சடை முடிதரித்தலுமாகிய தவவேடத்தைப் பூண்டு வானப்ரஸ்தாச்ரமதர்மம் போன்ற ஒழுக்கத்தையுடையனாதல் பற்றி, 'தவத்தினோய்' என விளிக்கப்பட்டனன். 'வாலிசேனை' என்றது, அதன்சிறப்பைக் காட்டும்.

'அழுங்கியநீர்மையோ,' 'வாரலதாகவோ' என்பன பிரதிபேதம். நீளிது - நீட்சியையுடையது.

இதுமுதல் ஆறு கவிகள் - முதல் மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட எழுசீ ராசிரியவிருத்தங்கள். (கரு)

கூகூ. மறைதுளங்கினுமதிதுளங்கினும்வானுமாழ்கடல்வையமுந்
திறைதுளங்கினுநிலைதுளங்குறுநிலைமைநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவவனையபேரெயிறுடையபேதையர்பெருமைநின்
னிறைதுளங்குறுபுருவமென்சிலையிடைதுளங்குறவிசையுமோ.

(இ - ள்.) மந்நற துளங்கினும் - வேதங்கள் பிறழ்வனவானாலும், மதி துளங்கினும் - சந்திரன் நிலைதவறுவதானாலும், வானும் ஆழ் கடல் வையமும் நிறை துளங்கினும் - ஆகாயமும் ஆழ்ந்த கடல்சூழ்ந்த பூமியும் நிலைதவறுவன வானாலும், நிலை துளங்குறு நிலைமை நின்வயின் நிற்குமோ - இயற்கைநிலை கலங்குந்தன்மை உன்னிடத்தில் உண்டாகக்கடவதோ? [அன்று என்றபடி]; பிறை துளங்குவ அனைய - பிறைகள்பல விளங்குவன போன்ற, பேர் எயிறு உடைய - பெரிய பற்களையுடைய, பேதையர் - நல்ல அறிவில்லாதவர்களான இராக்கதர்களுடைய, பெருமை - பெருமையானது—நின் - உன்னுடைய, இறை துளங்குறு புருவம் என் - மேன்மைவிளங்கும் புருவங்க ளென்கிற, சிலை - விற்கள், இடை துளங்குற - நடுவிடம் அசைந்த மாத்திரத்தில், இசையுமோ - பொருந்தி நிற்குமோ? [நிற்கமாட்டாது என்றபடி]; (எ - று.)

துளங்குதல் - நிலைகலங்குதல், ஒளிசெய்தல், அசைதல். வேதங்கள் பிறழ்தலாவது - உயர்கதி பெறுதற்குஉரிய மனிதர்க்கு வேண்டும் உறுதிப் பொருள்களை யுணர்த்துதற்கென்றே அமைந்தவையும் எம்பெருமானது கட்டளைரூபமுமான வேதங்கள் அங்ஙனம் நல்வழிதீவழி தெரிவிப்பதில் நிலை தடுமாறுதல்; அதாவது - செய்யவேண்டுவனவற்றை விலக்குதலும், தவிர வேண்டுவனவற்றை விதித்தலும். சந்திரன் நிலைதவறுவதாவது - எம்பெருமானது சங்கற்பத்தின்படி நாள்தோறும் உரியகாலத்தில் உதித்து அஸ்தமிக்கும் முறைமை பூண்ட சந்திரன் அம்முறைமை தவறுதல். சந்திரனைக் கூறியது, மற்றைக் கிரக நக்ஷத்திரங்களுக்கும் உபலக்ஷணம். உதயாஸ்தமனகாலங்கள் நாள்தோறும் மிகவும் வேறுபடுவனவாக விளங்கியும் நியமந்தவறாதிருத்தலாகிய விசேடம்பற்றி, சந்திரனை எடுத்துக்கூறினர். நிறை - நிலை, உறுதிப்பாடு. வான் நிறைதுளங்குதல் - ஆகாயம் எல்லாப் பொருள்கட்கும் இடங்கொடுத்தலும், ஒலியைத் தன்குணமாகவுடைமையும், வடிவமில்லாமையும் முதலிய இயல்புகள் மாறுதல். வையம் நிறைதுளங்குதல் - பூமி வன்மையும், பொருள்கட்கு இடமாதலும், மணத்தைக் குணமாகவுடைமையும் முதலிய இயல்புகள் மாறுதல். பஞ்சபூதங்களுட் காரணமாய் முதலதாகிய வானத்தையும் காரியமாய் ஈற்றதாகிய வையத்தையுங் கூறவே, இடைப்பட்டனவான வாயு அக்கினி ஜலம் என்னும் மற்றைமூன்று பூதங்களையுங் குறித்தவாறும். இப்படி அஸம்பாவிதமான செயல்களெல்லாம் நேர்ந்தாலும் உனது உறுதிநிலை மாறக்கடவதன்றே யென்பது, முதலிரண்டடியின் பொருள். இதனை, "வேலை கரையிழந்தால் வேதநெறி பிறழ்ந்தால், ஞால முழுது நடுவிழந்தால் - சீலம், ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை, யழிவரோ செங்கோலவர்" என்றாற்போலக் கொள்க.

விற்போல வளைந்துள்ள நின்புருவங்களை நீ கொள்ளுங்கோபத்தால் சிறிது நெறித்தமாத்திரத்திலே அரக்கர்கள் பலம், பராக்கிரமம், ஆயுதம், சேனை, செல்வம், வரம் முதலியவற்றாலாகிய பெருமைகளெல்லாம் ஒழியத் தாமும் அழிந்திடுவ ரென்பது பின்னிரண்டடியின் பொருள். புருவமென் சிலை எனற்விடத்து, 'என்' என்றது-உருவகவுருபு. இனி, புருவம் மென் சிலை.

ன்றுஎடுத்து, புருவங்களாகிய 'மெல்லிய விற்களென்று' பொருள்கொள்ளுதலுமாம்; அரக்கர் பெருமை அழிதற்கு நினது கோதண்டமாகிய வலிய வில் வளைந்து அசையவேண்டு மென்பதில்லை. நினது புருவங்களாகிய மெல்லிய விற்கள் நெறித்து அசையுமளவே போது மென்றதாம். பேதையர் - அறிவிலார். இராமபிரானது வல்லமை தமது வலிமைகளினும் மிகவும் மேலான தென்று உணராமல், அப்பெருமானுக்குத் தீங்குசெய்யத் தொடங்கியதனால், அரக்கர் 'பேதையர்' எனப்பட்டனர். பிறை - கலைகுறைந்தசந்திரன். இளஞ் சந்திரன். அரக்கரது கோரதந்தத்திற்குப் பிறைச்சந்திரன் - வளைந்தவடிவிலும், வெண்ணிறத்திலும் உவமம். அக்கோரப்பற்கள் பலவாதலால், அவற்றிற்கு ஒப்பாதற்பொருட்டு இல்பொருளுவமையாகப் பல சந்திரப்பிறைகள் கொண்டு, 'பிறைதுளங்குவவனைய பேரெயிறு' என்றார்.

மறை - (சிலசாதியார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதுவிக்கவும் ஓதவும் கேட்கவு மாகா தென்று) மறைக்கப்படுவது; மறு - பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி. இனி, (எளிதில் உணரலாகாதபடி ஆழ்ந்த) மறைபொருளையுடைய தென்றுங் காரணப்பொருள்கொள்ளலாம். 'துளங்கினும்' என்றவற்றி லுள்ள உம்மைகள் - எண்ணுப்பொருளோடு அவை துளங்காவென எதிர்மறைப்பொருளையுங் காட்டும். மதி - நன்கு மதிக்கப்படுவது; அன்றி, மது - தேன்: இங்கு அமிருதகிரணம்; அதனையுடையது மதி யென ஏதுப்பொருள்கூறுதலுமாம். வையம் - (பொருள்களை வைக்குமிடமெனப் பொருள்படுங் காரணக்குறி. 'இறை' என்பதை இயல்பாகிய அண்மைவிளியாகக் கொண்டு, தலைவனே யென்று உரைத்தலு மொன்று. 'இடை துளங்குற' என்பதற்கு - முன்னும்பின்னு மில்லாமல் நடுவிற் சிறிது பொழுது அசைந்தாலென்று உரைத்தலுமாம். 'சிலை யிறை துளங்குற' என்ற பாடத்திற்கு-வில் சிறிது பொழுது அசைய வென்று பொருளாம், இறை - கால விரைவு. முதலடியில், நகரவொற்று - விரித்தல்.

'புருவவெஞ்சிலை,' 'துளங்குற வியலுமோ' என்பன பாடபேதம். (௯௬)

௯௭. அனுமனென்பவனளவறிந்தனமறிஞவங்கதனாதி யோ
ரனையரென்பதொரிறுதிகண்டிலமெழுபதென்றெணுமியல்பினர்
வினையின்வெந்துயர்விரவுதிங்களும்விரவுசென்றனவெளிதினின்
றனுவெனுந்திருநதிவந்தனள்சரதம்வன்றுயர்தவிர்தியே.

(இ - ள்) அறிஞ - அறிவுடையவனே!—அனுமன் என்பவன் அளவு அறிந்தனம் - அனுமான் என்பவ னொருவனுடைய (அறிவு பெரு வடிவு கொள்ளுந்திறம் வலிமை முதலியவற்றின்) அளவை அறிந்தோம்: அங்கதன் ஆதியோர் - அங்கதன் முதலானவர்களாகிய, எழுபது என்று எணும் இயல்பினர் - எழுபது வெள்ளமென்று எண்ணிச் சொல்லப்படுந் தகுதியுடையவர்கள், அனையர் - அறிவு பெருவடிவு கொள்ளுதல் வலிமை முதலியவற்றில், எத்தன்மை யுடையோர், என்பது ஓர் இறுதி - என்கிற ஒரு வரையறையை, கண்டிலம் - அறிந்தோமில்லை; வினையின் - தீவினைபோல, வெம் துயர்

விரவு - கொடிய துன்பந்தருந்தன்மை பொருந்திய, திங்களும் - (மழைக் கால) மாதங்களும், விரைவு சென்றன - விரைவிற் கழிந்து போகலாயின; (இனி),—நின - உன்னுடைய, தனு எனும் திரு நுதலி - (ஒப்புமையால்) வில்லென்று சொல்லத் தக்க அழகிய புருவங்களை யுடைய மனைவியான ஜாநகிப் பிராட்டி, எளிதில் வந்தனள் - சுலபத்தில் வந்து சேர்ந்தவளாவள்; சரதம் - (இது) நிச்சயம்; (ஆதலால்), வல் துயர் தவிர்தி - கொடிய துன்பம் நீங்குவாயாக; (எ - று.)

அனுமானோடு ஸம்பாஷித்ததனாலும் அப்பொழுது அவன் பெருவடிவங் கொண்டு காட்டக் கண்டதனாலும் அவனுடைய அறிவு பெருவடிவுகொள்ளுந் திறம் வலிமை முதலியவற்றை நேராக உணர்ந்தமைபற்றி 'அனுமனென்பவனளவறிந்தனம்' என்றும், மற்றை அங்கதன் முதலிய வாநரவீரர்கள் எழுபது வெள்ளமெனனுந் தொகையுடைய சேனைபதை அனுமான வார்த்தையாலும் சுக்கிரீவன்சொல்லாலும் அறிந்ததேயன்றி அவர்களுடைய அறிவு திறம் வலிமை முதலியவற்றை நேராகக் கண்டுணரச் சந்தர்ப்பம் வாய்க்காமை பற்றி 'அங்கதனாதியோர் எழுபதென்றெணுமியல்பினர் எனைய சேனைபதொரிறுதி கண்டிலம்' என்றுங் கூறினன். இதனால், காண நேருமிடத்து அவர்களுடைய அறிவுமுதலியனவும் அனுமானுடையனபோலவே யிருத்தல் கூடுமெனபதை யுணர்த்தித் தேறுதல் கூறினானும். சென்றன வந்தனள் என்றது - விரைவும் நிச்சயமும் பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி.

அனுமன - ஹநுமாந் என்ற வடசொல்லின் விகாரம். வாயுவின அம்சத்தோடு ருத்திராம்சமு முடையனான இவன, பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்த பழமென்று கருதிப் பிடித்தற்குப் பாய்ந்த பொழுது, அதனையறிந்து கோபங்கொண்ட இந்திரனது வச்சிராயுதத்தினால் அடிக்கப்பட்டுச் சிதைந்த கன்னமுடையவனானதனால், இவனுக்கு 'ஹநுமாந்' என்று பெயராயிற்று; ஹநு - கன்னம், மாந் - வடமொழிப்பெயர்விகுதி. இவனுக்கு இப்பெயர் இந்திரனால் இடப்பட்டது. இவன - சுக்கிரீவனுக்குச் சிநேகிதனும், மந்திரியுமானவன. ஏழு சிரஞ்சீவிகளுள் ஒருவன்; (மற்றையோர் - அசுவத்தாமா, பலிசக்கரவர்த்தி, வியாஸன், விபீஷணன, கிருபாசாரியன், பரசுராமன் என்பவர். சிரம் ஜீவி - நெடுங்காலம் [அதாவது கல்பகாலமளவும்] பிழைத்திருப்பவன்.) அனுமான, நித்தியப்பிரமசாரி. இவனுக்கு 'திருவடி' என்று ஒருதிருநாமம் ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் வழங்குகின்றது: அதற்குக்காரணம், இவன் எம்பெருமானது திருவடிக்கு அடியவனாயிருத்தல். அனுமானைச் சிறியதிருவடி யென்றும், கருடாழ்வாரைப் பெரிய திருவடி யென்றும் வழங்குதல், மரபு. இராமாவதாரத்தில் மாத்திரம் திருமாலுக்கு அனுமான் அடிமையாய் உதவுதலும், எப்பொழுதும் திருமாலுக்குக் கருடன் அடிமையாய் உதவுதலுமாகிய வேறுபாடு, அதற்குக் காரணம்.

'என்பவன்' என்றது, பகுதிப்பொருள் விகுதியாய் நின்றது; எனப்படுபவன் எனச் செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை யெனக்

கொண்டு, ஊரெனப்படுவது உறையூர்' என்றாற்போல என்று சிறப்பித்துக் கூறப்படுபவனது எனப் பொருள் கொள்ளலுமாம். இறுதி - எல்லை. 'எழுபது' என்றது - இலக்கணையாய் எழுபது வெள்ளத்தைக் குறித்தது. வெள்ளத்திற்கு ஒருவராக எழுபது வெள்ளத்திற்குந் தலைமைபூண்ட எழுபது படைத்தலைவர்களை மாத்திரமே 'எழுபதென்றெண்ணுமியல்பினர்' என்று குறித்ததாகவுங் கொள்ளலாம். திருநுதலி - அழகிய நெற்றியை யுடையவளென்றுமாம்; அதற்கும் வளைந்தவடிவில் வில் உவமை கூறப்படும். தனு - தநுஸ் என்ற வடசொல்லின் விகாரம். தநு எனனும் வடசொல்லின் திரிபெனக் கொண்டு, (உனது) வடிவத்தி லொரு கூறென்று சொல்லத்தக்க பிராட்டியென்றலு மொன்று; இப்பொருளில், 'தனுவெனும்' என்றது - நுதலிக்கு அடைமொழி: முந்தின பொருளில், நுதலுக்கு அடைமொழி.

'அனுமனென்பவ னறிவறிந்தனை யறிதி யங்ஙனமமைதியோ', 'அறிஞனங்கத னுதியோ', 'எனைவ ரெனபதொரிறுதி', 'எழுப தெனபதோர் பரவையோ', 'எழுபதெனவெழு பரவையோ', 'எளிதினிற் றனுவெனுந் திருநுதலி' எனபன பாடாந்தரம். (கூஎ)

கூஅ. மறையறிந்தவர்வரவுகண்டுமைவலியும்வஞ்சகர்வழியொடுங்
குறையவென்றிடர்களைவெனென்றனைகுறைமுடிந்ததுவிதியினு
லிறைவவங்கவரிறுதிகண்டினிதிசைபுனைந்திமையவர்கடா
முறையுமும்பருமுதவிநின்றருளுணர்வழிந்திடலுறுதியோ.

(இ - ள்.) இறைவ - தலைவனே!—(முன்பு), மறை அறிந்தவர் வரவு கண்டு - வேதங்களை யுணர்ந்தவர்களாகிய (தண்டகாரணிய வாஸிகளான) முனிவர்கள (உன்னிடம்) வந்து சரணமடைந்ததை (நீ) பார்த்து, (அவர்கட்கு), உமை வலியும் வஞ்சகர் வழியொடும் குறைய வென்று இடர் களைவென் என்றனை - 'உங்களை வலியவருத்துகின்ற வஞ்சனையுடையவர்களான அரக்கர்கள் சந்ததியோடும அழியும்படி அவர்களைச் சயித்து (உங்கள்) துன்பங்களை நீக்குவேன்' என்று வாக்குதத்தஞ் செய்தருளினாய்; (அதற்கு ஏற்ப), விதியினால் குறை முடிந்தது - விதிவசமாக (அவ்வரக்கர்களால் உனக்கும்) குற்றஞ்செய்யப்பட்டது; (ஆதலால் இனி), அங்கு அவர் இறுதி கண்டு - அத்தன்மையரான அவ்வரக்கர்களுடைய அழிவைச் செய்து, இனிது இசை புனைந்து - இனிமையாகக் கீர்த்தியைப் பெற்று, இமையவர்களும் தாம் உறையும் உம்பர் உதவி நின்றருள - தேவர்கட்கும் அவர்கள் வசிக்கு மிடமான தேவலோகத்தை (உரியதாக)க் கொடுத்தருளி நிற்பாய்; (அதனை விட்டு), உணர்வு அழிந்திடல் உறுதியோ - அறிவழிந்து திகைப்பது தகுதியோ? [அன்று என்றபடி]; (எ - று.)

இராமபிரான் மனைவியோடும் தம்பியுடனும் வனவாஸம்புறப் பட்டுத் தண்டகாரணியத்திற்கு எழுந்தருளி விராதனை வதைத்துச் சரபங்கமுனிவர்க்குப் பரமபதமளித்து அப்பாற் செல்லும்போது, அவ்வனத்தில் வஸிப்பவர்களான வாலகில்யர் முதலிய முனிவர்கள் எதிர்கொண்டுவந்து உபசரித்து,

அரக்கர்களால் தங்கட்கு உண்டான துன்பங்களைத் தெரிவித்து இராமபிரானைச் சரணமடைய அப்பெருமான் தான் அரக்கர்களை விரைவில்வேரறுத்து விடுவதாக உறுதிமொழிகூறி அம்முனிவர்கட்கு அபயமளித்தனனென்பது ஆரணியகாண்டத்திற் கூறப்பட்டது. 'நமக்கு நேரில் தீங்குசெய்யாதவர்களை நாம் அழிக்கவேண்டுமே' என்று சிறிதும் ஆலோசிக்கவேண்டாதபடி அவ்வரக்கரால் உனக்கும் தீங்கு நேர்ந்ததென்பதை 'குறைமுடிந்தது விதியினால்' என்றதனால் உணர்த்தினன். குறை - இங்கே, சீதையைக்கவர்ந்தமை. லோககண்டகரான அவ்வரக்கரை அழிப்பதற்கு ஒருவியாஜமாக இச்சீதாபஹாரணம் நேர்ந்ததை நல்லதாகக்கொள்ளவேண்டுமென்பது, குறைமுடிந்தது 'விதியினால்' என்றதனாற் போதரும். இராவணன் இந்திராதி தேவர்களை வென்று அவர்களுடைய ஸ்தானங்களைக் கவர்ந்துள்ளானதலால், 'இமையவர்கள்தாம் உறையுமும்பருமுதவி' எனலாயிற்று.

வஞ்சகர் - மாயையுடையோர். இறைவன் - இறைமையென்னும் பண்பினடியாப் பிறந்த பெயர். இமையவர் - இமையில் விசேடமுடையவர்; அதாவது மூடாத இமையையுடையவர். 'உணர்வழிந்திடவொழிதியால்' என்பதும் பாடம். (௬௫)

௬௬. காதுகொற்றநினக்கலாதுபிறர்க்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரதையன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டிதோர்பொருளன்றியின்றுபுணர்தியேல்
யாதுனக்கியலாதவெந்தைவருந்தலென்னவியம்பினான்.

(இ - ள்.) எந்தை - எமது ஐயனே!—காது கொற்றம் - (பகைவரை) அழிதலாலாகும் வெற்றி, நினக்கு அலாது - உனக்கே உண்டாகுமல்லாமல், பிறர்க்கு எ ஆறு கலக்குமோ - அயலார்க்கு [அந்த அரக்கர்கட்கு] எப்படி உண்டாகுமோ? [உண்டாகாதெனறபடி]; வேதனைக்கு இடம் ஆதல் - வருந்துதற்கு இடமாவது, வீரதை அன்று - வீரத்தன்மையாகாது: பேதைமை ஆம் அரோ - (அது) எளிமையின்பாற்படுமன்றோ? போது பின்படல் இது ஓர் பொருள் உண்டு - காலத்தை அநுஸரித்தலாகிய இச்செய்கையொன்று (வழக்கத்தில்) இருக்கின்றது; அன்றி - அதனைப் பாராட்டாமல், இன்று புணர்தியேல் - இப்பொழுதே முயற்சிசெய்வையானாலும், உனக்கு இயலாதது யாது - உனக்குச் சாத்தியமாகாதது யாது உளது? [எதுவுமில்லையென்றபடி]; (ஆகவே), வருந்தல் - வருந்தாதே, என்ன இயம்பினான் - என்று (இராமபிரானை நோக்கி இலக்குமணன்) கூறினான். (எ - று).

காது கொற்றம் - காதுதலாறபெறுங் கொற்றம்; காலங்கரந்தபெயரெச்சம் [வினைத்தொகை], காரணப்பொருளில் வந்தது: காதுதல் - அழித்தல். வீரதை - வீரதா என்ற வடசொல். ஆவீறு ஐயாயிற்று. 'வீரதை அனறு' என்பதற்கு - வீரத்தன்மையாகாமல் எனறும் பொருள்கொள்ளலாம்; 'அன்றி' என்னும் வினையெச்சம் செய்யுளில் 'அன்று' என ஈறுதிரியும்; அதன்முன் வலி இயல்பாம்; "அன்றி யின்றி யென் வினையெஞ்சிகரம், தொடர்பினு

ஞாகர மாய்வரி னியல்பே'' என்பது காண்க. பேண்தமை - அறிவின் மையுமாம். அரோ - தேற்றம். பகைவரை வெல்லக்கருதும் அரசர் அதற்கு ஏற்றகாலத்தை இன்றியமையாததாகக்கொள்ளும் வழக்கப்படி இம்மழைக் காலங்கழிவதை எதிர்பார்க்கலாயிற்றே யன்றி உனது பேருந்திறத்திற்கு எப்பொழுதும்வெற்றிவாய்ப்பதிற் சந்தேகமில்லை யென்றுசொல்லித் தேற்று வான், 'போதுபிற்படலுண்டிதோர்பொரு ளன்றி யின்று புணர்த்தியேல் யானுனக்கியலாதது' என்றான். திருக்குறளில் ''இகல்வெல்லும் வேந்தர்க்கு வேண்டும் பொழுது'' என்றவிடத்தில் பரிமேலழகர் 'காலமாவது - வெம் மையும் குளிர்ச்சியும் தம்முளொத்து நோய்செய்யாது தண்ணீரும் உணவும் முதலிய உடைத்தாய்த் தானை வருந்தாதுசெல்லு மியல்பினதாம்' என்றது காணத்தக்கது. பிற்படல் - பின்போதல். போது பிற்படல் உண்டு - காலத்தை அநுஸரித்தலென்பதொன்று உண்டு: இது ஓர் பொருள் அன்றி - இதனை முக் கியமான தொன்றாகக் கொள்ளாமல் என்றும்; போது பிற்படல் உண்டு - (வேதனைக்கு இடமாதலாற்) பொழுது வீணேகழிந்து போவதுமாம்: இது ஓர் பொருள் அன்றி - இப்படிவருந்துதலை ஒருகாரியமாகக் கொள்ளாமல் என்றும்; போது பிற்படல் உண்டு - இம்மழைக்காலம் விரைவிற் கழிந்து போவது: இது ஓர்பொருள் அன்றி - இந்தச்சீதாவிரகத்தையே முக்கியமாகக் கொள்ளாமல் என்றும் பொருள்கொள்ளலாம். புணர்த்தல் - உபாயஞ்செய்தல். தமையன் தந்தைக்குச் சமான னாதலால், அவனை 'எந்தை' என விளித்தல் தகும். வருந்தல் - எதிர்மறைவியங்கோள்.

'பிறர்க்கிவ்வாறுகலக்குமோ', 'பிறர்க்குவந்துகலக்குமோ', 'நினக்க லாமை', 'வீரமதன்று', 'வேதனைக்கிடமான வீரமதன்றுதீர்வதுநன்றரோ', 'பொருளன்று நின்றுபுணர்த்தியேல்', 'இன்றுதுணிந்திடில்' என்பன பிரதி பேதம். (சுக)

[இராமன் சிறிது ஆறுதலும், பின் பெயல்மாரி தொடங்குதலும்.]

௭0. சொற்ற தம்பியு ரைக்கு ணர்ந்துயிர் சோர்வொ டுங்கிய தொல்லையோ, னிற்ற வின்னலி யக்க மெய்திட வைகல் பற்பல வேக மே, லுற்று நின்றவி னைக்கொ டும்பிணி யொன்றின் மேலுட னொன் றாய், மற்றும் வெம்பிணி பற்றி னாலென வந்தெ ழுந்தது மாரியே.

(இ - ள்.) உயிர் சோர்வு ஒடுங்கிய தொல்லையோன் - (சீதையைப்பிரிந்த சமயத்திற் கார்கால வரவினால்) உயிர்தளர்ச்சியடைந்தமைபற்றி ஒடுங்கிநின்ற அநாதியான ஸ்ரீமந் நாராயணனது திருவவதார மூர்த்தியாகிய இராமபிரான், சொற்ற தம்பி உரைக்கு உணர்ந்து - (இவ்வாறு தேறுதல்) கூறிய தம்பியான இலக்குமணனது வார்த்தைகளினால் உணர்ச்சிபெற்று, இற்ற இன்னல் - நீங் கிய துன்பத்தோடு [துன்பம்நீங்கியவனாய்] இயக்கம் எய்திட-புடைபெயர்ச்சி யடைய—வைகல் பல் பல ஏக - (அவ்வாறே) பலபலநாள்கள் கழிய,—மேல் - பின்பு, உற்று நின்ற வினை கொடும் பிணி ஒன்றின்மேல் மற்றும் வெம் பிணி ஒன்று உடன் உறாய் பற்றினால் என - உண்டாகி நின்ற தீவினைபோலக்

ளுமாம். அம்மகளிரழகைக்கண்டு அவர்களிடம் காதல்கொண்டு அக்காம தாபத்தால் தபிக்கின்ற ஆடவர்களின்மேல், அம்மாதர்கள் உடம்பைச் சூழ உடுத்த ஆடையின்மேலும் அவர்கள் இருந்து ஆடும் ஊசலின்மேலும் பட்டு வருகின்ற வாடைக்காற்று வீசி அவர்கட்கு மிக்க வெப்பத்தைத் தருதற்கு, தீப்பட்டு வெந்ததனாலாகிய புண்ணிலே கூரிய அம்பு வீழ்ந்து வருத்தத்தைமிகு வித்தலை உவமைகூறினர். உவமையணி. இனி, தூசுதொடர் ஊசல் தொடர் வுற்று என்பதற்கு - ஆடை தொடர்ச்சியாய் அசையுமாறு (அதனைச் சார்ந்து என உரைத்தலும் அமையும்.

இழை - இரத்தினங்களிழைத்துச் செய்யப்பட்டது என ஆபரணத்திற் குக் காரணக்குறி. நனி - உரிச்சொல். கூர்மைக்குக் குற்றம், மழுங்குதல். 'ரம்பா' என்பது ஒருதேவமாதின்பெயராதலால், அவ்வடசொல்லின் விகார மான 'அரம்பை' என்பதன் பன்மையாகிய 'அரம்பையர்' என்பது தேவ மாதரை யுணர்த்தும். 'பாசிழை மடந்தையர்' என்பதும் பாடம். (எ௨)

எ௩. வேலைநிறைவுற்றனவெயிற்கதிர்வெதுப்புஞ்
சீலமழிவுற்றபுனலுற்றுருவுசெப்பிற்
காலமறிவுற்றுணர்தல்கன்னலளவல்லான்
மாலைபகலுற்றதெனவோர்வரிதுமாதோ.

(இ - ள்.) வேலை நிறைவுற்றன - கடல்கள் நிரம்பின; வெயில் கதிர் - சூரியனுடைய கிரணங்கள், வெதுப்பும் சீலம் அழிவுற்ற - தபிக்கின்ற இயற் கை யழிந்தன; புனல் உற்று உருவு செப்பின்-(அடியிலுள்ள சிறுதுவாரவழி யாக) நீர் வந்துசேரப்பெறும் நாழிகைவட்டிலைக்கொண்டு, கன்னல் அளவு - நாழிகைக்கணக்காக, காலம் அறிவுற்று உணர்தல் அல்லால் - காலத்தை அறிய முயன்று அறிவதே யல்லாமல், மாலை பகல் உற்றது என ஓர்வு அரிது - இராத்திரிவந்தது பகல்வந்தது என்று அறிதல் அரிதாயிற்று; (எ - று.)—மாது, ஓ - ஈற்றசை.

"நெடுங்கடலுந் தன்னீர்மைகுன்றுந் தடிந்தெழிலி, தானல்காதாகி விடின்" என்பவாதலால், 'மழையினால் வேலைநிறைவுற்றன' என்றார். இத் திருக்குறளினுரையிற் பரிமேலழகர் தன்இயல்புகுறைதலாவது - நீர்வாழுயிர் கள் பிறவாமையும், 'மணிமுதலாயின படாமையுமாம்' என்றாராதலின், அவ்வகைக்குறைகள் இலவானதை 'வேலைநிறைவுற்றன' என்றாரென்ன லாம். மழைக்குமுதலான கடற்கும் மழைவேண்டு மென்பதாயிற்று. இனி, கடல்கள் நீர்நிறையப்பெற்றன வெனினும் இழுக்காது; சிலப்பதிகாரவுரை யில், அடியார்க்குநல்லார் 'முந்நீர் - கடல்: ஆகுபெயர் ஆற்றுநீர் ஊற்றுநீர் மேனீர் என இவை யென்பார்க்கு, அற்றன்று; ஆற்றுநீர் மேனீராகலானும், இவ்விரண்டுமில்வழி ஊற்றுநீரும்இன்றாமாகலானும், இவற்றை முந்நீரென் றல் பொருந்தியதன்று. முதியநீரெனின், "நெடுங்கடலுந் தன்னீர்மைகுன் றும்" என்பதனால் அதுவும் மேனீரின்றி அமையாமையின், ஆகாது" என்றது காண்க.

அப்பெருமழைக்காலத்திற் சூரியகிரணங்களாற் சிறிதும் வெப்பம் உண்டாகவில்லை யென்றது இரண்டாம் வாக்கியம்.

நாழிகை வட்டிலாவது - ஆழமுள்ள ஒருபாத்திரத்திலே நீரைநிறைத்து அதிலே பிரமாணப்படிசெய்து அடியிற் சிறுதுளையிட்டிருக்கும் தாமிரவட்டிலை விடுக்கில் அத்துளைவழியே நீரேறி உள்ளேநிரம்ப அவ்வட்டில் அமிழ்வது ஒருநாழிகை யெனக்கொண்டு காலத்தை அளவிடுதற்குரிய கருவி. 'பன்னிரண்டரைப்பலம் எடையுள்ள தாமிரத்தைக்கொண்டு மகததேசத்தின் ஒருபடியளவாகச் செய்யப்பட்டதும், இருபது குன்றிமணி யெடையுள்ள பொன்னினால் நாலங்குலவளவாகச் செய்த சலாகை கொள்ளுமளவாக அடியில் துளையிடப்பட்டதுமான ஒருபாத்திரத்தைத் தண்ணீரில்இட அப்பாத்திரம் எவ்வளவு காலத்தில் தண்ணீரால் நிறையுமோ அவ்வளவுகாலம் ஒருநாழிகை யென்று அறியப்படும்' என்ற ஸ்ரீ விஷ்ணுபுராணம் இங்கு நோக்கத்தக்கது. "வீறுறு நான்குமாடமாமளவை விளங்குசெம்பொன் காவிரல்கள், கூறிய நான்கினீளம தாக்கிக்கொண்டு நீள்சலாகைகொள் புழையா, ஆறெனுந்தொடி சேர்செம்பினூழி யமைவுறவமைதத வள்ளத்தைத, தேறியநீர்மேற்சேர்ப்பு வங்காழிற்சென றதோர் கடிகையென் றுரைப்பர்" என்ற ஸ்ரீ பாகவதத்தையுங் காண்க. அப்பெருமழைக்காலத்திற் காளமேகங்கள் வானமுழுவதும் படர்ந்து கவிந்துகொண்டதனால் எங்கும் இருண்டமைபற்றிச் சூரியனது உதயாஸ்தமனங்கள் தெரியாமற்போகவே, அடியிற் சிறு துவாரமுடையதும் நீரிற்பெய்யபட்டு நாழிகையின் வரையறையைத் தெரிவிப்பதுமான ஒருவகைக் கிண்ணத்தைக்கொண்டு ஒவ்வொரு நாழிகையாகக் கணக்கிட்டுக் காலத்தை முயன்று உணர்ந்தாலன்றி இரவு வந்ததென்றும் பகல் வந்ததென்றும் எளிதில் அனைவரும் உணர்தல் இயலாதாயிற்று என்பது, மூன்றும் வாக்கியத்தின் கருத்து. "குறுநீர்க்கன்ன லெண்ணுநரல்லது, கதிர்மருங் கறியா தஞ்சுவரப் பாய்தலின" எனபது அகநானூறு. புனல் உற்று உருவுதல்-சிறு துவாரத்தின வழியாக நீர் நுழைந்துசெல்லுதல். இனி, 'புனல் உற்று உருவு செப்பு' என்பதற்கு - நீர்நிறைந்து அழுந்துகின்ற கிண்ண மென்று உரைப்பாரு முளர்.

'உற்றது' என்ற ஒருமைவினைமுற்றை, 'மாலை உற்றது' என்றும், 'பகல், உற்றது' என்றும் தனித்தனி கூட்டி முடிக்க; ("நத்தம்போற் கேடும் உளதாகுஞ் சாக்காடும், வித்தகர்க்கல்லா லரிது" என்ற திருக்குறளி னுரையில் அரிது என்பதனைத் தனித்தனி கூட்டியுரைக்க' என்றார் பரிமேலழகரும்: இவ்வாறு ஒருமைச்சொல்லை வாக்யபேதமாகத் தனித்தனி கூட்டிமுடிப்பதனைத் தேர்வடமிழுப்பார்போல ப்ரத்யேகபந்தாந்வய மென்பர் வடநூலார்.) 'அரிது' என்ற முற்றிற்கு 'ஓர்வு' என்ற தொழிற்பெயர் - எழுவாய். இனி, ஓர்வு அரிது - ஓர்தற்கு அரியது எனக்கொண்டால், காலமென்பது எழுவாயாம். உருவு செப்பு - வினைத்தொகை. செப்பின்-இன் ஐந்தனுருபு, ஏது.

இனி, 'புனலுற்றுருகுசெப்பின்' என்றும் பாடம் காணப்படுகின்றது; அதற்கு, புனல் உற்ற உருகுசெப்பின் என்று எடுத்து, நீர்பட்ட உருகிய தாமிரம் போலவென்று பொருள்கொண்டு, அதனை 'வெயிற்கதிர் வெதுப்புஞ்

சிலமழிவுற்ற' என்றதனோடு கூட்டி, அனலிற்பட்டு உருகித் தாபங்கொண்ட செம்பு நீர்ப்பட்டதனால் வெப்பம் மாறித் தட்பமடைந்தாற்போலச் சூரியனது உஷ்ணகிரணங்கள் பெருமழையினால் வெப்பம் மாறித் தட்பமடைந்தன, வென்று கருத்து உரைக்கவேண்டும்; உற்றுருகு - பெயரெச்சவீறு தொகுத்தல். இங்ஙனம் உரைக்குமிடத்து, 'கன்னலளவு அல்லால்' என்பதற்கு - நாழிகை வட்டிலைக்கொண்டே யல்லாமல் என்று பொருள் காண்க. இவ்வுரையில், கன்னல் - நாழிகைவட்டில்; முந்தின உரையில், கன்னல் - நாழிகை.

'வெதும்புந்', 'உற்றவென' என்பன பிரதிபேதம். (எ௩)

எ௪. நெற்கிழியநெற்பொதிநிரம்பினநிரம்பாச்
சொற்கிழியநற்கிளிகடோகையவர்தூய்மென்
பற்கிழிமணிப்படர்திரைப்பரதர்முன்றிற்
பொற்கிழிவிரித்தனசினைப்பொதுளுபுன்னை.

(இ - ள்.) தோகையவர்-மயில்போன்றவர்களான மகளிருடைய, நிரம்பா சொற்கு - நிரம்பாதமென் சொற்களாகிய மழலைச்சொற்களுக்கு, இழிய - தோற்றலையுடைய, நல் கிளிகள் - அழகிய கிளிகள், நெல கிழிய நெல் பொதி நிரம்பின - நெற்கள் கிழியுமாறு நெற்போர்களிற் பதுங்கி நிறைந்தன; தூய் மெல் பற்கு இழி - (மகளிரது) சுத்தமான மெல்லிய பற்களுக்குத் தோற்ற, மணி - முத்துக்கள், படர் திரை - பரவுகின்ற (கடலின) அலைகளில், (நிரம்பின) - மறைந்து நிறைந்தன; பரதர் முன்றில் - நெய்தல் நிலத்து மனிதர்களுடைய வீட்டு வாயில்களில், சினை பொதுளு புன்னை - அரும்புகள் நிறைந்த புன்னைமரங்கள், பொன் கிழி விரித்து அன - பொன்முடிந்த சீலை முடிப்பை யவிழ்த்தாற் போன்றன; (எ - று.)

பெருமழையைப் பொறுக்கமாட்டாமற் கிளிகள் ஓடி நெற்போர்களிற் பதுங்குதலை, அந்நிலத்து மகளிரது மழலைச்சொற்களுக்கு அவை தோல்வியடைந்ததனால் முன் நிற்றற்கு வெள்கி மறைந்தனவாக வர்ணித்தது முதல் வாக்கியம். இரண்டாம் வாக்கியத்தில், கடற்கரையில் அலைகளால் ஒதுக்கப் பட்டனவும் சிப்பி முதலியவற்றினின்று தோன்றியனவுமான முத்துக்கள் பெருமழையால் தள்ளப்பட்டு அக்கடலின் அலைகளில் மறைதலை, அந்நிலத்து மகளிரது பற்களுக்குத் தாம் தோற்றதனால் அம்முத்துக்கள் முன் நிற்கவெள்கிக் கடலில் மறைந்தன வென வர்ணித்தார். நெய்தல்நிலத்திற புன்னைமரங்கள் நிறைய அரும்பெடுத்திருந்தவை அக்காலத்தில் மலர்தல், பொன்முடிந்திருந்த சீலைமுடிப்பை யவிழ்த்தாற போலு மென்பது, மூன்றும் வாக்கியத்தின கருத்து; இவ்வுவமை, நிறம்பற்றியது. முதலிரண்டு வாக்கியங்களில் தற்குறிப்பேற்றவணியும், மூன்றும் வாக்கியத்தில் உவமையணியுமாகச் சேர்ந்து வந்ததனால், சேர்வையணி.

இழிய - இழிதலை [தோற்றலை] யுடைய: 'இழி' என்னும் முதனிலைத் தொழிற்பெயரின் மேல் வந்த குறிப்புப் பெயரெச்சமாகவாவது, அவ்வகைப்

பலவின்பாற் குறிப்புவினையாலணையும் பெயராகவாவது கொள்க; இழிதலால் [தோற்றலால்] எனப் பொருள் கொண்டால், தெரிநிலைச் செயவெனெச்சமாம். இனி, மகளிரது மழலைச்சொற்களைத் தாம் கற்றுக் கொள்ளுதற்காக (அங்கிலத்தில்) இறங்குதலையுடைய நல்ல கிளிகளென்று உரைத்தலும் அமையும். மகளிர்சாயலுக்கு மயிலும் அவர்கள் கூந்தலுக்கு மயிலின் தோகையும் உவமை கூறப்படும். முதல் வாக்கியத்திலுள்ள 'நிரம்பின' என்ற வினைமுற்றையே இரண்டாம் வாக்கியத்திற்கும் எடுத்துச் சேர்த்துக்கொள்ள வேண்டும். 'தோகையவர்' என்றது மத்திமதீபமாக, இரண்டு வாக்கியத்திலுஞ் சேர்த்து உரைக்கப்பட்டது. பரதர் - நெய்தனிலமாக்கள்: இதன் பெண்பால்-பரத்தியர். கடலும் கடல் சார்ந்த இடமும், நெய்தனிலம். முன்றில் - இல் முன் என்பது முன்பின்னாகச் சொல்நிலை மாறி விகாரப்பட்டது: இலக்கணப்போலி; இல் - வீட்டினது. முன் - முன்னிடம் என்க. சினை - அரும்பு: கிளையுமாம். பொதுளுதல் - நெருங்குதல், செழித்தல். புன்னை, நெய்தனிலத்து மரம். 'தூமென' என்ற பாடத்திற்கு தூய்மை யென்னும் பண்புப்பெயர் ஈறுபோதலோடு இடை யகரமுங் கெட்டதெனக். முதலடியில் 'நிரம்பின நிரம்பா' என்றவிடத்துத் தொடைமுரண் காண்க.

இனி, இச்செய்யுளுக்கு வேறொருவகையாகவும் உரைக்கலாம்: அது வருமாறு:—நல் கிளிகள் நிரம்பாச் சொல் கிழிய - மழலைச்சொற்கள் சிறிது வெளிப்பட [வாய்திறந்து மழலைச் சொற்களைச் சிறிது பேசிக்கொண்டு], நெல்கிழிய நெல் பொதி நிரம்பின - நெற்கள் கிழியுமாறு நெற்கதிர்த்தொகுதிகளிற் சென்று நிரம்பின; தோகையவர் தூய் மெல் பல் கிழி மணி - மகளிரது வெண்ணிறமான அழகிய பற்கள்போல ஒளிவிட்டு விளங்குகின்ற முத்துக்களைக் கொழிக்கின்ற, படர் திரை - பரவுமியல்புள்ள (கடலின்) அலைகள் வந்து உலாவப்பெற்ற, பரதர் முன்றில் - நெய்தனிலமாக்களின் வீட்டுவாயிலில், சினைப்பொதுளுபுன்னை (மலர்ந்து) பொற்கிழி விரித்தன எனக் காண்க. மழைக்காலத்திற் கிளிகள் வேறு இரை தேடமாட்டாமல் வயல்களிலுள்ள நெற்கதிர்களிலிருக்கின்ற நெற்களைக் கொறித்து அவற்றினுள்ளீட்டையுட் கொள்ளுமாறு விளைச்சல்களிற் சென்று சேர்ந்து நிறைந்தன வென்க. (எச)

எரு. நிறங்கருகுகங்குல்பகனின்றநிலைநீவா
வறங்கருதுசிந்தைமுனியந்தணரினுவிப்
பிறங்கருநெடுந்துளிபடப்பெயர்வில்குன்றி
னுறங்கலில்விலங்கலிலநின்றவுயர்வேழம்.

(இ - ள்.) நிறம் கருகு கங்குல் - (இருளினால்) கறுத்துத் தோன்றுகின்ற இராத்திரிகாலத்திலும், பகல் - பகற்பொழுதினும், நின்ற நிலை நீவா - தாம் நின்ற தவநிலை நீங்காத, அறம் கருது சிந்தை முனி அந்தணரின் - தருமமார்க்கத்தையே எண்ணுகின்ற மனத்தில் (எல்லாப்பற்றுக்களையுந்) துறந்த முனிவர்கள் போலவும்,—பிறங்கு அரு நெடு ஆலி துளி பட - விளங்குகின்ற அருமையான பெரிய மழைநீர்த்துளிகள் தம்மேல் விழுதலால், பெயர்வு

இல் - சலித்தலில்லாத, குன்றின் - மலைகள் போலவும்,—உயர் வேழம் - உயர்ந்த யானைகள், உறங்கல் இல் விலங்கல் இல நின்ற - (அப்பெரு மழைக் காலத்தில்) தூங்குதலில்லாமலும் இடம் விட்டுப் பெயர்தலில்லாதனவாகவும் நின்றன; (எ-று.)

அப்பெருமழையிலே யானைகள் இரவிலுமுட்பட உறங்குதலிலவாய் நின்றதற்கு - அல்லும்பகலும் அநவரதமும் துயிலின்றி ஒருபடிப்படத் தவ நிலையில் நிற்கும் மூற்றத்துறந்த முனிவர்களும், யானைகள் பெருமழைத்துளி படுதலால் இடம்விட்டுப் பெயராது நின்றதற்கு - பெருமழைக்குச் சலியாது நிற்கும் மலைகளும் உவமையாம். உவமையணி. அந்தணரின் உறங்கலில், குன்றின் விலங்கலில என முறையே இயைந்து பொருள்படுதல், முறைநிர னிறைப்பொருள்கோள். பெயர்வில் குன்று—'அசலம்' என மலைக்கு ஒரு பெயராத லுணர்க. இனி இரவுபகல் என்ற வேறுபாடின்றி எப்பொழுதும் ஒரு நிலையாகத் தவநிலையில் நிற்கும் முனிவர்கள் பெருமழையிலும் அந்நிலை பெயராது நிற்பாராதலால், அவர்கள் விலங்கலின்மைக்கும் உவமையாகலாம்.

நீவா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; அந்தணர்க்கு அடை மொழி: இனி நீவா - நீங்காமல் என ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்ச மாகக் கொண்டு 'அறம் கருது' என்பதனோடு இயைத்து, தர்மஸ்வரூபியான கடவுளைத் தியானிக்கின்ற என்றலு மொன்று. முனி யந்தணர் - வினைத் தொகை; முனிதல் - வெறுத்தல். அறங்கருது சிந்தையையுடையவர்களும் (பற்றுக்களை) முனிபவர்களுமான அந்தணர்கள்போல வென்றும் பதவுரை கூறலாம். அந்தணர் - அம் தண் அர்: அழகிய தண்மையை [குளிர்ச்சியான அருளை]யுடையவர் எனப் பொருள்படும். திருக்குறளில் நீத்தார்பெருமை யென்னும் அதிகாரத்தில் "அந்தணரென்போ ரறவோர் மற்றெவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகலான்" என்றதும், அதனுரையிற் பரிமேலழகர் 'அந்தணரென்பது அழகியதட்பத்தினையுடையாரென ஏதுப்பெயராகலின், அஃது அவ்வருளுடையார்மேலன்றிச் செல்லாதென்பது கருத்து,' என்றதும் காணத்தக்கன. பிறங்குதல் - மிகுதலுமாம். 'உயர்வேழம்' என்றதில், உயர்வு - தேகபல மனோபலங்களின் மிகுதியுமாம்.

'நீர்வாய்', 'நீங்காது,' 'உறங்கல்' என்று பாடமோதுவாருமுளர். (௭௫)

௭௬. சந்தினடையிற்படலைவேதிகைதடந்தோ
றந்தியிடகிற்புகைநுழைந்தகுளிரன்ன
மந்திதுயிலுற்றமுழைவன்கடுவனங்கத்
திந்தியமவித்ததனியோகியினிருந்த.

(இ - ள்.) குளிர் அன்னம் - அப்பெருமழையினாற் குளிர்கொண்ட அன்னப்பறவைகள்—சந்தின் அடையின் படலை - சந்தனமரத்தின் இலைகளால் மேலே வேயப்பட்ட பர்ணசாலைகளில், வேதிகை - மேடைகளிலே, தடம் தோறு - ஓமகுண்டந்தோறும், அந்தி இடு - காலைமாலைகளில் (முனிவர்கள் ஓமம் வளர்த்தற் பொருட்டு) இட்டு எரிக்கின்ற, அகில்-அகிற்கட்டை

களின், புகை-புகையில், நுழைந்த - தாம் நுழைந்து குளிர் காய்ந்தன; மந்தி- பெண்குரங்குகள், முழை - மலைக்குகைகளில், துயில் உற்ற - (போய்ப்பதுங்கித்) தூங்கின; வல் கடுவன் - வலிய ஆண்குரங்குகள், அங்கத்து - யோகத்தின் அஷ்டாங்கங்களுள் ஒன்றான ப்ரத்யாஹார மென்னும் அங்கத்தினால், இந்தியம் அவித்த - பஞ்சேந்திரியங்களை யடக்கிய. தனி யோகியின் - ஒப்பற்ற யோகி போல, இருந்த - (குளிரினால்) ஒடுங்கியிருந்தன; (எ - று.)

யோகி - யமம், நியமம், ஆஸநம், ப்ராணாயாமம், ப்ரத்யாஹாரம், தாரணை, தியானம், ஸமாதி என்னும் எட்டு அங்கங்களுடன் யோகஞ்செய்பவன். ஐம்பொறிகளையடக்கி மனத்தை ஒருவழி நிறுத்தி யோகஞ் சேர்ந்த அவன் அசைவின்றி நிற்றல், இங்கே பெருமழையிற் குளிர்மிகுதியால் ஆண் குரங்குகள் விறைத்து நிற்றற்கு உவமை. "பொறியுணர்வெல்லாம் புலத்தின் வழாமை ஒருவகைப் படுப்பது தொகைநிலை யாமே" என்பதனால், பிரத்தியாகாரத்தின் இலக்கண மறிக. 'சப்தாதிவிஷயங்களிற் பற்றிநிற்கின்ற இந்திரியங்களைத் தடுத்துச் சித்தத்திற்கு இசையச்செய்வது ப்ரத்யாஹாரமாம். இதனாலே, மிகவுஞ்சஞ்சலமான இந்திரியங்கள் நன்றாய்வசப்படுகின்றன. அவை வசப்படாதபோது, யோகியானவன் யோகத்தைச்சாதிக்கமாட்டான்' என்று புராணம் கூறுதலால், 'அங்கத்து இந்தியமவித்த தனியோகி' என்றார். கடுவன் மந்தியைப்பிரிந்து தனித்து நிற்றலும் கருதத்தக்கது. வல்கடுவனாதலால், மந்திபோல முழையிற்புகுந்து துயிலுறாமல் மழையிலேயே நின்றனவென்க; இதனால், இராவணநிராகரணவதத்திற்கு ஏற்றசேனையாகுங் குரங்குகளின் ஊறஞ்சாமையெனனும் உயர்குணம் உணரலாகும்.

அந்தி யென்பது - இரவுடன் பகல் கூடுங் காலமாகிய காலைச் சந்திக்கும், பகலுடன் இரவு கூடுங் காலமாகிய மாலைச்சந்திக்கும் பொதுவாம். மந்தி - குரங்கின் பெண்மைப்பெயர்: கடுவன் - அதன் ஆண்மைப் பெயர்; "குரங்கு முசுவு மூகமு மந்தி", "குரங்கினேற்றினைக் கடுவனென்றலும்" என்பன தொல்காப்பியம். கடுவன் - கடுமையையுடையது எனப் பொருள்படுங் காரணக்குறி; இதில், அன் - பெயர்விகுதி: உயர்திணை யாண்பால் விகுதியன்று; அஃறிணைச் சொல்லாதலால்.

இனி, பின்னிரண்டடிகட்கு மந்தி - பெண்குரங்குகள், முழை - மலைக்குகைகளில், வல் கடுவன் அங்கத்து - வலிய ஆண்குரங்குகளின மடியில், துயில்உற்ற - படுத்துத் தூங்கின; (அவை துயில்கெடாதிருக்குமாறு அவ்வாண்குரங்குகள்) இந்தியமவித்த தனியோகிபோல அசையாதிருந்தன என்று பொருள்கூறலுமாம். முன்னிரண்டடிக்கு, தடம் தோறு - அம்மலைப்பக்கங்களிலெல்லாம் வேதிகை - மேடைகளில் சந்தின, அடையின படலை - சந்தனமரத்தின் இலைகளாற்செய்த படல்களின்கீழ், அந்தி இடு - குளிர் காய்வதற்காகவும்வெளிச்சத்திற்காகவும் புலிமுதலியன அஞ்சி அருகில் வாராதிருத்தற்காகவும் வேடர்கள் இரவில் இட்டு எரிக்கின்ற, அகில் - அகிற்கட்டைகளின், புகை - புகையில், குளிர்கொண்ட அன்னங்கள் நுழைந்தனவென்று உரைப்பாருமுளர். மந்தி முழை துயிலுற்ற - பெண்குரங்குகள் மலைக்குகை

களில் தங்கின என்றலுமாம்; மேல் ௮௦ - ஆம் செய்யுளில் 'துயிலுவந்து' என்பது காண்க.

நறுமணமுள்ள மரங்களான சந்தனமும் அகிலும் மலையில் மிக்குள்ளன வென்னும் மலைவளம் இச்செய்யுளிற் போதரும்.

"சந்தினிடையிற் படலை வேய்ந்திசை தடந்தோ றுந்தியிடகிற் புகை நுழைந்த குளிருள்ள மந்திதுயிலுற்ற முழை வன்கடுவனங்கத் திந்தியமவித்த தனியோகரினிருந்த" என்றும், 'சந்தினிலையிற்படலை' என்றும்', 'நுழைந்து' என்றும், 'முறைவனகடுவன்' என்றும் பிரதிபேத முண்டு. (எசு)

எஎ. ஆசில்சுனைவாலருவியாயிழையரைம்பால்
வாசமணநாறலிலவானமணிவன்கா
லூசல்வறிதானவிதணொண்மணிகள்விண்மேல்
வீசலிலவானினெடுமாரிதுளிவீச.

(இ - ள்.) வானின் - மேகங்களினின்று, நெடு துளி மாரி வீச - பெருந் துளிகளையுடைய மழை மிகுதியாகப்பெய்தலால்,—ஆசு இல் சுனை - குற்ற மில்லாத மலைநீரூற்றுக் குளங்களும், வால் அருவி - சுத்தமான மலையருவி களும், ஆய் இழையர் ஐம்பால் வாசம் மணம் நாறல் இல ஆன - மகளிரது கூந்தலின் நறுமணங்கள் (தம்மிடம்) வீசுத லில்லாதன வாயின; மணி வல் கால் ஊசல் - இரத்தினமயமான வலியகால்கள் நாட்டி அவற்றில் அமைக்கப் பட்ட ஊஞ்சல்கள், வறிது ஆன - இருந்து ஆடுபவ ரில்லாதன வாயின; இதண் - பரண்கள், ஒள் மணிகள் விண்மேல் வீசல் இல - ஒளியுள்ள இரத் தினங்களை வானத்தில் எறித லில்லாதனவாயின; (எ - று.)

பெருமழை பெய்தல்பற்றிக் குளிர்மிகுதலால் மலைச்சுனைகளிலும் மலை யருவிகளிலும் மகளிரெவரும் துளைந்து நீராடாமையால், அச்சுனைகளும் அருவிகளும் அம்மாதரது கூந்தலின் நறுமணம் வீசுதலில்லாதன வாயின வென்க. உத்தமஜாதி ஸ்திரீகளின் கூந்தலுக்கு இயற்கைத் திவ்வியபரிமள மும், வாசனையெண்ணெய் தடவுதல் நறும்புகையூட்டல் மலர்சூடுதல் என்னு மிவற்றாலாகிய செயற்கை நறுமணமும் ஆக இருவகை மணங்க ளிருத்த லால் அவற்றை 'வாசம்' 'மணம' என இரண்டு சொற்களாற் குறித்தார்; இனி இவற்றை ஒருபொருட்பன்மொழி யெனறலு மொன்று. அம்மழைக் குளிரில் எவரும் ஊஞ்சலில் இருந்து ஆடிக் குளிர்ந்தகாற்றைப் பெறவிரும் பாததனால், அங்கு அமைக்கப்பட்டுள்ள ஊஞ்சல்கள் ஆளின்றி வெறுமையாய் விட்டன. தினை முதலியவற்றின கதிர்களைக் கிளிமுதலிய பறவைகள் உண் டிடாமைப்பொருட்டு வேட்டுவமாதர்கள் அருகிலமைககப்பட்ட பரண்களிற் காவலாக இருந்து அங்குள்ள இரததினக்கற்களையெடுத்து வானத்தில்வீசிப் பறவைகளையோட்டுதல் இயல்பு; பெருமழை பெய்தல்பற்றிப் பறவைகள் வெளிப்படாமல் ஒடுங்கிவிட்டதனால், அங்ஙனம் ஓட்டுதல் வேண்டாதாயிற் றென்க. பரணிலுள்ளார் மணிகள் வீசுதலிலரானதைப் பரணின்மேல் வைத் துக்கூறினார்; உபசாரவழக்கு. இனி, இதண் - பரண்களிலிருந்து, ஒண்மணி

கள் விண்மேல் வீசுதலில்லையாயின வென்று பொருள் கொள்ளலுமாம். 'இதண்' என்றவிடத்து, 'கவண்' என்று பாடமோதி, கல்லெறி கயிறுகள் மணிகள் வீசுதலிலவாயின வென்றலும் ஏற்கும். இனி, இதண் - பரண்கள், ஊசல் வறிது ஆன - ஊஞ்சல்கள் வறுமையாகப்பெற்றன வென்று உரைத்து மணிகள் பரணினின்று அல்லது (கவணினின்று) விண்மேல் வீசுதலில வாயின வென்றலு மொன்று; பரணிலுள்ள ஊஞ்சல்களிற் பாதுகாவலின் பொருட்டு எவரும் இராததனால் அவை வறிதாயினவென்க. 'வானி னெடு மாரி துளிவீச - ஒண்மணிகள் விண்மேல் வீசலிலவான' என்றதனால், மேகங் களினின்று பெய்யும் பெருமழைதானே பெருந்துளிகளை வீசிக் கற்களை வீசினாற்போலப் பறவைகளை வராதிருக்கச்செய்ததனால் அதற்காகக் கற்கள் வீசுதலில்லையாயிற் றென்ற கருத்து விளங்கும்.

சுனைக்குக் குற்றமின்மை - தன்னில் நீராடுவார்க்கு நோய்தராமை, பாவந்தீர்க்கும் புண்ணியதீர்த்த மாதலுமாம்: அருவிக்குத் தூய்மையும் இவ் வாறே. ஆய் இழையர் - ஆராய்ந்து எடுத்து அணிந்த ஆபரணங்களை யுடைய வர். 'வறியன வான' என்றது 'வறிதான' என்றது, பன்மையொருமை மயக் கம்; (தனித்தனி) வறியதென்க. இரண்டாமடியில், மணி - உறுதியுமாம். ()

எஅ. கருந்தகைய தண்சினையகைதைமடல்காத
றருந்தகையபோதுகிளையிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறையொடுக்கியுடல்பேரா
திருந்தகுருகின்பெடைபிரிந்தவர்களென்ன.

(இ - ள்.) கருந் தகைய - கருநிறமுள்ள, தண் சினைய - குளிர்ச்சியான [காணுதற்கு இனிய] கிளைகளை யுடைய, கைதை - தாழைமரங்களின், மடல் - மடல்களிலே, காதல் தரும் தகைய போது - (காண்பவர்க்கு) ஆசையை மூட்டுந் தன்மையனவான மலர்கள், கிளையின் புடை தயங்க - சுற்றமாகிய நாரைகள்போலப் பக்கங்களிற் சூழ்ந்துவிளங்க,—குருகின் பெடை - (அங்கு) நாரைகளின் பேடைகள் [பெண்நாரைகள்] - பெருந் தகைய பொன் சிறை ஒடுக்கி-பெருமைக்குணமுள்ள அழகிய (தங்கள்) சிறகுகளை ஒடுக்கிக் கொண்டு, உடல் பேராது - உடம்பு இடம்விட்டுப் பெயரப் பெறாமல், பிரிந்தவர்கள் என்ன இருந்த - (தலைவரைப்) பிரிந்த தலைவியர்போல இருந்தன.

மழைக்காலத்தில் தாழை மிகுதியாகப்பூத்தல், இயல்பு. தாழை மலர் காமோத்தீபகப் பொருள்களி லொன்றாதலால், 'காதல்தருந்தகையபோது' எனப்பட்டது; அது, மன்மதனுக்கு வாளாயுத மெனப்படும். இனி, காதல் தருந்தகைய போது - மிக அழகிய மலர் என்றவாறுமாம். தலைவரைப்பிரிந்த மகளிர் கார்காலத்திலே பிரிவுத்துயர் மிகுதியால் இடம் விட்டுப் பெயரமாட் டாமல் ஒரு புறத்தில் ஒடுங்கிக்கிடக்குமாறு போலப் பெண்குருகுகள் பெரு மழையால் தமது பெரிய சிறகுகளை யொடுக்கிக்கொண்டு இடம்விட்டுப் பெய ராமல் ஒருபுறத்தி லிருந்தன வென்க. அப்பேடைக்குருகுகளினருகே சுற்றி லும் பூத்து நின்ற தாழை மலர்கள், அப்பேடைகளைச் சூழ்ந்து நிற்கும் அவற்

றின் சுற்றமாகிய குருகுகள் போலும் என வருணித்தார். தாழைமலர்கள் வடிவிற் குருகுபோலுதலை, "அருகு கைதை மலரக் கெண்டை, குருகென் றஞ்சும்" என்ற பெரிய திருமொழியாலும் உணர்க. புடை தபங்க - பக்கங்களில் நிலைத்து நிற்க எனினுமாம்; தாழை மலர்கள் அசைவறநிற்றல், குருகினங்கள் நிலைத்து நிற்பதாகக் கற்பிக்கப்பட்டது. உவமையணி. கைதை - கேதகமென்ற வடசொல்லின் சிதைவு.

'கருந்தகை யகன்சினைய', 'சிறையொடுங்கி', 'இடைபோரா து', 'குருகின் றுணை பிரிந்தவர்களென்ன' என்பன பிரதிபேதம். (எஅ)

எகூ. பதங்கமுழவொத்தவிசைபன்ஞிமிறுபன்ன
விதங்களினடித்திடுவிகற்பவழிமேவு
மதங்கியரையொத்தமயில்வைகுமரமூலத்
தொதுங்கினவுழைக்குலமழைக்குலமுழக்க.

(இ - ள்.) பதங்கம் - (பலவகைநீர்ப்) பறவைகள், முழவு ஒத்த - (தமது ஒலியினால்) மத்தளந் தட்டினாற் போன்றனவாக,—பல் ஞிமிறு - பலவகையான வண்டுகள், இசை பன்ன - (தமது ஒலியினால்) இசைப்பாட்டுப்பாட,— மயில் - மயில்கள், விதங்களின் நடித்திடு - பலவகைத்தாளவமைப்புக்களுடன் நர்த்தனஞ் செய்கின்ற, விகற்பம் வழி - பலவேறு வகைப்பட்ட (நாட்டிய) மார்க்கங்களில், மேவும் - பொருந்திய [பயின்று தேர்ந்த], மதங்கியரை-கூத்தாடு மகளிரை, ஒத்த - போன்றன [அம்மழைக்காலத்திற் களித்து பலவாறு கூத்தாடின வென்றபடி]; மழை குலம் உழக்க - மேகங்களின் கூட்டங்கள் (இடி முழக்கத்தால் அச்சத்தை விளைத்துக்) கலங்கச் செய்ய, உழை குலம் - மான் கூட்டங்கள், வைகும் மரம் மூலத்து - (அவ்வாறான மயில்கள்) தங்கப்பெற்ற மரங்களின் அடியிலே, ஒதுங்கின - (விழித்த கண் வாங்காமல் அந்த நாட்டியத்தைக் காணச் செல்பவர் போல மருண்ட நோக்குடன்) போய்ச் சேர்ந்தன; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. பதங்கம் - பறவைப் பொதுப்பெயர்; இவ்வட சொல், எழும்பிச் செல்வதென்று பொருள்படும் ஞிமிறு - மிஞிறு என்பதன் எழுத்து நிலைமாறிய இலக்கணப்போலி. விதம், விகல்பம், மூலம், குலம் - வடசொற்கள். மதங்கியர் - இளமைப் பருவமுடைய நாட்டியப் பெண்கள். விதங்களி னடித்திடு விகற்பவழி மேவும் மதங்கியர்— "விதங்களின விதி முறை சதிமிதிப்பவர் மதங்கியர்" என்றார் பாலகாண்டத்து நகரப்படலத்திலும். விதங்களி னடித்திடு விகற்ப வழி—'இருவகைக் கூத்தாவன - வசைக் கூத்து, புகழ்க்கூத்து: வேத்தியல், பொதுவியல்: வரிக்கூத்து, வரிச்சாந்திக் கூத்து:சாந்திக்கூத்து விநோதக் கூத்து: ஆரியம், தமிழ்: இயல்பு கூத்து, தேசக் கூத்து எனப் பலவகைய; இவை, விரிந்த நூல்களிற் காண்க' என்பது முதலாகச் சிலப்பதிகாரத்து, அடியார்க்கு நல்லாருரையிற் காண்க. 'முழக்க' என் றெடுத்து, முழங்கவென்றுஉரைத்தலு மொன்று; தன்வினைப்பொருளில் வந்த பிறவினை. 'பதங்கொண் முழவொத்தமுகில் பண்ஞிமிறுபன்ன' என்ற

பாடம், கீழ்ப்போந்த ௩௨-ஆஞ்செய்யுளோடு கூறியதுகூறலா மாதலாற் சிறவாது. 'பதங்கமுழவொக்க' என்பது பிரதிபேதம். (௭௧)

௮௦. விளக்கொளியகிற்புகைவிழுங்கமளிமென்கொம்
பிளக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தகுமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
றொளைத்துயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி.

(இ - ள்.) மெல் கொம்பு - மெல்லியபூங்கொம்பும், இளக்கும் - (மெல்லி தாயிருக்குந்தன்மையில் ஒப்பாகாமல்) தோற்கும்படியான, இடை - இடையையுடைய, மங்கையரும் - இளமைப்பருவமுள்ள மகளிரும், மைந்தர்களும் - இளமைப்பருவமுள்ள ஆடவரும், அகில் புகை விளக்கு ஒளி விழுங்கு அமளி ஏற - கீழே அகிற்கட்டைகளையெரித்து ஊட்டும்புகை விளக்குகளின் ஒளியைத் தெரியாதபடி கவிந்துகொள்ளப்பெற்ற கட்டிலில் ஏறிப் படுக்க,—குளிர் தும்பி - குளிர்கொண்ட வண்டுகள், தளத்தகு மலர் தவிசு இகந்து - விட்டிடத்தக்க தாமரைமலராகிய படுக்கையை விட்டு, நகு சந்தின் தொளை துயில் உவந்து - மலர்ந்துவிளங்குகின்ற சந்தனமரத்தின் துளையில் [பொந்தில்] தங்குதலை விரும்பி, துயில்வுஉற்ற - அங்குச்சேர்ந்து தூங்கின; (எ - று.)

பெருமழைக்காலத்திற் குளிர்தீருமாறு மங்கையரும் மைந்தரும் விளக்கி னொளிதெரியாதபடி மிகுதியாக அகிற்புகையூட்டப்பெற்ற படுக்கையில் ஏறி ஒருவரையொருவர் தழுவிச் சயனிப்பாராயினரென்பது, முன்னிரண்டடி. அப்பெருமழையில் தாமரைமலர்கள் இதழ்குவிந்தும் நீரில்ஆழ்ந்தும் மிக்க குளிர்ச்சிக்கு இடமாயும் விலகத்தக்கனவானதனால் வண்டுகள் அத்தாமரை மலராகிய தங்குமிடத்தை விட்டுக் கரையிலுள்ள மலர்ந்த சந்தனமரங்களின பொந்துகளில் விருப்பத்தோடு சென்றுசேர்ந்து இனிது உறங்கலாயினவென் பது, பின்னிரண்டடியின் கருத்து. "புதிய மழைத்தாரைகளால் அழிக்கப் பட்ட தாதுகளையுடைய தாமரைமலர்களை விரைவாகப் பறந்துவிட்டு, வண்டு கள், தாதுகளோடுகூடிய புதிய கடம்பமலர்களை மகிழ்ச்சியோடு சேர்கின் றன" என்று ஸ்ரீவால்மீகிராமாயணத்திற் கூறியது நோக்கத்தக்கது.

அடுத்தசெய்யுளும் இவ்வாறான கருத்துடையதே.

மென்கொம்பு இளக்கும் இடை - மெல்லிதான மரக்கொம்பினும் நுண்ணிதான இடை. இளக்கும் இடை - இளைத்தற்குக்காரணமான இடை எனப் பெயரெச்சம் காரியப்பொருளதாய்க் காரணப்பெயரைக் கொண்டது. தளத்தகு - தள்ளத்தகு: தொகுத்தல். துயில் தங்குதல்; முதனிலைத்தொழிற் பெயர். இப்பகுதி, தூங்குதலென்னும்பொருளோடு தங்குதலென்னும்பொரு ளையுமுடையது; சீவகசிந்தாமணியில் "திருத்துயில்பெற்ற மார்பன்" என்ற இடத்தில் 'துயிதல் - தங்குதல்' என்றார் நச்சினார்க்கினியரும் துயில்வுறு தல் - தூக்கத்தையடைதல்.

இனி, தளம் தகு மலர் என்று பிரித்து - இதழ்கள்நிறைந்த அழகிய தாமரைமலரென்று உரைத்தலும், 'தளக் கவினமலர்' என்று பாடமோது

'தலும் சிறவா. 'விளங்கமளி', 'தருசந்தின்', 'துளைத்திடாறத்துயில்வதிக்த' என்பன பிரதிபேதம். (அ௦)

அக. தாமரைமலர்த்தவிசிகந்தனதகையனன
மாமரனிரைத்தொகுபொதும்பருழைவைகத்
தேமரனடுக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தூமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார்.

(இ - ள்.) தகை அன்னம் - அழகிய அன்னப்பறவைகள், தாமரை மலர் தவிசு இகந்த - தாமரைமலராகிய தங்களிருப்பிடத்தை விட்டுநீங்கி, மா மரன் நிரை தொகு பொதும்பர் உழை வைக - பெரிய மரங்களின வரிசை யடர்ந்த சோலையிற் சேர்ந்துவசிக்க,—தேம் மரன அடுக்கு இதண் இடை செறி குரம்பை - நறுமணமுள்ள மரக்கட்டைகளை அடுக்கியமைத்த பரணிற் பொருந்திய குடிசையில், தூ மருவு எயிற்றியரொடு - வெண்ணிறம்பொருந்திய பற்களையுடையவர்களான வேட்டுவப்பெண்களுடனே, அன்பர் - (அவர்களது) அன்புள்ள கணவரான வேடர்கள், துயில்வுற்றார் - தங்கித்தூங்கலானார்கள்; (எ - று.)

தாமரைமலரை விரும்பித் தங்குமிடமாகக்கொண்டு அதனிடத்தில்வசிக்கும் அனனப்பறவைகள் அப்பெருமழைக்காலத்தில் அம்மலர்கள்பொலிவிழந்ததனாலும் குளிர்மிகுதியாலும் அவற்றைவிட்டு மரங்களடர்ந்த சோலைகளிற் சோந்து வசிக்கலாயின; வேடாகள் வேட்டுவமகளிரும் அப்பெருமழையிற் குளிாமிகுதியால் தங்களகுடிசைகளுட்சென்றுசேர்ந்து தினைமுதலியவற்றிற்குககாவல்செய்யுங் கவலையின்மையால் இனிதுதுயிலபவராயினர் எனபதாம். தவிசு - ஆசனம்; மெத்தையுமாம. மாமரன - மாமரங்களுமாம். பொதும்பர் - மரச்செறிவு; பொதும்பு எனற மெனறொடர்க்குறறியலுகரத்திற்கு, அர் - போலி. தேமரன் - சந்தனம் முதலியன. 'எயிறறியா' எனற சொல் - 'எயிறு' எனற பகுதியின்மேற் பிறந்த பெண்பனமைப்பெயராய்ப் பற்களை யுடையவளென்னும பொருளையும், 'எயினர்' எனபதன பெண்பாலாய் வேட்டுவமாதென்னும் பொருளையும் உணர்த்தும். இங்கு, எயிற்றியராகிய எயிற்றிய ரென்று ஆவருத்திசெய்துகொண்டு, இரட்டுறமொழிதலாகப் பற்களையுடையவாகளான வேட்டுவப்பெண்க ளெனறு பொருள கொள்ளப்பட்டது: பிந்தினபொருளில், 'எயின்' எனற ஜாதிப்பெயர் - பகுதி; து - சாரியை, உகரங்கெட்டது: இருபொருளிலும 'இ' என்ற பெண்பால் விகுதியின்மேல், அர் - பலர்பால்விகுதி.

மரன் நிரை தொகு பொதும்பர் உழை வைக - மரங்களின கூட்டத்திற் பொருந்திய பொந்துகளிற் போய்ப்பதுங்கியிருக்க எனபாரு முளர். 'தூ மருவு எயிற்றியர்' என்பதற்கு-தசை பொருந்திய பற்களையுடையவ ரென்பர் ஒருசாரார். 'மாமரநிரைத் தொருபொதும்பினுழை' என்ற பாடத்திற்கு - பெரியமரங்களின்வரிசையையுடையதான ஒரு சோலையினுள்ளே யென்க.

அ௨. வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரந்தோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரினொளித்துழநெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசிமூழ்கிடவிருந்த.

(இ - ள்.) வள்ளி புடை சுற்றி - கொடிகள் பக்கங்களிற் சூழ்ந்துகொள்ளப்பெற்று, உயர் - ஓங்கிவளர்ந்த, சிறு இலை மரம்தோறு - சிறிய இலைகளையுடைய மரங்களினகீழ், எள் அரு மறி குருளொடு - இகழாமற் பாதுகாக்கத்தக்க ஆட்டுக்குட்டிகளுடனே, அண்டர்கள் - இடையர்கள், இருந்தார் - தங்கினார்கள்; கள்ளரின ஒளித்து உழல் - திருடர்கள்போல மறைந்துதிரிவனவான, நெடு கழுது - பெரிய பேய்களும், ஒடுங்கி—, முள் எயிறு தின்று பசி மூழ்கிட இருந்த - முட்கள்போலக் கூரிய (தங்கள்) பற்களை மென்று தின்றுகொண்டு மிக்க பசியுடனே யிருந்தன; (எ - று.)

பெருமழை தம்மேற்பெய்தற்கு அஞ்சி ஒதுங்குவார்க்கு, பெரிய இலைகளையுடைய ஆலமரம் முதலியவற்றினும் சிறிய இலைகளையுடைய புளியமரம் முதலியன இனியனவாதலால், அப்பெருமழையில் இடையர்கள் தாம் தவறாது பாதுகாத்தற்குரிய ஆட்டுக்குட்டிகளுடனே சிற்றிலை மரங்களினடியில் ஒதுங்கினார்களென்க. திருவள்ளுவர் திருக்குறளென்னும் நூலையியற்றிக்கொண்டு திருமயிலையினின்று மதுரையைநோக்கிச் செல்லும் வழியிலே ஒரு பெருங்காட்டில் மழைக்கு அஞ்சி ஆலமரத்தினடியிற் போய்நிற்க, அங்குத் தாம் மேய்க்கும் ஆடுமந்தையுடன் புளியமரத்தின்கீழ் நின்ற இடைக்காடர் திருவள்ளுவரைப் புளியமரத்தின்கீழ் வரும்படி அழைக்க, அதன் நுட்பத்தை யுணர்ந்து வள்ளுவர் அங்குப் போய்ச்சேர்ந்தன ரெனனும் வரலாறு இங்குக் கருதத்தக்கது. * இடையர்க்கு ஜீவநோபாயமான ஆடுகளுள்ளும் குட்டிகள் தம்மைத்தாமே பாதுகாத்துக் கொள்ளக்கூடாத பருவத்தன வாதலால் அவற்றை இடையாகள உடனகொண்டு சென்றன ரென்பது விளங்க, மறிக்குருளுக்கு 'எள்ளரு' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. பேய்களும் வெளிக்கிளம்பமாட்டாமல் ஒரு புறத்தே ஒடுங்கிப் பசியில் மூழ்கிப் பறகளை மென்றுகொண்டு வாடியிருந்தனவென மழையின் மிகுதியை யுணர்த்தியவாறும். பசி மூழ்கிட - பசித்தீயில் தாம் மூழ்க என்க.

வள்ளி - வல்லீ என்ற வடசொல்லின் விகாரம்; இனி, வள்ளி - வள்ளியென்னும் ஒருவகைக் கொடியெனறும், சிறறிலைமரம் - சிற்றிலைமரமென்னும் ஒருவகை மரமெனறுங் கொள்வர் ஒருசாரார். குருள் - குருளை யென்ற இளமைப்பெயரின் விகாரம். உழல் நெடுங்கழுது கள்ளரின் ஒளித்து என்று

"ஆங்குறுமழைகண்டஞ்சியாலடிதனிற்போய்நின்றான்
பாங்குறுபுளிக்கீழ்நின்றுபரிந்திடைக்காடனன்றோ
றாங்குபுத்தகத்துப்பேயாதயுகுசிற்றிலைக்கீழ்வாவென்
றோங்குபேரொலியாற்கூவவுடனவனுற்றானோர்க்கே."—புலவர்புராணம்.

மாற்றி, எங்குந்திரிபுமியல்பினவான பெரும்பேய்கள் (வெளிப்புறப்படமாட்டாமல்) திருடர்போல ஓரிடத்தில் ஒளித்துக்கொண்டு என்றலுமாம்.

'மறிக்குறிகௌண்டர்,' 'ஒளித்துறை நெடுங்கழுது,' 'தின்றுகமுகந்த விருவெரிங்கும்,' 'பசிமூழ்கியவிருந்த' என்பன பிரதிபேதம். (அஉ)

அ௩. சரம்பயினெடுந்துளிதிமிர்நதபுயல்சார
வுரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுங்கா
வரம்பகனெடும்பிரசம்வைகல்பலவைகு
முரம்பினிநிரபலமுழைஞ்சிடைநுழைந்த.

(இ - ள்.) திமிர்ந்த புயல் - வானத்தில் நெருங்கிய மேகங்களினின்று, சரம் பயில் நெடுந் துளிசார - அம்புகளையொத்த பெரிய மழைத்தாரைகள் தம்மேல் விழுதலால்,—உரம் பெயர்வு இல் வல் கரி - (இயல்பில்) மனத்துணிவு குலைதலில்லாத வலிய யானைகள்,—ஒடுங்கா - ஒடுங்கி,—வரம்பு அகல் நெடும் பிரசம் வைகல் பல வைகும் முரம்பினில் நிரம்பல - அளவற்ற பெரிய தேன்கூடுகள் பலநாளாய்த் தங்கப்பெற்ற மலையின மேட்டு வெளிகளில் தாம் கூட்டமாக நிறைந்து வசிக்கமாட்டாதனவாய்,—கரந்து உற - (மழை தம் மேற்படாதபடி) ஒளித்துவசிக்க(க் கருதி),—முழைஞ்சு இடை நுழைந்த - மலைக்குகைகளில் (ஒவவொன்றாக) நுழைந்திடடன; (எ - று)

வானத்தில் நெருங்கி நிறைந்த மேகங்களினின்று பெரிய மழைத்தாரைகள் அம்புகள்போலத் தம்மேல்விழ அவற்றைப் பொறுக்கமாட்டாமல், தேகபலமும் மனோபலமும் இயல்பில் மிக்கனவான யானைகளும் ஒடுங்கித்தம்மேல் அம்மழைபடாதபடி ஒதுங்கி வசிக்கக் கருதி, தாங்கள கூட்டங்கூட்டமாக வசித்துக்கொண்டிருந்த விசாலமான மலையின்மேட்டு வெளியிடங்களை விட்டு மலைக்குகைகளினுளளே ஒவவொனறாக அரிதில் நுழைந்து செல்லலாயின என்பதாம். மூனறாம்அடி - முரம்புக்கு அடைமொழி; அங்குவந்து அவ்வளவு உயரத்திலேறி யெடுப்பவரொருவ மினமையால் தேனகூடுகள் பலநாளாக அம் மலையின் கற்பாறை மேட்டுவெளிகளில் அழிவினறிக் கட்டியபடியே யிருக்கின்றன வென்க. இயல்பிலே மிக்க துணிவையும் வலிமையையு முடையன வான யானைகளும் அம்மழையின் மிகுதியால் இவ்வாறு ஒடுங்கி ஒளிக்கத் தலைப்பட்டன வென்பது விளங்க, 'உரம்பெயர்வில் வன் கரி' என்றார்.

இனி, இச்செய்யுளுக்கு - மேகங்களினினறு அம்புபோன்ற நெடுந்துளி தம்மேற் சார்ந்ததனால் வலியயானைகள ஒடுங்கி ஒளிக்க, தேன்கூடுகள் (அம் மழைத்தாரைகள் விழுந்ததனால் உடைந்து) பலநாளாய்த் தாமிருந்த கற்பாறை மேட்டிற் கொள்ளாமல் மலைக்குகைகளினுள்ளும் போய்ச் சேர்ந்தனவென்று உரைத்தலும் ஒன்று.

'நெடுந்துளிபடுந்தொறுதகர்ந்த', 'கரியுலைந்துறவொடுங்க', 'திரந்துபுயல் சார', 'புயல்சாரல்', 'குரம்பையினில்வன்கரிகுலைந்துறவொடுங்கா', 'வரம்பகனறும்பிரசம்' என்பன பிரதிபேதம். பயில் - உவமவுருபு. (அ௩)

[அந்தப் பின்மாரிக்காலத்தில் இராமபிரான் சீதாவிரகத்தால் மிகவருந்தி இலக்குமணனைநோக்கிச் சிலசொல்லத்தொடங்குதல்.]

அச. இத்தகைய மாரியிடை துன்னியிரு ளெய்த
மைத்தகும ணிக்குறுந கைச்சனகன் மான்மே
லுய்த்தவுணர் வத்தினனெ ருப்பிடையு யிர்ப்பான்
வித்தகனி லக்குவனை முன்னினன்வி ளம்பும்.

(இ - ள்) இ தகைய மாரியிடை - இத்தன்மையதான பெருமழைக் காலத்திலே, இருள் துன்னி எய்த - இருட்டும் அடர்ந்து வந்துசேர [இருண்ட இராத்திரியி லென்றபடி], வித்தகன்-அறிவுடையவனான இராமபிரான், மை தகு மணி - மையென்றுசொல்லத்தக்க[மிகக்கறுத்த] கண்ணின்கருமணியையும், குறு நகை - புன்சிரிப்பையுமுடைய, சனகன் மான்மேல் - (பார்வையழகினால்) மான்போன்றவளான சனகமகாராசனதுமகளாகிய சீதையினிடத்தில், உய்த்த - செலுத்திய, உணர்வத்தினன் - 'அறிவையுடையவனும், (அதனால்), நெருப்பு இடை உயிர்ப்பான் - நெருப்புப்போல [உஷ்ணமாக] இடையிடையே பெருமூச்சுவிடுபவனுமாய், இலக்குவனை முன்னினன்விளம்பும் - இலக்குமணனைநோக்கிச் (சிலவார்த்தைகள்) சொல்லலானான்; (எ - று.) —அவற்றை, அடுத்த பதினொருகவிகளிற் காண்க.

மைத்தகு மணி—"உள் கஞ்சினிற் கருகி," "கருமணியம்பாலகத்துப் பதித்தன்னபடியவாய்" என்றார் பிறரும். இனி, மணி - தானியாகுபெயராய், கருமணிகட்கு இடமான கண்களென்று கொண்டு, மைத் தகு மணி - மையிட்ட அழகிய விழிகளென் றலுமாம். 'மைத்தருவிழி' என்றும் பாடமுண்டு. ஜாநகியினது கரிய கண்களின் பார்வையழகிலும் புன்சிரிப்பினழகிலும் இராமபிரானுக்குஉள்ள ஈடுபாடு விளங்க, 'மைத்தகுமணிக் குறுநகைச் சனகன் மான்மேல்' என்றார். 'மைத்தகுமணிக்குழல் மலர்ச்சனகன்மான்' என்ற பாடத்திற்கு - மைபோன்ற கரியகூந்தலில் மலர்களைச்சூடிய ஜாநகி யென்று பொருள். மன்மதாவத்தைகளுட் சுப்பிரயோகமெனப்படும் நினைப்பு'சனகன் மான்மேல் உய்த்தஉணர்வத்தினன்' என்றதனாலும், விப்பிரயோகமெனப் படும் வெய்துயிர்த்திரங்கல் 'நெருப்பிடைஉயிர்ப்பான்' என்றதனாலும், மோக மெனப்படும் மொழிபலபிதற்றல் 'இலக்குவனைமுன்னினன்விளம்பும்' என்ற தனாலுங் கூறப்பட்டன: ஜ்ஞாநஸ்வரூபியான ஸ்ரீராமபிரான் தான்கொண்ட மநுஷ்யாவதாரத்திற்கு ஏற்பக் காலத்தினவசப்பட்டு அப்பொழுது பலவாறு இரங்கிக்கூறலாயின னென்பதும், துன்பத்தை ஆற்றுதற்குக் கருவியான அறிவே அதனை மிகுதியாகப்பாராட்டுதற்குக் காரணமாதலுந் தோன்ற, 'வித்தகன்' என்றார். இலக்குவன் - லக்ஷ்மணன் என்ற வடமொழிப்பெயரின் விகாரம்; அத்திருநாமம் - லக்ஷ்மியோடு [இராமனுக்கு அடிமைசெய்தலாகிய செல்வத்தோடு] கூடியவ னென்று பொருள்படும். உத்தம புருஷ லக்ஷணங் கள் பொருந்தியவனென்று இதற்குப் பொருள் கூறுதலு முண்டு.

'மாரியிடைதன்னியிருளெய்த' என்பதற்கு - மழையினால் இருளடைய வென்றுஉரைப்பாருமுளர். 'மைத்தகணணிக்குறுகைகை,' 'செருப்பினிலுயிர்ப் பான்','வித்தகவிலக்குவன்முனின்னனவிளம்பும்' என்பன பிரதிபேதம். (அச)

வேறு.

[இதுமுதற் பதினொருகவிகள் - இராமபிரான் இரங்கல்.]

அரு. மழைக்கரு மின்னெயிற் றரக்கன் வஞ்சனை
யிழைப்பருங் கொங்கையு மெதிர்வுற் றின்னலி
னுழைத்தன ளுலைந்துயி ருலக்கு மொன்றினும்
பிழைப்பரி தெனக்குமி தென்ன பெற்றியோ.

(இ - ள்.) இழை பருங் கொங்கையும் - ஆபரணங்களையணிந்த பருத்த தனங்களையுடையவளான சீதையும்—மழை கரு - மேகம்போலக் கருநிற முடையவனும், மின் எயிறு - மின்னல்போன்ற பற்களையுடையவனுமான, அரக்கன் - இராக்கதனாகிய இராவணனது, வஞ்சனை - வஞ்சனைக்கு, எதிர்வு உற்று - இலக்காகி, இன்னலின் உழைத்தனள் - துன்பத்தால் வருந்திய வளாய், உலைந்து - வாடி, உயிர் உலக்கும் - உயிரழிவள்; எனக்கும்—, ஒன்றினும் பிழைப்பு அரிது - ஒருவகையாலும் பிழைத்தல் அரியதாயிருக்கின்றது; இது என்ன பெற்றியோ - இது என்ன நிலைமையோ? (எ - று)

மேகம்போலக்கருநிறமுடையவனும் மின்னல்போல விளங்கும்பற்களை யுடையவனுமான இராவணனது வஞ்சனையிலகப்பட்டுச் சீதை துன்பத்தால் மிகவருந்திப் பிழைக்கும்வகையொன்றுமில்லாமல் உயிரழிய, யானும் அவ் வாறே கருநிறத்தையும் மின்னல்களையுமுடைய காளமேகத்தின் கொடு மைக்கு இலக்காகி மிகவருந்திப் பிழைக்கவகையின்றி உயிரழிகின்றேன். இது என்ன காலபலம்! என்று இரங்கியவாறும்.

மூன்றுமடி - முற்றுமோனை.

'அரக்கன்வஞ்சனை இழைப்பருங்கொங்கையும் எதிர்வுற்று' என்பதற்கு- இராவணனதுவஞ்சனையிலகப்பட்ட சீதையும் (இக்கார்காலத்திற்கு) இலக் காகி யென்று உரைப்பாரு முளர். இழைப்பு அரு என்று பிரித்து, (செயற்கையாகச்) செய்யவொண்ணாத வென்றுஉரைப்பர் ஒருசாரார். 'அரக் கர்', 'இன்னலுள்' என்பன பிரதிபேதம். 'இதென்ன பெற்றியோய்' என்ற பாடத்திற்கு - பேரியல்பையுடையவனே! இது என்ன? என்று பொருளாகவேண்டும்.

இது முதல் இப்படலமுடியுமளவுமுள்ள முப்பத்தேழுகவிகள் - இப் படலத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (அரு)

அசு. தூநிறச்சுடுசரந் தூணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத் தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமிங்கிலை
வேனிறத்தூற்றதொத் தழியும்வீகிலேன்.

(இ - ள்.) தூ நிறம் சுடு சரம் - சுத்தமான நிறமுள்ளனவும் (பகைவரை) எரிப்பனவுமான அம்புகள், தூணி தூங்கிட - (எனது) அம்பறாத்தூணியில் உறங்கிக்கிடக்க [தொழிலின்றி வாளாவிருக்க], வான் உற பிறங்கிய வயிரம் தோளொடும் - ஆகாயத்தையளாவ [உயர்ந்து] விளங்கிய உறுதியுள்ள புயங்களுடனே, யான் இதுவும் உறக்கடவதே - யான் இவ்வாறான துன்பத்தையும் அனுபவிக்கக்கடவதோ! இ நிலை - (எனக்குநேர்ந்துள்ள) இந்தநிலைமை, வேல் நிறத்து உற்றது ஒத்துழியும் - வேலாயுதம் நெஞ்சில்ஊன்றியது போன்றதாகவும், வீகிலேன் - இறவாமலிருக்கின்றேனே! (எ - று.)

பகையழித்தற்குவேண்டிய சாதனங்களான இயற்கைவலிமையும் செயற்கைவலிமையும் என்னிடம் பூர்ணமாக இருந்தும் அவை எனக்குத் தீங்கு செய்தவனுக்கு எதிர் செய்யமாட்டாமல் வீணேகிடக்க யான் இப்படி துன்பமனுபவித்துக்கொண்டு நாணமின்றிப் பிழைத்திருத்தல் தகுதியோ! இதனினும் யான் இறத்தலே மேலன்றோ என்பதாம்.

அம்புக்குத் தூய்மை - தகாதவரை இலக்காகக்கொள்ளாமை யென்னலுமாம்; இலக்கானவரைத் தவறாமலழிப்பதும் அது. இனி, தூ - தசைதோய்ந்த வென்றும், இறகுகட்டிய வென்றும் உரைக்கலாம். தூணீ - வடசொல். தூங்குதல் - சோம்பியிருத்தலும், தொங்கிக்கொண்டிருத்தலுமாம். 'சுடுகணை,' 'உற்றதொத்துளவும்வீகலேன்' என்பன பிரதிபேதம். 'சரத்தூணிதூங்குற' என்றபாடத்திற்கு- அம்பறாத்தூணி (கட்டப்பட்டுத்) தொங்கிக்கொண்டிருக்க வென்று பொருளாம். 'இந்நிலைவேல்நிறத்துற்றதொழியும்' என்பதற்கு - இந்தமழைத்தாரைகள் வேல்கள்மார்பிற்பட்டனபோல வருத்தவும் என்பாருமுளர். ஒத்துழி - ஒத்தஉழி என்பதன் தொகுத்தல்; 'உழி' என்னும்விகுதி பெற்ற எதிர்காலவினையெச்சமாகவும் கொள்ளலாம். முதலடி- முற்றுமோனை.

௮௭. தெரிகணைமலரொடுந்திறந்தநெஞ்சொடு
மரியவன்றுயரொடும்யானும்வைகுவே
னெரியுமின்மினிமணிவிளக்கினின்றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்வகூட்டினுள்.

(இ - ள்) குரீஇ இனம் - ஆண்குருவிகளின் வருக்கங்கள்,—எரியும் - ஜ்வலிக்கின்ற, மின்மினி - மின்மினிப்பூச்சியாகிய, மணி விளக்கின் - அழகிய விளக்கின் வெளிச்சத்திலே, இன் துணை பெடையொடும் - இனிமையான (தமது) வாழ்க்கைக்குத் துணையாகிய பெண்குருவிகளுடன், கூட்டினுள் துயில்வ - (தங்கள்) கூடுகளினுள்ளே (சுகமாய்த்) தூங்குகின்றன; யானும் நானோ, தெரி கணை மலரொடும் - (மன்மதனால்) தேர்ந்தெடுத்து எய்யப்பட்ட புஷ்பங்களாகிய பாணங்களுடனும், திறந்த நெஞ்சொடும் - (அவை தைத்துப் பாய்தலாற்) பிளந்த நெஞ்சுடனும், அரிய வல் துயரொடும் - பொறுத்தற்கு அரிய கொடிய துன்பத்துடனும், வைகுவேன் - (மனைவியைப்பிரிந்து வனத்தில்) வசிக்கின்றேன்! (எ - று.)

குருவிகளும், தங்கள்கூடுகளினுள்ளே, இரவில் இடையிட்டுவிளங்கும் மின்மினிப்பூச்சிகளை விளக்காகவைத்துக்கொண்டு தம்தம்பெடையைப்பிரி

யாமல் அவற்றுடன்கூடி இனிமையாகப்படுத்துத்தூங்குகின்றன; அவ்வளவுமின்றி நான் மனைவியைப்பிரிந்து மன்மதபாணங்களால் மனம்பிளந்து உபத்திரவப்பட்டுக்கொண்டு படுக்கைகொள்ளாமல் இருளில் வனத்திலிருக்கின்றேனே! என்பதாம். பிந்தினவாக்கியத்தில் 'கூட்டினுள்' என்பதற்கு ஏற்ப, முந்தினவாக்கியத்தில் 'வனத்தில்' என்பது வருவிக்கப்பட்டது. பின்வாக்கியத்தில் 'மின்மினியாகிய விளக்கு விளங்க' என்பதற்கு ஏற்ப முன்வாக்கியத்தில் 'இருளிலே' என்பது கொள்ளவேண்டும். இழிந்தபிறப்பாகிய பறவையினத்திற் சேர்ந்த குருவிக்கு உள்ளவளவு நல்வினைப்பயனும் உயர்ந்த மானுடப்பிறவியில்தோன்றிய தனக்கு இல்லாமற்போனதைக்குறித்து இரங்கியவாறும். துணைவரைப்பிரிந்து வருந்துபவர் துணையோடு கூடிவாழு முயிர்களைக் காணுமிடத்து அவை காமோத்தீபகமாகித் தமது பிரிவுத்துயரை வளர்த்தலால் மிகவருந்தி அவ்வுயிர்களின்மேற் பொறாமைகொண்டவர் போன்று தமது நிலைமையைக்குறித்து கிட்டுரமாகப் பேசும் உலகவியல்பு, இங்குக் கருதத்தக்கது.

'யானும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு. எரிதல் - பிரகாசித்தல். மின்மினி - இருளில் மின்னுவதொரு பறக்கும்புழு;மின்-மின்னல்போல, மினி - மின்னுவது எனக் காரணப்பொருள் காண்க: மின்னுதல் - இடையிட்டு விளங்குதல்; இ - கருத்தாப்பொருள்விகுதி. மணி விளக்கு - இரத்தினமாகிய விளக்கு என்றும், இரத்தினங்கள்பதித்த விளக்கு என்றுங் கொள்ளலாம். 'குருவி' என்ற சொல் 'குரீஇ' என்று விகாரப்பட்டு அளபெடுத்ததனால், சொல்லிசையளபெடை. 'மலர்களாற்றிறந்த' என்பது பிரதிபேதம். (அஎ)

அஅ. வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவேனெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான்முடித்தகாரிய
மேனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமால்.

(இ - ள்.) வான் அகம் மின்னினும் - மேகம்மின்னினால் அதனைக் கண்டும், மழை முழங்கினும் - மேகம் இடிமுழக்கஞ்செய்தால் அதனைக்கேட்டும், எயிறு அரா என-விஷப்பற்களையுடைய நாகம் (அஞ்சி வருந்துவது) போலே, யான் அகம் மெலிகுவேன் - நான் மனம்வருந்துபவனானேன்; (ஆகவே),— யான் கான் அகம் புகுந்து முடித்த காரியம் - நான் வனவாசம்வந்து சாதித்த காரியத்தைக் குறித்து, மேல் நகும் கீழ் நகும் - மேலுலகத்தவர் சிரிப்பர் கீழுலகத்தவர் சிரிப்பர்: இனி என் வேண்டும்-இன்னும் (நான்) என்னசிறுமையையடையவேண்டும்? [ஒன்றுமில்லை யென்றபடி]; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

தான் மணஞ்செய்து கொண்ட மனையாளை மாற்றான் கவர்ந்துகொள்ள இழந்து அதற்கு எதிரொன்றுஞ் செய்யமாட்டாது வருந்துதலாகிய இது சிறுமையுட்சிறுமை யென்பதாம். தனது மனவலிமை சிறிதுமின்றி யொழிந்தமை, முன்னிரண்டடியிற் குறிக்கப்பட்டது. மின்னலுக்கும் இடிக்கும் அஞ்சிநடுங்குதல் பாம்பினியல்பாதல், முன்பு கூறப்பட்டது; விரகிகள் கார்

காலத்து வருந்துதலும் அவ்வாறே. தலைனத் தானே பழித்துக்கொள்ளுஞ் சமய மாதலால், தனக்கு நாகத்தை உவமைகூறிக்கொண்டான். 'மேல்', 'கீழ்' என்பன - இடவாகுபெயர். 'மேல்' என்றது, தேவர்களை. 'கீழ்' என்றது, நாகர்களை. மேலுலகத்தாரும் கீழுலகத்தாரும் நகுவ ரென்றதனால், இவ்வுலகத்தார்நகுவரெனபது கூறாமலேபெறப்பட்டது; அன்றி, 'கீழ்' என்றதில் நிலவுலகம் அடங்கு மென்றலுமாம். நகுதல் - இங்கே, இகழ்ச்சிச் சிரிப்பு; பரிஹாஸம்: இனி ஈன்வேண்டும்-இதைக்காட்டிலும் எனக்கு வேறு அவமானம் வேண்டுமோ? என்றபடி; இனி, இதற்கு-இவ்வாறானபின்பு (இவ்வுலகத்தில் எனக்கு) யாதுவேண்டுவது? [ஒன்றும் வேண்டுவதில்லை] என்றும் உரைக்கலாம்; இனி நான் பிழைத்திருந்து யாது செய்யவேண்டு மென்றதாம். 'முழக்கினும்', 'மெலிகுவன்', 'வேண்டுமோ' என்பன பிரதிபேதம். 'யானகமின்னுவன்' என்ற பாடத்திற்கு - நான் மனந்துடிப்பேன் என்று பொருள். (௮௮)

அகூ. மறந்திருந்துய்கலேன்மாரியீதெனி
னிறந்துவிண்சேர்வதுசாதமிப்பழி
பிறந்துபின்றீர்வலோபின்னரன்னது
துறந்துசென்றுறுவலோதுயரின்வைகுவேன்.

(இ - ள்.) துயரின் வைகுவேன் - துன்பத்தில் தங்குபவனான நான், மறந்து இருந்து உய்கலேன் - (சீதையை) மறந்திருந்து பிழைக்கமாட்டுவேனல்லேன்; மாரி ஈது எனின் - மழை இத்தன்மையதானால், இறந்து விண் சேர்வது சாதம் - (நான்) மரணமடைந்து பரலோகத்தையடைவது நிச்சயம்: இ பழி - (சீதையை இராவணன் கவர்ந்து செல்ல இழந்த தாகிய) இந்தப் பழிப்பு, பிறந்து பின் தீர்வலே - மற்றொரு ஜன்மமெடுத்து அப்பிறப்பில் (அவனுக்கு எதிர்செய்து) தீரக்கடவேனோ? (அன்றி), பின்னர் - மற்றொரு பிறப்பில், சென்று துறந்து - இல்லறத்தைவிட்டுத் துறவறத்தையடைந்து, அன்னது உறுவலோ - (இப்பழிதீரப்பெறுதலாகிய) அந்நிலைமையை யடைவேனோ? (எ - று.)

எப்படியும் இப்பிறப்பிலேயே இப்பழி தீரப்பெறுதல் எனக்கு இயலாதென்பதாம்; துறவறமடைந்தவர்க்கு முந்தின நிலையின் தொடர்புகளெல்லாம் நீங்குதலால் இப்பழியும் தீர்ந்திடு மென்றுகொண்டு, 'துறந்துசென்று அன்னது உறுவலோ' எனப்பட்டது. இப்பிறப்பில் துறக்கமாட்டாமையை 'மறந்திருந்து உய்கலேன்' என்றதனால் உணர்த்தினன். பழிதீர்வல் என இயையும். ஓகாரங்கள் - ஐயவினா. 'மாரி ஈது எனின்' என்றது - மழைக்காலம் இப்படி எனக்கு வருத்தஞ் செய்வதானால் என்றபடி; இப்படி விடாமல் மழைபெய்து கொண்டிருக்குமானால் என்றவாறுமாம். 'இறந்துவிண் சேர்வது சாலும்' என்ற பாடத்திற்கு - (யான்) இறந்து மேலுலகமடைவதே தகுதியா மென்று பொருள; 'உய்கிலேன்,' 'தீர்வனோ,' 'உருவனோ' என்பன பிரதிபேதம். (௮௯)

கூ0. ஈண்டுநின்றரக்கர்தமிருக்கையாமினிக்
காண்டலிற்பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவதன்றிதுவீரநோய்தெற
மாண்டனெனென்றதுமாட்சிப்பாலதால்.

(இ - ள்.) வீர - வீரனே! யாம் - நாம், ஈண்டு நின்று - இவ்விடத்திலே யிருந்து, இனி - இனிமேல், அரக்கர்தம் இருக்கை காண்டலில் - (இராவணனை முதலிய) இராக்கதர்களின் இருப்பிடத்தைத் தேடிக்கண்டுபிடிப்பதில், பல்பல காலம் காண்டும் - மிகப்பலநாள்கள் கழியக்காண்போம்; ஆல் - ஆதலால், இது வேண்டுவது அன்று - சீதையைத்தேடும் முயற்சி வேண்டா; நோய் தெற மாண்டனென் எனறது-(சீதையைப் பிரிந்ததனாலாகிய) ஆசை நோய் அழிக்க இறந்தேனென்பதே, மாட்சிப்பாலது - பெருமையிற் சேர்வதாம்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சீதையைக் கவர்ந்துசென்ற அந்த அரக்கரின் இருப்பிடத்தை நாம் இங்கேயிருந்து தேடியுணர்தற்கு இன்னும் எத்தனை காலஞ் செல்லுமோ? இம்முயற்சியில் வெகுகாலங்கழித்தலைக் காட்டிலும் 'சீதையைப்பிரிந்ததனாலாகிய காதல்நோயினால் இராமன இறந்தான்' என்று அனைவருஞ் சொல்லும்படி யான் இப்பொழுதே இறந்து விடுவதே பெருமையைத் தருவதாகும் என்பதாம். துன்பம் நுகர்ந்து கொண்டு பலகாலம் உயிர் வாழ்தலினும், துன்பந்தீர உயிரொழிதல் மேல்என்க.

இருக்கை - இருக்குமிடம்; 'கை' விகுதிபெற்ற தொழிலாகு பெயர். 'காலம்' என்றது - வர்ஷம அல்லது யுகம் என்றவாறும்; காலத்தின் பெரும் பகுப்பைக் காட்டும். 'வீர' எனறது, இலக்குமணனை நோக்கிய அண்மை விளி. மாட்சிப்பாலது - பெருமையின பகுப்பிற சேர்வது. 'வேண்டுவதன்றது', 'மாண்டனனென்பது மாட்சிப்பாலதாம்' என்பன பிரதிபேதம். (கூ0)

கூக. செப்புருக்கனையவிமமாரிச்சீகரம்
வெப்புறப்புரஞ்சுடவெந்துவீவதோ
வப்புருக்கொண்டவாணெடுங்கணாயிழை
துப்புருக்குமுதவாயமுதந்துய்த்தயான்.

(இ - ள்.) அம்பு உரு கொண்ட - அம்பின் வடிவத்தைக் கொண்ட [அம்புபோன்ற கூரியவடிவமுள்ள], வாள் நெடுங் கண் - ஒளியுள்ள நீண்ட கண்களையுடைய, ஆய் இழை - தோந்தெடுத்து அணிந்த ஆபரணங்களையுடையவளான சீதையினது, துப்பு உரு குமுதம் வாய் - பவழம்போன்ற நிறமுடையதும் செவ்வாம்பல்போன்றதுமான அதரத்தினது, அமுதம் - அமிருதம்போலினிமையான ரஸத்தை, துய்த்த - பருகி இன்பமனுபவித்தவனான யான்—இ மாரி சீகரம் - இந்த மழைத்துளிகள் செம்பு உருக்கு அனைய - செம்பை (நெருப்பிலிட்டு) நீராக உருக்கி அதனைப்பெய்தாற்போன்றனவாய், வெப்பு உற புறம் சுட-வெப்பம் மிகுமாறு (என) உடம்பை எரிக்க, வெந்து வீவதோ - தவித்து அழிவது தகுதியோ! (எ - று.)

செம்பு - தாமிரம். வெப்பு - வெம் என்ற பகுதியின்மேல் 'பு' என்னும் விகுதி பெற்ற பண்புப் பெயரென்னும் வெம்பு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெய ரென்றுங் கொள்ளலாம். செப்புருக்கு| அப்புரு - மென்றொடா வன்றொடராயிற்று. 'புறஞ்சுட' என்ற பாடத்திற்கும் பொருள் அதுவே. 'வீவதோ' என்றதில் தொழிற்பெயர் வினைமுற்றின் தன்மையை யடைந்தது. அமிருதமுண்டவன் அழிவது அடுக்குமோ? என்றாறும்.

'வீவனோ,' 'குமுதனாய் நுகர்ந்து துய்த்த யான்', 'அப்புருத்தனையவாய்' என்பன பிரதிபேதம். (கக)

கஉ. நெய்யடைதீயெதிர்நிறுவிநிற்கிவள்
கையடையென்றவச்சனகன் கட்டுரை
பொய்யடையாக்கியபொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ.

(இ - ள்.) நெய் அடை தீ எதிர் நிறுவி - (ஓமாகுதியாக) நெய் சேர்ந்து வளர்க்கப்பெற்ற அக்கினியின முன்னிலையில் (சீதையைக் கொணர்ந்து) நிறுத்தி, நிற்கு இவள் கையடை என்ற - 'உனக்கு இவள் அடைக்கலப் பொருள்' என்று (என்னை நோக்கிச்) சொன்ன, அ சனகன் கட்டுஉரை - அந்தச்சனக மகாராஜனது உறுதிச்சொலலை, பொய் அடை ஆக்கிய - பொய் பொருந்தியதாகச் செய்துவிட்ட [பழுதுபடுத்திவிட்ட], பொறி இலேனொடு - நல்வினையில்லாதவனான என்னிடத்தில், மெய் அடையாது - சத்தியமென்பது அமையாது; (ஆகவே) இனி விளிதல் நனறு - இனி (யான்) இறத்தலே நல்லது; (எ - று)—அரோ - ஈற்றசை; தேறறமுமாம்.

சனகமகாராசர் தாம் வளர்த்த பெண்ணான சீதையை அக்கினி சாக்ஷியாக எனக்குக் கந்யகாதானஞ்செய்து கொடுத்தபோது சாஸ்திரோக்தமாய் ஓமத்தைவளர்த்து அக்கினிக்கு முன்பாக எனது எதிரிற சீதையைக்கொண்டு வந்து நிற்கச்செய்து என்னைபபார்த்து 'எனபெண்ணான இந்தச்சீதை இனி உனக்கு அடைக்கலமாவள்' என்றுசொல்லி என்னிடததில் அவளை ஒப்பித்தனர்; அதற்கு இணங்கிச் சீதையைக் கைப்பற்றின யான் பினபு அதன்படி அவளைப் பத்திரமாகப் பாதுகாவாமல் விட்டிட்டேனாதலால், அந்தச் சொல்லைப் பழுதுபடுத்தியவனானேன; இப்படி சொல்தவறிய எனனிடம் இனிச் சத்தியம் சேராது ஆகவே யான் இவவாறு பொய்யனாய் உயிர்வாழ்தலினும் இறத்தலே மேல் என்பதாம். மேன்மேற் பொய்த்தல் ஒழிதலால், 'விளிதல் நன்று' எனப்பட்டது. கையடை - அடைக்கலம்; பாலகாண்டத்திற் கையடைப்படல மென்ற விடத்தும் இக்காண்டத்து வாலிவதைப் படலத்தில் "பொய்யடை யுள்ளத்தார்க்குப் புலப்படாப் புலவமற்றுன், கையடை யாகு மென் றவ்விராமற்குக் காட்டுங்காலை" என்றவிடத்துங் காண்க. கை அடை என்று பிரிந்து, ஒருவரது கையை [ஸ்வாதீநத்தை] யடைவது என்றாவது, ஒருவரது கையில் [வசததில] சேர்வது எனறாவது பொருள்பட்டுக் காரணக் குறியாகத் தக்கது; தவறாமற் பாதுகாக்கத்தக்க பொருளென்பது கருத்து. தம்மிடம் பிறர் ஒப்பித்த அடைக்கலப்பொருளைப் பாதுகாவாதுவிடுதல் பாதக

மாதலால், 'பொறியிலேன்' என்றார்; அங்ஙனம் அருமையான ஜாநகியை இழவாது வைத்துக்கொண்டு வாழப் பாக்கியமில்லாத யான் என்று தன்னை வெறுத்துக்கொண்டதுமாம். பொய் அடை - பொய் அடுத்தது; அடை— அடு - பகுதி. ஐ - விகுதி. நிற்கு - நினக்கு; அகரச்சாரியை தொக்கது. 'நிற்கவன்' என்ற பாடம் சிறவாது. (௬௨)

௬௩. தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
றாற்றுவேனுளனாகவாய்வளை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ.

(இ - ள்.) தேற்றுவாய் நீ உளை ஆக - (என்னைத்) தேற்றுபவனாய் நீயிருக்க, தேறி நின்று ஆற்றுவேன் நான் உளன ஆக - தேறுதலடைந்து நின்று (பிரிவுத் துன்பத்தைப்) பொறுத்துக் கொள்பவனாய் நான் இருக்க, (இவ்வளவிலே), ஆய் வளை தோற்றுவாள் அல்லள் - ஆராய்ந் தெடுத்தணிந்த வளையல்களை யுடையவளான சீதை இங்குவந்து தோன்றுபவ ளல்லள்; இ துன்பம் இனி ஆர் மாற்றுவார் - இத்துன்பத்தை வேறு யார் தீர்ப்பவர்? [எவருமில்லை யென்றபடி]; (ஆகவே), துயர்க்கு ஒரு வரம்பு உண்டாகுமோ - இத்துன்பத்திற்கு ஒருமுடி வெல்லையும் உளதாமோ? (எ - று.)

நீ யொருவன் என்பக்கத்தில் நின்று தேற்றிக்கொண்டிருக்க அந்த உன் வார்த்தையைக்கேட்டு நான் தேறி ஒருவாறு துயர் தணிவதனால் மாத்திரமே சீதை வந்து சேர்வாளா? அவள் வாராமற்போனால் இத்துன்பத்தை வேறெவரும் தீர்ப்பவ ரில்லையே; ஆகவே, இத்துன்பத்திற்கு ஒருமுடிவுண்டோ? என்பதாம். உளை - உண்மை யென்னும் பண்பினடியாப் பிறந்த முன்னிலை யொருமைக் குறிப்புமுற்று. கலித்தொகையில் "உளனு வென் னுயிரை யுண்டு" என்றவிடத்திற்போல, 'உளன்' என்றது - தன்மையொருமையாய் நின்றது; ("இலனென்று தீயவை செய்யற்க" என்ற திருக்குறளில் 'இலன' என்பதும் அது.) 'உளென்' என்று பாடமோதுவாரு முளர். ஆய் வளை - வினைத்தொகை யன்மொழி. 'இதற்கொரு வரம்பு' என்பது பிரதிபேதம். (௬௩)

௬௪. விட்டபோர்வாளிகள்விரிஞ்சன் விண்ணையுஞ்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்டுமோ.

(இ - ள்.) விட்ட - யான் இனித் தொடுக்கின்ற, போர் வாளிகள் - போர்க்குச் சிறந்த அம்புகள், விரிஞ்சன் விண்ணையும் சுட்டபோது - பிரமனது சத்திய லோகத்தையும் எரித்தபோதும், இமையவர் முதல் தொல்லையோர் பட்டபோது - தேவர்கள் முதலிய பழமையானவர்கள் அழிந்தபோதும், உலகமும் உயிரும் பற்று அற கட்டபோது - உலகங்களையும் பிராணிகளையும் மிச்சமில்லாதபடி அழித்தபோதும், அல்லது - அல்லாமல், மயிலை

காண்டுமோ - மயில் போன்ற சாயலை யுடையவளான சீதையைப் பார்ப்போமோ? (எ - று.)

சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் முதலிய அரக்கர்களிருக்கின்ற இடமும் அவர்கள் சீதையை ஒளித்து வைத்திருக்கின்ற இடமும் நமக்குத் தெரியவில்லை யாதலாலும் அதனைப் பிரமனாவது மற்றைத் தேவகணங்களாவது வேறு பிராணிகளாவது தெரிவிக்கவுமில்லை யாகையாலும், இனி நான் அம்புதொடுத்து எல்லாவுலகங்களையும் எல்லாப் பிராணிகளையும் அழித்தாலன்றிச் சீதையைக் காணமுடியாது என்பதாம். விண் - மேலுலகம்; இங்கே, மேலுலகங்க ளேழினுள்ளும் மேலதான சத்திய லோகத்தைக் குறித்தது

'விட்டதோர் வடிக்கணை விரிந்த விண்ணையும்,' 'உலகமும் யாரும் பற்றற', 'மயிலைக்காண்குமோ' என்பன பிரதிபேதம். (௧௪)

௧௫. தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
றெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டொருமையின்வந்தனரேனுமுய்கலா
ருருமெனவொலிபடுமுரவில்லோயென்றான்.

(இ - ள்.) உரும் என - இடிமுழக்கம் போல, ஒலி படும் - (நாணின்) ஓசையுண்டாதற் கிடமான, உரம் வில்லோய் - வலிமையையுடைய வில்லையுடையவனே!—யான் தெருமருகின்றது - 'யான் (உலகங்களையும் உயிர்களையும் அழிக்காமல்) இப்படி வருந்துகின்றது, தருமம் என்ற ஒரு பொருள் தன்னை அஞ்சி - தருமமென்கிற ஒரு சிறந்தபொருளைக் காவாமல் விடுவதற்கு அஞ்சியேயாம்; (அன்றி), செறுநர் - பகைவர்களான அரக்கர்கள், தேவரோடு - தேவர்களுடன், ஒருமையின் வந்தனரேனும் - ஒருங்கு சேர்ந்து (எனக்கு எதிராக) வந்தாலும், உய்கலார் - (இறந்திடாமல்) தப்பிப்பிழைக்க மாட்டார்களே, என்றான் - என்று (இலக்குமணனை நோக்கிக்) கூறினன், (இராமபிரான்); (எ - று.)

தருமமென்கிற ஒருபொருளுக்கு அஞ்சியன்றோ, உலகங்களையும் உயிர்களையும் அழித்துச் சீதையைக் கண்டிடாமல் இன்னது செய்வதென்று தெரியாது மனத்தடுமாற்றமுற்று இப்படி வருந்துகின்றேன்; இல்லாவிட்டால், அரக்கர்களும் தேவர்களும் ஒன்றாகக்கூடி எதிர் நின்றாலும் என் முன் உயிர் தப்பிப் பிழைத்துப் போகமாட்டுவரோ? என்று இலக்குமணனை நோக்கி இராமன் கூறினனென்பதாம். என் மனைவியைக்கவர்ந்தவர் அரக்கரேயாயிருக்க அதனபொருட்டு நிஷ்காரணமாய் அனைத்துலகங்களையும் எல்லாப் பிராணிகளையும் அழிப்பது அதர்மமாகுமே யென்பதை ஆலோசித்தே யென்பது 'தருமமென்றொரு பொருள்தன்னை யஞ்சி' என்றதன் கருத்து. தெருமருகின்றது - மனஞ்சுழல்கின்றது, நிகழ்காலத் தொழிற் பெயர். இதனைத் தொழிற் பெயர் வினைமுற்றின் தன்மையடைந்ததாகக் கொண்டு தருமமென்ற ஒருபொருளுக்கு அஞ்சிய யான் வருந்துகின்றது என்று முடித்தலுமாம். இவ்வகைமுடிபை வடநூலார் பாவேப்ரயோக மென்பர். 'ஒருமை

யின் வாய்ந்தனர்' என்பதும் பாடம். 'அருமையி னவிந்தன ரொன்று மஃதலால்' என்ற பாடத்திற்கு - அரக்கர்கள் தேவர்களுடனே அருமையாக அழிந்தார்க ளென்று சொல்லும்படி செய்வதை விட்டு யான் தெருமருகின்றது இத்தருமத்தை யஞ்சியே யென ஒரேவாக்கியமாக உரைக்க; அருமையின் - பிறர்க்கு அரிய வண்ணமாக வென்க. நான் கோபித்தாற் செறுநர் தேவரோடு அவிந்தனரொன்னும தல்லாமற் பிறிதென்னும்? என்று இசையெச்சமாகச் சிலசொற்கள் வருவித்துத் தனிவாக்கியமாக முடிப்பாரு முளர்.

செறுத்தல் - கோபித்தல், நெருக்குதல், பகைத்தல், வெறுத்தல். 'உருமெனவொலிபடு முரவிலோய்' என்றது இலக்குமணனை நோக்கிய விளி.

'அருமையின் வீந்தனரொன்று மஃதலால்' என்பது பிரதிபேதம். (கரு)

[இதுமுதல் ஏழுகவிகள் - இலக்குமணன் இராமனுக்குத் தேறுதல் கூறல்.]

கூரு. இளவலுமுரைசெயவாமெண்ணுநாளினு
முளவலகூதிருமிறுதியுற்றதாற்
களவுசெய்தவனுறைகாணுங்காலம்வந்
தளவியதயர்வதெனணையாழியாய்.

(இ - ள்.) இளவலும் - (இவ்வாறு இராமபிரான் சொல்லக்கேட்ட) தம்பியான இலக்குமணனும், உரைசெய்வான் - (அப்பெருமானை நோக்கி அடியில் வருமாறு) கூறுவான்:—ஆணை ஆழியாய் - ஆஜ்ஞா சக்கரத்தையுடையவனே!—எண்ணும் நாள் - (கழிக்கவேண்டுமென்று) கருதப்பட்ட மழைக்காலத்து நாள்கள், இனும் உள அல் - இன்னமும் உள்ளனவல்ல; கூதிரும் இறுதி உற்றது - சரத்காலமும் முடிவையடைவதாயிற்று; ஆல் - ஆதலால், களவுசெய்தவன் உறை காணும் காலம் வந்து அளவியது - (ஜாநகிப்பிராட்டியாரை) வஞ்சனையாற் கவர்ந்து சென்றவனான இராவணனுடைய இருப்பிடத்தைத் தேடிக்காணுதற்கேற்ற காலம் வந்து சேர்வதாயிற்று; அயர்வது என் - (நீ) வருந்துவானேன்? (எ - று.)

இளவல் - இளையபெருமாள்; இளமையுடையோ னெனத் தம்பிக்குக் காரணப்பெயர். அல் - பெயர் விகுதி. எண்ணுதல் - நினைத்தல்; குறித்தலுமாம்: (சீதையைததேடும் முயற்சி செய்யத் தொடங்குதற்குத் தவணையாக முன்பு சுக்கிரீவனுக்குக்) குறித்த (மழைக்காலத்து) நாள்களென்க. இனி, எண்ணும் நாள் - (அரிதிற்கழிதல்பற்றி) ஒன்று இரண்டு என்று எண்ணிக் கணக்கிடப்படுகின்ற (மழைக்காலத்து) நாள்களென்றுங் கொள்ளலாம். அன்றி, (நீ இவ்வாறு சீதாவிரகத்தாற்) சிந்தைப்படும் நாள்கள் இனியேலும் உள்ளனவல்ல வென்றலும் ஏற்கும். இனி, 'எண்ணுநாளினிலுள பகற்கூதிருமிறுதியுற்றது' என்றும் பாடங் காணப்படுகின்றது; அதற்கு - (முன்பு சுக்கிரீவனுக்குத் தவணையாகக்) குறிப்பிட்ட (நான்குமாத) காலத்திற் சேர்ந்த சரத்காலமும் பாதியளவுமுடிவையடைந்தது என்று பொருளாம்; 'நாளினிலுள கூதிரும் பகல் இறுதியுற்றது' என்று மொழிமாறுக: பகல் - பகுதி, பாதி. இனும் - இன்னும்; தொகுத்தல். ஆல் - அசையுமாம்.

களவுசெய்தவன் - திருடியவன், அபஹரித்தவன். உறை - வசிக்குமிடம், உறைதல் அல்லது உறுதல் - வசித்தல். 'காலமீதளவியலாகியது' என்ற பாடத்திற்கு, காலம் ஈது அளவு இயல் ஆகியது - காலமாகிய இது வந்துசேருந் தன்மையதாயிற்று என்றும், காலம் மீது என்று பிரித்து, காலம் மேல் [இனிமேல்] வருவதாயிற்று என்றும் உரைக்கலாம். 'காலமீதளவிறந்தயர்வதென்' என்று பாடமானபோது, காலமீது என்பதைத் தனி வாக்கியமாக முடித்து, (நீ) அளவுகடந்து வருந்துவதென்னே? என்று பொருள் கொள்க. இனி, 'உறை' என்ற சொல்லுக்கு - வாழ்நாளென்று ஒருபொருளிருத்தலால், சீதையைக்களவுசெய்த இராவணனுடைய வாழ்நாளை முடிவுகாணுங்காலம் [அவனையழிக்குங்காலம்] வந்து நெருங்கியது எனினும் அமையும். எங்கும் சுற்றிச் செல்வதாதல்பற்றி ஆஜ்ஞையைச் சக்கரமென்றல் மரபு. 'எண்ணுநாளினியுளவல,' 'களவுசெய்தவருறைகாணுங்காலமது' என்பன பிரதிபேதம். (கக)

கஎ. திரைசெயத்திண்கடலமிழ்தஞ்செங்கணு
னுரைசெயத்தரினுமதடொழிலுவந்திலன்
வரைமுதற்கலப்பைகண்மாடுநாட்டித்தன்
குரைமலர்த்தடக்கையாற்கடைந்துகொண்டனன்.

(இ - ள்.) திரை செய் - அலைகள் வீசுகின்ற, அ திண் கடல் - வலிய அந்தப் பாற்கடலானது, அமிழ்தம் - அமிருதத்தை, செம்கணன் உரைசெய தரினும் - சிவந்த திருக்கண்களை யுடையவனான திருமால் ('கொடு' என்று) கட்டளையிட்ட மாத்திரத்திலே கொடுக்கக்கடவதானாலும், அ தொழில் - அவ்வாறு தனது ஆஜ்ஞையின் வலிமைகாட்டிச் சடக்கெனப் பெறுவதை, உவந்திலன் - (அத்திருமால்) விரும்பாதவனாய், வரை முதல் கலப்பைகள் மாடு நாட்டி - (மந்தர)கிரி முதலிய உபகரணங்களை அவ்விடத்திற் கொணர்ந்து தாபித்து, தன் குரை மலர் தட கையால் கடைந்து - தனது ஆபரணங்களொலிக்கப்பெற்ற செந்தாமரைமலர்போன்ற பெரிய கைகளால் (அக்கடலைக்) கடைந்தே, கொண்டனன் - (அதனினின்று அமிருதமுண்டாக (அதனைப்) பெற்றுக்கொண்டான்; (எ - று.)

முன்னொரு காலத்தில், இவ்வண்டகோளத்திற்கு அப்புறத்திலுள்ள விஷ்ணுலோகத்துச் சென்று திருமகளைப் புகழ்ந்து பாடி அவளால் ஒரு பூமாலை பிரசாதிக்கப் பெற்ற ஒரு வித்தியாதர மகள், மகிழ்ச்சியோடு அம்மாலையைத் தன் கைவீணையில் தரித்துக்கொண்டு பிரமலோகவழியாய் மீண்டு வருகையில், துர்வாஸமகாமுனி எதிர்ப்பட்டு அவளை வணங்கித் துதிக்க, அவ் விஞ்சைமங்கை அம்மாலையை அம்முனிவனுக்கு அளித்திட்டாள்; அதன் பெருமையை யுணர்ந்து அதனைச் சிரமேற்கொண்ட அம்முனிவன் ஆனந்தத்தோடு தேவலோகத்திற்கு வந்து, மிக்க உல்லாசமாக ஐராவதயானையின்மேற் பவனி வந்துகொண்டிருந்த இந்திரனுக்கு அம்மாலையைக் கைநீட்டிக்கொடுக்க, அவன் அதனை அங்குசத்தால் வாங்கி யானையின் பிடரிமேல் வைத்தவளவில், அம்மதக்களிறு அதனைத் துதிக்கையாற் பிடித்து இழுத்துக் கீழெறிந்து

காலால்மிதித்துத் துவைத்துவிட்டது; அதுகண்டு முனிவன் கடுங்கோபங் கொண்டு 'இங்ஙனஞ் செல்வச்செருக்குற்ற நினது ஐசுவரியங்க ளெல்லாம் கடலில் ஒளித்துவிடக் கடவன' என்று சாபங்கொடுக்க, உடனே தேவர் செல்வம் யாவும் ஒழிந்தன. ஒழியவே, அசுரர் வந்து பொருது அமரரை வெல்வாராயினர். பின்பு இந்திரன் தேவர்களுடன் திருமாலைச் சரண மடைந்து, அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி, அசுரர்களையுந் துணைக்கொண்டு, மந்தரமலையை மத்தாகநாட்டி, வாசுகியென்னும் மகாநாகத் தைக் கடைகயிறாகப்பூட்டி, சந்திரனை அடைதுணையாக நிறுத்தி, பாற்கடலைக் கடைய முயலுகையில், வாசுகியின் வாலைப் பிடித்துக்கொண்ட தேவர்களும் தலையைப் பிடித்துக்கொண்ட அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் அதனை வலியப்பிடித்து இழுத்துக் கடையவல்ல வலிமையில்லாதவராய் நிற்க, அது நோக்கித் திருமால் தான் ஒரு திருமேனியைத் தரித்துத் தேவர்கள் பக்கத்தி லேயும் வேறொரு திருமேனியைத் தரித்து அசுரர்கள் பக்கத்திலேயும் நின்று வாசுகியின் வாலையும் தலையையும் பிடித்து வலமும் இடமுமாக இழுத்துக் கடைந்தருளவே, அக்கடலினின்று அமிருதம் முதலியன உண்டாயின; அவற்றைத் திருமால் கைக்கொண்டு தேவர்கட்குத் தந்தருளினன் என்பது, இங்குக் குறித்தகதை. "மேனாள், தாழி தரையாகத் தண்டயிர் நீராகத் தட வரையே மத்தாகத் தாமரைக் கைந்நோவ, ஆழிகடைந் தமுதமெங்களுக்கே யீந்தாய்" என்று ஆரணியகாண்டத்தில் வந்ததும் காண்க. இவ்வரலாற்றினால், தன்னைச் சரணமடைந்தாரைத் தன்சிரமம்பாராது பரிபாலிக்கும் பகவானது கருணை வெளியாம். வாலி கடல்கடைந்து தேவர்கட்கு அமிருத மளித்ததாகக் கூறியதனோடு இது மாறுகொளக் கூறலாகாதவாறு எங்ஙனமெனின், கல்ப பேதத்தினால் என்று சமாதானங் கூறியமைப்பர் ஆன்றோர்.

வரம்பிலாற்றலையுடைய திருமால் 'அமிருதம் முதலிய அரும்பொருள் களைக் கொடு' என்று பாற்கடலுக்கு ஒரு கட்டளைகூறி அம்மாத்திரத்திலே அக்கடல் அஞ்சி அப்பொருள்களை யெல்லாம் கொணர்ந்து கொடுக்கப் பெற் றுக்கொள்ள வல்லனேயாயினும் அவ்வாறு சடக்கெனச்செய்து காரியத்தைச் சாதித்துக்கொள்ளத் திருவுளங்கொள்ளாமல் அதற்குவேண்டிய உபகரணங் களை யெல்லாஞ் சேர்த்துக்கொண்டு தக்கவழியால் முயன்றே காரியத்தை முடித்தருளினன் என இதனை எடுத்துக் கூறியது, நினது பழுதுபடாத அம்புகளினால் உலகமனைத்தையும் ஸகல பிராணிகளையும் அழித்துப் பிராட் டியைக் காணவல்ல பேராற்றலுடையை யாயினும் அங்ஙனஞ் செய்யாது வானரசேனைகள் முதலிய ஸாதனங்களைத் திரட்டித் தக்கவழியாற சீதையைக் கண்டு பகைவென்று அத்தேவியைச் சேர்தலே தக்கதென்பதற்கு நிதரிசனங் காட்டியவாறும். அடுத்த இரண்டு செய்யுள்களும் இவ்வாறே.

செம் கணான் - உத்தம விலக்கணமாகிய சிவந்தரேகைகள் படர்ந்த கண் களை யுடையான், செந்தாமரைக் கண்ணன். இங்கே 'செங்கணான்' என்றது - திருமாலின் இயல்பிற்சிவந்த திருக்கண்களையே; தேவர்கள் செல்வங்களை யெல்லாந் தான் ஒளித்து வைத்துக்கொண் டிருத்தற்காக அப்பெருமான்

தேவர்கள்பக்கல் பரிவினால் தன்மீது சினந்து கண்சிவந்தாரகக் கருதிச் சமுத்திரராஜன் அஞ்சத்தக்கா னென்பதை யுணர்த்தும். இதனால் திருமாலின் திவ்யசக்திக்குமுன் சமுத்திரராஜன் அசக்த னென்றவாறும். "நெடுங்கடல் கிற்பதும்.........அரங்கேசர்தந் திருவாணையினே" என்றபடி கடல் முதலிய அனைத்தும் எம்பெருமான கட்டளைக்கு அஞ்சி அடங்கி நடக்குமென்க. 'திரைசெய்' என்ற அடைமொழி - கடலின இயற்கை யாடம்பரத்தையும், 'திண்' என்றது - அதற்கு எற்ற இயற்கை வலிமையையுங் காட்டும். அகரச் சுட்டு - பிரசித்தி பற்றியது. குரைத்தல் ஒலித்தல்; இங்கே, வளை முதலிய ஆபரணங்க ளொலித்தல்; இனி, "பலகுரைதன்பம" என்றவிடத்திற் போல, குரை - அசையெனினுமாம். (௬௭)

௬௮. மனத்தினினுலகெலாம்வகுத்துவாய்ப்பெய்
நினைப்பினனாயினுநேமியானெடு
மெனைப்பலபடைக்கலமேந்தியாரையும்
வினைப்பெருஞ்சூழ்ச்சியிற்பொருதுவெல்லுமால்.

(இ - ள்) (மற்றும்),—நேமியான் - சக்கராயுதத்தை யுடையவனான அத்திருமால், மனத்தினின் - திருவுள்ளத்தில் நினைத்த மாத்திரத்தில், உலகு எலாம் வகுத்து வாய் பெயும் - உலகங்களை யெல்லாம கூறுகூறாக்கி வாயிற் போகட்டுக்கொண்டு உண்டு விடத்தக்க, நினைப்பினன் ஆயினும் - சங்கற்ப சக்தியை யுடையவனானாலும், (அவ்வாறு செய்யாமல்), எனை பல நெடும் படைக்கலம் ஏந்தி - மிகப்பல பெரிய ஆயுதங்களைக் கைகளிற் கொண்டு, (அவற்றால்), யாரையும் - (அசுரர் அரக்கர் முதலிய கொடியவர்கள்) அனைவரையும், வினை பெருஞ் சூழ்ச்சியின - போர்த்தொழிலுக்கு உரிய பெரிய தந்திரங்களுடன, பொருது - போர்செய்தே, வெல்லும் ஜயிக்கின்றான; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

'உலகு' என்றது - இங்கு, இடத்தையும், இடத்து நிகழ்பொருளாகிய ஜீவராசிகளையும் உணர்த்திற்று. வகுத்தல் - வகைப்படுத்தல், பகுத்தல். வாய்ப்பெய்தல் - உட்கொள்ளுதல். இனி, உலகெலாம் வகுத்து வாய்ப்பெயும் மனத்தினின் நினைப்பினன - உலகங்களையெல்லாம் படைத்தலும் உண்ணுதலும் செய்யவல்ல மனத்தின் சங்கற்பத்தை யுடையானென்று உரைத்தலுமொன்று; இவ்வுரையில், வகுத்தல் - உண்டாக்குதல். பெயும் - பெய்யும், தொகுத்தல். நேமியான் - சக்ரபாணி. எனைப்பல - எத்தனையோபல; எனை - எத்தனையென்பதன் விகாரம்; எனையென்பதன விகாரமெனக் கொண்டு, மற்றும்பல வென்றலுமாம். படைக்கலம் - போர்க்கருவி; கலம் - உபகரணம் தான் பரமபதத்தில் அல்லது திருப்பாற்கடலில் இருந்தபடியே தனது சுதரிசனமென்னுஞ் சக்கராயுதத்தை யேவி அதுகொண்டு கொடியவர்களை யெல்லாம் அறத்தொலைக்கவல்ல ஆற்றலுடையனாயிருந்தும் அவ்வாறு செய்யாமல் அச்சக்கரம் முதலிய ஆயுதங்கள் பலவற்றை யேந்திக்கொண்டு அந்தந்த கொடியவர்களுள்ளவிடத்திற் சென்று சமயோசிதமாகப் போர்செய்தே அவ

களை வெல்லுகின்றா னென்பது விளங்க, 'நேமியான் கெடும் எனைப்பல படைக்கலமேந்தி யாரையும் வினைப்பெருஞ் சூழ்ச்சியிற் பொருது வெல்லும்' என்றார். மகாமாயாவிகளான அக்கொடியவர்களுடைய பெருமாயைகளுக்கு எதிர்செய்து வெல்லவல்ல மாயாசக்தியுடனே யென்பதும், 'வினைப்பெருஞ் சூழ்ச்சியின்' என்பதில் தோன்றும். இனி, வினைப்பெருஞ் சூழ்ச்சியின் - பகைவரிடத்துச் செய்யுந் தொழிலுக்குரிய பெரிய (ஸாமதாநபேததண்டங்களாகிய) உபாயங்களுடனே யெனினும் அமையும் சூழ்ச்சி - ஆலோசனையுமாம். 'மனத்தினில்', 'நேமிநேமியோ டெனைப்பல', 'எனைப்பகல்' 'சூட்சியின்' என்பன பிரதிபேதம். (௯௮)

௯௯ கண்ணுடைநுதலினன்கனிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநா
ளெண்ணியசூழ்ச்சியுமீட்டிக்கொண்டவு
மண்ணலேயொருவராலறியற்பாலவோ.

(இ - ள்.) அண்ணலே-பெருமையிற் சிறந்தவனே!—கண் உடை நுதலினன் - (நெருப்புக்) கண்ணையுடைய நெற்றியை யுடையவனான, கனிச்சி வானவன் - மழுவை யேந்திய மகாதேவனாகிய சிவபிரான், விண்ணிடை புரம்சுட - ஆகாயத்திலே சஞ்சரிக்கின்ற திரிபுரங்களை யெரித்தற்காக, வெகுண்ட - கோபங்கொண்ட, மேலை நாள் - முற்காலத்திலே, எண்ணிய சூழ்ச்சியும் - ஆலோசித்த ஆலோசனைகளும், ஈட்டிக்கொண்டவும் - சேர்த்துக் கொண்ட உபகரணங்களும், ஒருவரால் அறியற்பாலவோ-ஒருத்தரால் அறியத்தக்கனவோ? [ஒருவராலறியலாகாதவாறு மிகப்பல வென்றபடி] (எ - று.)

ஒருவரால் அறியற் பாலவோ - ஒருவராலும் அறியற்பாலன வல்ல வென்றுங் கொள்ளலாம். உலகங்கட்கெல்லாம் உபத்திரவஞ் செய்கின்ற திரிபுரத்து அசுரர்களை அழித்திடுமாறு தேவர்கள் பிரார்த்தித்த பொழுது, சிவபெருமான தனது திருவடித் தொண்டர்களான அவ்வசுரர்களைத் தானே யழிப்பது எங்ஙனமென்று சிந்திக்க, அக்குறிப்பிற்கு ஏற்பத் திருமால் உடனே மாயையினால் ஜிநாவதாரமும் புத்தாவதாரமுஞ் செய்து விபரீதமான பற்பல வாதங்களைக் கற்பித்து அவ்வசுரர்கட்கு உபதேசித்து மயக்கி அவர்களை யெல்லாம் சிவத்வேஷிகளாகச் செய்து விட, அதன் பின்பு சிவபிரான் 'போர்க்குரிய சிறந்த கருவிகளின்றிப் போர் செய்வது எவ்வாறு? அவை கூடினால், ஒரு கணத்தில் அவ்வசுரர்களை யழித்திடலாம்' என்று சொல்ல, அதன்படி தேவர்கள் தேர் குதிரை சாரதி வில் நாணி அம்பு முதலிய யுத்தோபகரணங்களை யெல்லாஞ் சித்தஞ் செய்ய, பிறகு பரமசிவன் முப்பத்து முக்கோடி தேவகணங்களோடும் மிகப்பல வெள்ளக்கணக்கான பூத சேனைகளோடும் புறப்பட்டுச் சென்று அத்திரிபுர மூன்றும் ஒருங்கு கூடிய சமயம் பார்த்து அம்புதொடுத்து அவ்வசுரர்களைப் பட்டணங்களோடு எரித்திட்டன னென்பது இங்குக் குறித்தது. "கருவிசூழெயில்காதுபோர்க், கரு

வியொன்றிலங் காண் வரக், கருவி கூடிற் கணர்த்தவர், கருமவலாமிறல்காண் டியால்,'' ''உருகெழுதில மொருவையமும், இருசுட ரிருபுடையாழியும், சுருதிகள் துகளறவாசியும, மருமல ரணையவன வலவனும்'', ''தட நெடுவடவரை சாபமும், படவரவிறை பகாநாரியும், மடல்விரி தளவினன் வாளியும், கடவுளர் பிறர் பிறகருவியும்'' என்பன இங்கு அறியததக்கன. இந்த உபகரணங்களில்லாமலே எளிதில் திரிபுர சங்காரஞ் செய்யத்தக்க நெற்றிக் கண்ணையும் அக்கினிஸ்வரூபமான மழுவாயுதத்தையு முடையனுயிருந்தும் அவ்வாறு செய்திலனெனபது தோனற, 'கண்ணுடைநுதலினன் கணிச்சிவானவன்' என்றார். கணிச்சி - சூலமுமாம். பகையை தவறுமலழிததற்கு, தக்கஆலோசனையும் தக்க உபகரணங்களும் இன்றியமையாதன வென்பது, இங்குவிளக்கப்பட்டது.

அண்ண னென்பது அண்ணலென ஈறுதிரிந்த தெனக் கொண்டு, அண்ணலே [அண்ணனே] தமையனே யென்றலு மொன்று 'ஒருவரால் அறியற்பாலவோ' என்பதற்கு - ஒருவரால் அறிய வேண்டியனவோ? [லோகப்பிரசித்தமானவை யல்லவோ] என்று உரைப்பாரு முளர்.

'நுதலவன்,' 'நுதனெடுங்கணிச்சிவானவன்' என்பன பிரதிபேதம்.(௧௧)

௬00. ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
னேகுறுநாளிடைபெய்தியெண்ணுவ
சேகுறப்பன்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ.

(இ - ள்.) ஆகுநர் யாரையும் - (தமக்கு) அநுகூலரானவர்களெல்லாரையும், துணைவர் ஆக்கி - துணையாக வந்து உதவுபவர்களாகச் சேர்த்துக் கொண்டு, எண்ணுவ சேகு உற பல் முறை தெருட்டி - ஆலோசிக்க வேண்டிய விஷயங்களை உறுதியாகப் பலமுறை ஆலோசித்துத் தெளிந்து, பின் - பின்பு, ஏகுறு நாளிடை எய்தி-(காரியத்தின் பொருட்டுச்) செல்லுதற்குரிய நாளிற் சென்று, செய்த பின் - (காரியத்தைச்) செய்தால், வாகை என்ற ஒரு பொருள் வழுவல் பாலதோ-(அக்காரியத்தில்) வெற்றி யென்ற ஒரு பொருள் தவறக் கூடியதோ? [அன்று என்றபடி]; (எ - று.)

ஆகுநர் யாரையும் - தக்கவர்களை யெல்லாம் எனினுமாம். சேகு - மரவயிரம்; இங்கு, உறுதிக்கு இலக்கணை. சேகு உற- உறுதியமைய. 'சேகற' என்ற பாடத்திற்கு - இடையீடில்லாமல் என்று பொருளாக வேண்டும்; குற்றமற என்பாரு முளர். வெற்றி பெற்றவர் வாகைமரத்து மலர்களாலாகிய மாலையைத் தரிக்கும் மரபு பற்றி, வெற்றிக்கு வாகையென்று பெயராயிற்று. வாகை யென்றொரு பொருள் வழுவற்பாலதோ-தவறுமல் வெற்றிகிடைக்கு மென்றபடி. 'பன்முறைதெரிந்துசெய்தபின்' என்பது பிரதிபேதம். (௬00)

௪0௧. அறத்துறைதிறம்பினராக்கராற்றலர்
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனிற
புறத்தினியார்திறம்புகழும்வாகையும்.

(இ - ள்.) ஆற்றலர் - வலிமையையுடையவர்களான, அரக்கர் - இராக்கதர்கள், அறம் துறை திறம்பினர் - தருமமார்க்கந் தவறியவர்களாய், மறம் துறை நமக்கு என வலிக்கும் வன்மையோர் - (கொடியவழியே நமக்குச் சிறந்தது) என்று நிச்சயித்த உறுதியையுடையவர்; (அவர்கள் இவ்வாறு), திறம் துறை நல் நெறி திறம்பல் உண்டு எனின் - தகுதியுள்ள இடமாகிய சன்மார்க்கத்தை விட்டுத் தவறுத லுள்ள தென்றால், புறத்து இனி - அப்பால், புகழும் வாகையும் - கீர்த்தியும் வெற்றியும், யார்திறம் - யாரிடத்திற் சேரும்? (அவர்களிடத்திற் சேரா: அவர்களை யழிக்கச் செல்பவனும் தருமமார்க்கந் தவறுதவனுமான உன்னிடத்திலேயே சேரு மென்றபடி);(எ - று.)

'அறம் வெல்லும், பாவம் தோற்கும்' என்பது உறுதி யாதலால, தரும வழியிற செல்லுதலைவிட்டுத் தீயவழியிலேயே செல்பவர்களான அரக்கர்கள் பழியையும் தோல்வியையும் அடைந்து அழியத் தர்மாத்மாவான நீயே புகழையும் வெற்றியையும் அடைவாய் எனறு தேற்றியவாறும். புறத்து இனி - அப்புறம். இனி, இச்செய்யுளுக்கு - தருமமார்க்கந் தவறியவர்களான அரக்கர்கள் பலபராககிரமமுடையவர்க ளாதலால் '(எப்போதும்) போர்வெற்றி நமக்கே (யுளதாம்)' என்று நிச்சயிக்கும் உறுதியுடையோர்; (ஆனாலும்) மேன்மையிற்சேர்ந்ததான சனமார்க்கத்தினின்று தவறுதல் (அவர்களிடத்தில்) உளதென்றால், (உன்னைவிட்டு) வேறுயாரிடத்திற் புகழும் வெற்றியும் கூடும்? என்று உரைகூறலுமாம். திறத்துறை - திறத்து உறை என்றும் பிரிக்கலாம். 'ஆற்றலால்,' 'திறத்தறு,' 'புறத்தினில் யார்தாம் புகழும் வாழ்க்கையும்' என்பன பிரதிபேதம். (௧0௧)

௧0௨. பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவா
யந்தணர்க்காகுநாமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான்.

(இ - ள்.) பைந்தொடிக்கு இடர் களை பருவம் - பசுமையான [பசும் பொன்னலாகிய] தொடியெனனும் வளையை யணிந்தவளான பிராட்டிக்கு (சேர்ந்த) துன்பத்தை நீக்குதற் கேற்ற காலம், பையவே வந்து அடுத்து உளது - மெல்ல வந்துசேர்ந்துவிட்டது; இனி வருத்தம் நீங்குவாய் - இனிமேல் துனபத்தைத்தவிர்வாய்; அந்தணர்க்கு ஆகும் நாம் - முனிவர்கட்கு உதவியாகவேண்டிய நாம், அரக்கர்க்கு ஆகுமோ - இராக்கதர்கு இலக்காகக் கடவோமோ? சுந்தரம் தனு வலாய் - அழகிய வில்லில் வல்ல வீரனே!

சொல்லு நீ - நீ சொல்வாய், என்றான் - என்று (இராமபிரானைநோக்கி) (இலக்குமணன்) கூறினான்; (எ - று.)

முனிவர்கட்குக் கொடுமைசெய்கின்ற அரக்கர்களைத் தொலைத்து அவ் விருடிகட்கு உதவியாக வேண்டிய நாம் அவ்வரக்கரியற்றிய இடையூற்றிற்கு உள்ளாகி அதனினின்றுமீளாமலே அழிந்துவிடுவது தகுதியோ? சொல்லென்று தேறுதல்கூறினன். 'ஆகும்' என்றசொல் இரண்டனுள், முன்னது - பெய ரெச்சம்; பின்னது - தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று; இதில், 'கும்' விகுதியே காலங்காட்டும். பையெனல் - மந்தக்குறிப்பு 'அந்தணர்க்காகு மோ வரக்கர்க்காகுமோ', 'அந்தணர்க்காமற மரக்கர்க்காகுமோ' என்பன பிரதிபேதம். (கOஅ)

[மழைக்காலம் முடிவையடைதல்.]

கOசு. உறுதியஃதேயெனவுணர்ந்தவூழியா
னிறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழந்தனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்ததப்பருவமாண்டுபோய்.

(இ - ள்.) (இவ்வாறு இலக்குமணன் சொன்னவார்த்தைகளைக் கேட்டு), அஃது உறுதியே என உணர்ந்த-அவன்சொன்னவிஷயம் தக்கதே யென்று திருவுள்ளத்திற் கொண்ட, ஊழியான் - காலத்திற்குத்தலைவனான இராம பிரான், இ மாரிக்கு இறுதி உண்டேகொல் என்பது ஓர் தெறு துயர் உழந்த னன் - இந்தமழைக்காலத்திற்கு ஒருமுடிவு உளதோ வென்றுஎண்ணுதலினு லாகிய ஒப்பற்ற கொடிய துன்பத்தை யனுபவித்தவனாய், தேய - மெலிவ டையுமளவில்,—அ பருவம் - அந்தக்கார்காலமானது, ஆண்டு போய் - தனது ஆளுகையைச்செலுத்திவிட்டுச்சென்று, தேய்வு சென்று அறுதியை அடைந் தது - நாளடைவில் மெலிவுற்று முடிவையடைந்தது; (எ - று.)

காலத்திற்கு நியாமகனான இப்பெருமான் காலத்திற்குவசப்பட்டவன் போலக் கார்காலத்திற்குவருந்தியது, தான்கொண்டமநுஷ்யாவதாரத்திற்கு ஏற்ற பாவனையே யென்பது விளங்க, இங்கு 'ஊழியான்' என்றார். இனி, ஊழியான் - காலஸ்வரூபி யெனினுமாம், உண்டே, ஏ - வினா. கொல் - இரக்கந்தோன்றநின்றது. தெறு துயர் - அழிக்குந் துன்பம்; மரணவேதனை யைச்செய்யுந் துன்பமென்க: நிலைபெற்ற துன்ப மென்றலுமாம்: தெறுதல்- அழித்தல், தங்குதல். உழத்தல் - அனுபவித்தல், வருந்துதல். ஆண்டு-ஆட்சி செய்து. கார்ப்பருவம் தேய்வு செல்லுதலாவது - நாளடைவில் வரவர மழை குறைதல். அது அறுதியை யடைதலாவது-மழை இல்லையாதல். 'தேயத் தேய்வுசென்று' என்றவிடத்துச் சொற்சமத்காரங் காண்க. (கOசு)

இதுமுதல் இப்படலம் முடியுமளவுமுள்ள பதினெட்டுக் கவிகள் - அப்பொழுதை நிலைமைகளை வருணிப்பன: சரத்காலவர்ணனை.

[மேகங்கள் வெளுத்தல்.]

கO௪. மன்கலில்பெருங்கொடைமருவிமண்ணுளோ
ருள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க்கீவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே.

(இ - ள்.) மன்கல் இல் - பின்வாங்குதலில்லாத, பெருங் கொடை - பெரிய ஈகைத்தொழிலில், மருவி - பொருந்தி, மண் உளோர் உள்கிய பொருள் எலாம் உதவி - உலகத்திலுள்ளவர்கள் பெறநினைத்த பொருள்களையெல்லாம் (தம்மிடத்திலுள்ளவளவும் அவர்கட்குக்) கொடுத்து, அற்ற போது - (தம்மிடம்) பொருள் இல்லையானபோது, எள்கல் இல் இரவலர்க்கு ஈவது இன்மையால் - இகழப்படாத யாசகர்க்குப் பொருள் கொடுக்கமாட்டாமையால், வெள்கிய - நாணமடைந்த, மாந்தரின் - மனிதர்கள் (தமது இயற்கை நிறம் மாறி வேற்றுநிறமடைதல்) போல, மேகம் வெளுத்த -(தம்மிடமுள்ள நீர்முழுவதையும் பெய்துவிட்ட) காளமேகங்கள் வெண்ணிறமடைந்தன; (எ - று.)

உவமையணி. "இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும், வசையன்று வையத்தியற்கை" என்றாரேனும், "எல்லா மிரப்பார்க்கு ஒன்று ஈயாமை அச்சம்" என்பவாதலால், உயர்குடிப்பிறந்த உத்தமரான கொடை வள்ளல்கள் தம்மிடம் வந்த யாசகர்க்கு அவர் வேண்டும் பொருளைத் தாம் கொடுக்கக்கூடாமைபற்றி லஜ்ஜைப்பட்டு அதனால் வைவர்ணியமடைவரென்க.

மன்கல் - மறுத்தல்; அழிதலுமாம். பெருங்கொடை - ஏற்றார்க்கு மாற்றாது கொடுத்தல். மன்கலில் பெருங்கொடை மருவுதல் - இரப்பவர்க்கு இல்லையென்று சொல்லாத மகா தாத்ருத்வத்தைப் பெற்று அக்குணத்தில் நிலைபெறுதல். யாசகர் நாணத்தைவிட்டு வாய்திறந்து 'எனக்கு இன்னது இல்லை, வேண்டும், தருக' என்று இளிவரவுபடச் சொல்லுதல் வேண்டாதபடி அவர்கள்கருதியவளவிலே குறிப்பறிந்து கொடுத்துவந்த மகோதாரிகளென்பது விளங்க, 'மண்ணுளோருள்கிய பொருளெலா முதவி' என்றார். அற்ற போது - தாம்வறுமையடைந்தபோது. இரவலர் - இர வலர்—இரத்தலில் வல்லவர்; அன்றி, இரவல் அர் - இரத்தற்றொழிலை யுடையோர். (கO௪)

[காளமேகங்களின் அடர்த்தியாலாகியிருந்த இருள் ஒழிதல்]

கO௫. தீவினைநல்வினையென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோ
ராய்வினிமெய்யுணர்வனுகவாசறு
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள்.

(இ - ள்.) தீவினை நல்வினை என்ன - பாவம் புண்ணியம் என்று, தேற்றிய - (நூல்களால்) அறிவிக்கப்பட்ட, பேர் வினை - பெரிய கருமங்களின், பொருள்தனை - தீமையும் நன்மையுமாகிய பயன்களை, அறிந்து - உணர்ந்து, பெற்றது - அடைந்ததான, ஓர் - ஒப்பற்ற, ஆய் வினை மெய்உணர்வு - ஆராய்தற்றொழிலையுடையதான தத்துவஞானம், அணுக - உண்டாக, (அவ்வளவிலே), ஆசறு - அழிகின்ற, மாயையின் - அவித்யை போல, மாரி பேர் இருள் மாய்ந்தது - வருஷா காலத்திற் கார்மேகங்களின் அடர்த்தியாலாகிய பெரிய இருள் (சரத்காலம்வந்தவளவிலே) இருந்த இடம் தெரியாதபடி அழிந்தது; (எ - று.)

மாயை, அவித்யை, விபரீதஞானம், மயக்கம், மருள் என்பன - ஒரு பொருட்சொற்கள்; அஃதாவது - இருவினைப்பயனும் மறுபிறப்பும் கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையனவாகவும் மாறுபடவுணர்தல். மெய்யுணர்வு - தத்துவஞானம்; அஃதாவது - இருவினைப் பயன்களையும் பிறப்பு வீடுகளையும் கடவுளின் சொரூபத்தையும் ஐயந்திரிபற உள்ளபடி உணர்தல். இம்மெய்யுணர்வு ஒருவர்க்குத் தோன்றிய மாத்திரத்தில் அவரிடம் முன்பு இருந்த அவித்யை தானேயொழியும் அத்தன்மையை, கார்மேகங்களின் நெருக்கத்தா லுண்டாகியிருந்த பெரிய இருள் சரத்காலம் வந்தவளவிலே நீங்கிவிட்டதற்கு உவமைகூறினார். உவமையணி. "இருணீங்கி யின்பம் பயக்கும் மருணீங்கி, மாசறு காட்சியவர்க்கு" என்ற திருக்குறள், இங்கு நோக்கத்தக்கது.

பேர்வினை - பண்புத்தொகை; வினைத்தொகையாகக் கொண்டு, (ஒன்றற்கு ஒன்று) மாறுபட்ட வினைகளென்றும், அழியுமியல்புள்ள வினைகளென்றும் உரைக்கலாம். 'பேய்வினை' என்று பாடமோதி, பேய்போலப் பொல்லாதனவாகிய (இரு)வினைக ளென்பாரு முளர்: நல்வினையும் உயிரைப் பந்தமுறுத்திப் பிறவிக்குக் காரணமாதலால், அதனையும் 'பேய்வினை' எனத்தகும். தத்துவஞானத்தின் வகைகளான கேள்வி விமரிசம் பாவனை என்ற மூன்றில், நல்லாசிரியரிடத்து உபதேசமாகக் கேட்ட பொருளைப் பிரமாணங்களைக் கொண்டும் யுக்தியைக்கொண்டும் தெளிய ஆராய்தலாகிய விமரிசத்தின் அமைதியை, 'ஆய்வினை' என்ற அடைமொழிகொண்டு விளக்கினர்; "ஓர்த்தல் - முடிதல். 'ஆசுறு' என்ற பாடத்திற்கு, ஆசு உறு - எளிமையை யடைகின்ற என்று பொருள்கொள்ளவேண்டும்; ஆசு - அற்பம்.

இச்செய்யுளில் இடையிரண்டடிகளில் ஆசிடையிட்ட எதுகையும், ஈற்றடியில் இனவெதுகையோடு வருக்கவெதுகையும் வந்தன. ஆசிடையிட்ட எதுகையாவது - எதுகைச்சொல்லின் முதலெழுத்திற்கும் இரண்டாமெழுத்திற்கும் இடையே யரலழ என்னும் மெய்யெழுத்துக்களுள் ஒன்றைப்பெற்று வருவது; 'ஆறேறு, பால்வேறு' என்றாற்போல இனவெதுகையாவது - வல்லினமும் மெல்லினமும் இடையினமுமாகிய மூவினங்களுள் ஓரினமெய்களில் ஒன்றற்கு ஒன்று எதுகையாய் வருவது; இங்கு, இடையினவெதுகை:

வகரத்திற்கு யகரம் வந்தது வருக்க வெதுகையாவது - உயிரெழுத்துக்க ளுள் ஒன்றற்கு ஒன்று எதுகையாய் வருவது; இங்கு வகரத்தின்மேலுள்ள இகரத்திற்கு யகரத்தின்மேலுள்ள ஐகாரம் எதுகையாயிற்று. (௧௦௫)

[இடியும் மழையும் மின்னலும் இல்லையாதல்]

௧௦௬. மூளமர்தொலைவுறமுரசவிந்தபோற்
கோளமைகோண்முகில்குமுறலோவின
நீளடுகணையெனத்துளியுநீங்கின
வாளுறையுற்றெனமறைந்தமின்னெலாம்.

(இ - ள்.) மூள் அமர் தொலைவுற - (வீரர்களுள் ஒருவரோடொருவர்) மாறுபட்டுச்செய்த போர் முடிந்தவளவிலே, முரசு அவிந்த போல் - போர்ப் பறைகள் (முழக்கப்படாது) ஒலியடங்கின போல, கோள் அமை கோள் முகில் - நீர்கொண்டிருக்குந் தன்மையொழிந்த வலிய மேகங்கள், குமுறல் ஓவின - இடிமுழங்குத லொழிந்தன; நீள் அடு கணை என - நீண்ட கொலை செய்யவல்ல அம்புகள் (போரொழிந்த வளவிலே எய்து சொரியப்படாத வாறு) போல, துளியும் நீங்கின - மழைத்துளிகளும் ஒழிந்தன; வாள் உறை உற்று என - (போரொழிந்த வளவிலே) வாளாயுதங்கள் உறையினுள்ளே (செருகப்பட்டு) மறைந்தாற்போல, மின் எலாம் மறைந்த - மின்னல்களெல் லாம் மறைந்தன; (எ - று.)

உவமையணி. 'மூளமர் தொலைவுற' என்பதை மூன்று வாக்கியங்களுக் குங் கூட்டுக. கோள் என்ற சொல் இரண்டனுள், முன்னது - கொள என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். அமைதல் - அடங்குதல். 'கணமுகில்' என்ற பாடத்திற்கு, முகில் கணம் - மேகங்களின் கூட்டமென்க.

'மூளமர் முற்றுற,' மூளமர் முதலற,' 'குளிறலோவின' என்பன பிரதி பேதம். (௧௦௬)

[மலைநீர்ப் பெருக்குத் தணிதல்.]

௧௦௭. தடுத்ததாளெடுந்தடங்கிரிகடாழ்வரை
யடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
வெடுத்தநூலுத்தரியத்தொடெய்திநின்
றுடுத்தவானிறத்துகிலொழிந்தபோலுமே.

(இ - ள்.) தடுத்த - குறுக்கிட்டு வழிமறிக்கின்றனபோன்ற, தாள்-அடிப் பக்கங்களையுடைய, நெடுந் தடகிரிகள் - உயர்ந்த பெரிய மலைகள்,—தாழ் வரை அடுத்த நீர் ஒழிந்தன - தாழ்வரைகளைச் சார்ந்திருந்த நீர்வெள்ளங்க ளொழிந்தனவும், அருவி தூங்கின - அருவிகள் மாத்திரமே தணிந்துபெருகப் பெற்றனவுமாகி,—எடுத்த நூல் உத்தரியத்தோடு எய்தி நின்ற - தரித்த பூணூலாகிய உத்தரீயத்துடன் பொருந்திநின்று, உடுத்த வால் நிறம் துகில் ஒழிந்த-அரையிலுடுத்த வெண்ணிறமான ஆடையொழிந்தவற்றை, போலும் - ஒக்கும்; (எ - று.)

கிருகஸ்தாச்சிரமத்தவர் அரையிலுடுக்கும் ஆடையோடு தோளில் உத்தரீயத்தை உபவீதமாகத்தரித்தல் உண்டு; எப்பொழுதேனும் அந்த மேலாடை தரிக்கப்படாததனாலாகுங் குற்றம் இல்லையாகுமாறு அவர்கள் தாம் இயல்பாகத்தரிக்கும் இரண்டு பூணூல்களுடன் உத்தரீயத்தின் பொருட்டென்று ஒருபூணூலைச் சேர்த்துத் தரித்தலும் இயல்பாம். மலைகள், சுற்றிலும் எங்கும் தாழ்வரைகளைச் சார்ந்து நீர்வெள்ளங்கள் தங்கப்பெற்றபோது அரையில் ஆடையுடுத்தனபோலவும், மேலே அருவிகள் நிறைந்து பெருகப்பெற்றபோது பூணூல்களோடு உத்தரீயத்தையுந் தரித்தனபோலவு மிருந்தன; அவைதாம் இப்பொழுது மழை நின்றுவிட்டதனால் தாழ்வரையடுத்த நீரொழிந்து அருவிகள்மாத்திரமே தணிந்து பெருகப் பெற்றனவாய், அரையில் ஆடையுடுத்தலின்றிப் பூணூலுத்தரீயந் தரித்த மாத்திரத்தோடு நின்றாற் போலும் என வருணித்தார்: தற்குறிப்பேற்றவணி. அடிமலையைப் பாதசைலமென்னும் வழக்குப்பற்றி, 'தாள்' என்றார்; "வரைத்தாள் வாழ்வேன்" என்ற சிலப்பதிகாரமுங் காண்க. தாழ்வரை - மலையடிவாரம், மலையின் அடிப்பக்கம். உபமேயத்திற்கூறிய முறைக்கு மாறாக உபமானத்திற்கூறிய முறை, எதிர்நிரனிறைப் பொருள்கோளின் பாற்படும். 'தடித்ததாள்' என்ற பாடத்திற்கு - பருத்த அடிப்பக்கமென்க. (௧௦எ)

[ஆறுகள் நீர் குறைதல்.]

௧௦அ. மேகமாமலைகளின்புறத்துவீதலான்
மாகயாறியாவையும்வாரியற்றன
வாகையாற்றகவிழந்தழிவினன்பொருள்
போகவாறொழுகலான்செல்வம்போன்றவே.

(இ - ள்.) மாகம் யாறு யாவையும் - திக்குகளையளாவிப்பெருகிய நதிகளெல்லாம்,—மேகம் மா மலைகளின் புறத்து வீதலால் - மேகங்கள் பெரிய மலைகளின் மேலிடத்தினின்று நீங்கி விட்டதனால், வாரி அற்றன - நீர்வருவாயொழிந்தன: ஆகையால்—, தகவு இழந்து - பெருமையொழிந்து,—அழிவு இல் நல் பொருள் போக - (பயன்கொடுத்தன்றி) அழிதலில்லாத நல்ல புண்ணியம் கழிந்து விட, ஆறு ஒழுகலான - சன்மார்க்கத்திற் செல்லாதவனுடைய, செல்வம் - செல்வம் குறைவடைதலை, போன்ற - ஒத்தன; (எ - று.)

"கூத்தாட்டவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம், போக்கு மதுவிளிந்தற்று" என்றபடி முற்பிறப்பில் ஒருவன் செய்த நல்வினை காரணமாக அவனிடத்துச் செல்வம் பலவகையால் தானே வந்து கூடி அந்நல்வினை நீங்கியபொழுதுதானும் குறையலாகும்; இங்ஙனம் காரணமான நல்வினை நீங்கியபொழுது காரியமான செல்வமும் குறைவடைதலை, காரணமான மேகங்கள் மலைப்பக்கங்களை விட்டு நீங்கிய பொழுது காரியமான நதிகளும் நீர் குறைதற்கு உவமை கூறினார்; உவமையணி. அங்ஙனம் ஒருவன் முற்பிறப்பின் நல்வினைப் பயனாற செல்வமுடையனான பொழுது மற்றும் நல்வினைகளையே தொடர்ச்சியாகச் செய்துவரின் அச்செல்வம் இடையறாது

தொடர்தல் கூடும்: அங்ஙனஞ் செய்யாதவனது செல்வ மென்பது விளங்க, ஆறொழுகலான் செல்வம்' என்றார். "வினைப்பகை வீயாது பின் சென்றடும்", "வீயா|துடம்பொடு நின்ற வுயிரு மில்லை" என்ற விடங்களிலும், வீதல் - நீங்குதற் பொருளது. மாகம - திக்கென்னும் பொருளதாதலை, "மாக நீள் விசும்பிடை" எனச் சீவகசிந்தாமணியிலுங் காண்க. தகவு - அழகுமாம். (௧௦௮)

[வானத்து மேகங்கள் நீங்கியவளவிற் சந்திரன் விளங்குதல்.]

௧௦௯. கடந்திறந்தெழுகளிறனையகார்முகி
லிடந்திறந்தேகலிற்பொலிந்ததிந்துவு
நடந்திறனவில்வுறுநங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற்பொலியும்பான்மைபோல்.

(இ - ள்.) கடம் திறந்து எழு களிறு அனைய - கன்னங்கள் திறந்து (அவற்றின் வழியாக மதநீர் சொரிந்து கொண்டு) புறப்படுகின்ற ஆண்யானைகளைப் போன்றிருந்த, கார் முகில் - காளமேகங்கள், இடம் திறந்து ஏகலின் - (தாம் அடர்ந்து கவிந்துகொண்டிருந்த) வானத்தினிடத்தைத் திறந்துவிட்டுக் கொண்டு விலகிச் சென்றதனால்,—இந்துவும் - சந்திர மண்டலமும்,—படம் திறந்து உருவலின் - (மறைவாக விட்டிருந்த) திரைச்சீலையை உருவித்திறந்து விட்டதனால், திறன் நடம் நவில்வுறு நங்கைமார் முகம் பொலியும் பான்மை போல் - பலவகையான நாட்டியத்தை யாடுகின்ற மகளிரது முகம் விளங்கும் விதம் போல, பொலிந்தது - விளங்கிற்று; (எ - று.)

உருவுதிரையாக இட்டிருந்த சீலையைத் திறந்த வளவில் மறைவு நீங்க அரங்கில் நாட்டியமாடும் மாதரது முகமண்டலம் விளங்கினாற் போல, வானத்துக் கருநிறமாய்க் கவிந்து கொண்டிருந்த மேகங்கள் விலகிய வளவில் மறைவு நீங்கச் சந்திரமண்டலம் விளங்கிற்று எனபதாம்; உவமையணி. கரிய பெரிய வடிவும், விரைந்த கதியும், முழக்கமும், மழைபொழிதலும் பற்றி, 'கடந்திறந்தெழுகளிறனைய கார்முகில்' என்றார். நங்கை - சிறந்த பெண், பெண்பாற் சிறப்புப்பெயர், மார் - பலர்பால் விகுதி. (௧௦௯)

[வாடைக்காற்று வீசுதல்.]

௧௧௦. பாசிழைமடந்தையர்பகட்டுவெம்முலை
பூசியசந்தனம்புழுகுகுங்கும
மூசினமுயங்குசேறுலரமொண்டுற
வீசியநறும்பொடிவிண்டுவாடையே.

(இ - ள்.) பாசு இழை மடந்தையர் - பசுமையான [பசும்பொன்னலாகிய] ஆபரணங்களை யணிந்த மகளிருடைய, பகடு வெம் முலை - பெரியனவும் விருப்பந் தருவனவுமான தனங்களில், பூசிய—, சந்தனம் - சந்தனக்குழம்பும், புழுகு - கஸ்தூரிப்புழுகும், குங்குமம் - குங்குமப்பூவின் குழம்பும்,

பூசின - கலந்ததனாலாகிய, முயங்கு சேறு - குழைச்சேறு, உலர - உலரும்படி, வாடை - வாடைக்காற்றானது, நறும் பொடி - நறுமணமுள்ள (மலர்களின்) மகரந்தப் பொடிகளை, விண்டு-(அம்மலர்களினின்று) வெளிப்படுத்தி, மொண்டு - கவர்ந்து, உற வீசிய - மிகுதியாக வீசிற்று; (எ - று.)

மகளிர்மார்பிலுள்ள சந்தனக்கலவைச்சேறு உலரும்படி வாடைக்காற்று மலர்களின மகரந்தப் பொடிகளை முகந்து வீசிற்று என்பதாம். "வெம்மை வேண்டல்" என்ற தொல்காப்பியத்தால், வெம்மை யென்பது - விருப்பத்தை யுணர்த்தும்போது உரிச்சொல்லாம். இனி, பகட்டு வெம் முலை - (காண்பவர்க்கு) மினுக்கஞ் செய்வனவும் (காலவியல்பால்) வெப்பத்தையுடையனவுமான தனங்களெனினுமாம். முயங்கு சேறு - தன்னில் அகப்பட்டவரை எளிதில் மீளவொண்ணாதபடி தழுவுஞ் சேறு - எனக் குழைசேறும். மொண்டு, விண்டு—மொள், விள் - பகுதி. வீசிய - வீசியது என்பதன விகாரம். மாறி மாறி வெவ்வேறாக வீசுதல் பற்றி, வாடைகள வீசின வெனப் பன்மை கூறினருமாம். விண்டு - (மலர்களைத்) திறந்து என்றும், வெளிப்பட்டு என்றும், வாடை விண்டு என்று மாறி - வாடைக்காற்று என்றும் [விண்டு - காற்று], விண்டு வாடை - மலைக்காற்று என்றும் [விண்டு - மலை] பொருள் கொள்ளலாம். 'பூசின சந்தனம் புலரக் குங்கும, மூசிய முழுகு சேறுழிய மொண்டற, வீசின நறுமலர', 'பூசிய சாந்தினைப் புலர்த்துகுங் குமம்' என்பன பிரதிபேதம். (கக0)

[அன்னப்பறவைகள் வானத்திலெங்கும் பறந்து செல்லுதல்.]

கககக. மன்னவன்றலைமகன்வருத்தமாற்றுவா
னநெறிப்பருவம்வந்தணுகிற்றாதலாற்
பொன்னினைநாடியபோதுமென்பபோ
லன்னமுந்திசைதிசையகன்றவிண்ணின்வாய்.

(இ - ள்.) மன்னவன தலைமகன் வருத்தம் மாற்றுவான் - தசரதசக்கரவர்த்தியினது மூததகுமாரனான இராமபிரானுடைய வருத்தத்தை யொழித்தற்கு, அ நெறி பருவம் வந்து அணுகிற்று ஆதலால் - அப்பெருமான் கூறிய முறைமையிலுள்ள காலம் வந்து சேர்ந்த தாதலால், பொனனினை நாடிய போதும் - சீதாபிராட்டியைத் தேடும் பொருட்டுச் செல்வோம் யாம், என்ப போல் - என்று புறப்பட்டன போல,—அன்னமும் - அன்னப்பறவைகளும், விண்ணினவாய் - வானத்தில், திசைதிசை அகன்ற - திக்குகள்தோறும் (பறந்து) சென்றன; (எ - று.)

பெருமழைக்காலத்தில் ஒடுங்கிகிடந்த அன்னப்பறவைகள் அம்மழை நீங்கிய வளவிற கிளர்ச்சி கொண்டெழுந்து ஆகாயமார்க்கமாகப் பல விடங்களிலும் பறந்து செல்லுதல் இயல்பு; அதனை, 'மழைக்காலங் கழிந்தவுடன் சீதையைத் தேடும் முயற்சி செய்யக்கடவீர்' என்று முன்புஇராமபிரான் வானரர்க்கு இட்ட கட்டளையை அநுசரித்து அன்னப்பறவைகளும் சீதையைத்

தேடும் பொருட்டுத் திசைதோறும் சென்றாற்போலு மென வருணித்தார். தற்குறிப்பேற்றவணி.

மன்னவன் தலைமகன் - சக்கரவர்த்தித் திருமகனார். வருத்தம் - சீதா விரகத்தாலாயது. 'அந்நெறிப்பருவம்' என்றது, சரத்காலத்தினபிற்பகுதியை. பொன் - செல்வத்திற்கு உரிய தலைவி, இலக்குமி. இங்கு, அவளது திருவவ தாரமான சீதை. திசை திசை - அடுக்கு, தொறுப் பொருளது. அகன்ற - முற்று. 'நன்னெறிப் பருவமு நணுகிற் றாகலால்,' 'பொன்னினை நாடியே போதும்' என்பன பாடபேதம். (சசச)

[நீர் தெளிதலும், மீன் பிறழ்தலும்.]

சசஉ. வஞ்சனைத்தீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீரநீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதைய
ரஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன்.

(இ - ள்.) நீரம் - நீர்நிலைகளிலுள்ள நீர்கள், வஞ்சனை தீவினை மறந்த மா தவர் நெஞ்சு என தெளிந்தன - வஞ்சனைக் கிடமான பாவச்செயல்களை யறியாத பெருந்தவமுடையாரான முனிவர்களது மனம்போலத் தெளிவடைந்தன; நீர்தொறும் - அந்நீரிலெல்லாம்,—ஆடல் மீன் - விளையாடு மியல்பை யுடைய மீன்கள்,—பஞ்சு என சிவக்கும் மெல் பாதம் பேதையர் அஞ்சனம் கண் என பிறழ்ந்த - பஞ்சின்மேல் நடக்கவேண்டுமென்று சொன்னவள விலே கன்றிச்சிவக்கும்படியான மென்மையாகிய பாதங்களையுடைய மகளிரது மையிட்ட கண்கள்போலப் பிறழ்ந்தன; (எ - று.)

முதல் வாக்கியத்தில், வஞ்சனைக்கிடமான பாவச்செயல்களைக் கனவிலும் அறியாத பெருந்தவமுடையரான முனிவர்களது மனம் ஐயந்திரிபுகளாலும் பலவகைக் கவலைகளாலுமாகுங் கலக்கங்க ளின்றித் தேர்ந்தஞானத்தாலும் துணிவினாலும் தெளிந்திருத்தலை, மழையொழிந்தபின்பு நீர்நிலைகளில் நீர கலக்கமின்றித் தெளிவடைதற்கு உவமைகூறினார். இரண்டாம் வாக்கியத்தில், அத்தெளிந்தநீரிற் கயல்மீன்கள் பிறழ்தலுக்கு, மகளிர்கண்கள் பிறழ்தல் உவமை கூறப்பட்டது: உவமையணி; எதிர்நிலை யுவமையணி யெனினும் இழுக்காது. பஞ்சென்று சொனன மாத்திரத்திலே அதன்மேல் நடத்தற்குக்கூசிக் கன்றிச்சிவக்கும் பாதங்களெனக் கால்களின் மென்மை மிகுதியைக் குறித்தவாறும்; உயர்வுநவிற்சியணி: பஞ்சினும் மிகமென்மையான பாதமென்பது, தேர்ந்தகருத்து. பேதையர் - "பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்," "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும், பெண்ணறிவென் பது பெரும்பேதைமைத்தே" என்றபடி மகளிர்க்குணமாகிய பேதைமை யையுடைய ரென்றபடி; பேதைமை - இளமையுமாம். நீர்க்குப் பன்மை கூறியது, நிலைவேறு பாடுகளாலாகிய பாகுபாடு பற்றியென்க. (சசஉ)

[தாமரைமலரும், செங்கிடையும்.

ககரு. ஊடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன

(இ - ள்.) தாள் தொக மலர்ந்தன - நாளத்திலே பொருந்த மலர்ந்தன வாய், முதிர்ந்த - நாளடைவில் முதிர்ச்சிபெற்ற, தாமரை - செந்தாமரைமலர் கள், ஊடிய மடந்தையர் வதனம் ஒத்தன - (தலைவரோடு) பிணங்கிய மகளி ரது முகத்தைப் போன்றன [ஒருபுறமாகச் சாய்ந்தன என்றபடி]; சேடு உறு நறு முகை விரிந்த - அழகுமிக்க நறுமணமுள்ள அரும்புகள் மலரப்பெற்ற, செம் கிடை - செங்கிடையென்னுஞ் செடிகள், கூடினர் துவர் இதழ் கோலம் கொண்டன - (தலைவரோடு) கலவிசெய்த மகளிரது சிவந்த வாயிதழ்களின் தோற்றத்தைக் கொண்டன; (எ - று.)

தலைவர்மீது ஊடல்கொண்டமகளிர் அவர்க்குமுகங்கொடாமல் 'தன்னை யான் முகத்தை நோக்கின் தான் முலைமுகத்தை நோக்கும்" என்றபடி கோபக்குறியாக முகத்தைச் சாய்த்துவைத்துக்கொள்ளுதல் இயல்பு. அங்ஙனம் சிறிதுகோட்டிய மகளிர்முகங்களை, சிலநாள்களுக்குமுன்பு நாளத்திலே மலர்ந்து பின்பு முதிர்ந்து ஒருபுறத்தே சாய்கின்ற செந்தாமரை மலர்கட்கு உவமைகூறினர். கோலம் கொண்டன - கோலத்தை யொத்தனவென்றபடி; 'கொண்டன'என்பது - உவமவாசகமாய் நின்றது. கோலத்தைத் தம்மிடத்தே கொண்டன [தாம் உடையனவாயின] என்று பொருளுரைத்தாலும் கருத்து அதுவே. செங்கிடை - ஒருவகைக் கிடைச்சி [சிவப்புநெட்டி]; இது, நீரில் தோன்றுவது. இயற்கைச் செந்நிறத்தோடு தாம்பூலந் தரித்ததனாலாகுஞ் செயற்கைச் செந்நிறமுஞ் சேர்தலாற் செந்நிறம் மிக்கிருக்கும் நிலையில் மகளி ரது வாயிதழ்கட்குச் செங்கிடை ஒப்பாகாதென்னுங் கருத்தை யுட்கொண்டு, தலைவரோடு கூடியதனாற் செயற்கைச்செந்நிறம்நீங்கிய மகளிர்வாயிதழ்களைப் போன்றன செங்கிடை யென்றார். உவமையணி. இங்குவருணித்தற்கு எடுத்துக்கொண்ட இரண்டுபொருள்களுள், ஒன்றற்கு ஊடியமகளிர் சம்பந்தமாக வும், மற்றொன்றற்குக் கூடியமகளிர்சம்பந்தமாகவும் உவமைகூறினர்.

'தாடொறுமலர்ந்தன', 'சேடுறநறுமுகை' என்றும் பாடமுண்டு.'வாடிய மடந்தையர்,' 'தாடொறு மலர்ந்து நான்முதிர்ந்த' என்ற பிரதிபேதங்களும் காணப்படுகின்றன. (ககரு)

[தவளைகள் துயிலடங்குதல்.]

ககச. கல்வியிற்றிகழ்கணக்காயர்கம்பலைப்
பல்விதச்சிறாரெனப்பகர்வபல்லரி
செல்விடத்தல்லதொன்றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தவெலாம்.

(இ - ள்.) கல்வியின் திகழ் - கல்விகற்றதனால் விளக்கம்பெற்ற, கணக்காயர் - சிறுபள்ளிக்கூடத்து உபாத்தியாயரின் கீழ், கம்பலை - ஆரவாரத்தோடு கல்விகற்கின்ற, பல் விதம் சிறார் என - பலவகைப்பட்ட சிறுவர்கள் போல, பகர்வ - (மழைக்காலத்திற்) கத்திக்கொண் டிருந்தனவான, பல் அரி எலாம் - பலவகைப்பட்ட தவளைகள் யாவும்,—செல் இடத்து அல்லது ஒன்று உரைத்தல் செய்கலா நல் அறிவாளரின் - (தமது சொற்கள்) பலிக்குமிடத் தல்லது மற்றையிடங்களில் ஒருசொல்லையுஞ் சொல்லுதல் செய்யாத நல்ல அறிவுடையவர்கள்போல, நா அவிந்த - (அந்தச்சரற்காலத்திலே மிகுதியாகக்கத்தாமல்) வாயடங்கின; (எ - று.)

மழைக்காலத்தில் மிகுதியாகக்கத்துதலும், மழை பொழிந்தான காலத்தில் அங்ஙனங்கத்தாதிருத்தலும், தவளைகளியல்பு. அவைமிகுதியாகக்கத்திக்கொண்டிருந்த நிலைக்கு - தெருப்பள்ளிக்கூடங்கள்போன்ற சிறுபள்ளிகளிற் பெரும்பாலும் மூலபாடங்களையேகற்பிக்கும் ஆசிரியரின் கீழ்ப்படிந்து அவர் சொல்வனவற்றைத் தாம் அனைவரும் ஒருங்கே சொல்லிக் கல்வி பயிலுஞ் சிறுவரது பேரொலியையும்,அத்தவளைகள் அங்ஙனம் எப்பொழுதுமே கத்துதலை யொழிந்து ஒவ்வொரு சமயத்தில் மாத்திரம் ஒலிசெய்து கொண்டு மற்றைச்சமயங்களி லெல்லாங் குரலடங்கி யிருந்த நிலைக்கு - நல்லறிவுடையோர் தமதுசொல்செல்லத்தக்க இடங்களில் மாத்திரமே சொற்களை உபயோகித்து மற்றையிடங்களில் யாதொன்றுஞ் சொல்லாமல் மௌனமா யிருத்தலையும் உவமை கூறினர். உவமையணி. செல்லுதல் - கேட்டு நன்கு மதித்து அதன்படி நடக்கப் பெறுதல். கணக்கு ஆயர் - கணக்கை ஆய்தலுடையவரென்க; கணக்கு - எண்ணும், எழுத்தும்.

கம்பலை - உரிச்சொல். சிறார் - சிறுமையென்னும் பண்பினடியாப் பிறந்த பலர்பாற் பெயர். பல்விதச் சிறார் - பிராயம் வடிவம் சாதி குலம் நாடு முதலியவற்றாற் பலவேறுவகைப் பட்ட சிறுவர்; இங்குக் குறித்தது, பாலசிக்ஷையாகக் கல்வி பயிலும் மாணாக்கர்களை யென்க. பலபடி ஆரவாரித்தற்குக் கல்விபயிலுஞ்சிறாரையும், நாவடக்கத்துட னிருத்தற்குக் கல்வி நிரம்பிய நல்லறிவாளரையும் ஒப்புமை கூறிய நயங் காண்க.

'செல்விடத்து', 'நல்லுணர்வாளரின்' என்பன பிரதிபேதம். (௧௧௪)

[மயில்கள் ஒடுங்குதல்]

௧௧௫. தஞ்சிறைபொடுக்கினதழுவுமின்னல
நெஞ்சுறுபயனிலநினைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமழைபிரிந்தமாமயி
லெஞ்சினமிதிலைநாட்டன்னமென்னவே.

(இ - ள்.) மஞ்சு உறு நெடு மழை பிரிந்த மா மயில் - மேகங்களினின்று பெய்த மிகுதியான மழை நீங்கப் பெற்ற அழகிய மயில்கள்,—தம் சிறை ஒடுக்கின - தமது சிறகுகளை [தோகைகளை] ஒடுக்கிக்கொண்டவையும், தழுவும் இன்னல - சேர்ந்த துன்பத்தையுடையவையும் [துன்பமுற்றவையும்]

நெஞ்சு உறு பயன் இல - மனத்திற் பொருந்திய பயனில்லாதவையும் [யாதொரு பயனையும் மனத்தால் விரும்பாமல் வெறுப்புக் கொண்டவையும்], நினைப்பு நீண்டன - சிந்தை மிக்கவையுமாகி,—மிதிலை நாட்டு அன்னம் என்ன - மிதிலை நாட்டில் திருவவதரித்த ஜாநகிப் பிராட்டி போல, எஞ்சின - ஒடுங்கின; (எ - று.)

அன்னம் - அன்னப்பறவை போன்றவள்; உவமையாகுபெயர்: மிதிலை நாடு - மிதிலாபுரியையுடைய நாடு; விதேகதேசம். மிதிலை - மிதிலா என்ற வடசொல்லின் விகாரம்; மிதியென்னும் அரசனு லமைக்கப் பட்டமை பற்றி வந்த காரணப் பெயர். 'மஞ்சுறநெடுமழை பிரிந்த மாமயில் எஞ்சின' என்பதற்கு - அழகு பொருந்திய பெரிய மேகங்கள் நீங்கி விட்டன வாதலால் அழகிய மயில்கள் ஒடுங்கின வென்றும் பதப்பொருள் கூறலாம்.

"மேகங்களினுல் விடப்பட்ட ஆகாயத்தைப் பார்த்துக் காடுகளில் ஆண் மயில்கள் தோகையாகிய ஆபரணம் ஒழிந்தனவும், தம்பேடைகளிடம் விருப்பமற்றனவும், ஒளிகுறைந்தனவும், மகிழ்ச்சியற்றனவும், சிந்தை மிக்கனவுமாயின" என்றது, ஸ்ரீவால்மீகிராமாயணம்.

'தழுவுமின்னலி, னெஞ்சுறுமம்மரு நினைப்பு நீடின, மஞ்சுறு நெடுமழை பிரிதலான்மயி, லஞ்சின மிதிலை நாட்டன்ன மன்னவாய்' என்பது பிரதிபேதம். (கசடு)

[கடலும், நதிகளும்.]

கசசு. செறிபுனற்பூந்துகிறிரைக்கையாறறிரைத்
துறுதுணைக்கான்மடுத்தொத்தவோதநீ
ரெறும்வலிக்கணவனையெய்தியாறெலா
முறுவலிக்கின்றனபோன்றமுத்தெலாம்.

(இ - ள்.) ஓதம் நீர் - கடல்நீர், திரை கையால் - (தனது) அலைகளாகிய கைகளினுல், செறி புனல் பூ துகில் - (நதிகளாகிய மாதரது) திரண்ட நீராகிய அழகிய ஆடையை, திரைத்து - மடக்கிப்பிடித்து, உறு துணை - (இல்வாழ்க்கைக்கு) உற்ற துணையாகிய [மனைவியராகிய] அந்நதிகளை, கால் மடுத்து ஒத்த - (சேர்தலின் பொருட்டு) வலிய இழுத்தாற் போன்றதாக, யாறு எலாம் - அந்நதிகள் யாவும், எறும் வலி கணவனை எய்தி - மிக்க வலிமையையுடைய அந்தத் தமது கணவனைத் தழுவி, முறுவலிக்கின்றன - புன்சிரிப்புச் செய்கின்றவற்றை, முத்து எலாம் போன்ற - முத்துக்களெல்லாம் ஒத்தன; (எ - று.)

மழைக்காலத்தில் நதிகள் மிகுதியாகப் பெருகும் வெள்ளத்தால் தாமே கடலில் ஊடுருவிச் சென்றுபாயும்: மழைதணிந்த காலத்திலோ வெள்ளங் குறைதலால் தாமே கடலிற் சென்று சேரமாட்டாமற் கடலையடுத்து நிற்கும்: அக்காலத்திற் கடலினின் எழுகின்ற அலைகள் அந்நதிகளின் வழியாக எதி

சேறும் பொழுது நதிகட்குச் சமுத்திரசங்கம முண்டாகும். கடலில் ஸங்கம ஸ்தானங்களிற் சிப்பிகளினின்று முத்துக்களுண்டாதலும், அவை சரத்கால த்திற் கடலினலைகளாற் கொழிக்கப் பட்டுக் கடலோரத்தில் விளங்குதலும் இயல்பு. நதிகளாகிய மாதர்க்குக் கடலைக் கணவனென்றல் மரபு; 'நதிபதி' என்ற கடலின் பெயர் வழக்கைக் காண்க. கணவனது காதற் குறிப்பைக் கண்ட விடத்து மாதர் சிரிப்பை அகத்தில் அடக்க மாட்டாமற் புன் சிரிப்புச் செய்வர். சிரிக்குங்காலத்துப் பற்கள் சிறிது வெளித்தோன்றும், பற்களுக்கு முத்து - வடிவிலும் வெண்ணிறத்திலும் ஒளியிலும் உவமையாம். இவ்வள வும், இவ்வர்ணனைக்கு மூலம். கடலாகிய கணவன் தனது அலைகளாகிய கை களால் நதிகளாகிய தமது வாழ்க்கைத்துணைவியரின் நீராகிய ஆடையைப் பிடித்துக் கலவியின்பொருட்டு வலிய இழுத்தாற் போன்றதாக, அந்நதிகளா கிய பெண்கள் அக்குறிப்பின்படி அக்கடலாகிய கணவனைத் தழுவி அக்கண வன் செயலைக் குறித்துப் புன்சிரிப்புச் செய்ய, அப்பொழுது சிறிது வெளித் தோன்றிய அம்மாதரது பற்கள் விளங்கினாற் போல, முத்துக்கள் பிரகாசித் தன எனக் கருத்து உணர்க. தற்குறிப்பேற்றவணி. ("மேகலை நெகிழ்த்த லோடும், நல்லெழில் கனிந்த கோதை நகையுளத்தடக்கலாற்றாள், முல்லை மென்முகையு நாண வரும்பிய முறுவல் பூத்தாள்" என்னும் நைடதம் முதலி யன ஒருசார் ஒப்பு நோக்கத்தக்கன.) இனி, இச்செய்யுளின் முன்னிரண் டடிகட்கு வேறுஉரை கூறுவரேனும் பொருந்துமாயிற் கொள்க; (அப்பொ ருள் சரத்கால வர்ணனைக்கு ஏற்குமா வென்பது கருதற்பாலது)

செறி புனல் - (நதிகளிடத்துப்) பொருந்திய நீர் என்றும், பூந் துகில் - பூப்போல் மெல்லிய ஆடை யென்றுங் கொள்ளலாம். உறு துணை - ஏற்ற துணை. எறுழ் - வலிமையுணர்த்தும் உரிச்சொல். எறுழ் வலி - ஒருபொருட் பன்மொழி.

'உறுதகக்கான்மடுத்தோடியோதநீர்' என்பது பிரதிபேதம். (கககூ)

[பாக்குக்குலைகள் முதிர்ந்து பழுத்தல்.]

ககஎ. சொன்னிறைகேள்வியிற்றொடர்ந்தமாந்தரி
னின்னிறப்பசலையுற்றிருந்தமாதரிற்
றன்னிறம்பயப்பயநீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம்.

(இ - ள்.) சொல் நிறை கேள்வியின் தொடர்ந்த மாந்தரின் - சொற் கள் நிறைந்த நூற்கேள்விகளைக் கேட்டலில் இடைவிடாத மனிதர்கள் போல வும்,—இன் பசலை நிறம் உற்று இருந்த மாதரின் - இனிமையான பசலை நிறத்தை யடைந்திருந்த மகளிர் போலவும்,—பூகம் தாறு எலாம் - பாக்குமரத் தின் குலைகளெல்லாம், தன் நிறம் பய பய நீங்கி - தமதுநிறம் மெல்ல மெல்ல நீங்கப்பெற்று, தள் அரும் பொன் நிறம் பொருந்தின - இகழ

வொண்ணாத [விரும்பத்தக்கதும் கொண்டாடத் தக்கதுமான] பொன்னிறத் தையடைந்தன; (எ - று.)

பாக்குமரத்தின் குலைகள், இளமையா யிருக்கும்போது பசுநிறமாயிருந் தவை, முதிருந்தோறும் நாளடைவிற் பசுமைநிறம்மாறி, பழுக்குமளவிற் பொன்னிறமடையும்: அதற்கு, ஞான அநுட்டானங்களையுடைய நல்லாசிரி யர்பக்கல் நூற்பொருள்களை உபதேசமுகத்தாற் பலகாலுங்கேட்டுப் பயின் றவர் நாளடைவில் அஜ்ஞானவிருள்நீங்கி ஞானவொளிபெறுதலையும், ஆசை நோயுற்ற மகளிர் தமது இயற்கைநிறம் மாறிப் பொன்னிறமான பசலையை யடைதலையும் உவமைகூறினர். உவமையணி. பசலையாவது - தலைவரைக் கூடப்பெறாத நிலையிற் காதல்மிகுதியால் வருவதொரு நிறவேறுபாடு. அது பொன்னிற முடைமையை, "பொன்தெளித் தெழுதியன்ன பூம்புறப்பசலை மூழ்கி" என்னுஞ் சிந்தாமணியாலும் உணர்க. சொல் நிறை கேள்வி - புகழ் நிறைந்த நூற்கேள்வி யெனினுமாம். கேள்வியின் சிறப்பை, திருக்குறளில் 'கேள்வி' என்னும் அதிகாரமுழுவதிலுங் காணலாம், தத்துவஞானத்திற்கு முதலுபாய மாதலால், இது எடுத்துக் கூறப்பட்டது. 'தாறெலாம் பொருந் தின' என்றதற்கு ஏற்ப 'தம் நிறம்' என்னாது, 'தனநிறம' என்றது, பன்மை யொருமைமயக்கம்: 'தந்நிறம்' என்பதும் பாடம். பயப்பய - பையப்பைய என்றதன் போலி; அடுக்கு, காலக்கிரமததில் லென்பதைக் காட்டும். தன்ன ரும் - நீக்கமுடியாத எனினுமாம். பூகம் - வடசொல்.

இனி, முன்னிரண்டடிகட்கு - புகழ் நிறைந்த நூற்கேள்வியின் பொரு ட்டு நல்லாசிரிய ரிருக்கின்ற இடத்தை நோக்கி வேற்றுநாட்டுக்குப் பிரிந்து சென்ற தலைவரால் இனிய பசலை நிறத்தை யடைந்த மாதர்போல என்று உரைப்பாரு முளர். ஞானம் காரணமாகத் தமது கொழுநர் தம்மைப்பிரிந்து வேறிடஞ்செல்ல அப்பிரிவாற்றாமையாற் பசலைநிறைமடைந்தமகளிரெனக. அறுவகைப் பிரிவினுள் ஓதற்பிரிவாகிய இது முதலதாதலாலும், உயர்ந் தோர்க்கு உரியதாதலாலும், எடுத்துக் கூறப்பட்ட தென்க.

'தொடர்ந்த மைந்தரால்' என்பது பிரதிபேதம். (௧௧௭)

[முதலைகள் வெயிலில் உறங்குதல்.]

௧௧அ. பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவ
ணியன்றிலவிளவெயிலெழுதுமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத்தடங்கடோறுமே.

(இ - ள்.) இடங்கர் மா - முதலைகளாகிய விலங்குகள்;—பயின்று - (தாம் நெடுநாளாக மிக்க நீரில்) வாழ்ந்தமைபற்றி, உடல் குளிர்ப்பவும் உடம் பு குளிரப்பெற்றதனாலே, பழனம் நீத்து அவண் இயன்றில - வயல்களும்

நீர்நிலைகளுமாகிய அவ்விடங்களில் [தமக்கு உரியவிடங்களில்] வசிக்காமல், இள வெயில் எழுதும் மெய்யன - இளமையான சூரியகிரணம் உடம்பின் மேல் எழுதினாற்போலப் படியப்பெற்ற உடம்பையுடையவையாக, தடங்கள் தோறும் - (நீர் நிலைகளின்) கரைகளி லெல்லாம், வயின் தொறும் வயின் தொறும் - பற்பலவிடங்களில், மடித்த வாயன துயின்றன - வாயை மூடிக் கொண்டு இனிமையாய்த் தூங்கின; (எ - று.)

பெருமழைக் காலத்தில் நீரிலே முழுகிக்கிடந்த முதலைகள் குளிர் மிக்கமைபற்றி இப்பொழுது இளவெயில்காயக் கரையிலே கிடக்கின்றனவென்க. பயின்று உடல்குளிர்ப்ப - மிகுதியாய் உடம்புகுளிர வெனினுமாம். குளிர்ப்பவும்; உம்மை - அசைநிலை. 'குளிர்ப்பவண்பழனம்' என்ற பாடமும் ஏற்கும். பழனம் நீத்து - உம்மைத்தொகை. நீத்து - பெயர்; நீந்தப்படுவது என நீர் நிலைகளுக் காரணக்குறி. குளம் ஏரி மடு முதலிய நீர்நிலைகளிற் போலவே கழனிகளிலும் மழைவளத்தால் நீர்மிக்கிருந்தமை தோன்ற, நீர்நிலைகளோடு பழனத்தையுங் கூட்டினர். முதலை நீர்வாழுயிராதல்பற்றி, பழனத்தையும் நீத்தையும் 'அவண்' எனச் சுட்டினர்

'நெய்தற்கு மா - சுறவும், முதலையும்' என்றார், இறையனாரகப் பொருளுரையில் நக்கீரர்; அதனை மறுத்து 'முதலையும் சுறவும் மீனாதலின், மா வெனறல் மரபன்று' என்றனர் தொல்காப்பியப் பொருளதிகார வுரையில் நச்சினார்க்கினியர் அங்ஙனமே 'இனி' முதலையும் சுறவும் மா வென்பர்; "கெணடையஞ்சினை மேய்ந்து கிளர்ந்து போய், முண்டகத்துறை சேர்ந்த முதலைமா, வண்டல் வார்கரை மாமகரக்குழாங், கண்டு கினறு கனலுங் கழியெலாம்" எனக்காட்டுவா ருளராயினும், அவை மீனெனப் படுவவல்லது மாவெனப்படா' எனபா சிலப்பதிகாரவுரையில் அடியார்க்கு நல்லார். உய்த்து நோக்குமிடத்து, தேவர் மனிதர் விலங்கு புள் ஊர்வன நீரவாழ்வன தாவரம் எனனும் எழுபிறப்பினுட் புன்முதலியன தேவர் மக்கள் விலங்கு நரகர் எனனும நால்வகைக்கதிகளுள் விலங்குகதியில் அடங்குதலால், 'அசுணமா' எனபதுபோல 'இடங்கர்மா' எனபதும் தகுமெனக. "போழ்ந்தமா கிடங்கிடைகிடந்த பொங்கிடங்கர்மா", "சேரவொன்றையொன்று முன் தொடர்ந்து சீறிடஙகர்மா" என்றார் பாலகாணடத்திலும். இனி, மா - பெரிய என, தடத்திற்கு அடைமொழியாகவுமாம்.

மூன்றாமடி. முற்றுமோனை. 'இயன்றன விளவெயிலேய்ந்த மெய்யின' என்பது பிரதிபேதம். (௧௧௮)

[வஞ்சிக் கொடிகள் செழித்தல்.]

௧௧௯. கொஞ்சுறங்கிளிநெடுங்குதலைகூடின
வஞ்சிறையறுபதவளகவோளிய
வெஞ்சலில்குழையனவிடை றுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தனமகளிர்மானவே.

(இ - ள்.) வஞ்சிகள் - வஞ்சிக்கொடிகள்,—கொஞ்சுறும் கிளி செமெல் குதலை கூடின - கொஞ்சிப்பேசுகின்ற கிளிகளின் மிகுதியான மழலைச்சொற்கள் தம்மிடத்தே பொருந்தப் பெற்றவையும் [கிளி கொஞ்சுவதுபோன்ற சிறந்த மழலைச்சொற்கள் பொருந்தியவையும்], அம் சிறை அறு பதம் அளகம் ஒளிய - (தம்மிடத்தே மொய்க்கின்ற) அழகிய இறகுகளையுடைய வண்டுகளாகிய கூந்தலின் ஒழுங்கை யுடையவையும், எஞ்சல் இல் குழையன - குறைவில்லாத தளிர்களை யுடையவையும் [ஒளியிலும் விலையிலுங் குறைவில்லாத குழையென்னுங் காதணியை யுடையவையும்], இடைநுடங்குவ - இடைபோல ஒல்கி ஒசிவனவும் [இடை ஒல்கி ஒசியப்பெற்றனவும்] ஆகி, மகளிர் மான - மாதர்கள்போல, பொலிந்தன - விளங்கின; (எ - று.)

இரண்டாமடியில் உருவகத்தையும், முதலடி மூன்றாமடிகளிற் சேம்மொழிச்சிலேடையையும் அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. வஞ்சிகட்குச் சேரும்போது, முதலடிக்கு - கிளிகள் கொஞ்சிப் பேசிக்கொண்டு தம்மைச் சார்ந்திருக்கப்பெற்றவை யென்பது கருத்து. குதலை - திரம்பாமென்சொல். மகளிர்க்கு மதலை எப்பருவத்திறகுங் கூறப்படும். அறுபதம் - ஆறு கால்களை யுடையதெனப் பொருள்படுங் காரணக்குறி; பண்புத்தொகை யன்மொழி. 'மகளிர் மாலைபோல்' என்பது பாடாந்தரம். (௧௧௯)

[நத்தைகள் சேற்றில் மறைதல்.]

௧௨௦. அளித்தனமுத்தினந்தோற்பமானனார்
வெளித்தெதிர்விழிக்கவும்வெள்கிமேன்மையா
லொளித்தனவாமெனவொடுங்குகண்ணன
குளித்தனமண்ணிடைக்கூனனந்தெலாம்.

(இ - ள்.) கூனல் நந்து எலாம் - முதுகுவளைவையுடைய நத்தைகளெல்லாம்,—அளித்தன முத்து இனம் தோற்பதாம் - ஈன்றவையான முத்துக்கள் (மகளிர்பற்களுக்கு ஒப்பாகாமல்) தோல்வியடைந்துவிட்டதனால், மான் அனார் எதிர் வெளித்து விழிக்கவும் வெள்கி - (பார்வையழகில்) மான போன்றவர்களான அம்மாதரது எதிரில் தாம் வெளிப்பட்டு (அவர்களைப்) பார்ப்பதற்கும் நாணமுற்று, மேன்மையால் ஒளித்தன ஆம் என - (தமது) மேன்மையான இயல்பினால் ஒளித்து விட்டன போல,—ஒடுங்கு கண்ணன - ஒடுங்கிய கண்களை யுடையவையாய், மண்ணிடை குளித்தன - சேற்றில் மூழ்கின; (எ - று.)—ஆம் - அசை.

நத்தைகள் காலவியல்பினால் மண்ணில் மறைந்ததற்கு, தமது மகவாகிய முத்துக்கள் அங்குள்ள மாதரது பற்களுக்குத் தோற்றதனால் அம்மகளிரெதிரில் தாம் நின்று புலனாவதற்கு நாணி யொளிப்பனபோல வெனக் காரணங் கற்பித்துக் கூறியது, ஏதுத்தற்குறிப்பேற்றவணி. முத்துப்பிறக்கு மிடங்களிருபதில் நத்தையும் ஒன்றாதலை, "தந்திவராகமருப்பிப்பி" என்ற தொடக்கத்துச் செய்யுளில் 'நந்து சலஞ்சலம்'' என்றதனா லுணர்க. இங்கு 'மேன்

மை' என்றது, மானத்தில் நோக்கம் வைத்ததை. 'மென்மையால்' என்ற பாடத்திற்கு - மெல்ல வென்று பொருளாம். உம்மை - இழிவு சிறப்பு. இரண்டாமடி - முற்றுமோனை.

"அளித்தனமுத்தினந் தோற்றமானனு, ரிளிக்கெதிர் விழிக்கலமென்று வெள்கியே, யொளித்தனவாமென வோங்குநீரிடைக், குளித்தன வானிறக் கூனநந்தெலாம்" என்றும பாடமுண்டு; அதன் பொருள் வருமாறு:—வால் நிறம் - வெண்ணிறமுள்ள, கூன - வளைவையுடைய, நந்து எலாம் - சங்குக ளெல்லாம், 'அளித்தன முத்து இனம் தோற்ற - (யாம்) ஈன்றனவான முத் துக்கள், (மகளிர் பற்களுக்குத்) தோற்று விட்டன வாதலால், மான் அனுர் இளிக்கு எதிர் விழிக்கலம் - அம்மகளிரது அவமதிச்சிரிப்பிற்கு இலக்காக அவர் முன் நிற்கக்கடவோ மல்லோம்', என்று - என்று எண்ணி, வெள்கி - வெட்கங்கொண்டு, ஒளித்தன ஆம் என - ஒளித்திட்டன போல, ஓங்கு நீரிடை குளித்தன - உயர்ந்தெழுந்து அலைவீசுகின்ற நீரில் மூழ்கின எனக் காண்க. (௪௨0)

[நண்டுகள் வளைகளிற் புகுதல்.]

௪௨௧. மழைபடப் பொதுளிய மருதத் தாமரை
தழைபடப் பேரிலைப் புரையிற் றங்குவ
விழைபடு பெடையொடு மௌ்ளி னள்ளிகள்
புழையடைத் தொடுங்கின வச்சை மாக்கள்போல்.

(இ - ள்.) மழை பட பொதுளிய - மழைபெய்ததனாற் செழித்த, மருதம் தாமரை - மருதநிலத்திலுள்ள தாமரைக்கொடிகள், தழைபட - நன்கு வளர, பேர் இலை புரையில் தங்குவ - (அவற்றினது) பெரிய இலையின் கீழ்த் தங்கு வனவான, என் இல் நள்ளிகள் - பழிப்பிற்கு இடமில்லாத [குற்றமற்ற] (ஆண்) நண்டுகள்,—இழைபடு பெடையொடும் - (தம்மோடு) கூடிய பெண் நண்டுகளுடனே,—வச்சை மாக்கள் போல் - லோபிகள் போல, புழை அடைத்து ஒடுங்கின - தமது வளையின் வாயிலை(ச் சேற்றால்) அடைத்துக் கொண்டு அதனுள்ளே சேர்ந்தன; (எ - று.)

யாசகர் விருந்தினர் சுற்றத்தார் என்னும் இவரது வரவுக்கு அஞ்சி லோபிகள் வீட்டுவாயிற் கதவை யடைத்து உள்ளே தாளிட்டுக் கொண்டு தாமும் தம்மனைவியருமாக அகத்தில் வாழ்வர்; அவர்களை, ஆண் நண்டுகள் தமது பேடைகளுடனே தமது வளையினுட் செல்லும்போது அதன்வாயைச் சேற்று லடைத்துக் கொண்டு உள்ளே புக்கு வசித்தற்கு உவமை கூறினர்; உவமையணி.

இனி, இச்செய்யுட்கு வேறும் ஒருரை வருமாறு:—என் இல் நள்ளிகள் - இகழப்படாத ஆண்நண்டுகள், புழை அடைத்து, ஒடுங்கின வச்சைமாக்கள் போல் - தமது வீட்டு வாயிற்கதவை யடைத்துக் கொண்டு உள்ளே பதுங்கி

வசிக்கும் லோபிகள் போல, மழை பட பொதுளிய மருதம் தாமரை தழை பட பேர் இலை புரையில் - மழைபெய்தலால் ஒடுங்கிக் கிடந்த மருத நிலத்துத் தாமரைக் கொடிகள் பின்பு தழைக்க (அவற்றின்) பேரிலைச்சுருளினுள்ளே, இழை படு பெடையொடும் தங்குவ - தம்மைச் சேர்ந்த பெடையுடன் தங்குவன வாயின எனக் காண்க.

பெடை - பெண்மைப்பெயர்; இது, பறவைகட்கன்றிப் பிறவற்றிற்குச் சிறுபான்மைவருதலை, தொல்காப்பியத்து மரபியலில் "பேடையும் பெடையு நாடி னொன்றும்" என்ற சூத்திரத்தில், 'நாடின்' என்ற மிகை கொண்டு அமைக்க. யாதொரு தீங்குஞ் செய்யாத தென்பார், 'எள்ளில்' என்ற அடைமொழி கொடுத்தார். முன்னர், 'பெடை' என வந்ததனால், 'நள்ளி' என்னும் நண்டின் பொதுப்பெயர் நண்டின் ஆணின்மேல் நின்றது. பகுத்தறிவில்லாத விலங்கு போன்ற மனிதரென்ற இழிவு விளங்க, 'வஞ்சை மாக்கள்' என்றார். விழைபடு என்று பிரித்து விரும்பிய வென்று பொருளுரைத்தல், மோனைத் தொடைக்குச் சிறவாது. மருதத் தாமரை - நீர்வளத்தாற் கழனிகளிலுள்ள தாமரை யென்க.

'புரையுட்டங்குவ,' 'விழைவுடைப்பெடையொடும் வெள்ள நள்ளிகள்', 'இழைபடப்பெடையொடும்' என்பன பிரதிபேதம். (௧௨௧)

கார்ப்பருவம், கூதிர்ப்பருவம் என்ற இருவகைப் பருவங்களின் வருணனை இப்படலத்தில் விரித்துரைக்கப்பட்டது; பெருங்காப்பிய விலக்கணங்களுட் பருவவருணனை ஒன்றாத லுணர்க.

கார்காலப்படலம் முற்றிற்று.

## எட்டாவது
## கிட்கிந்தைப் படலம்.

கிஷ்கிந்தா பட்டணத்தில் நடந்த செய்திகளைக் கூறும் பாகம். மழைக் காலம் கழிந்தவளவிலும், முன்பு சொன்னபடி சுக்கிரீவன் சேனைகளுடன் வந்திலனாக, இராமபிரான் கோபங்கொண்டு, கிஷ்கிந்தைக்குச் சென்று செய்தியறிந்து வரும்படி இலக்குமணனை யனுப்பியதும், அவ்விளைய பெருமான் சென்றது முதலாகச் சுக்கிரீவன் இராமபிரானிடம் வந்து சமாதானங் கூறியது ஈறாக நிகழ்ந்த செய்திகளும், இப்படலத்தில் விரித்து உரைக்கப் படுகின்றன.

[சொன்னபடி சுக்கிரீவன் வந்திலனென்பதுபற்றி இராமபிரான் சினந்து சில வீரவார்த்தைகள்கூறி இலக்குமணனைக் கிட்கிந்தைக்கு அனுப்புதலை இதுமுதல் எட்டுக்கவிகளிற் கூறுகின்றார்.]

அன்ன காலம கலும ளவினின்
முன்னை வீரனி ளவலை மொய்ம்பினேய்
சொன்ன வெல்லையி னூங்குமத் தூங்கிய
மன்னன் வந்தில னென்செய்த வாறரோ.

இது முதல் எட்டுக்கவிகள் - குளகம்.

(இ - ள்.) அன்ன காலம் அகலும் அளவினில்-அத்தன்மையதான சரத் காலங் கழியுமளவில்,—முன்னை வீரன் - மூத்தவனும் வீரனுமாகிய இராம பிரான்,—இளவலை - தம்பியான இலக்குமணனை நோக்கி,—மொய்ம்பினேய் - வலிமையையுடையவனே! சொன்ன எல்லையின் ஊங்கும் - (முன்பு நான்) சொன்ன நான்குமாதத்தவணை கழிந்தபின்மேயும், தூங்கிய அ மன்னன் - ஜாக்கிரதையின்றியிருந்த அச்சுக்கிரீவமகாராஜன், வந்திலன் - இங்கு வந்தானில்லை; செய்த ஆறு என் - (அவன்) செய்த விதம் யாதாயிருந்தது! (எ - று.)—அரோ - ஈற்றசை.

இச்செய்யுளில் 'அகலுமளவினில்', 'முன்னைவீரன்', 'இளவலை' என்றவை மேல் எட்டாஞ்செய்யுளில் 'என்றான்' என்பதனோடு தொடர்ந்து முடியும். 'சொன்ன வெல்லையி னூங்கும்' என்றவை 'தூங்கிய' என்பதனோடும், வந்திலன்' என்பதனோடும் இயைக்கலாம். முன்னை - முன் பிறந்தவன்;, தமையன்; ஐ - பெயர்விகுதி. இனி, முன்னை வீரன் - எல்லா வீரருள்ளும் முதன்மைபெற்ற வீரனெனினுமாம். மொய்ம்பினேய் என்பதற்கு - தோள் வலிமை புடையவனே யென்று பொருள் கொள்ளலுமாம்; இவ்வுரையில், மொய்ம்பு என்பதற்கு - தோளென்றும் வலிமையென்றும் பொருளுள்ளதனால், அதனை 'மொய்ம்பின் மொய்ம்பினேய்' என ஆவ்ருத்திசெய்துகொள்ள வேண்டும். தூங்குதல் - காரியத்திற் கருத்தின்றியிருத்தல். தனது சொல்லை அவன் உபேக்ஷித்ததும், அவன்தான் சொன்னசொற்படி நடவாமற் பொய்த்த

தும், செய்ந்நன்றி மறந்ததுமாகிய தகுதியில் செயல்களைப்பற்றிய வருந்தத தால் 'என்செய்தவாறு' என்றான். அரசாட்சி பெற்றதனாலாகிய களிப் பினால் தன்னையும் தனக்கு உதவிசெய்த நம்மையும் மறந்து இங்ஙனமாயின னென்னுங்கருத்து அமைய, 'மன்னன்' என்றான; இங்ஙனம் இவ்விசேஷ் யம் ஒரு கருத்தை உட்கொள்ளுதலால், கருத்துடை யடைகோளியணி யலங்கு - இடைச்சொல் 'முன்பினோய்', 'என்செய்யு மாறரோ' என்பன பிரதிபேதம்.

இதுமுதல் சகூ - கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத் தங்கள். (க)

உ. பெறலருந் திருப்பெற் றுதவிப்பெருந்
திறனினைந் திலன்சீர் மையிற் றீர்ந்தன
னறமறந் தனனன்பு கிடக்கநம்
மறன றிந் திலன்வாழ் வின்மயங் கினான்.

(இ - ள்.) (அச்சுக்கிரீவன்), பெறல் அருந் திரு பெற்று - பெறுதற்கரு மையான அரசாட்சிச் செல்வத்தை (நம்மாற்) பெற்று, உதவி பெருந் திறன் நினைந்திலன் - (தனக்கு நாம் செய்த) அவ்வுபகாரத்தின் பெருமையைக் கரு தினானில்லை; (ஆகவே), சீர்மையின் தீர்த்தனன் - சிறந்த ஒழுக்கத்தினின்று நீங்கிவிட்டான்; அறம் மறந்தனன் - (தனக்கு உதவிசெய்தவர்க்கு எதிருதவி செய்வதாகிய) தருமத்தை மறந்துவிட்டவனான அவன், அன்பு கிடக்க நம் மறன் அறிந்திலன் - (நாம் அவன் பக்கல் செய்த) அன்பை மறந்தது இருக் கட்டும் நமது பல பராக்கிரமங்களையும் ஞாபகத்திற் கொண்டானில்லை; வாழ் வின் மயங்கினான் - (அரசாட்சிபெற்று இன்புற்று) வாழும் வாழ்க்கையில் அமிழ்ந்து கிடக்கின்றான்; (எ - று.)

பெருந்திறன் - பெருமைக்குணம். உதவிப்பெருந்திறனை "செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும், வானகமுமாற்றலரிது", "காலத்தினாற் செய்த நன்றி சிறிதெனினும், ஞாலத்தின் மாணப்பெரிது" எனக் காண்க. "எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்பவாதலால், 'சீர்மையிற்றீர்ந்தனன்' என்றார். அறம் - "நன்றி மறப்பது நன்றன்று" என்பது: மறன் - வல்லமை. வாழ்வின் மயங்கினான் - (தான் பெற்ற) வாழ்வினால் அறிவுகெட்டான் எனினுமாம். வாலியினின்று மீட்டுப் பெறுதற்கரிய ருமையென்னும் மனைவியைப் பெற்றமையும் 'பெற லருந் திருப்பெற்று' என்றதில் அடங்கும்.

'உதவப்பெறுந்திறம்' என்று பாடமோதுவாரு முளர்; அதற்கு - (நாம் உதவியதனால்) பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்றுப் (பின்பு) தான்பெற்ற வழியை நினைத்தில னென்பது பொருள். (உ)

௩. நன்றிகொன்றருநட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மைசிதைத்துரைபொய்த்துளாற்
கொன்றுநீக்குதல்குற்றத்தினீங்குமாற்
சென்றுமற்றவன்சிந்தையைத்தேர்குவாய்.

(இ - ள்.) (இவ்வாறு), நன்றி கொன்று - (தனக்கு ஒருவன் செய்த) நன்றியைச் சிதைத்து [தான் பெற்ற உதவிக்குக் கைம்மாறு செய்யாமல் அதனை மறந்துவிட்டு], அரு நட்பினை நார் அறுத்து - அருமையாகக்கொண்ட சிநேகத்தைப் பந்தமற ஒழித்து, ஒன்றும் மெய்ம்மை சிதைத்து உரை பொய்த்துளான் - (யாவர்க்கும்) ஏற்றதான சத்தியத்தை யழித்துப் பேச்சுத்தவறிய வனை, கொன்று நீக்குதல் - கொன்றொழித்தல், குற்றத்தின் நீங்கும் - பழி பாவங்களினின்று நீங்கிய செயலேயாம்; ஆல் - ஆதலால், சென்று அவன் சிந்தையை தேர்குவாய் - (அச்சுக்கிரீவனைத் தண்டித்தற்பொருட்டு நீ) போய் அவனது மனநிலையை அறிந்து வருவாய்; (எ - று.)—மற்று - வினைமாற்று; அசையுமாம்.

நார் - கயிறு; இங்கே, அன்பினாலாகும் பாசபந்தத்தை யுணர்த்திற்று. நட்பினை நாரறுத்து - நட்பைப்பற்றறவிட்டு; "நட்பு நாரற்றன" என்றார் நாலடியாரிலும். நீக்குதல் - இவ்வுலகத்தில் இல்லாதபடி செய்தல்.

'நட்பினிணாரறுத்து', 'பொய்த்துளோர்க்கொன்று' என்பன பிரதிபேதம்.

௪. வெம்புகண்டகர்விண்புகவேரறுத்
திம்பர்நல்லறஞ்செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங்கூற்றமுமுண்டுங்க
ளம்புமுண்டென்றுசொல்லுநம்மாணையே.

(இ - ள்.) வெம் புகண்டகர் விண் புக வேர் அறுத்து - உக்கிரங்கொண்ட கொடியவர்கள் போரிலிறந்து வீரசுவர்க்கமடையும்படி (அவர்களைப்) பற்றற அழித்து, இம்பர் நல் அறம் செய்ய - (இவ்வுலகத்தில்) நல்லதருமத்தை நிலை நிறுத்துதற்பொருட்டு, எடுத்த - (நாம்) ஏந்திய, வில் கொம்பும் - வில்லும், உண்டு - இருக்கின்றது; அருங் கூற்றமும் உண்டு - (எவராலுந்தடுத்தற்கு) அரிய யமனும் இருக்கின்றான்; உங்கள் அம்பும் உண்டு - (வானரவீரர்களாகிய) உங்களையுங்கொல்லவல்ல அம்பும் (நம்மிடம்) இருக்கின்றது, என்று—, நம் ஆணை சொல்லு நமது கட்டளையாகச் (சுக்கிரீவனிடஞ்) சொல்வாய்; (எ - று.)

வெம்புகண்டகர் விண்புக வேரறுத்தல் - துஷ்டநிக்கிரகம். இம்பர் நல்லறஞ்செய்தல் - தர்மஸம்ஸ்தாபநம். கண்டகம் - முள்: அதுபோலப் பிறர்க்கு உபத்திரவஞ் செய்பவர், கண்டகர். வெம்பு கண்டகர் - (உலகம்) தவித்தற்குக் காரணமான கொடியவ ரெனினுமாம். வேரறுத்தல் - நிர்மூலஞ்செய்தல், எடுத்த - கையிற்கொண்ட, விற் கொம்பு - வில்லாகிய மூங்கில்; தநுர்த்தண்டம். உங்கள் அம்பு - ஆறும்வேற்றுமையுருபும் பயனுந்தொக்கதொகை; மத்ய மபதலோப ஸமாஸம்; அரக்கரையேயன்றி வானரரையும் அழிக்கும் அம்

பெனக; 'எங்களம்பு' என்ற பாடமும் ஏற்கும். விராதன் முதலிய அரக்கர்களையும் வாலியையுங் கொன்ற வில் அம்புகளைக்கொண்டே உன்னையும் உன்னைச்சார்ந்தவர்களையும் யமனுக்கு இரையாக்குதல் கூடுமென்று நாம் சொன்னதாகச் சொல்லக் கடவாய் என்பதாம். நம் ஆணை சொல்லு - நமது கட்டளையைச் சொல்வாய். (௪)

௫. நஞ்சமன்னவரைநலிந்தாலது
வஞ்சமன்றுமனுவழக்காதலா
லஞ்சிலேம்பதிலொன்றறியாதவ
னெஞ்சினின்றுநிலாவநிறுத்துவாய்.

(இ - ள்.) நஞ்சம் அன்னவரை நலிந்தால் அது - விஷத்தைப்போலக் கொடியராயுள்ளாரைத் தண்டித்தால் அது, வஞ்சம் அன்று - கொடுமையாகாது: (ஏனெனில்),—மனு வழக்கு ஆதலால் - மநுதர்மசாஸ்திரத்திற் கூறிய நீதியாதலால்; (இத்தன்மையை), அஞ்சில் ஐம்பதில் ஒன்று அறியாதவன் நெஞ்சில் நின்று நிலாவ நிறுத்துவாய் - ஐந்துபிராயத்திலும் ஐம்பதுபிராயத்திலும் தக்கதொருசெயலை யறியாதவனான அச்சுக்கிரீவனது மனத்திற் பதிந்துவிளங்கும்படி நீ சொல்லி நிலைபெறுத்துவாய்; (எ - று.)

"கொலையிற்கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனொடு நேர்" என்றபடி கொடியவரைக்கொல்லாவிடின் உலகம் பலவாறு நலிவுபட்டு வருந்துதலாற் பயிர்செழித்துவளருமாறு புற்களையைக்களைதல் போல நல்லோரைப் பாதுகாத்தற்பொருட்டுத் தீயோரைக்கொன்றொழித்தல் தருமமாமென உணர்க. நஞ்சமனனவர் - தன்னையுட்கொண்டவரை வருத்துபவர்; தன்னையுண்டவரை வருத்திக்கொல்லும் விஷம்போலத் தன்னை நட்புக்கொண்டவர்க்குத் துரோகஞ்செய்பவர் எனறபடி. மனு - இங்கே, ஸ்வாயம்புவமநு; அவரே அறநூலியற்றியவர். 'நஞ்சமன்னவரை நலிதல் வஞ்சமன்று' எனபதை மநுதர்ம சாஸ்திரத்தில் இராசதருமங்கூறும் ஏழாவது அத்தியாயத்தில தணடப்பிரசமஸையிற காணலாம். இனி, மனு வழக்கு - மனுவென்னும் முதலரசன முதலாக வழங்கிவருஞ் செயலெனறலுமாம்.

அஞ்சிலேம்பதிலொன்றறியாதவன் - அஞ்சிலும் ஒன்று அறியாதவன் ஐம்பதிலும் ஒன்று அறியாதவ னெனக; இளமையோடு முதுமையோடு வாசியற எப்பொழுதுமே செய்வது அறியாதவன என்றபடி: இளமையில் ஆராய்ச்சியின்றித் தனது அண்ணனான வாலிபக்க தவறுல் [மராமரப்படலம் - ௧௧] செய்தான, இப்பொழுது முதுமையில் எனக்குப் பிழைசெய்தான் எனற வாறும். 'அஞ்சிலறியா ரைம்பதிலும் அறியார்' என்பது ஒருபழமொழி. "அஞ்சிலறியாதா ரைம்பதிலுந் தாமறியா,ரென்சொலெனக்கோவெதிராசா—நெஞ்ச, முனதாளொழிந்தவற்றையேயுகக்க வின்று, மனுதாபமற்றிருக்கையால்" எனறார் ஸ்ரீமணவாளமாமுனிகளும். இப்பழமொழி, 'ஆறிலறியார் 'நூறிலுமறியார்', 'தொட்டிற்பழக்கம் சுடுகாடுமட்டில்' எனபன போல்வது. உலகவழக்கச்சொல்லைத தழுவிக்கொண்டு சொல்லியது, உலகவழக்குநவிற்சியணி; இதனை லோகோக்தியலங்கார மென்பர் வடநூலார். ஐந்து, ஐம்பது

ணைறண-இக்கு, இளமை முதுமைகட்கு இலக்கணை. அஞ்சு - போலி. இனி, மூன்றாமடிக்குப் பிறவாறுகூறும் பொருள்களெல்லாம் சிறவாமை யுணர்க; மற்றும் அவை கலித்துபொருள் கொளளுதலின பாற்படும்: [க்லிஷ்டகல் பனை.] நெஞ்சில் நின்றுநிலாவ நிறத்துதல் - தெளியச்சொல்லி வலிய உணர்த்துதல்.

'அஞ்சியல்லதொன்றாறிவாரவர்', 'அஞ்சிலம்பதிலொன்றறியாதவன்' என்பன பிரதிபேதம். (ரு)

சு. ஊருமாளுமரசுநுஞ்சுற்றமு
நீருமாளுதிரெனபதுநேர்ந்தநாள்
வாருமவாரலிராமெனின்வானரப்
பேருமாளுமெனும்பொருள்பேசுவாய்.

(இ - ள்.) ஊரும் - (உங்களுடைய) நகரமும் [கிஷ்கிந்தாபுரியும்], ஆளும் - அடிமைகளான குடிகளும, அரசும் - அரசாட்சியும், நும் சுற்றமும் - உங்கள் உறவினமும், நீரும்-நீங்களுமாக, ஆளுதிர் - (இவவுலகததில்) ஆட்சி பெறக்கடவீர் [பயினறு வாழக்கடவீா], எனபது—, நேர்ந்த நாள் - (உங்கட்குச்) சம்மதமானல், வாரும் - உடனே புறப்பட்டு நம்பககல வரக்கடவீர்கள்; வாரலிர் எனின - அங்ஙனம் வராமற் போவீரேயானுல், வானரம் பேரும் மாளும் - வாநரமென்கிற பெயுரும் (உலகததில்) இல்லாதொழியும், எனும் - என்கிற, பொருள் - உண்மையை, பேசுவாய் - (சுக்கிரீவன் அங்கதன் முதலானவர்களிடம் நீ) சொல்வாய்; (எ - று.)—ஆம் - அசை.

'நும்' என்பதை ஊர் ஆள் அரசு என்றவறறோடும் கூட்டுக. நாடு நகரங்களுடனும் குடிகளுடனும் பந்துவர்க்கத்துடனும் அரசாட்சியுடனும் நீங்கள் உலகத்தில் உயிர்வாழ்ந்திருக்க வேண்டுமெனபது உங்கள்விருப்பமாகுமாளுல் என்பது முன்னிரண்டடியின பொருள். 'நேர்ந்தநாள்' எனபதை 'நேர்ந்தக்கால்' என்றாற்போல எதிர்காலவினையெச்சவாய்பாடுபடவந்ததாகக் கொள்க. இனி, நீரும எனபதில் உம்மையை அசையாக்கி, நீஙகள் உங்கள ஊரையும் குடிகளையும் அரசையும் சுறறத்தையும் ஆளக்கடவீ ரென்பது உங்கட்குப் பிரியமாளுல் எனறு உரைத்தலுமாம். 'நீருமாளுதிரேயெனி னேர்ந்தநாள் வாரும்' என்று பாடமானபோது, 'நேர்ந்தநாள்வாரும்' எனபதற்கு - (முன்பு சொன்னநாள்கள கழிந்துபோய் விட்டன): நேர்பட்ட இன்றைக்காவது வாருங்கள் என்று பொருளாம்.

வானரப்பேரும் மாளும் - வாநரமெனனும் பெயருமில்லாமற போம்படி எல்லா வாநரங்களையும் அழித்துவிடுவோம் யாம் என்றபடி. 'அரசுமுஞ்சுற்றமும்' என்ற பாடம் மோனைத்தொடையுடையதாம். 'வாரலிரேயெனின்' எனபது பிரதிபேதம். (சு)

எ. இன்னுநாடுதுமிங்கிவர்க்குப்வலி
துன்னினுரையெனததுணிநதாரெனி
னுன்னைவெல்லவுலகொருழுன்றினு
நின்னலாற்பிறரின்மைநிகழ்த்துவாய்.

(இ - ள்.) இன்னும் இங்கு இவர்க்கும் வலி துன்னினரை நாடுதும் என துணிந்தார் எனின் - 'இனி வேறாக இவ்விராமலக்குமணரைக் காட்டிலும் வலிமைபொருந்தியவரைத் தேடித் துணையாக அடைவோம்' என்று (அச்சுக்கிரீவன் முதலியோர்) நிச்சயித்தார்களாயின, உன்னை வெல்ல உலகு ஒரு மூன்றினும் நின்ற அலால் பிறர் இன்மை நிகழ்த்துவாய் - உன்னை வெல்லுதற்கு மூன்று உலகங்களிலும் உன்னையல்லாமல் வேறு எவருமில்லாமையை (அவர்கட்குச்) சொல்வாய்; (எ - று.)

தற்புகழ்ச்சியாகாதிருக்குமாறு தன்னைச் சேர்த்துக்கொள்ளாமல் இலக்குமணனை மாத்திரமே குறித்தனன் இராமபிரான்; இது, அப்பெருமானது பெருந்தகைமையைக் காட்டும். தன்னையடக்க வேண்டுமாயின தானே அடக்கிக்கொண்டாலல்லது பிறரெவராலும் அடக்கவொண்ணாத பேராற்றலையுடையவர் இளையபெருமாளென்பது, இங்கு விளங்கிறது. பிறரால் வெல்லவொண்ணாத பேராற்றலோடு வேண்டியபொழுது தன்னைத்தானே அடக்கிக்கொள்ளவல்ல மகாசக்தியையு முடையவன இலக்குமணனெனக. இங்கு இவர் - இவவாறு [வாலியைவதைத்துத் தனக்கு அரசளித்து] உதவிய இவர்களெனறபடி. இவர்க்கும எனபதில், நானகனுருபு - எல்லைப்பொருளது. உம் - உயர்வு சிறப்பு. (எ)

அ. நீதியாதிநிகழ்த்தினைநின்றது
வேதியாதபொழுதுவெகுண்டவண்
சாதியாதவாசொறறாதக்கனை
போதியாதியென்றான்புகழ்ப்பூணினான்.

(இ - ள்.) ஆதி - முதலில், நீதி நிகழ்த்தினை நின்று - (சுக்கிரீவன முதலியோர்க்கு) நீதியை யெடுத்துக்கூறிநின்று,—அது வேதியாத பொழுது - அந்நீதிச்சொல (அவர்கள் மனத்திற்கொணட மாறுபாட்டை) மாறாதபொழுது, வெகுண்டு அவண் சாதியாது - (நீ) கோபித்து அவவிடத்தில [அப்பொழுது] (அவர்களை) அழித்துவிடாமல், அவர்சொல தா தக்கனை - அவர்கள சொன்ன உத்தரங்களை (என்னிடம்) கொண்டுவந்து சொல்லக்கடவாய்; போதி ஆதி - சொல்வாயாக, என்றான் - என்று சொல்லி விடைகொடுத்தான்: (யாவனெனின),—புகழ் பூணினான் - புகழையே தனக்கு ஆபரணமாகக்கொள்பவனாகிய இராமபிரான்; (எ - று.)

இச்செய்யுளில் 'புகழ்ப்பூணினான' எனறதை இப்படலத்து முதற்செய்யுளில் 'முன்னைவீரன' என்றதற்கு விசேஷணமாகக் கொண்டு அதனோடு இயைத்து முடிபு அமைக்க.

இராமபிரான முன்கோபங் கொண்டவனன்றிச் சாந்தகுணத்தை யுடையவனாதலால் முடிவில இங்ஙனங் கட்டளை கூறியருளினன. புகழ் தன்னை அழகுபடுத்துவதெனக் கருதி அதனை விருப்பத்தோடு மேற்கொள்பவனென்பதும், புகழினால் விளங்குபவ னெனபதும், 'புகழ்ப்பூணினான' எனறதன் கருத்து. விரைவை மேறகொள்ளாது பொறுமையை மேறகொண்டு இவ்

வாறு கட்டளை கூறியது, புகழ்க்குக் காரணமென்பது விளங்க, இங்கு 'புகழ்ப் பூணினன்' என்றார். 'ஆதி' என்ற சொல் இரண்டனுள், முந்தியது - வடமொழிப் பெயர்; பிந்தியது - 'ஆ' என்ற வினைப்பகுதியின்மேற் பிறந்த ஏவலொருமைமுற்று; இ - விகுதி, த் - எழுத்துப்பேறு ஆதி போதி என மாற்றி, விரைந்து நேரிற்செல்வாய் என்றலு மொன்று; ஆதி - நேரோடல். நிகழ்த்தினை - முற்றெச்சம். வேதித்தல் - போதித்தல். நீதியாதி நிகழ்த்தினை நின்றது வேதியாதபொழுது எனபதற்கு - நீதி முதலியவற்றைச் சொல்லி (அவற்றால்) அவர்களிருந்த நிலைமாறாதபொழுதெனறு உரைத்தலுமொன்று; இப்பொருளில், 'நின்றது' என்பது - ஒருசொல். இனி, நீதி முதலியவற்றைச் சொல்லி, (அவர்கள) நின்ற நிலைமை (நீதிக்கு) மாறாக இராதபோது கோபங்கொண்டு அவர்கள்பக்கல் ஒன்றுஞ் செய்யாமல் அவர்கள்சொன்ன சொல்லை எனக்குத் தெரிவிக்கக்கடவை யென்று கட்டளையிட் டருளினனென உரைத்தல் சிறவாமை யுணர்க. தாத்தக்களை - தாத்தக்காய்.

'நீதியாகநிகழ்த்துதி,' 'வெகுண்டிடல்', 'போதியாக வென்றான்' என்பன பிரதிபேதம். (அ)

[அக்கட்டளையை மேற்கொண்டு இலக்குமணன் செல்லுதல்.]

௯. ஆணைசூடியடிதொழுதாண்டிறை
பாணியாதுபடர்வெரிந்பாழ்படாத்
தூணிபூட்டிதொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினன்சிந்தையுணீங்கலான்.

(இ - ள்.) ஆணை சூடி - (அந்தத் திருத்தமையனாது) கட்டளையை (இலக்குமணன்) சிரமேறகொண்டு, அடி தொழுது - (அப்பெருமானது) திருவடிகளை வணங்கி, ஆண்டு இறை பாணியாது - அவ்விடத்திற் சிறிது பொழுதும் தாமதித்து நிற்காமல்,—படர் வெரிந் - பரந்த தனது முதுகில், பாழ்படா தூணி பூட்டி - அம்புகள் பற்றறுதலில்லாத அம்பறாத்தூணியை [அக்ஷயதூணீரத்தை]க் கட்டிக்கொண்டு, தொடு சிலை தொட்டு - அம்பு தொடுத்தலிற் சிறந்த வில்லைக் கையிற் பிடித்து, சிந்தையுள் நீங்கலான் - மனத்தில் (இராமபிரானை) விட்டுப் பிரியாதவனாய் [இராமபிரானைத் தியானித்துக் கொண்டே], அருஞ் சேணில் நீங்கினன - செல்லுதற்கு அரிய நீண்டவழியிற் செல்லலானான். (எ - று.)

இறை - காலநுட்பம். பாணித்தல் - பொழுது நீட்டித்தல். முதுகு பரந்திருத்தல், உத்தமவிலக்கணம். வில்லையேந்தித் தூணியைப்பூட்டி யுத்த சந்நத்தனபோலச் சென்றது, அச்சமுறுத்திக் காரியத்தைச் சாதித்துக்கொள்ளுதறகு; தற்காத்துக்கொள்ளுதற்காக முன ஜாக்கிரதையாய்க் கொண்டதுமாம். ஈற்றடியில் முரண்தொடை காண்க. பெருமாளிடம் இளையபெருமாளுக்கு உள்ள பக்திவிசேஷம், இச்செய்யுளில் வெளியாம். நிஜபக்தியுடையார் இறைவனை எப்பொழுதும் தியானிக்கு மியல்புபற்றி, 'சிந்தையுள் நீங்கலான்

சேணில்நீங்கினன்' என்றார். ஏதேனுமொருகாரியமெய்தமாயச் செல்லும் பொழுது கடவுட்டியானத்தோடு செல்லுதல் அடியாரியல் பென்பதும், அவர்கட்கு அது காரியசித்திக்கு மூலமா மெனபதும் கருதத்தக்கன. இனி, 'சிந்தையுள் நீங்கலான்' என்பதற்கு - இராமபிரானது மனத்தினின்று நீங்காத அன்புடைத்தம்பியான இலக்குமண னென்று உரைப்பினும் இழுக்காது

'வேரிந்', 'சிந்தையினீங்கலான்' என்பன பிரதிபேதம். (௯)

[இலக்குமணன் வாநரங்கள் செல்லும் வழியாற் செல்லாது வேறு வழியாற் செல்லுதல்.]

௧௦. மாறுநின்றமரா னுமலைகளு
நீறுசென்றுநெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன்மென்மையனாயினு
மாறுசென்றிலனாணையினேகுவான்.

(இ . ள்.) ஆணையின் ஏகுவான் - (ஸ்ரீராமனது) கட்டளைப்படி செல்பவனான அவ்விலக்குமணன்,—மென்மையன் ஆயினும் - மெல்லிய இயல்பையுடையவனாயினும், ஆறு சென்றிலன் - (சுக்கிரீவன் முதலியோர் முன்பு தங்களை ருசியமூககிரியினின்று கிஷ்கிந்தாபுரிக்கு அழைத்துக்கொண்டுபோன) வழியாற் செல்லாமல், மாறு நின்ற மரனும் மலைகளும் நீறு சென்று நெடு நெறி நீங்கிட வேறு சென்றனன் - குறுக்கேநின்ற மரங்களும் மலைகளும் (தான் செல்லும் விசையால்) பொடியாகி நெடுந்தூரம் சென்றுவிடும்படி புதியதொரு வழியைக் கற்பித்துக்கொண்டு சென்றான் ; (எ - று.)

இலக்குமணன் சுகுமாரமான சரீரமுடையவனாதலால் இதுவரையிற் பலர் சென்று அடிப்பட்ட வழியால் எளிதில் இனிது செல்லத்தக்கவனாயினும், சுக்கிரீவன் முதலியோரைத் தம்பக்கல் மாறுபாடுகொண்டவராகக் கருதினனாதலால், அவர்கள் தமது ஊர்க்கு வழக்கமாக அமைத்துள்ள வழியில் ஏதேனும் வஞ்சனைத்தீங்கு புரிந்து வைத்திருப்பரோ வென்னுஞ் சங்கை கொண்டவனாய் அவ்வழியாற் செல்லாது வேறாகப் புதியதொருவழி கற்பித்துக்கொண்டு செல்லலாயின னென்க. முதலிரண்டடியிற் குறித்தது, மகாபலசாலியான அவ்விளையபெருமாள் செல்லும் விசையினாலாகிய செயல். மாறநின்ற - தனது செலவிற்குத் தடையாய்நின்ற என்றபடி. தனது தலைவனது கட்டளையை மேற்கொண்டு செல்பவனாதலால், அதற்கு ஏற்றபடி செல்லும்போது தனக்கு உண்டாகுஞ் சிரமத்தைச் சிறிதும் பார்த்திலனென்பது விளங்க, 'ஆணையினேகுவான்' என்றார்; மெய்வருத்தம்பாராது கருமமே கண்ணாகச் செல்லுதல், உத்தமதூதலக்ஷணம். 'ஆணையினேகுவான்' என்றது இராமபிரானது கட்டளைதானே ஒருபுருஷவடிவமெடுத்துச் சென்றாற்போலவ னென்றவாறுமாம். 'மெய்ம்மையினேங்கிடு,மாறுசென்றவனாணையினேகுவான்' என்ற பாடத்திற்கு - சத்தியத்தாற் சிறந்த தருமமார்க்கத்திலே செல்

பவனை இராமபிரானது கட்டளையின்படி செல்லும் இலக்குமணனென்று பொருளாம். (௪௰)

[இலக்குமணனது அடிவைப்புக்களால் மலைகள் அழுந்துதல்.]

௪௧. விண்ணுறத்தொடர்மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக்கழுந்தினமாதிரங்
கண்ணுறத்தெரிவுற்றதுகட்செவி
யொண்ணிறக்கழற்சேவடியூன்றலால்.

(இ - ள்.) ஒள் நிறம் கழல் சே அடி ஊன்றலால் - பிரகாசமான நிறமுள்ள வீரக்கழலையணிந்த சிவந்த (இலக்குமணனது பாதங்கள்) (அவன் செல்லும்போது) அழுந்துதலால்,—விண் உற தொடர் மேருவின் சீர் வரை - மேலுலகத்தையளாவவளர்ந்துள்ள மேருமலையினது (உயரத்தின்) எல்லையளவாக [மேருமலையின் உயரம் எவ்வளவோ அவ்வளவுதூரந் தாழ என்றபடி]; மாதிரம் - மலைகள், மண் உற புக்கு அழுந்தின - தரையிலே பொருந்த உட்சென்று அழுந்தின; (அப்பொழுது), கட்செவி கண் உற தெரிவுற்றது - (பூமியின் கீழ் இருந்து அதனைத்தாங்குகின்ற) ஆதிசேஷன் கண்களுக்குப் புலனாயிற்று; (ஏ - று.)

உயர்வுநவிற்சியணி [அதிசயோக்தி] 'மகாமேருகிரி எண்பத்திநாலாயிரம் யோஜனை யுயரமுள்ளது' என்று புராணம் கூறும். கட்செவி - கண்களையே காதுகளாகவும் உடையது எனப் பாம்பிற்குக் காரணக்குறி; அன்மொழித்தொகை. 'சக்ஷுஃச்ரவா:' என்ற வடசொல்லும் இப்பொருளது. பொருள்களைக் காணுதலும் ஒலிகளைக்கேட்டலுமாகிய இரண்டு புலன்களும் பாம்பிற்குக் கண்ணாகிய பொறியொன்றிலே அமைந்திருத்தல் காண்க. 'கட்செவி' என்றது - இங்கே, சிறப்பினால் நாகராசனான ஆதிசேஷனைக் குறித்தது. பொதுப்பட நாகங்களை யுணர்த்தினதாகக்கொண்டு, பூமியின் கீழுள்ள நாகங்கள் கட்புலனாயின வென்றலுமாம். இப்பொருளில், 'தெரிவுற்றது கட்செவி' என்றது, சாதியொருமைபற்றி யென்க. 'உண்ணிறம்' என்ற பாடத்திற்கு - நிறம் உண் என மாறி, நிறங்கொண்ட வென்று பொருளாம். கழல் - வீரர் தமது வீரத்திற்கு அறிகுறியாகக் காலிலணிந்துகொள்வதோராபரணம். (௪௧)

[இலக்குமணனது வேகம்.]

௪௨. வெம்புகானிடைப்போகின்றவேகத்தா
லும்பர்தோயுமராமரத்தூடுசெ
லம்புபோன்றனனன்றடல்வாலிதன்
றம்பிமேற்செலுமானவன்றம்பியே.

(இ - ள்.) அன்று - அப்பொழுது, அடல் வாலிதன் தம்பிமேல்செலும் - வலிமையையுடைய வாலியின் தம்பியான சுக்கிரீவனை நோக்கிச் செல்லுகின்ற, மானவன் தம்பி - மநுகுலதிலகனான ஸ்ரீராமபிரானது திருத்தம்பி

யாகிய இலக்குமணன்,—வெம்பு கானிடை போகின்ற வேகத்தால் - வெப்பங்கொண்ட காட்டிற் செல்கின்ற விசையினால், உம்பர் தோயும் மராமரத்து ஊடு செல் அம்பு போன்றனன் - மேலுலகத்தையளாவி வளர்ந்திருந்த (ஏழு) மராமரங்களினிடையே துளைத்துச்சென்ற (இராம) பாணத்தைப் போன்றான்; (எ - று.)

உவமையணி. இராமபாணம் மராமரங்களேழினையும் எளிதில் துளைத்து அப்பாற்சென்றதுபோல இலக்குமணன் தான் செல்லுங் காட்டுவழியிலுள்ள மரங்களையெல்லாம் தான் செல்லும் விசையால் அழித்துத்தள்ளிக் கொண்டு செல்லுதல்பற்றி, அதனை இவனுக்கு உவமை கூறினார். மராமரம்-ஸாலவிருக்ஷம்; ஒருவகை ஆச்சாமரம். 'உம்பர்தோயுமராமரம்' என்றது, உயர்வுநவிற்சி. உம்பர் - உகரச்சுட்டடியாப்பிறந்த பெயர்; இதன் எதிர்மொழி-இம்பர்; (இவ்விடம்.) மாநவன் - வைவஸ்வதமநுவின்குலத்திற் பிறந்தவன்; வடமொழித்தத்திதாந்தநாமம்.

'அம்பிற்சென்றனனுலடல்', 'மன்னவன்றம்பியே' என்பன பிரதிபேதம்.

[இதுவும் அது.]

கக. மாடுவென்றியொர்மாதிரயானையின்
சேடுசென்றுகெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநண்ணியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனாயினான்.

(இ - ள்) மாடு - பக்கத்திலுள்ள, வென்றி - வெற்றியையுடைய, ஓர் மாதிர யானையின் - ஒரு திக்கஜத்தினது, சேடு - இளங்கன்று, சென்று கெடில் - விலகிச்சென்று மீண்டுவருதலின்றிக் காணாமற் போய்விட்டால், நாடுகின்றது - (அதனைத்) தேடுவதாய், நண்ணிய கால் பிடித்து ஓடுகின்றது - (அந்த யானைக்குட்டியினது) பொருந்திய அடிச்சுவடுகளைப் பின்பற்றி அது சென்றவிடத்தைக் குறித்து விரைந்து செல்வதான, ஒரு திக்கின் மா உம் - வேறொரு திக்கஜத்தையும், ஒத்து உளன் ஆயினான் - போன்றவனானான், (அவ்விலக்குமணன்); (எ - று.)

பக்கத்தில் நின்ற ஒருதிக்கஜத்தின் குட்டியான யானைக்கன்று அதனை விட்டுவிலகிச்சென்று மீண்டுவரவேண்டியசமயத்தில் வராது காணாமற்போனவிடத்து அத்திக்கஜத்தின் நண்பாகிய மற்றொருதிக்கஜம் அந்த யானைக்குட்டியைத் தேடுவதாய் அது கால்வைத்துச்சென்ற அடிச்சுவடுகளைப் பற்றிக் கொண்டு அதுசென்றவிடத்தைக்குறித்து விரைந்துசென்றாற் போன்றனன் இலக்குமணன் என்பதாம். உவமையணி. ஸ்ரீராமபிரானாற் புதல்வனைப் போல் அபிமானிக்கப்பெற்ற சுக்கிரீவன் அவ்வருமையை மனத்திற் கொள்ளாதவனாய்த் தான்சென்றவிடத்தினின்று வரவேண்டிய சமயத்தில் வந்திலனாக, இராமபிரானது கருத்திற்கு ஏற்ப இளையபெருமாள் அச்சுக்கிரீவனைக் குறித்து அவனிருக்கின்ற இடத்தைநோக்கிக் கவனமாய்வழியுணர்ந்து செல்லுதல் கருதத்தக்கது. சேடு - இளமை: இளங்கன்றிற்குப் பண்பாகுபெயர்.

கால் - காற்சுவடு ஆகுபெயர். உம்மை - கீழ்ச்செய்யுளிற் கூறிய உவமையை நோக்கிவந்த இறந்தது தழுவிய எச்சம். மாதிரயானை, திக்கின்மா - பூமியினைக் கீழே திசைதோறும் நின்று அதனைத்தாங்குந் தெய்வயானை; நடை வலிமை காம்பீரியங்களால் வீரர்க்கு யானை உவமைகூறப்படும்; பூமிபாரத்தை வகித்தல்பற்றி, இராமலக்ஷ்மணர்க்குத் திக்கஜங்கள் ஒப்பாம்.

'சேடுசென்றுசெடில்','சேடுதுன்றுசெடில்' என்பன பிரதிபேதம்.(௧௩)

[இலக்குமணன் ருசியமூககிரியினின்று கிஷ்கிந்தமலையை விரைவில் அடைதல்.]

௧௪. உருக்கொளொண்கிரிபொன்றினின்றொன்றினைப்
பொருக்கவெய்தினன்பொன்னொளிர்மேனியா
னருக்கன்மாவுதயத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினையெய்தியபண்பினால்.

(இ - ள்.) அருக்கன் - சூரியன், மா உதயத்தினின்று - பெரிய உதயகிரியிலிருந்து, அத்தம் ஆம் பருப்பதத்தினை எய்திய பண்பினால் - அஸ்தமனகிரியை யடைந்தவிதமாக [அடைந்ததுபோல வென்றபடி],—பொன் ஒளிர் மேனியான் - பொன்னிறமாய் விளங்குகின்ற திருமேனியை யுடையவனான இலக்குமணன், உரு கொள் ஒண் கிரி ஒன்றினின்று - பெருவடிவுகொண்ட பிரகாசமான ஒரு மலையினின்று [ருசியமூககிரியிலிருந்து], ஒன்றினை - மற்றொருமலையை [கிஷ்கிந்தமலையை], பொருக்க எய்தினன் - விரைவிலடைந்தான்; (எ - று.)

உவமையணி. இடையேதங்குதலும் தட்டுத்தடங்கலும் இன்றிவிரைந்து சென்று சேர்ந்தமை, இவ்வுவமையால் விளங்கும். இலக்குமணன் பொன்னிறமுடையனென்பதை, ஆரணியகாண்டத்தில் "சுவணவண்ணன்" என்றதனாலும் உணர்க. சூரியனுவமை, செந்நிறத்திற்கும், திருமேனியொளிக்கும் ஏற்கும். உதயம் - சூரியன் முதலியோர் உதிக்குமிடமாய்க் கிழக்கிலுள்ளதொரு மலை. அவர்கள் அஸ்தமிக்குமிடமாய் மேற்கிலுள்ள மலை, அஸ்தம். பொருக்க - விரைவுக்குறிப்பிடைச்சொல் 'பண்புபோல்' என்பதும் பாடம்.

[இதுவும் அது.]

௧௫. தன்றுணைத்தலைமையன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச்சீயமும்போன்றனன்.

(இ - ள்.) தன் துணை தலைமையன் தனி வாளியின் சென்று - தனக்கு உற்றதுணைவனும் தலைவனுமான இராமபிரானது ஒப்பற்ற அம்புபோல (த் தடையின்றி விரைந்து) போய், சேண் உயர் கிட்கிந்தை சேர்ந்தவன் - (ருசியமூககிரியினின்று) மிகவுயர்ந்த கிஷ்கிந்தமலையை யடைந்தவனான அவ்விலக்குமணன் —குன்றினின்று ஒரு குன்றினில் குப்புறும் - ஒரு மலையி

னின்று மற்றொரு மலையில் தாவிப்பாய்கின்ற, பொன் அனக்கு உளை சீயமும் - பொன்னிறமாய் விளங்கும் பிடரிமயிர்களை யுடையதோர் ஆண்சிங்கத்தையும், போன்றனன் - போன்றான்; (எ - று.)

உவமையணி- பலபராக்கிரமங்களிலும் கம்பீரமானநடையிலும் தோற்றத்திலும் சிங்கம், இலக்குமணனுக்கு உவமையாம். கீழ் கஉ - ஆஞ்செய்யுளில் பெருமரங்கள்பலவற்றை எளிதில்அழித்து அப்பாற்செல்லுதலில் இலக்குமணனுக்கு இராமபாணத்தை உவமைகூறியவர், இங்கு தட்டுத்தடங்கலின்றிக் குறித்தவிடத்திற்கு விரைந்துசென்றுசேர்தலில் இலக்குமணனுக்கு இராமபாணத்தை உவமைகூறுகின்றனராதலால், அதனோடு இது கூறியது கூறலென்னுங் குற்றத்தின் பாற்படாதென உணர்க; பொதுத் தன்மையிலுள்ளவேறுபாடு கருதத்தக்கது. அசேதநமாகிய அம்புபோல இலக்குமணன் தன்னைச்செலுத்தின தலைவனுக்குப் பாதந்திரனாய் ஒழுகி அவன்செலுத்திய விடத்துச் செல்பவனென்பதும், இராமபாணம்போலத் தடையின்றிக் காரியத்தைச்சாதித்து மீள்பவனென்பதும், இலக்கானவரைத் தவறாமல் எளிதில் அழிக்கவல்லவனெனபதும், இவ்வுவமைமுகத்தால் தோன்றும்.

கிட்கிந்தை - கிஷ்கிந்தமென்ற வடசொல்லின் விகாரம். குப்புறுதல் - குதித்தல். சீயம் - ஸிம்ஹமென்ற வடசொல்லின் சிதைவு. தமைபன் - தம் ஐயன்; தமது தந்தை போல்பவனென்னும் பொருளபற்றி முன்பிறந்தவனைக் குறிக்கும்: 'தமையன் தந்தையோடொப்பான' என்றல், நூல்வழக்கு. சேண் - உயர்ச்சி; சேண்உயர் - ஒருபொருட்பன்மொழி. இனி, சேண்உயர் - வானத்தையளாவியுயர்ந்த எனினுமாம்: உம் - இறந்தது தழுவிய எச்சம். (௩௫)

[இலக்குமணன் வந்ததைக்கண்டு வாநரங்கள் அஞ்சியோடி அங்கதனுக்குச் சொல்லுதல்]

௩௬. கண்டவானரங்காலனைக்கண்டபோன்
மண்டியோடினவாலிமகற்கையா
கொண்டசீற்றததிளையோன்குறுகினான்
சண்டவேகத்தினாலென்றுசாற்றலும்.

இதுவும், அடுத்தகவியும் - குளகம்.

(இ - ள்.) கண்ட வானரம் - (இவ்வாறு கோபத்தோடு இலக்குமணன்வர அதனைப்) பார்த்த குரங்குகள், காலனை கண்ட போல் - யமனைக் கண்டன போல, (மிக்க அச்சங்கொண்டு), மண்டி ஓடின - மிகுதியாய் ஓடியவையாய், வாலி மகற்கு - வாலியின்குமாரனான அங்கதனைநோக்கி, 'ஐயா - தலைவனே! கொண்ட சீற்றத்து இளையோன - கோபங்கொண்ட ஸ்ரீராமன் தம்பியான இலக்குமணன், சண்டவேகத்தினால் குறுகினான் - உக்கிரமான வேகத்தோடு வந்துசேர்ந்தான்,' என்று சாற்றலும் - என்றுசொன்னவளவில், (எ - று.)—'அன்னதோன்றலும் எய்தினான' என அடுத்த கவியோடு தொடரும்.

கண்ட - பெயர். ஓடின - முற்றெச்சம். மண்டியோடுதல்-ஒன்றன்மேல் ஒன்றாகநெருக்கமுற்று ஓடுதலுமாம். மகற்குஎன்றதில், அன்கனுருபு -

கொடைப்பொருளன பாற்படும். குறுகுதல்-சமீபித்தல். 'கண்டவானரர் காலனைக்கண்டென, மண்டியோடினார்', 'வாலிமகறகமர்', 'சண்டவேகத்தி னன்' என்பன பிரதிபேதம். (கசு)

[அங்கதன் வந்து இலக்குமணனது குறிப்பை யுணர்ந்து சுக்கிரீவனிடஞ் செல்லுதல்.]

கஎ. அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
வின்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற்றாதையிற்போயினான்.

(இ - ள்.) அன்ன தோன்றலும் - அந்த அங்கத குமாரனும், ஆண் தொழிலான் வரவு இன்னது என்று அறிவான் - ஆண்மைக் குணத்திற் கேற்ற செயலை யுடையவனான இலக்குமணன் வந்த நோக்க மின்னதென்று அறிதற் பொருட்டு, மருங்கு எய்தினான் - இலக்குமணனருகில் வந்து, மன்னன் மைந்தன் மனம் கருத்து உள் கொளா - தசரதசக்கரவர்த்தியின் குமாரனான அவ்விலக்குமணனுடைய மனத்தின் கருத்தை (அவனது முகக் குறிப்பைக் கொண்டு) உணர்ந்து, பொன்னின் வார் கழல் தாதை இல் போயினான் - பொன்னினாலாகிய நீண்ட வீரக்கழலை யுடைய தனது சிறிய தந்தையான சுக்கிரீவனது அரண்மனைக்குச் சென்றான்; (எ - று.)

தோன்றல் - பெருமையிற் சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர்; சிறந்து தோன்றுபவனெனப் பொருள்படுங் காரணகுறி. இதில், அல் - கருத்தாப்பொருள் விகுதியாம். ஆண்தொழில் - பௌருஷச் செயல, போர்வெற்றி. உட்கொளுதல் - தன்மனத்திறகொள்ளுதல்; "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம்' ஆதலால், இலக்குமணன் மனக்கருத்தை அவன் முகக்குறிப்பைக்கொண்டு அங்கதன் அறிந்து கொண்டனனெனக. மேல் உச ஆங்கவியில் "சிந்தையுண்ணெடுஞ் சீற்றந்திருமுகந் தந்தளிப்ப" எனபது காண்க. தாதையில் என்று ஒருசொல்லாக எடுத்து, சிறிய தந்தையினிடத்தில் எனறலுமாம். அங்கதன தனது சிறியதந்தையைத் தந்தையாகவே பாவிப்பது தோனற, 'தாதை' எனறே கூறினர்.

'மருங்கெய்திலான' என்று பாடங்கொண்டு, லக்ஷ்மணனருகில் வந்து நெருங்காமல் [தூரத்திலிருந்தபடியே] எனறு உரைப்பாரு முளர். 'ஆண்டொழிலான வரவினனது' எனபதை 'ஆண்டொழிலானவாவினனது' எனறு படிப்பர் ஒருசாரார். (கஎ)

[இதுமுதல் ஏழுகவிகள் - குளகம்: அப்பொழுது அங்குச்சுக்கிரீவனிருந்த நிலைமையைக் கூறுகின்றர்.]

கஅ. நளனியற்றியநாயகக்கோயிலுட்
டளமலாததகைபளளியிற்றாழ்குழ
லிளமுலைசசியரேந்தடிதைவர
விளைதுயிற்குவிருநதுவிருப்புவான்.

(இ - ள்.) நளன் இயற்றிய நாயகம் கோயிலுள்ள - நளனென்னும் வானர வீரனால் நிருமிக்கப்பட்ட சிறந்த அரண்மனையினுள்ளே,—தளம் மலர் தகை பள்ளியில் - இதழ்கள் நிறைந்த மலர்களைப் பரப்பியமைக்கப்பட்ட அழகிய படுக்கையிலே,—தாழ் குழல் இள முலைச்சியர் ஏந்து அடி தைவர - தொங்குகின்ற கூந்தலையும் இளமையான தனங்களையு முடையவர்களாகிய மகளிர் சிறந்த தனது கால்களைத் தடவிப்பிடிக்க, விளை - உண்டாகின்ற, துயிற்கு - தூக்கத்திற்கு, விருந்து - தான் விருந்தினனாதலை, விரும்புவான் - விரும்புபவனும்,—(எ - று.)

நளன் - தேவசிற்பியான விசுவகர்மாவின் குமாரனாய்ப் பிறந்த வாநரன். அவன் தனது தந்தையினம்சத்திறகேற்றபடி சிற்பசாஸ்திரத்தேர்ச்சியுடையவனாய் அரண்மனை நிருமித்தமை பற்றி, 'நளனியற்றிய நாயகக்கோயில்' என்றார். பின்பு கடல் கடக்கத் திருவணைகட்டுபவனும் இவனே. நாயககோயில்-தலைமை பெற்ற இராசகிருகம் 'கோயிலுள' என்றதனால், அரண்மனையினுள்ளேயிருக்கின்ற அந்தப்புரத்திலே யென்றதாம். கோயில் உள தளம் என்று எடுத்து, அரண்மனையினகத்து உபரிகையிலே யென்று உரைத்தலுமொன்று. புதிதாக அரசாட்சியைப் பெற்று உரிய மகளிர் பலர் தனது அடிகளை வருட இனிது துயிலுந் தூக்கத்தை விருப்பத்தோடு புதிதாக உட்கொண்டு அனுபவிப்பவனென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து. தைவர: தைவா பகுதி. விருந்து - புதுமை; பண்புபெயர்: ஆகுபெயராய் விருந்தினன்மேல் நின்றது. மகளிர் தனது பாதங்களை மடியில் வைத்துக்கொண்டு வருட வென்னும்பொருளில் 'முலைச்சியரேந்தடிதைவர' என்றுருமாம். (௧அ)

௧௯ தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாங
களிலைதிகங்களித்தானகதிரப்
புள்ளிமாநெடும்பொன்வரைபுக்கதோர
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான்.

(இ - ள்.) தெள்ளியோர் உதவு - தெளிந்த அறிவுடையவரான இராமலக்குமணரால அளிக்கப்பட்ட, அ பெருஞ் செல்வம் ஆம - அந்தப் பெரிய அரசாட்சிச்செல்வமாகிய, களினால - களியைக்கொண்டதனால், அதிகம் களித்தான - மிகுதியாகக் களித்தவனும்,—கதிர புள்ளி - ஒளிகளின்தொகுதியையுடைய,மா நெடு - மிகப்பெரிய, பொன வரை - பொன்மயமான மலையில், புக்கது புகுந்துதங்குவதான, ஓர் வெள்ளி மால்வரை என்ன - பெரியதொரு வெள்ளிமலைபோல, விளங்குவான் - விளங்குபவனும்,— (எ - று.)

களித்தல் - மதிமயங்குதல். களிப்பை விளைத்தல்பற்றி, பெருஞ்செல்வத்தை 'கள' என்றார். இங்ஙனம் இச்சுக்கிரீவன செய்வதறியாது களித்தற்குக் காரணமான பெருஞ்செல்வந்தான இவன தானாகத் தனது ஆற்றலாற் பெற்றதன்று, இராமலக்குமணர் அளித்த பிச்சையாகப் பெற்றதாமென்னும் உண்மையை, 'தெள்ளியோருதவு' என்றதனால் விளக்கினர். 'செல்வமாங கள்' என்றது, செல்வத்தாலாகுஞ் செருக்கு என்றவாறும்; தகமதமென்ப,

வெண்ணிறமுள்ள கம்பீரமான வடிவத்தையுடைய சுக்கிரீவனுக்கு வெள்ளி மலையையும், பொன்மயமான கட்டிலுக்கு அல்லது அரண்மனைக்குப் பொன் மலையையும் ஒப்பாகக்கொள்க. பெருஞ்செல்வமாங் கள்ளிறைல் அதிகங்களித்தான் - உருவ்கம். பொன்வரைபுக்கதோர் வெள்ளிமால்வரை யென்ன விளங்குவான் - இல்பொருளுவமை. மா கெடு - ஒருபொருட்பன்மொழி. புள்ளி- சிறப்புமாம்.

'தெள்ளியோராதவன் பெருஞ்செல்வமாம்' என்பது பிரதிபேதம் (கக)

உ0 சிந்துவாரந்திருநறைதேக்ககில்
சந்தமாமயிற்சாயலர்தாழ்குழற்
கந்தமாமலர்க்காடுகடாவிய
மந்தமாருதம்வந்துறவைகுவான்.

(இ - ள்.) சிந்துவாரம் - சிந்துவாரமரம், திருநறை - சுகந்தக்கொடி, தேக்கு - தேக்கமரம், அகில் - அகில்மரம், சந்தம் - சந்தனமரம், மா மயில் சாயலர் தாழ் குழல் - சிறந்த மயில்போலுஞ் சாயலையுடையவரான மகளிரது தொங்குகின்ற கூந்தல், கந்தம் மா மலர் காடுகள் - (அக்கூந்தல்களிற் சூடிய) நறுமணமுள்ள சிறந்த மலர்களின் தொகுதி (என்னும் இவற்றில்), தாவிய - பரிசித்த, மந்த மாருதம் - இளங்காற்று, வந்து உற - வந்து (தன்மேல்) வீச, வைகுவான் - இனிது தங்குபவனும்,—(எ - று.)

சிந்துவாரமுதலியவற்றிற்பரிசித்து வருதலால் நறுமணங் கொண்டதான இளங்காற்றுத் தனமேல்வீச இனிதுதங்குபவ னெனக. ஸிந்துவாரம்- வடசொல்; வெண்ணொச்சியென்ப. திருநறை - நல்லமணத்தையுடையதெனப் பொருள்பட்டுச் சுகந்தமென்னுங்கொடியை யுணர்த்திறறு; அன்மொழித்தொகை. 'சிந்துவாரத்தருநறை' எனற பாடத்திற்கு, சிந்துவாரத் தரு - சிந்துவாரமரமும், நறை - சுகந்தக்கொடியும் என்க. சீவகசிந்தாமணியில் "நறையுநானமுநாறுநறும்புகை" என்றவிடத்து 'நறை - நறைக்கொடி' என்றார் நச்சினார்க்கினியரும். உத்தமசாதிமகளிர் கூந்தல் இயற்கை நறுமணமுடையதாதல்பற்றி, அதனைத் தனியே கூறினர். சிந்துவாரம் திருநறை தேக்கு அகில் சந்தம் குழல் மலர்க்காடுகள் - பன்மைவிகுதிபெற்ற அஃறிணை யும்மைத்தொகை. காடு கடாவிய என்று பிரித்துப் பொருள்கொண்டு, இக் கருத்தமைத்தலு மொன்று. மலர்க்காடு என்றதை 'தாமரைக்காடு' என்றாற் போலக் கொள்க; இனி சந்தம்மாமலர் - அழகிய நறுமணமுள்ள சிறந்தமலர்களைச்சூடிய, குழல்காடு - கூந்தற்கற்றை யென்றலு மொன்று. சிந்துவார முதற் சந்தனமீறாகவுள்ளவை - குறிஞ்சிநிலத்தன. ஈற்றடி - முற்றுமோனை.

'காடுகடாவிடு' என்பது பிரதிபேதம் (உ0)

உக. இத்தியாகின்றசெங்கிடைவாய்ச்சியா
முத்தவாண்முகைமுள்ளெயிறாறுதேன்
பித்துமாலுமபிறவும்பெருக்கலான்
மத்தவாரணமென்னமயங்கினன்,

(இ - ள்.) தித்தியாநின்ற - தித்திக்கின்ற, செம் இடை வாய்ச்சியர் - செங்கிடைபோலச் சிவந்த அதரத்தையுடையவர்களான மகளிரது, முத்தம் வாள் நகை முள் எயிறு - முத்துப்போல வெண்ணிறமான ஒள்ளிய புன்சிரிப்பைச்செய்கின்ற கூரிய பற்களினின்று, ஊறு - சுரக்கின்ற, தேன் - தேன்போலினிய இரசம், பித்தும் - பைத்தியத்தையும், மாலும் - மயக்கத்தையும், பிறவும் - மற்றும் காமம் மதம் மறதி சோர்வு துயில் முதலிய தமோகுண காரியங்களையும், பெருக்கலான் - அதிகப்படுத்துதலால், மத்தவாரணம் என்ன - மதங்கொண்ட யானைபோல, மயங்கினான் - மோகித்தவனும்,—(எ - று.)

அதரபானத்தாலாகிய களிப்பினுலென்பது, முதல் மூன்றடிகளின் தேர்ந்தபொருள். வாய்ச்சியரெயிறூறுதேன் - அதராமிருதம். தித்தியாநின்ற, ஆநின்று - நிகழ்கால இடைநிலை. தித்தியாநின்ற தேன் என இயையும். மகளிரது அதராமிருதத்தை இவன் என்றென்றைக்கும் இனிமைதருவதெனக்கொண்டு மயங்கினமை தோன்ற, முக்காலத்தினுமொத்தியல் பொருளைச் செப்புதற்கு உரிய நிகழ்காலங் கொடுத்து, 'தித்தியாநின்றதேன்' என்றார். இனி, 'தித்தியாநின்ற' என்றதை வாய்க்கு அடைமொழியாக்கினும் இழுக்காது. தித்தித்தல் - இனியதாதல். 'முத்தவாண்முகைமுள்ளெயிறு' என்ற பாடத்திற்கு - முத்தும், ஒளியுள்ள (முல்லை) அரும்பும் போன்ற கூரிய பற்களென்க. தேன் - உவமையாகுபெயர்: பொருளின்பங்களுட் பொருளினாலாகிய களிப்பு இவனைப் பரவசப் படுத்தியதைக் கீழ் ௧௯ - ஆஞ் செய்யுளிற் கூறி, இன்பத்தாலாகிய களிப்பு அப்பரவசத் தன்மையை அதிகப்படுத்துதலை இங்குக் கூறுகின்றாராதலால், 'பெருக்கலான்' என்றார்; பெருஞ்செல்வமாங் கள்ளினு லதிகங் களித்தவனு லுண்டான பித்து முதலியவற்றை வாய்ச்சிய ரெயிறூறுதேன் பெருகச் செய்த தென்க. பிற என்றதில் போகமும் அடங்கும். மத்தவாரணம் - வடமொழித்தொடர். மயங்குதல் - அறிவழிதல்.

'மதமும் பெருக்கலான்' என்பது பிரதிபேதம். (௨௧)

௨௨. மகுடகுண்டலமேமுதன்மண்டலத்
துகுநெடுஞ்சுடர்க்கற்றையுலாவலாற்
பகலவன்சுடர்பாய்பனிமால்வரை
தகமலர்ந்துபொலிந்துதயங்குவான்.

(இ - ள்.) மகுட குண்டலமே முதல் மண்டலத்து - மகுடமும் குண்டலங்களும் முதலிய சுடர்வட்டங்களினின்று, உகும் - வீசுகின்ற, நெடுஞ் சுடர் கற்றை - மிகுதியான ஒளிகளின் தொகுதி, உலாவலால் - (தனது வெண்ணிறமான உடம்பு முழுவதிலும்) பரவுதலால், பகலவன் சுடர் பாய் மால் பனி வரை தக - சூரியனது கிரணம் பரவப் பெற்ற பெரிய பனிமயமான இமயமலையை யொப்ப, மலர்ந்து பொலிந்து தயங்குவான் - மிகவும் அதிகமாக விளங்குபவனுமாய், (எ - று.)—'கிடந்தனன்' என அடுத்த கவியோடு முடியும்.

உவமையணி. இரத்தினகசிதமான கிரீடம் குண்டலம் முதலிய ஆபரணங்களைச் சூரியமண்டலம் சந்திரமண்டலம் போன்ற ஒளிமண்டலங்களாகக் கற்பித்து, 'மகுடகுண்டலமே முதல் மண்டலம்' என்றார். பகலவன் - தனது ஒளியினால் பகற்பொழுதைச் செய்பவன். பனிவரை - ஹிமகிரி. தக - உவம வாசகம். மலர்ந்து பொலிந்து தயங்குவான் - ஒருபொருட் பன்மொழிகள்.

'மகுடகுண்டலமேய் முகமண்டலத்து,' 'மகரகுண்டலமேய் முகமண்டலத்து' என்பன பிரதிபேதம். (உஉ)

[அங்கதன் சுக்கிரீவனை நோக்கிச் சொல்லத்தொடங்குதல்.]

உ௩. கிடந்தனன்கிடந்தானைக்கிடைத்திரு
தடங்கைகூப்பினன்றாரைமுன்னாட்டந்த
மடங்கல்வீரன்மாற்றம்விளம்புவான்
றொடங்கினனவனைத்துயினீக்குவான்.

(இ - ள்.) கிடந்தனன் - (சுக்கிரீவன்) படுத்திருந்தான்: கிடந்தானை - (அங்ஙனம்) படுத்திருந்தவனான அவனை, முன் நாள் தாரை தந்த மடங்கல் வீரன் - முன்னாளில் தாரைபெற்ற ஆண்சிங்கம் போன்ற வீரனான அங்கதன், கிடைத்து - சமீபித்து, இரு தட கை கூப்பினன் - தனது பெரியகைகளிரண்டையுங் குவித்து அஞ்சலிசெய்தவண்ணமாய், அவனை துயில் நீக்குவான் - அச்சுக்கிரீவனைத் தூக்கத்தினின்று எழுப்புமவனாய், நல் மாற்றம் விளம்புவான் தொடங்கினான் - இதமான வார்த்தையைச் சொல்பவனானான்; (எ - று) —அதனை, அடுத்த செய்யுளிற் காண்க.

கிடைத்து - சந்தித்து. தடங்கை - உரிச்சொற்புணர்ச்சி. 'இருதடங்கை கூப்பினன' என்றதனால், அங்கதனது பித்ருபக்தி விளங்கும். முன்னாள் - பூர்வகாலத்தில். மடங்கல் - பிடரிமயிர் மடங்குதலுடைய தெனக் காரணப் பொருள்படும். 'அம்மாற்றம்' என்ற பாடத்திற்கு - அந்தச்செய்தியை [இலக்குமணன்வந்த செய்தியை]யென்று பொருளாம். அவனைத் துயில்நீக்குவான் - அவனைத் துயிலை யொழிப்பான் என இரண்டுசெயப்படுபொருள் வந்தவினை.

(கஅ) கோயிலுள், பள்ளியில், விரும்புவானும், (க௯) களித்தானும்... விளங்குவானும், (உ0) வைகுவானும், (உக) மயங்கினனும், (உஉ) தயங்குவானுமாய், (உ௩) (சுக்கிரீவன) கிடந்தனன் என்று குளகச்செய்யுள்கட்கு முடிபு காண்க. இனி, (கஅ) கோயிலுள், (க௯) கதிர்ப்புள்ளி.........விளங்குவானும், (உஉ) தயங்குவானுமாகிய சுக்கிரீவன், (க௯) தெள்ளியோர்...... களித்தானாகி, (கஅ) தாழ்குழல்.........விரும்புவானாய், தளமலர்த்தகைப் பள்ளியில், (உ0) வைகுவானாய், (உக) மயங்கினான் [மயங்கி], (உஉ) கிடந்தனன் என மாற்றி அந்வயித்துப பொருளமைத்தலும் ஏற்கும். 'கிடந்தானை' என்றது, தொடர்ச்சிதோன்றக் கூறிய அநுவாதம். (உ௩)

[அங்கதன் வார்த்தை]

உச. எந்தைகேளவ்விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ்சீற்றந்திருமுகந்
தந்தளிப்பத்தடுப்பரும்வேகத்தன்
வந்தனன்னுன்மனக்கருத்தியாதென்ருன்.

(இ - ள்.) 'எந்தை - எனது ஐயனே! கேள் - (யான்சொல்வதைக்)கேட்டருள்வாயாக: அ இராமற்கு இளையவன் - அந்த இராமபிரானுக்குத் தம்பியான இலக்குமணன், சிந்தையுள் நெடுஞ் சீற்றம் திருமுகம் தந்து அளிப்ப- மனத்தினுள்ளே நிகழ்ந்த பெருங்கோபத்தைத் தனது முகம் காட்டியருள, தடுப்பு அரும் வேகத்தன் வந்தனன் - (எவராலும்) தடுக்கவொண்ணாத வேகத்தையுடையவனாய் இங்கு வந்து சேர்ந்தான்; உன்மனம் கருத்து யாது - (இவ்விஷயத்தில்) உனது திருவுள்ளக்கருத்து யாது?'என்ருன் - என்று (சுக்கிரீவனை நோக்கி அங்கதன்) கூறினன்; (எ - று.)

எந்தை - இயல்பாகிய அண்மைவிளி. அகரச் சுட்டு, ருசியமூககிரியிலிருந்தவனென்பதைக் காட்டும். 'இராமற்கிளையவன்' என்றது, இயல்பிற் சாந்த குணமுடையவனென்றற்கு. மனத்தி லடங்கிய கோபத்தைப் பிறர் உணர்ந்து அபராதக்ஷாமணஞ் செய்து கொண்டு [மன்னிப்பு வேண்டி] உய்ந்திடுமாறு அச்சினத்தை முகம் முன் நின்று காட்டுதல் பேருபகாரமாமென்பது தோன்ற, 'சிந்தையுள் நெடுஞ் சீற்றம் திருமுகம் தந்தளிப்ப' எனலாயிற்று. தந்து அளிப்ப - காட்டிக்கொடுக்க. திருமுகம் என்றதில், திரு - மேன்மை விளக்கும் அடைமொழி. தடுப்பரும் - தடுத்தற்கு அரிய; அருமையில் ஈற்று ஐகாரம் கெட்டது. வந்தனன்னுன், ன்-விரித்தல் விகாரம். (உச)

[அச்சொல்லைச் சுக்கிரீவன் சிறிதும் உணராமை.]

உரு. இனையமாற்றமிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ்செல்வநெருக்கவு
நனைநறுந்துளிநஞ்சுமயக்கவுந்
தனையுணர்ந்திலன்மெல்லணைதங்கினன்.

(இ - ள்.) நெடுஞ் செல்வம் நெருக்கவும் - அரசாட்சிப் பெருஞ் செல்வம் வலியப் பரவசப்படுத்தியதனுலும், நறு நனை துளி நஞ்சு மயக்கவும்-மணமுள்ள கள்ளின் தாரையாகிய விஷம் மயக்கந்தந்ததனுலும், தனை உணர்ந்திலன் - தன்னையறியாதவனுய் [மெய்ம்மறந்தவனுய்],மெல் அணை தங்கினன்- மெத்தென்ற படுக்கையில் தங்கியவனுன அச்சுக்கிரீவன், இனைய மாற்றம் இசைத்தனன் என்பது ஓர் நினைவு இலான் - இந்தவார்த்தையை (அங்கதன்) சொன்னனென்னும் உணர்ச்சி யொன்றில்லாமலே கிடந்தான்; (எ - று.)

மூன்ருமடி - உருவகம். தன்னை யுண்டவரை அறிவிலராக்குதல் பற்றி கள் 'நஞ்சு' எனப்பட்டது; "எஞ்ஞான்றும், நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என்ருர் திருவள்ளுவனுரும். தனை - தொகுத்தல். (உரு)

[பின்பு அங்கதன் அனுமனிடஞ் செல்லுதல்.]

உகூ. ஆதலோடுமரசிளங்கோளரி
யாதுமுன்னின் றியற்றுவதின்மையாற்
கோதில்சிந்தையனுமனைக்கூவுவான்
போதன்மேயினன்போதகமேயனன்.

(இ - ள்.) ஆதலோடும் - இங்ஙனம் ஆய்விட்டவுடனே, போதகமே அனன் அரசு இளங் கோள் அரி - யானைக்குட்டி போன்றவனும் இளமையான வலிய ஆண்சிங்கம் போன்றவனுமான இளவரசனாகிய அவ்வங்கதன்' முன் நின்று இயற்றுவது யாதும் இன்மையால் - அச்சுக்கிரீவனெதிரில் நின்று தான் செய்யத்தக்கது எதுவு மில்லாததனால், கோது இல் சிந்தை அனுமனை கூவுவான் போதல் மேயினன் - குற்றமில்லாத மனத்தையுடைய அனுமானை அழைத்தற்காக (அவனிடஞ்) செல்லலானான்; (எ - று)

போதல்மேயினன் - செல்லுதலைப்பொருந்தினான்: சென்றானென்ற படி. பராக்கிரமம், துணிவு, முன்னும்பின்னும் நோக்குதல் என்னும் இவற்றாற் சிங்கமும், நடை வலிமை காம்பீரியங்களால் யானையும் அங்கதனுக்கு உவமையாம். மத்திமதீபமாக, இளமையை 'அரசு' என்பதனோடுங் கூட்டுக. கூவுவான் - எச்சம். மேயினன்=மேவினன்; ய் - எழுத்துப்பேறு. போதகம் - வடசொல்; இது, பத்துப்பிராயத்து யானைக்கன்றை யுணர்த்தும். சமயோசிதமாகச் செய்ய வேண்டுவதை ஆலோசிக்குந் திறத்தில் அனுமன் சிறத்தலால், அவனிடம் செல்லலாயின னென்க.

'ஆதலாலவ்வரசிளங்கோளரி', 'யாதுமுன்னியியற்றுவதின்மையால்' 'யாதுமுன்னன் றியற்றுவதின் றெனு', 'கூவவே போதமேயினன்', 'போதகமேயினன்' என்பன பிரதிபேதம். (உக)

இதன்பின்

சென்றுமாருதிதன்னிடஞ்சேர்த்தவ
ணின்றதன்மைகள்யாவுநிகழ்த்தலும்
வென்றிவீரன்வியப்பொடுமேல்வினை
யொன்றுவானவன்றன்னையுசாவினன்.

என ஒருசெய்யுள் சில ஏட்டுப்பிரதிகளிற் காணப்படுகின்றது.

[அனுமனை அழைத்துக்கொண்டு அங்கதன் தாரையினிடஞ் செல்லுதல்.]

உஎ. மந்திரத்தனிமாருதிதன்னொடும்
வெந்திறற்படைவீரர்வீராய்வர
வந்தரத்தின்வந்தனைதன்கோயிலை
யிந்திரற்குமகன்மகனெய்தினன்.

(இ - ள்.) இந்திரற்கு மகன் மகன் - இந்திரனுடையகுமாரனான வாலியின் மகனாகிய அங்கதன்,—மந்திரம் தனி மாருதி தன்னொடும்-(தக்க) ஆலோசனையைக்கூறிய ஒப்பற்ற வாயுகுமாரனான அநுமானுடன், வெம் திறல்

படை வீரர் விராய் வர - உக்கிரமான வலிமையையுடைய சேனை வீரர்கள் திரண்டு தன்னுடன் வர, அந்தரத்தின் வந்து - (சுக்கிரீவனரண்மனையி னின்று) வெளியே வந்து, அன்னைதன் கோயிலை எய்தினன் - தனது தாயான தாரையின் சிறந்த மாளிகையை அடைந்தான்; (எ - று.)

'மந்திரத்தனிமாருதி தன்னொடும் அன்னைதன் கோயிலை யெய்தினன்' என்ற சொற்போக்கினால், இப்பொழுது இளையபெருமான் கொண்டுள்ள கோபத்தை ஆற்றத்தக்கவள் தாரையே யென்று அனுமன் ஆலோசனைகூறின னென அறியலாகும். வெந்திறற்படைவீரர்—அநுமான் படைத்தலைவரில் ஒருவனாதலால், அவனது ஆட்சியி லடங்கியவர் இவரென்க. விராய், விராவு - பகுதி. அந்தரம் - வடசொல் இந்திரற்கு மகன்மகன - இந்திரனது பௌத்திரனெனச் சிறப்பை யுணர்த்தும். அந்தரத்தின் வந்து என்பதற்கு - துன்பத்தோடு வந்து என்றும், ஆகாயமார்க்கமாகத் தாவிவந்து என்றும், அம் தரத்தின் வந்து என்று பிரித்து அழகிய தகுதியோடு வந்து என்றும் உரைப்பாரு முளர். (உஎ)

[இப்பொழுது என்செய்யலாமென்று அங்கதன் முதலியோர் வினவ, தாரை அவர்களைப் பழித்தல்.]

உஅ. எய்தி மேற்செயத்தக்கதென்னென்றலுஞ்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்தி லன்னவை நீக்கவு நோக்குதி
ருய்திர் போலுமுதவிகொன்றீரெனு.

இதுமுதல் ஆறுகவிகள் - குளகம்.

(இ - ள்.) எய்தி - (அநுமான முதலானவர்களுடன் அங்கதன் தாரையை) அடைந்து, (நடந்த செயல்களைச் சொல்லி), மேல் செய தக்கது என என்றலும் - 'இனி (நாம) செய்யத்தகக செயல் யாது?' என்று (அவளை) வினவியவளவில்,—(அதுகேட்ட அவள் அவவாநரர்களை நோககி),—செய்தற்கு அரு - செய்யத்தகாத, நெடுந் தீயன - பெரிய தீச்செயல்களை, நொய்தில் செய்திர - எளிதிற் செய்வீர்கள்; அனனவை - அச்செயல்களாலாகுங் கேடுகளை, (நொய்தில) நீக்கவும - எளிதில நீக்கிக்கொள்ளவும், நோக்குதிர் - வழிபாாப்பீாகள்; உதவி கொனறீா - செய்ந்நன்றி மறந்தவர்களான நீங்கள், உய்திர்போலும - தப்பிவாழ்வீர் போலும்!' எனு - எனறுசொல்லி, (எ-று.)— 'மீட்டும் ஒனறு வினம்புகின்றாள்' என அடுதத கவியோடு தொடரும்.

நெடுந் தீயன - மிகக்கொடியவை. மததிமதீபநியாயத்தால், 'நொய்தில்' என்றது முனனும் பின்னும கூட்டப்பட்டது நோக்குதல் - உபாயந்தேடு தல், ஆலோசிததல். "செய்திகொன்றார்க்கு உய்தியில்", "உய்வில்லை செய்ந் நன்றிகொனறமகற்கு" என்பது நீதியாதலால், 'உய்திர்போலும்' என்றாள். 'உய்திர்போலும்' எனறது, உய்யமாட்டீரென்றவாறும். இம்மையில் ஒருகால் தப்பிப்பிழைத்தாலும மறுமையில் இப்பாவததினினறு நீஙகும்வழி யில்லையே யென்பது போதரும். ஆதியிற சுக்கிரீவன் ஆலோசனையின்றி வாலிபக்கல்

வளிதில் தவறுசெய்து உடனே அக்குற்றத்தை நீக்கிக்கொள்ள முயன்று அங் ஙனமாகாமற் பெருந்தீங்கிற் குள்ளாகிப் பிறகு நெடுநாளளவும் அத்தீங் கினின்று தப்ப வழிதேடி வந்ததையும், பிறகு வாலி தானாகவும் அறியாமற் சொல்லவுங்கேளாமற் சுக்கிரீவனோடு போர்க்கு எழுந்து தப்புமாறின்றி இராமபிரானால் மாண்டதையும் மனத்திற்கொண்டு தாரை 'உங்கட்கு இவை இயல்பாயின' என்று வெறுத்து உரைப்பாள், இங்ஙனங் கூறினாள். இனி, செய்திர் என்பதற்கு - செய்துவிட்டீர்களென்றும், நோக்குதிர் எனபதற்கு - வகைபார்க்கின்றீர்க ளென்றும் பொருள் கொள்ளலுமாம்; அப்பொழுது, செய்திர் என்றதில், 'த்' - இறந்தகால விடைநிலை.

'எய்தியென்செயத் தக்கதிங்கென்றலும்,' 'நொய்தினின்னலை நீக்கவு நோக்கலிர்' என்பன பிரதிபேதம். (௨௰)

[இதுமுதல் நான்குகவிகளில் மற்றும் தாரை சொன்னவற்றைக் கூறுகின்றார்.]

௨௧. மீட்டுமொன்றுவிளம்புகின்றாள்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவன்கூறிய
நாட்டிறம்பினுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிலீரினிக்காண்டிர்கிடைத்திரால்.

(இ - ள்.) மீட்டும் ஒன்று விளம்புகின்றாள் - மற்றும் ஒருவார்த்தை சொல்லுகின்றாள்:—'படை கூட்டும் என்று உமை கொற்றவன் கூறிய நாள் திறம்பின் - சேனைகளைச் சேர்த்துக்கொண்டு வருவீர்களென்று உங்களை நோக்கி வெற்றியுள்ளவனான ஸ்ரீராமன் சொல்லிக்குறிப்பிட்ட தவணை நாள் தவறினால், உம் நாள் திறம்பும் - உங்கள்வாழ்நாள் தவறிவிடும்,' என - என்று (அடிக்கடி நான்) சொல்லிவரவும், கேட்டிலீர் - அதனை ஏற்றுக்கொண்டு அதற்குத் தக்கபடி நடவாமற் போய்விட்டீர்கள் ; இனி காண்டிர் - இனி (அதன்பயனை அனுபவத்திற்) பார்ப்பீர்கள்; கிடைத்திர் - (குற்றத்தில்) அகப் பட்டுக் கொண்டீர்கள்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கொற்றவன் - ஜயசாலி. அனைவரையும் வென்ற வாலியையும் அழித் தமைபற்றி, தாரை ஸ்ரீராமனை இப்பெயராற் குறித்தாள். கூட்டும் - 'உம்' ஈற்று ஏவற்பன்மை. உம்நாள் திறம்பும் - நீங்கள் இராமனாற் கொல்லப்படு வீர்க ளென்றபடி. நும் என்றும் பிரிக்கலாம். திறம்பும்மென - விரித்தல், காண்டிர், ட் - எழுத்துப்பேறு.

இனி, படைகூட்டுங்களென்று 'உங்களைக் கொற்றவன் கூறிய நாளில் (இத்தவணைநாள்) தவறினால் உங்கள்வாழ்நாள் தவறும்என்று அப்பெருமான் தானே சொல்லவும் அதன்படி நடவாது விட்டீர்களென்று உரைப்பாரு முளர்; அது, கீழ் ௬ - ஆஞ்செய்யுளுக்கு வேறொருபொருள் கொள்ளுதற்கு ஏற்கு மாயினும், முன் அரசியற்படலத்து ௬௬ - ஆஞ் செய்யுளோடு மாறு கொள்ளுதலாற் சிறவாது. (௨௧)

௬௦. வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினோர்க்கெலாம்.

(இ - ள்.) வாலி ஆர் உயிர் - வாலியினது அருமையான உயிரை, காலனும் வாங்க - யமனும் கவர்ந்திடும்படி, வில் கோலி - (தமது) வில்லைவளைத்து [அம்புதொடுத்து], வாலிய செல்வம் கொடுத்தவர்போலும் - ஒளியுள்ள அரசாட்சிச் செல்வத்தை (உங்கட்கு)க் கொடுத்தருளியவரான இராமபிரானோ, உம் புறத்து இருப்பார் - உங்களால் உபேக்ஷிக்கப்படுபவர்? இது - (பேருதவி செய்த பெருமானை) இப்படி உபேக்ஷிப்பது, உங்கள் தன்மையினோர்க்கு எலாம் சாலும் - உங்கட்கு அடுக்கும்! [சிறிதும் அடாது என்றபடி]; (எ - று.)— 'ஆல்' இரண்டும் - அசை; உரையசை யெனனும் வாக்கியாலங்காரமுமாம்.

'சாலும்' என்றது, எதிர்மறையிலக்கணையால் சாலாதென்னும் பொருளைத் தந்தது. காகுஸ்வரமென்னும் ஓசைவேறுபாட்டினாலும், சாலும் என்பதற்குச் சாலாதென்று பொருளமைக்கலாம். புறத்து இருத்தல் - புறக்கணிக்கப் பட்டிருத்தல். பேருதவிசெய்தவரும் பேராற்றலுடையவருமானவரை எவ்வளவு மேலாகக்கொண்டு கௌரவிக்கவேண்டும்! அவரிடத்திலும் அபசாரப்படலாமோ? என்றுளளாம். இனி, உங்கள தன்மையினோர்க்கெலாம இது சாலும் என்பதற்கு - இவ்வாறு புறக்கணித்த உங்களுக்கெல்லாம் இப்படி இலக்குமணன் கோபித்துவருவது தகுவதே என்று உரைப்பினுமாம். காலனும்என்ற உம்மை வாலியால் எளிதில்வெல்லப்பட்டவனான இராவணனால் திக்விஜய காலத்தில் வென்று அடக்கப்பட்டவனான யமனுமென அவனது இழிவை விளக்கும் இகழ்ச்சிக் குறிப்பாம். வாலிய என்ற குறிப்புப்பெயரெச்சத்தில், இ - சாரியை. வாலிய செல்வம் என்றது, வாலியினுடையதான செல்வமென்ற பொருளும் தோன்றி நின்றது. கொடுத்தவர் - உயர்வுப்பன்மை.

உம்புறத்து இருப்பாரபோலும் என்பதற்கு-உங்கள் சமயம்பார்த்து உங்கள்கடைவாயிலிற் காத்திருப்பார்போலு மென்று உரைத்தலுமாம்.

'போலுமானும்', 'சாலுமானுங்கள' என்ற பாடத்திற்கு—நும், நுங்கள் என்று பிரிக்க. 'சாலுமாலுந்தகைமையினோர்க்கெலாம்' என்பது பிரதிபேதம். (௬௦)

௬௧. தேவிநீங்கவதேவரிற்சீரிய
னாவிநீங்கினன்போலயர்வானது
பாவியாதுபருகுதிர்போலுநுங்
காவிநாண்மலர்க்கண்ணியர்காதனீர்.

(இ - ள்.) தேவி நீங்க - தன்மனைவியான சீதை பிரிந்திருக்க, (அத்துன்பத்தினால்), அ தேவரின் சீரியன் - தேவர்களைக் காட்டிலுஞ் சிறப்புடையனான அவ்விராமபிரான், ஆவி நீங்கினன் போல் அயர்வான் - உயிர் நீங்கியவன் போல் மூர்ச்சையடைவான்; அது பாவியாது - அதனை (நீங்கள்) மனத்

திற் கொள்ளாமல், நும் காவி நாள் மலர் கண்ணியர் காதல் நீர் - உங்கட்கு உரிய மனைவியரான அன்றலர்ந்த நீலோற்பலமலர்போலுங் கண்களையுடையவர்களாகிய மகளிரது சோக்கை யினபமாகிய நீரை, பருகுதிர் போலும் - குடித்து மகிழ்கின்றீர்போலும்; (எ - று)

இது சிறிதும்தகாதன்றே என்பதாம். காதல் நீர் - போகரசம். இதனைப் பருகுவதாகப் பொருப்பட வாநரர்களை நோக்கிக் கூறினனாயினும், நித்தியப்பிரமசாரியான அநுமான் மாத்திரம் இதற்கு விலக்காம். எவராலும் வெல்ல வொண்ணாத வாலியைக் கொன்ற பேராற்றல் பற்றியும், உத்தம விலக்கணங்கள் நிரம்பியிருத்தல் பற்றியும், இராமபிரானை 'தேவரிற்சீரியன்' என்றான். 'காதல்நீர் பருகுதிர்' என்றது, உருவகம். பருகுதிர் - அனுபவிக்கின்றீர என்றபடி பிராணபதமான பிராட்டி நீங்கவே ஆவிநீங்கினன் போல அயர்வானுயின னென்க.

'சீரியோன்', 'ஆவிநீத்தனனபோல்' எனபன பிரதிபேதம். (௩க)

௩௨. திறம்பினீர்மெய்சிதைத்திருதவியை
நிறமபொலீருங்கடீவினை நேர்ந்ததான்
மறஞ்செய்வானுறின்மாளுதிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெனெனகின்றபோதின்வாய்.

(இ - ள்.) மெய் திறம்பினீர் - சத்தியந் தவறினீர்கள்; உதவியை சிதைததிர் - செய்த நன்றியை மறந்தீர்கள்; உங்கள் தீவினை நேர்ந்ததால் - நீஙகள செய்துள்ள பாவம் பயனளிக்கவந்ததனுல், நிறம பொலீர - (இப்படி) குணங் கெட்டவரானீர்கள்; மறம் செய்வான உறின மாளுதிர் - (அந்த மகாவீரனை எதிர்த்துப்) போர்செய்யத் தொடங்கினுல் (அவரால்) இறப்பீர்கள்; இனி புறம் செய்து ஆவது என - இனிமேற செய்யததக்கது யாதுளது? எனகின்ற போதின்வாய் - என்று (அங்கதன் முதலானவர்களை நோக்கித் தாரை) கண்டித்துப்பேசுகின்ற சமயத்தில், (எ - று.)—'குரககினம் வாயிலைத தாளுறுத் தித் தடவரைதந்து அடுக்கின' என அடுத்தகவியோடு தொடர்ந்து முடியும். மற்று - வினைமாற்று.

பொலீர் - பொல்லாதீர. 'ஆல்' என்பதை அசையாக்கி, நிறம்பொலீர உங்கள் தீவினை நேர்ந்தது என்றவற்றைத் தனிவாக்கியஙக ளாக்குதலுமாம். 'மறம் செய்வானஉறின் மாளுதிர்' என்பதறகு - அப்பெருமான உங்களோடு, பொர்செய்யவந்தால் இறந்தொழிவீாக ளென்றும பொருள் கொள்ளலாம' நிறம்பொலீர் - குணங்கெட்டவர்களே! என விளியுமாம.

'திறம்பிநீதிசிதைததிருதவியை,' 'நிறம்பொலீஇா' எனபன பிரதிபேதம்.

[அப்பொழுது பலகுரங்குகள் கிட்கிந்தாபுரியின் வாயிற்கதவைச் சாத்தி உள்ளே தாளிட்டுப் பெருங்கற்களை யடுக்கிவைத்தல்.]

௩௩. கோளுறுத்தற்கரியகுரக்கின
நீளெழுத்தொடருநநெடுவாயிலைத்
தாளுறுததிததடவரை தநதன
மூளுறுததியடுக்கினமொயமபினுல்.

(இ - ள்.) கோள் உறுத்தற்கு அரிய குரங்கு இனம் - தடை செய்தற்கு அரிய [மிக்க வலிமையையுடைய] குரங்குகளின் கூட்டங்கள்,—நீள் எழு தொடரும் நெடு வாயிலை - நீண்ட உழலை மரம் போடுதற்கு உரிய பெரிய நகரத்து வாயிற்கதவை, தாள் உறுத்தி - சார்த்தி உள்ளே தாளிட்டு, மொய்ம் பினால் - வலிமையினால், தட வரை தந்தன மூளுறுத்தி அடுக்கின - பெரிய பாறைகளைக்கொணர்ந்து சேர்த்து ஒன்றன்மேலொன்றாக (அக்கதவைச்சார உள்ளே) அடுக்கி வைத்தன; (எ - று.)

இதுசெய்தது, இலக்குமணனைக் கிஷ்கிந்தையினுட் பிரவேசிக்கவொட் டாதபடி செய்யும் நோக்கத்தால், கதவை எளிதில் திறக்க வொண்ணாதபடி தடவரைதந்து மூளுறுத்தியடுக்கின. 'நீளெழுத்தொடரும்' என்ற அடை மொழிகொண்டு, பெரிய உழலைமரத்தைக் குறுக்கே செலுத்தின வென்பது கொள்ளலாம். ஆகவே, வாயிற்கதவைச்சாத்தி உள்ளே தாளிடுதல், உழலை பாய்ச்சுதல், பெரும்பாறைகளை அடுக்கிவைத்தல் என மூன்றுவகைப் பாது காப்புச்செய்து கொண்டனவாம். கோள் உறுத்தற்கு அரிய-இடையூறுசெய் வித்தற்குஅரிய; இனி, இதற்கு-பழிகூறுதற்கு அரியவென்றும் உரைக்கலாம். கோள் - பழிமொழி, உறுத்தல் சேர்த்தல். தொடருந்நெடு-விரித்தல். வாயில்- கதவுக்கு ஆகுபெயர். வரை - கல்லுக்கு இலக்கணை. 'மூளுறுத்தி' என்பதில், உறு - துணைவினை. "கோளுறுத்தற் குரிய' என்ற பாடத்திற்கு - பிறர்க்கு இடையூறு செய்வித்தற்கு உரிய என்று பொருளாம். 'நீளெழுத் தொடரும் நெடுவாயில்' என்பதற்கு-நீண்ட இரும்புகதூண்களை நாட்டப்பெற்ற நெடிய வாயிலின் கதவென்பாருமுளர்; 'தூண்' என்றது, வாயிற்கால்களைபாம். (௩௨)

[மற்றும் குரங்குகள் மரங்களையும் பாறைகளையும் எடுத்துக்கொண்டு போர்க்குச் சித்தமாதல்.]

௩௪. சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்ததுவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புற
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன.

(இ - ள்.) கடை சிக்குற சேமித்த செய்கைய - (இவ்வாறு) நகரவாயிலை உறுதியாகப் பத்திரப்படுத்திக்கொண்ட செய்கையையுடையனவான வாந ரங்கள்,—புக்கு உறுக்கி புடைத்தும் என - (ஒருகால் இவ்வாயிற் கதவைக் கடந்து இலக்குமணன்உள்ளேவந்தால்) எதிரேசென்று (அவனை) அச்சுறுத்தி அடிப்போம் என்று எண்ணி, தொக்குறுத்த மரத்த - முறித்து எடுத்துக் கொண்ட மரங்களையுடையனவும், வெற்பும் இறுத்தன - பெருங்கற்களையும், பெயர்த்து எடுத்துக்கொண்டனவுமாய், துவன்றின - நெருங்கி [தம்மில்திர ண்டு], புறம் மிக்கு இறுத்தன - மதிற்பக்கத்தில் மிகுதியாய்க் கூடிநின்றன.

கடை - நகர்ப்புறவாயில், சேமித்தல் - காவல் செய்துவைத்தல். செய் கைய - பெயர்; எழுவாய். தொக்குறுத்தல் - தொகுத்தல், அளவு படுத்தல்.

நட்டுதல். உறுக்கிப்புடைத்தல் - உக்கிரமாக அடித்தலுமாம். புடைத்தும் - தன்மைப்பன்மை. புறம் - மதில், பக்கம். இறுத்தல் - சேர்தல், தங்குதல், வெற்பு - பெரும்பாறைக்கு, இலக்கணை. உம் - இறந்ததுதழுவிய எச்சம். இறுத்தல் - பெயர்த்தல். (௩௪)

[இலக்குமணன் சினந்து அக்கதவை உதைத்தல்.]

௩௫. காக்கவோகருத்தென்றுகதத்தினாற்
பூக்கமூரற்புரவலர்புங்கவன்
றாக்கணங்குறைதாமரைத்தாளினா
னூக்கினானக்கதவினைநொய்தினின்.

(இ - ள்.) (வாநரங்கள் நகரவாயிற்கதவையடைத்தமைகண்டு), புரவலர் புங்கவன் - அரசரிற் சிறந்தவனான இலக்குமணன், காக்கவோ கருதது என்று - '(நம்மிடத்திலிருந்து தங்களைப்) பாதுகாத்துக்கொள்ளவோ (இவர்கள்) கருதியது' என்று எண்ணி, கதத்தினால் மூரல் பூக்க - கோபத்தாற் புன்சிரிப்பு உண்டாக,—தாக்கணங்கு உறை தாமரை தாளினால் - இலக்குமி வசிக்கின்ற செந்தாமரை மலர்போன்ற தனது திருவடியினால், அ கதவினை நொய்தினின் நூக்கினான் - அவ்வாயிற்கதவை அலட்சியமாய்த் தள்ளினான்.

காக்கவோ கருத்து - (உள்ளேவாராதபடி நம்மைத்) தடுக்கவோ இவர்கள் இவ்வாறு ஆலோசித்தது என்றலுமாம். புரவலர் புங்கவன் - இராஜசிரேஷ்டன். புரவலர் - காத்தலில்வல்லவர். புங்கவன் - காளைபோன்றவன். வடசொல்; புங்கவம் - ஆண்பசு, எருது; இது, சிறப்பைக் குறிக்கும். தன்னையடுத்தவரைக் காக்குந் தன்மையோடு தன்னோடுமாறுபடுபவர் தம்மைத் தாம் பாதுகாத்துக் கொள்ளமாட்டாதபடி செய்யும் வன்மையும் மிக்கவன் இலக்குமணனென்பது விளங்க, 'காக்கவோ கருதமென்று புரவலர் புங்கவன் நொய்தினின் நூக்கினான்' என்றார். எல்லாராலும் விரும்பப்படுபவளான இலக்குமியும் தான் விரும்பி வசிக்குமிடமாமெனத் தாமரைமலரின் சிறப்பை யுணர்த்தியவாறும் இளையபெருமாளுடைய திருவடியின் அழகு முதலிய மேன்மைகட்குச் சாதாரணமான தாமரைமலர் ஒப்பாகமாட்டாமையால், திருமகளுறையுந் தெய்வத்தாமரைமலரை யெடுத்து உவமைகூறினர். எம்பெருமானுக்கு எப்பொழுதும் பணிவிடைசெய்தலாகிய கைங்கரியலக்ஷ்மியையுடையவரான இளையபெருமாளுடைய திருவடித்தாமரைகளை யடைந்தவர்கட்கு எல்லாச் செல்வங்களும் கைகூடுதல்பற்றி, 'தாக்கணங்குறை' என்றதைத் தாளுக்கும் அடைமொழியாக்கலாம். அணங்கு - மகளிரிற் சிறந்தவள்; பெண் தெய்வம். தாக்கு அணங்கு - நல்வினையுடையவரனைவரிடத்திலும் சென்றுசேருந் திருமகள். 'தாமரைத்தாளினால் கத வினை நொய்தினின நூக்கினான' என்றதில், தனது திருவடித்தாமரையினாற் கடுமையான தீவினையை எளிதில் ஒழித்தானென ஒருபொருள் தொனித்தல் கருதத்தக்கது; (கதம் - உக்கிரம், வினை-கருமம்:) அடுத்த செய்யுளில் வரும் உவமையை நோக்கி இத்தொனிப் பொருளின் பொருத்த முணர்க.

கொய்தினின், 'இன்' இரண்டும் - சாரியை. 'கொம்தினில்' என்பது பிரதிபேதம். (ரு௫)

[அந்தீ நுவடிபட்டவளவில் அக்கதவு முதலியன பஞ்சாய்ப்பறத்தல்.]

ரு௬. காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேவும்வாயிலடுக்கியவெற்பொடுந்
தேவுசேவடிதீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால்.

(இ - ள்.) கதவும் - அவ்வாயிற்கதவும், கடி மேவும் வாயிலில் அடுக்கிய வெற்பொடும் - பாதுகாப்பமைந்த வாயிலில் (வாநரங்கள்) அடுக்கிவைத்திருந்த பெரும்பாறைகளும், காவல் மா மதிலும் - (அவ்வாயிலைச்சார்ந்த) பாதுகாப்பாகவுள்ள பெரியமதிலும்,—தேவு சே அடி தீண்டலும் - தெய்வத்தன்மையுள்ள சிவந்த (இலக்குமணனுடைய) திருவடி பட்டமாத்திரத்தில், தீண்டு அரும் பாவம் ஆம் என பற்று அழிந்து இற்ற - தொடவும் ஒண்ணாத [மிகக் கொடிய அல்லது மிகவும் இழிவான] தீவினைகள்போலத் தொடர்ச்சியின்றி முழுவதும் அழிந்தொழிந்தன; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இளையபெருமாளுடைய திருவடி பட்டமாத்திரத்தில் வாயிற்கதவுமுதலியன பற்றறத்தொலைந்து போனதற்கு, அப்பெருமானுடைய திருவடியின் சம்பந்தத்தால் அடியார்க்குக் கொடியவினைப்பந்தங்கள் யாவும் உடனே பற்றற ஒழிதலை உவமைகூறினர் உவமையணி. தேவு - இலக்குமணப்பெருமானுடைய, சேவடி என்றும் பொருள்கொள்ளலாம்: 'தேவ' என்பதும் தெய்வத்திற்கு ஒருபெயர்: தேவசப்தபவம். 'தீண்டலும்' என்ற உம்ஈற்று இறந்தகாலவினையெச்சம், பிறபொருளோடு விரைவையுங் காட்டும். அத்திருவடிப் பரிசம் சேர்ந்தமாத்திரத்தில் விளக்கின்முன் இருள்போலவும், காட்டுத்தீமுனைப் பஞ்சுத்துய்போலவும் கொடியகருமங்களின் தொகுதி முழுவதும் தொடர்பற ஒழிதல் விளங்க, 'தீண்டலும்' என்றார். தீண்டு அரும்பாவம் என்பதற்கு-உயிர்களைப்பற்றி நின்ற அழித்தற்கு அரிய பாவங்களெனவும் பதப்பொருளாகலாம். பரமாத்மாவும் ஜீவாத்மாவும ஒற்றுமைப்படுதற்கு இடையீடாய்நிற்கும் மூவகைததீவினைகளை - இளையபெருமாளும் சுக்கிரீவனும் சந்தித்தற்குத் தடையாகின்ற கதவுமுதலிய மூன்று பொருள்கட்கும் உவமைகூறிய நய முணாக. பாதம் சிவந்திருத்தல் - உத்தமவிலக்கணம்.

காவல் - அரண். கடி - உரிச்சொல். தீண்டலும் தீண்டரும் என்றவிடத்துத் தொடைமுரண் காண்க. 'திண்டிறற்பாவம்' என்பது பிரதிபேதம். மூன்றுமடி - முற்றுமோனை. (ரு௬)

[அக்கதவு முதலியன சிதறியமை கண்டு குரங்குகள் அஞ்சுதல்.]

ரு௭. நொய்தினோன்கதவும்முதுவாயிலுஞ்
செய்தகன்மதிலுந்திசையோசனை
ஐயிரண்டினளவுடியற்றுக
வெய்தினின்றகுரக்கும்வெருக்கொளா.

(இ - ள்.) சேண் கதவும் - வலிய அந்தக்கதவும், முது வாயிலும்-பழமையான கோபுரவாயிலும், கல் செய்த மதிலும் - கற்களாலமைக்கப்பட்ட மதிலும், நொய்தில் - எளிதில், அடி அற்று - கட்டுக்குலைந்து, திசை - எல்லாத்திக்குகளிலும், ஐயிரண்டு யோசனையின் அளவு - பத்து யோஜனையளவு தூரம்; உக - சிதறவே,—குரங்கும் - (யுத்தசந்நத்தமாய்நின்ற) வாநரங்களும், வெரு கொளா - அச்சங்கொண்டு, வெய்தின் நின்ற - தயித்தன; (எ - று.)

'செய்தகல்மதில்' என்றது இறந்தகாலமொழிதலால் முன்னமே அந்நகர்க்கு அரணாகக் கல்மயமாய் நிருமிக்கப்பட்டிருந்த மதிலையும், இப்பொழுது பாறைகள் அடுக்கியமைத்த பாதுகாப்பையுங் குறிக்கும். ஆகவே, கீழ்ச்செய்யுளில் 'வாயிலடுக்கியவெறபொடும்' என்றதற்கு-வாயிலோடும் வாயிலிலடுக்கிய கற்குவியலோடும் என்று பொருள் கொள்ளுதலும் அமையுமெனக்காண்க. யோசனை - யோஜநா என்ற வடசொல்லின் விகாரம்; நான்கு குரோசங் கொண்ட தூரம். ஐயிரண்டு-பண்புத்தொகை. அடியற்று - அடியோடு அற்று, முழுவதும் அழிந்து, வெய்தினிற்றல் - கொடிய துன்பமடைதல். குரக்கும் வெருக்கொளா—பிராசம் நோக்கி 'குரங்கு' என்றது வலித்தது. வெரு - வெருவு என்பதன் விகாரம்; முதனிலைத்தொழிற் பெயராய் வெருவுதலை யுணர்த்திற்று. 'வெருக்கொள' என்ற பாடத்திற்கு - அச்சங்கொள்ளுதலாலென்று பொருள்.

'கொடிவாயிலும்', 'வெய்துநின்ற,' 'குரங்கும்' என்பன பிரதிபேதம். ()

[குரங்குகள் சிதறியோடுதல்.]

௩அ. பரியமாமதிலும்படர்வாயிலுஞ்
சரியவீழ்ந்ததடித்தின்முடித்தலை
நெரியநெஞ்சுபிளப்பநெடுந்திசை
யிரியலுற்றனவிற்றிலவின்னுயிர்.

(இ - ள்.) (இவ்வாறு) பரிய மா மதிலும் - பருத்த உயர்ந்த அம்மதிலும், படர் வாயிலும் - பரந்த அங்ககரவாயிலும், சரிய வீழ்ந்த - சாய்ந்து விழுந்திட்டதாகிய, தடித்தின் - இடியினால், முடி தலை நெரிய - தங்கள்தலையிடம் நொருங்கவே, (அம்மதிலினகத்தே சார்ந்நின்ற வாநரங்கள்), நெஞ்சு பிளப்ப - மனம் பிளவுபட [நெஞ்சம் உறுதியழிந்துகலங்க], நெடுந்திசை இரியல் உற்றன - திசைதோறும் நெடுந்தூரம் ஓடிச்சென்றனவையாய், இன் உயிர் இற்றில - இனிமையான உயிரழியாதனவாயின [அரிதில் தப்பிப்பிழைத்தன வென்றபடி]; (எ - று.)

பரிய - பருமையையுடைய. "உயர்வகலந் திண்மை யருமை யிந்நான்கி, னமைவரணென்றுரைக்கு நூல்" என்றபடி எணிகொண்டு ஏறவொண்ணாத உயர்வும் புறத்தோர்க்கு அகழலாகாத அடியகலத்தோடு அகத்தோர்க்கு நின்று தொழில் செய்யலாந் தலையகலமும் மிக்க மதி லென்பார், 'பரிய மா மதில்' என்றார். இம்மதிலின் திண்மையருமைகள், கீழ், 'செய்தகன்மதில்,

'காவன்மமதில்' என்றவற்றாற் பெறப்பட்டன. தடித்-வடசொல்; மின்னல்: இங்கு, இடிக்கு இலக்கணை. உயிரழியாதவளேயன்றித் தேகபலமனைத்தும் முழுவதும் அழியப்பெற்றனவென்பது தோன்ற, 'உயிரிற்றில' என்றார். 'இன்னுயிர்' என்றது, எந்தப்பிராணிக்கும் உயிரினும் இனியதுவேறின்றாதலின், அவ்வுயிரை விரைந்து தப்பியோடிப் பாதுகாத்துக்கொண்டமை தோன்றும். 'தடித்திலிடித்தலை' என்ற பாடத்திற்கு - தடித்து இல் இடித்தலை என்று பிரித்து, 'மதிலும் வாயிலும் சரியவீழ்ந்தமையாகிய மின்னலில்லாத இடியினால் மனம் நைகுபிளக்க' வென்று பொருள்கொள்க; இடி முழக்கம் செவிப்புலனாதற்கு முன்பு மின்னலின் தோற்றம் கட்புலனாகுதலால், இடியின் தோற்றத்தை முன்னருணர்தற்கு மின்னல் அறிகுறியாகின்றது. அங்ஙனம் முன்குறியாகும் மின்னல் நிகழாமலே ஓரிடியிடித்தாற்போன்றது, வானரங்கள் எதிர்பாராதிருக்கையில் திடீரென்று மதிலும் வாயிலும் சரிய வீழ்ந்ததையென்க; இது, இல்பொருளுவமையாம்; "மின்னுமலிடித்ததென" என்றார் பிறரும். உள்பொருளாகக்கொள்ளுமிடத்து உற்பாதமாம். (௧௮)

[அப்பொழுது அந்நகரத்திலுண்டான ஆரவாரம்.]

௧௯. பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலாற்
சிகரமால்வரைசென்றுதிரிந்துழி
மகரவேலையையொத்ததுமாநகர்.

(இ - ள்.) பகரவேயும் அரிது பரித்து - சொல்லுதற்கும் அரியதான கொடிய துன்பத்தை யடைந்து, எழு - இருப்பிடம்விட்டோடிய, புகர் இல் வானரம் - குற்றமற்ற அக்குரங்குகள், அஞ்சிய - அச்சமுற்றுச்செய்த, பூசலால் - பேரொலியினால், மா நகர் - சிறந்த அந்தக்கிஷ்கிந்தாபுரியானது, சிகரம் மால் வரை சென்று திரிந்த உழி மகரம் வேலையை ஒத்தது - சிகரங்களையுடைய பெரிய (மந்தரமாகிய) மந்தரமலைபுகுந்து சுழன்றபொழுது ஆரவாரித்த சுறாமீன்களையுடைய பாற்கடலைப் போன்றது; (எ - று.)

உவமையணி. பகரவேயும்—ஏ - பிரிநிலை, உம் - இழிவுசிறப்பு. துன்பத்தினமிகுதி தோன்ற, 'பகரவேயுமரிது' என்றார். பகர்தற்கு அரிதாதல் பற்றியே, 'துயர்' என்ற பெயராற் குறியாது 'பகரவேயும் அரிது' என வேறொருவகையாற் குறிக்கப்பட்டதென்க. அரிது - பெயர். வாயாற் சொல்லவும், அரியதான துன்பத்தை யெய்யால் அனுபவிக்கின்ற இரங்கற்பாடு தோன்ற, 'பகரவேயுமரிதுபரித்தெழு' எனப்பட்டது. 'புகரில்வானரம்' என்றதனால், முன் ஒருகாலத்திலும் இவ்வகையான துயரத்தை யடைந்தில வென்றதாம். இனி, புகர்இல் - ஒளியிழந்த வென்றுமாம். பூசல் - பெரிதொலித்தல், ஆரவாரம் 'பரிக்தெழும்' என்ற பாடத்திற்கு - சொல்லுதற்கும் அரியதாம்படி இரக்கங்கொண்டுசிதறுகின்ற வென்று பொருளாம். 'பகரவேயுமரிது' என்றதைப் பூசலுக்கு அடைமொழியாக்கி யுரைத்தலுங் கூடும். (௧௯)

[பலகுரங்குகள் ஓடிப்போய்விட்டதனால் கிஷ்கிந்தகிரி பொலிவிழத்தல்.]

௪௦. வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானொருங்குபடரவக்கார்வரை
மீனெருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே.

(இ - ள்.) வானரங்கள் - பலகுரங்குகள், வெருவி - இவ்வாறு அஞ்சி, மலை ஒரீஇ - அககிஷ்கிந்தமலையை விட்டுநீங்கி, கான் ஒருங்கு படர - (அடுத்துள்ள) காடுகளில் ஒருசேரச்சென்று சேர்ந்துவிட்டதனால்,—அ கார் வரை - அந்தப் பெரிய மலையானது,—மீன் நெருங்கிய வானகம் - நக்ஷத்திரங்கள் அடரப்பெற்றிருந்த ஆகாயம், மீன் எலாம் போன பின பொலிவு அற்றது - அந்நக்ஷத்திரங்களெல்லாம் நீங்கினபின்பு அழகிழந்த தன்மையை, போன்றது - ஒத்தது; (எ - று.)

ஒரீஇ - ஒருவி; சொல்லிசையளபெடை. கார்வரை - மேகங்கள் தவழப்பெற்ற மலையுமாம். வான் அகம் - வானத்தின் இடம். 'கானமெங்கும்படர' என்பது பாடபேதம். (௪௦)

[பிறகு இலக்குமணன் அந்நகரினுட்பிரவேசிக்க, அங்கதன் முதலியோர் தாரையை நோக்கி 'என்செய்வது?' என்றல்.]

௪௧. அன்னகாலையினாண்டகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவ
ரென்னசெய்குவதெய்தினனென்றனர்.

(இ - ள்.) அன்ன காலையின - அப்பொழுது, ஆண் தகை ஆழியான் - ஆண்மைக்குணத்தையுடையவனான ஸ்ரீராமபிரானுடைய ஆஜ்ஞாசக்கரமே ஒருவடிவெடுததாற்போன்றவனாகிய இலக்குமணன், பொன்னின் நல் நகர் வீதியில் புக்கனன் - அழகிய சிறந்த அந்நகரத்து வீதியிற் பிரவேசித்துச் செல்லலானான்; (அதுகண்டு), சொன்ன தாரையை சுற்றினர் நின்றவர் - கண்டித்துப்பேசுகின்ற தாரையைச் சுறறிலும் நினறவர்களான அங்கதன முதலியோர், (மிகவும் அஞ்சி அத்தாரையை நோக்கி), 'எய்தினன - வந்துவிட்டானே! என்ன செய்குவது - (நாம்) செய்வதியாது?' என்றனர - என்று சொன்னார்கள்; (எ - று.)

ஆண்டகை யாழியான்—(௧௦) "ஆணையினேகுவான்" என்றதனோடு ஒப்பிடுக. எங்குஞ்சுற்றிச் செல்வதுபற்றி, ஆஞ்ஞையைச் சக்கரமெனறல் மரபு. தான் இருந்த விடததிலே யிருந்து தன்னிலம் முழுவதும் தன்சட்டளையில் நடக்கச்செய்யும் போற்றலையுடைய அரசனபோல, சர்வசக்தனான ஸ்ரீராமன் இலக்குமணன் மூலமாகத் தன்கட்டளையை நிறைவேற்றுகின்றனனாதலால், இராமபிரானை 'ஆண்டகை' என்றும், இலக்குமணனை 'அவனது ஆழியான்' என்றுங் கூறுதல் ஏற்கும். பொன்னின் - பொன்மயமான எனினுமாம். 'பொன்னினக்கர்' என்ற பாடத்திற்கு, அந்நகர் - அந்த நகரமென்க.

'தாரையை' என்றது, 'சுற்றினர்', 'என்றனர்' என்னும் இரண்டோடும் இயையும். பேர்சொல்லுதற்குக்கூறி இன்றுனென எழுவாய் குறியாமல் 'எய்தினன்' என்றவளவே கூறினர்.

'ஆண்டகையாளியும்' என்பது பிரதிபேதம். (சக)

[அப்பொழுது அநுமான் ஓராலோசனை கூறுதல்.]

சஉ. அனையனுள்ளமு மாய்வளையாயலர்
மனையின்வாயில்வழியினைமாற்றினு
னினையும்வீரனநீணெறிநோக்கலன்
வினையமீதென்றனுமன் விளம்பினன்.

(இ - ள்.) 'ஆய் வளையாய் - ஆராய்ந்தெடுத்தணிந்த வளையல்களை யுடையவளே! அனையன் உள்ளமும் - அந்த இலக்குமணப் பெருமானுடைய மனமோ, அலர் - மலர்போன்றது [மிக்கமென்மையுடையது]; மனையின் வாயில் வழியினை மாற்றினால் - (பெண்பாலாகிய நீ சென்று சுக்கிரீவனது) அரண்மனையின் வாசல்வழியைத் தடுத்தால், நினையும் வீரன அநீள் நெறி நோக்கலன - (தருமங்களைச்) சிந்திக்கும் மியல்புடைய வீரனான அவ்விலக்குமணன் அந்த நீண்டவழியைக் கண்ணெடுத்துப் பார்த்தலுஞ் செய்யான்; வினையம் ஈது - (செய்யத்தக்க) தந்திரம் இது',! என்று—, அனுமன விளம்பினன் - அநுமான் (அப்பொழுது தாரையைநோக்கிக) கூறினன்; (எ - று.)

இலக்குமணன் பலபராக்கிரமங்கள் மிக்கவனுயினும் அவன் மனம் மலர் போல மெல்லியது, கடினசித்தமன்று; பெண்பாலாகிய நீ சென்று சுக்கிரீவனது அரண்மனையின வாயில்வழியில நின்றுவிட்டால், மகளிரை யெதிர்த்துப் பொருது கொல்லலாகா தெனனும் அறநூற்கொள்கையை யுணர்ந்த அவன் அவ்வழியைக் கண்ணெடுத்துப்பாராமல் விலகிச்சென்றிடுவன்: இது தக்கதோருபாயமாமெனறு தாரைக்கு அநுமான சமயோசிதமான ஆலோசனை யொன்றைக் கூறின னென்பதாம். உள்ளமும் என்ற உம்மை - தெரிநிலை. வளையாய்-வளையாளென்றதன் ஈறுதிரிந்தவிளி. 'ஆய்வளையாய்' என்று விளித்தது, முன்னைய நிலைமைபற்றி; மேல் ருஉ - ஆஞ் செய்யுளைப் பார்க்க. அவாய்நிலையால், 'நினையும்' என்ற வினைக்கு ஏற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஈது - சுட்டுநீண்டது.

சில ஏட்டுப்பிரதிகளில் இச்செய்யுள் "நீரெலாம்" என வரும் அடுத்த செய்யுளின்பின் காணப்படுகின்றது. 'ஆய்வளையாயலாம்' என்று படித்துப் பிரிப்பர் ஒருசாரார். (சஉ)

[அவ்வாறே மகளிர் பலருடன் தாரை செல்லுதல்.]

சங. நீரெலாமயனீங்குமினென்றியான்
வீரனுள்ளமவிளக்குவலென்றனும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாரைசென்றனடார்குழலாரொடும்.

(இ - ள்.) (அங்கதன் முதலிய வானரர்களை நோக்கித் தாரை), 'நீர் எலாம் அயல் நீங்குமின் - நீங்களெல்லீரும் அப்பால் செல்லுங்கள்: யான் நேர்ந்து - நான் (அவ்விலக்குமணனெதிரிற்) சென்று, வீரன் உள்ளம் விளக்குவல்- வீரனை அவனுடைய மனத்தைத் தெளியச்செய்வேன்', என்றலும்- என்றுசொன்னவளவில், யாவரும் பேர நின்றனர் - அவ்வானர வீரரெல்லாரும் விலகினின்றார்கள்; (உடனே), தாரை—, பேர்கலா - பின்வாங்காமல், தார் குழலாரொடும் - மலர்சூடிய கூந்தலையுடையவர்களான (தோழியராகிய) மகளிர்பலருடன், சென்றனள் - புறப்பட்டுச் சென்றாள்; (எ - று.)

'எல்லாம்' என்பது மூன்றிடத்திற்கும் பொது: 'வீரன்'என்றது, பெண் பெயர்கொண்டவரையும் எதிர்த்தல்செய்யாதவனென்ற குறிப்பு. அங்ஙனமாகவே, அவனது உள்ளத்தை யான் சென்று தெளிவித்தல் கூடுமென்பாள், 'நேர்ந்து யான் வீரனுள்ளம் விளக்குவல்' என்றாள். 'உள்ளம் விளங்குவல்' என்ற பாடத்திற்கு - மனக்கருத்தை புணர்வேனென்று பொருள்கொள்ள வேண்டும். விளக்குதல் - தெளிவித்தல். 'உள்ளம்வினவுவல்' என்றும் பாடங் காணப்படுகின்றது. மூன்றாமடியில் 'பேர, பேர்கலா' என மாறுபட்டசொற்கள் வந்தது, தொடைமுரண். 'தாழ்குழலாரொடும்' என்பது பிரதிபேதம் (௪௩)

[சுக்கிரீவனரண்மனையைச் சாருமளவில் இலக்குமணனைத் தாரை மறித்தல்.]

௪௪. உரைசெய்வானரவீரருவந்துறை
யரைசர்வீதிகடந்தகன் கோயிலைப்
புரைசையானையனான்புகலோடுமவ்
விரைசெய்வார்குழற்றாரைவிலக்கினாள்.

(இ - ள்.) புரைசை யானை அனான் - கழுத்தணி கயிற்றையுடைய யானையைப் போன்றவனான இலக்குமணன், உரைசெய் வானரவீரர் உவந்து உறை அரைசர் வீதி கடந்து - பிரசித்தமாகச்சொல்லப்படுகின்ற வானரவீரர்கள் மகிழ்ந்து வசிக்குமிடமான இராசவீதியை நடந்துகழித்து, அகல் கோயிலை புகலோடு - விசாலமான சுக்கிரீவனரண்மனையினுட் பிரவேசிக்குமளவில்,—அ விரை செய் வார் குழல் தாரை - இயற்கை நறுமணத்தைச் செய்கின்ற நீண்டகூந்தலையுடைய அந்தத்தாரையானவள், விலக்கினாள் - (இலக்குமணனை) வழிமறித்தாள்; (எ - று.)

உரைசெய் - கீழ்ச்சொல்லப்பட்ட எனினுமாம். அரைசர், புரைசை - இடைப்போலி. அகல்+கோயில்=அகன்கோயில்; வலிவாச் சிறுபான்மை லகரம் னகரமாத்திரிந்தது. ஏறுபவர்க்குப் பற்றுகோடாயிருத்தற்பொருட்டு யானையின் கழுத்திற் கயிறுகட்டியிடைத்தல் இயல்பு. யானை மதங்கொண்டு சீறினாலும், கழுத்தணிகயிற்றை யுடைமைபற்றி, ஏறியவர் உயிருய்தல் கூடும்; அங்ஙனமே இலக்குமணன், சினந்துசீறினாலும், தருமத்திற்குக்கட்டுப் படும் இயல்புடையனாதல்பற்றி, இலக்கானவர் உயிருய்வர் என்னுங் கருத்துத் தோன்ற, 'புரைசையானையனான்' என்றார். (௪௪

[தாரை இலக்குமணனை வழிமறித்த வகை.]

௪௫. விலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
யிலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கொடோகைமகளிர்குழாத்தினால்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினாள்.

(இ - ள்.) விலங்கு மெல் இயல் - விலங்குபோன்ற [தன்னைக்கண்ணுறுவாரை அப்பாற்செல்லவொட்டாதபடி கட்டுப்படுத்துகின்ற] மென்மையான தன்மையையும், வெள் மதி வெள் நகை - வெண்மையான சந்திரன்போல வெண்ணிறமாய் விளங்கும் புன்சிரிப்பையும், இலங்கு நுண் இடை - விளங்குகின்ற நுண்ணிய இடையையும், ஏந்து இள மெல் முலை - உயர்ந்த இளமை மாறாத மென்மையான தனங்களையுமுடைய, குலம் கொள் தோகை மகளிர் - சிறந்த சாதிமயில்போலுஞ் சாயலுள்ள மாதரது, குழாத்தினால் - கூட்டத்தைக்கொண்டு, வலம் கொள் வீதி நெடு வழி மாற்றினாள் - மேன்மைகொண்ட பெரிய அவ்வீதிவழியைத் தடுத்தனள், (தாரை); (எ - று.)

விலங்கு - விளங்குகின்ற எனினுமாம். 'வெண்மதி' என்றது, கபடமில்லாத அறிவுஎன்றும் பொருள்படும். தோகை இருமடியாகுபெயர். 'வெண்ணகைவெள்வளை', 'குழாததொடும்' எனபன பிரதிபேதம். முதலடி - முற்றுமோனை. (௪௫)

[அதுபற்றிய வர்ணனை.]

௪௬. வில்லும் வாளு மணிதொறு மின்னிட
மெல்லரிக்குரன் மேகலை யார்த்தெழப்
பல்வகைப்புரு வக்கொடி பம்பிட
வல்லி யாயம்வ லத்தினில் வந்ததே.

(இ - ள்.) அணிதொறும் - அணிந்துள்ள ஆபரணங்கள்தோறும், வில்லும் வாளும்—,மினனிட - விளங்கவும்,—மெல் அரி குரல் - மெல்லிய [சிறிது] பருக்கைக்கற்களையுடையனவான காற்சிலம்புகளின் ஒலியும், மேகலை (குரல்) - மேகலையெனனும் இடையணியின் ஒலியும், ஆர்த்து எழ - (பறையொலியாக) ஆரவாரித்துத்தோன்றவும்,—வல் வகை புருவம் கொடி - பலவகைப்பட்ட புருவங்களாகிய கொடிகள், பம்பிட - நிறைந்திருக்கவும், வல்லி ஆயம் - மகளிர்கூட்டமாகிய சேனை, வலத்தினில் வந்தது - வலிமையோடு வந்து (இலக்குமணனை) வளைந்துகொண்டது; (எ - று.)

மகளிர்குழாம் வந்து இலக்குமணனைச் சூழ்ந்து வழிமறித்தலை, ஒரு சேனை வந்து சூழ்ந்ததாக வருணிக்கலானார். வில் வாள் எனபன - ஒளிகள்; அவற்றைச் சொல்நிலையாற படைக்கலங்களாகவுங் கொண்டு அமைத்தனர் முதலடியில். அன்றியும், ஆபரணங்கள் இடையிட்டுவிளங்குதல் வாள்பளபளத்தல்போலவும்; அவ்வணிகலன்களினின்று எழுந்து வளைவாகவிளங்கும் ஒளி விற்போலவும் இருக்கும். இரண்டாமடியில், மகளிர் புடைபெயரும்போது

அவாது சிலம்பும் மேகலையுமாகிய அணிகள் ஒலிப்பதை, சேனையில் நிகழும் பறைகளினொலியாகக் குறித்தார்; "செருக்குரற்சிறுபறைநசிலம்புகிண்கிணி, யரிப்பறைநமேகலையாகியார்த்தவே" என்ற சிந்தாமணி நோக்கத்தக்கது. நீண்டிருத்தல்பற்றி, புருவத்தைக் கொடியென்றல் வழக்கு; 'ப்ரூலதா' என்பர் வடநூலாரும். புருவக்கொடி - கொடிபோன்ற புருவம். 'பல்வகைப்புருவக் கொடிபம்பிட' என்றது, சேனைக்குஎற்பப் பலவகைக்கொடிகள் நெருங்க வென்றதுமாயிற்று. கொடி - படர்கொடியும், துவசமும் சிலேடையை அங்கமாகக்கொண்டுவந்த உருவகவணி.

'மெல்லரி' என்றது, பண்புத்தொகையன்மொழியாய்ச் சிலம்பைக் குறித்தது. காகாக்ஷிநியாயத்தால், "மெல்லரிக்குரல்' என்றதிலுள்ள 'குரல்' என்றதையே 'மேகலை' என்பதனோடுங் கூட்டுக. அரி-சிலம்பின் பருக்கைக் கல். இச்சொல்லுக்கு - சிலம்பு பறை யென்ற பொருள்களு முண்டு. மேகலை-எட்டுக்கோவையுள்ளதான மாதரிடையணி. வல்லி - பூங்கொடி; உவமையாகு பெயராய்ப் பெண்ணை யுணர்த்தும்; இங்கு, சாதிப்பெயராய் நின்றது. ஆயம் - மகளிர்கூட்டம்; 'வல்லி' என வந்ததனால், கூட்டமென்ற மாத்திரமாய் நின்றது. இனி, வல்லி - தளைபோலப் பந்தப்படுத்துவதான, ஆயம் - மகளிர்கூட்டம் என்று பொருள்கொள்ளுதலும் அமையும். வலத்தினில் வந்தது [வலம்வந்தது] - சூழ்ந்தது எனினுமாம். 'வல்லியாயம்வலத்தொடும் வந்ததே,' 'வல்லியாயவருதினிவந்ததே' என்பன பிரதிபேதம். (சசு)

வே று.

[இலக்குமணன் கூச்சமடைதல்.]

சஎ. ஆர்க்குநூ புரங்கள் பேரி யல்குலாந் தடந்தே ரொத்த
வேற்கண்வெம் புருவம் போர்வின் மெல்லியர் வளைந்த போது
பேர்க்கருஞ் சீற்றம் பேர முகம்பெயர்ந் தொதுங்கிற் றல்லாற்
பார்க்கவு மஞ்சி னனப் பணையினு முயர்ந்த தோளான்.

(இ - ள்.) ஆர்க்கும் நூபுரங்கள் - ஆரவாரிக்கின்ற காற்சிலம்புகள், பேரி-(போர்க்குஉரிய) பேரிகைவாத்தியங்களாகவும், அல்குல்—, ஆம் தட தேர் - (போர்க்குஏற்ற) பெரிய தேராகவும், ஒத்த கண் - ஒன்றோடொன்று ஒத்த கண்கள், வேல் - வேற்படைகளாகவும், வெம் புருவம் - (ஆடவர்க்கு ஆசைநோய் மூட்டுதலாற்) கொடியனவான புருவங்கள், போர் வில் - போர்செய்யும் விற்படைகளாகவும், (அமைய), மெல்லியர் வளைந்த போது - மகளிராகிய சேனை சூழ்ந்தபொழுது, அபணையினும் உயர்ந்ததோளான-பருமையைக் காட்டிலும் மேம்பட்ட தோள்களையுடையவனான அவ்விலக்குமணன், பேர்க்க அருஞ் சீற்றம் பேர - எவராலும் மாற்றவொண்ணாத தன்கோபம் மாற, முகம் பெயர்ந்து ஒதுங்கிற்று அல்லால் - தன்முகத்தை மாறவைத்துக் கொண்டு திரும்பியதல்லாமல், பார்க்கவும் அஞ்சினன் - (அம்மகளிரைக்) கண்ணெடுத்துப்பார்த்தற்கும் அச்சமுற்றான்; (எ - று.)

இதனால், இலக்குமணனது உத்தமகுணம் விளங்கும். "திறனறிந்து, ஏதிலாரிற்கட் குருடனாய்.........கிற்பானேல் யாதும், அறங்கூறவேண்டா அவற்கு" என்றது காண்க. ஒத்த கண் - தம்மில்தாமேயன்றி வேறு உவமை பெறாத கண்களென்றவாறும். வெம்புருவம் - வெப்பத்தைச்செய்யும் புருவம்; விருப்பத்தைவிளைக்கும் புருவ மென்றுமாம்; "வெம்மை வேண்டல்" என்பது தொல்காப்பியம். முதலிரண்டடி - உருவகம். "சில்லரிச்சிலம்பின் வன்வார்ச் சிறுபறை கறங்கச் செம்பொ, னல்குற்றேரணிந்த கொம்மை முலையெனும்புரவிபூட்டி, கல்லெழில் நெடுகணம்பாப் புருவவில்லுருவக் கோலிச். செல்வப்போர்க் காமன்சேனை செம்மன்மே லெழுந்ததன்றே" என்ற சிந்தாமணி நோக்கத்தக்கது. மகளிர்நேர்பட்டமாத்திரத்தில் முகம் முயற்சியினாலன்றி இயல்பினால் திரும்பியமை தோன்ற, 'முகம்பெயர்ந்து' எனத் தன்வினையாற் கூறினர். பருமையென்ற குணத்தின் எல்லை எவ்வளவு உண்டோ அதினும் அதிகமாகப் பருத்துள்ள தோளென்பார், 'பணையினுமுயர்ந்த தோள்' என்றார். வரம்புகடந்து பருத்ததோ ளென்னுங் கருத்தை இங்ஙனங் கூறினர். பருமையைச் சிறமையாக்குந் தோளென்க. போர்க்கரு - தொகுத்தல். உம்மை இரண்டனுள், முன்னது - இழிவுசிறப்பு; பின்னது - உயர்வுசிறப்பு.

'அந்தடந்தேர்சுற்ற, வேற்கண்விற்புருவம்போர்ப்ப மடந்தையர்மிடைந்த போது. போர்க்கருஞ் சீற்றம்போக்கி முகம்பெயர்த்தொதுங்கிற் றல்லால்,' 'பணையினும் பெரியதோளான்' என்பன பாதிபேதம்.

இதுமுதல் ௫அ-செய்யுள்கள் - அரசியற்படலத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள் (௬௭)

[அவ்வாறான இலக்குமணனை நோக்கித் தாரை பேசத்தொடங்குதல்.]

௬அ. தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தானுமெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனார்தம்பொதுவிடைப்புகுந்துபொற்றோட்
டுமனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னாள்.

(இ - ள்) மைந்தன் - லக்ஷ்மணகுமாரன், தாமரை வதனம் சாய்த்து - தாமரைமலர்போன்ற தனது முகத்தைச் சாயவைத்து [தலைகுனிந்து], தனு நெடுந் தரையின் ஊன்றி - (கையிற்பிடித்த) வில்லைப் பெரிய தரையிலே ஊன்றவைத்து, மாமியர் குழுவின் வந்தான் ஆம் என - மாமிமார்கூட்டத்தினிடையே வந்தவன்போல, நிற்ப - (ஸங்கோசங்கொண்டு) நிற்க,—பொன் தோள் தூ மனம் நெடுங் கண் தாரை - அழகிய தோள்களையும் பரிசுத்தமான மனத்தையும் நீண்டகண்களையு முடைய தாரையானவள், பூமியில் அணங்கு அனார்தம் பொதுவிடை புகுந்து - நிலவுலகத்தி லிறங்கிய தேவமாது போன்றவர்களான அவ்வானர மகளிரது கூட்டத்தினிடையே ஒதுங்கி, நடுங்குவாள் இனைய சொன்னாள் - (கூச்சத்தால்) நடுங்குபவளாய் இவ்வார்த்தைகளைச் சொல்லலானாள்; (எ - று.)—அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

மாமியர்குழுவின் வந்தான்மைந்தன் என்று எடுத்து - மாமிமார் கூட்டத்தினிடையே வந்தவனுன புதுமருமகன் போல வென்று பதப்பொருள் கூறலுமாம். பரபுருஷனெதிரில் வந்து நிற்றற்குக் கூசி மாதர்கூட்டத்தினிடையே புகுபவளும், அவனைநோக்கிப் பேசுதற்குச் சங்கோசப்பட்டு உள்ளமும் உடலும் நடுங்குபவளு மாயினள் கற்புநலஞ்சிறந்த தாரையென்க. (௪௮)

[இலக்குமணனை நோக்கித் தாரை சொன்ன சொற்களை இதுமுதல் இரண்டுகவிகளிற் கூறுகின்றார்.]

௪௯. அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
யிந்திரன்முதலினோராலெய்தலாமியல்பிற்றன்றே
மைந்தநின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தே
முய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறிதனினுண்டோ.

(இ - ள்.) மைந்த - வீரனே! அந்தம் இல் காலம் நோற்ற ஆற்றல் உண்டு ஆயின் அன்றி - அளவற்ற காலம் தவஞ்செய்த மகிமை உண்டானாலல்லாமல், இந்திரன் முதலினோரால் எய்தல் ஆம் இயல்பிற்று அன்றே - (உன் வரவு) இந்திரன் முதலானவர்களாலும் பெறத்தக்க தன்மையையுடையதன்றன்றோ? (அங்ஙனமாக), நின் பாதம் கொண்டு எம் மனை வர பெற்று வாழ்ந்தேம் - உனது திருவடிகளைக்கொண்டு (எங்கள்கிருகத்திற்கு நீ) எழுந்தருளப்பெற்று மேம்பட்டோம் (யாம்); (ஆகவே), வினையும் தீர்ந்தேம் உய்ந்தனம் - கருமங்களனைத்தும் ஒழிந்து உயர்கதியடையப் பெற்றோம்; இதனின் உறுதி வேறு உண்டோ - இதைக்காட்டிலும் அடையும் நற்பயன் வேறு உளதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

நின்பாதங்கொண்டு வர - நடந்துவர; பரிசுத்திகரமான நினது திருவடிகளின் ஸ்பரிசமாகிய மகிமை எங்கள் கிருகத்திற்கு நேரும்படி நீ எழுந்தருளிப் பொன்னடிசாத்த வென்க. இனி, 'அந்தமில்காலம் எம்மனைவர' என்பதற்கு - அளவற்றகாலம் தவஞ்செய்த மகிமையுண்டானாலன்றி (நினது திருவடி) இந்திரன் முதலானவர்களாலும் அடையத்தக்க தன்மையை யுடையதன்றன்றோ? அத்தன்மையதான நின்திருவடியைக் கொண்டு நீ எங்கள் மனைக்கு வர என்று உரை கொள்ளவுமாம். உய்தல் - ஈடேறுதல். உறுதி - பேறு; புருஷார்த்தம். இந்த்ரன் என்ற வடசொல், பரமைசுவரியமுடையவனென்று பொருள்படும். 'மைந்த' என்றது, இளையவனே! [இளையபெருமானே] என விளித்தவாறுமாம்.

'உறுதிவேறிதினுங்குண்டோ' என்பது பிரதிபேதம். (௪௯)

௫0. வெய்தினீவருதனோக்கிவெறுவுறுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்று
ளையநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதா
யெய்தியதென்னையென்றாளிசையினுமினியசொல்லாள்.

(இ - ள்.) வீர - வீரனே! நீ வெய்தின் வருதல் நோக்கி - நீ உக்கிரமாக வருதலைப் பார்த்து, சேனை - வாநரசேனை, செய்தி தான் உணர்கிலாது - வருதலின்காரணத்தை (இன்னதென்று) அறியாமல், வெருவுறும் - அஞ்சும் (அதன் அச்சந்தீர்ந்திடுமாறு), திரு உளம் தெரித்தி - (உனது) திருவுள்ளக் கருத்தைச் சொல்வாய், என்றாள் - என்றுசொன்னாள்; (மற்றும்),* ஐய - ஐயனே! ஆழி வேந்தன் அடி இணை பிரிகலாதாய் நீ - ஆஜ்ஞாசக்கரத்தைச் செலுத்தும் அரசனான இராமபிரானது திருவடிகளை எந்நாளும் பிரியாது உடனுறைபவனான நீ, எய்தியது என்னை - (அப்பெருமானைவிட்டுப் பிரிந்து இங்கு) வந்தகாரியம் யாதோ? என்றாள் - என்றும் வினவினாள்: (யாவளெனின்,—) இசையினும் இனிய சொல்லாள் - சங்கீதத்தைக் காட்டிலும் இனிமையான சொற்களை யுடையவளாகிய தாரை; (எ - று.)

வெய்தின் - விரைவாக எனினுமாம். 'வெருவுநுஞ்சேனை' என்ற பாடத்திற்கு, நும்சேனை வெருவும் - உங்கள் சேனை அஞ்சும் என்று பொருளாம்; சுக்கிரீவனுக்கு அதீனமான சைநியத்தை 'நும்சேனை' என்றது, இராமலக்ஷ்மணரருளால் வாலியினிடமிருந்து சுக்கிரீவனுக்குக் கிடைத்தமைபற்றி உபசாரமாகக் கூறியதாம்; அதன்மேற் கோபமுண்டாகா திருக்குமாறு 'அது உங்களுடையதே' என்று உரிமை காட்டினாள். திருவுளம் - மேன்மையான மனம்; அதன் கருத்துக்கு இலக்கணை. தெரித்தல் - தெரிவித்தல். ஆழிவேந்தன் = சக்கரவர்த்தி. மிகவும் இனிமையான தனது சொற்களால் இவ்வாறு சொல்லினளென்பார், 'என்றா ளிசையினுமினிய சொல்லாள்' என்றார்.

'வெருவுதும்', 'அடியிணைப்பிரிகலாதாய்' என்பன பிரதிபேதம். (௫௦)

[இலக்குமணன் தாரையை நோக்குதலும், அவ்வளவில் அவனுக்குத் தாய்மார்ஞாபகம் வருதலும்.]

ருக. ஆர்கொலோவுரைசெய்தாரென் றருள்வரச்சீற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலு
மோர்குலாமுகத்தினாளையிறைமுகமெடுத்துநோக்கித
தார்குலாமலங்கன்மார்பன்றாயரைநினைந்துநைந்தான்.

(இ - ள்) தார் குலாம் அலங்கல் மார்பன் - மலர்கள் விளங்கப் பெற்ற மாலையைத் தரிக்கும மார்பையுடையவனான இலக்குமணன்,—(அவ்வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில), அருள் வர - கருணையுண்டாக, சீற்றம் அஃகா - கோபங்குறைந்தவனாய், உரைசெய்தார் ஆர் கொலோ என்று - (இத்தன்மையதான வார்த்தையை இங்குச்) சொன்னவர் யாரோவென்று அறியக்* கருதியவனாய், குலாம் வெள் முழு திங்கள் பகல் பார வந்த படிவம் போலும் ஏர் குலாம் முகத்தினாளை - விளங்குகின்ற வெண்மையான பூர்ண சந்திரன் பகற்பொழுதிலே பூமியில் வந்த தோற்றம் போன்ற [ஒளி மழுங்கிய] அழகுவிளங்கின முகத்தையுடையவளான தாரையை, முகம் இறை எடுத்து நோக்கி - தன்முகத்தைச் சிறிது நிமிர்த்திப் பார்த்து, (அதனால்), தாயரை நினைந்து நைந்தான் - தன்தாய்மாரான சுமித்திரை முதலியோரை ஞாபகத்திற்கொண்டு வருந்தினான்; (எ - று.)

பேரழகுடையவ்ளாய் விளங்கிப் பேரரசனது உத்தமபத்தினியாய் நெடுங் காலம் வாழ்ந்து பின்பு அக்கணவனையிழந்து கைம்பெண்ணாகிக் கண்டவரிரங் கத்தக்க நிலைமையை யடைந்ததுபற்றி, தாரையைப் பார்த்தவுடன் தன் தாய்மார் ஞாபகத்தில் வரப்பெற்றவனாய் வருந்தலாயினன இலக்குமண னெனக். தனனைப்போலவே பிறரையுங் கருதுதல் அருளன்புகளையுடைய அன்றோரியல்பாதல் பற்றி, இலக்குமணன பிறர் குடும்பத்தைப் பார்த்த வுடன தன குடும்பத்தின ஞாபகங் கொள்ளலானான். இங்கு, 'தாயர்' என் றது - சுமித்திரை, கௌசல்யை எனனும் இருவரையே குறிப்பதெனக் கொள்ளலாம். மேல் ருஉ-ஆஞ் செய்யுளின முதலடியைக் காண்க. சந்திரமண் டலம் அந்தரத்தைவிட்டுத தரையில்வந்த தோற்ற மெனறது, இல்பொரு ளுவமையாம்; இனி, பார்குலாம் - உலகத்தில் விளங்குகின்ற என்றலு மொன்று. 'வாகுலாமுகத்தினுள்' என்றது, முன்பு இருந்த நிலைமையைப் பற்றி, அவவகைச் சிறப்பை இப்பொழுதும் குறிப்பா லுணரலாம்படியுள்ள முகமெனனலாம். 'தார்குலாமறங்கன் மார்பு' எனறது, இயறகைபற்றிய அடை மொழியாம். சுக்கிரீவன் முதலியோர்க்கு அச்சத்தை யுண்டாக்கும்பொருட் டுப் போர்ச்செலவிறகு அறிகுறியாகும் வஞ்சிப்பூமாலையை யணிந்துளளா னெனறுங் கொள்ளலாம். தார - மலர். இனி, 'தாரகுலாம் அலங்கல்மார்பன' எனறதற்கு, தனனிடத்தே தரிக்கப்படும் மாலை விளங்குதற்குக் காரணமான ஒளிசெய்தலையுடைய மார்பையுடையவ னென்று உரைத்தலுங் கூடும். சீற்றமஃகா னைந்தான் - சினைவினை முதல்வினையைக் கொண்ட முடிபு.

'சீறறமஃக', 'படிவம்போன்றும்', 'தார்குலாவலங்கல்' என்பன பிரதி பேதம். (ருக)

[இலக்குமணன் கண்ணீர் துளித்தல்.]

ருஉ. மங்கலவணியைநீக்கிமணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கொட்டாப்
பொங்குவெம்முலைகள்பூகக்கமுதடுதொடுமறையப்போர்த்த
நங்கையைக்கணடவள்ளனயனங்கள்பனிப்பநின்றான்.

(இ - ள்.) மங்கலம் அணியை நீக்கி - திருமங்கலியத்தை யொழித்து, மணி அணி துறந்து - இரத்தினமயமான மறறையாபரணங்களையும் அணி யாதுவிட்டு, வாசம கொங்கு அலர் கோதை மாறறி - நறுமணமுள்ளதும் தேன பெருகுவதுமான மலாமாலையைச் சூடுதலை யொழித்து, குங்குமம் சாந் தம கொட்டா பொஙகு வெம முலைகள் பூகம் கழுத்தொடு மறைய போர்த்த - குங்குமப்பூவின் குழம்பையும சந்தனகுழம்பையும் பூசுதலில்லாத பருத்த வெய்ய தனங்கள் பாக்குமரம்போனற கழுததுடன மறையும்படி (மேலாடை யால) நனறாகப்போர்ததுள்ள, நங்கையை - மகளிரிறசிறந்தவளான அத் தாரையை, கண்ட - பாாத்த, வள்ளல் - வரையாதருளும்இயல்பினனான இளைய பெருமாள், நயனங்கள் பனிப்ப நினறான் - (பரிதாபகரமான அததோற்றத் தைக கண்டதனாலும் தன தாயரை ஞாபகத்திறகொண்டதனாலும்) தன் கண் கள் நீர் துளிக்கப்பெற்றவனாய் நின்றான்; (எ - று.)

இளமையான பாக்குமரத்தின கணுககள் கழுத்திற்கு ஒரையிலும், செய்ப்பிலும் உவமமாம்; "ஈனுதவிளங்கமுகின மரகதமணிக்கண்ணும்...... தாஞகி........ காஞர்ந்ததிரள்கழுதகுக்கவின சிறைகொண்டிருந்ததே" என்பது சிந்தாமணி. நங்கை - உததமஸ்திரீ இவவாறு கண்ணீர்மல்குதற்குக்காரணம், தன் குடும்பத்தையும் பிறாகுடும்பத்தையும் அபேதமாக நினைக்கும் வள்ளன்மை யென்பது விளங்க. இங்கு 'வள்ளல்' எனமுர். பூகம், நயகம்-வடசொற்கள். முன்னிரண்டடியிற் குறிததவை. கைமமைக்கோலம். 'மங்கல மரபுநீங்கி' எனபது பிரதிபேதம். (ருஉ)

[இலக்குமணன் தான்வந்தகாரியத்தைச் சொல்லத்தொடங்குதல்.]

ருகூ. இனையராமென்னையீன்றவிருவருமென்னவந்த
நினைவினுனயர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்முன்
வினவினுட்கெதிரோர்மாற்றமவிளமபவுமவேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகலவதானுன்.

(இ - ள்.) 'என்னை ஈன்ற இருவரும - எனனைப்பெற்ற தாய்மாரிருவரும், இனையர் - இத்தனமையராகவேயிருப்பா', எனன வந்த நினைவினுன - எனறு தன மனத்தில் தோனறிய ஞாபகததினுல், அயர்ப்பு சென்ற-தளர்ச்சிமிக்க, நெஞ்சினன் - மனத்தையுடையவனுய், நெடிது நின்முன் - நெடும்பொழுது ஒனறுந்தோனமுது நினறவனுன அவவிலககுமணன்,-வினவினுட்கு எதிர் ஓர்மாறறம் விளமபவும் வேண்டும எனறு - (தனனை)வினவியவளுக்கு உத்தரமாக ஒருவாாததைசொல்லாதிருத்தலும தகுதியனறு என்று எணணி, அ புனை குழலாட்கு-அழகிய கூந்தலையுடையவளான அத்தாரையை நோக்கி, வந்த காரியம புகல்வது ஆனுன - (தான) வந்தகாரியமினனதென்று சொல்லலானுன்; (எ - று.) அதனை, அடுதத கவியிறகாண்க. ஆம் - அசை.

இராமனைப் பெற்ற தாயான கௌசல்யையையும் தனனைப்பெற்ற தாயான சுமித்திரையைப்போலவே பாவிப்பவனுதலால், 'எனனையீன்றவிருவரும்' எனமுன. பரதன தாயான கைகேயியை அங்ஙனம்பாவியாது விடுத்தது, அவள தனது திருததமையனுரை வலியவனவாசமபுகுததின ளென்பதுபற்றி அவள்விஷயமாகத் தனமனததிறகொண்ட மாறுபாட்டின் தொடர்பினு லெனக. மாதரோடு பேசுதலில் இலக்குமணனுக்கு உளள ஸங்கோசம், மூனமுமடியால் விளங்கும். புனை குழல - அலங்கரிததகூந்தலென இறந்தகாலவினைததொகையுமாம ; எனறது, பண்டைநிலையைப்பற்றியாம்.

'அயர்வுசென்ற', 'விளம்பலும்வேண்டுமெனன' எனபன பிரதிபேதம்.

[இலக்குமணன் சொல்லுதல்.]

ருச. சேனையும்யானுந்தேடிதமேதவியைததருவேனென்று
மானவற்குரைததமாற்றமறந்தனனருக்கன்மைந்த
னுனவனமைதிவ்லையறியெனவருளின்வநதேன்
மேனிலையனையான்செய்கைவிளைந்தவாவிளம்புகென்முன்.

(இ - ள்.) அருக்கன் மைந்தன் - சூரியன்மகனான சுக்கிரீவன், சேனையும் யானும் தேவியை தேடி தருவென் என்று மானவற்கு உரைத்த மாற்றம் மறந்தனன் - 'எனது சேனையும யானுமாக ஜாநகிப்பிராட்டியைத் தேடிக் கொணர்ந்து கொடுப்பேன்' என்று மநுகுலத்தில் தோன்றியவனான ஸ்ரீராம பிரானுக்குச் சொன்ன வார்த்தையை மறந்துவிட்டான; ஆனவன அமைதி வல்லை அறி என-'அங்ஙனமான அச்சுக்கிரீவனுடைய செயதியை விரைவிற் சென்று நீ அறிந்துவருவாயாக' என்று (அப்பெருமான என்னைநோக்கிச்) சொல்ல, அருளின வந்தேன - அக்கட்டளையினால் இங்குவந்தேன், (யான), மேல் நிலை அனையான செய்கை விளைந்த ஆ விளம்புக - 'மேன்மையான அரசாட்சிநிலைமையைப் பெற்றுநின்ற அச்சுக்கிரீவனது செயதி நிகழ்ந்த விதத்தைச் சொல்வாயாக', என்றான் - என்று (தாரையைநோக்கி இலக்குமணன்) கூறினான ; (எ - று.)

யானும் சேனையும தருவென - தன்மையொருமையும் படர்க்கையொருமையும விரவிச் சிறப்பினால் தன்மையொருமை வினையைப் பெற்றுவந்த முடிபு; வழுவமைதி. அமைதி - நிலைமை. மேல்நிலை - செல்வ அதிகாரங்கள்; மேல் - இனி, அனையான செய்கை விளைந்தவகையை, நிலை - உள்ளபடி, விளம்புக என்றும பதப்பொருள் கொள்ளலாம். 'விளைந்தவாவிளையும' என்ற பாடத்திற்கு - இனி நடக்குங் காரியம அச்சுக்கிரீவனது செய்கை நிகழ்ந்ததற்கு ஏற்றபடி நிகழும் என்று (அச்சமுறுத்துமாறு) கூறினனெனப் பொருளாம். 'விழைந்தவாவிளையும' எனபது பிரதிபேதம. (ருச)

[இதுமுதல் ஐந்துகவிகள் - இலக்குமணனுக்குத் தாரைகூறுஞ் சமாதானம்.]

ருரு. சீறுவாயல்லையையசிறியவர்தீமைசெய்தா
லாறுவாய்நீயலான்மற்றாருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
யூறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ.

(இ - ள்;) ஐய - ஐயனே! சீறுவாய் அல்லை - கோபிக்கற பாலையல்லை; சிறியவர் தீமை செய்தால் - (அறிவுமுதலியவற்றிற்) சிறியவர்கள் தீங்குசெய்தால், ஆறுவாய் - (அவற்றிற்பெரியவனான நீ) பொறுத்துத் தணிந்திருக்கக் கடவாய; (அங்ஙனமிருப்பதற்கு), நீ அலால் மற்று ஆர் உளர் - நீயல்லாமல் வேறுயார் தகுதியுடையவர் இருக்கின்றார்? [எவருமில்லையென்றபடி]; (இனி நிற்க): அயர்ந்தான அல்லன - (சுக்கிரீவன் தான சொன்ன சொல்லை) மறந்தவனல்லன; உலகம எங்கும வேறு வேறு தூதரை விடுத்து (வானரசேனைகளைத் திரட்டுதற்காக) உலகத்தில எல்லாவிடத்திலும தனித்தனி தூதரையனுப்பி, அ எல்லை ஊறும ஆ நோக்கி - அவவிடங்களிலிருந்து அசசேனைகள பலவழியாலும வந்துசேர்தலை எதிர்பார்த்துக்கொண்டு, தாழ்த்தான - தாமதித்திருக்கின்றான்; (இவைநிற்க); உதவி மாறு உதவி உண்டோ - (நீங்கள் அவனுக்குச்செய்த) உபகாரத்திற்குத்தக்கபடி (அவன உங்கட்குச்செய்யும்) பிரதியுபகாரமொன்று இருக்கின்றதோ? [இல்லையென்றபடி]; (எ - று.)

"செய்யாமற்செய்த உதவி"யும், "காலத்தினாற்செய்த நன்றி"யு மாத லால், அதற்குஈடான கைம்மாறொன்றில்லை யென்றாள். ஐய=ஸ்வாமி! தலைமைபற்றிய விளி. சிறியவர் தீமைசெய்தால் ஆறுவார் நீ அலால் மற்று ஆருளர்—"சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப் பது கடனே", ஊறுமா என்றதை 'நீறுறுவது' என்றார்போலக் கொள்க. இனி, உறும் என்பது ஊறும் என நீட்டல்விகாரம் பெற்றதென்று கொள்ளி னும் இழுக்காது. மத்திமதீபமாக 'சிறியவர் தீமை செய்தால்' என்பதை 'சீறுவாயல்லை' என்றதனோடுங் கூட்டலாம். அயர்ந்தானல்லன் - நன்றி மறந்தவனல்லன் எனினுமாம். 'உதவுமாறுதவியுண்டோ' என்பது பிரதி பேதம். (௫௫)

௫௬. ஆயிரகோடிதூதரரிக்கணமழைப்பவாணை
போயினர்புகுதுநாளும்புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுமினியநீரேதணிதிராற்றருமமஃதாற்
றீயனசெய்யாராயின்யாவரேசெறுநராவார்.

(இ - ள்.) ஆயிர கோடி தூதர் - ஆயிரங்கோடி தூதர்கள், அரி கணம் அழைப்ப - குரங்குகளின் கூட்டத்தை அழைத்துவருதற்பொருட்டு, ஆணை போயினர் - சுக்கிரீவன் கட்டளைப்படி (உலகத்தில்எங்கும்) போயிருக்கின் றார்கள்; புகுதும் நாளும் புகுந்தது - (அவ்வானரசமூகங்கள்) இங்குவந்து சேர வேண்டிய நாளும் சமீபித்தது; (அன்றியும்), புகல் புக்கோர்க்கு தாயினும் இனிய நீரே - சரணமடைந்தவர்கட்குப் பெற்றதாயைக்காட்டிலும் இனிமை செய்கின்ற நீங்களே, தணிதிர் - கோபந்தணியக்கடவீர்; அஃது தருமம் - அவ்வாறு பொறுத்தருள்வது தரும மாகும்; தீயன செய்யார் ஆயின் - தீய செயல்களைச் செய்யாமலிருப்பாரானால், செறுநர் ஆவார் யாவரே - தண்டித் தற்கு உரியராகுபவர் எவரோதாம்? (எ - று.)—'ஆல்' இரண்டும் - அசை.

தீயனசெய்து தண்டித்தற்கு உரியராய் நின்றவரது குற்றத்தைப் பொறுத்தருள்வது பெருமையாமேயன்றித் தீயனசெய்யாதாரிடம் அன்பு பாராட்டுவது சிறப்பாகாதென்பது, ஈற்றடியின் தாற்பரியம். கோடி - நூறு லக்ஷம். 'ஆயிரகோடி' - மிகப்பல என்றபடி. இத்தொடரில் வருமொழி வட மொழியாதலின், வலி இயல்பு. அரிக்கணம் - ஹரிகணம்; தற்பவமாய்த் தமி ழில் வந்தமையால், தமிழிலக்கணவிதிபற்றி வலிமிக்கது. "தாயொக்குமன் பின்" என்றபடி மக்களிடத்து அன்புவைத்தலில் தாய் சிறத்தலால், அவளை யெடுத்துக்கூறினர்; "நற்றாயினுமினியான்" என்றார் பிறரும். நீர் தணிதிர் - உயர்வுப்பன்மை யென்றாவது, இராமனை உளப்படுத்திய பன்மை யென்றா வது கொள்க. செறுநர், ந்-பெயரிடைநிலை. உங்கள்கட்டளைக்கேற்ப வென்ற பொருளுந் தோன்ற, 'ஆணைபோயினர்' எனப் பொதுப்படக் கூறினான். சரணாகதரக்ஷணத்தைக் காட்டிலும் மேம்பட்டதொரு தருமமில்லை யாதலால், 'தருமமஃது' எனப்பட்டது. 'தாயினுநல்ல,' 'யாவரோ சிறியராவார்' என் பன பிரதிபேதம். (௫௬)

௫௭. அடைந்தவர்க்கபயநீவிரருளியவளவில்செல்வந்
தொடர்ந்துநம்பணியிற்றீர்ந்தாலதுவுநுந்தொழிலேயன்றோ
மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா.

(இ - ள்.) நீவிர் - நீங்கள், அடைந்தவர்க்கு - (உங்களைச்) சரணமடைந்தவர்க்கு, அபயம் அருளிய - அபயப்பிரதானஞ்செய்து கொடுத்த, அளவு இல் செல்வம் - அளவற்ற செல்வம், தொடர்ந்து - கூடியதனால், (அச்சரணம் புக்கவர் களித்து), நம் பணியின் தீர்ந்தால் - உங்கள் கட்டளையினின்று விலகினால் அதுவும்—நும் தொழிலே அன்றோ-உங்கள் செயலாகவே கொள்ளத்தக்கதன்றோ? (இதுநிற்க): மடந்தைதன்பொருட்டு வந்த - பெண் காரணமாக நேர்கின்ற, வாள் அமர் - கொடிய போர் நிகழும், களத்து - யுத்தகளத்தில், மாண்டு கிடந்திலர் என்னின் - (நண்பர்க்காகச் சென்றுபொருது) இறந்துகிடவாராயின், பின்னும் - அதன்பின்பும், கேண்மை நிற்குமோ - (சேர்ந்தவர்க்கும் சேரப்பட்டவர்க்கும்) சிநேகம் நிலைபெறுமோ? [பெறாது என்றபடி]; (எ - று.)—ஆல் - அசை. அம்மா - ஈற்றசை.

நீங்கள் 'தயைசெய்து கொடுத்த வரம்பற்ற செல்வம் கிடைத்ததனால் அச்செல்வம் பெற்றவர் களித்து உங்கள் கட்டளையினின்று தவறினால் அதுவும் உங்கள் தொழிலாலாகியதாகவே பாவித்துப் பொறுத்தருளத்தக்கதன்றோ வென்பது, முதலிரண்டடிகளின் பொருள்: 'அருளியவளவிற் செல்வந் தொடர்ந்து நம்பணியிற்றீர்ந்தாற் சொல்லினும் பெருமையன்றோ' என்ற பாடத்திற்கு - உங்களைச்சரணமடைந்தவர்க்கு நீங்கள் அபயப்பிரதானஞ் செய்தமாத்திரத்தில் செல்வங்கிடைக்கப் பெற்றதனால் அச்சரண்புக்கவர் (மெய்ம்மறந்து) உங்கள்கட்டளையினின்றுதவறினால் சொல்லுமிடத்து (அதுவும்) உங்கள்பெருமையேயாகுமன்றோ? என்று பொருளாம். உங்களாற் கிடைத்த செல்வம் மிகக்களித்துமெய்ம்மறகும்படியான அளவினதெனப் பெருமையின்பாற்படு மென்க. வாள் அமர் - ஆயுதங்களைக்கொண்டுசெய்யும் போரெனினுமாம். நீங்கள் சுக்கிரீவனுக்கு அரசாட்சிச் செல்வத்தோடு மனைவியை மீட்டுக்கொடுத்த உபகாரத்திற்கு ஈடாக, அவன், இனிச் சீதையை மீட்டற்பொருட்டு அரக்கரோடு நேருங் கொடியபோரில் உங்கள் பக்கத்தே சென்று பொருது வெற்றி பெற்றாலும் அது கூடாதவிடத்து அவ்வெதிரிகளாற் கொல்லப்பட்டு இறந்துபோனாலும், சிநேகதருமத்தை நிறைவேற்றியதாகுமேயன்றி அங்ஙனஞ் செய்யாவிட்டால் பின்பு உங்கட்கும் அவனுக்கும் சிநேகம் நிற்குமோ வென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து. அபயம் அருளுதல் - அஞ்ச வேண்டாவென்று துணிவுகூறிப் பாதுகாத்தல்.

'அதுவும் வெந்தொழிலேயன்றோ', 'பின்னை நிற்குமோ' என்பன பிரதிபேதம். (௫௭)

௫௮. செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டு
நும்மையேயிகழ்வரென்னினெளிமையாயொழிவதொன்றோ
விம்மையேவறுமையெய்திமறுமையுமிழப்பரன்றே.

(இ - ள்.) செம்மை சேர் உள்ளத்தீர்கள்-நேர்மைபொருந்திய மனத்தையுடையவர்களான நீங்கள், செய்த பேர் உதவி தீரா - (சுக்கிரீவனுக்குச்)செய்கின்ற பெரிய உபகாரம் (என்றென்றைக்கும்) அழியாமலிருக்கும்படி, வெம்மை சேர் பகையும் மாற்றி - உக்கிரத்தன்மை பொருந்திய பகைவனையும் ஒழித்து, அரசு வீற்றிருக்க விட்டீர் - அரசாட்சி பெற்று மிக்க சிறப்புடனிருக்கும்படி செய்து விட்டீர்கள்; (அங்ஙனம் உங்களாற் பேருதவி பெற்றவர்), உம்மையே இகழ்வர் என்னின் - உங்களையே அலக்ஷியஞ்செய்வாரானால், எளிமை ஆய் ஒழிவது ஒன்றோ - இழிகுணத்தின்பாற்பட்டுப் பெருமை யொழிவது மாத்திரமோ! இம்மையே வறுமை எய்தி - (அக்கொடுவினைப்பயனால்) இப்பிறப்பிலேயே தரித்திரமடைந்து, இருமையும் இழப்பர் அன்றே-இம்மை மறுமைப்பயன்களிரண்டையும் இழந்துவிடுவானன்றோ? (எ - று.)

இம்மையிற் செல்வத்தோடு புகழும் அழிந்து மறுமையில் நற்கதிபெறுதலின்றி நரகத்தையும் அடைவ ரென்பதாம். 'மிகவும் அதிகமான நல்வினை தீவினைகளால் இப்பிறப்பிலேயே பயன் அனுபவிக்கப்படும்' என்னும் நூற்கொள்கைபற்றி, 'இம்மையே வறுமையெய்தி' எனப்பட்டது. வறுமையாவது - நுகரப்படுவன யாவு மில்லாமை. செம்மை - நல்லசிந்தனை. தீரா - தீராமல் என ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம்; தீராத என ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சமாகக் கொண்டு, நீங்கள் செய்யும் பேருதவியால் ஒழித்தற்குஅரிய வெப்பம்பொருந்திய பகைவனையும் ஒழித்து என்று உரைத்தலுமாம். 'தீர' என்ற பாடத்திற்கு - உதவியால் வெம்மைசேர்பகைவனையும் பற்றறும்படி ஒழித்து என்று பொருளாம். 'பகை' என்றது, வாலியை; பகை - பகைவனுக்குப் பண்பாகுபெயர்; உம்மை - உயர்வு சிறப்போடு எதிரதுதழுவியஎச்சமுமாம். வீறு - வேறொருவர்க்கில்லாத சிறப்பு. உம்மையே-இவ்வாறு பேருதவிசெய்த உங்களையே யென ஏகாரம் - உயர்வு சிறப்பாம். 'எளிமையாய்ஒழிவதொன்றோ' என்பதற்கு - அவவாறு இகழ்தல் அற்பமாயொழிவதொரு காரியமாமோ வென்றலு மொன்று. இம்மையே யென்ற ஏகாரம் - தேற்றத்தோடு விரைவையுங் காட்டும். அன்றே - தேற்றம்.

'அரசுவீற்றிருத்திவிட்ட', 'எழுமையுமிழப்பரன்றே' என்பன பிரதிபேதம். (௰அ)

௰௯. ஆண்டுபோர்வாலியாற்றன்மாற்றியதம்பொன்றுயின்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார்நுங்கழல்புகுந்தோரும்.

(இ - ள்.) ஆண்டு - அப்பொழுது, போர் வாலி ஆற்றல் மாற்றியது - போர்செய்தலிற் சிறந்த வாலியின் வலிமையை ஒழித்தது [வாலியைக்கொன்றது], அம்பு ஒன்று - (உங்கள்) பாணமொன்றே, ஆயின் - என்றால், துணைவர் வேண்டுமோ - (பகையழித்தற்காக உங்கட்குச்) சகாயமானவர் வேண்டுமோ? நும்பால் வில்லினும் மிக்கது உண்டோ - உங்களிடமுள்ள வில்லைக்

காட்டிலும் மேலானதொரு துணையும் உளதோ! (மற்று) நீங்கள்), தேவியை தேண்டுவார் தேடுகின்றீர் - பிராட்டியிருக்குமிடத்தைத் தேடிக்காண்பவரை வேண்டிநிற்கின்றீர்; (இவ்வளவுமாத்திரமே); நும் கழல் புகுந்துளோரும் - உங்கள் திருவடியைச் சரணமடைந்துள்ளவரான சுக்கிரீவன் முதலியோரும், அதனை செவ்வே பூண்டு நின்று உய்தல் பாலார் - அப்பணிவிடையைச் செவ்வையாய் ஏற்றுக்கொண்டு செய்துநின்று ஈடேறக் கடமைப்பட்டவராவர்.

ஆண்டு-அவ்வாறு எனினுமாம். ஆண்டுப்போரென வலிமிகாதது, ஓசை நயம்பற்றி. 'ஆண்டபோர்' என்பதும் பாடம். ஆயின் - ஆதலா லென்றது மாம். வேண்டும்என்ற சொல் - வியங்கோள்வினைமுற்றாய் ஐம்பால் மூவிடத்திற்கும் பொதுவாதலால், துணைவர் என்ற பலர்பாலுக்கு முடிக்குஞ் சொல்லாயிற்று. 'வேண்டுமோதுணைவர்' என்றதனால், நீங்கள் அசகாயசூர ரென்றவாறும்: "கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றவ" என்றான் முன்பு வாலியும். நும்பால், பால் - ஏழனுருபு. தேண்டுவார், ணகரமெய் - விரித்தல் விகாரம்.

'மாற்றியவம்பொன்றல்லால், வேண்டுமோதுணையும்' என்பது பிரதிபேதம். (ருக)

[இலக்ஷுமணன் கோபந்தணிந்தமை கண்டு அநுமான் அருகில்வருதல்.]

ருO. என்றவனுரைத்தமாற்றம்யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரநாணுட்கொண்டா
னின்றனனிற்றலோடுநீத்தனன்முனிவென்றுன்னா
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்கின்வந்தான்.

(இ - ள்.) என்று அவன் உரைத்த மாற்றம் யாவையும் இனிது கேட்டு - என்று அத்தாரை சொன்ன வார்த்தைகளை யெல்லாம் நன்றாகக்கேட்டு, நன்று உணர் கேள்வியாளன் - நன்றாகக் கேட்டுணர்ந்த நூற்கேள்விகளையுடையவனான இலக்குமணன், அருள் வர - கருணைவளர, நாண் உள் கொண்டான் நின்றனன் - வெட்கத்தை மனத்திற்கொண்டவனாய் நின்றான்; நிற்றலோடும் - அவ்வாறு நின்றவளவில், முனிவு நீத்தனன் என்று உன்னா - கோபத்தை யொழித்துவிட்டானென்று எண்ணி, வல் துணை வயிரம் திண் தோள் மாருதி - வலியபோர்த்துணையாகவுள்ள உறுதியமைந்தபலங்கொண்ட தோள்களையுடைய அநுமான், மருங்கின் வந்தான் - இலக்குமணனருகில் வந்து சேர்ந்தான் ; (எ - று.)

நாணமாவது - செய்யத்தகாத செயலைக் குறித்து உள்ளமொடுங்குதல். தகுதியல்லாதவிடத்துக் கோபங்கொண்டன மென்பது தோன்ற, நாணத்தையுட்கொண்டன னென்க. நாண் - முதனிலைத்தொழிற்பெயர்.

'நன்றுணர் கேள்வியாரென்றருள்வர நாணுக் கொண்டான்' என்பது பிரதிபேதம். (ருO)

[இலக்குமணன் அனுமனைநோக்கி ஒன்று சொல்லுதல்.]

௯௧. வந்தடிவணங்கிநின்றமாருதிவதனநோக்கி
யந்தமில்கேள்விநீயுமயர்த்தனையாகுமன்றே
முந்தினசெய்கையென்றான்முனிவினுமுளைக்குமன்பா
னெந்தைகேட்டருளுகென்னுவியம்பினனியம்பவல்லான்.

(இ - ள்) முனிவினும் முளைக்கும் அன்பான் - கோபங்கொண்டசமயத்திலும் தோன்றுகின்ற அன்பையுடையவனான இலக்குமணன்,—வந்து அடி வணங்கி நின்ற மாருதி வதனம் நோக்கி - அருகில வந்து (தனது) பாதங்களில் நமஸ்கரித்துநின்ற அநுமானுடைய முகத்தைப் பார்த்து,—'அந்தம் இல் கேள்வி நீயும் - அளவில்லாத நூற்கேள்விகளையுடைய நீயும், முந்தின செய்கை அயர்த்தனை அன்றே - முனபுநடந்த செய்தியை மறந்துவிட்டாயன்றோ?' என்றான் - என்றுசொன்னான்; (அதுகேட்டு), இயம்ப வல்லான - பேசுதலில்வல்லவனான அநுமான, எந்தை கேட்டு அருளுக எனனு - 'எமது தலைவனே! (அடியேனசொலவதைக்) கேட்டருள்வாயாக' என்றுசொல்லி, இயமபினன - மற்றும் கூறலானான; (எ - று.)--அதனை, அடுத்த ஆறுகவிகளிற் காண்க. ஆகும் - அசை.

அன்றே - தேற்றம். முந்தினசெய்கை - மழைக்காலங் கழிந்தவுடன் சேனையோடு வரவேண்டு மெனபது. எந்தை-அண்மைவிளி. 'ஆகுமன்றோ', 'இயம்பல்வல்லான' என்பன பிரதிபேதம. (௯௧)

௯௨. சிதைவகல்காதற்றாயைதந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன்மாயா
வுதவிகொன்றார்க்கொன்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ.

(இ - ள்.) சிதைவு அகல் காதல் தாயை - கெடுதலில்லாத அனபையுடைய தாயையும், தநதையை - தந்தையையும், குருவை குருவையும், தெய்வம் பதவி அந்தணரை - தெய்வததனமையையுடைய பிராமணாகளையும், ஆவை - பசுக்களையும், பாலரை - சிசுக்களையும, பாவைமாரை - மகளிரையும், வதை புரிகுநர்க்கும் - கொலைசெய்தவாகளுக்கும், மாறறல் ஆம ஆற்றல் உண்டு ஆம் - (அந்தப்பாவங்களைப) பரிகரிககததகக உபாய முளதாம; மாயா உதவி கொன்றார்க்கு - அழியாத உபகாரத்தை மறந்தவர்கட்கோ, ஒழிக்கல் ஆம் உபாயம் ஒனறேனும உண்டோ - (அபபாவததை) ஒழிக்கும் வழி யொனறாயினும் உளதோ? [இல்லை யெனறபடி] (எ - று.)

மாத்ருஹத்தி, பித்ருஹத்தி, குருஹத்தி, பிரமஹத்தி, பசுஹத்தி, சிசுஹத்தி, ஸதிரீஹத்தி யெனனும கொடும்பாதகங்களுக்கெல்லாம அப்பாவம் நீங்கும் பரிகாரமாகிய பிராயச்சித்தம் உண்டு; செய்ந்நன்றி மறத்தலுக்கோ அது இல்லை யென்பதாம. இதனால், மகாபாதகங்களைந்தினுங் கொடியது இதுவென செய்ந்நன்றி கொல்லுதலின் மிக்ககொடுமை கூறப்பட்டது.

"எந்நன்றிகொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருக்குறளும், "ஆன்முலை, யறுத்த அறனிலோர்க்கும், மாணிழைமகளிர் கருச்சிதைத்தோர்க்கும், பார்ப்பார்த்தப்பிய கொடுமை யோர்க்கும், 'வழுவாய்மருங்கிற் கழுவாயுமுளவென, நிலம்புடைபெயர்வதாயினு மொருவன, செய்திகொன்றார்க் குய்தியில்லென, அறம்பாடிற்றே" என்ற புறநானூறும் நோக்கத்தக்கன.

தாய் அன்பிற்சிறத்தல்பற்றி, அவட்கு 'சிதைவகல்காதல்' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது. இனி, இவ்விசேஷணத்தைத் தந்தைமுதலியோர்க்கும் கூட்டி யுரைத்தலு மொன்று. தாயை முதலில்வைத்தது, சிறப்புப்பற்றி. தாய் தந்தை ஆசாரியன இவர்களை முறையே நிறுத்தியது வேதமும். குருவென்ற வடசொல், அஜ்ஞாநமாகிய மனவிருளை யொழிப்பவனென்று காரணப்பொருள்பெறும்; கு - இருள, ரு - ஒழிபபவன். தெய்வப் பதவியந்தணர் - தெய்வம்போலக் கொண்டாடததக்க சிறப்பு நிலைமையையுடையராகிய பிராமணர்; "கரியமாலினுங் கண்ணுதலானினும், உரியதாமரைமேலுறைவானினும், விரியும்பூதமோரைந்தினும் மெய்யினும், பெரியரந்தணர் பேணுதியுளத்தால்" எனறு அயோத்தியாகாண்டத்திற்கூறியதுங் காண்க. அந்தணர்க்கு 'பூதேவர்' என ஒருபெயரிருத்தலும் உணரத்தக்கது. தெய்வப்பதவி - சாபாநுக்கிரகசக்தியுமாம். பாவைமார் - சித்திரப்பதுமைபோலழகியவர். மாயாஉதவி - பயனழியாத உபகாரம்; மறக்கத்தகாத நனறி.

'சிதைவிலாக்காதல்', 'என்றேனும்', 'எங்கேனும்' எனபனபிரதிபேதம்.

௬௩. ஐயநும்மோடுமெங்களரிக்குலத்தரசனோடு
மெய்யுறுகேண்மையாகமேலைநாளவிளைவதாய
செய்கையென்செய்கையன்றோவன்னதுசிதையுமாயி
னுய்வகையெவர்க்குமுண்டோவுணர்வுமாசுண்டதன்றோ.

(இ - ள்.) ஐய - ஸ்வாமி! நும்மோடும் - உங்களுக்கும், எஙகள அரி குலத்து அரசனொடும - வாநரசமூகங்கட்கு அரசனுகும எங்கள் சுக்கிரீவனுக்கும், (ஒருவரோடொருவர்க்கு), மெய் உறு கேண்மை ஆக - உண்மைபொருந்திய சிநேகமுண்டாகுமபடி, மேலை நாள விளைவது ஆய - முன்னாளிலுண்டான, செயகை - செயல், என் செய்கை அனறோ எனதுசெயலனறோ? அனனது சிதையும் ஆயின - அந்தச்சிநேகதருமம் அழியுமானால், உய்வகை எவர்க்கும் உண்டோ - (அந்ததீவினையினின்று) தப்புமவகை (சிநேகித்தவனான சுக்கிரீவனுக்கேயனறிச் சிநேகஞ்செய்வித்தவனான எனக்கு முளபட) யாவர்க்கும் உளதோ? [இல்லையெனறபடி]; (அனறியும, அங்ஙனமானால), உணர்வு மாசு உண்டது அனறோ - (எங்கள்) அறிவெல்லாம் குற்றமடைந்ததாகுமன்றோ? (எ - று.)

'உணர்வுமாசுண்டதன்றோ' என்றது, உங்கள்கருணையைப் பெற்ற நாங்கள் அறிவுகெட்டு இழிவடைவோமோ? எனற குறிப்பு.

'எனக்குமுண்டோ' எனறது பிரதிபேதம். (௬௩)

௩௪. தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத் திறமுமற்றும்
யாவருநீரேயென்பதென்வயிற்கிடந்ததெந்தா
யாவதுநிற்கசேருமரணுண்டோவருளுண்டன்றே
மூவகையுலகுங்காக்குமொய்ம்பினீர்முனிவுண்டானால்.

(இ - ள்.) எந்தாய் - எமது தலைவனே! தவமும் - (முற்பிறப்புக்களிலும் இப்பிறப்பிலும் நாங்கள்செய்த) தவமும், செய்யும் நல் அறம் திறமும்- (மற்றும்நாங்கள்) செய்த நல்ல தருமகாரியங்களின வருக்கமும், தேவரும் - தேவர்களும், மற்றும் யாவரும் - மற்றும் (மேம்பாடுடையாரான) எத்திறத்தாரும், நீரே - (எங்கட்கு) நீங்களே, என்பது - என்கிற கருத்து, என்வயின் கிடந்தது - என்னிடத்திற் பொருந்தியுள்ளது; ஆவது நிற்க - அது இருக்கட்டும், மூவகை உலகும் காக்கும மொய்ம்பினீர் முனிவு உண்டு ஆனால் - மூன்று வகைப்பட்ட உலகங்களையும் பாதுகாக்கும் ஆற்றலுடையாரான நீங்கள் (எங்களமேற்) கோபமுடையீரானால், சேரும் அரண் உண்டோ - (நாங்கள்)சென்று சேர்ந்துதப்பி உய்யும் பாதுகாவலுளதோ? [இல்லையென்றபடி]; அருள அன்றே உண்டு - (அதறகும உங்கள்) கருணைதானே கதியாக உளதாவது; (எ - று.)

'செய்யும' என்பதை 'தவமும்' என்றதனோடும், 'மற்றும்' என்பதை 'நல்லறததிறமும்' என்றதனோடும் கூட்டுக. அன்றே - தேற்றம். மொய்ம்பின் நீர் என்று பிரித்து முறைக்கலாம. 'உண்டு' என்ற பொதுவினை, இங்கே செயப்படுபொருள் குன்றுததாகவும, முன்னிலைப்பனமையாகவும் நின்றது. "எங்குப்போயுய்கே னுன்னிணையடியேயடையிலலால், எங்கும்போய்க் கரைகாணாது எறிகடல்வாய்மீண்டேயும், வங்கத்தின்கூம்பேறும் மாப்பறவை போன்றேனே" என்றாற்போல உங்களோடு மாறுபட்டவர்க்கு உங்கள் கருணையேயன்றிக் கதிவேறில்லை யென்றதாம்.

'யாவையும்', 'நிற்கச்சேரும', 'அருளுண்டன்றே,' 'எம்வயின,' 'அருளுண்டன்றேல்,' 'அருளுண்டன்றி', 'அருளுணடாகி', 'உலகங்காககும்,' 'மொய்மபினிர்' என்பன பிரதிபேதம். (௩௪)

௩௫. மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பாரைத
திறந்திறமேவியன்னார்சேர்வதுபார்த்துத்தாழ்ததா
னறந்துணைநமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயிற்
பிறந்திலனன்றேயொன்றோநரகமுமபிழைப்பதன்றால்.

(இ - ள்.) கவியின் வேந்தன் - வாநரராஜனான சுக்கிரீவன், மறந்திலன் - (உங்களகட்டளையை) மறந்தானில்லை; வய படை வருவிப்பாரை - வலிமையுள்ள வாநரசேனைகளை யழைத்துவருந் தூதர்களை, திறம திறம் ஏவி - கூறுகூறாக இடங்தோறும் அனுப்பி, அன்னார் சேர்வது பார்த்து தாழ்த்தான் - அவ்வாநரர்கள் வந்து சேர்வதை எதிர்பார்த்துக்கொண்டிருத்தலினால் தாமதித்தான்; (இதுவேயன்றி), அறம் துணை நமக்கு தன் வாய்மையை அழிக்

கும் ஆயின் - தருமத்திற்குத் துணையாகவுள்ள உங்கள் விஷயத்தில் தனது சத்தியத்தை யிழப்பனானால், பிறந்திலன் அன்றே - (அச்சுக்கிரீவன் இவ் வுலகத்திற் பிறந்தும்) பிறவாதவனேயாவனன்றோ? ஒன்றோ - இது மாத்திரமோ? நரகமும் பிழைப்பது அன்று - (அவனுக்கு மறுமையில்) நரகமும் தவறாது; (எ - று.)—தான், ஆல் - அசைகள்.

தருமத்தைப்பாதுகாப்பவர்களான உங்களிடத்திற் சுக்கிரீவன் தான் சொன்ன சொல்லைத் தவறுவனானால் அவன்சனமம் ஸபலமாகாது; அதுவுமன்றி, அவன் தவறாமல் நரகமுமடைவன் என்பதாம். பிறப்பெடுத்ததன் பயன் ஆன்றோர்க்குத் துணைசெய்வதென்பது போதரும். 'அறந்துணை...... பிறந்திலனன்றே'—"ஆற்ற, அறஞ்செய்தருளுடையீராகுமின் யாரும், பிறந்தும்பிறவாதாரில்" என்றார் நாலடியாரிலும்.

'அன்னார்செய்கையிற் சிறியனானான்', 'அன்னான்செம்மையிற்சிறியனானன்,' 'சேர்வதுபார்த்தேதாழ்ததான்' என்பன பிரதிபேதம். (௬௫)

௬௬. உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதயானையனையமைந்தமற்றுமுண்டாகவற்றே
சிதையாதசெருவிலன்னான்முன்சென்றுசெறுநர்மார்பி
லுதையானேலுதையுண்டாவியுலையானேலுலகின்மன்னோ.

(இ - ள்.) மதம் யானை அனைய மைந்த - மதங்கொண்ட யானையைப் போன்ற இளவீரனே!—உதவாமல் ஒருவன் செய்த உதவிக்கு கைம்மாறு ஆக-(தான் ஒருவனுக்கு) ஒருதவியுஞ்செய்யாமலிருக்கையில் தனக்கு அவன் செய்த உபகாரத்திற்குப் பிரதியுபகாரமாக, சிதையாத செருவில் - கெடுதலில்லாத போரில், அன்னான்முன் சென்று - அவனுக்குமுன் (தான் துணையாகச்) சென்று, செருநர் மார்பில் - (அவனது) பகைவரது மார்பிலே, உதையான் எல் - உதைத்திடானாயினும்,—உதையுண்டு - (அப்பகைவரால் தான்) உதைபட்டு, ஆவி உலையான் எல்-உயிரொழிந்திடானாயினும்,— உலகில் உலகத்தில் மற்றும் உண்டாக வற்றோ - வேறு கைம்மாறு உள்ளதாக வல்லதோ? [இல்லை யென்றபடி]; (எ - று.)—மன், ஓ-ஈற்றசை.

"செய்யாமற்செய்தவுதவிக்குவையகமும்,வானகமுமாற்றலரிது" என்றபடி ஒருவன் செய்யாமற்செய்த உதவிக்குக் கைம்மாறொன்று மில்லை யென்பது நூற்கொள்கையாயினும், அவனுக்குமுன்னே அவனுக்காகத் தானே போர்க்களத்துச் சென்று அவன் பகைவரை யழித்தாலும், அது முடியாவிடின் அப்பகைவர்கையால் தான் உயிர்மாய்ந்தாலும் ஒருவாறு ஈடாகலாம்; இவையன்றி வேறென்ன இருக்கின்றது? என்பதாம். போரிற்புண்படுதற்கு ஏற்ற இலக்காதலால், மார்பு கூறப்பட்டது. மதயானையுவமை - கோபத்தை அடக்கவேண்டியசமயங்களில் அடக்கி வெளிப்படுத்தவேண்டியசமயத்தில் வெளிப்படுத்துதல், வலிமை, மேன்மையானதோற்றம், நடை என்னும் இவற்றிலாகும்.

கைம்மாறாகச் சென்று உதையானேல் உலையானேல் மற்றும் உண்டாக வற்றோ என வினைமுடிக்க.

'கைம்மாறின்மை', 'மதவானை', 'மாறுமுண்டாகவற்றோ', 'செருவினான்முன்சென்றுசென்றன்னிமார்பத்து', 'உதைப்புண்டாவியுலவானேல்' என்பன பிரதிபேதம். (கூசு)

கூஎ. ஈண்டினிநிற்றலென்பதினியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங்கேண்மைதீர்வினையிற்றாமா
லாண்டகையாளிமொய்ம்பினையநீரளித்தசெல்வங்
காண்டியாலுன்முன்வந்தகவிக்குலக்கோனொடென்றான்.

(இ - ள்.) ஆண் தகை ஆளி மொய்ம்பின் ஐய - ஆண்மைக் குணமுடைய [பராக்கிரமத்தையுடைய] சிங்கம்போன்ற வலிமையோடு கூடிய தலைவனே! ஈண்டு இனி நிற்றல் என்பது - (நீ) இவ்விடத்தில் இப்போது நிற்பது, இனியது ஓர் இயல்பிற்று அன்று - நன்மையானதொரு தன்மையையுடையதாகாது; வேண்டலர் அறிவர் எல் - (இச்செய்தியை எமது) பகைவர் அறிவாராயின், நம் கேண்மை தீர் வினையிற்று ஆம் - (அது எங்கட்கு) நமது சிநேகம் நீங்குதற்கு உரிய காரியமாய் முடியும்; நீர் அளித்த செல்வம் - (வாலிவதஞ்செய்து) நீங்கள்கொடுத்த செல்வத்தையும், உன்முன் வந்த கவி குலம் கோனொடு - உனக்கு முன்பிறந்தவனான [தமையன் முறை பாராட்டக்கூடிய] வானரசாதிக்கரசனாகிய சுக்கிரீவனையும், காண்டி - (உள்ளே வந்து) பார்ப்பாயாக, என்றான் - என்று கூறினன், (அநுமான்); (எ - று.) —'ஆல்'மூன்றும் - அசை.

வானரர்கள் வாயிலையடைத்துக் குன்றுகளையடுக்கியது முதலியன, உனது சீற்றத்தைக்கண்டு அஞ்சியதனால் நிகழ்ந்த செய்கைகளே; இவற்றை நீ இவ்வாறுகருதாமல் உம்மோடுமாறுபட்டுச் செய்தனவாகக்கொண்டு கொதுமலன்போல இங்கு நிற்பின், அதுகண்ட நமதுமாற்றார் உனது சீற்றத்தை மிகுவித்து நம் இருதிறத்தார்க்கு முள்ள நட்பைக் கெடுத்தற்குக் காரணமாகும். ஆதலால், நீ உள்ளேவந்து நீங்களளித்த செல்வத்தினால் சிறப்புப்பெற்றிருக்கின்ற சுக்கிரீவனைக் கண்டு சீற்றந்தணிவாயாக வென்று இலக்குமணனை அநுமான் வேண்டினனென்க. சுக்கிரீவனைக்காணவந்த இலக்குமணனை உள்ளே அழைத்துச்செல்வதற்குச் சுக்கிரீவனது பிரதானமந்திரியான அநுமான் தகுந்தவனென்க. இனி, இரண்டாமடிக்கு-நீஇவ்வாறுவெளியில்நிற்பதைப் பகைவர் அறிந்தால் சிநேகமற்றசெய்கையாகவே தோன்றும் எனப் பொருள் கூறுவாருமுளர். ஆளி - சிங்கம்; 'யாளி' என்றுமெடுக்கலாம். இனி, யாளி - யானையைக்கொல்லவல்லதும் தும்பிக்கையையுடையதுமான சிங்கம்போன்றதொரு மிருகவிசேடமுமாம். இராமபிரான் சுக்கிரீவனைத் தனது முதல்தம்பியாகிய பரதனைப் போலக் கருதியிருக்கின்றானென்பது மேல் "பரதனீயினையனபகரற்பாலையோ" என்பதனாற் பெறப்படுதலாலும், 'உன்தம்முனைச்சார்தியென்றான்" என்று வருதலாலும், பரதனைப்போலவே சுக்கிரீவனும் லக்ஷ்மணனால் தமையன்முறையாகக் கொள்ளத்தக்கவ

னென்பது போதருதலால், 'உன்முன்வந்தக்கவிக்குலக்கோன்' எனப்பட்டது; ஸ்ரீவால்மீகிபகவானும் தாரையானவள் சுக்கிரீவனிடத்து வருமாறு இலக்குமணனை நோக்கிக் கூறும் சந்தர்ப்பத்தில் "த்வத்ப்ராதரம் வாநரவம்ஶநாதம்" என அருளியிருத்தல் காண்க. அறிவரேனும் என்று எடுத்து, உம்மையை இசைநிறையாகக்கொள்வாருமுளர். 'நீர்' என்றது - இராமபிரானை உளப்படுத்தியது.

'ஆண்டகையருளின்', 'ஆண்டகைவாளிமொய்ம்பின்' என்று பிரதிபேதம். (கஎ)

[அநுமன்வார்த்தையால் இலக்குமணன் சீற்றந்தணிதல்.]

கஅ மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தா
னாரியனருளிற்றீர்ந்தானல்லன்வந்தடுத்தசெல்வம்
பேர்வரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி.

(இ - ள்.) மாருதி மாற்றம் கேட்ட - அநுமான்கூறிய வார்த்தையைக் கேட்ட, மலை புரை வயிரம் தோளான் - மலையையொத்த உறுதியான தோள்களையுடையவனான இலக்குமணன்,—தீர்வினை சென்றநின்ற சீற்றத்தான் - நீங்குதல் தொழில் பொருந்திய கோபமுடையவனாய் [கோபம் தணிந்தவனாய்], 'வந்து அடுத்த செல்வம் பேர்வு அரிது ஆக செய்த சிறுமையான் - (தனக்குக்) கிடைத்த செல்வம் (தன்னைவிட்டு) அப்பாற்பெயரவொட்டாமற் செய்ததனாலுண்டாகிய இழிகுணத்தையுடையவனான சுக்கிரீவன், ஆரியன் அருளின் தீர்ந்தான் அல்லன் - இராமபிரானது கட்டளையினின்று (உண்மையாக) நீங்கினவனல்லன்', என்னும் பெற்றி - என்னுந்தன்மையை, சிந்தை செய்தான் - மனத்திற் கருதினான்; (எ - று.)

இச்சுக்கிரீவன் சொன்ன தவணைப்படி வாராது உபேக்ஷித்திருந்தது செல்வக்களிப்பினால் தான்செய்யவேண்டியது இன்னதென அறியாமல் மறந்ததனாலாகுமேயன்றி இராமபிரானது கட்டளையை மீறவேண்டுமென்னும் எண்ணம் இவனுக்குச் சிறிதுமில்லை யென்று அநுமன்வார்த்தையால் தெளிந்து இலக்குமணன் தான்கொண்டகோபம் முழுதும்ஆறினனென்க. எவ்வளவு பெருஞ்செல்வம் பெற்றிருந்தாலும் தாமரையிலையில் நீர்போலத் தோய்ந்தும் தோயாதுநிற்கும் பெரியோர்போலன்றிச் சுக்கிரீவன் தனக்குக் கிடைத்த செல்வத்தினாற் போகத்திற் பரவசப்பட்டு மூழ்கினவனாய்த் தான் செய்யவேண்டியசெயல்களைச் செய்யாதுநின்றதுபற்றி, அவனை, 'செல்வம் பேர்வரிதாகச்செய்தசிறுமையான்' என்றார். பின்னிரண்டடிக்கு - இராமபிரானதுகட்டளையினின்று சுக்கிரீவன் உண்மையாகவே நீங்கினவனல்லன்; தனக்குக்கிடைத்த செல்வம் பிறிதொன்றிற் செல்லவொட்டாதபடி மனத்தைப்பிணித்த இழிகுணத்தினால் (ஆரியன் கட்டளையை நீங்கினான்போலும்) என்றும் உரைகூறலாம். முந்தியவுரையில், சிறுமையான் - பெயர்; இவ்வுரையில், மூன்றாம் வேற்றுமைவிரி.

'சேர்வினைசென்றநின்ற,' 'தீர்வினைச்சென்றுமின்ற', 'தீர்ந்தாரல்லர்', 'பேர்வகையாகச்செய்த' என்பன பிரதிபேதம். (கூஅ)

[இலக்குமணன் அநுமானைநோக்கிக் கூறத்தொடங்குதல்.]

கூகூ. அனையதுகருதிப்பின்னரரிக்குலத்தவனைநோக்கி
நினைவொருமாற்றமின்னேநிகழ்ந்துவதுளதுநின்பா
லினையனவுரைக்கற்கேற்றவெண்ணுதியிவைநீயென்று
வனைகழல்வயிரத்திண்டோண்மன்னிளங்குமரன்சொல்வான்.

(இ - ள்.) அனையது கருதி - (இவ்வாறு) அதனைப்பற்றிச் சிந்தித்து, பின்னர் - பிறகு, வனை கழல் வயிரம் திண் தோள் மன் இளங் குமரன் - (வீரக்கழலை) அணிந்த பாதங்களையும் மிகவும்வலியதோள்களையு முடைய அரசிளங்குமரனான இளையபெருமாள்,—அரி குலத்தவனை நோக்கி - வானர சாதியனான அநுமானைப் பார்த்து, 'இன்னே நினை ஒரு மாற்றம் நிகழ்த்து வது உளது - இப்பொழுதே உன்னிடத்தில் (யான்) ஒருவார்த்தை சொல்ல வேண்டுவதுண்டு; இனையன நின்பால் உரைத்தற்கு ஏற்ற - இவ்வார்த்தைகள் உன்னிடத்திற்சொல்லுதற்குத் தகுதியுடையவை; (ஆதலால்), நீ இவை எண் ணுதி நீ இவ்வார்த்தைகளை ஆலோசிப்பாயாக', என்று சொல்வான் - என்று கூறத்தொடங்கினான்; (எ - று.)—அவற்றை, அடுத்தஐந்துகவிகளிற் காண்க.

நினை-வேற்றுமைமயக்கம். ஏற்ற 'அன்' சாரியை பெறாத பலவின்பால் முற்று. ஒருமாற்றம் நிகழ்த்துவதுளது, இனையனவுரைத்தற்கேற்ற, இவை - பன்மையொருமைமயக்கம்.

'இனையனபுணர்த்தற்கேற்ற' என்றும் பாடமுண்டு. (கூகூ)

[இதுமுதல் ஐந்துகவிகள் - இலக்குமணன்வார்த்தை.]

எ௦. தேவியைக்குறித்துச்செய்தசீற்றமுமானத்தீயு
மாவியைக்குறித்துநின்றவையனைஅதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற்றசெய்கைகருதுவல்பழியும்பாரேன்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்

(இ - ள்.) தேவியைக் குறித்து செய்த சீற்றமும் - சீதாபிராட்டியை (இராவணன் கவர்ந்துசென்றதைக்) குறித்துக் கொண்ட கோபமும், மானம் தீயும் - மானமாகிய நெருப்பும், ஐயனை ஆவியை குறித்து நின்ற - இராம பிரானை உயிரைப்பற்றி வருத்திநின்றன; அதனை கண்டேன் - அவ்வாறு வருத்துதலைக் கண்கூடாகக்கண்ட நான்,—கோ இயல் தருமம் நீங்க - அரசர்கட்குஉரிய தருமம் ஒழிய, கொடுமையோடு உறவு கூடி - கொடுந்தன் மையோடு உறவுகொண்டு [மிகவுங்கொடுமையாக], பாவியர்க்கு ஏற்றசெய்கை கருதுவல் - பாவிகளைத்தண்டித்தற்குஉரிய செயல்களைச் செய்யநினைப்பேன்; பழியும் பாரேன் - (அதனால் எனக்கு நேரும்) அபகீர்த்தியையுஞ் சிறிதும் லக்ஷியஞ்செய்யமாட்டேன்; (எ - று.)

"பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த், துள்வேர்ப்ப ரொள்ளியவர்" என்றபடி காலம்பார்த்து ஆறியிருத்தல் அரசர்க்குக் கடமையா யிருக்கவும், இராமபிரானுக்குநேர்ந்த துன்பங்களைக் கண்டு ஆற்றாமல் இலக்குமணன் 'கோவியல்தருமம்நீங்க - செய்கைகருதுவல்' என்றான். மானம் = அபிமானம்: மானத்தைத் தீயாக உருவகப்படுத்தியது, உயிரை எரித்து வருத்துவதனால். பாவியர்க்கேற்ற செய்கை - துஷ்டநிக்கிரகம். பழி - அரச தருமத்தைக் கைக்கொள்ளாமையால் வரும் அபகீர்த்தி.

ஐயனை ஆவியைக் குறித்துநின்ற - இரண்டு செயப்படுபொருள் வந்த செய்வினை: இது, வடமொழியில் த்விகர்மகர்த்தரிப்ரயோக மெனப்படும்; ஐயனது ஆவியையென உருபுமயக்கமுமாம். கண்டேன் - பெயர். கோ இயல் தருமம் - ராஜதர்மம்.

'குறித்துச்சென்ற', 'குறித்துச்செற்ற', "'அதனைக்கண்டே', 'செய்யக் கருதுவல்' என்பன பிரதிபேதம். (௭௰)

௭௧. ஆயினுமென்னையானேயாற்றிநின்றாவியுற்று
நாயகன்றனையுந்தேற்றநாள்பலகழிந்தவன்றேற்
றீயுமிவ்வுலகமூன்றுந்தேவரும்வீவரொன்றோ
வீயுநல்லறமும்போகாவிதியையார்விலக்கற்பாலார்.

(இ - ள்.) ஆயினும் - ஆனாலும், என்னை யானே ஆற்றி நின்று - என் கோபத்தை யானேயே தணித்துக்கொண்டு, ஆவி உற்று - உயிர்தரித்திருந்து, நாயகன்தனையும் தேற்ற - இராமபிரானையும் தேறுதல் செய்வதற்கே, நாள் பல கழிந்த - பலநாள்கள் கழிந்திட்டன; அன்று எல் - அல்லாவிட்டால் [எங்களிருவர்க்குங் கோபந்தணியாதிருந்தால்], இ உலகம் மூன்றும் தீயும் - (எங்கள் கோபத்தினால்) இந்த மூன்று உலகங்களும் தீந்துபோம்; தேவரும் வீவர் - தேவர்களும் இறந்தொழிவர்; ஒன்றோ - இதுமாத்திரமோ? நல் அறமும் வீயும் - சிறந்ததருமங்களும் அழிந்தொழியும்; போகா விதியை விலக்கல் பாலார் யார் - அழியாமல் நிலைத்திருத்தற்குரிய ஊழ்வினையை நீக்குதற்கு உரியவர் எவர்? (எ - று.)

எங்கள் கோபந்தணியாதிருந்தால் உலகமூன்றும் தேவரும் நல்லறமும் அழிந்தேதீரவேண்டியிருக்கும், அவற்றினுடைய நல்வினைப்பயனாலேயே எங்கள்சீற்றந் தணிந்த தென்றவாறு. இலக்குமணன் தமக்குநேர்ந்த துயரை நினைந்து விதியைநொந்து 'போகாவிதியை யார்விலக்கற்பாலார்' எனக் கூறினானுமாம்.

'ஆவிநைந்து', 'நாள்பலகழித்தேனன்றேல்,' 'வீவரன்றே', 'போராதா ரதுவிலக்கற்பாலார்', 'விதியெவர்விலக்கற்பாலார்,' 'விதியதுவிலக்கற்பாலார்' என்பன பிரதிபேதம். (௭௧)

௭௨. உன்னைக்கண்டுங்கோன்றன்னையுற்றிடத்துதவும்பெற்றி
யென்னைக்கண்டனன்போற்கண்டிந்நாளிடைநெடிதுவைகித்
தன்னைக்கொண்டிருந்தேதாழ்த்தானன்றெனிற்றனுவொன்றாலே
யின்னைக்கண்டனையாடன்னைநாடுதல்விலக்கப்பாற்றோ.

(இ - ள்.) உன்னை கண்டு - (இராமபிரான் முதலில்) உன்னைப்பார்த்து, (உன்மூலமாக), உற்ற இடத்து உதவும் பெற்றி - ஆபத்துநேர்ந்த காலத்தில் உதவிசெய்யுந் தன்மையினால், உம் கோன் தன்னை - உங்களரசனான சுக்கிரீவனை, என்னை கண்டனன் போல கண்டு - என்னை நினைத்துக்கொண்டிருப்பதுபோலவே பார்த்து [எனனிடத்திற்போலவே விசேஷமாக அபிமானித்துத் தம்பியாகப் பாவித்துச் சிநேகித்து], இ நாளிடை நெடிது வைகி - இத்துணைநாள் வரையில் நெடுங்காலங்கழித்து, தன்னை கொண்டிருந்தே தாழ்த்தான் - தன்னுயிரை அரிதில்தாங்கிப் பொறுத்திருந்தான்; அன்று எனின் - அல்லாவிட்டால், தனு ஒன்றாலே - (தனது) வில்லொனறினாலே, மின்னை கண்டு அனையாள் தனனை நாடுதல் - மின்னலைக்கண்டாற்போன்ற உருவத்தை யுடையளான சீதையைத் தேடுதல், விலக்கல் பாற்றோ - (பிறரால்) தடுக்குந் தன்மையதோ? [எவராலும் தடுக்கமுடியா தெனறபடி]; (எ - று.)

இடருற்றபோது உதவுபவனென்றெண்ணி, என்னிடத்திற்போலவே மிக்க அன்பு வைத்து, உனமூலமாகச் சுக்கிரீவமகாராஜனைச் சிநேகஞ்செய்து, உங்கள் மூலமாகக் காரியத்தை முடித்துக்கொள்ளலா மென்றே இராமபிரான இதுவரையிற் பொறுத்திருந்தான்; அவன இவவாறு இருந்தது உங்கட்கு ஒருசிறப்பை விளைக்க வேண்டுமென்ற எண்ணத்தினாலாகுமேயன்றி, தனக்கு வல்லமையின்மையா லன்று; நினைத்தால், தனது வில்லொன்றினாலே பகைவரைத் தொலைத்துச் சீதையைமீட்க இராமபிரானால் எளிதில்முடியு மென்பதாம். (பெற்றியாற்) கண்டு என்க. உங்கோன தன்னை உற்றிடத்துதவும்பெற்றி யெனனைக்கண்டனன்போற் கண்டு என்பதற்கு - உங்கோன்தன்னை உற்றிடத்துதவம் பெற்றியையுடைய என்னைக் கண்டாற்போலவே கண்டு என்றும் உரைக்கலாம்.

'பெற்றிக், கென்னைக்கண்டனனதோர்ந்து', 'பெறறி, யென்னைக்கண்டன்னதோர்ந்து', 'எத்துணைநெடிதுவைகி', 'தன்னைக்கண்டனனே தாழ்ந்தான்' எனபன பாடாந்தரம். (எஉ)

எங. ஒன்றுமோவானமன்றியுலகமும்பதினாலுள்ள
வென்றிமாக்கடலுமேழுமலையுள்ளவென்னவேயாய்
நின்றதோரண்டத்துள்ளேயெனினதுநெடியதொன்றோ
வன்றுநீர்சொன்னமாற்றந்தாழ்வித்ததறுமமன்றால்.

(இ - ள்.) வானம் ஒன்றுமோ - ஆகாய மொன்றுமாத்திரமோ? அன்றி - அதுவல்லாமல், பதினால் உள்ள உலகமும் - பதினான்காக உள்ளனவாகிய உலகங்களும், வென்றி மா கடல் எழும் - வெற்றியையுடைய பெரிய எழு கடல்களும், மலை எழ் (உம்) - குலபர்வதங்களேழும், உள்ள - இருக்கின்றன; என்னவே ஆய் நின்றது - என்று சொல்லும்படி நிற்பதாகிய, ஓர் அண்டத்துள்ளே - ஒருலகவுருண்டைக்குள்ளே, (ஏதேனுமோரிடத்தில்), எனின் - (சீதாபிராட்டியிருக்கின்றாள்), என்றால், அது - அவவிடத்தைத் தேடிக்கண்டு மீட்டுக்கொணர்தல், நெடியது ஒன்றோ - (இராமபிரானது வில்லுக்குப்)

பெரியதொரு காரியமாகுமோ? (ஆயினும்), அன்று நீர் சொன்ன மாற்றம் தாழ்வித்தல் - அப்போது [முன்னே] நீங்கள்சொன்ன சொல்லை நிறைவேற்றாது தாமதித்தல், தருமம் அன்று - (உங்களுக்குத்) தருமமாகாது; (எ-று.)— ஆல் - ஈற்றசை.

பெரிய இவ்வண்டகோளத்தில் எங்கிருந்தாலும் தன் வில்லொன்றினாலேயே சீதாபிராட்டியை மீட்டல் இராமபிரானுக்கு அரியதொரு தொழிலன்று. ஆயினும், யான் சினந்து இங்கு வந்தது, நீங்கள் சொன்னசொற்படி நடவாமல் தருமவிரோதமாகத் தாமதித்ததனாலேயே யென்பதாம். உலகம் பதினான்கு - அதலம் விதலம் ஸுதலம் தராதலம் ரஸாதலம் மகாதலம் பாதாளம் என்னும் கீழேழுலகங்களும், பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் ஸத்யலோகம் என்னும் மேலேழுலகங்களும். பிரளயகாலத்தில் உலகத்தைப் பொங்கியழிக்குந் தன்மையுடையதாதலால், 'வென்றிமாக்கடல்' என்றார். கடல் ஏழு - உவாநீர் கருப்பஞ்சாறு தேன் நெய் தயிர் பால் நன்னீர் இவற்றின்மயமானவை, மலை யேழு - கைலை இமயம் மந்தரம் விந்தம் நிடதம் ஏமகூடம் நீலகிரி எனனும் ஸப்தகுலாசலங்கள்: பிறவாறும் உரைக்கப்படும். நெடியதொன்றோ? அன்று என வினாவும் விடையுமாக்கித் தேறறப்பொருள்பட உரைப்பினுமாம்.

'கடலுமேழுமலையுமேழன்னவேயாய்' என்பது பிரதிபேதம். (எங)

எச. தாழ்வித்தீரல்லீர்பன்னாடருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற்றீராக்
கேள்வித்தீயாளர்துன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர்முனியாதானைமுனிவித்தீர்முடிதிரென்றான்.

(இ - ள்.) தாழ்வித்தீர அல்லீர் - நீங்கள் காலதாமதஞ் செய்பவர்கள் மாத்திரமல்லீர்; (அதனால்), பல் நாள் தருக்கிய அரக்கர் தம்மை வாழ்வித்தீர் - பலநாளாகச் செருக்குக்கொண்டிருந்த ராக்ஷஸர்களை(ப் பின்னும்) வாழச்செய்தீர்கள்; இமையோர்க்கு இன்னல் வருவித்தீர - தேவர்கட்குத் துன்பத்தை வருவித்தவரானீர்கள்; மரபில் தீரா கேள்வி தீ ஆளர் துன்பம் கிளர்வித்தீர - வான்முறையினின்று நீங்காத நூற்கேள்விகளையும் ஓமாக்கினிகளையுமுடைய முனிவர்கட்குத் துன்பத்தை மிகுவித்தீர்கள்; பாவம் தன்னை மூள்வித்தீர் - பாவத்தை மேனமேலும் வளரச்செய்தீர்கள்; (இவ்வளவேயன்றி), முனியாதானை முனிவித்தீர் - ஒருகாலும் கோபியாதவனான [சாந்தமூர்த்தியான] இராமபிரானையுங் கோபிக்கச்செய்தீர்கள்; (இவவாறு செய்ததனால்), முடிதிர் - (நீங்கள்) அழிந்துவிடுவீர்கள், என்றான - என்று (இலக்குமணன்) கூறினான்; (எ - று.)

நீங்கள் காலதாமதஞ்செய்வது, அரக்கர்க்குப் பெருவாழ்வையும் தேவர்க்கும் முனிவர்க்கும் துன்பத்தையு முண்டாக்கி நுமக்குப் பாவத்தை விளைப்பது மன்றிச் சாந்தமூர்த்தியான இராமபிரானுக்கும் கோபத்தைத் தோற்றுவித்து நுமது கேட்டிற்கும் காரணமாகு மெனபதாம்.

'முடிவிரென்றான்' என்பது பிரதிபேதம். (எச)

[அநுமான் இலக்குமணனுக்குச் சமாதானங்கூறி அவனைச் சுக்கிரீவனிடம் வருமாறு அழைத்தல்.]

௭௫. தோன்றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
யான்றநூலறிஞபோயபொருண்மனத்தடைப்பாயல்லை
யென்றதுமுடியேமென்னினிறத்துமித்திறத்துக்கெல்லாஞ்
சான்றினியறனேபோந்துன்றம்முனைச்சார்தியென்றான்.

(இ - ள்.) தோன்றல்-சிறந்துதோன்றுபவனான இலக்குமணன், அஃது உரைத்தலோடும் - அவ்வார்த்தையைச் சொன்னவுடனே,—மாருதி - வாயு குமாரனான அநுமான், தொழுது - (அவ்விளையபெருமாளை)வணங்கி, (அவனை நோக்கி), 'தொல்லை ஆன்ற நூல் அறிஞ - பழமையான சிறந்த நூலறிவை யுடையவனே! போய பொருள் மனத்து அடைப்பாய் அல்லை - நடந்த விஷயங்களை மனத்திற்கொள்ளாதிருப்பாயாக; என்றது முடியேம் என்னின் - (நாங்கள் செய்வதாக) ஏற்றுக்கொண்ட காரியத்தைச் செய்யாது விட்டோமாயின், இறத்தும் - உயிர்விடக்கடவோம்: இத் திறத்துக்கு எல்லாம் இனி சான்று அறனே - இவ்விஷயங்கட்கெல்லாம் இனிச் சாட்சியாவது தருமமே; போந்து-உள்ளேவந்து, உன் தம்முனை சார்தி உனக்குத்தமையன் முறையாகிய சுக்கிரீவனைச் சேர்வாயாக' என்றான்-என்று கூறினான்; (எ-று.)

இலக்குமணன் சீற்றந்தோன்றுமாறு கூறினதனால் அதனைத்தணிக்க விரும்பிய அநுமான் 'சீதையைத்தேடுதல் முதலிய தொழில்களைத் தவறாது செய்துமுடிப்போம்; முடியாவிட்டால் நாங்கள் இறப்போம்; இவ்விஷயத்தில் தருமமே சாட்சி' என்று இலக்குமணனுக்கு நம்புதலுண்டாகுமாறு சபதஞ்செய்து கூறினனென்க. போயபொருள் - மாரிக்காலம்நீங்கியவுடனே வருகிறோமென்று கூறிய தவணை தவறிய தொழில். 'இறத்துமித்திறத்துக்கெல்லாஞ்சான்றினியறனே' என்ற சொற்போக்கில், நாங்கள் அறந்திறம்பினோமென்று நீவிர் எங்களைக்கொல்லவேண்டுவதில்லை, அறக்கடவுளே எங்களைக்கொல்லும் என்ற கருத்துந் தோன்றும். ஆன்ற=சான்ற; மரூஉ.

'சான்றினியானே,' 'சான்றெனவறவோய்', 'சான்றனவறவோய்' என்பன பாடபேதம். (௭௫)

[இலக்குமணன் அநுமான்வார்த்தைக்கு இசைந்து அவனுடன் சுக்கிரீவனிடஞ் செல்லுதல்.]

௭௬. முன்னுநீசொல்லிற்றன்றோமுயன்றதுமுற்றுங்காலை
யின்னுநீயிசைத்தசெய்வானியைந்தனமென்றுகூறி
யன்னதோரமைதியான்றனருள்சிறிதறிவானேக்கிப்
பொன்னின்வார்சிலையினானுமாருதியோடும்போனான்.

(இ - ள்.) பொன்னரின் வார் சிலையினானும் - பொற்கட்டுக்களையுடைய நீண்டவில்லையுடையவனான இலக்குமணனும், (அநுமானை நோக்கி), 'முன்னும் - முன்பும், முயன்றது - (யாங்கள்செய்த) முயற்சியும், நீ சொல்லிற்று அன்றோ - நீ சொல்லியதன்றோ? முற்றும் காலை - (சீதையைத்தேடுதற்றொழில்) முடியவேண்டியசமயத்தில், இன்னும் - இனிமேலும், நீ இசைத்த செய்வான் இயைந்தனம - நீசொல்லியதையே செய்ய உடன்படுகிறோம்', என்று கூறி - என்றுசொல்லி, அன்னது ஓர் அமைதியான்தன் அருளசிறிது அறிவான் நோக்கி - அப்படிப்பட்டதாகிய ஒருதன்மையையுடையவனான சுக்கிரீவனது மனநிலையைச் சிறிது அறியக் கருதி, மாருதியோடும் போனான் - அநுமானுடனே சென்றான்; (எ - று.)

"வன்றிறன்மாருதி வணங்கினனெடுங், குன்றிவர்தோளினாய்கூறவேண்டுவ, தொன்றுளததனைநீயுணர்ந்துகேளென", "கொடுந்தொழில் வாலியைக் கொன்றுகோமகன, கடுங்கதிரோன்மகனுக்கிக கைவளர், நெடும்படைகூட்டினாலன்றிநேடரி, தடும்படைபரக்கர்தமிருக்கையாணையாய்" எனபது முதலாக அநுமான் கூறியபடியே வாலிவதஞ்செய்ததனால், 'முன்னுநீசொல்லிற்றன்றோமுயன்றது' எனப்பட்டது சுக்கிரீவன் கார்காலம நீங்கியவுடன் சீதாபிராட்டியைத்தேட முயலாமல் அந்தப்புரத்தில் உறங்கிக்கிடக்கின்றமையால், அவன் 'அன்னதோரமைதியான' எனப்பட்டான்.

'முற்றுங்காறும்', 'முயறசிதானும்', 'அறியநோககி', 'அமையநோக்கி' என்பன பிரதிபேதம். (௭௬)

[தாரை மகளிர்கூட்டத்தோடு அந்தப்புரஞ்சேர்தல்.]

௭௭. அயில்விழிக்குமுதசசெவ்வாய்ச்சிலைநுதலன்னப்போக்கின்
மயிலியற்கொடித்தேரல்குன்மணிநகைத்திணிவேய்மென்றோட்
குயின்மொழிக்கலசக்கொங்கைமின்னிடைக்குமிழ்மூக்கின்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள்.

(இ - ள்.) தாரை—,—அயில் விழி - வேலையொத்த கண்களையும், குமுதம் செம் வாய் - செவ்வாம்பல் மலரை யொத்த சிவந்த வாயையும், சிலை நுதல் - விற்போன்ற புருவத்தையும், அன்னம் போக்கின் - அன்னத்தின் நடையையொத்த நடையையும், மயில் இயல்-மயிலையொத்த சாயலையும், கொடி தேர் அல்குல் - துவசத்தையுடைய தேரைப்போன்ற அல்குலையும், மணி நகை - முத்துப்போன்ற பற்களையும், திணி வேய் மெல்தோள் - வலிய மூங்கில்போன்ற மெல்லிய தோள்களையும், குயில் மொழி - குயிலின்குரலையொத்த குரலையும், கலசம் கொங்கை - பொற்கலசத்தையொத்த தனங்களையும், மின் இடை - மின்னல்போன்ற இடையையும், குமிழ் ஏர் மூக்கின் - குமிழமலரையொத்த மூக்கையும், புயல் இயல் கூந்தல் - காளமேகத்தையொத்த [கரிய] கூந்தலையுமுடைய, மாதர் குழாத்தொடும் - மகளிர்கூட்டத்துடனே, போனாள் - (அந்தப்புரத்திற்குச்) சென்றாள்; (எ - று.)

உவமையணி. நுதல் - புருவத்துக்கு இலக்கணை. நவரத்னங்களுளொன்றாதலால், முத்து 'மணி' எனப்பட்டது. ஏர், இயல் - உவமவுருபுகள். (எஎ)

[அங்கதன் இலக்குமணனைவணங்கி அவனனுமதிப்படி அவன்வரவைச் சுக்கிரீவனிடஞ் சொல்லச்செல்லுதல்.]

எஅ. வல்லமந்திரியரோடுவாலிகாதலனுமைந்த
னல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரைவினென்வரவுவீர
சொல்லுதிநுந்தைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான்.

(இ - ள்.) வாலி காதலனும் - வாலியின்மகனான அங்கதனும், வல்ல மந்திரியரோடு - (நீதிநூல்களில்) தேர்ந்த மந்திரிமார்களுடனே (வந்து), மைந்தன் அல்லி அம் கமலம் அன்ன அடி பணிந்து - வீரனாகிய இலக்குமணனது அகவிதழ்களையுடைய அழகிய செந்தாமரைமலர் போன்ற திருவடிகளை வணங்கி, அச்சம் தீர்ந்தான் - (இலக்குமணனால் 'என்னநேரிடுமோ?' என்று தான்முன்கொண்ட) பயம் ஒழியப்பெற்றான்; (அப்பொழுது), வில்லியும் - வில்வீரனான இலக்குமணனும், அவனை நோக்கி - அவ்வங்கதனைப்பார்த்து, 'வீர - வீரனே! என் வரவு - எனது வருகையை, நுந்தைக்கு - உனது சிற்றப்பனான சுக்கிரீவனுக்கு, விரைவின் சொல்லுதி - விரைவிற்சென்று சொல்வாய்,' என்றான் - என்று கூறினான்; (உடனே அங்கதன்), நன்று என - 'நல்லது' என்றுசொல்லி, தொழுது - (அவ்விலக்குமணனை) வணங்கி, போனான்—; (எ - று)

மைந்து - வீரம்; அதனையுடையவன் - மைந்தன். நன்று - அங்கீகார வார்த்தை. 'உந்தைக்கு' என்று பிரதிபேதம். (எஅ)

[இலக்குமணன் கோபித்துவந்திருத்தலை அங்கதன் சுக்கிரீவனுக்குத் தெரிவித்தல்.]

எகூ. போனபின்றாதைகோயில்புக்கவன்பொலங்கொள்பாதந்
தானுறப்பற்றிமுற்றுந்தைவந்துதடக்கைவீரன்
மானவற்கிளையோன்வந்துன்வாயிலின்புறத்தான்சீற்ற
மீனுயர்வேலைமேலும்பெரிதுவிளைந்ததென்றான்.

(இ - ள்.) தட கை வீரன் - நீண்டகைகளையுடைய வீரனான அவ்வங்கதன், போன பின் - (இலக்குமணனைவிட்டுச்) சென்றபிறகு, தாதை கோயில் புக்கு - சிற்றப்பனாகிய சுக்கிரீவனது அரண்மனையிற்புகுந்து, அவன் பொலம் கொள் பாதம் தான் உற பற்றி முற்றும் தைவந்து - அச்சுக்கிரீவனது அழகைக்கொண்ட பாதங்களைத் தான் நன்றாக முழுவதுந் தடவிப்பிடித்து(த் துயிலெழுப்பி),—'மானவற்கு இளையோன் வந்து உன் வாயிலின் புறத்தான் - இராமபிரானுக்குத்தம்பியாகிய இலக்குமணன் வந்து உனது அரண்மனைவாயில் வெளியில் நிற்கின்றான்; சீற்றம் - (அவன் இப்போது கொண்டுள்ள) கோபம், மீன் உயர் வேலை மேலும் பெரிது - மீன்கள் நிறைந்துள்ள

கடலைக்காட்டிலும் பெரியது; இது விளைந்தது - இது நடந்தசெயலாகும்,' என்றான்—; (எ - று.)

"பொன்னென்கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண்மருங்கிற் றொடரியலான" என்பதனால், பொன் என்பது பொலம்எனத் திரிந்துவந்தது. 'தைவந்த,' 'தடக்கைவீர,' 'வாசலின்' என்றும் பாடம். (௭௧)

[சுக்கிரீவன் இலக்குமணனது கோபகாரணத்தைக்குறித்து அங்கதனை வினவுதல்.]

௭௦. அறிவுற்றுமகளிர்வெள்ளமலமரும்அமலைநோக்கிப்
பிறிவற்றமயக்கத்தான்முந்துற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாரலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னோகாரணங்கண்டதென்றான்.

(இ - ள்.) பிறிவு அற்ற மயக்கத்தான் - நீங்குதலில்லாத மயக்கத்தை யுடையவனான சுக்கிரீவன்,—மகளிர் வெள்ளம் அலமரும் அமலை நோக்கி - (தாரை முதலிய) மகளிர்கூட்டம் கலங்குவதனாலுண்டான பேராரவாரத்தைக் கேட்டு, அறிவு உற்று - (மயக்கந்தெளிந்து) இயற்கையறிவைப்பெற்று, முந்து உற்றது ஓர் பெற்றி ஓரான் - (முன்னே) நடந்த செய்தியொன்றையும் அறியாதவனாய்,—(அவ்வங்கதனைநோக்கி), 'செறி பொன் தார் அலங்கல் வீர - நெருங்கிய பொன்னாரங்களையும் மலர்மாலையையுமணிந்த வீரனே! குற்றம் செய்திலம் - (நாம் இராமலக்ஷ்மணர் திறத்தில்) ஒருபிழையுஞ் செய்திலோம்: (அவ்வாறிருக்க), நம்மை கறு உற்ற பொருளுக்கு காரணம் கண்டது என்னோ - (இலக்குமணன்) நம்மீது கோபங்கொண்ட தன்மைக்குக்காரணமாகக் கண்டதுதான் யாதோ?' என்றான் - என்று வினவினான்; (எ-று.)

தாரையுடன் சென்ற வானரமகளிர் கலங்கிச் செய்த பேராரவாரத்தால் சுக்கிரீவன் மதக்களிப்புத் தவிர்ந்தனனென்க. வெள்ளம் - ஒரு பெருந்தொகை; பெருந்திரளுக்கு, இலக்கணை. அமலை - பேராரவாரம். முந்துற்ற தோர்பெற்றியை மேலே அங்கதன் கூறுவன்.

'அனைவருமவனைநோக்கிப், பிறிவுற்றார்', 'அவனைப்பற்றிப் பிறிவற்ற மயக்கந்தான்', 'பிறிவற்றமயக்கர்தீர்ந்தான்' என்பன பிரதிபேதம். (௭௦)

[இதுமுதல் ஆறுகவிகள் - முன்நடந்தவரலாற்றைச் சுக்கிரீவனிடம் அங்கதன் கூறியதைக்கூறும்.]

௭௧. இயைந்தநாளெந்தைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவிங்கி
யுயர்ந்ததுசீற்றமற்றதுற்றதுசெய்யமுற்று
நயந்தெரியனுமன்வேண்டநல்கினனம்மையின்னும்.

(இ - ள்.) (அப்போது அங்கதன் சுக்கிரீவனைநோக்கி), எந்தை - எனது தந்தையே! இயைந்த நாள் - (சேனையுடன் வருவதாக முன்பு) உடன்பட்ட

நாளில், நீ—, சென்று எய்தலை - (இராமபிரானிடம்) போய்ச் சேர்ந்தா யில்லை, செல்வம் எய்தி வியந்தனை - பெருஞ்செல்வத்தையடைந்து செருக் கினாய்; உதவி கொன்றாய் - செய்தநன்றியை மறந்தாய்; மெய் இலை - சிறி தும்உண்மையில்லாதவனானாய்', என்ன - என்று, சீற்றம் வீங்கி உயர்ந்தது - (இலக்குமணனுக்குக்) கோபம் மிகுதியாகமூண்டது; (அப்பொழுது), நயம் முற்றும் தெரி அனுமன் - நீதிசாஸ்திரங்களை முழுதும் உணர்ந்த அநுமான், அது உற்றது செய்ய - அக்கோபத்தைத் தணித்தற்குஉரிய காரியத்தைச் செய்யும்பொருட்டு, வேண்ட - (சென்று இலக்குமணனைப்) பிரார்த்திக்க, (அதனால்), நம்மை இன்னும் நல்கினன் - (அவவிலக்குமணன்) நம்மை இன் னும் உயிரோடிருக்குமாறு விட்டான்; (எ-று.)—மற்று - அசை.

அநுமான் இலக்குமணனை வேண்டாவிடின், அப்போதே நாமனைவரும் இலக்குமணனால் இறந்திருப்போ மென்றபடி. 'கறுவுற்ற பொருளுக்கு என்னோ காரணம்?' என்று வினாவிய சுக்கிரீவனுக்கு, அங்கதன் இலக்கு மணன் கறுவுற்றகாரணத்தைக் கூறியதோடு, கடைசியாகக் கோபந்தணிந்த காரணத்தையும் இச்செய்யுளிற் கூறி, இடையில்நிகழ்ந்தவற்றை அடுத்தகவி முதற் கூறுகின்றான். தாரையைக்கொண்டு இலக்குமணனை வழிமறிக்கச் செய்ததும் அநுமானே யாதலால், இலக்குமணன் கோபந்தணிந்ததற்குக் காரணம் அவனேயாதலுணர்க: இதுபற்றியே, 'முற்றும்நயந்தெரியனுமன்' என்றதும். இனி, 'உற்றதுசெய்கைமுற்றும்' என்ற பாடத்திற்கு - மெய்யிலை யென்னவீங்கி உயர்ந்ததாகிய (இலக்குமணனது) சீற்றமான்து நயந்தெரி அநுமன் உற்றது செய்கை முற்றும் [கீழ்நடந்த வரலாறுமுழுவதையும்] (சொல்லி) வேண்டியதனால் அற்றது [நீங்கிற்று] என்று உரைக்கலாம்.

'இயைந்தநாளெல்லை', 'உற்றதுசெய்கைதானும்' என்பன பாடபேதம்.

அஉ. வருகின்றவேகநோக்கிவானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம்வாங்கினரடுக்கிமற்றுந்
தெரிகின்றசினத்தீப்பொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார்.

(இ - ள்.) வானர வீரர்—,—வருகின்ற வேகம் நோக்கி - (இலக்கும ணன்) வரும் வேகத்தைக் கண்டு, வானை பொருகின்ற நகரம் வாயில் பொன் கதவு அடைத்து - வானத்தையளாவுகின்ற கிஷ்கிந்தாநகரத்தின் வாயிலி லுள்ள பொற்கதவுகளைச் சார்த்தி, அருகு ஒன்றும் இல்லா வண்ணம் கார் குன்று வாங்கினர் அடுக்கி - சமீபத்தில் ஒருமலையும் மிச்சமாயிற்காதபடி பெரியமலைகளையெல்லாம் எடுத்துவந்து (அவ்வாயிலில்) ஒன்றன்மேலொன் றாக அடுக்கி, மற்றும் - மேலும், தெரிகின்றசினம் தீபொங்க - வெளிப்படு கின்ற கோபாக்கினியானது மிக, செரு செய்வான் - (இலக்குமணனோடு) போர்செய்யும்பொருட்டு, அமைந்து நின்றார்-சித்தமாகநின்றார்கள்; (எ - று.)

வானைப்பொருகின்ற நகரவாயில் - உயர்வுநவிற்சி. கார்க்குன்று - கரிய குன்றுமாம். வாங்கினர் - முற்றெச்சம். 'செருக்கிநின்றார்' என்றும்பாடம்.

அரு. ஆண்டகையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளிற்
றீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குச்செல்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிரைத்தகுன்றுங்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே.

(இ - ள்.) ஆண்டகை - ஆண்மைக்குணமுள்ளவனாகிய இலக்குமணன், அதனை நோக்கி - வானரர்களின் செய்கையைப் பார்த்து, அம் கமலம் மலர் தாளின் தீண்டினன் - அழகிய செந்தாமரைமலர்போன்ற தனது பாதத்தினால் (அடைத்தவாயிற்கதவை) உதைத்தான்; தீண்டா முன்னம் - (அப்பாதம்) படுதற்குமுன்னமே, தெற்கொடு வடக்கு நீண்ட செல்வம் கல் மதிலும் - தெற்குவடக்காக நீண்டுள்ள சிறப்பையுடைய கல்லினாலமைக்கப்பட்ட மதிலும், கொற்றம் வாயிலும் - வலிய நகரவாயிலும், நிரைத்த குன்றும் - (அவ்வாயிலில் வானரவீரர்கள்) ஒன்றன்மேலொன்றாக அடுக்கிய மலைகளும், தகர்ந்து கீண்டன - உடைந்துசிதறினவாய், பின்னை - பின்பு, பொடியொடும் கெழீஇய - பொடியாய்விட்டன; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமுமாம்: அப்பொழுதே யெனினுமாம்.

தீண்டாமுன்னம் தகர்ந்துகீண்டன - மிகையுயர்வுநவிற்சி. மதிலுக்குச் செல்வமாவது - மிக்கவுயரமும், புறத்தோர்க்கு அகழலாகாத அடியகலமும் அகத்தோர்க்கு நின்று தொழில்செய்யலாந் தலையகலமு முடைமை. கெழீஇய - சொல்லிசையளபெடை; இதில், கெழுவு - பகுதி.

'தாளால்', 'தெற்கொடுவடக்குத்தெய்வம்', 'தெற்கொடுவடக்குத்தேய', 'கீண்டனகாந்து' என்பன பாடாந்தரம். (அரு)

அசு. அந்நிலைகண்டதிண்டோளரிக்குலத்தனிகமம்மா
வெந்நிலையுற்றதென்கேன்யாண்டுபுக்கொளித்ததென்கே
னிந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கிநின்றாள்.

(இ - ள்.) அ நிலை கண்ட திண் தோள் அரி குலத்து அனிகம் - அவ்வாறு (இலக்குமணனால்நேர்ந்த) நிலைமையைப் பார்த்த வலியதோள்களையுடைய வானரசாதிச்சேனை, எ நிலை உற்றது என்கேன் - எந்தநிலைமையை யடைந்ததென்று சொல்வேன்? யாண்டு புக்கு ஒளித்தது என்கேன் - எவ்விடத்திற்போய்ப் பதுங்கியதென்றுதான் சொல்வேன்? இ நிலை கண்ட அன்னை - (வானரசைனியத்தின்) இந்தநிலைமையைப்பார்த்த (எனது) தாயாகிய தாரை, ஏந்து இழை ஆயத்தோடு - அணிந்த ஆபரணங்களையுடைய மகளிர்கூட்டத்துடனே, மின் இலை வேலினானை - மின்னல்போன்ற இலைவடிவமாகச்செய்யப்பட்ட வேலாயுதத்தையுடைய இலக்குமணனை, எதிர் வழி விலக்கி நின்றாள் - எதிரேசென்று வழிமறித்துநின்றாள்; (எ - று.)—அம்மா - வியப்பிடைச்சொல்; வானரசைனியங்கள் அஞ்சியோடும்படியிருந்த இலக்குமணனது தோற்றத்தை வியந்தவாறு.

இளையபெருமாளது திருவடிபட்டமாத்திரத்தில் வாயிற்கதவுமுதலியன பொடியாய்விட்டதைக் கண்ட வானரங்கள் அஞ்சி அரிதில் உயிர்தப்பிக் கலங்கிப் போனதிசை தெரியாமற் சென்றன; அப்போது அவ்விலக்குமணன் அரண்மனையினுட் புகுமாறு வர, மகளிர் கூட்டத்தோடு தாரை தடுத்தன ளென்பதாம். மின் நிலை என்றுபிரித்து - மின்னலின் தன்மையையுடைய என்றும் உரைக்கலாம். ஆயுதங்களிற் சிறத்தலால், வேல் கூறப்பட்டது. என்கேன், ககரவிடைநிலை - எதிர்காலங்காட்டும்.

'எந்நிலை நின்றதென்கேன் யாண்டுபுக்கிருந்த தென்கேன்,' 'அந்நிலை கண்டவன்னையாயிழை,' 'மின்னிலைவில்லினானை' என்பன பிரதிபேதம். ()

அரு மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்து
பொங்கியசீற்றம்பற்றிப்புகல்கிலன்பொருமிநின்றா
னங்கையுமினிதுகூறிநாயகநடந்ததென்னோ
வெங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான்.

(இ - ள்.) மைந்தனும் - வீரனாகிய இலக்குமணனும், மங்கையர் மேனி நோக்கான - (வழிமறித்துநின்ற தாரைமுதலிய) மகளிரது மேனியைக் கண் ணெடுத்துப் பாராதவனாய், மனதது வந்து பொங்கிய சீறறம்பற்றி புகல்கி லன் - (தன) மனத்திலே மிகுதியாக உண்டாகிய கோபததினால் ஒனறுஞ் சொல்லமாட்டாதவனாய், பொருமி நினறான் - வருந்திநின்றான; நங்கையும் - மகளிரிற் சிறந்தவளான தாரையும், இனிதுகூறி - (இலக்குமணனதுகோபந் தணியும்படி) இனியவார்த்தையைச் சொலலி, (அவனைநோக்கி), 'நாயக - சிறந்தவனே! எஙகள்பால் நடந்தது என்னோ - (நீ இராமபிரானை விட்டுப் பிரிந்து) எங்களிடத்தில் வந்தகாரியம் யாதோ?' என்ன சொன்னாள் - என்று வினாவினாள்; அண்ணலும் - அவ்விளையபெருமாளும், இனைய சொன்னான் - இவ்வார்த்தைகளைக் கூறினான்; (எ - று.)

'மங்கையர்மேனிநோக்கான்' என்பதனால், அயல்மாதரைக் கண் ணெடுத்துப்பாராத மேன்மையுடையவன் இலககுமண னென்பது, பெறப் படும். 'இனைய' என்றது - கீழ் நசூ - ஆங் கவியிற கூறியதைச் சுட்டும். இல க்குமணன பொருமியது - தாரையைககண்டவுடனே தனதாயரைப்பற்றி நினைவுவந்ததனா லென்க; கீழ் 'தாயரைநினைந்துநைந்தான்,'' "நங்கையைக் கண்டவள்ளல் நயனங்கள் பனிப்ப நின்றான'' என வந்ததும் காண்க.

'மனத்துவந்த,' 'சீற்றம்பற்றிப்புகுந்திலன்,' 'நடந்ததென்னை', 'அண்ண லுமிதயஞ்சொன்னான்' என்றும் பாடம். (அரு)

அசு. அதுபெரிதறிந்தவன்னையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளங்
கதுமெனக்கொணருநதூதுகலலதாசெலலவேவி
யெதிர்முறையிருந்தானென்றாளிதுவிங்குப்புகுநததென்றான்.

(இ - ள்.) அதுபெரிது அறிந்த அன்னை - (இலக்குமணன்வந்த) அந்தக் காரியத்தை நன்றாகவுணர்ந்த என்துதாயாகிய தாரையானவள்,—அனனு

வன் சீற்றம் ஆற்றி - அவ்விலக்குமணனது கோபத்தை (இன்சொற்கூறி)த் தணித்து, (இலக்குமணனைநோக்கி) 'விதி முறை மறந்தான் அல்லன் - (சுக்கிரீவன இராமபிரானது) கட்டளையினதன்மையை மறந்தவனல்லன; வெம் சினம் சேனை வெள்ளம் - கடுங்கோபத்தையுடைய வானரசேனைகளின் தொகுதியை, கதுமென கொணரும் - விரைவாகக்கொண்டுவருதற்கு உரிய, தூது - தூதுவர்களை, கல் அதர் செல்ல ஏவி - கற்களையுடைய மலைவழியிலே போகும்படி கட்டளையிட்டு அனுப்பி, எதிர்முறை இருந்தான் - (அவ் வானரசைனியத்தின் வருகையை) எதிர்நோக்கியிருந்தான', என்றாள்—; இது இங்கு புகுந்தது - இதுதான் இப்பொழுது [இங்கே] நடந்த செயலாகும்,' என்றான - என்று (சுக்கிரீவனைநோக்கி அங்கதன்) கூறிமுடித்தான்.

கதுமென - விரைவுக்குறிப்பிடைச்சொல் தூது உயர்திணைப்பொருள் தரும் அஃறிணைச்சொல்: சாதியொருமை. தூதர்கள்மூலமாக வானரசேனை களைத் திரட்டக் காலதாமதமாதற்குக் காரணததைக் குறிப்பாகவுணர்த்து வாள், 'கல்லதாசெல்லவேவி' என்றாள்; அதர் - விலங்குசெல்லும் நெருக்க மான வழி. 'விதிமுறையறிந்தாண்மன்னன' என்ற பாடத்திற்கு—செய்ய வேண்டிய முறையை யறிந்தவளாகிய தாரையானவள், அனனவன்சீற்றம் ஆற்றி, மன்னன் [சுக்கிரீவமகாராஜன]........எதிர்முறையிருந்தான என் றான் என்று பொருள்காண்க. 'கொணரத்தூது' என்பது பிரதிபேதம் (அசு)

[இலக்குமணன்வருகையை முன்னமே தனக்குத்தெரிவியாத காரணத்தைச் சுக்கிரீவன் வினவுதல்.]

அஎ. சொற்றலுமருக்கன்றோன்றல்சொல்லுவான்மண்ணின்விண்ணி
னிற்குரியார்கள்யாவரனையவர்சினத்தினேர்ந்தால்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விரைவின்எய்தி
னெற்குரையாதுநீரீதியற்றியதென்கொலென்றான்.

(இ - ள்.) சொற்றலும்-(அவ்வாறு அங்கதன்) சொன்னவுடனே, அருக்கன் தோன்றல் - சூரியகுமாரனான சுக்கிரீவன், சொல்லுவான - (பின்வருமாறு) சொல்பவனானான்:—'அனையவர் சினத்தின் நேர்ந்தால் - அவவிராமலக்குமணர்கள் கோபங்கொண்டு எதிர்த்துவந்தால், மண்ணின் - இந்நிலவுலகத்திலாவது, விண்ணின - மேலுலகத்திலாவது, நிற்க உரியார்கள் யாவர் - (அவர்கட்குமுன்னே) எதிர்த்துநிற்கத்தக்கவர்கள எவர்? விற்கு உரியார் இ தன்மை வெகுளியின் விரைவின் எய்தின - வில்வீரராகிய அவ்விளையபெருமான் இவவாறு கோபத்தோடு விரைந்துவருகையில், எற்கு உரையாது - (அதனை) எனக்குத் தெரிவியாமல், நீர் ஈது இயற்றியது - நீங்கள இவவாறு செய்தது, என்கொல் - என்னகாரணம்பற்றியோ?' என்றான - என்று (அங்கதனை) வினவினான்; (எ - று.)

இதனால், எவவுலகத்திலும் ஈடில்லாதவர் இராமலக்குமணரென்பதைக் கருதாது வானரங்கள் வாயிலடைத்து இலக்குமணனோடு செருச்செய்ய முயன்றதும், அவ்விலக்குமணன் பெருஞ்சினத்தோடு வந்தபோது தனக்கு

முன்னமே தெரிவியாதிருந்ததும் தவறென்று சுக்கிரீவன் குறிப்பித்தவாறு. 'ஈதியற்றியது' என்பது - கதவடைத்துக் கறகளடுக்கியது முதலியவற்றைக் குறிக்கும். நிற்குரியார் - செயவெனெச்சத்தின் அகரவீறு தொகுத்தல். விற்குரியார் - உயர்வுப்பன்மை. என்கொல்—கொல் அசை.

'சொற்குறியானவெல்லாஞ் சொல்லலு மருக்கன்மைந்தன' என்றும் பாடம். (அஎ)

[அதற்கு அங்கதன் மறுமொழிகூறுதல்.]

அஅ. உணர்த்தினேன் முன்னர் நீயஃ துணர்ந்திலை புணர்விற் றீர்ந்தாய்
புணர்ப்பதொன் றின்மை நோக்கிமாருதிக் குரைப்பான் போனேன்
இணர்த்தொகை யீன்றபொற்றா ரெறுழ்வலித் தடந்தோ ளெந்தாய்
கணத்திடை யவனை நீயுங் காணுதல் கருமமென்றான். [தாய்

(இ - ள்.) இணர் தொகை ஈன்ற பொன் தார எறுழ் வலி தட தோள் எந்தாய் - பூங்கொத்தின் தொகுதியினால் தொடுக்கப்பட்ட அழகிய மாலையைத் தரித்த மிக்கவலிமைபொருந்திய பெரிய தோள்களையுடைய எனது தந்தையே! முன்னர் உணர்த்தினேன் - (நான் இலக்குமணன்வருகையை உனக்கு) முன்னமே தெரிவித்தேன்; நீ—, உணர்வின் தீர்ந்தாய் - (அப்போது) மதிமயங்கியிருந்தாய்; (அதனால்), அஃது உணர்ந்திலை - (நான் கூறிய) அதனைத் தெரிந்துகொண்டாயில்லை; (பிறகு), புணர்ப்பது ஒன்று இன்மை நோக்கி - (யான) செய்பக்கூடிய வேறொருபாயமில்லாமை கண்டு, மாருதிக்கு உரைப்பான் போனேன் - (இச்செய்தியை) வாயுகுமாரனான அனுமானுக்குச் சொல்லும்படி சென்றேன்; (இப்போது), கணத்திடை - ஒருநொடிப்பொழுதிற்குள் [விரைவிலே], அவனை - அவ்விலக்குமணனை, நீயும்—, காணுதல் - சென்றுபார்த்தல், கருமம் - செய்யவேண்டியதொழிலாகும், என்றான் - என்று (சுக்கிரீவனைநோக்கி அங்கதன்) கூறினான்; (எ - று.)

எறுழ் வலி - ஒருபொருட்பன்மொழி. நீயும், உம்மை - இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. (அஅ)

[தான் மதுவினால் மதிமயங்கிக்கிடந்ததைப்பற்றிச் சுக்கிரீவன் கழிவிரக்கங்கொண்டுகூறியதை இதுமுதல் ஒன்பதுகவிகளிற் கூறுகின்றார்.]

அகூ. உறவுண்ட சிந்தையானு முரைசெய்வா னொருவர்க்கின்னம்
பெறலுண்டோ யவரா லீண்டியான்பெற்ற பேருதவிப்பற்ற
திறலுண்டோ வென்னிற் றீர்வா னிருந்தபே ரிடரையெல்லா
நறவுண்டு மறந்தேன் காணநாணுவனைமைந்த வென்றான்.

(இ - ள்.) உறவு உண்ட சிந்தையானும் - (இராமபிரானிடம்) கலந்த நட்பைக் கொண்ட மனத்தையுடையவனான சுக்கிரீவனும், உரைசெய்வான் - (அங்கதனைநோக்கிச்) சொல்வான்; மைந்த - இளவீரனே! அவரால் ஈண்டு யான பெற்ற பேர் உதவி - அவ்விராமபிரானால் இப்போது யான் அடைந்துள்ள பேருபகாரம், ஒருவர்க்கு இன்னம் பெறல் உண்டோ - மற்

ஒருவரால் இனிப் பெறமுடியுமோ? [முடியாது என்றபடி]; உற்றது இறல் உண்டோ - (யான்) அடைந்த பெருஞ்செல்வத்துக்கு அழிவேனும் உள்ளதோ? [இல்லையன்றே]; என்னின் தீர்வான் இருந்த பேர் இடரை எல்லாம் - என்னாலே நீக்கிக்கொள்ளும்படி நினைத்திருந்த (இராமபிரானது) பெருந்துன்பங்களையெல்லாம், நறவு உண்டு மலந்தேன் - மதுவுண்டதனால் மறந்துபோனேன்; (ஆதலால்), காண - (இப்போது லக்ஷ்மணனைப்) பார்த்தற்கும், நாணுவன் - வெள்குகின்றேன்', என்றான் —; (எ - று.)

பிறரெவராலும் பெறுதற்கு அரியதும் அழிவில்லாததுமான பேருதவியை நான் இராமபிரான்மூலமாகப் பெற்றிருந்தும் மதுமயக்கத்தாற் செய்ந்நன்றிமறந்து அப்பிரானுக்குச் செய்யவேண்டிய கைம்மாறொன்றுஞ்செய்யாமல் அவனை வருந்தும்படி விட்டிட்டதனால் இப்போது இலக்குமணனைக்கண்ணுற்காணுதற்கும் வெள்குகின்றேனென்பதாம். உறவுண்ட சிந்தையான் - மனமொத்த சிநேகிதன்; இனி, (அங்கதன்வார்த்தை) நன்றாக வுறுத்திய சிந்தையை யுடையவனான சுக்கிரீவ னெனினுமாம். 'என்னின் தீர்வான இறந்த பேரிடரையெல்லாம்' என்ற பாடத்திற்கு— என்னாலே தீர்த்துக்கொள்ள வேண்டுமென்றிருந்த இராமபிரானது மிக்க பெருந்துன்பங்களையெல்லாம் என்று பொருளாம். 'பேரிடர்' என்றது, சீதையை நாடிப்பெறுமையால் இராமபிரான் மேன்மேலும் படுகின்ற வருத்தத்தை.

'நம்பவென்றான்' என்பதும் பாடம். (அக)

கூO. ஏயின விதுவலான்மற்றேழைமைப்பாலதென்னோ
தாயிவண்மனைவியென்னுந்தெளிவின்றேற்றருமமென்னாந்
தீவினையைந்திலொன்றுமன்றியுந்திருக்குநீங்கா
மாயையின்மயங்குகின்றாமயக்கின்மேன்மயக்கும்வைத்தாம்.

(இ - ள்.) ஏயின இது அலால் - (இப்பொழுது எனக்கு) நேர்ந்த [கட்குடித்து மயங்கியிருந்த] இதுவல்லாமல், மற்று ஏழைமை பாலது - வேறு பேதைமையானதொரு செயல், என்னோ - யாது உளது? (இவ்வாறு கட்குடிப்பதனால்), (இவள்) தாய் இவள் மனைவி என்னும் தெளிவு இன்று ஏல் - இவள் தாய் இவள் மனைவி என்கிற விவேக மில்லையாகுமென்றால், தருமம் என் ஆம் -(கட்குடிப்பவனிடத்தில்) மற்றைத்தருமங்களிருந்தும் யாதுபயன் படும்?(இவ்வாறு மதுவுண்டு மயங்குதல்), தீவினை ஐந்தின் ஒன்று ஆம் - பஞ்சமகாபாதகங்களு ளொன்றாகும்; அன்றியும் - அல்லாமலும், திருக்கு நீங்கா மாயையில் மயங்குகின்றாம் - வஞ்சனை நீங்காத மாயைக்கு வசப்பட்டு மயங்குகின்றவர்களாகிய நாம், (அந்த மயக்கத்தை யொழிக்க வல்லமையில்லாதிருக்கையில்), மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம் - பெருமயக்கத்திற்குக் காரணமான மதுபானத்தில் மோகத்தையும் கொண்டோம்; (எ - று.)

இதனால், ஒருவாற்றாலும் பரிகரிக்கமுடியாத குற்றஞ்செய்தேனென்னச் சுக்கிரீவன கழிவிரக்கங் கொண்டனனெனக. மதுபானம் தன்னையுடையோனை விவேகசூனியனுக்கி அவனிடத்திலுள்ள பிறவறங்களையும் கெடுத்து

விடுமென்பது, இரண்டாமடியின் பொருள். 'இவன்' - மத்திமதீபம். பஞ்ச மகா பாதகங்களாவன - கொலை, களவு, கள்ளுண்டல், பொய்ம்மொழிதல், குருநிந்தை யென்பன; பிறவாறுமுரைப்பர். மாயை - இவ்வுலகத்தில் நடைபெறுகின்ற எம்பெருமானது ஒருசக்தி: இது உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் ஒன்றை மற்றொன்றாகவுங் காட்டுந் தன்மையுள்ளதாதலால், 'இருக்குநீங்காமாயை' எனப்பட்டது: இம்மாயைக்கு வசப்பட்டே உயிர்கள் விபரீதஞான முடையனவாய் இவ்வுலகத்தில் மயங்கியுழல்கின்றன வென்க. இம்மாயையை யொழித்தற்கு வலியில்லாமல் மயங்கிக் கிடக்கையில் பின்னும் மயக்கத்தை யுண்டாக்குகின்ற மதுபானமும், நேர்ந்ததே என ஈற்றடியால் இரங்கியவாறும். மயக்கின்மேல் மயக்கும் வைத்தாம் என்பதற்கு - மாயையினாலாகிய மயக்கத்தோடு நிற்கையில் (மதுபான) மயக்கத்தையும் கொண்டோமே யென்றுங் கூறலாம்.

'ஏயினநறவலான்', 'ஏழைமைப்பாலதியாதோ', 'தீவினைவேறுமொன்றின்றியுந் தெரிக்கலாமோ, மாயையின் மயங்குகின்றார் மயக்கின்மேன் மயக்குவைப்பார்' என்பன பிரதிபேதம். (௧௦)

௧௧. தெளிந்துதீவினையைத்தீர்ந்தோர்பிறவியிற்றீர்வரென்று
விளிந்திலாவுணர்வினோரும்வேதமும்விளம்பவேயு
நெளிந்துறைபுழுவைநீக்கிநறவுண்டுநிறைகின்றேறு
ளளிந்தகத்தெரியுந்தீயைநெய்யினாலவிக்கின்றாமால்.

(இ - ள்.) 'தெளிந்து தீவினையை தீர்ந்தோர் - (மாயைக்கு வசப்படாமல்) மனந்தெளிந்து தீச்செயல்களை யொழித்தவர், பிறவியின்தீர்வர் - பிறவித்துன்பத்தினின்றும் நீங்கி முத்திபெறுவர்', என்று - என்று, விளிந்திலா உணர்வினோரும் - அழியாத அறிவையுடைய தத்துவஞானிகளும், வேதமும்—, விளம்பவேயும் - சொல்லியிருக்கவும், (சிறிதும் உணர்ச்சியின்றி), நெளிந்து உறை புழுவை நீக்கி - நெளிந்துகொண்டு நிறைந்துகிடக்கிற புழுக்களை எடுத்தெறிந்துவிட்டு, நறவு உண்டு - கள்ளைக்குடித்து, நிறைகின்றேன்-களித்துக் கிடக்கின்றேன் (யான்); (இவ்வாறு செய்கின்ற நாங்கள்), அகத்து அளிந்து எரியும் தீயை - வீட்டிற் கனிந்து பற்றியெரியும் நெருப்பை, நெய்யினால் அவிக்கின்றாம் - நெய்யைக்கொண்டு அவிக்கத் தொடங்குபவர்போலாகிறோம்; (எ - று.)—'ஆல்' இரண்டும் - ஈற்றசை.

கனிந்து பற்றியெரியும் நெருப்பில் நெய்யைச்சொரிந்தால் அந்நெருப்பு அவியாது மேன்மேல் வளருமாறுபோல, இயற்கையில் மாயைக்குவசப்பட்டுத் தீவினையிலுழல்கின்றவர் கட்குடித்தலையும் மேற்கொள்வது தீவினைவளர்தற்கே காரணமாய் முடியு மென்பதாம்; ஈற்றடி - காட்சியணி. தீவினை - பாவச்செயல். மதுபானத்தின் இழிவைக் கூறுவான், 'நெளிந்துறைபுழுவை நீக்கிநறவுண்டு' என்றான். கட்குடிப்போரையெல்லாம் உளப்படுத்தி, 'அவிக்கின்றாம்' எனப் பன்மையாற் கூறியது. 'அளிந்தம்' என்ற வடசொல் 'க'ப்ரத்யயம் பெற்று 'அளிந்தகம்' என வந்ததாகக் கொண்டு, அளிந்தகத்து எரியும் தீயை நெய்யினால் அவிக்கின்றாம். வாசலுக்கு முன்னிடத்தில் (காற்

ளூட்ட முள்ளவிட்த்திற்) பற்றியெரிகின்ற நெருப்பை நெய்யைக்கொண்டு அவிக்க முயல்கின்றவரை யொத்தோமென உரைப்பாரு முளர்.

'தெளிந்து தீவினையைச்செற்றூர் பிறவியைத் தீர்வரன்றே', 'புழுவை நோக்கி நறவுண்டு நிற்கின்றூநாம்' என்பன பாடாந்தரம். (கூக)

கூஉ. தன்னைத்தானுணரத்தீருந்தகையறுபிறவியென்ப
தென்னத்தான்மறையுமற்றைத்துறைகளுமிசைத்தவெல்லா
முன்னைத்தான்றன்னையோராமுழுப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மாநறவுண்டுதிகைக்கும்பித்தே.

(இ - ள்.) 'தான் தன்னை உணர-(ஒருவன்) தன்ஸ்வரூபத்தை உணர்ந்த மாத்திரத்தில், தகை அறு பிறவி என்பது - (அவனது) பெருமைக்கிடமில்லாத ஜந்மமானது, தீரும் - ஒழியும்' என்னத்தான் - என்றே, மறையும் - வேதங்களும், மற்றை துறைகளும் - மற்றைச் சாஸ்திரங்களும் (ஆகிய), எல்லாம் - எல்லாமும், இசைத்த - சொல்லியுள்ளன; முன்னை தான் தன்னை ஓரா முழு பிணி அழுக்கின் மேலே - முதலில் தான் தன் ஸ்வரூபத்தை அறியாததனு லுண்டாகின்ற நிறைந்த வியாதியையுடைய அழுக்குடம்பைப் பெற்றிருத்தலோடு கூட, பின்னை - மேலும், நறவு உண்டு திகைக்கும் பித்து பெறுவது ஒ - கள்ளுண்டு மயங்குகின்ற மயக்கத்தைப் பெறுதலும் முறைமையாகுமோ? (எ - று)—அம்மா - வியப்பிடைச்சொல்; மதுபானத்தின் கொடுமையை நினைந்து கூறியது. தான் - அசை.

பிறவித்துயர் நீங்குதற்கு ஸ்வஸ்வரூபத்தை யுணர்தல் இன்றியமையாததாயிருக்க, அவ்வறிவின்மையோடு மதுபானமயக்கத்தையும் பெறுவது என்ன விபரீதம்! எனக் கூறியவாறு. தன்னைத்தான் உணர்தலாவது - ஜீவாத்மாவின் தன்மையை உள்ளபடி யுணர்தல். இதனை யுணரவே, மற்றைய பரமாத்மாவின் ஸ்வரூபமும், ஜீவாத்மா பரமாத்மாவை யடையக்கூடிய உபாயத்தின் ஸ்வரூபமும், அடைதலாற் பெறக்கூடிய பலத்தின் ஸ்வரூபமும், ஜீவாத்மா பரமாத்மாவை அடையவொட்டாது தடுக்கின்ற விரோதியின் ஸ்வரூபமும் ஆகிய நான்கும் தாமாகவே உணரப்படும். இவைவந்தும், அர்த்தபஞ்சக மெனப்படும்: அர்த்தபஞ்சகஞ்ஜாந முடையவனே பிறவித்தடுமாற்றம் ஒழியப்பெறுவா னென்பது, வேதசாஸ்திரங்களின் கருத்தா மென்க. மற்றைத் துறையென்றது - வேதத்திற்கு அங்கமான ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களை. "நோயெலாம்பெய்ததோராக்கை", "அழுக்குடம்பு" என்பவாதலால் இவ்வுடம்பை 'முழுப்பிணியழுக்கு' என்றும், இவ்வழுக்குடம்போடு கூடிய பிறவி யுண்டாதற்குக் காரணம் ஸ்வஸ்வரூபத்தை யுணராமையே யாதலால் 'முன்னைத் தான் தன்னையோரா' என்று அடைமொழி கொடுத்தும் கூறினர். 'என்பது' - முதல்வேற்றுமைச் சொல்லுருபு. நான்காமடியில், 'பின்னை' என வருவதனுல், 'முன்னை' என்றூர். ஈற்று ஒகாரம் - இரக்கம்.

'தன்னைத்தா னுணர்வனுயிற் றகையறும் பிறவிதீரும்,' 'அரையுமற்றை மறைகளுமிசைத்தவெல்லாம்', 'தன்னையோரான்' என்றும் பாடம். (கூஉ)

கூக. அளித்தவரஞ்சுநெஞ்சினடைத்தவரறிவுமூழ்கிக்
குளித்தவரின்பதுன்பங்குறைத்தவரன்றிவேரி
யொளித்தவருண்டுமீண்டிவ்வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்திநின்றகதியொன்றுகண்டதுண்டோ.

(இ - ள்.) அளித்தவர் - (அபயமென்று அடைந்தவரைப்) பாதுகாத்தவரும், அஞ்சும் நெஞ்சின் அடைத்தவர் - பஞ்சேந்திரியங்களையும் மனத்தில் அடக்கியவரும், அறிவு மூழ்கி குளித்தவர் - தத்துவஞானத்தில் ஆழ்ந்திருப்பவரும், இன்பம் துன்பம் குறைத்தவர் - (சுகதுக்கங்களில்) விருப்பு வெறுப்பற்றவரும் [சுகதுக்கங்களை ஒருநிகராகக் கருதுந் துறவிகளும்], அன்றி - (நற்கதியடைவார்களே) அல்லாமல்,—வேரி - மதுவை, ஒளித்தவர் உண்டு - (பிறரறியாமல்) மறைந்தவராய்க் குடித்து, (அதனாலாகிய வெறியினால்), மீண்டு - பின்பு, இ உலகு எலாம் உணர ஓடி களித்தவர் - இவ்வுலகத்தாரெல்லாரும் அறியும்படி (கண்டவிடத்திலும்) ஓடிக் களிப்புக்கொண்டவர், எய்தி நின்ற - அடைந்துள்ள, கதி ஒன்று - ஒருநற்கதியை, கண்டது உண்டோ - (எவராயினும்) பார்த்தறிந்த துண்டோ? (எ - று.)

அஞ்சிவந்தடைந்தவரை அபயமென்று காத்தலும், பஞ்சேந்திரியங்களை வசப்படுத்துதலும், தத்துவஜ்ஞானம் நிரம்புதலும், சுகதுக்கங்களை ஒருநிகராகக் கருதுதலும் நற்கதியடைதற்கு ஏற்றவழிகளாமே யன்றி, கட்குடித்தலால் ஒருகாலும் நற்கதியுண்டாகா தென்பது கருத்து. பிறரறியாதபடி மறைத்து மதுவை உண்டாலும் பிறகு உண்டவனது சொற்சோர்வு முதலியவற்றால் உலகத்தவர் பலராலும் அது அறியப்படு மாதலால், கட்குடிப்பவரை 'ஒளித்தவ ருண்டு மீண்டிவ்வுலகெலாமுணரவோடிக் களித்தவர்' என்றார்; "உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங், கள்ளொற்றிக் கண்சாய்பவர்" என்றார் நாயனாரும். 'கதியொன்று கண்டதுண்டோ' என்றதனால், குடியர்க்கு ஒருகாலும் நற்கதி யுண்டாகாதெனெ வற்புறுத்தியவாறாம். ஐம்பொறிகளை மனத்தி லடக்குதலாவது - ஐம்பொறிகளைப் புலன்களின்மேற் செல்லவொட்டாது தடுத்து வைத்தல். 'அஞ்சுநெஞ்சினடைத்தவர்'—ஜிதேந்த்ரியர்கள்: அஞ்சு - பஞ்சேந்திரியங்கட்குத் தொகைக்குறிப்பு: உம்மை - முற்றுப்பொருளது.

'அளித்தவரஞ்சநெஞ்சி னடைந்தவரறிவுமூழ்கிக், குளித்தவரின்பதுன்பங்குடைந்தவர்குடைந்த' என்ற பாடத்திற்கு—அளித்தவர் நெஞ்சின் அஞ்ச அடைந்தவர் - தம்மைப்பெற்ற தாய்தந்தையர் மனத்தில் அச்சங்கொள்ளுமாறு பிறந்தவர்களும், அறிவு மூழ்கி குளித்தவர் - நுண்ணறிவுகெட்டு விஷயாந்தரங்களில் [சிற்றின்பங்களில்] மூழ்கினவரும், இன்பதுன்பம் குடைந்தவர் - சுகதுக்கங்களை ஒருநிகராகப் பாராட்டாமல் அவற்றிலேயே அழுந்துபவரும் [இன்பம்வந்த காலத்து மகிழ்ந்தும் துன்பம்வந்தகாலத்து வருந்தியும் நிற்பவரும்], குடைந்த வேரி ஒளித்தவர் உண்டு மீண்டு இ உலகுஎலாம் உணர ஓடிக் களித்தவரும் எய்திநின்ற கதியொன்று கண்டது உண்டோ? என்று

பொருளாம். குடைந்த வேரி - பாளை முதலியவற்றினின்று குடைந்தெடுக் கப்பட்ட மது. (கங)

கூச. செற்றதும்பகைஞர்நட்டார்செய்தபேருதவிதானுங்
கற்றதுங்கண்கூடாகக்கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்துதொடர்ந்ததும்படர்ந்ததுன்ப
முற்றதுமுணர்வராயினுறுதிவேறிதனினுண்டோ.

(இ - ள்.) பகைஞர் செற்றதும் - பகைவர் (தமக்குச்) செய்த தீங்கையும், நட்டார் செய்த பேர் உதவிதானும் - (தமக்குச்) சிநேகிதர் செய்த பேருபகாரத்தையும், கற்றதும் - (தாம்)கற்றகல்வியையும், கண்கூடாக கண்டதும் - (தாம்) பிரதியட்சமாகக் கண்டறிந்ததையும், கலை வலாளர் சொற்றதும்- சாஸ்திரங்களை யுணர்ந்த பெரியோர் கூறியதையும், மானம் வந்து தொடர்ந்ததும் - (தமக்குப்) பெருமை வந்துசேர்ந்த வழியையும், படர்ந்த துன்பம் உற்றதும் - மிக்கதுன்பம் வந்து சேர்ந்ததையும், உணர்வர் ஆயின் - அறிவாரானால், இதனின் வேறு உறுதி உண்டோ - (அவர்க்கு) இதனைக்காட்டிலும் நன்மை தருவது வேறொன்று உளதோ? [இல்லை]; (எ - று.)

தனது நாட்டாராகிய இராமலக்ஷ்மணர் செய்த பேருதவியை மறவா திருப்பதே தனக்கு நன்மையெனக் கூறத்தொடங்கிய சுக்கிரீவன், இனம் பற்றி மற்றவற்றையும் உடன்கூறினன்; ஒப்புமைக்கூட்டவணி. பகைஞர் செற்றது முதலியவற்றை மறத்தலால் தீமையும், மறவாது மனத்துக்கொண் டிருத்தலால் நன்மையும் உண்டா மென்க.

'பாவும் வந்து தொடர்ந்ததும்', 'மானம்வந்துதொலைந்ததும்', 'உற்றது முணராராயினறுதிவேறிதனினுண்டோ' என்பன பிரதிபேதம். (கூச)

கூரு. வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில்கொட்புந்
தஞ்சமென்றாரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்குங்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினாரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே.

(இ - ள்) கள்ளினால் அருந்தினாரை - மதுபானஞ்செய்தவரை,—வஞ்சமும் - வஞ்சனையும், களவும் - திருடுதலும், பொய்யும்—, மயக்கமும் - அறியாமையும், மரபுஇல் கொட்பும் - தொன்று தொட்டுவந்த முறைமைக்கு மாறான கொள்கையும், தஞ்சம் என்றாரை நீக்கும் தன்மையும்-சரணமென்று அடைந்தவரைப் பாதுகாவாது நீக்குகின்ற குணமும், களிப்பும் - செருக்கும், தாக்கும் - (சேர்ந்து) வருத்தும்; கஞ்சம் மெல் அணங்கும் தீரும் - செந்தாமரைமலரில் வசிக்கின்ற மெல்லிய தன்மையுள்ள இலக்குமியும் விட்டு நீங்குவாள்; நஞ்சமும் - விஷமும், கொல்வது அல்லால் - (உண்பவரைக்) கொல்லுமே யல்லாமல், நரகினை நல்காது - (அவர்க்கு) நரகத்தைத்தராது; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

விஷம் உண்டவரது உடம்பைமாத்திரம் அழிக்கும்; மதுவோ உடம்பை யழித்தலோடு உயிரையும் தீக்கதியிற்சேர்க்குமென, உபமானமாகிய நஞ்சை

விட உபமேயமாகிய மதுவுக்கு வேற்றுமைதோன்றக் கூறியது, வேற்றுமை யணி. மதுவுக்கு நஞ்சு உபானமாதலே, "நஞ்சுண்பார் கள்ளுண்பவர்" என் பதனுலும் அறிக. கொட்பு - 'கொள்' என்னும் பகுதியின்டியாப் பிறந்த 'பு' விகுதிபெற்ற தொழிற்பெயர். கஞ்ஜம் - நீரில்தோன்றுவது என்த் தாமரைக் குக் காரணவிடுகுறி அணங்கு - தெய்வமகள். கவளினு லருந்தினுர் - வேற்று மைமயக்கம். அணங்கும், உம்மை - இறந்ததுதழுவியது. நஞ்சமும், உம்மை - உயர்வுசிறப்பு: மற்றவை - எண்ணுப்பொருளன.

'மயக்கமும்வரம்பிற்கோட', 'நரகமுந் தப்பாதன்றே', 'நல்வினே நல்கா தன்றே' என்பன பாடாந்தரம். (கூரு)

கூகூ. கேட்டனனறவாற்கேடுவருமெனக்கிடைத்தவச்சொற்
காட்டியதனுமனீதிக்கல்வியாற்கடந்ததல்லான்
மீட்டினியுரைப்பதென்னேவிரைவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுன்முடிவதற்கையமுண்டோ.

(இ - ள்) நறவால் கேடு வரும் என கேட்டனன் - மதுபானத்தினுற் கெடுதியுண்டாகுமென்று (பெரியோர்சொல்லக்) கேட்டுள்ளேன்; கிடைத்த அ சொல் காட்டியது - (அவ்வாறு) கேட்கப்பட்ட அச்சொல்லானது பிரதி யட்சமாக(த் தன்தொழிலே)க் காட்டிவிட்டது; மீட்டு இனி உரைப்பது என்னே-திரும்பவும் இனிமேல் (அதைப்பற்றிச்) சொல்வதிற் பயன்என்ன? அனுமன் நீதி கல்வியால் கடந்தது அல்லாமல் - அநுமானது நீதிநூலுணர்ச்சி யினுல் (மதுவுண்டுநேர்ந்த ஆபத்தினின்று) தப்பிப்பிழைத்ததே யல்லாமல், விரைவின் வந்து அடைந்த வீரன் மூட்டிய வெகுளியால் - விரைவாகவந்து சேர்ந்த வீரனுகிய இலக்குமணனது மூண்ட கோபத்தினுல், நான்—, முடிவ தற்கு - இறந்தொழிவதற்கு, ஐயம் உண்டோ - சந்தேகமுளதோ? (எ - று.)

அநுமான் காலத்திற்கேற்ற தனது நுண்ணுணர்வினுல் இலக்குமண னது கோபத்திற்குத் தக்க பரிகாரம் செய்திலனுயின், மதுவுண்டு மயங்கிக் கிடந்த நான் அத்தீச்செயலின்பயனுக அப்பொழுதே அவனது கோபத்தீக்கு இலக்காய் இறந்துபட்டிருப்பே னென்பதாம். மூட்டிய - (என்செயலால்) மூட்டப்பட்ட எனினுமாம். (கூகூ)

கூஎ. ஐயநானஞ்சினேனிந்நறவினினரியகேடு
கையினுலன்றியேயுங்கருதுதல்கருமமன்றுல்
வெய்யதாமதுவையின்னும்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றுன்.

(இ - ள்.) ஐய—! இ நறவினின் அரிய கேடு - இம்மதுபானத்தால் நேரும் பெரியகேட்டிற்கு, நான் அஞ்சினேன் - நான் பயப்பட்டேன்; கையி னுல், அன்றி கருதுதல் உம் கருமம் அன்று - (அம்மதுவைக்) கையினுல் தீண்டுவதல்லாமல் மனத்தினுல் நினைத்தலும் நற்காரியமன்று; வெய்யது ஆம் மதுவை - கொடுமையுடையதாகிய அம்மதுவை, இன்னும் விரும்பி

னேன் என்னின் -'(அதனால்நேர்ந்த தீங்கைக் கண்கூடாகக்கண்ட) பின்பும் இச்சித்தேனானால், வீரன செய்ய தாமரைகள் அன்ன சே அடி - இராமபிரானது செந்தாமரைமலர்களையொத்த சிவந்ததிருவடிகள், சிதைக்க - (என்னை) அழிப்பனவாக், என்றான - என்று (ஆணையிட்டுக்) கூறினான், (சுக்கிரீவன்); (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இராமபிரானது திருவடிசாட்சியாக மதுவை இனி ஒருகாலும் விரும்பேனென்று சுக்கிரீவன் பிரதிஜ்ஞைசெய்தவாறு. சுக்கிரீவன அங்கதனை 'ஐய' என்றது - அன்புபற்றிய மரபுவழுவமைதி. அன்றியே. ஏ - அசை

'நறவினையரியகேடு', 'நறவினையரியகேடு', 'கழறவுங் கருமமன்றால்', 'காலற்குங் கருமமேயால்', 'வெய்யதாமதனை', 'சிவந்ததனறே' என்பன பிரதிபேதம். (கஎ)

[சுக்கிரீவன் இலக்குமணனை யெதிர்கொள்ளுமாறு அங்கதனையனுப்பி, தான் அரண்மனை வாயிலைச் சேர்தல்.]

கஅ. என்றுகொண்டியம்பியண்ணற்கெதிர்கொளற்கியைந்தவெல்லா
நன்றுகொண்டின்னுநீயேநணுகெனவவனையேவித
தனறுணைதேவிமாருநதமரொடுநதழுவததானு
நினறனனெடியவாயிறகடைத்தலைநிறைந்தசீரான்.

(இ - ள்.) நிறைந்த சீரான் - மிகுந்த நற்குணங்களை யுடையவனாகிய சுக்கிரீவன்,—என்று கொண்டு இயம்பி-என்று சொல்லி, 'அண்ணற்கு எதிர்கொளற்கு இயைந்த எல்லாம் நன்று கொண்டு - இலக்குமணனை எதிர்கொள்வதற்கு உரிய எல்லாவற்றையும் மிகுதியாக எடுத்துக்கொண்டு, இன்னும் நீயே நணுகு - இன்னமும் நீயே நெருங்கிச்செல்வாயாக', என-என்று, அவனை ஏவி - அவ்வங்கதனைக் கட்டளையிட்டனுப்பி,—தன் துணை தேவிமாரும் தமரொடும் தழுவ - தனது வாழ்க்கைத்துணைவியரான மனைவியரும் சுற்றத்தாரும் தன்னைச்சூழ்ந்துவர, தானும்—, நெடிய வாயில் கடைத்தலை - பெரிய (அரண்மனையின) தலைவாயிலில், நின்றனன—; (எ - று.)

'என்றுகொண்டு', கொண்டு - அசை. அண்ணலை எதிர்கொள்ளுதற்கு இயந்தவை - குடை சாமரம் முதலியன. 'கடைத்தலை நிறைந்த சீரான்' என்று எடுத்து - தலைவாயிலில் நிறைந்த புகழையுடையவன என்றுமாம்; "புறங்கடை நலலிசை" என்றார் பிறரும்.

'நன்றுகொண் டளவிலாத நணுகெனச் சேயையேவி', 'இன்று நீயே', 'தன்றுணைதேவிமார்கடமரொடும்', 'கோயிற்கடைத்தலை நிவந்த நீரான்' என்பன பாடாந்தரம். (கஅ)

[இதுவும், அடுத்தகவியும் - இலக்குமணன் வரும்போதைய கிட்கிந்தா நகரின் நிலைமையைக் கூறுவன.]

கக. உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழி
னிரைத்தபொற்குடமுநதீபசாலமுநிகழ்ந்தமுததுங
குரைதகெழுவிதானததோடுதொஙகலுங்கொடியுஞ்சங்கு
மிரைததுமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம்.

(இ - ள்.) (அப்போது), உரைத்த செம் சாந்தும் - அரைத்த சிவந்த சந்தனக்குழம்பும், பூவும் - மலர்களும், சுண்ணமும் - வாசனைப்பொடிகளும், புகையும் - (அகில்முதலியவற்றின்) நறும்புகையும், ஊழின் நிரைத்த பொன் குடமும் - விதிப்படிவரிசையாகவைக்கப்பட்டுள்ள பொற்குடங்களும் தீப சாலமும் விளக்குக்களின்கூட்டமும், நிகழ்ந்த முத்தும் - வரிசையாகத்தொங்குகின்ற முத்துச்சரங்களும், குரைத்து எழு விதானத்தோடு - அசைந்துவிளங்குகின்ற மேற்கட்டுக்களும், தொங்கலும் - பீலிக்குஞ்சங்களும், கொடியும் துவசங்களும், சங்கும் - சங்குகளும இரைத்து உமிழ் முரசும - இரைந்து பேரொலியைச் செய்கின்ற முரசவாத்தியங்களும், முற்றும் - (ஆகிய) இவைகளெல்லாம், வீதி எல்லாம் - (கிட்கிந்தாநகரத்து) வீதிகளிலெல்லாம, இயங்கின - நிறைந்தன; (எ - று.)

இலக்குமணன வருகையையுணர்ந்த கிட்கிந்தாநகரவாஸிகள் அவனுக்கு உபசாரமாகச் சந்தனக்குழம்புமுதலியவற்றை வீதிகளில் நிறைததனரென்க. சுக்கிரீவமகாராஜனது கட்டளையினால அங்கதன நிறைத்தா னெனினுமாம். சுண்ணம் - சூர்ணமென்ற வடசொல்லின சிதைவு. பொறகுடம் - ஜலபூர்ண ஸ்வர்ணகும்பம். சங்கும் முரசும் - மஙகளவாத்தியஙகள். குரைத்து - குலைந்து.

'தீபமாலையும்', 'நிகழ்ந்தமுததுக, குரைத்தெழுவிதானத்தோடு' எனவும் பாடம். (கக)

க00. தூய திண்பளிங்கிற்செய்தசுவர்களின்றலத்திற்சுற்றி
னாயகமணியிறசெய்தநனிநெடுநதூணினப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடு
மாயிரமைநதர்வந்தாருளரெனப்பொலிநததவ்வூர்.

(இ - ள்.) அ ஊர - அந்தக கிஷ்கிந்தாநகரமானது,—தூய திண் பளிங்கின் செய்த சுவர்களின் தலத்தில - சுத்தமான [பிரதிபலிக்குந்தன்மையுள்ள] வலிய ஸ்படிககற்களினாற் செய்யப்பட்ட சுவர்களினிடங்களிலும், சுற்றில நாயகம் மணியின் செய்த நனி நெடுந் தூணின நாப்பண் - சுற்றுப் பக்கங்களிற சிறந்த நவரத்தினஙகளிலைழததுச்செயத மிகவும் நீண்ட தம்பங்களின நடுவிடஙகளிலும், சாயை புக்கு உறலால் - (இலக்குமணனது உடம்பின) நிழல் போய்ப் பொருந்துதலால்,—கை வில்லோடும் - கையில் தாங்கிய வில்லுடனே, ஆயிரம் மைந்தர் வந்தார் உளர் என - ஆயிரம்வீரர்கள் (இப்போது இங்குத்) திரண்டு வந்திருக்கிறார்களென்று, கண்டோர் அயர்வு உற - பார்த்தவர்களெல்லாருஞ் சநதேகிக்கும்படி, பொலிந்தது - விளங்கிறது; (எ - று.)

இலக்குமணன் செல்லுகின்ற இடங்களி லுள்ள பளிங்குச்சுவர்களிலும் இரத்தினததூண்களிலும் அவவிலக்குமணனது சாயை ஆயிரக்கணக்காகப் பிரதிபலித்தலால், பலவீரர் திரண்டுவந்தார்களோ வென்று சந்தேகிக்கும்படி அவ்வூர் விளங்கிற தென்பதாம்.

'சுறறும்,' 'சுற்றி,' 'நன்னெடுந்தாணின்,' 'தகைவுறக்கைவில்லோடும்,' 'அயர்வுறத் தகைவிலோடும்,' 'தயாவுறக்கைவில்லோடும்' என்றும் பாடம்.

[தன்னிடத்துவந்த அங்கதனைக்கண்ட இலக்குமணன் சுக்கிரீவனைப்பற்றி வினவுதலும், அதற்கு அவன் விடைகூறுதலும் ]

௧0௧. அங்கதன்பெயர்த்துமங்கு வந்தாண்டடியிணைதொழுதானைய
வெங்கிருந்தானுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி
மங்குறோய் கோயில்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான்.

(இ - ள்.) அங்கதன — பெயர்த்தும் ஆண்டு வந்து அடி இணை தொழுதான் - மறுபடியும் அங்கு [இலக்குமணனுள்ளவிடத்தில்] வந்து (அவனது) உபயபாதங்களை வணங்கினன; (அப்பொழுது இலக்குமணன அவனை நோக்கி), 'ஐய—! உம கோமான எங்கு இருந்தான் - உங்களது அரசனாகிய சுக்கிரீவன எங்கேயிருக்கின்றான?' என்றலும - என்று வினவியவளவில்,— (அங்கதன் இலக்குமணனை நோக்கி), 'சிங்கம் ஏறு அனைய வீர - ஆண்சிங்கம் போன்ற மகாவீரனே! செய தவம செல்வன - (முறபிறப்பிற) செய்த மிக்க தவத்தையுடையவனான சுக்கிரீவன், எதிர்கோள எண்ணி - (உனனை) எதிர் கொள்ள நினைத்து, மங்குல் தோய் கோயில் கொற்றம கடைத்தலை மருங்கு நின்றான - மேகமண்டலத்தை யளாவிய அரணமனையினது வெற்றியை யுடைய தலைவாயிலில நிற்கின்றான?' என்றான்—; (எ - று.)

பூர்வஜன்மத்தில் சுக்கிரீவன்செய்த தவப்பயனால்தான் உமதுசினேகம் அவனுக்கு நேர்ந்த தென்பான, அவனை 'செய்தவச்செல்வன்' என்றான். தவச்செல்வம் - தவத்தினமிகுதி: தவமாகிய செல்வமெனினுமாம். எதிர் கோள் - முதனிலைதிரிந்ததொழிறபெயர்.

'வந்தாங்கடிதொழுதானையைய,' 'மங்குறோய்மாடக் கோயிற்கடைத் தலை' என்று பாடாந்தரங்கள். (௧0௧)

[சுக்கிரீவன் இலக்குமணனை எதிர்கொள்ளச் செல்லுதல்.]

௧0௨. சுண்ணமுந்தூசும்வீசிச்சூடகத்தொடிக்கைம்மாதர்
கண்ணகன்கவரிக்கற்றைக்காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க்கவிக்குலத்தரசன்வந்தான்.

(இ - ள்.) சூடகம் தொடி கை மாதர் - சூடகத்தையும் தொடியையும் அணிந்த கைகளையுடைய வானரமகளிர், சுண்ணமும் தூசும் வீசி - சுகந்தப்பொடிகளையும் வஸ்திரங்களையும் வீசிக்கொண்டு, கண் அகல் கவரி கற்றை கால் உற - இடமகன்ற [பெரிய] சாமரைத தொகுதியைக்கொண்டு காற்றையுண்டாக்கவும, கலை வெள் திஙகள் விண் உற வளர்ந்தது என்ன வெள் குடை விளஙக - பதினாறுகலைகளும்நிரமபிய வெண்மையான பூர்ண சந்திரன் வானத்திறபொருந்தி விளங்குவதுபோல வெண்கொற்றக்குடை

பிரகாசிக்கவும்,—வீரம் வண்ணம் வில் கரத்தான் முன்னர் - பராக்கிரம முடைய அழகிய வில்லையேந்திய கையையுடையவனான இலக்குமணனெதிரில், கவி குலத்து அரசன் - வானரசாதித்தலைவனான சுக்கிரீவன், வந்தான்— சுண்ணந்தூவுதலும், தாசுவீசுதலும் - மகிழ்ச்சியையும் வெற்றியையும் தெரிவிப்பனவாம். சூடகம், தொடி - கைவளைவிசேடங்கள். கவரி - சமரீ என்னும் மானின்பெயர், அதன்வாலின்மயிர்க்கு இலக்கணை. குடைக்குச் சந்திரன் - வடிவும் நிறமும் குளிர்ச்சிதருதலும் பற்றிய உவமை. குடையும், சாமரமும் - ராஜசின்னங்கள். 'விண்ணுறவலர்ந்த' என்பதும் பாடம். (கoஉ)

[இதுவும் அது.]

கoரு. அருக்கியமுதலவாயவருச்சனைக்கமைந்தயாவு
முருக்கிதழ்மகளிரேந்தமுரசினமுகிலினார்ப்ப
விருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வநோக்கித்தேவருமருளச்சென்றான்.

(இ - ள்,) முருக்கு இதழ் மகளிர் - பலாசமலரையொத்த அதரங்களையுடைய வானரமகளிர், அருக்கியம் முதல ஆய அருச்சனைக்கு அமைந்த யாவும் ஏந்த - அர்க்கியம் முதலாகவுள்ள (இலக்குமணனை) உபசரித்தற்கு உரிய எல்லாப்பொருள்களையும் உடன்கொண்டுவரவும்,—முரசு இனம் முகிலின் ஆர்ப்ப - பேரிகைவாத்தியங்களின்கூட்டம் மேகம்போல ஒலிக்கவும்,—முனிவர் இருக்கு இனம் ஓத - இருடிகள் வேதபாக்கியங்களைச் சொல்லிக்கொண்டுவரவும்,—இசை திசை அளப்ப - சங்கீதங்களினோசை எல்லாத்திக்குக்களிலும் பரவவும்,—யாணர் திரு கிளர் செல்வம் நோக்கி தேவரும் மருள - புதிய சிறப்புமிக்க (தனது) செல்வச் சிறப்பைப் பார்த்துத் தேவர்களும் திகைக்கும்படி, சென்றான் - (சுக்கிரீவன் இலக்குமணனெதிரிற்) போனான்; (எ - று.)

அருக்கியம்= அர்க்கியம்: கைகழுவ நீர்தருதல்; இது, ஷோடசோபசாரங்களில் ஒன்று. மற்றவை தவிசளித்தல், கால்கழுவநீர்தருதல், முக்குடிநீர்தருதல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தருதல், சந்தனக்குழம்பு பூசுதல், மலர்சூட்டுதல், அக்ஷதைதூவுதல், தூபஞ்சமர்ப்பித்தல், தீபஞ்சமர்ப்பித்தல், கற்பூரமேற்றுதல், அமுதமேந்துதல், அடைக்காய்தருதல், மந்திரமலரானருச்சித்தல் என்பனவாம். முருக்கு - மரத்தின்பெயர் மலருக்கு முதலாகுபெயர். இருக்கு - ருக்: ஸ்வஸ்திவாசநம் முதலியன. (கoரு)

[சுக்கிரீவனது தோற்றம்.]

கoச. வெம்முலை மகளிர் வெள்ள மீனென விளங்க விண்ணிற்
அம்மைவான் மதியங் குன்றிற் றோன்றிய தெனவுந் தோன்றிச்
செம்மலை யெதிர்கொ ளெண்ணித் திருவொடு மலர்ந்த செல்வ
னம்மலை யுதயஞ் செய்த தாதையு மனைய ளுனன்.

(இ - ள்.) செம்மலை எதிர்கோள் எண்ணி - பெருமையிற் சிறந்தவனான இலக்குமணனை எதிர்கொள்ள நினைத்து, திருவொடுமலர்ந்த செல்வன் - மிக்க அழகோடு விளங்குகின்ற ஸ்ரீமானான சுக்கிரீவன்,—வெம்முலை மகளிர் வெள்ளம் மீன் என விளங்க - விரும்பப்படுந் தனங்களையுடைய வானரமகளிரின் கூட்டம் நட்சத்திரங்கள்போலப் பிரகாசிக்க, (அவர்களினிடையே) குன்றில் தோன்றியது - உதயமலையி லுதித்து விளங்குவதாகிய, விண்ணில் சும்மை வால் மதியம் எனவும் - ஆகாயத்திற் காணப்படுகின்ற கலைகள் நிரம்பிய வெண்மையான சந்திரன்போலவும், தோன்றி - (தான்) காணப்பட்டு,—அ மலை உதயம் செய்த தாதை அனையனும் ஆனான் - அந்த உதயகிரியில் உதித்து விளங்குகின்ற தனது தந்தையாகிய சூரியனை ஒத்தவனுமானான்: (எ - று)

மகளிராற் சூழப்பட்டுக் கிட்கிந்தமலையின்மேல் விளங்குகிற சுக்கிரீவனுக்கு - நக்ஷத்திரங்களாற்சூழப்பட்டு உதயகிரியிலுதித்த சந்திரனும், உதயகிரியில்தோன்றிய சூரியனும் உவமையாவரென்க. 'தந்தையே மைந்தனைப் பிறக்கிறான்' என்பதற்கு ஏற்ப, தகப்பனாகிய சூரியனை மகனாகிய சுக்கிரீவனுக்கு உவமை கூறுதல் தகும். சும்மை - கிரணங்களின் தொகுதி. உம்மை இரண்டும் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவியன. இனி, இல்பொருளுவமையாகக் கொண்டு குன்றில் தோன்றியது - கிஷ்கிந்தகிரியிலுதித்ததாகிய, மதியம் எனவும், அ மலை உதயஞ்செய்த - அக்கிஷ்கிந்தகிரியிலுதித்த தாதை எனவும் கூறலாம். (கOச)

## வேறு.

[இலக்ஷ்மணன் சுக்கிரீவனைக்கண்டவுடன் எழுந்த கோபத்தைத் தணித்துக்கொள்ளுதல்.]

கOரு. தோற்றிய வரிக்குலத் தரசைத் தோன்றலு
மேற்றெதிர் நோக்கின னெழுந்த தவ்வழி
சீற்றமங் கதுதனைத் தெளிந்த சிந்தையா
லாற்றினன் றருமத்தி னமைதி யுன்னுவான்.

(இ - ள்.) தோன்றலும் - சிறந்தவனாகிய இலக்குமணனும், தோற்றிய அரி குலத்து அரசை - (எதிரிற்) காணப்பட்ட வானரக் கூட்டத்திற்குத் தலைவனான சுக்கிரீவனை, ஏற்று எதிர் நோக்கினன் - வரவேற்று எதிரே பார்த்தான்; அ வழி சீற்றம் எழுந்தது - அப்போது (அவ்விலக்குமணனுக்குக்) கோபம் மூண்டது; தருமத்தின் அமைதி உன்னுவான் - தருமத்தின் நிலைமையைக் கருதுபவனாகிய அவ்விலக்குமணன், அங்கு - அப்போது, அது தனை - அக்கோபத்தை, தெளிந்த சிந்தையால் - தெளிவடைந்திருக்கிற (தனது) மனத்தினால், ஆற்றினன் - தணித்துக்கொண்டான்; (எ - று.)

தங்கள் திறத்திற் குறித்ததவணைப்படிவாராது தவறிய சுக்கிரீவன்எதிர்ப்பட்ட வளவில் இலக்குமணனுக்குக் கோபம்மூண்ட தென்க. 'கோவம் பாவத்திற்கு அஞ்சாது', 'மறத்தல் வெகுளியை யார்மாட்டுந்தீய, பிறத்தலதனான்

வரும்'' என்றபடி கோபம் தருமத்திற்கு விரோதியாதலால், இலக்குமணன் தனது தெளிந்தமனத்தினாற் கோபத்தை உடனே ஆற்றினன். 'அருமத்தி னமைதியெண்ணுவான்' என்றும் பாடம்.

இதுமுதல் ருக - கவிகள் - கார்காலப்படலத்தின் முதற்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (௧௦௫)

[அவ்விருவரும் தழுவி, பரிவாரங்களுடன் அரண்மனையினுட்செல்லுதல்.]

௧௦௬. எழுவினுமலையினுமெழுந்ததோள்களாற்
றழுவினரிருவருந்தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்திேனாடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினார்.

(இ - ள்.) இருவரும் - (லக்ஷ்மணன் சுக்கிரீவன் என்ற) அவ்விருவரும், எழுவினும் மலையினும் எழுந்த தோள்களால் தழுவினர் - இருப்புத்தூண் மலை என்ற இவற்றைக்காட்டிலும் பருத்தோங்கிய தமது தோள்களினால் ஒருவரையொருவர் தழுவிக்கொண்டார்கள்; தழுவி - அங்ஙனந் தழுவிக்கொண்டு, தையலார் குழுவொடும் - வானரமகளிர்கூட்டத்துடனும், வீரர்தம் குழாத்தினோடும் - வானரவீரர் கூட்டத்துடனும், ஒழிவு இலா பொன் குழாத்து உறையுள் புக்கு எய்தினார் - ஒழிவில்லாத பொன்திரளினா லமைக்கப்பட்ட மாளிகையினுட் சென்றுசேர்ந்தார்கள்; (எ - று.)

ஒழிவிலாப்பொற்குழாத்துறையுள் - முழுவதும் பொன்னினாற் சமைந்த மாளிகை. ஒழிவிலா - ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் நெருங்கினவராகி எனினுமாம். (௧௦௬)

[இதுவும், அடுத்தகவியும் ஒருதொடர்: இலக்குமணனைச் சுக்கிரீவன் சிங்காதனத்து இருக்கச் சொல்ல அவன் உடன்படாமை.]

௧௦௭. அரியணையமைந்ததுகாட்டியையவீண்
டிருவெனக்கவிக்குலத்தரசனேவலுந
திருமகடலைமகனபுல்லிற்சேரவெற்
குரியதோவீதெனமனத்தினுன்னுவான்.

(இ - ள்.) கவி குலத்து அரசன் - வானரக்கூட்டத்தலைவனான சுக்கிரீவன், அமைந்தது அரி அணை காட்டி - சித்தஞ்செய்யப்பட்டதொரு சிங்காதனத்தை (இலக்குமணனுக்குக்) காண்பித்து, 'ஐய - தலைவனே! ஈண்டு இருஇதில் வீற்றிருப்பாயாக', என ஏவலும் - என்று வேண்டிக்கொள்ளவும்,— (இலக்குமணன்), 'திருமகள் தலைமகன் புல்லில் சேர - இலக்குமிக்குத்தலைவனாகிய இராமபிரான் புல் தரையிலே தங்கியிருக்க, ஈது எற்கு உரியதோ - இச்சிங்காதனத்து இருத்தல் (அவனதுதம்பியாகிய) எனக்குத் தகுதியாகுமோ?' என - என்று, மனத்தின் உன்னுவான் - மனத்திற் சிந்திப்பவனாய்,— (எ - று.)—அடுத்தகவியில் 'என்றான்' என்பதனோடு முடியும்

'செல்வத்திற்கு உரியமகளாகிய இலக்குமிக்குக் கணவனாயிருந்தும் இராமபிரான் தான் ஒன்றுமில்லாதானைப்போலப் புல்லணையிற்கிடக்க நேர்ந்ததே!' என்ற இரக்கந் தோன்ற, 'திருமகள்தலைமகன்புல்லிற்சேர' எனக்கருதினன்; இதில் நூநுதியின்மையணி தொனிக்கும். திருமால் இராமபிரானாகத் திருவவதரித்தபோது இலக்குமியே சீதையாகத்திருவவதரித்து அப்பிரானைமணந்தது பற்றி, அவனை 'திருமகள் தலைமகன்' என்றார்.

'திருமகளாயகன்,' 'இஃதென' என்று பிரதிபேதம். (௧௦௭)

௧௦௮. கல்லணைமனத்தினையுடைக்கைகேசியா
லெல்லணைமணிமுடிதுறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூத்தொடர்
மெல்லணைவைகலும்வேண்டுமோவென்றான்.

(இ - ள்.) 'கல் அணை மனத்தினை உடை கைகேசியால் - கல்லைப்போன்ற [கடினமான] மனத்தையுடைய கைகேசியின்வரத்தினால், எல் அணை மணி முடி துறந்த - ஒளிபொருந்திய இரத்தினகிரீடத்தை விட்டு (வனத்தில்) வந்த, எம்பிரான் - எமது தலைவனாகிய ஸ்ரீராமன், புல் அணை வைக - புற்படுக்கையில் தங்கியிருக்க, யான்—, பொன் செய் பூ தொடர் மெல் அணை வைகலும் - பொன்னினாற்செய்யப்பட்டதும் மலர்களாலலங்கரிக்கப்பெற்றதுமான மென்மையாகிய ஆசனத்தில் தங்குதலும், வேண்டுமோ - (எனக்கு) வேண்டுவதொன்றோ?' என்றான - எனறுகூறினன், (இலக்குமணன்); (எ - று.)

இராமபிரான் கைகேசியால் முடிதுறந்த விவரம், கதைத்தொடர்ச்சியிற் கூறப்பட்டது. 'கல்லணைமனத்தினாலாவிகாக்கின்றேன,' 'முடிதுறந்தவெம்முனார்' என்பன பிரதிபேதம். (௧௦௮)

[அதுகேட்டுச் சுக்கிரீவன் வருந்துதலும், இலக்குமணன் தரையில் இருத்தலும்.]

௧௦௯. என்றவனுரைததலுமிரவிகாதல
னின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்
குன்றெனவுயர்ந்தவக்கோயிற்குட்டிம
வன்றலத்திருந்தனன்மனுவின்கோமகன்.

(இ ள்.) எனறு அவன் உரைத்தலும் - என்று அவ்விலக்குமணன் கூறியவளவில்,—இரவி காதலன் - சூரியனது குமாரனாகிய சுக்கிரீவன் மலர் கண் நீர் உக விம்மினன் நின்றனன் - தாமரைமலர்போன்ற (தனது) கண்களினின்று நீர்பெருக அதுகொண்டு நின்றான்; (அப்போது), மனுவின் கோமகன - மநுவெனனும் அரசனதுவமிசத்தில் தோன்றிய இராசகுமாரனை இலக்குமணன், குனறு என உயர்ந்த அ கோயில் குட்டிமம் வல் தலத்து இருந்தனன் - மலைபோல வுயர்ந்த அவ்வரண்மனையினது கற்படுத்த இடமாகிய வலியதரையி லிருந்தான்; (எ - று.)

"அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர், புன்கணீர் பூசல் தரும்" என்றபடி பிறர்துன்பங்கேட்டவழிக் கண்ணீர்பெருக்குதல் அன்புடையார்செய லென்க. குட்டிமம் - வடசொல்.

'குன்றெனப்பொலிந்தவக்கோயிற் கூடிய', 'குன்றெனப் பொலிந்தவக் கோயினின்றனன், மன்றலந்தாரினுன்' என்று பிரதிபேதம். (கoக)

[அச்சமயத்தில் அனைவரும் வருந்துதல்.]

ககo. மைந்தருமுதியருமகளிர்வெள்ளமு
மந்தமிலேனுக்கினரழுதகண்ணின
ரிந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலர்.

(இ - ள்.) (அப்போது அங்குள்ள வானரக்கூட்டத்தில்), மைந்தரும் - இளையவரும், முதியரும்-வயதுசென்றவர்களும், மகளிர் வெள்ளமும்-பெருந்திரளான மாதர்களும்,—அந்தம் இல் நோக்கினர் - அழகில்லாத [இடுங்கின] பார்வையையுடையவர்களும், அழுத கண்ணினர் - அழுகிற கண்களையுடையவர்களும், நுவல்வது ஓர்கிலா - (ஒன்றுஞ்) சொல்லத்தெரியாதவர்களுமாகி, நொந்தனர் தளர்ந்தனர் - மனம்வருந்திச்சோர்ந்து, இந்தியம் அவித்தவர் என இருந்தனா - பஞ்சேந்திரியங்களையும் அடக்கிய முனிவர்போல இருந்தார்கள்; (எ - று.)

இருடிகள் பரமாத்மதியானத்தால் பஞ்சேந்திரியங்களையும் தம்தம்வழியிற்செல்லவொட்டாது அடக்கியிருத்தலை, மிக்கவிசனத்தால் எல்லாவானரர்களும் இந்திரியங்களினதொழிலடங்கிச் செயலற்றிருத்தற்கு உவமைகூறினார். வானரர்க்குத் துன்பம், ராஜகுமாரனாகிய இலக்குமணன் தரையிலிருந்ததைக் கண்டமையா லானது; இராமபிரானுக்கு நேர்ந்துள்ள நிலையை இலக்குமணன்சொல்லக் கேட்டதனாலாகியதுமாம். துன்பம் நேர்ந்தபோது கண்பார்வையிடுங்குதல்பற்றித் துன்பத்திற்கு 'இடுக்கண்', 'புன்கண்' என்ற பெயரிருத்தலால், துன்பமடைந்தவ ரென்ற பொருளில் 'அந்தமில்நோக்கினர்'என்றார். இந்தியம் - இந்த்ரியம் என்ற வடசொல்லின திரிபு. 'என்னகின்றனர்' என்பதும் பாடம். (ககo)

[சுக்கிரீவன் இலக்குமணனை நீராடியுண்ணுமாறு வேண்ட, அவன் மறுத்துக்கூறத் தொடங்குதல்.]

கக௧. மஞ்சனவிதிமுறைமரபினாடினை
யெஞ்சலிலின்னமுதருந்தினயாமெலா
முய்ஞ்சனமினியெனவரசுரைத்தலு
மஞ்சனவண்ணனுக்கனுசன்கூறுமால்.

(இ - ள்.) அரசு - சுக்கிரீவமகாராஜன், (இலக்குமணனைநோக்கி), '(நீ), விதி முறை மரபின் மஞ்சனம் ஆடினை - நூல்களிற்சொல்லிய முறைப்படியே கிரமமாக நீராடியவனாய், எஞ்சல் இல் இன் அமுது அருந்தின் - குறைத

வில்லாத இனிய உணவை யுண்டால், யாம் எலாம் இனி உய்ஞ்சனம்-யாங்களெல்லாம் இப்போது உஜ்ஜீவித்தவர்களாவோம்', என உரைத்தலும் - என்று சொன்னவுடனே,—அஞ்சனம்வண்ணனுக்கு அனுசன் - மைபோன்ற கருநிறமுடையவனுன இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குமணன், கூறும் - சொல்வானாயினன; (எ - று.)—அதனை, அடுத்த நான்குகவிகளிற் காண்க. ஆல் - ஈற்றசை.

'நீ நீராடியுண்டால் யாம் உய்வோம்' என இலக்குமணனுக்குச் சுக்கிரீவன் முகமன கூறினனென்க. உய்ஞ்சனம் - க்ருதார்த்தர்களாவோம் என்றபடி. உய்ஞ்சனம்=உய்ந்தனம்:போலி: இறந்தகாலத்தாற் கூறியது, தெளிவு பற்றிய காலவழுவமைதி. அமுது - தேவாமிருதம்போன்ற உணவிற்கு உவமையாகுபெயர்.மஞ்சனம்=மஜ்ஜநம். வடசொல்:நீராடுதலென்பது. பொருள். அஞ்சனவண்ணனுக்கனுசன்—லக்ஷ்மணனுக்கு 'ராமாநுஜன்' என்று ஒருதிருநாமம். அநுஜன் - பின்பிறந்தவன: தம்பி.

'மாபிஞடியே', 'உய்ஞ்சனம்வினைதுறந்துயாவுண்டியா, லெஞ்சலிலெமதகத்தியன்றதென்றலும்', 'அஞ்சனவண்ணனுக்கிளவல்சொல்லுவான்' என்பன பிரதிபேதம். (கசக)

[இதுமுதல் நான்குகவிகள் - இலக்குமணன்வார்த்தை]

கசஉ. வருத்தமும்பழியுமேவயிறுமீக்கொள
விருததுமென்றலெமக்கினியதியாவதோ
ரருத்தியுண்டாயினுமவலந்தான்றழீஇக்
கருத்துவேறுற்றபினமிழ்துங்கைக்குமால்.

(இ - ள்.) வருத்தமும் பழியுமே வயிறு மீக்கொள இருததும் என்றால் - துன்பமும் நிந்தையுமே வயிற்றைநிரப்பியிருக்கவும் (நாஙகள) உயிர்பிழைத்திருககினறோ மென்றால், எமக்கு - எங்களுககு, இனியது - இனிமைதரக்கூடியது, யாவது-எதுதான்? ஓர் அருத்தி உண்டு ஆயினும் - ஒப்பற்ற [மிக்க] பசி யுண்டாயிருந்தாலும், அவலம தழீஇ கருதது வேறு உற்றபின - துன்பமடைந்து மனம மாறுபட்டபோது, அமிழ்தும் கைக்கும் - (உண்பது) தேவாமிருதமேயாயினும் கசக்குமன்றோ! (எ - று.)—ஆல் - ஈற்றசை. தேற்றமுமாம. தான - அசை.

உலகத்தில்ஒருவர்க்கு மிக்கபசியிருப்பினும் துன்பத்தினுல் மனம்மாறுபட்டபோது தேவாமிருதமும் இனிமையாகத தோனறாது; அவ்வாறே, உயிரைப் போககககூடிய வருத்தத்தையும் பழியையுஞ் சுமந்து நாங்கள் அரிதில் உயிர்பிழைத்திருக்கையில் இவ்வுலகத்தில் எதுவும எமக்கு இனிமையாகத் தோனறாது; ஆதலால், எனக்கு நீ இடுவதாகக்கூறும் இனிய உணவும் வேண்டா என்றவாறும். பின்னிரண்டடியிற்கூறிய பொதுப்பொருள் முனனிரண்டடியைச் சமர்த்தித்துநிற்பது - வேற்றுப்பொருள்வைப்பணி; வடநூலார் அர்த்தாந்தரந்யாஸாலங்கார மென்பர். துனபமுற்றார்க்குப் பசியுண்டானுலும் அமிருதம் கைக்கும்; எங்கட்கோ அப்பசியுண்டாதற்கும் வழியில்லை

யென்பான், 'வருத்தமும் பழியுமே வயிறுமீக்கொள' என்றான்; இங்கு வேற்றுமையணி தொனிக்கும். வருத்தமும் பழியும் - சீதாபிராட்டியை மாற்றானாகிய இராவணன் எடுத்துச்சென்றதனால் நேர்ந்தன. இருத்தும் - தன்மைப் பன்மை; தும் - விகுதி. இனி, 'வருத்தமும் பழியுமே வயிறுமீக் கொள இருத்தும்' என்பதற்கு - வருத்தமும் பழியுமே வயிறுநிரப்பிவிட்ட தனால், (நல்லுணர்வு இல்லாமலும்) உயிரோடிருக்கச்செய்யு மென்று உரைப் பாரு முளர்; இப்பொருளில், இருத்தும் - பிறவினைச்செய்யுமெனமுற்று. அருத்தி - இங்கு, உணவின்வேட்கை.

'அருத்துமென்றாலெமக்கினியதியாவதோர்' 'இனியதாகுமோ', 'இனி யதாவதோ', 'வேறுற்றபோது' என்பன பாடாந்தரம். (கசஉ)

ககங. மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினெமைக்கடலினாரமிழ்
தூட்டினையாற்பிறிதுயவுமில்லையால்.

(இ - ள்.) அரசன் தேவியை காட்டினை எனின - இராமபிரானது தேவி யாகிய சீதாபிராட்டியை(த்தேடி இன்னவிடத்திலிருக்கின்றாளென்று) காட் டினாயானால்,--எமை - எம்மை, மூட்டிய பழி எனும் முருங்கு தீ அவித்து கங்கை நீர் ஆட்டினை - நிறைந்தபழியாகிய அழிக்கவல்லநெருப்பை அவியச் செய்து கங்காநதியினஜலத்தினால் நீராட்டினவனாவாய்; (அன்றியும்), கட லின ஆர் அமிழ்து ஊட்டினை - திருப்பாற்கடலிலுண்டாகிய அருமையான தேவாமிருதத்தை உண்பித்தவனுமாவாய்; பிறிது உயவும் இல்லை - (எமக்கு) வேறேதுன்பமு மில்லையாய்விடும்; (எ - று.)—'ஆல்' இரண்டும - ஈற்றசை.

நீ சீதையைத் தேடிக் கண்டுபிடித்துத் தருவாயானால், கங்கையில்நீரா டித தேவாமிருதத்தைப் புசித்ததுபோல நாங்கள் திருப்தியடைவோ மென்ற படி. கீழ் நீராடியுணவருந்தும்படி வேண்டிய சுக்கிரீவனுக்கு இலக்குமணன் இச்செய்யுளினாற கூறியது எற்ற மறுமொழியாத லுணர்க. பற்றியெரி யும்நெருப்பை யவித்தற்கு நீர் இன்றியமையாதவாறுபோல எமது பழியைப் போக்கச் சீதையைத்தேடிக்காட்டுதல் இன்றியமையாதென்பது, முன்னிரண் டடிகளிற் போதரும். ஸ்நாநத்தினால் உஷ்ணந்தணிதலும, நீரினால் நெருப்பு அவிதலுமாகிய இயல்புகள இங்குக கருதத்தக்கன. மூட்டிய பழியெனும் முருங்குதீயவித்து அரசனதேவியைக்காட்டினையெனின என று இயைத்துப் பொருளுரைப்பினுமாம்.

"காட்டினையேலெமைக்கடலினினமிழ்து', 'பிறிதுயிருமில்லையால்', 'பிறிதுயிருமுள்ளதால்' என்பன பிரதிபேதம். (ககங)

•ககச. பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
மிச்சிலேநுகர்வதுவேறுநாமென்று
நச்சிலைனச்சிலேனாயினுயுண்ட
வெச்சிலேயதுவிதற்கையமில்லையால்.

(இ - ள்.) பசு இலை - பசியஇலைகளும் [கீரைகளும்], கிழங்கு - கிழங்குகளும், காய் - காய்களும் (ஆகிய இவைகளில்), பரமன் நுங்கிய மிச்சிலே - சிறந்தவனாகிய இராமபிரான அமுதுசெய்துமிகுந்த சேஷமே, நான் நுகர்வது - நான் உண்பது; (அன்றி), வேறு ஒன்றும் நச்சிலேன் - வேறொரு பொருளையும் விரும்பியுட்கொள்ளமாட்டேன்; நச்சினேன் ஆயின் - ஒரு கால் விரும்பினேனானால், அது - (பரமனுண்டமிச்சிலல்லாத) அது, நாய் உண்ட எச்சிலே—, இதற்கு ஐயம் இல்லை இதற்குச் சந்தேகமேயில்லை; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

நீ இப்போது உண்ணுமாறு எனக்குக்கொடுப்பது, இராமபிரானுண்டமிச்சிலன்றாதலால், இதை நான் உண்பது தகுதியல்ல வென்றவாறும். மிச்சில், எச்சில்—மிஞ்சு, எஞ்சு - பகுதிகள்; இல் - பெயர்விகுதி. நச்சிலேன் நச்சினேன் - தொடைமுரண்.

'மிச்சிலைநுகர்வதுவனறிவேறொன்று', 'வேறுதான்ஒன்று,' 'நச்சிலேனயலதுநுகரிஞயுண்ட', 'நச்சிலேனயலினிநுகரிஞயுண்ட' 'எச்சிலை நுகர்வதே யையமில்லையால்', 'எச்சிலேபதுவிதரகேதுவில்லையால' என்பன பாடாந்தரம். (ககச)

கக௫. அன்றியுமொன்றுளதையயானினிச்
சென்றனன்கொணர்ந்தடை திருத்தினலது
நுன்றுணைக்கோமகனுகர்வதாதலா
னின்றிறைதாழ்த்தலுமினிதன்றுஎன்றான்.

(இ - ள்.) ஐய - தலைவனே! அனறியும் - அல்லாமலும், ஒன்று உளது - (நானசொல்லவேண்டியது) இனனுமொனறு இருக்கின்றது; யான —, இனி சென்றனன அடை கொணாந்து திருததினல் - இனிப்போய்க் கீரைமுதலியவற்றைக் கொண்டுவந்து சித்தஞ்செய்துவைத்தால், அது நுன் துணை கோமகன நுகர்வது - உனது சிநேகிதனாகிய இராமபிரான் உண்பதாகும்; ஆதலான்-ஆதலால், இன்று இறை தாழ்த்தலும் இனிது அன்றுஆம் - இப்பொழுது நான் (இங்கு) ஒருநொடிப்பொழுது தாமதித்தலும் இனியதாகாது, என்றான் - என்று (இலக்குமணன்) கூறினான; (எ - று.)

இராமபிரான் பட்டினியாய்க்கிடத்தலால், யான் இங்கே நொடிப்பொழுது தாமதிப்பதும் நன்றன்று என்று குறிப்பித்தவாறு. அடை - கிழங்கு முதலியவற்றிற்கு உபலக்ஷணம். நுன் - திசைச்சொல், கோமகன் - சக்கரவர்த்தித்திருமகன். 'கொணர்ந்திடைதிருத்தினல்' எனறு பிரதிபேதம். (கக௫)

[அதுகேட்டுச் சுக்கிரீவன் வருந்துதல்.]

ககசு. வானரம்வநதனும்பினனைவகுதன்
மானவர்தலைமகனிடரின்வைகவே
யானதுகுரக்கினத்தெமர்கட்காமென
மேனிலையழிந்துயிர்விம்மினானரோ.

(இ - ள்.) (அதுகேட்டு), வானர வேந்தனும் - வானரராஜனான சுக்கிரீவனும், (லக்ஷ்மணனைநோக்கி), 'மானவர் தலைமகன் இடரின் வைக - மநுவமிசத்தாருட் சிறந்தவனாகிய இராமபிரான் துன்பத்தில் மூழ்கியிருக்கையில், இனிதின் வைகுதல்ஆனது - (இப்போது எமக்கு உண்டாயிருப்பதான) இன்பமாகக் காலங்கழிப்பதென்பது, குரங்கு இனத்து எமர்கட்கு ஆம் - குரங்குச் சாதியிற்பிறந்த எம்போலியர்க்கே தகும்', என - என்றுகூறி, மேல் நிலை அழிந்து உயிர் விம்மினன் - உடம்பு நிலைகுலைந்து உயிர்வருந்தினான்; (எ - று.)— அரோ - ஈற்றசை.

இலக்குமணன் வார்த்தையைக் கேட்டவுடனே சுக்கிரீவன் ஆற்றாது உடல்தளர்ந்து உயிர்வருந்தினா னென்க. மானவர்தலைமகன் என்பதற்கு - மனிதர்களுட் சிறந்தவனென்றும் கூறலாம்: மாநவர் - (காசியபமுனிவரது பத்தினியாகிய) மநுவின் சந்ததியார். 'மானவடலைமகன்' என்ற பாடத்திற்கு - மான்போன்ற சீதாபிராட்டியின் கணவனென்று பொருளாம். 'உயிர்' எனப் பின்னேவருதலால், 'மேல்' என்பது - உடம்பைக் குறித்தது. உயிர்விம்மினான் - உயிர்த்துவிம்மினா னென்றுமாம். (ககக)

[வருந்தியசுக்கிரீவன் அநுமானிடத்து ஒன்றுசொல்லுதல்.]

ககஉ. எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன்வெறுத்தவாழ்வின
னழிந்தயர்சிந்தையனனுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரனுழைப்போதன்முன்னுவான்.

(இ - ள்.) இரவி கால்முளை - சூரியகுமாரனாகிய சுக்கிரீவன், பொருக்கென எழுந்தனன் - விரைவாக எழுந்து, விழுந்த கண் நீரினன் - பெருகும் கண்ணீர்ப் பெருக்குடையவனும், வெறுத்த வாழ்வினன் - செல்வவாழ்க்கையை வெறுத்தவனும், அழிந்து அயர் சிந்தையன் - வருந்திச்சோரும் மனமுடையவனும் ஆகி, வரனுழை போதல் முன்னுவான் - சிறந்தவனாகிய இராமபிரானிடம் செல்ல நினைத்தவனாய், ஆண்டு - அப்பொழுது, அநுமற்கு - அநுமானை நோக்கி, ஒன்று மொழிந்தனன் - ஒருவார்த்தை கூறினான்; (எ - று.)— அதனை, அடுத்த கவியிற் காண்க.

பொருக்கென - விரைவுக் குறிப்பிடைச்சொல். 'வரன்முறை போதன் முன்னுவான' என்பது பிரதிபேதம். (ககஉ)

[வருஞ்சேனையைக் கொணருமாறு அனுமானுக்குக் கட்டளையிட்டுச் சுக்கிரீவன் இராமபிரானிடஞ் செல்லுதல்.]

ககஅ. போயினதூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
வேயினனனுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான்.

(இ - ள்) (சுக்கிரீவன்,) 'நெறி வலோய் - நீதிமார்க்கத்தில் வல்லவனே, போயினர் தூதரின் புகுதும் சேனையை - (நம்மிடத்தினின்று) போயிருக்கிற தூதர்களால் இனிவரும் வானரசேனையை, நீ உடன்கொணருதி - நீ உன்னுடன் அழைத்துக்கொண்டு வருவாய்', என - எனவும்,—'ஈண்டு இருத்தி - (அதுவரையில் நீ) இங்கேயே யிருப்பாய்', என - எனவும், அனுமனை ஏயினன் - அநுமானுக்குக் கட்டளையிட்டவனாய், நாயகன் இருந்த உழி கடிது நண்ணுவான் - (யாவர்க்கும்) தலைவனாகிய இராமபிரான் இருந்த இடத்திற்கு விரைந்து செல்பவனானான்; (எ - று.)

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை (கக அ)

[இதுமுதல் ஆறுகவிகள் - சுக்கிரீவன் பரிவாரங்களுடனே சென்று இராமபிரானைச் சேர்ந்தமையைக் கூறும்.]

கககூ. அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றழுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன்.

(இ - ள்.) செங் கதிரோன் மகன் - சிவந்த கிரணங்களையுடைய சூரியனது குமாரனாகிய சுக்கிரீவன்,—சங்கை இல் இலக்குவன் தழுவி - சங்கையில்லாத [தெளிந்த மனமுடைய] இலக்குமணனைத் தழுவிக்கொண்டு,—அங்கதன் உடன் செல - அங்கதகுமாரன் தன்னுடன் வரவும், அரிகள் முன் செல - வானரர்கள் முன்னே போகவும், மங்கையர் உள்ளம் பின் செல உம் - (தன்னிடத்துக் காதலையுடைய) வானரமகளிரது மனம் பின்தொடர்ந்து வரவும், வழி (பின் செல) உம் - கடந்தவழிகள் பின்னே தங்கிவிடவும், தம் முனில் - தமையனாகிய இராமபிரானிடத்திற்கு, கடிது சென்றனன் - விரைவாகச் செல்வானானான்; (எ - று.)

தம்முன் - தமையன்; தன்னால் [சுக்கிரீவனால்] தமையன்முறை பாராட்டத் தகுந்தவனென்க. பின்செல - இரட்டுறமொழிதல். பின்செல்லுதலென்பது - பின்தொடர்ந்து செல்லுத லென்னும் பொருளதாதலை "சிந்தையு நிறையு மெய்ந்நலம் பின்செல" என்றவிடத்திற் காண்க. வழிபின்செல— "சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னா" என்றாற்போலக் கொள்க. (ககூ)

கஉ0. ஒன்பதினாயிரகோடியூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினான்செல்லும்வேலையில்.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) ஒன்பதினாயிர கோடி யூகம் - ஒன்பதினாயிர கோடிக்கணக்கான குரங்குச்சேனை, தன் முன் செல பின் செல மருங்கு மொய்ப்புற-

தன முன்புறத்திலும் பின்புறத்திலும் இருபக்கங்களிலும் நெருங்கிவரவும், மன் பெருங் கிளைஞரும் மருங்கு சுற்றுற - மிகச்சிறந்த உறவினர்களாகிய வானரர்களும் பக்கங்களிற் சூழ்ந்துவரவும், மின் பொரு பூணினான் - மின்னல்போன்ற ஒளியை வீசுகின்ற ஆபரணங்களை யணிந்தவனான சுக்கிரீவன், செல்லும் வேலையில் - (அவ்வாறு இராமபிரானைநோக்கிச்) செல்லுஞ்சமயத்தில், (எ - று.)—'கொடிவன மிடைந்தன' என அடுத்தகவியோடு தொடரும்.

'ஞாங்கர் மொய்ப்புற' என்றும் பாடம். (கஉ௦)

கஉக. கொடிவனமிடைந்தனமுறுபேரியி
னிடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
பொடிவனமெழுந்தனவானம்போர்த்தவே.

(இ - ள்.) கொடி வனம் மிடைந்தன - துவசங்களின்தொகுதி நிறைந்தன; குமுறு பேரியின் இடி வனம் மிடைந்தன - முழங்குகின்ற பேரிகை வாத்தியங்களின் ஒலித்தொகுதிகள் நிறைந்தன; பணிலம் ஏங்கின - சங்க வாத்தியங்கள் முழங்கின; தயங்கு பூண் ஒளி தடி வனம் மிடைந்தன - விளங்குகின்ற ஆபரணங்களின் காந்திகளாகிய மின்னலின்தொகுதிகள் நிறைந்தன; பொடி வனம் எழுந்தன - (பூமியினின்று) புழுதிகள் கிளம்பினவாய், வானம் போர்த்த - ஆகாயத்தை மறைத்தன; (எ - று.)

இச்செய்யுளில், 'வனம்' என்றது - தொகுதியென்னும் பொருளில் வந்தது தடிவனம் - தடித்வநம்: வடமொழித்தொடர் திரிந்துவந்தது வனம், மிடைந்தன என்ற சொற்கள் ஒருபொருளிற் பலமுறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. 'பொடிவனமெழுந்துகள்வானம்போர்த்தனே,' 'பொடியெழுந்தபடிவானம்போர்த்ததே' எனபன பிரதிபேதம். (கஉக)

கஉஉ. பொன்னினின்முத்தினிற்புனைமென்றூசினின்
மின்னினமணியினிற்பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின.

(இ - ள்.) பொன்னினில் - பொன்னினாலும், முத்தினில் - முத்துக்களினாலும், புனை மென் தூசினில் - அழகான மெல்லிய வஸ்திரங்களினாலும், மின்னின மணியினில் பிரகாசிக்கின்ற இரத்தினங்களினாலும், பளிங்கின் - ஸ்படிகக்கற்களினாலும், வெள்ளியின் - வெள்ளியினாலும், பின்னின - செய்யப்பட்டனவாகிய, சிவிகை - தண்டிகைகள், துன்னின - நெருங்கிவந்தன; வெள் கவிகை - வெண்கொற்றக்குடைகள், விசும்பினும் பெரிய - ஆகாயத்தினும் மிகப்பெரியனவாய், பெட்பு உற சுற்றின - (கண்டவர்) விரும்பும்படி சூழ்ந்துவந்தன; (எ - று.)

'பொன்னினில்......பின்னின' என்றதொடர் கவிகைக்கும் அடைமொழியாகத்தக்கது. குடைகள் இடமகன்ற ஆகாயம் முழுவதையும் மறைத்தலால், 'விசும்பினும்பெரிய' என்றார்.

'துன்னினசிவிகைதொடர்ந்துசுற்றவே' என்ற பிரதிபேதம். (கஉஉ)

கஉ௩. வீரனுக்கிளையவன் விளங்குசேவடி
பாரினிற்சேறலிற் பரிதிமைந்தனுந்
தாரினிற்பொலங்கழறழங்கத்தாரணித்
தேரினிற்சென்றனன் சிவிகைபின்செல.

(இ-ள்.) வீரனுக்கு இளையவன் விளங்கு சே அடி பாரினில் சேறலினால் - ஸ்ரீராமபிரானது தம்பியாகிய இலக்குமணனது விளங்குகின்ற சிவந்த திருவடிகள் தரையில் நடந்துசெல்லுதலினால்,—பரிதி மைந்தனும் - சூரியகுமாரனாகிய சுக்கிரீவனும், தாரினில் பொலம் கழல் தழங்க - கிண்கிணிமாலை போல (க்காலிற்கட்டிய) அழகிய வீரக்கழல்கள் சப்திக்க (த் தான் காலினால்நடந்து), சிவிகை பின் செல - (தான் ஏறிச்செல்லுதற்குரிய) தண்டிகை பின்னால் (வெறுமையாய்) வர, தாரணி தேரினில் சென்றனன் - பூமியாகிய தேரின் மேற் சென்றான்; (எ - று.)

இளையபெருமாள் பாதம்வருந்தப் பூமியில் நடந்து செல்லுதலால், சுக்கிரீவனும் சிவிகையேறிச்செல்லாமல் தரையிற் கால்நடையாகவே நடந்து சென்றனனென்க. தார் - கிண்கிணிமாலை. தாரணி - தரணீ என்ற வடசொல்லின் விகாரம்; (எல்லாப்பொருள்களையுந்) தரிப்பது எனக் காரணப் பொருள்படும். 'தாரணித்தேர்' என்றது திரிபுரசங்காரகாலத்தில் பூமி தேராக அமைந்ததனை யென்க. சுக்கிரீவன் தாளினால் தரையில்நடந்துசென்றாலும் மஹாராஜாவானதுபற்றி, 'தாரணித்தேரினிற்சென்றனன்' எனச் சமத்காரந் தோன்றக் கூறினார். லக்ஷ்மண சுக்கிரீவரிருவரும் ஒருபொற்சிவிகையிலேறிச் சென்றனரென முதனூல் கூறும். 'விரும்புஞ்சேவடி' என்றும்பாடம். ()

கஉச. எய்தினன்மானவனிருந்தமால்வரை
நொய்தினிற்சேனைபின்பொழியநோன்கழ
லையவிற்குமாரனுந்தானுமங்கதன்
கைதுறந்தயல்செலக்காதன்முன்செல.

(இ - ள்.) நோன் கழல் ஐய வில் குமாரனும் - வலிய வீரக்கழலையும் அழகிய வில்லையுமுடைய இளவீரனான இலக்குமணனும், தானும் - சுக்கிரீவனும்,—சேனை பின்பு ஒழிய - (உடன்வந்த) வானரசேனைகள் பின்னே தங்கவும், அங்கதன் கை துறந்து அயல் செல - அங்கதகுமாரன் பக்கத்தை விட்டு அப்பால்வரவும், காதல் முன் செல - (இராமபிரானைக்காணவேண்டுமென்ற) ஆசை (தனக்கு) முன்னே செல்லவும், மானவன் இருந்த மால் வரை - இராமபிரான் தங்கியிருந்த பெரிய மலையை, நொய்தினில் எய்தினன் - விரைவாகச் சென்றடைந்தான்; (எ - று.)

பெரியோரிடத்துச் செல்லும்போது ஆடம்பரத்துடன் செல்லுதல் தகுதியன்றாதலால், இராமபிரானிடஞ்செல்லுஞ்சுக்கிரீவன் வானரசேனைகளைவிட்டு அங்கதகுமாரனும் சிறிது அப்பால்வரத் தான் தனியே செல்வா

ஆயின னென்க. குமரனும் தானும் எய்தினன் - பாலவழுவமைதி. ஐய - குறிப்புப்பெயரெச்சம்; ஐ - அழகு. கை-தமிழுபசர்க்கம்; பக்கம் எனினுமாம்.

'கைதொடர்ந்தயல்செல' என்றும் பாடம். (௧௨௪)

[சுக்கிரீவனது ராமபக்தி.]

௧௨௫. கண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினு
னண்ணியகவிக்குலத்தரசனுடொறும்
புண்ணியற்றொழுகழற்பரதன்போன்றனன்.

(இ - ள்.) கண்ணிய கணிப்பு அருஞ் செல்வம் காதல்விட்டு-(பலராலும்) விரும்பப்பட்ட அளவிடமுடியாத [மிகப்பெரிய] செல்வத்தில் ஆசையை விட்டு, அண்ணலை அடி தொழ அணையும் - இராமபிரானைத் திருவடிதொழு மாறு வந்து சேர்ந்த, அன்பினுல் நண்ணிய - பக்தியோடுகூடிய, கவி குலத்து அரசன் - வானரசாதித்தலைவனுகிய சுக்கிரீவன்,—நாள்தொறும் புண்ணியன் கழல் தொழு பரதன் போன்றனன் - தினந்தோறும் தரும ஸ்வரூபியாகிய இராமபிரானைத் திருவடிதொழுகின்ற பரதாழ்வானை யொத்தான்;

இதனுல், சுக்கிரீவன் இராமபிரானிடத்துக் கொண்ட பக்தி பரதனது பக்தியைப்போலு மென்பதாம். பரதாழ்வான், செல்வப்பற்றுச் சிறிதுமின்றி ஸ்ரீராமபிரானது பாதுகைகளைத் தினந்தோறும் வணங்குந் தன்மையுள்ளவனுவன்; அவனை, ராஜ்யபோகத்தில் மூழ்கிக்கிடவாமல் அதனை விட்டு இராமபிரானிடத்துப் பக்திப்பெருங்காதல்கொண்டு அப்பிரானது திருவடிகளை வணங்கவருஞ் சுக்கிரீவனுக்கு உவமைகூறினர். புண்ணியற்றொழுகழற் பரதன் என்பதற்கு - இராமபிரானைத் தொழுபவனுன வீரக்கழலையணிந்த பரதனென்று உரைப்பாருமுளர். புண்ணியன்—"புண்யாநாமபி புண்யோஸௌ" என்றது காண்க. பரதனென்ற பெயர்க்கு - பாரங்களை நிர்வஹிக்க வல்லவனென்பது பொருள்; பின்பு இராமபிரான் வனவாசஞ்செல்லவும் தசரதசக்கரவர்த்தி மேலுலகஞ்செல்லவும் காவலனில்லாததாகும் இராச்சிய பாரத்தை இவன் வகிக்கும்படி நேரிடுவதை ஞானக்கண்ணினுலறிந்து வசிஷ்டமாமுனிவர் இவனுக்கு இவ்வாறு முன்னமே பெயரிட்டனர்.

'கண்ணியபெருஞ்செல்வக்காதல் விட்டவல், வண்ணலை', 'நாள்தொழும், புண்ணியர் தொழுகழற்பரதன்' என்றும் பாடம். (௧௨௫)

[சுக்கிரீவன் இராமபிரானை வணங்குதல்.]

௧௨௬. பிறிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றனிவிருந்தவேந்தலை
யறையணித்தாரினுடாரம்பார்தொடச்
செறியலர்ச்சேவடிமுடிபிற்றீண்டினுன்.

(இ - ள்.) பிறிவு அருந் தம்பியும் பிரிய - பிரிதலில்லாது எப்போதும் உடனுறைகின்ற தம்பியாகிய இலக்குமணனும் பிரிந்துசென்றதனுல், பேர்

உலகு இறுதியில் தான் என இருந்த - பெரிய உலகமெல்லாம் அழியுங் கற்பாந்தகாலத்திற் சேஷித்திருக்கும் (திருமாலாகிய) தன்னைப்போலத் தனிப்பட்டிருந்த, ஏந்தலை - இராமபிரானை,—(சுக்கிரீவனானவன்), அறை மணி தாரினோடு ஆரம் பார் தோட - (தன துமார்பிலணிந்த) ஒலிக்கின்ற இரத்தினமாலைகளும் முக்தாஹாரங்களும் பூமியிற்படும்படி, செறி மலர் சேவடி முடியின் தீண்டினன் - நெருங்கிய செந்தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளைத் தன துதலையினாற் பரிசித்தான் [சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினன்]; (எ - று.)

எப்போதும் பிரியாத உடனுறையுந் தம்பியாகிய இலக்குமணனையும் பிரிந்து தனித்திருக்கும் இராமபிரானுக்கு, யாவுமழியுங் கற்பாந்தகாலததில் தான்மாத்திரம் தனித்திருக்குந் திருமாலை உவமைகூறினர்.

'அறைமலர்த்தாரினோடு' என்றும் பாடம். (௧௨௬)

[இதுவும், அடுத்தகவியும் - குளகம், வணங்கியசுக்கிரீவனை இராமபிரான் தழுவி இருக்கச்சொல்லிக் குசலப்ரச்நஞ் செய்தலைக் கூறும்]

௧௨௭. தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையாநெடிதுபுல்லினன
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோ
லீண்டியகருணைதந்திருக்கையேவியே.

(இ - ள்.) தீண்டலும் - (சுக்கிரீவன் தன்னை) வணங்கினவுடனே,—(இராமபிரான்), மார்பிடை திருவும் நோவு உற - (தனது) திருமார்பில் நித்ய வாஸஞ்செய்கிற திருமகளும வருந்தும்படி, நீண்ட பொன் தட கையான் நெடிது புல்லினன் - (முழந்தாளளவும்) நீண்டுதொங்குகின்ற அழகியபெரிய (தனது) கைகளினால் அழுந்தத் தழுவினவனாய்—மூண்டு எழு வெகுளி போய் ஒளிப்ப - (தவணைதவறினமையாற் சுக்கிரீவன்மீது) மூண்டெழுந்த கோபமானது ஆறிப்போக, முனபுபோல் ஈண்டிய கருணை தந்து - முன் போலவே மிக்க அன்புபாராட்டி, இருக்கை ஏவி - (அச்சுக்கிரீவனை) இருக்கும்படி கட்டளையிட்டு (எ - று.)—'அயலினிதிருத்தி' என அடுத்தகவியோடு தொடரும்.

"அகலகில்லே னிறையுமென் றலர்மேன்மங்கை யுறைமார்பா" என்றபடி, திருமாலின் திருவவதாரமூர்த்திகளின் திருமார்பிலும் இலக்குமி விட்டுப் பிரியாது உடனுறைவளென்க. தடக்கையான - பெயருமாம். 'கையால்' என்றும் பிரிக்கலாம். புல்லினன் - முற்றெச்சம்.

'தீண்டியவன்பனை', 'ஈண்டியகருணையால்' என்று பிரதிபேதம். (௧௨௭)

௧௨௮. அயலினிதிருத்திநின் னரசுமாநையு
மியல்பினினியைந்தவேயினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலவேகுடையெனவினவினன்.

(இ - ள்.) (இராமபிரான்.) 'அயல் இனிது இருத்தி - (சுக்கிரீவனை) அருகில் இனிமையாக இருக்கச்செய்து, (அவனைநோக்கி), 'நின் அரசும் ஆணையும் - உனது அரசாட்சியும் ஆஜ்ஞாசக்கரமும், இயல்பினின் இயைந்தவே - ஒருவருத்தமுமில்லாமல் இயற்கையாக அமைந்துள்ளனவோ? இனி நின் வைகுமே இனிமையாக [தடையின்றி] நடக்கின்றனவோ? புயல் பொரு தடக்கை நீ புரக்கும் பல் உயிர் - மேகம்போன்ற [கைம்மாறு கருதாது கொடுக்குந்தன்மையுள்ள] நீண்ட கைகளையுடைய நீ பாதுகாக்கின்ற பலவுயிர்களும், குடை - (உனது) வெண்கொற்றக்குடையினால் [அரசாட்சியினால்], வெயில் இலவே - தாபமில்லாமலிருக்கின்றனவோ?' என விளம்பினான் என்று வினவினான்; (எ - று.)

முதலிரண்டுவினாக்கள் சுக்கிரீவனது நன்மையையும், இறுதிவினா குடிகளின் நன்மையையும் கருதி நிகழ்ந்தவை. அரசாட்சி ராஜ்யபார மெனப்படுதலாலும் அதைச்செய்யும்போது எங்கும் தன்னாணை செல்லவேண்டியிருத்தலாலும் அவை ஒருசிரமமுமின்றித் தடைப்படாது எங்குஞ்செல்லுகின்றனவா வெனபான் 'நின்னரசு மாணையும் இயல்பினி னியைந்தவே யினிநின்வைகுமே' என்றும், அவை எங்குந்தடையின்றிச் சென்றாலும் குடிகட்கு இனிமைதருவது இன்றியமையாத தாதலால், 'நீபுரக்கும பல்லுயிர் வெயிலிலவேகுடை' என்றும வினவினான். வெயில - தாபத்திற்கு, இலக்கணை. அரசாட்சியைக் குடையாகக்கூறுதல், கவிசமயம.

'வெயிலிலதேகுடைய' 'எனவினவினான்' என்று பாடாந்தரம் (௪௨௮)

[அதற்குச் சுக்கிரீவன் விடைகூறுதல்]

௪௨௯. பொருளுடையவ்வுரை கேட்டபோழ்துவா
னுருளுடைத்தேரினோன் புதல்வனூழியி
னிருளுடையுலகினுக்கிரவியன்னநின்
னருளுடையேற்கவையரியவோவென்றான்.

(இ - ள்.) பொருள் உடை அ உரை கேட்டபோழ்து - அர்த்தசாரமுடைய (இராமபிரானது) அந்த வார்த்தையைக் கேட்டபொழுதில்,—வான் உருள் உடை தேரினோன் புதல்வன் - ஆகாயத்திற்செல்லுகின்ற ஒற்றைச் சக்கரத்தையுடைய தேரையுடையவனான சூரியனது குமாரனாகிய சுக்கிரீவன்,—(இராமபிரானைநோக்கி), 'ஊழியின் இருள் உடை உலகினுக்கு இரவி அன்ன நின் அருள் உடையேற்கு - கற்பாந்தகாலத்திற் சூழ்ந்து கொள்ளுகின்ற இருளையுடைய உலகத்திற்குச் சூரியன்போன்றவனான உனது அருளைப் பெற்ற எனக்கு, அவை அரியவோ - அச்செயல் அருமையானவையோ?' என்றான்—; (எ - று.)

'சுக்கிரீவன் தான மனைவியையிழந்து வாலியினால் துரத்தப்பட்டு ரிசியமூகமலையிற் செய்தொழிலின்னதெனத் தெரியாது திகைத்து நின்றகாலத்தில் தன் துயரமெல்லாம் ஒருங்கேயொழிய வந்து தோன்றிய இராமபிரானுக்கு, கற்பாந்தகாலத்தில் இருள்மண்டிச் செய்தொழிலறியாது மயங்கிக்கிடக்

கும் இவ்வுலகத்துயிர்கட்கு அவ்விருளை நீக்குமாறு தோன்றுவதொரு சூரியனை இல்பொருளுவமையாகக் கற்பித்தார். ஊழியின் என்றான் என இயைத்து, சொல்லவேண்டிய முறைப்படியே கூறினானென்றுமாம். சுக்கிரீவன் புதிதாக இராச்சியம்பெற்று ஆஜ்ஞாசக்கரத்தைச்செலுத்த நேர்ந்த சமயமாதலால் இப்போது இராமபிரான சுக்கிரீவனைக் குசலப்பிரசநஞ்செய்தது வெற்றுரையாகாதென்பார், 'பொருளுடையவவுரை' என்றார். நினதுகருணையொன்றுதானே எனக்கு எல்லாவற்றையும் இனிது நடத்துகின்றதென்பான், 'நின அருளுடையேற் கவை யரியவோ' என்றான்.

‡இவ்வுரைகேட்டுப்போர்த்தணி,' 'அரியவோவென' என்றும் பாடம். ()

[இதுமுதல் மூன்றுகவிகள் சுக்கிரீவன் தன்பிழையை யெடுத்துரைத்தலைக் கூறும்.]

கக0. பின்னரும்விளம்புவான் பெருமையோய்நின
இன்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவ நின்பணிமறுத்துவைகியென்
புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான்.

(இ - ள்) பின்னரும் விளம்புவான் (சுக்கிரீவன் இராமபிரானை நோக்கி) மறுபடியும் கூறுவான்—'பெருமையோய் - பெருமைக்குணமுடையவனே! மன்னவ - அரசனே! நினது இன் அருள் உதவிய செல்வம் எய்தினேன - உனது இனிய அருளினால் கிடைத்த செல்வத்தை யடைந்த நான், நின் பணி மறுத்து வைகி - உனது கட்டளையை மீறிநடந்து, என் புல் நிலை குரங்கு இயல் புதுக்கினேன் - எனது அற்பமான தன்மையையுடைய குரங்குக்குணத்தைப் புதிதாக வெளிப்படுத்திவிட்டேன்,' என்றான்—; (எ - று.)

உபகாரஞ்செய்தவர்திறத்தில் செய்ந்நன்றியை மறந்து பிழை செய்த தனது இழிகுணத்தைச் சுக்கிரீவன் வெறுத்துக்கூறுகின்றானென்க. புதுக்கினேன் நீஎன்னோடுநட்புச்செய்தகாலத்து மறைந்திருந்த எனது குரங்குக்குணத்தை இப்போது வெளிப்படுத்திக்காட்டினேனென்றபடி.

'செல்வமெய்தியே'என்றும் பாடம். (கக0)

ககக. பெருந்திசையனைத்தையும்பிசைந்துதேடினேன்
றருந்தகையமைந்துமத்தன்மைசெய்திலேன்
றிருந்திழைதிறத்திறற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருப்பயான்வாழ்வின்வைகினேன்.

இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) (பின்னும் இராமபிரானைநோக்கிச் சுக்கிரீவன் கூறுவான்):— பெருந்திசை அனைத்தையும் பிசைந்து தேடினேன் தரும் தகை அமைந்தும் - பெரியதிக்குக்களெல்லாவற்றையும் ஆராய்ந்துதேடிப்பார்த்து (ச் சீதாபிராட்டியைக்)கொணர்ந்துதருந்திறமை (என்னிடம்) அமைந்திருந்தும், அத்தன்மை செய்திலேன் - அவ்வாறுசெய்யாதவனாய்,—திருந்து இழை திறத்தினால்

நீ தெளிந்த சிந்தை வருந்தினை இருப்ப - தொழில் திருந்திய ஆபரணங்களை யணிந்தவளான சீதாபிராட்டி காரணமாக நீ (கலக்கமில்லாமல்) தெளிவடைந்த (உனது) மனத்தில் வருத்தங் கொண்டவனா யிருக்கையிலும், (அதனைச் சிறிதும் நினையாமல்), யான்—, வாழ்வின் வைகினேனை - இன்பவாழ்க்கையிற் காலங்கழித்தேன்: (எ - று.)

'குரக்கியல்பு துய்க்கினேன்' என்று கீழ்ச்செய்யுளிற் கூறியதை இச்செய்யுளினால் விவரித்தவாறு கலங்காத இராமபிரானது மனங் கலங்கியிருக்கையில் அதைத் தெளிவிக்கும் வல்லமை தனக்கு இருந்தும் அதற்கு ஏற்றபரிகாரத்தைத்தேடாது போகநுகர்ச்சியில் வீண்பொழுது போக்கியிருந்த தன்பேதைமையைச் சுக்கிரீவன் வெறுத்துக்கூறுகின்றனனென்க. மூன்றாமடி - முற்றுமோனை. தெளிந்தசிந்தை நீ வருந்தினை இருப்ப என்பதற்கு தெளிந்த மனத்தையுடைய நீ வருந்தியிருக்கவும் என்றும் உரைக்கலாம். (௧௫௧)

௧௫௨. இனையன யானுடை யியல்பு மெண்ணமு
நினைவு மென்றா லினி நின்றி யான் செயும்
வினையு நல்லாண்மையும் விளம்ப வேண்டுமோ
வனைகழல் வரிசிலை வள்ளி யோயென்றான்.

(இ - ள்.) வனை கழல் வரி சிலை வள்ளியோய் - கட்டிய வீரக்கழலையும் கட்டமைந்த வில்லையுமுடைய ஈகைக்குணமுள்ள இராமபிரானே! யானுடை - என்னுடைய, இயல்பும் - தன்மையும், எண்ணமும் - மனக்கருத்தும், நினைவும் - (உனது) மனநிலையும், இனையன என்றால் - இத்தன்மையனவானால், இனி யான் நின்று செயும் - இனிமேல் யான் நிலைத்துச் செய்யப்போகின்ற, வினையும் - தொழிலையும், நல் ஆண்மையும் சிறந்த பராக்கிரமத்தையும், விளம்ப வேண்டுமோ - சொல்லத்தகுமோ? என்றான் - என்று (இராமபிரானை நோக்கிச் சுக்கிரீவன்) கூறினான்: (எ - று.)

நீ மனத்திற் பெருங்கவலையுடனிருக்கவும் யான் சீதாபிராட்டியைத் தேடித்தரவேண்டிய முயற்சி செய்யாமல் போகநுகர்ச்சியில் இதுவரையில் மனந்தாழ்ந்திருந்ததனால் இனி அத்தொழிலை விரைந்து முடிப்பேனென்று எனது செய்கையாண்மைகளைக் கூறுவதற்கும் எனது நாத் துணிவில்லையென்று சுக்கிரீவன் தான் தவறுசெய்ததை நினைந்து நாணமுற்றுக் கூறுகின்றனனென்க. 'யானுடை எண்ணமும்' என முன்வந்ததனால், 'நினைவும்' என்பதற்கு - உனது மனநினைவும் என்று பொருளுரைக்கப்பட்டது; இனி, எண்ணம் என்பது பலராலும் எண்ணப்படுவதென்ற காரணத்தாற் செயலைக் குறிக்குமெனக்கொண்டு என்செய்கையும் என் நினைவுமென்று உரைப்பாருமுளர். 'எண்ணியநினைவும்' என்ற பாடம் ஏற்கும். தான் முன்னே ஒருதவியையுஞ் செய்யாதிருக்கத் தனது பகையையழித்து மனைவியை மீட்டு அரசையும் அளித்ததனால், இராமபிரானைச் சுக்கிரீவன் 'வள்ளியோய்' என விளித்தான். முதலடி - முற்றுமோனை. (௧௫௨)

[இராமபிரான் சுக்கிரீவனைநோக்கிக் கூறிய உபசாரவார்த்தை.]

௧௩௩. திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வந்
தொருவருங்காலமுன் னுரிமையோருரை
தருவினைத்தாகையிற்றாழ்விற்றாகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ.

(இ - ள்) திரு உறை மார்பனும் - இலக்குமி எப்பொழுதுந்தங்குகின்ற திருமார்பையுடையவனான ஸ்ரீராமபிரானும்,—ஒருவு அரு காலம் -கழிவதற்கு அரிய [மிகநீண்டதாகத்தோன்றுமியல்புள்ள] கார்காலம், வந்து தீர்ந்ததேயும் - வந்து நீங்கியதாகவும், உன் உரிமை ஓர் உரை - உரிமையாற் பேசுகின்ற உனது வார்த்தையானது, தரு வினைத்து ஆகையின் - (சீதாபிராட்டியைத் தேடித்) தருகின்ற தொழிலையுடையதாயிருத்தலினால், தாழ்விற்று ஆகுமோ - தாழ்வையுடையதாகுமோ? பரதன் நீ (என்னிடத்துப்) பரதன்போன்ற அன்புடையவனான நீ, இனையன பகரல் பாலையோ - இத்தன்மையான வார்த்தைகளைச் சொல்லக்கடவையோ?' (என்று சுக்கிரீவனைநோக்கிக் கூறினான்.)

ஏற்ற வினை வருவித்து முடிக்கப்பட்டது. கார்காலங்கழிந்து நீ தவணை தவறினை யென்றாலும், சீதாபிராட்டியைத்தேடித்தராமையைக்குறித்து இரங்கிக்கூறிய உனது வார்த்தையானது எப்படியாவது பிராட்டியைத் தேடித் தரவேண்டுமென்ற கருத்து உனக்கு உறுதியாகவிருத்தலைத் தெரிவித்தல் பற்றி, உனக்கு ஒருதாழ்வுமில்லை; ஆதலால், பரதனைப்போலவே என்னிடத்துப்பேரன்புடையனான நீ உனைத்தாழ்த்திக்கூறுதல் தகுதியன் றெனச் சுக்கிரீவனைநோக்கி இராமபிரான முகமன்கூறினனென்க. உரிமை - அன்பு. விரகிகளுக்குக் காலம் நீட்டிததாகத் தோன்று மாதலால், 'ஒருவருங்காலம்' என்றான. பரதன் நீ - இராச்சியத்தைப்பரிக்குந் [தாங்கும்] தன்மையுள்ள நீ என்றுமாம்.

இனி, 'தாழ்வித்தாகுமோ' என்று பாடங்கொண்டு, முன் உரிமையோர் உரை-முன்புள்ளவர்களான (நூல்களில்)உரிமையை[மிக்கபழக்கத்தை]யுடைய பெரியோரது கட்டுரையானது, தரு வினைத்த ஆகையின் - ஒருவர்செயலானது தன்பயனைத் தவறாதுகொடுக்கிற ஊழ்வினையின வசத்ததேயாம் என்று இருத்தலால், நீதாழ்வித்து ஆகுமோ நீதாழ்வித்ததாகுமோ? என்று பதவுரை கூறுவாருமுளர். எல்லாம் விதியின்படி நடக்குமென்று பெரியோர் கூறுவராதலால், எனது தொழில் இன்னும் முற்றுப்பெறாதது விதியின் செயலே; நீ தாமதித்ததாக உன மீது குற்றங்கூறவேண்டிய தில்லை யென இராமபிரான் தேற்றியதாக இவ்வுரைக்குக் கருத்துக் காண்க; "ஊழிற்பெருவலி யாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும்" என்ற திருக்குறள் இங்கே கருதத்தக்கது.

'திருவுறைமார்பனுந் தீர்ந்ததோவந்த, தொருவருகால முன்னுரிய போரது, தருவினைத்தாகையுந்தழுவிற்றதியோ, பரதனீயினையன பகர்தி யோவென்றான்' என்று பிரதிபேதம். (௧௩௩)

[இதுவும், அடுத்தகவியும் - ஸ்ரீராமன் 'அநுமான் எங்கே' என்றுவினவ, சுக்கிரீவன் 'சேனையோடு விரைவில் வருவான்' என்றல் ]

கஅ௪. ஆரியன்பின்னருமமைந்துநன்குணர்
மாருதியெவ்வழிமருவினானெனச்
சூரியன்கான்முளைதோன்றுமாலவ
னீரரும்பரவையினெடிதுசேனையான்.

(இ - ள்.) ஆரியன் - இராமபிரான், பின்னரும் அமைந்து - மறுபடியும் (சிலவார்த்தைசொல்லத்) தொடங்கி, (சுக்கிரீவனைநோக்கி), நன்கு உணர் மாருதி எ வழி மருவினான் என - '(எல்லாவற்றையும்) நன்றாக அறியவல்ல வாயுகுமாரனான அநுமான எவ்விடத்திலிருக்கிறான்?' என்று வினவ, (அதற்கு), சூரியன் கால்முளை - சூரியகுமாரனான சுக்கிரீவன், 'அவன் - அந்த அநுமான், நீர் அரும் பரவையின் நெடிது சேனையான் - நீர்நிறைந்த (காணுதற்கு) அரிய கடல்போன்ற பெருஞ்சேனையை யுடையவனாய்,' தோன்றும்- வருவான்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இச்செய்யுளிலுள்ள 'சூரியன்கான்முளை' என்பது, மேல் கஅ௬ ஆங்கவியிலுள்ள 'என்றான்'என்பதைக் கொண்டுமுடியும்; ஆகவே இதுமுதல்மூன்று கவிகள் ஒருதொடராம். இராமபிரான் அநுமானைப்பற்றித் தனியே வினவியதனால், அவனிடத்தில் அப்பிரான்வைத்துள்ள பெருங்கருணை தோன்றும்.

'மால்வரை, நேர்வருபரவையினெடிய' என்று பிரதிபேதம். (கஅ௪)

கஅ௫. கோடியோராயிரங்குறித்ததூதுவ
ரோடினர்நெடும்படைகொணரலுற்றதா
னடாக்குறித்ததுமின்றுநாளையவ்
வாடலந்தானையோடவனுமெய்துமால்.

(இ - ள்.) கோடி ஓர் ஆயிரம் குறித்த தூதுவர் - ஓராயிரக்கோடியாகக் கணக்கிடப்பட்ட தூதர்கள், நெடும் படை கொணரல் ஓடினர் - பெரிய வானரசேனைகளைத் திரட்டிக்கொணர்தற்கு விரைந்துசென்றார்கள்; (இதுகாறும் வானரசேனைகள் வாராததனால் அவைகளைத் திரட்டிக்கொணருமாறு அநுமான் காத்திருக்கிறான்); தா குறித்தது நாளும் உற்றது - (சேனைகளைத் திரட்டிக்) கொணர்தற்குக் குறித்ததாகிய தவணைநாளும் வந்துவிட்டது; ஆல்-ஆதலால், இன்று நாளை - இன்றைக்கு அல்லது நாளைக்கு, அ ஆடல் அம் தானையோடு அவனும் எய்தும் - வலிமையுள்ள அந்த அழகிய வானரசேனையோடு அவ்வநுமானும் இங்குவருவான; (எ - று.)—'ஆல்' இரண்டனுள், முன்னது - 'ஆதலால்' என்பதன விகாரமும், பின்னது - ஈற்றசையுமாம்.

கீழ்ச்செய்யுளின பின்னிரண்டடி - தொகுத்துச்சுட்டல்; இச்செய்யுள்- வகுத்துக்காட்டல்; ஆகவே, கூறியதுகூறலென்னுங்குற்றத்திற்கு இடமில்லையாம். ஆடல்-அடலென்பதன் நீட்டல். 'கோடிதூராயிரங்குறித்து' 'கோதிறா, தோடினநெடும்படைகொணரலுற்றவால்' என்று பிரதிபேதம். (கஅ௫)

[எல்லாச்சேனைகளும் வந்தபின்பு செய்யவேண்டியதை ஆலோசிக்கலாமென்று சுக்கிரீவன் கூறுதல்.]

௧௫௬. ஒன்பதினாயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையந்நெடியசேனைக்கு
நன்குறுமவதிநாளைநண்ணிய
பின்செயத்தக்கதுபேசற்பாற்றென்றான்.

(இ-ள்.) ஒன்பதினாயிரகோடி நின் பெருஞ் சேனை உற்றது - (இப்பொழுது என்னுடனே) ஒன்பதினாயிரக்கோடிக்கணக்கான உனது பெரியசேனை வந்திருக்கின்றது; அ நெடிய சேனைக்கும் நன்கு உறும் அவதிநாள் நாளை - (இனிவரவேண்டிய) அந்தப்பெரியசேனைக்கு ஒருங்கேதிரண்டுவந்துசேர்தற்கு உரிய தவணைநாளும் நாளைக்கே; நண்ணிய பின் - (அச்சேனையும்) வந்தபிறகு, செய தக்கது பேசல்பாற்று - செய்யத்தக்கதைப்பற்றிப்பேசுதல் தகுதியுடையது, என்றான் - என்று கூறிமுடித்தான், (சுக்கிரீவன்); (எ-று.)

'நண்ணியபின் செயத்தக்கது பேசற்பாற்று' என்று கூறிய சுக்கிரீவனுக்கு, அச்சேனையுடன் அநுமான் வந்தபிறகே செய்யத்தக்கதைப்பற்றிப் பேசவேண்டுமென்று கருத்துப்போலும். தனக்கும் இராமபிரானுக்கு முள்ள ஒற்றுமைநயத்தால், சுக்கிரீவன் தன்சேனையை 'நின்பெருஞ்சேனை' என்றான். 'நெடியசேனை' என்றது - துணைப்படையை.

'நன்பெயரவதிநாள்' என்றும் பாடம். (௧௫௬)

[இராமபிரான், சுக்கிரீவனைச் சென்று எல்லாச்சேனைகளுடனும் வருமாறு அனுப்புதல்.]

௧௫௭. விரும்பியவிராமனும்வீரநிற்கதோ
ரரும்பொருளாகுமோவமைதிநன்றெனப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துழிவாவெனதொழுதுபோயினான்.

(இ-ள்.) விரும்பிய இராமனும் - (சுக்கிரீவனிடத்து) அன்புடைய இராமபிரானும்,—(அவனைநோக்கி), 'வீர - வீரனே! நிற்கு அது ஓர் அரும் பொருள் ஆகுமோ - (உனக்குச் சேனையைத் திரட்டிக் காரியத்தை முடித்தலாகிய) அச்செயல் அருமையானதொரு காரியமாகுமோ? அமைதி நன்று - (உனது) அடக்கமான குணம் நன்றாயிருக்கின்றது!' என - என்று கூறி,—(மீண்டும் அவனைநோக்கி), 'பெரும் பகல் இறந்தது - (இப்பொழுது) பெரிய பகற்பொழுதோ கழிந்துவிட்டது; பெயர்தி - (இன்று) போய், நின படை பொருந்துழி வா - உனது சேனை திரண்டுவந்தபோது (அவற்றுடனே நாளைக்கு) வருவாய்', என - என்றுவிடைகொடுக்க, தொழுது - (இராமபிரானை) வணங்கி, போயினான் - (அச்சுக்கிரீவன்) போனான்; (எ-று.)

சுக்கிரீவன் தன்சேனை தங்கியுள்ள பாசறைக்குச் சென்றனனென்க. பெயர்தி - முற்றெச்சம், 'பொருந்துதியெனவவன்' என்றும் பாடம். (௧௫௭)

[இராமபிரான் அங்கதனையும் விடை கொடுத்தனுப்புதல்.]

கருஅ. அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுந்தையோடென்றுதாமரைச்
செங்கணன்தம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழியன்றுவைகினான்.

(இ-ள்) தாமரை செங் கணன் - செந்தாமரை மலர்போன்ற சிவந்த கண்களையுடையவனான இராமபிரான், அங்கதற்கு இனியன அருளி - அங்கத குமாரனுக்கு இனியனவான வார்த்தைகளைக் கூறி, 'ஐய---! போய் உந்தை யோடு தங்குதி - (நீ) போய் உனது தந்தையாகிய சுக்கிரீவனுடனே தங்கு வாய்,' என்று - என்று விடைகொடுத்து அனுப்பி,— தம்பியும் - தம்பியாகிய இலக்குமணனும், சிந்தையின மங்கையும் - (எப்பொழுதும்) தன் மனத்திற் குடிகொணடிருக்கிற சீதாபிராட்டியும், தானும் - தானுமாக, அன்று - அவ் விரவில், அ வழி - அவவிடததில், வைகினன - தஙகியிருந்தான்; (எ - று.)

உந்தை - உன் தந்தை; மருஉ. இராமபிரானை இடைவிடாது சீதாபிராட்டியைச் சிந்தித்துக்கொண்டே யிருத்தலால், 'சிந்தையின் மஙகை' என்றார். 'தம்பியும்மங்கையும் தானும் வைகினன'—தலைமைபற்றிய பால்வழுவமைதி; 'வைகினர்' எனறும் பாடமுண்டு. (கருஅ)

[இலக்குமணன் தான் சுக்கிரீவனிடம் போய்வந்த செய்தியை இராமபிரானுக்குக் கூறுதல்]

கருகூ. சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பாற்
போயதுமவ்வயிற்புகுநதயாவையு
மோய்வுறாதுணர்த்தெனவுணர்த்தினனரோ
வாய்மையாவுணர்வுறுவலியமொய்ம்பினோன்.

(இ-ள.) சேய் உயர் கீர்த்தியான் - மிக்க பெருங்கீர்த்தியையுடையனாகிய இராமபிரான, (இளையபெருமாளை நோக்கி) 'கதிரின செம்மல்பால் போயதும் - (நீ)சூரியகுமாரனான சுககிரீவனிடத்துச்சென்றதையும், அ வயின் புகுந்த யாவையும் - அவவிடத்து நடந்த எல்லாச்செய்திகளையும், ஓய்வு உறாது உணர்த்து - (ஒன்றும்) விடாமற் சொல்வாயாக', என - என்று கட்டளை யிட,—வாய்மை ஆ உணர்வுறு வலிய மொய்ம்பினோன் - உண்மையாகவே (எல்லாவற்றையும்) அறியுந்தன்மையுள்ள மகாபலசாலியாகிய லக்ஷ்மணன், உணர்த்தினான் - (அவ்வாறே) தெரிவித்தான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

சேயுயர் - ஒருபொருட்பன்மொழி. கதிர் - ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனுக்கு, இலக்கணை. 'வாய்மையாலுணர்வுறு' என்று பிரதிபேதம். (கருகூ)

கிட்கிந்தைப்படலம் முற்றிற்று.

## ஒன்பதாவது
# தானைகாண் படலம்.

சுக்கிரீவமகாராஜன் தான் ஒருங்கேதிரட்டிய வானரப்படையைக்காட்ட, அதனை இராமலக்ஷ்மணர் கண்ட செய்தியைக் கூறும் பாகம். வானரசேனைத் தலைவர்பலர் தம்தம்சேனையுடன் திரண்டுவருதலும், சுக்கிரீவன் அச்சேனைகளைக் காணுமாறு இராமலக்ஷ்மணரை வேண்டுதலும் அவற்றை இராமபிரான் லக்ஷ்மணனோடு காணுதலும், இராமன் சேனைப்பரப்பை வியந்து கூறுதலும், லக்ஷ்மணன் இனி ஆகவேண்டிய காரியத்தைத் தாமதியாது தொடங்கவேண்டுமென்று கூறுதலும் முதலியன இப்படலத்தில் விரித்துக் கூறப்படுகின்றன. 'வானரத்தானை காண்படலம்' என்று பலபிரதிகளின் பாடம்.

[கவிக்கூற்று:—இப்படலத்திற்குத் தோற்றுவாய்.]

க. அன்றவ ணிறுத்தன னலரி கீட்டிசைப்
பொன்றிணி நெடுவரை பொலிவு றாதமுன்
வன்றிறற் றூதுவர் கூவ வானரக்
குன்றுறழ் நெடும்படை யடைந்த கூறுவாம்.

(இ - ள்.) அன்று அவண் இறுத்தனன் - அன்றையிரவு முழுவதும் (இராமபிரான்) அவ்விடத்தில் தங்கியிருந்தான்; அலரி கீழ் திசை பொன் திணி நெடு வரை பொலிவுறாத முன் - சூரியன் கீழ்த்திசையிலுள்ள பொன் நிரம்பிய [பொன்மயமான] பெரிய உதயகிரியிலே விளங்கித் தோன்றாத முன்னமே [சூரியனுதிப்பதற்குமுன்பே], வல் திறல் தூதுவர் கூவ - மிக்க வலிமையையுடைய தூதர்கள் சென்று அழைத்ததனால், குன்று உறழ் வானரம் நெடும் படை அடைந்த(து) - மலையையொத்த வானரசேனை வந்து சேர்ந்தவிதத்தை, கூறுவாம் - (இனி) எடுத்துச்சொல்வோம்; (எ - று.)

'அன்றவணிறுத்தனன்' என்றது கீழ்ப்படலத்தின் தொடர்ச்சிதோன்றக் கூறியது. அலரி - பரவுகின்ற கிரணங்களையுடையவனெனச் சூரியனுக்குக் காரணக்குறி. கிழக்கு + திசை = கீட்டிசை; கிழக்கு என்னும் நிலைமொழி, ஈற்றுஉயிர்மெய்யும் ககரவொற்றும் அகரமுங் கெட்டு முதல்நீண்டு, வருமொழிமுதல்தகரமும் நிலைமொழியீற்றுழகரமும் டகரமாகத் திரியப்பெற்றது. ழகரதகரங்கள் டகரங்களாகத் திரிவதற்கு விதி, "பதினேந்தொடெண்ணிரண்டாய்த் தோன்றுடற் பின்னர்த் தகாரம்வரி னிரண்டுந் தொடர்பா, லான்றவைந்தாமுடவாம்" என்ற வீரசோழியத்திற் காண்க. ழகாளகரப்போலியும் இப்புணர்ச்சிக்கு ஆதாரமாகும். வானரசேனைக்கு மலையுவமை - அளக்கலாகாதவளவிலும், எதற்குஞ்சலியாத உறுதியிலும், ஆயுதங்களாலழித்தற்கொண்ணாத வலிமையிலுமாம். அடைந்த - அடைந்தது என்பதன் விகாரம். 'கீழ்த்திசை,' 'வன்றிறற்றூதுவர்கொணர' என்றும் பாடம்.

இச்செய்யுள், கிட்கிந்தைப்படலத்தின் ஈற்றுச்செய்யுளாகச் சிலபிரதி களிற் காணப்படுகின்றது.

இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை; இவ்விடத்து
"அன்றவண்வானரச்சேனையாவையும
வென்றிகொடலைவருமெண்கின்வீரரும
குன்றுகமொருவழிககூடினுலென
யனறிறலிராமனைவழுததிவந்தவே"
என்று ஒருசெய்யுள் காணப்படுகின்றது. (க)

வேறு.

[சதவலியென்பவன் வானரசேனையோடு வருதல்.]

உ. ஆனை யாயிர மாயிரத் தெழுவலி யமைந்த
வான ராதிப ராயிர ருடன்வர வகுத்த
கூனல் மாக்குரங் கைபிரண் டாயிர கோடித்
தானை யோடுமச் சதவலி யென்பவன் சார்ந்தான்.

(இ-ள்.) அ சதவலிஎன்பவன் - அந்தச்சதவலியென்னும வாநரவீரன்,— ஆயிரம் ஆயிரத்து ஆனை எழுவலி அமைந்த - பத்துலக்ஷம் யானைகளின மிக்கவலிமையோடு பொருந்திய, வானர அதிபர் ஆயிரர் - வானரப்படைத் தலைவர் ஆயிரம்பேர், உடன வர தன்னுடன் வர,—வகுத்த கூனல் மா குரங்கு ஐயிரண்டாயிரகோடி தானையோடும் - அணிவகுக்கப்பட்ட சங்குகள் போல வெண்ணிறமான அழகிய சிறந்தபதினாயிரகோடி வானரசேனை யோடும், சார்ந்தான் - (சுக்கிரீவனிடத்தில்) வந்து சேர்ந்தான்; (எ - று.)

சதவலி ஶதவலீ: முகத்தில் நூறுமடிப்புக்களையுடையவனெனக் காரணபபொருள்படும; அகரச்சுட்டு - பிரசித்தியைக்காட்டும். 'ஆனையாயிரக கோடியினெழுவலியமைந்த' என்றும் பாடம். கூனல் மாக் குரங்கு என்பதற்கு - உடல்வளைவையுடைய பெரிய குரஙகுகளென்று உரைப்பாருமுளர். கோடி - நூறுலக்ஷம்

இது முதல் இப்படலம் முடியுமளவும் ருக கவிகள் - ஈாகாலப்படலத்தின் ருக - ஆங் கவிபோன்ற கலிநிலைத்துறைகள். (உ)

[ஸுஷேணன் தன்சேனையோடு வருதல்.]

௩. ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறுவானரச்சேனை
யான்றபத்துநூறாயிரகோடியோடமையத்
தோன்றினன்வந்துசுசேடணனெனுமத்தோன்றல்.

(இ-ள்.) சுசேடணன் எனும் அ தோன்றல்- ஸுஷேணனென்னுஞ் சிறந்த வானரவீரன்,—மேருவை ஊன்றி எடுக்குறும் மிடுக்கினுக்கு உரிய - மேருமலையையும் பெயாததெடுக்கவல்ல வலிமை பொருந்தியதும், தேன

தெரிந்து உண்டு தெளிவுறு-மதுக்களை ஆராய்ந்து உண்டு (மயக்கமில்லாமல்) தெளிவுபெற்றதுமான, வானர சேனை ஆன்ற பத்து நூறுயிரகோடியோடு - சிறந்த பத்துலக்ஷங்கோடி வானரசேனையுடனே, அமைய - பொருந்த, வந்து தோன்றினன் - வந்து சேர்ந்தான்; (எ - று.)

சுசேடணன் - ஸுஷேணனென்னும் வடமொழியின் திரிபு இவன், வாலியின் மனைவியாகிய தாரைக்குத் தந்தையாவன்: இவன், வருணதேவனது குமாரன். வால்மீகிராமாயணத்திலும் சேனைவந்த விவரத்தைக் கூறுகையில், முதலில் சதவலியென்பவன் வந்ததைக் கூறி, இரண்டாவதாக ஸுஷேணன் வருகையைக் கூறியிருத்தல் காண்க. ஆன்ற என்பதை அகன்ற என்பதன் மரூஉவாகக்கொண்டு, பரவிய என்றும் பொருள் கூறலாம். முதலடி - தொடர்புயர்வுநவிற்சி. (ரு)

[ருமையின் தந்தை தன்சேனையோடு வருதல்.]

சு. ஈறில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரச்சேனை
யாறெண்ணாயிரகோடியதுடன்வரவமுத
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான்.

(இ - ள்.) அமுதம் மாறு இலா மொழி உருமையை பயந்தவன் - தேவாமிருதமும் ஒப்பாகாத [மிக இனிய] சொற்களையுடைய (சுக்கிரீவனது மனைவியாகிய) ருமையைப் பெற்ற தந்தையானவன,—ஈறு இல் வேலையை-முடிவு காணப்படாத கடலையும், இமைப்புறும் அளவினில் - ஒரிமைப் பொழுதிற்குள், கலக்கி சேறு காண்குறும் - கலக்கிச் சேறாக்கவல்ல, திறல்கெழு - வலிமைநிறைந்த, வானர சேனை ஆறு எண் ஆயிரகோடி அது-நாற்பத்தெண்ணாயிரகோடி வானரசேனை, உடன் வர-தன்னுடன் வர, வந்தான்—; (எ - று.)

ருமையைப் பெற்ற தந்தை, தாரனெனப்படுவன்: இவன், தேவகுருவாகிய பிரஹஸ்பதியின புதல்வன். இமைப்புறுமளவு - நொடிப்பொழுது. உருமை = ருமை. (சு)

[கேஸரி சேனையோடு வருதல்.]

ரு. ஐம்பதாயநூறுயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
விம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான்.

(இ - ள்.) இம்பர் ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி நம்பனை தந்த கேசரி - இந்தப்பூலோகத்திலும் மேலுலகத்திலும் நிலைபெறச்செய்த சீர்த்தியையுடைய சிறந்தவனாகிய அநுமானைப் பெற்ற கேஸரியென்னும் வானரவீரன்,—ஐம்பது ஆய நூறுயிரகோடி எண் அமைந்த - ஐம்பது லக்ஷங்கோடித்தொகை பொருந்திய, மால் வரை புரை மொய்ம்பு நெடு வானரம் - பெருமலைகளையொத்த தோள்களையுடைய பெரிய வானரசேனை, மொய்ப்ப -

நெருங்கி(த் தன்னுடன்) வர, கடல் என நடந்தான் - சமுத்திரம்போன்ற தோற்றத்துடன் வந்தான்; (எ - று.)

மொய்ம்பு - வலிமையையுடைய எனக் கொண்டு, மால்வரைபுரைநெடு வானரம் - பெரியமலையையொத்த பேருருவத்தையுடைய வானரமெனினு மாம். மால்வரை - குலபர்வதமுமாம். இம்பர்ஞாலம் - இங்குள்ள நிலவுலகம். அநுமான் தன்செய்கையால் மிகப்பிரசித்திபெற்றவனாதலால், அவனை 'இம் பர்ஞாலத்தும் வானத்தும் எழுதிய சீர்த்தி நம்பன்' என்றார். சீர்த்தி - மிகு புகழ். நம்பன் - எல்லாரும் விரும்புங்குணமுடையவன்; சிவபெருமானது அமிசமாகப் பிறந்தவனெனினுமாம்; (நம்பன் - சிவன்). தன்சேனையோடு வந்த கேஸரிக்கு, அலையோடுகூடிய சமுத்திரம் உவமையாதற்கு ஏற்கும்.

'மால்வரைநேர்', 'மைந்தனைப்பெற்றகேசரி கடலெனவந்தான்' என்றும் பாடம். (ரு)

[கவாட்சன் சேனையோடு வருதல்.]

சு. முனியுமாமெனினருக்கனைமுரணறமுருக்குந்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்குமைக்கு
மினியமாக்குரங்கீரிரண்டாயிரகோடி
யனிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான்.

(இ - ள்.) (ஒவ்வொன்றுமே) முனியும் ஆம் எனின் - கோபங்கொள்ளு மாயின், அருக்கனை முரண் அற முருக்கும் - சூரியனையும் வலிமைகெடும் படி அழிக்கும்; சலம் வரின் - அகங்காரம் பிறந்தால், தனிமை - தனிமை யாகவே [தனித்தனியாக], தாங்கிய உலகையும் குமைக்கும் - (தங்களைத்) தாங்கிக்கொண்டிருக்கின்ற உலகத்தையும் குத்தியழிக்கும்; (இப்படிப்பட்ட வைகளான), இனிய மா குரங்கு ஈர்இரண்டு ஆயிரகோடி - மனக்களிப்புடைய நாலாயிரகோடிக்கணக்கான சிறந்த வானரங்களையுடைய, அனிகம் - சேனை, முன் வர - தனக்குமுன்னே வர, ஆன் பெயர் கண்ணன் கவாட்சனென் பவன், வந்து அடைந்தான் - வந்து சேர்ந்தான்; (எ - று.)

சூரியன்மீது கோபங்கொள்ளுமாயின் அவனையும் தனித்தனியே அழிக்க வல்லனவும், அவ்வாறே பூமியின்மீது சினங்கொண்டாலும் அதையும் குத்திக் குமைக்க வல்லனவுமான நாலாயிரகோடி வானரசேனைகளுடனே கவாட்ச னென்பவன் வந்தானென்க. கவாக்ஷன் - பசுவின் கண்போன்ற கண்களை யுடையவனெனக் காரணப்பொருள்படும்; இவன், 'கோலாங்கூலம்' எனப் படும் கொண்டை முசுக்களுக்குத் தலைவன்: இவனது சேனையாக வந்தன வும் அந்தச் சாதிவானரங்களே ஆன்பெயர்க்கண்ணன் - கவாட்சன்; ஆன் - கோ: கண் - அக்ஷி: ஆன்பெயராகிய 'கோ' என்னுஞ் சொல்லோடு கூடிய 'அக்ஷி' என்னுங் கண்பெயரை யுடையவனென்க; 'கண்' என்ற சொல் ஒருவகை ஆகுபெயரால் 'அக்ஷி' என்பதைக் காட்டிற்று: 'கோ,' 'அக்ஷி' என்ற இவ்விருசொல்லும் புணர்ந்து ஸமாஸத்தில் [தொகை நிலையாக வரும்போது] கவாக்ஷனென்று ஆகும். ஆன்பெயர்க்கண்ணன் என்பதற்கு -

'இடபாட்சன்' எனச் சிலர் பொருள் கூறுவது, முதனூலோடு மாறுபடுதலாற் பொருந்தாது.

'அருக்கனை முடிவுறமுனியும்' 'அருக்கனை முரணையுமுருக்கும்', 'வலம் வருஞ்சலத்தால்', 'வலம்வருஞ் சலத்த', 'ஈண்டிய வாயிரகோடி' என்பன பிரதிபேதம்.

இச்செய்யுள் சில பிரதிகளில் "மண்கொள்" என்ற தொடக்கத்துச் செய்யுளுக்குப் பின் காணப்படுகின்றது: ஆயினும், இங்குக்கூறிய முறையே முதனூலுக்கு ஏற்கும். (சு)

[தூம்பிரன் சேனையோடு வருதல் ]

எ. மண்கொள்வாளெயிற் றேனத்தின் வலியனவயிரத்
திண்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
வெண்கினீட்டங்கொண்டெறுழ்வலித்தூம்பிரனிறுத்தான்.

(இ - ள்.) எறுழ் வலி தூம்பிரன் - மிக்கவலிமையையுடைய தூம்பிரனென் பவன்,—மண் கொள் வாள் எயிறு ஏனத்தின் வலியன - பூமியைக்குத்தி யெடுத்த ஒளிபொருந்திய கோரப்பற்களையுடைய (திருமாலின திருவவதார மான வராகம்போன்ற பலமுடையவையும், வயிரம் திண்கொள் மால் வரை மயிர் புறத்தன என திரண்ட - உறுதியையுடைய வலிமையைக்கொண்ட பெரியமலையும் ஒரு மயிர்க்காலிலே யடங்கக்கூடியதென்று சொல்லும்படி மிகப்பெரிய உருவமுடையனவும், கண் கொள் ஆயிரகோடியின் இரட்டியில் கணித்த - மிக்க இடத்தைக்கொண்ட [விசாலமாகப் பரவிய] இரண்டாயிர கோடியாகக் கணக்கிடப்பட்டவையுமாகிய, எண்கின் ஈட்டம் கொண்டு - கரடிகளின் கூட்டத்தை உடனகொண்டு, இறுத்தான் - வந்துசேர்ந்தான.

தூம்ரன் - ஜாம்பவானுக்கு உடனபிறந்தவனான ஒரு கரடித்தலைவன்: இவனுடன் வந்த கரடிப்படையில் ஒவ்வொன்றுமே திருமாலின வராகாவ தாரம்போன்ற வலிமையையும் ஒருமயிர்க்காலிற பெருமலையடங்கக்கூடிய பேருருவத்தையு முடையதென்க கரடிக்கு மகாவராகத்தை உவமை கூறி யது, வடிவொப்புமை கருதி. இச்செய்யுளினிரண்டாமடி "சிலம்பினிடைச் சிறுபரல்போற் பெரியமேரு திருக்குளம்பிற் கணகணப்ப" என்ற வாய்பாடு பற்றி வந்தது. 'கணகொள' எனபதற்கு - கண்பார்வை செல்லக்கூடிய வளவு தூரம் பரவிய என்றுமாம்.

'மண்கொள்வாளெயிற்றேனம்' என்றதில் அடங்கியகதை:--ஒருகாலத் தில் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப்போன இரணியாக்கனைத் திருமால் தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால் மகாவராகமாகத் திருவவதரித்துக் கொன்று பூமியைக் கோட்டாற் குத்தி யெடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினனென்பதாம்.

'வலியனவுயர்ந்த', 'வலிமெயனவுயர்ந்த' என்றும் பாடம். 'எழுழ்வலியிடும்பன் வந்திறுத்தான' என்றுள்ள பாடம் முதனூலின் போக்கிற்குச் சிறவாது. (எ)

[பனசன் சேனையோடு வருதல்.]

அ. தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலத்தா
னினையுநஞ்செனவுருமெனநடுக்குறுநிலையன்
பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொடுபுகுந்தான்.

(இ - ள்.) தனி வரும் தட கிரி என பெரியவன் - தனித்து வருகின்ற பெரியதொரு மலைபோலப் பெருந்தோற்றமுடையவனும், சலத்தால் - கோபத்தினால், நஞ்சு என - விஷம்போலவும், உரும் என - இடிபோலவும், நடுக்குறும் - (கண்டவரை) நடுங்கச்செய்கிற, நினையும் நிலையன் - (யாவரும் அஞ்சி) நினைக்கக்கூடிய தன்மையை யுடையவனுமாகிய, பனசன் என்பவன்—,பன்னிரண்டாயிரகோடி புனித வெஞ்சினம் வானரம் படைகொடு - பன்னிரண்டாயிரகோடிக் கணக்கான பரிசுத்தமாகிய கொடுங் கோபமுடைய வானர சேனையை உடன்கொண்டு, புகுந்தான் வந்துசேர்ந்தான்; (எ-று)

'நினையுநெஞ்சிற வருமென வுறக்குறுநிலையன்' என்ற பாடத்திற்கு - (தன்னை) நினைக்கும் வனம் அழியும்படி இடிபோல மருட்டியழிக்கின்ற தன்மையையுடையவனென்று பொருளாம். (அ)

[நீலன் சேனையோடு வருதல்.]

கூ. இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கு
முடிவில்பேர்முழக்குடையனவிசையனமுரண
கொடியகூற்றையுமொப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுநதனனீலன்.

(இ - ள்.) நீலன்—,—இடியும் மா கடல் முழக்கமும் வெரு கொள இசைக்கும் முடிவு இல் பேர் முழக்கு உடையன - இடியோசையும் கடலினொலியும் அஞ்சும்படி ஒலிக்கின்ற எல்லையில்லாத பேராரவார முடையனவும், விசையன - மிககபராரப்பை யுடையனவும், முரண - வலிமையை யுடையனவும், கொடிய கூற்றையும் ஒப்பன - கொடுமையான யமனைப் போன்றனவுமாகிய, பதிற்றைந்துகோடி நெடிய வானரம் படைகொண்டு - ஐம்பதுகோடி பெரிய வானரசேனையை உடன்கொண்டு, புகுந்தனன்—. ()

நீலன் - நீலநிறமுடைமைபற்றி இவனுக்கு இப்பெயர்; இவன்-அக்கினியின் குமாரன்; வானரசேனைகளெல்லாவற்றுக்கும் முதல்தலைவன். பத்து+ஐந்து:'பதிற்றைந்து; பண்புத்தொகை யாதலால், இற்றுச்சாரியை பெற்று, ஐம்பதெனப் பொருள்பட்டது.

'பேருறக்குடையன', 'போர்முழக் குடையன்', 'பேருலகிறக்குறும் விஞ்சையன்முரண', 'கூற்றையுங்கொதிப்பன' என்று பிரதிபேதம். (கூ)

[தரீமுகன் சேனையோடு வருதல்.]

௧0. மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயிலனமலையி
னாகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுந்தரீமுகனெனபவன்சார்ந்தான்.

(இ - ள்) தரீமுகன் என்பவன்—,—மா கரத்தன - பருத்த கைகளை யுடையனவும், உரத்தன - வலியமார்பையுடையனவும், வலியன - தேகவலிமையுடையனவும், நிலைய - (செய்தொழிலில்) உறுதியுள்ளனவும், வேகரத்த - உக்கிரமுடையனவும், வெம் கண் உமிழ் வெயிலன - கொடுமையான கண்களிலிருந்து வெளிப்படும் நெருப்புப்பொறியையுடையனவும், மலையின் ஆகரத்தினும் பெரியன - மலையின் வடிவத்தைக்காட்டிலும் பெருவடிவமுடையனவுமான, ஆறு ஐந்து கோடி சாகரதொடும் - முப்பதுகோடி வானரசேனா சமுத்திரத்தோடும், சார்ந்தான் - வந்து சேர்ந்தான; (எ - று)

'தரீமுகன்' என்ற பெயர் - குகைபோன்ற முகத்தையுடையவனென்று பொருள்படும். வேகரம் - கொடுமை, உக்கிரம். வெயில் என்பது - வெம்மையையுடையதென்ற காரணத்தால், இங்கே, தீப்பொறியையுணர்த்திற்று. ஆகரம் - ஆகார மென்ற வடசொல்லின் குறுக்கல். ஸாகரம் - சகரகுமாரர் அறுபதினாயிரவரால் தோண்டப்பட்டதெனக் கடலுக்குக் காரணக்குறி: இங்கே, அதுபோலப் பரந்த சேனைக்கு உவமையாகுபெயர்; ஓர்பெருந்தொகையுமாம்.

'மலையன—நிலைய', 'வெங்கணலுமிழ்வெயிலன,' 'ததிமுகனெனபவன்', 'சத முகனெனபவன்' எனபன பாடாந்தரங்கள் (௧0)

[கஜன் சேனையோடு வருதல்.]

௧௧. இளைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதினாயிரகோடியின்முற்றுற
விளைத்தவெஞ்சினதகரியினம்வெருவுறவிழிக்கு
மளக்கரோடுமக்கயனெனும்பெயரன்வந்தடைந்தான்.

(இ - ள்.) அ கயன எனும் பெயரான் - பிரசித்தமான கஜனென்னும் பெயரை யுடைய வீரன்,—வேறு ஒரு மா நிலம் வேண்டும் என்று இளைத்து இரங்க முளைத்த - (தாம் தங்கியிருப்பதற்கு இந்நிலவுலகம்போதாமையால்) வேறொரு பெரியபூமி வேண்டுமென்று வருந்தியிரங்கும்படி தோன்றியவையும், முப்பதினாயிரகோடியின முற்றும் விளைத்த - முப்பதினாயிரகோடிக் கணக்கிலே உலகமுழுதும் பரவியனவுமான, வெம் சினதத அரி இனம் வெருவுற விழிக்கும் - கடுங்கோபத்தையுடைய சிங்கத்தின் கூட்டமும் அஞ்சும்படி விழித்துப்பார்க்குந் தன்மையுள்ள, அளக்கரோடும் - (வானரசேனா) சமுத்திரத்தோடும், வந்து அடைந்தான்—; (எ - று.)

கயன் - கஜனென்ற வடசொல்லின் விகாரம்: யானைபோன்ற வடிவுடையவ னென்று பொருள்படும் ஒவவொன்றும், மிகவும் பருத்திருத்தலால்

இவனது முப்பதினாயிரஞ்சேனை தங்குவதற்கு இந்நிலவுலகத்தின் இடம் போதாதென்று இரங்கவேண்டியதாயிற்றெனக், உயர்வுநவிற்சி. அளக்கர் - அளக்க அரு என்ற இரண்டுசொல் விகாரப்பட்டு, இவ்வளவென்று அளத்தற் கருமையானதென்ற காரணத்தாற் சமுத்திரத்தை யுணர்த்தும்; சேனைக்கு, உவமையாகுபெயர். மூளைத்த, விளைத்த - பெயர்கள்.

'இளைத்தவேறொருமேருவும் வேண்டுமோவென்ன', 'வெருவுறவிரிந்த,' 'அளக்கரோடு கவயனெனும் பெயரான்', 'அளக்கரோடு மவ்வாறெனும் பெயரன்' என்பன பாடாந்தரம். (௧௧)

[ஜாம்பவான் சேனையோடு வருதல்.]

௧௨. ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபரவையிற்றிரையிற்
றாயுருத்துடனேவரத்தடநெடுவரையை
யேயுருப்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான்.

(இ - ள்.) தட நெடு வரையை ஏய் உரு புயம் சாம்பன் என்பவனும் - பெரிய நீண்ட மலையை யொத்த உருவத்தோடு கூடிய தோள்களையுடைய ஜாம்பவானும்,—பரவையின் திரையில் தாய உருத்து உடனே வர - சமுத்திரத்தினலைகள்போலத் தாவிக்கோபித்துத் தன்னுடனே தொடர்ந்துவர, ஆயிரத்து அறுநூறுகோடியின் - ஆயிரத்தறுநூறுகோடி யென்னுங்கணக்கை யுடைய, கடை அமைந்த பாயிரம் பெரும்படை - இடங்களில் நிரம்பிய சிறப்பையுடைய பெரியவானரசேனையை, கொண்டு - உடன்கொண்டு, வந்து இறுத்தான் - வந்து தங்கினான்; (எ - று.)

பாயிரம் - விருது. தாய - 'தாவு' என்ற பகுதியினடியாப்பிறந்த செய்தெனெச்சம். சாம்பன் = ஜாம்பவாந்: வடசொல்விகாரம். முன்னொருகால் பிரமன் கொட்டாவிவிட்டபோது அவனது வாயினின்று கரடிவடிவமாய்த் தோன்றியவன்; கரடிகளுக்கு அரசன்; இவன், திருமாலின் திரிவிக்கிரமாவதாரகாலத்தில் உலகமுழுவதும் நிரம்பிய அப்பெருமானைப் பதினெட்டு முறை பிரதட்சிணஞ்செய்தவனெனக். 'தடவரை நீடுமாயவற்புரை சாம்பனென்பவனும் வந்திறுத்தான்' என்று பிரதிபேதம். (௧௨)

[துன்முகன் சேனையோடு வருதல்.]

௧௩. வகுத்ததாமரைமலரயனிசிசரர்வாழ்நா
ளுகுத்திநீயெனப்பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறாயிரப்பதியினிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகன்றொடர்ந்தான்.

(இ - ள்.) பொருவு அரும் பெரு வலி உடையான் - ஒப்பில்லாத மிக்க வலிமையுடையவனாகிய, துன்முகன் - துன்முகனென்பவன், வகுத்த தாமரை மலர் அயன் - (எல்லாப்பொருள்களையும்) படைப்பவனாகிய (திருமாலின் உந்தித்) தாமரைமலரில் தோன்றிய பிரமதேவன், நிசிசரர் வாழ்நாள் நீ உகுத்தி

என - 'அரக்கர்களது வாழ்நாளை நீ ஒழிப்பாயாக' என்று கட்டளையிட்டதனால்,—பகுத்த பத்து நூறாயிரம் பத்தியின் - அணிவகுக்கப்பட்ட பத்துலட்சம் வரிசைகளையுடைய, தொகுத்த இரட்டிகோடி வெம் படை கொண்டு - நிறைந்த இரண்டு கோடிக்கணக்கான கொடிய வானரசேனையை உடன் கொண்டு, தொடர்ந்தான் - வந்தான்; (எ - று.)

துர்முகன் என்ற பெயர் - பகைவர்க்குப் பயங்கரமான முகத்தை யுடையவனென்றும், அழகில்லாத முகத்தையுடையவனென்றும் பொருள் பெறும். பெரிய வலிமையையுடைய துன்முகன இரண்டுகோடி வானர சேனையுடன் வந்தது, பிரமன் அரக்கரது வாழ்நாளை யழிக்கக் கட்டளையிட்டதனால் வந்தாற்போலு மென்றவாறும். இது, தற்குறிப்பேற்றத்திற்கு உரிய உருபைப் பெறாதுவந்த தற்குறிப்பேற்றவணி; வடநூலார், கம்யோத்ப்ரேக்ஷாலங்கார மென்பர். அயன் = அஜன்: திருமாலினிடத்தினின்று தோன்றியவனென்று பொருள்; அ - விஷ்ணு. நிபிசரர் என்ற வடசொல் - (பகலினும்) இரவில் வலிகொண்டு திரிபவரெனக் காரணக்குறி. வாழ்+நாள்= வாணாள்; மரூஉ. பத்தி=பங்க்தி; வடமொழி. இரட்டி - இரண்டு எனபது மென்றொடர் வன்றொடராய், இகரச்சாரியை பெறறுவந்தது.

'புகுத்ததீயெனப்பொருவரும்'; 'உகுத்ததீவினைபொருவதோ', 'பத்தினிலிரட்டி' என்பன பாடபேதம். (கங)

[துமிந்தன் சேனையோடு வருதல்]

கச. கோடிகோடி நூறாயிரவெண்ணெனக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க
மூடுமும்பருமிம்பருமபூழியின்மூழ்கத்
தோடிவர்ந்ததார்க்கிரிபுரைதுமிந்தனுந்தொடர்ந்தான்.

(இ - ள்.) தோடு இவர்ந்த தார் கிரி புரை துமிந்தனும் - இதழ்கள் நிறைந்த மலர்மாலையை யணிந்தவனான மலையையொத்த பெருந்தோற்றமுடைய துமிந்தனென்பவனும்,—கோடி கோடி நூறாயிரம எண் என குவிந்த - பல கோடிலக்ஷக்கணக்காகக் குவிந்த, நீடு வெம் சினத்து அரி இனம - மிகக் கொடிய கோபத்தையுடைய வானரக்கூட்டம், இரு புடை நெருங்க - (தனது) இருபக்கங்களிலும் நெருங்கவும், மூடும் உம்பரும் இம்பரும் பூழியில் மூழ்க - மேற்கவிந்த ஆகாயமும் இவ்வுலகமும் (அப்போது மேலெழுந்த) புழுதியிலே மறைந்துவிடவும், தொடர்ந்தான்—; (எ - று.)

துமிந்தன் - த்விவிதன் என்பதன் சிதைவு; இவனும் அடுத்தக்கவியிற் கூறப்படுகின்ற மைந்தன் எனபவனும் - தேவவைத்தியர்களாய் இரட்டையரான அசுவினிதேவர்களின அமிசத்தாற் பிறந்த வானரர்.

இச்செய்யுளுக்கு முன்னே மேல்வருகின்ற "கையஞ்சாசரம்," (உ௦), "வொய்தின்" (உக) என்ற தொடக்கத்துச் செய்யுள்கள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன. (கச)

[மைந்தனும் கஜகோமுகனும் சேனையோடு வருதல்.]

கரு. இயைந்தபத்து நூறாயிரப்பத்தெனுங்கோடி
யுயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன் மற்கசகோமுகன் றன்னொடும்வந்தான்.

(இ - ள்.) சயம் தனக்கு ஒரு வடிவு என திறல்கொடு தழைத்த மயிந்தன - வெற்றிக்கு உரிய ஒரு வடிவாகுமென்று சொல்லும்படி [வெற்றியே ஒரு வடிவமெடுத்துக்கொண்டு வந்தாற்போல] பராக்கிரமத்தினாற் சிறப்புப் பெற்ற மைந்தனென்பவன்,—மல் கசகோமுகன் தன்னொடும் - மல்லயுத்தத் திற் சிறந்த கஜகோமுகனென்பவனோடும், இயைந்த பத்து நூறாயிரம் பத்து எனும் கோடி உயர்ந்த வெம் சினம் வானரம் படையொடும் - பொருந்திய நூறு லக்ஷக்கோடிக்கணக்கான மிகக்கொடிய கோபத்தையுடைய வானர சேனையோடும், ஒருங்கே - ஒருசேர, வந்தான—; (எ - று.)

மைந்தனும், சஜகோமுகனும், நூறுலக்ஷங்கோடி சேனையுடனே வந் தாரகளென்பதாம் மயிந்தன் = மைந்தன: போலி. நூறுலக்ஷம் = கோடி.

'சயந்தனகவொரு சார்வெனததகுதியாற்சமைந்த', 'மயிந்தனிப்படைக் கோமகனறனனொடும' என்று பிரதிபேதம். (கரு)

[குமுதன் சேனையோடு வருதல்.]

கசு. கறங்குபோல்வனகாற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானரவொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான்.

(இ - ள்.) குமுதனும்—,—கறங்கு போல்வன - காற்றாடிபோற்செல்வ னவும், காற்றினும கூற்றினும் கடிய - காறறைககாட்டிலும் வேகமுடையன வும் யமனைப்பார்க்கிலும் கொடுமையுடையனவும, பிறங்கு தெள் திரை கடல் புடை பெயாந்து என பெயர்வ-விளங்குகின்ற தெளிவான அலைகளையுடைய சமுத்திரம் இடம்விட்டுப் பெயர்ந்தாற்போலப் பெயர்ந்துசெல்வனவும், ஒன்பதுகோடி எண் வகுத்த திறம் கொள் வெம் சினம் மறம் கொள் வான ரம் படை கொடு - ஒன்பதுகோடியென்று கணககிடப்பட்ட வலிமை மிக்க கடுங்கோபத்தைக்கொண்ட பராக்கிரமமுடைய வானரசேனையை உடன் கொண்டு, சேர்ந்தான்—; (எ - று.)

கறங்கு - (ஆகாயத்திற்) சுழனறுசெல்வதெனக் காரணக்குறி. கடிய - இரட்டுறமொழிதல்; காற்றினுங்கடிய கூற்றினுங்கடிய எனத் தனித்தனி இயைத்துப் பொருள் காண்க. (கசு)

[பதுமுகன் சேனையோடு வருதல்.]

கஎ. எழினெழு நூறாயிரகோடி யென்றிசைந்த
பாழிநன் னெடுந்தோள்கிளர் படைகொண்டு பரவை
யூழிபேரினு முலைவிலனுலகினி லுயர்ந்த
பூழிவிண்புகப் பதுமுகனென்பவன் புகுந்தான்.

(இ - ள்.) ஊழி பரவை பேரினும் உலைவு இலன் - கற்பாந்தகாலத்தில் கடல் பொங்கித் தன் நிலையைவிட்டுப் பெயர்ந்துவந்தாலும் அழிவில்லாதவனாகிய, பதுமுகன் என்பவன்—,—எழின் எழு நூறாயிரகோடி என்று இசைந்த - நாற்பத்தொன்பதினாயிரகோடிக்கணக்காகப் பொருந்திய, பாழி நல் நெடுந்தோள் கிளர் படை கொண்டு - வலிமையையுடைய அழகிய நீண்ட தோள்களோடு விளங்குகிற வானரசேனையை உடன்கொண்டு,—உலகினில் உயர்ந்த பூழி விண் புக - பூமியினின்று உயரவெழுந்த புழுதி ஆகாயத்திற் செல்லும்படி, புகுந்தான் - வந்து சேர்ந்தான்; (எ - று.)

எழின எழு - எழினாற் பெருக்கிய எழு எனப் பண்புத்தொகை, ஏழோடு சேர்ந்த எழு [அதாவது - பதினான்கு] என உம்மைத்தொகையாகவுங் கொள்ளலாம். பரவையூழிபேரினும் உலைவிலன - பிரளயகாலத்திலுஞ் சாவில்லாதவன. 'ஊழிபேரினு முலைவில' என்ற பாடமானபோது, படைக்கு அடைமொழியாம். பதுமுகன - பத்மமுகன் என்ற வடசொல்லின் சிதைவு போலும். இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. (கஎ)

[இடபன் சேனையோடு வருதல்.]

கஅ. எழுமேழுமென் றுரைக்கின்ற வுலகங்க ளெவையுந்
தாழுங்காலத்துந் தாழ்விலாத் தடவரைக் குலங்கள்
சூழுந்தோற்றத்த வலிகொடொள்ளாயிர கோடிப்
பாழிவெம்புயத் தரியொடு மிடபனும் படர்ந்தான்.

(இ - ள்.) இடபனும்—,—எழும் எழும் என்று உரைக்கின்ற உலகங்கள் எவையும் - பதினான்கென்று சொல்லப்பட்ட எல்லாவுலகங்களும், தாழும் காலத்தும் - அழிகின்ற கற்பாந்தகாலத்திலும், தாழ்வு இலா - அழிதலில்லாத, தட வரை குலங்கள் - பெரிய பர்வதங்களின் வருக்கங்கள், சூழும் - சூழ்ந்திருப்பதுபோன்ற, தோற்றத்த - தோற்றமுடையனவான, வலிகொள் - வலிமையைக்கொண்டுள்ள, பாழி வெம் புயத்து - வலிய கொடிய தோள்களோடு கூடிய, தொள்ளாயிரகோடி அரியொடும் - தொளாயிரகோடிக்கணக்கான வானரசேனையோடும், படர்ந்தான - வந்துசேர்ந்தான்; (எ - று.)

உலகங்களெல்லாம் அழியும் பிரளயகாலத்திலும் அழியாது நிற்கும் மலைகளுண்டாயின் அம்மலைகளே அழியாத தன்மையுள்ள இவ்வானரசேனைக்கு ஒப்பாகுமென இல்பொருளுவமை கூறினர். 'இரங்கனும் படர்ந்தான்' என்ற பாடத்திற்கு - (ஸிம்ஹம் - சிங்கம், ஸம்ஹாரம் = சங்காரம் என வருதல்

போல) ரம்ஹன் என்ற வடமொழி இரங்கனென்று திரிந்துவந்ததாகக் கொள்க. (௧௮)

[தீர்க்கபாதன், விநதன், சரபன் என்னும் இவர்கள் சேனையோடு வருதல்.]

௧௯. தீர்க்கபாதனும் விநதனுஞ் சரபனுந் திரைக்கு
மாற்கருங்கடற் குயர்ந்துளமைம் முகத் தனிக
மார்க்குமெண்ணருங் கோடிகொண் டண்டமும் புறமும்
போர்க்கும் பூழியின் மறைதர முறையினிற் புகுந்தார்.

(இ - ள்.) தீர்க்கபாதனும்—, விநதனும்—, சரபனும்—,—திரைக்கும் மால் கருங் கடற்கு உயர்ந்து உள - அலையெறிகிற பெரியகருமையான சமுத்திரத்தைக்காட்டிலும் பெருந்தோற்றத்தை யுடையனவான, ஆர்க்கும் எண் அரும் - எத்திறத்தார்க்கும் எண்ணிக்கணக்கிட முடியாத, மை முகத்து அனிகம் கோடி கொண்டு - கறுத்தமுகமுள்ள கோடிக்கணக்கான வானரசைனியத்தை உடன்கொண்டு, அண்டமும் புறமும் போர்க்கும் பூழியின் மறைதர - உலகவுருண்டையின் உள்ளும் புறமும் மேலெழுந்து மூடிக்கொள்ளும் புழுதியினால் மறையும்படி, முறையினில் புகுந்தார் - ஒருவர் பின் ஒருவராக வந்து சேர்ந்தார்கள்; (எ - று.)

தீர்க்கபாதன் - நீண்டகாலுடையவன். விநதன் - மிகவும் வணக்கமுடையவன். சரபன் - சரபம்போன்ற பராக்கிரமமுள்ளவன்; (சரபம்-எண்கால்புள்) இவன், பர்ஜந்ய தேவதையின் குமாரன்: (பர்ஜந்யதேவதை - மேகத்திற்கு உரியகடவுள்) மைம்முகத்தனிகம் - கருங்குரங்குகளின் சேனை. 'ஆர்க்குமெண்ணருங்கோடி' என்பதற்கு - ஆரவாரிக்கின்ற எண்ணமுடியாத [பல] கோடிக்கணக்கான என்றும் உரைக்கலாம்.

'ஆம்பனும் விநதனுந் திறங்கொள்', 'மாற்கருங்கடலவர்சேனை'. 'ஆர்க் கருங்கடற்குயர்ந்துள' என்று பிரதிபேதம்.

இச்செய்யுள் மூன்றும், முன்செய்யுள் இரண்டுமாகச் சில பிரதிகளிற் காணப்படுகின்றது. (௧௯)

[அநுமான் சேனையோடு வருதல்.]

௨௰ கையஞ்சாசர முடையவக் கடவுளைக் கண்டு
மெய்யஞ்சாதவன் மாதிரஞ் சிறிதென விரிந்த
வையஞ்சாய்வரத் திரிதருவானர சேனை
யையஞ்சாயிரகோடி கொண்டனுமன் வந்தடைந்தான்.

(இ - ள்.) ஐம் கை சாசரம் உடைய அ கடவுளை கண்டும் மெய் அஞ்சாதவன் - அழகிய ஆயிரங்கிரணங்களையுடைய அந்தச் சூரியபகவானைக் கண்டும் உடம்பில் அச்சங்கொள்ளாதவனான, அனுமன் - அநுமான்,—மாதிரம் சிறிது என விரிந்த - திக்கினிடம் முழுவதும் சிறிதென்னும்படி பரவியுள்

ளனவான, வையம் சாய்வா திரிதரு-கிலவுலகம் ஒருபுறமாகச் சாயும்படி சஞ் சரிக்கின்ற, ஐ அஞ்சு ஆயிரகோடி வானர சேனை கொண்டு இருபத்தையா யிரங் கோடிக்கணக்கான வானரசேனையை உடன்கொண்டு, வந்து அடைந் தான்—; (எ - று.)—இச்செய்யுள் - திரிபு என்னுஞ் சொல்லணி.

கை = கரம்; கரம் - கிரணம். சூரியன் ஆயிரங்கிரணங்களை யுடையவ னாதலால், 'கையஞ் சாசரமுடைய அக்கடவுள்' எனப்பட்டான். சாசரம் - ஸாஹஸ்ர மென்ற வடசொல்லின் சிதைவு. அக்கடவுள், அ - உலகறிசுட்டு. அநுமான் பிறந்தவுடனே இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்று கருதிச் சிறிதும் அஞ்சாது பிடிக்கப்பாய்ந்தவ னாதலால், அவனை 'அக்கடவுளைக் கண்டு மெய்யஞ்சாதவன்' என்றார். பூமியின் எந்தப்பகுதியில் இவ்வானர சேனை செல்கின்றதோ, அந்தப்பகுதி மிக்கபாரத்தாற் சாய்வதாயிற் றென்க.

'கையஞ்சாயுதமுடையவக்கடவுளை' என்று பிரதிபேதம். (உ0)

[நளன் சேனையோடு வருதல்.]

உக. நொய்திற்கூடியசேனைநூறாயிரகோடி
மெய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மையற்சிந்தையாலந்தகன்மறுக்குற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன்சேர்ந்தான்.

(இ - ள்.) தெய்வத் தச்சன் மெய் திரு நெடுங் காதலன் - தேவசிற்பி யாகிய விசுவகர்மாவினது உண்மையுள்ள அழகு மிக்க குமாரனாகிய நள னென்பவன்,—தேவரும் முடிவு என்கொலோ என்பது எண்ண - தேவர் களும் '(இச்சேனையின்) எல்லை யாதோ?' என்று உணரமுடியாமற் சிந்தித் துக் கொண்டிருக்கவும், அந்தகன் மையல் சிந்தையால் மறுக்குற்று மயங்க - யமனும் (இதனைக் கண்டதனாலாகிய) பிரமைகொண்ட மனத்தினாற் கலக் கங்கொண்டு திகைக்கவும், நொய்தின் கூடிய நூறாயிரகோடி சேனை எய்த - விரைவில் திரண்ட லக்ஷகோடிக்கணக்கான வாநரசேனை (தன்னுடனே) வர, சேர்ந்தான—; (எ - று.)

இனி, இரண்டாமடிக்கு - 'இதன் முடிவு என்னாகுமோ?' என்றுதேவர் கள் சிந்திக்க என்று உரைப்பாரு முளர். அந்தகன் - (பிராணிகட்கு) அந்தத் தைச் செய்பவனென யமனுக்குக் காரணக்குறி. தச்சன் - தக்ஷன்; வடசொல். நளன் - தெய்வத்தச்சனான விசுவகர்மாவின் மகனாய் அவனதம்சமாகப்பிறந்த ஒரு வானரவீரன்: தன் கையால் எதை நீரிற்போகட்டாலும் அது மிதக்கும் படி வரம்பெற்றவன். 'மறுக்குறமயங்க' என்று பிரதிபேதம். (உக)

[கும்பன் சங்கன் முதலியோர் சேனையோடு வருதல்.]

உஉ. கும்பனுங்குலச்சங்கனுமுதலினர்குரங்கிற்
றம்பெரும்படைத்தலைவர்கடரவந்ததானை
யிப்பர்சின்றவர்க்கெண்ணரிதிராகவனவைத்
தம்பெனுந்துணைக்குரியமற்றுரைப்பரிதளவே.

(இ - ள்.) கும்பனும்—, குலம் சங்கனும் - சிறந்த சங்கனென்பவனும், முதலினர் - முதலானவர்களாகிய, குரங்கின் தம் பெரும் படை தலைவர்கள் - தமது பெரிய வானரசேனைத்தலைவர்கள், தர - (தம்முடன் திரட்டிக்கொண்டு) வர, வந்த—, தானை-வானரசேனையானது,—இம்பர் நின்றவர்க்கு எண் அரிது - இவ்வுலகத்திலுள்ளார்க்குக் கணக்கிடமுடியாதது; இராகவன் ஆவத்து அம்பு எனும் தணைக்கு உரிய(து) - இராமபிரானது தூணீரத்திலுள்ள அம்புகளினளவாமென்று சொல்லத்தக்க அளவுடையது, (அன்றி), அளவு மற்று உரைப்பு அரிது - அச்சேனையினளவைப்பற்றி வேறுவகையாகக் கூறுதல் அருமையானது; (எ - று.)

இராமபிரானது அக்ஷயதூணீரத்தில் அம்புகள் அளவில்லாது நிறைந்திருப்பதுபோல, கும்பன் சங்கன் முதலியோரது சேனையிலும் வானரங்கள் அளவற்று நிறைந்திருந்தன வென்பதாம். ஆவம் - அம்புப்புட்டில். உரிய= உரியது. 'முதலினர்' என்றதனால், வஹ்நி முதலானோரைக் கொள்க.

'குலச்சாம்பனும் வன்னியுங்குரங்கின், றம்பெரும்படைத்தலைவர்களாய் வந்ததானை', 'இராகவனுமைத்து', 'அம்பெனுந்துணைக்குரியர்', 'மாறுரைப் பரிது' என்பன பிரதிபேதம். (உஉ)

[இதுமுதல் மூன்று கவிகள்-வானரசேனைகளின் சிறப்பைத் தெரிவிப்பன.]

உ௩. தோயினுழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாஞ்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயு
மேயின்மண்டலமெள்ளிடமின்றியிரியுங்
காயின்வெங்கனற்கடவுளுமிரவியுங்கரியும்.

(இ - ள்.) (அங்குத்திரண்ட வானரசேனைகள்), தோயின் - அமிழ்ந்து முழுகினால், ஆழி ஓர் ஏழும் - ஏழுமகாசமுத்திரங்களும், நீர் சுவறி வெள் துகள் ஆம் - நீர்வற்றி வெண்புழுதியாய்விடும்; சாயின்-ஒருபுறஞ்சாய்ந்தால், அண்டமும் - உலகவுருண்டையும், மேருவும் - மகாமேருகிரியும், ஒருங்கு உடன் சாயும் - ஒருசேர உடனே (அந்தப்பக்கமாகச்) சாய்ந்துவிடும்; ஏயின்- எழுந்துசஞ்சரித்தால், மண் தலம் - இந்தப்பூமியின இடமானது, எள் இட இடம் இன்றி இரியும் - ஒரெள் இடுதற்கும் இடமில்லாமற்போம்; காயின் கோபங்கொள்ளுமாயின், வெம் கனல் கடவுளும் - கொடிய அக்கினியும், இரவியும் - சூரியனும், கரியும் - தீயும்; (எ - று.)

இச்செய்யுள் - வானரசேனையின் மிகுதியையும், பெருவலிமையையும் பற்றிய தொடர்புயர்வுநவிற்சி: அடுத்த இரண்டு செய்யுள்களும்-இவ்வாறே. இச்செய்யுளில் எந்த அடியை எங்கே கூட்டினாலும் பொருளும் ஓசையும் வேறுபடாமையால், இது - பொருள்கைமாறு அடிமறிமாற்றுப்பொருள்கோளாம்;மேல் உ௫ ஆங் கவியிலும் இது காண்க.

'உடன்சரியும்', 'இன்றிவிரியும்' என்றும் பாடம். (உ௩)

உ௪. எண்ணினான்முகரெழுபதினாயிரர்க்கியலா
வுண்ணினண்டங்களோர்பிடியுண்ணவுமுதவா
கண்ணினோக்குறிற்கண்ணுதலானையுங்கடக்கு
மண்ணின்மேல்வந்தவானரச்சேனையின்வரம்பே.

(இ - ள்.) மண்ணின்மேல் வந்த வானர சேனையின் வரம்பு - பூமியின் மீது ஒருங்குதிரண்டுவந்த வானரசேனையின் பேரளவானது, எண்ணின் நான்முகர் எழுபதினாயிரர்க்கு இயலா - எண்ணிக்கணக்கிடத் தொடங்கினால் எழுபதினாயிரம் பிரமர்களுக்கும் முடியாது; உண்ணின் அண்டங்கள் ஓர் பிடி உண்ணவும் உதவா - (இவ்வானரசேனைகள்) உண்ணத் தொடங்கினால் எல்லா அண்டகோளங்களும் தனித்தனி ஒவ்வொருபிடியளவாக உண்ணவும் போதமாட்டா; கண்ணின் நோக்குறின் கண்ணுதலானையும் கடக்கும் - கண்ணினாற்பார்த்தால் நெருப்புக்கண்ணை நெற்றியிலுடையவனாகிய சிவபெருமானையும் சயிக்கும்; (எ - று.)

இவற்றைப்படைத்த பிரமன்போன்ற எழுபதினாயிரம் பிரமர்கள் ஒருங்கேதிரண்டுவந்தாலும் இச்சேனையை அளவிடமுடியாதென்பது, முதலடியிற்கூறிய பொருள். நெருப்புக்கண்ணை நெற்றியிலுடைய அழித்தற்கடவுளாகிய சிவபிரானையும் தமது கண்பார்வையாற்சயிக்குமென வானரசேனையின் பேராற்றல் மூன்றாமடியில் வெளியாம். 'கண்ணுதலானுக்குங்கதுவா' என்ற பாடத்திற்கு - முக்கண்ணனான சிவபிரானுக்கும் எண்ணிக்கணக்கிடுதற்கு விளங்கமாட்டாது என்று பொருள்.

'வானரசேனையின் வரவே' என்றும் பாடம். (உ௪)

உரு. ஒடிக்குமேல்வடமேருவைவேரொடுமொடிக்கு
மிடிக்குமேனெடுவானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்குங்
குடிக்குமேற்கடலேழையுங்குடங்கையிற்குடிக்கும்.

(இ - ள்.) (அவவானரசேனை),—ஒடிக்கும் எல் வட மேருவை வேரொடும் ஒடிக்கும் - ஒடிககவேண்டுமென்று விரும்பினால் வடக்கிலுள்ள மேருபர்வதத்தையும் வேரோடு ஒடித்துவிடும்; இடிக்கும் எல் நெடு வானகம் முகட்டையும் இடிக்கும் இடிககவேண்டுமென்று விரும்பினால் பெரிய ஆகாசத்தின் மேல் முகட்டையும் இடித்துவிடும்; பிடிக்கும் எல் பெருங் காற்றையும் கூற்றையும் பிடிக்கும் - (கையினாற்) பிடிக்கவேண்டுமென்று விரும்பினால் பெரிய காற்றையும் யமனையும் பிடிததுவிடும்; குடிக்கும் எல் கடல் ஏழையும் குடங்கையின் குடிக்கும் - பருகவேண்டுமென்று விரும்பினால் எழுகடல்களையும் உள்ளங்கையால் முகந்து குடித்துவிடும்; (எ - று.)

பிறரெவராலுஞ்செய்யவொண்ணாத பெருங்காரியத்தையும் எளிதிற் செய்துமுடிக்கும் இவ்வானரசேனை யென்றவாறு.

'வரள்படக்குடிக்கும்', 'குடங்கையிற்கொள்ளும்' என்று பிரதிபேதம். (உரு)

[இவ்வாறு வானரசேனைத்தலைவர் எல்லோரும் சேருதல்.]

உசு. ஆறுபத்தெழுகோடியாம்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனினைத்தனமுடிக்குறும்வலிய
ரூறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதின்வந்துற்றார்.

(இ - ள்.) கூறு திக்கினுக்கு அப்புறம் குப்புறற்கு உரியார் - (நான்காகச்) சொல்லப்பட்ட திக்குக்களுக்கு அப்புறத்திலும் குதிக்கத்தக்க வல்லமையுள்ளவர்களும், மாறு இல் கொற்றவன் நினைத்தன முடிக்குறும் வலியர் - ஒப்பில்லாத தங்களரசனான சுக்கிரீவன் நினைத்த காரியங்களை உடனே செய்துமுடிக்கும் மனவுறுதியுடையவர்களுமாகிய, ஆறுபத்து எழுகோடி ஆம் வானரர்க்கு அதிபர் - அறுபத்தேழு கோடிக்கணக்கான வானரசேனைத் தலைவர்,—ஊறும் இ பெருஞ் சேனை கொண்டு - மேன்மேற் பெருகுகின்ற இந்தப் பெரிய சேனையைத் திரட்டிக்கொண்டு, எளிதின் வந்து உற்றார் - எளிதில் வந்து சேர்ந்தார்கள்; (எ - று.)

இவ்வாறு அறுபத்தேழுகோடி வானரசேனைத்தலைவர்கள் சுக்கிரீவனது தூதுவர் வந்துசொல்லியவுடனே தம் சேனைகளைத் திரட்டிக்கொண்டு வந்து சேர்ந்தன ரென்க. இரண்டாமடியால் அச்சேனைத்தலைவரது போராற்றலும், மூன்றாமடியால் அவர்கள் தங்கள் தலைவனிடத்துக் கீழ்ப்படிந்து நடக்குந் தன்மையும் கூறப்பட்டன.

'கோடியர்', 'எளிதினிலுற்றார்' என்று பாடாந்தரம். (உசு)

[வானரசேனாதிபதிகள் வந்து சுக்கிரீவனை வணங்குதல்.]

உஎ. ஏழுமாகடற்பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
... 
யாழிமாபரித்தேரவன்காதலனடிகள்
வாழிவாழியென்றுரைத்தலர்தூவினர்வணங்கி.

(இ - ள்.) அ வீரரும் - அந்த வானரசேனைத்தலைவர்களும்,—ஏழு மா கடல் பரப்பினும் பரப்பு என இசைப்ப சூழும் வானரம் படையொடு துவன்றி - ஏழு சமுத்திரங்களின் விஸ்தீரணத்தைக்காட்டிலும் பரவுதலுடைய தென்று (கண்டோர்யாவரும்) கூறும்படி சூழ்ந்துள்ள வானரசேனையோடு நெருங்கிவந்து, ஆழி மா பரி தேரவன் காதலன் அடிகள் வாழி வாழி என்று உரைத்து - 'ஒற்றைச்சக்கரத்தையும் சிறந்த குதிரைகளையுமுடைய தேரையுடையவனாகிய சூரியனது குமாரனான சுக்கிரீவனுடைய பாதங்கள் நன்றாகவாழ்க' என்று வாழ்த்தி, வணங்கி - சேவித்து, அலர் தூவினர் - மலர்களைத் தூவினார்கள்; (எ - று.)

சூரியனது தேர் - காலத்தின் வடிவமான ஒற்றைச்சக்கரத்தையும், காயத்ரி உஷ்ணிக் அநுஷ்டுப் ப்ருஹதீ பங்க்தி த்ரிஷ்டுப் ஜகதீ என்ற ஏழுசந்தச்

களாகிய எழு குதிரைகளையுமுடைய தென்பது நூற்கொள்கை. தமது பொங்கும்பரிவினாலே வானரப்படைத்தலைவர் தங்கள்தலைவனது பாதங்களை வணங்கி மலர்சொரிந்து வாழ்த்தின ரென்க. வாழி வாழி என்ற அடுக்கு - அன்பின்மிகுதிபற்றியது.

'கடற்கிரட்டியென்றி யாவருமிசைக்க,' 'இசைக்கும்,' 'தலைவருந்து வன்றி', 'தோன்றி', 'ஆழியொன்றுடையிரவிதன்காதலனடியில்' என்று பிரதிபேதம். (உஎ)

[சுக்கிரீவன் இராமபிரானிடத்துச்சென்று, வந்துள்ள சேனையைக் காணுமாறு வேண்டுதல்.]

உஅ. அனையதாகிய சேனைவந்திறுத்தலு மருக்கன
றனையனேய் தினிற்றயரதன்புதல்வனைச்சார்ந்தா
னினையுமுன்னம்வந்தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின் கூற்றுவகண்டருளீயென விளம்பும்.

(இ - ள.) அனையது ஆகிய சேனை வந்து இறுத்தலும் - அப்படிப்பட்டதான வானரசேனை வந்து நிறைந்தவளவிலே,—அருக்கன தனையன் - சூரிய குமாரனான சுக்கிரீவன்,—தயரதன் புதல்வனை நொய்தினில் சார்ந்தான - தசரதசக்கரவர்த்தியின குமாரனான இராமபிரானை விரைவாகச் சென்று சேர்ந்து,—வினையின் கூற்றுவ - தீவினைகட்கு யமன்போன்றவனே! நினையும் முனனம் நினைப்பதற்கு முன்னமே [வெகுவிரைவில], நின்பெருஞ் சேனை - நினது பெரியசேனையானது, வந்து அடைந்தது - வந்துசேர்ந்தது; நீ கண்டருள் - நீ (அதனைக்) காண்பாயாக,' என விளம்பும் - என்றுசொல்லலானான்.

தயரதன் = தசரதன், இது, தச ரத என்று பிரிந்து, பத்துத்திக்கிலும் தடையின்றிச்செல்லுந் தேரையுடையவனென்று பொருள்படும்; இதனால், எங்குந் தடையின்றிச்செல்லவல்லவ னென்றதாயிற்று: இதன்மை, இந் திரனைவலியழித்த சம்பராசுரனை வதைத்தற்பொருட்டு அவன் மாயையினாற் சென்றவிடமெல்லாம் விடாதுதொடர்ந்து சென்றதனால் விளங்கியது. சுக் கிரீவன் தன்னை இராமபிரானுக்கு அடிமையாக நினைத்திருத்தலால், தனது சேனையை 'நின்சேனை' என்றான். வினையின் கூற்றுவன - (தன்னையடைந் தாரது) இருவினைகளைத் தொலைத்து நற்கதிபெறுவிப்பவனென்றபடி. (உஅ)

[இராமபிரான் மகிழ்ந்து சேனையைக்காணுமாறு மலைச்சிகரத்திலேறுதலும், சுக்கிரீவன் அச்சேனையினிடம் மீண்டுசெல்லுதலும்.]

உகூ. ஐயனும்முவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தையலாள்வரக்கண்டனனெனத்தளிர்ப்பா
னெய்தினனங்கோர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான்.

(இ - ள்.) ஐயனும் - இராமபிரானும், உவந்து - சந்தோஷித்து, அகம் என முகம் மலர்ந்து அருளி - (தனது) மனமபோலவே முகமும் மலரப் பெற்று [உள்ளும் புறமுங்களித்து], தையலாள் வர கண்டனன் ஆம் என தளிர்ப்பான் - சீதாபிராட்டி வரககண்டவன்போல வாட்டம் நீங்கினவனாய், (வந்தசேனையைக் காணும்பொருட்டு), அங்கு ஓர் நெடு வரை சிகரத்தின் இருக்கை எய்தினான் - அங்கேயுள்ள ஒரு பெரியமலையினது உச்சியிலிடத்தை யடைந்தான்; வெய்யவன் மகன் - சூரியகுமாரனாகிய சுக்கிரீவன், பெயர்த்தும் அ சேனையில் மீண்டான் - மறுபடியும் அந்தச் சேனையினிடத்துத் திரும்பிச்சென்றான்; (எ - று.)

வானரசேனைகள் திரண்டுவருதல் சீதையைநாடியறிந்து மீட்பதற்குத் தக்கசாதனமாதலால், வானரசேனைதிரண்டதைக் கேட்டவுடன் சீதையை மீட்டலாகிய காரியம் நிச்சயமாய் முடியுமென்ற உறுதிபற்றி, இராமபிரான் சீதையை நேரிற்கண்டதுபோலவே மகிழ்வலாயினனென்க. தளிர்த்தல் - சீதையைப் பிரிந்தசோகத்தால் வாட்டமடைந்த உயிர் அவ்வாட்டம் நீங்கித் தழைத்தல். ஐயனும்முவந்து - விரித்தல.

'ஆமென முகமலர்ந்தருளி' என்றும் பாடம். (உக)

[சுக்கிரீவன் சேனையை ஒழுங்காகச் சிறிதுதூரஞ்செல்லக் கட்டளையிட்டு, படைத்தலைவருடன் ஸ்ரீராமனிடம் வருதல்]

௩௦. அஞ்செசாடை யிரண்டியோசனையகலத்ததாகிச
செஞ்செசேவவடதிசை நின்று தென்றிசைசெல்ல
வெஞ்சலில்பெருஞ் சேனையையெழுகென் வீவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான்.

(இ - ள்.) (சுக்கிரீவன),—அஞ்செசாடு இயிரண்டு யோசனை அகலத்தது ஆகி - பதினைந்துயோசனை அகலமுடையதாய், வடதிசை நின்று தென்திசை செஞ்செசேவே செல்ல - வடக்குத்திக்கிலிருந்து தெற்குத்திக்கிற்குச் செவ்வையாக [நேரே] செல்லும்படி, எழுக - புறப்படுக' என - என்று, எஞ்சல் இல் பெருஞ் சேனையை ஏவி - குறைவில்லாத பெரிய வானரசேனைக்குக் கட்டளையிட்டு, வெம் சினம் படை வீரரை உடன் கொண்டு - கடுங்கோபமுடைய வானரப்படைத்தலைவரை (த் தன்னுடன்) அழைத்துக்கொண்டு, மீண்டான் - (இராமபிரானிடம்) திரும்பிவந்தான்; (எ - று)

இராமபிரானுக்குச் சேனையின தோற்றத்தை நன்கு தெரிவித்தற்குச் சுக்கிரீவன வடக்குத்தெற்காகச் சிறிதுதூரம் சென்று திரும்பும்படி சேனைக்குக்கட்டளையிட்டன னென்க. செஞ்செசேவ - மிகச்செவ்வையாக. எழுகென் - தொகுத்தல். யோசனை செல்ல எழுக என்று இயைத்து உரைப்பினுமாம்.

'அகலமதாக' எனவும் பாடம. (௩௦)

[இராமபிரானுக்குச் சுக்கிரீவன் சேனைத்தலைவரைக் காட்டுதலும், சேனைகள் செல்லுதலும்.]

ருக. மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரிவுறக்காட்டி
யாண்டிருந்தனனார்த்துளைத்தெழுந்ததையன்றே
யீண்டுசேனைபாலெறிகடனெறிபடர்ந்தென்ன.

(இ - ள்.) (சுக்கிரீவன்),—மீண்டு இராமனை அடைந்து - திரும்பவும் இராமபிரானைச்சேர்ந்து, (அவனை நோக்கி), 'இகல் வென்றி வேல் வீர - பராக்கிரமத்தையும் வெற்றியையுமுடைய வேலாயுதத்தையேந்திய வீரனே! நீ காண்டி - நீ காண்பாயாக,' என - என்று, வரன் முறை தெரிவுற காட்டி - (சேனைத்தலைவர்களை) முறைமையாகத் தெரியும்படி (அவனுக்குக்) காண்பித்து, ஆண்டு இருந்தனன் - அவ்விடத்தில் [ஸ்ரீராமனருகில்] இருந்தான்; (அப்போது), ஈண்டு சேனை - திரண்ட அந்த வானரசேனையானது, எறிபால் கடல் நெறி படர்ந்து என்ன - அலையெறிகின்ற பாற்கடலானது வழியிற் சென்றதுபோல, ஆர்த்து உளைத்து எழுந்தது - பேராரவாரஞ் செய்து கொண்டு புறப்பட்டது; (எ - று)—ஐ சாரியை. அன்று, ஏ - ஈற்றசை.

சுக்கிரீவன் சேனைத்தலைவர்களுடைய வரலாறுகளை இராமபிரானுக்குச் செவ்வையாக விளங்கச் சொல்லினனென்பார், 'வரன்முறை தெரிவுறக் காட்டி' என்றார். ஆர்த்து உளைத்து - ஒருபொருட்பன்மொழி. வானரசேனைக்குப் பாற்கடலுவமை - வெண்ணிறத்திற்கும் பரப்பிற்கும் அணியணியாகச் செல்வதற்கும் பேராரவாரஞ்செய்தற்குமெனக். தற்குறிப்பேற்றவணி; இல்பொருளுவமையணி யெனபாரு முளர். 'ஈண்டுசேனையா லெறிகடனெறி படர்ந்தென்ன' என்ற பாடத்திற்கு, எறிகடலானது சேனையின் வடிவத்தைக்கொண்டு நெறிபடர்ந்தாற்போல என்ப் பொருள்காண்க.

'ஆண்டிருந்தனனாதரத் துவகையினொடி', 'ஈண்டு சேனையால' என்றும் பாடம். (ருக)

[அப்பொழுது எழுந்ததூளியின் வருணனை.]

ருஉ. எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்டவிண்ணையுமறிகடலனைத்தையுமறையத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியிற்பூழி
யிட்டுச்செம்மியநிறைகுடமொத்ததிவ்வண்டம்.

(இ - ள்.) எட்டு திக்கையும் - எட்டுத்திக்குக்களையும், இரு நிலம் பரப்பையும் - பெரியபூமியின் பரந்த இடம்முழுவதையும், இமையோர் வட்டம் விண்ணையும் - தேவர்கள் வசிக்கின்ற வட்டவடிவமான மேலுலகத்தையும், மறி கடல் அனைத்தையும் - அலைகள் மடங்கப்பெற்ற எழுகடல்களையும், மறைய - மறையும்படி, (சேனைகள்செல்வதனால்), தொட்டு மேல் எழுந்து ஓங்கிய - (பூமி) தொடங்கி மேலெழுந்து பரந்த, தூளியின் - புழுதியினால்,—

இ அண்டம் - இந்த அண்டகோளமானது, பூழி இட்டு செம்மிய நிறைகுடம் ஒத்தது - புழுதியை யிட்டுநிறைத்த பூர்ணகும்பத்தைப்போன்றது; (எ று.)

புழுதியால் நிறைந்த நிறைகுடத்தைத் தூளியால் நிரம்பிய அண்டகோளத்திற்கு உவமைகூறினர்; தொடர்புயர்வுநவிற்சியை அங்கமாகக் கொண்டு வந்த தன்மைத்தற்குறிப்பேற்றவுவமையணி

'மறைத்த, வொட்டமேலெழுந்தோங்கியதூளியால்', 'அட்டி', 'செம்பியல்' என்பன பிரதிபேதம். (ருஉ)

[பெருந்திரளான சேனையின் வருணனை]

ருரு. அத்தியொப்பெனினன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பா
ரெத்திறத்தினுநடுவுகண்டிலர்முடிவெவனோ.

(இ - ள்.) அத்தி ஒப்பு எனின் -(இச்சேனைத்திரளுக்குச்) சமுத்திரங்கள் உவமையாகுமென்போமானல், அன்னவை உணர்ந்தவர் உளர் - அக்கடல்களினளவை (இவ்வளவென்று) கண்டறிந்தவரும் உள்ளார்: (இச்சேனையின் திரளையோ கண்டறிந்தவர் எவருமில்லை); இனி வித்தகர்க்கு உரைக்கல் ஆம் உவமை வேறு யாதோ - இவ்வாறனபின்பு அறிவுடையாரால் (இச்சேனைக்கு) எடுத்துக்கூறத்தகும் உவமை வேறு யாது உளது? [எதுவுமில்லையெனறபடி]; பத்து இரட்டி நல் பகல் இரவு ஒருவலர் பார்ப்பார் - இருபது நாள் நல்லபகலிலும் இரவிலும் இடைவிடாமற் பார்ப்பவராகிய ராமலக்ஷ்மணர், எ திறத்தினும் - எவ்வகையாலும், நடுவு கண்டிலர் - (இச்சேனையின்) நடுவையுங் காணாதவராயினர்: முடிவு எவனே - (இதன்) முடிவெல்லையைக் காண்பது எவ்வாறோ? (எ - று.)—ஆல் - அசை.

மகா புத்திமான்களான ராமலக்ஷ்மணர்கள் இருபதுநாள் அல்லும்பகலும் இடைவிடாமற்பார்த்தும் இச்சேனையின் நடுவெல்லையைக் காணாதவராயினர்; இவ்வாறாக, இனி இதன் முடிவெல்லையைக் காணமுடியுமோ? எனத் தண்டாபூபிகா நியாயமென்னும் கைமுதிகநியாயந் தோன்றக் கூறியிருப்பது தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணி. அத்தி - அப்தி: வடசொல்,நீர் தங்குமிடம் வித்தகர்க்கு நான்கனுருபு கருத்தாப்பொருளில்வந்தது.

'அகழ்ந்தவருளரால்', 'அளந்தறிவோருளும்', 'வித்தக க்கு மீதறைந்திடுமளவுவேறியாதோ,' 'ஒருவலன பார்த்தான்', 'காண்கிலா', 'கண்டிலன', 'முடிவுவென்னே' என்பன பிரதிபேதம். (ருரு)

[இராமபிரான் லக்ஷ்மணனைநோக்கி ஒன்றுகூறத் தொடங்குதல்]

ருச. விண்ணளிற்றீம்புனலுலகத்திசைகளின்வெற்றி
யெண்ணளிற்றனலதொப்பிலனைனதின்றவிராமன
கண்ணளிற்சிகதையிற்கல்வியின்ஞானத்திற்கருதி
யண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானுன்.

(இ - ள்.) வெற்றி எண்ணில் - சயிக்குந்திறமைபற்றி ஆலோசித்தால், தான் அலது - தானே தனக்கு உவமையாவதன்றி, விண்ணில் - மேலுலகத்திலும், தீம்புனல் உலகத்தில் - இனிய கடல்சூழ்ந்த நிலவுலகத்திலும், நாகரின் - நாகர்கள் வசிக்கின்ற பாதாளலோகத்திலும், ஒப்பு இலன் என - வேறோருபமானப்பொருளைப் பெறாதவனென்று சொல்லும்படி, நின்ற—, இராமன்—,—கண்ணின - (தன்) கண்களினாலும், சிந்தையின - மனத்தினாலும், கல்வியின - நூலறிவினாலும், ஞானத்தின் - இயற்கையறிவினாலும், கருதி - நன்றாக ஆலோசித்துப்பார்த்து, அண்ணல் தம்பியை நோக்கினன் உரை செய்வது ஆனான் - பெருமையையுடைய இளையபெருமானைப்பார்த்து (அச்சேனையைப்பற்றிக்) கூறலானான்; (எ - று.)—அதனை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

'தீம்' என்ற உரிச்சொல், உலகத்திற்கு அடைமொழி. திருமால் ஸ்ரீராமனாகத்திருவவதரித்தது இவ்வுலகத்திலே யாதலால், இவ்வடைமொழி ஏற்கும். நாகர் என்ற சொல் - தனிபாகுபெயராய்ப் பாதாளலோகத்தை யுணர்த்திற்று: நாகராவார் - படமும் வாலு முடையராய் மனிதர்போன்ற உருவமும் தெய்வத்தன்மையு முடைய ஒரு சர்ப்பசாதியார்.

'தென்கடலுலகத்தில்', 'நாகரின்வேறோர்', 'நோக்கிநின்று' என்று பாடாந்தரம். (௩௪)

[இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்; இராமபிரான் வார்த்தை]

௩௫. அடல்கொண் டோங்கிய சேனைக்குநாமுநம்மறிவா
லுடல்கண் டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடங்கொண் டோங்கியலங்கலாய்மண்ணிடைமாக்கள்
கடல்கண் டோமென்பர்யாவரேமுடிவுறக்கண்டார்.

(இ - ள்.) மடல் கொண்டு ஓங்கிய அலங்கலாய் - இதழ்கள் நிறைந்து சிறந்த மாலையை யணிந்தவனே! நாமும்—, நம் அறிவால் - நமது புத்தியினால், அடல் கொண்டு ஓங்கிய சேனைக்கு உடல் கண்டோம் - வலிமையைப் பெற்றுச்சிறந்துள்ள இவ்வானரசேனையின் சரீரத்தை [நடுவிடத்தை] ஒருவாறு பார்த்தோம்; (அல்லாமல்), இனி உளமுடிவு காணும் ஆறு உளதோ - இனி (நம்மால்) இதற்கு உள்ள முடிவெல்லையைக் கண்டறியும் வகைதான் உள்ளதோ? மண்ணிடை - இந்நிலவுலகத்தில், மாக்கள் - மனிதர்கள், கடல் கண்டோம் என்பர் - சமுத்திரத்தைப் பார்த்தோமென்று சொல்வார்கள்; (அல்லாமல்), முடிவு உற கண்டார் யாவரே - அக்கடலின் முடிவெல்லையை நன்றாகக்கண்டறிந்தவர் எவர்தாம்? (எ - று.)

சமுத்திரத்தைக் காண்பவர் அதன் மேல்தோற்றத்தைமாத்திரங் காண்பாரேயன்றி அதன்முடிவெல்லையைக் காணமாட்டார்கள்: அதுபோலவே, நாமும் இச்சேனாசமுத்திரத்தின் வடிவத்தைமாத்திரங் காண்போமேயன்றி இதன் முடிவெல்லையைக் காணமுடியா தென்பதாம்; தொடர்புமுழுதுவமையணி; வடநூலார் ப்ரதிவஸ்தூபமாலங்கார மென்பர். (பொதுத்தன்மை

பிம்பபிரதிபிம்பபாவந்தோன்றக் கூறப்படாமையால், எடுத்துக்காட்டுவமை யணியாகாது.)

'மடல்கொண்டோங்கிய வலங்கலான்' என்ற பாடம், இராமபிரா னென்று பொருள்பட்டு, மேல் ௧எ - ஆஞ்செய்யுளில்வரும் 'என்ன' என் பதற்கு எழுவாயாகத் தொடரும். (௧௫)

௧௬. ஈசன்மேனியையீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையையைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும்பிணக்கை
வாசமாலையாயாவரேமுடிவெண்ணவல்லார்.

(இ - ள்.) வாசம் மாலையாய் - வாசனையுடைய மாலையைத் தரித்தவனே! ஈசன் மேனியை - ஸர்வேசுவரனான எம்பெருமானது திருமேனியையும், ஈர் ஐந்து திசைகளை - பத்துத்திக்குக்களையும், ஐம்பெரும் பூதத்தை - பஞ்ச மகாபூதங்களையும், அறிவை - (உலகத்திலுள்ளாரது) நுண்ணறிவையும், பேசும் பேச்சினை - பேசுகின்ற பேச்சுக்களையும், சமயங்கள் பிணக்குறும் பிணக்கை - மதங்கள் ஒன்றோடொன்று மாறுபடுகின்ற மாறுபாட்டையும், ஈண்டு இ ஆசு இல் சேனையை - திரண்டுள்ள குற்றமற்ற இந்த வானரசேனை யையும், யாவரே முடிவு எண்ணவல்லார் - எவர்தாம் முடிவைக் கணக்கிட வல்லவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)

உபமேயமாகிய சேனையையும் உபமானமாகிய ஈசன்மேனி முதலியவற் றையும் ஒருங்கே ஒருபொதுத்தன்மையைக் கொண்டு முடியுமாறு கூறியது, ஒப்புமைக் கூட்டவணியின் பாற்படும்; இதனை, வடநூலார் துல்யயோகி தாலங்கார மென்பர். கடவுள் எங்குமுளனாதலால், ஸர்வவியாபியான அவ னது திருமேனியை அளவிட்டு அறியமுடியாது. பத்துத்திசைகளும் எல்லை யில்லாமற் பரவியிருத்தலால், அவற்றை இவ்வளவென்று வரையறுப்பது அசாத்தியம். ஐம்பெரும்பூதங்கள் உலகமுழுவதும் நிரம்பியிருத்தலால், அவற் றிற்கும் ஓரளவில்லை. அறிவு பலரிடத்திலும் புதிதுபுதிதாக நுட்பமாகக் காணப்படுமாதலின், அதற்கும் ஓரெல்லையில்லையாம். ஒருவர் ஒன்று பேசி னால் மற்றொருவர் அதன்மேற்பேச இவ்வாறே மேன்மேல் இடங்கொடுத்துச் செல்லுதலால், பேசும் பேச்சுக்கும் அளவில்லை. 'ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின், அன்றென்ப வாறுசமயத்தார்'', ''மதிவிகற்பாற் பிணங்குஞ்சமயம் பலபலவாக்கி'' என்றபடி மதங்கள் மிகப்பலவாயிருத்த லால், சமயங்கள் பிணக்குறும்பிணக்கும் இவ்வளவுதானென்று வரையறை செய்ய முடியாதென்க. (௧௬)

௧எ. இன்னசேனையைமுடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேனாள்பலபெயரு
முன்னிச்செய்கைமேலொருப்படலுறுவதேயுறுதி
யென்னவீரனைக்கைதொழுதிளையவனியம்பும்.

74

(இ - ள்.) இன்ன சேனையை - இந்தப்பெருஞ்சேனையை, இவண் இருந்து முடிவு உற நோக்கி - இங்கேயிருந்து முழுவதும் நன்றாகப்பார்த்து, பின்னை - அதன்பிறகு, காரியம் புரிதும் எனல் - (நமது) காரியத்தைச் செய்வோமானால், நாள் பல பெயரும் - பல நாள்கள் கழிந்துபோம்; உன்னி - (இனிச்செய்யவேண்டியதொழிலை) ஆலோசித்து, செய்கைமேல் ஒருப்படல் உறுவதே-செய்யவேண்டிய தொழிலின்மேல் மனமொருமித்தலைப் பொருந்துவதே, உறுதி - நன்மைதருவதாகும், என்ன - என்று (இராமபிரான்) கூற, இளையவன் - இளையபெருமாள், வீரனை கைதொழுது - இராமபிரானைக் கைகூப்பி வணங்கி, இயம்பும் - சொல்லத்தொடங்குவான்; (எ - று.)— அதனை அடுத்த மூன்று கவிகளிற் காண்க.

கீழ் இரண்டு செய்யுள்களை மாத்திரம் இராமபிரான் வார்த்தையாகக் கொண்டு, இச்செய்யுள் முதல் இளையபெருமாளது வார்த்தையாகக் கொள்வாருமுளர். 'பின்னர்க்காரியம் பார்த்துமேல்', 'முன்னைச்செய்கை மேலொருப்படல் முன்னுவது', 'விளம்பும்' என்பன பாடாந்தரங்கள். (௩எ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: லக்ஷ்மணன் வார்த்தை.]

௩அ. யாவதேவவுலகத்தினினிங்கிவர்க்கியற்ற
லாவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவதேவியைத்தேடுவதென்பதுசிறிதாற்
பாவந்தோற்றதுதருமமேவென்றதிப்படையால்.

(இ - ள்.) தேவ - தேவனே! ஈங்கு இவர்க்கு - இங்குள்ள இவ்வானர வீரர்கட்கு, எ உலகத்தினின் - எந்த உலகத்தில், இயற்றல் யாவது - செய்து முடிக்கவேண்டிய தொழில் எதுவோ, ஆகுவது - ஆகவேண்டிய அத்தொழில், ஆவது - எளிதாகச்செய்து முடிவதாகும்; அரியதொன்று உளது எனல் ஆமே - (இவர்கட்கு) அருமையானதொரு காரியம் உண்டென்று சொல்லலாமோ? தேவியை தேடுவது என்பது சிறிது - சீதாபிராட்டியை நாடியறிதலென்பது (இவர்கள் சாமர்த்தியத்திற்கு) அற்பமானதொரு காரியமாகும்; இ படையால் - இந்தச்சேனையினால், பாவம் தோற்றது - பாவம் தோல்வியடைந்தது; தருமமே வென்றது - தருமமே வெற்றிகொண்டது; (எ - று.)— ஆல் - ஈற்றசை.

எவ்வுலகத்தினில் எக்காரியம் செய்யவேண்டுமானாலும் இவர்க்கு எளிதில் முடியுமெனபது, முன்னிரண்டடியின் கருத்து. இவவாறான பெருஞ்சேனை நமக்குத்துணைபுரியவந்ததனால், நல்லறமுடையநாமே சயிக்கப் பாவிகளாகிய அரக்கர் தோற்பது நிச்சயமென்பது, ஈற்றடியால் விளங்கும். இறுதியடி - முரண்தொடை.

'ஆவதேவ வுலகத்தவரணைகுவரன்றே' என்றும் பாடம். (௩அ)

௩௯. தாங்கரீரெழுந்தாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருலகத்தினின்மற்றையுண்ணுயிர்க
ளாரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்குங்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்ல

(இ - ள்.) தரங்கம் நீர் எழும் தாமரை நான்முகனை - அலைகளையுடைய நீரில் முளைக்கு மியல்புள்ள தாமரைமலரில் தோன்றிய பிரமதேவன்,— தந்த - (தான்)படைத்த, வரம் கொள் பேர் உலகத்தினில் - மேன்மையைக் கொண்ட இந்தப்பெரிய உலகத்திலேயுள்ள, மற்றை மன் உயிர்கள் - நிலை பெற்ற மற்றைப்பிராணிகளை,—உயிர் படைத்து எழுந்தன உரம் கொள் மால் வரை ஒக்கும் குரங்கின மா படைக்கு - உயிர்பெற்றெழுந்தனவாகிய வலிமைகொண்ட பெருமலைகளைப்போன்ற பெரிய இந்த வானரசேனைக்கு, உறை இட - உறையிட்டுக்கணக்கிடுதற்கு, படைத்தனன் கொல் ஆம்-சிருஷ்டித்தானபோலும்; (எ - று.)

உறையிடுதலாவது - பொருள்களைக் கணக்கிடும்போது ஞாபகத்தின் பொருட்டு ஒவ்வொரு பெருந்தொகைக்கு ஒன்றாக இடுவதோர் இலக்கக் குறிப்பு. மற்றையுயிர்களின் தொகை இச்சேனையிலுள்ள வானரங்களின் தொகைக்கு உறையிடுதற்கென்றே படைக்கப்பட்டனபோலுமென அவ்வானரங்களின் வரம்பின்மையை விளக்கியவாறும். "இராமன்கை, யம்பினுத வும்படைத்தலைவ ரவரைநோக்கி னிவவரக்கர், வம்பின்முலையா யுறையிட வும்போதார் கணக்குவரம்புண்டோ" என மேல் வருவதுங் காண்க. தற்குறிப் பேற்றவணி. 'தரங்க நீரெழும்' என்ற தொடர் - தாமரைக்கு இயற்கையடைமொழி. வானரங்கள் மலைகள் உயிர்பெற்றெழுந்தாற் போலுமென இல் பொருளுவமையாகக் கூறியது - ஒவ்வொரு வானரத்தின் பெருந்தோற்றம் முதலியவற்றைக் கருதியெனக. ஒக்கும் - பெயரெச்சம்.

'மன்னுயிரெல்லாம்' என்றும் பாடம். (நக)

சம. ஈண்டுதாழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்குந்
தேண்டுவார்களை வல்லையிற்செலுத்துவதல்லா
னீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும.

(இ - ள்.) நீண்ட நூல் வலாய் - பெரிய நூல்களில் வல்லவனே! எண் திசை மருங்கும் - எட்டுதிக்குகளினிடங்களிலும், தேண்டுவார்களை - (சீதா பிராட்டியைத்) தேடுதற்கு உரியவர்களை, வல்லையின் செலுத்துவது அல்லால் - விரைவாகச் செலுத்துவதல்லாமல், இனி ஈண்டு தாழ்க்கின்றது என்- இனிமேலும் இங்கிருந்து தாமதிப்பது எதற்காக? என்றனன் இளையவன் - என்று இளையபெருமாள் கூறினான்; (உடனே), நெடியோன் - பெருமையையுடையவனாகிய இராமபிரான், பூண்ட தேரவன் காதலற்கு - அலங்கரித்த தேரையுடையவனான சூரியனது புதல்வனாகிய சுக்கிரீவனுக்கு, ஒரு மொழி புகலும் - ஒருவார்த்தை சொல்பவனானான்: (எ - று.).

தேண்டுவார் - விரித்தல்- 'ஒருமொழிபுகல்வான்' என்றும் பாடம். (சம)

தாரைகாண்படலம் முற்றிற்று.

பத்தாவது

# நாடவிட்டபடலம்.

இராமபிரானது கட்டளைப்படி சுக்கிரீவமகாராஜன் வானரப்படைத்தலைவர்களைச் சீதாபிராட்டியைத் தேடும்படி எல்லாத்திசைகளிலும் விடுத்த செய்தியையுணர்த்தும் பாகம். சுக்கிரீவமகாராஜன் இராமபிரானுக்குச் சேனையின் அளவைத் தெரிவித்து, சிற்சில வானரவீரரைத் தேர்ந்தெடுத்துத் தனித்தனி இரண்டுவெள்ளம் வானரசேனையோடு நான்குதிசைகளிலுஞ் சென்று ஒருமாதகாலத்திற்குட் சீதாபிராட்டியைத் தேடித் திரும்பிவருமாறு கட்டளையிட்டு, அநுமான் முதலியோரை நோக்கித் தென்திசையிற்சென்று தேட வேண்டிய வழிகளை யுணர்த்தியமையும், இராமபிரான் அநுமானிடத்துச் சீதையின் நல்லிலக்கணங்களையும் அவளிடத்து அடையாளமாகச் சொல்லுமாறு முன் நிகழ்ந்த சில வரலாறுகளையும் சொல்லிச் சீதாபிராட்டிக்கு நம்புதலுண்டாகுமாறு காட்டுதற்குத் தனது கணையாழி கொடுத்தமையும் முதலியன இப்படலத்திற் கூறப்படுகின்றன.

[இராமபிரான் வானரசேனையினளவைப்பற்றிச் சுக்கிரீவனை வினவுதல்.]

க. வகையு மானமு மாறெதிர்ந் தாற்றுறு
பகையு மின்றிநி றைந்துப ரந்தெழு
தகைவில் சேனைக் கவதிச மைந்ததோர்
தொகையு முண்டுகொ லோவெனச் சொல்லினான்.

(இ - ள்.) (இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி), 'வகையும் - அணிவகுப்பும், மானமும் - தேகாபிமானமும், மாறு எதிர்ந்து ஆற்றுறு பகையும் - (தமக்குள் ஒன்றற்கு ஒன்று) மாறுபாடுகொண்டு எதிர்த்துப்போர் செய்யும் பகைமையும், இன்றி - இல்லாமல், நிறைந்து பரந்து எழு - பெருங்கூட்டமாகத் திரண்டெழுந்துள்ள, தகைவு இல் சேனைக்கு - (பிறரால்) தகைதலில்லாத [தகையமுடியாத] இந்த வானரசேனைக்கு, அவதி சமைந்தது ஓர் தொகையும் - அளவாக ஏற்பட்டதொரு கணக்கும், உண்டுகொல்ஓ - உளதோ?' என சொல்லினான் - என்று வினவினான்; (எ - று.)

"பத்திரட்டி நன்பகலிர வொருவலாபார்ப்பா, னெத்திறத்தினு நடுவுகண்டிலர் முடிவெவனோ" என்றவாறு தானும் இலக்குமணனுமாக இருபதுநாள் இடைவிடாது கண்டும் அச்சேனையின் நடுவரையிலுங்கூடக் காணாதவனாயினமையால், இராமபிரான் அச்சேனைக்கெல்லாந்தலைவனாகிய சுக்கிரீவமகாராஜனை இவ்வாறு வினவலாயினனென்க. இச்சேனையிலுள்ள ஒவ்வொரு வானரமும் தேகாபிமானமின்றி இராசகாரியத்தில் தனது உயிரையுங்கொடுக்கச் சித்தமானதென்பான் 'மானமுமின்றி' என்றும், ஒன்றற்கொன்று ஒற்றுமையுள்ளதென்பான் 'மாறெதிர்ந்தாற்றுறு பகையுமின்றி' என்றுங் கூறினான். மானமின்றி - குற்றமில்லாமல் என்றும், உவமையில்லாமல் என்றும்

கூறினுமாம். 'மாறெதிர்ந்தாற்றுறு பகையுமின்றி' என்பதற்கு - (தம்மோடு) மாறுபட்டுப் போர்செய்யும் பகைவ ரில்லாமல் என்று பொருள்கூறலாகாது. பின்னே, 'தகைவில்' என வருதலால்.

'நிரந்துபரந்தெழு,' 'அமைதிசமைந்ததோர்.' 'அறுதிசமைந்ததோர்,' 'அவதிசமைத்ததோர்,' 'அலகுசமைந்ததோர' எனபன பாடாந்தரங்கள்.

இதுமுதல் இருபதுகவிகள் - பெரும்பாலும் முதற்சீர் ஒன்று மாச்சீரும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (க)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: சுக்கிரீவனது மறுமொழி.]

உ. வற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றாற்றலாளரறிவினமைந்ததோர்
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்றிதறெண்ணுமுன்சொல்லுமோ.

(இ - ள்.) (சுக்கிரீவன் இராமபிரானைநோக்கிக் கூறுவான் :—) '(இந்த வாநரசேனையின் தொகுதி), ஏற்ற வெள்ளம் எழுபதின் இற்ற(து) - பொருந்திய எழுபது வெள்ளமென்னுந் தொகையினால் முடிந்திருக்கின்றது', என்று —, ஆற்றலாளர் அறிவின் அமைந்தது ஓர் மாற்றம் உண்டு - வல்லமையுள்ளவரது அறிவினால் ஆராய்ந்து சொல்லப்பட்டதாகிய ஒரு வார்த்தை உள்ளது; அது அல்லது - அவ்வாறு சொல்லியதல்லாமல், இதற்கு - இச்சேனைக்கு, மற்றும் ஓர் தோற்றம் என்று எண்ணும் முன் சொல்லுமோ - வேறும் ஒரு தோன்றிய அளவு உள்ளதென்று சொல்லக்கூடிய தொகையும் இனிச் சொல்லப்படுமோ? (எ - று.)

இச்சேனையின் தொகுதியைப்பற்றிப் பெரியோர் எழுபது வெள்ளமென்று கூறியதை உடன்பட வேண்டுமேயன்றி, ஒருவராலும் இவ்வளவென்று கணக்கிட்டுக் கூறுவது எவ்வாற்றாலும் இயலாதென்பதாம். வெள்ளம் - ஓர் பெருந்தொகை; மிகப்பல அக்ஷௌஹிணி கொண்டது; (யானை ஒன்றும், தேர் ஒன்றும், குதிரை மூன்றும், காலாள் ஐந்தும் கொண்டது - பத்தியெனப்படும்; அப்பத்தி மூன்றுபங்கு கொண்டது - சேனாமுகம்; சேனாமுகம் மூன்று - குல்மம்; குல்மம் மூன்று - கணம்; கணம் மூன்று வாகினி; வாகினி மூன்று - பிரதனை; பிரதனை மூன்று - சமூ; சமூ மூன்று - அனீகினி; அனீகினிபத்து - அக்ஷௌஹிணி; அக்ஷௌஹிணி எட்டுப்பங்கு கொண்டது - ஏகம்; ஏகம் எட்டு - கோடி; கோடி எட்டு - சங்கம்; சங்கம் எட்டு - விந்தம்; விந்தம் எட்டு - குமுதம்; குமுதம் எட்டு பதுமம்; பதுமம் எட்டு - நாடு; நாடு எட்டு - சமுத்திரம்; அந்தச் சமுத்திரம் எட்டுப்பங்கு கொண்டது - வெள்ளம் எனக் காண்க.)

இற்ற -, இற்றது எனபதன் விகாரம். 'ஆற்றலாளர்' என்றது-மற்றையோரறிவிற்கு எட்டாத பெரு விஷயங்களையும் கையிலங்கு நெல்லிக்கனிபோலத் தமது நுண்ணுணர்வினால் உணரவல்ல தவவலிமை யுடையோரை.

'ஏற்றவெள்ள மெழுபதென்றேமறை, யாற்றலாள ரறிவமைந்தோர்' என்ற பாடத்துக்கு - வாநரத்தின் தொகை எழுபதுவெள்ளமென்று வேத நூலிலல்ல, பிரமன் தனது அறிவினால் ஆராய்ந்து சொன்னதொரு வார்த்தையுளது; முன்னாளில் ஏற்பட்ட அக்கணக்கு அல்லாமல் பிறகும் பல வாநரங்கள் பிறந்திருக்கின்ற காரணத்தினால், இப்போது இங்குள்ள இவ் வாநர சேனையைக் குறித்து அப்போதே இவ்வளவென்று தொகை சொல்லப்பட்டிருக்கமாட்டாதன்றோ? என்று பொருள் காண்க. (தோற்றம் - பிறப்பு.)

'எண்ணிமுன்சொல்வரோ,' 'தோற்றமென்னிதற்கென்று முன்சொல்லுமோ' என்பன - பிரதிபேதம். (உ)

௩. ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையு
நீறுசெய்திடுநீலனென்றோதினான்.

(இ - ள்.) அனீகருக்கு - இச்சேனையிலுள்ள வாநரர்கட்கு, ஏறு கொற்றம் தலைவர் - சிறந்த வெற்றியையுடைய தலைவர்கள், ஆறுபத்து எழு கோடி - அறுபத்தேழு கோடிக்கணக்காவர்; இவர்க்கு முன் கூறு சேனை பதி - இவ்வறுபத்தேழுகோடி படைத்தலைவர்கட்கும் முதலாகச் சொல்லப்பட்ட தலைமைச் சேனாதிபதியானவன், கொடுங் கூற்றையும் நீறு செய்திடும் நீலன் - கொடிய யமனையும் சாம்பராக்கவல்ல [மிக்க பராக்கிரமமுடைய] நீலனாவன், என்று ஓதினான் - என்று கூறினான், (சுக்கிரீவன); (எ - று.)

எழுபதுவெள்ளம் வாநரவீரர்க்கு அறுபத்தேழுகோடி படைத்தலைவருளர்; அப்படைத்தலைவர்கட்கெல்லாம் அதிபதி நீலனாவனென்பதாம். நீலன் - நீலநிறமுடைமைபற்றி, இவனுக்கு இப்பெயர்; இவன் - அக்கினியின் குமாரன். அனீகர் - சேனையிலுள்ளார்; அநீகம் - சேனைவகுப்பு; வடசொல். கொற்றம் ஏறு தலைவர் எனக் கூட்டியுரைப்பினுமாம். கூற்று - உடல் வேறு உயிர்வேறாகக் கூறுபடுத்துங் கடவுள். உம்மை உயர்வுசிறப்பு. கொல்லுதற்றொழிற் கடவுளையுங் கொல்லுந் திறமுடையவனென நீலனது சிறப்புக் கூறியவாறு.

விலங்கினத்தைச் சேர்ந்த வாநரங்களை 'அநீகர்' என்று உயர்திணையாகக் கூறுதல் இலக்கணத்திற்கு ஒக்குமோ? எனின்,—உயர்திணை அஃறிணை என்ற பகுப்பிறகுக் காரணம் முறையே அறிவின் நிறைவும் குறைவும் ஆதலால் அவ்வறிவிற் குறைவின்றி ஐம்பொறியறிவோடு பகுத்தறிவையுங்கொண்டு மனிதர்போலவே தொழில்திற மமைந்த தெய்வக் குரங்குகளை உயர்திணையின்பாற் படுத்துதல் ஒக்குமென்க. இத்தன்மை கழுகுகளாகிய ஸம்பாதி ஜடாயு என்பவர்கட்கும் பொருந்தும். தொல்காப்பியத்து மரபியலில் உரைகாரர் "மாவும் மாக்களு மையறிவினவே" என்ற சூத்திரத்தின்கீழ்க் குரங்கை விலங்கினமென்று பொதுவகையாற் கூறினவர்தாமே "மக்கள்தாமே யாறறிவுயிரே", என்ற அடுத்த சூத்திரத்தின்கீழ் "குரங்குமுதலாகிய விலங்கி

னுள் அறிவுடையன எனப்படும் மனவுணர்வுடையன உளவாயின் அவையும் ஈண்டு ஆறறிவுயிராய் அடங்கும்' என்றமை காண்க. 'ஓரோவழி அஃறிணைப் பொருள்கள் மொழியாற்பேசுவன உளவாயின், அது தெய்வத்தன்மை முத லிய விசேடத்தானன்றிப் பொருட்டன்மையா னன்மையின் அமைத்துக் கொள்வது' என்ற இலக்கண விளக்கச் சூறாவளியும் இங்குக் காணத்தக்கது. அன்றியும், இவர்கள் வடிவில் மனிதரிற் சிறிது வேறுபாட்டையே யுடையரா யிருந்தன ரென்பதையும் உணர்க.

'அனீகினிக்கு,' அனீகமொத்து,' 'செய்தடு' என்பன பிரதிபேதம். (ங)

[இராமபிரான் இனிநடக்கவேண்டுமவற்றைப்பற்றி ஆலோசிக்குமாறு சுக்கிரீவனிடங் கூறுதல் ]

ச. என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கையிராமன்விருப்பினு
னின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான்.

(இ - ள்.) என்று உரைத்த - என்று கூறிய, எரி கதிர் மைந்தனை - உஷ்ணகிரணனுன சூரியனது குமாரனாகிய சுக்கிரீவனை, வென்றி வில் கை இராமன - வெற்றியைத் தரும் வில்லையேந்திய கையையுடைய இராமபிரான், விருப்பினால் - அன்போடு (பார்த்து), 'இனி நின்று பல பேசி என்னோ - இப்பொழுது (வீணாகக் காலங்கழியுமாறு) நின்றுகொண்டு பல பேசுவதனாற் பயன் யாதோ? நெறி சென்று இழைப்பன சிந்தனை செய்க - முறைமை யான வழியிற் புகுந்து செய்யவேண்டியவற்றைப்பற்றி ஆலோசிப்பாயாக,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

'நெறிசென்றிழைப்பன சிந்தனைசெய்க' என்றதற்கு - இனி வானரர்கள் பல திசைவழிகளிலுஞ் சென்று சீதாபிராட்டியைத் தேடுவதைக்குறித்து ஆலோசனை செய்வாயாக எனக் கொள்ளினுமாம். எரிகதிர்-வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; சூரியனைக் குறிக்கும். (ச)

இதுமுதல் இருபத்தெட்டுக்கவிகள் - சுக்கிரீவன் வார்த்தை.

[இதுமுதல் ஐந்துகவிகள் சுக்கிரீவன் அநுமானைப்புகழ்ந்து பிராட் டியைத் தேடும்படி அங்கதன்முதலியோருடன் தென்திசைக்கட் செல்லுமாறு கட்டளையிடுதல்.]

ரு. அவனுமண்ணலனுமனையயலீ
புவனமூன்றுநின்றுதையிற்புக்குழ
றவனவேகத்தையோர்கிலேதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காண்டியோ.

இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அவனும் - அந்தச் சுக்கிரீவனும்,—அண்ணல் அனுமனை - பெருமையிற் சிறந்தவனான அநுமானை (நோக்கி), ஐய—! நீ—, புவனம் மூன்றும் - மூவுலகத்திலும், நின் தாதையின் - உனது தந்தையாகிய வாயுவைப் போல, புக்கு உழல் - புகுந்து திரிகின்ற, தவனம் வேகத்தை - (உனது) மிக்க வேகத்தை, ஓர்கிலை - உணரமாட்டாதவனாய், தாழ்த்தனை - வீணாகத் தாமதித்திருக்கின்றாய்; கவனம் மா குரங்கின் செயல் காண்டியோ - (நீ இவ் வாறு தாமதித்து) விரைவாகச் செல்லுந் தன்மையுள்ள பெரிய மற்றை வானரர்களுடைய செய்கையைக் காண விரும்பியிருக்கின்றாயோ? (எ-று.)— இச்செய்யுளிலுள்ள 'அவனும்' என்பது - பத்தாஞ் செய்யுளிலுள்ள 'பன்னினான்' என்பதைக் கொண்டு முடியும்.

மூவுலகத்திலுந் திரியவல்ல வல்லமை பெற்றிருந்தும் நீ இப்போது சீதையை நாடிச் செய்தி தெரிந்துவாராமல் வாளாவிருப்பது, மற்றை வானரர்கள் சீதாபிராட்டியைத் தேடும் விஷயத்தில் யாது செய்கின்றார்க ளென்று காணக் கருதிப்போலு மெனச் சுக்கிரீவன் அநுமானைநோக்கிக் கூறினனென்றவாறாம். 'தந்தையைப் போல்வான் தநயன்' என்றபடி தந்தையாகிய வாயுவைப்போலவே அவனது மகனாகிய அநுமானும் மூவுலகத்திலுந் திரியவல்ல வல்லமையுடையவ னென்க. தவனவேகத்தை என்பதற்கு - சூரியன்போன்ற வேகமுடையாய் என்றும் பொருள்கூறலாம்; அநுமான் சூரியனோடு உடன்சென்று நவவியாகரணங்களையும் மற்றும் பலகலைகளையும் ஓதினனாதலால், இவ்வாறு கூறுதல் ஏற்கும். தவனன் - தபனன்: சூரியன்; வடசொல்; தபிப்பவனென்பது அவயவப்பொருள். இப்பொருளில், 'வேகத்தை' என்பது - 'ஐ' விகுதிபெற்ற முன்னிலை யொருமைக் குறிப்பு முற்று. முன்னையபொருளில், தவன வேகம் - ஒருபொருட் பன்மொழி. அநுமான் மிக்க வரங்களைப் பெற்றது பற்றிச் சறுச்செருக்குற்று மஹர்ஷிகளுடைய ஆச்சிரமங்களிற் புகுந்து யாகபாத்திரங்களை யுடைத்தல் முதலிய பல துன்பங்களை யிழைத்து வந்ததனால், அம்முனிவர்கள் 'இவனுக்குத் தன் பலம் தனக்குத் தெரியாமற் போகக்கடவது' என்று சபித்த வரலாற்றை உட்கொண்டு 'புவன மூன்றும் புக்குழல் தவன வேகத்தை யோர்கிலை தாழ்த்தனை' என்றானெனலாம். இனி, ஈற்றடிக்கு - (உனது பலம் உனக்குத் தெரியாமையினால்) மூவுலகங்களிலும் புக்குத் திரிய வல்ல உனது தொழிலைச் சாதாரணமான ஓர் குரங்கினசெயலாகக் கருதினாயோ? எனக் கூறினுமாம்.

புவன மூன்று - சுவர்க்க மத்திய பாதாளங்கள். உம்மை - இனைத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. ஓர்கிலை - முற்றெச்சம். காண்டி - முன்னிலை யொருமை யெதிர்காலமுற்று; இ - காலங்காட்டும் விகுதி; ட் - எழுத்துப் பேறு.

'உன்றாதை,' 'காட்டியோ' என்பன பிரதிபேதம். (௫)

கூ. ஏகியேந்திழைதன்னையிருந்துழி
நாகநாடுகநானிலநாடுக
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால்.

(இ - ள்.) (நீ),—ஏகி - இங்கிருந்து சென்று, ஏந்து இழை இருந்த உழி தன்னை - தரித்த ஆபரணங்களை யுடையவளாகிய சீதை இருந்த இடத்தை, நாகம் நாடுக - நாகர்கள் வசிக்கின்ற இடமாகிய பாதாளலோகத்தில் தேடக் கடவாய்; நானிலம் நாடுக - பூமியிலுந் தேடக்கடவாய்; போகபூமி பொருந்திட வல்ல நின் வேகம் - போகபூமியாகிய சுவர்க்கலோகத்திற் சேரவல்ல உனது வேகமும், ஈண்டு வெளிப்பட வேண்டும் - இப்போது வெளியாக வேண்டும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

நீ சுவர்க்க மத்திய பாதாளங்களாகிய மூவுலகங்களிலுஞ் சென்று சீதா பிராட்டியாரைத் தேடவேண்டு மென்று சுக்கிரீவன் அநுமானுக்குக் கூறின னென்க. நாகம் - நாகர்கள் வசிக்கின்ற இடம்; நாகராவார் - படமும் வாலு முடையராய், மனிதப்பிறப்பும் தெய்வத்தன்மையு முள்ளவராகிய சர்ப்பசாதி யார். நானிலம் - நான்காகிய நிலங்களை யுடையதெனப் பூமிக்குக் காரணப் பெயர்; நால்வகை நிலங்கள் - முல்லை, குறிஞ்சி, மருதம் நெய்தல் என்பன. (முல்லை - காடும், காடுசார்ந்த இடமும்; குறிஞ்சி - மலையும், மலைசார்ந்த இடமும்; மருதம் - நாடும், நாடுசார்ந்த இடமும்; நெய்தல் - கடலும், கடல் சார்ந்த இடமும்.) மற்றொன்றாகிய பாலை நிலம் பிராணிசஞ்சாரத்திற்கு உரியதனறென்று இங்கே விலக்கப்பட்டது; அது நீரும் நிழலு மில்லாத கொடுநிலம். பாலைக்குத் தனியே நிலமில்லை யென்பதும், நால்வகை நிலங்க ளும் தத்தம் தன்மை கெட்ட விடத்தே பாலையா மென்பதும், சில ஆசிரியர் கொள்கை. போக பூமி - புண்ணியப்பயனாக இன்பம் நுகர்தற்கு உரிய இடம்; எனவே, சுவர்க்கலோகமாம். பின் மூன்றடிகட்கு - சுவர்க்கத்தில் தேடுக; பூமியிலும் தேடுக; போக பூமியிலும் சேரவல்ல நினது வேகம் இப் போது வெளிப்படவேண்டு மெனக் கூறி, பாதாளலோகத்தை உபலட்சணத் தாற் கொள்ளலுமாம்; நாகம் - சுவர்க்கலோகம். போகபூமி - பாதாள லோகமுமாம்.

ஏந்திழை இருந்துழிதன்னை என உருபுமாறுக. இருந்துழி - தொகுத் தல். இரண்டாமடி - முற்றுமோனை.

'ஏந்திழையேழையிருந்திடம்,' 'இருந்துழீஇ,' 'நாகமாடுளநானிலமா டுள,' 'மாகவானகநாடுகவல்லைநின்,' 'போகபூமி புகுந்திடவல்லநின' என் பன பாடாந்தரம். (கூ)

எ. தென்றிசைக்கணிராவணன்சேணக
ரென்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ.

(இ - ள்.) 'இராவணன் சேண் நகர் - இராவணனது நீண்ட [பெரிய] இலங்காநகரம், தென்திசைக்கண் - தெற்குத்திசையில் (உள்ளது),' என்று —, என் அறிவு இன்னணம் இசைக்கின்றது - எனது அறிவு இவ்வாறுசொல்லுகின்றது [என் அறிவில் தோன்றுகின்றது]; மாருதி - அநுமானே! இனி - இப்போது, வல் திசைக்கு - வலிய அந்தத்திசையில் (சென்று), வென்று - (அங்கு உள்ள அரக்கரை) ஜயித்து, இசைக்கு - கீர்த்திபெறுதற்கு, உரியார் - உரியவர், நீ அலால் பிறர் வேண்டுமோ - நீயொருவனே யல்லாமல் மற்றொருத்தரும் வேண்டுமோ? (எ - று)

நீயொருவனே அந்தத்தென்திசையிற்சென்று இராவணனது இலங்காபுரியிலுள்ள அரக்கரை வென்று சீதையின் செய்தியை உணர்ந்து வந்து சொல்லிக் கீர்த்திபெறுதற்கு உரியா யென்றவாறும்.

'இன்னணம் - இன்னவண்ணம் என்பதன் மரூஉ. வல்திசை - அங்குள்ள அரக்கரின் வன்மையைத் திசையின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு. திசைக்கு - உருபுமயக்கம். மாருதி - அண்மைவிளி. வேண்டும் - ஐம்பால் மூவிடத்துக்கும் பொதுவாகிய ஒருவகைமுற்று.

'என்றிசைக்கின்றவென்னறிவின்னலம்' என்று பிரதிபேதம். (எ)

அ. வள்ளறேவியைவஞ்சித்துவெளவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோ
ருள்ளமும்மெனக்குண்டெனவுன்னுவாய்.

(இ - ள்.) 'தெள்ளியோய் - தெளிந்த அறிவுடையவனே! வள்ளல் தேவியை வஞ்சித்து வெளவிய கள்ளம் வாள் அரக்கன செல கண்டது அது - வரையாது கொடுக்குந்தன்மையுள்ள இராமபிரானது மனைவியாகிய சீதாபிராட்டியை வஞ்சனைசெய்து எடுத்துச்சென்ற கள்ளத்தன்மையையுடைய கொடிய ராக்ஷஸனாகிய இராவணனை போகக் கண்டதான அந்ததிக்கு, தென்திசை - தெற்குத்திக்காகும், என்பது ஓர் உள்ளமும் - என்பதாகிய ஓர் எண்ணமும், எனக்கு உண்டு —, என உன்னுவாய் - என்று நீ கருதுவாயாக.

"தெனதிசைக்கணிராவணன்சேணக, ரென்றிசைக்கின்ற தென்னறிவின்னணம்" என்று கீழ்க்கூறியதற்கு, இச்செய்யுளினாற் காரணங்காட்டியவாறும். வள்ளல் - வண்மையென்ற பகுதியி னடியாப் பிறந்து 'அல்' விகுதிபெற்ற பெயர்; வண்மை - வரையாதுகொடுக்குந்தன்மை' தனக்கு உரித்தாகிய இராச்சியத்தையும் தம்பியாகியபரதனுக்குக் கொடுக்கவேண்டி இளையதாயின் சொற்படியே காட்டிற்குச்சென்றதனால், இராமபிரானை 'வள்ளல்' என்றான. தேவீ - விளங்குபவள் அல்லது விளக்கத்தைச் செய்பவளென்று அவயவப் பொருள்படும் வடசொல். வாள் அரக்கன் - (சிவபிரானாலளிக்கப்பட்ட சந்திரஹாஸமென்ற) வாளாயுதத்தை யுடைய அரக்கனெனினுமாம். உள்ளமுமமெனக்கு, மகரவொற்று - விரித்தல்.

'தெள்ளியோயன்று' என்றும் பாடம். (அ)

௯. தாரைமைந்தனுஞ்சாமபனுந்தாமுதல்
வீரர்யாவருமேமபடுமேனமையாற்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால்.

(இ - ள்) தாரை மைந்தனும் - தாரையின்குமாரனாகிய அங்கதனும், சாம்பனும் - ஜாம்பவானும், முதல் - முதலாகிய, வீரர் யாவரும் - (அவர்களைச் சேர்ந்த) வீராபலரும், மேம்படும மேன்மையால் - மிககபெருமையோடு, (சீதாபிராட்டியைததேடும்பொருட்டு), நின்னொடும் சேர்க - (துணையாக) உன்னுடன வருக, வெள்ளம் இரண்டொடும் - இரண்டு வெள்ளமென்னுந் தொகையுடனே, திண் திறல் சேனைகள - மிக்க வலிமையுள்ள சேனைகள், பெற்றியால் - பெருமையோடு, போக - (உங்கட்குத் துணையாகப்) புறப்படட்டும், (எனககூறிவிட்டு), (எ - று.)— தாம் - அசை.

நீ அங்கதன் ஜாம்பவான முதலானோரோடும இரண்டுவெள்ளம் வாநர சேனையோடும் புறப்பட்டுச் சீதாபிராட்டியைத்தேடுமாறு தென்திசைககுச் செல்வாயெனச் சுககிரீவன அநுமானுக்குக் கட்டளையிட்டன னென்க.

சுச்கிரீவன் கிஷ்கிந்தையில் வாநரராஜனானபோது, இவன் அங்கு இளவாசனாக்கப்பட்டான. சாம்பன - ஜாம்பவான் என்ற வடமொழியினசிதைவு; இவன முன்பொருகால் பிரமன் கொட்டாவி விட்டபோது அவனது வாயினின்று அவனது அமசமாய்க கரடிவடிவமாகத் தோன்றியவன்; கரடிகளுக்கு அரசன; இவன திருமாலின திரிவிககிரமாவதாரகாலத்தில் உலகமுழுதும் நிரம்பிய அப்பெருமானைப் பதினெட்டுமுறை பிரதட்சிணஞ்செய்தனன. திண்திறல் - ஒருபொருட் பன்மொழி.

'சாம்பனு நீலனும்,' 'மேம்படு மேன்மையார்,' 'சேனையும்' என்றும் பாடம். (௯)

[தென்திசை தவிர மற்றைமூன்று திசைகளிலும் இடபன்முதலியோரைச் செல்லுமாறு சுக்கிரீவன் ஏவுதல்.]

௧௦. குடதிசைககணிடபன்குபேரன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவ
னிடதிசைக்கண்வினதன்விறற்றரு
படையொடுற்றுப்படர்கெனப்பன்னினான்.

(இ - ள்.) 'குடதிசைக்கண் - மேற்குத்திக்கில், இடபன் - ருஷபனும், குபேரன் வாழ் வட திசைக்கண் - (திக்குப்பாலகனாகிய) குபேரன் வாழ்கின்ற வடக்குத்திககில், சதவலி - சதவலியும், வாசவன இடம் திசைக்கண் - இந்திரனுக்கு உரிய இடமாகிய கிழக்குத்திக்கில், வினதன் - விநதனும், விறல் தரு புடையொடு உற்று படர்க - வலிமைபொருந்திய (இரண்டு வெள்ளம்) சேனையோடு பொருந்திச்செல்லக்கடவர்,' என பன்னினான் என்று கூறினான்; (எ - று.)

இடபன் - ருஷபனென்ற வடசொல்லின் விகாரம்; காளைபோன்றவனென்பது பொருள். குபேரன் என்ற வடசொல் - குச்சிதமான சரீரமுடையவன் என்று காரணப்பொருள்படும்; இமயமலைத்தடத்துச் சென்று இவன் தவஞ்செய்கையில் அங்கே எழுந்தருளிய சிவபிரானது பக்கத்திலுள்ள பார்வதியைப் பார்த்ததனாற் கண்பசந்தமைபற்றி, இவனுக்கு இப்பெயர் அமைந்தது; இதுபற்றி, ஏகாக்ஷிபிங்கள னென்ற பெயரும் உண்டு. இவன் - விச்சிரவசு என்னும் முனிவர்க்கு மூத்தமனைவியாகிய பாரத்துவாஜ புத்திரியினிடம் பிறந்த குமாரன்; இம்முனிவருக்கு இளையமனைவியாகிய கேகசியினிடம் பிறந்த குமாரன் - இராவணன். பெருந்தவஞ்செய்து பிரமனருளால் வடதிசைப்பாலகனும், தனாதிபதியு மானவன் முதலி. முகத்தில் நூறுமடிப்புக்களையுடையவ னெனக் காரணப்பொருளபடும். வாஸவன் - வசுக்களுக்குத் தலைவன்; வஸு - அஷ்டவசுக்களும், செல்வமும். விநதன் - மிகவும் வணக்கமுடையவன் என்பது அவயவப்பொருள்.

குடக்கு + திசை = குடதிசை; நிலைமொழியாகிய திசைப்பெயரின் ஈற்று உயிர்மெய்யும் ககரவொற்றுங் கெட்டது; வடதிசை யென்பதும் இவ்வாறே. விறல் - வெற்றியுமாம். படர்கென - தொகுத்தல். எதுகைநயம்பற்றி, 'இடதிசை' என இயல்பாயிற்று. 'மிடறிசை' என்ற பாடமே மோனைத் தொடைக்கு ஏற்கும்; மிடல் - வலிமை.

'குடதிசைக்கட்சுடேணன்', 'படருநெறியென' என்று பாடாந்தரம்.

[வாநரர்களை நோக்கிய சுக்கிரீவாஜ்ஞை.]

கக. வெற்றிவானரவெள்ளமிரண்டொடுஞ்
சுற்றியோடிதருவியொருமதி
முற்றுறுதமுன்முறறுதிரிவ்விடைக்
கொற்றவாகையினீரெனக்கூறினான்.

(இ - ள்.) (சுக்கிரீவன் இடபன்முதலிய வாநரர்களை நோக்கி), 'கொற்றம வாகையினீர் - வெற்றிக்கு உரிய வாகைமாலையை யணிதற்கு உரியவர்களே! (நீவிர்), வெற்றி வானரம் வெள்ளம் இரண்டொடும - ஜயிக்குந்தனமையுள்ள இரண்டுவெள்ளம் வாநரசேனையோடும், சுற்றி ஓடி தருவி - (பலவிடங்களிலும) அலைந்து திரிந்து (சீதாபிராட்டியைத) தேடி, ஒரு மதி முற்றுறுதமுன் - ஒருமாதம் முடிவதறகுள்ளே, இ இடை முற்றுதிர் - இங்குத் திருமபிவந்து சேருங்கள்,' என கூறினான்—; (எ - று.)

நீங்கள் தனித்தனி இரண்டுவெள்ளம் வாநரசேனையோடு நான் உங்கட்குக் குறித்த திசைகளிற சென்று சீதாபிராட்டியைத்தேடி ஒருமாதகாலத்திறகுள் இங்குவந்து சேரவேணடு மென்று சுக்கிரீவன கட்டளையிட்டனனென்க. 'வாகையினீர்' என்பதை முற்றெச்சமாகக்கொண்டு, வெற்றியையுடையவர்களாய் என்றுங் கூறலாம். மதி - சந்திரன; அமாவாசைக்கு அமாவாசை ஒருமாஸமென்று சந்திரமானரீதியாய்க் கணக்கிடுதல் பற்றி, மதியென்று மாதத்திறகுப் பெயர் வழங்கலாயிற்று; இலக்கணை. வாகையென்னும் மரத்தின்பெயர் - அதன்மலர்களா லாகிய மாலைக்கு ஆகுபெயர்.

இது, வெற்றிக்கு அடையாளமாகத் தரிக்கப்படுவது; போர்க்குச் செல்லும் பொழுது வஞ்சிமாலையையும், போர் செய்யும்பொழுது தும்பைமாலையையும், போரில் வென்றபொழுது வாகைமாலையையும் வீரர்கள் தரிப்பதாகக் கூறுவது, மரபு 'முற்றுருத்துமுன முறையுதிர்' என்றது முண்தோண்டையின் பாற்படும். (கக)

[இதுமுதல் இருபத்தோரு கவிகள் - ஒருதொடர்; சுக்கிரீவன் தென்திசையிற் செல்லும் வாநரர்களைநோக்கிச் சீதையைத் தேடவேண்டிய இடங்களைக் குறிப்பித்தல்]

கஉ. ஈண்டுநின்றெழுந்தீரைந்துநூறெழி
றாண்டுசோதிக்கொடுமுடிதோன்றலா
னீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டுமவிந்தமலையினைமேவுவீர்.

(இ - ள்) (சுக்கிரீவன் தென்திசையிற் செல்லும் வாநரர்களைநோக்கிக் கூறுவான்):—(நீங்கள்), ஈண்டு நின்று எழுந்து - இங்கிருந்து புறப்பட்டு,— எழில் தூண்டு சோதி ஈர் ஐந்து நூறு கொடு முடி தோன்றலால் - அழகு மிகுந்த ஒளிவீசுகின்ற ஆயிரஞ்சிகரங்கள் காணப்படுதலால், நீண்ட நேமி கொல் ஆம் என - பெருவடிவுகொண்ட திருமாலதானோ! என்று, நேர் தொழ வேண்டும் - எதிர்சென்று தொழுதற்கு உரிய, விந்தமலையினை - விந்திய பருவதத்தை, மேவுவீர் - (முதலிற்சென்று) சேர்வீராக; (எ - று.)

ஆயிரங்கொடுமுடிகளை யுடைய விந்தியமலைக்கு, ஆயிரம் முடிகளை யுடைய திருமாலை உவமை கூறினார். ("தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய்," "கணணிமுடிசசிரமாயிரம், * * * திண்டிறலாழியரங்கருக்கே" என்பன இங்குக் காணத்தக்கன.) நேமி - வடசொல்; சக்கராயுதம்; அதனை யுடையவனுக்கு ஆகுபெயர்; நீண்டநேமி என்பதை, அடையடுத்தவாகுபெயரெனக் கொள்க; அன்மொழித் தொகையென்னலாகாது; "ஐந்தொகை மொழிமேற் பிறதொக லன்மொழி" என்றபடி யாதாயினும் ஒருதொகையின்மேற் பிறத்தல் அன்மொழித்தொகைக்கு இலக்கணமாதலும், நீண்ட நேமியென்பது பெயரெச்சத் தொகாநிலைத் தொடராதலும் காண்க. நீண்ட - (திரிவிக்கிரமாவதார காலத்திலும் விசுவரூபத்திலும் விராட்ஸ்வரூபத்திலும்) பெரு வடிவுகொண்ட என்பது பொருள். "நீரிடைக்கண்டுயி னெடிய நேமியும்" என்ற விடத்தும் 'நேமி' என்பது - இப்பொருளில் வருதல் காண்க. நீண்டநேமி யென்பதற்கு - ஆயிரம் அரங்களையுடைய (சுதரிசநமென்னுஞ்) சக்கராயுதமெனப்பாருமுளர். திருமாலையேயன்றி அவனையொத்த பொருள்களைக் கண்டவிடத்தும் கைகூப்பித்தொழுதல், வரம்புகடந்த பக்தியின் செயலாமென்க.

விந்தம் - விந்த்யம்; இந்தப் பரதகண்டத்திலுள்ள குலகிரியேழனுள் ஒன்று; (மற்றவை - கைலை, இமயம், மந்தரம், நிடதம், ஹேமகூடம், நீலகிரி என்பன. கந்தமாதநமுங்கூட்டி எட்டெனப்பாருமுளர்.) இது, பரதகண

டத்தின் நடுவி லிருக்கின்றது. விந்ப மென்ற வடசொல்லுக்கு -(சூரியன் முதலியோரது சஞ்சாரத்தைத்) தகைவது என்றும், (அகஸ்திய முனிவரால்) அடக்கப்பட்டது என றுங் காரணப் பொருள் கூறுவா; விந்தியமலை - இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. சோதி=ஜ்யோதிஸ்; வடமொழித் திரிபு.

முதனூலாகிய வான்மீகி ராமாயணத்தில் நான்கு திசையிலுஞ் செல் லும் வானரர்களை நோக்கி முறையே தேடவேண்டிய இடங்களையும் வழிகளை யும் சுக்கிரீவன் கூறியதாகச் சொல்லியிருக்கவும், கம்பா தென்திசையிற் செல் லும் வானரர்களை மாத்திரம் நோக்கித் தேடவேண்டிய இடங்களையும் வழி களையும் கூறியதாகச் சொல்லியிருப்பது, "பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி" என்னும் வழிநூலிலக்கண விதி பற்றியென்க; இதுபற்றியே, கூறிய வழிகளிலும் பல மாறுபாடுகள் காணப்படுகின்றன.

மதங்காச்சிரமத்தினின்று தென்திசையிற் செல்லும் வானரரை விந்திய மலைக்கு முதலிற்செல்லுமாறு கூறியது எங்ஙனம் பொருந்து மெனின்,— இங்கு 'தென்திசை' என்பது - இவா இருந்த இடத்திற்குத் தென்திசை யன்று; பூமிக்கு மத்தி இமய மாதலால், அவ்விமயத்திற்குத் தென்திசை யெனக் கொள்க: கொள்ளவே, முரணுதல் இன்றும் என்பர்.

'ஈண்டுநின்றிறந்து' என்று பிரதிபேதம். (கஉ)

கரு. தேடியவ்வரைதீர்ந்தபின்றேவரு
மாடுகின்றதறுபதமைந்திணைப்
பாடுகின்றதுபன்மணியாலிரு
ளோடுகின்றநருமதையுன்னுவீர்.

(இ - ள்.) அ வரை தேடி தீர்ந்த பின - அவ்விந்தியமலையில் (சீதா பிராட்டியைத்) தேடித் தீர்ந்தபிறகு,—தேவரும் ஆடுகின்றது - தேவர்களும் வந்து நீராடப்பெறுகின்றதும், அறுபதம ஐந்திணை பாடுகின்றது - (நீரப் பெருக்கினால் அடித்துக்கொண்டு வரப்பெற்ற மலர்களிலுள்ள தேனைப் பருகி அம்மதக்களிப்பால்) வண்டுகள் பஞ்சமமென்னும் ஸ்வரத்தைப் பாடப்பெறு கின்றதுமான, பல் மணியால் இருள ஓடுகின்ற நருமதை - (அங்குள்ள) பல வகை யிரத்தினங்களின் ஒளியால் இருள் இருந்தவிடந் தெரியாது ஓடுதற்குக் காரணமான நருமதையாற்றை, உன்னுவீா - போய்ச்சேருங்கள்; (எ - று.)

நருமதை என்பது - கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிச் செல்லும் ஓர் யாறு. தேவர்கள் நீராடுதலால் மிக்க தூய்மையும், வண்டுகள இசைபாடுதலாற் சிறப்பும், மணிகளால் இருள ஓடுகின்றதனால் வளனும் அந்நருமதைக்கு உள் ளன வென்பது பெறப்படும்.

வரையென்னுங் கணுவின்பெயர் - அதனையுடைய மூங்கிலுக்குச் சினை யாகு பெயரும், பிறகு அம்மூங்கில் விளையும் மலைக்குத் தானியாகு பெயரு மாதலால், இருமடியாகுபெயராம். அறுபதம் - ஆறுகால்களையுடையது என வண்டுக்குப் பண்புத்தொகை யன்மொழி; 'ஷட்பதம்' என்ற வடமொழிப் பெயரின் பொருள்கொண்டது, இது. ஐந்து=பஞ்சமம்; ஷட்ஜம், ரிஷபம்,

காந்தாரம், மத்தியமம, பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஸப்தஸ்வரங்களுள் இது ஐந்தாவதாதல் காண்க. இது மயிலுக்கு உரிய தொனியாம். 'அறுபத மைந்தினைப் பாடுகின்றது' என்றவிடத்துச் சொல்நயங் கவனிக்கத் தக்கது.

'தேடியம்மலை,' 'தேடியவ்வழி', 'பன்மணிபாயிருள், நாடுகின்ற நறுமதை நாடுவீர்' என்று சில பிரதிகள். (கரு)

கசு. வாமமேகலைவானவர்மங்கையர்
காமவூசற்களிபிசைக்கள்ளினாற்
றூமமேனியசுணந்துயில்வுறு
மேமகூடமெனுமலையெய்துவீர்.

(இ - ள்.) (அப்பால்),—வாமம் மேகலை வானவர் மங்கையர் - அழகிய மேகலையென்னும் அரைநூல் மாலையையணிந்த தேவமாதர்களுடைய, காமம் ஊசல் களி இசை கள்ளினால் - விருப்பத்தோடு ஊசலாடுகையில் களிப் பினாற் பாடுகின்ற இசையாகிய மதுவினால், தூமம் மேனி அசுணம் துயில் வுறும் - புகைபோன்ற உடல்நிறத்தையுடைய அசுணப்பறவைகள் தூங்கு தற்கு இடமான, ஏமகூடம் எனும் மலை - ஹேமகூட மென்னும் பருவதத் தை, எய்துவீர் - போய்ச்சேருங்கள்; (எ - று.)

ஹேமகூடமலையில் தேவமாதர்கள் வந்து ஊசலாடும்போது களிப்பி னாற் பாடுகின்ற இசைப்பாடலினால் அசுணப்பறவை துயிலு மென்க. துயிலு மாறு மயக்கத்தை யுண்டாக்கியதனால், இசைப்பாடலைக் கள்ளாக உருவகஞ் செய்தனர். அசுணம் - இசையறி விலங்கு; இது, குறிஞ்சிநிலப் பறவை; இதனை ஒருவகை மிருகமென்றும், மானில் ஒருவகையென்றுங் கூறுவர். மேகலை - எண்கோவையிடையணி; "எண்கோவை மேகலை' என்றது காண்க. மங்கையா - மங்கைப்பருவ முடையவா; அப்பருவத்துக்கு வய தெல்லை - பன்னிரண்டு முதற் பதின்மூன்றளவும். இச்சொல இங்குப் பரு வப்பெய ராகாமல், மகளிரென்ற மாத்திரமாய் நின்றது. ஹேமகூடம் - பொன்மயமான சிகரங்களை யுடையது.

'வானரமங்கையா' என்ற பாடம்—வான் அரமங்கையர் என்று பிரிந்து, வானத்திலுள்ள தேவமங்கையரென்று பொருள்படும்; அரமங்கையர் - அமர மங்கையா என்பதன் மரூஉ. 'காமப்பூசல்' என்று பிரதிபேதம். (கசு)

கரு. கொய்தினம்மலைநீங்கிநுமரொடும்
பொய்கையின்கரைபின்படப்போதிராற்
செய்யபெண்ணைக்கரியபெண்ணைச்சில
வைகறேறடிக்கடிதுவழிக்கொள்வீர்.

(இ - ள்.) கொய்தின் - விரைவாக, அ மலை நீங்கி - அந்த ஹேமகூட பருவதத்தை விட்டுநீங்கி, நுமரொடும் - உங்களைச்சேர்ந்த வானரர்களுடனே, பொய்கையின் கரை பின்பட போதிர் - (அங்குள்ள) பொய்கையின் கரை

பிற்படும்படி அதைவிட்டு அப்பாற் சென்றவர்களாய்,—கரியபெண்ணை - கரு நிறமான [தெளிவான நீர் நிறைந்த] பெண்ணை நதியினிடங்களில், செய்ய பெண்ணை - (மகளிர்க்கு உரிய) நற்குணங்களையுடைய சீதாபிராட்டியை, சிலவைகல் தேடி - சிலநாள் தேடிப்பார்த்து, கடிது வழிக்கொளவீர் - (விரைவாக) அப்புறமுள்ள வழியிற் செல்லுங்கள்; (எ - று.)

நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என மகடூஉக்குணம் நான்காம்; அவற்றுள், நாணுவது - செய்யத்தகாதவற்றின்கண் உள்ள மொடுங்குதல்; மடம் - எல்லா மறிந்தும் அறியாதுபோ லிருத்தல்; அச்சம் - புதியதைக் கண்டவிடத்து அஞ்சுதல்; பயிர்ப்பு - கணவனல்லாத பிற ஆடவரது ஆடைமுதலியன தம் மேற் பட்டவிடத்து அருவருத்தல். பொய்கை - மானிடராக்காத நீர்நிலை; பொய்கையென்றே அதற்குப்பெய ரென்பாரும் உளர். பெண்ணை = வட பெண்ணை; உத்தரபினாகினி. செய்யபெண்ணைக் கரியபெண்ணை - தொடை முரண்; வைகல் - கழியுந்தன்மையதென நாளுக்குக் காரணப்பெயர். தொய்து, கடிது - விரைவுப்பொருளில் வந்த வினையுரிகள். செய்யபெண்ணை என்ப தற்கு - அழகிய பெண்ணைநதியில் எனறும், கரிய பெண்ணை என்பதற்கு - கருநிறமான பனந்தோப்புக்களில் என்றும் பொருளுரைப்பாரு முளர். கரிய - பெருமைபெற்ற எனினுமாம். ஆல் - ஈற்றசை.

'நீஇ நுகராவெனும்' என்ற பாடத்திற்கு - அவ்வேமகூடத்தினின்று, நிஇ - நீங்கி, நுகரா எனும் - (பிறர் ஒருவராலும்) அனுபவிக்கப்படாததென்று சொல்லப்படுகின்ற, பொய்கையென்று பொருள் காண்க. (௪௫)

௪௬. தாங்குவாரகிறருவளர்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமுமெல்லென
நீங்கிநாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால்

(இ - ள்.) தாங்கு வார் அகில் - (நறுமணத்தைத்) தாங்கிய நீண்ட அகில் மரங்களும், வளர் சந்தனம் தரு-ஓங்கிவளர்ந்துள்ள சந்தனமரங்களும், (ஆகிய இவற்றை), வீங்கு வேலி - பெரிய வேலியாகக்கொண்ட, விதர்ப்பமும் - விதர்ப்ப தேசத்தையும், மெல்லென நீங்கி - மெதுவாகக்கடந்து,—நெடியன நாடு பின்பட - நீண்டபலநாடுகளும் (கடந்துசென்றதனாற்) பின்புறத் தனவாகும்படி, தேங்கு வார் புனல் தண்டகம் சேர்திர் - நிறைந்த மிக்க நீரை யுடைய தண்டகாரணியத்தைச் சேருங்கள்; (எ - று)—ஆல் - ஈற்றசை.

விதர்ப்பநாட்டைச்சுற்றி வேலியாக அகில்மரங்களும் சந்தன மரங்களும் நிறைந்திருக்கு மென்க. மிக்க இனிமையுடைமையாற் கடத்தற்கருமைபற்றி, 'விதர்ப்பமுமெல்லென நீங்கி' என்றார்.

**தண்டகமென்ற பெயர்க்காரணம்** :—சூரியகுலதது மநுசக்கரவர்த்தியி னது குமாரனென இக்ஷ்வாகு மகாராசனுடைய மக்கள் நூற்றுவருட் கடைப் பட்டவனும், மூடனும் மூர்க்கனும் அஷ்டனுமாய்த் தண்டனைக்கு உரியவ னுவ னென்ற காரணங்கருதி எதிர்கால வுணர்ச்சியையுடைய தந்தையா

தண்டனென்று பெயரிடப் பட்டவனும், தண்டகனென்று வழங்கப்படுபவனு மாகிய ஓர் அரசன், விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன் ஆட்சிக்கு உரியதாகக்கொண்டு மதுமந்தமென்கிற பட்டணத்தை யமைத்து அங்கு அரசாண்டுவருகையில், ஒருநாள், தனது புரோகிதனான சுக்கிராசாரியனது ஆச்சிரமத்தினுட் சென்று அவன்மகளாகிய அரஜையென்பவளைக் காதலித்து வலியக்கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப்பார்க்கவன் சினந்து, 'எழுநாள்களில் அவன் குடும்பத்தோடும் சேனை முதலிய பரிவாரத்தோடும் அழிந்துபோக, அவனது நாடு மண் மழையால் யாதொருஜீவஜந்துவுமில்லாமற் பாழாகக்கடவது' என்று சபிக்க, அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் எழாநாள் மண்மழையால் அழிந்து போய்விட, அவவிடம் பின்பு காடாகித் தண்டகாரணியமெனப் பெயர்பெற்ற தென்பதாம்; அந்தக்காடு பிறகு பலகாலங்கழித்து நீர்முதலியன நிரம்பி முனிவர்கள் வசித்தற்கு ஏற்ற இடமாயிற்று.

'தாங்குமாதலை சந்தனஞ்சண்பகம்,' 'தாங்குவாரிற்றருவளர்சந்தனம்,' 'தாங்குமாரகிற்றருவளர்சந்தனம்' என்பன பிரதிபேதம். (௧௬)

௧௭. பண்டகத்தியனைவைகியதாபகா
தண்டகத்தது தாபதர் தம்மையுட்
கண்டகத்துயர் தீர்வது காண்டிரான்
முண்டகத்துறையென்றொருமொய்ம்பொழில்.

(இ - ள்) (அப்பால்), முண்டகத்துறை என்ற ஒரு மொய் பொழில் - முண்டகத்துறையென்று கூறப்படுகின்ற (மரங்கள்) அடர்ந்த ஒரு சோலையானது,—பண்டு அகத்தியனை வைகியது ஆபகா தண்டகத்தது - பழமையாகிய அகஸ்தியமுனிவர் வசிப்பதாகக் கூறப்படுகின்ற தண்டகாரணியத்திலுள்ளது; தாபதர் தம்மை உள் கண்டு அகம் துயர் தீர்வது - தவஞ் செய்யும் முனிவர்களைத் தன்னிடத்துக் காணப்பெறுவதால் (காண்பவர்கள் தமது) மனத்திலுள்ள துயர் நீங்குதற்குக் காரணமாயிருப்பது; (அதனை), காண்டிர் - சென்று காணுங்கள்; (எ - று.)—ஆல்- ஈற்றசை.

அகஸ்தியமுனிவர்வசிக்கின்ற தண்டகாரணியத்திலுள்ளதும், தரிசித்த மாத்திரத்தில் கண்டவர்களின் மனத்துயரை மாற்றும் மகிமை வாய்ந்த முனிவர்கள் நிரம்பியிருக்கப்பெற்றதுமாகிய முண்டகத்துறையைச் சென்று காணுங்க ளென்பதாம். 'பண்டு' என்னும் பழமைகுறிக்கும் இடைச் சொல், அகத்தியற்கு அடைமொழி; இச்சொல்லை 'வைகியது' என்பதனோடு இயைத்துப் பொருள்கூறுவாருமுளர். அகஸ்த்யன் என்ற பெயர் - (விந்திய) மலையை யடக்குபவ னென்று காரணப்பொருள்பெறும்; (அகம் - மலை; சலியாதது.) ஆகவே, எதிர்கால வரலாற்றை நோக்கி முன்னுணர்வு கொண்ட ஆன்றோரால் இடப்பட்ட பெயர் இது வெனபது போதரும். தாபதர் தம்மையுட்கண்டகத்துயர்தீர்வது என்பதற்கு - தவஞ்செய்யும் முனிவர் தம்மை [தமது ஆத்மஸ்வரூபத்தை]த் தம்மனத்தினால் உணர்ந்து மனத்துயர் நீங்கப் பெறுவது எனப் பொருள்கொள்ளினுமாம்' தம்மைக்காணுதல் - ஆத்மஸா

கூரத்கார மெனப்படும். தாபதர் - தாபஸர்; வடமொழித்தத்திதாந்தநாமம்; தவஞ்செய்வ ரென்பது, பொருள். முண்டகத்துறை - தாமரைநிரம்பிய நீர் நிலை; இங்கு அதனையுடைய சோலைக்கு ஆயிற்று. மொய் + பொழில் = மொய்ம்பொழில்; அல்வழியில் யகரத்திற்குப்பின் இனமெலி மிக்கது; "யரழ முன்னர்" என்ற சூத்திரத்தில், 'மேல்' என்ற மிகையாலென்க.

'தண்டகத்துயர்,' 'மெய்பொழில்' என்று பிரதிபேதம். (௬எ)

௧௮. ஞாலநுங்குறுநல்லறத்தோர்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால்.

(இ - ள்.) பூ பொழில் - மலர்கள்நிறைந்த (முண்டகத்துறையென்னும்) அச்சோலையானது,—ஞாலம் நுங்குறும் - உலகத்தாரால் அநுபவிக்கப்படுகிற, நல் அறத்தோர் பொருள் போல - சிறந்த தர்மிஷ்டர்களுடைய செல்வம்போல, நின்று பொலிவது - நிலைபெற்று விளங்குவது; சீலம் மங்கையர் வாய் என - நல்லொழுக்கமுடைய இளமகளிரது அதரம்போல, தீம கனி - இனிய பழங்கள், காலம் இன்றி கனிவது - அகாலத்திலும் [எக்காலத்திலும்] பழுத்திருக்கப்பெறுவது; காண்டிர் - (அதனைச் சென்று) காணுங்கள்;

இம்முண்டகத்துறையிலுள்ள மரங்கள்யாவும் பலர்க்கும்பயன்படுவன வென்றும், அவை எக்காலத்திலும் பயன மாறாது நிற்பன வென்றுங் கூறியவாறாம். ஞாலம் - அதிலுள்ளார்க்கு இடவாகு பெயர். நல்லறத்தோர் செல்வம் உலகத்தார்க்குப் பயனபடு மெனபதை, "ஊருணிநீர்நிறைந்தற்றே யுலகவாம், பேரறிவாளன திரு," "பயனமர முள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம், நயனுடையானகட் படின்" என்ற திருக்குறளகளினாலும் அறிக. பொருள் எனபதற்கு - கடவுளெனப் பொருள் கூறுவாரு முளர். கனிகளை உபமானமாகவும், மங்கையர்வாயை உபமேயமாகவும் கூறும் இயற்கைக்குமாறாக மங்கையர்வாயைக் கனிக்கு உவமையாகக்கூறியது - எதிர்நிலையணியினபாற்படும்; வடநூலார் ப்ரதீபாலங்கார மென்பர். மங்கையர்க்கு உள்ள 'சீலம்' என்ற அடைமொழி, இனமவிலக்கவந்ததன்று.

'ஞாலநல்லறத்தோருண்ணுநற்பொருள்,' 'ஞாலநல்லறத்தோர்பொருளுண்ணுமா,' 'ஞாலநல்லறத்தோருண்ணுநற்பொருள,' 'ஞாலநுங்குறுநல்லறத தொல்பொருள,' 'பொலிவன,' 'கனிவன' என்று பிரதிபேதம். (௧௮)

௧௯. நயனநன்கிமையார்துயிலார்நனி
யயனமில்லைபருக்கனுக்கவ்வுழி
சயனமாதர்கலவித்தலைதரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால்.

(இ - ள்.) (அங்குஉள்ளவர்கள்), நயனம் நன்கு இமையார - கண்களை நன்றாக [சிறிதும்] இமைக்கமாட்டார்; நனி துயிலார் - நன்றாகச் [சிறிதும்] தூங்கமாட்டார்; அருக்கனுக்கு - சூரியனுக்கு, அ உழி - அவவிடத்தில்,

அயனம் இல்லை - நுழைதற்கு உரிய வழி இல்லை; (அவ்விடம்), சயனும் மாதர் கலவித்தலை தரும் பயனும் - படுக்கையில் மகளிரது சேர்க்கையி லுண்டாகின்ற போகத்தையும், இன்பமும் - இன்பத்தையும், நீரும் - ஜலத்தையும், பயக்கும் - (எப்பொழுதும்) உண்டாக்கும்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கண்ணிமையாமையும், துயிலாமையும், தேவர்களுக்கு இயல்பு. தேவர்கள் வாழுமிடமாயுள்ளது அப்பொழிலென்பது, முதலடியின் கருத்து. "இரவியின் கதிர்கள் நுழைதல்செய்தறியா" என்றபடி சூரியனது கிரணமும் உட்புகாதவாறு மரங்கள் செறிந்துள்ள தென்பார், 'அயனமில்லை யருக்கனுக்கு அவ்வுழி' என்றார். நீரைப்பயத்தல் - மிக்க நீர்வளப்பத்தை யடைந்திருத்தல். கலவித்தலைதரும் இன்பத்தையும் பயனையும் [சிறந்தபழங்களையும்] நீரையும் பயக்குமெனப் பின்னிரண்டடிகட்குப் பொருள் கூறினுமாம். நீர் - நற்குணங்களுமாம்.

'அருக்கனுக்கவவழி,' 'நயனநன்கிசை நல்லமளித்துயில்' என்று பிரதிபேதம். (௧௯)

௨௦. ஆண்டி றந்துபி னந்தரத் திந்துவைத்
தீண்டு கின்றது செங்கதிர்ச் செல்வனு
மீண்டு றைந்தல தேகல மென்பது
பாண்டு வின்மலை யென்னும்ப ருப்பதம்.

(இ - ள்.) ஆண்டு இறந்து - அவ்விடத்தைக் கடந்து, பின் - அப்பால், அந்தரத்து இந்துவை தீண்டுகின்றது - ஆகாயத்திற்செல்லுகின்ற சந்திரனைத் தொடுகின்றதும், செங்கதிர் செல்வனும் ஈண்டு உறைந்து அலது ஏகலம் என்பது - சிவந்தகிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியனும் 'இம்மலையில் தங்கியல்லாமல் அப்பாற்செல்லமாட்டோம்' என்று நினைத்தற்கு இடமானதுமாகிய', பாண்டுவின் மலை என்னும் பருப்பதம் - பாண்டுமலையென்னும் பருவதம், (உளது): (அதனைச் சேருங்கள்); (எ - று.)

இந்துவைத் தீண்டுகின்றது, செங்கதிர்ச் செல்வனும் ஈண்டுறைந்தல தேகலமென்பது என்பன - அம்மலையினுயர்ச்சியை விளக்கவந்த தொடர்புயர்வுநவிற்சியணிகள்; வடநூலார் ஸம்பந்தாதிசயோக்தியென்பர். பாண்டுமலை மிகவோங்கி மிக இனிமையான இடமாயிருத்தலால், சூரியனும் அங்குத் தங்கி அப்பாற்செல்லுமாறு கருதுகின்றனனென்க. உறைந்தலதேகலம் - இரண்டு எதிர்மறைகள் ஒருடன்பாட்டை யுணர்த்தின. பாண்டுவின்மலை, இன் - சாரியை. பருப்பதம் - பர்வதமென்ற வடசொல்லின் சிதைவு.

'ஏகலனென்பது,' 'ஏகலனென்னரும்,' 'பாண்டுவம்மலை' என்று பிரதிபேதம். (௨௦)

வேறு.

௨௧. முத்தீர்த்துப் பொன்றிரட்டி மணியுருட்டி முதுநீத்த முன்றி லாயர், மத்தீர்த்து மரனீர்த்து மலையீர்த்து மானீர்த்து வருவ தியார்க்கும், புத்தீர்த்தட் டலையாமற் புலவர்நாடுதவுவது புனிதமான, வத்தீர்த்த மகன்கோதா விரியென்ப ரம்மலையி னருகிற் றம்மா.

(இ - ள்.) முதிர் நீத்தம் - (தனது இடையறாதுபெருகுகின்ற) பழமையாகிய வெள்ளமானது,—முத்து ஈர்த்து - முத்துக்களை யிழுத்துக்கொண்டும், பொன் திரட்டி - பொற்பொடிகளைச் சேரவெடுத்துக்கொண்டும், மணி உருட்டி - இரத்தினங்களைத் தள்ளிக்கொண்டும், முன்றில் ஆயர் மத்து ஈர்த்து இடையர்களுடைய முற்றங்களிலுள்ள மத்துக்களை யடித்துக்கொண்டும், மரன் ஈர்த்து - மரங்களை யிழுத்துக்கொண்டும், மலை ஈர்த்து - கற்பாறைகளைப் புரட்டிக்கொண்டும், மான் ஈர்த்து - மிருகங்களை யிழுத்துக்கொண்டும், வருவது - வருகின்ற தன்மையுடையது; யார்க்கும் - (தன்னில் மூழ்கியவர்) எவர்க்கும், புத் திர்த்திட்டு - 'புத்' என்ற நரகத்தை வாவொட்டாமல் நீக்கி, அலையாமல் - அலைச்சற்படாதபடி, புலவர் நாடு உதவுவது - தேவலோகத்தைக் கொடுக்கவல்லது; புனிதம் ஆன அ தீர்த்தம் - (இவ்வாறு) பரிசுத்தமான அந்தப்புண்ணியதீர்த்தத்தின் பெயரை, அகல் கோதாவிரி என்பர் - பரந்துள்ள கோதாவரிநதியென்று கூறுவர், (உலகத்தார்); (அந்தநதியானது),— அ மலையின் அருகிற்று - அந்தப்பாண்டுமலையினருகேயுள்ளது; (எ - று.)— அம்மா - வியப்பிடைச்சொல்; அந்நதியின் அருமைபெருமைகளை நோக்கி வியந்தவாறு.

'ஈர்த்து' என்ற சொல் ஒருபொருளிலேயே பலமுறைவந்தது - சொற்பொருட்பின்வருநிலையணி. 'புத்' என்பது மகப்பெறாதவர் அடைவதோர் நரகம். கோதாவரிநதியானது தன்னில் நீராடியவர்க்கு இம்மையிற் புத்திர சந்தானமுண்டாக்கி மறுமையில் நரகத்தையும் ஒழிப்பதாதலின், 'யார்க்கும் புத்திர்த்திட் டலையாமற்புலவர்நாடு உதவுவது' என்றார். முத்து - முக்தா என்ற வடமொழியின் சிதைவு, (இப்பின்னிறு) விடுபடுவது என அவயவப் பொருள். மணி - நவரத்தினங்களுக்கும் பொதுப்பெயர். முன்றில் - வீட்டின்முன்னிடம்: இல்முன் என்பது முன்றில் என மாறியது - இலக்கணப் போலி. ஆயர் - பசுக்களையுடையவர்; அன்றி, 'ஆய - சாதிப்பெயர்; அதனையுடையவர் - ஆயர்' எனக் கூறினுமாம். மத்து - மந்தம் என்ற வடசொல்லின் சிதைவு. புலவர் - விசேஷபுத்தியையுடையவர்; (புலம் அல்லது புலமை - தேர்ந்த (அறிவு.) இது, 'விபுதர்' என்னும் வடமொழியின் பொருள் கொண்டது. அகல் + கோதாவிரி = அகன்கோதாவிரி; "குறில்செறியாலள" என்னுஞ் சூத்திரத்து 'பிற' என்ற மிகையால், தனிக்குறிலைச்சாராத லகரம் லலிவர னகரமாயிற்று. அருகிற்று - 'அருகு' என்ற பகுதியடியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று.

'பொன்னீர்த்து மணியீர்த்து,' 'மலரீர்த்து வருநதியார்க்கும்,' 'புத்திர்த்துக்கதிகொடுத்துப் புத்தேளிருடுதவுவது,' புத்திர்த்துத் திரட்டலையாற் புத்தேளிருடுதவுவது' என்பன பாடாந்தரங்கள்.

இதுமுதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதல்நான்கு சீர்கள் காய்ச்சீர்களும், மற்றை இரண்டும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௪)

௨௨. அவ்வாறுகடந்தப்பாலறத்தாறெனத்தெளிந்தவருளி னாறும், வெவ்வாறெனக்குளிர்ந்துவெயிலியங்காவகையிலங்கும் விரி பூஞ்சோலை, யெவ்வாறுமுற்றத்துவன்றியிருளோடமணியிமைப்பதி மையோர்வேண்டத், தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்தசுவ ணத்தைச்சேர்ந்தார்மாதோ.

(இ - ள்.) அ ஆறு கடந்து - அந்தக் கோதாவரி நதியைத் தாண்டி,— அப்பால் - பிறகு, அறத்து ஆறே என - தருமமார்க்கம் போலவும், தெளிந்த அருளின் ஆறும் வெம் ஆறு என உம் - தெளிவாகிய அருளினால் விளங்குகின்ற (யாவரும்) விரும்புதற்கு உரிய [அருள்மயமாகிய] மார்க்கம் போலவும், குளிர்ந்து - குளிர்ச்சியையடைந்து, வெயில் இயங்காவகை இலங்கும் - சூரியனது கிரணங்கள் (தன்னுள்) நுழையாதபடி விளங்குகின்ற, விரி பூஞ்சோலை - மலர்ந்த புஷ்பங்கள் நிரம்பிய சோலையானது, எ ஆறும் உற்று அவன்றி - எந்தப்பக்கங்களிலும் [தனது இருகரைகளிலும்] மிகுதியாக நெருங்கி, இருள் ஓட மணி இமைப்பது - (அச்சோலையில் நிறைந்திருந்த) இருள் இருந்தவிடமுந் தெரியாதபடி ஓடுமாறு இரத்தினங்கள் பிரகாசிப்பதற்கு இடமாகிய, இமையோர் வேண்ட தே ஆறுமுகத்து ஒருவன் தனி கிடந்த சுவணத்தை - தேவர்கள் பிரார்த்தித்ததனால் ஆறுமுகங்களையுடைய ஒப்பற்ற முருகக்கடவுள் தனியாக இருந்த சுவணநதியை, சேர்ந்தார் - போய்ச்சேர்ந்தனர்; (எ - று)— மாதோ - ஈற்றசை.

கோபகுணத்தை வெவ்வியதாகவும், சாந்தகுணத்தைத் தண்ணியதாகவுங் கூறுதல், கவிமரபு. சோலையின் குளிர்ச்சிக்கு தருமமார்க்கத்தையும், தயா மார்க்கத்தையும் உவமைகூறினார். சுவணநதியானது, தனது இருகரைகளி லும் சூரியகிரணங்களும் உட்புகாதவாறு மரங்கள் அடர்ந்த சோலைகள் நிரம்பப் பெற்று அம்மரங்களின் அடர்த்தியால் செறிந்த இருளைத் தன்னிடத்திலுள்ள இரத்தினங்களின் ஒளியால் போக்குமெனக் குளிர்ந்து இலங்கும் சோலை என இயையும்; குளிர்ந்து கிடந்த சுவணத்தை என்று இயைத்துப் பொருள் கொள்ளினுமாம். "வெம்மை வேண்டல்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தால், வெவ்வாறு என்பதற்கு - விரும்பத்தக்க ஆறு எனப் பொருள் கூறப் பட்டது.

வெம்மையுடையது - வெயில் எனக் காரணப்பெயர். 'தேவாறுமுகத் தொருவன்' என்பது, எதுகைநயம் நோக்கி 'தெவ்வாறு முகத்தொருவன்' எனத் திரிந்துவந்தது. தேவன் என்பது - தெய்வத்திற்கு ஒருபெயர்; ஆறுமுகத் தொருவனாகிய தே என்க. இனி, தெவ ஆறுமுகத்து ஒருவன் என்றே எடுத்து - பகைவரையடக்கவல்ல ஆறுமுகங்களையுடைய ஒருவனெனக் கூறு வாருமுளர்.

• 'தெவ்வாறு முகத்தொருவன் தனிகிடந்த சுவணம்' என்பதிலுள்ள கதைவிவரம் விளங்கவில்லை; இனி, சுவணமென்பதை 'சரவணம்' என்பதன் சிதைவாகக்கொண்டு. பெயரொற்றுமைபற்றி, 'தெவ்வாறு முகத்தொருவன தனிக்கிடந்த' என்ற அடைமொழி கொடுத்துக்கூறினரெனபாருமுளர். சர வணப்பொய்கையில் சுப்பிரமணியக்கடவுள் பிறந்தனரென்பது பிரசித்தம்.

'அறத்தாறேயதுதெரிந்தவருளினனும்', 'வகையியங்கும்', 'எனத்து வனறியிருளாறுமணி' என்று பிரதிபேதம். (உஉ)

உங. சுவணத்தைக்கடந்தப்பாற்சூரியகாந்தகமென்னத்தோன் றிமாதர், கவணுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ் சந்திரகாந்தக முங்காண்பீர், ரவணவைநீத்தேகியபினகனுடுபலகடந்தாலனந்த னென்பா, னுவணபதிக்கொளித்துறையுங்கொங்கணமுங் குலிந்த முஞ்சென்றுறு திர்மாதோ.

(இ - ள்.) சுவணத்தை கடந்து - சுவணமென்னும் நதியைத் தாண்டி, அப்பால் - பிறகு, சூரியகாந்தகம் என்ன தோன்றி மாதர் கவண் உமிழ் கல் வெயில் இயங்கும் கனம் வரையும் - சூரியகாந்தமென்று கூறும்படி பிரசித்தி• பெற்று அம்மலையிலுள்ள மகளிரால் எறியப்பட்ட கவண்கயிற்றிலிருந்து வெளிப்படுங் கற்கள் வெயிலைக்கக்குகின்ற பெரியமலையையும், சந்திரகாந்தகமும் - சந்திரகாந்தமலையையும், காண்பீர் - தேடிப்பாருங்கள்; அவண் அவை நீத்து ஏகிய பின் - அவ்விடத்திலுள்ள அம்மலைகளை விட்டு அப்பாற்சென்ற பிறகு, அகல் நாடு பல கடந்தால் - விசாலமாகிய நாடுகள் பலவற்றைக் கடந்து சென்றால், அனந்தன் என்பான் உவணபதிக்கு ஒளித்து உறையும் கொங்கணமும் - ஆதிசேஷன் பட்சிராசனாகிய கருடனுக்கு அஞ்சி மறைந்துவசிக்கின்ற கொங்கணதேசத்தையும், குலிந்தமும்-குலிந்த தேசத்தையும், சென்று உறுதிர் - போய்ச்சேர்வீர்கள்; (எ - று.)— மாது ஓ - ஈற்றசை.

ஸூர்யகாந்தம் - சூரியனைக்கண்டபோது நெருப்பையுமிழுங் கல்; அக் கல்மயமான மலை, சூரியகாந்தக மெனப்படும் சந்த்ரகாந்தம் - சந்திரனைக் கண்டபோது தண்ணீரைக்கால்வது; அக்கல்மயமான மலை, சந்திரகாந்தக மெனப்படும், தினைமுதலியவற்றின கதிர்களைக்கிளிமுதலிய பறவைகள் உண்டிடாமைப்பொருட்டு வேட்டுவமாதர்கள அருகிலமைக்கப்பட்ட பரண்களிற் காவலாக இருந்து அங்குள்ளகற்களை யெடுத்துக கவண்கயிறுகொண்டு வீசிப் பறவைகளையோட்டுதல இயல்பு; கவண் - கலெறிகயிறு. மகளிர் சூரியகாந்தக மலையிலுள்ள கற்களை யெடுத்துக் கவண்கயிறுகொண்டு வீசுதலால், அவை வெயிலை உமிழ்வனவாயின வென்க.

அநந்தன் - பிரளயகாலத்திலும் அழிவில்லாமல் இிருப்பவன்; அந்தம் - அழிவு: உவணபதி - உவணனாகியபதி யென இருபெயரொட்டு. உவணன் - ஸுபர்ணன்; அழகிய சிறகையுடையவ னென்பது, அவயவப்பொருள். 'சுவணநதி,' 'காண்டிர்', 'குலிங்கமும்' எனவும் பாடம். (உங)

உச. அரனதிகனுலகளந்தவரியதிகனென்றுரைக்குமறிவிலோர்க்குப் பரகதிசென்றடைவரியபரிசேபோற்புகலரியபண்பிற்றாமற், சுரநதியினயலதுவான்றோய்குடுமிச்சுடர்த்தொகைய தொழுதோர்க்கெல்லாம், வரனதிகந்தருநதகையவருநதியாநெடுமலையைவணங்கியப் பால.

(இ - ள்.) 'அரன் அதிகன் - சிவபிரானே சிறந்தவன்; உலகு அளந்த அரி அதிகன - உலகங்களை (தனது பாதங்களினால்) அளவிட்ட திருமாலே

சிறந்தவன்,' என்று உரைக்கும் - என்று (இவ்விஷயத்தைப் பகுத்துணர்ந்து) கூறவல்ல, அறிவு - தத்துவஞானம், இலோர்க்கு - இல்லாத மூடர்களுக்கு, பரகதி சென்று அடைவு அரிய பரிசேபோல் நற்கதியைச்சென்று சேர்வது அருமையான தன்மையுடையதாதல்போல, புகல் அரிய பண்பிற்று ஆம் - பிரவேசித்தற்கு அரிய தன்மையுள்ளதாகிய,—சுரநதியின் அயலது - (வானத்திற் செல்லுகின்ற) தேவகங்கையின் அருகிலுள்ளதும், வான் தோய் குடுமி சுடர் தொகைய(து) ஆகாயத்தையளாவிய (தனது) சிகரங்களிலே (சூரிய சந்திரர்களாகிய) இருசுடரும் சேர்தலை யுடையதும், தொழுதோர்க்கு எல்லாம் அதிகம் வரன் தரும் தகைய(து) - (தன்னை) வணங்கினவர்க்கெல்லாம் சிறந்தவரங்களைக்கொடுக்கும் பெருமையுடையதுமான, அருந்ததி ஆம் நெடு மலையை - அருந்ததியென்னும் பெரியபருவத்தை. வணங்கி-(நீங்கள் சென்று) தொழுது. அப்பால் - பிறகு,—(எ-று)— அடுத்த கவியில் 'அதன்புறஞ்சார்வேகிர்' என்பதனோடு முடியும். இரண்டாமடியின் ஈற்றில் ஆல் - ஈற்றசை.

திருமாலே பரம்பொருளாயிருக்கவும் அதனை யுணரமாட்டாது 'சிவபிரான் சிறந்தவனோ? அன்றி, திருமால் தான் சிறந்தவனோ?' என்று ஒரு வகையாலும் தெளிவுறாமல் கலங்கிக் கூறுகின்ற மூடர்கட்கு நற்கதி சேர அரிதாயிருக்குமதுபோல, இவ்வருந்ததிமலையும் ஒருவர்க்கும் சேர அரிதாயிருக்கு மென்க. திரிவிக்கிரமாவதாரத்தைக் குறிக்கும் 'உலகளந்த' என்ற அடைமொழியைத் திருமாலுக்குச் சேர்த்துக் கூறியதனால், பிரமலோகமுட்பட எல்லாவுலகங்களையும் தனது திருவடிக்குக் கீழ்ப்படுத்திக்கொண்ட சிறப்பையும், சிவபிரான் தனது சிரமேற்கொள்ளுமாறு திருவடியினின்று கங்கையைப் பயந்த மேன்மையையும் வெளிப்படுத்துதல் மூலமாக அத்திருமாலே பரதத்துவமென வெளியிட்டனரென்க இவ்வாறு மேன்மையைப்புலப்படுத்தும் அடைமொழியொன்றும் சிவபிரானுக்குக் கொடுத்துக்கூறாதது, கருதத்தக்கது. 'அரனதிகனுலகளந்த வரியதிகமென்றுரைக்கு மறிவிலார்க்குப், பரகதிசென்றடைவரிய பரிசேபோல்' என்ற பாடம் இனிது பொருள்படும் இனி, முதலடிக்கு - திரிமூர்த்திகளிற் சேர்ந்த சிவபிரானையும் திருமாலையும் சமமாகக்கருதாமல், 'சிவபிரான் தான் சிறந்தவன், அல்லது திருமால்தான் சிறந்தவன்' என்று பட்சபாதமாகக்கூறுகிற தத்துவ ஞானமில்லாத மூடர்க்கு என்று பொருள்கூறுவாருமுளர்; 'அரியும் சிவனும் ஒன்று; அன்று என்பவர் வாயில் மண்ணு' என்று உலகத்திற் சாமானியமாக வழங்குகின்ற பழமொழியின் கருத்துக்கொண்டது. இவவிரண்டாவது பொருள்.

பண்பிற்று ஆம் மலை, அயலது மலை, சுடர்த்தொகையமலை, தகைய மலை எனத் தனித்தனி இயையும். அரன் - ஹரன் என்ற வடமொழியின் திரிபு; சங்காரக்கடவுளென்பது பொருள்; அடியவர் துயரை யழிப்பவனெனினுமாம். அரி - ஹரி: அடியார்களின் பாவங்களை யழிப்பவன். பரகதி - சிறந்த கதி; மோக்ஷம் ஸுரநதி - தேவர்களின் நதி: கங்கையென்கின்ற புண்ணிய நதியானது, தேவலோகத்தில் மந்தாகினியென்றும், நிலவுலகத்தில் கங்கையென்றும், பாதாளலோகத்தில் போகவதியென்றும் பெயர்பெறு மென்க.

ஸுரர் - தேவர்; (பாற்கடலினின்று தோன்றிய) ஸுரையை [மதுவைப்] பானஞ்செய்தவர். சுடர் - நவக்கிரகங்களுமாம்

'பண்பிற்றம்மா', 'வான்றொடுகுடுமிச் சுடர்த்தொகையை', 'சுடாது தொழுதோர்க்கெல்லாம், வரனதிகந்தருந்தகையதருந்ததியாம்.' 'அருந்ததி சேர்நெடுவரையை' என்று பிரதிபேதம். இப்பாடல், சிலபிரதிகளில் இல்லை.

௨௫. அஞ்சுவரும்வெஞ்சுரனுமாறுமகன்பெருஞ்சுனையுமகிலோ ங்கார, மஞ்சிவருநெடுங்கிரியும் வளநாடும்பிற்படப்போய்வழிமேற் சென்றால், நஞ்சுவருமிடற்றரவுக்கமிழ்துநனிகொடுத்தானைக்கலுழ னண்ணு மெஞ்சின்மரகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சார வேகிர்மாதோ.

(இ - ள்) அஞ்சு வரும் வெம் சுரனும் - (எல்லாப்பிராணிகளும்) அஞ்சுதலைப் பொருந்துகின்ற வெப்பமுள்ள பாலைவனமும், ஆறும் - நதிகளும், அகல் பெருஞ் சுனையும் - அகன்ற பெரிய சுனைகளும், அகில் ஓங்கு ஆரம் மஞ்சு இவரும் நெடுங்கிரியும் - அகில்மரங்களும் உயர்ந்துவளர்ந்த சந்தன மரங்களும் மேகங்களும் தம்மீது பொருந்தப்பெற்ற நீண்டமலைகளும், வளம் நாடும் - வளப்பமுள்ள தேசங்களும், பின்பட போய் - (உமது) பின்புறத்தனவாம்படி (அவைகளைக்கடந்து)சென்று, வழிமேல் சென்றால் - அப்பாலுள்ள வழியில் நடந்துசென்றால்,—கலுழன் - கருடனானவன், நஞ்சு வரும் மிடறு அரவுக்கு - விஷம்பொருந்திய வாயையுடைய நாகங்களுக்கு, அமிழ்து நனி கொடுத்து - அமிருதத்தை நன்றாகக்கொடுத்து, ஆயை நண்ணும் - (தனது) தாயாகிய விநதையை (அடிமைத்தொழிலினின்று விடுவித்துக்) கிட்டுதற்கு இடமான, எஞ்சு இல் மரகதம் பொருப்பை - குறைவில்லாத மரகதமலையை, இறைஞ்சி - வணங்கி, அதன் புறம் சார ஏகிர் - அம்மலையின்பக்கத்து வழியாக அப்பாற் செல்லுங்கள்; (எ - று.)—மாது ஓ - ஈற்றசை.

பாலைவனத்தின் மிககவெம்மையை விளக்குதற்கு, 'அஞ்சுவரும்வெஞ் சுரனும்' என்றார். மேகமண்டலத்திற்கும் அப்பாற் சென்றுள்ளது மலையின் சிகரம் என்றற்கு 'மஞ்சிவருநெடுங்கிரி' எனப்பட்டது. மிடறு - தொண்டையின்பெயர், வாய்க்கு இலக்கணை. அரவு - கசியபமுனிவரது மனைவியாகிய கத்துருவென்பவளது வயிற்றிற் பிறந்த வாசுகி முதலிய நாகங்கள்; பால்பகா அஃறிணைப்பெயர். ஆய் - யாய் என்பதன் மரூஉ. கலுழன் - கருடன் என்ற வடசொல்லின் சிதைவு கசியபமுனிவரது மனைவியாகிய விநதையினிடம் பிறந்தவன். 'அகிலோங்காரமஞ்சிவரும்நெடுங்கிரி' என்பதற்கு, அகிலையும் ஓங்கிய சந்தனமரங்களையு முடையதும் மேகங்கள்தவழப்பெற்றதுமான நெடுங்கிரி யெனினுமாம்: கருத்து ஒன்றே.

கருடன் அரவுக்கு அமிழ்துகொடுத்த வரலாறு:—காசியபமுனிவரது மனைவியாகிய விநதைக்கும் கத்துருவுக்கும் வானத்திற்சென்ற உச்சைச் சிரவமென்ற தேவலோகத்துக்குதிரையின் வாலினது நிறத்தைப்பற்றி யுண்டான விவாதத்தில் கத்துருவென்பவள் அக்குதிரையின் வாலைச்சுற்றிக் கொண்டு கருநிறமாகத் தோன்றுவிக்குமாறு தனதுபுதல்வராகிய கருநாகங்களை யேவிப் பந்தயத்தை வென்றனளாக, அதனால் அக்கத்துருவுக்கு அடி

மையாய்விட்ட விநதையும் அவளது புதல்வனான கருடனும் கத்துருவையும் அவளதுபுதல்வரான நாகங்களையும் சுமந்துசெல்லவேண்டியதாக, அதுகண்ட கருடன் அவ்வடிமையினின்றுநீங்குமாறு அந்நாகங்களின் மொழிப்படியே அமிருதத்தைக் கொணரும்படி அங்குநின்று தேவலோகத்துக்குச்சென்று தேவர்களுடன் பொருது எல்லாரையும் வென்றபொழுது தேவேந்திரனது வேண்டுகோளினால் அமிருதத்தை மீட்கும் உபாயத்தை அவனுக்குக் கூறி, தான் சர்ப்பங்களையுண்ணுமாறு அத்தேவேந்திரனிடத்தினின்று வரமும் பெற்று, அங்குநின்று அமிருதத்தையெடுத்துவந்து பாதாளலோகத்தை யடைந்து அமிருதத்தைத் தர்ப்பையின்மீது அந்நாகங்களின்முன்னர் வைத்திட்டுத் தமது அடிமைத்தன்மையை நீக்கிக்கொண்டு, அவர்களையெல்லாம் அமிருதத்தை யுண்ணுதற்காக ஸ்நாநஞ்செய்துவரும்படி தந்திரமாகச்சொல்ல, அந்நாகங்கள் முழுகுவதற்குபோயிருக்கையில் கருடனது மொழியின்படியே தேவேந்திரன் அங்குவந்து அமிருதத்தையெடுத்துச் சென்றனனாக, முழுகச்சென்ற நாகங்கள் விரைந்துவந்து பார்த்து அமிருதமில்லாமையைக்கண்டு வருத்தத்தோடு அதுவைக்கப்பட்டிருந்த இடத்தை நக்கியதனால் அத்தருப்பை அவர்களது நாவை யறுத்துவிட, அவர்கள் பிளவுபட்டநாவையுடையராய் கருடனது உபாயத்தை நினைந்து அச்சமும், நா அறுபட்டதனாற பெருந் துயரமும் அடைந்தன வெனபதாம்.

'அஞ்சிவரும்,' 'கொடுத்தறிவுகலுழன்,' 'பொருப்புமிறைஞ்சி யதன் புறஞ்சாரலெய்திமாதோ,' 'எகிமாதோ' எனவும் பாடாந்தரம். (௨௫)

௨௬. வடசொற்குந்தென்சொற்கும்வரம்பிற்றாய் நான்மறையு மற்றைநூலு, மிடைசொற்றபொருட்கெல்லாமெல்லையதாய் நல்லறத்துக்கீறாயவேறு, புடைசுற்றுந்துணையினறிப்புகழ்பொதிந்தமெய்யே போறபூத்துநின்ற, வடைசுற்றுநதண்சாரலோங்கிய வேங்கடத்திற் சென்றடைதிராமாதோ.

(இ - ள்) வடசொற்கும் தென்சொற்கும் வரம்பிற்று ஆய் - வடதிசையில்வழங்கும மொழியாகிய ஸம்ஸ்கருததத்திறகும் தென்திசையில்வழங்கும் மொழியாகிய தமிழுக்கும எல்லையாகியும், நால்மறையும் மறறை நூலும் இடை சொற்ற பொருட்கு எல்லாம எல்லையது ஆய - நானகுவேதஙகளும் மற்றைச் சாஸ்திரங்களும் தமமிடத்தில் கூறியுள்ள எல்லாப்பொருள்கட்கும் முடிவானபொருளை யுடையதாகியும், நல் அறத்துக்கு ஈறு ஆய் - சிறந்த தருமஙகட்கெல்லாம் வரம்பாகியும, புடை சுற்றும் துணை வேறு இன்றி - பக்கத்திலெடுத்துச் சொல்லத்தகக உபமானப்பொருள் வேறொன்றுமில்லாமல், புகழ்பொதிந்த மெய்யே போல் பூத்துநின்ற - கீர்த்தி நிரமபிய சரீரத்தைப்போல் விளங்குகின்ற, அடை சுறறும் தண் சாரல் - தேன்கூடுகளாற சுற்றிலும் நிரம்பப்பெற்ற குளிர்ச்சியான தாழ்வரைகளையுடைய, ஓங்கிய - மிகவும் உயர்ந்துள்ள, வேங்கடத்தில் - திருவேஙகடமலையில், சென்று அடைதிர் - போய்ச்சேருங்கள் ; (எ - று.)—மாது ஓ - ஈற்றசை.

ஸம்ஸ்க்ருதபாஷையானது ஆதியில் திருவேங்கடமலைக்கு வடபுறத்திலுள்ள காசிமுதலிய தேசங்களில் மிகுதியாகவழங்கிவந்த தாதலின், வட

மொழி யெனப்படும். அவ்வாறே திருவேங்கடமலைக்குத் தென்புறத்தில் வழங்கிவந்த தமிழ்ப்பாஷை தென்மொழி யெனப்படும் இவ்விருமொழிகளும் மிகுதியாக வழங்கும் நிலங்களுக்கு இடையேநின்று எல்லைகுறிப்பதனால், திருவேங்கடமலையை 'வடசொற்குந் தென்சொற்கும் வரம்பிற்று' என்றார். "வடவேங்கடம் தென்குமரி" என்னுமிடத்தில், இத்திருவேங்கடமலையைத் தமிழுலகத்திற்கு வடவெல்லையாகக் கூறியதுங் காண்க. நான்குவேதங்களிலும் அவவேதங்கட்கு உபப்ரும்ஹணமாகிய இதிகாசம் புராணம் முதலிய மற்றைநூல்களிலும் எடுத்துக்கூறப்படும் பொருள்களாகிய கடவுளர்யாவரிலுஞ் சிறந்த முழுமுதற்கடவுளான திருமாலைத் தன்னிடத்திற்கொண்டுள்ளது இது வென்பது, 'நான்மறையும் மற்றைநூலு மிடைசொற்ற பொருட்கெல்லாம் எல்லையது' என்பதன் கருத்து, நல்லறத்துக்கு ஈறு - எல்லாத்தருமங்கட்கும் கடையெல்லை; இம்மலையிலே தருமங்களெல்லாம் குறைவின்றி நிறைந்திருக்கின்றன வென்க. 'வேறுபுடைசுற்றுந் துணையின்றி' என்பதற்கு - இதற்குச்சமானமாக உடன்வைத்துச்சொல்லத் தக்கமலை வேறொன்றுமில்லை யென்று கருத்து. புகழ்பொதிந்தமெய் - புகழுடம்பு; பூதவுடம்பு அழிந்தாலும் கீர்த்தியானது தான அழியாது நின்று உலகத்திலுள்ளார் பலராலும் கொண்டாடப்பட்டு விளங்குதல்போல, திருவேங்கடமலையும் தான் அழியாதுநின்று உலகத்திலுள்ளார் பலராலும் துதிசெய்யப்பட்டு விளங்குதலால், அம்மலைக்குப் புகழுடம்பை உவமைகூறினார். 'புகழ்பொதிந்தமெய்யேபோல்' என்பதற்கு - புகழ்நிரம்பிய சத்தியம்போல எனக் கூறுவாரும், 'புகழ்பொதிந்தமெய்யேபோற்பூத்துநின்ற' என்பதைச் சாரலுக்கு அடைமொழியாக்குவாரும் உளர்.

வேங்கடம் என்பது - திருமாலின் திவ்வியதேசங்கள் நூற்றெட்டனுள் ஒன்றும், வடநாட்டுத்திருப்பதிகள் பன்னிரண்டனுள் முதலதும், 'கோயில் திருமலை பெருமாள்கோயில்' என்று சிறப்பாக எடுத்துக் கூறப்படுகின்ற மூன்றுதலங்களுள் இடையதுமாகிய தலம். தன்னையடைந்தவர்களுடைய பாவமனைத்தையும் ஒழிப்பதனால், 'வேங்கடம்' எனப் பெயர்பெற்றது; வடசொல். வேம் - பாவம், கடம் - எரித்தல் எனப் பொருள் காண்க. (இதனை, "அத்திருமலைக்குச் சீரார்வேங்கடாசல மெனும்பே, வைத்தன ராதுவே தென்னில் வேமெனவழங்கெழுத்தே, கொத்துறுபவத்தைக்கூறும் கடவெனக்கூறிரண்டாஞ், சுத்தவக்கரங் கொளுத்தப்படு மெனச் சொல்வர் மேலோர்," "வெங்கொடும்பவங்களெல்லாம் வெந்திடச்செய்வதால் நல், மங்கலம்பொருந்துஞ்சீர வேங்கடமலையான தென்று" எனறும் புராணச் செய்யுள்களாலும் அறிக.) அன்றி, வேம்எனபது - அழிவின்மை, கடம் என்பது - ஐசுவரியம்; அழிவில்லாத ஐசுவரியங்களை (ததனையடைந்தார்க்கு)த் தருதலால், வேங்கடமெனப்பெயர்கொண்டது எனறு வராகபுராணத்திற் கூறப்பட்டுள்ளது.

மறைவாகிய [அரிய]பொருளையுடைமையாலும், சிலசாதியார்க்கும்பெண்பாலார்க்கும் ஓதவும் கேட்கவும் ஆகாதென்று மறுக்கப்படுவதாலும், வேதத்திற்கு 'மறை' எனறு பெயர். மற்றைநூல் - சிட்சைமுதலிய ஆறுவேதாங்

கங்களும், இராமாயணம் முதலிய இதிகாசங்களும், பிரம்மம் முதலிய பதி னெண்புராணங்களும், மநுமுதலிய ஸ்மிருதிகளுமாம். நூல் - பஞ்சைக் கொண்டு நூல் நூற்கப்படுதல்போலச் சொற்களைகொண்டு ஆக்கப்படுதலா லும், நூல் மரம் முதலியவற்றின கோணலையறிந்து தீர்த்தற்குக் கருவியாதல் போல மனிதர்களது மனத்தின கோணலையறிந்து போக்குவதற்குக் கருவியாத லாலும்; நூல்என்பது - உவமையாகுபெயராம், இனி பலமணிகள கோக்கப் படும் நூல்போலப் பல பொருள்களை ஒழுங்காகப் பொருத்தப்பெறுவது நூல் என்றும், நூல் பொம்மைகளை யாட்டுவிப்பதுபோலப் பொருள்களை நடை பெறச்செய்வது நூலெனறும் இங்ஙனம் ஏற்றபடி காரணங்கற்பித்துக் கூற லுமாம். சாரல் - சார்ந்துள்ள இடத்திற்குத தொழிலாகுபெயர்.

'வடசொற்குந் தெனசொற்கு நான்மறைக்கும் வரம்பாகி மற்றை நூலி, னிடை சொற்றபொருட்கெல்லா மறிவினுககு மீறுய வெறுழ்பொற்குன்றம், 'வரம்பாகுநான்மறையும,' 'நல்லறிவிறகீறுய்,' 'உடைசுற்றும்', 'அடல் சுற்று நெடுஞ்சாரல்,' 'சென்றுற்றி' எனபன - பாடாந்தரங்கள. (உசு)

உஎ. இருவினையுமிடைவிடாவெவ்வினையுமியற்றுதே யிமையோ ரேத்துந, திருவினையுமிடுபதந்தேர்சிறுமையையுமுறையொப்பத் தெளிந்துநோக்கி, கருவினைய திப்பிறவிக்கென்றுணர்ந்தங்கதுகளை யுங்கடையின்ஞானத், தருவினையின்பெரும்பகைஞராண்டுளரீண்டி ருந்து மடிவணங்கற்பாலார்.

(இ - ள்.) இருவினையும் இடைவிடா எ வினையும் இயற்றுதே - (நல் வினை தீவினைகளாகிய) இருவகைவினைகளும் இடைவிடாமற் சம்பந்தப்பட் டுள்ள எந்தககருமங்களையும செய்யாமல்,—இமையோர் ஏத்தும் திருவினை யும் - தேவர்களும் புகழும்படியான பெருஞ்செல்வ வாழ்க்கையையும, இடு பதம் தேர சிறுமையையும் - (பிறர் பிச்சையாக) இடுஞ் சோற்றை எதிர்பார்த திருக்கின்ற தாழ்வையும் [தரித்திரவாழ்க்கையையும்], முறை ஒப்ப தெளிந்து நோக்கி - ஒன்றற்கொன்று சமமுடையதாகத் தெளிந்த அறிவுகொண்டு பார்த்து,—இ பிறவிக்கு கருவினையது என்று உணர்ந்து - 'இந்தப்பிறப்பு உண்டாவதற்கு மூலகாரணம் இருவினைகளேயாகும்' என்று அறிந்து, அது களையும்-அவ்வினையின தொடர்பை நீக்குதற்குஉரிய, கடை இல் ஞானத்து - எல்லையில்லாத தத்துவஞானத்தையுடைய, அரு வினையின பெரும் பகை ஞர் - (போக்குதற்கு) அரிய இருவினைகட்கும் பெருஞ் சததுருக்களாகிய பெரியோர், ஆண்டு உளர் அம்மலையிலிருக்கின்றார்கள; (அவர்கள்), ஈண்டு இருந்தும் அடி வணங்கல் பாலார் - (நேரிற்சென்றன்றி நாம்) இங்கிருந்த வாறேயும் [திக்குநோக்கித்] தண்டஞ்சமர்ப்பிற்தற்கு உரியவராவர்; (எ - று.) —அங்கு - அசை.

பயன்கருதி ஒருவினையுஞ் செய்யாமல் செல்வத்தினிடத்தும் வறுமையி னிடத்தும் சமபுத்தியை யுடையவர்களாய், பிறப்புககுக் காரணமான இரு வினைகளையும் ஒழிக்குங் கருத்துக்கொண்டு, தத்துவஞானம் வாய்ந்து, திக்கு நோக்கியும் தண்டஞ்சமர்ப்பித்தற்கு உரியராயுள்ள பெரியோர்கள் அத்திரு

வேங்கடமலையில் வாழ்கின்றன வென்க. மனிதர் எந்தத்தொழில் செய்தாலும் புண்ணியபாவங்கட்குச் சம்பந்தப்பட்டு அது அதற்குரிய வினைப்பயனையூட்டு மாதலால், 'இருவினையுமிடைவிடா வெவ்வினையும்' என்றார்: தீவினை இரும்புவிலங்குபோலவும், நல்வினை பொன்விலங்குபோலவும் நின்று மோட்சத்திற்குச் செல்லவொட்டாமற் பந்தமுறுத்துதலால், இருவினையும் ஞானிகட்கு ஆகாவென்க. இஞ்ஞானிகள் தாம்செய்யும் வினைகளையெல்லாம் பகவத் கைங்கரியமாகவன்றி, ஒருபயன்கருதிச் செய்யாராதலால், அவர்கள் எவ்வினையும் இயற்றாதவராவர். "ஸமலோஷ்டகாஞ்சந: [மண்கட்டியினிடத்தும் பொன்னினிடத்தும் சாமியபுத்தியுடையவன்]" என்றபடி பெருஞ்செல்வத்தையும் பெருவறுமையையும் ஒரு நிகராகக் கருதுந்தன்மை யுடையவரென்பது 'இடையோரேத்துந் திருவினையும் இடுபதந்தேர் சிறுமையையும் முறையொப்பத் தெளிந்துநோக்கி' என்பதனாற்போதரும், பதம் - சோறு, 'இமையோரேத்துந் திரு'என்றது - எப்பொழுதும மிக்க இனபத்திலேயே மூழ்கிக் கிடக்குந் தேவர்களும் அதனுலான இனபத்தைக் கண்டு வியக்கும்படியான செல்வமென்று செல்வத்தின் சிறப்புக கூறியவாறு. முதலடி-முற்றுமோனை.

வினை - மனம் வாக்கு காயம் என்னுந் திரிகரணங்களாலும் உயிர்கள் செய்துகொண்ட புண்ணியபாவங்கள், அந்தககர்மம் - சஞ்சிதம் பிராப்தம் ஆகாமியம் என மூன்று வகைப்படும். அவற்றில், சஞ்சிதமாவது - பிறப்பு அநாதியாய் வருதலின் உயிரால் அளவின்றி ஈட்டப்பட்ட வினைகளின பயனகள்; பிராரப்தமாவது - அவ்வினைப்பயனகளுள இறந்த உடம்புகளால் அநுபவித்தன போகப் பிறந்த உடம்பால் அநுபவிக்கத் தொடங்கியவை; ஆகாமியமாவது - எடுத்த இப்பிறப்பிற் செய்யப்படுவன; இவ்வினைகள பிறப்புக்குக் காரணமாதல் காண்க. வினை, கர்மம் என்பன - ஒருபொருட் சொற்கள். வினை - சாதியொருமை தமது பரப்பிரமஞானத்தால் இருவினைதொல்லைசன் தம்மை அணுகாது போகநீககொள்ள வல்லவரெனபது, 'ஞானத்தருவினையின பெரும்பகைஞா' என்பதன தேர்ந்த பொருள். 'ஈண்டிருந்து மடிவணங்கற்பாலார்' என அந்தத் தத்துவஞானிகளின் மேனமையை விளக்கினார். 'ஆண்டுளரீண்டிருந்தும்' எனனுமிடத்திற பிராசமென்னுஞ் சொல்லணி காண்க.

'இடைவீடா தெவ்வினையும்,' 'இமையோரெய்தும்,' 'கதங்களையுங் கடையின் ஞானத்து', 'வணங்கலாவார்' என்றும் பாடம. (உஎ)

உஅ. சூதகற்றுந்திருமறையோர்துறையாடுநிறையாறுஞ்சுருதித்தொன்னூன், மாதவத்தோருறைவிடனுமழையுறங்குமணித்தடனும்வானமாதர், கீதமொதகின்னரங்களின்னரம்புவருடுதொறுங்கிளக்குமோதை, போதகத்தின்மழக்கன்றும்புலிப்பறழுமுறங்கிடனும்பொருகதிற்றம்மா.

(இ - ள்.) சூது அகற்றும் திரு மறையோர் ஆடு துறை நிறை ஆறும் - வஞ்சனையையொழித்த சிறந்த பிராமணர்கள் இறங்கிமூழ்குகின்ற துறைகள் நிரம்பவுள்ள நதிகளையும், சுருதி தொல் நூல் மா தவத்தோர் உறைவு இட

னும் - வேதங்களையும் பழமையான சாஸ்திரங்களையும் அறிந்த பெருந்தவத்தையுடைய முனிவர்கள் வசிக்கின்ற ஆச்சிரமங்களையும், மழை உறங்குமணி தடனும் - மேகங்கள் தங்குகின்ற இரத்தினங்களையுடைய தாழ்வரைகளையும், வானம் மாதர் கீதம் ஒத்த கின்னரங்கள் இன் நரம்பு வருடு தொறும் கிளக்கும் ஓதை போதகத்தின் மழ கன்றும் புலி பறழும் உறங்கு இடனும் - தேவஸ்திரீகள் இசைப்பாட்டுக்கு இணங்கின கின்னரமென்னும் இசைக் கருவிகளினுடைய இனிய நரம்புகளைத் தடவும்பொழுதெல்லாம் உண்டாகின்ற ஓசையினால் யானைகளின் இளங்கன்றுகளும் புலிக்குட்டிகளும் (தம் முளவிரோதமற்றுத்) தூங்குகின்ற இடங்களையும், பொருந்தியுள்ளது பொருந்தியுள்ளது, (அத்திருவேங்கடமலை); (எ - று.)— அம்மா - அம்மலையின் சிறப்பைக் கருதிய வியப்பிடைச்சொல்.

அம்மலையில் தேவமாதர்கள் வந்து கின்னரவாத்தியங்களைக் கொண்டு வாசிக்கின்ற இன்னிசையைக் கேட்டு ஒன்றோடொன்று பகைக்குந் தன்மையுள்ள யானைக்கன்றுகளும் புலிக்குட்டிகளும் தம்முட்பகைமைநீங்கி ஓரிடத்திலேயே வந்து உறங்குமென, பின்னிரண்டடிகளால் மலையினது சாந்தகுணமுண்டாக்குந் தன்மையையும், இசையினிமையையும் எடுத்துக்காட்டியவாறு. மறையோர் - வேதியர்: துறை - நீரிலிறங்குமிடம். ஆறுகள் - அம்மலையிலுள்ள ஆகாசகங்கை, பாபவிநாசம் முதலியன. சுருதி - ஶ்ருதி; எழுதாக் கிளவியாய்க் குருசிஷ்யக்கிரமமாகக் காதுபரம்பரையில் கேட்டே தெரிந்துகொள்ளப்படுவது என வேதத்துக்குக் காரணக்குறி. தவம் - தபஸ்: அஃதாவது - மனம் பொறிகளின்வழியாய்ப் புலன்களின் மேற்போகாது நிற்றற்பொருட்டு விரதங்களால் உணவுசுருக்குதலும், கோடைக்காலத்தில் பஞ்சாக்கினிமத்தியிலும் மழைக்காலத்தில் மழையிலும் பனிக்காலத்தில் நீர்நிலையிலும் பாசியேறநிற்றலும் முதலிய அருஞ்செயல்களை மேற்கொண்டு அவற்றால் தனக்குவருந் துன்பங்களைப் பொறுத்தல். கின்னரம் - ஓர்வகைநரம்புக் கருவி; வீணையென்பாரு முளர். போதகம் - பத்துவருஷத்து யானைக்கன்று; வடசொல். இங்கு, யானையென்றமாத்திரமாய் நின்றது. "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையு, மானோ டைந்துங் கன்றெனற் குரிய" என்ற தொல்காப்பியத்தால் 'போதகத்தின்மழக்கன்று' என்றும், "நாயே பன்றி புலி முயல் நான்கும், ஆயுங்காலைக் குருளை யென்ப," "நரியு மற்றே நாடினர் கொளினே," "குட்டியும் பறழும் கூற்றவண் வரையார்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரங்களால் 'புலிப்பறழ்' என்றுங் கூறினர். மழ - இளமைகுறிக்கும் உரிச்சொல்.

*'சூதகத்தின் பிருமறையோர்,' 'தோதவத்தித் தூய்மறையோர் நிறையோடுந்துறையோடு,' 'கீதமுறுகின்னரங்கள்,' 'கிளக்குமோதை' என்பன பாடாந்தரங்கள். (உ௮)

உகூ. கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரேலுங்கொடியகொடுமைநீங்கி
வீடுறுதிராதலினால்விலங்குதிரப்புறத்துநீர்மேவுதொண்டை
நாடுறுதிருற்றதனைநாடியதற்பின்னையவைநளிநீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய்வத்திருநதியினிருகரையுஞ்சோதிர்மாதோ

(இ - ள்.) கோடு உறு மால் வரை அதனை குறுகுதிர் எல் - சிகரங்கள் பொருந்திய பெரிய அத்திருவேங்கடமலையை நெருங்கினீர்களானால், (அத்தலத்தின் மகிமையால்), உம் நெடிய கொடுமை நீங்கி வீடு உறுதிர் - உங்களுடைய மிக்க கொடும்பாவங்களெல்லாம கழிய உடனே மோக்ஷமடைவீர்கள்; ஆதலினால் - ஆதலால், விலங்குதிர் - (அங்குஉட்செல்லாது) விலகினவர்களாய், அப்புறத்து - அப்பாலுள்ள, நீர் மேவு தொண்டை நாடு - நீர்நிறைந்த தொண்டைநாட்டை, உறுதிர் - சேருங்கள்; உற்று - அவ்வாறு சேர்ந்து, அதனை நாடி - அந்நாட்டில் தேடி, அதன் பின்னை - அதற்குப்பிறகு, நளி நீர் பொன்னி சேடு உறு தண் புனல் தெய்வம் திரு நதியின் இரு கரை அவையும் - பெருந்தன்மையையுடைய [கம்பீரமான தோற்றமுள்ள] பொன்னி யென்னும் பெயர்கொண்ட சிறப்புவாய்ந்த குளிர்ந்த நீர்நிறைந்த தெய்வத் தன்மைபெற்ற காவேரிநதியினது இருகரைகளிலும், சோதிர் - சென்றுசேர்ந்து (சீதாபிராட்டியைத்) தேடுங்கள்; (எ - று) —மாது ஒ - எற்றலச.

திருவேங்கடமலையிற் பிரவேசித்தமாத்திரத்தில் இருவினைத்தொல்லைகளும் ஒழிந்து நீங்கள் முத்தியடைவீர்கள்; அவ்வாறு முத்தியையடைந்துவிட்டால் இராமகாரியம் நடவாதாதலின அங்குச்செல்லவேண்டா எனச்சுக்ரீவன் மறுத்தனனென்க. அம்மலை மிக்க தூய்மையுள்ளதாதல்பற்றி அங்கு இராவணன் சென்றிருக்கமாட்டானென்பது திண்ணமாதலால், அங்குப் போய்த் தேடிப்பார்த்தலிற் காலதாமதமேயொழிய வேறுபயனின்று என இதனைக் குறிப்பித்தனனெனலாம். வீடு - (இவ்வுலகப்பற்றை) விட்டு அடையும்இடம்; எனவே, மோக்ஷமாம்; முத்தி, மோக்ஷம் என்னும் வடமொழிகளும் இப்பொருள்பெற்றனவே.

தொண்டைமான் என்பது அககுலத்து அரசரில் ஒருவனது பெயராயிருந்து பிறகு அந்நாட்டரசாக் செல்லாம வழங்குகின்றதென்றும், தொண்டைமானது நாடு தொண்டைநாடு என வழங்கலாயிற்றென்றும் கூறுவர். தொண்டைமானென்ற பெயரின காரணம்—தொண்டைநாட்டிராசதானியான காஞ்சீபுரத்திலிருந்த தொண்டைமானிளந்திரையனைக்குறித்துப் பாடப்பட்ட பெரும்பாணாற்றுப்படையில் "அந்நீர்த் திரைதருமரபின்...பல்வேல் திரையன்" என்றவிடத்து 'நாகப்பட்டினத்துச்சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாககன்னியைப் புணர்ந்த காலதது அவள் 'யான் பெற்ற புதல்வனை என்செய்வேன்?' என்ற பொழுது, 'தொண்டையை [தொண்டை - ஓர்கொடி] அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட, அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசவுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பல்' என்று அவன் கூற, அவளும் புதல்வனை அங்ஙனமே வரவிட, திரைதருதலின் திரையனென்று பெயர்பெற்ற கதை கூறினார்' என்றும், "தொண்டையோர் மருக" என்றவிடத்து 'தொண்டையைச் சூடினோருடைய குடியிலுள்ளவனே' என்றும் நச்சினார்க்கினியருரைத்தவாற்றால் விளங்கும். இனி, பூமியாகிய பெண்ணுக்குத் தொண்டை [கழுத்து] ஸ்தானமாயிருப்பதால் தொண்டை நாடென்றும, "தொண்டைநன்னாடு சான்றோருடைத்து" என்றபடி எம்பெருமானது தொண்டர்கள் பலர் வசிக்கின்ற

நாடு தொண்டைநாடு என்றும் காரணங் கூறுதலுமுண்டு. "மேற்குப் பவள மலை வேங்கடம் சேர்வடக்காம், ஆர்க்கு மூவரி யணிகிழக்குப் பார்க்குளுயர், தெற்குப்பினாகி திகழிருபதின்காதம் நற்றொண்டைநாடெனவே நாட்டு". என்றதனால், தொண்டைநாட்டின எல்லையை உணர்க.

"மலைத்தலைய கடற்காவிரி, புனல்பரந்து பொன்கொழிக்கும்" என்றபடி தான் பெருகும்பொழுது பொன்னைக்கொழித்துக்கொண்டு வருதலால், காவேரிநதிக்கு 'பொன்னி' என்று பெயர்; இ - உடைமைப்பொருள்காட்டும் பெண்பால்விகுதி. காவேரிக்குத் தெய்வத்தன்மை - தன்னில் ஒருகால் மூழ்கியவர்க்கும் பிறவிப்பிணி யொழித்து நற்கதியளிக்குந் திறம். "தடவுங் கயவும் நளியும் பெருமை" என்றதனால், நளியென்பது - பெருமைப்பொருள் தருவதோர் உரிச்சொல் என்க. நீர் - நீர்மையென்ற பண்பினடி. 'நளிர்நீர்' என்ற பாடம் - பின்வரும் 'தண்புனல்' என்பதனோடு கூறியதுகூறலுக்கு இடமாம்.

'உக்கொடியகோடுநீங்கி,' 'கொடியகொடுங்கோளுநீங்கி,' 'வீடுறவீராத வினலைப்புறமுமிப்புறமுமேவித்தொண்டை,' 'வீடுறுதிராதலினால் வியக்குறுத் திப் புறத்துற நீர்விடுதிர் விட்டால், நாடுறுதிருற்றதொண்டைநாடுறுதிருற்ற தற்பி னளிநீர்', 'நாடுறவீருற்றக்கானகருறுதிருற்றதற்பினளிநீர்ப்பொன்னி' என்பன பாடாந்தரங்கள். (உ௯)

௩௦. துறக்கமுற்றார்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடந்தாற் றொல்லை, மறக்கமுற்றாதனயலே மறைந்துறைவரவ்வழிநீர்வல்லை யேகி, யுறக்கமுற்றாரென்னுற்றாரெனுமுணர்வினொடுமொதுங்கிமணி யாலோங்கற், பிறக்கமுற்றமலைநாடுநாடியகன்றமிழ்நாட்டிற்பெயர்திர் மாதோ.

(இ - ள்.) துறக்கம் உற்றார் மனம் என்ன துறை கெழு நீர் சோணாடு கடந்தால் - சுவர்க்கத்தையடைந்தவர்களது மனம்போலத் (தெளிவாகத்) துறைகளிலே விளங்குகின்ற நீரையுடைய [காவேரியாற்றைக் கொண்ட] சோழநாட்டைத் தாண்டிச்சென்றால், அதன அயலே தொல்லை மறக்கம் உற்றார் மறைந்து உறைவர் - அந்நாட்டின் அருகில் பழவினைத்தொல்லைகள் மறத்தலைப் பொருந்தியவர் [வினைத்தொல்லைகளற்ற முனிவர்கள்] மறைந்து வசிப்பர்; நீர் - நீங்கள்,—அ வழி வல்லை ஏகி - அந்தமார்க்கத்தில் விரைவாகச்சென்று, உறக்கம் உற்றார் என் உற்றார் எனும் உணர்வினொடும் ஒதுங்கி - '(சோம்பலினால்) உறக்கத்தையுடையவர்கள் யாதுபயனடைவர்? [ஒருபயனையும் அடையமாட்டார்]' என்ற அறிவோடும் (பரபரப்புடனே மேற்புறமாகச்) சற்றுவிலகிச் சென்று, மணியால் ஓங்கல் பிறக்கம் உற்ற மலைநாடு நாடி - இரத்தினங்களினொளியால் மலைகள் விளக்கத்தை யடைந்திருக்கின்ற மலைநாட்டில் (சீதாபிராட்டியைத்) தேடி, (பிறகு), அகல் தமிழ் நாட்டில் பெயர்திர் - விசாலமான செந்தமிழ்ப்பாண்டிய நாட்டிற் சென்று சேருங்கள்; (எ - று.)—மாது ஓ - ஈற்றசை.

சுவர்க்கமடைந்தவர் துயரத்தினாற் கலங்குதலின்றி எப்போதும் இன்பத் தினால் நிறைந்த மனத்தையுடையவராதல்போல, காவேரியாறும் நீர்நிரம்பிய

துறைகளைப் பெற்றிருக்குமென்க. வெகுதூரம் நடந்த இளைப்பாற் சோர்வுறாமல் சீதாபிராட்டியைத்தேடும் விஷயத்தில் மிக்கபரபரப்புடனேயிருத்தல் வேண்டுமென்பான், 'உறக்கமுற்றா ரென்னுற்றாரெனு முணர்விலொடு மொதுங்கி' என்றான் உறக்கமுற்றாரென்னுற்றார்—"முயற்றின்மையின்மை புகுத்திவிடும்" என்பது திருக்குறள். தென்றிசைநோக்கிச் செல்பவர்கள் சோழநாடுகடந்ததும் பாண்டியநாட்டிற் புகுந்துவிடாமல் சோழநாட்டின் மேற்புறத்திலுள்ள மலைநாட்டிலும் தேடவேண்டுமென்று கருத்துடனே ஒதுங்கி மலைநாட்டில் நாடிப் பிறகு பாண்டியநாட்டிற் சேருமாறு சுக்கிரீவன் வானரர்கட்குக் கட்டளையிட்டனனென்க.

துறக்கம் - இவ்வுலகத்தைத் துறந்து அடையுமிடமெனக் காரணக் குறி: ஸ்வர்க்கமென்ற வடசொல்லின் திரிபென்பாருமுளர். சோணாடு - சோழநாடு என்பதன் மரூஉ. மறக்கம் - 'மற' என்ற முதனிலையின் தொழிற் பெயர்; கு - சாரியை. ஓங்கல் - ஓங்கி விளங்குவது என மலைக்குக் காரணப் பெயர். மலைநாடு - சேரநாடு; சேரநாட்டில் மலைகள் மிகுதியாயிருத்தலால், அதற்கு அப்பெயர். தமிழ்நாடு - பாண்டியநாடு; செந்தமிழ்வழங்கும் நாடாதலால், பாண்டியநாட்டுக்குத் தமிழ்நாடென்று பெயர்கூறப்பட்டது. த்ராவிடமென்னும் வடமொழி தமிழெனச் சிதைந்துநின்றது; 'தமி' என்னும் வினைப் பகுதியினடியாப் பிறந்து, வினைமுதற் பொருளுணர்த்தும் விகுதி குன்றி, ழகரவொற்று எழுத்துப்பேறுபெற்று, தனக்கு இணையில்லாதபாஷையெனப் பொருள் தருவதென்பாரும், இனிமையென்னும் பொருளுணர்த்தும் தமிழென்னுஞ்சொல் எல்லாப்பாஷைகளினும் இனியதாகிய இப்பாஷைக்கு ஆகுபெயராய் வழங்கிற்று என்பாரும், மற்றைப் பல பாஷைகளிலில்லாமல் தன்னிடத்தில் மாத்திரமே தனியாகவுள்ள ழகரமென்னும் எழுத்தையுடையது என அன்மொழித்தொகைக் காரணக்குறியென்பாருமுளர்.

"கடல்கிழக்குத் தெற்குக்கரைபொருவெள்ளாறு; குடதிசையிற் கோட்டைக்கரையாம் - வடதிசையி, லேணாட்டுப்பெண்ணை யிருபத்துநாற்காதம், சோணாட்டுக்கெல்லையெனச் சொல்," "வடக்குத்திசைபழனிவான்கீழ் தென்காசி, குடக்குத்திசைகோழிக்கூடாம் - கடற்கரையி, னேரமோ தெற்காகு முள்ளொன்பதின்காதம், சேரநாட்டுக் கெல்லையெனச் செப்பு" 'வெள்ளாறதுவடக்கா மேற்குப்பெருவழியா, வெள்ளாற்புனற்கன்னிதெற்காகு - முள்ளாரு, வாண்டகடல்கிழக்கா மைம்பத்தறுகாதம், பாண்டிநாட்டெல்லைப்பதி" என்பவற்றால் சோழ சேர பாண்டிய நாடுகளின் எல்லையை அறிக.

'அறக்கணுற்றாரதனயலேமறைந்துறைவாரவ்வழியேயல்லல்போக, வுறக்கமுற்றாரின்புற்றா ரென்றிவர்கள் பெறுமுணர்விளொடும்,' 'உறக்கமுற்றார் கனவுற்றார்,' 'தமிழ்நாடும் பெயர்திர்' என்பன பிரதிபேதம். (௩௦)

௩௧. தென்றமிழ்நாட்டகன் பொதியிற்றிருமுனிவன்றமிழ்ச் சங்கஞ்சேர்கிற்பீரே, லென்றுமவனுறைவிடமாமாதலினம்மலையை யிறைஞ்சியேகிப், பொன்றிணிந்தபுனல்பெருகும்பொருநையெனுந் திருநதிபின்பொழியநாகக், கன்றுவளர்தடஞ்சாரன்மகேந்திரமாமெ டுவரையுங்கடலுங்காண்டிர்.

(இ - ள்.) தென் தமிழ் நாடு - தெற்குத்திசையி லிருக்கின்ற தமிழ் நாடாகிய பாண்டிநாட்டிலுள்ள, அகல் பொதியில் - அகன்ற பொதியமலையிலே நிலைபெற்ற, திரு முனிவன் - சிறந்த அகத்திய முனிவினது, தமிழ் சங்கம் - தமிழ்ச்சங்கத்தை, சேர்கிற்பீர் ஏல் - சேர்வீர்களாயின்,—(அம்மலையானது), என்றும் அவன் உறைவு இடம் ஆம் - எப்பொழுதும் அம்முனிவன் வசித்தற்கு உரிய இடமாகும்; ஆதலினால்—, அ மலையை இறைஞ்சி ஏகி - அந்தப் பொதியமலையை வணங்கி அப்பாற்சென்று, பொன் திணிந்த புனல் பெருகும் பொருநை எனும் திரு நதி பின்பு ஒழிய - அழகு நிரம்பிய நீர்பெருகுகின்ற தாமிரபர்ணியென்னுஞ் சிறந்தநதி பின்னாற் கிடக்குமாறு (அதனைவிட்டுப் புறப்பட்டு), நாகம் கன்று வளர் தட சாரல் மகேந்திரம் ஆம் நெடு வரையும் - யானைக்கன்றுகள் வளரப்பெற்ற பெரிய தாழ்வரைகளையுடைய மகேந்திரமென்னும் பெரியமலையையும், கடலும் - தென்கடலையும், காண்டிர் - காண்பீர்கள்; (எ - று.)

தமிழை வளர்த்த அகத்தியமுனிவனுக்கு இருப்பிடமாதலால், பொதியமலையைவணங்கிச்செல்லுமாறு சுக்கிரீவன் கட்டளையிட்டனன். பிற்காலத்தில் நிகழ்ந்ததாகிய அகத்தியமுனிவன் பொதியமலையில் வாழ்தலை, கவி பாவநாபிமானத்தால் மெய்ம்மறந்து முற்காலத்து நிகழ்ந்ததுபோலவே கூறினர்.

சங்கம் = ஸங்கம்: வித்துவான்களின் கூட்டம்; அகத்திய முனிவன் வடதிசையினின்றும் தமிழை வளர்க்குமாறு தென்திசை நோக்கி வந்தவனாதலால், அம்முனிவனுள்ள இடத்தில் தமிழறிந்த வித்துவான்களின் கூட்டம் இருத்தல் இயல்பேயா மென்க. சேர்கிற்பீரேல் இறைஞ்சி என இயையும். 'அம்மலையை வலத்திட்டேகி' என்ற பாடத்துக்கு - பொதிய மலையிலுள்ள தமிழ்ச் சங்கத்தைச் சேர்வீர்களாயின் அதை விட்டுவருதற்கு மனம்வாராதாகையால், அங்குச் செல்லாமல் அந்தப் பொதியமலை வலத்திலிருக்கும்படி பிரதட்சிணமாகக் கடந்து செல்லுங்களென்று கூறியதாகக் கருத்தாம். பொதியமலை - மலயமலை. நாகம் - மலையில் வாழ்வது என யானைக்குக் காரணக் குறி: (நகம் - மலை.) மகேந்திரம் மா நெடுவரை என்றும் பிரியும்.

'பொதியத்திருமுனிவன்,' 'சேருவீரேல்,' 'தெரிகிற்பீரேல்,' 'அம்மலையை யிடத்திட்டேகி,' 'புனலரவப்பொருநை,' 'மயேந்திரமாநெடுவரை' என்று பிரதிபேதம். (கூ௧)

கூ௨. ஆண்டுகடந் தப்புறத்து மெப்புறத்து மொருதிங்க ளவதியாகத், தேண்டியிவண் வந்தடைதிர் விடைகோடிர் கடிதென்னச் செப்பும் வேலை, நீண்டவனு மாருதியை நிறையருளா லுறநோக்கி நீதி வல்லோய், காண்டியெனிற் குறிகேட்டி யெனவேறு கொண்டிருந்து கழறலுற்றான்.

(இ - ள்.) ஆண்டு கடந்து - அவ்விடத்தைத் தாண்டிச்சென்று, அ புறத்தும் எ புறத்தும் - அதற்கு அப்பாலும் எல்லாவிடங்களிலும், ஒரு திங்கள் அவதி ஆக தேண்டி - ஒருமாதகாலம் தவணையாகக்கொண்டு (சீதாபிராட்டியைத்) தேடி, இவண் வந்து அடைதிர் - இங்குவந்துசேருங்கள்; கடிது

விடை கோடிர் - விரைவாக விடைபெற்றுச் செல்லுங்கள், என்ன செப்பும் வேலை - என்று (சுக்கிரீவன் வானரர்கட்குக்) கட்டளை யிட்டபோது,—நீண்டவனும் - திரிவிக்கிரமாவதாரஞ்செய்த திருமாலின் திருவவதார மூர்த்தியாகிய இராமபிரானும், மாருதியை - வாயுகுமாரனாகிய அநுமானை, நிறை அருளால் உற நோக்கி - பூர்ணகிருபையோடு நன்றாகக்கடாட்சித்து, 'நீதி வல்லோய் - நீதிநூல்களில் வல்லவனே! காண்டி எனின் - (சீதாபிராட்டியைக்) காண்பாயானால், (இவள்தான் சீதையென்று நிச்சயித்தற்காக), குறி கேட்டி - (அவளுடைய) அடையாளங்களை (யான்சொல்லக்) கேட்பாய்,' என; என்று, வேறு கொண்டு இருந்து - (அவனைத்) தனியே அழைத்துச் சென்று ஓரிடத்திலிருந்து, கழறல் உற்றான் - (அவ்வடையாளங்களைக்) கூறத் தொடங்கினான்; (எ - று.)—அதனை, அடுத்த முப்பத்துநான்கு கவிகளிற் காண்க.

"ஒருமதிமுற்றுறாதமுன் முற்றுதிரிவ்விடை" என்று சுக்கிரீவன் தான் கீழ்க் கூறியதை "ஒருதிங்களவதியாகத் தேண்டியிவண்வந்தடைதிர் விடை கோடிர்கடிது" என்று அநுவதித்து முடித்தனனென்க. சுக்கிரீவன் இவனாலேதான் காரியம் கைகூடுமென்னுங் குறிப்போடு அநுமானையே பிரதானமாகக்கொண்டு இவ்வளவுதூரம் கூறியதனாலும், தனக்கும் சுக்கிரீவனுக்கும் முதலில் தனது வாக்சாதுர்யத்தால் நட்புச்செய்வித்தவன் அநுமானேயாதலாலும், சீதாபிராட்டியை நாடிக்காணுதலாகிய தொழில் இவனாலேயே நிறைவேறுமென்று கருதி, இராமபிரானும் அநுமானை வேறுகொண்டு கூறலாயினன். நிறையருளாலுற நோக்குதல் - பூர்ணகடாக்ஷம் வைத்தல். திங்கள் - மாதத்திற்கு இலக்கணை. தேண்டி - தேடியென்பதன் விரித்தல்.

'விடைகொண்டீர்,' 'செப்புமெல்லை' என்று பிரதிபேதம் (௩௨)

## வேறு.

### இதுமுதல் முப்பத்துமூன்று கவிகள் - இராமபிரான் அநுமானிடத்துச் சீதாபிராட்டியின் அவயவங்கள் முதலியவற்றை வருணித்துக் கூறுதல்.

[கால்விரல்கள் பாதங்கள் இவற்றின் வருணனை]

௩௩. பாற்கடல் பிறந்த செய்ய பவளத்தைப் பஞ்சி யூட்டி
மேற்பட மதியஞ் சூட்டி விளங்குற நிரைத்த மெய்ய
காற்றகை விரல்க ளைய கமலமும் பிறவுங் கண்ட
வேற்பில வென்ப தன்றி யிணையடிக் குவமை யென்னோ.

(இ - ள்.) (இராமபிரான் அநுமானை நோக்கி), ஐய - ஐயனே!—கால் தகை விரல்கள் - (சீதையின்) கால்களிலுள்ள அழகிய விரல்கள்,—பால்கடல் பிறந்த செய்ய பவளத்தை - பாற்கடலில் தோன்றிய செந்நிறமான பவழத் துண்டங்களை, பஞ்சி ஊட்டி - செம்பஞ்சுக்குழம்பை யணிவித்து, மேல் பட மதியம் சூட்டி - அவற்றின் மேற்புறத்திலே சந்திரர்களை யணிவித்து, விளங்குற நிரைத்த - விளக்கமுண்டாகுமாறு ஒழுங்காக அமைக்கப்பட்ட, மெய்ய -

உருவமுடையன; (இவ்வாறு அழகியவிரல்களைப் பெற்றுள்ளதனால்); கண்ட கமலமும் பிறவும் - (உலகத்திற் பிரசித்தமாகப் பாதங்கட்கு) உவமை கூறப் படும் தாமரைமலரும் மற்றைப்பொருள்களும், ஏற்பில - (இச்சீதாபிராட்டி யின் பாதங்கட்கு) உவமையாகமாட்டா, என்பது அன்றி - என்று கூறலா மேயல்லாமல், இணை அடிக்கு உவமை என்னோ - (அவளது) இரண்டுபாதங் கட்கும் தகுதியான உவமைப்பொருள் யாதோ? [ஒன்றும் அகப்படாதென்ற படி]; (எ - று.)

நகங்களோடுகூடி இயற்கைச் செந்நிறமமைந்த சீதாபிராட்டியினது கால்விரல்கட்கு, செம்பஞ்சு ஊட்டிச் சந்திரர்களையணிவித்த பவழத்துண்டு கள் உவமையாமெனக. தன்மைத்தற்குறிப்பேற்றவணி; இல்பொருளுவமை யணி யெனபது, ஒருசாரார் கொள்கை. சீதாபிராட்டியின் திருமேனி பாற் கடல் போன்றிருத்தலால், அத்திருமேனியிலுள்ள கால்விரல்கட்குப் பாற்கட லிற்பிறந்த பவழத்தை உவமை கூறுதல் ஏற்கும். பாதங்கட்குச் செம்பஞ்சுக குழம்பு ஊட்டுதல் - மென்மை யுண்டாதற்கும், நிறமுண்டாதற்கு மெனக. சீதாபிராட்டியின் பாதங்கட்குத் தாமரைமலா முதலியன ஒப்பாகா எனறது - எதிர்நிலையணி; வடமொழியில் ப்ரதீபாலங்கார மெனப்படும்; உபமானத்துக் குக் குறைவு தோனறச் சொல்லுதல், இவவணியின் இலக்கணம். 'பிறவும்' என்றதனால், அனனத்தின்தூவி, அனிச்சமலர், மாந்தளிர் முதலியன கொள்க. தேவர்களைப் பாதாதிகேசபரியந்தமும், மனிதர்களைக் கேசாதிபாத பரியந்தமுமாகக்கூறுதல், மரபு சீதாபிராட்டி திருமகளின திருவவதாரமாத லால், அது தொனிககுமாறு பாதாதிகேசபரியந்தமாக இங்குக் கூறுகின்றன ரென்னலாம். நிரைதத என்பதை முற்றாகக்கொண்டு, மெயய - உண்மை யுடையவனே! என்றும், ஐய கமலம எனறு எடுதது - அழகியகமலம் என றும கூறலுமாம். விரல்களையுடைய பாதங்கட்கு இதழ்களையுடைய கமலம் உவமை, மென்மையிலும், செந்நிறத்திலு மெனக.

பஞ்சு எனினும, பஞ்சி எனினும் ஒக்கும். விரலின் நகங்கள் பத்தாத லால், மதியமும் பதது எனக. இணையடி - உபயபாதம். என்-அஃறிணை யிரு பாற்கும் பொதுவாகிய எவனென்னனும் வினாவினைக்குறிப்பு முற்றின விகாரம்.

'தெய்வப்பவளத்தை,' 'மதியமட்டிவிரற்குறி,' 'விரகுறநிரைத்தசெய்ய,' 'பிறவுமெல்லாம்,' 'உவமையுண்டோ,' 'உவமையில்லை' என்று பாடாந் தரங்கள்.

இதுமுதல் முப்பத்துநான்குகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான் காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (கஙு)

[புறவடிகளின் வருணனை.]

*கசு. நீமெயாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாலுவமையாகமதியறிபுலவர்வைத்த
தாமையாமென்றபோதுமல்லனசொல்லினாலும்
யாமயாழ்மழலையாடன்புறவடிக்கிழுக்கமன்றோ.

(இ - ள்.) ஐய—! நிரை வளை மகளிர்க்கு எல்லாம் - வரிசையாக அணிந்த வளையல்களையுடைய மகளிரது புறவடிகளுக்கெல்லாம், உவமை ஆக - உபமானமாகும்படி, மதி அறி புலவர் வாய்மையால் வைத்தது - தமது புத்தியினால் (எல்லாவற்றையும்) உணரவல்ல வித்துவான்கள் உண்மையாக ஏற்படுத்தியதாகிய, ஆமை - ஆமையானது, யாமம் யாழ் மழலையாள் தன் புறம் அடிக்கு - இராப்பொழுதில் இனிய ஓசைமிக்கிருக்கின்ற வீணைபோன்ற மழலைச்சொற்களை யுடையவளாகிய சீதையினது புறவடிகட்கு, ஆம் - உவமையாகும், என்றபோதும் - என்று சொன்னாலும், அல்லன சொல்லினும் - வேறு உபமானங்களை எடுத்துச்சொன்னாலும், இழுக்கம் - (அப்புறவடிகட்குக்) குறைவாகும்; நீ மெய் ஆய் உணர்தி - நீ (இதனை) உண்மையென்றே அறிவாயாக; (எ - று.)—மன் ஓ - ஈற்றசைகள்.

சாதாரணமாகிய மகளிர்புறவடிகளுக்கு உவமையாகச் சொல்லப்படுகின்ற ஆமை முதலியவை, தெய்வத்தன்மையுள்ள சீதாபிராட்டியின புறவடிகட்கு ஒப்பாகா என்றவாறு; எதிர்நிலையணி. புறவடிககு ஆமை வடிவில் ஒப்பென்க. மழலை - திரம்பாமொழி சொல்; ''மெய்பெறுவெழுத்துயிர்ககு மழலைவாயின்முறுவற், றையலாள்'' எனறவிடத்து நச்சினார்க்கினியர் 'மழலை எக்காலத்துக்கும் கூறுப' என்றது, இங்கே அறியத்தககது. புறவடி - அடியினது புறம் என முன்பின்னாகததொக்க ஆறும் வேற்றுமைத்தொகை; இலக்கணப்போலி. புறவடிக்கு ஒப்பாகக்கூடிய பிற பொருள்கள - புததகம் முதலியன,

'நீர்மையாலுணர்தி,' 'புலவர்வைத்த' 'தூய்மையாமென்றபோழ்துமல்லனசொல்லினும், ஆமையோமழலையாடன புறவடிகொக்குமன்றே' என்று பிரதிபேதம். (கூ௪)

[கணைக்கால்களின் வருணனை]

கூ௫. வினைவராலரியகோதைபேதைமென் கணைக்கான்மெய்ய
நினைவராலரியவின்னநேர்படபுலவர்போற்றுஞ்
சினைவரால்பகழியாவநெற்சினையென் னுஞ்செபப
மெனைவராற்பகருமீட்டியானுரைதநின்பமென்னோ.

(இ - ள்.) மெய்ய - உண்மையுடையோனே!—வினைவரால் அரிய கோதை பேதை மெல் கணைக்கால் - சித்திரமெழுதுவோரால எழுதுதற்கு அரிய கூந்தலையுடைய பேதைமைக்குணமுள்ளவளான சீதையினது மெல்லிய கணைக்கால்கள், நினைவரால் அரிய இன்ன - ஊகித்தது உணர்பவராலும் (உவமையெடுத்துச்சொல்லுதற்கு) அரியனவான இததனமையையுடையன; (ஆகையால்),—புலவர் நேர்பட போற்றும்-விததுவான்கள் (கணைக்காலுக்கு) உவமையாகப்பொருந்துமாறு சிறப்பித்துக்கூறுகின்ற, சினை வரால் - கருக்கொண்ட வரால்மீனும், பகழி ஆவம் - அமபறாத்தூணியும், நெல் சினை - சூல்கொண்ட நெறபயிரும், என்னும - எனகின்ற, செப்பம் - வார்த்தை, எனைவரால் பகரும் - எல்லாராலும் சொல்லப்படும்; (அவற்றையே), மீட்டு யான் உரைத்து இன்பம் எனனோ - திரும்பவும் யான் எடுத்துச்சொல்வதனால் இன்பம் யாதோ? (எ - ற.)

ஊகித்தறிந்துபார்த்தும் எவராலும் சீதையின் கணைக்காலுக்கு உவமைப் பொருளை யெடுத்துச்சொல்ல இயலாதாதலால், அவ்வாறுள்ள கணைக்கால் களுக்கு, புலவர்கள் சாதாரணமான மகளிரின் கணைக்காலுக்கு உவமைப் பொருளாக ஏற்படுத்தியுள்ள சினைவரால் முதலியவற்றையே யானும் உவமை யென எடுத்துச்சொல்லுதல் சிறிதும் இன்பம்பயவா தென்பதாம்; இதுவும் எதிர்நிலையணியே.

வினைவர் - சித்திரவேலை செய்பவர். கோதை - மாலையுமாம். 'அரிய' என்னுங் குறிப்புப்பெயரெச்சம், 'பேதை' என்பதனோடு இயையும். பேதை- பேதைமைக்குணமுடையாளுக்குப் பண்பாகுபெயர். இச்சொல் - இங்குப் பருவப்பெயராகாமல் பெண்ணென்ற மாத்திரமாய் நின்றது; அப்பருவத் துக்கு வயதெல்லை - ஐந்துமுதல் ஏழளவும். பகழி - அம்பு. ஆவம் - தூணீரம். நெல்சினை - கதிர் வெளியில்வாராமல் கருக்கொண்டு தண்டுஉருண்ட நெற் பயிர். செப்பம் - சொல்லப்படுவது; வார்த்தை. பகரும் - செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த செய்வினை.

'வினைவராலரியகோதை,' 'மெய்யே,' 'நினைவராலரிய நனனீர்,' 'பகரு மீட்ட' என்றும் பாடம். (ரு௫)

[தொடைகளின் வருணனை.]

௬௬. அரம்பையென்றளகமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோதுமற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறுநறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய்.

(இ - ள்.) அளகம் மாதர் குறங்கினுக்கு - கூந்தலையுடைய மகளிரது தொடைகளுக்கு, அரம்பை என்று அமைந்த - வாழைகளென்று ஏற்பட்ட, ஒப்பின் வரம்பையும் - உவமையின எல்லையையும், கடந்த போது - (சீதை யின் தொடைகள்) வென்றனவென்று சொல்லும்போது, மற்று உரை வகுக கல் ஆமோ - (அவற்றிற்கு) வேறு உவமைச்சொல்லை எடுத்துச்சொல்லுதல் முடியுமோ? [முடியாதென்றபடி]; நரம்பையும் - நரம்புகளையுடைய வீணை யையும், அமிழ்தம் நாறும் நறவையும் - அமிருதம்போல (மிகக இனிமை யுடன்) விளங்குகின்ற தேனையும், நல் நீர் பண்ணை கரும்பையும் - நல்லநீர் வளமுள்ள கழனிகளில் விளைந்த கரும்பின் சாற்றையும், கடந்த - சயித்த, [அவற்றினும் இனிமையிக்க], சொல்லாள்-சொற்களையுடையவளான சீதை யினது, கவாற்கு - தொடைகளின திறத்தில், இது - (யான் கூறிய) இவ்வா றுண தன்மையை, கருது - நீ ஆலோசிப்பாயாக; (எ - று.)—கண்டாய் முன் னிலையசை; தேற்றமுமாம்.

இதுவும் - முன்னைய அணியே. உபமேயப்பொருளினும் உபமானப் பொருள் சிறந்திருகக வேண்டுமென்ற அணியிலக்கணநூலார் கொள்கைக்கு இணங்கச் சாதாரணமகளிரின தொடைகளைவிட வாழைகள் அழகுசிறந் திருக்கும்; அவ்வாழைகளையும் இத்தொடைகள் வென்றன வென்றதனால், இவற்றிற்கு வேறு உபமானப்பொருள் எடுத்துக்கூற அரியதாயிற் றென்க.

அளகம் - பெண்மயிர்; (ஐம்பால், குழல், கூந்தல்என்பனவும் இப்பொருளனவே.) நரம்பு - அவற்றையுடைய யாழுக்குச் சினையாகுபெயர். அமிழ்தம் நாறும் நறவு -பாலோடுகலந்த தேன எனினுமாம். நறவை - 'நறா' என்னும் குறியதன்கீழ் ஆகாரம் குறுகி இரண்டனுருபுஏற்றது. பண்ணை - வயல் கரும்பு - அதன் இரசத்திற்கு இலக்கணை.

'அரம்பையென்றற்கு,' 'அமைத்தவொப்பின்.' 'நளிர்நீர்ப்பண்ணை', 'கடிந்தசொல்லாள்' என்று பிரதிபேதம். (௬௬)

[அல்குலின் வருணனை.]

௬எ. வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
றாராழிக்கலைசாரல்குறடங்கடற்குவமைதக்கோய்
பாராழிபிடரிற்றாங்குமபாந்தளும்பனிவென்றோங்கும்
மோராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்னே.

(இ - ள்.) தக்கோய் - சிறந்தவனே! வார் - கச்சணிந்த, ஆழி கலசம் கொங்கை-சக்கரவாகப்பறவையையும கலசத்தையும் போன்ற தனங்களையும், வஞ்சி போல் மருங்குலாள்தன் - நீாவஞ்சிக்கொடிபோன்ற இடையையுமுடையவளான சீதையினது, தார் ஆழி கலை சார் அல்குல் தட கடற்கு - கிண்கிணிமாலையையணிந்த வட்டவடிவாகிய ஆடையைச்சார்ந்துள்ள அல்குலாகிய பெரியகடலுக்கு, உவமை உபாமானமாகிய பொருளை,— ஆழி பார் பிடரில் தாங்கும் பாந்தளும் பனி வென்று ஓங்கும் ஓர் ஆழி தேரும் கண்ட உனக்கு - சமுத்திரத்தினாற் சூழப்பெறற உலகத்தைத் தலையில் தாங்குகின்ற ஆதிசேஷனதுபடத்தையும பனியையடக்கி மேல்தோன்றுகினற ஒற்றைச்சக்காத்தையுடைய (சூரியனது) தேர்த்தட்டையும் கண்கூடாகக்கண்ட உனக்கு, நான் உரைப்பது என்னே - நான் புதிதாகச்சொல்லவேண்டுவது யாது உளது? [எதுவுமில்லை என்றபடி]; (எ - று.)

ஆதிசேஷனது படத்தையும், சூரியனதுதேர்த்தட்டையுமே சீதையின் அல்குலுக்கு உவமையாகக் கருதுவா யென்றவாறும். சக்கரவாக பட்சியும், கலசமும் - தனங்கட்கு, வடிவுவமை. கலை - மேகலையுமாம் கீழேழுலகங்கட்குங் கீழே அஷ்டதிக்கஜங்களும் அஷ்டமகாநாகங்களும் நாகராஜனை ஆதிசேஷனும் இருந்து உலகங்களைத் தாங்குகின்றன வென்பது, நூற்கொள்கை. பனிவென்றோங்கும் ஓராழித்தேர் - சூரியனதுபனிவெல்லுந்தன்மையை அவனதுதேரின்மேலேறறிக்கூறிய உபசாரவழக்கு. சூரியனது தேர் - ஸம்வத்ஸரஸ்வரூபமான ஒற்றைச்சக்காத்தையுடையதாகும். 'ஆழி' எனற சொல் நானகும் வெவ்வேறுபொருளில் வந்தது, சொற்பின்வருநிலையணி.

சககரவாகப்பறவைக்கு 'நேமிப்புள்' என்று ஒருபெய ரிருத்தலால், அதனை 'ஆழி' என்றார். ஆழி - ஆழ்ந்துள்ளது எனக் கடலுக்குக காரணக்குறி; (உலகத்தைப் பிரளயகாலத்தில) அழிப்பது எனினுமாம். ஆழி - வட்டவடிவமானது எனச் சக்கரத்தை யுணர்த்திற்று.

'கலைசேரல்குல்,' 'பிடரிற்றங்கும்,' 'உரைப்பதென்னே' என்று பிரதிபேதம். (௬எ)

[இடையின் வருணனை.]

கூஅ. சட்டகந்தன்னைநோக்கியாரையுஞ்சமைக்கத்தக்கா
ளிட்டிடையிருக்குந்தன்மையியம்பக்கேட்டுணர்தியென்னிற்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாகையிற்
றொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை.

(இ - ள்.) சட்டகம்தன்னை நோக்கி - (தனது) வடிவத்தையே பார்த்து, யாரையும் சமைக்க தக்காள் - எவ்வளவு அழகுள்ள மகளிரையும் (பிரமதேவன்) சிருஷ்டிக்கத்தகுந்த பேரழகையுடைய சீதையினது, இட்டு இடை இருக்கும் தன்மை - சிறிய இடையானது இருக்கும் வகையை, இயம்ப கேட்டு உணர்தி என்னின் - (நான் உவமை) எடுத்துரைக்கக்கேட்டு நீ அறிவாயென்றால், '(அது முடியாது; ஏனெனில்);—கட்டுரைத்து உவமை காட்ட கண் பொறி கதுவா - உறுதியாக எடுத்துச்சொல்லி உபமானப்பொருளைக் காட்டுவதற்கு (அந்த இடையைக்) கண்ணாகிய இந்திரியமானது பார்க்கமாட்டாது [அந்த இடை கண்ணுக்குப் புலனாகாது]; கையின் தொட்ட எற்கு உணரல் ஆம் - கையினால் பரிசித்துப்பார்த்த என்னால் மாத்திரம் (உண்டென்று) அறியக்கூடும்; மற்று உண்டு எனும் சொல்லும் இல்லை - வேறு விதமாக உண்டென்ற சொல்லைச் சொல்வதற்கும் வழியில்லை; (எ - று.)

சீதாபிராட்டியின் இடையோ பரிசவுணர்ச்சியின் மூலமாக என்னால் மாத்திரமே உண்டென்று உணரப்பட்டு ஒருவாறு கண்ணுக்கும் புலனாகாதவாறு மிகவும் நுண்ணியதா யிருத்தலால் அதற்கு ஏற்ற உவமைப்பொருளையெடுத்துச் சொல்லுதல் முடியாதென்றவாறாம். அறிந்தபொருளைச் சுட்டிக்காட்டி அறியாதபொருளைத் தெரிவித்தலே உபமான பிரமாணத்தின் தன்மையாதலால், அருவப்பொருளாயிருக்கின்ற இடைக்கு அவ்வாறு உரைத்தல் இயலாதாயிற்றென்க. எவ்வளவு அழகுள்ள மாதரைப் படைக்கவேண்டினும் பிரமதேவன் இவளது வடிவத்தையே நோக்கிப் படைக்குமாறு உள்ளாள் சீதையெனச் சீதாபிராட்டியின் பேரழகுடைமையைத் தெரிவித்தவாறு. சட்டகம்தன்னை நோக்கி யாரையும் சமைக்கத்தக்காள் என்பதற்கு - தன்னை மேல்வரிச்சட்டமாகப் பார்த்துக்கொண்டு (பிரமதேவனால்) எல்லா மகளிரையும் படைத்தற்கு உரியவளெனினுமாம்; கருத்து ஒன்றே. இட்டிடை என்பது - சிறிய இடையென்ற பொருளில் வருதலை - "இட்டிடைப்பின்னை கேள்வன்," "இட்டிடைநுடங்க கொர்ந்து" என்ற இடங்களிலுங் காண்க. கதுவா - கதுவாது என்பதன் விகாரம்.

'உணரலாகாவுண்டெனும்' என்றும் பாடம். (கூஅ)

[வயிற்றின் வருணனை.]

கூகூ. *ஆலிலைபடிவந்தீட்டுமைய நுண்பலகைநொய்ய
பானிறதட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும்புனைந்துரைபொதுமைபார்க்கி
னேனுமென்றிசைக்கினேலாவிதுவயிற்றியற்கையின்னும்.

(இ - ள்.) பொதுமை பார்க்கின் - பொதுநோக்காகப் பார்த்தால்,— '(உலகத்திலுள்ள மகளிரது வயிறுகள்),—ஆல் இல்லை - ஆலிலையையும், படிவம் நீட்டும் ஐய நுண் பலகை - வடிவமெழுதப்பெற்ற அழகிய மெல்லிய சித்திரப் பலகையையும், நொய்ய பால் நிறம் தட்டம் - மென்மையாகிய [தொட்டால் அதுங்குவதுபோலத் தோன்றுகிற] பால்போல் வெண்ணிறமான வெள்ளித்தட்டையும், வட்டம் கண்ணடி - வட்டவடிவான கண்ணடியையும், இன்ன பலவும் - இவைபோல்வன பலவற்றையும், போலும் - ஒத்திருக்கும்,' என்று உரைத்த போதும் - என்று எடுத்துக்கூறினாலும், புனைந்துரை-தோத்திரமொழியாகும்; (இச்சீதாபிராட்டியின் வயிற்றுக்கோ), ஏலும் என்று இசைக்கின் ஏலா - (மேற்கூறிய ஆலிலைமுதலிய பொருள்கள் உபமானமாகப்) பொருந்துமென்று கூறினால் சிறிதும் பொருந்தாவாம்; இது வயிறு இயற்கை- இது(சீதையினது) வயிற்றின் தன்மையாகும்; இன்னும் -மேலும்,—

இதுவும், அடுத்த செய்யுளும் - ஒருதொடர்; வயிற்றைச்சேர்ந்த உந்தியை மேற்செய்யுளில் வருணித்தலால், 'இன்னும்' என்றனர்.

மற்றை மகளிரின் வயிற்றுக்கு ஆலிலைமுதலியவற்றை உவமைகூறினால், புனைந்துரையாகும்: அப்பொருள்களையே இச்சீதையின் வயிற்றிற்கு உவமை கூறினால் அவை உவமையாதற்கே ஏலா வென்பதாம்; எதிர்நிலையணி. புனைந்துரை - சிறுமையுள்ளதைப் பெருமையுள்ளதாக வருணித்துக்கூறுதல். படிவம் - வடிவம். ஐய - 'ஐ' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

'உரைத்தயாவும்,' 'பார்ப்பினேனுமென்றுரைக்கவேலா' என்று பிரதிபேதம்.

[உந்தியின் வருணனை.]

சo. சிங்கலில்சிறுகூதாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றுளையென்றாலும்புல்லியவுவமைத்தாமா
லங்கவளுந்தியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டாற்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றோய்.

(இ - ள்.) கடலினும் நெடிது கற்றோய் - கடலைப்பார்க்கிலும் அதிகமாகக் கற்றுணர்ந்தவனே!—, (சீதையின் உந்திச்சுழிக்கு), சிங்கல்இல் சிறுகூதாளி - கெடுதலில்லாத சிறுகூதாளிச்செடியும், நந்தியின் - நந்தியாவர்த்தமும் (என்ற இவற்றின்), திரள் பூ - வட்டவடிவமான மலர்களிலே, சேர்ந்த - பொருந்திய, பொங்கு பொன் தொளை - பெரிய அழகிய துளைகள், (உவமையாம்', என்றாலும் - என்று கூறினாலும், புல்லிய உவமைத்து ஆம் - (இச்சீதையின் உந்திச்சுழி) அற்பமாகிய உவமையையுடையதாகும்; 'சுழி -(கங்காநதியின்) நீர்ச்சுழியானது, அவள் உந்தி ஒக்கும் - அந்தச்சீதையின் உந்தியையொத்திருக்கும்,' என - என்று, கணித்தது உண்டு - (கங்காநதியைக் கண்டபோதுநான்) எண்ணியது உண்டு; கங்கையை நோக்கி சேறி - கங்காநதியின் சுழியை மனத்திலொராய்ந்துபார்த்து (அச்சிதையின் உந்தியை இன்னபடியுள்ளதென்று) அறிவாய்; (எ - று.)—'ஆல்' இரண்டும் - ஈற்றசை.

சீதையின் உந்திச்சுழிக்கு - கூதாளிமலரின் உள்தொளையும், நந்தியா வட்டமலரின் உள்தொளையும் சிறிதும் உவமையாகா; நான் கங்கைவழியாக வந்தபோது அக்கங்காநதியின் நீர்ச்சுழிக்குச் சீதையின் உந்திச்சுழியை உவமையாகக் கருதியது உண்டு; நீயும் அந்தக்கங்காநதியின் நீர்ச்சுழியும் சீதையின் உந்திச்சுழியும் ஒக்குமெனக் கருதுவா யென்பதாம்; பிரசித்தமாக உவமைகூறுகிற நீர்ச்சுழிக்கு, அத்தன்மையை யொழித்து, உபமேயமாகிய சீதையின் உந்திச்சுழியை உவமையாகக்கூறியதும் - எதிர்நிலையணியே. கூதாளி - ஓர்செடி; கூதாளம், கூதளம், தாளி, நறுந்தாளி எனவும் படும்; கார்காலத்து மலர்வது. நந்தி - நந்தியாவர்த்த மென்பதன் நாமைகதேசநாமக்ரஹணம் [ஒருபெயரின் ஒருபகுதியைக்கொண்டு அச்சொல்முழுவதையும் குறித்தல்]; இது, முதற்குறிப்பின் பாற்படும். துளையெனினும், தொளையெனினும் ஒக்கும் 'கத்யர்த்தா: புத்யர்த்தா:' "செல்லுதலென்ற பொருளையுடையவை அறிதலென்றபொருளையுங் காட்டும்" என்றகொள்கையின்படி, இங்கு 'சேறி' என்பதற்கு - அறிவாய் என்று பொருள் கூறப்பட்டது. அங்கு - அசைநிலை.

'சிறுகட்டாழி,' 'சிறுகட்டாளி,' 'புல்லிது புதுமைத்தாமல்' என்று பிரதிபேதம். (௪0)

[மயிரொழுங்கின் வருணனை.]

௪௧. மயிரொழுக்கெனவொன்றுண்டால்வல்லிசேர்வயிற்றின்மற்றென்
னுயிரொழுக்கதற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டிற்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநுடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொள்கொம்பென்றுணர்ந்துகோடி.

(இ - ள்.) வல்லி சேர் வயிற்றின் - கொடிபோன்ற சீதையைச்சேர்ந்த [சீதையினுடைய] வயிற்றிலே, மயிர் ஒழுக்கு என ஒன்று உண்டு - மயிரொழுங்கென்று ஒன்று உளது, என் உயிர் ஒழுக்கு - (அது) எனது உயிரொழுக்கேயாகும்; அதற்கு—, வேண்டும் உவமை ஒன்று உரைக்க வேண்டின் - தக்க உவமைப்பொருளொன்றை எடுத்துச்சொல்ல விரும்பினால்,— 'செயிர் இல் சிறு இடை ஆய் உற்ற சிறுகொடி நுடக்கம் தீர - குற்றமற்ற நுண்ணிய இடையென்று பொருந்திய சிறியகொடியானது துவளுதலில்லாததாக(ப் படரும்படி), குயிலுறுத்து அமைய வைத்த - நன்றாகப்பதியும்படி பொருந்தவைத்த. கொள்கொம்பு - கொழுகொம்பாகும்,' என்று—, உணர்ந்துகோடி - அறிந்துகொள்வாய்; (எ - று.)—மற்று - வினைமாற்று. ஆல் - அசை.

சீதையின் வயிற்றிலுள்ளதை உலகத்தார் மயிரொழுங்கென்று சொல்லுகிறார்கள்; அது மயிரொழுங்கு அன்று; எனது உயிரொழுங்காம் என, மயிரொழுக்கினிடத்தில் அத்தன்மையையொழித்து உயிரொழுக்கென மற்றொன்றின் தன்மையை ஏற்றிக்கூறியது - அவநுதியணியாகும்; இதனால், இராமபிரான் அம்மயிரொழுக்கினிடத்தில் மிக்கபேரன்பை வைத்திருத்தமை விளங்கும். இடைக்கு மேற்புறத்திலுள்ள வயிற்றின் மயிரொழுங்கை, இடையாகிய கொடி துவளாமற்படர்தற்கு நாட்டிய கொழுகொம்புபோலு மென்றார்; நற்

குறிப்பேற்றவணி; இவ்வணிக்கு - 'இடையாயுற்றகொடி' என்றவிடத்தி லுள்ள அவநுதியணி அங்கமாய்நின்றது. உயிரொழுக்கு - பிராணதாரை.

வல்லி - உவமவாகுபெயர். குயிலுறுத்தல் - நிலைநாட்டுதல். கொள் கொம்பு - கொடிகள் ஏறிப்படர்தற்காக நடுங் கொம்பு.

'சிற்றிடை யென்றுற்ற,' சிற்றிடையாளுற்ற,' 'குயில்வுறுத்தமைய வைத்த,' 'அமையவேய்ந்த,' 'கொழுகொம்பு' என்று பிரதிபேதம். (௪௧)

[வயிற்றுமடிப்பின் வருணனை.]

௪௨. அல்லியூன்றிடுமென் றஞ்சியரவிந்தந் துறந்தாட்கம்பொன்
வல்லிமூன் றுளவாற்கோலவயிற்றின்மற் றவையுமார
வில்லிமூன் றுலகின்வாழுமாதருந் தோற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றிவரையெனத்தோன்றுமன்றே.

(இ - ள்.) அல்லி ஊன்றிடும் என்று அஞ்சி அரவிந்தம் துறந்தாட்கு - அகவிதழ்கள் உறுத்துமென்று அச்சங்கொண்டு செந்தாமரை மலரை விட்டு வந்த இலக்குமிபோன்றவளாகிய சீதைக்கு, கோலம் வயிற்றில் - அழகிய வயிற்றினிடத்தில், அம் பொன் வல்லி மூன்று உள - அழகிய பொன்னிற மான கொடியின் வடிவமாகிய மடிப்புக்கள் மூன்றுஉண்டு; அவையும் - அம் மடிப்புக்களும்,—மாரன் வில்லி - மன்மதனாகிய வில்வீரன், மூன்று உலகில் உம் வாழும் மாதர் தோற்ற மெய்ம்மை சொல்லி - மூன்று உலகங்களிலும் வாழ்கின்ற மகளிரெல்லாம் (இந்தச்சீதையின் வடிவழகுக்குத்) தோற்றுப் போன உண்மையை எடுத்துச்சொல்லி, ஊன்றிய ஆம் - நிலை நிறுத்தியன வாகிய, வெற்றி வரை என - ஜயத்துக்கு அறிகுறியாகத் தீட்டிய இரேகை போல, தோன்றும் - விளங்கும்; (எ - று.)—மற்று - அசை: ஆல், அன்று, ஏ - ஈற்றசைகள்: தேற்றமுமாம்.

சீதை இலக்குமிபோன்ற வடிவழகுடையவளென்பது, முதலடியின் கருத்து: மநுஷ்யபாவனைகொண்டு நடக்கும் இராமபிரான் சீதையை இலக் குமியென்றே கூறினனெனப் பொருள்கொள்ளுதல், சிறப்பன்று. அரவிந் தம் துறந்தமைக்குக் காரணமாகாத அல்லியூன்றுதலைக் காரணமாகக் கற் பித்துக்கூறியது - ஏதுத்தற்குறிப்பேற்றவணி; இதனால், சீதையின் திரு மேனியினது மென்மை தொனிக்கும். அல்லி - அகவிதழ். (புறவிதழ் - புல்லி யெனப்படும்.) சீதையின் வயிற்றிலுள்ள மூன்று மடிப்புக்களை - மூவுலகி லுள்ள எல்லாமகளிரையும் வென்றதற்கு அறிகுறியாக மன்மதன் நாட்டி வைத்த மூன்று இரேகையாகக் குறித்தது, தன்மைத்தற்குறிப்பேற்றவணி; உத்தம ஜாதிமகளிர்க்கு வயிற்றில்மூன்று மடிப்புக்க ளுளவாக வருணித்தலை, "படைப்புழி வேதன் கமலமென்மலரைப் பழிக்கு மென்காத்திறு னடு வைப், பிடித்தலும் விரல்களழுந்திய வரையோ பெட்புறுமங்கையம்பருவ, மடித்தலஞ் சேர்த்தியேறுதற்கமைத்தபடிகொலோ வவ்வயிறணிந்த, மடிப் புறுவரையினழகினுக் குவமை மற்றுநா முரைக்குமா றெவனோ" என்ற விடத்திலுங் காணலாம்.

மலரம்புகளைக்கொண்டு உலகத்து உயிர்களையெல்லாம் வெல்லுந் திறம் வாய்ந்திருத்தலால், மன்மதன் 'மாரவில்லி' எனப்பட்டான். மாரன் - (பிராணிகட்கு மலரம்புகளால்) மரணவேதனையைச் செய்பவன்; வடசொல்.

'அல்லியூர்ந்திடும்,' 'துறந்தார்க்கு' என்று பிரதிபேதம். (சஉ)

[தனங்களின் வருணனை.]

சங. செப்பென்பென்கலசமென்பென்செவ்விளநீருந்தேர்வென்
றுப்பொன்றுதிரள்சூதென்பென்சொல்லுவென்றும்பிக்கொம்
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பெ [னைத்
தொப்பொன்றுமுலகிற்காணேன்பலநினைந்துலைவெனின்னும்.

(இ - ள்.) (சீதையின்தனங்களுக்கு), செப்பு என்பென் - இரத்தினச் சிமிழென்று உவமைசொல்வேன்; கலசம் எனபென - பொற்கலசமென்று உவமைசொல்வேன; செவ இளநீரும் தோவென் - (தெங்கின்) செவ்விள நீரையும் (உவமையாககூறுதற்கு) ஆராய்வேன்; துப்பு ஒன்று திரள சூது என்பென் - பவழத்தினுற் கடைந்துதொழில்செய்யப்பட்ட திரண்ட சொக்கட்டான்காயென்று உவமைகூறுவேன; தும்பி கொம்பை சொல்லுவென் - யானையின்தந்தங்களை உவமைசொலவேன; தப்பு இன்றி பகலின வந்த சக்கரவாகம் என்பென் - தவறுதலில்லாமல் பகற்காலத்தில் வெளிப்பட்டுவருகிற சக்கரவாகமென்று உவமைகூறுவேன்; ஒப்பு ஒன்றும் உலகில் காணேன - (சீதையின் தனங்களுக்கு ஏற்ற) உவமைப்பொருளொன்றையும் உலகிற காணப்பெறுதவனுய், பல நினைந்து - (செப்புமுதலிய) பலபொருள்களையும் (உவமையாககூறுமாறு முதலில) நினைந்து, (அவையொன்றும்ஏற்ற உவமைப்பொருளாகாமையால), இன்னும உலைவென - இன்னமும அலைவேன்; (எ - று.)

சீதையின்தனங்கள் ஒப்பற்றபேரழகுடையன வென்றவாறு. செப்பு முதலியன, தனங்களுககு வடிவுவமை. செவ்விளநீர என்பது - தெங்கில ஒருவகை. சக்கரவாகம் - பகலில் சூரியனதுமுன்னிலையில் ஆணும்பெண்ணுமாகக் கூடிக் களிக்குந் தன்மையுள்ள தொரு பறவை.

'பகரினந்த,' 'ஒப்பொன்று மூலக்குககாணேன்,' 'உலைவெனம்மா' என்றும் பாடம். (சஙு)

[தோள்களின் வருணனை.]

சச. கரும்புகண்டாலுமாலைக்காம்புகண்டாலுமாவி
யரும்புகண்டாரைசோரவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டாலுங்கோதைதோணினைந்துவமைசொல்ல
விரும்புகண்டனையநெஞ்சமெனக்கிலையிசைப்பதென்னே.

(இ - ள்.) கரும்பு கண்டாலும்-கரும்பைக் கண்டபோதும், மாலை காம்பு கண்டாலும் - ஒழுங்காயிருக்கின்ற மூங்கிலைக் கண்டபோதும், கண் அரும்பு ஆலி தாரை சோர அழுங்குவேன் - கண்களிலிருந்து உண்டாகின்ற மழைத்துளிபோன்றநீர்ப்பெருக்குத் தாரையாகப்பெருக வருந்துவேன் ; அறிவது

உண்டோ-(இவ்வாறு வருந்துவதன்றி ஏற்றஉவமைப்பொருளை யான்) தேர்ந்தறிதல் உளதோ? [இல்லை]; சுரும்பு கண்டு ஆலும் கோதை தோள் நினைந்து உவமை சொல்ல - வண்டுகள் மொய்த்து ரீங்காரஞ்செய்கின்ற மாலையைத் தரித்த சீதையினது தோள்களை நினைத்து உவமைசொல்வதற்கு, இரும்பு கண்டு அனைய நெஞ்சம் எனக்கு இலை - இரும்புபோன்ற வலியமனம் எனக்கு இல்லையே! இசைப்பது எனறோ - (யான) உவமை சொல்வது எவ்வாறோ? (எ - று.)

சீதையைப்பிரிந்திருக்கின்ற இந்நிலையில் கரும்பையும் இளமூங்கிலையும் காண நேரிடும்போதெல்லாம் சீதையின்தோள்கள் நினைவுகு வர, கண்ணீர் தாரைதாரையாய்ப்பெருக வருந்துவேன்; மிகவுமமெல்லிய அச்சீதையின தோள் கட்கு கடினமான கரும்பையும் மூங்கிலையும உவமைகூறுந்திறத்தில் இரும்பு போல் வலிய நெஞ்சம் எனகு இல்லையே! எனறவாறு. கரும்பையும் மூங்கிலையும் சீதையினதோள்கட்கு உவமைகூறுதல், ஸாஹஸம் எனறபடி., திரண்டு உருண்டு வளைந்து எழுகினற கரும்பும் இளமூங்கிலும் - இவ்வகை வடிவமும் வழுவழுப்பும் மினுமினுப்பும் பறறி அழகிய மகளிர தோளுக்கு உவமையாம். ஸ்மாரகபதார்த்தங்களாகிய [ஞாபகப்படுத்தும் பொருள்களாகிய] போலிப்பொருள்களெல்லாம் பிரிந்தாரகு நலிவுசெய்யு மெனபது, முதலிரண்டடிகளிற கவனிககததக்கது. 'ஆலை' எனறு பிரிதது, கருமபுகு அடைமொழி யாக்குவாரு முளர். கோதை - கோதையையணிந்தவளுககு, ஆகுபெயர. இரும்புகண்டனைய, கண்டு - அசை.

'சோர்வதன்றிவேறு,' 'சோருமதுவனறி,' 'தோளிணைகு' எனறுபிரதி பேதம். (௬௪)

[முன்கைகளின் வருணனை.]

சரு. முன்கையேயொப்பதொன்றுமுண்டுமூனறுலகத்துள்ளு
மென்கையேயிழுக்கமன்றேயியம்பினுங்காநதளென்றல்
வன்கையாழ்மணிகைகையென்றன்மற்றொன்றையுணர்த்தலன்றி
நன்கையாடடக்கையாமோநலத்தின்மேனலமுண்டாமோ.

(இ - ள்.) மூன்று உலகத்துள்ளும் - மூவுலகங்களிலும், முனகை ஒப்பது ஒனறும் உண்டு என்கையே - (சீதையினது) முனனங்கையைப்போன்றதாகிய ஒருபொருளாவது உண்டெனறு சொல்லுதலே, இழுக்கம் அனறே - குறைவல்லவோ! இயமபினும் - (ஒருகால் உவமையெடுதது்ச்) சொல்வோமென்றாலும், மணி கை - (அவளது) அழகிய முன்னங்கைகளை,—காந்தள் என்றல - காந்தண்மலரொன்று கூறுதல், வன்கை - வலியஒழுக்கமாம் [மிக்க கடுமையாம்]: யாழ் என்றல் - மகரயாழென்றுகூறுதல், மறறுஒனறை உணர்த்தல் - வேறொன்றைத் தெரிவித்ததாம்: அனறி - (இவவாறுவது) அல்லாமல், நல் கையாள் தட கை ஆமோ - (காந்தளும் மகரயாழும்) அழகிய கைகளையுடையளான சீதையினது சிறந்த முனனஙகைககு ஒப்பாகுமோ? நலத்தின்மேல் நலம் உண்டாமோ - (பிரசிததமாக) அழகிய பொருளெனறு ஏற்பட்டதற்கும்மேலே மிககஅழகிய பொருளும் இருக்குமோ? (எ . று.)

சீதையினது முன்னங்கைகட்கு உவமையாகப்பேசுதற்கு உரியபொருள் மூவுலகங்களுள்ளும் ஏதேனுமுண்டென்று சொல்வதற்கே இடமில்லை; ஒருகால் காந்தளமலரை எடுத்துக்கூறினால், அது அக்கைகளினும் வன்மையுள்ளதாகையால், சொல்லுவாரது மனம் கடுமையானதென்று புலப்படும்; அன்றி, மகரயாழை எடுத்துக்கூறினால் அது ஒருவகையிலும் ஒப்பாகாமையால் சம்பந்தமில்லாத வேறொன்றை யெடுத்துக்கூறியதாகும்: ஆகவே, இவ்விரு பொருளும் சீதையின முன்னங்கைக்கு ஒப்பாகமாட்டா: இவ்வாறு உவமையறவிருப்பதற்குக் காரணம் யாதெனின், காந்தள் யாழ் முதலிய உவமைப் பொருள்கட்கெல்லாம் தாம் உவமையாகுமாறு முன்னங்கைகள் அழகுமிக்கிருத்தலால் அவற்றினுஞ்சிறந்த வேறோருவமைப்பொருள் இல்லாமையே யென்பதாம். சீதையின் கைகள் உவமையற்றிருக்கின்றன வென்ற சிறப்புப் பொருளை 'நலத்தின்மேல் நலமுண்டாமோ' என்ற பொதுப்பொருள் சமர்த்தித்துநிற்பது - வேற்றுப்பொருள்வைப்பணியாம்; இது, 'காந்தளும் யாழும் சீதையின் முன்னங்கைக்கு ஒப்பாகமாட்டா' என்ற எதிர்நிலையணிக்கு அங்கமாய்வந்தது. 'வன்கையாழ்' என்றவடுத்து - மணிக்கையைக் காந்தளென்றலும், வலியகையிற்பிடித்தற்கு உரிய யாழ் என்றலும் மற்றொன்றை யுணர்த்தலாமென வுரைத்தலும் பொருந்தும். காந்தள் - குறிஞ்சிநிலக் கருப்பொருளாகிய ஓர்செடி: 'காந்தள்' என்ற செடியின்பெயர் - இங்கு, அம்மலருக்கு ஆகுபெயர்; இது - மகளிரின்கைக்கு வடிவிலும் நிறத்திலும், மென்மையிலும், அழகிலும் உவமம். மகரயாழ் - வடிவுவமம். 'நன்கையாள்' என்றது - சீதையென்ற மாத்திரமாய் நின்றது.

'உண்டுகொலுலகத்துள்ளும,' 'உண்டிம் மூவுலகத்துள்ளும,' 'மங்கையாண் மணிக்கையென்றல்,' 'நன்கையதடக்கய்யாதோ' என்று பிரதிபேதம்.

[கைகளின் வருணனை.]

சகூ. ஏலக்கொண்டீன்றபிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்க்
கோலநற்பகத்தின்காமர்குழைபடுங்கமலமென்பூ
நூலொக்குமருங்குலாடனூபுரம்புலம்புங்கோலக
காலுக்குத்தொலையுமென்றாற்கைக்கொப்புவைக்கலாமோ.

(இ - ள்.) ஏல கொண்டு ஈன்ற பிண்டி இளந்தளிர் கிடக்க - தகுதியாக வுண்டாகின்ற அசோகமரத்தின் இளந்தளிர்கள் கிடக்கட்டும்; யாணர்கோலம் கற்பகத்தின் காமர் குழை - புதுமையான அழகிய கற்பகவிருக்ஷத்தின் விரும்பக்கூடிய தளிர்களும, கமலம் படும் மெல் பூ - தாமரைக் கொடியினிடத்து உண்டாகின்ற மெல்லிய மலர்களும், நூல் ஒக்கும் மருங்குலாள்தன் நூபுரம் புலம்பும் கோலம் காலுக்கு தொலையும் என்றால் - நூலைப்போல நுண்ணிய இடையை யுடையவளாகிய சீதையினது சிலம்புகள் ஒலிக்கப்பெற்ற அழகிய கால்களுக்குத் தோற்றொழியுமானால், கைக்கு ஒப்பு வைக்கல் ஆமோ-(அவைகளைக்) கைகளுக்கு உவமைகூறுதல் தகுமோ? (எ - று.)

கற்பகத்தளிரும் தாமரைமலரும் சீதையின தாழ்ந்த உறுப்பாகிய கால்களுக்கே இணையாகாது தோற்றனவென்றால் உயர்ந்த உறுப்பாகிய அவளது

கைகட்கு ஒப்பாகாமல் அவைகள் தோற்குமெனச் சொல்லவேண்டுவது எதற்கு? என்ற கருத்துப்படவுரைத்த இதில்,-தொடர்நிலைச்செய்யுட்பொருட் பேறணி தொனிக்கும். இது, வடமொழியில் காவ்யார்த்தாபத்தி எனப்படும்: தண்டாபூபிகா நியாயம்பட ஒருவிஷயத்தை எடுத்துக்கூறுதல், இவ்வணியி னிலக்கணம். [தண்டாபூபிகா நியாயமாவது - எலி - தடியை விழுங்கிற்றென் றால் அதிலுள்ள அபூபத்தை விழுங்கிற் றென்றற்குக் கேட்கவேண்டுமோ? என்ற வாய்பாடுபடக் கூறுதல்.] 'கிடக்க' என்றதனால், 'அசோகந்தளிர் உவ மையாதற்குச் சிறிதும் ஏலாது' என்ற அலட்சியம் தோன்றும்.

யாணர் - புதுமை: உரிச்சொல். கல்பகமென்ற வடசொல் - வேண்டு வார் வேண்டியவற்றைக் கல்பித்துத்தருவது எனக் காரணப்பொருள்படும். காமர் - காமமரு என்பதன் மரூஉ.. குழை - இளந்தளிர்.

'காலைக் கற்பகத்தின்,' 'காலுக்குந் தொலையுமெனாற் கையொப்பின் வைக்கலாமோ' என்று பாடாந்தரங்கள். (௪௬)

[கைந்நகங்களின் வருணனை.]

௪௭. வெள்ளியமுறுவல்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
வள்ளுகிர்க்குவமைநம்மான்மயர்வறவகுக்கலாமோ
வெள்ளுதிர்நீரேமூக்கையென்றுகொண்டிவறியென்றுங்
கிள்ளைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமேலுரைக்கலாமோ.

(இ - ள்.) வெள்ளிய முறுவல் - வெண்மையான பற்களையும், செவ் வாய் - சிவந்த வாயையும், விளங்கு இழை - பிரகாசிக்கின்ற ஆபரணங்களையு முடைய, இளம் பொன் கொம்பின் - இளமையான அழகிய பூங்கொம்பு போன்ற சீதையினது, வள் உகிர்க்கு - கூர்மையான கைந்நகங்களுக்கு, உவமை - உபமானப்பொருளை, நம்மால்—, மயர்வு அற வகுக்கல் - மயக்கமில்லாமல் [தெளிவாக] எடுத்துக்கூறுதல், ஆமோ - முடியுமோ? [முடியாது]; (ஏனெனில்), நீரே மூக்கை எள்ளுதிர் என்று கொண்டு - நீங்களே (எனது) மூக்கை(ச் சீதாபிராட்டியின் கைந்நகங்கட்கு ஒப்பாகமாட்டாதெனறு) இகழ் கின்றீர்களென்று நினைந்து, இவறி - (அவற்றின்மேற்) கோபங்கொண்டு, என்றும் - எப்போதும், கிள்ளைகள் - கிளிகள், முருக்கின் பூவை - (மகளிர் வாய்க்கு உவமையாகும்) பலாசமலர்களை(த் தம்மைப்பழிக்கும மகளிர்வா யென்றே மயங்கி), கிழிக்கும் ஏல் - கிழிக்குமானால், உரைக்கல் ஆமோ-(அக் கிளிகளின் மூக்கை இச்சீதையின் கைந்நகங்கட்கு உவமையாக) எடுத்துச் சொல்லலாமோ? (எ - று.)

முருக்கமலரை மகளிர்வாய்க்கு உவமையாகக்கூறுதல் மரபு, கிளிகள் முருக்கமலரைத் தமது அலகால் இயற்கையாகக் கோதுதலை, தமது மூக்கைச் சீதையின் கைந்நகங்கட்கு இணையாகாதென்று பழிக்கும் மகளிர்வாயென்று அம்முருக்கமலரை மயங்கி அவற்றினிடத்துச் சீற்றங்கொண்டு கோதிக்கிழிப் பதாகக்குறித்தது, மயக்கவணியை அங்கமாகக்கொண்டுவந்த ஏதுத்தற்குறிப் பேற்றவணி. இவ்வாறு தமது அலகைச் சீதையின் கைந்நகங்கட்கு ஒப்பாகா தென்று கிள்ளைகளே நினைத்து, தம்மைப்பழிக்கும் மகளிர்வாயென்ற கார

ணம்பற்றிப் பலாசமலர்களைக் கோதிக்கிழித்தலால், அக்கிளிகளின் மூக்கு ஒருவாற்றானும் சீதையின் கைந்நகங்கட்கு ஒப்பாகாதென்பது தேற்றமாதலால், அதனை ஒப்புக்கூறுதல் தகாதென்பதாம். இது - முற்கூறிய தற்குறிப்பை அங்கமாகக் கொண்டுவந்த எதிர்நிலையணி. உள்ளபடி யெடுத்துக்கூறின், தோற்றவர்கட்குச் சீற்றம்பிறத்தலாகிய தன்மை, இங்குக் கிளிகளினிடத்துக் கருதத்தக்கது.

வெள்ளியமுறுவல் சேவ்வாய் - முரண்தோடை: சிரிக்கும்போது வெளித்தோன்றுகிற பற்களின்வெள்ளொளியையே சிரிப்பின்மே லேற்றிக், கூறியதாகக் கொள்க. மகளிர்க்கு வாய்சிவந்திருத்தல், உத்தமவிலக்கணம். 'வினைப்பகுதி வேண்டியபொருளை விளைக்கும்' என்றதனால், இங்கு, இவறுதல் - கோபித்தலென்ற பொருளைத் தந்தது.

'இளம்பொற்காம்பின்,' 'மயலற,' 'வருக்கலாமே,' 'இவரி,' 'பின்னும்,' 'கிழிக்குமஃதழிக்கலாமோ,' 'கிழிக்குமேயுரைக்கலாமோ' என்று பிரதி பேதம். (சஎ)

[கழுத்தின் வருணனை.]

சஅ. அங்கையுமடியுங்கண்டாலரவிந்தநினையுமாபோற்
செங்களிசிதறிநீலஞ்செருக்கியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கிவளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுநினைதியாயினவையென்றுதுணிதிதக்கோய்.

(இ - ள்.) தக்கோய் - சிறந்தவனே!—அம் கையும் அடியும் கண்டால் அரவிந்தம் நினையும் ஆ போல் - (சீதையினது) அழகிய கைகளையும் பாதங்களையும் பார்த்தால் செந்தாமரைமலரை நினைக்கும் விதம்போல,—செங் களி சிதறி நீலம் செருக்கிய தெய்வம் வாள் கண் மங்கைதன் கழுத்தை நோக்கி - செவ்வையாகிய மதர்ப்புக்குணம்மிக்குக் குவளைமலரையொத்த செருக்குக் கொண்ட தெய்வத்தன்மையுள்ள வாள்போன்ற கண்களையுடைய சீதையினது கழுத்தைப் பார்த்து, வளர் இளங் கமுகும் - வளருந்தன்மையுள்ள இளமையான பாக்குமரத்தையும், வாரி சங்கமும் - நீரிலுண்டாகுஞ் சங்கத்தையும், நினைதி ஆயின் - நினைவாயானால், அவை என்று துணிதி - (அச்சீதையின் கழுத்திற்குப்) பாக்குமரமும் சங்கமுமே உவமைப்பொருளென்று நிச்சயிப்பாய்; (எ - று.)

கழுத்துக்குப் பாக்குமரம் - திரட்சியிலும் வழுவழுப்பிலும் உவமை. குவளைமலர் - நிறத்திலும், வாள் - வடிவத்திலும், ஒளிசெய்வதிலுங் கூர்மையிலும் ஆடவரைவருத்துவதிலும், கண்களுக்கு உவமை. வாரி - நீர்நிலை. அங்கை - அகங்கையுமாம்; அகம்+கை: "அகமுணர்ச் செவிகைவரி னிடையன கெடும்." ஆ - ஆறு என்பதன் விகாரம். நினைதி ஆயின் நவை என்று பிரித்து, கமுகையும் சங்கையும் சீதையின்கழுத்திற்கு உவமையென்று நினைப்பினும் குற்றமாம் என்று உரைத்தலு மொன்று.

'நினைதியம் பொற், செங்கதிர்சிதறி,' 'நோக்கின்,' 'நினையலாகிய லதாவென்று' என்று பிரதிபேதம். (சஅ)

[இதுவும், அடுத்தகவியும் - வாயின் வருணனை.]

௪௯. பவளமுங்கிடையுங்கொவ்வைப்பழனும்பைங்குமுதப்போதுந்
துவள்விலவிலவங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென்றுரைக்கும்வண்ணஞ்சிவந்துதேன்றதும்புமாயிற்
குவளையுண்கண்ணிவண்ணவாயது குறியுமஃதே.

(இ - ள்,) குவளை உண் கண்ணி வண்ணம் வாய் அது - கருங்குவளைமலரையொத்த மையுண்ட கண்களையுடையாளான சீதையினது அழகியவாயானது, பவளமும் —, கிடையும் - செஞ்சடையும், கொவ்வை பழனும் - கோவைப் பழமும், பைங் குமுதம் போதும் - புதிய செவ்வல்லி மலரும், துவள்வு இல இலவம் - அசைதலில்லாத இலவமரத்தின் மலரும், கோபம் - இந்திரகோபமும், முருக்கு - பலாசமலரும், என்ற இ தொடக்கம் - என்ற இவை தொடக்கமான உவமைப்பொருள்கள், சால தவளம் என்று உரைக்கும் வண்ணம் சிவந்து - (தனக்குமுன்னே) மிகவும் வெண்மையுடையனவாமென்று கூறுமாறு (தான் அவைகளினும் மிக்க) செந்நிறம்பெற்று, தேன் ததும்பும் - தேன்நிரம்பப்பெற்றிருக்கும்; ஆயின் - என்றால், குறியும் - அதற்கு அடையாளமாகக் கூறத்தகுந்த பொருளும், அஃதே - அச்சீதையின் வாயேயாம்; (எ - று.)

சீதையின்வாய் பவளம் முதலியவற்றினும் மிகச்சிவந்து தேன் ததும்புதலால், அப்பவளம் முதலியவை சீதையின்வாய்க்கு உவமையாகமாட்டா; அதற்கு அதுவே உவமையாதுமல்லது வேறு உவமையில்லை யென்றவாறு; எதிர்நிலையணியை அங்கமாகக்கொண்டுவந்த இயைபின்மையணி: இது, வடமொழியில் அநந்வயாலங்கார மெனப்படும். பைங்குமுதப்போது - அன்றலர்ந்த குவளைமலர். இலவமலர்களின் இதழ்கள் தடித்திருக்குமாதலால், 'துவள்விலவிலவம்' என்றார். கோபம் = இந்த்ரகோபம்: "நாமைகதேசேநாமக்ரஹணம்;" இது, முதற்குறைவிகாரத்தின் இனமாம்: பட்டுப்பூச்சியென்று பொருள். இந்திரகோபமென்பது - இந்திரனுற்காக்கப்படுவது எனக் காரணப் பொருள்படும்; மழையினால் அது தோன்றிப் பாவுவதாலும், இந்திரன் மேகவாகனனாய் மழைக்குத் தலைமைபூணுதலாலும் அங்ஙனம் அதற்குப் பெயராயிற்றென்க. 'இத்தொடக்கம்' என்றதனால், வீழி, தொண்டை முதலியன கொள்க. இலவம் கோபம் முருக்கு என்றவிடத்து, எண்ணும்மைகள் விகாரத்தால் தொக்கன. தேன் - இனிமைக்கு இலக்கணை.

'குமுதப்பூவும்,' 'முருக்கெனச்சொல்லினுஞ்சால்,' 'குவளையங்கண்ணி வாயதெனவறி குறியுமஃதே', 'குவளையொண் கண்ணி' என்றும் பாடம். ()

௫௰. சிவந்ததோரமிழ்தமில்லைத்தேனில்லையுளவென்றாலுங்
கவர்ந்தபோதன்றியுள்ள நினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவாணுதலினுடன்பவளவாய்க்குவமைபாவித்
துவந்தபோதுவந்தவண்ணமுமைத்தபோதுரைத்ததாமோ.

(இ - ள்.) சிவந்தது ஓர் அமிழ்தம் இல்லை - சிவந்தநிறமுடையதாகிய அமிருதமொன்று இல்லை; (சிவந்தது ஓர்) தேன் இல்லை - (சீதையின் இதழ்

ன்போல அவ்வளவு) செந்நிறமானதொரு தேனும்இல்லை; உள என்றாலும் - (ஒருகால்) உள்ளனவானாலும், (அவை), கவர்ந்த போது அன்றி உள்ளம் நினைப்ப ஓர் களிப்பு நல்கா - எடுத்துஉண்டகாலத்திலல்லாமல் மனத்தினால் நினைத்தமாத்திரத்தில் ஒப்பற்றமகிழ்ச்சியை உண்டாக்கமாட்டா; (ஆதலால்), பவர்ந்த வாள் நுதலினாள்தன் பவளம் வாய்க்கு - செறிந்த ஒளியுள்ள நெற்றியையுடையவளாகிய சீதையினது பவழம்போற்சிவந்த வாய்க்கு, உவமை பாவித்து உவந்தபோது உவந்த வண்ணம் உரைத்தபோது - உவமைப்பொருளைப் பாராட்டித் தமக்கு உவப்புண்டானகாலத்தில் தாம் உவந்தவிதமாக எடுத்துக்கூறினால், உரைத்தது - (சீதாபிராட்டியின் வாய்க்கு ஒப்பாகச்) சொன்ன அப்பொருள், ஆமோ - தகுதியான உவமைப்பொருளாகுமோ? [ஆகாதென்றபடி]; (எ - று.)

அமிருதமோ வெண்ணிறமுடையது: செந்நிறமுடையதன்று; தேன் செந்நிறமுடையதாயினும் சீதையின்வாய்போலச் செந்நிறமுடையதன்று: மேலும் அவைகள் எடுத்து உண்டால்மாத்திரமே இனிமையைத்தருகின்றன; இச்சீதையின்வாயோ நினைத்தமாத்திரத்தில் இனிமையைத் தருகின்றது: ஆதலால், அவை சீதையின்வாய்க்கு உவமையாகாவாம். வேற்றுமையணியை [வியதிரேகாலங்காரத்தை] அங்கமாகக்கொண்டுவந்த எதிர்நிலையணி; (வேற்றுமையணியாவது, உபமானஉபமேயங்கட்கு வேறுபாடுதோன்றக்கூறுவது.) அமுதம் தேன் என்ற சிறந்தபொருள்களே இவ்வாறாக, கொவவைப்பழம் முதலிய பொருள்களைக் கண்டபோது அவை அழகாயிருக்கின்றன வென்ற மாத்திரத்தைக்கொண்டு உவந்து அவற்றைச் சீதையின்வாய்க்கு உவமையாகக் கூறினால்மாத்திரம் அவைகள உவமையாதற்கு ஏற்குமோ? ஏலா வென்பதாம். பவர்தல் - செறிதல். "வாளொளியாகும்" என்பது, தொல்காப்பியம்.

'உளதென்றாலும்,' 'ஒத்தவாமோ,' 'ஒத்ததாமோ,' 'உரைக்குமாதோ' என்று பாடாந்தரங்கள். (௬௰)

[பற்களின் வருணனை.]

௬௧. முல்லையுமுருந்துமுத்துமு றுவலென்றுரைத்தபோது
சொல்லையுமமிழ்துமபாலுந்தேனுமென்றுரைக்கத்தோன்று
மல்லதொன்றுவதில்லையமிழ்திற்குமுவமையுண்டோ
வல்லவேயலதுகோடிமாறிலாவாறுசான்றோய்.

(இ - ள்.) மாறு இலா ஆறு சான்றோய்-ஒப்பில்லாதபடி பெருமை பெற்றவனே!—'முறுவல் - (சீதையின) பற்கள்,—முல்லையும் - முல்லையரும்புகளையும், முருந்தும் - மயிலிறகினடியையும், முத்தும் - முத்துக்களையும், (போல்வனவாம்),' என்று உரைத்தபோது - என்று சொன்ன காலத்தில் [என்றுசொன்னால்], சொல்லையும் - (அவளது)சொற்களைப்பற்றியும், 'அமிழ்தும் - தேவாமிருதத்தையும், பாலும் - பாலையும், தேனும் - தேனையும்,(போலும்),' என்று உரைக்க - என்று கூறுமாறு, தோன்றும் - மனதில் எண்ணமுண்டாகும்; அல்லது ஒன்று ஆவதுஇல்லை - (அவள்பற்களுக்கு) வேறொரு பொருளும் உவமையாவது இல்லை; அமிழ்திற்கும் உவமை உண்டோ-தேவா

மிருதத்திற்கும் உவமையாகக்கூறப்படும் பொருளும் ஏற்படுமோ? வல்லை யேல் - (நீ) வல்லமையுடையையாயின், அறிந்துகோடி - (அச்சீதையின் பற்கள் இத்தன்மையனவென்று ஊகித்து) அறிந்துகொள்வாயாக; (எ - று.)

சீதையின்பற்களுக்கு உவமையாதற்கு ஏலாத முல்லையரும்பு முதலியவற்றை உவமையாகு மென்றால், அவவாறே, அவள்சொற்களுக்கு உவமையாகாத தேவாமிருதம் முதலிய பொருள்களையும் அச்சொற்களுக்கு உவமை கூறவேண்டிவரும்; உண்மையாகப்பார்த்தால் ஒருபொருளும் உவமையாக மாட்டாது. தேவாமிருதம தான உபமானமாக நிற்பதன்றி உபமேயமாக நின்று தனக்கு வேறொருவமையைப் பெறுதவாறுபோலச் சீதையின் பற்களும் தாம்உபமானமாய்நிற்பதல்லது தமக்கு வேறோருவமையைப் பெறா வென்பது, முதல் மூன்றடிகளின் பொருள். முறுவல் - புன்சிரிப்புமாம். 'அமிழ்திற்குமுவமையுண்டோ' என்ற உபமானவாக்கியம் 'சீதையின் பற்களுக்கு உவமைப்பொருளில்லை' என்ற உபமேயவாக்கியத்தைத் தெரிவித்ததால், பிறிதுமொழிதலணியாம்; இதனை, வடநூலார் அப்ரஸ்துதப்ரஸம்ஸாலங்கார மென்பர். அமிழ்து முதலியன சொற்களுக்கு உவமையாகாதவாறு போல, முல்லைமுதலியனவும் பற்களுக்கு உவமையாகாவென்பது - முன்னிரண்டடிகளின் கருத்து.

'உரைத்ததொன்றும்,' 'வல்லையால்' என்ற பாடம் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (௩௧)

[மூக்கின் வருணனை.]

௩௨. ஓதியுமெள்ளுந்தொள்ளைக்குமிழுமூக்கொக்குமென்றாற்
சோதிசெய்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்றா
வேதுவுமிலலைவல்லாரெழுதுவார்க்கெழுதவொண்ணா
நீதியைநோக்கிநீயேநினைதியாநெடிதுகாண்பாய்.

(இ - ள்.) நெடிது காண்பாய் - மிகுதியாகக் கற்றுணர்ந்தவனே!—'ஓதியும் - பச்சோந்தியையும், எள்ளும் - எட்பூவையும், தொளளை குமிழும் - தொளையுள்ள குமிழமலரையும, மூக்கு - (இச்சீதையின்) மூக்கானது, ஒக்கும் - போலும்.' எனறால்—, (பச்சோந்தி முதலிய அப்பொருள்கள்), சோதி செய் பொனனும் மினனும மணியுமபோல் துளங்கி தோனறா - ஒளிசெய்கின்ற பொன்னையும் பிரகாசிக்கினற இரத்தினங்களையும் போல விளங்கிக் காணப்படமாட்டா; ஏதுவும இல்லை - (அவவாறுஒளிசெய்தற்குஉரிய) காரணமும் (அப் பச்சோந்தி முதலிய பொருள்களிடத்தில்) இலலை; வல்லார் எழுதுவார்கு எழுத ஒண்ணா(து) - வல்லமையுடையவரான சித்திரமெழுதுவோர்க்கும (இமமூக்கு) எழுதமுடியாது; நீதியை நோக்கி - இததன்மையை ஆராய்ந்துபார்தது, நீயே நினைதி - நீயே (மூக்கினழகை) உணர்ந்துகொள்வாய்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

சீதையின் மூக்கிற்குப் பச்சோந்தி முதலியன உவமையாகமாட்டா; ஏனெனில், மூக்கோ பொன்போலவும் இரத்தினம்போலவும் பிரகாசிக்கின்றது; மேலும் சித்திரததில்எழுதமுடியாதவாறு பேரொளியிக்கு அழகுவிஞ்சி

யிருக்கின்றது; பச்சோந்திமுதலியனவோ அத்தன்மையினவல்ல வென்பதாம். வேற்றுமையணியை அங்கமாக்கொண்டுவந்த எதிர்நிலையணி. மின்னும் - மின்னலையும் எனினுமாம். ஒதி - ஒந்தியெனபதன் இடைக்குறை. தொள்ளை - தொளையென்பதன் விரித்தல்

'மூக்கொக்குமேற்று', 'சோதிசெம்பொன்னும்', 'துளங்கித்தோன்று, மேதுவுமில்லை', 'கெடிதுகண்டாய்' என்று பாடாந்தரங்கள். (௫௨)

[காதுகளின் வருணனை.]

௫௩. வள்ளைகததரிகைவாமமயிர்வினைக்கருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்
வெள்ளிவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
யுள்ளுதியுலகுக்கெல்லாமுவமைக்குமுவமையுண்டோ.

(இ - ள்.) 'வள்ளை - வள்ளைக்கொடியினிலையும், கத்தரிகை - கத்தரிக்கோலும், வாமம் மயிர் வினை கருவி - அழகிய மயிர்த்தொழிலுக்கு உரிய கருவியாகிய கத்தியும், (ஆகிய இவை மகளிர்காதுகளுக்கு ஒப்பாகும),' என்ன - என்று, பிள்ளைகள் உரைத்த ஒப்பை - அறிவு நிரம்பாதவர்கள் (மகளிர்காதுகளுக்குக) கூறிய உபமானத்தை, பெரியவர் உரைக்கின்-அறிவு நிரம்பிய பெரியோர் (சீதையினகாதுகட்கு உவமையாக) எடுத்துக்கூறினால், பித்து ஆம் - (அது) பைத்தியமாய்முடியும் [சிறிதும் தகா தென்றபடி]; வெள்ளி வெண் தோடு செய்த விழு தவம் விளைந்தது என்றே உள்ளுதி - (அச்சீதையின காதுகளிலணியப்பட்ட) வெள்ளிபோன்ற மிகவும் வெண்மையாகிய தோடு எனனும் காதணி முன்புசெய்த சிறந்த தவமே சீதையின் காதுகளாகப்) பலித்ததென்றே எண்ணுவாய்; உலகுக்கு எல்லாம் உவமைக்கும் உவமை உண்டோ - உலகிலுள்ள உவமைப்பொருள்கட்கெல்லாம் வேறோருவமைப்பொருள் கிடைக்குமோ? (எ - று.)

சீதையின் காதுகள் உலகிலுள்ள அழகியமகளிரதுகாதுகளுக்குத் தாம் உவமையாகுமாறு அழகு மிக்கிருத்தலால், அவற்றிற்கு வேறோருபமானப் பொருள் இல்லை யெனபதாம். 'உவமைக்குவமையுண்டோ' என்ற வாக்கியம் சீதையின் காதுகளுக்கு உவமைப்பொருள் ஒன்றுமில்லையென்று முனனிரண்டடிகளிற் கூறிய விஷயத்தைச் சாதித்து நிற்பது - வேற்றுப் பொருள் வைப்பணி யெனப்படும்; சமாத்திக்கவேண்டிய விஷயத்தை(ப் பொதுப்பொருளாலேனும், சிறப்புப்பொருளாலேனும்) சமர்த்தித்தல், இவவணியின் இலக்கணம். சீதையின் காதுகளை, தோடுகள்செய்த தவப்பயனது வடிவாகக் குறித்தது - தன்மைத்தற்குறிப்பேற்றவணியின பாறபடும். இங்கு, சீதையின் காதுகளுக்கு வள்ளைமுதலியன ஒப்பாகாவென்பதை வற்புறுத்தற்பொருட்டு எல்லாமகளிர்காதுகளுக்கும் பொதுவாக வள்ளை முதலியவற்றை உவமை கூறியுள்ள புலவர்களை 'பிள்ளைகள' என இழித்து உரைத்தனர். பிள்ளைகள் - இளமைத்தன்மையால் அறிவுநிரம்பாதவாகள் எனறவாறு. வாம மயிர் வினைக்கருவியாகிய கத்தரிகை எனக் கூட்டியுரைப்பாரு முளர். இங்கு, பித்து என்றது - அறிவின்மையென்ற பொருளைத் தருமென்னலாம். சிறப்

புப்பொருள்தரும் 'விழுமம்' என்னும் உரிச்சொல், 'விழு' எனக் குறைந்து நின்றது. 'வல்லை' என்னுங் கொடியின்பெயர் - இலக்கு முதலாகுபெயர்.

'உரைக்குமொப்பை,' 'வெள்ளைவெண்டோடு,' 'உலகிலென்னும்' என்றும் பாடம். (௫௩)

[கண்களின் வருணனை.]

௫௪. பெரியவாய்ப்பரவையொவ்வாபிறிதொன்றுநினைந்துபேச
வுரியவாயொருவருள்ளத்தொடுங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்காணோக்கிற்றேவர்க்குந்தேவனென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டடங்கண்களம்மா

(இ - ள்.) தேவர்க்கும் தேவன் என்ன கரிய ஆய் - தேவாதிதேவனாகிய திருமாலைப்போலக் கரியனவாகியும், வெளிய ஆகும - வெண்மைநிறமுடையனவாகியுமுள்ள, வாள் தட கண்கள் வாள்போன்ற நீண்ட (சீதையின) கண்கள்,—உண்மை தெரிய ஆயிரம் கால் நோக்கின் - (அவற்றின) உண்மையான தன்மை தெரியும்படி ஆயிரந்தரமபார்த்தாலும்—பெரிய ஆய்பரவை ஒவ்வா - மிகவும் விசாலமானவையாய்க கடலையும் உவமையாகப்பெறாவாம் [கடலினும்பெரியன என்றபடி]; பிறிது ஒன்று நினைந்து பேச உரிய ஆய் ஒருவர் உள்ளத்து ஒடுங்குவ அல்ல - வேறோருபமானப்பொருளை ஊகித்துச்சொல்லுதற்குத் தகுந்தனவாகி ஒருவரது மனத்திற்குள் அடங்குந்தன்மையனவல்ல; (எ - று.)—அம்மா - கண்களின் மிக்கவிசாலத்தைக குறிககும் வியப்பிடைச்சொல்.

"கடலினும் பெரிய கண்கள்" என்றபடி சீதையின்கண்கள் மிகப்பெரியனவா யிருத்தலால், அவற்றினதன்மையை உள்ளத்தினால் ஊகித்துணர்தற்கு ஒருவராலும் இயலா தென்பதாம். அக்கண்களை முழுதும் பார்த்து முடியவேண்டுமென்றாற் பலமுறைநோக்குமாறு அவை மிகப்பரந்திருக்குமெனபார், 'உண்மைதெரியவாயிரக்காணோக்கின' என்றார்; ஒருமுறைநோக்கினால் திருப்தி பிறவாதவாறு மிக்கபேரழகுடைமையால் இவவாறு கூறினாரெனினுமாம். கண்களின்கருவிழிகள் திருமால்போலக் கறுத்தும், அக்கருவிழிகளைச்சுற்றிலுமுள்ளபகுதிகள அத்திருமால் பள்ளிகொள்ளும் பாற்கடல்போல வெளுத்து மிருக்கு மென்க; "அமிழ்தினினவிளர்த்து உளநஞ்சினிற்கருகி" என்றார் பிறரும். கரியவாய் வெளியவாகும் - தொடைமுரண்.

'அடங்குவ வல்ல', 'தேவர்க்குந் தெய்வமென்ன,' 'தேவரிற் றெய்வமெனன' என்றும்பாடம். (௫௪)

[புருவங்களின் வருணனை.]

௫௫. கேளொக்கினன்றியொன்றுகிளத்திணுற்கீழ்மைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொப்பக்கூறிற்றன்றால்
வாளொக்குமவடிக்கணாடன்புருவத்துக்குவமைவைக்கிற்
நாணொக்கவளைந்துநிற்பவிரண்டில்லையநங்கசாபம்.

(இ - ள்) வாள் ஒக்கும் வடி கணாள்தன் புருவத்துக்கு உவமை வைக்கின் - வாள்போன்ற கூறிய கண்களையுடையவளான சீதையினது புருவங்

களுக்கு உவமையெடுத்து உரைத்தால்,—கேள் ஒக்கின் அன்றி ஒன்று இளத்திஞல் கீழ்மைத்து ஆம் - (தமக்குள்) ஒன்றையொன்று ஒத்தாலல்லாமல் வேறொரு பொருளை உவமை கூறினல் இழிவுவமையாகும்; (மேலும்), கோள் ஒக்கும் எனினின் அல்லால் குறி ஒப்ப கூறிற்று அன்று? (சாதாரண மகளிரது புருவத்துக்கு உவமையாவதொருபொருளையெடுத்து இது என்) மனப் போக்கிற்குப் பொருந்தி நிற்கின்றதென்று (அதைச் சீதையின் புருவங்கட்கு) உபமானமாகச் சொன்றேற் சொல்லலாமே யல்லாமல் உவமை பொருந்தக் கூறியதாகாது; (இனி, மன்மதனது வில்லே உவமைகூறலா மென்றால்), தாள ஒக்க வளைந்து நிற்ப இரண்டு அநங்க சாபம் இல்லை - இரண்டுநுனியும் பொருந்துமாறு வளைந்துநிற்பனவாகிய மன்மதனவிற்கள் இரண்டு உலகத்தில் இல்லை; (ஆதலால், அதுவும் உவமை கூறப்படாது); (எ - று.)—ஏ ஆல் - அசைகள்.

சீதையின புருவங்கள் தம்மில் ஒன்றையொன்று ஒத்தலன்றி வேறொருவமைப் பொருளைப் பெறமாட்டா; ஒருகால் கூறினால், அவ்வுவமை, ஏற்ற உவமையாகாது இழிவுவமையின்பாற்படும்; மேலும், ஏதோ ஒருபமானப் பொருளை என் மனப்போக்கிற்கு இசைந்திருக்கின்றதென்று கூறினறு கூறலாமே யல்லாமல், அது, அப்புருவங்கட்குப் பொருந்திய உவமையாகாது: இனி, மன்மதனுக்கு எப்பொழுதும் நுனியிரண்டும் வளைந்தனவாகிய இரண்டு விற்கள் உள்ளனவாயின, அவை சீதையின புருவங்கட்கு ஒருபடியொப்பாம்: அவ்வாறு நுனிவளைந்தனவாகிய இரண்டுவிற்கள் மன்மதனுக்கு இல்லையாகையால், அம்மன்மதனது வில்லை உவமையென்பதும் இயைவதன்று என்பதாம்.

கேள் - இனமானது. இழிவுவமையாவது - உயர்ந்த பொருளோடு இறப்ப இழிந்ததை உவமையாகக்கூறுவது; இவ்விழிவுவமையின் தன்மையை, "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்ற தண்டியலங்கார சூத்திரத்தின்கீழ் "வேறுபாடுடைய என்றது - இவை புனபுலவர்புணர்க்குங்கால் மிக்கோரால் வெறுக்கப்படுவதோர் சிறப்பின்மை தெரிந்து குற்றமென்று கூறப்படும்," "மன்னவர்க்கு நாய் வனப்புடையா வாள்வயவர்" எனவிழி இறப்ப இழிந்தது ஒன்றுதாகப் புணர்க்கப்பட்டது உவமை' என்ற உரைவாக்கியங்களால் அறிக. கோள - மனக்கொள்கை. அநங்கன் - அங்கமில்லாதவன; (ந+அங்க=அநங்க) சிவபிரானது நெற்றிக்கண்ணின நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து ஒழிந்தமைபற்றி, இவனுக்கு இப்பெயர். அநங்கசாபம் - வடசொற்றொடர்.

'குறியொக்க,' 'கூறலாமோ,' 'வளர்ந்துநிற்ப,' 'வளைந்தேநிற்ப' என்று பிரதிபேதம். (ருரு)

[நெற்றியின் வருணனை.]

ருகூ. நன்றுளநாளின நாளுநாளியடி நுதலைநாடிப்
பன்றுளுமபன்னியாற்றுமதியெனுமபண்பதாகி
முன்றுளின்முளைவெண்டிங்கள் முழுநாளுங்குறைவேயாகி
யென்நாளும்வளராதென்னினிறையொக்குமியல்பிற்றுமே.

(இ - ள்.) மூன்று நாளில் முளை வெள் திங்கள் - சுக்கிலபட்சத்துப் பிரதமையினன்று முளைக்கின்ற வெண்மையாகிய சந்திரனானது,—நல் நாள் நளினம் உம் நாணும் நளி அடி நுதலை நாடி - நல்ல பகற்காலத்து மலர்ந்துள்ள தாமரைமலரும் (தான் ஒப்பாகாது) வெட்கமடைதற்குக் காரணமான பெருமையுள்ள பாதங்களையுடைய சீதையினது நெற்றியின் அழகை ஆராய்ந்து, பல் நாளும் பன்னி - பலநாளும் (அதையே) சிந்தித்து, ஆற்றா - பொறாமல், மதி எனும் பண்பது ஆகி - மதியென்று சொல்வதற்கு ஏற்ற குணத்தை யுடையதாய், முழுநாளும் குறைவே ஆகி - (பதினாறுகலைகளும் நிரம்பவேண்டிய) பௌர்ணமிதினத்திலும் குறைவாகவே இருந்து), எ நாளும் வளராது எனின் - எந்நாளிலும் வளராமலே இருக்குமானால், (அப்பொழுதும் அச்சந்திரன), இறை ஒக்கும் இயல்பிற்று ஆம் - (சீதையின் நெற்றிக்குச்) சிறிதே உவமையாகின்ற தன்மையுடையதாகும்; (எ - று.)

சுக்கில பட்சத்துப் பிரதமையினன்று தோன்றும் பிறைச்சந்திரன் சீதையின் நெற்றியழகை நினைந்து பொறாமை கொண்டு தான அதற்கு ஒப்பாக வேண்டுமென்று எண்ணி, பலநாள் சிந்தித்துப் பதினாறுகலைகளும் நிரம்பிப் பூர்ணமாகவேண்டிய பௌர்ணமியினன்றும் தான் அவ்வாறாகாமல் பிறைச் சந்திரனாகவே யிருக்குமானால், அப்பொழுது தான் அச்சந்திரன சீதையின் நெற்றிக்கு ஒருபடியொப்பாகு மென்பதாம். இச்செய்யுள - உய்த்துணர்வணியின்பாற்படும்; 'இன்னபடியிருப்பின் இனனதுகூடும்' என்ற வாய்பாடு பொருந்தக் கூறுவது, இவ்வணியின் இலக்கணம்; வடநூலார் ஸம்பாவநாலங்காரமென்பர். ("இனறுமையாண் மாசிலா வாணமுகங்கண் டேக்கறேறு, ..... ஒளிர்சடையீர் சென்னி, வளராவா றென்னோமதி" என்ற செய்யுளின் கருத்து இங்குக் கருதத்தக்கது.) சந்திரன 'மதிக்குந் [மதித்தல் - ஆலோசித்தல்] தன்மையுள்ளது - மதி' என்று பொருள்படக்கூடிய தனது பெயர் நிலைத்து நிற்க வேண்டினால், சீதையின முகத்திற்கு ஒப்பாகுமாறு அவன் எப்போதும் வளராமலேயிருக்கவேண்டுமென்பது, 'மதியெனும்பண்பதாகி... எந்நாளும் வளராதென்னின்' என்பதன கருத்து; 'மதுவை [அமிருத கிரணத்தை] யுடையது மதி' என்று சந்திரனுக்குப் பெயராகின்ற இச்சொற்கு 'மதிக்குந் தன்மையுள்ளது - மதி' என வேறொரு வகையாற் காரணங் கரபித்துக்கூறியது - பிறிதினவிற்சியணியின் பாற்படும்; வடநூலார் நிருக்தியலங்கார மென்பர்' 'இறையொக்கு மியல்பிற்றாமே' என்றதனால், அப்போதும் முற்றுவமையாகா தென்றவாறு. தாமரைமலர் தான் மலர்தற்கு உரிய காலமாகிய பகற்காலத்திலும் சீதையின்பாதங்கட்கு ஒப்பாகா தென்பார் 'நன்னாளுநளினநாணுநளியடி' என்றார். 'முறைநாளுங் குறைவேயாகி யெந்நாளும் வளர்ந்ததென்னின்' என்ற பாடத்தைக்கொண்டு, ஈற்றேகாரத்தை எதிர்மறைப்பொருளதாக்கி, சந்திரன் சீதையின் நெற்றியழகைக் கண்டு பொறாமைகொண்டு பலநாளும் அதையே நினைந்து அவ்வாறு மதித்ததனால் மதியென்றபெயரைப் பெற்று நாளுக்குநாள் முறைமுறையாகக் குறைந்தபோதிலும் அடுத்த சுக்கிலபட்சத்தில் எந்நாளும் வளர்ந்து கொண்டிருப்பதனால், அது சிறிதும் சீதையின் நெற்றிக்கு உவமையாகா

தென்று பொருள்கொள்ளினுமாம். அடியென்றது - அடியையுடையாளுக்குச் சினையாகுபெயர்.

முன்நாள்: முதல்நாள் - சுக்கிலபட்சத்துப் பிரதமை; முழுநாள் - பூரணிமை.

"நன்னுளுநளின நாணுமுகத்தினை நுதலைநாடி" என்றபாடங்கொண்டு, முகம் நெற்றி என்ற இவ்விரண்டின் வருணனையாக இச்செய்யுட்குப்பொருள் கூறுதல் - முகத்தின்வருணனைக்காகத் தனியேயொருசெய்யுள் பின்பு வருதலாலும், நன்குபொருந்தாமையாலும், ஏற்றுக்கொள்தக்கதன்று. (௫௬)

[முன்நெற்றிமயிரின் வருணனை.]

௫௭. வனைபவரில்லையன்றேவனத்துநாம்வந்தபின்னை
யனையனவெனினுந்தாந்தமழகுக்கோரழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லவிதிசெயவிளைந்தநீலம்
புனைமணியளகமென்றும்புதுமையாமுவமைபூணா.

(இ - ள்.) நாம் வனத்துள் வந்த பின்னை - நாங்கள் வனத்தில்வந்த பிறகு, வனைபவர் இல்லை அன்றே - (சீதையின் முன்நெற்றிமயிர்களை வாரி) அலங்கரிப்பவர் இல்லையன்றோ; தாம் அனையன எனினும்-தாம் அத்தன்மையனவாலும் [அவ்வாறுவாரியலங்கரிக்கப்படாவிட்டாலும்], தம் அழகுக்கு ஓர் அழிவு உண்டாகா - தமது அழகுக்கு ஒருகுறைவு உண்டாகாது; வினை செய குழன்ற அல்ல - வாரித்தொழில்செய்வதனால் சுரிந்தனவல்லவாய், விதி செய விளைந்த - பிரமதேவன்படைத்ததனால் இயற்கையாகவே சுரிந்தனவான, நீலம் மணி புனை அளகம் - நீலரத்நத்தைப்போன்ற அந்த முன்னெற்றிமயிர்கள், என்றும் புதுமை ஆம் - எப்பொழுதும் புதுமையாகவே தோன்றுகின்றன; உவமை பூணா - ஒருவமைப்பொருளையும் ஏற்றுக்கொள்ள மாட்டா; (எ - று.)

வாரிப்புனைதலாகிய தொழில்செய்யாமலிருக்கையிலும் இயற்கையாகவே குழன்று அழகுமிக்குப் புதுமையாகத் தோன்றுகின்ற சீதையின அளகங்களுக்கு ஏற்றஉவமைப்பொருள் யாதொன்றையும் எடுத்துக்கூற இயலாதென்பதாம். பின்னிரண்டடிகள்—'வனத்தில் நாங்கள்வந்தபிறகு சீதையின் அளகங்கள் வனைதற்றொழிலின்றியும் அழகிற்குறைவுபடா' என்று முன்னிரண்டிகளிற் கூறிய விஷயத்தைச் சமர்த்தித்து நிற்பது - தொடர்நிலைச்செய்யுட்குறியணி. பேரழகுள்ள பொருள்கள் காணுந்தோறும் விருப்பத்தை விளைத்துப் பின்னுங்காணுமாறு புதியபொருள்போலத் தோன்றுதல் இயல்பாதலால், 'என்றும் புதுமையாம்' என்றார். குழலுதல் - கருமணல் படிந்தாற்போலப் படிப்படியாக அமைதல்.

அவயவத்தின் தொகுதிபற்றி, அளகத்தைப் பன்மையாற் கூறினர். அன்றே - தேற்றம்.

'தந்தமழகுக்கு,' 'தாழ்ந்தவழகுக்கோரழகுண்டாகா', 'சீதப், புனை,' 'இன்னும்புதுமையாம்,' 'என்றும் புன்மையாம்' என்றுபிரதிபேதம். 'புனை

மணிப்பவளம்,' 'என்னும்புன்மையாம்' என்ற பாடங்கள் செவ்வனே பொருள் படாவாம். (௫௭)

[முகத்தின் வருணனை.]

௫௮. கொண்டலின் குழவியாம்பல் குனிசிலை வள்ளை கொற்றக்
கெண்டையொண் டாளமென் றிக் கேண்மையகிடந்த திங்கண்
மண்டிலம் வதனமென்று வைத்தனன் விதியே நீயப்
புண்டரிகத்தை யுற்ற பொழுது பொருந்தித் தேர்வாய்.

(இ - ள்.) கொண்டலின் குழவி - காளமேகத்தின் கொழுந்தும், ஆம்பல் - செவ்வல்லிமலரும், குனி சிலை - வளைந்த விற்களும், வள்ளை - வள்ளைக்கொடியினிலையும், கொற்றம் கெண்டை - சிறந்த கெண்டைமீன்களும், ஒள் தாளம் - ஒளிபொருந்திய முத்துக்களும், என்ற இ கேண்மைய - என்று கூறப்பட்ட இத்தன்மையனவான பொருள்கள், கிடந்த - அமையப்பெற்ற, திங்கள் மண்டிலம் - சந்திரமண்டலத்தை, விதியே - பிரமதேவனே, வதனம் என்று வைத்தனன் - (சீதையின்) முகமென்று படைத்துவைத்தான்; நீ—, அ புண்டரிகத்தை - (சீதையினது) அந்தத் தாமரைமுகத்தை, உற்ற பொழுது - நெருங்கிக் காணும்பொழுது, அது பொருந்தி தேர்வாய் - (யான்கூறிய) அத்தன்மையை நன்றாகக்கண்டறிவாய்; (எ - று.)

சீதையின் முகமென்றபெயரிட்டு, கொண்டலின் குழவி முதலியவற்றையுடையதொரு சந்திரமண்டலத்தைப் பிரமதேவன் படைத்தனனென்று கூறியது - வஞ்சவொழிப்பணியின்பாற்படும்; வடமொழியில், கைதவாபஹ்நுதி எனப்படும். "கோளிழைத்தாமரையும் கொடியும் பவளமும் வில்லும், கோளிழைத்தண்முத்தமுந் தளிருங் குளிர்வானபிறையும் கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல் கண்ணனே, கோளிழைவாணுமுகம்" என்றது, இங்கு ஒப்புநோக்கத்தக்கது. குழற்கற்றைக்கு உவமையாகாது, அளகத்திற்கு உவமையாகலேனும், 'கொண்டலின்குழவி' என்றார். கொண்டற்குழவி - அளகத்திற்கும், செவ்வாம்பல்மலர் - வாய்க்கும், வளைந்தவிற்கள் - புருவங்கட்கும், வள்ளையிலைகள் - காதுகட்கும், கெண்டைமீன்கள் - கண்கட்கும், முத்துக்கள் - பற்களுக்கும் உவமையாமென்க. காண்டற்கு இனிமையிலும், நிறத்திலும், கண்டோரைமகிழ்வித்தலிலும் முகத்திற்குத் தாமரைமலர் உவமையாம். 'இக்கேண்மைய' என்றதனால், முகத்திற்கு உவமைகூறப்படுகின்ற பசுஞ்சாந்தி முதலியன கொள்க. கொண்டல் - நீரைக்கொள்வது எனக் காளமேகத்துக்குக் காரணக்குறி.

'ஒரிரண்டுமொன்றிக்கேண்மையில்,' 'விதியோனீ', 'மதியோர்நீ,' 'ஒத்தபொழுது,' 'பொருந்தியோராவாய' என்று பிரதிபேதம்.

"வளைபவரில்லை" என்ற தொடக்கத்துச் செய்யுளானது பின்னும், "கொண்டலின்குழவி" என்ற தொடக்கத்து இச் செய்யுளானது முன்னுமாகச் சிலபிரதிகளிற் காணப்படுகின்றன: அவ்வாறு இருத்தல், அளகத்தையும் முகத்திற்குறுப்பாகக் கொண்டு 'கொண்டலின்குழவி' என்று கூறியிருக்கும் கவியின் கருத்தோடு மாறுபடும். (௫௮)

[கூந்தலின் வருணனை.]

௪௯. காரினைக்கழித்துக்கட்டிக்கள்ளினோடாவியூட்டிப்
பேரிருட்பிழம்புதோய்த்துநெறியுறீஇப்பிறங்குகற்றைச்
சோர்குழற்றொகுதியென்றுசம்மைசெய்தனையம்மா
நேர்மையைப்பருமைசெய்தநிறைநறுங்கூந்தனீத்தம்.

(இ - ள்.) நேர்மையை பருமை செய்த நிறை நறுங் கூந்தல் நீத்தம் - நுண்மையைக்கொண்டு பருமையாகச் செய்ததான [மெல்லிய மயிர்களின் தொகுதியாலாகிய] அடர்ந்த நறுமணமுடைய (சீதையினது) கூந்தலின் தொகுதியானது,—காரினை - கரியமேகத்தை, கழித்து கட்டி - வெட்டிக் கட்டி, கள்ளினோடு ஆவி ஊட்டி - தேனையும் அகில் முதலியவற்றின் நறுமணப் புகையையும் ஊட்டி, பேர் இருள் பிழம்பு தோய்த்து - பெரிய இருட்கூழம் பிலே தோய்த்து, நெறிவு உறீஇ பிறங்கு கற்றை சோர் குழல் தொகுதி என்று - நெறித்தலைப்பொருந்தி விளங்குகின்ற கற்றையாகிய தொங்குந்தன் மையுள்ள குழல்தொகுதி யென்று பேர்வைத்து, சும்மை செய்து அனையது - சுமையாக வைத்தாற் போன்றது; (எ - று.)

மேகத்தைப் பிடித்துச் சீவிக்கட்டி, அதற்கு நெய்ப்பையும் வாசனையையும் உண்டாக்கி, பின்னும் கருநிறமமையச்செய்து, குழற்கற்றையென்ற பேரிட்டுப்பெரும்பாரத்தை வைத்தாற்போன்றது சீதையின் கூந்தல்தொகுதி யென்பதாம்; வஞ்சவொழிப்பணியை அங்கமாக்கொண்டுவந்த தன்மைத் தற்குறிப்பேற்றவுவமையணி. உபமேயத்தினும் உபமானம் சிறந்திருக்க வேண்டுமென்ற அலங்கார நூலார்கொள்கைக்கு மாறாக, உபமானப்பொருளாகிய மேகத்தை பிடித்துச் சீர்திருத்த வேண்டிற்று. உபமேயப்பொருளாகிய கூந்தலின் வைலக்ஷண்ய மெனக சாதாரணமாக மேகத்தினும் மிக்க நெய்ப்பும் செயற்கைமணமும், கருநிறமும் கூந்தற்கு உள்ளதனால், உவமைப் பொருளாகிய அம்மேகத்திற்கு அவற்றையெல்லாம் கூட்டியுரைக்கவேண்டுவதாயிற்று. பலமெல்லியமயிர்கள் திரண்டிருத்தலும், நெய்ப்பும், இயற்கையுஞ் செயற்கையுமாகிய நறுமணமும் மிக்க கருநிறமும், நெறிப்பும் - கூந்தலின் குணங்களாதல் அறிக 'கூந்தற்பாரம்' எனக் கூறப்படுதலால், 'சும்மைசெய்தனையது' என்றார். மெல்லியமயிர்கள் பல திரண்டு பருமையாக இடன்றன்வாதனால், கூந்தற்கு 'நேர்மையைப் பருமைசெய்த' என்ற அடைமொழி கொடுக்கப்பட்டது.

சும்மை - சுமையென்பதன் விரித்தல். அம்மா - வியப்பிடைச்சொல். நீத்தம் என்றது மிகுதியென்றமாத்திரமாய் நின்றது.

'காரினைக்கழித்துத்தள்ளி,' 'கள்ளினோடாவிகாட்டி,' 'கள்ளினோடாவி கூட்டி' 'தொகுதிச்சூழல்' என்பன - பாடாந்தரங்கள். (௪௯)

[சீதையின் நல்லிலக்கணவமைதி.]

௫௰. புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பி
னெல்லையின்மதிக்குமுண்டாங்களங்கமென்றுரைக்கு
மல்லவுஞ்சிறிதுகுற்றமகன்றிலவன்னமன்ன [மேத
கல்வியுலாளுக்கெல்லாகலனன்றிப்பிறிதுண்டன்றால்.

புள்ள உத்தமலக்ஷணங்கள், வண்ணம் - வாசம் - பங்கயத்தில் தங்கும் - மிகப்பல - அழகிய வாசனையுள்ள தாமரைமலரில் வசிக்கின்றவளான - இலக்குமிக்கும் நிரம்ப அமையவில்லை; செம் கயல் கருங் கண் செம் வாய் தேவரும் வணங்கும் தெய்வம் கொங்கை அம் குயிலுக்கு - அழகிய கயல்மீன்போன்ற கருவிழிகளைக்கொண்ட கண்களையும் சிவந்தவாயையுமுடைய தேவரும் வணங்குதற்கு ஏற்ற சிறப்புவாய்ந்த தனங்களோடு கூடிய குயில்போன்ற இன்சொற்களைப்பேசும் அந்தச்சீதைக்கு, ஒன்றும் குறைவு இலை - (உத்தமவிலக்கணங்களில்) ஒன்றாவது குறைவுபட்டிலது; குறியும் அஃதே - (நீ அவளை அறிதற்கு) அடையாளமும் அதுவே; (எ - று.)

சீதை இலக்குமியினும் நல்விலக்கணம் நிரம்பியவ ளென்பதாம். 'வணங்கும்' என்ற பெயரெச்சம், 'குயிலுக்கு' என்பதனோடு இயையும். இலக்கணம் - லக்ஷண மென்ற வடசொல்லின் தற்பவம். பங்கஜம் என்ற வடசொல் - சேற்றினின்றுதோன்றுவது என உறுப்புப்பொருள்படும்; (பங்கம் - சேறு, ஜம் - உண்டாவது.) தாமரைக்குக் காரணவிடுகுறி. உருவத்திலும் பிறழ்ச்சியிலும் மகளிர்கண்களுக்குக் கயல்மீன் உவமமாம். செவ்வரி பரந்திருத்தலால், கண்களுக்குச் செங்கயலை உவமைகூறினரு மாம். செங்கயற் கருங்கட் செவ்வாய் - தொடைமுரண். ஒன்றுங்குறைவின்றி நல்லிலக்கணம் முழுவதும் நிரம்பியிருத்தலால், சீதை, 'தேவரும் வணங்கும் தெய்வக்குயில்' எனப்பட்டாள். குயில் - உவமவாகுபெயர். உம்மைகள் மூன்றனுள், முதலிரண்டும் - உயர்வுசிறப்பும், ஈற்றது - இழிவுசிறப்புமாம்.

'குறைவில' என்றும் பாடம். (கக)

[கொங்கைகளின் வருணனை.]

கஉ. குழல் படைத்து யாழைச்செய்து குயிலொடு கிளியுங்கூட்டி
மழலையும் பிறவுந்தந்து வடித்தகைம்மலரின்மேலா
னிழைபொருமுலையினாளி னின்சொற்கு இயையச்செய்தான்
பிழையிலதுவமைகாட்டப்பெற்றிலன் பெறுங்கொலின்னும்.

(இ - ள்.) குழல் படைத்து - வேய்க்குழலை யுண்டாக்கியும், யாழை செய்து - வீணையைச் சிருஷ்டித்தும், குயிலொடு கிளியும் கூட்டி - குயிலையும் கிளியையும் படைத்தும், மழலையும் பிறவும் தந்து - (காரணவாய்ப் பறவையின்) எழுத்துநிரம்பாத மழலைச்சொல்லையும் மற்றும் இன்சொற்களுக்கு உவமையாகும் பொருள்களையும் இயற்றியும், வடித்த - பழகித்தேர்ந்த, கை - கைகளையுடைய, மலரின் மேலான் - தாமரைமலரில் வாழ்கின்ற பிரமதேவன், (பிறகு) இழை பொரு முலையினாள்தன் இன்சொற்கு இயைய செய்தான் - ஆபரணங்கள்புரளப்பெற்ற தனங்களையுடைய சீதையினது இன்சொற்களை நன்றாகப் பொருந்துமாறு அமைத்தான்; பிழை இலது உவமை காட்ட பெற்றிலன் - (அச்சொற்களுக்குக்) குற்றமற்ற உவமைப்பொருளொன்றையும் எடுத்துக்காட்டுமாறு உண்டாக்கவில்லை, இன்னும் பெறும்கொல் - இனிமேலும் படைப்பனோ? (அறியோம்); (எ - று.)

கூறியிருப்பினும் — தேன் ஒன்றே - தேன் ஒன்றும், அமிர்தம் ஒன்றே - பால் ஒன்றும், (உள்ளன); (ஆயினும்), அவை செவிக்கு இன்பம் செய்யா - அவ்விருபொருள்களும் (நாவிற்கு இனிமைதருமேயன்றிச்) செவிக்கு இன்பஞ்செய்யாவாம்; மற்று ஒன்று அமிழ்து ஓ - மற்றொன்றாகிய தேவாமிருதமும், நா நின்ற சுவை அன்றி நல்லது இல்லை - (முற்கூறியனபோல) நாவிற்கு உரிய சுவையுடையதாகுமே யன்றி வேறுநன்மையை யுடையதன்று [செவிக்கு இன்பஞ்செய்யாது என்றபடி]; (எ - று.)

ஒவ்வொன்றும் மிகவும் விசாலமான மூவுலகங்களிலும், தேடித்தேடிப் பார்த்து, சீதையின் சொற்களுக்கு ஒருபடியாக உவமைகாட்டுதற்கு உரியன வாய்த் தேன் பால் தேவாமிருதம் என்ற மூன்று சிறந்தபொருள்கள் உள்ளன வென்னலாமென்றால், அவைகளும் நாவிற்கு இனிமைதருவதல்லது செவிக்கு இன்பந்தாராமையால், சீதையின சொற்களுக்கு ஒப்பாகமாட்டா என்பதாம்; வேற்றுமையணியை அங்கமாகக்கொண்டுவந்த எதிர்நிலையணி. (௬௩)

[நடையின் வருணனை.]

௬௪. பூவருமழலையன்னம் புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத் தக்கசெலவின வெனினுந்தேறேன்
பாவருங்கிழமைத் தொன்மைப் பருணிதர் தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச் செவ்விநடைவருநடையணல்லோய்.

(இ - ள்.) நல்லோய் - நற்குண முடையோனே! பூ வரும மழலை அன்னம் - தாமரைமலரிற் பழகுந்தன்மையுள்ள மழலைச்சொற்களையுடைய அன்னப்பறவையும், புனை மடம் பிடி - அழகிய இளமையாகிய பெண்யானையும், என்ற இன்ன - என்ற இவைகள், தேவரும் மருள தக்க செலவின - தேவர்களும் கண்டு மருளும்படியான [சிறந்த] நடையையுடையன, எனினும் - என்றாலும், தேறேன் - (அவைகளைச் சீதையின் நடைக்கு உவமையென்று கூற) உறுதிகொள்ளேன்; பா வரும் கிழமை தொன்மை பருணிதர் - செய்யுள்செய்வதிற் பொருந்திய உரிமையையுடைய [பாண்டித்யமுடைய] பழமையான புலவர்கள், தொடுத்த - இயற்றிய, பத்தி - ஒழுங்காகிய, நா வரும கிளவி செவ்வி நடை - நாக்கிற்கு இனிமையாக வருகின்ற சொற்களையுடைய காவியங்களின் அழகியநடையை, வரும் - ஒத்த, நடையள் - நடையையுடையவளாவள்; (எ - று.)

உலகத்து மகளிர்நடைக்கு உவமையாகக் கூறப்படுகின்ற அன்னப்பறவை முதலியவற்றின நடையைச் சீதையின நடைக்கு ஒப்பாகுமென்று சிறிதுங் கருதேன; பழைய நல்லிசைப்புலவர்களியற்றியுள்ள காப்பியங்களின் நடை தட்டுத்தடங்கலின்றி எவ்வகையாலும் ஒப்பற்று விளங்குதல்போல இச் சீதையின நடையும் ஒப்பற்று விளங்கு மென்பதாம். 'நடை' என்னுஞ் சொல்லொப்புமைபற்றி, நூலின்நடை சீதையின்நடைக்கு உவமைகூறப்பட்டது. வடநூலார் நூலினநடையை சைலீ என்பர். "பூவிற்குத் தாமரையே" "பூவெனப்படுவது பொறிவாழ்பூவே," "பூவினுக்கருங்கலம் பொங்கு தாமரை" என்பவாதலால், பூ என்பது - தாமரையைக் குறித்து நின்றது.

இன்ன - இசைச்சுட்டடியாகப்பிறந்த பலவின்பாற்பெயர். செலவு - நடை. பத்தி - பத்தியெனக் கூறுவாரு முளர். நாவுருகிளவி - காப்பியத்திற்கு, அன்மொழித்தொகை. நடைவரு நடை, வரு - உவமவுருபு.

'எனவுரைதேறேன்,' 'பாவருகேண்மைத்தொன்மை' என்றும் பாடம். ()

[நிறத்தின் வருணனை.]

கூ௫. எந்நிறமுரைக்கேன்மாவினிளநிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கருகுமென்றான்மணிநிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாவொளிக்கும்வேண்டிற்
றன்னிறந்தானேயொக்குமலர்நிறஞ்சமழ்க்குமன்றே.

(இ - ள்.) (சீதையின் நிறத்திற்கு உவமை கூறவேண்டு மாயின்),— மாவின் இள நிறம் முதிரும் - மாமரத்தின் இளந்தளிரின்நிறம் (என்றும் ஒரு படிப்படாமல்) முதிர்ந்துபோகும்; பொன் நிறம் கருகும் - பொன்னின் நிறமும் (இந்நிறத்துக்குமுன்னே) கறுத்துத்தோன்றும்; மணி நிறம் உவமை போதா - இரத்தினங்களின் நிறமும் உவமையாதற்கு ஏற்ற ஒளியின்றிக் குறைந்திருக்கும்; மின் நிறம் நாணி எங்கும் வெளிப்படா ஒளிக்கும் - மின்னலின்நிறமோ (சீதையின் நிறத்தைக் கண்டு) வெட்கி எப்போதுமாக வெளிவராமல் மறைந்துகொள்ளும்; மலர் நிறம் சமழ்க்கும் - தாமரைமலரின் நிறமும் பின்வாங்கிவிடும்; என்றால்—, எ நிறம் உரைக்கேன் - வேறு எந்த நிறத்தை யெடுத்து உவமைகூறுவேன்? (யான்) வேண்டின் - (எப்படியாவது) உவமைகூறவேண்டுமென்றால், தன் நிறம் தானே ஒக்கும் - (அந்தச்சீதையின்) நிறம்(வேறுஉவமைபெறாமல்) தனக்குத்தானே ஒப்பாய்நிற்கும்;(எ-று.)

மாந்தளிர், பொன், இரத்தினங்கள், மின்னல், தாமரைமலர் என்பவற்றை மகளிர்மேனிநிறத்துக்கு உவமைகூறுதல், மரபு. இவற்றினும் சீதையின மேனிநிறம் அழகில் விஞ்சியிருக்கு மென்பது, கருத்து. எதிர்நிலையணியை அங்கமாகக்கொண்டுவந்த இயைபின்மையணி. இயற்கையாக ஒருபொழுதில் தோன்றிமறையுந்தன்மையதான மின்னலை, சீதையின் நிறத்தைக் கண்டு மறைவதாகக் காரணங் கற்பித்துக் கூறியதனால், 'மின்னிறம் நாணியெங்கும் வெளிப்படாவொளிக்கும்' என்பது ஏதுத்தற்குறிப்பேற்றவணியின் பாற்படும். நாள்செல்லச்செல்ல இளந்தளிர்கள் முதிர்ந்து நிறம் மாறுதல், இயல்பு. மற்றை - அசை; உவமைப்பொருளாகக் கூறிய தன் இனத்தைக் காட்டுமெனினுமாம். அன்றே - தேற்றம்.

'பொன்னிறங்கறக்கும்,' 'நாணிப்பொங்கி' என்று பாடபேதம். (கூ௫)

[இலக்குமிநாதன் பிராட்டியினிடஞ் சொல்லுமாறு சில அடையாளங்களை அநுமானுக்குக் கூறத்தொடங்குதல்.]

கூகூ. மங்கைய ரங்கை யொப்பார் மற்றுள வில்ல சென்னுஞ்
சங்கைபி னுள்ளந் தானே சான்றெனக் கொண்டு சதன்றோ
யங்கவ ளிடை யெல்லா மளந்தறிந் தருகு சார்ந்து
நின்கணவன் முகத்தி னுட்கு கெப்பொருப் பின்றுஞ் செய்யும்.

என்பது கொண்டு உணரலாம். ஓர் ஆடவனிடத்து மனஞ்சென்ற பின்பு வேறோராடவனை மணப்பது கற்பிற்கு இழுக்காதலாலும், விசுவாமித்திரமுனிவரோடு இராமபிரான் ஜநகமகாராஜனது அரண்மனைவழியாகச் சென்றபோது சீதை கன்னிமாடத்திலிருந்தவாறே அவ்விராமபிரானிடத்து அன்புகொண்டு நோக்கினளாதலாலும், 'வில்லிறுத்தவன் முனியொடும் வீர சினனலனேல் யான் உயிர்விடுவல்' என்று கூறினளென்க: ஆகவே, இங்குச் சீதையை 'கறைசெயாவேலையிற் பெரியகற்பினள்' என்றது-கருத்துடையடைகொளியணியின் பாற்படும்; வடநூலார் பரிகராங்குராலங்கார மென்பர்; அடைகொளி [விசேஷ்யம்] ஒரு கருத்தை யுட்கொண்டிருப்பது, இவ்வணியி னிலக்கணம்.

செய் - உவமவுருபு. அம்மாமுனி யென்பது அமாமுனியெனத் தொகுத்தல் விகாரம் பெற்று வந்தது வேலை - வேலா; வடசொல்; கடற்கரையின் பெயராகிய இச்சொல் இலக்கணையாற் கடலையுணர்த்திற்று. அஃது எலாம் - ஒருமைப்பன்மைமயக்கம்.

சிலபிரதிகளில் "சூழிமால்யானையின்" என்ற தொடக்கத்துச் செய்யுளின் பிறகு இச்செய்யுள் காணப்படினும் அஃது கதைப்போக்கை முறையே கூறிவரும் இச்சந்தர்ப்பத்திற்கு ஏலாமை காண்க.

'விடுவெனுருயிரொடு' என்று பாடபேதம். (௯௮)

௯௯ சூழிமால்யானையின் றுணைமருப்பிணையெனக்
கேழிலாவனமுலைக்கிரிசுமந் திடைவதோர்
வாழிவான் மின்னிளங்கொடியின் வந்தாளையன்
றாழியானரசவைக் கண்டதும்மறைகுவாய்.

(இ - ள்.) சூழி மால் யானையின் துணை மருப்பு இணை என - முகபடாமணிந்த மதங்கொண்ட ஆண்யானையினது ஒன்றோடொன்று ஒத்துள்ள இரண்டு தந்தங்களென்று சொல்லுதற்கு, கேழ் இலா - அவற்றை ஒப்பாகக் கொள்ளாத, வனம் - அழகிய, முலை கிரி - தனங்களாகிய மலைகளை, சுமந்து - தாங்கிக்கொண்டு, இடைவது - (பாரத்தைப்பொறுக்கமாட்டாது) பின்னிடைவதாகிய, ஓர் வான் மின் இளங்கொடியின் - ஒப்பற்ற வானத்திலுள்ள மின்னலினது இளங்கொடிபோல, வந்தாளை - வந்தவளாகிய அச்சீதையை, அன்று - அக்காலத்தில், ஆழியான் அரசு அவை கண்டதும் - ஆஜ்ஞாசக்கரமுடையவனாகிய ஜநகமகாராஜனது சபையில் பார்த்ததையும், அறைகுவாய் - சொல்வாய்; (எ - று.)

ஜநகமகாராஜனது சபையின்கண்ணுள்ள மண்டபத்தில் சீதை ஸர்வாலங்காரஸமேதையாக வர, அப்போது இராமபிரான் தான் அவளைக்கண்டதை அடையாளமாகக் கூறினனென்க; இதனை "பொன்னின்ஜோதிபூவின்வெறி சாந்து பொதி சீத, மின்னினிழலன்னவடன் மேனியொளிமான, வன்னமுமரம்பையருமாரமிழ்துகாணா, மன்னவையிருந்த மணிமண்டப மடைந்தாள்," "அன்னவளையல்லவெனவாமெனவயிர்ப்பான், கன்னியமிழ்தத்தை யெதிர் கண்ட கடல்வண்ணன், னுன்னுயிர்நிலைப்பதொருத்தியொடுழைத்தான், டின்னமிழ்தெழுக் கனிகொளிந்திரனை யொத்தான்" என்ற பாலகாண்டச்செய்யுள்

தனை அறிக. யானையின் தந்தங்களும் சீதையின் தனங்கட்கு ஒப்பாகுமென் பது, 'யானையின் இணைமருப்பினையெனக் கேழிலாவனமுலை' என்பதன் பொருள். முலைக்கிரி-உருவகம்- முலைக்கிரியைச் சுமக்கும் மின்னிளங்கொடி - சீதைக்கு, இல்பொருளுவமம். வாழி - அசை. ஆழி - ஆஜ்ஞா சக்கரம்: அத னையுடையவன் - ஆழியான். அவை - ஸபா என்ற வடசொல்லின் விகாரம். கண்டதம்மறைகுவாய், மகரமெய் - விரித்தல்.

'வாழியர்,' 'அருளுவாய்' என்பன - பாடாந்தரங்கள். (௬௯)

௭௦. முன்புநானறிகிலாமுளிநெடுங்கானிலே
யென்பினேபோதுவானினைதியோவேழைநீ
யின்பமாயாருயிர்க்கினியையாயினையினித
துன்பமாய்முடிதியோவென்றதுஞ்சொல்லுவாய்.

(இ - ள்,) ஏழை - மடமைக் குணமுடையவளே! நீ—, முன்பு நான் அறிகிலா முளி நெடுங் கானிலே - இதுவரையிலும் யான்சென்றறியாத தீய்ந்துபோன பெரியகாட்டிலே, என் பினே போதுவான் - என்பின்னே வரு மாறு, நினைதியோ - எண்ணுகின்றாயோ? இன்பம் ஆய் - (இதுவரையிலும் நீ எனக்குச்) சந்தோஷத்தை விளைவிப்பவளாயிருந்து, ஆர் உயிர்க்கு இனி யை ஆயினை - எனது அருமையான உயிர்க்கும் அநுகூலையாக இருந்தாய்; இனி - இனிமேல், துன்பம் ஆய் முடிதியோ - துன்பஞ்செய்பவளாக ஆகக் கடவையோ? என்றதும் - என்று (யான் சீதையைநோக்கிச்) சொன்னதை யும், சொல்லுவாய் - (நீ அவளிடஞ்) சொல்வாயாக; (எ - று)

கைகேயியின் விருப்பத்தின்படி இராமபிரான் பதினான்குவருடம் வன வாசஞ்செய்ய உடன்பட்டுச் சீதையினிடம் வந்து 'யான் பதினான்குவருடம் வனவாசஞ்செய்து மீண்டுவருவேன்; நீ இங்கு வருந்தாது இரு' என்று சொல்லினனாக, அதுகேட்ட சீதை கணவன் காட்டிற்குச்செல்கின்றானென் பதைப்பற்றிச் சிறிதும்வருந்தாது 'நீ இங்கு வருந்தாதிரு' என்று கூறிய சொல்லுக்கு மிகவருந்தி, உடன்வருவேனென்று வற்புறுத்திக்கூற, அதற்கு இராமபிரான் "முல்லையுங்கடன்முத்தமெதிர்ப்பினும், வெல்லும் வெண்ணகையாய் விளைவுன்னுவா, யல்லைபோதவமைந்தனையாதலி, னெல்லையற்ற விடர்தருவாயென்றான்" என்று கூறியது, இங்குக் கவனிக்கத்தக்கது. இது வரையிலுந் தான்சென்றறியாத காட்டிலே செல்லுகையில், வீரனாகிய தம்பி யுந்தானுமே யன்றிப் பெண்பாலாகிய சீதையை உடனழைத்துச்சென்றால் அவளைக்காப்பாற்றுவதில் தமக்கு மிகவும் வருத்தமுண்டாகுமெனறு கருதி, இராமபிரான் 'இன்பமாயாருயிர்க்கினியையாயினை யினித், துன்பமாய் முடி தியோ?' என்றனன். போது - புகுதுஎன்பதன் மரூஉ: 'போது' என்றே ஒருபகுதி யென்பாருமுளர். ஏழை - அண்மைவிளி.

'போதுவய்கினைதியோ' என்றும் பாடம். (௭௦)

௭௧. ஆனபோரசிழந்தடவிசேர்வாயுனக்
கொனலாதனவெலாமினியவோவினியெனு
மீனுலாநெடுமலர்க்கண்சணீர்விழவிழுந்
தானிலாவுயிரின்வெந்தயர்வதுமமுமைசெய்வாய்.

(இ - ள்.) 'ஆன பேர் அரசு இழந்து அடவி சேர்வீர்' - உனக்கு உரிய பெரிய இராச்சியத்தை விட்டுக் காட்டிற்குச்செல்பவனே! இனி - இனிமேல், யான் அலாதன எலாம் உனக்கு இனியவோ-என்னைத்தவிர மற்றைப்பொருள்களெல்லாம் உனக்கு இன்பந்தருவனவோ? [என்னொருத்தியினால்தான் உனக்குத் துன்பம்போலும்],' எனா - என்று கிஷ்டுரமாக (என்னைநோக்கிக்), கூறி, (சீதையானவள்), மீன் உலாம் நெடு மலர் கண்கள் நீர் விழ விழுந்து - மீன்கள் போலப்பிறழ்வனவும் பெரியதாமரை மலரைப்போன்றனவுமான கண்களினின்று நீர்பெருகக் கீழேவிழுந்து, ஊன் கிலா உயிரின் - உடம்பில் நிற்க மாட்டாது தத்தளிக்கின்ற உயிர்போல, வெந்து அயர்வதும் - மிகவும் வருந்திச் சோர்ந்ததையும், உரைசெய்வாய் - (நீ அவட்குச்) சொல்வாய்; (எ - று.)

இராமன் வனவாசஞ்செய்யப் புறப்படுகின்ற காலத்தில் சீதையை நோக்கி 'நீ என்னுடன் வருவாயாயின் எனக்குத் துன்பத்திற்குக் காரணமாவாய்' என்று சொல்ல, அதுகேட்டுச் சீதை மிகவும்வருந்தி "கொற்றவன்னது கூறலுங்கோகிலஞ், செற்றதன்னகுதலையள் சீறவா, ஞற்றுகின்றதுயரம் தோன்றமே, யெற்றுறந்தபினின்பங்கொலாமென்றாள்" என்று கூறியது, இங்கு உணரத்தக்கது. இராமபிரான் தசரதசக்கரவர்த்தியினது மூத்தகுமாரனாய்ப் பட்டத்துக்கு உரியவனாதலாலும், தசரதசக்கரவர்த்தி இளவரசுபட்டாபிஷேகஞ்செய்வதாகத் துணிவுகொண்டிருந்த காலத்துக் கைகேயியின் வரத்தினால் தவறியதனாலும், 'ஆனபேரரசிழந்து' எனப்பட்டது. (எக)

எஉ. மல்லன்மாநகர்துறந் தேகுநாண்மதிதொடுங்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்மு
னெல்லைதீர்வரியவெங்கானம்யாதோவெனச்
சொல்லினாளஃதெலாமுணரநீசொல்லுவாய்.

(இ - ள்.) மல்லல் மா நகர் துறந்து ஏகும் நாள் - வளத்தையுடைய பெரிய அயோத்தியாநகரத்தை விட்டு (வனத்திற்குச்) சென்றகாலத்தில்,— மதி தொடும் கல்லின் மா மதில் மணி கடை கடந்திடுதல் முன் - சந்திரனைத் தீண்டுகின்ற [மிகவும்உயர்ந்த] கற்களினாலாகிய பெரிய மதிலினது அழகியவாயிலைக் கடப்பதற்குமுன்னமே [கடந்தவுடனே என்றபடி], எல்லை தீர்வு அரிய வெங் கானம் யாதோ என சொல்லினாள் - (என்னைநோக்கிச் சீதை) 'எல்லையில்லாத கொடியகாடு எவவிடத்திலுள்ளது?' என்று வினவினாள்; அஃது எலாம் உணர நீ சொல்லுவாய்—; (எ - று.)

"நீண்டமுடிவேந்தனருளேந்திநிறைசெல்வம், பூண்டதனைநீங்கி நெறிபோதலுறுநாளி, லாண்டகராரையொடுவாயிலகலாமுன், யாண்டையதுகானெனவிசைத்ததுமிசைப்பாய்" என்று இச்செய்யுளின் அநுவாதமாகச் சுந்தரகாண்டத்து வருவது, இங்குக் கவனிக்கத்தக்கது. இதனால், கணவன்திருமனையையேயன்றி வேறொன்றையும்அறியாத பிராட்டியினது தன்மையும், சௌகுமாரியமும், பேதைமையும் வெளியாம். மல்லல் - உரிச்சொல்; "மல்லல் வளனே" என்பது, தொல்காப்பியம். மதிதொடுங்கல்லின்மாமதில் - தொடர்புயர்வுநவிற்சி.

'கடந்திடுதலும்,' 'சொல்லினாளிதெலாம்' என்றும் பாடம். (எஉ)

## பதின்மூன்றாவது

# பிலநீங்குபடலம்.

சுக்கிரீவனது கட்டளைப்படி தென்திசைநோக்கிச்சென்ற அங்கதன்முத லிய வீரர்கள் பலவிடங்களிலுஞ் சீதையைத்தேடிக்கொண்டு சென்று, வழி யிடையிலுள்ள தொரு பாலைவனத்திற் புக்கு அந்நிலத்தின் வெப்பத்தைத் தாங்கும் வலியிலராய், அங்குக்காணப்பட்டதொரு பிலத்தி லிறங்கி அது இருள்செறிந்திருக்கமையால் வழிதெரியாது திகைத்து அநுமானது வாலைப் பற்றிக்கொண்டு சென்று அங்கிருந்ததொரு நகரத்திற் புக்கு அங்குவசித் திருந்த ஒருதவப்பெண்ணின் உதவியால் யாவரும் அப்பிலத்தினின்றுநீங்கி வெளிவந்த செய்தியைக் கூறும் பாகம். பிலம் - வடசொல் : நிலத்தின் கீழறை; மலைக்குகைபோல்வது. சிலபிரதிகளில், இப்படலத்திற்கு 'பிலம் புக்குநீங்குபடலம்' என்று பெயர் கூறப்பட்டிருக்கின்றது.

[சுக்கிரீவன்கட்டளைப்படி மற்றைமூன்றுதிசைகளிலும்
வாநரவீரர்கள் செல்லுதல்]

க. போயினர்போனபின்புறநெடுந்திசைகடோ
றேயினனிரவிகாதலனுமேயினபொருட்
காயினரவருமங்கன்னநாளவதியிற்
றாயினருலகினைத்தகைநெடுந்தானையார்.

(இ - ள்.) போயினர் - (அங்கதன்முதலிய வீரர்கள் சுக்கிரீவன் கட்டளை யின்படி தென்திசையைநோக்கிப்) போனார்கள்; போன பின் - (அவர்கள் அவ்வாறு) சென்றபின்பு,—இரவி காதலனும் - சூரியனது குமாரனாகிய சுக் கிரீவனும், புறம் நெடுந் திசைகள்தோறு ஏயினன் - (தென்திசைக்குப்) புறம்பான பெரிய மற்றைத்திசைகளிலெல்லாம் (விநதன்முதலிய வாநர வீரர்களைச் சீதையைத்தேடுமாறு) விடைகொடுத்து அனுப்பினான்; ஏயின பொருட்கு ஆயினர் அவரும் - (சுக்கிரீவன்) ஏவின தொழிலாகிய சீதை யைத் தேடுவதற்கு இசைந்தவராகிய அவ்வாநரவீரரும், உலகினை தகை நெடுந் தானையர் - உலகமுழுவதையும் (தமது வலிமையால்) தடுக்கவல்ல பெருஞ்சேனையை யுடையவர்களாய், அன்ன நாள் அவதியில் - (சுக்கிரீவ மகாராஜன் தமக்குக்குறித்த) அந்த ஒருமாதத்தவணைக்குள் (தேடிவருவதாக), தாயினர் - தாவிச்சென்றார்கள்; (எ - று.)

தென்திசை தவிர மற்றைத்திசைகளில் இன்னாரின்னார் அனுப்பப்பட் டனரென்பதை, நாடவிட்டபடலத்துப் பத்தாஞ்செய்யுளிற் காண்க. மூன்றாமடி - முற்றுமோனை. 'அன்னநாளவதி' என்றது - "ஒருமதி, முற்று றாதமுன் முற்றுதிரின்விடை" என்று கீழ்க்கூறியதைச் சுட்டியது. அங்கு- அசை. 'உலகினைத்தகை' என்றதை - தானைக்கேனும், தானையுடையார்க் கேனும் அடைமொழியாக்கலாம் : உலகம் முழுவதும் எதிர்ப்பினும் தாம் தடுத்துப் போர்செய்யவல்ல பேராற்றலுள்ளாரென்பது இதன்பொருள்.

'ஆயினரவரை,' 'உலகினில்' என்று பாடபேதம். (க)

[கவிக்கூற்று: மற்றைத்திசைகளிற் சென்றவர் செய்திகூறாமல்
தென்றிசையிற் சென்றவர் செய்தி கூறுவேனெனல்.]

௨. குன்றிசைத்தனவெனக்குலவுதோள்வலியினார்
மின்றிசைத்திடுமிடைக்கொடியைநாடினர்விராய்
வன்றிசைப்படருமாறொழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம்.

(இ-ள்.) குன்று இசைத்தன என குலவு தோள் வலியினார் - மலைகள் பொருந்த வைக்கப்பட்டுள்ளன வென்று சொல்லுமாறு விளங்குகின்ற தோள்களின் வலிமையையுடைய வானரர்கள், மின் திசைத்திடும் இடை கொடியை விராய் நாடினர் - மின்னலும் திகைக்கும்படியான [மின்னலைக்காட்டிலும் நுண்ணிதான] இடையையுடைய பூங்கொடிபோன்ற சீதையைப் பொருந்தித் தேடினவர்களாய், வல் திசை படரும் - வலிய (கிழக்கு மேற்கு வடக்கு என்ற மூன்று) திசைகளிலே செல்லுகின்ற, ஆறு - வகை, ஒழிய - (சொல்லப்படாது) தவிர [அதனைக்கூறாதுவிட்டு],—வண் தமிழ் உடை தென்திசை சென்று உளார் திறன் எடுத்து உரைசெய்வாம் - வளமான தமிழ்ப் பாஷையையுடைய தெற்குத்திசையிற் சென்றவராகிய வானரரது செய்கையை எடுத்துக் கூறுவோம்; (எ - று.)

மற்றைத்திசைகளிற் சென்ற வானரர்செய்தி கதைப்போக்கிற்கு அவ்வளவாக வேண்டுவதன்றாகையால், அதனையொழித்து, இக்கதைக்கு இன்றியமையாததான தென்திசையிற் சென்ற வானரர்செய்தியைக் கூறுகின்றாரென்க. தோளுக்கு மலையுவமை - சலியாமையிலும், மிக்க *பருமையிலும், ஊறஞ்சா வலிமையிலும். திசைத்திடு மெனினும், திகைத்திடு மெனினும் ஒக்கும். சிறந்த தொண்டர்கள் பலர் கடவுளைத்துதித்தது தமிழினாலேயாதலாலும், வடமொழியோடு ஒப்புமை தமிழுக்கேயன்றி மற்றைப் பாஷைகட்கு இல்லாமையாலும், செவிக்கு இனிய செஞ்சொலுடைமையாலும், 'வண்டமிழ்' எனப்பட்டது. 'உரைசெய்வாம்' - கவிகளுக்கு உரிய இயற்கைத் தனித்தன்மைப்பன்மை. கொடி - ஆகுபெயர்.

'குலவுதோள்', 'மின்றிகைத்திடும்', 'சென்றதோர்திறன' என்றும் பாடம். (௨)

[வானரர் விந்தியமலை சேர்தல்.]

௩. சிந்துராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலானராவினோ
டிந்தியாறெய்தலானிறைவன்மாமௌலிபோல்
விந்தநாகத்தின்மாடெய்தினார்வெய்தினால்.

(இ-ள்.) சிந்துராகத்தொடும் - சிந்தூரமென்னுஞ் செம்பொடியோடும், திரள் மணி சுடர் - திரண்டுள்ள மாணிக்கங்களினொளி, செறிந்து - நெருங்கி, அந்தி வானத்தின் நின்று அவிர்தலான் - அந்திவானத்தில் தோன்றுகின்ற செவ்வானம்போல விளங்குதலாலும், அரவினோடு இந்து யாறு எய்தலான் -

பாம்புகளும் சந்திரனும் நதியும் பொருந்துதலாலும், இறைவன் மா மௌலி போல் - சிவபிரானது பெரிய ஜடாமகுடம்போன்ற, விந்தை நாகத்தின் - விந்தியபருவதத்தினது, மாடு - சாரலை, வெய்தினில் எய்தினர் - விரைவாகச் சென்றுசேர்ந்தார்கள், (வானரர்கள்); (எ - று.)

சிவபிரானுக்கும் விந்தியமலைக்கும் செம்மொழிச்சிலேடையுவமை. (செம்மொழிச்சிலேடையாவது - சொற்கள் வெவ்வேறுவகையாகப் பிரிக்கப் படாமல் பலபொருள்படுவது.) சிவபிரான் செந்நிறமாகிய சடைமுடியை யுடைமையும், தாருகவனமுனிவர்களாலேவப்பட்டுத் தன்னைக்கொல்லவந்த நாகங்களை வலியடக்கி ஆபரணமாக அணிந்துகொண்டதும், தக்ஷமுனிவரது சாபத்தால் க்ஷயமடைபவனாய்க் கலைகுறைந்து வந்து சரணமடைந்த சந்திரனை முடிமீதுகொண்டு வளமளிததுப் பாதுகாத்தமையும், பகீரதனது வேண்டு கோளினாற் கங்காநதியை முடிமீது கொண்டதுங் காண்க. விந்தியபருவதத்தில் சிந்தூரச்செம்பொடியாலும் மாணிக்கங்களினாலும் செந்நிறமமிகுந்திருத்தலும், நாகங்களும் நீரருவிகளும் இருத்தலும், மிக உயர்ந்த அம்மலையின் மேல் சந்திரன் வருதலும், இயல்பு. இச்செய்யுளை, "பாணி பிறை கொன்றை பணி சூடி மானேந்தி, வேணியானைப் பொருவும் வேங்கடம்" என்றதனோடு ஒப்பிடுக.

சிந்தூரகம் - ஸிந்தூரகம் என்னும் வடமொழியின் விகாரம்; சிந்துரச்செம்பொடி. அந்தி - ஸந்த்யா என்ற வடமொழியின் சிதைவு; இது - பகலோடு இரவு கூடுவதாகிய மாலைச்சந்திக்கும், இரவோடு பகல் கூடுவதாகிய காலைச்சந்திக்கும் பொதுப்பெயர்; இவ்விருவேலைகளிலும் செவ்வானமுண்டாதல், இயல்பு. இறைவன - 'இறைமை' என்னும் பண்பினடியாப்பிறந்த பெயர்; இறைமை - தலைமை: வ - பெயரிடைநிலை; அன்றி, அடியார்கள் மனதில் தங்குபவனெனினுமாம்; (இறுத்தல் - தங்குதல்.) நாகம் - சலியாததெனக் காரணப்பொருள்படும்.

'தாவினோ, டிந்துவாரோடலா லிறைவனோ டொத்திடும்' என்றும் பாடம்.

[இதுமுதல் மூன்றுகவிகள் - வாநரர் சீதையை அவ்விந்தியமலையில் தேடுதலைக் கூறும்.]

௪. அங்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புழைகளும்புடைகளு
நன்னெடுந்தாழ்வரைநாடினார்நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை.

(இ - ள்.) நவை இலார் - குற்றமற்ற வாநரவீரர்கள்,— அ நெடுங் குன்றமோடு - நீண்ட அந்த விந்தியபருவதத்தினிடத்தில்,—அவிர் மணி சிகரமும் - விளங்குகின்ற இரத்தினங்களையுடைய சிகரங்களையும், பொன் நெடுங் கொடுமுடி புழைகளும் - அழகிய நீண்ட சிகரங்களிலுள்ள குகைகளையும், புடைகளும் - பக்கங்களையும், நல் நெடுந் தாழ்வரை - அழகிய நீண்ட அடிவாரங்களையும், ஓர் பகலிடை - ஒருபகற்பொழுதிற்குள், பல் நெடுங் காலம் ஆம்

என்ன - மிகவும் அனேகர்கள் தேடிப்பார்ப்பதுபோல், நாடினார் - (பிராட்டியைத்) தேடிப்பார்த்தார்கள்; (எ - று.)

வானரர்கள் மிகப்பலராயிருந்ததனாலும், செய்தொழிலை மிக்க ஊக்கங் கொண்டு வெகுபராபரிப்புடனே செய்ததனாலும், பலகாலம் தேடினால் எவ்வளவு தேடமுடியுமோ, அவ்வளவு ஒரு பகற்பொழுதிலேயே தேடவல்லராயினாரென்க: இதனால், ஒருபகற்பொழுதிலேயே அம்மலையில் ஒருசிறிது பாகமும் விடாமல் வானரர்களால் தேடியாயிற்றென்றவாறு. 'குன்றமோடு' என்றவிடத்து 'ஓடு' உருபு, அதற்கு உரிய உடனிகழ்ச்சிப் பொருளதாகாமல் ஏழாம்வேற்றுமைக்கு உரிய இடப்பொருளில் வந்தது; வேற்றுமைமயக்கம். மணிச்சிகரம் - அழகிய சிகரமெனினுமாம். புழை - துளை; இங்கு, குகையைக் குறித்தது.

'புழைகளும்புக்குற' என்று பிரபேதம். (௪)

௫. மல்லன்மாஞாலமோர்மறுவுறுவகையின்ச்
சில்லலோதியையிருந்துறைவிடந்தேடுவார்
புல்லினாருலகினைப்பொதுவிலாவகையினா
லெல்லைமாகடல்களேயாகுமாறெய்தினார்.

(இ - ள்.) எல்லை மா கடல்களே ஆகும் ஆறு எய்தினார் - (பூமியைச் சுற்றிலும்) எல்லையாகவுள்ள பெரிய சமுத்திரங்களே (தமக்கு) ஒப்பென்று சொல்லும்படி சென்றவர்களாகிய வானரர்கள்,—மல்லல் மா ஞாலம் ஓர் மறு உறா வகையின் அ சில் அல் ஓதி - வளப்பம்பொருந்திய பெரிய பூமிதேவியானவள் ஒரு குற்றமுமடையாதவாறு தோன்றியுள்ள பொன்வட்டத் தகட்டையணிந்த இருள்போன்ற [கரிய] கூந்தலையுடையவளாகிய அந்தச் சீதை, இருந்த உறைவு இடம் ஐ - இருந்த வாசஸ்தானத்தை, தேடுவார் - தேடுபவர்களாய்,—உலகினை பொது இலா வகையினால் புல்லினார் - (அவ்விந்தியமலையின்) பூமியை (வேறொருவர்க்குஞ்) சம்பந்தமில்லாதபடி [முழுவதும் தாமேயாகச்] சேர்ந்தார்கள்; (எ - று.)

வானரர்கள் விந்தியமலையில் ஒரு சிற்றிடமும் விட்டிடாதவாறு தாமே முழுவதும் வியாபித்துச் சீதையைத் தேடினார்களென்க. சீதை - ஜநகமகாராஜன் யாகஞ்செய்தற்குச் சாலையமைத்தற் பொருட்டு நிலத்தையுழுதபொழுது, அப்படைச்சாலின் வழியாகப் பூமியினின்று தோன்றியவளாவள்: அதனால், அப்பிராட்டியைப் பூமிதேவியின் மகளாகக் கூறுதல் மரபு. பூமிதேவிக்குப் பெரும்புகழுண்டாகுமாறு நற்குண நற்செய்கைகளோடு கூடியவளாதலால், சீதையை 'ஞாலமோர்மறுவுறுவகையி னச்சில்லலோதி' என்றார். இனி, முதலிரண்டடிக்கு - வளமுள்ள பெரிய உலகத்தில் தமக்கு ஒரு மறுவுமுண்டாகாதவிதமாக வானரர்கள் அந்தச்சீதையைத் தேடினார்களெனினுமாம். சில் - மாதர்கள் தலையிலணியும் பொன்வட்டத்தகட்டணி. சில் அல் ஓதி - அன்மொழித்தொகைப் பன்மொழித்தொடர். சில்லலோதியையிருந்துறைவிடம் என்றவிடத்து, இரண்டனுருபு பிரித்துக்கூட்டப்பட்டது. உலகு என்றது, இங்கு, பூமியின் ஒருபகுதியைக் குறித்தது; "மாயோன் மேய காடுறை யுலகமும்" என்றவிடத்துப் போல. (௫)

கூ. விண்டுபோ யிழிவர்மே னிமிர்வர்விண் படர்வர்வே
ருண்டமா மரனினம் மலையின்வா யுறையுநீர்
மண்டுபா ரதனின்வா ழுயிர்களம் மதியினார்
கண்டிலா தனவயன் கண்டிலா தனகொலாம்.

(இ - ள்.) அ மதியினார் - நல்லறிவுடையவர்களாகிய அவ்வானரர்கள்,— விண்டு - (தனித்தனி) பிரிந்து, போய் இழிவர் - (சிலர்) இறங்கிச் செல்வர்; மேல் நிமிர்வர் - (சிலர்) மேலேறிச்செல்வர்; விண் படர்வர் - (சிலர்) வானத்தில் தாவிச்செல்வர்; வேர் உண்ட மா மரனின் - வேரினால் நீரையுட்கொள்ளுகின்ற மரங்களினிடத்தும், அ மலையின்வாய் - அந்தமலையின் நிலையினிடத்தும், உறையும் நீர் மண்டு பார் அதனின் - மிகுதியாயிருக்கின்ற நீர் நிரம்பப்பெற்ற தலங்களினிடத்தும், வாழ் - வாழ்கின்ற, உயிர்கள் - ஜீவவர்க்கங்களில், கண்டிலாதன - (அவ்வானரர்களால்) தேடிப் பார்க்கப்படாதவை உண்டானால் அவை, அயன் கண்டிலாதன ஆம் - பிரமதேவனாற் படைக்கப் படாதவைகளாகும்; (எ - று)

மரஞ்செறிந்த இடமும் வெற்றிடமும் புனல்நிரம்பிய இடமுமாய் மூன்று பகுப்பாயுள்ள அவ் விந்தியமலை முழுவதும் பிரம சிருஷ்டிக்கு உட்பட்ட எல்லாவுயிர்களையும் வானரர்கள் தேடிப்பார்த்தார்களென்பதாம். பிரம சிருஷ்டிக்கு உட்படாத பொருள் ஒன்று மில்லையாதல் போல, இவ்வானர வீரர்களாற் பார்க்கப்படாத பொருளும் ஒன்றுமில்லை யென்பது, ஈற்றடியின் கருத்து. விண்டு - மலையுமாம். மதியினார் - ஒருமாதத் தவணையையுடையவர் எனினுமாம். போயிழிவர் = இழிந்துபோவர்: விகுதி பிரித்துக்கூட்டல். வேருண்ட மாமரன - 'பாதபம்' என்று பெயர் வழங்குமாறு தமது உணவாகிய நீரை வேரினாலே யுட்கொள்ளும் மரங்கள்; இனி, வேரூன்றிய பெரிய மரங்கள் எனினுமாம். நீர்மண்டுபார் - ஓடை, சுனை முதலியன. அயன் = அஜன்; திருமாலினது நாபிகமலத்தினின்று தோன்றியவன்; அ-திருமால். பின்னின்ற 'கண்டிலாதன' என்பதில், காணுதல் - செய்தலென்ற பொருளில் வந்தது; 'திருநகரங் கண்ட படலம்' என்ற விடத்திற் போல. கொல் -

'விண்டுபோயிழிவமேனிமிர்வவிண்படர்வ' என்ற பாடத்திற்கு—விண்டு போய் இழிவ - (நிலத்தை) விள்ளச்செய்து கீழேபோயிறங்குவனவும், மேல் நிமிர்வ விண் படர்வ - மேலோங்கி வளர்ந்து ஆகாயத்தையளாவுவனவுமாய், வேர் உண்ட, மாமரனின் - வேரினால் (தமது உணவை) உட்கொள்ளுகின்ற' பெரிய மரங்களையுடைய, அ மலையின்வாய் - அந்த விந்தியமலையினிடத்தில், உறையும் - வசிக்கின்ற, நீர் மண்டு பார்அதனின் வாழ் உயிர்கள் - கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் வாழும் உயிர்களில், அம்மதியினார் கண்டிலாதன அயன் கண்டிலாதனவாம் என்று பொருள் காண்க. விண்டு என்பது, தன்வினைக்கும் பிறவினைக்கும் பொதுச்சொல் லாதலால், இங்குப் பிறவினையில் வந்தது. மலையின்வாயுறையும் உயிர்கள் என இயையும். 'நீர்மண்டுபாரதனின்வாழ்' என்ற தொடர் - உயிர்கட்கு இயற்கையடைமொழியாய் வந்த

இடைப்பிறவரல்: அம்மலையில் வசிக்கும் பிரமசிருஷ்டியாகிய உயிர்களில் அவர்கள் காணாதன இல்லையென்றவாறும். விண்டுபோயிழிவ, மேனிமிர்வ, விண்படர்வ, வேருண்ட என்பன - மரத்திற்கு அடைமொழிகள். இனி, விண்டுபோய் இழிவ - (நிலத்தை) விள்ளச்செய்து கீழேயிறங்கும் (பாம்பு முதலிய) ஊர்வனவும், மேல் நிமிர்வ - நிலத்தின்மேலே நடப்பனவாகிய (சிங்கம் முதலிய) விலங்குகளும், விண்படர்வ - ஆகாயத்திற் பறப்பனவாகிய (கருடன் முதலிய) பறவைகளுமாய், வேருண்ட மாமரனின் அம்மலையின் வாயுறையும்—, உயிர்களில், அம்மதியினோர் கண்டிலாதன அயன் கண்டிலாதன வாம் என்று பொருள்கூறலுமொன்று. இப்பொருளில், பிரமசிருஷ்டியாகிய மக்கள் தேவர் நரகர் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன என்ற எழுவகைத் தோற்றங்களில் மூன்றைக் கூறி, மற்றையவற்றை உபலட்சணத்தாற் பெற வைத்தன ரென்க. உயர்ந்தசாதிநாகங்கள் சுவாசத்தால் நிலத்தை விள்ளச் செய்து அப்பிளப்பிற் போய்த் தங்குமென்ற கொள்கைபற்றி, 'விண்டுபோயிழிவ' என்றார்.

'வேருண்டமாமணியினம்மலையின்வாயுறைவீர்,' 'உறையினின்' என்று பிரதிபேதம். (௬)

வேறு.

[வாநரர் நருமதையாற்றை யடைதல்.]

௭. எகினார் யோசனை யேழொ டேழுபார்
சேகரத் தென்றிசை கடிது செல்கின்றார்
மேகமா லையினொடும் விரவி மேதியி
னாதசேர் நருமதை யாறு நண்ணினார்

(இ-ள்.) பார் சேகரம் தென் திசை கடிது செல்கின்றார் - பூமிக்குத் தலையணிபோற் சிறந்து விளங்குகின்ற தென்திசையிலே (சீதாபிராட்டியைத் தேடுமாறு) விரைந்து செல்கின்ற வாநரர்கள்,—ஏழொடு ஏழு யோசனை எகினார் - பதினான்கு யோசனைதூரஞ் சென்றவர்களாய்—மேதியின் நாகு - எருமைகளின் இளங்கன்றுகள், மேகம் மாலையினொடும் விரவி சேர் - காளமேகங்களின் வரிசைகளோடு ஒன்றாகக்கலந்து பொருந்தியுள்ள, நருமதை யாறு - நருமதையாற்றை, நண்ணினார் - போய்ச்சேர்ந்தார்கள்; (எ-று.)

நருமதையாறு மிக்க பரப்புள்ளதாதலால் அதனைக் கடலென்று மயங்கி நீருண்ணுமாறு மேகங்கள் அங்கு வரலாயின வென்க. கடலிற் படிந்து மேகங்கள் நீர்பருகுமெனக் கூறுதல், கவிசமயம். அங்குள்ள எருமையின இளநாகுகள் நீருண்ட காளமேகங்களோடு வேறுபாடு தோன்றாதவாறு நிலவளத்தாற் செழித்து வளர்ந்துள்ளன வென்பது, பின்னிரண்டடிகளின் போதரும். சிறந்த தமிழ்ப்பாஷை வளர்கின்ற இடமாதல்பற்றி, 'பார்சேகரத்தென்றிசை' என்றார்; இதனால், கவியினது பாஷாபிமானமும், தேசாபிமானமும் தோன்றும்.

'எகினார்யோசனை,' 'சேகர,' 'கடிதின்', 'விரவித்தேனிழி' என்ற பிரதிபேதம்.

இதுமுதல் முப்பத்தொரு கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (எ)

[இதுவும், அடுத்தகவியும் - வானரர் நருமதையாற்றைச் சார்ந்தவிடத்து நாடுதலைக் கூறும்.]

அ அன்னமாடிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந்துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ்சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும்பரந்துசுற்றினார்.

(இ - ள்.) (வானரர்கள்),— அன்னம் ஆடு இடங்களும் - அன்னப்பறவைகள் விளையாடுகின்ற இடங்களையும், அமரர் நாடியர் துன்னி ஆடு இடங்களும் - தேவருலகத்துவாழும் அரம்பைமுதலிய மகளிர் வந்து நீராடுகின்ற இடங்களையும், துறக்கம் மேயவர் முன்னி ஆடு இடங்களும் - சுவர்க்கலோகத்திற்பொருந்திய தேவர் வந்து சஞ்சரிக்கின்ற இடங்களையும், சுரும்பு மூசு தேன் பன்னி ஆடு இடங்களும் - சுரும்புகளும் (நல்லமணத்தே) மொய்க்கின்ற தேன்களும் கீதங்களைப் பாடிக்கொண்டு திரிகின்ற இடங்களையும், பரந்து சுற்றினார் - பரவிச் சுற்றித் தேடினார்கள்; (எ - று.)

நருமதையாற்றின் பெருஞ் சிறப்பினாலும், அதனைச்சார்ந்த இடங்களின் மிக்க இனிமையினாலும், அந்தத் தேவமாதர்களும் தேவர்களும் வரலாயினரென்க. சுரும்பு, தேன் என்பன - வண்டின் சாதிபேதம்: சுரும்பு எல்லா மணத்திலுஞ் செல்வது; தேன் - நன்மணத்தே செல்வது என வேறுபாடு காண்க; இத்தன்மையை, 'எங்குமேயாடியிடறுஞ் சுரும்புகாள், வண்டுகாண் மகிழ்தேனினங்காண் மது, வுண்டுதேக்கிடுமொண்மிஞிறீட்டங்காள்'' என்ற சிந்தாமணிச் செய்யுளின் நச்சினார்க்கினியருரையா லுணர்க. நாடியர் - பெண்பன்மை. (அ)

௯. பெறலருந்தெரிவையைநாடும்பெற்றியா
ரறனறுங்கூந்தலுமளகவண்டுசூழ்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார்.

(இ - ள்.) பெறல் அருந் தெரிவையை நாடும் பெற்றியார் - பெறுதற்கு அரிய சீதாபிராட்டியைத் தேடுந்தன்மை யுடையவராகிய வானரர்கள்,— அறல் நறுங் கூந்தலும் - கருமணலாகிய நறுமணமுள்ள (அவளது) கூந்தலையும், அளகம் வண்டு சூழ் நிறை நறுந் தாமரை முகமும் - அளகம்போன்ற (கருநிறமுள்ள) வண்டுகள் சூழ்ந்த நிறைந்துள்ள வாசனையுடைய தாமரை மலராகிய (அவளது) முகத்தையும், நித்திலம் முறுவலும் - (அந்நதிகளின் அலைகளினாற் கொழிக்கப்படுகின்ற) முத்துக்களாகிய (அவளது) பற்களையும், காண்பர் - காண்பார்கள்; முழுதும் காண்கிலார் - (சீதாபிராட்டியின்) உருவ முழுவதையும் ஒருசேரக் காணப்பெறாதவராயினர்; (எ - று.) ஆல்—ஈற்றசை.

சீதாபிராட்டியைத் தேடிச்சென்ற வானரர்கள் நருமதையாற்றின் கரைகளில் அப்பிராட்டியினது உருவ முழுவதையும் பார்க்கப்பெறாமல், அவளது முகத்திற்கும் அம்முகத்திலுள்ள உறுப்புக்கட்கும் போலியான பொருள்களை மாத்திரம் கண்டனரெனபதாம். நருமதையாற்றின் கருமணல் சீதையின் கூந்தலையும், தாமரைமலர்கள் முகத்தையும், அதில் மொய்க்கின்ற வண்டுகள் அளகத்தையும், அங்குக் காணப்படுகின்ற முத்துக்கள் பற்களையும் போலு மென்க. அளகவண்டுசூழ்தாமரைமுகம் - உவமையை அங்கமாகக்கொண்ட உருவகம். அறற்கூந்தல, நித்திலமுறுவல் - உருவகம். பெறலருந்தெரிவை - இவ்வளவு அழகுள்ள மாதர் கிடைப்பது அருமை என்றவாறு. காண்பரான் முழுதுங் காண்கிலார் - தொடைமுரண்.

'பெறலருந்திருவினை,' 'அளவில்வண்டு,' 'நிறநறுந்தாமரை,' 'முற்றுங் காண்கிலார்' என்பன - பிரதிபேதம். (௯)

[வாநரர் நருமதையாற்றைக் கடத்தல்.]

௰. செருமதயாக்கையர் திருக்கில்சிந்தையர்
தருமதயாவிவை தழுவுநன்மையர்
பொருமதயானையும் பிடியும் புக்குழ
னருமதையாமெனு நதியை நீங்கினார்.

(இ - ள்.) செரு மதம் யாக்கையர் - போர்செய்வதில் உற்சாகங்கொண்ட உடம்புடையவர்களும், திருக்கு இல் சிந்தையர் - மாறுபாடில்லாத மனமுடையவர்களும், தருமம் தயா இவை தழுவும் தன்மையர் - தருமமும் அருளும் பொருந்திய சுபாவமுடையவர்களுமாகிய வானரர்கள்,—பொரு மதம் யானையும் - போர்செய்கின்ற மதங்கொண்ட ஆண்யானைகளும், பிடியும் - பெண்யானைகளும், புக்கு உழல் - புகுந்து விளையாடுகின்ற, நருமதை எனும் நதியை - நருமதையாற்றை, நீங்கினர் - கடந்து அப்பாற்சென்றார்கள், (எ - று.)

யாக்கை - (ரஸம், ரக்தம், சுக்லம், மூளை, தசை, எலும்பு, தோல் என்ற ஏழுவகைத்தாதுக்களால்) கட்டப்படுவது என உடம்புக்குக் காரணக்குறி. திருக்கில்சிந்தையர் - (குரங்குத்தன்மையால்) மாறாமல் ஒருபடிப்பட ஒற்றுமை கொண்ட மனமுடையவர். தருமம் - மறுமையின் நன்மைக்குக் காரணமாக இப்பிறப்பிற் செய்யப்படும் நல்வினை. தயை - பிறர்நோவு கண்டவிடத்து ஐயோவெனத் தோன்றும் இரக்கம். ஆம் - அசை.

'செருக்கில்சிந்தையர்,' 'நருமதையாறெனும்' என்று பிரதிபேதம். (௰)

[வாநரர் ஏமகூடமலையை யடைதல்.]

௧௧. தாமகூடத்திரை தீர்த்தசங்கமு
நாமகூடப்பெருந்திசையைநலகிய
வாமகூடச்சுடர்மணிவயங்குறு
மேமகூடத்தடங்கிரியையெய்தினர்.

(இ - ள்.) தாம கூடம் திரை தீர்த்த சங்கமும் - ஒளியோடுகூடிய சிகரங்களினின்று தோன்றுகின்ற அலைகளையுடைய தீர்த்தங்களின் தொகுதியும்,

வாமம் கூடம் சூடா மணி(உம்) - அழகிய தொகுதியாகிய ஒளியையுடைய இரத்தினங்களும், வயங்குறும் - (தன்னிடத்தில்) விளங்குகின்ற, நாமம் கூடு அ பெருந் திசையை நல்கிய - புகழ்பொருந்திய அந்தப் பெரிய திக்கைப் பாதுகாக்கின்ற, ஏமகூடம் தட கிரியை - ஹேமகூடமென்னும் பெரியதொரு மலையை, எய்தினர் - (வானரர்கள்) போய்ச்சேர்ந்தார்கள்; (எ - று.)

பல புண்ணிய தீர்த்தங்களும், மிகச்சிறந்த பலஇரத்தினங்களும் நிரம்பியிருக்கப்பெற்றது ஹேமகூடமலை யென்க. 'நல்கிய' என்பது, 'ஏமகூடத் தடங்கிரி' என்பதனோடு இயையும். பூமியின்மேல் எவ்வளவு உயர்ந்திருக்கின்றனவோ அவ்வளவு நிலத்தின்கீழ் வேரூன்றிப் பூமியைத்தாங்குவனவாகிய அஷ்டகுலபருவதங்களுள் ஒன்றன் பெயரை இம்மலை கொண்டிருத்தலால், 'நாமகூடபெருந்திசையைநல்கியஏமகூடத்தடங்கிரி' எனப்பட்டது. எதுகை நயம்பற்றி, நாமங்கூடு என்பது நாமகூடு என விகாரப்பட்டது. நாமகூடம் என்பதற்கு - ஒழுங்காகிய மலைமுழைஞ்சுகளினின்று எனக் கூறுவாருமுளர். இனி, 'நல்கிய' என்பதை 'வாமகூடச்சூடாமணி' என்பதனோடு இயைத்து, இரத்தினங்கள் சுற்றிலுமுள்ள திசைகளில் தமதுமிக்கவொளியைப் பரப்பி அவற்றை விளங்கச்செய்யு மென்று கூறினுமாம். 'மணி' என்றவிடத்து, உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது 'நாமகூடப்பெருந்திசை' என்பதற்கு - (மரசம்சற்பால) அச்சத்திற்கிடமாய மறைந்துகிடந்த பெரியத்திசை யெனினுமாம்; இப்பொருளில், நாம - குறிப்புப்பெயரெச்சம்; இதில் (அச்சப்பொருளதாகிய) 'நாம்' என்னும் உரிச்சொல் - பகுதி, அ - விகுதி; கூடம் - கூடம்: வடசொல், மறைவானது என்று பொருள். கூடம் என்ற சொல் முதலடியில் சிகரமென்ற பொருளிலும், மூன்றாமடியில் தொகுதியென்ற பொருளிலும் வந்தது இச்செய்யுளில், ஒவ்வோரடியிலும் முதலெழுத்துமாத்திரம் வேறுபட்டிருக்க, இரண்டு முதலிய சிலஎழுத்துக்கள் ஒன்றிப் பொருள்வேறுபட்டு வந்தது - திரிபு என்னுஞ் சொல்லணியின் பாற்படும்.

'தாமகூடத்திறை,' 'தாமகூடத்தினைத்தீர்த்தசங்கமா, நாமகூட,' 'பெருந்திசை,' 'வாமகூடந்சுடா' என்று பாடாந்தரங்கள். (கக)

[இதுமுதல் நான்குகவிகள் - ஏமகூடமலையின் வருணனை]

கஉ. மாடுறுகிரிகளுமரனுமற்றவுஞ்
சூடுறுபொனெனப்பொலிந்துதோன்றுற
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது.

(இ - ள்) (இந்த ஏமகூடமலையானது),—மாடுறு கிரிகளும் - பக்கத்திலுள்ள மலைகளும், மரனும் - மரங்களும், மற்றவும் - மற்றைப்பொருள்களும், சூடு உறு பொன் என பொலிந்து தோன்றுற - சுடுதல்பொருந்திய [புடமிடப்பெற்ற] பொன்போல விளங்கித்தோன்றும்படி, பாடு உறு சுடர் ஒளி பரப்புகின்றது - பெருமைபொருந்திய மிக்க காந்தியை வீசுகின்றது; வீடு உறும் உலகினும் விளங்கும் மெய்யது - (இவ்வுலகத்தை) விடுதல்பொருந்திய [இவ

வுலகத்தைவிட்டு அடையக்கூடிய] சுவர்க்கலோகத்தைக்காட்டிலும் மிக்கு விளங்குந் தோற்றத்தையுடையது; (எ - று.)

தன்னிடத்திலன்றிப் பக்கங்களிலுள்ள பொருள்களையும் தனது ஒளி மிகுதியால் தன்னைப்போலவே பொன்னிறமாகச் செய்யவல்லது, ஏமகூட மலையென்க; மலைகளும் மரமும் பிறவும் தமது இயற்கைநிறம்மாறி அருகிலுள்ள ஏமகூடத்தின நிறத்தை யடைந்தனவாகக் கூறியது - பிறிதின்குணம் பெறலணியின்பாற்படும்; வடநூலார் தத்குணாலங்கார மென்பர். பொன்னுலகமென்று பெயர்கூறப்படுஞ் சுவர்க்கலோகத்திலுள்ள பொருள்கள்யாவும் பொனமயமாக விளங்குமெனபது, நூற்கொள்கை. ஏமகூடத்திலுள்ள பொருள்கள்யாவும் பொன்மயமாக விளங்குதலால், 'வீடுறுமுலகினும்விளங்கு மெய்பது' என்றார். சூடுறுபொன் - "சுடச்சுடரும் பொன்," பாடுறு - தனனிடத்திற் பொருந்திய எனினுமாம், சுடர்ஒளி - ஒருபொருட் பன்மொழி.

இச்செய்யுளுக்குப்பிறகு சில ஏட்டுப்பிரதிகளில்

"இந்நெடுங்கிரிகொலோ வெதுகொலோவென
வந்நெடுமேருவோடயிர்க்கலாவது
தொனனெடுநில மெனுமங்கைசூடிய
பொன்னெடுமுடியெனப்பொலியும்பொற்பது"

என்று ஒருசெய்யுள் காணப்படுகின்றது. (௧௨)

க௩. பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனகநுண்பூழியொட்டலா
னிறைநெடுமேருவைச்சேர்ந்தநீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பது.

(இ - ள்.) (அம்மலையானது),—பாடு அமைந்து உறைவன - தனனிடத்திற் பொருந்தி வாழ்வனவாகிய, பறவையும் - பட்சிகளும், பல் வகை விலங்கும் - பலவகைமிருகங்களும், கனகம் நுண் பூழி ஒட்டலால் - (அம்மலையிலிருப்பதுபற்றி அங்குள்ள) சிறிய பொற்றூளிகள் (தம்மீது) ஒட்டிக்கொள்ளுதலினாலே, நிறை நெடு மேருவை சேர்ந்த நீர ஆய் - நிறைந்துயர்ந்துள்ள பெரிய மேருமலையைச் சேர்ந்த தன்மையன வென்னுமாறு, பொறை நெடும் பொன் ஒளி முழுதும் போர்ப்பது - பாரமாகிய மிக்க பொனனிறவொளியை எல்லாப்பொருள்களின் மீதும் போர்க்குந் தன்மையது; (எ - று.)

தன்மீதுவாழ்கின்ற பறவைகளும் விலங்குகளும் மேருவைச்சார்ந்த பொருள்கள்போலப் பொற்றூளிபடியப்பெற்று விளங்கும்படி அப்பொருள்களெல்லாவற்றையும் பொன்மயமாகச்செய்வது, ஏமகூடமலை யென்றவாறு. மேருமலை தன்னைச்சார்ந்த பொருள்களையெல்லாம் பொன்மயமாக்கு மெனபதை, "இமயப் பொருப்பகஞ்சேர்ந்த பொல்லாக்கருங்காக்கையும் பொன்னிறமாயிருக்கும்" என்பதனாலு முணர்க. விலங்கு - குறுக்காக வடிவமமையப் பெற்றது என்று அவயவப்பொருள்;'திர்யக்' என்ற வடசொல்லும் இப்பொருளதே. மேரு - பூமியின நடுவி லுள்ளதொரு பொன்மயமானமலை. பொறை - பொறுக்கப்படுவது [சுமக்கப்படுவது] எனப் பாரத்திற்குக்காரணக்குறி.

'உறைவது,' 'தாளிபோர்த்தலால்,' 'நீரதாய்', 'மீளிரும் பொற்பது' என்று பிரதிபேதம். (௧௩)

௧௪. பரவியகனகநுண்பராகம்பாடுற
வெரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
யருவியுநதிகளுமலங்குதீயிடை
யுருகுபொன்பாய்வபோன்றொழுகுகின்றது.

(இ - ள்) பரவிய கனகம் நுண் பராகம் பாடு உற - பரவியுள்ள பொன்னினது சிறுபொடிகள் தம்மிடத்திற் பொருந்த, எரி சுடர் செம் மணி ஈட்டத்தோடு இழி - விளங்குகின்ற காந்தியையுடைய சிவந்த பதுமராகரத்தினங்களின் கூட்டத்தோடு இழிகின்ற, அருவியும் - ஓடைகளும், நதிகளும்—, அலங்கு தீயிடை உருகு பொன் பாய்வ போன்று - எரிகின்ற நெருப்பினிடத்தில் உருகிய பொன் பாய்வதுபோலத் தோன்றுமாறு, ஒழுகுகின்றது - பெருகப்பெறுகின்றது, (அம்மலை); (எ - று.)

பொற்பொடிகள் பொருந்திச் செம்மணியின் நிறமமைந்து பெருகுகின்ற நீர்ப்பெருக்குக்களுக்கு, நெருப்பிலுருக்கி ஓடவிட்டபொன்னை உவமையாகக் குறித்தார்; தந்தகுறிப்பேற்றவுவமையணி. இனி, பொற்கொடிகள் தம்மிடத்திலே பொருந்தச் செம்மணியின் கூட்டத்தின்மீது விழுந்து பெருகுகின்ற அருவிகளும் நதிகளும் - தீயிடையிலே உருகிய பொன் பாய்வது போன்று ஒழுகப்பெற்றது அம்மலையென்று உரைகூறினுமாம். செம்மணிகளில் பொன்மயமான அருவிகள் பாய்வது, தீயினிடையில் பொன் உருகிப் பெருகுவதுபோலுமென வருணித்தவாறு; இப்பொருளில், ஈட்டத்தோடு - உருபுமயக்கம். மலை ஒழுகுகின்றது என்றது - இடத்துநிகழ் பொருளின் தொழிலை இடத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு. பாய்வ - பாய்வது என்பதன் தொகுத்தல்

'மருவிய கனகநுண்பராகமாடுற, விரிசுடர்ச்செம்மணி யீட்டத்தாடுவீ, ழருவியந்திரள்களும்,' 'பரவியபராக நுண்கனகம்' என்று பிரதிபேதம். (௧௪)

௧௫. விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினராடற்பாணியுங்
குஞ்சரமுழக்கமுங்குமுறுபேரியின்
மஞ்சினமூரற்றலுமயங்குமாண்பது.

(இ - ள்) விஞ்சையர் பாடலும் - (அங்குவந்துள்ள) வித்தியாதரர்களது பாட்டுக்களினொலியும், விசும்பின் வெள் வளை பஞ்சின மெல் அடியினர் ஆடல் பாணியும் - தேவலோகத்திலிருந்து வந்தவரான வெள்ளிய வளையல்களைத் தரித்த பஞ்சுபோன்ற மெல்லியபாதங்களையுடையவராகிய தேவமாதரது ஆடலோடுகூடிய தாளங்களினொலியும், குஞ்சர முழக்கமும் - யானைகளின் பிளிறுதலும், குமுறு பேரியின் மஞ்சு இனம் மூரற்றலும் - முழங்குகின்ற முரசவாத்தியம்போன்ற (அங்குவந்துதங்கும்) மேகக்கூட்டங்களின் இடியொலியும், மயங்கும்-ஒன்றுசேர்ந்துள்ள, மாண்பது-பெருமையையுடையது (அம்மலை), (எ - று:)

குஞ்சரமுழக்கங் கூறியது - அந்நல்ல மாமலை மிருகபட்சிகளின் முழக்கங்கட்கும் உபலட்சணம். பலவகையொலிகளும் நிரம்பப்பெற்றுள்ளது அம்மலையென்க. விஞ்சையர் - பதினெண்தேவகணங்களு ளொருசாதியார்; மாலிகாஞ்சனம் முதலிய மாயவித்தையில் வல்லவர். வித்யை, வித்தை, விச்சை, விஞ்சை எனக் காண்க. பஞ்சின்மெல்லடி - செம்பஞ்சுக்குழம்பூட்டிய மெல்லிய பாதமுமாம். வெள்வளை - சங்குவளை: (கையை) வளைந்துள்ளது வளையெனக் காரணக்குறி. ஆடற்பாணி - அபிநயஞ்செய்கையில் சதிமிதித்தற்குப் பொருந்துமாறு போடப்படுந் தாளம். குஞ்சரம் என்ற வடசொல் - புதரிற் சஞ்சரிப்பதென்றும், துதிக்கையையுடையதென்றுங் காரணப் பொருள்பெறும்.

'அடிபவர்பாடற்பாணியும்,' 'மயங்கிமாய்வன,' 'வயங்குமாண்பது' என்று பிரதிபேதம். (௧௫)

[வாநரர் அம்மலையை இராவணனிருக்குமிட மென்று நினைத்து உவகையுஞ் சினமும் ஒருங்கே கொள்ளுதல்.]

௧௬. அனையதுநோக்கினராமிதாமயில்
வினையவேலிராவணனிருக்கும்வெற்பெனு
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துசெங்கணார்.

(இ - ள்) (வானரர்),— அனையது நோக்கினர் - அவ்வமை கூடமலையைக் கண்டு, 'ஆம் இது - இங்குப்பொருந்தியுள்ள இம்மலையானது, அயில் வேல் இனைய இராவணன் இருக்கும் வெற்பு ஆம் - கூர்மையான வேலாயுதத்தையுடைய இப்படிப்பட்ட இராவணன் இருக்கின்றமலையாகும்,' எனும் - என்றுகருதுகின்ற, நினைவினர் - எண்ணமுடையவர்களும், உவந்து உயர்ந்து ஓங்கு நெஞ்சினர் - (அதுபற்றிச்) சந்தோஷித்து மிகவும் பொங்குகின்ற மனமுடையவர்களும், சினம் மிக கனல் பொறி சிந்து செங் கணார் - கோபம் மிகுதலாற் கனற்பொறியைக் கக்குகின்ற செந்நிறமான கண்களையுடையவர்களு மானார்கள்; (எ - று)

வானரர்கள், அம்மலையின் வளத்தைக் கண்டு இராவணனது இருப்பிடமாக இருக்கலா மென்று கருதி, 'விரைவிற் சீதாபிராட்டியைக் காணலாம்' என்பதனால் மனப்பூரிப்பையும், சீதையை அபகரித்த கொடுந்தொழிலையுடையனான இராவணனது தன்மையை நினைத்ததனால் தோன்றிய பெருஞ்சினத்தையும் ஒருங்கே கொண்டனரென்க; கோபத்தாற்கண்சிவத்தல், இயல்பு.

'அமரஞ்சுறும்,' 'வினைவலனிராவணன்,' 'அமுதின்மாமயில்,' 'உவந்துவந்து,' 'சிந்துஞ்செங்கணார்' என்பன பிரதிபேதம். (௧௬)

[வாநரர் சீதையைத்தேடுமாறு அம்மலையின்மீது ஏறுதல்.]

௧௭. இம்மலைகாணுதுமேமைமுமானையச்
செம்மலைநீக்குதுஞ்சிந்தைதத்தீதென
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்த
ரம்மலையேறினாரச்சமீங்கினார்.

(இ - ள்.) 'இ மலை - இந்தமலையிலே, ஏழை மானை - பேதைமைக்குணமுடைய மான்போன்ற சீதையை, காணுதும் - காண்போம்; (அதனால்), அ செம்மலை - அந்த இராமபிரானது சிந்தை தீது - மனத்தின் துன்பத்தை, நீக்குதும் - ஒழித்துவிடுவோம்,' என - என்றுகருதி, (வானரங்கள்),—விம்மல உற்று உவகையின் விளங்கும உள்ளத்தர் - பூரிப்புக்கொண்டு சந்தோஷத்தினால் விளங்குகின்ற மனத்தையுடையவர்களாகி, அச்சம நீங்கினோர் - பயமில்லாதவர்களாய் [சிறிதும் அச்சமில்லாமலே], அ மலை ஏறினார் - அம்மலையின்மீது ஏறினார்கள்; (எ - று.)

அம்மலையை இராவணனது இருப்பிடமெனக் கருதியதனால், வானரர்கள் 'இம்மலை காணுதும ஏழைமானை' என்றார்க ளெனக. அச்செம்மலைச் சிந்தைத்தீது நீக்குதும - சீதையின் செய்தியைக் கண்டறிந்து இராமபிரானிடத்துச்சொல்லி அவனது மனத்துயரத்தை மாற்றுவோ மென்றவாறு; செம்மலைச் சிந்தைத்தீதை நீக்குவோம் - இரண்டு செயப்படுபொருள் வந்த செய்வினை; இதனை, வடநூலார் த்விகர்மகாததரிப்ரயோக மென்பர்: செம்மலினது சிந்தைத்தீதை என வேற்றுமை மயக்கமாகக் கூறுதல், தமிழ்நடைக்கு ஏற்கும்.

'இம்மலைக்கணுதுமேழையாளை', 'சிந்தைத்தீயன,' 'சிந்தையாமென' என்று பிரதிபேதம். (கஎ)

[வானரர் அங்குச் சீதையைத் தேடிக் காணாமை.]

கஅ. இரிந்தன கரிகளும் யாளியீட்டமும்
விரிந்தகோளரிகளும் வெருவி நீங்கின
திரிந்தனர் எங்கணும் திருவைக் காண்கிலர்
பிரிந்தனர் பிறிதெனப் பெயர்ந்த பெற்றியார்.

(இ - ள்.) (அம்மலைமீது ஏறிய வானரர்களைக் கண்டு), கரிகளும் - யானைகளும், யாளி ஈட்டமும் - யாளிகளின் கூட்டமும், இரிந்தன - (அஞ்சி) விலகியோடின, விரிந்த கோள் அரிகளும் (அம்மலைமீது) பரவியிருந்த கொல்லுந்தன்மையுள்ள சிங்கங்களும், வெருவி நீங்கின - அஞ்சி நிலைகெட்டுச்சென்றன; பெயரும் பெற்றியார் இவ்வாறு செல்கின்ற தன்மையையுடைய அவ்வானரர்கள்,—எங்கணும் திரிந்தனர் - மலைமுழுவதிலும் தேடிப்பார்த்தவர்களாகி, திருவை காண்கிலர் - சீதாபிராட்டியைக் காணமாட்டாதவர்களாய், (அதனால்), பிறிது என - (இராவணனிருக்குமிடம் இதுவன்று) வேறு என்று நினைத்து, பிரிந்தனர் - அவ்விடம்விட்டு அப்பாற்செல்லுந் தன்மையுடையவரானார்கள்; (எ - று.)

சிங்கம் முதலிய கொடுவிலங்குகளும் கண்டு அஞ்சுமாறு வானரர்களின் வடிவத்தோற்றம் இருந்த தெனக. கரி யானை; கரத்தையுடையது; (கரம் - துதிக்கை) இதற்கு - கருநிறமுடைய தென்று தமிழ்வகையாற் காரணங்கூறலாகாது; வடசொல்லாதலின். யாளி - யானையைக் கொல்லவல்லதும் சிங்கம் போன்றதும் துதிக்கையுடையதுமாகிய தொரு மிருகவிசேடம். கோள் - உயிரைக்கொள்ளுதல்; வலியுமாம். எங்கண் - எக்கண் என்பதன் மெலித்தல்.

ஈற்றடி - முற்றுமோனை. பிரிந்தனர் என்பதற்கு - (இதுதான் இராவண னிருக்குமிடமென்று முதலில் தாம் கொண்ட எண்ணத்தை) மாற்றினார்க ளெனினுமாம்.

'வெருவினீங்கிட,' 'பிரிந்தனர்சிந்தனைபிரிக்கின்றுமென,' 'புரிந்தன சிந்தனைபுரிகின்றுமென' என்று பிரதிபேதம். (௧௮)

[வானரர்கள் அம்மலையை விட்டு இறங்குதல்.]

௧௯. ஐம்பதிற்றிரட்டிகாவதத்தினுலகன்
றும்பரைத்தொடுவதொத்துயர்வினோங்கிய
செம்பொனற்கிரியையோர்பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர்குப்புற்றேகினார்.

(இ - ள்.) (வானரர்கள்),—ஐம்பதிற்று இரட்டி காவதத்தினால் அகன்று - நூறுகாததூரம் அகலமுடையதாய், உம்பரை தொடுவது ஒத்து உயர்வின் ஓங்கிய - மேலுலகத்தைத் தொடுவதுபோல மிகவும் உயர்ந்துள்ள, செம்பொன் நல் கிரியை - செம்பொன்மயமான அழகிய அந்த ஹேமகூடபர்வதத்தில், ஓர் பகலில் தேடினார் - ஒருபகல் முழுவதும் தேடிப்பார்த்தும், கொம்பினை கண்டிலர் - பூங்கொம்புபோன்ற சீதையைக் காணாதவர்களாய் [சீதையைக் காணாமையால்], குப்புற்று ஏகினார் - (அம்மலையினின்று) இறங்கிச் செல்ல லானார்கள்; (எ - று.)

இச்செய்யுள், கீழ்ச்செய்யுளின் பின்னிரண்டடிகளினது அநுவாதம். காவதம் - காதம் என்பதன் விரித்தல். உம்பர் - மேலிடம். குப்புறுதல்- கீழிறங்குதல்.

'பைம்பொனின்கிரியை' என்று பிரதிபேதம். (௧௯)

[அங்கதன்முதலியோர், சீதையைத்தேடி வருமாறு தமது சேனையைத் தனியே அனுப்புதல்]

௨0 வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந்திரிந்துதேடிநீ
ரெள்ளருமகேந்திரத்தெம்மிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடுமோங்கனீங்கினார்.

(இ - ள்.) (அங்கதன் முதலிய சேனாபதிகளாகிய வாநரவீரர்கள்),-வெள்ளம் ஓர் இரண்டு என விரிந்த சேனையை - இரண்டுவெள்ளமென்று சொல்லு மாறு பரவிய தமது வாநரசேனையை (நோக்கி), 'நீ - நீங்கள், தெள்ளும் நீர் உலகு எலாம் திரிந்து தேடி - தெளிந்த நீர்நிறைந்த (தென்திசையிலுள்ள) பூமியாகம்முழுவதிலும் அலைந்து (சீதையைத்) தேடிப்பார்த்து, (பிறகு), எள் அரு மகேந்திரத்து - (தென்கடற்கரையிலுள்ள) குற்றமற்ற மகேந்திர பருவ தத்தினிடத்தில், எம்மில் கூடும் - எம்மிடத்து வந்து சேருங்கள்,' என்று உள்ளினார் - என்று நினைத்துக் கட்டளையிட்டவர்களாகி, உயர்நெடும் ஓங்கல் நீங்கினார் - உயர்ந்த நீண்ட அவ்வேமகூடத்தைப் பிரிந்து சென்றார்கள்; (எ - று.)

பிரிந்துசென்று தேடினால், குறித்ததவணைக்குள் தமக்கு நியமித்தன்ன திசைமுழுவதையும் நன்குதேடிமுடிக்கலா மென்று கருதி, சேனைகளைத் தனியே பிரிந்துசென்று தேடிக்கடைசியாக மகேந்திரத்தில் வந்து சேருமாறு கட்டளையிட்டு, சேனாபதிகளாகிய அங்கதன் முதலியோர் தாம் தனியே சென்றன ரென்க.

'தெரிந்துதேடி,' 'திரிந்துதேடும்,' 'வரைபரீங்கினார்' என்று பிரதிபேதம். (உ௦)

[அநுமான் முதலியோர் ஓர்பாலைவனத்தை யடைதல்.]

உக. மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரேகுழுமிப்போகின்றார்
நீரெனும்பெயருமறநெறியினீங்கலாற்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினார்.

(இ - ள்.) மாருதி முதலிய வயிரம் தோள் வயம் போர் கெழு வீரரே - அநுமான் முதலாகிய உறுதியான தோள்களையுடைய வெற்றியைத்தரும போரில் உற்சாகங்கொண்ட வீரர்கள்மாத்திரம், குழுமி போகின்றார் - திரண்டுசெல்கின்றவர்களாய்,—அ நெறியில் - அந்தவழியிலே, நீர் எனும் பெயரும் நீங்கலால் - நீரென்றபெயர்மாத்திரமும் இல்லையாதலினால், சூரியன வெருவும்-உஷ்ணகிரணனான சூரியனுங் கண்டு அஞ்சும்படியான, ஓர்சுரத்தை-ஒருபாலைவனத்தை, நண்ணினார் - சென்றுசேர்ந்தார்கள்; (எ - று.)

பூமியிலுள்ள நீரை வற்றச்செய்து அதற்கு வெம்மையையுண்டாக்கும் உஷ்ணகிரணங்களையுடைய சூரியனும் கண்டு அஞ்சவேண்டியிருந்தது பாலைவனத்தின் கொடுமை யென்க. 'நீரெனும்பெயரும்நீங்கலால்' - உலகவழக்கு நவிற்சியணி; இது, வடமொழியில் லோகோக்தி எனப்படும்: நீர் சிறிதும் அங்கு இல்லை யென்றவாறு. பாலைநிலத்திற்குஉரிய தெய்வமாகி வெப்பததையே இயற்கையாகவுடைய சூரியனும் அஞ்சுமாறு வெப்பம் நிறைந்தனாது அந்நில மெனபார், 'சூரியனவெருவுமோர்சுரம்' என்றார்; "சூரியன் தேருமோடா துமாமாகமீ" என்றதுங் காண்க. பாலை தனியே ஒருநிலமன்றென்றும், குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்ற நான்கும் தம்தன்மை திரிந்து பாலையா மென்றும் கூறுவர். வயிரம் - உறுதிக்கு, இலக்கணை; வயம் - வெற்றி; 'வய' என்று எடுத்து - வலிமையென்று பொருள்கூறினுமாம். வீரரே, ஏகாரம் - பிரிநிலை.

'போர்வலிவீரர்,' 'பெயருமொன்றின்றிநீணெடும்,' 'சுரத்தைத்துன்னினார்' என்று பாடாந்தரம். (உக)

[பாலைவனத்தின் வருணனை.]

உஉ. புள்ளடையாவிலங்கரிதுபுல்லொடுங்
கள்ளுடைமானிலகல்லுநதிநகுகு
முள்ளிடையாவுறண்பொடியொடோடிய
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம்.

(இ - ள்.) அ வெஞ்சுரம்-அந்தக் கொடிய பாலைவனத்தில்,—புள் அடையா - பறவைகள் வந்துதங்கமாட்டா; விலங்கு அரிது - ஒரு மிருகமும் அரு

மையானதாகும் [ஒன்றுங் காணக்கிடைக்காதென்றபடி]; புல்லொடும் கள் உடை மரன் இல - புற்களும் தேனையுடைய மலர்மரங்களும் அடியோடு இல்லை; கல்லும் தீந்து உகும் - கற்களும் சாம்பலாய்விடும்; உள் இடை யாவும் நுண் பொடியொடு ஓடிய வெள் இடை அல்லது ஒன்று அரிது - (தனது) உள்ளிடத்தில் (வெளியிடங்களிலிருந்து வருகின்ற) எல்லாப்பொருள்களும் சிறுதூளியாக மாறிப் பறக்கின்ற வெற்றிடமல்லது வேறொன்று (அங்குக் காணக்கிடைத்தல்) அரிதாகும்; (எ - று.)

அந்தப்பாலைவனத்தில் பறவைமுதலிய ஜீவஜந்துக்கள் வருவதுமில்லை; மரஞ்செடிகளும் முளைப்பதேயில்லை; கற்களும் தீந்துபோம்; குறிஞ்சி முதலியவேற்றுநிலங்களிலிருந்து எப்பொருள் வந்தாலும் அவையாவும் பொடியாய்ப் பறக்கின்ற வெப்பம்நிறைந்த வெற்றிடமாகவே யுள்ளது அப்பாலைவனமென்று அச்சுரத்தின்கொடுமை கூறியவாறு. கள்ளுடைமரன - பூந்துள்ள மலர்களில் தேனைக்கொண்டுள்ள மரங்கள். உள்ளிடையாவும் நுண பொடியொடு ஓடிய வெள்ளிடை - உள்ளிடத்திற்சேர்ந்த யாவும் சிறியபொடியாக தன்மையோடு ஒடுதற்கு காரணமான வெற்றிடம். கல்லும - உம்மை சிறப்பு; அதனது மிக்கவுறுதியைக் காட்டும். புள்ளடையா (ஆகாயத்தின் மீதும்) புட்கள அடையமாட்டா எனினுமாம

'விலங்கரிய,' 'பூவொடும்', 'கள்ளுடை பாகிலம,' 'களளை -,' 'கலலுந் தீந்தக, டுள்ளிடையாவ நுண்பொடியொடோட்டலின,' 'உள்ளிடையாவு நுண்பொடியொடோடிய,' 'நுண்பொடியினோடிடும்,' 'இல்லைவெஞ்சுரம' எனறு பிரதிபேதம் (௨௨)

[இதுவும், அடுத்தகவியும் - பாலைவனத்தின் கொடுமையை ஆற்றாது வாநரர் வருந்தியதைக் கூறும்.]

௨௩. நன்புலன நகுதறவுணர்வுநாமறப
பொனபொலியாக்கைகள்புழுங்கிப்பொஙகுவார்
தென்புலந்தங்கெரிநரகிறசிந்திய
வென்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினார்.

(இ - ள்.) (அங்குச்சென்ற வாநரவீரர்கள்),—நல புலன் நடுகுற - (தமது) நலல பஞ்சேந்திரியங்களும நடுங்கவும், உணர்வு நாம் அற - அறிவு என்னும்பேரும் அடியோடு அழியவும, பொன் பொலி யாக்கைகள் புழுங்கி பொங்குவார் - பொனபோல விளங்குகின்ற தமதுசரீரங்கள் வேர்த்துத் தபிப்பவர்களாய்,—தென் புலம் தங்கு எரி நரகில் சிந்திய என்பு இல் பல் உயிர் என - தெறகுத்திசையிலிருக்கின்ற எரியுந்தன்மையுள்ள நரகத்திற் கீழ்வீழ்ந்து துடிக்கின்ற எலும்பில்லாதவுடம்பையுடைய புழுமுதலிய பலவகை ஜீவராசிகளைப்போல, வெம்மை எய்தினர் - தாபத்தை யடைந்தார்கள்; (எ - று.)

அங்குச்சென்ற வானரர்கள் நிலத்தின்வெம்மையைப் பொறுக்கமுடியாமல் புழுத்துடிப்பதுபோலத் துடித்தார்களென்பதாம். என்பு இல்லாத உயிர்கள் வெம்மையைத்தாங்கும் ஆற்றல் இலவாதலின, வானரர்கள் வெயிலில் துடிப்பதற்கு, என்பில் பல்லுயிரை உவமைகூறினர்: "என்பிலதனை

வெயில்போலக் காயுமே" என்றார் திருவள்ளுவரும். புலன் - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐந்து விஷயங்கள்; இங்கு, இலக்கணையால், அவற்றிற்கு உரிய மெய் வாய் கண் மூக்குச் செவி யென்ற ஐம்பொறிகளைக் காட்டும். உணர்வு நாமம் அறுதல் - அறிவு சிறிதுமின்றிப் பரவசமாதல். நாமற - நாமமற என்பதன் விகாரம்: 'நாமுற' என்ற பாடம் - அச்சமடைய வென்று பொருள்படும். நரகத்தைத் தென்திசையிலுள்ளதாகக் கூறுதல், மரபு. எரி நரகு - அக்கினியையுடையனவான தப்தகும்பம், கும்பீபாகம் போல்வன; எரிகின்ற நரகம் எனினுமாம். நரகு = நரகம்.

'உணர்வுநாவுற,' 'உணர்வு நைந்தற,' 'புன்புலவாக்கைகள,' 'தென்புலத் தவனெரி,' 'தென்புலத்தழகெரி,' 'தென்புலத்தினெரிமலி,' 'என்பிலவல்லுயி ரெனவுனின்றார்' என்று பாடாந்தரங்கள். (௨௩)

• ௨௪. நீட்டிய நாவினர் நிலத்திற் றீண்டுதோ
றூட்டிய வெம்மையா லுலையுங் காலினர்
காட்டினுங் காய்ந்தகாயந் தீதலால்
சூட்டகன் மேலெழு பொரியிற் றுள்ளினார்.

(இ - ள்) (பின்னும் அவ்வானரர்கள்), நீட்டிய நாவினர் - (நீர்வேட் கையால்) வெளியில் நீட்டிய நாக்கையுடையவர்களும்,—நிலத்தில் தீண்டு தோறு ஊட்டிய வெம்மையால் உலையும் காலினர் - நிலத்தில் அடிவைக்குந் தோறும் சிறிதுநேரத்துக்குள் உறைந்த வெப்பத்தினால் கொப்புளித்த பாதங்களையுடை யவர்களும்,—காட்டினும் காய்ந்து தம் காயம் தீதலால் - அப்பாலைவனத் தைப் பார்க்கிலும் மிகுதியாக வெப்பமடைந்து தங்களுடம்பு தீந்துவிட்டத னால், சூட்ட கல்மேல் எழு பொரியின் துள்ளினார் - சூடுகொண்ட கல்லி லிருந்து மேலெழுகின்ற நெற்பொரிபோலத் துடிப்பவர்களுமானார்கள்.

மிக்க நீர்வேட்கையால் நாவை வெளியே நீட்டுதலும், பொறுக்கமுடி யாத மிக்க வெப்பத்தினால் கால்கொப்புளித்தலும் - இயல்பு மிகவுஞ் சுகுமார மான மேனியையுடையராதலின். இப்படியில் மிக்க வெப்பங்கொண்ட பாலைவனத்தின்மீது அவ்வானரவீரர் நடந்துசெல்லும்போது அவர்களுடைய உடம்பு அக்காட்டினும் காய்ந்துவிட்டதென்பது, மூன்றாமடியின் பொருள். நெருப்பினால் வெம்மையடைந்த கல்லில் நெல் பொரிந்து மேலெழுவதுபோல, வானரவீரர் பாலைவனத்தின் மிக்க வெம்மையால் துள்ளித்துடிக்கலானார்க ளென்பது, பின்னிரண்டடிகளின் கருத்து, உவமையணி. சூடு அகல் என்று பிரித்து - சூட்டையடைந்த சட்டியெனினுமாம். சூட்ட - சூடு என்ற பெயரினடியாப்பிறந்த குறிப்புப் பெயரெச்சம்.

• 'தூண்டுதோறு,' 'வெம்மைபு,' 'உலையுங்காலரக,' 'காய்ந்ததங்காயம், 'காய்ந்தவக்காயம்,' 'துள்ளுவார்' என்று பிரதிபேதம். (௨௪)

[மிகவும் வருந்திய வாநரர் பிலவழியிற் சேருதல்]

௨௫. ஓதுங்கலா நிழலினைக் காண்கிலாதுயிர்
பிதுங்கலா முடலினர் முடிவில் பீழையார்
பதங்கடப் பருகிடப் பதைக்கின்றார் பல
விதங்களா னெடும்பிலவழியின் மேவினார்.

(இ - ள்) (வானரவீரர்),— ஒதுங்கல் ஆம் நிழலினை காண்கிலாது - (வெயிலுக்கு) ஒதுங்கக்கூடிய நிழலைக் காணப்பெறாமல், உயிர் பிதுங்கல் ஆம் உடலினர் - உயிர்வெளிப்படக்கூடிய [இரக்கும் நிலையிலிருக்கிற] உடம்பையுடையவர்களும், முடிவு இல் பீழையார் - எல்லையில்லாத துன்பத்தையடைந்தவர்களும், பதங்கள் தீ பருகிட பதைக்கின்றார் - பாதங்களில் (அங்நிலத்தின்) வெப்பம் தாக்குதலால் துடிக்கின்றவர்களுமாய், பல விதங்களால் - (அவ்வெப்பத்தினின்று தப்புதற்குப்) பலவகையினுற் பார்த்துக் கடைசியாக, நெடும் பிலம் வழியில் மேவினார் - பெரிய பிலத்துவாரத்தின வழியை அடைந்தார்கள்; (எ - று.)

"வானரவீரர்கள் அந்தப்பாலைவனத்தில் ஒதுங்கித் தப்புவதற்குச் சிறிதும் நிழலகப்படாமல் உயிர்போகும் நிலையையடைந்து, இறுதியாக, அங்குப்புலப்பட்டதொரு பிலவழியைச் சேர்ந்தன ரென்பதாம். பீழை-பீடா; வடசொல். பலவிதங்களால் பதைக்கின்றார் என்றுகூட்டி, பலவகையாக வருத்தமடைகினறவர்களாய் எனினுமாம்.

'நிழலினை காண்கிலாது' 'பீடையார்,' 'தீயுருகிட,' 'விதங்கொளா', 'வாயினமேவினார்' என்று சிலபிரதிகள். (உரு)

[வானரவீரர் அப் பிலத்தினுட் செல்லுதல்.]

உசு. மீச்செலவரிதினிவிளியினல்லது
தீச்செலவொழியவுநதடுக்குந்திண்பில
வாய்ச்செலனன்றெனமனத்தினெண்ணினார்
போய்ச்சிலவறிதுமென்றதனிற்போயினார்.

(இ - ள்.) 'இனி - இனிமேல், விளியின் அல்லது - இறத்தலல்லாமல், மீ செலவு அரிது - (சீதாபிராட்டியைத்தேடுமாறு பாலைவனத்தின் வழியாக) அப்பாற்செல்லுதல் (நமக்குக்) கூடாதகாரியமாகும், (ஆகையால்), திண் பிலம் வாய் செலல் - வலிய பிலத்தின் வழியிற் செல்லுதல், தீ செலவு ஒழியவும் தடுக்கும் - வெப்பமான பாலைநிலத்திற் செல்லுதலையாவது தடுக்கும்; (ஆகவே), நன்று - (இங்குச்செல்லுதலே) நல்லது,' என - என்று, மனத்தின் எண்ணினார் - மனத்திற்கருதியவர்களாய், போய் சில அறிதும் என்று - (இப்பிலத்தினுட்)சென்று அங்குள்ளசிலவிடங்களில ஆராய்வோமென்றுசொல்லி, அதனில் போயினார் - அப்பிலத்தினுள்ளே போனார்கள்; (எ - று.)

இப்பாலைவனத்தில் இனி ஒருகணமேனுஞ் செல்லுதல் உயிரழிவுக்கே காரணமாம்; ஆகவே, இங்குத்தோன்றுகின்ற பிலவழியிற் சென்றால், அது சீதையுள்ள இடமாக இல்லாதிருந்தாலுங்கூட நிலத்தின வெம்மையையேனும் தணிக்கும்; ஆதலின், இப்போது இங்குச்செல்லுதலே நாம் செயத்பாலது; மேலும், இதற்குள்ளிருக்குஞ் சிலவிடங்களிலும் சீதையைத் தேடிப் பார்ப்போமென்று கருதி வானரவீரர் அப்பிலத்தினுட் புகுந்தன ரென்க. மீச்செலவு (அப்பாலைவனத்தின) மீது செல்லுதல் எனினுமாம். ஒழியவும், உம்மை-இழிவுசிறப்பு; ஒழியவென்னுஞ் செயவெனெச்சம், தொழிற்பெயர்

தன்மைப்பட்டுத் தபித்தற்றொழிற்குச் செயப்படுபொருளாய் நின்றது; "அறஞ்செயவிருப்பு" என்னுமிடத்தில் 'செய' எனபதுபோல

'தீச்செலவுரியவுமடுக்கும்,' 'தீச்செலவொழியவுமடுக்கும்,' 'போய்ச் செலவறிதும்,' 'அதனிற்புக்கனர்' என்று பாடாந்தரங்கள். (உக)

[வாநரவீரர் அந்த இருள்செறிந்த குகையை யடைதல்.]

உஎ. அக்கணத்தப்பிலத்தகணியெய்தினர்
திக்கினோடுலகுறச்செறிந்ததேங்கிரு
ளெக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புரைபுக்கெய்தினர்.

(இ - ள்,) (வானரவீரர்கள்),—அ கணத்து - அப்பொழுது, அ பிலத்து அகணி எய்தினர் - அந்தப்பிலத்தினது உள்ளிடத்தை யடைந்தவர்களாய்,—திக்கினொடு உலகு உற செறிந்த தேங்கு இருள் - நான்கு திக்குக்களிலும் இவ்வுலகத்திலும் மிகநெருங்கிய பேரிருள், எக்கிய கதிரவற்கு அஞ்சி - (தம்மையுண்பதிற்) பரியுள்ளவனான சூரியனிடத்து அச்சங்கொண்டு, ஏமுற புக்கதே அனையது - (தான்) க்ஷேமத்தை யடையுமாறு புகுந்துள்ளது போலத் தோன்றுவதாகிய, ஓர் புரை - ஒரு குகையில், புக்கு எய்தினர் - புகுந்து சென்றார்கள்; (எ - று.)

வானரவீரர் பிலத்தினுட்செல்லுகையில், அதனிடையிலே இருள்செறிந்ததொரு குகையில் நுழைந்து செல்லலாயின ரென்பதாம். அங்கு நிறைந்திருந்த இருளை, உலகமெங்கும் பரவியுள்ள இருள் தனக்குப் பகைவனான சூரியனுக்கு அஞ்சி அங்குப் பதுங்கியிருப்பதாகக் குறித்தது—தன்மைத்தற்குறிப்பேற்றவணியின் பாற்படும்; "தூங்கிருள் வெய்யோற்கொதுங்கிப், புக்கிருந்தாலன்ன பொழில்" என்ற நளவெண்பா இந்த ஒப்புநோக்கத்தக்கது அகணி உள்ளிடம்; (இதன் எதிர்மொழி - புறணி; வெளியிடமென்பது அதன்பொருள்.) எக்குதல் - பரியின்றல் வயிறுகுழைதல் எழுகிரணங்களையுடைய அக்கினியினும் பதினாறு கிரணங்களையுடைய சந்திரனினும், அவர்கட்குக்கொடுத்து வாங்குகின்ற ஆயிரங்கிரணங்களையுடைய சூரியன சிறத்தலால், அவனுக்கு கதிரவனென்று ஒருபெயர் புரை - உள்ளறை.

'அதனினெய்தினர்,' 'அந்தமெய்தினர்,' 'உலகினில்,' 'செறிந்து' என்று பாடாந்தரங்கள். (உஎ)

[வாநரவீரர் அந்தத் திகைத்து வருந்துதல்.]

உஅ. எழுகிலர்காலெடுத்தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனுமுணர்வுமாறினா
ரிழுகியநெய்யெனுமிருட்பிழம்பினுண்
முழுகியமெய்யராயுயிர்ப்புமுட்டினார்.

(இ - ள்.) (அவர்கள்),—எழுகிலர் - (அப்பாற்செல்லும்படி) புறப்படாமலும்,—கால் எடுத்து ஏகும் எண் இலர் - அடியெடுத்துச் செல்லும் எண்ணமில்லாமலும்—வழி உளது ஆம் எனும் உணர்வு மாறினார் - அப்பாற்செல்லு

தற்குஉரிய வழி உளது என்னும் அறிவும் இல்லாமலும், இழுகிய நெய் எனும் இருள் பிழம்பினுள் முழுகிய மெய்யர் ஆய - விழுதாகவுறைந்த நெய் போன்ற இருளின் தொகுதியில் முழுகிப்போன உடம்பையுடையவர்களாய், (ஒருவர்க்கொருவர் இருப்பிடம் அறிந்துகொள்ளமுடியாமல்), உயிர்ப்பு முட்டினார் (அச்சத்தினாலும் வருத்தத்தினாலும்) பெருமூச்சுவிட்டார்கள்; (எ - று.)

அங்கு இருட்பிழம்பினுள் அகப்பட்டுக்கொண்ட வானரவீரர் மேற் செய்தொழிலிற சிறிதும் எண்ணமில்லாது இருட்பிழம்பினுள் தாங்கள் அகப் பட்டுக்கொண்டதனால் ஒருவரையொருவர் முகங்காண முடியாது திகைத்துப் பெருமூச்சுவிட்டனரென்பதாம்.

"'ஏகவெண்ணிலர்,' 'உணர்வுமாற்றினார்,' 'முழுகியதேபெனவுரப்பி,' 'இழுகியதென்னிதிலிழிந்துவீழ்தழி,' 'இருளினைக்கத்துண்,' 'ஒழுகிய தெனவழந்திருளினுள்ளத்தின், முழுகியமெய்பினருரப்பி' என்று பாடாந்தரங்கள்.

[மற்றவாநரவீரர்கள் தம்மைக்காக்குமாறு அநுமானை வேண்டுதல்]

உகூ. நின்றனர்செய்வதோர்நிலைமையோர்கலர்
பொன்றினராமெனப்பொருமுபுந்தியர்
வன்றிறன்மாருதிவல்லையோவெமை
யின்றிதுகாக்கவென்றிரந்துகூறினார்.

(இ - ள்.) (அநுமானல்லாத மற்றைவாநரவீரர்கள்),—செய்வது ஓர் நிலைமை ஓர்கலர் நின்றனர் - தாம்செய்யவேண்டியதொரு காரியத்தையும் உணர மாட்டாதவர்களாய்த் திகைத்து நின்றவர்களும், பொன்றினார் ஆம் என பொருமு புந்தியர் - இறந்தும் நிலையையடைந்தவர்போல வருந்துகின்ற மனத்தையுடையவர்களுமாகி,—(அநுமானைநோக்கி),—'வல் திறல் மாருதி - மிக்கவலிமையையுடைய அநுமானே! இன்று - இப்போது, எமை இது காக்க வல்லையோ - எங்களை இத்துபத்தினின்று மீட்டுக்காப்பதற்கு வல்லாயோ?' என்று—, இரந்து கூறினார் - வேண்டிக்கொண்டார்கள், (எ - று.)

புந்தி - 'புத்தி' என்ற வடசொல்லின் விகாரம். மநம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற அந்தக்கரணவுறுப்புக்கள் நான்கனுள் ஒன்றாகிய புத்தியென்பது - அவயவியாகிய அந்தக்கரணமென்ற பொருளில் நின்றது; அந்தக்கரணம் - உள்ளுறுப்பு, உள்ளம். வன்திறல் - ஒருபொருட்பன்மொழி. மாருதி - அண்மைவிளி.

'நிலைமைநோக்கிலா,' 'நோக்கலர்,' 'பொன்றினம் யாமென,' 'வல்லை நீயெமை' என்று பாடாந்தரங்கள். (உகூ)

[அநுமான் தன்னைப்பின்பற்றிவருமாறு அவர்கட்குக் கட்டளையிட்டு தான் கையினால் தடவிக்கொண்டு முன்னேசெல்லுதல்]

௩௦. உய்வுறுத்துவென்மனமுலையிருழின்வான்
மெய்யுறப்பற்றுதிாவிடுகிலீரென
வைபனக்கணத்தினிலகலுமீனெறி
கையினிற்றடவிவெங்காவினேகினான்.

(இ - ள்.) (அநுமான் மற்றையோரை நோக்கி), 'உய்வு உறுத்துவென் - (உங்களுக்குப்) பிழைப்பை யுண்டாக்குவேன்; மனம் உலையிர் - (நீங்கள்) மனம்வருந்தவேண்டா; ஊழின் வால் மெய் உற பற்றுதிர் - முறையாக [ஒருவர்பின் ஒருவராக தினறு] எனது வாலை உறுதியாகப் பிடித்துக்கொள்ளுங்கள்; விடுகிலீர் - (அதனை) விடாதீர்கள்,' என - என்று கட்டளையிட்டு, அக்கணத்தினில் - (அவர்கள் தனது வாலை முறைமையாகப் பிடித்துக்கொண்ட) அப்பொழுதே, ஐயன் - சிறந்தவனாகிய அநுமான், அகலும் நீள் நெறி - தான் செல்லவேண்டிய அந்தக குகையின் வழியில், கையினில் தடவி - கையினால் தடவிக்கொண்டு, வெம் காலின் ஏகினன் - வேகத்தையுடைய காலினால் நடந்து முன்னே சென்றான்; (எ - று.)

பேரிருட்பிழம்பில் திசைதெரியாது திகைத்துத் தம்மைக் காக்குமாறு வருந்திக்கூறிய வானரவீரர்கட்கு அநுமான் அபயமளித்துப் பேருருவங்கொண்டு தனது நீண்டவாலைப் பிடித்துக்கொள்ளுமாறு கட்டளையிட்டுக் கையினால் தடவிக்கொண்டு காலினால் முன்னே நடந்துசென்றன னென்க. அநுமான் பேருருவங்கொண்டமை, அடுத்தசெய்யுளில் விளங்கும். பேரிருளிற செல்பவர் எதிரில் ஒன்றுமில்லையாவென்பதை யுணர்தற்பொருட்டுக் கையைத்துழாவிக்கொண்டு செல்லுதல், இயல்பு. காலினேகினன் - காற்றுப்போல விரைந்துசென்றா னென்றும பொருள்படும்: மெய் என்ற சொல்- உறுதி யென்ற பொருளில் வந்தது.

'மனமுலையலூழிலென், மெய்யுறப்பற்றுமின்,' கணத்தினின்று, 'கையுறத்தடவி' என்று சிலபிரதிகள். (கூ0)

[இதுவும் அநுமான் சென்றமையைக் கூறும்.]

கூக. பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனைய குண்டலங்கள் வில்விடத்
துன்னிருடொலைந்திடத் துரிதத்தேகினான்
பொன்னெடுங்கிரிகளைப் போற்பொலிந்ததோளினான்.

(இ - ள்) நெடும் பொன் கிரிகள போல் பொலிந்த தோளினான்-நீண்ட பொன்மயமான மலைகள [மேருமலையிரண்டு உண்டானால் அவை] போல விளங்குகின்ற தோள்களையுடையவனான அநுமான், பன்னிரண்டு யோசனை படர்ந்த மெய்யினன் - பன்னிரண்டு யோசனைதூரம் வளர்ந்த சரீரத்தையுடையவனாய்,—மின் இரண்டு அனைய குண்டலங்கள் வில் இட - (தனது காதுகளிலணிந்துள்ள) இரண்டுமின்னற்கொடிபோன்ற குண்டலம் இரண்டு ஒளியை வீசுவதனால், துன் இருள் தொலைந்திட - நெருங்கிய இருள் விலகியொழிய, துரிதத்து ஏகினன் - விரைவாகச் சென்றான்; (எ - று.)

அநுமான் பெருவடிவமெடுத்துத் தனது குண்டலங்கள் விட்டுவிட்டுப் பிரகாசிப்பதனால் இடையிடையே இருள் இரிந்தோட அக்குகையினுட்புறத்திற் சென்றன னென்க. அனுமான் சென்றவகையை வேறுவகையாக விவரித்துக்கூறியதனால், இச்செய்யுள் கிழ்ககவியோடு கூறியது கூறலாகாதென்க. அநுமான் தான் எண்ணியபடியெல்லாம் உருவமெடுக்கவல்ல வல்லமை

யுடையா னென்பதை "பிறியாவறத்தினநுமான் வளர்ச்சி பெருமேருவிற் பெரியனுஞ், சிறிதாயொடுங்குமெனின் மேனியற்பவணுவானதிற் சிறியனு, முறுகாரணத்தினளவாமுருக்கொளுயர்வீரன" என்ற ஒட்டக்கூத்தருத்தரகாண்டச்செய்யுளாலும் உணரலாம். அக்குகையினுட்புறத்தில் அரக்கரேனும் கொடுவிலங்குகளேனும் இருப்பின தனது உருவத்தைக் கண்டே அச்சங் கொள்ளவேண்டுமென்று கருதி, அநுமான் பேருருவங்கொண்டன னென்னலாம். "காஞ்சநாத்ரி கமநீய விக்ரஹம் [மேருமலைபோல அழகிய சரீரமுடையான்]" என்ற அநுமான்துதிக்குப் பொருந்துதலால், 'பொன்னெடுங் கிரியெனப் பொலிந்த மேனியான்' என்ற பாடம் ஏற்கும்.

'பரந்தமெய்யினன்,' 'அருவியேகினுன்,' 'கிரியென,' 'பொன்னெடுங் கிரிநிகர்' என்று பாடாந்தரங்கள். (௩௧)

[அநுமான் முதலிய வாநரவீரர் அந்த நகரமொன்றைக் காணுதல்.]

௩௨. கண்டனர்கடிநகர்கமலத்தொண்கதிர்
மண்டலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரிகத்தவள்வதனம்போன்றது.

(இ - ள்.) (வானரவீரர்), கடி நகர் கண்டனர் - (அப்பிலத்தினுட்புறத்தில்) சிறந்த நகரமொன்றைக் கண்டார்கள்; (அது), கமலத்து ஒள் கதிர் மண்டலம் மறைந்து உறைந்த அனைய மாண்பது - தாமரையைமலரச்செய்யும் ஒள்ளிய கிரணங்களையுடைய சூரியமண்டலமானது அங்குவந்து மறைந்து வசித்தாற் போன்ற பெருமையையுடையது; விண் தலம் நாண உற விளங்குகின்றது - வானத்திலுள்ள சுவர்க்கலோகமும் வெளகும்படி (அதனினுஞ் சிறப்பாகப்) பிரகாசிக்கின்றது; புண்டரிகத்தவள் வதனம் போன்றது - செந்தாமரைமலரில் வாழ்பவளான இலக்குமியின் முகத்தை யொத்தது; (எ - று.)

பிலத்தினுள் இருந்த அந்த நகரமானது மிக்கவொளியுடைமையால் மறைந்துள்ளதொரு சூரியமண்டலத்தைப் போன்றும், செல்வச்சிறப்பினாலும் பொனனிறமான பொருள்களையுடைமையாலும் சுவர்க்கலோகமும் நாணுமாறு பொலிவுபெற்றும், மிக்க அழகுடைமையால் லக்ஷ்மியின் முகத்தை நிகர்த்துந் தோன்றிற்றெனக. சூரியனைக்கண்டமாத்திரத்தில் தாமரைமலர்தல இயல்பாதலால், அவனை 'கமலத்தொண்கதிர மண்டலம்' என்றார். கடி - பலபொருள் குறிக்கும் ஓர் உரிச்சொல்.

'கண்டனன,' 'கானமுதொண்கதிர,' 'கருங்கலையொண்கதிர்,' 'புண்டரிகத்தினள்' என்று பிரதிபேதம். (௩௨)

[இதுமுதல் ஐந்துகவிகள் - அந்நகரின் வருணனை]

௩௩. கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப்புரிசைபுக்கது
வற்புதமமரருமெய்தலாவது
சிற்பியாமயன்மனமவருந்திச்செய்தது.

(இ - ள்.) (அந்நகரம்),—கற்பகம் கானது - கற்பகவிருக்ஷம்போன்ற (பொன்மயமான) மரங்களையுடையது; கமலம் காடது - தாமரைமலர்த்தொகுதியை (யுடைய நீர்நிலையை) யுடையது; பொன் பெருங் கோபுரம் புரிசை புக்கது - பொன்னிறமான பெரிய கோபுரங்களையுடைய மதில்கள் பொருந்தப்பெற்றது; அமரரும் அற்புதம் எய்தல் ஆவது - தேவர்களும் (கண்டு) வியப்படையக்கூடியது; சிற்பி ஆம் மயன் மனம் வருந்தி செய்தது - அசுரசிற்பியாகிய மயனென்பவன் தன்னுமனத்தினால் சிரமப்பட்டு நிருமித்தது; (எ-று.)

பொன்மயமான மரங்களை யுடைய தென்பார் 'கற்பகக்கானது' என்றும், பொன்னுலகத்தில் வாழ்கின்ற தேவர்களும் கண்டு வியப்படையுமாறு தோற்றஞ் சிறந்துள்ள தென்பார் 'அற்புதமமரருமெய்தலாவது' என்றும், இந்நகரம் அசுரசிற்பியாகிய மயனால் நிருமிக்கப்பட்ட தென்பார் 'சிற்பியாமயன்மனம் வருந்திச்செய்தது' என்றுங் கூறினார். கான், காடு என்பன - தொகுதியென்னும் பொருளில் வந்தன. புக்கதுவற்புதம் - குற்றியலுகரம் கெடாமல் உடம்படுமெய் பெற்றது.

'புரிசைநீடியது,' 'அற்புதத்தமரரும்,' 'அற்புதவமரரும்,' 'சிற்பமுமயன், சிற்பியாமயன்மகன்' என்று பிரதிபேதம். (௩௩)

௩௪. இந்திரன் நகரமுமிணையிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினி
லந்தரத்தெழுசுடரவையின்றாயினு
முந்தருமிருடுரந்தொளிர நிற்பது.

(இ - ள்.) (அந்நகரம் அக்கடிநகர்),—இந்திரன் நகரமும் இணை இலாதது - தேவேந்திரனுடைய நகரமாகிய அமராவதியும் (தனக்கு) ஒப்பாகப் பெறாதது; அந்தரத்து எழு சுடர் அவை மண்ணினில் இன்று ஆயினும் - ஆகாயத்தில் தோன்றுகின்ற சூரியசந்திரர்களாகிய இருசுடர்களினொளியும் (அந்நகரத்து) மண்ணில் தோன்றுகின்றனவல்ல வென்றாலும்,—மந்திரம் மணியினில் பொன்னின் - (அந்நகரத்து) மாளிகைகளின் இரத்தினங்களினாலும் பொன்னினாலும், உந்த அரும் இருள் துரந்து ஒளிர நிற்பது - நீக்குதற்கு அரிய பேரிருளையும் அடியோடு ஒழித்துப் பிரகாசிக்கின்றது; (எ-று.)

ருக்ஷபிலத்தின் உட்புறத்திலுள்ள அந்தநகரம், சூரியசந்திரர்களினொளியைப்பெறுதற்கு இடமில்லையாயினும், தன்னிடத்து நிரம்பியுள்ள மாளிகைகளின் இரத்தினங்களினாலும் பொன்னினாலும் இருளையொழித்து விளங்கு மென்பதாம். சுடரவை, அவை - பகுதிப்பொருள் விகுதி. உந்தரும் - வினையெச்சத்தின் அகரவீறு தொகுத்தல்: உந்து அரும என்று பிரித்து, உந்து என்பதை - முதனிலைத் தொழிற்பெயரெனினுமாம்.

'இந்திரநகரினுநிகரிலாதன,' 'அந்தரத்தவிர்சுடர்,' 'அந்தரத்திழிசுடர்,' 'ஒளிருகின்றது,' 'ஒளிர்கின்றது' என்று பிரதிபேதம். (௩௪)

௩௫. புலிபுகழ்ச்சென்னிபேரமலன்றோள்புகழ்
கலிகடமனையெனக்கனகராசியுஞ்
சலியுடைத்தூசுமென்சாந்துமாலையு
மலிரிழைக்குப்பையுமளவிலாதது.

(இ - ள்.) (மற்றும் அக்கடிநகர்),—புவி புகழ் சென்னி பேர் அமலன் தோள் புகழ் கவிகள் தம் மனை என - உலகத்தாராற் புகழப்படுகின்ற குலோத்துங்கசோழனாகிய பெருமைபெற்ற குற்றமற்ற அரசனது தோள்வலியைப் புகழ்ந்துபாடிய புலவர்களது வீடுகள்போல, கனக ராசியும் - பொன்திரளும், சவி உடை தூசும் - ஒளியையுடைய வஸ்திரங்களும், மெல் சாந்தும் - மென்மையான கலவைச்சந்தனமும், மாலையும் - மலர்மாலைகளும், அவிர் இழை குப்பையும் - விளங்குகின்ற ஆபரணங்களின் குவியல்களும், அளவு இலாதது - அளவில்லாமல் நிறையப்பெற்றது, (எ - று.)

கம்பர் தமது செய்ந்நன்றியறிவினால் தம்மையாதரித்த குலோத்துங்க சோழராஜனது பெருமையை, உபமானமுகத்தால் இச்செய்யுளிற் பாராட்டிக்கூறினரென்க. அவ்வரசன் தன்னை நாடிவந்து புகழ்ந்துபாடுகின்ற கவிஜனங்களுக்கு உடனே பொற்றிரள் முதலியவற்றைக் கணக்கில்லாமற்கொடுக்கும் வண்மையுடையானென்பதை விளக்கினார். சென்னி - தலை; அரசர்களுள் தலைமைபெற்றவனாதலால், சோழராஜனுக்கு இப்பெயர். வடமொழியில் ஏழாம்வேற்றுமை விரியாகிய 'புவி' என்பது - தமிழில் முதல்வேற்றுமையாய் நிற்கும்; இங்கு, இச்சொல் - இடவாகுபெயராய், புவியிலுள்ளாரை யுணர்த்திற்று. மலம் - குற்றம்: அது இல்லாதவன் - அமலன்; வடமொழி. 'ராசி' என்பதை 'ராஜி' என்பதன் விகாரமெனக் கொண்டால் வரிசையென்றும், 'ராஶி' என்பதன் விகாரமெனக் கொண்டால் குவியலென்றும் பொருளாம்.

'சென்னிபேரபயன,' 'சென்னியாதித்தன,' 'சென்னியோனமலன்,' 'சாந்துஞ் சுண்ணமும்,' 'அவிரமணிக் குப்பையும்' என்பன - பாடாந்தரங்கள். (௩௫)

௩௬. பயில்குரற்கிணைகிண்ணிபதத்தபாவைய
ரியல்புடைமைந்தர்களியக்கிலாமையாற்
றுயிலவுநோக்கவுந்துணையதன்றியு
முயிரிலாவோவியமென்னவொப்பது.

(இ - ள்.) (மற்றும் அக்கடிநகர்),—பயில் குரல் கிண்கிணி பதத்த பாவையர் - ஒலிக்கின்ற ஓசையையுடைய சதங்கையை யணிந்த கால்களோடுகூடிய மகளிரும், இயல்பு உடை மைந்தர்கள் - நல்லொழுக்கமுடைய ஆடவரும் என்ற இவர்களது, இயக்கு இலாமையால் - சஞ்சாரமில்லாமையாலே,—துயிலவும் நோக்கவும் துணையது அன்றியும் - நித்திரைசெய்யவும் காணவும் வல்லமையுடையதாகாமலும், உயிர் இலா - உயிரில்லாமலு மிருக்கின்ற, ஓவியம் என்ன - சித்திரத்தைப் போன்றதென்று சொல்வதற்கு, ஒப்பது - தகுதியாயிருக்கின்றது; (எ - று.)

மிகவும் வல்லமை பொருந்தியவனால் வரையப்பட்ட சித்திரம் மற்றெவ்வாற்றானும் குறைவின்றியிருப்பினும் உணர்ச்சிக்குக் காரணமான உயிரில்லாமையாகிய ஒரு குறைவையுடையதாவது போல, பலவகைக் காட்சிகளும் திரம்பப்பெற்ற இந்நகரம் வேறுவகையாற் குறைபாடொன்றும் இன்றியிருப்

பினும் தன்காட்சிகளைக் கண்டு நுகரும் மகளிரையும் ஆடவரையும் பெற்றிலாமையாகிய ஒரு குறைவைக் கொண்டுள்ளதென்றவாறு. கிண்கிணி - கிண்கிணென ஒலிப்பதென்று காரணப்பொருள். பாவையர் - சித்திரப்பிரதிமை போன்றவர்.

'பாந்தபாவையர்,' 'பாதப்பாவையர்,' 'பாடற்பாவையர்,' 'மைந்தரொன்றிவரிலாமையால்,' 'மைந்தரொன்றியகதிலாமையால்,' 'துயில்வுறு நாட்டமுந் துடிப்பதொன்றிலா' என்பன பிரதிபேதம். (௬௬)

௬௭. அமிழ்துலை யயினியை யடுதத வுண்டியுந
தமிழ்நிகர் நறவமுந தணிதகண் டேறலு
மிமிழ்கனிப் பிறக்கமும பிறவு மின்னன
கமழ்வுறத தோன்றிய கணககில் கொட்பது.

(இ - ள்.) (மேலும் அக்கடிநகர),—அமிழ்து உலை அயினியை அடுதத உண்டியும - அமிருததத்தையும வருத்துகின்ற [தேவாமிருதத்தினும் இனிய] சோறு முதலிய உணவுப்பொருள்களும், தமிழ் நிகர் நறவமும - தமிழ்ப் பாஷையை யொதத தேனும், தணி தண தேறலும் - ஒப்பறற குளிர்ந்த மதுவும், இமிழ் கனி பிறககமும - இனிய பழஙகளின திரளும், இன்னன பிறவும் - இவைபோலவன மறறை யுணவுபபொருள்களும, கமழ்வு உற தோன்றிய - நறுமணம் வீசுமாறு நிறைந்துள்ள, கணககு இல் கொட்பது - எல்லையில்லாத பெருமையுடையது; (எ - று.)

உண்ணுதற்கு இனிய பலவகைப்பண்டஙகளும் நிறைந்துளளது அக்கடிநகரெனக. அயினி-சோறு. கவி தமககுஉள்ள பாஷாபிமானததால் நறவத்துககுத் தமிழை உவமைகூறினர். பிறககம் - விளங்குவது என மலேககுக் காரணப்பெயா; இங்கு, இச்சொல்-இலக்கணையால, பெருந்திரளை யுணர்த்திற்று. 'தோன்றிய' எனனும பெயரெச்சம், 'கொட்பது' என்னுங் குறிப்பு முற்றின் முதனிலையாகிய 'கொட்பு' என்றதைக் கொண்டு முடியும்.

'அமிழ்துலேவாயினவடுதத', 'தணிதண்டேறலும,' 'தெளிதண்டேறலும்,' கமழ்வுறுததோஙகிய' எனபன பிரதிபேதம். (௬௭)

வேறு.

[வாநரவீரர்கள் அந்நகரத்தினுட் புகுதல்.]

௬௮. கன்னிநெடு மாநகர மன்னதெதிர்கண்டா
ரிநநகர மாமிகலி ராவணனு தூரென்
றுன்னியுரை யாடினரு வநதனர்வி யநதார்
பொன்னிநெடு வாயிலத னூடினிது புக்கார்.

(இ - ள்.) (அநுமான் முதலிய வானரவீரர்கள),—அன்னது கன்னி நெடு மா நகரம் - அததன்மையதாகிய அழிவில்லாத மிகப்பெரிய பட்டணத்தை, எதிர் கண்டார் - நேரிற்கண்டவர்களாய்,—இ நகரம் இகல் இராவணனது ஊர் ஆம் என்று உன்னி உரை ஆடினர் - 'இந்தநகரமானது பகைமையையுடைய இராவணனது நகரமாகும்' என்று நினைத்து(த் தமக்குள் ஒருவ

ரோடொருவர்) பேசிக்கொண்டு, உவந்தனர் வியந்தார் - மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் ஒருங்கேகொண்டவர்களாய், பொன்னின் நெடு வாயில் அதனூடு இனிது புக்கார் - பொன்மயமான நீண்ட அந்நகரத்து வாயிலில் சுகமாக நுழைந்தார்கள்; (எ - று.)

அந்நகரத்தை வானரவீரர்கள் கண்டமாத்திரத்தில் இராவணனது இலங்கையென்று நினைத்து உடனே சீதையைக் காணலா மென்ற உவப்போடு உள்ளே புகுந்தன ரென்க. கன்னி - அழிவில்லாமை, உறுதி; இனி, கன்னி நகரம் - சுயம்பிரபையின நகரம் எனினுமாம். வாயில் - இல்வாய் என்பதன் இலக்கணப்போலி.

'இந்நகரமீதிகள்,' 'பொன்னினெடுவாசலதனூடு,' 'நனிபுக்கார்' என்று பிரதிபேதம்.

இது முதல் இப்படலம முடியுமளவும் முப்பத்தேழு கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும காய்ச்சீர்களு மாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள் (௩௫)

[வாநரவீரர்கள் அங்குத் தேடுதல்.]

௩௬. புக்கநகரத்தினிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலைவானுலகின்வையத
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியினுள்ளவுமெதிர்ந்திலர்திரிந்தார்.

(இ - ள்.) (வானரவீரர்கள்),—புக்க நகரத்து - (தாங்கள்) நுழைந்து சென்ற அந்தநகரத்தில், இனிது நாடினர் புகுந்தார் - நன்றாகத் தேடத் தொடங்கினவர்களாய்,—தேவர் தலை மக்கள் கடை வான் உலகின் வையத்து ஒக்க உறைவோர் உருவம் - தேவர்கள் முதலாக மனிதர்கள் ஈறாக வானுலகத்திலும் நிலவுலகத்திலும் பொருந்திவாழ்கின்றவர்களின் உருவங்கள், ஓவியம் அலால் - சித்திரரூபமாக அங்கு உள்ளனவல்லாமல், மற்று எ குறியின் உள்ளவும் - வேறே உண்மையான வடிவமுடைய எப்பொருள்களையும், எதிர்ந்திலர் - நேரே காணப்பெறாதவர்களாய், திரிந்தார் - (அந்நகரமுழுதும்) திரிந்தார்கள்; (எ - று.)

தேவர் மனிதர் முதலியோரது உருவங்கள் சித்திரரூபமாகக் காணப்பட்டனவே யல்லாமல் மெய்ம்மையான வடிவத்தையுடைய ஒரு பிராணி யாவது அந்நகரத்துக் காணப்படவில்லை யென்றவாறு. தேவர்களை முதலாகவும் மனிதர்களைக் கடையாகவும் கூறியதனால், அசுரர் அரக்கர் முதலியோரை இடைப்பட்டவராகக் கொள்க. மக்கள் தேவர் என்ற முறைக்கு ஏற்ப, 'வையம்' 'வானுலகு' என்று நிறுத்தாது மாற்றிநிறுத்தியது, எதிர்நிரனிறை யென்ற பொருள்கோளின்பாற்படும். குறி - குறிக்கப்படுவது; எனவே, பிராணியாம்.

'நனிநாடினர்,' 'இனிது நாடுதல்புரிந்தார்,' 'வானுலகின்வாழ்வார்' என்று பிரதிபேதம். (௩௬)

[அந்நகரத்தின் தன்மை.]

சo. வாவியுளபொய்கையுளவாசமணநாறுங்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுமிளமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமுளதோகையர்களில்லை.

(இ - ள்.) (அந்நகரத்தில்),—வாவி உள - நடைவாவிகள் உள்ளன; பொய்கை உள - தடாகங்கள் உள்ளன; வாசம் மணம் நாறும் காவும உள - திவ்வியபரிமளம்வீசுகின்ற சோலைகளும் உள்ளன; காவி விழியார மொழிகள் என்ன கூவும் - கருங்குவளைமலாபோன்ற கண்களையுடைய மகளிரது இன்சொற்கள்போலக் கூவுகினற, இள மெல் குயில்கள் - இளமையான மெல்லிய குயில்களும், பூவை - நாகணவாய்ப்பறவைகளும், கிளி - கிளிகளும், கோலம் தூவி மடம் அன்னம் - அழகிய இறகுகளையுடைய இளமையான அன்னப்பறவைகளும், உள - உள்ளன; தோகையர்கள் இல்லை. (இவற்றால் இன்பமடைதற்குஉரிய) மகளிர் மாத்திரம் (அங்கு) இல்லை. (எ - று.)

மகளிர் புனல்விளையாட்டிற்குரிய வாவியும், பொய்கையும், பூக்கொய்து விளையாடற்கு உரிய பூஞ்சோலைகளும், கொஞ்சிப்பழகியும் மென்னடை பயின்றும் போதுபோக்குதற்கு உரிய குயில் முதலிய பறவைகளும் அங்கு நிரம்பியிருப்பினும் இவர்றைககண்டு மகிழ்தற்கு உரிய மகளிர்மாத்திரம் இல்லை யென்பதாம். கூவும எனனும பெயரெச்சம, குயில்கள் பூவை கிளி என்றவற்றோடு இயையும். வாச மணம் - ஒரு பொருட் பன்மொழி. தோகை. மயிலிறகு; சினையாகுபெயராய், மயிலையுணர்த்தும்; அதுபோனற சாயலை யுடைய மகளிர் - தோகையர். 'தூவிமடவனனமுளா தோகைசுவடில்லை' என்ற பாடத்திற்கு, அஙகு அன்னம் முதலிய எலலாப் பொருள்களும் உள்ளன; (இவையன்றி), தாம்தேடப்புகுந்த மயில்போன்ற சாயலையுடைய சீதையின் வடிவம் அங்குக் காணப்படவில்லை யெனப் பொருள் காண்க

'வாசமலாநாறும்,' 'காவுமுளவாறுமுளகாவிவிழியாரில்,' 'காவிவிழியார் கண்மொழியெனன,' 'அனனமிலையுளள சுவடில்லை' எனறு பாடாந்தரங் கள். (சo)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்: அக்குகைக்குள் வாநகர்கள் திகைத்ததைக் கூறும்.]

சக. ஆயநகரத்தினியல்புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனககருதிமற்றுநினைவுற்றார்
தீயபிலனுட்பிறவிசென்றதிதுவொன்றோ
தூயதுதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றார்.

(இ - ள்.) (வானரவீரர்கள்),—ஆய நகரத்தின் இயல்பு உள் உற அறிந்தார் - அந்நகரத்தினது தனமையை உட்புறத்துச்சென்று அறிந்தவர்களாய், 'மாயைகொல் என கருதி - மாயைத் தோற்றமோ வென்று முதலில் நினைத்து, (பின்பு), தீய பிலனுள் பிறவி சென்ற (என) - ('நமக்குக்) கொடிய பாதாளத்துட் பிறப்பு வந்தது' என்று, மற்று நினைவு உற்றார் - மற்றொரு

நினைவுடையராய், (பின்னர்), 'இது ஒன்றோ - இங்ஙனங் கருதியது ஓர் கருத்தோ? தூயது துறக்கம் - இது பரிசுத்த முடையதாகிய சுவர்க்க லோகமே,' என - என்று, நெஞ்சு துணிவுற்றார் - மனத்தில் நிச்சயித்துக் கொண்டார்கள்; (எ - று.)

மண்ணுலகில் பொன்மயமான தருக்களும் சித்திரரூபங்களும் பல வகைப்பறவைகளும் பொன்னினாலும் இரத்தினங்களினாலும் இயன்ற மாளிகைகளும் நிரம்பியிருக்கவும் ஆடவர் மகளிர் மாத்திரம் காணப்படாதிருந்தமையால், அதுகண்ட வானரவீரர்கள் பேரொளி நிறைந்து பொன்மயமான தருக்கள் முதலியவற்றைப் பெற்றிருக்கின்ற அந்தகாரத்திற் புகுந்து கண்ட போது முதலில் மாயையோவென்று பிரமித்து, பிறகு சிறிதுதேறிப் பூமியினின்றும் இறங்கிவந்ததுபற்றி இது பாதாளமாயிருக்க வேண்டுமென்று நினைத்து, அப்பால் பொன்மயமான தருக்கள் முதலியவற்றை யுடைமையால், பாதாளமென்ற கருத்தை மறுத்து இது சுவர்க்கமென்றே மனந்துணிந்தன ரென்பதாம். மாயையாவது - உள்ளதை இல்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவும் காட்டுகின்ற விசித்திரசக்தி. 'என' என்னும் வினையெச்சம், 'சென்ற' என்பதனோடுங் கூட்டப்பட்டது. உற = உற்று. உள்ளுற அறிந்தார் - நன்றாக அறிந்தார் என்றுமாம்.

'மற்று நினைகின்றார்,' 'சென றவிவை யொன்றோ,' 'சென்ற விது வொனறோ,' 'சென றதென நின்றார்,' 'சென்ற வதுவன்றோ,' 'தூயன துறக்கம்' என்று பாடாந்தரங்கள். (சக)

சஉ. இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
மறந்திலமயிர்ப்பினொடிமைப்புளமயக்கம
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றுந்
திறந்தெரிவதெனவெனவிசைத்தனர்திகைத்தார்.

(இ - ள்.) '(இனி நாம் சுவர்க்கத்தையடைந்துவிட்டோமென்போமானால்),—இறந்திலம் - (நாம்) இறக்கவில்லையே; இதற்கு உரியது எண்ணி இலம் - இந்தச்சுவர்க்கலோகத்தை யடைதற்கு உரிய தொழில்வகையை ஆலோசித்துச்செய்யவும் இல்லையே; ஏதும் மறந்திலம் - (முன்நிகழ்ந்த) எதையும் மறந்தோமில்லையே; அயிர்ப்பினொடு இமைப்பு உள - சந்தேகமும் இமைகொட்டுதலும் (நமக்கு) உள்ளன; இன்று மயக்கம் பிறந்தவர் செயற்கு உரிய செய்தல் பிழை - இப்பொழுது மயக்கமடைந்தவர் செய்தற்கு உரிய தொழிலைச் செய்தலும் (நமக்குப்) பிழையாகும்; (இங்ஙனமாயின்), திறம் தெரிவது என் - (இப்போது நமக்குநேர்ந்துள்ள) தன்மையைப்பற்றி ஆலோசித்துத் தெளிவது எவவாறோ?' என - என்று, இசைத்தனர் - (வானரவீரர்கள் ஒருவரோடொருவர்) கூறியவர்களாய், திகைத்தார் - பிரமித்து நின்றார்கள் (எ - று.)—ஆல் - ஈற்றசை.

கீழ்ச் சுவர்க்கமடைந்தவர்களாகத் தம்மைத் துணிந்த வானரவீரர்கள்; முன்னைய உடலினோடு இருத்தலினாலும், தாம் சுவர்க்கத்தைப் பெறுதற்கு உரிய சாதனத்தைச் செய்யாமையாலும், சீதாபிராட்டியைத்தேடுதல் முத

லிய முன்னைய எண்ணங்கள் தொடர்ச்சியாக உண்டாவதனாலும், தெளிவின்றி யிருத்தலும் கண்ணிமைத்தலும மதிமயக்கமும் தமக்கு நேர்ந்திருத்தலினாலும், தாம் சுவர்க்கத்தை யடையவில்லையெனத் துணிந்தன ரெனபது, முன்மூன்றடிகளின் பொருள். இவவாறான தன்மைகள் துறக்கமடைந்தவர்க்குத் தோன்றா வெனக இவ்வாறு துறக்க மடையவில்லையெனத் துணிந்து தெளிந்து, வானரவீரர்கள் தமது முன்னையமனநிலையில் மாறாட்டம் பிறந்திருத்தலால், 'திரம தெரிவது என' எனபாராயினர். 'துறககம் பிறந்தவர் செயற்குரிய பீடுமிலதென்னே' என்ற பாடத்துக்கு - சுவர்க்கமடைந்தவர்கள் செய்தற்குஉரிய பெருமையான செயலும் நம்மிடத்தி லில்லை; இது என்ன வியப்பு! என்று பொருளாம்.

'மறந்திலமனத்துயரம்விட்டிலம்உருததம்,' 'துறந்திலமவியர்ப்பிறேடிமைப்பிலதுாசகம,' 'பிறந்தவர்செயற்குரியசெயாதல பிழையெனரோர்,' 'துறக்கம், பிறந்தவர்செயற்குரியசெய்தல் பிழையொனரோ' என்று பாடாந்தரங்கள். (௪௨)

[அப்போது ஜாம்பவான் கலங்கிக்கூறுதல்.]

௪௩. சாம்பனவனொன்றுரைசெய்வானெழுசலததாற்
காம்பனைய தோளினையொளிததபடுகள்வ
னாமபுகவமைததபொறிநன்றுமுடிவின்று
மேலைபினிமேலைவிதியான்முடியுமென்றான்.

(இ - ள்.) சாம்பன் அவன ஒனறு உரைசெய்வான் - (அப்போது வானர வீரர்களை நோக்கி) ஜாம்பவான ஒனறுகூறத தொடஙகினான்:—'எழு சலத்தால் காம்பு அனைய தோளினை ஒளித்த படுகளவன - (தனனிடத்து இயல்பாகத்) தோன்றியுளள வஞ்சனையினால் மூஙகிலையொதத தோள்களையுடைய சீதாபிராட்டியைக கவர்ந்துசென்று மறைததுவைதத பெருந்திருடனான இராவணன, நாம புக அமைதத - (அச்சீதையைத தேடிவருகின்ற) நாம அகப்பட்டுத் தவிக்குமாறு ஏறபடுததிவைதத, பொறி - யந்திரம், நன்று - நன்றாயிருக்கிறது! முடிவு இன்று - (இதற்கு) ஒரு முடிவுமில்லை; எம்பல் இனி மேலை விதியால முடியும - (இதுவரையிலும நமக்கு உண்டாயிருந்த) ஊழ்வினை இனிமேல முன்னைத் தீவினையால ஒழிந்துவிடும்,' என்றான - என்று வருந்திக்கூறினான; (எ - று.)—ஆல - அசை.

'சீதையைக கவர்ந்துசென்ற இராவணன் அச்சீதையைத் தேடுபவர்கள் தன்னிடதது வராதவண்ணம் இடைவழியிலே யகப்பட்டு வீழ்ந்தொழியும்படி வஞ்சனையாற்செய்த படுகுழியாகும இது; நாம் இதிலே அகப்பட்டுக் கொண்டபடியால், இனி இதில் அழிந்தொழிவதே நமது விதி' என்று ஜாம்பவான் மனமநொந்து கூறினனெனக. சலம் - ச்லம், வடசொல்; வஞ்சனையென்று பொருள். எழுசலததால உரைசெய்வான என்று இயைத்து-(தமது பகைவனாகிய இராவணனை நினைததலினால்) மூண்டெழுகின்ற கோபத்தோடு சொல்லத்தொடஙகினா னென்று பொருள் கூறுவாருமுளர். மகளிர் தோளுக்கு இளமூங்கில் - திரட்சியிலும நீட்சியிலும் செய்ப்பிலும் உவமை

யாம். படிகள்வன்—'படு' - மிக்க கொடுமையை யுணர்த்துவதோர் தமிழுப சருக்கம்; 'படுபாழ்,' 'படுபாவி' என்னு மிடங்களிலும் இது காண்க. பொறி நன்று - பிறகுறிப்பு 'முடிவின்று' என்பது - இதனிலிருந்து நாம் தப்ப வழியில்லை யென்ற குறிப்பு. மேலைவிதி - முற்பவத்திற்செய்த வினை.

'எழுதவத்தால்,' 'தோளிணையயெடுத்த,' 'நாம் புகுதவைத்தபிலநன்று,' என்று சிலபிரதிகள். (௬௩)

[அநுமான் ஜாம்பவானைத் தேற்றுதல்]

௬௪. இன்றுபிலனீ திடையினேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிகமாகிநனிசேறு
மன்றதெனின்வஞ்சனையரக்கரையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான்.

(இ - ள்.) (அந்த ஜாம்பவானை நோக்கி), மாருதி - அநுமான்,—'இன்று இடையின் பிலன் ஈது ஏற அரிது எனின் - இப்பொழுது இடைவழியி லுள்ள இந்தப் பிலத்தினின்று ஏறி அப்பாற்செல்லுதல் முடியாதென்றால்,— சகரர்க்கு அதிகம் ஆகி பார் தின்று நனி சேறும் - சகரபுத்திரரைப் பார்க்கி லும் மிக்க வல்லமையை யுடையவர்களாகிப் பூமியைத் தோண்டிக்கொண்டு (நாம்) அப்பாற் சுகமாகச் சென்றுவிடுவோம்; அது அன்று எனின் - அவ்வா றில்லையென்றால், வஞ்சனை அரக்கரை அடங்க கொன்று எழுதும் - இவ் வாறு வஞ்சனைசெய்த ராக்ஷஸர்களையெல்லாம் கொன்று மேலெழுந்து செல் வோம்; அஞ்சல் - சிறிதும அஞ்சவேண்டா,' என - என்ற, கொதித்தான - கோபங்கொண்டு கூறினான்; (எ - று.)

சகரபுத்திரர்களைப்போலப் பூமியைத்தோண்டியாவது அரக்கர்களை யெல் லாம் அடியோடு அழித்து மேலெழுந்தாவது வெளிச் செல்வோம்: அஞ்ச வேண்டா என அநுமான் மனங்கலங்கிய ஜாம்பவானைத் தேற்றின னென்க. மண்ணைத்தோண்டிப் பாதாளத்திற சென்றவரினும் மேற்சென்றவர் சிறந்தவ ராதலால். 'பாரதின்று சகரர்க்கதிகமாகி' எனப்பட்டது. 'வினைச்சொல் வேண்டியபொருளை விளைக்கும்' என்ற கொள்கையின்படி, தின்று என்ப தற்கு - தோண்டியெனப் பொருள் கொள்ளப்பட்டது; தின்று - விழுங்கி யென்று பொருள் கூறுவாருமுளர்.

சகரபுத்திரர் பூமியைத் தோண்டிய வரலாறு :—சூரியகுலத்து உதித்த சகரமகாராஜன் தனது அறுபதினாயிரம் புதல்வரது சௌரியத்தைக் கண்டு 'அசுவமேதயாகஞ் செய்துமுடிக்கலாம்' என்று கருத்துக்கொண்டு அவ்வண ணமே தொடங்கி, பூப்பிரதக்ஷிணஞ் செய்யுமாறு அவவேள்வியில் விடுத்த குதிரையைத் தேவேந்திரன பாதாளலோகத்தில் தவஞ்செய்திருந்த கபில முனிவ ரிருந்தவிடத்தி லொளித்தனனாக, குதிரைகெட்டமையைத் தனது பௌத்திரனான அம்சுமானால் உணர்ந்த சகரமகாராஜன தனது அறுபதி னாயிரங் குமாரரையும் அக்குதிரையைத் தேடிக்கொணருமாறு ஏவ, அவர்கள் பூமி முழுவதும் தேடியும காணாமையால் பூமியைத் தோண்டிக்கொண்டு பாதாளலோகத்திற் சென்று கபிலமுனிவ ரிருந்தவிடத்தில் அக்குதிரையைக்

கண்டு அம்முனிவனே அதனை யொளித்தானென்று கொண்டு அம்முனிவனைச் சீறி வைது நெருக்கியதனால் அவனது கண்ணின் கோபத்தீக்கு இலக்காய்ச் சாம்பரா யொழிந்தனராக, அச்செய்தியை யுணர்ந்த சகரமகாராஜன் அம்சுமானால் அக்குதிரையைக் கொணரப்பெற்றுத் தான தொடங்கிய யாகத்தை முடித்தன னென்பதாம். பார்தினறு சகரர்க்கதிகமாகி நனிசேறும் - "சகரர்கள் வடவையின்மறுகி, நாட்டம் வெங்கனல் பொழிதரநானிலந்தடவித், தோட்டுறுங்கினா புவியிலப்பாதலந்தோன்ற," "நூறுயோசனையகலமுமாழமுநடங்கக், கூறுசெய்தனரென்பரால்" என்றூர் பாலகாண்டத்தும். (சாகரர்களால் தோண்டப்பட்ட இடமே, பின்பு கங்கை முதலியவற்றின் நீரினால் நிரம்பப்பெற்றுச் சாகரமெனப் பெயர்பெறுவதாயிற்று.) (சச)

[வாநரவீரர்கள் சுயம்பிரபையைக் காணுதல்.]

சரு. மற்றவருமற்றதுமனக்கொளவலித்தா
ருற்றனர்புரத்திடையவ்வொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடை யினாளையெதிர்கண்டார்.

(இ - ள்.) மற்றவரும் - (அங்கதன முதலிய) மற்றை வானரவீரர்களும், அது மனம் கொள - (அநுமான்சொல்லிய) அவ்வார்த்தை தமது மனத்திற் பதியவே, வலித்தார் - (அவ்வாறேசெய்ய) உறுதிகொண்டவர்களாய், புரத்து இடை உற்றனர் - (யாவரும அந்தப்) பட்டணத்தினிடையே சென்று, அ ஒள் சுடரினுள் - மிக்க ஒளியையுடைய - (அப்பட்டணத்தின்) நடுவிடத்தில், நல் தவம் அனைத்தும ஓர் உரு நண்ணி ஒளிபெற்ற கற்றை விரி பொன் சடையினாளை - சிறந்ததவம் முழுவதும் ஒரு பெண்ணுருவத்தைப் பெற்றாற்போன்று ஒளிநிறைந்த தொகுதியாகவிரிந்த அழகிய ஜடையையுடையவளான சுயம்பிரபையை, எதிர் கண்டார் - பிரதியட்சமாகப் பார்த்தார்கள்; (எ - று.)

அந்தப் பட்டணத்தினிடையில் தவமே ஒருருவெடுத்து வந்தாற்போன்ற சுயம்பிரபையை வானரவீரர்கள் கண்டன ரெனபதாம. பொற்சடையினாளை என்பதற்கு - பொன்னிறமான ஜடையையுடையவளை யெனினுமாம். சுயம்பிரபையின வரலாறு, மேலே கூறப்படும். மற்று - அசை.

'இற்றது செயற்குரிய தென்றுடனெழுந்தா, ருற்றனர் புரத்தினிடையொண்சுடரினுள்ளோர்' என்று சில பிரதிகளில் இரண்டு மூன்றும் அடிகள் காணப்படுகின்றன. (சரு)

[இதுமுதல் நான்குகவிகள்-சுயம்பிரபையின் தன்மையைக் கூறுவன.]

சசு. மருங்கலசவற்கலைவரிந்துவரிவாளம்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசிப்
பெருங்கலைமதித்திருமுகத்தளபிறழ்செங்கேழ்
கருங்கயல்களிற்பிறழ்கண்மூக்கினுதிகாண.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பெருங் கலை மதி திரு முகத்தள - பெருமைபெற்ற பதினாறு கலைகளும் நிரம்பிய பூரணசந்திரனையொத்த அழகிய முகத்தை யுடையவ

ளாகிய சுயம்பிரபை,—மருங்கு அலச வற்கலை வரிந்து - இடையிலே அலையுமாறு மரவுரியைத்தரித்தும், வரி வாளம் பொரும் கலசம் ஒக்கும் முலை புடை மாசு பூசி - இரேகைகளையுடைய சக்கரவாகப் பறவையைப் போன்றனவும் பொற்கலசங்களைப் போன்றனவுமாகிய தனங்களின்மேல் மாசுபடியப்பெற்றும்,—பிறழ் செங் கேழ் கருங் கயல்களின் பிறழ் கண் மூக்கின் நுதி காண - விளங்குகின்ற செந்நிறத்தை யுடையனவும் கருமையான கயல்மீன்களை போலப் பிறழ்வனவுமான (தனது) கண்களிரண்டும் மூக்கின் நுனியைக் கண்டு கொண்டிருக்கவும்,—(எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'வரிந்து,' 'பூசி,' 'காண' என்னும் வினையெச்சங்கள் ருo - ஆங் கவியிலுள்ள 'இருந்தனள்' என்னும் வினைமுற்றைகொண்டு முடியும்.

சுயம்பிரபையானவள் மரவுரிதரித்து, ஸ்நாநஞ் செய்தலுமின்றித் தவத்திலேயே மனத்தைச் செலுத்தி யிருந்தமையால் தனங்களில் மாசுபடியத், தனது கண்களின் பார்வையை மூக்கின் நுனியிற் செலுத்தியிருந்தன ளென்பதாம். ஜபஞ்செய்கையில் கண்விழிகளைப் பிறவிடங்களிற் செலுத்தாது மூக்கின்நுனியிற் செலுத்த வேண்டுமென்பது, நூற்கொள்கை. அலச - அலைய என்பதன் போலி. வற்கலை - வல்கலா என்ற வடசொல்லின் திரிபு; பூர்ஜமென்னும் மரத்தினின்று உரித்தெடுக்கப்படும் மெல்லிய பட்டையாகிய ஆடை; இது, தவவேடத்திற்கு உரியது. வாளம் - சக்கரவாளமென்னும் வடசொல்லின் நாமைகதேசே நாமக்ரஹணம். [நாமைகதேசே நாமக்ரஹணமாவது - ஒருசொல் தனது ஒருபகுப்பைக் கூறியமாத்திரத்தால் அப்பெயர் முழுவதையும் தெரிவிப்பது.] கலை - பெரும்பாலும் சந்திரகிரணத்தையே குறிக்கும்.

'வரிந்துமணிமான,' 'மணிவானம,' 'கயல்களிப்புறவு மூக்கினுதிகண்ணுள்' என்பன பாடாந்தரங்கள். (சஃ)

சள. தேரனையவல்குல்செறிதிண்கதலிசெப்பு
மூருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கு
நேரிடைசலிப்பறநிறுத்திநிமிர்கொங்கைப்
பாரமுளொடுக்குறவுயிர்ப்பிடைபரிப்ப.

(இ - ள்.) தேர் அனைய அல்குல் - தேர்த்தட்டையொத்த அல்குலை, செறி திண் கதலி செப்பும் ஊருவினொடு - ஒன்றோடொன்று நெருங்கிய வலிய வாழைமரத்தைப்போன்ற தொடைகளோடு, ஒப்புற ஒடுக்கி - ஒன்றுகப் பொருந்துமாறு அடக்கிவைத்தும், உயிர்ப்பு இடை பரிப்ப - சுவாசத்தைப் பந்தனஞ்செய்தலினாலே, உற ஒல்கும் நேர் இடை சலிப்பு அற நிறுத்தி - மிகவும் அசைகின்ற நுண்ணிய இடையைச் சிறிதும் அசையாதபடி நிறுத்தி, நிமிர் கொங்கை பாரம் உள் ஒடுக்கு உற - சாயாத தனபாரங்கள் உள்ளே யொடுங்கவும்,—(எ - று.)—இச்செய்யுளிலுள்ள 'ஒடுக்கி,' 'ஒடுக்குற' என்ற எச்சங்களும் - ருo - ஆஞ்செய்யுளிலுள்ள 'இருந்தனள்' என்பதனையே கொண்டு முடியும்.

சுவாசபந்தனம், இடைசலிப்பறநிற்றற்கும் தனங்கள் ஒடுங்குதற்குங் காரணமாம். செப்பும் - உவமவுருபு. ஒடுக்குற - ஒடுங்குதலைப் பொருந்த,

குளை மாற்றியேனும், அப்பொருளையே சிறப்பித்தேனும், அப்பொருளையே தந்தேனும் வரும் ஒருவகையிடைச்சொல்.] முதலடி - எதிர்நிலையணி.

'காமமழிய,' 'புலனினல்லறிவுபுல்ல' என்று சில பிரதிகள். (௪௮)

௪௯. நெறிந்துநிமிர்கற்றைநிறைமேயாதிநெடுநீலஞ்
செறிந்தசடையுற்றதுதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க.

(இ - ள்.) நெறிந்து நிமிர் கற்றை நிறை நெடு நீலம் ஓதி - நெறிப்புக் கொண்டு நிமிர்ந்த தொகுதியாக நிறைந்த நீண்ட கருநிறமாகிய (தனது) கூந்தலானது, செறிந்த சடை உற்றது - நெருங்கிய சடையாகப் பொருந்தியதாய், தலத்தின நெறி செலல - பூமியினிடத்திற் புரளவும்,—வினை பறிந்து பற்று அற - இருவினைகளும தன்னைவிட்டு அடியோடு பெயர்ந்தொழியவும், மனம் பெரிய பாசம் பிறிந்து பெயா - தனது மனத்தி லுணடாககூடிய பெரியபாசபந்தமானது விலகியொழியவும, கருணை கண் வழி பிறங்க - அருளானது கண்களிலுண்டாகி விளஙகவும்,—(எ - று.)— "இருந்தனள்" (ரு0) என்க.

ஞானயோகத்தின் முன இருவினைகளும் காட்டுததீமுன்னர்ப் பஞ்சுத தும்போல ஒழியு மாதலால, 'வினைபறிநது பற்றற' என்றார்; "பஞ் சினையூழித்தீபோற்பலசெனமவிவிதவிததாஞ், சஞ்சிதமெல்லாஞானத்தழல் சுட்டு வெண்ணீறுக்குங் கிஞ்சிதாகாமியந்தானங்கிடடாமல்விட்டுப்போகும்" என்றது காண்க. பாசம - சுற்றத்தார் முதலியவிடத்துக் கயிறுபோல மனப் பிணிப்பையுண்டாக்கும் பற்று: இது, பாசம்போலுதலால், பாச மெனப் பட்டது; உவமையாகுபெயர்: பாசம் - கயிறு. பிரிதலெனினும், பிறித லெனினும் ஒக்கும். அருளென்பது, கண்பார்வை சென்றவிடத்து உண டாவ தாதலால், 'கருணைகண்வழிபிறஙக' என்றார்; இதுபற்றியே, தயை கண்ணோட்ட மெனப்படுவது. யோகஞ்செய்வார்க்குப் பூததயை இன்றி யமையாத குணங்களு ளொன்றாத லறிக.

'சோதிநெடுநீலம்,' 'சடையுற்றனதவததினெறிசெல்ல,' 'மனப் பெரிய பாவம்,' 'கண்வழிபிறக்க' என்று பாடாந்தரங்கள. (௪௯)

[வாநரவீரர்கள் அவளைச் சீதைதானோ? என்று ஆராயுமாறு
அநுமானிடங் கூறுதல்.]

ரு0. இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
வருநததியெனத்தகையசீதையவளாகப்
பரிநதனர்பதைததனர்பணிததகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவளகொலேறவியெனலோடும்.

இதுவும், அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) இருந்தனள் - அவவாறு இருந்தாள்; இருந்தவளை - அங்ங னம் வீற்றிருந்த சுயம்பிரபையை, (மற்றைவானரவீரர்கள), எய்தினர் - கிட்டி, இறைஞ்சா - வணங்கி, அருந்ததி என தகைய சீதை அவள் ஆக பரிந்

தனர் - அருந்ததியென்று சொல்லத்தகுந்த சீதையாகவே நினைத்து (அவ ளிடத்து) அன்புகொண்டவர்களாய், பதைத்தனர் - துரிதங்கொண்டு, (அநு மானைநோக்கி), 'இவள் தேவி கொல் - இவள் சீதாபிராட்டிதானோ? பணித்த குறி பண்பின் தெரிந்து உணர்தி - (இராமபிரான்) கூறியுள்ள அடையாளங் களைக்கொண்டு முறைமையாக ஆராய்ந்து அறிந்து கூறுவாய்,' எனலோடும் - என்று வினவியவுடனே,—(எ - று.) 'மாருதி யுரைத்தான' என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

வானரவீரர்கள் அந்தச் சுயம்பிரபையைச் சீதையாகவே கருதி உண்மை யறிந்து கூறும்படி அநுமானை வினவினரென்க. தவவேடத்துடன் மிக்க கட்டழகையுமுடையளாயிருந்தமைபற்றி அச்சுயம்பிரபையைச்சீதையென்று கருதியதனால், அவளை வானரவீரர் வணங்கினர். அருந்ததி - அருந்ததீ, வடசொல்: இவள் - வசிஷ்டமுனிவரது மனைவி: நட்சத்திரவடிவமாயிருக் கையிலும் கணவனைவிட்டுப்பிரியாது உடனுறைந்து பதிவிரதாதருமம் விஞ்சி யிருத்தலால், கற்புடைமகளிர்க்கு உவமைகூறப்படுவள். சீதையவள், அவள் - பகுதிப்பொருள்விகுதி. இருந்தவளை என்பதை-இருந்தஅவளை யென்பதன் விகாரமெனக் கூறுவாரும், இருந் தவளை எனப்பிரித்து - மிக்கதவத்தையுடை யவளை யெனக் கூறுவாருமுளர். மற்று - அசை.

'பரிந்தனர்புகழ்ந்தனர்' என்று சில பிரதிகள். (௫௦)

[அநுமானது மறுமொழி.]

௫க. எக்குறியொடெக்குணமெடுத்திவணுரைக்கே
னிக்குறியுடைக்கொடியிராமனமனையாளோ
வக்குவடமுத்தமணியாரமதினேர்நின்
றொக்குமெனினொக்குமெனமாருதியுரைத்தான்.

(இ - ள்.) மாருதி - வாயுகுமாரனான அநுமான்,—(அவ்வானரவீரர்களை நோக்கி),—'எ குறியொடு எ குணம் இவண் எடுத்து உரைக்கேன் - (சீதா பிராட்டிக்குரிய அடையாளங்களிலும் குணங்களிலும்) எந்த அடையாளந் தான் எந்தக்குணந்தான இவளிடத்தி லிருப்பதாக எடுத்துச்சொல்வேன்? [சீதாபிராட்டியின குணகுறிகளில இவளிடத்தில் ஒன்றுமில்லை யென்ற படி]; இ குறி உடை கொடி இராமன மனையாளோ - இத்தன்மையையுடைய கொடிபோன்ற இவள் இராமபிரானது மனைவியாகிய சீதாபிராட்டியாவளோ? [ஆகமாட்டாள்]; அக்கு வடம் முத்தம் மணி ஆரம் அதின் நேர நின்று ஒக் கும் எனின் - எனபுமாலையானது சிறந்த இரத்தினங்களுளொன்றாகிய முத்தினா லியன்ற ஹாரத்தோடு நேராகநின்று உவமையாகப்பொருந்துமாயின், ஒக்கும்- (இவளும் அச்சீதையை) ஒத்திருப்பாள்', என - என்று, உரைத்தான்—;(எ-று.)

இராமபிரான் தன்னிடத்துக்கூறிய சீதையின் குணங்குறிகளொன்றும் இவளிடத்து இல்லையாதலின், இவள் சீதையல்லளென அநுமான் துணிந்து கூறினனென்க. எனபுமாலைக்கும முத்துமாலைக்கும எத்துணைவேறுபாடு உளதோ, அத்துணைவேறுபாடு இவட்கும் சீதைக்கு முண்டெனபது, பின்னி ரண்டடிகளின் கருத்து. கொடி - உவமையாகுபெயர். அக்குவடம் - சங்கு

களாய், சீதையை ஒளித்தனர் - சீதையைக் கவர்ந்து சென்று மறைத்திட்டார்கள்; ஏதம் இல் அறம் துறை நிறுத்திய இராமன் தூதர் - குற்றமற்ற தரும மார்க்கத்தை நிலைநிறுத்திய இராமபிரானது தூதுவர்களாகிய நாங்கள், மறைத்த புரை தேர்வுற்று உலகில் திரிதும் - (அவ்வரக்கர்கள் சீதையை) ஒளித்து வைத்த மறைவிடங்களைத் தேடத்தொடங்கி உலகில் திரிகின்றோம்; என்னும் - என்கிற, உரை - வார்த்தையை, சொன்னார் - (வானரவீரர்கள் அவள் வினாவிற்கு விடையாகக்) கூறினார்கள்; (எ - று.)

திருமால் சாதுசனத்தைநலியுந் துஷ்டர்களை நிரஸித்துச் சிஷ்டர்களைப் பரிபாலித்துத் தர்மசம்ஸ்தாபநஞ்செய்யுமாறு ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்து இங்கு இராமபிரானைத் திருவவதரித்தமை, மூன்றாமடியிற் குறிக்கப்பட்டது. தூதர் - தன்மையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி.

• 'உழைதேர்வுற்று' என்பதும் பாடம். (ருங)

[அதுகேட்ட சுயம்பிரபையின் மகிழ்ச்சி.]

ருச. என்றலுமிருந்தவளெழுந்தனளிரங்கிக்
குன்றனையதாயதொருபேருவகைகொண்டா
ணன்றுவரவாகநடனம்புரிவலென்னா
நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள.

(இ - ள்.) என்றலும் - என்று (வானரவீரர்கள் மறுமொழி) கூறியவுடனே,—இருந்தவள் - வீற்றிருந்தவளாகிய அந்தச்சுயம்பிரபை, எழுந்தனள் - எழுந்துநின்று, இரங்கி - (அவ்விராமதூதரிடத்தில்) அன்புகொண்டு, குன்று அனையது ஆயது ஒரு பேர் உவகை கொண்டாள் - மலையையொத்ததாகிய ஒரு பெருங்களிப்பை யடைந்தாளாகி,— (வானரவீரர்களை நோக்கி), 'வரவு நன்று ஆக - உங்கள்வரவு நல்வரவு ஆகுக, நடனம் புரிவல் - ஆனந்தக்கூத்தாடுவேன்,' என்னா - என்றுசொல்லி, நெடுங் கண் இணை நீர் கலுழிகொள்ள - நீண்ட (தனது) இரண்டு கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் ஆறாகப்பெருக, நின்றனள்—; (எ - று.)

இவ்வானரவீரர்களை இராமதூதரென்று அறிந்தவுடன் சுயம்பிரபை தனது சாபம் நீங்குங்காலம் நெருங்கியதென்ற காரணத்தால் அவர்கள்மீது அன்பு பாராட்டி நல்வரவுவிசாரித்துக் கண்களில் ஆனந்தவருவி சொரிய மகிழ்ச்சியினால் நடனஞ்செய்யலாயின ளென்க. சுயம்பிரபையின் சாபவரலாறு, மேலே கூறப்படும். இருந்தவள் எழுந்ததற்குக் காரணம், அவ்வானரவீரர்களிடத்து மரியாதைசெய்ய வேண்டியதனாலென்க, உவகை மிகுதியாகத்தோன்றியதென்றற்கு, குன்றை உவமை கூறினார். 'நன்றுவரவாக' என்று விசாரித்தல் - குசலப்ரச்நம் எனப்படும்.

'ஆயவொரு' என்றும் பாடம். (ருச)

[சுயம்பிரபை இராமனைப்பற்றி வினவுதலும், அநுமானது விடையும்.]

ருரு. எவ்வுழையிருந்தனனிராமனெனயாணர்ச்
செவ்வுழைநெடுங்கணவள்செப்பிடதலோடு
மவ்வுழைநிகழ்ந்ததனையாதியினுடைந்தம
வெவ்வினைவில்சிந்தைநெடுமாருதிவிரித்தான்.

(இ - ள்.) 'இராமன் எ உழை இருந்தனன் - இராமபிரான் எவ்விடத்தி லுள்ளான்?' என - என்று, யாணர் செவ் உழை நெடுங் கண் அவள் - புது மையாகிய அழகிய மான்போன்ற நீண்டகண்களையுடைய அந்தச் சுயம்பிர பை, செப்பிடுதலோடும் - (அநுமானைநோக்கி) வினவியவுடனே,—வெம் விழைவு இல் சிந்தை நெடு மாருதி - கொடுமையாகிய ஆசையில்லாத மனத் தையுடைய பெருமைபெற்ற அநுமான், அ உழை நிகழ்ந்ததனை -அவ்விடத்து [இராமபிரானிடத்து] நடந்துள்ள வரலாற்றை, ஆதியினொடு அந்தம் விரித் தான் - ஆதியோடந்தமாக [முழுவதும்] விவரித்துக்கூறினன்; (எ - று.)

யாணர் - புதுமைகுறிக்கும் உரிச்சொல்: அழகுமாம். மருண்டநோக்க முண்டமையால், மகளிர்கண்ணுக்கு மான் உவமைகூறப்படும். ஆசையென் பது நல்வழியிற்செல்லவொட்டாது மனத்தைத் தீவழியிற்புகுத்தலால், 'வெவ் விழைவு' எனப்பட்டது. அநுமான் நித்தியபிரமசாரியாகி அதற்கு ஏற்ற ஒழுக்கமுடையவனாதலால், 'வெவ்விழைவில்சிந்தைநெடுமாருதி' எனப்பட் டான். (௫௫)

[சுயம்பிரபை வாநரவீரர்களை உபசரித்தல்.]

௫௬. கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே
காட்டியதுவீடெனவிரும்பிநனிகானீ
ராட்டியமிழ்தன்னசுவையின்னடிசிலன்போ
டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள்.

(இ - ள்.) கேட்டு-(அநுமான்கூறிய இராமபிரானது செய்தி முழுவதை யும்) கேட்டு,— அவளும்-அந்தச்சுயம்பிரபையும், என்னுடைய கேடு இல் தவம் இன்னே வீடு காட்டியது-'எனது கெடுதலில்லாத தவம் இப்பொழுது தான் சாபவிமோசனத்தை யுண்டாக்கிற்று,' என - என்றுசொல்லி, விரும்பி- (அவ்வானரவீரரிடத்து) அன்புகொண்டு, (அவர்களை), கான் நீர் நனி ஆட்டி- நறுமணமுள்ள நீரினால் நன்றாகநீராடச்செய்து, அமிழ்து அன்ன சுவை இன் அடிசில் அன்போடு ஊட்டி - தேவாமிருதம்போன்ற ருசியையுடைய இனிய உணவை அன்போடு உண்பித்து, மனன் உள் குளிர - (அவர்களது) மனம் உள்ளூரக் குளிரும்படி, இன் உரை உரைத்தாள் - இன்சொற்களைக் கூறி னள்; (எ - று.)

வீடு - விடுதல்: முதனிலைதிரிந்த தொழிற்பெயர். வீடு - மோக்ஷமுமாம். கானீர் - காட்டாறுமாம். "உண்பொழுது நீராடியுண்டல்" என்பவாதலால், நீராட்டியமுதூட்டினள். இனி, கால் நீர் ஆட்டி என்று பிரித்து - கால் கழுவ நீர்கொடுத்து எனப் பொருள் கூறினுமாம்; இது, பாத்ய மெனப்படும்; ஷோடசோபசாரங்களு ளொன்றாகிய இதனைக் கூறியது, மற்றவற்றிற்கும் உபலட்சணமா மென்க. "ஆதரஸ் ஸப்தமோரஸ: [அன்பு என்பது ஏழாவது சுவையாகும்]" என்றபடி உணவிற்கு ஒரு சுவையாகுமாறு அன்புசிறத்தலால் 'அடிசில் அன்போடூட்டி' என்றார். அடிசில் - சமைக்கப்பட்டதென உணவு க்குத் தொழிலாகுபெயர்; அடு - பகுதி, இசில் - தொழிற்பெயர் விகுதி, இன் னே - இடைச்சொல்.

'விரும்புநனிகானீர்,' 'விரும்பிநளிர்கானீர்,' 'விரும்பிநனிதூநீர்,' 'குளிரு மின்னுரையுரைக்கும்' என்று பாடாந்தரங்கள். (௫௬)

[அநுமான் சுயம்பிரபையின் வரலாற்றை வினவ, சுயம்பிரபை விடைகூறத் தொடங்குதல்.]

௫௭. மாருதியுமற்றவண்மலர்ச்சரண்வணங்கி
யாரிநகருக்கிறைவர்யாதுநினியற்பேர்
பார்புகழ்தவத்தினைபணித்தருளுகென்றான்
சோர்குழலுமற்றவனொடுற்றபடிசொன்னாள்.

(இ - ள்.) மாருதியும் - அநுமானும், அவள் மலர் சரண் வணங்கி - அந்தச்சுயம்பிரபையினது தாமரைமலர்போன்ற பாதங்களைத் தொழுது, (அவளை நோக்கி), 'யார் இ நகருக்கு இறைவர் - எவர் இந்நகரத்துக்குத் தலைவர்? நின் இயல் பேர் யாது - உனது இயற்கையான பெயர் யாது? பார் புகழ் தவத்தினை பணித்தருளுக - உலகத்தார் புகழ்தற்குக் காரணமான தவப்பெண்ணாகிய நீ (இவற்றைச்) சொல்வாயாக,' என்றான் - என்று வினவினான்; சோர் குழலும் - (சடைப்பட்டுச்) சோர்ந்த கூந்தலையுடையவளாகிய அந்தச்சுயம்பிரபையும், அவனொடு - அவ்வனுமானோடு, உற்றபடி சொன்னாள் - நடந்தபடியே சொல்வாளாயினாள்; (எ - று.)—அதனை, அடுத்த எட்டுக்கவிகளிற் காண்க. 'மற்று' இரண்டும் - அசைநிலைகள்.

பார்புகழ்தவத்தினை - விளியுமாம். சோர்குழல் - வினைத்தொகையன்மொழி. மற்றவனொடுற்றபடி - ப்ராஸம்.

'யாவதுனியற்பேர்,' 'மற்றையவண்' என்று சில பிரதிகள். (௫௭)

[இதுமுதல் எட்டுக்கவிகள் - ஒருதொடர்; சுயம்பிரபை அநுமானுக்குக் கூறிய விடையைத் தெரிவிக்கும்.]

௫௮. நான்முகநுனித்தநெறி நூறுவரநொய்தாய்
மேன்முகநிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா
மான்முகமுகத்தவன்மயன்செய்ததவத்தா
ஞன்முகனளித்துளதிமாநகரநல்லோய்.

(இ - ள்.) (சுயம்பிரபை அநுமனைநோக்கி),—நல்லோய் - நற்குணமுடையவனே! மான் முகம் முகத்தவன் மயன் - மானினது முகம்போன்ற முகத்தையுடையவனாகிய மயன, நான்முகம் நுனித்த நெறி நூறு வர - யோகசாஸ்திரத்தில் நுட்பமாகக்கூறியுள்ள வழி பலவும் தன்னிடத்திற் பொருந்தும்படி [யோகசாஸ்திரத்திற்கூறிய முறைமைப்படியே], நொய்து ஆய் - எளிதாக, முகம் மேல் நிமிர்த்து வெயில் காலொடு விழுங்கா - தனது முகத்தை மேலேநிமிர்த்து [அண்ணாந்து வானத்தைநோக்கியபடியே] வெயிலையும் காற்றையும் உணவாகக்கொண்டு, செய்த - கடுமையாகச் செய்த, தவத்தால்-தவத்தின்பயனாக, இ மா நகரம் நான்முகன் அளித்து உளது - இந்தப் பெரியநகரமானது நான்குமுகங்களையுடைய பிரமதேவனால் (அம்மயனுக்கு) அளிக்கப்பட்டதாகும்; (எ - று.)

இந்நகரமானது மயனது தவத்தைக்கண்டு மெச்சிய பிரமதேவனால் அருளோடு அவனுக்குக் கொடுக்கப்பட்டதாகு மென்றவாறு. நான்முகனளித்த நெறிநூறுவா - யோகநூலார்க்கூறிய விதி• சிறிதும் வழுவாம லென்றபடி. மேன்முகமிமிர்த்து - ஊர்த்துவமுகமாய் வானத்தைநோக்கி, தவஞ்செய்பவர் படிப்படியாகக் காய்கனிகிழங்குகளையும் சருகுகளையும் நீரையும் வெயில் காற்றுக்களையும் உட்கொள்ளுதல், இயல்பு. மயன - அசுரசிற்பி; இவன் மானினதுமுகம்போன்ற முகமுடையவனென்க. நான்முகன் - நான்குதிசைகளையும் நோக்கிய நான்குமுகங்களை யுடையவன்.

'நூறுமழைநொய்தாய்,' 'மான்முகநலத்தவன்' என்று பாடாந்தரம்.

௫௯. அன்னதிதுதானவனரம்பையருளாங்கோர்
நன்னுதலிறுண்முலைநயந்தனனநல்லா
ளென்னுயிரனுளவளையானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்த்தேன்.

(இ - ள்.) இது அன்னது - இந்நகரம் அவ்வாறாகத் தோன்றியதாகும்; தானவன - அந்தமயனென்ற அசுரன, அரம்பையருள் ஓர் நல் நுதலினுள் முலை நயந்தனன - அரமபைமுதலிய தேவமாதர்களுள் அழகிய நெற்றியையுடைய ஒருத்தியினது போகத்தை விருமபினான; அ நல்லாள் என் உயிர் அனுள் - நல்ல அழகையுடைய அவள் எனது உயிர்போன்ற தோழியாவள்; அவன இரப்ப - அவவசுரன (என்னை) வேண்டிக்கொண்டதனால், யான்—, அவளை—, பொன் உலகினினறு - பொனமயமான தேவலோகத்திலிருந்து, இயல் பிலத்திடை புணர்ததேன் - பொருந்திய இந்தருக்ஷபிலத்திற் கொண்டு சேர்ததேன; (எ - று.)—ஆங்கு-அசை.

தாகவன் - கசியபமுனிவரது மனைவியருள் தநுவென்பவளின் சந்ததியான். அரம்பை - ரம்பா எனற வடசொல்லின விகாரம்; தேவமாதர்களுள் ஒருத்தியின் பெயராகிய இது, பொதுவாகத் தேவமாதரைக் குறிக்கு மெனக்கொண்டு, அரம்பையர் - தேவமாத ரெனினுமாம். அநல்லாள் - தொகுத்தல். அசுரசிறபியான மயனெனபவன் தனது தவமகிமையாற பிரமதேவனிடத்தினின்று சுக்கிராசாரியரது பொருள்முழுவதையும் வரமாகப்பெற்றுப் பொன்மயமானவனததை நிருமித்தன னெனறும், பினனர் அது அவனாற் காதலிக்கப்பட்ட ஹேமையெனனும் அப்ஸரஸ்ஸ்த்ரீக்கு உரியதாயிற் றென்றும் முதனூல் கூறுகினறது. ஆகவே, தானவன எனறது - மயனையும், நன்னுதலினள் என்றது - ஹேமையெனபவளையும் குறிக்கும்.

இககவிமுதல் மேல் ௬௩-ஆங் கவிவரையில் அந்தாதித்தொடை காண்க. (அந்தாதிததொடையாவது - முனனின்றசெய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்துவருஞ் செய்யுளின் முதலாக அமையுமபடி பாடுவது.)

"அன்னகிளர்தானவரம்பையருளாங்கோர், நன்னுதலினுண்முலைபுணர்ந்தனனைள்ள, லெனனுயிரனுளவளையானிவண்விடுப்பப், பொன்னுலகினினறியல்பிலததிடைபுணர்ந்தான்" என்று சில ஏட்டுப்பிரதிகள். (௫௯)

௬௦. புணர்ந்தவளுமன்னவனுமன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்நெடும்பகலிம்மாநகருறைந்தார்
கணங்குழையினுளொடுயர்காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடையேனுடனிருந்தேன்.

(இ - ள்.) அவளும் அன்னவனும் - அத்தேவமாதும் அந்தமயனும், புணர்ந்து—, அன்றில் விழை போகதது - அன்றிற்பறவைபோல (ஒருவரை யொருவர் விட்டுப்பிரியாது) விரும்புஞ் சிற்றின்பத்தில், உணர்ந்திலர் - (வேறொன்றையும்) அறியாதவராய், நெடும் பகல் இ மா நகா உறைந்தார் - பலகாலம் இந்தப்பெரியநகரத்தில் வசித்தார்கள்; கணம் குழையினுளொடு உயர் காதல் ஒருவாது உற்று இணங்கி வரு பாசம் உடையேன - திரண்ட காதணியையணிந்த அவளோடு சிறந்த அன்பு நீங்காது நெருஙகிப்பழகிவருகின்ற பாசமுடையவளாகிய யான், உடன இருந்தேன் - அவளுடன் இங் கேயே இருநதேன; (எ - று.)

அவவிருவரும் சிற்றின்பத்தில் மூழ்கி இங்குவசிக்கையில், எனது உயிர்த் தோழியாகிய அவளை விட்டுப்பிரிய மனம்வாராது யானும் இங்கேயே அவ ளுட னிருந்தே னெனபதாம. அன்றில்என்பது - ஒருபறவை; அது, எப் பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது திறகும்; கணப்பொழுது ஒன்றையொன்று விட்டுப்பிரிந்தாலும் அத்துயரத்தைப்பொறுமல் ஒனறை யொன்று இரண்டுமூன்றுதரம் கத்திக்கூவி அதன்பினபும் தன்துணையைக் கூடாவிடின் உடனே இறந்துவிடுந் தனமையது. இதனை, வடநூலார் க்ரௌஞ்ச மென்பர். மன்றிலவிழைபோகத்து என்றுஎடுத்து - (ஒருவரு மில்லாத) வெளியிடத்தில் விரும்பியபோகத்தினுல் எனறு கூறுவாருமுளர். பகல்என்றது - இலக்கணையால், பகலையும் இரவையு முடைய நாள்களைக் குறித்தது. கணம் - கூட்டமுமாம்.

'புணர்ந்தவனுமன்னவளும்,' 'கணங்குழையினோடும்,' 'உயிர்க்காதல்' என்பன பாடாந்தரஙகள். (௬௦)

௬௧. இருந்துபலநாள்கழியுமெல்லையினின்வல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசீறிப்
பெருநதிறலினனையுயிருண்டுபிழையென்றம்
முருந்துநிகர்மூரனகையாளையுமுனிந்தான்.

(இ - ள்.) வல்லோய் - வல்லமையுடையோனே ! இருந்து பல நாள் கழியும் எல்லையினின் - (அவர்கள் அவவாறு இங்கே) கூடியிருந்து பலநாள் கழியும்பொழுதில்,—திருந்து இழையை நாடி வரு தேவர் இறை - வேலைத் திறமமைந்த ஆபரணங்களையணிந்த அந்தத்தேவமாதைத் தேடிவருகின்ற தேவேந்திரனனவன், சீறி - கோபித்து, பெருந் திறலினனை உயிர் உண்டு - மிக்க வல்லமைபொருந்திய அம்மயனை உயிரொழித்து, அ முருந்து நிகர் மூரல் நகையாளையும் பிழை என்று முனிந்தான் - மயிலிறகினடிக்குருத்தை யொத்த பற்களையும் புன்சிரிப்பையுமுடைய அத்தேவமாதையும் (நீசெய்தது) தவறான தொழிலாகுமென்று சினந்துகூறினன் ; (எ - று.)

இவ்வாறு அவ்விருவரும் இந்நகரத்தில் இன்பமனுபவித்துப் பலநாள் கழிக்கையில், தேவலோகத்தில் அத்தேவமாதைக் காணாமையால் அவளைத் தேடிவந்த இந்திரன் அந்த ஹேமையைக்கவர்ந்தானென்ற காரணத்தினால் அம்மயன்மீது சீற்றங்கொண்டு அவனைக் கொன்று, அவனுக்கு இணங்கிய ஹேமையைக் கோபித்தன னென்பதாம். திருந்திழை - வினைத்தொகையன் மொழி. தலைமைப்பொருளுணர்த்தும் 'இறைமை' என்னும் பண்புப்பெயர் - ஈறுபோய் 'இறை' என்று ஆய் பண்பாகுபெயரால் தலைமையுடையானை உணர்த்திற்று. உயிருண்டு - "உண்டற்குரியவல்லாப்பொருளை, யுண்டன போலக்கூறலு மரபே" என்பது தொல்காப்பியம்.

'உயிர்கொண்டுபிழைபெயனன' என்று சிலஏட்டுப்பிரதிகளின் பாடம். இச்செய்யுளின்பின

"மாதவருயிர்த்தமகவோரிருவர்வாசப்
போதுறைநறைக்குழலொருத்திபுகழ்மேலோ
யேதமவண்மைந்தர்தவமெய்தியயல்போனார்
சீதளமுலைச்சிறுவிதாதையொடுசென்றாள்,"
"மத்தநெடுமாகளிறுகைககுலிசவன்றாள்
சித்தமொடுயானமுகனவணங்கியயல்சென்றான்
வித்தகனுமாயிரவிலோசனனுமெனமுன
முத்தநகையாளைநனிநோக்கினனமுனிந்தான்."

என்று இரண்டுபாடல்கள் சில ஏட்டுப்பிரதிகளிற காணப்படுகின்றன; பயில வழங்கா: இவற்றை, வெள்ளிப்பாட்டு என்பர். (௬௧)

௬௨. முனிந்தவளையுற்றசெயன்முற்றுமொழிகென்னக்
கனிந்ததுவர்வாயவளுமென்னையிவள்கண்ணால்
வனைந்துமுடிவுற்றதெனமன்னனுமிதெல்லா
நினைந்திவணிருத்திநகர்காவலினதென்றான்.

(இ - ள்.) முனிந்து - (தேவேந்திரன் அவ்வாறு) கோபித்து, அவளை - அத்தேவமாதை, உற்ற செயல் முற்றும் மொழிக என்ன - நடந்தவரலாறு முழுவதையும் கூறுவாயாக' என்று கட்டளையிட, கனிந்த துவர் வாயவளும் - நன்றாகமுற்றிய பவழம்போன்ற அதரத்தையுடையவளாகிய அவ் வேமையும், என்னை - என்னைப்பற்றி, கண்ணால் - கண்சாடையினால், '(இப் பழிப்புத்தொழிலானது), இவள் வனைந்து முடிவுற்றது - இந்தஸ்திரீ தோழி யினால் தொடுக்கப்பட்டு முடிந்தது,' என - என்றுதெரிவிக்க,—மன்னனும் - தேவேந்திரனும், இது எல்லாம் நினைந்து-இவற்றையெல்லாம் ஆலோசித்து, (என்னைநோக்கி),—'இவண் இருத்தி - இந்நகரத்திலேயே (தனியாக) இருக் கக்கடவாய்; நகர் காவல் நினது - நகரத்தைப்பாதுகாக்குந்தொழில் உன் னுடையதாகும்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

நடந்தசெயலை எனதுதோழியினா லறிந்த தேவேந்திரன் எல்லாவற்றிற் கும் முதற்காரணம் யானே யெனத் தெளிந்து, என்மீது சினத்தினால் ஒரு வருமில்லாத இந்நகரத்தைப் பாதுகாத்துக்கொண்டு தனியேயிருக்குமாறு

எனக்குக் கட்டளையிட்டன னென்பதாம். தன்தோழியின்மீது குற்றங்கூற வாயெழாமையால், அத்தேவமாது கண்சாடை காட்டினளெனக். திரிலோகாதிபதி யாதலால், இந்திரன் 'மன்னன்' எனப்பட்டான்; "வேந்தன்மேய தீம்புன லுலகமும்" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். மொழிகென்ன-வியங்கோளின் அகரவீறு தொகுத்தல். இதெல்லாம் - ஒருமைப் புன்மை மயக்கம்:

'உற்றமுறைமுற்றும்,' 'கண்ணாய்,' 'இதிந்தைமுடிவுற்றது,' 'அண்ணலும்' என்பன பாடாந்தரங்கள். (கூஉ)

கூங. என்றலும்வணங்கியிருளேகுநெறியெந்நா
ளொன்றுரையெனக்குமுடிவென்றுரைசெயாமுன்
வன்றிறலவானரமிராமனருள்வந்தா
லன்றுமுடிவாகுமிடரென்றவனகன்றான்.

(இ-ள்.) என்றலும் - என்று (இந்திரன் எனக்குக்) கட்டளையிட்டவுடனே,—வணங்கி-(யான் அத்தேவேந்திரனைத்) தொழுது, 'இருள் ஏகும் நெறி எ நாள் - (எனது) இத்துன்பம் நீங்குதற்குஉரிய வழி எக்காலத்தில்? எனக்கு முடிவு ஒன்று உரை - எனக்கு முடிவாக ஒன்று கூறுவாய்.' என்று உரை செயாமுன் - என்றுகேட்பதற்கு முன்னமே, [கேட்டவுடனே என்றபடி],—அவன் - அத்தேவேந்திரன, 'வல் திறல வானரம் இராமன் அருள் வந்தால் - மிக்க வலிமையுடைய வானரங்கள் இராமனதுகட்டளையினால் இங்கு வந்தால், அன்று - அக்காலத்தில், இடர் முடிவு ஆகும - (உனது) துன்பம் ஒழியும் [உனக்கு நற்கதியுண்டாகும்],' என்று-என்றுகூறி, அகன்றான் - அப்பாற்சென்றான்; (எ - று.)

தேவேந்திரன் நான்செய்த பிழைக்குத் தண்டனையாக எனக்கு இங்கேயிருக்குமாறு கட்டளையிட்டவுடனே, 'எனதுதுயர் நீங்குங்காலம் எப்போது?' என்று நான் அவனை வணங்கி வினவியதற்கு, அவனும் 'இராமதூதராகிய வானரர்கள் இங்குவருகையில் உனதுதுபரம் நீங்கும் எனச் சாபவிடை கூறிப்போயின னென்ன அறிக. 'இருள்' என்பது - துன்பத்திற்கு இலக்கணை.

'என்றனனிருத்திபிருளாகநெறியென்ன','என்றனன்வணங்கியிருளேகுநெறி,' 'வன்றிறலவ்வானரம்' 'வனறிறலினவானரம்' 'அன்று' 'முடிவாமுனிடர்' என்பன பாடாந்தரஙகள். (கூங)

கூச. உண்ணவுளபூசவுளசூடவுளவொன்றோ
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றே
னண்ணலவைவிட்டுமையடைந்திடுதல்வேண்டி
யெண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேன்.

(இ - ள்.) அண்ணல்-பெருமையிற் சிறந்த அநுமானே!—(எனக்கு இங்கே), உண்ண உள - உண்பதறகுஉரிய கனி முதலிய பொருள்கள் உள்ளன; பூச உள - பூசுதற்குஉரிய கலவைச்சந்தனம் முதலிய பொருள்கள் உள்ளன; சூட உள - தலையிற்சூடுதற்குஉரிய மலர்மாலைகள உள்ளன; ஒன்றோ - இவை மாத்திரமோ? வண்ணம் மணி ஆடை உள - நல்லநிறங்களையுடைய அழகிய

ஆடைகளும் உள்ளன; மற்றும் உள - (இவைகளன்றி) இன்னும் ஆபரணம் முதலியவைகளும் உள்ளன; பெற்றேன் - (இவைஎல்லாவற்றையும்), யான் அடைந்திருக்கின்றேன்; (அவ்வாறுஇருந்தும்), அவை விட்டு - அவற்றை எல்லாம் அனுபவியாமற் பற்றறவிட்டு, உமை அடைந்திடுதல் வேண்டி - (எனது சாபவிமோசனத்திற்காக) உம்மையடையவிரும்பி [உமதுவருகையை எதிர்நோக்கிக்கொண்டு], எண் அரிய பல் பகல் இருந்தவம் இழைத்தேன் - எண்ணுதற்கு அரிய மிகப்பல காலமாகப் பெருந்தவம்புரிந்தேன்; (எ - று.)

எனது இன்பத்திற்கு உரிய பல பொருள்களிருந்தும் எனது சாபம் நீங்குமாறு உங்கள்வரவை எதிர்பார்த்துக்கொண்டே பலகாலமாகப் பெருந்தவம் புரிந்துகொண்டிருந்தே னென்பதாம். அண்ணல் - அண்மைவிளி. 'அண்ணலவைமுற்றுமறவிட்டதனைவெல்வாள்' என்று சில பிரதிகள். (௬௪)

௬௫. ஐயிருபதோசனைபமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலகமேறுநெறிகாணே
னுய்யுநெறியுண்டுதவுவீரெனினுபாயஞ்
செய்யும்வகைசிந்தையினினைத்திர்சிறிதென்றாள்.

(இ - ள்.) ஐயா - பெரியோனே! அமைந்த பிலம் ஐ இருபது ஓசனை மெய் உளது - பொருந்திய இந்தப்பிலமானது நூறுயோசனை பரந்தவடிவுள்ளது; மேல் உலகம் ஏறும் நெறி காணேன் - மேலேயுள்ள உலகத்திற்கு ஏறிச்செல்லும் வழியை அறியேன்: உதவுவீர் எனின் - (நீங்கள் எனக்கு) உதவி செய்வீரானால், உய்யும் நெறி உண்டு - யான் ஈடேறுதற்கு உரிய வழியுளதாகும்; உபாயம் செய்யும் வகை - அதற்குஉரிய உபாயம்செய்யும்விதத்தை, சிந்தையின் சிறிது நினைத்திர் - உங்கள்மனத்திற் சிறிது கருதுவீர்களாக, என்றாள் - என்று கூறினாள், (சுயம்பிரபை); (எ - று.)

இந்தப்பிலம் நூறுயோசனைபரப்புள்ளதாய் இருள்செறிந்திருந்ததனால் மேலேறிச்செல்லும்வழி இன்னதென்று தெரியாதபடி தேவேந்திரனது சாபம் என்னைத் தடைப்படுத்துகின்றது; எனது சாபவிமோசனகாலங் குறுகி நீங்கள் இங்கு வந்திருத்தலினால், இப்போது நீவிர் அருள்செய்தால் தான் யான் ஈடேறும்வகை யுளதாம்; ஆதலின், அவ்வாறான உபாயத்தைச் செய்யவேண்டுமென்று அனுமான் முதலியோரைச் சுயம்பிரபை வேண்டினளென்க. முதலில் 'ஐயா' என்று அனுமானை விளித்த சுயம்பிரபை, இராமதூதரால் இடர்நீங்குமென்று தேவேந்திரன்கட்டளை யிருத்தலால், 'உதவுவீர் நினைத்திர்' என்று மற்றைவானரரையும் உளப்படுத்திக் கூறினளெனஅறிக.

'ஏறுநெறிகூறு,' 'வேறுநெறிகூறு,' 'உய்யநெறி,' 'உதவினீரெனின்' 'செய்யும்வகையுண்டெனினினைத்திர்' என்பன பாடாந்தரங்கள். (௬௫)

[அநுமான் சுயம்பிரபைக்கு மேலுலகநெறியைக்
காட்டுவதாக வாக்களித்தல்.]

௬௬. அன்னதுசுயம்பிரபைகூறவநுமானு
மன்னுபுலன்வென்றுவருமாதவண்மலர்த்தாள்
சென்னியின்வணங்கினிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான்.

(இ-ள்.) சுயம்பிரபை—, அன்னது கூற - அவ்வாறானவார்த்தையைச் சொல்ல,—அநுமானும்—, மன்னு புலன் வென்று வரு மாது அவள் மலர் தாள் சென்னியின வணங்கி - பொருந்திய ஐம்புலன்களையும் வென்று அடங்கிய பெண்ணாகிய சுயம்பிரபையினது தாமரைமலர்போன்ற பாதங்களைத் (தனது) தலையால் வணங்கி,- (அவளைநோக்கி), 'நினக்கு - உனக்கு, வானவர்கள் நனி சேரும் பொன் உலகம் தருவன் - தேவர்கள் மிகுதியாகக் கூடியுள்ள பொன்மயமான தேவலோகத்தைத் தருவேன் [மேலுலகஞ் செல்லும் வழியைக் காட்டி அங்குச் சேரச்செய்வேனென்],' எனல் புகன்றான் - என்பதாகக் கூறினான்; (எ - று.)

மேலுலகநெறியைக்காட்டுமாறு வேண்டிய சுயம்பிரபைக்கு, அவ்வாறே செய்வதாக அநுமான் வாக்களித்தனனென்க. சுயம்பிரபை - ஸ்வயம்ப்ரபா; வடசொல்; இயற்கையில் மிக்க ஒளியுள்ளவளென்று பொருள்படும்; இவள், மேருஸாவர்ணியின் மகள். இவளது தவவொழுக்கமும், இவள் வானரர்களை அருமையாக ஆதரித்துநடத்திய பரோபகார குணமும், பொறுமையும் பாராட்டத்தக்கன. புலனவென்றுவருமாது- ஜிதேந்திரியை. மா தவள் என்று பிரித்து உரைப்பாருமுளர்.

'அன்னதுகுறித்தரிவைகூற' என்று பாடாந்தரம். இச்செய்யுள், சில பிரதிகளி லில்லை. (கூகூ)

[வெளிச்செல்லுதற்குரிய தொழிலைச் செய்யுமாறு
மற்றைவாநரர் அநுமானை வேண்டுதல்.]

கூஎ. முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவேவமைப்
பிழைத்துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
யிழைத்திசெயலாயவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான்.

(இ - ள்.) (மற்றைவானரவீரர் அநுமானைநோக்கி), 'முழைத்தலை - இந்தப் பிலத்துவாரத்தில், இருள் கடலில் மூழ்கி - பேரிருளின்தொகுதியிலே முழுகி, முடிவேமை-இறப்பதற்கிருந்த எங்களை, உயிர் பிழைத்து உயிர்க்க- இறவாமல் தப்பிப்பிழைக்கும்படி, அருள்செய்த - (அதனினின்று நீங்கிக்) கருணையோடு பாதுகாத்த, பெரியோனே - பெருமைக்குணமுடையவனே! செயல் ஆய வினை - இனிச் செய்யத்தகுந்த தொழிலை, இழைத்தி - செய்வாயாக,' என்றனர் இரந்தார் - என்றுகூறி வேண்டினார்கள்; (உடனே), வழுத்து அரிய மாருதியும் - புகழ்ந்து கூறமுடியாத [மிக்கநற்குணங்களையுடைய] அநுமானும், அன்னது வலிப்பான் - அவ்வாறே செய்வதாக மனத்தில்உறுதி கொண்டான்; (எ - று.)

இந்தப்பிலத்துள் சீதையில்லை யென்று தெற்றென விளங்கியதுபற்றி இனி இங்கிருத்தலால் யாதொருபயனுமில்லை யாதலால், உடனே வெளிச் செல்வதற்குஉரிய தொழிலைத் தேடவேண்டுமென்று அநுமானை மற்றை வானரர் இரந்தனராக, அநுமானும் அதற்கு இசைந்தன னென்பதாம். பிலத்துவாரத்தினுட்புக்குப் பேரிருட்கடலில் தாங்கள் மிகவும் வருந்திய பொ

மூது அநுமானே தங்களைப் பாதுகாத்ததனால், இனி வெளிச்செலுத்திப் பாதுகாக்கும் வல்லமை யுள்ளவனும் அவ்வநுமானே யென்று கருதி அதற்கும் அவனையே வானரர் வேண்டின ரென்க. இத்தன்மைகருதியே, 'முழைத்தலையிருட்கடலில் மூழ்கிமுடிவேமைப், பிழைத்துயிருயிர்க்க வருள்செய்த பெரியோனே' என விளித்தனர்; இங்கு விசேஷ்யம் ஒரு கருத்தை யுட்கொண்டிருத்தலால், முன்னிரண்டடி - கருத்துடை யடைகோளியணி யின்பாற்படும். இனி, இச்செய்யுட்கு - எங்களை முழைத்தலையிற் பாதுகாத்தது போலவே இந்தச்சுயம்பிரபையையும் இப்பிலத்திலிருந்து நற்கதி யடையுமாறு பாதுகாக்கவேண்டு மென்று வானரவீரர் அநுமானை வேண்டினரென்று கருத்துக்கூறுவாரு முளர். வழுத்து - முதனிலைத்தொழிற்பெயர். வலித்தல் - மனத்தில் உறுதியாகக் கருதுதல்.

'பிழைத்துயிரிருக்க' என்றும் பாடம். (௬௭)

[அநுமான் அப்பிலத்தைப் பிளக்குமாறு பேருருவங்கோள்ளுதல்.]

௬௮. நடுங்கன்மினெனுஞ்சொலைநவின்றுநகைநாற
மடங்கலினெழுந்துமழையேறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலைதிறந்துலவொடொன்ற
நெடுங்கைகள்பெயர்த்துநெடுவானுறநிமிர்ந்தான்.

(இ - ள்.) (அநுமான் மற்றையோரை நோக்கி), நடுங்கன்மின் எனும் சொலை நவின்று - 'அஞ்சவேண்டா' என்ற சொல்லைக் கூறி, நகை நாற - புன்சிரிப்புத் தோன்ற, மடங்கலின் எழுந்து - ஆண்சிங்கம்போலக் கிளம்பி,— மழை ஏறு அரிய வானத்து உலவொடு - மேகங்களும் ஏறிச்செல்லமுடியாத [மிகவும்மேலே மேகமண்டலத்திற்கும் அப்பாலுள்ள] வானுலகத்தோடு, ஒடுங்கல் இல் பிலம் - நெருக்கமில்லாத [மிகவும் விசாலமாகிய] குகையானது, தலைதிறந்து ஒன்ற - தலையிடந்திறந்து ஒன்றாய்விட (ஒரேவெட்டவெளியாக), நெடுங் கைகள் பெயர்த்து - தனது பெரியகைகளை யோங்கிக்கொண்டு, நெடு வான் உற நிமிர்ந்தான் - (தனது பெருவடிவம்) பெரிய ஆகாயம்முழுதும் நிரம்பும்படி மேலோங்கினான்; (எ - று.)

அநுமான் மற்றையோர்க்கு அபயமளித்து அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே ஆண்சிங்கம்போலக்கிளம்பிப் பிலம்முதல் ஆகாயம்வரையில் ஒரே வழியாகத் திறக்குமாறு தனது கைகளைத் தூக்கிக்கொண்டு பெருவடிவமெடுத்து நிமிர்ந்தனனென்க. "எள்ள லிளமை பேதைமை மடனென்று, உள்ளப்பட்ட நகை நான் கென்ப" என்று கூறப்பட்டுள்ள நால்வகை நகையினுள், இங்கு அநுமானது நகை எள்ளல்பற்றியது; இதனால், அநுமானது வருத்தமின்றி எளிதில் தொழில்முடிக்குந்திறமை விளங்கும். நாறுதல் - தோன்றுதல். 'மறையேறு' என்ற பாடத்திற்கு - வேதங்களில் வல்ல புருஷ சிரேஷ்டனான அநுமான் என்பது, பொருள். மடங்கல் - பிடரிமயிர் மடங்கியுள்ளது என, ஆண்சிங்கத்திற்குக் காரணக்குறி.

'எனச்சொலை,' 'ஒடுங்கலில் பெருந்தவனுயர்ந்தவுருவப்ப,' 'நெடுங்கைகள்சுமந்து' என்பன பாடாந்தரங்கள். (௬௮)

[இதுவும், அடுத்தகவியும் அப்போதைய அநுமானது தோற்றத்தைக் கூறும்.]

கூகூ. எருத்துயர்சுடர்ப்புயமிரண்டுமெயிறென்ன
மருத்துமகனப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்துநிமிர்கண்ணினெதிர்கண்டவர்கலங்க
வுருத்துலகெடுத்தகருமாவினையுமொத்தான்.

(இ ள்.) மருத்து மகன் - வாயுகுமாரனாகிய அநுமான், எருத்து உயர் சுடர் புயம் இரண்டும எயிறு என்ன - பிடரியின இருபக்கத்திலும் உயர்ந்த ஒளியையுடைய (தனது) கைகளிரண்டும் இரணடுகோரதந்தம்போல் விளங்க,—நிமிர் கண்ணின் எதிர் கண்டவர் கருத்து கலங்க - சிறந்தவுறுப்பாகிய கண்ணினாலே பிரதியட்சமாகக் கண்டவா மனங்கலங்கும்படி, அ படி இடந்து உறவளர்ந்தான - அந்தப் பிலததினமேல் தலத்தைப் பிளந்துகொண்டு ஓங்கி வளர்ந்தவனாய்,—உருத்து உலகு எடுத்த - கோபங்கொண்டு நிலவுலகத்தை (த் தனது கோரதந்ததது்றை பாதாளததினினறு) எடுத்து வந்த, கரு மாவினையும் - பெரிய வடிவமுடைய மகாவராகத்தையும், ஒத்தான்—.

அநுமான், தனது இருகைகளும் கோரதந்தம்போல் விளங்க, கண்டவர் கலங்குமாறு பூமியினுள்ளிருந்த, பிலததினினறு நிலத்தைப் பிளந்துகொண்டு வெளிவந்த தோற்றத்தால், தனது கோரதந்தததினால் பாதாளலோகத்தில் அழுந்திககிடந்த பூமியைக் குத்தியெடுத்துக்கொண்டு வெளிவந்த திருமாலின் வராகாவதார வடிவததைப் போனறன னெனக. எருத்து - பிடர். மூன்றுமடியை 'உருததுலகெடுதத' என றதனோடு இயைககவுமாம. 'மா' எனனும் விலங்கின பொதுபபெயா, இங்குச் சிறப்பாய்ப் பனறியைக் குறித்தது. கருமை - இங்கு, பெருமையினமேல தெனக; கருநிறமான பனறி யெனறே கொள்ளினுமாம்.

'உலகெடுத்தகருமா' என்பதி லடங்கியுள்ள கதை:—இரணியனது உடன்பிறந்தவனான இரணியாகக்ஷனெனனுங கொடிய அசுரராஜன தன் வலிமையாற் பூமியைப் பாயாகச்சுருட்டி யெடுததுக்கொண்டு கடலில்மூழ்கிச் சென்றபோது தேவா முனிவா முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மகாவராகரூபமாகத் திருவவதரித்தது கடலினுட்புககு அவவசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற்குததிக கொனறு பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியை அங்குநினறு கோட்டினாற் குததியெடுததுக் கொண்டு வந்து பழையபடி விரிததருளின னெனபதாம. இப்பொழுது நடக்கினற சுவேதவராககல்பத்துக்கு முந்தின பாத்மகல்பததைப்பற்றிய பிரளயத்தி னிறுதியில் ஸ்ரீமந்நாராயணன ஏகார்ணவமான பிரளயஜலததில் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து ஸ்ரீவராகாவதாரததைச செய்தருளிக் கோட்டுநுனியாற் பூமியை யெடுத்துவந்தன னென்ற வரலாறும் உண்டு:

'எருத்தறுசுடர்ப்புயம்,' 'இப்படியிடர்ந்து,' 'கருத்தினிமிர்,' 'கருத்து நிமிரக்கதிகள்கண்டவர்கலங்க,' திருமாலினையும்' என்பன பிரதிபேதம்.

௭௦. மாவடிவுடைக்கமலநான்முகன்வகுக்குந்
தூவடிவுடைச்சுடர்கொள்விண்டலைதொளைக்கு
மூவடிகுறித்துமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுனைந்தான்.

(இ - ள்.) மா வடிவு உடை கமலம் நால்முகன் - சிறந்தவடிவையுடைய (திருமாலின் நாபீ கமலத்தில் வாழ்கின்ற நான்கு முகங்களையுடைய பிரமதேவன், வகுக்கும் - படைத்துள்ள, தூ வடிவு உடை சுடர் கொள் விண் - பரிசுத்தமான தோற்றமுடைய (சூரியன்முதலிய சுடர்களை)த் தன்னிடத்திற் கொண்ட ஆகாயத்தினது, தலை - மேல்முகட்டை, தொளைக்கும் - தொளைத்துஊடுருவிச்சென்றதாகிய, மூ அடி குறித்து முறை ஈர் அடி முடித்தான் பூ வடிவு உடை பொருவு இல சே அடி - (வாமனனாகி மகாபலிசக்கரவர்த்தியினிடத்தில்) மூன்றடிமண் வேண்டுமென்று யாசித்துப்பெற்று உடனே முறையாக (வானத்தையும் பூமியையும் தனது) இரண்டடியால் அளந்துகொண்ட (திரிவிக்கிரமாவதாரமெடுத்த) திருமாலினது அழகிய வடிவையுடைய ஒப்பற்ற சிவந்த திருவடியை, புனைந்தான் - ஒத்தான்; (எ - று.)

தொளைக்கும் சேவடி என இயையும். வானத்திலோங்கிய திருமாலின் திருவடி - அவ்வாறு வானத்தையளாவிவளர்ந்த அநுமானது வடிவத்திற்கு ஏற்றஉவமையாதல் காண்க. அநுமானுக்குத் திருவடியென்றே ஒருபெயரிருத்தலால், அப்பெயர்க்கு வேறுவகையாகக் காரணப்பொருளுரைப்பார் போன்று அவ்வாறுவருணித்தனரெனலாம்; ஆகவே இவ்வுவமையணியில் பிறிதுநவிற்சியணி தொனிக்குமெனக. தூவடிவுடைச்சுடர்கொள் விண் நிர்மலமானதும் சூரியசந்திராதிகளான சுடர்கள் சஞ்சரிக்கப்பெற்றதுமான ஆகாயம். 'புனைந்தான்' என்ற பாடத்திற்கு—தூவடி......முடித்தான் ......சேவடி - விஷ்ணுபதமென்ற பேரையுடைய ஆகாயத்தை, புனைந்தான் - (தான் ஓங்கி வளர்ந்ததனால்) அலங்கரித்தான் என்று பொருளாம்.

'மூவடிகுறித்து முறையிரடி முடித்தான்' என்பதி லடங்கிய கதை:— மகாபலியென்னும் அசுரராசன் தன்வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும் வென்று மூவுலகங்களையும் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக் கொண்டிருந்தபொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச்சரணமடைந்து வேண்ட, அப்பெருமான் குறளவடிவான வாமனாவதாரங்கொண்டு அந்தப் பலியினிடஞ் சென்று தன்காலடியால் மூவடிமண் வேண்டி அதுகொடுத்தற்கு அவன் இசைந்தவுடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தையளாவி வளர்ந்து, ஓரடியால் பூலோகத்தையும் மற்றோரடியால் மேலுலகத்தையும் அளந்து மூன்றாமடிக்காக அவன்முடியிற் காலைவைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினனென்பதாம். இவ்வரலாற்றால், கொடியவரை யடக்குதற்கு வேண்டிய தந்திரம் வல்லவனென்றவாறு.

'மூவடிகுறித்த' என்று சில பிரதிகள். (௭௦)

[அநுமான் பிலத்திலிருந்தநகரத்தை மேல்கடலிலெறிந்து ஆரவாரித்தல்.]

௭௧. ஏழிருபதோசனையிடந்துபடியின்மே
லூழுறவெழுந்ததனையும்பருமொடுங்கப்
பாழிநெடுவன்பிலனுணின்றுபடர்மேல்பா
லாழியினெறிந்தநுமன்மேகமெனவார்த்தான்.

(இ - ள்.) அநுமன்—, ஏழ் இருபது யோசனை இடந்து - நூற்றுநாற்பது யோசனைதூரம் பிளந்துகொண்டு, பாழி நெடு வன் பிலனுள் நின்று படியின் மேல் ஊழ் உற எழுந்து - உள்ளழுந்த நெடிய வலிய பிலத்திலிருந்து பூமியின்மேல் முறையாக எழுந்து வந்து, (பிறகு), அதனை - அந்தப்பிலநகரத்தை, உம்பரும் ஒடுங்க - (கண்டோர்) தேவர்களும் அஞ்சி நடுங்குமாறு, படர் மேல்பால் ஆழியின் எறிந்து - பரவிய மேற்றிசைக்கடலில் வீசியெறிந்து, மேகம் என ஆர்த்தான் - மேகம்போலக் கர்ஜித்தான், (எ - று.)

அநுமான் பிலத்தைப் பிளந்து வெளிவந்து, பயனில்லாமற்கிடந்த அப்பிலநகரத்தை மேலைக்கடலில் எறிந்து கொக்கரித்தனன் என்பதாம். ஏழ் இருபது - ஏழோடுகூடிய இருபது எனக் கொண்டு, இருபத்தேழெனினுமாம். ஊழுறவெழுந்து - சிறிதும் வருத்தமின்றி வெளிவந்து என்றபடி. அநுமானது அப்பொழுதைய வலிமையைக் கண்டு தமக்கு யாது தீங்குவருமோவென்று தேவர்களும் அஞ்சி நடுங்குவாராயினரென்க. உம்பர் - மேலிடம்; அதிலுள்ளார்க்கு இடவாகுபெயர்.

'ஏழிருபதோசனைபெயர்த்து,' 'உம்பருமுவப்ப,' 'வடமேல்பால்,' 'ஆழியெனவார்த்தான்' என்பன பாடாந்தரங்கள். (௭௧)

[யாவரும் வெளிவந்து தம்தமக்கு உரியவழியிற் செல்லத்தொடங்குதல்.]

௭௨. இன்றுமுளமேல்கடலியக்கில்பிலதீவா
நின்றுநிலைபெறுமுளதுநீணுதலினோடும்
குன்றுபுரைதோளவரெழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனாள்.

(இ - ள்.) (அநுமானால் வீசியெறியப்பட்ட அந்தப்பிலநகரமானது),— மேல் கடல் - மேற்றிசைக்கடலில், இயக்கு இல பில தீவு ஆ - அழிவில்லாத பிலத்தீவென்று பெயருள்ளதாக, இன்றும் உள நின்று - இப்பொழுதும் உள்ளதாயிருந்து, நிலைபெறும் உளது - நிலைபெற்றிருக்கின்றது; நீள் நுதலியோடும் - நீண்டநெற்றியையுடைய சுயம்பிரபையோடே, குன்று புரை தோளவர் - மலைகளையொத்த தோள்களையுடைய வானரவீரர்கள், எழுந்து - அங்கு நின்று வெளிவந்து, நெறி கொண்டார் - (தாம்செல்லுதற்கு உரிய) வழியை நிதானித்துக்கொண்டார்கள்; (அப்பொழுது), நல் நுதலி - அழகியநெற்றியையுடைய அந்தச் சுயம்பிரபை, பொன் திணி விசும்பினிடை போனாள் - பொன்மயமாய் நெருங்கின தேவலோகத்திற்குச் செல்லத்தொடங்கினாள்; (எ - று.)

உள - உளது என்பதன் விகாரம். தீவு=த்வீபம்; வடசொல்: இருபக்கத்திலும் நீரையுடையது என்று அவயவப்பொருள். நெறிகொள்ளுதல் -

செல்லவேண்டியவழியை மனத்தில் ஆராய்ந்தறிதல். இருள்மண்டிக்கிடந்த பிலத்துவாரத்திற் புகுந்து பிலநகரத்திலிருந்தபோது மேற்செல்லவேண்டியதைப்பற்றிய எண்ணமே யறறிருக்குமாதலால், அங்குநின்று வெளிப்பட்ட பின்னர், இனிச்செல்லவேண்டிய நெறியைப்பற்றி வானரர்க்கு மனத்தினால் நிதானித்துக்கொள்ள வேண்டியதாயிற்றென்க. விசும்பு - ஆகாயத்திலுள்ள தேவலோகத்திற்கு இடவாகுபெயர்.

அநுமான் முதலியோர் தென்திசையிற் பலவிடங்களிலும் பிராட்டியைத் தேடிக்கொண்டு செல்லுகையிற் பசிதாகங்களினால் வருந்தியிளைத்துக் களைத்தது தண்ணீர்பெறும் விருப்பினராய், ருக்ஷபிலமென்னும் பெரும்பிலத்தினுள் நுழைந்து வெகுசிரமப்பட்டு உள்ளேசென்று பொன்மயமானதொருவனத்தையடைந்து அங்கு இருந்த ஸ்வயம்பிரபையென்னும் தவப்பெண்ணைக் கண்டு வினவி, அந்தவனம் மயனென்னும் அசுரசிற்பியினால் நிருமிக்கப்பட்டதென்றும் அவனால் காதலிக்கப்பட்ட ஹேமையென்னும் அப்ஸரஸ்திரீக்கு உரியதாயிற்றென்றும் உணர்ந்தபின்பு, தங்களை அப்பிலத்திற்குவெளியே கொண்டுவிடும்படி அந்தச் சுயம்பிரபையையே பிரார்த்திக்க, அவள் இவர்களைக் கண்களை மூடிக்கொள்ளச்சொல்லித் தனது தவமகிமையால் வெளியேகொண்டுவந்து சேர்த்திட்டனளென்று முதனூலிற் கூறியுள்ளது. (எ௨)

[சுயம்பிரபை அநுமானைப்புகழ்ந்து சுவர்க்கஞ்சேர்தல்.]

எ௩. மேருவரைமாமுலையண்மென்சொலினள்விஞ்சு
மாருதியினைப்பலவுவந்துமகிழ்வுற்றே
யேருறுசுயம்பிரபையேமைநெறியெய்தத்
தாருவளர்பொற்றலனிடைக்கடிதுசார்ந்தாள்.

(இ-ள்.) மேரு வரை மா முலையள் - மகாமேருமலைபோன்ற பெரிய தனங்களையுடையவளாகிய, ஏர் உறு சுயம்பிரபை - அழகுமிக்க சுயம்பிரபையானவள், மென் சொலினள் - இனிய சொற்களையுடையவளாய், விஞ்சு மாருதியினை பல உவந்து மகிழ்வுற்று-(யாவரினும்) மேம்பட்ட அநுமானைப் பற்றிப் பலவாறுக் முகமன்கூறி மகிழ்ந்து, ஏமை நெறி எய்த - (தனதுதோழியாகிய) ஏமையென்பவள் வாழ்கின்ற இடத்தை யடையுமாறு, தாரு வளர் பொன் தலனிடை கடிது சார்ந்தாள் - கற்பகதருக்கள் வளரப்பெற்ற பொன்மயமான தேவலோகத்தில் விரைந்து சென்றுசேர்ந்தாள்; (எ - று.)

மேலுலகஞ்செல்லவிரும்பிய சுயம்பிரபை, தனக்குச் சாபவிமோசனம் பிறக்குமாறுசெய்து பிலவழியைத்திறந்து வழிகாட்டிய மகோபகாரகனான அநுமானைப்பற்றி உள்ளமுவந்து பலவாறுபுகழ்ந்து விடைபெற்று, தனது தோழியாகிய ஹேமையுள்ள சுவர்க்கலோகத்தைச் சேர்ந்தனளென்பதாம். ஏமை - ஹேமா: பொன்னிறமானவள் என்று பொருள்படும். தாரு - தரு வென்பதன் நீட்டல்; எதுகைநயம்பற்றியது.

இச் செய்யுள்சிலபிரதிகளில் இல்லை. (எ௩)

[வானரர் பொய்கைக்கரையைச் சேர்தலும், சூரியன் அஸ்தமித்தலும்]

எச. மாருதிவ லித்தகைமை பேசிமற வோரும்
பாரிடைந டந்துபக லெல்லைபட ரப்போய்
நீருடைய பொய்கையினி னீள்கரைய டைந்தார்
தேருடைநெ டுந்தகையு மேலைமலை சென்றான்.

(இ - ள்.) மறவோரும் - பராக்கிரமசாலிகளான வானரர்களும், மாருதி வலி தகைமை பேசி - அநுமானது பலத்தின் தன்மையைப் புகழ்ந்து பேசிக்கொண்டு, பகல் எல்லை படர பாரிடை நடந்து போய் - அன்றைப்பகல் முழுவதும் பூமியில் நடந்துசென்று, நீர் உடைய பொய்கையினில் நீள் கரை அடைந்தார் - நீர்நிறைந்த பொய்கையினது நீண்டகரையைச் சேர்ந்துதங்கினார்கள்; (அப்பொழுது), தேர் உடை நெடுந் தகையும் - (வானத்திற்செல்லுந்) தேரையுடைய பெருமைக்குணமுடையவனாகிய சூரியனும், மேலைமலை சென்றான் - மேற்குத்திசையிலுள்ள அஸ்தகிரியைச் சேர்ந்தான்; [அஸ்தமித்தான் என்றபடி]; (எ - று.)

பிலத்திற் பேரிருட்பிழம்பிலகப்பட்டுத் திகைத்தபோது தங்களுக்குவழிகாட்டிக் காத்ததனாலும், பிறகு பிலத்தையிடித்துச் சுயம்பிரபைக்கும் தங்களுக்கும் வெளிச்செல்லும் வழியைக் காட்டியதனாலும், வானரவீரர், அநுமானது வலிமையைப் புகழ்ந்தன ரென்க. மறவோரும், உம்மை-கதைப்போக்கைத்தழுவிவந்த இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. மறவோர் - மறத்தையுடையவர்; மறம் - வீரம். பகலெல்லைபடர - பகற்பொழுதின முடிவெல்லைவரையிலும் பரவ; ஆகவே, பகற்பொழுது முழுதும் என்றபடி. வானத்திற்செல்லவல்லதாய் ஸம்வத்ஸரரூபமான ஒற்றைச்சக்கரம் பூண்ட தேரையுடைமையால், சூரியனை 'தேருடைநெடுந்தகை' என்று சிறப்பித்துக் கூறினர். நெடுந்தகை - பண்புத்தொகையன்மொழி, மேலை, ஐ - சாரியை.

'கழியப்போய்,' 'பொய்கையெனுநேமியிடைநின்றார,' 'பொய்கையெனும் பூமியிடைநின்றார்' என்று பாடாந்தரங்கள். (எச)

பிலநீங்குபடலம் முற்றிற்று.

பன்னிரண்டாவது

# ஆறுசெல்படலம்.

*அஃதாவது - வானரவீரர்கள் பிலத்தினின்று நீங்கியபின்பு சுக்கிரீவ மகாராஜன்குறித்த வழியே சென்றதைக் கூறும் பாகம். இப்படலத்தில், அங்கதப்பெருமான் பொய்கைக்கரையில்வாழுந் துமிரனென்ற அசுரனைக் கொன்றனனாக பிறகு வானரவீரர் யாவரும் அங்குநின்று பலவிடங்களிலும் பிராட்டியைநாடி மகேந்திரமலையைச்சார்ந்த செய்தி கூறப்படுகின்றது. 'ஆற்றுப்படலம்' என்று சிலபிரதிகளிற் காணப்படுகின்றது.*

o '

வேறு.

[வாநரர் பொய்கையையடைந்து நீர்முதலியன உண்டு
உறங்குகையில், ஓரசுரன் வருதல்]

க. *கண்டார் பொய்கைக் கண்ணக னன்னீர் கையார*
*வுண்டார் தேனு மொண்கனி காயு மொருசூழற்*
*கொண்டா ரன்றே யின்றுயில் கொண்ட குறியுன்னித்*
*தண்டா வென்றித் தானவன் வந்தான் றகவில்லான்.*

(இ - ள்.) கண்டார் - (அவ்வாறு பொய்கையைக்) கண்டவர்களாகிய வானரவீரர்கள்,—பொய்கைக்கண் அகல் நல் நீர் கை ஆர உண்டார் - அப்பொய்கையிலுள்ள பரவிய நல்லநீரை (த்தமது) கைநிறைய எடுத்துப் பருகினார்கள்; தேனும் ஒள் கனி காயும் (உண்டார்) - (அதன்கரையிலுள்ள) தேனையும் நல்ல கனிகளையும் காய்களையும் தின்றார்கள்; ஒரு சூழல் - அங்குஓரிடத்தில், இன் துயில் கொண்டார் - இனியநித்திரையைக் கொண்டார்கள்; கொண்ட குறி உன்னி - (அவ்வாறு வானரர்கள் வந்து) படுத்து உறங்குகின்ற செய்தியை நினைத்து, தண்டா வென்றி - நீங்காத வெற்றியையுடைய, தகவு இல்லான் - நற்குணமில்லாதவனாகிய, தானவன் - அசுரனொருவன், வந்தான் - (அவர்கள்உறங்குகின்ற இடத்தைநோக்கி) வரலானான்; (எ - று.)—அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம்.

வானரவீரர்கள் தாங்கள் வந்துசேர்ந்த பொய்கையின்கரையிலே காய் கனி முதலியவற்றை யுண்டு நீர்பருகி அயர்ந்து நித்திரைசெய்தனராக, அப்போது ஒருஅசுரன் அதனையறிந்து அங்குவரலாயின னென்க. அவன் பெயர் துமிரனென்பது, மேலே க0-ஆங்கவியில் விளங்கும். உண்ணுதல் தினனுதல் பருகுதல் நக்குதல் என்ற உணவுத்தொழில்வகை நான்கற்கும் பொதுவாகவும், உண்ணுதற்றொழிலொன்றற்குமே சிறப்பாகவும் நிற்றற்குரிய உண்ணுதல், இங்குப் பொதுப்பொருளைத் தந்தது.

'கரைகாமுற்று,' 'இன்றுயில்குன்றிற்குறியெய்தி,' 'தண்டார்வென்றி,' 'தகைவில்லான்' என்பன - பாடாந்தரங்கள்.

இதுவும், அடுத்தகவியும் - மூன்றாஞ்சீர் விளச்சீரும், ஈற்றுச்சீர் காய்ச்சீரும், மற்றைமூன்றும் மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (க)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அவ்வசுரனது வருணனை.]

௨. மலையே போல்வான் மால்கட லொப்பான் மறமுற்றக்
கொலையே யொப்பான் கூற்றைநி கர்ப்பான் கொடுமைக்கோர்
நிலையே போல்வா னீர்மையி லாதா னிமிர்திங்கட்
கலையே போலுங் காலவெ யிற்றான் கனல்கண்ணன்.

(இ-ள்.) (அவ்வசுரன்),-மலையேபோல்வான்-(பெருந்தோற்றமுடைமையால்) மலையை யொத்தவன்; மால் கடல் ஒப்பான்-(தேகத்தின்பரப்பாலும் கருநிறத்தாலும்) பெரிய கரிய சமுத்திரத்தை யொப்பவன்; மறம்முற்ற கொலையே ஒப்பான் கூற்றை நிகர்ப்பான் - கொடுமைமிகுதலால் கொலைத்தொழிலை யுடன்படுபவனுகிய யமனை யொத்திருப்பவன்; கொடுமைக்கு ஓர் நிலையே போல்வான் - க்ரௌர்யகுணத்திற்கு ஓர் இருப்பிடத்தை யொத்திருப்பவன்; நீர்மை இலாதான் - நற்குணஞ் சிறிதுமில்லாதவன்; நிமிர் திங்கள் கலையே போலும் காலம் எயிற்றான்-வானத்தில்தோன்றுகின்ற சந்திரனது பிறையைப்போன்றனவும் விஷம் போற் கொடியனவுமான பற்களையுடையவன்; கனல் கண்ணன்-கோபாக்னிசொரியுங் கண்களையுடையவன்

'போல்வான்' முதலியவற்றைப் பெயராகக்கொண்டு, 'போல்பவனும் ..... ..கண்களையுடையவனு மாகிய தானவன் வந்தான்' எனக் கீழ்க்கவியோடு இயைப்பினு மாம். இவவாறே மேற்கவியிலுங் காண்க.

மால் - இரட்டுறமொழிதலாய், கருமை பெருமைகளை யுணர்த்திற் றென்னலாம். மறம்-பாவமுமாம் 'கொலையேயொப்பான்' எனத் தனியாக எடுத்து-கொலைத்தொழிலையே போன்றவ னெனினுமாம். கொடுமைக்கு ஓர் நிலையே போல்வான் - கொடுந்தன்மைகட்கெல்லாம் பிறப்பிடமானவ னென்றபடி. கலை - சந்திரனது பாகம். காலம் - கருநிறமுள்ள விஷம், இங்கு, கொடுமைக்கு இலக்கணை காலன் எயிற்றான் என் றுபிரித்து - யமனதுகோரப்பற்கள்போன்ற கோரப்பற்களை யுடையவ னெனினுமாம்.

'மறமுற்றி', 'கொலையேசெய்வான்,' 'கொலையேபோல்வான்,' 'நிறைதிறங்கள்' என்பன பாடாந்தரங்கள்.

வேறு.

௩. கருவி மாமழை கைக டாவிமீ
துருவ மேனிசென் றுலவி யொற்றலாற்
பொருவின் மாரிமே லொழுகு பொற்பினு
லருவி பாய்தருங் குன்ற மேயனன்.

(இ - ள்.) (அவ்வசுரன்);—கருவி மா மழை - (உலகம்நடத்தற்கு) முதற்காரணமாகிய பெரிய மேகங்கள், கைகள்மீது தாவி-(தனது) தோள்களின்மேல் தாவியும், உருவம் மேனி சென்று உலவி - பெருந்தோற்றத்தையுடைய (தனது) உடலின்மேற் சென்று உலாவியும், ஒற்றலால்-படிதலினுலும்,—பொருவு இல் மாரி மேல் ஒழுகு பொற்பினுல் - ஒப்பில்லாத மழைநீர் தன்மேற் பெருகுகின்ற அழகிய தோற்றத்தினு

லும்,—அருவி பாய்தரும் குன்றமே அனுன் - (மேகங்கள் தன்மீது தவழப்பெற்று) நீரருவிபாய்கின்ற மலையை யொத்தவன்; (எ - று.)

அவவசுரனது தோள்களின்மீதும் உடம்பின்மீதும் மேகங்கள் தவழ்ந்து பெருகுமாறு மழைநீரைப்பொழிதலால், மேகங்கள் தன்மீது சஞ்சரிக்கப்பெற்று நீரருவிபாயும்மலை அவனுக்கு ஏற்றஉவமையாம். "மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" என்றபடி உலகம் இடையறாது நடத்தற்குக்காரணமாய்நிற்றலால், 'கருவிமாமழை' எனப்பட்டது; உருவ-ஊடுருவும்படி, மேனி சென்று உலவியொற்றலால் எனவும்உரைக்கலாம்.

'உருவிமீதுசென்றுலவியொற்றலின்,' 'பொருவில்வாரி,' 'அருவிசோர்ந்தரும்' என்பன பாடாந்தரங்கள்.

இதுமுதல் இருபத்துமூன்று கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாசீர்களும், இரண்டு நான்காஞ் சீர்கள் விளச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௩)

௪. வானவர்க்குமற்றவர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையா
னனவக்கலனவனொடாடவே
றேனவர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ.

(இ - ள்.) வானவர்க்கும்-தேவர்கட்கும், அவர் வலிக்கு நேர் தானவர்க்குமே - அத்தேவர்களது வலிமையைப் போன்ற வலிமையையுடைய அசுரர்கட்குமே, அரிய - வெல்லுதற்குக்கூடாத, தன்மையான் ஆன - வலிமைத தன்மையுடையவனாகிய, அகலன் அவனொடு - துஷ்டனாகிய அவவசுரனோடு, ஆட - போர்செய்வதற்கு, வேறு ஏனவர்க்கும் - மற்றும் எத்தன்மையுடையவர்க்கும், ஒன்று எண்ண ஒண்ணுமோ - சிறிதேனும் நினைக்க முடியுமோ? (எ - று.)—மற்று - அசை.

அவவசுரனோடு போர்செய்தல் தேவர்கட்கும் அசுரர்கட்குமே முடியாதென்றால், மற்றையெவரால்தான் முடியும்? ஒருவராலும் இவனோடு போர்செய்துவெல்லுதலை நினைத்தலும் முடியாதென்பதாம். இச்செய்யுளில் தண்டாபூபிகாநியாயந் தொனிக்குமாறு கூறியது-தொடர்நிலைச்செய்யுட் பொருட்பேறணியின்பாற்படும். மற்றவர்வலிக்குநேர்தானவர் - அத்தேவர்களின் வலிமைக்கு மாறாய்நிற்கின்ற அசுரர் எனினுமாம். கலன் - துஷ்டன்; வடசொல். 'புட்கலனவனொடு' என்ற பாடம்-புஷ்டியுள்ளவனாகிய அவவசுரனோடு என்றும், 'புட்கலன்மகனொடு' என்றும், 'புட்கலன்மகனொடு' என்ற பாடம்-புஷ்கலனென்பவனதுமகனாகிய அந்தத்துமிரனோடு என்றும் பொருள்படும். அவவசுரனுக்கேபுஷ்கலனென்றும் துமிரனென்றும் இருபெயருண்டு எனக் கூறுவாருமுளர்.

'ஆடவே' யேனையர்க்கும்' என்று சிலபிரதிகள். (௪)

[அவ்வசுரன் உறங்குகின்ற வாநரவீரரை யடைதல்.]

௫. பிறங்குபங்கியான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன்றுளான்பியையுங்கையினு
னறங்கொள்சிந்தையார்நெறிசெலாய்வினு
லுறங்குவாரைவந்தொல்லையெய்தினான்.

(இ - ள்.) பிறங்கு பங்கியான் - விளங்குகின்ற செம்பட்டமயிரை யுடையவனும், பெயரும் பெட்பினில் கறங்கு போன்று உளான்-செல்லுகின்ற தன்மையினாற் காற்றாடியை யொத்துள்ளவனும், பிழையும் கையினன் - பிசைகின்ற கைகளையுடையவனு மாகிய அவ்வசுரன்,— அறம் கொள் சிந்தையார் நெறி செல் ஆய்வினால் உறங்குவாரை-தரும சிந்தையுள்ளவர்களும் வழிநடந்த இளைப்பினால் நித்திரைசெய்கின்றவர்களு மாகிய அவ்வாநரரை, ஒல்லை வந்து எய்தினன் - விரைவாக வந்தடைந்தான்; (எ - று.)

இராமகாரியத்திற் கருத்தாய்ச் செல்லுதலால், வானரரை 'அறங் கொள் சிந்தையார்' என உயர்த்திக்கூறினார். பிழை=பிசை: போலி. கைபிசைதல் - கொடுமைகுறி. ஆய்வு - வருத்தம்.

'பெயரும்வேகத்தால்,' 'பிசையுங்கையினன்,' 'நெறிசெலோய்வினால்' என்றும் பாடம். (கூ)

[அவ்வசுரன் அங்கதனை மார்பிலறைதல்.]

சு. பொய்கையென்னதென்றுணர்ந்தும்புல்லியோ
ரெய்தினர்கள்யாரிதுவெனாவெனா
வையனங்கதனலங்கன்மார்பினிற்
கையின்மோதினன்காலனேயனான்.

(இ - ள்.) காலனே அனான் - யமனையொத்தவனாகிய தூமிரனென்ற அந்த அசுரன்,—'பொய்கை என்னது என்று உணர்ந்தும - இந்தத்தடாகம் எனனுடையதென்று அறிந்திருந்தும், எய்தினர்கள் - இங்குவந்து சேர்ந்தவர்களாகிய, புல்லியோர் - அற்பபுத்தியுள்ளவர்கள், யார்-எவர்? ஆ இது என்'ஆ இது என்னவியப்பு!'எனா-என்று சொல்லிக்கொண்டே, ஐயன் அங்கதன் அலங்கல் மார்பினில் - சிறந்தவனாகிய அங்கதனது மலர்மாலையை யணிந்த மார்பிலே, கையின் மோதினன் - கையினால் அறைந்தான்; (எ - று.)

'இப்பொய்கை எனதென்று பிரசித்தமாயிருக்கவும், இங்கு வந்து சேர்ந்தவர்கள் அறிவில்லாதவர்களே; இப்படியும் அறிவில்லாதவர்கள் இருக்கின்றார்களே!' என்று மிக்க செருக்கினாற் கூறிக்கொண்டே, அயர்ந்து உறங்குகின்ற அங்கதனது மார்பில் ஓரறையறைந்தனன் தூமிரனென்பதாம். தனது பெருமையை யாவரு முணர்வ ரென்ற செருக்கினால், 'பொய்கை யென்ன தென்றுணர்ந்தும்' எனக் கூறினன். ஆ-வியப்பிடைச்சொல். இனி, இது என் ஆ(று) என்று எடுத்து - இவர்கள் இங்கு வந்ததற்குக் காரணம் யாது? என்று உரைத்தலு மொன்று.

'உணர்ந்து,' இதுவெனாவெனா' என்று சிலபிரதிகள். (சு)

[அங்கதனால் அவ்வசுரன் இறத்தல்.]

எ. மற்றிமைந்தனுமுறக்கமாறினா
னிற்றிவன்கொலாமிலங்கைவேந்தெனா
வெற்றினானைநேரெற்றினானவன்
முற்றினானிகற்காதிமூர்த்தியான்.

(இ - ள்.) மற்று-பிறகு, இ மைந்தனும்-வீரனாகிய இவ்வங்கதனும், உறக்கம் மாறினான்-நித்திரைதெளிந்தவனாய், இன்று இவன் இலங்கை வேந்து-கொல் ஆம். 'இப்பொழுதுவந்துள்ள இவனே இலங்கைக்கு அரசனாகிய இராவணன்போலும்,' என-என்றுகருதி, எற்றினான் - தன்னை யறைந்தவனாகிய அவ்வசுரனை, நேர் எற்றினான்-தானும் அதற்குமாறாக அறைந்தான்; (அவ்வாறு அறையவே),-இகற்கு ஆதி மூர்த்தியான் அவன்-போர்த்திறத்தில் முற்பட்டுநிற்குந் தோற்றமுடையவனான அவ்வசுரன், முற்றினான்-இறந்தான்; (எ - று.)

துமிரனென்ற அவ்வசுரனா லறையப்பட்ட அங்கதன், துயிலுணர்ந்தெழுந்து அவனை இராவணனென்றே கருதி, அவனது மார்பி லறைதலும், அவ்வசுரன் கீழ்விழுந்து இறக்கலாயின னென்க. இதற்கு ஆதிமூர்த்தியான் என்பதற்கு - பராக்கிரமத்திற்குஉரிய ஒருகடவுள் போன்றவனெனினுமாம். இற்று இவன் என்பதற்கு-இத்தன்மையையுடைய இவன என்று கூறுவாருமுளர்; இற்று என்பது அஃறிணையொன்றன் பாற்பெயரும், இவன் என்பது உயர்திணையாண் பாற்பெயரு மாதலால், திணைவழுவாம். முற்றுதல்-ஆயுள் முடிந்து இறத்தல்.

'ஆதிமூர்த்திபோல்' என்றும் பாடம். (எ)

[அவ்வசுரன் இறந்து கீழ்விழுந்தவிசையினால் வாநரா துயிலுணர்ந்து திரளுதல்.]

அ. இடியுண்டாங்கணோரோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலுந்
தொடியின்றோள்விசைத்தெழுந்துசுற்றினார்
பிடியுண்டாரெனத்துயிலும்பெற்றியார்.

(இ - ள்.) ஆங்கண்-அப்பொழுது [அல்லது அவ்விடத்தில்], இடியுண்டு ஓர் ஓங்கல் இற்றது ஒத்து-இடிவிழுந்ததனால் ஒருமலை வேர்பறிந்துவிழுந்ததுபோல, அடியுண்டான் தளர்ந்து அலறி வீழ்தலும்-(அங்கதனால்) அறையப்பட்டவனாகிய அவ்வசுரன் தளர்ச்சியடைந்து அலறிக்கொண்டே இறந்து கீழ்விழுந்தவுடனே,—பிடியுண்டார் என துயிலும் பெற்றியார்-(பேயினாற்)பிடிக்கப்பட்டவர்போல மெய்ம்மறந்து தூங்குந் தன்மையுள்ள வாநரர்கள், தொடியின் தோள் விசைத்து எழுந்து சுற்றினார்-தொடியென்னும் ஒருவகை வளையை யணிந்த தோள்களை விரைவாகத் தட்டிக்கொண்டு எழுந்து (கீழே விழுந்துள்ள அவ்வசுரனைச்)சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)

இடிவிழப்பெற்ற மலை சரிந்துஅழிதல்போல, அங்கதனாலறையுண்ட அசுரன் தரையிற்சாய்ந்து உயிரொடுங்க, வானரர்கள்யாவரும் அப்பொழுது தோன்றிய ஆரவாரத்தினால் நித்திரைதெளிந்துஎழுந்து கீழ்விழுந்த அவனைச் சூழ்ந்துகொண்டன ரென்பதாம். தோள்களைத்தட்டுதல்-வீரக்குறி. வழிநடந்த இளைப்பினால் மெய்ம்மறந்து தூங்குதல்பற்றி, வானரர்களை 'பிடியுண்டாரெனத் துயிலும் பெற்றியார்' என்றார்.

'ஒடியுண்டாங்கணோரோங்கல் வீழ்வதொத்து', 'தொடியின்றோள் விசைத்தொழுது' என்பன பாடாந்தரங்கள். (அ)

[அநுமான் இறந்த அசுரனைப்பற்றி அங்கதனை வினவ, அதற்கு அவன் விடை கூறுதல்.]

௯. யார்கொலாமிவனிழைத்ததென்னெனாத்
தாரைசேயினைத்தனிவினாயினான்
மாருதேயன்மற்றவனுமவாய்மைசா
லாரியாதெரிந்தறிகிலேனென்றான்.

(இ-ள்.) மாருதேயன்-வாயுவின்மகனான அநுமான், தாரை சேயினை-தாரையின்மகனான அங்கதனைநோக்கி,'இவன் யாரகொலஆம்-(இறந்து கீழ்விழுந்துகிடக்கும்)இவன் யாவனோ? இழைத்தது என்-(இவன்)செய்தது யாது?' எனா-என்று, தனி வினாயினான்-தனியாகக் கேட்டான், மற்று-பின்பு, அவனும் - அவ்வங்கதனும, (அநுமானைநோக்கி) 'வாய்மையால ஆரியா-சத்தியந்தவறாத பெரியோனே! தெரிந்து அறிகிலேன - (யான இவனைப்பற்றி) ஒன்றும் அறியேன்,' என்றான்-என்றுவிடைகூறினான்.

இவன்-மத்திமதீபம். மாருதேயன்-தத்திதாந்தநாமம். சால்-மிகுதி குறிக்கும் உரிசசொல்.

'யாரகொலாமிவண்,' 'நிகழ்ந்ததென்' என்பன பாடாந்தரங்கள்.

[அவ்வசுரனதுவரலாற்றை ஜாம்பவான் எடுத்துரைத்தல்.]

௧0. யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
றாநிவந்தவேற்றுமிரனென்னும்பே
ரானிவவாழ்புனற்பொய்கையாளுமோா
தானவன்னெனச்சாம்பன்சாற்றினான்.

(இ-ள்.) (அதுகேட்டு), சாம்பன்-ஜாம்பவான், (அநுமானைநோக்கி) யான் இவன்தனை தெரிய எண்ணினேனா-யான் அவ்வசுரனைப்பற்றி இனனென்று தெரியுமாறு நன்றாகஆலோசித்துப்பார்த்தேன, (இவன்) தாநிவந்த வேல்துமிரன் என்னும் பேரான்-(பகைவரது உடலின்) மாம்சம்நிறைந்துள்ள வேலாயுதத்தைத் தாங்கிய துமிரனென்னும் பெயரை யுடையான்;இ ஆழ்புனல் பொய்கை ஆளும ஓர தானவன்-ஆழ்ந்தநீர்நிலையையுடைய இந்தப் பொய்கையை அரசாள்கின்ற ஓரசுரனாவன்,' என சாற்றினான்-என்று சொன்னான்; (எ - று.)

திருமால் திரிவிக்கிரமாவதாரஞ்செய்த காலத்தில் அவன் திருவடி உலகத்திற் பரவியதைக் காணுமாறு ஜாம்பவான பலமுறை பூமியை வலம்வந்தவனாதலால உலகத்திலுள்ள பலவிஷயங்களையும தெரிந்தவனாதல் பற்றி, அவன் இவ்வசுரனை இன்னனென்று வினவியறிந்திருந்தன னென்க. தூ-மாமிசம்.

'பேர், போனவன்', 'இயவன்புனல்,' 'துமிரனென்னும்பேரான்' என்றும் பாடம். (௧0)

[வாநரர் துயில்தெளிந்து சீதையைத் தேடத் தொடங்குதல்.]

௧௧. வேறுமெய்துவாருளர்கொலாமெனாத்
தேறியின்றுயிற்செலவுதீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
நாறநாண்மலர்ப்பெண்ணைநாடுவார்.

(இ - ள்.) செலவு தீர்ந்துளார்-மேற்செல்லுதலைத் தவிர்ந்து அங்கு இளைப்பாறிய வானரவீரர்கள்,—வேறும் எய்துவார் உளர் கொல் ஆம் எனா-இன்னும் இங்கு வேறாகவும் (இவனைப்போன்ற அசுரர் போர்க்கு) வருபவர் இருக்கிறார்களோ? என்று எண்ணி, இன் துயில் தேறி-(தமது) இனியதூக்கந்தெளிந்து,(அங்ஙனம் வருபவர்களைச் சிறிதுநேரம் எதிர் நோக்கியிருந்து பிறகு),வீறு செஞ் சுடர் கடவுள் வேலைவாய் நாற-பெருமை பொருந்திய சிவந்த கிரணங்களையுடைய சூரியபகவான் கீழ்த்திசைக்கடலில் விளங்க [சூரியோதயமாக],நாள் மலர் பெண்ணை நாடுவார்-அன்றலர்ந்தது போன்றுள்ள[வாடாத]தாமரைமலரில் வீற்றிருக்கின்ற இலக்குமியின் அவதாரமான சீதாபிராட்டியைத் தேடுவாரானார்கள்.

வானரவீரர் 'இன்னும் இவன்போன்ற அசுரர் வேறுயாரேனும் போர்க்கு வருதல்கூடும்'என்று தூங்காமல் விழித்துக்கொண்டு எதிர்பார்த்திருந்து சூரியனுதயமாகுந்தருணத்தில் சீதையைத் தேடுமாறு அங்குநின்று வெளிச் செல்லலானார்க ளென்பதாம். வேறும் எய்துவார் உளர்கொல்ஆம்-இத்துமிரனைத்தவிர வேறு இங்கு யார்தான் இருப்பார்? [இப்பொய்கை இவனுடைய தாகவேயிருக்கும்] என்று உரைப்பாரு முளர். பதினாறுகிரணங்களையுடைய சந்திரனுக்கும், எழுகிரணங்களையுடைய அக்கினிக்கும்கொடுத்துவாங்கும் ஆயிரங்கிரணங்களை யுடையவனாதலால், சூரியபகவானை 'வீறுசெஞ்சுடர்க் கடவுள்'என்றார்.நாறுதல்-தோன்றுதல்.நாற நாடுவார் என இயையும். 'நாறு நாள்' என்ற பாடத்திற்கு-சூரியன் கடலில்தோன்றுகின்ற பகல் தொடங்கியதும், மலர்ப் பெண்ணை நாடுவார் எனப் பொருள்காண்க.

'உளர்கொன்மேலென,' 'இன்றுயில்செய்தல்', 'பெண்ணைநண்ணினார்' என்று சிலபிரதிகள். (௧௧)

[வாநரவீரர் பெண்ணைநதியைச் சார்தல்.]

௧௨. புண்ணைவெம்முலைபுளினமேய்தடத்
துண்ணவாம்பலினமுதமூறுவாய்
வண்ணவொண்ணகைத்தரளவாண்முகப்
பெண்ணைநண்ணினார்பெண்ணைநாடுவார்.

(இ - ள்.) பெண்ணை நாடுவார்-சீதாபிராட்டியைத் தேடுபவர்களாகிய வானரவீரர்கள்,—புளினம்-மணற்குன்றுகளாகிய, புள் நை வெம் முலை-சக்கரவாகப்பறவைகள் (ஒப்பாகாமையால்) வருந்துதற்குக் காரணமான விருப்பத்தையுண்டாக்குந் தனங்களையும், தடத்து எய் ஆம்பலின் - நீர் நிலையிற் பொருந்திய செவ்வாம்பல்மலராகிய, உண்ண அமுதம் ஊறு வாய்-அதரபானஞ்செய்யுந்தோறும் அமுதம்போன்ற இனிய

ரசம் சுரக்கின்ற வாயையும், தரளம்-முத்துக்களாகிய, வண்ணம் ஒள் நகை-அழகிய ஒளிபொருந்திய பற்களையும்,வாள் முகம்-(தாமரைமலரா கிய) ஒளிபொருந்திய முகத்தையுமுடைய, பெண்ணை-பெண்ணைநதியா கிய பெண்ணை, நண்ணினார்-சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)

'பெண்ணை' என்பதி லுள்ள சிலேடைநயம்பற்றி,பெண்ணைநதியை ஒரு பெண்ணாக உருவகப்படுத்தினர்; இச்சொல் - நதியைக்குறிக்கும் போது இரண்டாம்வேற்றுமைத்தொகையும், மற்றொருபொருளில் இர ண்டாம் வேற்றுமை விரியுமாம். பெண்ணைநதியாகிய பெண்ணுக்கு— மணற்குன்றுகளைத் தன பாரங்களாகவும்,செவ்வாம்பல்மலரை வாயாக வும், முத்துக்களைப் பற்களாகவும்.தாமரைமலரை முகமாகவும் கொண் டன ரென்க:சிலேடையணியை அங்கமாகக்கொண்டுவந்த இயைபுருவ கவணி. பெண்ணைநண்ணினார் பெண்ணைநாடுவார் என்றஇடத்தில்,கார ணத்திற்கேற்ற காரியந் தோன்றியதாகக் கூறப்படுகின்ற தகுதியணி யுண்மை காண்க. ''அலம்புமாமணியாய்த் தோடகிலேபுளின, நலம் பெய்பூண்முலைநாகிளவஞ் சியாமருங்குற், புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனையறற்கூந்தற், சிலம்புசூழுங்காற்சோணமாந் தெரிவையைசசேர்ந் தார்'' என்றவிடத்தும் நதியைப் பெண்ணாக உருவகஞ் செய்திருத்தல் காண்க: - 'புள்ளைமுலை'என்றவிடத்தில், உவமையாதற்கு உரிய சக்கர வாகப்பறவையை உபமேயமாகிய தனங்களினும் தாழ்த்திக் கூறியது, எதிர்நிலையணியின் பாற்படும். 'வாள்முகம்'எனக் கூறியதனல்,'தாமரை யாகிய' என வருவித்து உரைக்கப்பட்டது. புளிநமென்பது-மணற்குன் றெனப் பொருள்படும் வடசொல். உயர்சசியில், தனங்களுக்குப் புளிநம் உவமையாம். பெண்ணை - வடபெண்ணை.

'உண்ணவுண்ண வின்னமிழ்த மூறுவாய்,' 'வண்ண வெண்ணகை,' 'பெண்ணைநாடுவார் பெண்ணைநண்ணினார்' என்பன பாடாந்தரங்கள்

[பெண்ணைநதியைச்சார்ந்தவிடங்களில்வாநரவீரர்சீதையைத்தேடுதல்.]

கூ. துறையுந்தோகைநின்றுடுசூழலுங்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந்தடமுந்தெண்பளிக்
கறையுந்தேடினாறிவின்கோடியார்.

(இ - ள்.) அறிவின் கோடியார்-அறிவின்எல்லையை யடைந்தவரா கிய[பேரறிவினராகிய]வானரவீரர்,—துறையும்-(அந்நதியின்) இறங்கு துறைகளிலும், தோகை நின்று ஆடு சூழலும்-மயில்கள் நின்று கூத்தாடு கின்ற இடங்களிலும் குறையும் - யாற்றிடைக்குறையாகிய தீவுகளிலும், சோலையும்-பூஞ்சோலைகளிலும், குளிர்ந்த சாரல் நீர் சிறையும்-குளிர்சசி யான பக்கங்களி லமைந்த நீர்நிலைகளிலும், தெள்ளு பூ தடமும்-தெளி வான மலர்கள் நிறைந்த தடாகங்களிலும், தெள் பளிங்கு அறையும்- (அங்குள்ள) நிர்மலமான பளிக்குப்பாறைகளிலும், தேடினார் - (சீதை யைத்) தேடினார்கள்; (எ - று.)

நீர்ச்சிறை - கரைகட்டித்தடுத்த நீர்நிலை. அறை - பாறை.

'அறிவின்கேள்வியார்' என்று சிலபிரதிகள். (கூ)

[வானரர் பெண்ணைநதியின் தென்கரைசேர்தல்.]

கச. அணிகொழித்துவந்தெவருமாடினார்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழிப்பதன்றுறையின்வைகினார்.

(இ-ள்.) அணி கொழித்து வந்து-அழகாக அலைவீசிக்கொண்டுவந்தும், ஆடினார் எவரும்-(தன்னில்) மூழ்கினவர்எவராயினும், பிணி கொழித்த வெம்பிறவி வேரின் வல் துணி கொழித்து-நோய்கள்நிறைந்த கொடுமையான (அவரது) பிறப்புக்களினதுவேர்களின்வலியதுண்டுகளை யடித்துக்கொண்டும், அருஞ் சுழிகள் தோறும் நல்மணி கொழிப்பதன்-[அகப்பட்டவர் தப்புதற்கு) அருமையான (தன்னிலுள்ள) நீர்ச்சுழிகளிலெல்லாம் சிறந்த இரத்தினங்களை வாரிக்கொண்டும்வருகின்ற பெண்ணைநதியினது, கரையின்-தென் கரையிலே, வைகினார்-(வானரவீரர்) வந்துதங்கினார்கள்; (எ - று.)

தன்னில்மூழ்கியவர் எத்துணைப்பாதகராயினும் அவரது பிறவிக்குக் காரணமான பாவங்களையெல்லாம் போக்கி அவர்க்கு முத்தியளிக்கவல்ல மகிமையுள்ளதும், நீர்சசுழிகளில் இரத்தினங்களைக் கொழித்துவரும் வளமுள்ளது மான பெண்ணைநதியின் அக்கரையாகிய தென்கரையை யடைந்து வானரவீரர்கள் தங்கின ரென்பதாம். பிணிகொழித்த வெம்பிறவி - "நோயெலாம்பெய்ததோராக்கை." 'ஆடினார்எவரும் பிறவிவேரின்வன்றுணிகொழித்து'என்றது-தன்னில்மூழ்கியவரது பிறப்புக்குக் காரணமான பாவங்களை யெல்லாம் அடியோடொழிததலாலென்க. பிறவிவேர்-பிறப்புக்குக்காரணமான வினைகள். 'கொழித்தல்' என்னும் வினைசசொல் வெவவேறு பொருளில் பலமுறை வந்தது-சொற்பின்வருநிலையணியின் பாற்படும்.

'எவருமாடினால்,'--'எவருமாடுவார், பிணிகொழித்தகிற்பிளவொடாரவன், மணிகொழித்ததென்கரையின்,' 'மணிகொழித்திடுந்துறையின்' என்பன பாடாந்தரஙகள். (கச)

[வாநரர் தசநவநாடு அடைதல்.]

கரு. ஆடுபெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துளார்
வீடுநண்ணினாரென்னவீசுநீர்
நாடுநண்ணினார்நாடுநண்ணினார்.

(இ - ள்.) நாடு நண்ணினார் - (சீதையைத்) தேடுதற்கொருழிலைமேற்கொண்டவராகிய வானரவீரர்கள்,—நீர் ஆடு பெண்ணை ஆறும் ஏறினார்-நீராடுதற்குஉரிய பெண்ணைநதியைக் கடந்தவர்களாய் [கடந்த பிறகு],-காடு நண்ணினார்-பலகாடுகளிற்சென்றவர்களாயும், மலை கடந்துளார்-பலமலைகளைத் தாண்டியவர்களாயும், வீடு நண்ணினார் என்ன-முத்தியுலகத்தையடைந்தவர்கள்போல, வீசு நீர் நாடு நண்ணினார் - அலைமெறிகின்ற நீரையுடைய தசநவநாட்டை யடைந்தார்கள்; (எ - று.)

வானரர்கள் பலகாடுகளிலும்மலைகளிலும் அலைந்துதிரிந்து இறுதியில் நீர்வளமுள்ள தசநவநாட்டை யடைந்ததற்கு, பலபிறவிகளில் அலைந்து

திரிந்தவன் இறுதியில் முக்தியுலகத்தை யடைவதை உவமைகூறினர். இதனால், அந்நாடு பலவளங்களும் நிரம்பி மிகவும் இனியதாயிருக்கு மென்பது பெறப்படும். முதலடி-கீழ்க்கவியின் அநுவாதம். 'நாடு' என்னுஞ் சொல் இரண்டனுள், பிந்தியது-முதனிலைத்தொழிற்பெயர்.

'நாடனண்ணினர்,' 'நவையினண்ணலார்' என்பதும் பாடம்.(கஙி)

[வாநரவீரர் விதர்ப்பநாட்டை யடைதல்.]

கசு. தசநவப்பெயரச்சரளசண்பகத்
தசநவப்புலத்தகணிநாடொரீஇ
யுசநவப்பெயர்க்கவியுதித்தபே
ரிசைவிதர்ப்பநாடெளிதினெய்தினர்.

(இ - ள்.) தசநவம் பெயர்-தசார்ணமென்னும் பெயரையுடைய,சரளம் சண்பகத்து-தொகுதியான செண்பகமரங்களையுடையதும், அசநம் அ புலத்து அகணி-உணவையுண்டாக்குகின்ற அழகிய விளைநிலங்களைக் கொண்ட மருதநிலங்களை யுடையதுமாகிய, நாடு-நாட்டை,ஒரீஇ-விட்டு நீங்கி,—உசநவன் பெயர் கவி உதித்த-உஶநஸ்என்னும் பெயரையுடைய சுக்கிரன் பிறந்த, பேர் இசை விதர்ப்பம் நாடு - மிக்கபுகழையுடைய விதர்ப்பதேசத்தை, எளிதின் எய்தினர் - எளிதாகச் சென்று சேர்ந்தார்கள், (வாநரவீரர்கள்.) (எ-று.)

தசநவம்-தஶார்ணம் என்றவடசொல்லின் திரிபு: ("தஶார்ணே தேஶ:" என்று கௌமுதீயென்னும் வடநூலிற் கூறப்பட்டிருக்கின்றது;) அந்தநாடு சண்பகமரத்தொகுதிகளையும் நல்லவிளையுளைக்கொண்டபுலங்களையுமுடையதென்க.சரளம்-அழகுமாம். உசநவப்பெயர்க்கவி- "உஶநா பார்க்கவ: கவி:" என்பது வடமொழிநிகண்டு. நவக்கிரக பூஜையில் சுக்கிரனை "விதர்ப்பதேசயன்" எனக் கூறுதல்பற்றி, 'உசநவப்பெயர்க்கவியுதித்த பேரிசைவிதர்ப்பநாடு' என்றார்.

'தசநவப்பெயர்த்தாலசண்பகத், தசநவப்பிரத்தகனநாடொரீஇ' என்ற பாடத்திற்கு - தசநவப்பெயர்(த்து) - தசநவமென்னும்பெயரையுடைய முல்லையையும்,தாலம் சண்பகத்து-தேன்பொருந்திய சண்பகத்தையும், அசனம்-வேங்கையையும், அப்பிரத்து-மாமரங்களையுமுடைய, அகல் நல் நாடு-அகன்ற நல்லநாட்டை,ஒரீஇ-நீங்கி என்று பொருளாம்; இப்பொருளில், தசநவம்என்பது-திசைச்சொல் என்பர்.'தசநவப்பெயர்த்துத்தால' என்பது,'தசநவப்பெயர்த்தால'என விகாரப்பட்டது. 'அசநவப்பிரத்தகனநாடு' என்பதற்கு—அசநம்-வேங்கைமரங்களிலே, அப்பிரத்து-மேகங்கள் படிதலையுடைய, அகல்-பரந்த, நல்நாடு என்றும் பொருள்கொள்ளலாம். வப்பிரம் என்று பிரித்து - தாழ்வரையென்று கூறுதற்கும் இடமுண்டு. 'அசனவப்பிறந்தகனநாடு' என்ற பாடம்—அச்னம்-உணவுக்குக்காரணமான, அப்பு-நீர்ப்பெருக்கானது, இறந்து-வரம்புகடந்துபெருகி, அகல்-செல்லப்பெற்ற, நல்நாடு என்று பொருள்படும். 'தசநவப்பெயர்த்தளவச்செண்பகத்து,' 'சாலசெண்பகத்து,' 'அகனநாடொரீஇ' என்ற பாடங்களும் காணப்படுகின்றன. (கசு)

[விதர்ப்பநாட்டில் வாநரவீரர் சீதையைத் தேடுதல்.]

கஎ. வைதருப்பமண்டலனில்வந்துபுக்
கெய்தருப்பமத்தனையுமெய்தினார்
பெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினார்.

(இ - ள்.) (வாநரவீரர்கள்),—வைதருப்பம் மண்தலனில் வந்து புக்கு-விதர்ப்பதேசத்தைச்சேர்ந்ததானபூமியினிடத்தில்வந்துசேர்ந்து எய்து அருப்பம் அத்தனையும் எய்தினார் - (அந்நாட்டிற்) பொருந்தியுள்ள ஊர்களெல்லாவற்றையும் அடைந்தவர்களாகி—பெய் தருப்பை நூல் பிறழும் மேனியார் செய் தவத்துளார் வடிவின் - (கையிற்) பூண்டுள்ள தருப்பைகளினாலும் (மார்பிலணிந்துள்ள) பூணூலினாலும் விளங்குகின்ற உடம்பை யுடையவர்களாகிய தவஞ்செய்யும் முனிவரது வடிவைக்கொண்டு, தேடினார்-(சீதையைத்)தேடினார்கள்; (எ-று.)

விதர்ப்பநாட்டையடைந்த வாநரவீரர்கள் முனிவர்வடிவுகொண்டு அங்கு உள்ள ஒருஊரையும் விடாது புகுந்துசென்று சீதையைத் தேடினார்களென்பதாம். மனிதர்கள் வாழ்கின்ற ஊர்களிற் சென்று வாநரவடிவுடன் தேடுதல் இயலா தாதலால்,வேண்டுமுருவங்கொள்ளும் வல்லமையுடைய அவ்வாநரவீரர் விதர்ப்பநாட்டைசசேர்ந்த ஊர்களிற் சென்று நாடுகையில் மிக்ககௌரவத்திற்கு இடமாய்ச சந்தேகத்திற்குச சிறிதும் இடமில்லாத முனிவரதுவடிவைக் கொண்டனரென்க.'பெய்' என்பதை, நூலுக்கும் கூட்டுக. வைதர்ப்பம் விதர்ப்பசம்பந்தமானது, வடமொழித்தத்திதாந்தநாமம். அருப்பம்-ஊர். செய்தவம்-செய்கின்ற தவம்; செம்மையான தவம் எனினுமாம். 'மெய்தருப்பைநூல் பிறழு மேனியார், செய்தவத்துளாள் வடிவு தேடினார்' என்ற பாடத்திற்கு- உண்மையான தருப்பைபோலவும் நூல்போலவும் விளங்குகின்ற [பேரிலைசசலினால் மிகவும் இளைத்துத்தோன்றுகின்ற] சரீரமுடைய வாநரர்கள் இராமனைப்பற்றியதியானத்தையே கொண்டிருப்பவளான சீதையினது வடிவத்தை [சீதையை]த் தேடினார்கள் என்று பொருளாம்.

'நாடதனில்வந்துபுக்கு' என்று சிலபிரதிகள். (கஎ)

[வாநரவீரர் தண்டகாரணியத்தை அடைதல்.]

கஅ. அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செங்நெல்வேலிசூழ்திருநன்னாடொரீஇத்
தன்னையெண்ணுமத்தகைபுகுந்துளார்
துன்னுதண்டகங்கடிதுதுன்னினார்.

(இ - ள்.) அறிஞர் - அறிவுடையவர்களான வாநரவீரர்கள்,—அன்னதன்மையால் நாடி-அவ்வாறாகத்தேடிக்கொண்டு, அ செங்நெல் வேலி சூழ்திரு நல் நாடு ஒரீஇ-செந்நெற்பயிர்கள்விளையும் வயல்கள் சூழ்ந்த சிறந்த அழகிய அந்தவிதர்ப்பநாட்டை விட்டு,—தன்னை எண்ணும் அ தகை புகுந்துளார் துன்னு தண்டகம்-ஆத்மஸ்வரூபத்தைத் தியானிக்கின்ற அத்தன்மை பொருந்தியவரான முனிவர் மிகுதியாக வசிக்கின்ற தண்டகாரணியத்தை, கடிது துன்னினார் விரைவாகச் சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)

தன்னையெண்ணும்அத்தகை புகுந்துளார் - ஜீவாத்மஸ்வரூபத்தை உள்ளபடியுணர்ந்து ஸாக்ஷாத்கரிக்கவல்ல யோகியர் என்றபடி. வேலி-வயல். நல்நாடு - வளமுள்ள நாடு.

'அன்னதன்மையாரறிஞர்,' 'சிந்துநாடொரீஇ,' 'தன்னுமெண்ணும்,' 'தன்னையெண்ணுமங்கவர்,' 'அத்தகைபுகுந்துளார்' என்பன பாடாந்தரங்கள். (கஅ)

[வாநரர் முண்டகத்துறையை யடைதல்.]

கசு. உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினார்
தண்டகத்தையுந்தடவியேகினார்
முண்டகத்துறைகடிதுமுற்றினார்.

(இ-ள்). உண்டு அகத்துள் ஆர் உறையும்-(தமக்குரிய புலன்களை) அநுபவித்துக்கொண்டு உடம்பினுட்பொருந்திவசிக்கின்ற, ஐம் பொறி கண்டகர்க்கு-பஞ்சேந்திரியங்களாகிய துஷ்டர்களுக்கு, அருங் காலன் ஆயினார்-கொடுமையான யமன்போன்றவர்களாகிய முனிவர்கள் வசிக்கின்ற, தண்டகத்தையும்-அந்தத் தண்டகாரணியத்தையும், தடவி ஏகினார் - தேடிச் சென்றவர்களாய்,—(வாநரவீரர்கள்), முண்டகத்துறை கடிது முற்றினார் - முண்டகத்துறையென்னுமிடத்தை விரைவாகச் சேர்ந்தார்கள்; (எ-று.)

கண்டகம்-முள்; அதுபோலத் தீங்குசெய்பவர்-கண்டகர். பஞ்சேந்திரியங்கள் ஆத்மாவை நற்கதியிற்சேரவொட்டாது உபத்திரவித்தலால், அவற்றை 'கண்டகர்' என்று உருவகஞ்செய்தனர். ஐம்பொறிக் கண்டகர்க்கு அருங்காலனாயினார்-ஜிதேந்திரிய ரென்றபடி. மனத்தை நல்வழியிற்செல்லவொட்டாது தடுத்து ஐம்புலன்களிற் செல்லுமாறு இழுக்கின்ற இந்திரியங்களை அங்ஙனஞ்செய்யவொட்டாது தடுத்துத் தம்வசமாக்கி மனத்தை ஜீவாத்மபரமாத்மதியானங்களிற் செலுத்தும் வல்லமையுடையவர் ஜிதேந்திரிய ரெனப்படுவர்.

'உண்டகத்துளாயுழலுமைம்பொறிக், கண்டகர்த்தெறுங்காதலார்கடாம்' என்று சிலபிரதிகள். (கசு)

[இதுமுதல் மூன்றுகவிகள் - முண்டகத்துறையின் வருணனை.]

உ0. அள்ளனீரெலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோதையிற்
கள்ளநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுமீனுமும்புலவுதீர்தலால்.

(இ - ள்.) (அந்தமுண்டகத்துறையில்),—அள்ளல் நீர் எலாம்-குழைசேற்றோடு கூடிய நீர்முழுவதிலும்,—அமரர் மாதரார் - (அங்கு வந்திறங்கி ஸ்நாநஞ்செய்யுந்) தேவமாதர்களது, மா முலை கொள்ளை கலவைகோதையின்-பெரியதனங்களிலணிந்த மிகுதியான கலவைச் சாந்தினாலும் மலர்மாலைகளினாலும், கள்ள நாறலின்-நறுமணம் வீசுதலினால், புலவு தீர்தலால்-புலால்நாற்றம் நீங்குதல்பற்றி, கமலம் வேலி

வாழ் புள்ளும் மீன் உணா-அம்முண்டகத்துறையில் வசிக்கின்ற பறவை களும் (அங்குள்ள) மீன்களைப் புசிப்பதில்லை; (எ-று.)

அம்முண்டகத்துறையில் வந்து நீராடுகின்ற தேவமாதர்களது தனங்களில் அணிந்திருந்த கலவைச்சந்தனங்களும் மலர்மாலைகளும் படிதல்பற்றி அங்குள்ள மீன்களும் அக்கலவைகோதைகளின் நறு மணத்தை யடைந்து தமதுபுலால்நாற்றம் நீங்கப்பெறுதலினால், அங் குள்ள நாரைமுதலிய நீர்ப்பறவைகள் அம்மீன்களை உண்ணமாட்டா வென்பதாம். இதனால், அம்முண்டகத்துறை திரள்திரளாகத் தேவ மாதர்பலர் வந்துபடியப்பெற்ற சிறப்புவாய்ந்த தென்பது போதரும். புலால்நாற்றத்தையே விரும்பி மச்சங்களைப்புசிக்கும் பறவைகட்கு அப் புலால்நாற்றம் நீங்கவே, அம்மச்சங்களிடத்து விருப்பமொழிந்த தென்க. இங்கு, மீன்கள் தமக்குரிய புலால்நாற்றம்நீங்கி, கலவை கோதைகளின் நறுமணத்தைப் பெற்றதாகக் கூறியது - பிறிதின்குணம் பெறலணியின்பாற்படும். ("புதுப்புனல்குடையுமாதர் பூவொடுநாவி பூத்த, கதுப்புறுவெறியேநாறுங் கருங்கடற்றரங்கம்," குரும்பைமென் முலையாராடக் கூந்தலினறவந்தோய்ந்த, விரும்புனலாறுபாயவெறி திரைசுருட்டுந்தெண்ணீர்க், கருங்கடற்புலவுநீங்கி நறுமணங்கமழும்" என்பன இங்கு ஒருசார் ஒப்பு நோக்கத்தக்கன.) அள்ளல்-குழைசேறு. கலவை-பலவகை வாசனைப்பண்டங்கள் கலக்கப்பெற்றது. கமலவேலி =முண்டகத்துறை.

'அள்ளுநீரெலாம்,' 'கொள்ளுமாமுலை,' 'துள்ளுமாமுலை,' 'கலவை தோய்கையின்' என்பன பாடாந்தரங்கள். (உ0)

உக. குஞ்சரங்குடைந்தொழுகுகொட்பதால்
விஞ்சைமன்னர்பால்விரகமங்கைமார்
நஞ்சுவீணையினடத்துபாடலா
னஞ்சுவார்கணீரருவியாறரோ.

(இ-ள்.) விஞ்சை மன்னர்பால்-காமநூலில்வல்ல ஆடவர்களிடத் தில், விரகம்-பிரிவினால் வேதனைப்படுகின்ற, மங்கைமார்-மகளிர்—, வீணையின் நடத்தும்-(பிரிதலில்லாத மகளிர் களிப்புக்கொண்டு) யாழி னால் வாசிக்கின்ற, பாடலான்-இசைப்பாட்டினால் [இசைப்பாட்டைக் கேட்டு அதனால்), நஞ்சு-மனங்கசிந்து, அஞ்சுவார்-நடுங்குவார்கள்; கண் நீர்அருவி ஆறு:(அங்ஙனம்அஞ்சுதலால் அவர்கள்சொரிகின்ற) கண்ணீர்ப்பெருக்கானது,—குஞ்சரம் குடைந்து ஒழுகு கொட்பது - யானைகள் அமிழ்ந்துமுழுகுகின்ற தன்மையுடையதாகும்; (எ-று.)—ஆல், அரோ- ஈற்றசைகள்.

தம்தம் கணவரைப் பிரிந்தவராய் அங்குஉள்ள மகளிர், தம்மைப் போலப் பிரிவின்றியிருப்பவர்கள் மனக்கிளர்ச்சியோடு வீணைகளைக் கொண்டு பாடும் பாடலைக் கேட்டு, காமோத்தீபகமான அவ்விசையொ லியால் வருந்தி விரகவேதனையுற்று மனநடுங்கிக் கண்ணீரையுகுப்பர்; அக்கண்ணீர்ப்பெருக்கு யானைகளும் அமிழ்ந்துமுழுகும்படியான நீர்ப் பெருக்காகு மென்பதாம். இங்ஙனம் பொருளின்பம்பயக்குமாறு வருணித்துக்கூறுதலை 'கௌடநெறி' என்பர் தண்டியாசிரியர். இது- தொடர்புயர்வுநவிற்சியணியின் பாற்படும். விஞ்சை மன்னர்-காம

நூல்களைக்கற்றுத் துறைபோய ஆடவர்; வித்தியாதர அரசரெனப் பொருள்கூறுவாரு முளர். வீணைப்பாடல் காமோத்தீபகமாய்ப் பிரிந்தோரைவருத்துதலின், 'வீணையின்நடத்துபாடலால் நஞ்சுஅஞ்சுவார்' என்றார்; இக்கருத்துப்பற்றியன்றே, ஆசிரியர் பின்னரும் "அளந்த பாடல்வெவ்வரவு தஞ்செவிபுக வலமரலுறுகின்றார்" என்றும், "நாமயாழ்த் தேனிறைக்கப் பெய்துகின்றார்சிலர்" என்றும் கூறியதென உணர்க. விரஹம்-வடசொல். நஞ்சு=நைந்து: முழுப்போலி. இனி, நஞ்சு என்பதனை 'நசசு' என்பதன் மெலித்தல்விகாரமெனக் கொண்டு பலரும்கேட்டுவிரும்பத்தக்க எனினுமாம். கணீர்-தொநததல்.

'குஞ்சரங்களித்தோங்குகொல்லைவாய், விஞ்சைமன்னர்பால்விற்கு மங்கைமார், நஞ்சுவீணையினடத்துபாடலா, லஞ்சுவார்கணீரருவியாறுடே'என்ற பாடத்துக்கு—குஞ்சரம் களித்து ஓஙகு கொல்லைவாய்-யானைகள் களித்துவளரும்கொல்லைநிலஙகளில், பால் விற்கும் மஙகைமார்-பால்விற்கும் மகளிர், வீணையின் நடத்து பாடலால் - வீணையிசைபோலப் பாடல்பாடுதலினால், விஞ்சைமன்னா-(இசைப்பாடலில்வல்ல) வித்தியாதரவரசர், நஞ்சு-(நமதுபாடல் இந்தமகளிரதுகுரலின் இன்னோசைக்குமுன்னே எத்தன்மையதாகும்' என்று) வருந்தி, கண்நீர் அருவியாறுடே அஞ்சுவார் - கண்ணீர்ப்பெருக்கைசசொரிதலோடு அஞ்சுவார்கள் என்று பொருள் காண்க. 'நஞ்சவீணையினவின்றுபாடலால்,' 'நறவுபாடலால்' எனவும் பாடம். (உக)

உஉ. கமுகவார்நெடுங்கனகவூசலிற்
குமுதவாயினார்குயிலையேசுவாா
சமுகவாளியுந்தனுவும்வாண்முகத்
தமுதபாடலார்மருவியாடுவார்.

(இ - ள்.) குமுதம் வாயினார்-செவவாம்பல்மலர்போன்ற வாயையுடையவர்களும், குயிலை ஏசுவார்-(தமதுகுரலாற்) குயிலையும் பழிப்பவரும், சமுகம் வாளியும் தனுவும் வாள் முகத்து அமுதம் பாடலார்-கூட்டமான மன்மதபாணஙகளைப்போன்ற கண்பார்வைகளையும் (மன்மதனது) வில்லைப்போன்ற புருவங்களையும்(தமது) ஒளிபொருந்திய முகத்திலேயுடைய அமுதம்போன்ற இசைப்பாடலைப் பாடுகின்றவருமாகிய மகளிர்,—கமுகம் வார் நெடுங கனகம் ஊசலில்-பாக்குமரஙகளிற் கட்டப்பட்டுள்ள மிகவும்நீளமான பொன்மயமாகிய ஊசலில், மருவி ஆடுவார்-இருந்து ஆடுவார்கள்; (எ - று.)

அங்குப் பாக்குமரங்களிற்கட்டப்பட்டுள்ள பொன்னூசல்களில் மகளிர் மனமகிழ்ந்து ஆடுவாரென அவவிடத்தின் அமைதியை வருணித்தவாறு. குயிலையேசுவார் என்றது - குயிலினும் இனியகுரலையுடையவ ரென்றபடி. தாமரை, அசோகு, தேமா, முல்லை, கருஙகுவளை என்ற ஐந்துமலர்கள்-மன்மதனது பஞ்சபாணங்களாம். "நினைக்குமரவிந்தம் நீள்பசலைமாம்பூ, வனைத்துணவுநீக்குமசோகு - வனத்திலுறு, முல்லை இடைகாட்டு மாதே முழுநீலங, கொல்லு மதனம்பின்குணம்" எனக் கூறப்பட்டுள்ள மன்மதனதுபாணஙகளின்செயலை இம்மகளிரதுகண்பார்வைகள் தமக்குஇலக்காகிற ஆடவர்க்கு விளைத்தலால், அப்பார்வைகளை 'சமுகவாளி' என்றார். மன்மதனது தனு - மகளிரதுபுருவத்துக்கு,

வடிவும் தொழிலும் பற்றிய உவமையாம். சமுகவாளி, தனு என்று உபமேயத்தை உபமானப்பொருளாகவே கூறியது - உருவகவுயர்வுநவிற்சியணியின் பாற்படும். இவை-உவமவாகுபெயர்களாம்.

'கமுகமாநெடும்,' 'வாழ்முகத்து', 'அமுதபாடலாலழகிளுவோர்,' 'அருவியாடுவோர்' என்று பிரதிபேதம். (உஉ)

[வாநரவீரர் அங்குச் சீதையைக்காணமல் அப்பாற்செல்லுதல்.]

உங. இனையவாயவொண்டுறையையெய்தினர்
நினையும்வேலைவாய்நெடிதுதேடுவார்
வினையவார்குழற்றிருவைமேவலார்
புனையுநோயினர்கடிதுபோயினர்.

(இ - ள்.) இனைய ஆய ஒள் துறையை எய்தினர்-இப்படிப்பட்டதாகிய அழகிய முண்டகத்துறையை யடைந்தவர்களாகிய வாநரவீரர்கள்,- நினையும வேலைவாய் நெடிது தேடுவார்-மனததினுல் நினைக்கும்பொழுதிற்குள்ளே வெகுதூரமாக[மனோவேகமாக]த்தேடுபவர்களாய், வினைய வார் குழல் திருவை மேவலார்-(ஐவகையாகத)தொழில்செய்தற்குஉரிய நீண்ட கூந்தலையுடைய திருமகளின் திருவவதாரமாகிய சீதாபிராட்டியைக்காணப்பெருமல், புனையும்நோயினர்-மிககவருத்தமடைந்தவராய், கடிது போயினர்-விரைவாக அப்பாற்செல்லலானர்கள்; (எ - று.)

முண்டகத்துறைமுழுவதிலும் சீதாபிராட்டியைத்தேடி அங்குக் காணப்பெருமையால், வாநரவீரர்கள் அப்பாற்செல்லலாயின ரென்க. இனைய-இனையது என்பதன் தொகுத்தல். 'வினையவார்குழல்' என்றது-மயிரைஉசசியில் முடித்தலாகிய முடியும்;சுருட்டிமுடிததலாகியகுழலும் முடிந்துவிடுதலாகிய தொஙகலும், பின்னிவிடுதலாகிய பனிசசையும், பின்னேசெருகலாகிய சுருளும என்ற ஐவகையான தொழிற்கு உரிய கூந்தல் என்க: இதுபற்றியே,மகளிர்கூந்தலுக்கு'ஐம்பால்' என்றுபெயர் வழஙகும். இத்தொடர்க்கு வேறுவகையாகப்பொருள்கூறுவதுபொருந்துமாயிற்கொள்க. புனையு நோயினர்கடிதுபோயினர் - பிராசம்.

'வண்டுறையை,' 'நெடிதுநேடுவார்' என்று சிலபிரதிகள். (உங)

[வாநரவீரர் பாண்டுமலையை யடைதல்.]

உச. நீண்டமேனியானெடியதாளினின்
றீண்டுகங்கைவந்திழிவதென்னலாய்ப்
பாண்டுவம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதண்சிகரமெய்தினர்.

(இ-ள்.)நீண்ட மேனியான்-திரிவிக்கிரமனாய் நீண்டதிருமேனியையுடையதிருமாலினது, நெடியதாளினின்று - பெரியதிருவடியினின்று, ஈண்டுகங்கை வநது இழிவது என்னல் ஆய்-இவ்விடத்தில்தான் கங்காநதியானது இழிகின்றதோ வென்று சொல்லும்படி, பாண்டு அம் மலை-அழகியபாண்டு மலையினது,படர் விசும்பினை தீண்டுகின்ற-பரவிய ஆகாசத்தை யளாவுகின்ற, தண் சிகரம்-குளிர்ந்த சிகரத்தை, எய்தினர்-(வாநரவீரர்) சென்று சேர்ந்தார்கள்; (எ - று)

தனதுஉச்சி வானத்திற்படியுமாறு ஓங்கியுள்ள வெண்ணிறமாகிய பாண்டுமலையைப் பார்ப்பவர்கட்கு, திருமாலின் திருவடியில் தோன்றிய வெண்ணிறமான நீரையுடைய கங்கையாறு வானத்தினின்று இங்குத் தான் இறங்குகின்றதோவென்று நினைக்குமாறு தோன்றுமென்க. தன்மைத்தற்குறிப்பேற்றவணி. திருமால் உலகமளந்தகாலத்து மேலேசத்தியலோகத்திற்சென்ற அப்பிரானது திருவடியைப் பிரமன் தனிகைக் கமண்டலதீர்த்தத்தினாற் கழுவிவிளக்க, அந்தஸ்ரீபாததீர்த்தமே கங்கையாகப் பெருகிற்றென்பது, இங்கு அறியத்தக்கது. வெண்ணிறமுடைமையால், இம்மலைக்கு 'பாண்டுமலை' என்று பெயர். 'பாண்டுவெம்மலை' என்றவிடத்து, அம்-சாரியையுமாம். எதுகைநயம்பற்றி, 'ஈண்டுகங்கை' எனவலிமிகாமல் இயல்பாயிற்று; நெருங்கியகஙகை யென்று வினைத்தொகையாகப் பொருள்கூறுவாருமுளர்.

'நீண்டநேமியா னெடிதுதாளின்வந், தீண்டுகங்கைதாளிழிவதென்னலாம், பாண்டுகம்மலை,' 'தீண்டுகின்றதன்' என்று சிலபிரதிகள்.

[பாண்டுமலையின் வருணனை.]

உரு. இருளு றுத்துமீ தெழுந்த தெண்ணிலா
மருளு றுத்துவண் சுடர்வ ழங்கலா
லருளு றத்திலா வடல ரக்கன்மே
லுருளு றுத்ததிண் கயிலை யொத்ததால்.

(இ-ள்.) இருள் உறுத்து - (உலகத்திலுள்ள) இருள்முழுவதையும் தாக்கியொழித்து, மீது எழுந்த-வானத்தில்தோன்றிய, தெள் நிலா-தெளிவான நிலவையுடைய சந்திரனுக்கும், மருள் உறுத்து-மருட்சியுண்டாக்கி, வள் சுடர் வழங்கலால்-(தான்)வளமான ஒளியை வீசுதலினால், —(அந்தப் பாண்டுமலையானது),—அருள் உறத்திலா அடல்அரக்கன் மேல்-(மனத்திற் சிறிதும்) அருளைக்கொண்டிராத வலிமையையுடைய அரக்கனாகிய இராவணன்மீது, உருள் உறுத்த - (அவனைக் கீழே விழுந்து, உருளுமாறு அழுத்திய, திண் கயிலை-வலிய கைலாசபருவதத்தை, ஒத்தது—; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

தனதுவெண்ணிலவினால் 'உலகத்துஇருளை யொழிக்குஞ் சந்திரனுக்கும் மருட்சியையுண்டாக்குவது எனப் பாண்டுமலையின் வெண்ணிறவொளியைச சிறப்பித்துக் கூறியவாறு. இவவாறு வெள்ளொளிமிக்கிருத்தலால், பாண்டுமலைக்குக கைலாசபருவதத்தை உவமைகூறினாரென்க. இனி, இசசெய்யுட்கு-இருட்டை யொழிதது வெண்ணிறவொளியை வீசுதலினாலே கருநிறமுள்ள ராக்ஷஸனை யடக்கிய வெள்ளிமயமான கைலாசமலையைப் போலும் பாண்டுமலை யென்ற கருத்துப்படப் பொருள் கூறினுமாம்.

'அரக்கன்மே லுருளுறுத்த திண்கயிலை' என்பதி லடஙகிய கதை:— இராவணன் அளகாபுரிக்குசசென்று குபேரனைவென்று அவனது புஷ்பக விமானத்தைப் பறித்து அதன்மேலேறிக்கொண்டு கைலாசமலைக்கு மேலாக ஆகாயமார்க்கத்திலே விரைந்து மீண்டுவருகையில் அம்மலையின்மகிமையால் விமானம் தடைப்பட்டுநிற்க, அதற்குக்காரணம் இன்ன

தென்று அறியாது திகைக்கும்போது, நந்திகேசுவரர் எதிரில்வந்து 'சிவபிரா னெழுந்தருளியிருக்குமிடமான திருக்கைலாயத்தின் பெருமை இது' என்று சொல்லவும், கேளாமல், அந்தத்தசமுகன் செருக்கினாற் கோபித்து 'எனதுபிரயாணத்துக்குத் தடையாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடு பறித்து எடுத்து அப்பா லெறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வேன்' என்று கூறி, விமானத்தினின்று இரங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின் கீழ்க்கொடுத்து அதனைப் பெயர்த்து அசைத்து எடுத்துத் தனது பத்துத் தலைகளின் மேலும் தூக்கி அப்பா லெறிந்துவிட்டுச் செல்வதாக முயல, அப்பொழுது பார்வதிதேவி அஞ்சிப் பரமசிவனைத் தழுவிக்கொள்ளவே, இராவணன் செய்கையை யுணர்ந்த உருத்திரமூர்த்தி சினந்து தன்திருவடிப்பெருவிரலினுனியினாற் சிறிது அழுத்த, அரக்கன் மலையின்கீழகப்பட்டுத் தலைகள் நசுங்கி மிக வருந்தின னென்பதாம்.

'இருளுறுத்த,' 'இருளறுத்து,' 'மீதெழுந்து,' 'மருளறுத்து,' 'வான்சுடர்,' 'உருளுறுத்து' என்பன பாடாந்தரங்கள். (உ௫)

## வேறு.

[வானரவீரர் அந்தச் சீதையைத்தேடிக்காணாமல் வருந்துதல்.]

உ௬. விண்ணுற நிவந்த சோதி வெள்ளிய குன்ற மேவிக்
கண்ணுற நோக்க லுற்றார் களியுறக் கனிந்த காமர்ப்
பண்ணுறு கிளவிச் செவ்வாய் படையுறு நோக்கி னாளை
யெண்ணுறு திறத்துங் காணா ரிடருறுமனத்த ரெய்த்தார்.

(இ-ள்.) (வாநரவீரர்),—விண் உற நிவந்த சோதி வெள்ளிய குன்றம் மேவி-ஆகாயத்தையளாவுமாறு உயர்ந்த ஒளியையுடைய வெண்மையான அப்பாண்டுமலையிற் பொருந்தி, கண்ணுற நோக்கல் உற்றார்-(சீதாபிராட்டியைக்) காணவேண்டுமென்று அவாவோடு தேடிப்பார்க்கத்தொடங்கியவர்களாய்,—களி உற கனிந்த காமர் பண் உறு கிளவி செம் வாய் படை உறு நோக்கினாளை-(கேட்பவர்) மகிழுமாறு இனிமை கொண்ட அழகிய இராகம்போன்ற இன்சொற்களைப்பேசுஞ் சிவந்த வாயையும் வாட்படைபோன்ற கண்களையுமுடையவளான சீதையை, எண் உறு திறத்தும் காணார்-('இங்குச்சீதைஇருக்கக்கூடும்' என்று தாங்கள்) எண்ணுகின்ற இடங்களிலெல்லாம் காணப்பெறாமல், இடர் உறு மனத்தர்-வருத்தங்கொண்ட மனமுடையவராய், எய்த்தார்-சோர்வடைந்தார்கள்; (எ-று.)

காமர்-காமம்மரு என்பதன் மரூஉ. 'படை' என்ற பொதுப்பெயர்-இங்குச் சிறப்புப்பொருளது, உறு-உவமவுருபு.

'வெள்ளியங்குன்றம்,' 'குன்றையெய்தி,' 'களியுறக்கனிந்தகாமம்,' 'எண்ணுறெத்திறத்தும்' என்று பாடாந்தரம்.

இதுமுதல் ஒன்பதுகவிகள்-கீழ் நாடவிட்ட படலத்தின் முப்பத்துமூன்றாங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (உ௬)

[வானரவீரர் கோதாவரிநதியைக் குறுகுதல்.]

௨எ. ஊதைபோல்விசையின்வெங்கணுழுவைபோல்வயவரோங்க
லாதியையகன்றுசெல்வாரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வழீஇவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதாவிரியினைக்குறுகிச்சென்றார்.

(இ-ள்.) ஊதை போல் விசையின்-காற்றைப்போன்ற வேகத்தைக் கொண்ட, வெங் கண் உழுவை போல் வயவர்-(கோபத்தினாற்) கொடுமையான பார்வையுடைய புலிபோன்ற வலிமையுள்ள வாநரவீரர்,—ஓங்கல் ஆதியை அகன்று செல்வார்-அப்பாண்டுமலையினடிவாரத்தை விட்டு அப்பாற்செல்பவர்களாய்,—அரக்கனால் வஞ்சிப்புண்ட சீதை போகின்றாள்-ராக்ஷஸனாகிய இராவணனாற் கவரப்பட்ட சீதையாகிய போகின்றவளது [இராவணனாற் கவர்ந்து செல்லப்பட்ட சீதையினது], கூந்தல்-கூந்தலிலிருந்து, வழீஇ வந்து-நழுவிவந்து, புவனம் சேர்ந்த-பூமியையடைந்த, கோதைபோல்-மலர்மாலைபோல, கிடந்த-இருக்கின்ற, கோதாவிரியினை-கோதாவரிநதியை, குறுகி சென்றார்-நெருங்கிச்சேர்ந்தார்கள்; (எ-று.)

உயர்ந்தஇடத்திலேறித் தூரத்திலிருந்து காண்பவர்க்கு ஆறுகள் வெள்ளிமலர்மாலைபோலத் தோன்றுமாதலால், கோதாவரிநதியை, இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்து செல்லுகையில் அவளது கூந்தலிலிருந்து நழுவிக்கீழ்விழுந்த மலர்மாலை போலுமென வருணித்தனர். முதலடி-வாநரர்களது வேகத்தையும் வலிமையையும் விளக்கும். ஆதியை என்பதற்கு-மலைகளுட் சிறந்ததான பாண்டுமலையை யென்பாருமுளர். வழீஇ-வழுவி: சொல்லிசையளபெடை. 'ஓங்கலாதனை' என்றும் பாடம். (௨எ)

[இதுவும், அடுத்தகவியும் - கோதாவரிநதியின் வருணனை.]

௨௮. எழுகின்றதிரையிற்றாகியிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வேள்விதொடங்கியசுருதிச்சொல்லா
லுழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கிஞால
மழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே.

(இ-ள்.) எழுகின்ற திரையிற்று ஆகி-மேலெழுந்து வீசியெறிகின்ற அலைகளையுடையதாய், இழிகின்ற-பெருகிவருகின்ற, மணி நீர் யாறு-முத்துப்போலத்தெளிவான நீரையுடைய கோதாவரிநதியானது,—தொழுகின்ற சனகன்-(யாவராலும்) வணங்கப்படுகின்ற [பெருமை பெற்ற] ஜநகமகாராஜன், வேள்விதொடங்கிய-யாகத்தைத் தொடங்கிச் செய்யும்பொருட்டு, சுருதிசொல்லால் உழுகின்ற பொழுதின்-வேதமந்திரங்களையுச்சரித்து (க் கலப்பைகொண்டு) உழுகின்ற காலத்தில், ஈன்ற-(தான் உழுபடைச்சாலினின்று) பெற்ற, ஒரு மகட்கு-ஒப்பற்ற சீதைக்காக [சீதை இலங்கையிற்சிறைப்பட்டிருப்பதற்காக] இரங்கி-மனம்வருந்தி, ஞாலம்-(அசசீதையின்தாயாகிய) பூமிதேவியானவள், அழுகின்ற-அழுவதனாலுண்டான, கலுழி மாரி-கலங்கலான கண்ணீர்ப்பெருக்கை, ஆம்-போலும், என-என்று சொல்லுமாறு, பொலிந்தது-விளங்கிற்று; (எ-று.)—அன்றே-ஈற்றசை:

நிறைந்துப்பெருகுகின்ற கோதாவரிநதியை, பூமிதேவியானவள் தான்பெற்ற மகளான சீதைக்கு நேர்ந்த வருத்தத்திற்காக இரங்கிப் பெருக்குங் கண்ணீர்வெள்ளம்போலு மென வருணித்தார்; சீதாப் பிராட்டியைத் தேடுகிற வாநரவீரர்க்கு இவ்வாறுதோன்றுதல் இயல் பாதலால், இங்ஙனம் வருணிக்கப்பட்டது; தன்மைத்தற்குறிப்பேற்ற வணி. ஜனகமகாராஜன் ஜ்ஞாநயோகத்திற்சிறந்து யாவராலும் வணங் குதற்குஏற்ற பெருமையுள்ள ராஜரிஷியாதலின், அவனை 'தொழுகின்ற சனகன்' என்றார். யாகஞ்செய்யத் தொடங்குபவர் முதலில் வேதமந் திரங்களை உச்சரித்துக்கொண்டு கலப்பையினா லுழுது அங்கு யாக சாலையை அமைத்தல், முறை.

'மணி' என்ற பொதுப்பெயர்-இங்கு, சிறப்பாய் நவமணிகளு ளொன்றாகிய முத்தைக் குறித்தது. தொழுகின்ற-தொழப்படுகின்ற, செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. தொடங்கிய-'செய் யிய' என்னும் வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம்; அதன்முன் வலி இயல்பாயிற்று.

'எழுகின்றகிரியிற்றாகி,' 'பொழுதின்வந்த,' 'ஆறேபோலுமன்பி னால்' என்பன பாடாந்தரம். (௨அ)

௨௯. **ஆசில்பேருலகிற்காண்போரளவைநூலெனலுமாகிக்**
**காசொடுகனகந்தூவிக்கவினுறக்கிடந்தகான்யா**
**றேசில்போரரக்கன்மார்பினிடைபறித்தெருவைவேந்தன்**
**வீசியவடகமீக்கோளீதெனவிளங்கிற்றன்றே.**

(இ-ள்.) காசொடு கனகம் தூவி-இரத்தினங்களையும் பொன்னை யும் (அலைகளினாற் கொழித்துக்கொண்டு, கவின் உற கிடந்த-அழகாக ஓடுகின்றதும், கான் யாறு-பலகாடுகளின் வழியாக வருகின்றதுமான கோதாவரிநதியானது,—ஆசு இல் பேர் உலகில்-குற்றமற்ற பெரிய இந்த நிலவுலகத்தில், காண்போர்-பார்ப்பவர்கட்கு, அளவைநூல் என லும் ஆகி-அளக்கின்றநூலென்று சொல்லுதற்கும் ஏற்றதாய்,—எருவை வேந்தன்-கழுகுகட்கு அரசனாகிய சடாயு, ஏசு இல் போர் அரக்கன் மார்பினிடை-(வீரத்தன்மையிற்) குற்றமற்ற போர்செய்யும் இராவண னதுமார்பிலிருந்து, பறித்துவீசிய-பிடுங்கி அப்பால்வீசியெறிந்த, மீக் கோள் வடகம் ஈது-மேலே அணியப்பெற்ற இரத்தினவாரந்தானோ இது, என-என்று சொல்லும்படியும், விளங்கிற்று—; (எ-று.)—அன்றே- ஈற்றசை.

கோதாவரிநதியானது-பூமியையளக்கின்ற அளவைநூல் போல வும், கழுகரசனான ஜடாயு சீதையைக்கவர்ந்துசென்ற இராவணனோடு போர்செய்கையில் அவன்மார்பினின்று கழற்றியெறிந்த ஹாரம்போல வும் விளங்கிற்று என்பதாம். அளவைநூல் என்பதற்கு-இரத்தினசாஸ் திரமெனப் பொருள்கூறி, அந்தச்சாஸ்திரத்திற் பலவகையிரத்தினங்க ளின்தன்மையை உணருமாறு கூறப்பட்டிருப்பதுபோல, இந்நதியானது இரத்தினங்களைத் தன்னிடத்திற்கொண்டு காண்பவர்கட்குப் பலவகை யிரத்தினங்களின் தன்மையை விளக்குமெனக் கருத்துக் கொள்வாரு

முளர். வடகம்-வடம் என்பதன் விரித்தல். இனி, 'மீக்கோள்வடக மென்பதற்கு-மேலேதரித்துள்ள உத்தரீய மென்பாரு முளர்.

'காணி', 'லேசுபோரரக்கன்' என்று சிலபிரதிகள். (உக)

[வாநரவீரர் சுவணநதியிற் சேர்தல்.]

௫0. அந்நதிமுழுதுநாடியாய்வளைமயிலையாண்டுஞ்
சந்நிதியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்று
ரின்னதீதிலாததீதென்றியாவையுமெண்ணுங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ்சுவணகத்துறையிற்புக்கார்.

(இ-ள்.) இன்ன (து) தீது இலாத(து) (இன்னது)தீது என்று யாவையும் எண்ணும் கோளார் - இன்னது நல்லது இன்னது கெட்டது என்று எல்லாவற்றையும் ஆராய்ந்தறிகிற தன்மையையுடைய வாநர வீரர்,—அ நதிமுழுதும் நாடி-அந்தக்கோதாவரி நதிமுழுவதுந் தேடிப் பார்த்து, ஆய் வளைமயிலை யாண்டும் சந்நிதி உற்றிலாதார்-சிறந்த வளையலையணிந்த மயில்போன்ற சீதையை எங்குங்காணப்பெறுமல்,-நெடிது பின் தவிர சென்றார் - வெகுதூரம் பின்னாற்கழியும்படி முன்நடந்து சென்றவர்களாய் [கோதாவரிநதிக்கு அப்பால் வெகுதூரங்கடந்து சென்று],சொன்ன தீவினைகள் தீர்க்கும் சுவணகம் துறையில் புக்கார்- (தன்னில்மூழ்கியவர்க்கு நூல்களிற்) கூறப்பட்டுள்ள தீவினைகளையெல் லாம் ஒழிக்கின்ற சுவணகநதியினிடத்திற் சென்று சேர்ந்தார்கள்.

மூன்றுவதுஅடி-வாநரவீரர்களின் பகுத்தறிவை; விளக்கும். ஆய் வளைமயில் - அடையடுத்த உவமையாகுபெயர். சந்நிதி-ஸந்நிதி: வட சொல்: ஸாந்நித்யம்: பிரதியட்சம் என்று பொருள்.

'நேடிப்பின்றவிர,' 'இந்நதியாவதீதென்று,' 'உணருஙகோளார்' என்று சிலபிரதிகள். (௫0)

[வானரவீரர் துலிந்ததேசத்தைக் கடத்தல்.]

௫க. சுரும்பொடுதேனும்வண்டுமன்னமுநதுவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெந்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன்மருதஞ்சூழ்ந்தகிடக்கைபின்கிடக்கச்சென்றார்
குரும்பைநீரமுதச்சோலைக்குலிந்தமும்புறத்துக்கொண்டார்.

(இ - ள்.) சுரும்பொடு-பொன்வண்டுகளும், தேனும்-தேன்வண்டு களும், வண்டும்-கருவண்டுகளும், அன்னமும் - அன்னப்பறவைகளும, புள்ளும்-நாரை முதலிய மற்றைப்பறவைகளும், துவன்றி-நெருங்கி,— கரும்பொடு-கரும்புகளும், செந்நெல் காடும் - செந்நெற்பயிர்த்தொகுதி யும், கமலம் வாவிகளும்-தாமரைத்தடாகங்களும், மல்கி - நிறைந்து,— பெரும்புனல் மருதம் சூழ்ந்த-மிக்கநீர்வளப்பமுள்ள மருதநிலத்தாற் சூழப்பெற்ற, கிடக்கை-இடங்கள், பின்கிடக்க - பின்னாற்கிடக்கும்படி, (அவற்றைத்தாண்டி), சென்றார் - அப்பாற்சென்றவர்களாய்;—(வாநர வீரர்கள்).—அமுதம் நீர் குரும்பை சோலை குலிந்தமும் புறத்து கொண்

டார்-அமிருதம் போன்ற (இனிய)நீரையுடைய இளந்தேங்காய்கள் நிரம்பிய சோலைகளையுடைய குலிந்தநேசத்தையும் தமதுபின்புறத்ததாகும்படி (அதனையும்) தாண்டிச சென்றார்கள்; (எ - று.)

சுரும்பு,தேன்,வண்டு என்பன-தும்பியின் சாதிபேதங்கள். சுரும்பு-எல்லாமணத்திலுஞ் செல்வது. தேன், வண்டு என்பன - நன்மணத்தே செல்வன. புள்என்றது-நாரைமுதலிய மற்றை மருதநிலப்பறவைகளையுணர்த்தும்.செந்நெல்-மிக்கநீர்வளத்திலேவிளையும்நெற்பயிரின் ஓர் சிறந்தசாதி. மருதநிலம்-அன்னம்முதலிய பறவைகளையும், செந்நெல்முதலிய உணவுகளையும், தாமரைமலர்களையும், பொய்கைகளையு முடைய தென்க.மருதம்-நாடும்,நாடுசார்ந்தஇடமும்.மருதநிலமாகியமுதற்பொருளும்,பறவை உணு பூ நீர் என்ற அந்நிலத்தின் கருப்பொருள்களும் இச்செய்யுளிற் கூறப்பட்டமை காண்க.

'துவன்றுபுள்ளும்,' "மருதஞ்சூழ்ந்தவிடத்தைப் பின்கிடத்திப்போனார்,' "குரும்பைநீர்முரஞ்சுஞ்சோலை,' 'குலிங்கமும்' என்பன பாடாந்தரங்கள். (௯௧)

[வாநரவீரர் அருந்ததிமலையைச் சேர்தல்.]

௯௨. கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தறண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவ
ரங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகரானார்,

(இ - ள்.) (வாநரவீரர்),—கொங்கணம் ஏழும் நீங்கி-ஏழுவகைக் கொங்கணதேசங்களையுந் தாண்டி,—குட கடல்-மேல்கடற்கரையைச் சார்ந்தனவாகிய,தரளம் குப்பை சங்கு அணி பானல் நெய்தல்-முத்துக் குவியல்களை யுண்டாக்குகின்ற சஙகுகளையும் அழகிய கருங்குவளைமலர்களையு முடைய நெய்தல் நிலததிலுள்ள, தண் புனல் - குளிர்ந்த நீரையுடைய நிலங்கள், தவிர-பின்னாகும்படி, ஏகி-(அவற்றைவிட்டு) அப்பாற் சென்று,—திங்களின் கொழுந்து சுற்றும் நீள் கோடு - பிறைசசந்திரன் சுற்றிசசெல்லும்படியான நீண்ட சிகரங்களையுடையதும், தேவர் அம் கைகள் கூப்ப நின்ற-தேவர்கள் தமது அழகிய கைகளைக்கூப்பி வணங்கும்படி நிற்பதுமாகிய, அருந்ததி சிமயத்துக்கு-அருந்ததிமலைக்கு,அருகர் ஆனார்-நெருஙகினவர்களானார்கள்; (எ - று.)

வாநரவீரர்கள் ஏழுவகைப்பட்ட கொங்கணதேசஙகளையும், மேல்பாலுள்ள நெய்தல் நிலங்களையுந் தாண்டி மிகவுமுயர்ந்ததாகிய அருந்ததிமலையைச் சேர்ந்தனரென்க. திங்களின்கொழுந்து சுற்றும் நீள்கோட்டு அருந்ததிச்சிமயம்-மலையினுயர்ச்சியை விளக்கும் உயர்வுநவிற்சி. சிமயம்-மலை. சிமயம் அருந்ததிககு=அருந்ததிச்சிமயத்துக்கு; உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. திங்களின்கொழுந்தைக் கூறியது - பூர்ணசந்திரனுக்கும் உபலட்சணம்.

'குரைகடற்றரளக்குப்பை', 'சங்கு', 'வாசநெய்தல்', 'சீர்மைநீள்கோட்டு' என்பன பாடாந்தரங்கள். (௯௨)

[அங்குச் சீதையைக்காணாது வானரவீரர் மரகதமலையைக்கடந்து திருவேங்கடமலை சார்தல்]

௫௫. அருந்ததிக்கருகுசென்றாண்டழகினுக்கழகுசெய்தா
ளிருந்ததிக்குணர்ந்திலாதாரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமரகதப்பெருங்குன்றெய்தி
யிருந்ததிற்றீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தவெல்லை.

(இ-ள்) (வானரவீரர்), அருந்ததிக்கு அருகு சென்று-அருந்ததிமலையின் சமீபத்திற் சேர்ந்து, ஆண்டு-அவ்விடத்தில், அழகினுக்கு அழகு செய்தாள் இருந்த திக்கு உணர்ந்திலாதார்-அழகுக்கும் அழகை யுண்டாக்குபவளாகிய [மிகவுங்கட்டழகியாகிய] சீதை யிருக்குமிடத்தை யறியாதவர்களாய், ஏகினார் - (அப்பாற்)சென்று,—இடையர் மாதர் பெருந் ததிக்கு அருந்தேன்மாறும் மரகதம் பெருங் குன்று எய்தி இருந்து-இடைப்பெண்கள் தங்களது சிறப்புப்பொருந்திய தயிருக்கு (அம்மலையினிடத்திலுள்ள வேட்டுவச்சிகளிடத்தில்) அருமையான தேனை மாறுதற்கு இடமான பெரிய மரகத மலையை யடைந்திருந்து, (அங்கும் சீதையைக் காணாமையால்), அதின் தீர்ந்து-அதனினின்று நீங்கி, இறுத்த எல்லை-(தமிழநாட்டினது) வரையறுக்கப்பட்டுள்ள வடவெல்லையாகிய, வேங்கடத்து-திருவேங்கட மலையினிடத்து, சென்றார்-சென்று சேர்ந்தார்கள்; (எ-று.)

அழகினுக்கு அழகுசெய்தாள்-இயற்கையில் நற்குணங்கள்மிக்கு நல்லிலக்கணமொன்றிலுங் குறைவில்லாத தன்னை அழகு அடைந்திருத்தலால்தான் அதற்கு மிக்கசிறப்பை யுண்டாக்கினவள் என்றபடி தம்மிடத்துமிகுதியாகவுள்ள பண்டத்தை விலையாகக்கொடுத்து அதற்கு ஈடாகத் தமக்குவேண்டிய அருமையான பொருளை வாங்கிக் கொள்ளுகிற பண்டமாற்று முறைப்படி, மரகதமலைக்கு அருகே முல்லைநிலத்திலுள்ள இடைப்பெண்கள் மரகதமலைமீதுள்ள குறிஞ்சிநிலத்து மகளிரிடம் தயிரைக்கொடுத்து அதற்குஈடாகத்தேன்பெற்றுக் கொள்கின்றன ரென்ற இதில், குறிஞ்சிநிலத்தோடு முல்லைநிலத்திற்குக் கலப்புக் கூறியவாறு காண்க; இதனால், நிலங்களின் அண்மைவிளங்கும்: இவ்வாறு நிலங்கட்குக் கலப்புகூறுவது-திணைமயக்கம் எனப்படும். மலையும் மலைசார்ந்த இடமுமாகிய குறிஞ்சிநிலத்திற்கும், நாடும் நாடு சார்ந்த இடமுமாகிய மருதநிலத்திற்கும் இடையிலுள்ள காடும் காடு சார்ந்த இடமுமாகிய முல்லைநிலத்தில் வாழ்பவ ராதல்பற்றி, இடைய ரென்பது-காரணப்பெயர். தயிர்-முல்லைநிலக் கருப்பொருள்; தேன்-குறிஞ்சிநிலக்கருப்பொருள். திருவேங்கடமலை "வடவேங்கடந் தென்குமரி" என்று தமிழ்நாட்டுக்கு வடவெல்லையாகக் குறிக்கப்படுதலால், 'இறுத்தவெல்லை வேங்கடத்து' என்றார். இனி, வேங்கடத்து இறுத்த வெல்லை என்பதற்கு-திருவேங்கடமலையிற் சென்று சேர்ந்தபொழுது என்று குளகமாகப் பொருள் கூறுவாருமுளர்; அது அடுத்த செய்யுள்களோடு இனிதாக அந்வயப்படாதென்க.

'அருந்ததிக் கருகுசென்றார்,' 'விருந்ததிற்றீர்ந்து,' 'வேங்கடத்திறுத்தகாலை' என்று பாடாந்தரங்கள். (௫௫)

[இதுமுதல் மூன்றுகவிகள் - திருவேங்கடமலையின் வருணனை.]

௩௪. முனிவரு மறைவ லோரு முந்தைநாட் சிந்தை மூண்ட
வினைவரு நெறியை மாற்று மெய்யுணர் வோரும் விண்ணோ
ரெனைவரு மமரர் மாதர் யாவருஞ் சித்த ரென்போ
ரனைவரு மருவி நன்னீர் நாளும்வந் தாடு கின்றார்.

(இ-ள்.) முனிவரும்-ருஷிகளும், மறை வலோரும்-வேதமறிந்த அந்தணர்களும், முந்தை நாள் சிந்தை மூண்ட வினை வரும் நெறியை மாற்றும் மெய் உணர்வோரும்-முற்பிறப்பிலே மனப்பூர்வமாகச்செய்த தீவினைகளினாலுண்டாகின்ற நரகநெறியை யொழிக்கவல்ல தத்துவ ஞானிகளும், விண்ணோர் எனைவரும்-தேவர்களெல்லோரும், அமரர் மாதர் யாவரும்-தெய்வமகளிரெல்லோரும், சித்தர் என்போர் அனைவரும்-எல்லாச சித்தர்களும், அருவி நல் நீர்-(அத்திருவேங்கடமலை யிலுள்ள) அருவிபெருகுகின்ற புண்ய தீர்த்தங்களில், நாளும்-எப்போதும், வந்து ஆடுகின்றார்-வந்து நீராடுகின்றார்கள்; (எ-று.)

முனிவர் முதலிய இவ்வுலகத்தாரும், தேவகணங்களாகிய மேலுலகத்தாரும் வந்து நீராடுதற்கு உரிய பெருமைவாய்ந்த நீரருவிகளினாலாகிய பலபுண்ணியதீர்த்தங்களைக் கொண்டுள்ளது, திருவேங்கடமலை யென்க அங்கு உள்ள புண்ணியதீர்த்தங்கள்-(கோனேரி, ஆகாசகங்கை, பாபவிநாசம், பாண்டவதீர்த்தம், குமாரதாரை, தும்புருதீர்த்தம், ஆழ்வார்தீர்த்தம் முதலியன. முனிவர்-மநநசீலர்: [மநநம்-தியானித்தல்.] காட்டுத்தீமுன்னர்ப் பஞ்சுத்துய்போல ஞானயோகத்தின் முன்னாத் தீவினைகள் நீங்கு மென நூல்கள் கூறுதலால், அவ்வாறு ஞானயோக முதிர்ச்சி யுடையவரை, 'முந்தைநாட்சிந்தை மூண்டவினை வரு நெறியை மாற்றும் மெய்யுணர்வோர்' என்றார். சித்தர்-தேவசாதியாரில் ஒருவகையர்.

'முனைவரும்முறைவலோரும்,' 'மெய்யுணர்ந்தோரும்,' 'எதிகளென்போர' என்பன பாடாந்தரங்கள். (௩௪)

வேறு.

௩௫. பெய்த வைம்பொறி யும்பெருங் காமமும்
வைத வெஞ்சொலு மங்கையர் வாட்கணி
னெய்த வஞ்சக வாளியும் வென்றுநற்
செய்த வம்பல செய்குநர் தேவரால்.

(இ-ள்.) (அத்திருவேங்கடமலையின்மீது),—தேவர்-தேவர்கள்,—செய்த ஐம் பொறியும் (தமதுஉடம்பிற்) பொருந்திய பஞ்சேந்திரியங்களையும், பெருங் காமமும்-பெரிய காமத்தையும், வைத வெம் சொலும்-(பிறர்தம்மைத்)திட்டிய கொடியசொற்களையும், மங்கையர் வாள் கணின் எய்த வஞ்சகம் வாளியும்-இளமகளிர் (தமது) வாள்போன்ற கண்களினாற் செலுத்திய வஞ்சகத்தன்மையுள்ள பார்வையாகிற அம்புகளையும், வென்று-(அலட்சியமாகச) சயித்து, செய் நல் தவம் பல-செய்த(ற்குஉரிய நல்லதவங்கள் பலவற்றை, செய்குநர்-செய்கின்றார்கள்; எ - று.)—ஆல்-ஈற்றசை.

தேவர்கள் அத்திருவேங்கடமலைமீது வந்து, ஐம்பொறிகளையுமடக்கி காமவேதனையில்லாமல், பிறர் தம்மைத் திட்டினாலும் அதனையும் பொறுத்து, மகளிரை மனத்தினாலுங்கருதாது, பலதவங்களைச் செய்கின்றார்க ளென்பதாம். பெருங்காமம்-"நீருட்குளிப்பினுங் காமஞ்சுடுமே குன்றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்பது, நாலடியார். "தீயினாற் சுட்டபுண் ணுள்ளாறு மாறாதே, நாவினாற்சுட்டவடு", "வைதவைவின் மராமரமேழ்தொளையெய்த," "சொல்லொக்குங்கடியவேகம்" என்றவாறு வசைச்சொற்கள் கேட்பவரது மனத்தை மிகவும்வருத்து மாதலால், 'வைதவெஞ்சொலும் வென்று' என்றார். மேல்நோக்கில், இனியதுபோலத்தோன்றுகின்ற மகளிரது கண்பார்வை பிறகு ஆடவரது மனத்தை ஊடுருவிப்பாய்ந்து வருத்துமாதலால், அதனை 'வஞ்சகவாளி' என்றார். தேவர்-பூமிதேவராகிய அந்தணர் எனினுமாம்.

'எய்தவெஞ்சொலின்', 'மங்கையர்வாட்கணால்', 'ஐம்பெருவாரியி னெண்ணற' என்பன பாடாந்தரங்கள்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் இருபத்தொரு கவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாசசீராயும், மற்றைமூன்றும் விளச்சீர்களாயும் வந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௩௫)

௩௬. வலங்கொணேமிமழைநிறவானவ
னலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ.

(இ - ள்.) வலம் கொள் நேமி-வெற்றியைக்கொண்ட சக்கராயுதத்தைத் தரித்த, மழை நிறம் வானவன்-கார்மேகம்போன்ற கருநிறத்தையுடைய கடவுளாகிய ஸ்ரீநிவாசனது, அலங்கு தாள் இணை-விளங்குகின்ற இரண்டு திருவடிகளை, தாங்கிய-ஏந்தப்பெற்ற, அம் மலை - அத்திருவேங்கடமலையில் வாழ்கின்ற, விலங்கும்-திர்யக்குக்களும், வீடு உறுகின்றன-மோட்சத்தையடைகின்றன; (என்றால்), மெய்நெறி புலன் கொள்வார்கட்கு-உண்மையான மார்க்கத்தில் நடக்கின்ற தத்துவஞானமுடையவர்களுக்கு, அனையது-அந்தமோட்சமானது, பொய்க்குமோ -கிடைக்காமல் தவறுமோ? [தவறாமற் கிடைக்கும் என்றபடி]; (எ - று.)

ஸ்ரீநிவாஸன் தன்னிடத்தி லெழுந்தருளி யிருக்கும் பெருஞ்சிறப்பு வாய்ந்த அத்திருவேங்கடமலையில் வாழ்கின்ற திர்யக்குக்களும் வீட்டுலகத்தையடையு மென்றால், சந்மார்க்கத்தில் நடக்கின்ற தத்துவஞானமுடையோர்கட்கு அவ்வீட்டுலகம் கிடைப்பது தவறுமோ. என்பதாம். இதில், தண்டாபூபிகாநியாய மென்னுங் கைமுதிகநியாயம்படக் கூறியிருப்பது - தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணியாம். வலம்கொள் நேமி-வலத்திருக்கையிலேந்திய சக்கரத்தை யுடைய எனினுமாம். சக்கரத்தைக் கூறியது-சங்கத்துக்கும் உபலட்சணம். ஸ்ரீநிவாஸன் 'மலைகுனியநின்றபெருமாள்' என்று திருநாமம் அடையுமாறு தனது தாளிணைகளை அம்மலையிற் பதியவைத்துள்ளதனால், 'மழைநிறவானவனலங்குதா

ளிணை தாங்கியவம்மலை' என்றார். திருமாலினது பஞ்சாயுதங்களுள், சக்கரம்-சுதரிசனமென்று பெயர்பெறும். விலங்கு-குறுக்காக உடம்புஅமையப்பெற்றது, எனவே, இச்சொல்-மிருகங்களையே யன்றி அத்தன்மையான உடம்பையுடைய பறவை ஊர்வன நீர்வாழ்வன என்றவற்றையும் குறிக்கும்: 'திர்யக்' என்ற வடமொழியும் இப்பொருளதே. உம்மை-இழிவுசிறப்பு. புலன் - தேர்ந்த அறிவு: தத்துவஞானம். புலன்கொள்வார்கட்கு அனையது பொய்க்குமோ என்பதற்கு - அம்மலை தத்துவஞானிகட்கு (மோட்சத்தையளிப்பதில்) தவறுமோ எனக் கூறுவாரு முளர்.

'வீடுறுகிற்பன' என்று பிரதிபேதம். (௩௬)

[வானரவீரர் அங்குள்ள பத்தர்களின் பாதங்களை முடிமேற்கொள்ளல்.]

௩௭. ஆயகுன்றினையெய்தியருந்தவ
மேயசெல்வரைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார்.

(இ - ள்) (வானரவீரர்),—ஆய குன்றினை எய்தி-அவ்வாறாகிய திருவேங்கடமலையையடைந்து, அருந் தவம் மேய செல்வரை மேவினர்-செய்தற்குஅரிய தவத்தைப் பொருந்திய பாக்கியவான்களைக் கிட்டியவர்களாய்,—மெய் நெறி நாயகன்தனை நாளும் வணங்கிய தூய நல்தவர் பாதங்கள் சூடினார்-என்றும் அழியாததான வீட்டுலகத்தின்நெறியையளிக்குந் தலைவனாகிய திருவேங்கடமுடையானைஎப்போதும்வணங்கப்பெற்ற பரிசுத்தமான சிறந்த தவத்தையுடைய அவர்களது பாதங்களைத் தமது தலைமேற்கொண்டு வணங்கினார்கள்; (எ - று.)

திருவேங்கடமுடையானை சேவிக்கின்ற பெரும்பாக்கியத்தைப் பெற்றுள்ளவராதலால், அவர்களை, 'அருந்தவமேயசெல்வர்' என்றும், 'தூயநல்தவர்' என்றுங் கூறினார். 'அருந்தவம்எயசெல்வரை' என்று பிரித்து உரைத்தல், மோனைத்தொடைக்குச் சிறவாது.

கீழ் நாடவிட்டபடலத்தில் 'கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரேலுந் நெடியகொடுமைநீங்கி, வீடுறுதிராதலினான் விலங்குதிர்' என்று சுக்கிரீவன்கூறியது-அம்மலையின் மகிமையை விளக்கும் அதிசயோக்தியென்றும், இங்குச் சுக்கிரீவன்கட்டளையை மீறித் திருவேங்கடமலையிற் சென்று அங்குள்ள பெரியோரை வானரர்கள் தரிசித்தது - இப்புண்ணியத்தின் பயனாலேனும் ஒருகால் சீதாபிராட்டியைக் காணமுடியுமோ வென்ற எண்ணத்தினாற்செய்ததென்றுங் கொள்ளலாம்.

'தூயர்நன்மலர்ப்பாதங்கள்' என்று பிரதிபேதம். (௩௭)

[வானரவீரர் அந்தணவடிவங்கொண்டு தொண்டைநாட்டை யடைதல்.]

௩௮. சூடியாண்டச்சுரிகுழற்றோகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தொண்டைநன்
னாடுநண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வேண்டுருமேவுவார்.

(இ-ள்.) வேண்டு உரு மேவுவார்-(தாம்) விரும்பிய வடிவங்களைக் கொள்ளவல்லவர்களாகிய வானரர்கள்,—சூடி-முற்கூறியவாறு நற்றவர் பாதங்களைச்) சூடியபின்பு,—ஆண்டு-அத்திரு வேங்கடமலையில், அ சுரி குழல்தோகையை தேடி-நுனிசுருண்ட கூந்தலையுடையவளும் மயில் போன்ற சாயலையுடையவளுமான அந்தச்சீதையைத் தேடி, (அங்குக் காணமையால்), மறை நாவலர் வேடம் மேயினர்-வேதங்களில் வல்லவரான அந்தணரது வேஷத்தைத் தரித்தவர்களாய், தெள் திரை வார் புனல் தொண்டை நல்நாடு நண்ணுகின்றார்-தெளிவான அலைகளையுடைய மிக்கநீர்நிறைந்த சிறந்த தொண்டைநாட்டைச் சேர்பவரானார்கள்; (எ - று.)

'சூடி' என்றது-கீழ்சசெய்யுளின் அநுவாதம். சுரிகுழல்தோகை-அடையடுத்த இருமடியாகுபெயர். "தெண்ணீர்வயல்தொண்டைநன்னாடு சான்றோருடைத்து" என்றவாறு நீர்வளம்மிக்குச் சான்றோரை மிகுதியாகவுடைய நாடாதலால், 'வார்புனற்றெண்டிரைத் தொண்டை நன்னாடு' என்றார். வேண்டுருமேவுவார்-காமரூபிகள். 'வேண்டுருமேவுவார்' என்ற அடைமொழி, 'மறைநாவலர்வேடமேயினர்' என்றதைச சாதிக்குமாறு கூறப்பட்டதாதலால், கருத்துடையடை கோளியணியாம்.

இனி, 'தண்டகநாடு' என்ற பாடத்திற்கும்-தொண்டைநாடென்றேபொருள்கொள்ளலாம்; முன்னொருகாலத்தில் தொண்டைநாட்டைத் தண்டகனென்னும் அரசன் ஆண்டதுபற்றி, அந்நாட்டிற்கு 'தண்டகநாடு' என்று பெயர்வந்த தென்பர். (தண்டகனென்ற அரசன் பார்க்கவமுனிவரது மகளைக் காதலித்ததனால் தான் அவியாகவும், தன்னுடையமந்திரி வேடனாகவும், தனது நாடாகிய தொண்டைநாடு காடாகவும் மாறுமாறு அம்முனிவரிடம் சாபமேற்று, அம்முனிவரையே வேண்டிக் கரிகாற்சோழன் அங்கு வருகையிற் சாபவிமோசனமுண்டாகும்படி அநுக்கிரகமும் பெற்றானென்பது வரலாறு.) "தண்டகநாட்டுறைதாபதர்," "தன்னடிபடுத்துமேலைத்தண்டகநாடுமுற்றும்," "தரைவிளங்கிய தண்டகநாட்டினில்" என்று காஞ்சிப்புராணத்தில் தொண்டைநாட்டின்பெயர் கூறப்படும் இடங்கள் பலவற்றில் 'தண்டகநாடு' என்றே கூறியிருப்பது காண்க. அன்றி, இப்பாடத்திற்குத் தண்டகாரணியமென்றே கொள்வோமெனின், "தண்டகத்தையும் தடவியேகினார்" என்று கீழ்க்கூறியிருத்தலாலும், தொண்டைநாடு கூறப்படாமல் விடுபடுதலாலும், ஏற்றதன்று. எமக்குக் கிடைத்துள்ள ஏட்டுப் பிரதிகளில், 'தொண்டைநன்னாடு' என இவ்வாறே பாடங் காணப்படுகின்றது. (௩௮)

[இதுமுதல் எட்டுக்கவிகள் - தொண்டைநாட்டின் வருணனை.]

௩௯. குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்தகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்புமருங்கெலாம்.

(இ-ள்.) மருங்கு எலாம் - (அத்தொண்டைநாட்டின்)இடம்முழுவதும்,—குன்று சூழ்ந்த கடத்தொடும் - மலைகள்சூழ்ந்த சாரல்களும்

[குறிஞ்சிநிலமும்], கோவலர் முன்றில் சூழ்ந்த படப்பையும்-இடையர்களது வீட்டுமுன்னிடங்களைச் சூழ்ந்துள்ள கொல்லைகளும் [முல்லை நிலமும்], மொய் புனல் சென்று சூழ்ந்த கிடக்கையும்-மிக்கநீர்வந்து நிறைந்துள்ள இடங்களும்[மருதநிலமும்], தெள் திரை மன்று சூழ்ந்த பரப்பும்-தெளிவான அலைகளைக் கொண்ட கடலையுடைய வெளியான இடங்களாற்சூழப்பெற்ற பரவியநிலங்களும் [நெய்தல் நிலமும்], (உள்ளன); (எ-று.)

ஏற்ற வினை, வருவித்து முடிக்கப்பட்டது. இதனால், அத்தொண்டைநாட்டில் நால்வகைநிலங்களும் இருத்தலைக் கூறினார். இவ்வாறு நால்வகை நிலங்களுமுடைமைபற்றியே, பூமிக்கு 'நானிலம்' என்று ஒரு பெயர் வழங்கும். கோவலர்—கோ வலர் எனப்பிரிந்து, பசுக்களைக் காத்தலில் வல்லவர் எனக்காரணக்குறி: இதனை, 'கோபாலர்' என்னும் வடமொழியின் திரிபு எனவுங்கொள்ளலாம். படப்பை-வரகு முதலியன விளைதற்குஉரியகொல்லை. மன்று-வெளியான இடம்.

'குன்றுசூழ்ந்ததடத்தொடும்,' 'சென்றுசூழ்ந்தவிடங்களும்,' 'திங்களூர், மன்று' என்று சிலபிரதிகள். (௩௯)

௪௦. சூலடிப்பலவின்சுளை தூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரேர்ச்
சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னந்துவைப்பன.

(இ-ள்.) குலம் மள்ளர்-கூட்டமான உழவர்கள், ஏர் கோல் அடிப்ப-ஏர் உழும்போது உழவுமாடுகளைக் கோலினாலடிக்கையில், தோல் அடிகிளை அன்னம்-தோலடிகளையுடைய கூட்டமான அன்னப்பறவைகள், வெரீஇ-பயந்து, சூல் அடி பலவின் சுளை தூங்கு தேன் சால் அடி தரும்-கருவை அடியிலேயுடைய பலாமரத்தினது [வேர்ப்பலாமரத்தில் தோன்றிய பழங்களது] சுளையினின்று பெருகுகின்ற தேன் பாய்ந்து உழவுசாலினிடங்களிலே யுண்டாக்கிய, சாலியின் வெள்முளை-செந்நெற்பயிரின் வெண்மையானமுளைகளை, துவைப்பன-கால்களால் மிதித்துத்துவைப்பனவாம்; (எ-று.)

உழவர்கள் உழுகையில் உழவுமாடுகளையடித்துத்துரத்த, அருகிலிருந்த அன்னப்பறவைகள் அதனாலஞ்சிச் சமீபத்திற் பலாச்சுளைகளின்தேன்பாய்தலினால் முளைத்துள்ள வயல்களின்மீது, ஓடவே, அவற்றிலுள்ள முளைகள் சிதையு மென்பதாம். இதனால், நீர்வளநிலவளங்கள் பெறப்படுதல் காண்க. இனி, இசசெய்யுளுக்கு-கூட்டமாகிய உழவர் கருவுடைய பலாமரத்தினது பழுத்த பழத்தில் மொய்த்த வண்டுகளை ஏரோட்டுகின்ற கோலால் ஓச்ச, அம்மரத்தின்கிளைகளிலிருந்த அன்னங்கள் அஞ்சி ஏர்சசாலடியில் முளைத்த நெல்லினது வெள்ளியமுளைகளைத் தோலுடையஅடிகளால் துவைப்பனவென்று பொருள்கூறுவாரு முளர். சூல்-கருப்பம்; இங்கே, பழத்தையுணர்த்தும். பள்ளர்-இங்கு, மருதநிலமாக்கள். கோல்-தாற்றுக்கோல். தோலடி-நீர்வாழ்பறவைகட்கு நீரில் நீந்துதற்குக் கருவியாக விரல்களினிடையே பரவிய தோல்களையுடைய பாதம்.

'குழுமள்ளர்,' 'அன்னந்துகைக்குமே' என்று பிரதிபேதம். (௪௦)

௪௧. செருகுறுங்கணிற்றேங்குவளைக்குல
மருகுறங்கும்வயன்மருங்காய்ச்சிய
ரிருகுறங்குபிறங்கியவாழையிற்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால்.

(இ - ள்.) செருகு உறும் கணின்-கூந்தல்வரையில் நீண்டுபொருந்திய (மகளிரது) கண்போன்ற, தேன் குவளை குலம் - தேனையுடைய நீலோற்பலமலரின் கூட்டம், அருகு உறங்கும் - பக்கங்களில் தங்கப்பெற்ற, வயல்மருங்கு-கழனிகளினிடங்களிலே,ஆய்ச்சியர் இரு குறங்கு பிறங்கியவாழையில்-இடைப்பெண்களது இரட்டையாகவுள்ளதொடைகள்போல விளங்கிய வாழைமரங்களிலே, குருகு உறங்கும் - நாரைகள் தூங்கும்;குயிலும் துயிலும்-குயில்களும் தூங்கும்;(எ-று.)-ஆல்-ஈற்றசை.

மகளிர்கண்ணுக்கும் தொடைக்கும் முறையே உவமையாகக்கூறப்படுகின்ற குவளைமலர்களையும் வாழைகளையும் உபமேயமாக்கிக்கூறியது-எதிர்நிலையணி; இவ்வணியினால், குவளைமலர் வாழை என்ற இவற்றைவிட மகளிரது கண்ணும் தொடையும் மிக்கசிறப்பினவென்பது பெறப்படும். தொடைக்கு வாழை-திரண்டு உருண்டு நீண்டு நெய்த்த வடிவில் உவமம். செருகுறுகண்-கூந்தல்வரையில் நீண்ட கண்:முடித்துச செருகப்படுதலால், கூந்தல் 'செருகு' எனப்பட்டது; செருகுஎனினும், சுருள்எனினும் ஒக்கும் முதனிலைத்தொழிலாகுபெயர்; செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயருமாம். இனி, செருகுறும்-(தூக்கத்தினால்) செருகுதல் பொருந்திய எனினும் அமையும். ஆய்சசியர்-முல்லைநிலத்து மகளிர். குறங்குபிறங்கிய, குயிலுந்துயிலும்-பிராசம்.

'செருகுறுங்களித்தேஙகுவளைக்குலம்,' 'வயலயலாய்சசியர்,' 'குறங்கிற்பிறங்கிய' எனவும் பாடஙகள் காணப்படுகின்றன. (௪௧)

௪௨. தெருவினார்ப்புறும்பல்லியந்தேர்மயில்
கருவிமாமழையென்றுகளிப்புறா
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகல
மருவினார்க்குமயக்கமுண்டாங்கொலோ.

(இ-ள்.) தெருவின் ஆர்ப்புறும் பல் இயம்-தெருக்களிலே ஆரவாரிக்கின்ற பலவகைவாத்தியங்களினொலியை, தேர்-கேட்டறிந்த,மயில்-மயில்கள், (அம்முழக்கத்தை), கருவி மா மழை என்று-(உலகம் நடத்தற்குத்) துணைக்காரணமான சிறந்த மேகத்தினிடியென்று மயங்கி, களிப்பு உறா-மகிழ்ச்சியை யடையமாட்டா; அன்னமும்-அன்னப்பறவைகளும்,பொருநர் தண்ணுமைக்கு-கூத்தரது மத்தளவோசைக்கு(அதனை மேகத்தின்இடியென்று மயங்கி), போகல-(அஞ்சி) விலகிசசெல்லமாட்டா; மருவினார்க்கு மயக்கம் உண்டாம் கொல் ஓ - எப்பொழுதும் நெருங்கிப்பழகுபவர்க்கு மயக்கமுண்டாகுமோ? (எ - று.)

மேகத்தினிடியோசையைக் கேட்டுக் களித்தல் மயில்கட்கும், அஞ்சுதல் அன்னப்பறவைகட்கும் இயல்பு. வாத்தியஙகளினோசை-மேகத்தினிடியையும், முழவினொலி-மேகத்தின் குமுறுதலையும் ஒக்கும். தொண

டைநாட்டில் வாத்தியங்களின்ஒலியைப் பலகால்கேட்டுப் பழகியிருத்தலால், அவ்வாறுதோன்றும் ஒலியை இது மேகத்தினொலியன்றென்று உண்மையறிதலால், மயில்கள் களிப்படையாவாயின; அவ்வாறே, தண்ணுமையொலியை அடிக்கடி கேட்டுப் பழகியிருத்தலால், முழவொலியைக் கேட்கும்போதெல்லாம் இது மேகத்தின் குமுறுதலன்றென்று உண்மையுணர்தல்பற்றி, அன்னப்பறவைகள் அஞ்சி விலகாவாயின; இவ்வாறு பறவைகட்கும் பகுத்தறிவுஉண்டானதற்குக் காரணம் மிக்க பயிற்சியே யென்பதாம். முதல் மூன்றடிகளிற் கூறியசிறப்புப் பொருள்களை ஈற்றடியிற்கூறிய பொதுப்பொருள் சாதித்து நிற்பது - வேற்றுப் பொருள்வைப்பணியின் பாற்படும்: இதனை வடநூலார் அர்த்தாந்தரந்யாஸாலங்கார மென்பர் பல் இயம்-தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி எனப் பலவகைப்படும் வாத்தியங்கள். பொருநர்தண்ணுமைக்கு-போர்வீரரது பேரிகையின் முழக்கத்திற்கு, அஞ்சி எனினுமாம். மயில் அன்னம் என்ற பால்பகாவஃறிணைப்பெயர்கள். களிப்புறு போகல என்ற பலவின்பால்முற்றுக்களைக் கொண்டுமுடிந்தன. 'கொல்' என்ற இடைசசொல் வினாப்பொருளைத்தருதலால், ஓகாரம்-அசைநிலை; (எ-று.)

'செருவினார்த்தெழு', 'அப்புறம்போகில' என்று சிலபிரதிகள். ()

சா௲. தேரைவான்றலைத்தெங்கிளம்பாளையை
நாரையென்றிளங்கெண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச
சேரையென்றுபுலம்புவதேரையே.

(இ - ள்.) தேரை வான் தலை தெங்கு இளம பாளையை-அலங்கரிக்கப்பட்ட தேர்போன்ற பெரிய [விரிந்த] தலையையுடைய தென்னைமரத்தின் இளமையான [விரியாத] பாளையை(க கண்டு),இளங கெண்டை-இளமையான கெண்டைமீன்கள், நாரை என்று நடுஙகுவ-(தஙகளைக் குததிக்கொல்லும்) நாரையென்னும்பறவையென்று நினைத்து அஞ்சுவன; தாரை வல் தலைதண் இள ஆம்பலை-கூர்மையான வலிய நுனியையுடைய குளிர்ந்தஆம்பலரும்புகளை(க் கண்டு),தேரை-தவளைகள்,சேரை என்று புலம்புவ-(தங்களைவிழுங்குஞ்)சாரைப்பாம்பென்றுநினைத்துவாய்விட்டுக்கதறுவன; (எ - று.)

விரியாத தென்னம்பாளைகள் நாரைப்பறவைகளையும், செவ்வல்லியரும்புகள் சாரைப்பாம்புகளின் தலையையும் வடிவத்தினால் ஒக்குமென்க. தென்னம்பாளையை இளங்கெண்டைகள் நாரையாகவும், ஆம்பலரும்புகளைத் தேரைகள் சாரைப்பாம்பின் தலைகளாகவும் எண்ணி அஞ்சிப் புலம்பியதாகக் கூறியது, மயக்கவணியின்பாற்படும். தென்னமரத்தின் விரிந்த தலைதேரின் தலைபோல உருவத்தினால் தோன்றுதல் இயற்கையாதலால், 'தேரைவான்றலைத்தெங்கு' என்றார்; உவமையணி. தேரை, ஐ-சாரியை. தேர் ஐ வான் தலை என்றுபிரித்து, முதிர்ந்த, அழகிய பெரிய தலைகளையுடையதெங்கு என்று உரைப்பாரு முளர். தாரை-கூர்நுனி. இச்செய்யுளின் பின்னிரண்டடியை "செங்கழுநீர்மொட்டையரவின் பசுந்தலையென்றஞ்சி-இரவெல்லாம், பிள்ளைக்குருகிரங்கப்பே

தைப்புள் தாலாட்டும்,வள்ளைக்குருநாடு" என்பதனோடு ஒப்பிடுக. செவ் வல்லியரும்புகள் பசிய புறவிதழ்களால்மூடப்பட்டு வலிமைபெற்றிருக் குமாதலால்,அதற்கு,வன்றலை'என்றஅடைமொழி கொடுக்கப்பட்டது.

'தேரைவென்றுயர்,' 'தேரைவன்றலை,' 'சேரைவன்றலை,' 'சீரை வன்றலை,' 'தெங்கின்வண்பாளையை,' 'ஆரைவன்றலையாம்பலரும்பினை' என்பன பாடாந்தரங்கள். (சங)

சச. நள்ளிவாங்குகடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைசினைபொரியாதவென்
றுள்ளியாமைமுதுகினுடைப்பரால்.

(இ - ள்.) நள்ளி வாஙகு கடை இள நவவியர்-நண்டுகளைப்பிடிக் கின்ற இளமையான மான்போன்ற கடைசிசசாதி மகளிர் —வெள்ளி வால் வளைவீசிய வெள் மணி-மிகவும வெண்ணிறமான சஙகஙகள் ஈன்ற வெண்மையான முத்துக்களை, புள்ளி நாரை பொரியாத சினை என்று உள்ளி-புள்ளிகளையுடைய நாரைகளது பொரிககப்படாத முட் டைகளாகுமென்று நினைத்து, ஆமை முதுகின் உடைப்பா-(அவற்றை உண்பதற்காக] ஆமைகளின் முதுகில் உடைப்பார்கள், (எ-று.)—ஆல்- ஈற்றசை.

கடைசியர் வயல்களில் நண்டுபிடிக்கையில் அஙகுக்கிடக்குஞ் சங குகளீன்ற முத்துக்களை நாரைப் பறவைகளின் முட்டைகளென்று நினைத்து, அம்முத்துக்களை ஆமைகளின் முதுகில உடைப்ப ரென்ப தாம்; மயக்கவணி. கடையிளநவவியா - உழததியா. கடையிளநவவி யர் நள்ளி வாஙகு வெண்மணி என்றுஎடுதது-உழத்தியா விருமபிக கையிலெடுத்த வெண்மையான முததுககளை யெனறு உரைப்பாரு முளர். ஆமையின்முதுகு கற்பாறைபோல வலிதாயிருததலால, கடை சியர் அஙகு முத்துக்களை யுடைப்பாராயினர். நவவி-மான. வெள்ளி, வால்-ஒருபொருட் பன்மொழி.

'சினைபொரியாமை,' 'சினைபொரியாவ,' 'பொலிசினையாகும்' எனறு பாடாந்தரஙகள். (சச)

சரு. சேட்டிளங்கடுவன்சிறுபுன்கையிற்
கோட்டதேம்பலவின்கனிக்கூனசுளை
தோட்டமைந்தபொதும்பிற்றூங்குதே
னீட்டமென்னசசென்றீயினமொய்ப்பன.

(இ-ள்.) சேடு இளங கடுவன்-மிகவும் இளமையான ஆண்குரஙகி னது, சிறு புல் கையில்-மிகவுஞ் சிறிய மகையிமிலயுள்ள, கோட்ட தேன் பலவின் கனி கூன் சுளை-கிளைகளிலுணடான இனிய பலாப்பழத்தி னது வளைவான சுளையில்,—தோடு அமைந்த பொதும்பரில் தூஙகு தேன் ஈட்டம் என்ன-இதழ்களையுடைய மலர்கள் நிறைநத சோலை களிலே மொய்க்கின்ற வண்டுகளின்கூட்டம்போல,—ஈ இனம் சென்று மொய்ப்பன ஈக்களின்கூட்டம் போய மொய்த்துக்கொள் வனவாம்; (எ-று.)

ஆண்குரஙகுகளின்கையிலேயுள்ள பலாசசுளையில் ஈக்கள்மொய்த் தற்கு - சோலைகளிலுள்ளமலாகளில வண்டுகள்மொய்த்தலை உவமை

கூறினர். 'ஈட்ட மங்கதிற்றேய்த்தினிதுண்ணுமால்' என்ற பாடத்திற்கு-சிறிய ஆண்குரங்குகள் தமதுகையிலுள்ள பலாசசுளைகளைச் சோலையிற்பெருகுந் தேன்பெருக்கில் தோய்த்து இனிதாக உண்ணு மென்று பொருளாம். சேட்டிளம், சிறுபுன்-ஒருபொருட்பன்மொழிகள். பொதும்பர்-மரச்செறிவு; சோலைக்கு, இலக்கணை.

'மென்சிறையியின மீட்டுமால்' என்று சிலபிரதிகள். (௪௫)

௪௬. செல்வரென்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரென்றுஞ்சுமடரைக்
கொல்வரென்றுங்கொடுப்பனரென்றுமவ்
வில்வரம்பினர்க்கீதேனுமீட்டதே.

(இ-ள்.) செல்வர் என்றும் - செல்வமுள்ளவரென்றும், வடகலை தென்தமிழசொல் வரம்பினர்என்றும்-ஸம்ஸ்கிருதம் தமிழ் என்கின்ற பாஷைக்கு எல்லையாகவுள்ளவ ரென்றும், சுமடரை கொல்வர் என்றும்-துஷ்டர்களை நிக்கிரகஞ்செய்பவ ரென்றும், கொடுப்பனர் என்றும்-(வறியவர்க்கு வரையாதுபொருள்) கொடுப்பவரென்றும், (பேர்பெற்றுள்ள), அ இல்வரம்பினர்க்கு-அந்தத்தொண்டைநாட்டிலே இல்லறவாழ்க்கை தவறாமலொழுகுஞ் சான்றோர்கட்கு, ஈ தேனும்-(வேண்டுவார்க்கு வேண்டியபொருளை வரையாது) ஈயுந்தன்மையுள்ள காமதேனுவேனும், ஈட்டதே-ஒப்பாகுமோ? [ஒப்பாகாதென்றபடி]; (எ-று)

தொண்டைநாட்டில் செல்வராயும் ஸம்ஸ்க்கிருத திராவிட பாஷைகளிற் பாரஙகதராயும் துஷ்டநிக்கிரகஞ் செய்பவராயுமுள்ள இல்வாழ்வாராகிய சான்றோர்க்குக கொடுக்குந்தன்மையிற் காமதேனுவும் ஒப்பாகாதென்பதாம். ஸம்ஸக்ருதம் ஆதியில் வடக்கே இமயமலைப் பிராந்தத்தில் காசிமுதலிய இடங்களில் மிக்குவழங்கியதனால், அதற்கு, 'வடமொழி' என்றும், அப்பாஷை நூல்கள் 'வடகலை' என்றும் பெயர் பெறும். சுமடர்-தீக்குணமுடையோர். தேனும்-தேனுவும் என்பதன் தொகுத்தல்; உம்மை-உயர்வுசிறப்பு.

இனி, 'இல்வரம்பினிறைவனையேத்துவார்' என்ற பாடத்துக்கு-இல்வாழ்க்கையி லிருந்துகொண்டே எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளைப் புகழ்ந்து தியானிப்பார்க ளென்று பொருளாம்.' 'கொடுப்பன ரென்றும்பே, ரில்வரம்பவர்க்கேயருமீட்டவால்' என்ற பாடத்துக்கு-கொடுப்பவரென்றும் பிரசித்தியையுடைய இல்வாழ்க்கையிலுள்ள இத்தொண்டைநாட்டுச சான்றோர்க்கு எவ்வகையிலும் உவமைப் பொருள்கள் கிடைக்கமாட்டா வென்க; இப்பொருளில் ஏய் அரும் ஈட்ட-ஈடுஏயரிய: விகுதிபிரித்துக்கூட்டல்.

'சுளிபட,' 'சுளிஞரை' என்றும் பாடாந்தரங்கள். (௪௬)

[இதுவும், அடுத்தகவியும் - ஒருதொடர்: வாநரவீரர் தொண்டை நாட்டைக்கடந்து சோழநாட்டிற் செல்லுதல்.]

௪௭. அன்னதொண்டைநன்ஞடுகடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினர்
செங்கெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார்.

(இ-ள்.) பொருவு இலர்-ஒப்பில்லாதவராகிய வாநரவீரர்,—அன்ன தொண்டை நல் நாடு கடந்து-(கீழ்க்கூறிய) அத்தன்மையான வளங்களையுடைய சிறந்த தொண்டைநாட்டைத்தாண்டி, - அகல்பொன்னி நாடு எய்தினர்-அகன்ற காவேரிநதிபாயுஞ் சோழநாட்டைச் சேர்ந்தவர்களாய்,—(அந்நாட்டில்), செந்நெலும் கரும்பும் கமுகும் செறிந்து இன்னல் செய்யும் நெறி-செந்நெற்பயிர்களும் கரும்புகளும் பாக்குமரங்களும் (போவதற்குக் கூடாதபடி)எங்கும் நெருங்கித்துன்பஞ் செய்கின்ற வழிகளில், அரிது ஏகுவார்-அருமையாகச் செல்வாராயினர்; (எ-று,)

காவேரிநதிபாயப்பெற்ற வளத்தாற் சோழநாடுமுழுதும் செந்நெற்பயிரும் கரும்புப்பயிரும் பாக்குமரங்களும் எங்குமநெருங்கிச செல்வார்க்குப் போகும்வழியும் கிடைக்க அரிதாகு மென்க.

'அன்னதண்டகநாடு' என்றும் பாடம்; முன்னமே இதற்குக்காரணங் கூறப்பட்டது. (சஎ)

சஅ. கொடிறுதாங்கியவாய்க்குழுநாரைவாழ்
தடறுதாங்கியகூனிளந்தாழையின்
மிடறுதாங்கும்விருப்புடைத்தீங்கனி
யிடறுவார்நறுந்தேனிழுக்குவார்.

(இ - ள்.) (வாநரவீரர்),—கொடிறு தாங்கிய வாய் குழுநாரை வாழ் தடறு-கதுப்புப்பொருந்திய வாயையுடைய கூட்டமானநாரைகள் வசிக்கின்ற நீர்க்கரைகளிலே, தாஙகிய-முளைத்துவளர்ந்துள்ள, கூன் இளந் தாழையின்-வளைவையுடைய இளமையான தென்னைமரத்தினது, மிடறு-கழுத்துப்பக்கம், தாஙகும்-சுமந்துகொண்டிருக்கின்ற, விருப்பு உடை தீம் கனி-விருப்பத்தையுண்டாக்குகின்ற இனிய பழுத்துக்கீழ் விழுந்த காய்களினால்,இடறுவார்-தடுக்கி விழுபவர்களும்,நறுந்தேனின் இழுக்குவார்-அங்குப்பாய்கின்ற தேன்பெருக்கினால் வழுக்கிவிழுவாருமாயினர்; (எ - று.)

வாநரவீரர் சோழநாட்டிற் செல்லுகையில் இடைவழியிலே முற்றிக் கீழ்விழுந்துள்ள தெங்கம்பழங்களிற் காலிடறியும், தேன்பெருக்கில் வழுக்கியும் வருந்திசசெல்லலாயின ரென்பதாம். இசசெய்யுள் - தென்னைமரமிகுதியையும், தேன்மிகுதியையும் விளக்கிய வீறுகோளணியாம். 'இன்னல்செய்யு நெறியரிதேகுவார்' என்று கீழ்க்கவியிற் கூறியதை, இங்கு வேறுவகையாக விளக்கினர். தடறு-மட்டையென்று கூறுவாருமுளர், (சஅ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - சோழநாட்டின் வருணனை.]

சகூ. குழுவுமீன்வளர்குட்டமெனக்கொளா
வெழுவுபாடலிமிழ்கருப்பேந்திரத்
தொழுகுசாறகன்கூனையினூழ்முறை
முழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே.

(இ - ள்.) கரு நீர் காக்கை-கருநிறமுள்ள நீர்க்காக்கைகள்,—குழுவும் மீன் வளர் குட்டம் என கொளா-கூட்டமாகத்திரளுந் தன்மை

புள்ள-மீன்கள் வளர்தற்கு இடமான குளமென்று நினைத்து,—எழுவு பாடல்இமிழ் கரும்பு எந்திரத்து ஒழுகு சாறு அகல் கூனையின்-(சுருதி கூட்டுதற்கு) எழுப்புகின்ற பாடல்போல (ஆலையாடும்போது) ஒலிக்கின்ற கரும்பாலையினின்று பெருகுகிற இரசம்நிறைந்த வாயகன்ற கூனிலே, ஊழ் முறை முழுகி-வரிசை வரிசையாக முழுகி, முளைக்கும்-வெளிக்கிளம்பும்; (எ - று-)

ஆலையாடிக் கருப்பஞ்சாறுநிரம்பின கூன்களை நீர்க்காக்கைகள் மீன்கள் நிரம்பிய குளங்களென்று மயங்கி அவற்றில் தமது உணவாகிய மீன்களைக் குத்தித்தின்பதற்காக மூழ்கிமூழ்கி இரையைப்பெறாது வெளிக்கிளம்பு மென்றவாறு; மயக்கவணி. ஆலையாடுகையில் உண்டாகின்ற ஓசை சுருதிகூட்டுதலை யொக்கு மென்க, எந்திரம்-யந்த்ரம் என்பதன் மரூஉ. கூனை-கருப்பஞ்சாறு காய்ச்சுதற்குஉரிய வாயகன்றதொரு கலம்.

'உழுதசாறு' என்று சிலபிரதிகள். (ச௯)

. ருo. பூநெருங்கியபுள்ளுறுசோலைக
டேனொருங்குசொரிதலிற்றேர்விலை
மீனெருங்குறும்வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களின்வைகுமால்.

(இ - ள்) பூ நெருங்கிய புள் உறு சோலைகள் தேன் ஒருங்கு சொரிதலின்-மலர்களில் நிறைந்து மொய்க்கின்ற வண்டுகள் மிகுதியாகப் பொருந்திய சோலைகள் தேனை அதிகமாகச் சொரிதலினால்;(அத்தேன் பெருக்கைக்கண்டு),—பல வானரங்கள்-(அசசோலையில் வாழ்கின்ற) பல குரங்குகள், தேர்வு இல-(உண்மையை) ஆராயாதனவாய்,—மீன் நெருங்குறும் வெள்ளம் வெரீஇ - மீன்கள்நிறைந்துள்ள நீர்வெள்ளமென்று அஞ்சி,மரஙகளின் வைகும்-மரங்களின்மீதேறி அங்குத்தானே வசிக்கும்; (எ - று.)—ஆல்-ஈற்றசை

சோலைகளிலுள்ளமலர்கள் தேனை மிகுதியாகச்சொரிதலினால் அத்தேன்பெருக்கை நீர்வெள்ளமென்று மாறுகக்கருதி அஞ்சி அங்குள்ள வாநரங்களெல்லாம் நிலத்திலிறங்காமல் மரங்களின்மேலே இருக்குமென்பதாம்:இதுவும்-மயக்கவணியே. இதனால் தேன்மிகுதி பெறப்படுதலால், வீறுகோளணி தொனிக்குமென்க. நீர்வெள்ளத்தைக்கண்டு அஞ்சுதல்,வானரங்களின் இயல்பு. பூநெருஙகிய'என்பதைச சோலைக்கு அடைமொழியாக்கி, 'புள்' என்பதற்குப் பறவைகளெனக் கொள்ளினுமாம். 'பூநெருங்கிய' என்ற,அடைமொழி-சோலைகள் தேனை மிகுதியாகச்சொரிதற்கு ஏற்றன என்ற கருத்தை விளக்குதலால்' கருத்துடையடை மொழியணி.

'பூநெருங்குவ,' 'தேனொருங்குதருதலிற்றேர்ந்து சாய்,' 'மீனெருங்குவ' என்று சிலபிரதிகள். (ருo)

ருக. தாறுநாறுவதாழைகடாழையின்
சோறுநாறுவதூங்குறுமாங்கனி
நாறுநாறுவநாறுவளர்க்குறுஞ்
சேறுநாறுவசெங்கழுநீரரோ.

(இ-ள்.) தாழைகள்-தாழைமரங்கள், தாறு நாறுவ-பூவின் குலைகள் தோன்றப்பெறுவன; தூங்குறு மாங்கனி - (தாழையினருகிலுள்ள மாமரங்களிற் பழுத்துத்) தொங்குகின்ற மாம்பழங்கள், தாழையின் சோறு நாறுவ தாழைமலர்களின் சுண்ணங்கள் படியப்பெற்று அந்தமணத்தையே வீசுவன; நாறு நாறுவ-(வயல்களில்)நாற்றுக்கள்விளங்குவன; நாறு வளர்க்குறும் சேறு-அந்நாற்றை வளரச்செய்கின்ற குழைசேறுகள், செங்கழுநீர் நாறுவ-(தம்மிடத்துமுளைத்து மலர்ந்துள்ள செங்கழுநீர் மலரின்தொடர்பால் அச) செங்கழுநீர்மலரின் நறுமணத்தையே வீசுவன;(எ - று.)—அரோ-ஈற்றசை.

தாழைமரமும் மாமரமும் ஒன்றற்குஒன்று அருகிலிருத்தலினால், தாழைமலரின் சுண்ணங்கள் படியப்பெற்று மாம்பழங்கள் அம்மணத்தைவீசும்படியும், நாற்றுக்கள்நன்குவளரப்பெற்ற குழைசேறுகள் தமது அருகில் செங்கழுநீரும் உடன்முளைத்திருத்தலால் அச்செங்கழுநீர்மலரின் மணத்தைப் பெறும்படியும் பெருமைவாய்ந்தது சோழநாடென்க; இங்கு, மாம்பழங்களும் சேறும்-முறையே, தாழைமலர்சசுண்ணத்தின் நறுமணத்தையும், செங்கழுநீர்மலரின் நறுமணத்தையும் பெற்றனவாகக் கூறியது-பிறிதின்குணம்பெறலணியின் பாற்படும். 'தாறுநாறுவதாழைகள்' என்பதற்கு-தென்னைமரங்கள் குலைகளினால் விளங்குவன என்று கூறுவாருமுளர்.

'தூம்பிழிமாங்கனி', 'தேம்பிழிமாஙகனி' என்பன - பாடாந்தரம். இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை. (௯க)

[வாநரவீரர் சோழசேரநாடுகளைக் கடந்துபாண்டியநாட்டையடைதல்.]

௯௨. அனையபொன்னியகன்புனனாடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினா
ரினியதென்றமிழ்நாடுசென்றெய்தினார்.

(இ - ள்.) வினையின் நீங்கிய பண்பினர் - தீவினையினின்று நீங்கிய நற்குணமுடையவர்களான வாநரர்கள்,-அனைய பொன்னி அகல் புனல் நாடு ஒரீஇ-அத்தன்மைத்தான காவேரிநதி பாயப்பெற்ற விசாலமாகிய நீர்வளமுள்ள சோழநாட்டைத் தாண்டி, மனையின் மாட்சி குலாம் மலை மண்டலம் மேயினார்-இல்லறத்தின் சிறப்புவிளங்குகின்ற மலைநாடாகிய சேரநாட்டைச் சேர்ந்தவர்களாய், (அங்குச் சீதையைக் காணப்பெறாமல்), இனிய தமிழ் தென் நாடு சென்று எய்தினார்-இனிமையான தமிழ் வழங்கப்பெற்ற தென்னாடாகிய பாண்டியநாட்டைச் சென்று சேர்ந்தார்கள்; (எ - று.)

காவேரிநதிபாயப்பெற்றுச செழுமை வாய்ந்துள்ளதனால், சோழநாட்டிற்கு 'புனனாடு' என்று ஒருபெயர். சேரநாட்டிலுள்ளவர் இல்லறவொழுக்கத்தில் தவறாது நடத்தலால்,அதற்கு'மனையின்மாட்சி குலாம்' என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. மலைமண்டலம் - மலைநாடு, சேரநாடு,

'மேவினார், ரினையதென்றமிழ்நாடு' என்று சிலபிரதிகள். (௯௨)

[பாண்டியநாட்டின் சிறப்பு.]

ருந. அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றாலுரையொக்குமோ
வெத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்துமுற்றலால்.

(இ - ள்.) எ திறத்தினும்-எல்லாவகையாலும், ஏழ் உலகும் புகழ்-ஏழுலகத்தாராலும் புகழப்படுகின்ற, முத்தும் - முத்துக்களையும், முத்தமிழும்-(இயல் இசை நாடகம் என்ற)மூவகைத்தமிழையும்,தந்து-(தன்னிடத்திலுண்டாக்கிக்) கொடுத்து, முற்றலால் - பெருமைபெறுதலினால்,—அ திருதகு நாட்டினை-செல்வவளம்விளங்குகின்ற அந்தப்பாண்டியநாட்டை, 'அண்டர் நாடு-தேவலோகமானது, ஒத்திருக்கும்—', என்றால்-என்றுகூறினால், உரை ஒக்குமோ - அசசொல் ஏற்புடையதாகுமோ? [ஏற்புடையதாகாது.] (எ - று.)

அந்தப்பாண்டியநாடானது முத்துக்களையும் முத்தமிழாகிய மூவகையமிருதங்களையும் தருகின்றதனால், ஒருவகையமிருதத்தைமாத்திரமே கொடுக்கின்ற தேவலோகத்தை 'புலவர்நாடு' என்ற பெயரொற்றுமையால் [புலவர்-தேவர்களும், வித்துவான்களும்,]அந்தப் பாண்டியநாட்டிற்கு ஒப்பாகுமென்று சொல்லுதல் சிறிதுந்தகாதென்றவாறு; ஏதுவணி. உரையொக்குமோ - "சொல்லொக்கும் பொருளொவ்வாவால்." "பூழியர்கோன்தென்னாடு முத்துடைத்து" என்றபடி பாண்டியநாடு முத்துக்குளிக்குங் கடற்றுறையை யுடைமையாலும், தமிழ்ச்சசங்கங்களைப் பெற்றிருத்தலினாலும், 'முத்து முத்தமிழுந் தந்துமுற்றலால்' என்றார்.

'எததிறததினுமெவ்வுலகத்தினும்,' 'எழுலகம்புகழ்,' 'தந்துமுற்றுமோ,' 'தந்துமுற்றுமே' என்பன பாடாந்தரஙகள். (ருந)

[அந்நாட்டிற் சீதையைக்காணமல் வாநரவீரர் வருந்துதல்.]

ருச. என்றதென்றமிழ்நாட்டினையெங்கணுஞ்
சென்றுநாடித்திரிந்தனரா யினுங்
குன்றுபோல வுயர்ந்தவர் பெருஞ் வந்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினார்
துன்றலோதியைக்கண்டிலர் துன்பினார்.

(இ - ள்.) திருந்தினார்-நேர்மையான மனமுடைய வாநரவீரர்கள்,- என்ற-என்றுசிறப்பித்துக்கூறப்பட்ட, தென் தமிழ் நாட்டினை - பாண்டியநாட்டை, எங்கணும் திரிந்து சென்று நாடி - எல்லாவிடங்களிலும் அலைந்து சென்றுதேடிப்பார்த்து,—துன்று அல் ஓதியை கண்டிலர்-நெருங்கிய இருள்போன்ற கூந்தலையுடைய சீதாபிராட்டியைக் காணாதவர்களாய், துன்பினார்-மிக்கவருத்தங்கொண்டு, பொன்றுவாரின் பொருந்தினர் போயினார் - இறப்பவர்போலச் சோர்வுபொருந்தியவராய்ச செல்லலானார்கள்; (எ-று.)

பாண்டியநாட்டிற்கு அப்பால் தேடிப்பார்ப்பதற்குத் தேசமொன்றுமில்லாமல் கடலே யிருத்தலால், சீதையைத்தேடும் ஊக்கங் குறைந்து வாநரவீரர் உயிரற்றவர்போலச் செயலற்றவராய்ச் செல்லலானார்களெனபதாம். (ருச)

[வாநரவீரர் மகேந்திரபருவதத்தைச் சேர்தல்.]

௫௫. வன்றி சைக்களி றன்னம கேந்திரக்
குன்றி சைத்தது வல்லையிற் கூடினார்
தென்றி சைக்கடற் சீகர மாருத
நின்றி சைக்குநெ டுநெறி நீங்கினார்.

(இ - ள்.) (வாநரவீரர்கள்), தென் திசை கடல் சீகரம மாருதம நின்று இசைக்கும் நெடு நெறி நீங்கினார்-தெற்குத்திக்கிலுள்ள சமுத்திரத்தினது நீர்த்திவலைகளோடு கூடிய தென்றற்காற்று இடைவிடாது வீசப்பெற்ற (பாண்டியநாட்டின்) பெருவழியைக் கடந்தவர்களாய்,— இசைத்தது வல்திசை களிறு அன்ன மகேந்திரம் குன்று-(பலராலும்) சிறப்பித்துக்கூறப்படுவதாகிய வலிய திக்கஜம்போன்ற மகேந்திரமலையில், வல்லையில் கூடினார்-விரைவிற் சென்றுசேர்ந்தார்கள்; (எ - று.)

பாண்டியநாட்டிற்சென்ற வானரவீரர் தென்கடற்கரையிலுள்ள மகேந்திரபருவதத்தைச சேர்ந்தார்களென்பதாம். தெற்கிலுள்ள மகேந்திரபருவதம் அஷ்டதிக்கஜங்களுள் தென்திசைக்களிறாகிய வாமனம் என்றதைப்போலுமென உத்ப்ரேக்ஷித்தார். இதனை-எதிர்நிலையணியெனக் கூறுவாருமுளர். இசைத்ததாகிய குன்றுஎன்க. திஶா, மஹேந்த்ரம், ஶீகரம், மாருதம்-வடசொற்கள். (௫௫)

ஆறுசெல்படலம் முற்றிற்று.

## பதின்மூன்றாவது

## சம்பாதிப்படலம்.

சம்பாதியினது செய்தியை யுணர்த்தும் பாக மென்பது பொருள். ஸம்பாதி-(இராவணன் சீதாபிராட்டியைக் கவர்ந்துசென்றபோது அவனோடு எதிர்த்துப்போர்செய்த) ஜடாயுவின் தமையன்; அருணனது குமாரன். இச்சொல் - நன்றாகப்பறப்பவனென்று அவயவப்பொருள்படும். வாநரவீரர் சீதாபிராட்டியைத் தேடிக் காணாமையாலும் சுக்கிரீவனிட்டதவணைநாள் கடந்துவிட்டபடியாலும் மகேந்திரமலையிற்சென்றபின் மிகவும் வருந்திப் பலபடியாகப்பேசிக்கொண்டிருத்தலும், அப்போது அவர்களதுவாக்கில்வந்த ஜடாயுவின்மரணத்தைக் கேட்டுச் சம்பாதி அவர்களெதிரில்வந்து அதன்காரணத்தை விசாரித்தலும், அந்தச்சம்பாதி தமதுமுன்னையவரலாற்றை வாநரர்க்குக்கூறுதலும், வாநரவீரர் தமதுவரலாற்றைச் சம்பாதிக்குக் கூறுதலும். பின்பு சம்பாதி தான் முன்புஇழந்த சிறகை ராமநாமோச்சாரணத்தாற்பெற்று வாநரவீரர்க்குச் சீதையிருக்குமிடத்தைத் தெரிவித்துவிட்டு அப்பாற் செல்லுதலும் முதலியன இப்படலத்திற் கூறப்படுகின்றன.

வேறு.

[வாநரவீரர் தென்கடலைக் காணுதல்.]

க. "மழைத்தவிண் ணகமென முழங்கி வானுற
இழைத்தவெண் டிரைக்கர மெடுத்தி லங்கையா
ளுழைத்தடங் கண்ணியென் றுரைத்திட் டூழின்வந்
தழைப்பதே கடுக்குமவ் வாழி நோக்கினார்.

(இ - ள்) மழைத்த விண் அகம் என முழங்கி-நீருண்டமேகத்தை யுடைய ஆகாயத்தினிடம்போலச் சத்தித்து, வான் உற இழைத்தவெள் திரை கரம் எடுத்து - வானத்தைப்பொருந்துமாறு வீசியெறிகின்ற வெண்மையான அலைகளாகிய கைகளை மேலெடுத்து, 'உழை தட கண்ணி-மான்போன்ற விசாலமான கண்களையுடைய சீதை, இலங்கையாள்-இலங்காபுரியிலிருக்கிறாள்,' என்றுஉரைத்திட்டு-என றுசொல்லி, ஊழின்வந்து அழைப்பதே கடுக்கும் - முறைமையாக எதிரேவந்து (வானரர்களாகிய தம்மை) அழைப்பதையே யொத்திருக்கின்ற, அ ஆழி-அந்தத்தென்கடலை, நோக்கினார்-(வாநரவீரர்கள்)கண்டார்கள்.

கடல் ஆரவாரிப்பது-சீதாபிராட்டி இலங்கையி லிருக்கின்றா ளென்று உரத்துக்கூறுவதுபோலவும், கடல் அலைகளைவீசிக்கொண்டு கரையிற்செல்வது-வாநரர்களை இங்கேவாருங்களென்று எதிர்கொண்டு கைகளைத்தூக்கி யழைப்பதுபோலவும் இருந்த தென்பதாம்; தன்மைத் தற்குறிப்பேற்றவணி; இவ்வணிக்கு 'வெண்டிரைக்கரம்' என்ற உருவக வணி அங்கமாய் நின்றது. 'முழங்கி' என்பது 'உரைத்திட்டு' என்பதை யும், 'திரைக்கரமெடுத்து' என்பது 'அழைப்பது' என்பதையும் முறை யேசென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோளாம்.

மழைத்தவிண்ணகமென முழங்கி - இடத்துநிகழ்பொருளின் தொழிலை இடத்தின்மேலேற்றிக்கூறிய உபசாரவழக்கு. இலங்கை யாள்-இலங்கையென்ற முதனிலையின் பெண்பாற்குறிப்புமுற்று. உழைக் கண்ணி-உவமைத்தொகை. கடுக்கும்-தற்குறிப்பேற்றவுருபு.

'வார்கட, லிழைத்தவெண்டிரைக் கரமெடுத்திலங்கையா,ளுழைத் தடங்கண்ணியென்னுமிழை யென்றோடிவந்து' என்றபாடத்துக்கு - கட லில்தோன்றுகின்ற அலைகளாகிய கைகளை உயரவெடுத்து, மான்போ லும் மருண்ட பார்வையையுடைய சீதாபிராட்டி என்னிடத்தி லிருக் கின்றனளென்று உரத்துச்சொல்லி இலங்கையென்னும்பெண் ஓடி வந்து அழைப்பதை யொத்திருத்தற்குக் காரணமான ஆழியை நோக் கினாரென்று பொருளாம். 'மாலாழி நோக்கினார்'என்பதும் பாடம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள்-பெரும்பாலும் மூன்றாஞ்சீரொ ன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (க)

[முன்பு ஏமகூடத்திற் பிரிந்த இரண்டுவெள்ளம் வானரசேனை அங்கு வந்துகூடுதல்.]

உ. விரிந்துநீரெண்டிசைமேவிநாடினீர்
பொருந்துதிர்மகேந்திரத்தென்றுபோக்கிய
வருந்துணைக்கவிகளாமல்குசேனையும்
பெருந்திரைக்கடலெனபபெயர்த்துங்கூடிற்றே.

(இ - ள்.) 'நீர்-நீங்கள், விரிந்து-பரவி, எண் திசை மேவி-எட்டுத் திக்குக்களிலுஞ் சென்று, நாடினீர்-(சீதாபிராட்டியைத்) தேடியவர்களாய், மகேந்திரத்து பொருந்துதிர்-மகேந்திரமலையில் வந்துகூடுங்கள்,' என்று-என்று சொல்லி, போக்கிய-(அங்கதன் முதலிய வானர வீரர்) அனுப்பின, துணை வரும் மல்கு கவிகள் ஆம் சேனையும்-(தமக்குத்) துணையாகவந்த நிறைந்த [இரண்டுவெள்ளககணககான] வானர சேனையும், பெருந் திரைகடல் என-பெரிய அலைகளையுடைய மற்றொரு சமுத்திரம்போல, பெயர்த்தும் கூடிற்று-மறுபடியும் (அங்கதன்முதலிய அவவானரவீரரோடு) வந்துசேர்ந்தது, (எ - று.)

"தெள்ளுநீருலகெலாந் திரிநதுதேடிநீ, ரெள்ளருமகேந்திரத் தெம்மிற்கூடும" என்று முன்னம ஏற்படுத்திய சஙகேதப்படி, பிரிந்து சென்ற வானரசேனை இப்பொழுது மகேநதிரமலையில் வநதுகூடிற் றென்பதாம்.

'மேவிமேன்மையால்', 'மயேந்திரத்து,' 'அருந்துணைக் கவிகளாமளவில்சேனை,' 'பெரிதுகூடிற்றே' என்பன பாடபேதம். (உ)

[வானரர்யாவரும் சீதாபிராட்டியைக் காணுமையால் வருந்திக்கூறத் தொடங்குதல்.]

ங. யாவருமவ்வயினெளிதினெய்தினார்
பூவருபுரிகுழற்பொருவில்கற்புடைத்
தேவியைககாண்கிலார்செய்வதோர்கிலார்
நாவுறக்குழறிடநவில்கின்றாரரோ.

(இ - ள்.) யாவரும்-வானரர் எல்லோரும்,—அ வயின் எளிதின் எய்தினார்-அவவிடத்து வருத்தமில்லாமல் வநதுசேர்நது, பூ வரு புரி குழல் பொருவு இல் கற்பு உடை தேவியை காண்கிலார்-தாமரைமலரில் தோன்றிய [இலககுமியின் அவதாரமாகிய] நுனிசுருண்ட கூந்தலையும் ஒப்பில்லாத பதிவிரதாதருமத்தையுமுடைய சீதாபிராட்டியைக் காணமல்,—செய்வது ஓர்கிலா - இனிசெய்யவேண்டியது (இன்ன தென்று) அறியாதவர்களாய், நா உற குழறிட-நாககு மிகவுங்குளற, நவில்கின்றார்-பேசலானார்கள்; (எ-று.)—அதனை, அடுதத இரண்டு கவிகளிற் காண்க. அரோ-ஈற்றசை.

பூவரு என்பது-மலரையணிந்த என்றும், பூமியினின்று தோன்றிய [பூ - பூமி] என்றும் பொருள்படும்.

'பூவருபொலங்குழல்,' 'நாவியல் குழறிட' என்பன - பாடாந்தரங்கள். 'தேவியைக்காண்கிலா செய்வதோர்கிலா' எனக் காண்கின்ற பாடம் இலக்கணமுடிபிற்கு மாறுபடும். (ங)

[இதுவும், அடுத்தகவியும் - வாநரவீரர் வருந்திக்கூறிய வார்த்தை.]

சு. *அற்றதுநாள்வரையவதியாட்சியு*
*முற்றிலமிராகவனுயிரும்பொன்றுமாற்*
*கொற்றவனாணையுங்குறித்துநின்றன*
*மிற்றதுநஞ்செயலினியென்றெண்ணினார்.*

(இ - ள்.) 'வரை நாள் அவதி அற்றது-(சுக்கிரீவமகாராஜன் நமக்குக்) குறித்திட்ட ஒருமாதத்தவணையும் கழிந்துவிட்டது; ஆட்சியும் உற்றிலம் - (சீதையைக் கண்டுபிடித்தலாகிய நமது) காரியத்தையும் முடித்தோமில்லை; (இதனையறிந்தால்), இராகவன் உயிரும் பொன்றும்-இராமபிரானது) உயிரும் ஒழியும்; கொற்றவன் ஆணையும் குறித்து நின்றனம் - சுக்கிரீவமகாராஜனது கட்டளையையும் மனத்திற்கொண்டு நின்றோம் [அவன்கட்டளைப்படியே முழுதுந்தேடினோம்]; இனி நம் செயல் இற்றது-இனிமேல் நாம்செய்வதற்கு உரிய தொழில் ஒன்றுமில்லை,' என்று - என்றுசொல்லி, எண்ணினார்-மனத்திற் பலவாறாகக் கவலைகொண்டார்கள், (வானரர்கள்) (எ-று)—ஆல்-ஈற்றசை.

இனி இற்றது - தெளிவினால் வந்த காலவழுவமைதி. 'அற்றது சொன்னநாளவதி,' 'காட்சியும்,' 'ஆட்சியுமுற்றிடும்,' 'உயிருமொன்றுநம்' என்பன பாடாந்தரங்கள். (சு)

ரு. *அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்*
*மருந்தருநெடுங்கடுவுண்டுமாய்துமோ*
*திருந்தியதியாததுசெய்துதீர்துமென்*
*றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார்.*

(இ-ள்.) '(கிட்கிந்தைக்குமீண்டுசெல்லாமல் இஙகிருந்தவாறே), 'அருந்தவம் புரிதுமோ-(செய்வதற்கு) அருமையான தவத்தைச் செய்வோமோ? அன்னது அன்றுஎனின் - அவ்வாறுசெய்யாவிட்டால், மருந்து அரு நெடுஙகடு உண்டுமாய்துமோ-மாற்றுமருந்தில்லாத கொடியவிஷத்தைப் புசித்து இறப்போமோ? திருந்தியது யாது அது செய்து தீர்தும் - (இவவிரண்டில்) தகுதியானது எதுவோ அதைச் செய்தேவிடுவோம்,' என்று-என்று சொல்லி, இருந்தனர் - (அம்மகேந்திரமலையில்) ஆலோசித்துககொண்டிருந்தார்கள்: (யாவரெனில்),—தம உயிர்க்கு இறுதி எண்ணுவார்-தமது உயிர்க்கு முடிவு நேருமாயின் (அதனைச் சிறப்பாக) மதிககின்ற வாநரர்கள்; (எ-று.)

தவணைநாள்கழிந்தபிறகும் சீதையைக்கண்டுபிடித்தலாகிய காரியத்தைநிறைவேற்றாது கடுந்தண்டனையுடைய சுக்கிரீவமகாராஜனது எதிரிற் செல்வதற்குப் பின்வாங்கியவர்களாய், வாநரர், இவவாறு எண்ணிக்கூறினரென்க. மருந்தருநெடுங்கடு - பரிகாரமில்லாத விஷம்; இஙகு, அருமை-இன்மைப்பொருளது: "தீண்டாவிடுதலரிது" என்னுமிடத்திற் போல. 'தம்முயிர்க்கிறுதியெண்ணுவார்' என்பதற்கு-தமது மரணத்தைச் சிந்திப்பவர்களாகிய வாநரர் எனப் பொருள்கூறின், 'அருந்தவம்புரிதுமோ' என்றதனோடு மாறுபடும்.

'திருந்திய்தொருவிதஞ்செய்து' என்று பிரதிபேதம். (ரு)

[அப்போது அங்கதகுமாரன் வாநரர்க்கு ஒன்று கூறத்தொடங்குதல்.]

சு. கரைபொருகடலயற்கனகமால்வரை
நிரைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுளதெனவுணர்த்தினு
னரசிளங்கோளரியயருஞ்சிந்தையான்.

(இ-ள்.) அரச இளங் கோள் அரி-வலிமையையுடைய ஆண்சிங்கம் போன்ற இளவரசனாகிய அங்கதன்,—கரை பொரு கடல் அயல்-(அலைகள்) கரையைமோதுகின்ற கடலுக்கு அருகிலுள்ள மகேந்திரமலையில், கனகம் மால் வரை நிரை துவன்றிய என-பெரியமேருமலைகள் வரிசையாக விளங்கியனபோல, நெடிது இருந்தவர்க்கு-மிகுதியாகி நிரம்பியிருந்த வாநரர்களை நோக்கி,—அயரும் சிந்தையான் - வருந்துகின்ற மனமுடையவனாய்,—உரைசெயும் பொருள் உளது என உணர்த்தினான்-கூறுதற்குஉரிய செய்தியொன்று உண்டு' என்றுகூறலானான்; (எ-று.)—அதனை, அடுத்த மூன்று கவிகளிற் காண்க

ஒவ்வொருவாநரனும் மேருமலைபோன்றிருத்தலால், 'கனகமால்வரை நிரைதுவன்றியவென' என இல்பொருளுவமையாகக் கூறினர். அரசிளங்கோளரி=கோளரிஇளவரசு: கோள்அரி-வலிமையையுடைய குரங்குகட்கு, இளவரசுஎனக் கூறுவாருமுளர். அங்கதன் இளவரசனாதலால், அயருஞ்சிந்தையுடன் கூறலாயின னென்க.

'திரைபொருகனைகடல்', 'நிரையவன்றுற்றென' என்று பாடாந்தரம். (சு)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர் : அங்கதன்வார்த்தை.]

எ. நாடிநாங்கொணருதுநளினத்தாளைவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
ருடவர்திலகனுக்கன்பினரெனப்
பாடவம்விளம்பினம்பழியின்மூழ்குவான்.

(இ - ள்.) (அங்கதகுமாரன் வாநரர்களைநோக்கி),—'நாம்—,—வான்முடிய உலகினை முற்றும் முட்டி-வானத்தினாற்கவியப்பட்ட நிலவுலக முழுவதும் சென்று; நாடி-தேடி(க் கண்டு), நளினத்தாளை கொணருதும்-தாமரைமலரிற் பிறந்த இலக்குமியின் அம்சமான சீதாபிராட்டியினிடத்திலிருந்து செய்தி கொண்டுவருவோம்,' என்று—, ஆடவர் திலகனுக்கு அன்பினர் என-புருஷோத்தமனாகிய இராமபிரானிடத்தில் அன்புடையவர்போல, பழியில் மூழ்குவான்-(பிறகு சொன்னபடிசெய்யாமல்) பழியில் மூழ்கும்பொருட்டு, பாடவம் விளம்பினம்-வீண்வாய்ப்பெருமை கூறினோம்; (எ-று.)

சீதாபிராட்டியைத்தேடுமாறு நம்மை அனுப்பியகாலத்தில், இராமபிரானிடத்துப் பக்தியுடையவர்போல நடித்துக் காரியத்தை முடித்தே தீர்வோமென்று நமதுவாக்கினால் டம்பமாகக்கூறியது நமதுபழிப்பிற்கே காரணமாமென்பதாம். "சொல்லாமலேபெரியோர்... ..செய்வர்" என்றவாறு முன்புசொல்லாமலே ஒருகாரியத்தைச் செய்துமுடித்தல் பெரியோர்களது தன்மையாயிருக்க, அவ்வாறுசெய்யாமல் "சொல்லியுஞ்செய்யார் கயவர்" என்றபடி கீழோரின்தன்மை நமக்கு

நேர்ந்துவிட்டதென்த் தம்மைப்பழித்தவாறு. நளினத்தாளைக் கொண ருதும் என்பதற்கு-சீதாபிராட்டியைக் கொண்டு வருவோ மெனக் கூறு தல், பொருத்தமன்று. வான்மூடியவுலகு - "வான்கவிந்தவையகம்," திலகம்-நெற்றிப்பொட்டு: ஆடவர்திலகன்-திலகம் நெற்றிக்கு விளக் கத்தைச் செய்வதுபோல ஆடவர்கட்கு விளக்கஞ் செய்பவன் என்ற படி. பாடவம் - படுவினிடத்திலுள்ள தன்மை; (படு-சமர்த்தன்:) வட மொழித்தத்திதாந்தநாமம். பாடு அவம் எனப் பிரித்து, நலிந்து பொருள்கூறுவாரு முளர்.

'முற்றுமோடி,' 'பழியின்மூழ்குவாம்' என்றும் பாடம். (எ)

அ. செய்துமென்றமைந்ததுசெய்துதீர்ந்தில
நொய்துசென்றுற்றதுநவலகிற்றில
மெய்தும்வந்தெய்தென்பதோரிறையுங்கண்டில
முய்துமென்றலிதோருரிமைத்தாகுமோ.

(இ-ள்.) செய்தும் என்று அமைந்தது செய்த தீர்ந்திலம்-(நாங்கள்) 'செய்வோம்' என்று ஏற்றுக்கொண்ட செயலைச் செய்துமுடித்திலோம்; நொய்து சென்று உற்றது நவலகிற்றிலம் - (தவணைக்காலத்திற்குள்) விரைவாகத்திரும்பிப்போய் நேர்ந்தவரலாற்றை[சீதையைக்காண முடி யவில்லையென்பதை]ச்சொல்லித் தெரிவிக்கவும் வலியற்றவரானோம்; வந்து எய்தும் என்பது ஓர் இறையும் கண்டிலம்-(தவணைகடந்தாலும்) காரியம்கைகூடுமென்பதற்கு ஒருசிறிதும் (வழி) அறிந்தோமில்லை; (இப்படியிருப்பதனால்), உய்தும் என்றால்-(இறவாது) உயிர்வைத்திருப் போமென்போமானால், இது—, ஓர் உரிமைத்து ஆகுமோ-தகுதியான தொரு செயலாகுமோ? [தகுதியற்றசெயலேயாமென்றபடி]; (எ-று.)

நாம்எண்ணிவந்தகாரியம் முடிவதற்கு எவ்வகையிலும் சிறிதும் வழியில்லை; தவணைக்குள் மீண்டுசென்று சேர்தலும் முடியாது: ஆகை யால், உயிர்மாய்வதே உறுதியென்று அங்கதன் அறுதியிட்டன னென்க. (அ)

கூ. எந்தையுமுனியுமெம்மிறையிராமனுஞ்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குறே
னுந்துவெனுயிரினைநுணங்குகேள்வியீர்
புந்தியினன்னதுபுகல்விராமென்றான்.

(இ-ள்.) (காரியத்தைமுடியாமலே தவணைகடந்தபிறகு மீண்டு சென்றேனானால்),—எந்தையும் முனியும்-எனது தந்தையாகிய சுக்கிரீவ மகாராஜனும் கோபிப்பான்; எம் இறை இராமனும் சிந்தனை வருந்தும்- நமக்கெல்லாந்தலைவனாகிய இராமபிரானும் மனம்வருந்துவான்; அ செய்கை காண்குறேன் - அச்செயல்களைக் (கண்ணாற்) காணுந்திறமி லேன்: (ஆதலால்), உயிரினை நுந்துவென்-(எனது) உயிரை மாய்த்துக் கொள்வேன்; நுணங்கு கேள்வியீர்-நுட்பமான நூற்கேள்விகளை யுடை யவர்களே! அன்னது-அச்செயலைக்குறித்து, புந்தியின் புகல்விர்-உமது அறிவினால் ஆராய்ந்து கூறுவீர், என்றான்-என்று கூறினான்; (எ-று.)— ஆம்-அசை.

சுக்கிரீவனது கடுந்தண்டனைக்கும் இராமபிரானது பெருவருத்தத்திற்கும் அஞ்சி, அங்குச்செல்லாமல் இங்குத்தானே யான் உயிர்துறத்தல் நலமென்று எண்ணுகின்றேன்;இவ்விஷயத்தில் உங்களதுகருத்தை ஆலோசித்துச்சொல்லுங்களென்று அங்கதன் மற்றையோரிடங்கூறினனென்க. நுந்துதல் வெளிச்செலுத்துதல். கேள்வி - கேட்கவேண்டிய நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்.'அன்னதுபுகல்விர்' என்பதற்கு-(நீங்கள் இங்கிருந்து மீண்டுபோய்ச் சுக்கிரீவமகாராஜனிடத்தும் இராமபிரானிடத்தும்) எனது மரணத்தைச் சொல்லுங்களென்றுமாம். (க)

[இதுவும், அடுத்தகவியும் - ஜாம்பவானது மறுமொழி.]

கo. விழுமியதுரைத்தனைவிசயம் வீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினா
யழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினான்.

(இ - ள்.) விசயம் வீற்றிருந்து எழுவொடும் மலையொடும் இகலும் தோளினாய்-பராக்கிரமம்மிக்கு இருப்புத்தூண்களோடும் மலைகளோடும் ஒப்பாகின்ற தோள்களையுடைய அங்கதகுமாரனே!--விழுமியது உரைத்தனை-சிறப்புடையதாக ஒருவார்த்தை சொன்னாய்;(நீ இறந்துபட்டால்), இருந்து அழுதுமோ-(யாங்கள்) இங்கிருந்தவாறே புலம்புவோமோ? (அல்லது), நம் அன்பு பாழ்பட சென்று தொழுதுமோ - எமது அன்பு அடியோடு ஒழியுமாறு மீண்டு சென்று (சுக்கிரீவ மகாராஜனிடத்திலும் இராமபிரானிடத்திலும் உனதுசெய்தியைத்) தொழுதுசொல்வோமோ? என-என்றுகூறி, சாம்பன் ஜாம்பவான், சொல்லினான்-(மீண்டும்) சொல்வானாயினான்; (எ-று.)

'விழுமிய துரைத்தனை' என்றது-எமக்கெல்லாம் இளவரசனாகியநீ இறப்பேனென்பது சிறிதுந்தகாதென்றவாறு; பிறகுறிப்பு·எதிர்மறையிலக்கணை. 'விழுமியது' என்பது-விழுமம் என்னும் உரிச்சொல்லடியாப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும் பெயர். நீ இறந்தபிறகு நாங்களும் உடனிறவாமற் சென்று செய்திகூறுவதென்பது, எங்களது அன்பில்லாமையைக் காட்டுமென்பான், 'அன்புபாழ்படத் தொழுதுமோ' என்றான்.ஓகாரங்கள்·விகற்பத்தோடு எதிர்மறைப்பொருளன; நீ இறந்தபிறகு நாங்கள் அழுதுகொண்டிருத்தலும்,இங்கிருந்து சென்று தொழுது செய்திகூறுதலும் தகுதியன்று என்றவாறு. (கo)

கக. மீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநலமெனவலித்தனை
யாண்டகையரசிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமால்.

(இ - ள்.) ஆண் தகை அரசு இளங் குமர-ஆண்மைக் குணமுடைய இளவரசனான அங்கதகுமாரனே! மீண்டு இனி ஒன்று நாம் விளம்ப மிக்கது என்-(யாங்கள்) திரும்பிச்சென்று சொல்வதற்குத் தான் என்ன செய்தி உண்டு? [ஒன்றுமில்லை யன்றோ!] (ஆதலின், மாண்டு உறுவது

நலம் என வலித்தனம்-(யாங்கள்) இறந்தொழிவதே நலமென்று உறுதி கொண்டோம்; அன்னது வேண்டலின்-அவ்வாறு (நாங்கள்)விரும்பின படியால், நின் உயிர்க்கு உறுதி வேண்டும்-உனது உயிர்க்கு அழிவின்மை அவசியமாமென்று; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

சீதையைத்தேடிக்காணமுடியாமையால் நாங்கள்மீண்டுபோய்ச் சொல்வதற்கும் ஒன்றுமில்லை; ஆகையால், நாங்கள் இறந்தொழிவதே உசிதமென்று தோன்றுகின்றது; ராஜகுமாரனும் இளவரசனுமிருத்தலால், நீ உயிருடன் வாழ்வது இன்றியமையாததாகுமென்று ஜாம்பவான் கூறினனென்க.

'அன்னது வேண்டினன்' என்றும் பாடம். இச்செய்யுளையடுத்து, பதினேழாங்கவியாகிய "நீயுநின்றாதையும்" என்ற தொடக்கத்துச்செய்யுள் சிலபிரதிகளிற் காணப்படுகின்றது. (கக)

[இதுமுதல் நான்குகவிகள் - அங்கதன் வார்த்தை.]

கஉ. என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர்குவவுத்தோளினீர்
பொன்றினீர்மடியயான் போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ.

இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்.) என்று அவன் உரைத்தலும்-இவ்வாறு ஜாம்பவான் கூறியவுடனே, இருந்த-அதனைக்கேட்டிருந்த, வாலி சேய் - வாலியின்குமாரனான அங்கதன்,—(மற்றையோரை நோக்கி), குன்று உறழ்ந்து என வளர் குவவுதோளினீர்-மலைகள் ஒப்பென்று சொல்லும்படி வளர்ந்த திரண்டதோள்களையுடையவர்களே! நீர் பொன்றி மடிய-நீங்கள்யாவரும் இங்கே இறந்தொழிய, யான் போவன் எல்-யான்மாத்திரம்(உயிருடன்) மீண்டுசெல்வேனானால், அது—, நன்றதோ-நன்றாயிருக்குமோ? உலகமும் நயக்கல் பாலதோ-(எனது அசசெய்கை)உலகத்தாரால் விரும்பத் தக்கதாகுமோ? (எ-று.)—இசசெய்யுளிலுள்ள 'வாலிசேய்' என்ற எழுவாய், 'என மறித்துங் கூறுவான்' என்ற அடுத்த செய்யுளில் முடியும்.

"உலகமென்ப துயர்ந்தோர்மாட்டே" என்பவாதலால், இங்கு, 'உலகம்' என்பது-உயர்ந்தோரையுணர்த்துமென்னலாம். நன்றது, அது-பகுதிப்பொருள் விகுதி.

'உலகுளோர் நகைக்க நாணுமால்' என்று சிலபிரதிகள். (கஉ)

கந. சான்றவர் பழியுரைக் கஞ்சித் தன்னுயிர்
போன்றவர் மடிதரப் போந்து ளானென்
வான்றபே ருலகுளோ ரறைதன் முன்னம்யான்
வான்றொடர் குவெனென மறித்துங் கூறுவான்.

(இ-ள்.) 'சான்றவர் பழி உரைக்கு அஞ்சி தன் உயிர் போன்றவர் மடிதர-பெரியோர்கூறும் பழிமொழிகட்குப்பயந்து(உடன்வந்த)தினது உயிரோடொத்த நண்பர்கள் யாவரும் உயிர்மாயவும்; போந்துளான்-(இவன்மாத்திரம் இறவாமல் உயிருடன்)வந்துசேர்ந்தான்,' என-என்று,

ஆன்றபேர் உலகு உளோர் அறைதல்முன்னம் விசாலமான பெரிய உலகத்திலுள்ளோர் (பழித்துக்) கூறுவதற்குமுன்னமே [பழித்துக்கூறுதற்கு இடமில்லாமலே], யான் வான் தொடாகுவென்-நான் (இறந்து) மேலுலகஞ்செல்வேன்', என-என்றுசொல்லி, மறித்தும் கூறுவான் - மீண்டுஞ்சொல்வானாயினான்; (எ-று.)—அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

மீண்டுசென்றால், 'வாயினால் டம்பமாகக்கூறி ஏற்றுக்கொண்ட காரியத்தை முடியாமல் வாளா மீண்டனரே'' என்று பெரியோர்கள் பழிக்கும் பழிப்பிற்குப் பயந்து, உயிர்போன்ற நண்பர்யாவரும் உயிர்விடவும், இவன்மாத்திரம் அவவாறு அசசஞ்சிறிதுமின்றி மீண்டான் என்ற உலகத்தாரது பழிசசொலலுககுச சிறிதும் இடமில்லாமல் முந்துற உயிர்மாய்வே னென்று அஙகதன் கூறின னென்க.

'போனறவர்பொன்றயான்,'' அறைதன்முன்னமே' எனவுமபாடம்.

வேறு.

கச. எல்லைநம் மிறுதி யாய்க்கு மெநதைக்கும யாவ ரேனுஞ்
சொல்லவுங் கூடுங் கேட்டாற் றுஞ்சவு மடுக்குங் கண்ட
வில்லியு மிளைய கோவும் வீவது திண்ண மச்சொன்
மல்லனீ ரயோத்தி புக்கால் வாழவரோ பரதன் மற்றோர்.

இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்) (சென்று செய்தி சொல்வதற்கும் ஒருவருமின்றி ஒருஙகே நாம் எல்லோரும் இங்கே இறந்தொழிந்தால்),—நம் இறுதி எல்லைநமது இறத்தலாகிய ஆயுளின்முடிவை [நாம் மாண்டுபோகுஞ்செய்தியை], யாய்க்கும்-எனது தாயாகிய தாரைககும், எந்தைககும் - எனது தந்தையாகிய சுக்கிரீவமகாராஜனுக்கும, யாவர் எனும சொல்லவும் கூடும்-வேறுயாராவது சொல்லவுஙகூடும; கேட்டால்-(அதனைக) கேட்டறிந்தால், துஞ்சவும அடுக்கும்-(அதனால் அவர்கள்)மாண்டுபோகவுங கூடும்; கண்ட-(நமது மரணததினால் சுககிரீவனும் தாரையும் இறந்த அசசெய்தியைக்) காணகின்ற, வில்லியும் - விலலாளனை இராமபிரானும், இளைய கோவும்-இளைய பெருமாளான இலக்குமணனும், வீவது-(தாங்களும்) இறப்பது, திண்ணம-நிச்சயம்; அ சொல் மல்லல் நீர அயோத்தி புக்கால்-(ராமலக்ஷ்மணர்இறந்த)அசசெய்தி வளப்பமுடைய நீர்நிறைந்த அயோத்தியாபுரியிற் சேர்ந்தால், பரதன் மற்றோர வாழ்வரோ-பரதனும் மற்றையோரும் வாழ்வார்களோ? [உடனே உயிர்மாய்வ ரென்றபடி]; (எ - று.)

• தம்மால் சுக்கிரீவனுக்கும் தாரைக்கும், அதனால் ராமலக்ஷ்மணர்க்கும், அதனால் பரதன்முதலியோர்கும் மரணசஙகையைக் கூறியது-காரணமாலையணியின்பாற்படும். சாதலை 'துஞ்சுதல்' எனறது, மஙகலவழக்கு. துஞ்சுதல்-தூஙகுதல்: மீளவும் எழுந்திராத பெருந்தூக்கம்.

"'சொல்லவுங்கூடுமென்றே துஞ்சவுந்தோன்றுந்தன்மை', 'வீயவுமடுக்குமிக்க,' 'அயோத்திவாழுமாககளும் வாழ்வதன்றால்' என்பன பாடாந்தரங்கள்.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஆறுசெல்படலத்தின் உகூ-ஆங்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கச)

கரு. பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூருரு
சரதமேமுடிவாகெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்கவிளக்கினாலுலகத்தியார்க்குங்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான்.

(இ-ள்.) பரதனும்—, பின் உளோனும்-அவனது பின்பிறந்தவனாகிய சத்துருக்கனனும், பயந்து எடுத்தவரும்-(இராமன்முதலிய நால்வரையும்)பெற்றெடுத்த தாய்மாரான(கௌஸல்யை சுமித்திரை கைகேயி என்ற) மூவரும், ஊரும்-அயோத்திமாநகரத்துச்சனங்களும், முடிவர்-(ஒருங்கே) இறப்பார்கள்; சரதமே-இது சத்தியமே! கெட்டேன் - ஆ! கெடுவேன்!! சனகி என்று உலகம் சாற்றும் விரதம் மா தவத்தின்மிக்க விளக்கினால் - ஜாநகியென்று உலகத்தாராற்சொல்லப்பட்ட விரதத்தோடுகூடிய பெருந்தவத்தினாற் சிறந்துள்ள விளக்குப்போன்றவளான ஒருமகளினால், உலகத்து யார்க்கும் கரைதெரிவு இலாத துன்பம் விளைந்த ஆ உலகத்திலே எல்லார்க்கும் கரைகாணமுடியாத பெருந்துன்பம் வந்துநேர்ந்தது என்னவியப்பு! என கலுழ்ந்தான்-என்றுவருந்திக் கூறினன், (அங்கதன்); (எ - று.)

பரதன் என்றது கீழ்ச்செய்யுளின் அநுவாதம். 'பின்னுளோனும் பயந்தெடுத்தவரும் ஊரும்' என்றது-கீழ்க்கவியில் 'மற்றோர்' என்று தொகுத்துச் சுட்டியதன் வகுத்துக்காட்டல். ஊர் - ஊரிலுள்ளார்க்கு இடவாகுபெயர். சீதை பிறந்தகுலத்திற்கும் புகுந்தகுலத்திற்கும் விளக்கஞ்செய்பவளாதலால், அவளை 'விளக்கு' என்றார். இச்செய்யுளில் தோன்றும் அவலச்சுவை [கருணாரஸம்], பாராட்டத்தக்கது. (கரு)

[அதுகேட்டு, ஜாம்பவான் கூறத்தொடங்குதல்.]

கசு. பொருப்புறழ் வயிரத் திண்டோட் பொருசினத்தாளிபோல்வான்
றரிப்பிலா துரைத்த மாற்றந் தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையே விளைத்த போல நெஞ்சமு மறுகக் கேட்டு
விருப்பினா லவனை நோக்கி விளம்பின னெண்கின் வேந்தன்.

(இ - ள்.) பொருப்பு உறழ் வயிரம் திண் தோள் பொரு சினத்து ஆளிபோல்வான் - மலையையொத்த உறுதியான வலிய தோள்களையுடைய போர் செய்தற்குஉரிய கோபத்தைக்கொண்ட சிங்கம்போன்றவனாகிய அங்கதன், தரிப்பு இலாது-மனம்பொறாமல், உரைத்த-சொல்லிய, மாற்றம்-வார்த்தையானது, தடுப்பு அருந் தகைத்தது ஆய நெருப்பையே விளைத்த போல நெஞ்சமும் மறுக-தடுக்கமுடியாததன்மையையுடையதாகிய பெருநெருப்பை மூட்டியதுபோல மனத்தைக்கலங்கச்செய்ய, கேட்டு (அதனைக்) கேட்டு,—எண்கின் வேந்தன் - கரடிகட்கு அரசனாகிய ஜாம்பவான்,—விருப்பினால் அவனை நோக்கி விளம்பினன்-மிக்க அன்போடு அவ்வங்கதகுமாரனைப்பார்த்துக்கூறலானான்;(எ-று.) —அதனை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

மறுக-பிறவினைப்பொருளில்வந்த தன்வினை. நெஞ்சமும், உம்மை-இசைநிறை.

'நெருப்பையுமுமிழ்வ,'' விருப்பினால்வாலிசேய்க்கு' என்றுபிரதிபேதம்.

வேறு

[இதுவும், அடுத்தகவியும்-ஜாம்பவான் அங்கதனை இறக்குக்கூடாமைக்குக் காரணங்காட்டித் தடுத்தல்.]

கஎ. நீயுநின் றாதையு நீங்க நின்குலத்
தாயம்வந் தவர்க்கொரு தநய ரில்லையா
லாயது கருதின மன்ன தன்றெனி
னாயக ரிறுதியு நவிலற் பாலதோ.

இதுவும், அடுத்த கவியும்-ஒருதொடர்.

(இ-ள்.) நீயும் நின் தாதையும் நீங்க-நீயும் உனது தகப்பனாகிய சுக்கிரீவனும் தவர, நின் குலம் தாயம் வந்தவர்க்கு - உனது குலத்தில் உரிமையுடையவராய்ப் பிறந்தவர்க்கு [இராஜவமிசத்தார்க்கு], ஒரு தநயர் இல்லை-வேறே ஒரு புதல்வரில்லை, ஆயது கருதினம்-அத்தன்மையை ஆலோசித்தே (நீ இறக்கக்கூடாதென்று) கூறினோம்; அன்னது அன்று எனின் - அப்படியல்லாவிட்டாலும், நாயகர் இறுதியும் நவிலல்பாலதோ-தலைவரது மரணம் வாயினாற் கூறுதற்கேனும் தக்கதோ? [தகாது என்றபடி]; (எ-று.)—ஆல்-ஈற்றசை.

உங்களது ராஜவம்சத்தில் இப்போது வேறேபுதல்வ ரில்லாமையாலும், எங்களைப்போன்ற சாமானியரது மரணமன்றி உங்களைப் போன்ற ராஜகுமாரரது மரணத்தைப்பற்றி வாயினாற்சொல்லுதலும் கூடாததலாலும், நீ உயிர்மாய்வேனென்றல் சிறிதும்தகாது; ஆகையால், யாங்களெல்லாரும் உயிரொழிய, நீ சுக்கிரீவனைசசென்று சேரவாயென்றவாறும். தாயம்-சொத்திலுள்ள உரிமை; பாத்தியதை.

'தாயம் வந்தவரொடும்,' 'நாயகனிறுதியு நவிறற்பாலதே' என்பன-பாடாந்தரம்.

இதுமுதற் பதினேழு கவிகள்-இப்படலத்தின் முதற்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (கஎ)

கஅ. ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழித்
தோகையைக்கண்டிலாவகையுஞ்சொல்லியெஞ்
சாகையுமுணர்த்துதிவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன்வரம்பிலாற்றலான்.

(இ-ள்.) போர் வாகையாய் - போரில்வெற்றிபெறுதற்குஉரியவனே!—ஏகும் நீ உயிருடன் போதற்குஉரியவனான நீ, அ வழி எய்தி-(இராமபிரானும் சுக்கிரீவ மகாராஜனும் இருக்கின்ற) அந்த இடத்தைச் சேர்ந்து, இ வழி தோகையை கண்டிலா வகையும் சொல்லி-இங்கே மயில்போன்ற சாயலையுடைய சீதாபிராட்டியைக் காணமுடியாத திறத்தையுந் தெரிவித்து, எம் சாகையும் உணர்த்துதி-எங்களது மரணத்தையும் அறிவிப்பாய்; சோகம் தவிர்தி - (இப்போது நீ கொண்டுள்ள) மனக்கவலையை மாற்றுவாயாக, என்றனன்-என்று கூறினான், (யாவனெனின்),—வரம்பு இல் ஆற்றலான்-அளவில்லாத பராக்கிரமசாலியான ஜாம்பவான்; (எ-று.)

கீழ் கஎ, கஅ-ஆஞ் செய்யுள்களிற்கூறியவாறு அங்கதகுமாரன் கொண்ட மனக்கவலையை ஜாம்பவான் தணிக்கவிரும்பி 'சோகம் நீ தவிர' என்றனன். நீ ஏகு-நீ (இங்குநின்று கிஷ்கிந்தகிரிக்குச்) செல்வாய் என்றுமாம். (கஅ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - அநுமான்வார்த்தை: இறவாமல் இன்னும் சீதையைத் தேடுதலே தக்கதென்றல்.]

கக. அவனவையுரைத்தபினனுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலங்
கவனமாண்டவரெனக்கருத்திலாரெனத்
தவனவேகத்தினீர்சலித்திரோவென்றான்.

(இ-ள்.) அவன் அவை உரைத்தபின்-அந்தசசாம்பவான் அவ்வார்த்தைகளை கூறியபிறகு,—அனுமன் சொல்லுவான் - அநுமான் கூறுவான்: —'தவனன வேகத்தினீர்-சூரியன்போன்ற வேகத்தை யுடையவர்களே! புவனம் மூன்றினும் ஒரு புடையில் புகஇலம்-(நாம் சீதையைத் தேடுதற்காக) மூன்றுஉலகஙகளுள்ளும் ஒருபக்கத்திலாவது முழுவதும போய்ப்பார்த்தோமில்லை; (இப்படியிருக்கவும் இவவளவிலேயே), கவனம்மாண்டவா என-ஓடிசசெல்லுதறகுஉரிய வல்லமை குறைநதவாபோலவும், கருத்து இலார் என (செய்யுநதொழிலைப்பற்றி) ஆலோசிககுநதிற மில்லாதவாபோலவும், சலிததிரோ-சலிப்படையக் கடவீரோ' எனறான்—; (எ-று.)

தேடவேணடியஇடம் இனனும்மிக அதிகமாயிருக்கவும், சிறிது தேடினவிடததுச சதாபிராட்டி கிடையாமையைககொண்டே முழுதுந்திரிந்து அலைந்து சலிப்படைந்தவாபோல நீஙகள் கிஞ்சித்தும் ஆலோசனையின்றி வெறுப்படைநது உயிாவிடததுணிவது சிறிதுந் தகுதியன் றெனறவாறும்.

'அவனுரைசெயதபின்,'' தவனமாண்டவரெனத் தருக்கிலாரெனக, கவனவேகத்து நீர் கழிதிரோ' என்று பிரதிபேதம. (கக)

உo. பின்னருங்கூறுவான்பிலத்தில்வானத்திற்
பொன்வரைக்குடுமியிற்புறத்துளண்டத்தி
னன்னுதற்றேவியைக்காண்டுநாமெனிற்
சொன்னநாளவதியையிறைவன்சொல்லுமோ.

(இ-ள்.) பின்னரும் கூறுவான்-(அநுமான்) மேலும் கூறுவானாயினன்:—பிலத்தில் - பாதாளலோகத்திலும, வானத்தில் - மேலுலகத்திலும், பொன் வரை குடுமியில்-பொன்மயமான மகாமேருவினது உச்சியிலும், புறத்து உள அண்டத்தில்-மற்றுமுண்டான அண்டஙகளிலும், நல் நுதல தேவியை நாம் காண்டும் எனின-அழகிய நெற்றியையுண்டய சீதாபிராட்டியை (இனி) நாம் தேடிக்காண்போமானால், இறைவன்-நமது அரசனாகிய சுக்கிரீவன், சொன்ன நாள் அவதியை-(தான் முதலிற்) கூறியுள்ளதவணைநாளெல்லை கடந்து விட்டதைப்பற்றி, சொல்லுமோ - (குற்றமாக எடுத்துக்) கூறுவானோ? (எ-று.)

சீதையைத்தேடிக்காணுதல் இன்றியமையாத் தொழிலாதலால், தவணைநாள் கடந்தமைக்குச சிறிதுங்கலங்காது மேற்கொண்டசெய

லில் ஊக்கங்கொள்ளுதலே தக்கது; அவ்வாறு செய்தொழிலை நாம் இனிது முடிப்பின்; கடுந்தண்டனையுடைய சுக்கிரீவனும் நமது செயலுக்கு வியப்பதன்றி, ஒரு கடுஞ் சொல்லையுஞ் சொல்லா னென்பதாம். 'புறத்துளவண்டத்தில்' என்பது-புறத்துளண்டத்தில்எனத்தொக்கது.()

உக. *நாடுதலேநலமின்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லதுபழியிற்றுமென்றான்.

(இ-ள்.) நாடுதலே நலம்-(இனிமேலும் சீதாபிராட்டியைத்) தேடிப் பார்த்தலே தகுதியாம்; இன்னும் நாடி-பின்னுந் தேடியும், (சீதா பிராட்டி அகப்படாவிட்டால்),—அ தோடு அலர் குழலிதன் துயரின் சென்று அமர்வீடிய சடாயுவை போல வீடுதல்-இதழ்களையுடைய மலர்கள் அலரப்பெற்ற கூந்தலை யுடையவளான அந்தசீதைக்கு நேர்ந்த துன்பத்திற்காக (இராவணனை எதிர்த்துப்போய்) யுத்தத்தில் உயிர் மாய்ந்த சடாயுவைப்போல (நாமும்) உயிர்விடுதல், பாடவம்-பெருமையாம்; அல்லது-அவ்வாறுசெய்யாது இப்போதே உயிரைவிடுவது, பழியிற்று ஆம்-பழிப்பையுடையதாகும், என்றான்-என்றுகூறி முடித்தனன், (அநுமான்); (எ-று.)

நம்மாலானவரையில் எல்லாவிடங்களிலுஞ் சீதாபிராட்டியைத் தேடிப்பார்த்தும் அவள் அகப்படாவிட்டால், அப்போது உயிர்விடுதல் சிறந்ததாகுமேயன்றி, இப்போதே உயிர்விடுவோமென்றல் சிறப்பன்று என்பதாம். சீதாபிராட்டியை மீட்பதற்காகத் தன்னாலானவரையிலும் பொருது பிறகு தனது உயிரைவிட்ட சடாயு-சீதாபிராட்டியைத் தம் மாலானவரையில் தேடி அகப்படாவிட்டால் பிறகு தமது உயிரை விடத்துணிந்த வானரர்க்கு ஏற்ற உவமையாவன். ஜடாயுவென்னும் வடசொல்லுக்கு - பலமயிர்கள்சேர்ந்ததுத்திரித்த ஜடைபோலப் பல வாய்மிக்குத்திரண்ட ஆயுளையுடையவ னென்றும், இறகில் உயிரையுடையவனென்றும் பொருள்கூறுவர். சூரியசாரதியான அருணனது புத்திரனும் சம்பாதியினது தம்பியுமாகிய இவன், தசரதசக்கரவர்த்திக்குப் பல உதவிகள் செய்து உயிர்த்தோழனாயிருந்தனன் இவன், தசரத குமாரர்களான ராமலக்ஷ்மணர்களைத் தனதுபுத்திரர்போலவேபாவித்து அன்புபாராட்ட, அவர்களும் தசரதசக்கரவர்த்தியினும் வயதுமுதிர்ந்த இவனைத்தமது பெரிய தந்தையாகப் பாவித்துவந்தார்களாதலால், வைஷ்ணவசம்பிரதாயத்தில் 'பெரியவுடையார்' என்று ஒருதிருநாமம். இவனுக்கு வழங்கும் அல்லது-ஒன்றன்பாற்குறிப்புவினையாலணையும் பெயர்.

* 'துயரிற்றேன்றமர்' என்று சிலபிரதிகள்.　　(உக)

[ஜடாயு இறந்ததைக் கேட்ட சம்பாதி வானரரிருந்தவிடத்தில் வருதல்.]

உஉ. என்றலுங்கேட்டனனெருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொல்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான்.

(இ-ள்.) என்றலும்-என்று (அநுமான்) கூறியவுடனே,—எருவை வேந்தன் - கழுகுகட்கு அரசனாகிய சம்பாதியானவன்,—தன் பின் துணை ஆகிய பிழைப்பு இல் வாய்மையான் பொன்றினன் என்றசொல்-தனதுபின்பிறந்த தம்பியும் தவறுதலில்லாத சத்தியத்தையுடையவனுமாகிய சடாயு இறந்தானென்ற சொல்லை, கேட்டனன்-கேட்டு, புலம்பு நெஞ்சினன்-வருந்துகின்ற மனமுடையவனாய், குன்று என் நடந்து-மலைபோல நடந்துசென்று, அவர் குறுகல் மேயினன்-அவ்வானரர்களைக் கிட்டலானான்; (எ-று.)

சடாயு இறந்தசெய்தியைக் கேட்ட சம்பாதி மிகவும்வருந்தி, அதனுண்மையை விசாரித்து அறிய விரும்பி அச்சொல்லைக் கூறிய அநுமானுள்ள இடமாகிய வானரர்களிருந்தவிடத்தைச சேரலானா னென்க. இறகுகள்தீந்துபோய்ப் பறக்கமுடியாதநிலையி லிருப்பவனாதலின், சம்பாதி பறந்துசெல்லாமல் நடந்துவரலாயின னென்க. அவர்க்குறுகல் - "இயல்பின் விகாரம்." சம்பாதியின் பெருவடிவுக்கு மலை உவமையாம். (உஉ)

[இதுமுதல் நான்குகவிகள் - சம்பாதியின் வருணனை.]

உஙு. முறையுடையெம்பியார்முடிந்தவாவெனாப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனிய
னிறையுடைக்குலிசவேலெறிதலான்முனஞ்
சிறையறுமலையெனச்செல்லுஞ்செய்கையான்.

இதுமுதல் ஐந்துகவிகள் ஒரு தொடர்.

(இ-ள்.) முறை உடை எம்பியார் முடிந்த ஆ-நீதிநெறியையுடைய எனதுதம்பி இறந்தவாறு என்னே, எனா-என்று, பறையிடு நெஞ்சினன்-பறையடிப்பதுபோலப் படபடக்கின்ற நெஞ்சையுடையவனும்,—பதைக்கும் மேனியன் - துடிக்கின்ற உடம்பையுடையவனும்,—இறை உடை குலிசம்வேல் எறிதலால் முனம் சிறை அறும் மலை என செல்லும் செய்கையான்-தேவேந்திரன் தான்கொண்டுள்ள வச்சிராயுதத்தை வீசியெறிந்ததனால் முற்காலத்திற் சிறகுகளறுபட்டுப்போன மலைபோலச் செல்லுந் தொழிலையுடையவனும்,—(எ-று.)

முன்னாளில் மலைகள் இறகுள்ளனவாயிருந்து பறந்து ஜனங்களின் மேல்விழுந்து அழித்துக்கொண்டிருந்ததனால், இந்திரன் அவற்றின் சிறகை யரிந்தானென்பது, புராணகதை சிறகுகளறுபட்ட மலை-சிறகுகள்தீயப்பெற்ற சம்பாதிக்கு ஏற்ற உவமையாம். எம்பியார் - உவப்பினால், ஆண்பால் பலர்பாலாகச்சொல்லப்பட்ட பால்வழுவமைதி. 'வேல்' என்றது, இங்கு ஆயுதமென்றமாத்திரமாய் நின்றது.

'முடிந்தவாறெனா,' 'எறிதலானெடும்,' 'எறிகலாதமுன், சிறையுடைமலையென' என்று பாடாந்தரங்கள். (உஙு)

உச. மிடலுடையெம்பியைவிட்டும்வெஞ்சினப்
படையுளராயினார்பாரில்யாரெனா
வுடலினைவழிந்துபோயுவரிநீருகக்
கடலினைப்புரையுறுமருவிக்கண்ணினான்.

(இ-ள்.) 'மிடல் உடை எம்பியை-வலிமையையுடைய எனது தம்பியை, வீட்டும்-அழிக்கவல்ல, வெம் சினம் படை உளர் ஆயினர்-கடுங்கோபமுடையஆயுதங்களைக் கொண்டவர், பாரில் யார்-இப்பூவுலகத்தில் யாவருளர்? [ஒருவருமில்லையே!],' எனு-என்று சொல்லி வருந்தி, உடலினை வழிந்து போய் உவரி நீர் உக கடலினை புரையுறும் அருவி கண்ணினன்-உடம்பிலிருந்து வழிந்துபோய்க் கடலினைச் சேருமாறு சமுத்திரத்தைப்போன்ற நீர்ப்பெருக்குக்களைப்பொருந்திய கண்களையுடையவனும்,—(எ-று.)

முன்னிரண்டடிகள் - ஜடாயுவினது பிறரால்வெல்லுதற்கு அரிய பராக்கிரமத்தை விளக்கும். தனது அன்புள்ள தம்பியின் மரணத்தை நினைந்து சம்பாதி கடல்போலக் கண்ணீரைப் பெருக்கினனென்க. நீர் நிரம்பிய பெருங்கண்களுக்கு-அவ்வாறுள்ள கடல் உவமையாம். உடலினை-உருபுமயக்கம்.

'வெஞ்சமம்,' வெஞ்சரம்,' 'படையுளர்யாரெனப்பகர்வதாயினன்,' 'படருளராயினர்போலும்பாரினில்,' 'பாரெனு,' 'உவரிநீத்துராய்,' 'உவரிநீருராய்' என்பன பாடாந்தரங்கள். (உச)

உரு. உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினன்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானழுங்கினன்புடவிமீதினின்
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான்.

(இ - ள்.) உழும் கதிர் மணி அணி உமிழும் மின்னினன்-சாணை பிடித்த ஒளிபொருந்திய இரத்தினங்களை யிழைத்துச்செய்த ஆபரணங்கள் வெளிவீசுகிற மின்னலை யுடையவனும், மழுங்கிய நெடுங் கணின் வழங்கு மாரியான் - ஒளிகுறைந்த (தனது) நீண்டகண்களிலிருந்து துளிக்கின்ற நீர்த்துளிகளையுடையவனும், புழுங்குவான் அழுங்கினன்-மனம் வருந்துபவனாய் வாய்விட்டுக்கதறுபவனும்,—(ஆனதனால்), புடவிமீதினில் முழங்கிவந்து இழிவது ஓர் முகிலும் போல்கின்றான்-பூமியின்மேல் குமுறிக்கொண்டே வந்துஇழிவதாகிய ஒருமேகத்தை யொத்தவனும்,—(எ-று.)

மின்னி யிடித்து நீர்சொரிகின்ற மேகம்-இரத்தினாபரணங்களினால் ஒளிவீசிக்கொண்டும், வாயினாற்கதறிக்கொண்டும், கண்ணீரைச்சொரிந்துகொண்டு மிருக்கின்ற சம்பாதிக்கு உவமையாம். இவன் மிகப்பெரிய வடிவத்துடன் பூமியின்மேல் நடந்துவருதலால், புடவிமீதினிலிழியும் மேகத்தை இல்பொருளுவமையாக்குறித்தார்; தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மிகவும் வயதுசென்றமையால், சம்பாதிக்குக கண் மழுங்குவதாயிற்று.

(மூன்றாமடி) 'அழுங்குரன்மிகுந்தெழுந்தரற்றினனவன்,' 'புவனிமீதினில்' என்பன பாடாந்தரங்கள். (உரு)

உசு. வள்ளியுமரங்களுமலையுமண்ணுறத்
தெள்ளருநுண்பொடிபடக்கடிதுசெல்கின்றான்
றள்ளுவன்கால்பொரத்தரணியிற்றவழ்
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான்.

(இ - ள்.) வள்ளியும் - கொடிகளும், மரங்களும்—, மலையும்-மலைகளும், மண் உற தெள்ளு நுண் பொடி பட-(மண்ணோடு) மண்ணாகும்படி தெள்ளிய சிறுபொடியாகுமாறு, கடிது செல்கின்றான்-விரைவாகச் செல்பவனும்,—தள்ளு வல் கால் பொர தரணியில் தவழ் வெள்ளி அம் பெரு மலை பொருவும் மேனியான்-(எல்லாவற்றையுந்) தள்ளவல்ல வலிய காற்றுமோதுதலாற் பூமியில் தவழ்ந்துவருகின்ற அழகிய பெரிய வெள்ளிமயமான கைலாசபருவதத்தையொத்த உருவமுடையவனும் (ஆகி),—(எ-று.)

இவன் நடந்துசெல்லுகையில் வழியிலுள்ள கொடிகளும் மரங்களும் மலைகளும் பொடியாயின வென, இவனது மிக்கவலிமையை வெளியிட்டவாறு. முன்னொருகாலத்தில் வாயுவுக்கும் ஆதிசேஷனுக்கும் விவாதம்நேர்ந்தபோது வாயுபகவான் தனது மிக்கவலிமையால் ஆதிசேஷனாற் பாதுகாக்கப்பட்ட மேருமலைச்சிகரங்கள் ஆயிரங்களுள் மூன்றை முறித்து அடித்துவந்ததை வனத்திற்கொண்டு, கவி, வெண்மைநிறத்துடனே வேகமாக நடந்துவருகின்ற சம்பாதிக்கு, கால் பொரத்தரணியிற்றவழ்வெள்ளியம்பெருமலையை உவமையாகக் குறித்தன ரென்னலாம். தன்மைத்தற்குறிப்பேற்றவணி. வள்ளி = வல்லி: முதலடி-முற்றுமோனை.

'தரணியிற்றனி,' 'தரணிக்கீத்தவவ்,' 'தரணிநீங்குறும்,' 'வெள்ளியம் பெருங்கிரிபோலும்' என்று பாடாந்தரங்கள். (உகூ)

[சம்பாதியை அரக்கனென்று கருதி மற்றவாநாவீரர் அஞ்சியோட அநுமான் எதிர்நிற்றல்.]

உஎ. எய்தினனிருந்தவரிரியல்போயினா
ரையனம்மாருதியழலுங்கண்ணினன்
கைதவநிசிசரக்கள்ளவேடத்தை
யுய்திகொலினியெனவுருத்துமுன்னின்றான்

(இ - ள்.) எய்தினன்-(இவ்வாறு சம்பாதி வாநரருள்ளவிடத்தில்) வந்துசேர்ந்தான்; (அவனைக்கண்டு), இருந்தவர் இரியல் போயினார் - அங்கிருந்தவாநரர் அஞ்சி நிலைகெட்டுச்சென்றார்கள்; ஐயன் அ மாருதி-அறிவிற்சிறந்தவனாகிய அந்தஅநுமான்மாத்திரம், அழலும் கண்ணினன்-நெருப்புப்பொறிபறக்கின்ற கண்களையுடையவனாய், (அந்தச்சம்பாதியைநோக்கி), 'கைதவ-வஞ்சனையுடையவனே! (நீ) கள்ளம் நிசிசரன் வேடத்தை-திருட்டுக்குணமுள்ள ராக்ஷஸரூபத்தையுடையாய்; இனி உய்தி கொல்-என்னெதிரில் அகப்பட்டபிறகு தப்பிப்பிழைப்பாயோ ?' என-என்று, உருத்து - கோபித்துச்சொல், முன் நின்றான் - அவனெதிரில்-நின்றான்; (எ - று.)

சம்பாதியின்பெருந்தோற்றத்தைக் கண்டு மற்றைவாநரர் அஞ்சியோட, அவனை இராவணனென்றே கருதி அநுமான் சினந்து சிலகூறி அவனை யெதிர்த்துநின்றன னென்க. 'கைதவ' என்று விளித்ததனால், இவனை இராவணனென்று அநுமான் கருதியமை பெறப்படும். கைதவம்-வஞ்சகம்; வடசொல்: அதனையுடையவன் கைதவன். நிசிசரன் என்ற வடசொல் - இரவில் வலிமைகொண்டு சஞ்சரிப்பவனென்ற

பொருள்படும். வேடத்தை-வேஷம் என்ற வடசொல்லின் திரிபாகிய வேடம்என்ற முதனிலையினடியாப்பிறந்த முன்னிலையொருமைக்குறிப்பு முற்று. ஐயன் நம் மாருதி என்று பிரித்தற்கும் இடமுண்டு. 'கைதவ நிசாசரகள்ளவேடங்கொண்டு' என்ற பாடம்-வஞ்சனையையுடைய அரக்கனே! (இவ்வாறு) திருட்டுத்தனமாகப்பட்சிரூபங்கொண்டு தப்பிப் பிழைக்கப் பார்க்கின்றாயோ? என்று பொருள்பட்டுச்சிறக்கும்.

'ஐயன்மாருதியவன்' எனவும் பாடம். (உஎ)

[அநுமான்,முகக்குறிப்பினால்சம்பாதியைக் குற்றமற்றவனெனஉணர்தல்.]

உஅ. **வெங்கதம்விசியமனத்தன்விம்மலன்**
**பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினன்**
**சங்கையிற்சழுக்கிலனென்னுந்தன்மையை**
**யிங்கிதவகையினலெய்தநோக்கினன்.**

(இ-ள்.) (அப்போது அநுமான்),—'வெம் கதம் வீசிய மனத்தன்-கொடியபாவத்தை நீக்கிய மனத்தையுடையவனும், விம்மலன் - மனவருத்தமுடையவனும், பொங்கிய சோரி நீர் பொழியும் கண்ணினன்-மிக்கமழைபோல நீரைசசொரிகின்ற கண்களையுடையவனுமா யிருக்கிறான்; (ஆதலால், இவன்), சங்கையில் சழக்கு இலன் - மனத்திலே சிறிதுங்குற்றமில்லாதவன், என்னும் தன்மையை-என்பதை, இங்கிதம் வகையினால் எய்த நோக்கினன்-முகத்தின்குறிப்புவகைகளால் நன்றாக அறிந்தான்; (எ - று.)

அநுமானனவன், முகக்குறிப்பினால் உண்மையையுணர்பவனாதலால், கோபமில்லாமலும் வியசனத்தைக்கொண்டும் கண்ணீரைப் பெருக்கியும் வருகின்ற சம்பாதியைக் கண்டு குற்றமற்றவனெனத் தெளிந்தனனென்க. இனி, இச்செய்யுளுக்கு-(சம்பாதியை இராவணனென்று கருதியதனால்) கடுங்கோபத்தை வெளிக்காட்டுகின்ற மனமுடையவனும், (சீதையைவஞ்சித்துக் கவர்ந்துசென்றனனே யென்று அவன்மீது) கொதிப்புக் கொண்டவனும், கடுங்கோபத்தினால் இரத்தத்தைக்கக்குகின்ற கண்களை யுடையவனு மாகிய அநுமான் இங்கித வகையினாற்(சம்பாதியைக்) குற்றமற்றவனென உணர்ந்தானென்று பொருள்கூறினும் பொருந்தும். 'சங்கையில்சழக்கிலன்' என்றபாடம், அளவில்லாதகுற்றத்தைச் செய்யாதவ னென்று பொருள்படும். இங்கிதம்-குறிப்பால்நிகழும் உறுப்பின் தொழில்.

'பொங்கியசோகத்தன் பொழிகண்ணீரினன்' எனவும் பாடம். ()

[சம்பாதி "சடாயுவைக் கொன்றவர் யார்?" என வினவுதல்.]

உகூ. **நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்**
**வாக்கினலொருமொழிவழங்கலாதமுன்**
**மூக்கருஞ்சடாயுவைத்தருக்கினலுயிர்**
**நீக்கினரியாரதுநிரப்புவீரென்றான்.**

(இ-ள்.) நோக்கினன் நின்றனன்-(அவ்வாறு சம்பாதியின் வருகையை) நோக்கிக்கொண்டு எதிர்நின்றவனும், நுணங்கு கேள்வியான்-நுட்பமான நூற்கேள்விகளையுடையவனுமாகிய அநுமான், வாக்கினல்

ஒருமொழிவழங்கலாத முன்-(தன்) வாயினால் ஒருசொற் கூறுவதற்கு முன்னமே,—(சம்பாதி), 'தாக்க அரும் சடாயுவை தருக்கினால் உயிர் நீக்கினர் யார் - (எவராலும்) எதிர்த்துப் போர்செய்யமுடியாத [மிக்க வலிமையையுடைய] ஜடாயுவைச் சூரத்தன்மையினாற் கொன்றவர் யாவர்? அது நிரப்புவீர்-அதனை விவரமாகக் கூறுவீராக,' என்றான்-என்று வினவினான்; (எ - று.)

'நிரப்புவீர்' என்ற பன்மை - அநுமானைக் கௌரவித்தற்காகக் கூறியதென்றாவது, மற்றை வாநரரையும் உளப்படுத்தியதென்றாவது கொள்ளத்தக்கது.

'தருக்கியாருயிர்' எனவும் பாடம். (௨௬)

[அநுமான் 'உன்னைத் தெரிவித்த பின்னரே உன்வினாவிற்கு விடையளிப்பேன்' என்றல்.]

௩௦. உன்னைநீயுள்ளவாறுரைப்பினுற்றதைப்
பின்னையானிரப்புதல்பிழைப்பின்றாகுமா
லென்னமாருதியெதிரெருவைவேந்தனுந்
தன்னையாந்தன்மையைச்சாற்றன்மேயினான்.

(இ - ள்.) 'உன்னை நீ உள்ள ஆறு உரைப்பின் - உன்னைப்பற்றி நீ உள்ளபடியே (உண்மையாகக்) கூறினால், உற்றதை பின்னையான் நிரப்புதல்பிழைப்பு இன்று ஆகும்-நடந்த வரலாற்றைப் பிறகு நான் விவரித்தல் தவறுதலில்லாததாகும்,' என்ன - என்று (அநுமான் சம்பாதியை நோக்கிக்)கூற,—மாருதி எதிர்-அந்த அநுமானிடத்தில், எருவை வேந்தனும்-கழுகரசனாகிய சம்பாதியும், தன்னை ஆம் தன்மையை சாற்றல் மேயினான்-தன்னைப்பற்றியுண்டாகிய வரலாற்றை [தான் இன்னானென்பதை]ச் சொல்லத்தொடங்கினான்; (எ-று.)—அதனை, அடுத்தகவியிற் காண்க. ஆல்-ஈற்றசை. முதலடி-முற்றுமோனை.

'உற்றது,' 'பிழைப்பின்றதலால்,' 'தன்மையைத்தெரித்தன்மேயினான்' என்பன பாடாந்தரம். (௩௦)

[சம்பாதி தன்னை இன்னானென்று அநுமானிடத்துத் தெரிவித்தல்.]

௩௧. மின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினா
யென்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினான்.

(இ - ள்.) (சம்பாதி அநுமானைநோக்கி), மின் பிறந்தால் என் விளங்குஎயிற்றினாய் - மின்னல்தோன்றினாற்போல் விளங்குகின்ற பற்களையுடையவனே!—என்பு இறந்தார்க்கு இடை எய்தலாத என் பின் பிறந்தான் துணைபிரிந்த பேதையேன்-உடம்புஒழிந்தவர்க்குச் சேராத எனக்குப்பின்பிறந்தவனாகிய துணையைப் பிரிந்த ஏழைமையுடைய நான், முன்பிறந்தேன்-(நீ இறந்தவனாகக்கூறுகின்ற அந்த ஜடாயுவுக்கு) அண்ணனாகப் பிறந்தேன்,' என-என்று, முடிய கூறினான்-(தான் இன்னானென்பதை) விளங்கக்கூறினான்; (எ-று)

ஜடாயு வென்பவன் எனது தம்பி: நான் அவனுக்கு முன்பிறந்தவன் என்றவாறு. பிறர்க்கு உதவிசெய்வதனிமித்தம் தனதுஉயிரையுங் கொடுத்தவனாதலால், ஜடாயு இறந்தானாயினும் இறவாதவனே யென்பான், 'என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்பின்பிறந்தான்' என்றான்; ஜடாயுவின்து பூதவுடம்பு அழியினும் புகழுடம்பு அழியாது நிலைநிற்றலால், இவ்வாறு கூறியது. "பைந்தாரெங்களிராமன்பத்தினி, செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன், மைந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ, டுய்ந்தானல்ல துலந்ததுண்மையோ" என மேலேகூறுதலுங்காண்க. என்பு-உடம்பிற்கு, ஆகுபெயர். இதனை "என்புமுரியர் பிறர்க்கு" என்றவிடத்துப் பரிமேலழகர்கூறிய உரையிலுங் காண்க. இளையான் இறக்கமூத்தோனாகிய யான் உயிரோடிருக்கின்றேனே யென்ற இரக்கந் தோன்றுமாறு, 'என்பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன் முன்பிறந்தேன்' என்றான்.

இனி, இசசெய்யுளுக்குப் பலவாறு பொருள்கூறுவரேனும்,பொருந்துமாயிற் கொள்க. (௩௧)

[அநுமான் ஜடாயு இறந்த காரணத்தைச் சம்பாதிக்குக் கூறல்.]

௩௨. கூறியவாசகங்கேட்டுக்கோதிலா
னூறிய துன்பத்தினுவரியுட்புகா
வேறினனுணர்த்தினனிகலிராவணன்
வீறியவாளிடைவிளைந்ததாமென்றான்.

(இ - ள்.) கூறிய வாசகம் கேட்டு-(சம்பாதி) சொன்ன வார்த்தையைக்கேட்டு,—கோது இலான்-குற்றமற்றவனாகிய அநுமான்,-ஊறிய துன்பத்தின் உவரியுள் புகா ஏறினன்-மிகக துன்பமாகிய கடலினுள் மூழ்கி ஒருவாறு தெளிந்தவனாய், இகல் இராவணன் வீறிய வாளிடை விளைந்தது ஆம் என்றான் உணர்த்தினன்-'பகைமைக்குணமுள்ள இராவணன் வீசிய வாளாயுதத்தால் (உனது தம்பியின்மரணம்) நேர்ந்ததாகும்' என்று கூறித் தெரிவித்தான், (எ-று.)

சம்பாதியின்சொல் மனத்தைக் கரைவித்ததனால், அதைக்கேட்ட அநுமான் துயர்க்கடலுள் மூழ்கி அரிதில் தேறலாயினனென்க. துன்பத்தினுவரி-சோகஸாகரம். வீறிய-பெருமைபெற்ற எனினுமாம். வாள்-சிவபெருமான் ஈந்தது; சந்திரஹாஸமென்னும் பெயர்பெற்றது.

'கேட்டகோதிலான்,' 'வாளினால்வீழவித்தானென்றான்' என்று பிரதிபேதம். (௩௨)

[சம்பாதியின் வருத்தம்.]

௩௩. அவ்வுரை கேட்டலு மசனி யேற்றினாற்
றவ்விய கிரியெனத் தரையின் வீழ்ந்தனன்
வெவ்வுயி ராவுயிர் பதைப்ப விம்மினா
னிவ்வுரை யிவ்வுரை யெடுத்தி யம்பினான்.

(இ-ள்.) அ உரை கேட்டலும் - (அநுமான்கூறிய) அவ்வார்த்தையைக் கேட்டவுடனே,—(சம்பாதியானவன்),—அசனி ஏற்றினால் தவ்

விய கிரி என தலையின் வீழ்ந்தனன்-பேரிடியினால் நிலைகெட்டழிந்த மலைபோலத் தரையில் வீழ்ந்தவனாய், வெவ் உயிரா-வெப்பமாகப் பெருமூச்செறிந்து, உயிர்பதைப்ப விம்மினான்-உயிர்துடிக்க வருந்தி, இ உரை இ உரை எடுத்து இயம்பினான்-இந்தஇந்த வார்த்தைகளை யெடுத்தெடுத்துக்கூறிப் புலம்பினான்; (எ-று.)—இவற்றை, அடுத்த நான்குகவிகளிற் காண்க.

சிறந்ததையும், பெரியதையும் 'ஏறு' என்றல், மரபு. கீழ்விழுதலும், வெப்பமாகப் பெருமூச்செறிதலும், உயிர்பதைத்தலும், விம்முதலும்-சோகத்தின் மெய்ப்பாடுகள். இவவுரை இவவுரை என்ற அடுக்கு-சோகத்தினாற் பலகூறுதலைக் குறிக்கும். (௩௩)

வேறு.

[இதுமுதல் நான்குகவிகள்-ஜடாயுவைப்பற்றிய சம்பாதியின்புலம்பல்.]

௩௪. இளையா நீள்சிற கின்றி வெந்துகத்
தளையா னேனுயிர் போத றக்கதால்
வளையா நேமியன் வன்மை சால்வலிக்
கிளையா னேயிது வென்ன மாயமோ.

இதுமுதல் ஐந்து கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இளையா-எனது தம்பியே! நீள் சிறகு இன்றி வெந்து உக தளை ஆனேன் உயிர் போதல் தக்கது-(சூரியகிரணங்கள் எரித்ததனால்) நீண்ட சிறகுகள் இல்லாதவாறு [அடியோடு] வெந்தொழிய (விரும்பியபடி பறந்து செல்லமுடியாமல்) தளையிடப்பட்டவன்போ லிருக்கின்ற எனது உயிர் ஒழிதலே தகுதி; வளையா நேமியன் வன்மை சால் வலிக்கு இளையானே-அழியாத ஒற்றைச்சக்கரங்கொண்ட தேரையுடைய சூரியனது மிகவும் உக்கிரமான வலிமைக்குப் பின்வாங்காதவனே! இது - (நீ எனக்கு முன்னேஇறந்த) இச்செய்கை, என்ன மாயமோ-என்னவியப்போ! )(எ - று)—ஆல்-ஈற்றசை.

பறவைகட்கு இன்றியமையாத உறுப்பான சிறகுகள் ஒழிந்தபிறகும் ஒருபயனுமில்லாமல் யான் உயிருடன் வீணாக வீழ்ந்துகிடக்கின்றேன்; சூரியனது வலிமைக்கும் பின்னிடையாத மிக்கவலிமையுடைய நீ, மூத்தவனாகிய எனக்கு முன்னே இறந்தது என்ன விபரீதம்! என்று சம்பாதி புலம்பினனென்க. சூரியன்வலிமையாற் சம்பாதியின் இறகுகள் தீய ஜடாயு இறகுடனிருந்த வரலாறு, மேலே கூறப்படும். பூமிமுழுதும் ஒருபகலிற் செல்லவல்ல ஒற்றைச்சக்கர முடையவனாதலால், சூரியன் 'வளையாநேமியன்' எனப்பட்டான். 'நின்சிறகின்றி வெந்துகத் தளையானே னுயிர்' என்ற பாடத்திற்கு-(சூரியகிரணத்தினால்) உனது சிறகுகள் இல்லாதபடி தீந்துபோவதாயிருக்கையில் (அதற்குத்) தடையாய்நின்ற (மூத்தோனாகிய) எனது உயிர் போதல் தக்கது என்று பொருளாம். ஓகாரம் - இரக்கமுணர்த்தும்.

'தக்கதே', 'தக்கதோ' என்பன பாடாந்தரம்.

இதுமுதற் பத்தொன்பது கவிகள்-பெரும்பாலும் முதற்சீரும் மூன்ருஞ்சீரும் மாச்சீர்களும்,இரண்டு நான்காஞ் சீர்கள் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (ஙச)

ஙடு. மலரோனின்றுளன்மண்ணும்விண்ணுமுண்
டுலையாநீடறமின்னுமுண்டரோ
நிலையார்கற்பமுநின்றதின்றுநீ
யிலையானுயிதுவென்னதன்மையோ.

(இ - ள்.) மலரோன் நின்றுளன் - (திருமாலின்நாபி) கமலத்தில் தோன்றியவனான பிரமதேவன் (அழியாமல்)நிலைத்திருக்கின்றான்; மண்ணும் விண்ணும் உண்டு-நிலவுலகமும் வானுலகமும் நிலைத்திருக்கின்றன; உலையா நீடு அறம் இன்னும் உண்டு - அழியாமல் வளர்கின்ற தருமமும் இன்னும் இருக்கின்றது;நிலை ஆர் கற்பமும் நின்றது-நிலைத்திருக்கின்ற கற்பகவிருக்ஷமும் அழியாமல் நிற்கின்றது; (இவையெல்லாம் அழியாதிருக்க), இன்று நீ இலை ஆனுய்-இப்போது நீமாத்திரம் உயிரொழிந்தாய்;இது என்ன தன்மையோ-இது என்ன முறைமையேயோ! (எ - று)—அரோ-ஈற்றசை.

நீடூழிகாலம் நிலைத்துநிற்றற்குரிய நீஇறந்தாயே யென இரங்கியவாறு.

ஙசு. உடனேயண்டமிரண்டுமுந்துயிர்த்
திடநாள்வந்திருவேமுமெய்தியான்
விடநீயோர்தனிச்சென்றவீரமுங்
கடனேவெங்கலுழற்குமேன்மையோய்.

(இ - ள்) வெம் கலுழற்கும் மேன்மையோய் - வேகத்தையுடைய கருடனைப்பார்க்கிலுஞ் சிறந்தவனே!—முந்து நாள்-முன்னுளில், அண்டம் இரண்டும் உயிர்த்திட - இரண்டு முட்டைகளுண்டாக, உடனே வந்து-உடன்பிறப்பாக வந்து, இருவேமும் எய்தி - நாமிருவரும் (இத்தனைநாள்) வாழ்ந்திருந்து,—(பிறகு), யான் விட-நான் (உன்னை) விட்டுப்பிரிந்து (இங்கே) கிடக்குமாறு, நீ ஓர் தனி சென்ற வீரமும்-நீ தன்னந்தனியனுய் இறந்து சென்ற வீரசெயலும், கடனே-முறையோ!

சூரியசாரதியான அருணனுக்கு அரம்பையென்னுந் தேவமாதின் வயிற்றில் தோன்றியவர் சம்பாதி ஜடாயுக்கள் என அறிக. ஜராயுஜம் அண்டஜம் ஸ்வேதஜம் உத்பிஜ்ஜம் என்ற நால்வகைப்பிறப்புககளுள் கழுகுகள் அண்டஜமாதலால், 'அண்டமுந் துயிர்த்திடநாள்வந்து' எனப்பட்டது. (ஜராயுஜம் - கருப்பையிலிருந்து பிறப்பன; மனிதரும் விலங்குகளும். அண்டஜம் - முட்டையிலிருந்துபிறப்பன; பறவைகள் முதலாயின. ஸ்வேதஜம்-வேர்வையிலிருந்து பிறப்பன; புழு முதலானவை. உத்பிஜ்ஜம்-விதையிலிருந்து தோன்றுவன; மரம் செடி முதலியன.) ஓர் தனி-ஒருபொருட் பன்மொழி. கலுழன்=கருடன். நீ வீரத்தினால் இறந்தது சிறந்ததாயினும் என்னைவிட்டுசென்றது தகுதியன்றென்பான் 'யான்விட' என்றும், இராவணனுடன் பொருது ஜடாயு விழுப்புண்பட்டு இறந்தனனுதலால் 'தனிச்சென்றவீரம்' என்றுங் கூறினன்.

'இருவோமுளோமெனே','கருளற்குமேன்மையாய்' என்றுபிரதிபேதம்.

ரு௭. ஒன்றுமூன்றுலகத்துளோரையும்
வென்றனென்னினும்வீரநிற்குநேர்
நின்றனேயவ்வரக்கனின்னையுங்
கொன்றனேயிஃதென்னகொள்கையோ.

(இ - ள்.) வீர-வீரனே!—(இராவணனானவன்), ஒன்றுமூன்று உலகத்து உளோரையும் வென்றான் என்னினும்-(தனக்கு) இணங்கிவராத மூவுலகங்களிலுள்ளவர்களையும் வென்றானென்றாலும், நிற்கு நேர் நின்றனே-(போரில்) உனக்கு எதிராகவும் நின்றானே! அ அரக்கன் நின்னையும் கொன்றனே-ராக்ஷஸனாகிய அந்த இராவணன் உன்னையும் கொன்றானே! இஃது என்ன கொள்கையோ-இது என்ன கோட்பாடோ?

மூவுலகத்தையும் வென்ற அந்த இராவணனைவிட நீ மிக்க பலசாலியாதலால், அவன் உன்னை யெதிர்த்தானென்பதும், கொன்றானென்பதும் நம்பத்தக்கதாயில்லை யென்றவாறும்.

'கொன்றனேயிது,' 'கொள்கையோவென்றான்' என்றும் பாடம்.

[அநுமான் சம்பாதியைத் தேற்றுதல்.]

ரு௮. என்றென்றேங்கியிரங்கியின்னலாற்
பொன்றுந்தன்மைபுரிந்தபோதவற்
கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிநல்கினான்
வன்றிண்டோள்வரையன்னமாருதி.

(இ -ள்.) (சம்பாதியானவன்), என்றுஎன்று ஏங்கி இரங்கி-என்று பலவிதமாகக்கூறி மிகவும் மனந்தளர்ந்துவருந்தி, இன்னலால்-துன்பத்தினால், பொன்றும் தன்மை புரிந்த போது-இறக்கும் நிலையை யடைந்தபோது,—அவற்கு-அந்தச்சம்பாதிக்கு,வல் திண் வரைஅன்ன தோள் மாருதி-மிகவும்வலிய மலைபோன்ற தோள்களையுடைய அநுமான், ஒன்றும் சொல்கொடு உணர்ச்சி நல்கினான்-சமயத்திற்கு ஏற்ற சொற்களைக் கொண்டு தேறுதல் கூறினான்; (எ - று.)

'பொன்றுந்தன்மை புகுந்தபோது,' 'மலையன்ன' என்பனவும் பாடம்.

[சம்பாதியின் வினவும், அநுமான் விடைகூறத் தொடங்குதலும்.]

ரு௯. தேற்றத்தேறியிருந்தசெங்கணான்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனோ
டேற்றுப்போர்செய்ததென்னிமித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால்.

(இ - ள்.) தேற்ற தேறி இருந்த செங் கணான்-(அநுமான்) தேறுதல் கூறியதனால் மனந்தெளிந்திருந்தவனான சிவந்தகண்களையுடையசம்பாதியானவன்,—(அநுமானைநோக்கி), 'கூற்று ஒப்பான் - யமன் போன்றவனான [மிக்கவலிமையுடைய] ஜடாயு, கொலை வாள் அரக்கனோடு - கொல்லுதல் தொழிலையுடைய வாளாயுதத்தையேந்திய ராக்ஷஸனாகிய இராவணனோடு, ஏற்று போர் செய்தது - எதிர்த்துயுத்தஞ்செய்ததற்கு, என் நிமித்து - காரணம் யாது?' என - என்றுவினவ, காற்றின் சேய் - வாயுகுமாரனான அநுமான்,

இது கட்டுரைக்கும்-இவ்வரலாற்றைக் கூறலானான்; (எ-று.)—அதனை, அடுத்த மூன்றுசெய்யுள்களிற் காண்க. ஆல் - ஈற்றசை.

சம்பாதி அநுமான்வார்த்தையால் மனந்தெளிந்து ஜடாயு இராவணனோடு போர்செய்த காரணத்தை வினவ, அநுமான் கூறலாயினனென்பதாம். நிமித்து = நிமித்தம்; வடசொல்.

'தேற்றச்சிந்தைதெளிந்து செவ்வியான், கூற்றைப்போற்கொலைவாளரக்கனோ, டேற்றுப்போர்செய்ததென் செய்தற்கெனக், காற்றின் சேயிவைகட்டுரைக்கின்றான்', 'கட்டுரைக்குவான்' என்றுபிரதிபேதம்.

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்; அநுமான் ஜடாயுவின்செய்தி கூறுதல்.]

சo. எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்
வெங்கோல்வஞ்சன்விளைத்தமாயையாற்
றங்கோனைப்பிரிவுற்றதன்மையாள்.

(இ - ள்.) எம் கோமான் அ இராமன் இல் உளாள்-எமது தலைவனான அந்த இராமபிரானது மனைவியும், செங்கோலான் மகள்-நீதிநெறிதவறாத அரசாட்சியையுடையவனான ஜநகமகாராஜனது குமாரியும், செவ்வியாள்-நல்லிலக்கணமமைந்தவளுமான, சீதை—,—வெம் கோல் வஞ்சன் விளைத்த மாயையால் - கொடுங்கோலையுடைய வஞ்சகனாகிய இராவணன் செய்த சூதினால், தம் கோனை பிரிவுஉற்ற தன்மையாள்-தனது நாயகனைப் பிரிந்த தன்மையளாயினாள்; (எ - று.)

வெங்கோல்வஞ்சன் விளைத்த மாயையாவது - மாயமானினது வியாஜமாக ராமலக்ஷ்மணர்கள் சீதாபிராட்டியைப் பிரியுமாறு செய்தமை. இல்லுளாள்-வீட்டிலிருந்து கணவனுக்கு வேண்டியதொழிலைச் செய்பவள்; மனைவி. அ-உலகறிசுட்டு. (சo)

சக. கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனாக்
கிண்டேரானெதிர்சிந்தைசீறினான்.

(இ-ள்.)அறம் கடக்கிலான் உம்பி-தருமநெறிதவறாதவனும் உனது தம்பியுமாகிய ஜடாயுவானவன்,—கொண்டு ஏகும் கொலை வாள் அரக்கனை கண்டான்-(சீதாபிராட்டியைக்) கவர்ந்துகொண்டு செல்கின்ற கொலைசெய்யும் வாளாயுதத்தையேந்திய இராவணனைக் கண்டு,—வண்டு ஆர் கோதையைவைத்து நீங்கு எனா - 'வண்டுகள்மொய்க்கப் பெற்ற கூந்தலையுடைய பிராட்டியை விட்டிட்டு அப்பாற்செல்' என்று சொல்லி, திண் தேரான் எதிர் சிந்தை சீறினான்-வலியதேரையுடைய அவ்விராவணனெதிரிலேமனங்கொதித்துப் போர்புரியலானான்;(எ-று.)

வண்டார் கோதை-அடையடுத்த வாகுபெயர். 'அறங்கடக்கிலான்' என்ற அடைமொழி-பிறர்மனைவியைக் கவர்வதைக் கண்டு மனங்கொதித்தற்கு ஏற்றவ னென்ற கருத்தைப் புலப்படுத்தும்;கருத்துடையடைமொழியணி. (சுக)

சுஉ. சீறித்தீயவனேறுதேரையுங்
கீறித்தோள்கள்கிழித்தழித்தபின்
றேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
வீறப்பொன்றினன்மெய்ம்மையோனென்றான்.

(இ-ள்.) மெய்மையோன்-சத்தியமுள்ள அந்த ஜடாயு, சீறி - அவ்வாறுகோபித்து, தீயவன் ஏறு தேரையும் கீறி - கொடியவனாகிய அவ்விராவணன் ஏறியிருந்த தேரையும் அழித்து, தோள்கள் கிழித்து-(அவனது) தோள்களையும் பிளவுபடுத்தி, அழித்த பின்-(இங்ஙனம் பலபடியாக அவனதுவீரத்தைக்) குறைத்தபின்பு,—(இராவணன்), தேறி-(தான் ஜடாயுவைவெல்லும் நெறியை) நிச்சயித்து, தேவர்கள் தேவன் தெய்வம் வாள் வீற-மகாதேவனான சிவபிரான் தனக்கு அளித்த தெய்வத்தன்மையுள்ள வாளை வீசியெறிய, பொன்றினன் - (ஜடாயு) உயிர் மாய்ந்தான், என்றான்-என்று கூறி முடித்தனன், (அநுமான்); (எ-று.)

ஜடாயு இராவணனைத் தனது மூக்கினாலும் நகங்களினாலும் சிறகுகளினாலும் பலபடி ஹிம்ஸித்து, இறுதியில் அவ்விராவணனது தெய்வ வாளால் உயிர்மாய்ந்தன னென்பதாம். மும்மூர்த்திகளுளொருவனாதலால், சிவபெருமான் 'தேவர்கள்தேவன்' எனப்பட்டான்: முதலடி - முற்றுமோனை.

'தேறித்தாழ்சடையீசன்றெய்வவாள்,' 'தேவர்கடேவன்வாளினால்' என்று பாடாந்தரங்கள். (சுஉ)

[இதுமுதல் மூன்றுகவிகள் - ஜடாயுவின்மரணத்தைக்குறித்துச் சம்பாதி வியந்து இரங்குதல்.]

சுஈ. விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தகுதீர்த்தன்மாட்டுயி
ரளித்தானேயதுநன்றுநன்றெனாக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினான்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) விளித்தான்- (அவ்வாறு அநுமான்) கூறிமுடித்தான்; அன்னது கேட்டு-அச்சொல்லைக் கேட்டு, வாரி கலுழ்ந்த 'கண்ணினான் - நீரைச்சொரிகின்ற கண்களையுடையவனாகிய அந்தச் சம்பாதி,—(அநுமானைநோக்கி),—'மெய்ம்மையோய்-சத்தியமுடையவனே! தெளித்து ஆட தகு தீர்த்தன்மாட்டு உயிர் அளித்தானே-மனந்தெளிந்து அனுபவித்தற்குஉரிய பரிசுத்த மூர்த்தியாகிய இராமபிரான் திறத்தில் (எனது தம்பியாகிய ஜடாயு)உயிரையுங் கொடுத்தானன்றோ! அது நன்றுநன்று-அச்செயல் மிகவும் நன்றாயிருந்தது,' எனா களித்தான்-என்று மனஞ்சந்தோஷித்தவனாய்,—(எ-று.)

'வினைப்பகுதிகள் பலபொருளையும் தரும்' என்ற கொள்கைபற்றி, விளித்தான் என்பதற்கு-சொன்னான் எனப் பொருள் கொள்ளப்பட்டது. 'விளித்தான்' என்பது-கீழ்க்கவியில் 'என்றான்' என்றதன் அநுவாதம். தெளித்தாடத்தகுதீர்த்தன் - முழுமுதற்கடவுளென்று உறுதிகொண்டு சரணமடைதற்கு ஏற்ற புண்ணியமூர்த்தி; இத்தொடர்-தெளிவடைந்து பலரும்வந்து நீராடத்தகுந்த கங்கையென்னும் புண்ணியநதியை உண்டாக்கினவனென்ற பொருளையுந் தரும். வாரி-ஆநந்தபாஷ்பமுமாம். சீதாபிராட்டியை மீட்டற்குச் சென்று ஜடாயு இறந்திருக்கவும், 'தீர்த்தன்மாட்டுயிரளித்தான்' என்றது, சீதையை மீட்டலும் இராமகாரியமாதலா லென்க; "இராமன்பத்தினி செந்தாள் வஞ்சிதிறத்திறந்தவன்" என மேற்கூறுதலுங் காண்க. தெளித்து = தெளிந்து: எதுகைநோக்கிய வலித்தல். எகாரமும், அடுக்கும்-உவகைப்பொருளன. 'வெளித்தானன்னதுசொல்ல,' 'வாரிகரந்தகண்ணினன்' என்றும்பாடம்.

சச. பைந்தாரெங்களிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன்
மைந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ
டுய்ந்தானல்லதுலந்ததுண்மையோ.

(இ-ள்) மைந்தா-வீரமுடையவனே! பைந் தார் எங்கள் இராமன் பத்தினி செந் தாள் வஞ்சி திறத்து இறந்தவன்-புதியதாகிய மலர்மாலையையணிந்தவனான எங்கள் இராமபிரானது தேவியும் சிவந்தபாதங்களையுடைய வஞ்சிக்கொடிபோன்றவளு மான சீதாபிராட்டியின் விஷயத்தில் உயிரொழிந்தவனாகிய, எம்பி-எனது தம்பியான ஜடாயு, வரம்பு இல் சீர்த்தியோடு உய்ந்தான் அல்லது - அளவில்லாத பெருங்கீர்த்தியுடன் பிழைத்திருக்கின்றானேயல்லாமல், உலந்தது உண்மையோ-உயிரொழிந்தானென்று கூறுவது உண்மையாகுமோ? [ஆகாதென்றபடி].

சீதாபிராட்டியை மீட்பதற்காகத் தன்னுயிரைக் கொடுத்தவனாதலால், அவனது பூதவுடம்பு அழிந்தும் புகழுடம்பு அழியாது நிலைநிற்கின்றது; ஆதலால், அவன் இறந்தும் இறவாதவனேயாவனென்பதாம். 'பைந்தார்' என்றவிடத்து, பசுமை-புதுமைமேலது. பத்தினி - பதிக்கு [கணவனுக்கு] அக்கினிகாரியத்தில் உதவும் மனைவி. செந்தாள்வஞ்சி-அன்மொழித்தொகைப் பண்மொழித்தொடர்; அடையடுத்த உவமவாகுபெயருமாம்; ஒல்கியொசியுந்தன்மையில் மாதர்க்கு வஞ்சிக்கொடி உவமை. "சீர்த்தி மிகுபுகழ்" என்பது, தொல்காப்பியம். (சச)

சரு. அறமன்னானுடனெம்பியன்பினோ
டுறவுன்னாவுயிரொன்றவோவினன்
பெறவொண்ணாதொர்பெற்றிபெற்றவற்
கிறவென்னுமிதினின்பமியாவதோ.

(இ - ள்.) அறம்அன்னானுடன் - தருமம்போன்றவனாகிய இராமபிரானுடனே, எம்பி-எனது தம்பியான ஜடாயு, அன்பினோடு உறவு

உன்னு-அன்போடு உறவுகொண்டாடி, உயிர் ஒன்ற ஒவினன் - (அவன் திறத்தில்) தனது உயிரையும் மனப்பூர்வமாக விட்டான்; பெற ஒண்ணாதது ஓர் பெற்றிபெற்றவற்கு-(எவராலும்) பெறமுடியாததாகிய ஒப்பற்ற பேற்றை யடைந்தவனான அந்த ஜடாயுவுக்கு, இறவு என் ஆம்- மரணமென்பதுதான் என்ன நஷ்டத்தைத்தரும்? இதின் இன்பம் யாவதோ-இப்பேற்றைக்காட்டிலுஞ் சிறந்த இன்பந்தருவதுதான் வேறுயாதோ? [ஒன்றுமில்லை]; (எ - று.)

இராமபிரான்திறத்தில் உயிரைக்கொடுக்க நேர்ந்த இந்தப்பாக்கியத்துக்குமுன், மரணமென்பது சிறிதும் நஷ்டத்தைத் தரவல்லதன் றென்பதாம். ஜடாயுவின் மரணத்தில் இராமபிரான்திறத்து உதவுதலாகிய நன்மையைக்கண்டு அதனைவிரும்பியது - வேண்டலணியின் பாற்பாடும்: இது, வடமொழியில் அநுஜ்ஞாலங்கார மெனப்படும்: குற்றமுள்ள ஒன்றில் விளைகின்ற நன்மையைக் கருதி அதனை வேண்டுதல், இவ்வணியின் இலக்கணம். தருமமே ஒருவடிவெடுத்தாற்போன் றிருத்தலால், இராமனை 'அறமன்னன்' என்றான். ஜடாயு தசரதசக்கரவர்த்திக்குப் பல உதவிகள் செய்து அவனது உயிர்த்தோழனாகி அவனினும் வயது முதிர்ந்தவனாகிய தான், அசசக்கரவர்த்திக்குத் தமையன்முறையிலிருந்து அவனது புதல்வராகிய ராமலக்ஷ்மணர் காட்டில்வந்தபோது அவர்களிடத்திற் புத்ரவாதஸல்யங்கொண்டிருந்தன னென்பதுபற்றி 'அன்போடுறவுன்னு' என்றார்.

'எம்பியன்பினால்,' 'உறமன்னருயிர்,' 'உறவெண்ணவுயிர்,' 'பெறவெண்ணாதது,' 'பேறுபெற்றவற்கு,' 'இறவென்னோவதினின்பம்யாவதோ' என்று பாடபேதங்கள். (சுகு)

[சம்பாதி ஜடாயுவுக்காக நீர்க்கடன்கழித்தபின்பு, வாநரரிடத்து ஒன்றுகூறத் தொடங்குதல்.]

சுசு. என்றென்றேங்கிரங்கியின்புனல்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
றுன்றுந்தாரவர்க்கின்னசொல்லினான்.

(இ - ள்.) என்று என்று ஏங்கி இரங்கி-என்று பலவகையாக ஏக்கங்கொண்டு புலம்பி, இன் புனல் சென்று அங்கு ஆடுதல் செய்து தீர்ந்த பின்-இனியநீருள்ள இடத்திற்குச் சென்று அதில்நீராடுதல் முதலியன செய்து முடித்தபிறகு,—வல் திண் தோள் வலி மாறு இலாதவன்-மிக்க வலியபுஜபலத்தில் ஒப்பில்லாதவனாகிய சம்பாதி, துன்றும் தாரவர்க்கு இன்ன சொல்லினான் - நெருங்கிய மாலையைத் தரித்த வானரர்களை நோக்கி இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ-று.)—அவற்றை, அடுத்த இரண்டுகவிகளிற் காண்க.

சம்பாதி ஒப்பற்ற வலிமையுடையா னென்றற்கு, 'தோள்வலிமாறிலாதவன்' என்றார்: தோள்-சிறகுகளுக்கு இலக்கணையுமாம். நீராடுதலைக்கூறியது-இறந்தோர்க்குச்செய்யுங் கிரியைகட்கெல்லாம் உபலட்சணம். தாரவர்-இரண்டுவெள்ளம் சேனையையுடைய வானரத்தலைவரெனினுமாம். தார்-மாலையும், சேனையும்.

'ஆடுதல்செய்ததீர்ந்தன' என்றும் பாடம். (சுசு)

[சம்பாதி வாநரர்களைக் கொண்டாடுதல்.]

சஎ. வாழ்வித்தீரெனைமைந்தர்வந்துநீ
ராழ்வித்தீரலிர்துன்பவாழிவாய்
கேள்வித்தீவினைகீறினீரிருள்
போழ்வித்தீருரைபொய்யினீங்கினீர்.

இது முதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்.

(இ-ள்.) கேள்வி தீ வினை கீறினீர்-(பெரியோர்களிடத்துக்) கேட்டறிந்ததனாற் பாவசெயலை யொழித்தவர்களும், பொய் உரையின் நீங்கினீர் - பொய்பேசுதலினின்று நீங்கினவர்களு ,மாகிய, மைந்தர்-வீரர்களே! நீர்-,வந்து-இங்குவந்து, எனை வாழ்வித்தீர்-என்னை நல்வாழ்வடையச்செய்தீர்கள்,துன்பம் ஆழிவாய் ஆழ்வித்தீர் அலிர்-(தம்பியின் மரண சமாசாரத்தைச்சொல்லி அதனால் என்னைத்) துயர்க்கடலுள் மூழ்குவித்தீரல்லீர்: இருள்போழ்வித்தீர்-(எனது) துன்பத்தைப் போக்கினீர்.

நல்லறிவுடையவர்களும் பொய்யில்லாதவர்களுமாய் இங்குவந்த நீங்கள் இராமகாரியத்தின்பொருட்டு எனது தம்பி உயிர்துறந்தனனென்று தெரிவித்ததனால், நீங்கள் தம்பியின் மரணத்தைக் கூறநேர்ந்ததைக்குறித்துக் கவலவேண்டா; அவன் இவ்வாறு பேறுபெற்றதை நினைந்து எனக்குச சந்தோஷமேயாயிற்றென்றன னென்க. சூரியகிரணங்களின் வெப்பம் தாக்குதலால் தனதுசிறகுகள் கரிந்தொழியவே, சம்பாதி, மகேந்திரமலையில் விழுந்து அங்குவசித்திருந்த ஒருமுனிவரைச சரணமடைய, அவர் தமது தவமகிமையால் எதிர்காலவரலாற்றை யுணர்ந்து பின்பு 'இராமதூதர்களாக இங்குவரும் வானரர்கள் இராமநாமோச்சாரணஞ் செய்தால் உனக்கு முன்போலச சிறகுகள்முளைத்திடும்' என்று தனக்குவரமளித்திருந்ததைநினைதது, இறகுமுளைக்குங் காலம் தனக்குக்குறுகியதுபற்றி, 'எனைவாழ்வித்தீர்' என்றும, 'இருள் போழ்வித்தீர்' என்றும் மகிழ்ந்துகூறின னென்க. மைந்தர் - அண்மைவிளி; ஆதலின், இயல்பு. இருள்-துன்பத்திற்கு, இலக்கணை. 'இருள் போழ்வித்தீர்' என்றது-தெளிவுபற்றிய காலவழுவமைதி. (சஎ)

[சம்பாதி தனக்குச் சிறகுமுளைத்தற்காக ராமநாமோச்சாரணஞ் செய்யுமாறு வாநரர்களை வேண்டுதல்.]

சஅ. எல்லீருமவ்விராமநாமமே
சொல்லீர்சொல்லவெனக்கொர்சோர்விலா
நல்லீரப்பயனண்ணுநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்குமாண்பினீர்.

(இ - ள்.) நல்ல சொல் வல்லீர் - இன்சொற்கூறுகின்றவரும், வாய்மை வளர்க்கும் மாண்பினீர்-சத்தியத்தைவளரச்செய்யும் பெருமை பெற்றவருமாகிய வாநரவீரர்களே!—எல்லீரும்-நீங்களெல்லோரும், அ இராமநாமமே சொல்லீர்-அந்த 'ராம' என்னுந் திருநாமத்தையே வாய்விட்டுச் சொல்லுங்கள்; சொல்ல-அவ்வாறு (என்னருகிற்) சொல்வதனால், எனக்கு—, ஓர்சோர்வு இலா நல் ஈரம் பயன் நண்ணும்-சிறிதும்

தாழ்வில்லாத சிறந்த ஒப்பற்ற (அப்பிரானது) கருணையின் பயனானது கைகூடும் [சிறகு முன்போலவே தழைக்கும்]; (எ-று.)—'என்றான்' என்று அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

'சொல்லீரென்சிறைதோன்றும்,' 'பயனண்ண' எனவும் பாடம்.

[வாநரர் ராமநாமோச்சாரணஞ்செய்ய, சம்பாதிக்குச் சிறகுமுளைத்துத் தழைத்தல்.]

௪௯. என்றானன்னதுகாண்டும்யாமெனா
நின்றார்நின்றுழிநீலமேனியா
னன்றாநாமநவின்றுநல்கினார்
வன்றோளான்சிறைவானந்தாயவே.

(இ - ள்.) என்றான்-என்று (சம்பாதி) கூறினான்; (அதுகேட்ட வாநரர்கள்), யாம் அன்னது காண்டும் எனா-'நாம் அதனை ஆராய்ந்து பார்ப்போம்' என்று, நின்றார் நின்ற உழி-நின்றவர் நின்றபடியே, நீலம் மேனியான் நன்று ஆம் நாமம் நவின்று நல்கினார் - நீலநிறமான அவ விராமபிரானது நன்மையைத் தரத்தக்கதாகிய திருநாமத்தைச் சொல் லியுதவினார்கள்; (அதனால்), வல் தோளான் சிறை வானம் தாயவே- வலியதோள்களையுடைய சம்பாதியினது சிறகுகள் (முளைத்து) ஆகாய மளாவி வளர்ந்தன; (எ-று.)

பகவந்நாமத்தை உச்சரித்தற்கு அங்கமொன்றும் வேண்டாவென் பதைக் குறிப்பித்தற்கு, 'நின்றார்நின்றுழி' என்றார்.

'என்றானங்கது,' 'வானந்தாவவே' என்று பிரதிபேதம். (௪௯)

[சம்பாதியின் அப்பொழுதைய தோற்றம்.]

௫0. சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலகெங்குமூடினா
னிறைபெற்றாவிநெருப்புயிர்க்கும்வா
ளுறைபெற்றாலெனலாமுறுப்பினான்.

(இ-ள்.) திகழுகின்ற மேனியான்-விளங்குகின்ற உடம்பையுடைய வனாகிய சம்பாதி,—முறைபெற்று ஆம் உலகு எங்கும் மூடினான் நிறை பெற்று-வரிசையாகப் பொருந்திய உலகங்களெல்லாவற்றிலும் வியா பித்து நிற்பவனான திருமாலின் திருவவதாரமாகிய இராமபிரானது நிரம்பிய அருளைப்பெற்றதனால், சிறை பெற்றான்-(தனது கரிந்துபோன) சிறகுகள் (முன்போல) முளைக்கப்பெற்று, ஆவி நெருப்பு உயிர்க்கும் வாள் உறை பெற்றால் எனல் ஆம் உறுப்பினான் - புகையோடுகூடிய நெருப்பைக் கக்குகின்ற [மிகவும் உக்கிரமான] வாளாயுதம் உறையைப் பெற்றாற்போலுமென்று சொல்லத்தக்க உடம்பை யுடையவனானான்.

அவனது விளங்குகின்ற உடம்பு - வாளாயுதத்திற்கும், அவ்வுடம் பைச் சுற்றிலும் நன்றாகமுளைத்த இறகு-அவ்வாளைச்சூழும் உறைக்கும் உவமையாம். இராமநாமோச்சாரணத்தாற் கரிந்துபோனசிறகுகள் முளைத்தனவாதலின், 'உலகெங்குமூடினான் நிறைபெற்றுச் சிறைபெற் றான்' எனப்பட்டது. உறுப்பு-உடம்புக்கு, இலக்கணை. இனி, திகழ்

இன்றமேனியானாகிய சம்பாதி சிறைபெற்றவனாய், ஆவிநிறைபெற்று-தனது ஆத்மா [மனம்] திருப்தியடையப்பெற்று, முறைபெற்றுஆம்-ஒரு மரியாதையில் நிற்கின்ற, உலகெங்கும்-இவ்வுலகமுழுவதிலும், (முளைத்த அச்சிறகால்) மூடினான் என்றும் உரைக்கலாம்.

'சுடர்தின்றமேனியான்,' 'முறைபெற்றான்,' 'நிறைபொற்றுரை நெருப்புயிர்க்கும்' 'உறைபெற்றாமெனலாம்' என்பன பாடாந்தரங்கள்.

[அதுகண்டு வாநரர் யாவரும் வியந்து இராமபிரானை வாழ்த்துதல்.]

ருக. தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்வந்
துருண்டானுற்றபயத்தையுன்னினார்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினார்
வெருண்டார்சிந்தைவியந்துவிம்முவார்.

(இ-ள்.) (அதுகண்ட வாநரர்கள்),—தெருண்டான் மெய் பெயர் செப்பலோடும் - (அறிஞரால் பரம்பொருளென்று) தெளியப்பட்டவனாகிய இராமபிரானது உண்மைத்திருநாமத்தை(த்தாம்)உச்சரித்தமாத்திரத்தில், உருண்டுவந்தான் உற்ற பயத்தை - (முன்புஇறகில்லாமையால்) உருண்டுவந்தவனாகிய சம்பாதியடைந்த நன்மையை, உன்னினார்-(மனத்திற்)கருதி,மருண்டார்-திகைப்புக்கொண்டவரும், வெருண்டார்-அச்சமடைந்தவரும், வியந்து சிந்தை விம்முவார்-ஆச்சரியமடைந்து மனம்பூரிப்பவர்களுமாகி,—வானவர்கோனை வாழ்த்தினார் - தேவர்கட்கெல்லாந் தலைவனான திருமாலின் திருவவதாரமூர்த்தியாகிய அவ்விராமபிரானை வாழ்த்தித் துதித்தார்கள்; (எ - று)

சம்பாதி இறகில்லாமல் உருண்டுவந்ததையும் இராமநாமோச்சாரணத்தினால் சிறகுகள் முளைததுத்தழைத்ததையும் கண்கூடாகக்கண்ட வாநரர்கள், அச்சமும் வியப்பும் மருட்சியும் ஒருங்கேகொண்டவர்களாய், தனதுநாமோச்சாரணமாத்திரத்தினால் பெரும்பயனை விளைக்கும் மகிமைவாய்ந்த இராமபிரானை வாழ்த்தினரென்பதாம். மெய்ப்பெயர்-தன்னையுச்சரித்தார்க்குப் பயன்விளைத்தலில் தவறாத திருநாமம்; தாரகமந்திரம். தனது திருநாமததால் வேண்டிய பயனை விளைத்தது கொண்டு 'இராமபிரான் மானுடனல்லன்; தேவாதிதேவனான முழுமுதற்கடவுளே' என்ற தத்துவஞானத்தைப்பெற்ற வாநரர்கள், அத்தேவாதிதேவனுடைய முற்றுணர்வு, வரம்பிலாற்றல் யாவரையும் பாதுகாக்குந்திறம், அழியாவியல்புமுதலிய குணங்களைக் கருதி அவற்றில் ஈடுபட்டு ஆழ்ந்து பக்திபரவசராகி, அதனால் தம்நிலையையும் எம்பெருமான் நிலையையும் மறந்து, 'காலாதீதமான வைகுண்டத்திலே யிருக்கிற இந்த அரும்பொருள் காலம்நடையாடப்பெற்ற இவ்வுலகத்திலே கண்ணுக்கு இலக்காகுதலால், த்ருஷ்டிதோஷங்காரணமாக 'இதற்குஎன்ன தீங்குவருமோ!' என்று தமக்கு உள்ள ஆதராதிசயத்தால் அநாவசியமாக அதிக பயசங்கைகொண்டு 'இத்திருமேனிக்கு எவ்வாற்றானும் ஒருகுறையும் வராதிருக்கவேணும்' என்று பொங்கும்பரிவினால் வாழ்த்துவாராயினரென்க. வந்துஉருண்டான் - உருண்டுவந்தானென்று விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது.

'உற்றபலத்தை' என்று பிரதிபேதம். (ருக)

[வாநரர் சம்பாதியின்முன்னையவரலாற்றை வினவ, அவன் கூறத்தொடங்குதல்.]

ருஉ. அன்னானைக்கடி தஞ்ச லித்துநீ
முன்னா ளுற்றது முற்று மோதெனச்
சொன்னார் சொற்றது சிந்தை தோய்வுறத்
தன்னா லுற்றது தான்வி ளம்புவான்.

(இ-ள்.) (வாநரவீரர்கள்),—அன்னானை கடிது அஞ்சலித்து-அந்தச் சம்பாதியை விரைவாகக்கைகூப்பிவணங்கி, 'நீ—முன் நாள் உற்றது முற்றும் ஓது-முன்காலத்து நடந்த வரலாறு முழுவதையும் கூறுவாய்,' என சொன்னார் - என்றுவினவினார்கள்: சொற்றது சிந்தைதோய்வுற-(அவர்கள்) சொன்னசொல் தன்மனத்திற்படிந்ததனால்,—தான்-அந்தச் சம்பாதி, தன்னால் உற்றது விளம்புவான்-தன்னால் (தனக்கு) நேர்ந்ததை [இறகுதீர்ந்ததன்காரணத்தை]க் கூறுவானாயினான்; (எ - று.)—அதனை, அடுத்த எட்டுக்கவிகளிற் காண்க.

சம்பாதியை வாநரர்கள் அஞ்சலித்தது-அவன் இராமநாமத்தின் மகிமையைத் தமக்குத் தெரிவித்தவனாதலாலும், இராமபிரானது திருவருளைப் பெற்றவனாதலாலும், மிகவும் வயதுமுதிர்ந்தவனாதலாலுமென்க. 'சொற்றது சிந்தைதோய்வுற' என்பதற்கு - தான்சொன்னது கேட்பவர் மனத்தில் நன்றாய்ப்பதியும்படி கூறலானானென்றும் உரைக்கலாம். நீ உற்றது என இயைப்பினுமாம். (ருஉ)

வேறு.

[இதுமுதல் எட்டுக்கவிகள் - ஒருதொடர்: சம்பாதி வாநரர்களை நோக்கித்தமது முன்னையவரலாறு கூறுதல்.]

ருங. தாயெனத் தகைய நண்பீர் சம்பாதி சடாயு வென்பேஞ்
சேயொளிச் சிறைய வேகக் கழுகினுக் கரசு செய்வேம்
பாய்திரைப் பரவை ஞாலம் படரிரு ளகற்றும் பண்பி
னாய்கதிர்க் கடவுட் டேரூ ரருணனுக் கமைந்த மைந்தர்.

(இ-ள்.) (சம்பாதி வாநரர்களைநோக்கிக் கூறுவான்);—தாய் என தகையநண்பீர்-(அன்பினால்) தாயென்று சொல்லத்தக்க நண்பர்களே! பாய் திரைபரவை ஞாலம் படர் இருள் அகற்றும் பண்பின் ஆய் கதிர் கடவுள் தேர் ஊர் அருணனுக்கு அமைந்த மைந்தர் - வீசுகின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்தில் நிறைந்துள்ள இருட்டையொழிக்குந் தன்மையையுடைய சிறந்த கிரணங்களோடுகூடிய சூரியபகவானது தேரை நடத்துகின்ற சாரதியான அருணனுக்குப் பிறந்த புத்திரர்களாகிய, சம்பாதி சடாயு என்பேம்-சம்பாதி ஜடாயு என்ற நாங்களிருவரும், சேய் ஒளிசிறைய வேகம் கழுகினுக்கு அரசு செய்வேம்-அழகிய நிறத்தைக்கொண்ட சிறகுகளையுடைய வேகமாகப் பறக்கின்ற கழுகுகட்கு அரசராவோம்; (எ-று.)

சூரியசாரதியாகியஅருணனுக்குப்புதல்வராய்பிறந்தசம்பாதிஜடாயுவென்ற நாங்கள் வானத்தில் உயர்ந்து பறக்குந்தன்மையுள்ள கழுகு

கட்கு எல்லாம் அரசராயிருந்தோமென்றவாறு. சூரியசாரதியாகிய அருணனென்பவன் - காசியபமுனிவரது மனைவியாகிய விநதையின் வயிற்றிற் பிறந்தவன்: கருடனுக்குத்தமையன்; இடைக்குக்கீழ் உறுப்பில்லாதவன். "தாயொக்கும் அன்பின்" என்றபடி தாய் அன்பிற்சிறத்தலால், தாயெனத் தகைய நண்பீர்' எனப்பட்டது.

'தாயெனத் தழுவு நண்பீர்,' 'சேயொளிச்சேண்சேனோக்கின்' என்று பிரதிபேதம்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் பதினொன்குகவிகள் - இப்படலத்தின் பதினன்காங் கவிபோன்ற அறுசீராசிரிய விருத்தங்கள். (ருட)

ருச. ஆயுயரும்பர்நாடுகாண்டுமென் றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லுமவேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
றீயையுந்தீக்குந்தெய்வச்செங்கதிர்ச்செல்வன்சீறி.

(இ - ள்) (நாங்களிருவரும்), அ உயர் உம்பர் நாடு காண்டும் என்று அறிவு தள்ளி - அந்த வானத்திலுள்ள தேவலோகத்தைக் காணவேண்டுமென்ற அறிவைச் செலுத்தி, மீ உயர் விசும்பினூடு மேக்கு உற செல்லும் வேலை - மிகவும்மேலே ஆகாயத்திலே பறந்து செல்லும்போது, காய் கதிர் கடவுள் தேரை கண்ணுற்றும் கண்ணுறா முன் - உஷ்ணகிரணனான சூரிய பகவானது தேரைக்கண்டதும் காணாததுமாயிருக்கும்போது,—தீயையும் தீக்கும் தெய்வம் செங்கதிர் செல்வன - நெருப்பையும் தவிக்கச்செய்கின்ற தெய்வத்தன்மையுள்ள சிவந்த கிரணங்களையே செல்வமாகக்கொண்ட சூரியன், சீறி - கோபித்தலால்,—(எ-று)—'அழனமுடுகும்வேலை' என அடுத்த கவியோடு தொடரும்.

நாங்களிருவரும் மிகவும் உயரப்பறக்கும வல்லமை பெற்றிருந்தமையால் முன்னொருகாலத்தில் தேவலோகத்தைக் காணவேண்டுமென்று ஒரெண்ணந்தோன்றி வானத்திற்பறந்து சூரியமண்டலத்தைக் குறுகிச் சூரிய பகவானைக் காணும் நிலைமையி லிருக்கையில், மனுஷ்யலோகத்தவராகிய நாங்கள் அங்கு வந்ததனால் அக்கடவுள் எங்களைச் சினந்தனனென்பதாம். அ+உயர்= ஆயுயர்: "தூக்கிற் சுட்டுநீளின யகரமுந் தோன்றுதல் நெறி." உம்பர் - மேலிடம். மீயுயர்-ஒருபொருட்பன்மொழி. தீயையும் தீக்கும் தெய்வச் செங்கதிர்ச் செல்வன் - வெம்மையின் மிகுதியைவிளக்கும் உயர்வுநவிற்சி. ஈற்றடி-முற்றுமோனை. கண்ணுற்றும் என்பதைத் தன்மைப்பன்மை முற்றாகக் கொண்டு, பார்த்தோமெனறும் பொருள்கொள்ளலாம்.

'கண்ணுற்றேறக்கண்ணுறாமுன,' தீயையுந்தீக்குஞ் செல்லற்செங்கதிர்ச் செல்வன்' என்று பாடாந்தரங்கள்.

ருரு. முந்தியவெம்பிமேனிமுருங்கழன்முடுகும்வேலை
யெந்தைநீகாத்தியென்றுன்யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைத்தலோடுமற்றவன்மறையப்போனன்
வெந்துமெய்பிறகுதீந்துவிழுந்தனென்விளிகிலாதேன்.

(இ - ள்.) மூந்திய எம்பிமேனி முருங்கு அழல் முடுகும்வேலை - (என்னினும்) உயரமாகப்பறந்துசென்ற எனது தம்பியாகிய ஜடாயுவின் உடம்பை எரிக்குந்தன்மையுள்ள சூரியகிரணாக்கினியானது உக்கிரமாகத் தபிக்குங் காலத்தில், (அந்தஜடாயு என்னைநோக்கி), எந்தை நீ காத்தி என்றான் - 'எந்தையே! (என்னை) நீ காப்பாற்றுவாய்' என்று வேண்டினான்: (அவ்வாறு வேண்டவே அவனுக்கு மேலே சென்று), யான்—, இருஞ்சிறையும் ஏந்தி வந்தனென் மறைத்தலோடும் - எனதுபெரிய (இரண்டு) இறகுகளையும் பரப்பிக்கொண்டு வந்து (அவன்மேல் வெயில் தாக்காதபடி) மறைக்கவே, அவன் மறைய போனான் - அந்த ஜடாயு (எனது சிறகின் நிழலில்) மறைவாக வந்தான்; விளிகிலாதேன் - நான் (அப்போதே) இறக்கமாட்டாதவனாய் மெய் வெந்து இறகு தீந்து விழுந்தனென் - உடம்புவெந்துபோய் இறகுகள் கருகித் தரையில் விழுந்தேன்; (எ - று.)

என்னினும் உயரமாகப் பறந்துசென்ற ஜடாயுவானவன் சூரியபகவான் கோபித்துச் செலுத்திய உஷ்ணத்தைத் தாங்கமாட்டாமல் தன்னைக் காப்பாற்றுமாறு என்னை வேண்டிக்கொள்ள, அதனால் அவன் என் சிறகின் நிழலில் வருமாறு அவனுக்கு மேலே யான்பறந்து செல்ல, அவனும் அவ்வாறே வந்து தப்பினான்; யான் அந்தச் சூரியனது வெப்பத்தைப் பொறுக்க மாட்டாமல் இறகு தீந்து கீழேவிழுந்தேனென்பதாம். 'விளிகிலாதேன' என்றது - தனது தம்பியாகிய ஜடாயு இறந்தனனே என்ற துயரத்தினாற் கூறிய வார்த்தையெனினுமாம்: 'தமையன் தந்தையோடொப்பான்' என்றபடி ஜடாயுவுக்குச் சம்பாதி தந்தைபோலப் பாராட்டத்தக்கவனாதலால், 'எந்தை' என விளிக்கப்பட்டான்.

'முருங்கழன் முருக்கும்வேலை,' 'என்னிருஞ்சிறையு மேந்தி,' 'வந்தனென் மறைதலோடும்,' 'விளிந்திலாதேன்' என்றும் பிரதிபேதம். (௫௫)

௫௬. மண்ணிடைவிழுந்தவென்னைவானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையன்சனகன்காதற
பெண்ணிடையீட்டின்வந்தவானரரிராமன்பேரை
யெண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுதியென்றான்.

(இ - ள்.) மண்ணிடை விழுந்த என்னை - அவ்வாறு தரையில் விழுந்த என்னை, வானிடை வயங்கு வள்ளல் - வானத்தில் விளங்குகின்ற சூரிய பகவான், கண்ணிடை நோக்கி - கண்ணினாற் பார்த்து, உற்ற கருணையன் - மிக்க அருளையுடையவனாய்,—சனகன் காதல பெண் இடையீட்டின் வந்த வானரர் இராமன் பேரை எண்ணிடை உற்றகாலத்து இறகு பெற்று எழுதி - ஜனகமகாராஜனது அன்பிற்குஉரிய புதல்வியாகிய சீதை (இராமபிரானை விட்டுப்) பிரிதலினால் (அவளைத் தேடும் பொருட்டு) இங்கே வரப்போகின்ற வாநரர்கள் (உன்னைக்கண்டு இராமபிரான் திருநாமத்தை மனத்தினாற் கருதி உச்சரிக்குங் காலத்தில் முன்போலவே சிறகுகளை முளைக்கப்பெற்றுப் பறந்து செல்வாய்,' என்றான் - என்று அநுக்கிரகஞ் செய்தான்; (எ - று.)

தனது உஷ்ண கிரணத்தால் இறகுகள் தீந்து கீழே விழுந்திட்ட என்னைக்கண்டு, சூரியபகவான், இரக்கங்கொண்டு, இனி ஒருகாலத்தில் இராம

பிரானது மனைவியாகிய சீதாபிராட்டியைத் தேடுதற்காக ராமதூதர்களாகிய வானரர்கள் இங்குவந்து உனது வேண்டுகோளின்படியே ராமநாமோச்சாரணஞ்செய்ய, இப்போது இழந்த சிறகுகள் மீண்டுந் தளிர்க்கப்பெற் றெழுவாயென்று அநுக்கிரகஞ்செய்தனனென்பதாம். தன்னிடத்து அருளைச் செலுத்தியதனால், சூரியபகவானைச் சம்பாதி 'வள்ளல்' எனப்புகழ்ந்தான்.

'வானிடைவழங்கும் வள்ளல்,' 'இறகுபெற்றெழுக' என்றும்பாடம்.

ருஎ. தாழ்ந்தமாதவத்துலோகசாரங்கனுறையுஞ்சாரல்
வீழ்ந்தனென்சிறைகடீயவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனெனாழ்ந்தவென்னையருந்தவனெதிர்ந்துதேற்றி.

(இ - ள்.) (நான்)—, சிறைகள் தீய-எனது இறகுகள் தீந்துவிட்டதனால், வெவ் உயிர்த்து - வெப்பமாகப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, தாழ்ந்த மா தவத்து உலோகசாரங்கன் உறையும் சாரல் வீழ்ந்தனென் - மிக்க பெருந் தவத்தையுடைய லோகஸாரங்கனென்னும் முனிவன் வசிக்கின்ற மலைச்சாரலிலே வந்து விழுந்தேன்; உளமும் மெய்யும் போழ்ந்தன - (விழுந்த அதிர்ச்சியால் எனது) மனமும் உடம்பும் கலங்கிப் பிளவுபட்டன; துன்பம் ஊன்ற உயிர்பொறை போற்றகில்லாது - துன்பம் மிக்கதனால் உயிராகிய பாரத்தையும் பொறுக்கமுடியாமல் [உயிரோடிருக்க மனமில்லாமல்], ஆழ்ந்தனென் - (உயிரைவிடவேண்டுமென்ற கருத்தை) உறுதியாகக் கொண்டேன்; ஆழ்ந்த என்னை அவ்வாறு (பிராணத்தியாகஞ்செய்யத்) துணிவுகொண்டிருந்த என்னை, அருந்தவன் - (பிறர்க்குச்செய்தற்கு) அரியதவத்தையுடையவனாகிய அந்த லோகஸாரங்கமுனிவன், எதிர்ந்து - எதிரிலே வந்து, தேற்றி - சமாதானஞ் சொல்லி,—(எ - று.)—மேல் ருகூ - ஆங் கவியிலுள்ள 'அளித்தனன்' என்ற வினைமுற்றோடு தொடரும்.

நான் முற்கூறியவாறு கீழ்விழுகையில, லோகசாரங்கமுனிவனுடைய ஆச்சிரமத்தினருகே விழுந்து, அவ்வதிர்ச்சியினாலுண்டான துன்பமிகுதியினால் சூரியபகவான் அனுக்கிரகித்திருக்கவும் உயிர்விடத்துணிந்தேனாக, அக்காலத்தில் அந்த முனிவன் எதிர்வந்து எனக்குத் தேறுதல் கூறினனென்பதாம். நிசாகரமுனிவன் வந்துதேற்றி அநுக்கிரகஞ் செய்ததாக முதனூல் கூறும். தாழ்ந்ததவம் - கருதினதை முடிக்கச் செய்த தவம். உயிர்ப்பொறை - உயிரைப் பொறுப்பது; உடலெனபாரு முளர்.

இதுமுதல் மூன்று கவிகள் - சில பிரதிகளில் இல்லை. (ருஎ)

ருஅ. கற்றிலர்போலவுள்ளக்களிப்பினாலமரர்காப்பூ
டுற்றிடக்கருதிமீப்போயாதபத்துனதுமேனி
முற்றழுன்முருங்கமண்ணைமுயங்கினையினியென்சின்றுண்
மற்றுநின்னுயிரையோம்பாதிகழ்வதுமாலேத்தனருல.

(இ - ள்.) கற்றிலர்போல - படித்தறியாத மூடர்போல, உள்ளம் களிப்பினால் - மனத்தில் தோன்றிய உற்சாகத்தினால், அமரர் காப்பூடு உற்றிட கருதி - தேவர்களது பாதுகாப்புள்ள விடத்திற் [தேவலோகத்திற்] போய்ச்

சோர நினைத்து, மீ போய் - மேலே பறந்து சென்று, உனது மேனி ஆதபத்து முற்று அழல் முருங்க - உனது உடம்பு சூரிய கிரணத்தினது நிரம்பிய வெப்பத்தால் அழிய, மண்ணை முயங்கினை - நீ (மீண்டு) பூமியில் வந்து விழுந்தாய்; இனி - இவ்வாறுநடந்தபிறகு, மற்றும் சில் நாள் நின் உயிரை ஓம்பாது இகழ்வது என - இன்னுஞ்சிலகாலம் [ராமதூதர் இங்கு வருகிறவரையிலும்] உனது உயிரைக் காப்பாற்றமாட்டாமல் வெறுப்புடனே விட்டிடத்துணிவது என்னகாரணம்? மாலைத்து அன்று - (அவ்வாறு உயிரைவிடுவது) நல்லொழுக்கமுமாகாது; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

நீ இறகை இழந்து பெருந்துன்பமடைந்ததற்குக் காரணம் உனது பிழையாயிருக்க, சூரியபகவான் அநுக்கிரகித்ததனால் உனக்கு நற்காலம் வருவது நிச்சயமென்று தெரிந்திருந்தும் அந்நாள் வரையிலும் உயிரை வைத்திராமல் நீ தற்கொலை செய்துகொள்ளத்துணிவது பேதைமையாகுமேயன்றி, நல்லொழுக்கமாகாதென லோகஸாரங்கமுனிவன் எனக்கு நல்லறிவு கூறினனென்பதாம். தற்கொலை செய்பவர்கட்கு அந்ததாமிஸ்ரம் என்ற நரகம் விளையுமென்று தாமசாஸ்திரங்கள் கூறியிருத்தலால், அதனை 'மாலைத்தன்று' என்று மறுத்தனன். காப்பு - காவலையுடைய இடத்திற்கு, ஆகுபெயர். ஆதபம் - நன்றாகத்தபிப்பது என வெயிலுக்குக் காரணக்குறி. (௫அ)

௫௯. களித்தவர்கெடுதறிண்ணஞ்சனகியைக்கபடன்வெளவி
யொளித்தவாய்துருவியுறறவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவநதோங்குமவெவ்வுயிர்த்தயரலென்றன்
றளித்தனனதனலாவியாற்றினேனாற்றன்மொய்ம்பீர்.

(இ - ள்.) ஆற்றல் மொய்ம்பீர் - மிக்க வலிமையையுடைய வானரர்களே! 'களித்தவர் கெடுதல் திண்ணம் - செருக்குக் கொண்டவர் அழிவது நிச்சயம்: (நீ வானுலகத்திற்செல்லுமாறு களிப்புக்கொண்டு மேலே பறந்து சென்றதனால் இந்நிலையையடைந்தாய்); கபடன் - வஞ்சனைக்குணமுடைய இராவணன், சனகியை வெளவி ஒளித்த - சீதாபிராட்டியைக் கவர்ந்து மறைத்து வைத்த, வாய் - இடத்தை, துருவி - தேடிக்கொண்டு, உற்ற - வரப்போகின்ற, வானரர்—, இராமன நாமம் விளித்திட - இராமநாமத்தைச் சொன்னமாத்திரத்தில், சிறைவந்து ஓங்கும் - (சூரியபகவானநுக்கிரகித்தபடியே) உனது இறகுகள் முளைத்து வளரும்; வெவ உயிர்த்து அயரல் - வெப்பமாகப் பெருமூச்சுவிட்டு வருந்தாதே,' என்று—, அன்று-(நான் உயிர்விடத்துணிந்த) அக்காலத்தில், அளித்தனன·(அம்முனிவன) கருணைகொண்டு கூறினன; அதனால்—, ஆவி ஆற்றினேன - (இதுவரையில்) உயிரை வைத்திருநதேன. (எ-று).

அம்முனிவன எனனைத் தேற்றியதனால், உங்கள் வருகையை எதிர்நோக்கி இதுவரையில் நான உயிரைவைத்திருந்தேனெனபதாம். (௫௯)

அன்றியுமலருளவைகுமயனைநேர்முனிவன்வாய்மை
நன்றிகொளீசற்காண்பானனுகலும்வினையேனுற்ற
தொன்றுழிவுறுமற்கேட்டதியோகத்தினுணர்ச்சிபேணிப்
பொன்றுதலொழிநின்யானேபுகல்வதுகேண்மினென்றான்.

தசரதராமன்றேவர் தவத்தினாற்றாய்சொற்றாங்கிக்
கசரததுரகமின்றிக்கானிடையிறுத்தகாலை
வசைதருமிலங்கைவேந்தன்வௌவிய திருவைநாடித்
திசைதிரிகவிகளுற்றாற்சிறகுபெற்றெழுதியென்ன.

இவ்விரண்டு செய்யுள்களும் சில அச்சுப்பிரதிகளிலும், எமக்குக்கிடைத்த பல ஏட்டுப் பிரதிகளிலும் காணப்படவில்லை; இவை இச்சந்தர்ப்பத்திற்கும் ஆவசியகமானவை யல்ல; நன்கு பொருந்தாதனவாயும் இருக்கின்றன; இவற்றை வெள்ளிப்பாட்டென்பர்.

(இவற்றின் கருத்து:—மேலும் பிரமதேவனைப்போன்ற முனிவனொருவன் ஸத்யஸங்கல்பத்வம் முதலிய நற்குணங்களையுடைய கடவுளை ஸாக்ஷாத்கரிக்கும்பொருட்டுத் தவஞ்செய்யுமாறு இங்குவந்தபோது, தீவினையுடைய நான் அடைந்ததை முழுவதையும் வினவிக்கேட்டுத் தெரிந்துகொண்டு தனது ஞானதிருஷ்டியால் இனி வரப்போவதையறிந்து, அம்முனிவன் 'யான் சொல்வதைக்கேள்; நீ இரக்கவேண்டா; வனவாசஞ்செய்யும் இராமபிரானது மனைவியை இராவணன் கவர்ந்து செல்ல, அவளைத் தேடும்பொருட்டுப் பல திசைகளிலுஞ் செல்கின்ற வாநரர்கள் இங்கு வரும்போது நீந்த இறகுகளைப் பெற்றெழுவாய்' என்றான் என்பதாம்).

கூ0. எம்பியுமிடரின்வீழ்வானேயதும் மழுக்கவஞ்சி
யம்பரத்தியங்குமியாணர்க்கழுகினுக்கரசனானே
னம்பிமீரீதென்றன்மைநீரிவணடைந்தவாறறை
யும்பருமுவக்கத்தக்கீருணரவுணர்த்துமினெனவென்றான்.

(இ - ள்.) உம்பரும் உவக்க தக்கீர் - தேவர்களும் வியக்கத்தக்க தொழிலையுடையவர்களாகிய, நம்பிமீர் - சிறந்த வாநரவீரர்களே! (எனக்கு நேர்ந்த வருத்தத்தை நோக்கி) இடரின் வீழ்வான - துன்பத்தில் மூழ்கியவனாகிய, எம்பியும் - எனது தம்பியான ஜடாயுவும், ஏயது மறுக்க அஞ்சி - (யான்) ஏவியதைத் தடுக்கப் பின்வாங்கியவனாய் [எனது கட்டளைக்கு இசைந்து], அம்பரத்து இயங்கும் யாணர் கழுகினுக்கு அரசன் ஆனான் - ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற வலிய கழுகுகளுக்கு அரசனாயினான்; ஈது எம தன்மை - இது தான் எமது வரலாறு; நீர் இவண் அடைந்த ஆறு அறை உணர உணர்த்துமின் - நீங்கள் இங்குவந்த வரலாற்றை (யான்) உணருமபடிசொல்வீராக, என்றான் - என்று கூறி முடித்தான். (சம்பாதி); (எ - று.)

யாணர் - அழகுமாம். 'இடரின் வீழ்ந்தான்,' 'ஆணைக்கழுகினுக்கு,' 'ஈதென்றன்மை,' 'நடந்த வார்த்தை' என்று பிரதிபேதம். (கூ0)

[வாநரர் சீதையைத் தேடிவந்த வரலாற்றைக்கூற சம்பாதி அவ்விஷயத்தில் தனக்குத் தெரிந்ததைக் கூறத்தொடங்குதல்.]

கூக. என்றலுமிராமன்றன்னேவியத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றைத்தேவியைக்கொண்டுபோகந்தான்

றென்றிசையென்னவுன்னித்தேடிநாம்வந்துமென்றார்
நன்றுநீர்வருந்தல்வேண்டாநானிதுநவில்வனென்றான்.

(இ - ள்.) என்றலும் - என்று (சம்பாதி) வினவியவுடனே,—(வானரர்), இராமன்தன்னை ஏத்தினர் இறைஞ்சி - ஸ்ரீராமபிரானைத் துதித்து(த் திக்கு நோக்கி) வணங்கி,—(சம்பாதியைநோக்கி), 'எம் தாய் - எமது தாய்போன்றவனே! புல்தொழில் அரக்கன் - இழிதொழிலையுடைய ராக்ஷஸனாகிய இராவணன், தெனதிசை - தெனதிசைவழியாக, தேவியைகொண்டு போந்தான் - (இராமபிரானது) மனைவியாகிய சீதாபிராட்டியைக் கொண்டு போனான், என்ன உன்னி-என்று நினைத்து, நாம் தேடிவந்தும் - யாங்கள் (அப்பிராட்டியைத்) தேடிக்கொண்டு (இங்கு) வந்துசேர்ந்தோம்', என்றார் - என்று கூறினார்கள்; (அது கேட்ட சம்பாதி), 'நன்று - நல்லது: நீர வருந்தல் வேண்டா-நீங்கள் வருந்தாதீர்கள்; நான இது நவில்வன - நான் இவவிஷயத்தைப்பற்றிச் சிறிதுசொலவேன', என்றான - என்று (அவவரலாற்றைக்) கூறலானான்; (எ - று.)—அதனை, அடுத்த கவியிற் காண்க.

பிறர்மனைவியரைக்கவருந் தீக்குணமுடையவனாதலின், இராவணனை 'புனதொழிலரககன்' என்றார். எநதாய் - அண்மைவிளி; 'எந்தை' என்பதன் ஈறுதிரிந்தவிளியெனககொண்டு, எனது தந்தைபோல்பவனே எனினுமாம். மறறை - அசை. வநதும் - தனமைப்பன்மை யிறந்தகாலவினைமுற்று; 'தும்' விகுதி - இறந்தகாலங காட்டிற்று. (சுக)

[இராவணன் சீதையைச் சிறையில் வைத்துள்ளதைச் சம்பாதி தெரிவித்தல்.]

சுஉ. பாகொன்றுகுதலையாளைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுகண்டேன்புக்கனனிலங்கைபுக்கு
வேகின்றவுளளததாளைவெஞ்சிறையகத்துவைத்தா
னகுமின்காண்டிராங்கேயிருநதனளிறைவியின்னும்.

இதுவும், அடுதத கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) பாகு ஒனறு குதலையாளை - சர்க்கரைப் பாகுபோன்ற [மிக இனிய] மழலைச்சொற்களை யுடையவளாகிய சீதையை, பாதகன் அரக்கன் பற்றி போகினற பொழுது - பாவியாகிய இராவணன கவர்ந்து செல்கின்ற பொழுதில், கண்டேன - பார்த்தேன்; இலங்கைபுக்கனன்-(அவவிராவணன்) இலங்கையிற் சேர்ந்தான்; புக்கு - அவவாறு சேர்ந்து, வேகின்ற உள்ளத் தாளை வெம் சிறைஅகத்து வைத்தான - தவிக்கின்ற மனமுடையவளாகிய அச்சீதையைக் கொடிய சிறைக்காவலில் வைத்திட்டான்; இறைவி இன்னும் ஆங்கே இருந்தனள் - சீதாபிராட்டி இப்போதும் அங்கேயே இருக்கிறாள்; ஏகுமுன காண்டிர - (நீங்கள்) அங்குச் சென்று காணுங்கள்; (எ-று.)

'ஏகொனறிற் காண்டிராங்கிலிருக்குநள்' என்ற பாடத்துக்கு - நீங்கள் இங்கிருந்து சென்றால் அங்குககாணலாம் என்று பொருளாம்.

'போகினறபொழுதுங் கண்டேன்' என்று சிலபிரதிகள். (சுஉ)

[இலங்காபுரியின் கிட்டுதற்கருமையைச் சம்பாதிவானரர்க்குத் தெரிவித்தல்]

௬௩. ஓசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துக்கூற்றுங்கட்புலன்பரப்பவஞ்சு
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்க
ளேசறுங்குணத்தீர்சேறலெப்பரிசியைவதென்றான்.

(இ - ள்) ஒலி கடல் இலங்கை - ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட அவ் விலங்கா புரியானது, ஓசனை ஒரு நூறு உண்டு - (இங்கிருந்து) நூறுயோசனை தூரத்தி லுள்ளது; அ ஊர் - அவ்விலங்காபுரியினிடத்து, வெம் பாசம் கரத்து கூற்றும்-கொடிய பாசாயுதத்தைக் கையிற்கொண்டுள்ள யமனும், கண் புலன் பரப்ப அஞ்சும் - தனது கண்பார்வையைச் செலுத்த அஞ்சுவான்; நீசன் அ அரக்கன் சீற்றம் - இழிகுணமுடையவனான அவ்விராவணனது கோபமோ, நெருப்புக்கும் நெருப்பு - அக்கினியையும் அடக்கவல்ல ஓர் அக்கினிபோன்ற தாகும்; ஏசு அறும் குணத்தீர்-குற்றமற்ற நற்குணமுடையவர்களே! நீங்கள்—, சேறல் - அங்குச் செல்லுதல், எ பரிசு இயைவது - எவ்வாறு கூடும்? [அங்குச் செல்லுதல் உங்கட்கு ஒருவாற்றாலும் முடியாது], என்றான் - என்று (சம்பாதி) கூறினன்; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

இராவணனிடத்திலுள்ள அச்சத்தால் யமனும் அவ்விலங்கையைக் கண்ணெடுத்துப் பார்ப்பதற்கும் அஞ்சுவானென்பது, இரண்டாமடியின் பொருள். மூன்றாமடி, இராவணனது மிக்க கோபத்தின கொடுமையை விளக்கும். பாசம் - கயிற்றுவடிவான ஆயுதம்; இது, யமனுக்கு உரியது.

'யோசனை யெழுநூறுண்டால்,' 'இயைவதென்னு' என்றும்பாடம். ( )

[சம்பாதி கடலின் கடத்தற்கு அருமையைத் தெரிவித்தல்.]

௬௪. நான்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகனிற்க
பான்முகப்பரவைப்பள்ளிப்பாம்பணைப்பரனென்றாலுங்
காலனுக்கேயுஞ்சேறலரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச்செல்லுமின்விளிவிலாளீர்.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) நால்முகத்து ஒருவன் - (நான்குதிசைகளையும் நோக்கிய) நான்கு முகங்களையுடைய பிரமதேவனும், மற்றை நாரி ஓர் பாகன்-மற்றொரு மூர்த்தியாகிய பார்வதியை இடப்பக்கத்திற்கொண்ட சிவபிரானும், நிற்க - நிற்கட்டும்: பால் முகம் பரவை பள்ளி பாம்பு அணை பரன் என்றாலும் - பாலைத் தன்னிடத்திலேயுடைய சமுத்திரத்தில் [திருப்பாற்கடலில்] பாம்பணையிற் பள்ளிகொண்டுள்ள சிறந்த திருமாலேயானாலும், காலனுக்கு ஏயும் - யமனுக்கேயென்றாலும், சேறல் அரிது-உட்புகுந்து செல்லுதலென்பது கூடாத தாகும்; இது கடலின் தன்மை - இது (இடைவழியிலுள்ள) கடலின் தன்மையாகும்; விளிவு இல் நாளீர் - அழிதலில்லாத [நீண்ட] ஆயுட்காலத்தையுடையவர்களே! மேல் உமக்கு உறுவது எண்ணி செல்லுமின் - இனிமேல் உங்கட்கு நேரக்கூடியவற்றை முன்னமே ஆலோசித்துச் செல்லுங்கள்; (எ - று.)

இடையிலுள்ள கடலோ திரிமூர்த்திகளாலும் யமனாலும் கடந்து செல்ல வேண்டுமென்று நினைத்தாலும் முடியாததாம்; இவ்விஷயத்தில் முன்னமே ஆலோசித்து உசிதப்படி செய்யுங்களென்பதாம். 'காலினுக்கேயும்' என்ற பாடத்துக்கு வாயுபகவானுக்கேயென்றாலும் என்று பொருள்.

'நாரியோர்பாகன்' என்பதி லடங்கிய கதை:—முன்னொரு காலத்திற் கைலாசகிரியிலே சிவபிரானும் உமாதேவியும் ஏகாசனத்தில் நெருக்கமாக வீற்றிருந்தபொழுது, பிருங்கியென்னும் மகாமுனி பரமசிவனைமாத்திரம் பிரதட்சிணஞ்செய்ய விரும்பி, ஒரு வண்டு வடிவமெடுத்து அவ்வாசனத்தை இடையிலேதுளைத்துக்கொண்டு அதன்வழியாய் நுழைந்துசென்று, அம்பிகையைவிட்டுச் சிவபிரானைமாத்திரம் பிரதட்சிணஞ்செய்ய, அதுகண்ட பார்வதிதேவி தன்பதியை நோக்கி 'முனிவன் என்னைப் பிரதட்சிணம் செய்யாமைக்கு ஏது என்ன?' என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இம்மை மறுமைகளில் இஷ்டசித்திபெற விரும்புபவர் உன்னையும் முத்திபெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்; இது நூற்றுணிபு' என்று சொல்ல, அதுகேட்ட தேவி 'இறைவன் வடிவத்தைப் பிரிந்து தனியே யிருந்ததனாலன்றோ எனக்கு இவ்விழிவு நேர்ந்தது' என்று இரங்கி, தான் சிவபிரானை விட்டுப் பிரியாதிருக்குமாறு கருதி, புண்ணிய க்ஷேத்திரமான கேதாரத்திற் சென்று தவம்புரிந்து வரம்பெற்று அப்பிரானது வடிவத்திலே இடப்பக்கத்தைத் தனக்கு இடமாக அடைந்து அவ்வடிவிலேயே தான் ஒற்றுமைப்பட்டு நின்றனளென்பதாம். இங்ஙனம் வலப்பக்கம் சிவரூபமும் இடப்பக்கம் பார்வதிரூபமுமாகுமாறு தனது வடிவத்தில் ஒருபங்கை அம்பிகைக்குக் கொடுத்துத் தான் ஒருபங்காயுள்ள சிவபிரான் அர்த்தநாரீசுவர மூர்த்தியாவன்.

'நாரியோர்பாகத்தண்ணல்', பளளிப்பரம்பரன்பணி யென்றாலும்', 'சேறலரிதது காவற்றன்மை,' 'மேலுமக்கேயுந்தன்மைவிளம்புதிர்' என்று பாடாந்தரங்கள். (கூச)

[இனிச் செய்யவேண்டுவதைப்பற்றிச் சம்பாதி ஆலோசனை கூறுதல்.]

கூரு. எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகிமறைந்தவணொழுகிவாய்மை
சொல்லீரேதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீடி
ரல்லீரேலென்சொற்றேறியுணர்த்துமினழகற்கம்மா.

(இ - ள்.) அ இலங்கை மூது ஊர் - பழமையாகிய அந்த இலங்காபுரிக்கு, எல்லீரும் சேறல் என்பது - நீங்களெல்லீரும் (ஒருங்கே) போதலென்பது, எளிது அன்று - கூடாதகாரியமாகும்; வல்லீர் எல் - வல்லமையுள்ளவராயின், ஒருவர் - (உங்களுக்குள்) ஒருவர் மாத்திரம் [வல்லமை சாலியான ஒருவர் மாத்திரம்], ஏகி - சென்று, அவண் மறைந்து ஒழுகி - (அங்குள்ளவர்களாற் காணமுடியாதபடி) அங்கே மறைந்து வசித்து, வாய்மைசொல்லீர் - (இராமபிரான கூறியருளிய) உண்மையான வார்த்தையைச் சொல்லியவர்களாய், தோகையை துயரை நீக்கி தெருட்டி - சீதையினது துன்பத்தை நீக்கி அவளைத்தெளியச்செய்து, மீடிர் - திரும்புங்கள்; அல்லீர் எல் - அல்லாவிட்

டால், என் சொல் தேறி - எனதுவார்த்தையை நம்பி, அழகற்கு - (கட்டழகு டையவனான) இராமபிரானிடத்தில், உணர்த்துமின் - (சீதை இலங்கையிற் சிறையிலிருக்கிறாளென்பதைத்) தெரிவியுங்கள் ; (எ - று.)

அம்மா - 'அம்ம' என்பதன் நீட்டல்; (யான்சொல்வதைக்) கேளுங்கள் என்று பொருள்படும்; "அம்ம கேட்பிக்கும்."

'சேறலென்றற்கெளிதன்று.' 'சொல்லீரேபாகரீறத்தோளையைத் தெருட்டிமீள, வல்லீரேல்.' 'மகிணர்க்கம்மா' என்று பிரதிபேதம். (கரு)

[சம்பாதி வாநரரிடம் விடைகேட்டுக்கொண்டு செல்லுதல்.]

கக. காக்குந ரின்மை யாலக் கழுகின முழுதுங் கன்றிச்
சேக்கைவிட் டிரியல் போகித் திரிதரு மதனைத் தீர்ப்பான்
போக்கெனக் கடுத்த நண்பீர் நல்லது புரிமி னென்று [ன்.
மேக்குற விசையிற் சென்றான் சிறையினால் விசும்பு போர்ப்பா

(இ - ள்.) காக்குநர் இன்மையால் - பாதுகாப்பவ ரில்லாமையால், அ கழுகு இனம் முழுதும் - அந்தக்கழுகின் கூட்டங்கள் முழுவதும், கன்றி - வருந்தி, சேக்கை விட்டு இரியல் போகி திரிதரும் - தமது இருப்பிடத்தை விட்டு நிலைகெட்டுத் தடுமாறிப்போம்; அதனை தீர்ப்பான்-அத்தடுமாற்றத்தை நீக்கிப் பாதுகாக்கும்பொருட்டு, போக்கு எனக்கு அடுத்த (து) - போதற்கு உரிய காரணம் எனக்கு நேர்ந்துவிட்டது; நண்பீர் - நண்பர்களே! நல்லது புரிமின் - (ஆலோசித்து யான் கூறிய இரண்டுவகையுள்) நன்மைதரக் கூடியதைச் செய்யுங்கள், என்று - என்று சொல்லிவிட்டு,—சிறையினால் விசும்பு போர்ப்பான் - (தனது) இறகுகளினால் வானத்தை மறைப்பவனாகிய சம்பாதி, மேக்கு உற விசையின் சென்றான் - ஆகாசவழியாக விரைவாய்ப் பறந்து போனான்; (எ - று.)

'இதுவரையில் ஜடாயுவின் ஆணைக்கு உட்பட்டிருந்தகழுகுகள் அந்த ஜடாயு இறந்ததைப்பற்றிப் பாதுகாப்பவரில்லாமல் எளியவற்றை வலியவை வருத்த நிலைகெட்டு வருந்துமாதலால், அவற்றைப் பாதுகாக்கும்பொருட்டு யான் விரைந்துசெல்லவேண்டி யிருக்கிறது. ஆகையால், செல்லுகின்றேன்; நீங்கள் யான் சொல்லியவற்றுள் ஏற்றதைச் செய்யுங்கள்' எனக் கூறி, சம்பாதி ஆகாயமார்க்கமாகப் பறந்துசென்றனனென்பதாம். அக்கழுகினம் - முன்பு ஜடாயுவினாற் பாதுகாக்கப்பட்ட கழுகுகள் என்றபடி; அகரம் - கெஞ்சறிசுட்டு. சேக்கை - பறவைகளின்கூடு.

'காக்குநரில்லையால்', 'அதனைத்தீர்க்க', 'போக்கெனக்கடுத்ததையா' என்று பிரதிபேதம். (கசு)

சம்பாதிப்படலம் முற்றிற்று.

பதினான்காவது

# மகேந்திரப் படலம்.

மகேந்திர மலையைச் சார்ந்த வாநரவீரர் அங்குச் செய்த செய்தியை யுணர்த்தும் பாகம். சம்பாதியின் சொல்லால் சீதையிருக்குமிடத்தை நன்கு உணர்ந்த வாநரர் தாம்செய்யவேண்டுவதைப்பற்றி ஆலோசித்தலும், சமுத்திரத்தைக் கடந்து செல்வதில் தம் தமக்குள்ள திறமையைக்குறித்துச் சிலர் கூறுதலும், ஜாம்பவான் புகழப் பிறகு தனது பேராற்றலை யுணர்ந்த அநுமான் தான் கடல் கடப்பதாக உடன்படுதலும் முதலியன இப்படலத்திற் கூறப்படுகின்றன.

வேறு.

[இதுவும், அடுத்த கவியும் - வாநரர் செய்யவேண்டுவதைப்பற்றித் தமக்குட் சொல்லிக்கொள்ளுதல்.]

க. பொய்யுரை செய்யான் புள்ளர சென்றே புகலுற்றார்
கையுறை நெல்லித் தன்மையி னெல்லாங் கரைகண்டா
முய்யுரை பெற்றா நல்லவை யெல்லா முறவெண்ணிச்
செய்யுமி னென்றே செய்வகை நொய்தின் செயவல்லீர்.

உ. சூரியன் வெற்றிக் காதல னோடுஞ் சுடர்விற்கைக
யாரிய னைச்சென் றேதொழு துற்ற தறைகிற்பின்
சீர்நிலை முற்றுந் தேருதல் கொற்றச் செபலம்மா
வாரிக டப்பார் யாவ ரெனத்தம் வலிசொல்வார்.

இரண்டுகவிகள்-ஒருதொடர்; ஆதலால், ஒருங்கே உரைக்கப்படுகின்றன.

(இ - ள்.) (க) புள் அரசு பொய் உரைசெய்யான் என்றே புகல் உற்றார் - 'கழுகுகட்கு அரசனாகிய சம்பாதி பொய்சொல்லமாட்டான்' என்று உறுதியாக நினைத்துச் சொல்லத்தொடங்கிய சிலவாநரர்கள்,—(மற்றை வாநரரை நோக்கி), 'செய் வகை நொய்தின் செய வல்லீர் - செய்தற்கு உரிய தொழில்களை விரைவிற் செய்துமுடிக்க வல்லவர்களே! (சம்பாதிகூறியவற்றால்), கை உறை நெல்லி தன்மையின் எல்லாம் கரைகண்டாம் - கையிற் கொண்ட நெல்லிக்காயின் தன்மைபோல (ச் சீதாபிராட்டியின் செய்தி) முழுவதையும் நன்றாக அறிந்தோம்; (ஆகவே), உய் உரை பெற்றாம்-பிழைத்துப்போதற்கு உரிய வார்த்தையைப் பெற்றவரானோம்; (இனி), நல்லவை எல்லாம் உற எண்ணி ஒன்று செய்யுமின் - செய்தற்கு உரிய தொழில்கள் முழுவதையும் நன்றாக ஆலோசித்து (ச் சம்பாதிகூறிய இரண்டில் ஏதேனும்) ஒன்றைச் செய்யுங்கள்; (உ) சூரியன் வெற்றி காதலனோடும் - சூரியனது வெற்றிபெற்ற [சிறந்த] குமாரனாகிய சுக்கிரீவனையும், சுடர் வில் கை ஆரியனை - ஒளிபொருந்திய வில்லைக் கையிற்கொண்டவனாகிய சிறந்த இராமபிரானையும், சென்று தொழுது - போய் வணங்கி, உற்றது அறைகிற்பின் - நிகழ்ந்ததைக் கூறினால், சீர் நிலை முற்றும் - சிறந்த (நமது) கடமை ஒருவாறு முடிவுபெறும்; (ஆயினும்), தேருதல்-(நாமே கடல்கடந்து சீதாபிராட்டி

புள்ள விடத்தைக்) கண்டு தெளிதல், கொற்றம் செயல் - வீரச்செயலாகும்; (இவ்வாறு செய்யத்துணிந்தால் கடலைக்கடக்கவேண்டுமே); வாரி கடப்பார் யாவர் - கடலைக்கடக்கின்ற வல்லமையுள்ளவர் (நம்முள்) எவர்?' என - என்று சொல்லி, தம் வலி சொல்வார் - தமதம்வலிமையை எடுத்துக் கூற லானார்கள்; (எ - று.)— அதனை, அடுத்த நாலாகு கவிகளிற் காண்க.

'சம்பாதி கூறியதெல்லாம் உண்மையேயா மாதலின், அவனது சொல் லின்படி ஏதேனுமொன்றைச் செய்தலே நலமாகும்; நாம் சென்றுதேடா மலே சம்பாதிவார்த்தையை நம்பி மீண்டு இராமசுக்கிரீவரையடைந்து சீதை இலங்கையிலிருத்தல் முதலியவற்றை எடுத்துக் கூறினாலும் நமது கடமை முடிவுபெறும்; அன்றி, நாம் கடல்கடந்து சென்று இலங்கையிற்புக்குச் சீதா பிராட்டியைக் கண்கூடாகக்கண்டு வந்து செய்தி தெரிவிக்கலாமென்றால், அது முற்கூறிய அதனிலுஞ் சிறந்ததே; ஆனால், அவ்வாறு செய்தற்குக் கடலைக் கடக்கவேண்டுமே! அங்ஙனம் கடலைக்கடந்து சென்று மீளும் வல்லமை யுள்ளவர் யாவர்?' என்று வானரவீரர் ஆலோசித்துத் தமதம்வலிமையை எடுத் துக் கூறலானார்க ளென்பதாம்.

க. 'பொய்யுரைசெய்யான' என்றது - சம்பாதி உண்மையையே கூறு வானென்று நமக்குத் தெளிவாக விளங்குதலின், நாம் நேரிற்சென்று சீதா பிராட்டியைக் காணுவிடினும் மீண்டு சுக்கிரீவனிடத்தும் இராமபிரானிடத் தும் இச்செய்தியை நமபிக் கூறலாமென்ற கருத்தை விளக்கும். கையுறை நெல்லிக்கனி - மேலுள்ள தோற்றத்தைக்கொண்டு உள்ளிவாமுழுவதையும் தெளிவாக அறிதலில் உவமமாம். கையுறைநெல்லி - 'கரதலாமலகம்' எனப் படும். 'சீதாபிராட்டியைப்பற்றிய செய்தியொன்றும் தமக்குத்தெரியாமை யாலும், தவணைகடந்தமையாலும், இனி மீண்டுசென்று மகாராஜாது கோபத் திற்கு இலக்காவதினும் உயிரைவிடுதலே நன்று' என்று தாம் இறப்பதற்குத் துணிந்தநிலையில எதிர்வந்து சம்பாதி தனது உண்மைமொழிகொண்டு தேறச் செய்ததனால், 'உயயுரை பெற்றும' என்றார். 'செயவகை நொய்திற் செயவல்லீர்' என்றது - இனிக் காலம் போக்காமல ஏதேனுமொன்றை நிர் ணயித்து விரைவிற் செய்யவேண்டுமென்ற குறிப்பு. 'புள்' என்ற பொதுப் பெயர், சிறப்பாய்க் கழுகுகளை யுணர்த்திற்று.

உ. அம்மா-வியப்பிடைச்சொல்; சீதையை நேரிற்கண்டு மீண்டு செய்தி தெரிவித்தலே சிறந்ததென்பதைக் குறிப்பிக்கும். வாரி - நீர்; கடலுக்கு, இலக்கணை.

(க) 'புள்ளரசின்னே புகலுற்றான்,' 'கரைகண்டான்,' 'மெய்யுரை பெற்றோ நல்லவையெல்லாமிகவெண்ணி,' (உ) 'அறைகிற்பீர்,' 'சீரிதின்முற் றும்,' 'சீருதனமுற்றும' என்பன பாடாந்தரங்கள். சிலபிரதிகளில் இரண்டு மூன்றுஞ் செய்யுள்கள் முன்பினுக மாறிக்காணப்படுகின்றன.

இப்படலத்தின் முதலிருபதுகவிகள்-முதற்சீரும் மூன்றுஞ்சீரும் விளச் சீர்களும், இரண்டுநான் காஞ்சீர்கள் மாச்சீர்களும், ஐந்தாஞ்சீர் காய்ச்சீருமாக வந்த நெடிலடிநானகுகொண்ட கலிநிலைத்துறைகள். (க, உ)

[இதுவும், அடுத்த கவியும் - வானரவீரரிற் பலர் கடல்கடந்துமீளுதல் தம்மாலாகா தென்றல்.]

௩. மாளவலித்தேமென்றுமிம்மாளாவசையோடு
மீளவுமுற்றேமன்னவைதீரும்வெளிபெற்றேங்
காளநிறத்தோடொப்பவர்மாயக்கடறாவுற்
றாளுநலத்தீராளுமினெம்மாருயிரம்மா.

(இ - ள்.) 'மாள வலித்தேம் - (தலைவனைகடந்துவிட்டதனால் முதலில்) இறத்தற்குத் துணிவுகொண்டிருந்தோம்; என்றும் மாளா இ வசையோடு மீளவும் உற்றேம் - எப்போதும் அழியாத இந்தப்பெரும்பழியுடனே மீண்டு செல்லவும் துணிந்தோம்; (பிறகு), அன்னவை தீரும் வெளி பெற்றேம்-(சாதலும் மீண்டுசெல்லுதலுமாகிய) அவவிரண்டும் நீங்குமபடியான ஒருநல்லவழியை(ச் சம்பாதியினவார்த்தையால) அடைந்தோம்: காள நிறத்தோடு ஒப்பவர் மாய - கருநிறத்தைப்பொருந்தியவராகிய அரக்கர்கள் அழியும்படி, கடல் தாவுற்று - சமுத்திரத்தைக் கடந்து, ஆளும் - வீரங்காட்டவல்ல, நலத்தீர் - சிறப்புடையவர்களே! எம் ஆர் உயிர் ஆளுமின - (அவவாறுசெய்து) எமது அருமையான உயிரைப் பாதுகாவுங்கள்,' (என்று சிலவானரர் கூறினார்கள்.)

இச்செய்யுளில் எற்ற வினைமுதலும், பயனிலையும், வருவித்து உரைக்கப்பட்டன. "மாண்டுறுவதுநலமெனவலித்தனம" என்று முதலில் தமது உயிரை விடுமாறு வானரர் கருதியதனால் 'மாளவலித்தேம்' என்றும், அங்கதன் தான் இறக்க மறறையோா திரும்பிச்செல்ல வேண்டுமெனவும, தாம் இறக்க இளவரசனாகிய அங்கதன் மீண்டுசெலலுதலே தகுதியெனவும் இவவாறு வானரர்கட்குள் வார்த்தை நிகழ்ந்ததனால் 'என்றும் இம்மாளாவசையோடு மீளவுமுற்றேம்' என்றும, அப்போது சம்பாதி தோன்றிச் சீதையிருக்குமிடத்தைத் தெரிவித்துச் செய்யவேண்டுவனவற்றைத் தெளிவித்தானாதலின 'அன்னவைதீரும் வெளி பெற்றேம்' என்றுங் கூறினா. கடல் கடந்து சென்று பிராட்டியைககண்டு மீளாவிடின, கடுந்தண்டனையுடைய சுக்கிரீவமகாராஜனது கோபத்தீயினினறு தப்புதலரிதாமாதலால், இவவரியகாரியத்தைச் செயதுமுடித்து எமதுஉயிரைத் தப்புவிக்க வேணடுமென்று சில வானரவீரர் வேண்டினரென்பது, கருத்து; இதனால், தமக்குக் கடல்கடந்துமீளுந்திறமில்லையென்று அவாகள வெளியிட்டவாறும். அரக்கா கருநிறமுடையவராதலின், அவர்களை 'காளநிறத்தோடொப்பவர்' என்றா. கடலைக்கடந்து செல்லுந் திறமை ஏற்படின பிறகு அரக்கர்மாய்தல் திண்ணமென்பார், 'காளநிறத்தோடொப்பவர்மாயக்கடறாவுற்று' என்றார். ஒப்பவர் - பொருந்தியவர். காளம் - விஷமுமாம. எம்மாருயிரம்மா - ப்ராஸம்.

'அனறெனினமாளாவசையோடும்,' 'மீளவுமுற்றும்,' 'விளிபெற்றேம்,' 'காளநிறத்தோடொப்பனவிங்கோர்கடறாவுற்று' என்று பிரதிபேதம். (௩)

௪. நீலன்முதற்போபோர்கெழுகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளமிடுகினென்றனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான்.

(இ - ள்.) போர் கெழு கொற்றம் நீலன் முதல் பேர் கெழு வீரர் - போரில் மிக்க வெற்றியடைதற்கு உரிய நீலன் முதலாகிய சிறந்த வானர வீரர்கள்,—வாரி கடக்கும் தகவு இன்மை-கடலைத் தாண்டிச் செல்லும் வல்லமை (தங்கட்கு) இல்லாமையை, சால உரைத்தார் - வெளிப்படையாகக் கூறிவிட்டார்கள்; வாலி அளிக்கும் வீரம் வயம் போர் வசை இல்லான் - வாலியினாற் பெறப்பட்டவனும் வீரத்தையும் வெற்றியையும் காட்டவல்ல போரிற்பழிப்பில்லாதவனுமாகிய அங்கதன், 'வேலை கடப்பன் - சமுத்திரத்தைக் கடந்து (அக்கரையிலுள்ள இலங்கை) செல்வேன் (யான); மீள இடுக்கு இன்று - (அங்கிருந்து) மீண்டுவரும் வல்லமை (எனக்கு) இல்லை,' என விட்டான் - என்று கூறிவிட்டான; (எ - று.)

கீழ்க்கவியில் சாதாரணமான வானரர்கள் தமக்குக் கடல்கடக்கும் வல்லமையில்லையெனறதை வெளியிட்ட கவியானவா, சிறந்தவானரர்கள தம்மாலாகாதென்று கூறியதை இச்செய்யுளால் வெளியிடுகின்றன ரென்க. நீலன் முதலியோர் 'எமக்குக கடல்கடந்துசெல்லுதல் அடியோடுமுடியாது' என்று சொல்ல, அங்கதன் 'கடல்கடந்துசென்று சீதையின செய்தியையுணரவல்ல வல்லமை எனகு இருந்தும், சென்ற மாத்திரலுண்டான இளைப்பினால் வலிமைகுன்றி மீணடுவரும் வல்லமை யில்லாமையால் யான சென்றும் பயனில்லை' என்று கூறினனென்பதாம.

'நீலன முதரபோரகிய' என்றும் பாடம. (ஏ)

[இதுவும், அடுத்த கவியும் - ஒரு தொடர்; ஜாம்பவான் தன்னாலும் கடல் கடத்த லாகா தென்றல்.]

ரு. வேதமனைத்துந்தேர்தரவெட்டாவொருமெய்யன
பூதலமுற்றுமோரடிவைத்துப்பொலிபோழ்திபான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைதத்தேவரமேரு
மோதவிளைத்தேதாளுலைவுற்றேறன்விறன்மொய்ம்பீர்.

க. ஆதலினிப்போராகவிகுப்புற்றகழிஞ்சீ
மீதுகடத்தித்தீயவருட்குமவினையோடுஞ்
சீதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றென்
றோதியிறுத்தாளுமுகத்தானுதவுற்றான்.

இவ்விரண்டு கவிக்கும் ஒருங்கே பொருள் உரைக்கப்படும்.

(இ - ள்.) (க) நாலுமுகததான் உதவுற்றான் - நான்குமுகங்களையுடைய பிரமதேவனாற் பெறப்பட்டவனாகிய ஜாம்பவான்,-(மற்றையோரை நோக்கி), (ரு) 'விறல் மொய்ம்பீர் - தோள்வலிமையுடையவர்களே! வேதம் அனைத்தும் தேர்தர எட்டா ஒரு மெய்யன பூதலம் முற்றும் ஓர் அடிவைத்து பொலிபோழ்து - வேதங்களெல்லாந் தேடிப்பார்க்கவும் அகப்படாத ஒப்பற்ற சொரூபத்தையுடையவனாகிய திருமால (திரிவிக்கிரமாவதாரஞ்செய்து) பூமி முழுவதையும் தனது (இரண்டு திருவடிகளுள்) ஓரடியின்வைப்பினால் அளந்து விளங்கின காலத்தில், யான்—, மாதிரம எட்டும் சூழ் பறை வைத்தே வர - எட்டுத் திக்குக்களிலும் பிரதட்சிணமாக வந்து பறையடித்து (அப்பகவானது வெற்றியைத் தெரிவித்துக்கொண்டு) வருகையில், மேரு மோத - மேருமலை

யானது தாக்கியதனால், இளைத்து - வலிமைகுன்றி, தாள் உலைவு உற்றேன் - கால்வருந்தினேனை; (௬) ஆதலின் - ஆதலினால், இ பேர் ஆர்கலி குப்புற்று - இந்தப் பெரிய கடலினமீது எழும்பித்தாவி, அகழ் இஞ்சிமீது கடத்தி-அகழியைச்சார்ந்த (இலங்காபுரியின்) மதிளின்மீது குதித்து (உட்சென்று), தீயவர் உட்கும் வினையோடும் - கொடியவர்களாகிய அந்நகரத்திலுள்ள அரக்கர்கள் அஞ்சித்தக்க செயலுடனே, சீதைதனை தேரா - சீதாபிராட்டியைத் தேடிக் கண்டு, வர - (மீண்டு இங்கு) வருதற்கு, முற்றும் திறன் இன்று - முழுவலிமை (எனக்கு) இல்லை,' என்று—, ஓதி இறந்தான - சொல்லிமுடித்தான்.

'திரிவிக்கிரமாவதாரகாலத்தில் உலகமுழுதும் நிரம்பிய திருமாலின் திருவடிவைத் தரிசித்துக்கொண்டே பலமுறை பூமியைப் பிரதட்சிணஞ்செய்து வருகையில் மேருமலை என்னுகாலிற்பட்டுக் கால் சிறிது ஊனமானதால், இப்போது கடல்கடக்கும் வலிமை யில்லாதவனாயினே னென்று ஜாம்பவான் கூறினனென்க விறல் - வலிமை, மொய்ம்பு - தோள்.

௫. வேதங்களெல்லாவற்றாலும் இன்னபடிதான் உள்ளதென்று ஆராய முடியாமல் நிற்கும் பரம்பொருளாவன் திருமாலென்பது, 'வேதமனைத்துந் தேர்தரவெட்டா வொருமெய்யன' என்பதன பொருள். வேதம் - (விதிவிலக்குக்களால் நன்மை தீமைகளை) அறிவிப்பது; வடசொல். எட்டுமாதிரங்களாவன - கிழக்கு முதலிய பெருந்திசைகள நான்கும், தென்கிழக்கு முதலிய கோணத்திசைகள நான்குமாம்.

'ஈரடிவைத்து,' 'பொலிபோழ்தின்' என்று பிரதிபேதம்.

௬. ஆர்கலி - நிறைந்த ஓசையையுடையது எனக் கடலுக்குக் காரணப் பெயர்; வினைத்தொகையனமொழி. குப்புறுதல் - குதித்தல். அகழப்பட்டது - அகழ்; பெயர்.

'ஆதலினிப்போதாழ் கடல் குப்புற்று,' 'ஆதலினிப்போதாகுலைகுப்புற்ற கவஞ்சி' என்றபாடங்கள காணப்படுகின்றன. (௫, ௬)

[இதுவும், அடுத்த கவியும் - ஒருதொடர்; ஜாம்பவான் அநுமானை கடலைக் கடத்தற்கு உரியவனென்று அங்கதனிடந் தெரிவித்தல்.]

௭. யாமினியிப்போதாரிடர்துய்த்திங்கினியாரைப்
போமெனவைப்போமென்பதுபுன்மைப்புகழன்றே
கோமுதலவர்க்கேறாகியகொற்றக்குமாரநந்
நாமநிறுத்திப்பேரிசைதைக்குநவையில்லோன்.

௮. ஆரியன்முன்னர்ப்போதுறவுற்றவதனானுங்
காரியமெண்ணிச்சோர்வறமுற்றுங்கடனானு
மாருதியொப்பார்வேறிலையென்னாவயன்மைந்தன்
சீரியன்மற்றோருளாண்மைதெரிப்பானிவைசெப்பும்.

இரண்டு கவிகட்கும் ஒருங்கே பொருளுரைக்கப்படும்.

(இ - ள்.) (அ) அயன் மைந்தன் - பிரமதேவனது புதல்வனாகிய ஜாம்பவான், (எ) (அங்கதனை நோக்கி),—'கோ முதல்வர்க்கு ஏறு ஆகிய கொற்றம் குமார - வானரராஜ வமிசத்தில் மேன்மையடைந்தவர்கட்குள் சிங்கம்போற்

சிறந்தவனாகிய வெற்றிபெற்ற அங்கதகுமாரனே! யாம் இனி இப்போது ஆர் இடர் துய்த்து இங்கு இனியாரை போம் என வைப்போம் - நாம் இப்போது பெருந்துன்பத்தை யனுபவித்துக்கொண்டு இனிமேல் இங்கு வேறு யாரைத் தான் கடல்கடந்து செல்வீரென்று வேண்டிக்கொள்வோம்? என்பது - இவ்வாறு நினைப்பதும், புன்மைப் புகழ் அன்றே - (நமது) புகழுக்கு இழிவாகு மல்லவோ? (அ) ஆரியன் முன்னர் போது உற்ற அதனானும் - (முதலில்) இராமபிரானது எதிரிற்சென்று (இராமபிரானுக்கும் சுக்கிரீவமகாராஜனுக்கும்) நட்புச்செய்வித்த அத்தன்மையாலும், காரியம் எண்ணி சோர்வு அற முற்றும் கடனானும் - செய்தொழிலை ஆராய்ந்து சிறிதும் சோம்பலின்றி முடிக்குங் கடப்பாடுடைமையாலும், (எ) நம் நாமம் நிறுத்தி பேர் இசை ஆக்கும் நவை இல்லோன் - நமது பெயரை நிலைநிறுத்திப் பெரும்புகழை (நமக்கு) உண்டாக்கவல்ல குற்றமற்றவன், (அ) மாருதி - அநுமானேயாவன்; ஒப்பார் - அவனை ஒப்பவர், வேறு இலை - வேறே ஒருவருமில்லை,' என்று - என்று சொல்லி, சீரியன் மல் தோள் ஆண்மை தெரிப்பான் - சிறந்தவனாகிய அந்த அநுமானது மற்போர்க்கு உரிய தோள்களின் வீரத்தைத் தெரிவிக்கும் பொருட்டு, இவை செப்பும் - இவ்வாறான துதிமொழிகளை (அநுமானை நோக்கிக்) கூறலானான்; (எ - று)—அவற்றை, அடுத்த பத்துக்கவிகளிற்காண்க.

பெருங்கூட்டமாகத் திரண்டுள்ள நமக்குள் கடல்கடக்கும் வல்லமையுள்ளாரொருவருமிலராக, வேறுயாரை நாமக் கடல்கடக்குமாறு வேண்டிக் கொள்வது? மேலும், ஒருவரைத் தேடி அரிதிற்பெறரேனுமென்றாலும், அது நமக்குப் பெரும் பழியாகுமல்லவோ? முதலில் இராமசுக்கிரீவர்கட்கு நட்புச் செய்வித்த இவ்வநுமான் எடுத்த காரியத்தைச் சோர்வின்றி முடிக்குந் திறமுடையவனாதலின், அவனே கடல்கடந்து மீண்டு நமக்குப் புகழை நிலைநாட்டுதற்கு உரியனென்றுகூறி, ருஷிசாபத்தால் தன்வலிமை தனக்குத் தெரியாது சோர்ந்துள்ள அநுமானுக்கு உற்சாகமுண்டாகுமாறு அவன் வல்லமையைத் தெரிவிக்கலாயினன் ஜாம்பவானென்பதாம்.

(எ) 'இனியாரை' என்பதை ஒருசொல்லாகவே கொண்டு, முன்னிரண்டடிகட்கு - நாம் பெருந்துயரத்துடன் இங்கிருந்தபடியே தக்கவரைக் கடல் கடக்க வேண்டிக்கொள்வோமென்பது நமது பெருமைக்கு இழுக்காகுமல்லவோ? எனவுங் கூறலாம். அன்று ஏ என்ற இரண்டு எதிர்மறைகள் சேர்ந்து தேற்றப்பொருளைத் தந்தன.

எ. 'ஆரானார்துய்த்து', 'பேரிடர்துய்த்திங்கிதில்யாரை', 'நன்றுமமகற் றிப்பேரிசைவிக்கு நவையில்லோன்', (அ) 'காரியமென்ன', 'தோளாண்மை புரைப்பான்' என்பன பிரதிபேதம். (எ,அ)

[இதுமுதல் பத்துக்கவிகள் - ஜாம்பவான் அநுமானைப் புகழ்தல்.]

மேலைவிரிஞ்சன் வீயிலுமவீயாமிகைநாளீர்
நூலைநயந்துநுண்ணிதுணர்ந்தீர்நுவறக்கீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பீர்கடனின்றீ
ராலநுகர்ந்தானென்னவெம்போரடர்கிற்பீர்.

இதுமுதற் பதினொரு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) (ஜாம்பவான் அநுமானை நோக்கிக் கூறுவான்):—(நீர்),— மேலை விரிஞ்சன் வீயினும் வீயா மிகை நாளீர் - (யாவரினுஞ்) சிறந்தவனான பிரமன் இறந்தாலும் இறவாத நீண்ட ஆயுள்நாளையுடையீர்; நூலை நயந்து நுண்ணிது உணர்ந்தீர் - சகல சாஸ்திரங்களையும் விரும்பி நுட்பமாக அறிந்திருக்கிறீர்; நுவல் தக்கீர் - (அதனால் விஷயங்களை) எடுத்துக் கூறத்தக்க சொல்வன்மையுடையீர்: காலனும் அஞ்சும் காய் சினம் மொய்ம்பீர் - யமனும் அஞ்சத்தக்க கடுங்கோபமும் தேகபலமுமுடையீர்; கடன் நின்றீர் - (செய்தற்கு உரிய) கடமைகளில் உறுதியாய்நிற்பீர்; ஆலம் நுகர்ந்தான் ஆம் என வெம் போர் அடர்கிற்பீர்-விஷத்தையுட்கொண்ட சிவபிரான்போலக்கொடும் போர் செய்யுந் திறமுடையீர்; (எ - று.)

முனிவர் சாபத்தால் தனது வல்லமையை யுணராது தியங்கிநிற்கின்ற அநுமானை ஜாம்பவான் கடல்கடக்குமாறு கூறுதற்பொருட்டுத் துதிக்கின்றானாதலின் இங்குவருஞ் சொற்றொடர்கள் யாவும் அதற்கு உபகாரப்படுமாறு கருத்துக்கொள்ளத் தக்கனவாம். முதலடி - அநுமானது சிரஞ்சீவித்தன்மையையும், இரண்டாமடி - அவன் பெருங்கல்வியாற் சொல்வன்மை பெற்றிருத்தலையும், பின்னிரண்டடி - தான் மேற்கொண்ட செயலைப் பின்வாங்காது நின்று கடுங்கோபத்தோடு பெரும்போர் செய்தாவது முடிக்குமாற்றலுடைமையையும் விளக்கும்; இதனால் எவ்வகையாலுஞ் சாவின்றி அரக்கனூர்க்குச் சென்று இராவணனோடு சமயோசிதமாகப்பேசி இடையூறுசெய்யும் அரக்கர்களை அழித்துச் சீதாபிராட்டியைக்கண்டு மீளுதலாகியதொழிலை முடித்தற்கு உரியாய்நீ என்று குறிப்பித்தவாறு: இவ்வாறே அடுத்தசெய்யுள்களிலும் நுண்ணிதாகக் கருத்துக்காண்க. 'பிதாமகன்' என்று பெயர் பெறுமாறு முற்பட்டுத்தோன்றி நிற்பவனாதலால், பிரமனை 'மேலைவிரிஞ்சன்' என்றானுமாம். விரிஞ்சன் - (அன்னப்) பறவையாற் சுமக்கப்படுபவனென்றும், பஞ்சபூதங்களைப் படைப்பவனென்றும் அவயவப்பொருள்படும்: வடசொல். முதலடி - முற்றுமோனை.

'நூலைநயந்தே,' 'நூலையனந்தம்,' 'நுண்ணிதுணர்ந்தே.' 'மொய்ம்பின் கடைநின்றீர்,' 'மொய்ம்பின் கடனின்றீர,' 'ஆலநுகர்ந்தானன்னவயப்போர்' என்று பாடாந்தரங்கள். (க)

கο. வெப்புறு செந்தீநீர்வளியாலும்விளியாதீர்
செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புறினெப்பார்நும்மலதில்லீரொருகாலே
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர்.

(இ - ள்.) வெப்புறு செம் தீ நீர் வளியாலும் விளியாதீர் - வெப்பம் பொருந்திய செந்நிறமான அக்கினியினாலும் நீரினாலும் காற்றினாலும் இறவாது நிற்பீர்; செப்பு உறு தெய்வம் பல் படையாலும் சிதையாதீர் - (சிறப்பாகக்) கூறப்படுகிற தெய்வத்தன்மையுள்ள பலவகைப்படைக்கலங்களாலும் அழியாதிருப்பீர்; ஒப்பு உறின் நும் அலது ஒப்பார் இல்லீர் - உவமையெடுத்துக்கூறினால் உம்மையேயல்லாமல் உவமையாவார் வேறொருவரையும் பெறாமலிருப்பீர் [உமக்கு நீரே சமானமாயிருப்பீர்]; ஒருகாலே குப்புறின் அண்

டத்தை அப்புறமேயும் குதிகொள்வீர் - ஒருதரங்குதிக்கும்போதே இந்த அண்டத்துக்கு அப்புறத்திலுங் குதிக்குந் திறமுடையீர் ; (எ - று.)

முதலடியில் பஞ்சபூதங்களில் இடைமூன்றைக்கூறியது - மற்றையிரண்டுக்கும் உபலட்சணம். நீரீர்வளி - உம்மைத்தொகை, அஃறிணையாதலின் பன்மைவிகுதிபெறாது வந்தது. அநுமான் பிறந்தவுடனே சூரியனைக்கனிந்த பழமென்றுகருதித் தாவியபோது தேவேந்திரனது வச்சிராயுதத்தினால் அடிபட்டுக் கவுள்முறிந்து மூர்ச்சித்ததனாற் கோபங்கொண்ட வாயுதேவன் உலகத்தில் வாயுசஞ்சாரமின்றி ஒடுக்கினபோது, பிரமன் சிவன் முதலிய தேவர்களெல்லோரும் தோன்றி அவ்வாயுதேவனை மகிழ்வித்தற்காகத் தம்தமது படைக்கலங்களால் அநுமான் அழிவடையாதிருக்குமாறு வரமளித்தருளினாராதலின், 'செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்' என்றான். தெய்வப்பல்படை என்றது - பிரமாஸ்திரம், சிவபிரானதுமுத்தலைச்சூலம், இந்திரனதுவச்சிராயுதம், யமனதுகாலவேல், வருணனதுபாசாயுதம் முதலியன. ஏகாரங்களும், உம்மைகளும் - உயர்வுசிறப்புப்பொருளன. (கo)

கக. நல்லவுமொன்றோதீயவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநீரேதுணிகிற்பீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர்மிடலுண்டேற்
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர்.

(இ - ள்.) நல்லவும் ஒன்றோ - நல்லவைமாத்திரமோ? தீயவும் - தீயவைகளையும், நாடி - ஆராய்ந்து, நவை தீர சொல்லவும் - குற்றமில்லாமல் எடுத்துக்கூறுதற்கும், வல்லீர் - திறமுடையீர் ; நீரே காரியம் துணிகிற்பீர் - (பிறருதவியின்றிச்) சுயமாகவே செய்யத்தக்க தொழிலை ஆராய்ந்து முடிக்கின்ற வல்லமையுடையீர்; வெல்லவும் வல்லீர் - (பகைவர்களை) ஜயிக்கவும் வல்லமையுடையீர் ; மீளவும் வல்லீர் - (கடல்கடந்து இலங்கைசேர்ந்து இங்குத்) திரும்பிவரவும் வல்லமையுடையீர்; மிடல உண்டு ஏல் கொல்லவும் வல்லீர் - (பகைவர்கள்) வலிமையுடையவராய் எதிர்த்தால (அவர்களைக்) கொல்லவும் திறமையுடையீர்; தோள் வலி என்றும் குறையாதீர் - புஜபலத்தில் எந்நாளும் குறையாததன்மையுடையீர் ; (எ - று)

மிடல் - வலிமை ; அதனையுடையார்க்கு, இலக்கணை.

'துணிவுற்றீர்,' 'தோள்வலியாதும்,' 'தோள்வலியொன்றும்' என்று பிரதிபேதம். (கக)

கஉ. மேருகிரிக்குமீதுறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரையிடுக்கும்வரவல்லீர்
பாரைமெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றெண்கையகத்துந்தொடவல்லீர்.

(இ - ள்.) மேரு கிரிக்கும் மீது உற நிற்கும் பெரு மெய்யீர்-மேருமலைக்கும் மேற்பட்டுவளரக்கூடிய பேருடம்பையுடையீர்; மாரி துளிக்கும் தாரை இடுக்கும் வர வல்லீர் - மேகங்கள் சொரிகின்ற நீர்த்துளிகளின்நடுவிலும் (சிறுவடிவங்கொண்டு) நுழைந்துசெல்லுதற்கு வல்லமையுடையீர்; பாரை

எடுக்கும் தோன்மை வலத்தீர் - பூமியையும் பேர்த்தெடுக்கவல்ல மிக்கவலிமையுடையீர்; பழி அற்றீர் - (பெருவரங்களால் இவ்வாறான தன்மைபெற்றும் சிறிதும் பழிப்பில்லாத செயலையுடையீர்; சென்று ஒள்கை அகத்தும் சூரியனை தொட வல்லீர் - அருகிற்சென்று அழகியகைகளினாலும் சூரியனைத் தொடுதற்குரிய திறமையுடையீர். (எ - று.)

அநுமான் தனது உடம்பு வளரவேண்டுமென்று நினைப்பனாயின் மகாமேருமலையைக்காட்டிலும் பெரியவனாவன்; அவ்வுடம்பைச் சிறிதாக ஒடுக்க வேண்டுவனாயின் மிகச்சிறிதாகிய அணுவைக்காட்டிலும் சிறியவனாவனென்பது, முன்னிரண்டடிகளிற் கூறிய விஷயம்; இவ்விருதன்மையும் - அணிமா மஹிமா கரிமா லகிமா ப்ராப்தி ப்ராகாம்யம் ஈஶத்வம் வஶித்வம் என்ற எட்டு வகை யோகசித்திகளுள் முறையே மஹிமா அணிமா என்னுஞ் சித்திகளாம்; மிகவும் பெரிதாதல், மஹிமா; மிகவுஞ்சிறியதாதல், அணிமா: இத்தன்மைகளை அநுமான் உடையவனாயிருந்ததை, இராமாயணத்திற் பலவிடங்களிலுங் காணலாம். "பிறியாவரத்தினநுமான்வளர்ச்சி பெருமேருவிற் பெரியனாஞ், சிறிதாயொடுக்குமெனின்மேனியற்பவணுவானதிற்சிறியனாம்" என்றார் ஒட்டக்கூத்தரும். தோன்மை வலம் - ஒருபொருட்பன்மொழி.

'பரையெடுக்குந்தொன்மை,' 'சூரியனைச் செந்தாணடைகற்றுந்தொட வல்லீர்' என்றும் பாடம். (கச)

கரு. அறிந்துதிறத்தாறெண்ணியறத்தாறழியாமை
மறிந்துருளப்போர்வாலியைவெல்லுமதிவல்லீர்
பொறிந்திமையார்க்கோன்வச்சிரபாணம்புகமூழ்க
வெறிந்துழியிற்றோர்புன்மயிரேனுமிழவாதீர்.

(இ - ள்.) திறத்து ஆறு எண்ணி அறிந்து - உரிய வழிகளை ஆராய்ந்தறிந்து, அறத்து ஆறு அழியாமை - (அரசர்க்கு உரிய) தருமமார்க்கந் தவறாமல், போர்வாலியை மறிந்து உருள வெல்லும்-போர்த்திறமுடைய வாலியை மாண்டுருளும்படி வெல்லுதற்குச் செய்த, மதி வல்லீர் - அறிவின்வல்லமையையுடையீர், பொறிந்த இமையார்கோன் வச்சிரபாணம் புக மூழ்க எறிந்த உழி - பெயர்பெற்ற தேவர்கட்குத் தலைவனான இந்திரன் வச்சிராயுதத்தை உடம்பில் தாக்குமாறு எறிந்தபோது, ஓர் புல் மயிரேனும் இற்று இழவாதீர் - ஒருசிறுமயிர்தானும் அறுபட்டு இழவாமலிருந்தீர்; (எ - று.)

அநுமான் இராமபிரானுடன் சுக்கிரீவனை நட்புச்செய்வித்தவுடனே, முதலில் வாலிவதை செய்து பிறகு சீதாபிராட்டியைத் தேடினால்தான் தொழில் இனிதுமுடியுமென்று கூறினனாதலால், அவனை 'வாலியைவெல்லும் மதிவல்லீர்' என்றான்; "கொடுந்தொழில் வாலியைக் கொன்று கோமகன், கடுங்கதிரோன் மகனுக்கிக் கைவளர், நெடும்படை கூட்டினாலன்றி நேடரி, தடும்படையாக்கர்தமிருக்கை யாழியாய்" என்றது, இங்கே காணத்தக்கது. பொறிந்த=பொறித்த: இனி, பொறிந்து என்றே, எடுத்து, இமையவர்கோன், பொறிந்து - (கோபத்தினாற் கண்களில்) தீப்பொறியைக் கக்கிக்கொண்டு, வச்சிரபாணத்தை எறிந்தழி என்றும் உரைக்கலாம். இமையார்க்

கோன் என்பதற்கு - கண்ணிமைத்தலில்லாத (தேவர்களின்) தலைவன் என்றும் உரைக்கலாம். முன்னையபொருளில், 'இமையார்கோன்' என்பது - "சில விகாரமா முயர்திணை" என்பதனால் இவ்வாறாயிற்றென வேண்டும். வச்சிரபாணம்=வஜ்ராயுதம்.

'அற்றத்தாறழியாமல்,' 'இமையக்கோன்,' 'மற்றோர்புன்மயிர்தானும்' என்று பிரதிபேதம். (கரு)

கசு. போர்முனை திர்ந்தான் மூவுலகேனும்பொருளாகா
வோர்வில்வலங்கொண்டொல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்சீக்கும்பகலோன்முன்
றேர்முனடந்தேயாரியநூலுந்தெரிவுற்றீர்.

(இ - ள்.) போர்முன் எதிர்ந்தால் - போர்க்களத்தில் எதிரிட்டுவந்தால், மூ உலகு ஏனும் - மூன்றுலோகத்திலுள்ள பொருள்களையும், பொருள் ஆகா- ஒருபொருளாகக் கருதாமல் (மிகவும் அலட்சியமாக நினைத்து), ஓர்வு இல வலம் கொண்டு - (பிறரால் இவ்வளவென்று) ஆராய்ந்தறியமுடியாத மிக்க பலத்தைப் பொருந்தி, ஒல்கல் இல் வீரத்து உயர் - குறைவில்லாத மிக்க பராக்கிரமத்தோடு உயர்ந்துவிளங்குகின்ற, தோளீர் - தோள்களையுடையீர்; பார் உலகு எங்கும் பேர் இருள் சீக்கும் பகலோன்முன் - நிலவுலகமுழுவதிலும் நிறைந்துள்ள மிக்க இருளை யொழிக்கின்ற சூரியனிடத்தில், தேர்முன் நடந்து - (எப்பொழுதுஞ் செல்லுந் தன்மையுள்ள அவனது) தேர்க்கு முன்னே (அவனைப்பார்த்த வண்ணமாக) நடந்துகொண்டே, ஆரிய நூலும் தெரிவுற்றீர் - வடமொழி நூல்களையெல்லாம் கற்றறிந்துகொண்டீர்; (எ-று.)

அநுமான் சூரியபகவானிடத்து வடமொழிநூல்களைக் கற்றுணர்ந்ததை, 'வேதமொருநாலுடன விளங்கியசடங்கமும விரிந்தகலையு, மோத நிலவீதியிசையேயுபரிபூரணருணனூரவிரைதோ, மீதுசெலும வெங்கதிரவன்றனொடயிந்திரவியாகரணமு, மோதியொருநாளினிலுணர்ந்தன னிமாருதி யுயர்ந்தபுகழோய்" என்ற உத்தரகாண்டச் செய்யுளினாலும், "இவன் அருக்கனைமட்டுச்சென்று எல்லாவியாகரணங்களையும் அவற்றின விருத்தி பாடியம் முதலாய உரைகளையும் ஓதியதுமன்றி, மற்றுமுள்ள பலகலைகளையும் ஓதியுணர்ந்து புவிக்கு ஒரு பிரகஸ்பதியென்னலாயினன்" என்ற உத்தரராமாயணவசனத்தினாலும் அறிக.

'ஏழுலகேனும் பொருளாகா,' 'பேருலகெங்கும் பேரிருள் சீக்குங்கதிரோன்முன்,' 'தெளிவுற்றீர்' என்றும் பாடம். (கசு)

கஎ. நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவாலு
மாதர்நலம்பேணாதுவளர்ந்தீர்மறையெல்லா
மோதியுணர்ந்தீரூழிகடந்தீருலகீனு
மாதியயன்றானேயெனயாருமறைகின்றீர்.

(இ - ள்.) நீதியில் நின்றீர் - நீதிநெறியில் நிற்கின்றீர்; வாய்மை அமைந்தீர் - மெய்ம்மைபொருந்தினீர்; மாதர் நலம் நினைவாலும் பேணாது வளர்ந்தீர் - மகளிரின்பத்தை மனத்தினாலும் எண்ணாது வளர்ந்துள்ளீர்; மறை எல்

லாம் ஓதி உணர்ந்தீர் - வேதங்களையெல்லாம் ஓதி அவற்றின்பொருளையறிந் துள்ளீர்; ஊழி கடந்தீர் - பிரமனுயுளினும் மேற்பட்ட ஆயுளையுடையீர்; உலகு ஈனும் ஆதி அயன் தானே என யாரும் அறைகின்றீர் - உலகங்களைப் படைக்கின்ற முதற்கடவுளரில் ஒருவனான பிரமனேயாக எல்லாராலும் சொல்லப்படுகின்றீர்; (எ - று.)

அநுமான் நித்தியபிரமசாரி யாதலால் 'நினைவானும் மாதர்நலம்பேணாது வளர்ந்தீர்' என்றும், சிரஞ்சீவியாதலால் 'ஊழிகடந்தீர்' என்றும், அடுத்த பிரமபட்டத்தைப் பெறுபவ னாதலால் 'ஆதியயன்றானேயென யாருமறைகின்றீர்' என்றும் கூறப்பட்டான். "தாதாவுரைக்கு மென்பிரமதண்டாற் றானுஞ்சாவின்றி, மேதாவியுமாயொருநாளும் விளியாநாளுமுறுக," "மன்னனிராமன் மனமுவப்ப வயவாளரக்கா குலமறுத்துப், பின்னையவன் றன்பேரருளாற் பிரமபதமும் பெறுகென்றான்" என்பன இங்குக் காணத்தக்கன.

'வாய்மையயர்ந்தீர,' 'ஆதியயன்றானுமெனயாருமறைகிறபீர்,' 'ஆதியயன்றானேயெனயாதும்' என்பன பாடாந்தரங்கள். (௧௫)

௧௬. அண்ணலமைந்தற்கன்புசிறந்தீ ரதனானே
கண்ணியுணர்ந்தீர்கருமநுமக்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றிப்
புண்ணியமொன்றேயென்றுநிலைக்கும்பொருள்கொண்டீர்.

(இ - ள்) அண்ணல் அமைந்தற்கு அன்பு சிறந்தீர் பெருமையிற்சிறந்த அந்த இராமபிரானிடத்திற் பேரன்புடையீர்; அதனானே - அக்காரணத்தினால், கருமம் கண்ணி உணர்ந்தீர் - செய்தொழிலை ஆராய்ந்து அறிந்திருக்கின்றீர்; நுமக்கே கடன் என்ன திண்ணிது அமைந்தீர் - (சீதாபிராட்டியை நாடிச் செய்திபுணர்ந்துவருவது) உமக்கே செய்துமுடித்தற்கு உரிய தொழிலாகு மென்று கொண்டு (இராமசுக்கிரீவர்கட்டளையிட அதனை) உறுதியாக ஏற்றுக்கொண்டீர்: சிதைவு இன்றி செய்து முடிப்பீர் - (அக்காரியம் சிறிதும்) இடையூறு அடையாமல் செய்துமுடித்தற்கேற்ற திறமுடையீர்; புண்ணியம் ஒன்றே என்றும் நிலைக்கும் பொருள் கொண்டீர் - புண்ணியமொன்றையே எப்பொழுதும் அழியாமல் நிலைதிருக்கும் பொருளென்று மனத்தில் உறுதியாகக் கருதியிருக்கின்றீர்; (எ - று.)—ஆல்-ஈற்றசை.

அண்ணலமைந்தற்கன்புசிறந்தீர் - ராமபக்திதலையெடுத்தவ ரென்றபடி, வானரர்யாவரும் இறப்பதாக இருந்த நிலையில், அதனைத்தடுத்து அநுமான் பின்னுந்தேடுமாறு ஆலோசனைகூறுகையிற் சம்பாதியினாற் சீதையுள்ளவிடந் தெரிந்தன ராதலின, 'கண்ணியுணர்ந்தீர் கருமம்' என்று னென்னலாம். சிதைவின்றிச்செய்து முடிப்பீர் என்றது - நீரே இலங்கையிற்சென்று பிராட்டியாரின செய்தியை யுணர்ந்து வருந்தொழிலைச் செய்து முடிக்கவேணுமென்ற குறிப்பு. புண்ணியமொன்றே நிலைக்கும்பொருளென்று கொண்டீர் என ஈற்றடியை மாற்றிப் பொருள்கொள்ளினுமாம். அமைந்தற்கு = அம்மைந்தறகு எனபதன் தொகுத்தல். இன்றி என்னும் வினையெச்சம், செய்யுளாதலின் 'இன்று' எனத் திரிந்துவந்தது; முற்றெச்சமாகக் கொள்வது எளிய வழி.

'அன்புசிறந்திரவனுனே,' 'காரியகிற்கோகடனென்ன,' 'சிதையாதீர்,' புண்ணியரொன்றேவென்று நினைக்கும்புகழ் கொண்டீர்,' 'புண்ணியர்ன்றே வென்று நினைக்கும் புகழ்கொண்டீர்' என்பனவும் பாடம். (கசு)

கஎ. அடங்கவும்வல்லீர்காலமதன்றேலமர்வந்தான்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மதிநாடித்
தொடங்கியதொன்றோமுற்றுமுடிக்குந்தொழிலல்லா
லிடங்கெடவெவ்வாயூறுகிடைத்தாலிடையாதீர்.

(இ - ள்.) காலம் அது அன்று ஏல் அடங்கவும் வல்லீர் - காலமல்லாத காலத்தில் [அடங்கியிருக்கவேண்டிய சமயத்தில்] அடங்கியிருக்கும் வல்லமையுடையீர்: அமர் வந்தால் மடங்கல் முனிந்தால் அன்னவலத்தீர் - போர் நேர்ந்தால் [கிளர்ச்சிகொள்ளவேண்டிய காலத்தில்] ஆண்சிங்கம் கோபித்தாற் போன்ற வலிமையுடையீர்; மதி நாடி - அறிவினால் ஆராய்ந்துபார்த்து, தொடங்கியது. ஒன்றோ - செய்யத்தொடங்கிய ஒரு காரியம் மாத்திரமோ. முற்றும் - எல்லாவற்றையும், முடிக்கும் - செய்துமுடிக்கின்ற, தொழில் அல்லால் - தொழில்திற முடையவரேயல்லாமல், இடம் கெட வெவ் வாய் ஊறு கிடைத்தால் - பெருமையழியும்படி கொடுந்தன்மையுள்ள இடையூறு சேர்ந்தாலும், இடை. யாதீர் - (அஞ்சிப்) பின் வாங்காது நிற்பீர்; (எ - று)

"ஊக்கமுடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந்தகைத்து," "கொக்கொக்ககூம்பும் பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்தவிடத்து," "அடுக்கிவரினுமழிவிலானுற்ற, விடுக்கணிடுக்கட்படும' என்பன இங்கு நோக்கத்தக்கன. மடங்கல் நரசிங்கமூர்த்தியெனக் கொள்வாருமுளர். தொடங்கியதொன்றோ, ஓகாரம் - இழிவு சிறப்போடு எதிர்மறைப்பொருளது.

'செய்துமுடிக்குந் தொழில்வல்லீர்,' 'இடங்கெடவந்தா லீறுகிடைத்தா லிடையாதீர்' என்பன பாடாந்தரங்கள். (கஎ)

கஅ. ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதல்யாரும்
பூண்டுநடக்குநன்னெறியானும்பொறையானும்
பாண்டிதர்நீரேபார்த்தினிதுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டுவவெய்தும்வினைவல்லீர்.

(இ - ள்.) ஈண்டிய கொற்றத்து இந்திரன் என்பான் முதல் யாரும் பூண்டு நடக்கும் நல்நெறியானும் - நெருங்கிய வெற்றியையுடைய தேவேந்திரன் முதலிய யாவரும் (இவரது ஒழுக்கமே சிறந்ததென்று) மேற்கொண்டு நடக்கத்தக்க நல்லொழுக்கமுடைமையாலும், பொறையானும் - பொறுமைக் குணமுடைமையாலும், பாண்டிதர் நீரே - பண்டிதராகிய நீரே, பார்த்து இனிது உய்க்கும்படி வல்லீர் - (எதையும்) ஆலோசித்து இனிமையாக நடத்தும்படியான வல்லமையுடையீர்; வேண்டியபோதே வேண்டுவ எய்தும் வினை வல்லீர் - விரும்பியபோதே விரும்பியவற்றை யெல்லாம் பெறவல்ல தொழில் வன்மையுடையீர்; (எ - று.)

உமது ஒழுக்கம் பெயர்பெற்ற இந்திரன் முதலியோர்க்கும் வழிகாட்டி யாயுள்ளதென்பது, முதலிரண்டடியின் பொருள். வீரம் முதலியகுணங்கள்

சிரம்பியிருப்பினும், அநுமான் அவற்றைச் சிறிதும் பாராட்டாமல் சாதாரண வானரன்போல இருத்தலால், அக்குணத்தை 'பொறையாலும்' என்று ஜாம்பவான் பாராட்டிக்கூறினன். பின்னிரண்டடிகள், கடல்கடந்து சீதாபிராட்டியைக் கண்டுவரவேணுமென்று நினைத்தால் உடனே செய்துமுடிக்கும் வல்லமை அநுமானுக்கு உண்டென்று குறிப்பிக்கும். பாண்டிதர் - பண்டிதர் என்பதின் நீட்டல்.

'நன்னெறி சாபப்பொறையானும்,' 'பாண்டியனீரே யஃதினியுய்க்கும்,' பாண்டியநீரே யஃதினியுய்க்கும்,' 'வேண்டியதுய்க்கும்' என்று பிரதிபேதம். (௧௮)

[ஜாம்பவான் அநுமானை நோக்கி 'நீரே இக்கடலைக்கடந்து சீதாபிராட்டியைக் கண்டு வரவேண்டும்' என்றல்.]

௧௯. ஏகுமினேகியெம்முயிர்நல்கியிசைகொள்ளீ
ரோகைகொணர்ந்தும்மன்னையுமின்னற்குறையில்லாச்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடறாவும்
வேகமமைந்தீரென்றுவிரிஞ்சன்மகன்விட்டான்.

(இ - ள்.) 'நீர் - நீர்தான், இ கடல் தாவும் வேகம் அமைந்தீர் - இந்தச் சமுத்திரத்தைக் கடந்துசென்று (செய்திதெரிந்து) மீளுதற்கு உரியவலிமை பொருந்தியுள்ளீர்; (ஆதலால்), ஏகுமின - (இங்கிருந்து) விரைந்து செல்லுக; ஏகி - அவவாறு சென்று, எம் உயிர் நல்கி இசைகொள்ளீர் - எங்களுக்கெல்லாம் உயிரைக் கொடுத்துப் பெரும்புகழைப்பெறுக; (நீர் இவ்வாறுசெய்தால்) உம் அன்னையும் - உமது தாய்போன்ற சீதாபிராட்டியும், ஓகைகொணர்ந்து - (தான்) மிக்க சந்தோஷமடைந்து, இன்னல் குறை இல்லா சாகரம முற்றும் தாவிடும் - துன்பமாகிற குறைதலில்லாத [மிகப்பெரிய] கடல் முழுவதையும் கடந்து கரையேறுவாள்', என்று—,விரிஞ்சன் மகன் - பிரமகுமாரனான ஜாம்பவான், விட்டான் - கூறிமுடித்தான்; (எ - று.)

நீர் கடல்கடந்து சென்றால் சீதாபிராட்டிதானும் துன்பக்கடலைக்கடப்பாளென்று சமத்காரமாகக்கூறியிருத்தல் காண்க. சீதைக்குத் துன்பக்கடல் - இராமபிரானைப்பிரிந்து அரக்கரூரிற் சிறைப்பட்டுப் பலதிங்கள் கழிந்தும் இராமபிரான் தானுள்ளவிடத்தை நாடிவந்து தன்னைச் சிறைமீட்பதற்கு ஏற்ற உபாயமொன்றுஞ் செய்யாமையினாலாகியது. 'எம்முயிர்நல்கி இசைகொள்ளீர்' என்றது - நீர்கடல்கடந்து மீண்டுவந்தால் நாங்களும் இப்போது நினைத்தவாறு இறவாமற் பிழைப்போம்; இங்ஙனம் பலாது உயிரைக் காப்பாற்றினதனாற் பெரும்புகழும் உமக்குக் கிடைக்குமென்றபடி. அநுமானே சீதையை முதலிற் சேவிக்கும் பாக்கியமுடையவனாதலின், ஜாம்பவான் அவனை நோக்கி 'உம்மன்னை' என்றான்; இனி உற்சாகமூட்டுவதற்காக, இங்ஙனங் கூறினனுமாம். ஓகை - உவகையென்பதன் மரூஉ.

'ஏகுமினீரே', 'எம்மன்னையும்,' 'குறைவில்லா' 'வேகமும் வல்லீர்' என்று பிரதிபேதம். (௧௯)

[அநுமான் தான் உடன்பட்டுக் கூறத்தொடங்குதல்.]

உ0. சாம்பனியம்பத்தாழ்வதனத்தாமரைநாப்ப
ணாம்பல்விரிந்தாலன்னசிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்கைக்கமலத்தன்குலமெல்லா
மேம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான்.

(இ - ள்.) சாம்பன் இயம்ப - ஜாம்பவான் இவ்வாறு கூறிமுடிக்க,—அறிவாளன் - பேரறிவுடையவனாகிய அநுமான்,— தாழ் வதனம் தாமரை நாப்பண் ஆம்பல் விரிந்தால் அன்ன சிரிப்பான் - இறங்கியமுகமாகிய தாமரைமலரின் நடுவில் செவ்வாம்பல் மலர்ந்தாற்போன்ற சிரிப்பையுடையவனாகியும், கூம்பலொடும் சேர் கை கமலத்தன் - குவிதலோடுகூடிய தாமரைமலர்போன்ற கைகளையுடையவனாகியும் [கைகூப்பியவனாகியும்],—குலம் எல்லாம் எம்பல் வர (அங்குள்ள வானரக்கூட்டங்கள் யாவும் சந்தோஷமடைய), தன் சிந்தை தெரிப்பான் - தனது உள்ளக்கருத்தைத் தெரிவிக்கும்பொருட்டு, இவை சொன்னான் - இவ்வார்த்தைகளைக் கூறலானான்; (எ- று.)—அவற்றை அடுத்த ஐந்துகவிகளிற் காண்க.

பிறர் தம்மைத்துதித்துப் புகழும்போது தலை கவிழ்தல் பெரியோரியல் பாதலால், ஜாம்பவான் தன்னைப் புகழும்போது அநுமான் தாழ்வதனத்தனாயின னென்க. அநுமான் சிரிக்கும்போது முகத்தினிடையிற் செந்நிறமான வாய் விரிதற்கு, தாமரைமலர்நடுவில் ஆம்பல் விரிதலை உவமையாகக் குறித்தார். கைக்கமலத்தன் - கமலக்கையன்.

'கூம்புலமைந்த' எனவும் பாடம். (உ0)

வேறு.

[இதுமுதல் நான்குகவிகள் - அநுமான் அடக்கத்தோடு ஜாம்பவான் சொல்லை அங்கீகரித்துக்கூறுவன.]

உக. நீயிரோநினைவின்முன்னேநெடுந்திரைப்பரவையேழுந்
தாயுலகனைத்தும்வென்றுதையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்றுபுலமைதீர்புன்மைகாண்டற்
கேயினிரென்னினென்னிற்பிறந்தவர்யாவரின்னும்.

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நீயிரோ - நீங்கள், நினைவின் முன்னே - நினைப்பதற்கு முன்னமே [மிகவிரைவில்], நெடுந்திரை பரவை ஏழும் தாய் - பெரிய அலைகளையுடைய ஏழுசமுத்திரங்களையுந் தாண்டி, உலகு அனைத்தும்வென்று -எல்லாவுலகங்களையுஞ் சயித்து, தையலை தருதற்கு ஒத்தீர் - சீதாபிராட்டியை மீட்டுக்கொணர்தற்கு வல்லமையுடையீர்; (அவ்வாறு வல்லமைபெற்றிருந்தும் என்னை ஒரு பொருட்டாக எண்ணி), போய் இது புரிதி என்று -(நீ)சென்று இதனைச்செய்வாய்' என்று, புலமை தீர் புன்மை காண்டற்கு எயினிர் - அறிவில்லாத எனது இழிகுணத்தைக் காண்பதற்காகவே (எனக்குக்) கட்டளையிட்டீர்; என்னின் - என்றால், என்னின் பிறந்தவர் இன்னும் யாவர் - என்னைப்போலப் (பாக்கியசாலியாகப்) பிறந்தவர் வேறு யாவருளர்? (எ - று).

அநுமான் அவையடக்கமாகக் கூறியது, இது. பெரியோர்கள் நிறைந்த இடத்தில் ஒருவன் தன்னைத்தான் தாழ்த்திக்கூறுவது, அவையடக்க மெனப் படும். இந்தச் சிறியதாகிய ஒரு கடலையேயன்றி ஏழுகடலையுங்கடக்கவேண்டு மென்றாலும்" இலங்கையையேயன்றி ஏழுலோகங்களையும் வெல்லவேண்டு மென்றாலும் அவ்வாறேசெய்து சீதையைமீட்கும் வல்லமையுடையவர் நீங்க ளென்று, தனனினும் மற்றைவானரரது வலிமைமிகுதியை முதல் மூன்றடிக ளால் தெரிவித்தனன் அநுமானென்க. எயினிரென்னின் என்னிற்பிறந்த வர் யாவரினும் - வெகு பராக்கிரமசாலிகளாய்க் கடல்கடந்து மீண்டுவரும் வல்லமையுள்ளார் பலரிருக்கவும்என்னை ஏவினது எனது பாக்கியமேயென்று கொண்டாடியவாறு. நீயிர் - மற்றைவானரரையும் உளப்படுத்திய முன்னிலைப் பன்மை; ஜாம்பவனொருவனையே உயர்த்திக்கூறிய பன்மைக்கிளவியெனக் கொள்ளினுமாம்.

இச்செய்யுள், சில பிரதிகளில் இருபத்துமூன்றாவதாகக் காணப்படு கின்றது.

'நீவிரேசினையின் முன்னம்,' 'என்றன் புலமைநீர் புன்மைகண்டும்' என்று பிரதிபேதம்.

இதுமுதல் இப்படலம் முடியுமளவும் ஒன்பதுகவிகள் - கீழ்ச்சம்பாதிப் படலத்தின் ஐம்பத்துமூன்றாங்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (௨௧)

௨௨. இலங்கையையிடந்துவேரோடிவ்வயிற்றருகென்றாலும்
விளங்கினர்தம்மையெல்லாம்வேரொடும்விளிய நூறிப்
பொலங்குழைமயிலைக்கொண்டுபோதெனப்புகன்றிட்டா
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவல்கடிதுகாண்டிர். [லும்

(இ - ள்.) இலங்கையை வேரோடு இடந்து இவயின் தருக எனறு லும் - இலங்கா பட்டணத்தை வேரோடு பெயர்த்தெடுத்து இவ்விடத்திற் கொண்டுவரவேண்டும்' என்று (நீங்கள்) கூறினாலும், விலங்கினர்தம்மை எல் லாம் வேரொடும் விளிய நூறி பொலம் குழை மயிலை கொண்டுபோது என புகன்றிட்டாலும் - 'இடையூறுசெய்யும் அரக்கர்களையெல்லாம் அடியோடு அழியுமாறு நீறாக்கிப் பொன்னாலாகிய குழையென்னுங் காதணியையணிந்த மயில்போற்சாயலையுடைய சீதாபிராட்டியை எடுத்துக்கொண்டுவா' என்று சொன்னாலும், உரைத்தமாற்றம் முடிக்குவல் - (நீங்கள்) சொன்ன சொற் படியே செய்துமுடிப்பேன்; கடிது காண்டிர் - (அதனை) விரைவிற் கண்கூ டாகக் காண்பீர்கள்; கலங்கலீர் - கலங்கவேண்டா; (எ - று)

'கலங்கலீர்' என்றது - கடலைக்கடந்து சீதையைக்கண்டுவருதல் எவ்வாறு கூடுமென்ற சிந்தை நமக்குச் சிறிதும்வேண்டா என்றவாறும். (௨௨)

௨௩. ஓசனையொன்றுநூறுமுள்ளடியுள்ளதாக
வீசன்மண்ணளந்ததேய்ப்பவிருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்துமலையினுமிலங்கைவாழு
நீசரையெல்லாநூறிநினைத்ததுமுடிப்பலின்னும்.

(இ-ள்) ஈசன் மண் அளந்தது ஏய்ப்ப - திருமால் உலகமளந்தது போல, ஓசனை ஒன்று நூறும் உள் அடி உள்ளது ஆக - (இங்கிருந்து இலங்

கை வரையிலுள்ள) ஒரு நூறுயோசனை தூரமும் ஓரடிவைப்புக்குள் அடங்கும் படி, இருங் கடல் இனிது தாவி - பெரியகடலை எளிதாகத்தாண்டி,—வாசவன் முதலோர் வந்து மலையினும் - இந்திரன்முதலான தேவர்கள் (அரக்கர்க்கு உதவியாக) வந்து (என்னோடு) எதிர்த்துப் போர்செய்தாலும், இலங்கை வாழும் நீசரை எல்லாம் நூறி - அந்த இலங்கையில் வாழ்கின்ற இழிதொழிலையுடைய அரக்கர்களையெல்லாம் அடியோடு அழித்து, நினைத்தது முடிப்பல் - நினைத்த காரியத்தை முடித்துவிடுவேன்; பின்னும் - மேலும்: (எ - று)

ஒரு தாண்டிலேயே நூறுயோசனை தூரமுள்ள கடலைக் கடந்து இலங்கையிற் செல்லும் அநுமானுக்கு - உலகம் முழுவதையும் ஓர்அடிவைப்பினால் அளந்த திரிவிக்கிரமன் உவமையாவன்; வடிவும் தொழிலும்பற்றிய உவமம். நீசன் - இயமிப்பவனென்று பொருள்படும் வடசொல். மலையினும் என்றது - வாசவன் முதலோர் வந்து மலையா ரென்ற பொருளை வற்புறுத்தும்.

'யோசனையேழுநூறும்,' 'ஈசன்மண்கடந்தசென்ன,' 'நீசரையெல்லாங் கொன்றுமுடிப்பது நினைப்பன்' என்றும் பாடம். (உங)

உச. முற்றுமீருலகமுற்றும்விழுங்குவான்முழங்கிமுந்நீ
ருற்றதேயெனினுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனு
மிற்றைநும்மருளுமெங்கோனேவலுமிரண்டுபாலுங்
கற்றைவார்சிறைகளாகக்கலுழனிற்கடப்பல்காண்டிர்.

(இ - ள்.) நீர் முற்றும் உலகம் முற்றும் விழுங்குவான் - கடலினாற்சூழப்பெற்ற உலகமுழுவதையும் முழுத்தியழிக்கும் பொருட்டு, முந்நீர் - கடலானது, முழங்கி உற்றதே எனினும் - சத்தித்துக்கொண்டு பொங்கிவந்தாலும்,— அண்டம் உடைந்துபோய் உயர்ந்தது ஏனும் - இவ்வுலகவுருண்டையே உடைந்துபோய் உயர்ந்து வானத்திற்சென்றாலும்,—(சிறிதுங் கலங்காமல்), இற்றை நும் அருளும் எம் கோன் ஏவலும் இரண்டு பாலும் கற்றை வார் சிறைகள் ஆக - இப்பொழுது நீங்கள் என்மீது வைத்திருக்கின்ற அநுக்கிரகமும் எமது தலைவனாகிய இராமபிரானது கட்டளையுமே இரண்டு பக்கத்திலும் தொகுதியான நீண்ட சிறகுகளாக அமைய, கலுழனின் - கருடன்போல, கடப்பல் - (இச்சமுத்திரத்தைக்) கடந்துவிடுவேன்; காண்டிர் - (நீங்கள் இதனைக்) காண்பீர்கள்; (எ - று.)

கடலானது இவ்வுலகத்தை யழிக்கும்படி பொங்கி வந்தாலும், இவ்வண்டமே உடைந்து ஆகாயத்திற்சென்றாலும், யான் சிறிதும் பின்வாங்காமல் உங்களுடைய அநுக்கிரகத்தினால் ஸ்ரீராமபிரானது கட்டளைப்படியே கடல் கடந்துசென்று சீதாபிராட்டியைக் கண்டு செய்தியுணர்ந்து மீண்டு வருவேனென்பதாம். கருடனுக்கு இருசிறகுகள் பறந்துசெல்வதற்கு இன்றியமையாத உறுப்பாதல்போல, நான் கடல்கடத்தற்கும் உமது அருளும் இராமபிரானது ஏவலுமே இன்றியமையாதனவாயிருந்து, மேற்கொண்டசெயலை முற்றுவிக்கு மென்பது, பின்னிரண்டடியின் கருத்து; உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. முற்றுநீர் - உலகத்திற்கு, இயற்கை யடைமொழி. முந்நீர் - படைத்தல் காத்தல் அழித்தல் என்ற மூன்று தன்மையையுடையதெனக் கடலுக்குப் பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்

தொகை; ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்றுநீராகிய மூன்றுநீரை யுடையதென காரணப்பொருள் கூறலாகாது.

'முழங்குவானம்,' 'அண்டமீதுயர்ந்ததேனும்,' 'எங்கோனிராகவனை ளுங் கொண்ட' என்றும் பாடம். (உ௪)

[அநுமான் வாநரரிடத்து விடைகொண்டு, மகேந்திரமலையி னுச்சியிற் செல்லுதல்.]

௨௫. ஈண்டினி துறைமின்யானேயெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும்விடைதம்மின்விரைவினென்று
வாண்டவருவந்துவாழ்த்தவலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயதெய்வமகேந்திரத்தும்பர்சென்றான்.

(இ - ள்.) யான்—, எறி கடல் இலங்கை எய்தி - அலைவீசுகின்ற கடலினிடையேயுள்ள இலங்காபுரியைச் சேர்ந்து, மீண்டு இவண் வருதல் காறும் - திரும்பி இங்குவருகிறவரையிலும், ஈண்டு இனிது உறைமின் - (நீங்கள்) இவ்விடத்தில் தானே சுகமாக இருங்கள்; விரைவின் விடை தம்மின் - (எனக்கு) விரைவில் விடைகொடுங்கள், என்று - என்றுசொல்லி,—(அநுமான்),— ஆண்டு அவர் உவந்து வாழ்த்த - அப்பொழுது அவ்வானரர்கள் மகிழ்ந்து வாழ்த்துக்கூறவும்,—அமரர் அலர் மழை தூவ - தேவர்கள் பூமாரிபொழியவும், சேண் தொடர் சிமயம் தெய்வம் மகேந்திரத்து உம்பர் சென்றான் - வானத்தையளாவிய உச்சியையுடைய தெய்வத்தன்மையுள்ள மகேந்திரமலையினது மேலிடத்தை யடைந்தான்; (எ - று.) (உரு)

அலர்மழை - புஷ்பவர்ஷம்.

[அநுமான் பேருருவங்கொள்ளுதல்.]

௨௬. பொருவருவேலைதாவும்புந்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன்மேக்குறப்பெயர்ந்ததாள்போ
லுருவறிவடிவினும்பரோங்கினனுவமையாலுந்
திருவடியெனனுந்தன்மையாவர்க்குந்தெரியநின்றான்.

(இ - ள்.) பொருவு அரு வேலை தாவும் புந்தியான் - ஒப்பற்ற கடலைக் கடக்கவேண்டுமென்ற எண்ணமுள்ள அநுமான்,—புவனம் தாய பெரு வடிவு உயர்ந்த மாயோன் மேக்கு உற பெயர்ந்த தாள்போல் - மூவுலகங்களையும் தாவியளந்த பெருவடிவங்கொண்டு உயர்ந்த [திரிவிக்கிரமாவதாரஞ்செய்த] ஆச்சரியமான குணஞ்செயல்களை யுடையவனாகிய திருமாலினது மேலிடத்திற் பொருந்துமாறு உயரவெடுத்த திருவடிபோல, உருவு அறி வடிவின் - (தனது) ரூபத்தை (யாவரும்) அறிதற்குஉரிய பெருவடிவத்தோடு, உம்பர் ஓங்கினன் - வானத்தையளாவ வளர்ந்தான்; (அதனால்), உவமையாலும் திருவடி என்னும் தன்மை யாவர்க்கும் தெரிய நின்றான் - உபமானத்தினாலும் திருவடியென்கின்ற தனது (திருநாமத்தின்) தன்மை யாவர்க்கும் விளங்கும்படி நின்றான்.

ஆகாயத்தையளத்தற்காக உயரவெடுத்த திரிவிக்கிரமனது திருவடி போல, அநுமான வானத்தை யளாவுமாறு பெருவடிவங்கொண்டனனென்பதாம். இராமாவதாரத்திலே திருமாலுக்கு வாகனமாயிருந்து உதவியது பற்றிவந்த அநுமானது திருவடியென்ற பெயர்க்கு, இங்குத் திரிவிக்கிரமனது திருவடிபோல வளர்ந்ததனால் அப்பெயருண்டாயிற்றென்ற கருத்துப் படக் கூறியது - பிரிநிலைநவிற்சியணியின்பாற்படும். உவமையாலும், உம்மை - வாகனமாதல்பற்றியன்றி யென்ற பொருளைத் தெரிவித்தலால், இறந்தது தழீஇயவெச்சவும்மை.

'புவனத்தாவப்,' 'பெருவடிவமைந்தமாயோன்,' 'பெயர்த்ததாள்போல்,' 'உருவறிவடிவன்' என்பன பாடாந்தரங்கள். (உசு)

[அநுமான் கடல்கடக்கச் சித்தமாய் நிற்றல்.]

உஎ. பார்நிழல்பரப்பும்பொற்றேர்வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்நிழல்பரப்புமேலோர்புகழெனவுலகம்புக்குத்
தார்நிழல்பரப்புதோளான்றடங்கடறாவாமுன்ன
நீர்நிழலுவரிதாவியிலங்கைமேற்செல்லநின்றான்.

(இ - ள்.) தார் நிழல் பரப்பும் தோளான் - மாலை ஒளிவீசப்பெற்ற தோள்களையுடையவனான அநுமான் —நிழல் பார் பரப்பும் பொன் தேர் வெயில் கதிர் பரிதி மைந்தன் - (தனது) ஒளியை உலகமுழுதும் பரப்புகின்ற அழகிய தேரையும் உஷ்ணகிரணங்களையுமுடைய சிறந்தசூரியன்,—போர்நிழல்பரப்பும் மேலோர் புகழ் என - யுத்தத்தில் (தமது) பராக்கிரமத்தை வெளிக்காட்டுகின்ற மகாவீரரது புகழ் (உலகமுழுவதும் பரவுதல்) போல, உலகம் புக்கு - உலகமுழுதும் சஞ்சரித்து [ஒளிசெய்து], தட கடல் தாவாமுன்னம் - பெரிய மேல் சமுத்திரத்திற் சென்று சேர்வதற்குமுன்னே [அஸ்தமிப்பதற்குமுன்னே], நீர் நிழல் உவரி தாவி இலங்கைமேல் செல்ல - நீர்மயமான அழகிய இக்கடலைக்கடந்து இலங்கையிற்செல்லுமாறு, நின்றான் - சித்தமாக இருந்தான்.

அநுமான் சூரியாஸ்தமனத்திற்குள் இலங்கையிற்சென்று சேரவேண்டுமென்ற கருத்தோடு மகேந்திரமலையினுச்சியிலேறிப் பேருருவங்கொண்டு சித்தமாக நின்றானென்பதாம். சூரியன் தனது கிரணங்களினால் உலகமுழுதும் ஒளிசெய்தற்கு பெருவீரர்புகழ் உலகமுழுவதும் பரவுதலை உவமை கூறினார். புக்குத்தாவாமுன்னம் செல்ல என இயையும். பரிதிமைந்தன் என்பதற்கு - ஊர்கோளையுடைய பெருமையையும் வலிமையையும் கொண்டவனான சூரியன் எனினுமாம்; பரிதி - ஊர்கோளை யுணர்த்தும் வடமொழி. (உஎ)

[மகேந்திரமலைமீது பேருருவங்கொண்டு நின்ற அநுமானது வருணனை.]

உஅ. பகுவாயமடங்கல்வைகும்படர்வரைமுழுதுமூழ்க
வுகுவாயவிடங்கொணாகத்தொத்தவால்சுற்றியூழி
னகுவாயசிகரக்கோடிநெரிவனதெரியநின்றான
மகவாமைமுதுகிற்றோன்றுமந்தரமெனலுமானான்.

(இ - ள்.) பகு வாய மடங்கல் வைகும் படர் வரை முழுதும் மூழ்க - திறந்த வாயையுடைய ஆண்சிங்கங்கள் வசிக்கும்படியான பெரிய மகேந்திரமலைமுழுவதும் (தன்மீதேறிப் பெருவடிவங்கொண்ட அநுமானது பாரத்தினால்) கீழேயமுந்தவும், ஊழின் நகு வாய சிகரம் கோடி நெரிவன தெரிய - வரிசையாகத் தோன்றுகின்ற சிரிக்கின்ற இடங்களையுடைய (தனது) சிகரங்களின் தொகுதிகள் நொருங்கியனவாய் விளங்கவும், விடம் உகு வாய கொள் நாகத்து ஒத்த வால் சுற்றி - விஷத்தைக் கக்குகின்ற வாயையுடைய (வலிமை) கொண்ட பாம்பைப்போன்ற வாலினால் (தனது உடம்பைச்) சுற்றிக்கொண்டு, நின்றான் - (பேருருவத்துடன்) நின்றவனாகிய அநுமான்,—மக ஆமை முதுகில் தோன்றும் மந்தரம் எனலும் ஆனான் - மகாகூர்மத்தினது முதுகின்மேல் விளங்கித்தோன்றிய மந்தரபருவதமென்று கூறுமாறும் ஆயினான்; (எ - று.)

அநுமான் உடற்பொறையால் தரையிலழுந்துகின்ற மகேந்திரமலை - மகாகூர்மத்துக்கும், மகேந்திரமலையின்மேல் நின்ற அநுமான் - மந்தரகிரிக்கும்,

நின்றும் தாங்கப்பெற்ற மந்தரமலைக்கும், அநுமானது உடலைச் [illegible] அதனுடைய வாலை - மந்தரமலையைச் சுற்றிய வாசுகிக்கும் ஒப்பாகு மென்க. தேவர்கள் தாம் இழந்த பொருள்களையும் அமிருதத்தையும் பெறும்பொருட்டுத் திருமாலின் கட்டளைப்படி அசுரர்களைத் துணைக்கொண்டு திருப்பாற்கடலைக் கடைகையில், வாசுகியென்னும் மகாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிக் கடையப்பட்ட மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் திருமால் பெரியதோர் ஆமைவடிவமெடுத்து அம்மலையின் கீழேசென்று, தனது முதுகின்மீது கொண்டு தாங்கி, அம்மலை கடலில் அழுந்திவிடாமற் கடைவதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்தன னென்பது, பிரசித்தம். மஹா என்பது, மக வெனத் திரிந்து வந்தது. 'கோடி' என்பது, பலவென்னும் மாத்திரமாய் நின்றது.

'நாகத்தொழ்ந்றைறவால்சுற்ற,' 'மருவாமைமுதுகில்' என்று சிலபிரதிகள்.

[இதுவும் அது.]

உகூ. மின்னெடுங் கொண்ட லூளின் வீக்கிய கழலி னார்ப்பத்
தன்னெடுந் தோற்றம் வானோர் கட்புலத் தெல்லை தாவ
வன்னெடுஞ் சிகர கோடி மகேந்திர மண்டந் தாங்கும்
பொன்னெடுந் தூணின் பாத சிலையெனப் பொலிந்து நின்றான்.

(இ - ள்.) மின் நெடுங் கொண்டல் - மின்னலையுடைய பெரியமேகங்கள், தாளின் வீக்கிய கழலின் ஆர்ப்ப - (தனது) காலிற்கட்டப்பட்ட வீரக்கழல்போலச் சத்திக்கவும், தன் நெடுந்தோற்றம் வானோர் கண் புலத்து எல்லை தாவ - தனதுபெருவடிவானது தேவர்களின் கண்களாகிய இந்திரியங்களினிடத்திற் புலப்படவும்,—வல் நெடுஞ் சிகரம் கோடி மகேந்திரம் - வலிய பெரிய சிகரங்களின் தொகுதியையுடைய மகேந்திரமலையானது, அண்டம் தாங்கும் பொன் நெடுந் தூணின் பாதம் சிலை என - உலகவுருண்டையைத் தாங்குகின்ற பொன்மயமாகிய நீண்ட தம்பத்தினடியிலிட்ட கல்லைப்போல விளங்கவும்,—பொலிந்து நின்றான் - (தான் அம்மகேந்திரமலையின் மேல் பேருருவத்துடனே) விளங்கித்தோன்றினன், (அநுமான்); (எ - று.)

மகேந்திரமலையின்மீதேறி அண்டத்தின்மேல் முகடுவரையிலும்வளர்ந்த பேருருவங்கொண்ட அநுமான் - அண்டத்தைத்தாங்கும் பெருந்தூணையும், அவ்வநுமானது பெருவடிவத்தைத் தாங்கி அவ்வடிவுக்குமுன் சிறந்துத் தோன்றுகின்ற மகேந்திரமலை - தூணின்கீழ் வைக்குங் கல்லையும் நிகர்ப்பனென்க. அநுமான் பேருருவங் கொண்டபோது, மேகமண்டலம் அவனது முழந்தாளினிடத்து இருந்த தென்பார், 'மின்னெடுங்கொண்டல் தாளின் வீக்கியகழலினார்ப்ப' என்றார். மேலுலகத்தில் அநுமானதுவடிவம் வளர்ந்து சென்றதனால், அங்குள்ள தேவர்களும் இவனது வடிவத்தைக் காணலாயின ரென்பது, இரண்டாமடியிற் கூறிய விஷயம். அநுமானது தோத்திரத்தில் "காஞ்சநாத்ரி கமநீயவிக்ரஹம் [பொன்மலைபோல் அழகிய திருமேனியுடையவன்]" என்பவாதலால், அவனுக்குப் பொன்னெடுந்தூண் உவமையாக் கூறப்பெற்றவணி.

'மின்னெடுமேகத்தாளின்வீக்கிய கழலொடார்ப்ப,' என்றும் பாடம். (உகூ)

மகேந்திரப்படலம் முற்றிற்று.

---

கிஷ்கிந்தாகாண்டம் முற்றுப்பெற்றது.